## முதல் வகுப்பு – தமிழ்
## ஆக்கம்

### ஆலோசனைக்குழு

முனைவர் பா.வீரப்பன்
பேராசிரியர், தேசியக் கல்வியியல் ஆராய்ச்சி மற்றும் பயிற்சி நிறுவனம், புது டில்லி.

முனைவர் டி.சகாயதாஸ்
பேராசிரியர் மற்றும் துறைத்தலைவர், மாநிலக் கல்வியியல் ஆராய்ச்சி மற்றும் பயிற்சி நிறுவனம், கேரளா.

### மேலாய்வாளர்குழு

முனைவர் ச.மாடசாமி
பேராசிரியர், (ஓய்வு) சென்னை.

திருமதி பத்மாவதி
எழுத்தாளர், சென்னை.

### பாட வல்லுநர்குழு

செல்வி தி.குறள்மதி
விரிவுரையாளர், மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம், புலிக்கரை, தருமபுரி மாவட்டம்.

திருமதி எஸ்தர் ராணி,
முதுநிலை விரிவுரையாளர், மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம் முனைஞ்சிப்பட்டி, திருநெல்வேலி மாவட்டம்

## கலை மற்றும் வடிவமைப்புக்குழு

### வரைபடம்

திரு. கௌதம்
திரு. ரமேஷ் குமார்
திரு. கோகுலா கிருஷ்ணன்
திரு. ஜான் ராஜா,
இடைநிலை ஆசிரியர், ஊராட்சி ஒன்றிய தொடக்கப் பள்ளி, வெங்கடேசபுரம், காட்டுமன்னார்கோயில் ஒன்றியம், கடலூர் மாவட்டம்
திரு. கலைவாணன்
திரு. சோ. வேல்முருகன்,
ஓவிய ஆசிரியர்,அரசு மகளிர் மேல் நிலைப்பள்ளி, கோவில்பட்டி,தூத்துக்குடி மாவட்டம்
திரு. பி. தனபால்,
ஓவிய ஆசிரியர், M.C.T.RM, இராமநாதன் கோவில்பட்டி, தூத்துக்குடி மாவட்டம்
திரு. பி. செல்வகுமார்,
இடைநிலை ஆசிரியர்,அரசு ஆதி திராவிட நல தொடக்கப்பள்ளி, அம்மாசியபுரம், தேனி மாவட்டம்.
திரு. கே. மதியழகன்,
இடைநிலை ஆசிரியர். ,ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளி,ஊத்துக்காடு.வலங்கைமான்
திரு. பாபு,
ஓவிய ஆசிரியர்
திரு. துரை
ஓவிய ஆசிரியர்
திரு. அழகப்பன்,
ஓவிய ஆசிரியர்
திரு. பிரபுராஜ்,
ஓவிய ஆசிரியர்
திரு. கோபு சுப்பையன் , திரு. ரமணன்,
திரு. கா. தனஸ் தீபக் ராஜன், திரு. கா. நலன் நான்சி ராஜன்,
திரு. ம.சார்லஸ், திரு. வேல்முருகன், திரு. இராதாகிருஷ்ணன்,
திரு. பா.பிரமோத், திரு. பிரகாஷ்
மாணவர்கள்
அரசு கவின் கலைக்கல்லூரி, சென்னை
தட்டச்சு: பாடநூல் உருவாக்கக் குழுவினர்

### பக்க வடிவமைப்பு

வி2 இன்னோவேசன்ஸ், கோபாலபுரம்,
திரு. கலைச்செல்வன்

### தரக் கட்டுப்பாடு

திரு. கோபு சுப்பையன்,
திரு. எம். கரண்,

### அட்டைப்படம்

கதிர் ஆறுமுகம்

### ஒருங்கிணைப்பு

திரு. ரமேஷ் முனிசாமி

### பாடநூல் உருவாக்கக் குழு

திருமதி க. உமாதேவி,
தலைமை ஆசிரியர், ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளி, கரவழி மாதப்பூர், சூலூர் ஒன்றியம்.கோவை மாவட்டம்.

திருமதி வே. சுடரொளி,
இடைநிலை ஆசிரியர்,ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளி, கரிக்கலவாக்கம், திருவள்ளூர் ஒன்றியம், திருவள்ளூர் மாவட்டம்.

திரு. க. முருகன்,
ஆசிரியர் பயிற்றுநர்,பெத்தநாயக்கன்பாளையம் ஒன்றியம், சேலம் மாவட்டம்.

செல்வி பா. ப்ரீத்தி,
இடைநிலை ஆசிரியர், ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளி, சீர்ப்பனந்தல், இரிஷிவந்தியம் ஒன்றியம், விழுப்புரம் மாவட்டம்.

திருமதி பா. கற்பகம்,
இடைநிலை ஆசிரியர், ஊராட்சி ஒன்றியத்தொடக்கப் பள்ளி, ஐயப்பா நகர், வில்லிவாக்கம் ஒன்றியம், திருவள்ளூர் மாவட்டம்.

திரு. பா. ச. குப்பன்,
இடைநிலை ஆசிரியர், ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி, கொட்டவாக்கம், காஞ்சிபுரம் மாவட்டம்.

திருமதி ஸ்ரீ பார்வதி,
இடைநிலை ஆசிரியர், ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி, கந்தம்பட்டி, சேலம் மாவட்டம்.

திருமதி பி. மாங்கனி,
ஆசிரியர் பயிற்றுநர், நாமகிரிப்பேட்டை ஒன்றியம், நாமக்கல் மாவட்டம்.

திருமதி தெய்வ. சுமதி,
தலைமைஆசிரியர்,ஆதிதிராவிடர் நலப்பள்ளி, ஆதியூர், திருப்பத்தூர் ஒன்றியம், வேலூர் மாவட்டம்.

திருமதி த. உமா,
இடைநிலை ஆசிரியர், ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளி, பரங்கிமலை, காஞ்சிபுரம் மாவட்டம்.

திருமதி ச. பஞ்சவர்ணம்,
தலைமை ஆசிரியர், ஊராட்சி ஒன்றியத்தொடக்கப் பள்ளி, தாம்பரம், சானிடோரியம், சென்னை – 47.

திரு. கே. வி. மகேந்திரன்.
இடைநிலை ஆசிரியர், ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளி, பெரியக்காகொண்டி, வேலூர் மாவட்டம்.

திருமதி இரா. தேன்மொழி,
தலைமை ஆசிரியர், ஊராட்சி ஒன்றியத்தொடக்கப் பள்ளி, அனகாவூர் காலனி, திருவண்ணாமலை மாவட்டம்.

திரு ஜெ.லியோன்,
இடைநிலை ஆசிரியர், ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளி, சின்னபாளையம், பாம்பன், இராமநாதபுரம் மாவட்டம் .

திரு. நா. சக்திவேல்,
இடைநிலை ஆசிரியர்,ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளி, போகம்பட்டி, சுல்தான் பேட்டை ஒன்றியம், கோவை மாவட்டம்.

திருமதி ப. விசாலாட்சி,
இடைநிலை ஆசிரியர், நகராட்சி நடுநிலைப் பள்ளி, காதர்பேட், திருப்பூர் மாவட்டம்.

திரு. பு. விசாகன்,
இடைநிலை ஆசிரியர், அரசு தொடக்கப் பள்ளி, புதுச்சேரி.

திரு. எஸ். சரவணன்,
இடைநிலை ஆசிரியர், நகராட்சி நிடுநிலைப்பள்ளி, திருப்பூர் மாவட்டம்.

திருமதி தி. வித்யா,
இடைநிலை ஆசிரியர் டிவிஎஸ், மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி, பழங்காநத்தம், மதுரை மாவட்டம்.

திருமதி. சு. சகிதா,
இடைநிலை ஆசிரியர், ஸ்ரீ ஜெயேந்திரர் சுவாமிகள் மெட்ரிக் மேல் நிலைப் பள்ளி, மகாராஜா நகர், திருநெல்வேலி மாவட்டம்.

### வல்லுநர் & ஒருங்கிணைப்பாளர்

முனைவர் வெ. உஷாராணி,
துணை இயக்குநர், மாநிலக் கல்வியியல் ஆராய்ச்சி மற்றும் பயிற்சி நிறுவனம், சென்னை

திருமதி இரா. பொன்மணி,
விரிவுரையாளர், மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம், திருவூர், திருவள்ளூர் மாவட்டம்

### விரைவுக் குறியீட்டு மேலாண்மைக் குழு

ஆ.தேவி ஜெஸிந்தா,
பட்டதாரி ஆசிரியர், அ.உ.நி. பள்ளி, எம்.என்.கோவில், வேலூர்.

அ. இசக்கித்துரை,
முதுகலை ஆசிரியர், அ.மே.நி.பள்ளி, சிக்கல், இராமநாதபுரம்.

மு.சரவணன்,
பட்டதாரி ஆசிரியர், அ.ம.மே.நி.பள்ளி, புதுப்பாளையம், வாழப்பாடி, சேலம்.

இந்நூல் 80 ஜி.எஸ்.எம் எலிகண்ட் மேப்லித்தோ தாளில் அச்சிடப்பட்டுள்ளது

ஆப்செட் முறையில் அச்சிட்டோர்:

தமிழ்நாடு அரசு

# இரண்டாம் வகுப்பு

# தமிழ்

## பள்ளிக் கல்வித்துறை

தீண்டாமை மனித நேயமற்ற செயலும் பெருங்குற்றமும் ஆகும்

## முகவுரை

குழந்தைகளின் உலகம் வண்ணமயமானது! விந்தைகள் பல நிறைந்தது!! அவர்களின் கற்பனைத்திறன் கானுயிர்களையும் நட்புடன் நடை பயில வைத்திடும். புதியன விரும்பும் அவர்தம் உற்சாக உள்ளம் அஃறிணைப் பொருள்களையும் அழகுதமிழ் பேசிடச் செய்திடும்.

அப்புதிய உலகில் குழந்தைகளோடு பயணம் செய்வது மகிழ்ச்சியும் நெகிழ்ச்சியும் நிறைந்தது.

தமிழ்க் குழந்தைகளின் பிஞ்சுக்கரங்கள் பற்றி, இப்புதிய பாடநூல்களின் துணைகொண்டு கீழ்க்கண்ட நோக்கங்களை அடைந்திடப் பெருமுயற்சி செய்துள்ளோம்.

- கற்றலை மனனத்தின் திசையில் இருந்து மாற்றி படைப்பின் பாதையில் பயணிக்க வைத்தல்.
- தமிழர்தம் தொன்மை, வரலாறு, பண்பாடு மற்றும் கலை, இலக்கியம் குறித்த பெருமித உணர்வை மாணவர்கள் பெறுதல்.
- தன்னம்பிக்கையுடன் அறிவியல் தொழில்நுட்பம் கைக்கொண்டு மாணவர்கள் நவீன உலகில் வெற்றிநடை பயில்வதை உறுதிசெய்தல்.
- அறிவுத்தேடலை வெறும் ஏட்டறிவாய்க் குறைத்து மதிப்பிடாமல் அறிவுச் சாளரமாய்ப் புத்தகங்கள் விரிந்து பரவி வழிகாட்டுதல்.

பாடநூலின் புதுமையான வடிவமைப்பு, ஆழமான பொருள் மற்றும் குழந்தைகளின் உளவியல் சார்ந்த அணுகுமுறை எனப் புதுமைகள் பல தாங்கி உங்களுடைய கரங்களில் இப்புதிய பாடநூல் தவழும்பொழுது, பெருமிதம் ததும்ப ஒரு புதிய உலகத்துக்குள் நீங்கள் நுழைவீர்கள் என்று உறுதியாக நம்புகிறோம்.

# நாட்டுப்பண்

*ஜன கண மன அதிநாயக ஜய ஹே*
*பாரத பாக்ய விதாதா*
*பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா*
*திராவிட உத்கல பங்கா*
*விந்திய ஹிமாசல யமுனா கங்கா*
*உச்சல ஜலதி தரங்கா.*
*தவ சுப நாமே ஜாகே*
*தவ சுப ஆசிஸ மாகே*
*காஹே தவ ஜய காதா*
*ஜன கண மங்கள தாயக ஜய ஹே*
*பாரத பாக்ய விதாதா*
*ஜய ஹே ஜய ஹே ஜய ஹே*
*ஜய ஜய ஜய ஜய ஹே!*

– *மகாகவி இரவீந்திரநாத தாகூர்.*

---

## நாட்டுப்பண் – பொருள்

இந்தியத் தாயே! மக்களின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற நீயே எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செய்கிறாய்.

நின் திருப்பெயர் பஞ்சாபையும், சிந்துவையும், கூர்ச்சரத்தையும், மராட்டியத்தையும், திராவிடத்தையும், ஒடிசாவையும், வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சி அடையச் செய்கிறது.

நின் திருப்பெயர் விந்திய, இமயமலைத் தொடர்களில் எதிரொலிக்கிறது; யமுனை, கங்கை ஆறுகளின் இன்னொலியில் ஒன்றுகிறது; இந்தியக் கடலலைகளால் வணங்கப்படுகிறது.

அவை நின்னருளை வேண்டுகின்றன; நின் புகழைப் பரவுகின்றன.

இந்தியாவின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற தாயே!

உனக்கு வெற்றி! வெற்றி! வெற்றி!



# தமிழ்த்தாய் வாழ்த்து

நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரதக் கண்டமிதில்
தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநல் திருநாடும்
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே!
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே!
தமிழணங்கே!
உன் சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே!
வாழ்த்துதுமே!
வாழ்த்துதுமே!

– 'மனோன்மணியம்' பெ. சுந்தரனார்.



## தமிழ்த்தாய் வாழ்த்து – பொருள்

ஒலி எழுப்பும் நீர் நிறைந்த கடலெனும் ஆடையுடுத்திய நிலமெனும் பெண்ணுக்கு, அழகு மிளிரும் சிறப்பு நிறைந்த முகமாகத் திகழ்கிறது பரதக்கண்டம். அக்கண்டத்தில், தென்னாடும் அதில் சிறந்த திராவிடர்களின் நல்ல திருநாடும், பொருத்தமான பிறை போன்ற நெற்றியாகவும், அதிலிட்ட மணம் வீசும் திலகமாகவும் இருக்கின்றன.

அந்தத் திலகத்தில் இருந்து வரும் வாசனைபோல, அனைத்துலகமும் இன்பம் பெறும் வகையில் எல்லாத் திசையிலும் புகழ் மணக்கும்படி (புகழ் பெற்று) இருக்கின்ற பெருமைமிக்க தமிழ்ப் பெண்ணே! தமிழ்ப் பெண்ணே! என்றும் இளமையாக இருக்கின்ற உன் சிறப்பான திறமையை வியந்து உன் வயப்பட்டு எங்கள் செயல்களை மறந்து உன்னை வாழ்த்துவோமே! வாழ்த்துவோமே! வாழ்த்துவோமே!

## நம்பிக்கைக்குரிய ஆசிரியர்களே!









கடந்தகால கற்றலை அடித்தளமாகக்கொண்டு நிகழ்கால மற்றும் எதிர்காலத் தேவைகளுக்கேற்ற மொழித்திறன்களைக் குழந்தைகளிடம் வளர்க்கும் நோக்கில் இப்பாடநூல் உருவாக்கப்பட்டுள்ளது.

முதல் வகுப்பில் கற்றுணர்ந்த கேட்டல், பேசுதல், படித்தல், எழுதுதல், படைப்புத்திறன், விழுமியங்கள், வாழ்வியல் திறன்கள் போன்றவற்றை நினைவுகூர்ந்து வெளிப்படுத்த வாய்ப்பளிக்கும் வகையில் விளையாட்டு உலகம் என்ற தலைப்பில் ஆர்வமூட்டும் பல்வேறு செயல்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

இதுவரை கற்றுணர்ந்த அடிப்படை மொழித்திறன்களை நினைவுகூர்ந்து வெளிப்படுத்தும் வகையில் "என் நினைவில்" என்கிற தலைப்பில் ஆர்வமூட்டும் செயல்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

மனமகிழ்வு, கற்பனை, தன்னம்பிக்கை, நற்பண்புகள், வாழ்வியல் திறன்கள் ஆகியவற்றைப் பெருகச்செய்யும் நோக்குடன் பாடல்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

சொற்களற்ற படக்கதைகள், சொற்கள், சிறு தொடர்களுடன் கூடிய படக்கதைகள், உரையாடல் வடிவிலான படக்கதைகள் எனப் பல்வேறு வகைகளில் கதைகள் வடிவமைக்கப்பட்டுள்ளன.

மொழித்திறன்களுள் பேசுதல் திறனே நடைமுறையில் பெருமளவில் பயன்படுத்தப்படும் ஒன்றாக உள்ளது. அதிலும் குறிப்பாக, வாழ்வின் அன்றாட நிகழ்வுகளுள் இன்றியமையாததாக உரையாடல் விளங்குகிறது. அத்தகு உரையாடல் திறனை மேம்படுத்தும் வகையில் பாடப்பகுதிகள் இடம்பெற்றுள்ளன.

குழந்தைகள் தாமே பாடப்பகுதிகளைப் படித்தறிந்து திறன்பெறும் வகையில், தொடக்கத்தில் எளிய சொற்களைப் படிக்க வாய்ப்பளித்து மெல்ல மெல்ல சிறுசிறு சொற்றொடர்களைப் படிக்கும் நிலைக்கு இட்டுச்செல்லும் வகையில் பாடப்பகுதிகள் அமைக்கப்பட்டுள்ளன.













செய்யுள் பகுதியில் ஆத்திசூடி, கொன்றைவேந்தன் ஆகிய ஓரடிச்செய்யுள் பகுதிகள் கொடுக்கப்பட்டுள்ளன. ஆத்திசூடி அடிகள், எளிதில் பொருளுணரும் வண்ணம் படக்கதைகள் வடிவில் வழங்கப்பட்டுள்ளன.

சொற்கள், சிறுசிறு தொடர்கள் ஆகியவற்றைக் குழந்தைகள் தாமே சொந்த நடையில் பேச, எழுத விருப்புடன் முன்வரும் வகையில் சொற்களஞ்சியப் பெருக்கத்திற்கான பயிற்சிகள் வடிவமைக்கப்பட்டுள்ளன.





புதிர்களை விடுவிப்பதும் தேடிக் கண்டறிவதும் குழந்தைகளின் பெரு விருப்பங்களாகும். இவ்வியல்புகளைக் கற்றலுக்குப் பயன்படுத்தும் நோக்கிலும் இயற்கையை வியக்க, போற்ற, பாதுகாக்கத் தேவையான நுண்ணுணர்வுகளைப் பெற ஏதுவாகவும் பாடப்பகுதிகள் உருவாக்கப்பட்டுள்ளன.

சொல்லிக்கொடுத்து திரும்பச் சொல்லவைக்கும் மனன முறையை விடுத்து, கலந்துரையாடவும், கேள்வி கேட்கவும், தருக்க முறையில் சிந்திக்கவும், சிந்தித்தவற்றை வெளிப்படுத்தவும் வாய்ப்புகள் வழங்கப்பட்டுள்ளன. குழந்தைகளின் கருத்துகளையும் உணர்வுகளையும் உள்வாங்கி அவர்களை நெறிப்படுத்த இப்பகுதிகள் உதவும்.






குழந்தைகளின் பல்வேறு நுண்ணறிவுத் திறன்களைக் கருத்தில் கொண்டு அவர்கள் கற்கும் பாங்குகள், இயல்புகள், தேவைகள், விருப்பங்கள், ஆகியவற்றிற்கு ஈடுகொடுக்கும் வகையிலும் விழுமியங்கள், வாழ்வியல் திறன்களை வளர்க்கும் வகையிலும் இப்பாடநூல் உருவாக்கப்பட்டுள்ளது.





இப்பாடநூல் உருவாக்கப்பட்டதன் அடிப்படை நோக்கங்களை உணர்ந்து, குழந்தைகள் கற்றலில் ஈடுபட போதிய வாய்ப்பளித்து, மொழிப்பாடக் கற்றலை இனிமையான, பயன்மிக்க அனுபவமாக நிகழ்த்திக்காட்டும் பெரும்பொறுப்பு நம் ஒவ்வொருவரிடமும் ஒப்படைக்கப்பட்டுள்ளது.

நமது பயணம் மிகப்பெரிது, மிக இனிது.

குழந்தைமையைக் கொண்டாடுவோம்!
வகுப்பறை வண்ணமயமாகட்டும்!

அன்புடன்,
ஆக்கியோர்.

# பொருளடக்கம்


















3G1NJN

4QCCLZ

B307_2_TAM_LANG_T1



# 1. விளையாட்டு உலகம்

6F6VQM

## பட்டம் பறக்குது!

வண்ணப் பட்டம் பறக்குது
வளைந்து நெளிந்து பறக்குது
மெல்ல மெல்லத் தலையையாட்டி
மேலும் கீழும் பறக்குது

வானில் பட்டம் பறக்குது
வாலை ஆட்டிப் பறக்குது
அங்கும் இங்கும் ஆடியசைந்து
அழகாய் மேலே பறக்குது

வீசும் காற்றில் பறக்குது
வித்தை காட்டிப் பறக்குது
வட்டம் அடிக்கும் பறவையோடு
போட்டி போட்டுப் பறக்குது



பாடலைக் கேட்டு மகிழ்க. பின்தொடர்ந்து பாடுக.

அறிந்த பாடல்களைத் தனியாகவும் குழுவாகவும் பாடுக.

# விடை சொல்! உள்ளே செல்!













பிறர் பேசுவதைக் கவனத்துடன் கேட்டுப் புரிந்துகொள்க.







படங்கள், ஓவியங்களை நுட்பமாக உற்றுநோக்கி தொடர்புகளை அறிக.

# முகமூடி மாட்டு! நடித்துக்காட்டு!










அறிந்தவற்றைப் பற்றி சொந்த நடையில் பேசுக.

## வளையம் வீசு! பொருளைப் பெறு!









எனக்குப் பரிசாகக் கிடைத்தவை

**படங்களைப் பார்த்து, பெயர்களைக் கூறி எழுதுக.**

## கண்டுபிடி! காரணம் கூறு!









படங்களை நுட்பமாக உற்றுநோக்கி அறிக.






| க | பே | ரு | ந் | து | மெ |
|---|---|---|---|---|---|
| ட் | தே | ங் | கா | ய் | ழு |
| டெ | வெ | ல் | ல | ம் | கு |
| று | டி | நெ | ம் | சே | வ |
| ம் | ட் | தே | ள | வ | த் |
| பு | பெ | ள் | மே | ல் | தி |




சொற்களை உரிய ஒலிப்புடன் படித்துப் பழகுக.

## படம் பார்! நிகழ்வைச் சொல்!




### நீயா? நானா?






**கதைப் படங்களை நுட்பமுடன் உற்றுநோக்குக. நிகழ்வைக் கூறுக.**

## பெயர் எழுது! பரிசு பெறு!










படங்களைப் பார்த்து, பெயர்களை எழுதுக.

## எழுத்தை நீக்கு! சொல்லை எழுது!




| | | | |
|---|---|---|---|
| ஞ் + ஆ = ஞா | ல் + எ = ___ | ற் + ஐ = ___ | ய் + ஈ = ___ |
| ழ் + உ = ___ | ங் + ஏ = ___ | வ் + இ = ___ | ர் + ஊ = ___ |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பூ | ங் | ~~ஞா~~ | கொ | த் | து |
| மீ | ன் | தொ | ட் | லெ | டி |
| பௌ | ர் | றை | ண | யீ | மி |
| ம | யி | ழு | ல் | தோ | கை |
| நெ | ய் | தோ | வே | சை | வி |
| பொ | ரூ | ன் | வ | ண் | டு |

☆ பூங்கொத்து ☆ ____________ ☆ ____________

☆ ____________ ☆ ____________ ☆ ____________




சொற்களின் ஒலிவடிவ,வரிவடிவத் தொடர்பு அறிந்து படித்தும் எழுதியும் பழகுக.

பட்டியலைப் படி!
பிடித்ததைச் சுவை!










சொற்களை உரிய ஒலிப்புடன் படித்துப் பழகுக.

## வரிசைப் படுத்து! வழியைக் கண்டுபிடி!










**சொற்களை அகர வரிசைப்படுத்துக.**




**பாரம்பரிய விளையாட்டுகளை விளையாடி மகிழ்க.**

## என் சொல் வங்கியில் சேமித்தவை

மைனா, தோசை, கிளி, யானை, நாய், வெடி, ஆறு, பூனை, வடை, ஏர்

மேளம், குதிரை, காகம், பந்து, நத்தை, சீப்பு, விசிறி, சேவல், முதலை, முயல்

குரங்கு, வானூர்தி

கண்ணாடி, பேருந்து, நெய்தோசை, கரும்பு

தேங்காய், வான்கோழி, வெல்லம், ஐப்பசி

மயில்தோகை, மீன்தொட்டி, பூங்கொத்து, பணியாரம்

பழச்சாறு, எலுமிச்சை, மிதிவண்டி, மசால்தோசை

உண்டியல், நாள்காட்டி

இடியாப்பம், கட்டெறும்பு

மெழுகுவத்தி, பூரிகிழங்கு, சோளப்பிட்டு, பனிக்கூழ்

ஈச்சமரம், ஒலிபெருக்கி, ஊமத்தம்பூ, பல்லாங்குழி

**சொற்களை உரிய ஒலிப்புடன் படித்தும் எழுதியும் பழகுக.**

## தமிழ் எழுத்துகள்

| | அ | ஆ | இ | ஈ | உ | ஊ |
|---|---|---|---|---|---|---|
| க் | க | கா | கி | கீ | கு | கூ |
| ங் | ங | ஙா | ஙி | ஙீ | ஙு | ஙூ |
| ச் | ச | சா | சி | சீ | சு | சூ |
| ஞ் | ஞ | ஞா | ஞி | ஞீ | ஞு | ஞூ |
| ட் | ட | டா | டி | டீ | டு | டூ |
| ண் | ண | ணா | ணி | ணீ | ணு | ணூ |
| த் | த | தா | தி | தீ | து | தூ |
| ந் | ந | நா | நி | நீ | நு | நூ |
| ப் | ப | பா | பி | பீ | பு | பூ |
| ம் | ம | மா | மி | மீ | மு | மூ |
| ய் | ய | யா | யி | யீ | யு | யூ |
| ர் | ர | ரா | ரி | ரீ | ரு | ரூ |
| ல் | ல | லா | லி | லீ | லு | லூ |
| வ் | வ | வா | வி | வீ | வு | வூ |
| ழ் | ழ | ழா | ழி | ழீ | ழு | ழூ |
| ள் | ள | ளா | ளி | ளீ | ளு | ளூ |
| ற் | ற | றா | றி | றீ | று | றூ |
| ன் | ன | னா | னி | னீ | னு | னூ |

| எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ |
|---|---|---|---|---|---|
| கெ | கே | கை | கொ | கோ | கௌ |
| ஙெ | ஙே | ஙை | ஙொ | ஙோ | ஙௌ |
| செ | சே | சை | சொ | சோ | சௌ |
| ஞெ | ஞே | ஞை | ஞொ | ஞோ | ஞௌ |
| டெ | டே | டை | டொ | டோ | டௌ |
| ணெ | ணே | ணை | ணொ | ணோ | ணௌ |
| தெ | தே | தை | தொ | தோ | தௌ |
| நெ | நே | நை | நொ | நோ | நௌ |
| பெ | பே | பை | பொ | போ | பௌ |
| மெ | மே | மை | மொ | மோ | மௌ |
| யெ | யே | யை | யொ | யோ | யௌ |
| ரெ | ரே | ரை | ரொ | ரோ | ரௌ |
| லெ | லே | லை | லொ | லோ | லௌ |
| வெ | வே | வை | வொ | வோ | வௌ |
| ழெ | ழே | ழை | ழொ | ழோ | ழௌ |
| ளெ | ளே | ளை | ளொ | ளோ | ளௌ |
| றெ | றே | றை | றொ | றோ | றௌ |
| னெ | னே | னை | னொ | னோ | னௌ |

# 2. சொல்லாதே! சொல்லாதே!



7PHJSY

நீலவானம் தூரமென்று
பறவையிடம் சொல்லாதே
பறவையிடம் சொல்லாதே



அடர்ந்தகாடு இருண்டதென்று
கரடியிடம் சொல்லாதே
கரடியிடம் சொல்லாதே



பெரியகடல் ஆழமென்று
மீன்களிடம் சொல்லாதே
மீன்களிடம் சொல்லாதே



கற்பதெதுவும் கடினமென்று
எங்களிடம் சொல்லாதே
எங்களிடம் சொல்லாதே

பாடல்களைக் கேட்டுப் புரிந்துகொள்க – பாடி மகிழ்க.

# பயிற்சி

## சொல்லிப் பழகுக

தூரமென்று ஆழமென்று இருண்டதென்று

கடினமென்று கற்பதெதுவும் பறவையிடம்

கரடியிடம் மீன்களிடம் எங்களிடம்

## படித்தும் எழுதியும் பழகுக

பறவை கரடி மீன்கள்

இருட்டு ஆழம் கடினம் தூரம்

நீலவானம் அடர்ந்தகாடு பெரியகடல்

## பொருத்துக

யாருக்கு எது கடினம் இல்லை?

| | | |
|---|---|---|
| 1. பறவை | – | காட்டின் இருட்டு |
| 2. கரடி | – | கற்றுக் கொள்ளுதல் |
| 3. மீன் | – | வானத்தின் தொலைவு |
| 4. குழந்தைகள் | – | கடலின் ஆழம் |

9EC3WL

## பேசுவோம் வாங்க!

இப்பாடலில் உங்களுக்குப் பிடித்தவை பற்றிக் கலந்துரையாடுக.

## எனக்கு எது கடினமில்லை வரைக



| | |
|---|---|
| வானில் பறப்பேன் | ☐ |
| குழி பறிப்பேன் | ☐ |
| மரம் ஏறுவேன் | ☐ |

| | |
|---|---|
| நன்றாகப் பேசுவேன் | ☐ |
| நீரில் நீந்துவேன் | ☐ |
| நடனம் ஆடுவேன் | ☐ |





| | |
|---|---|
| வேகமாக ஓடுவேன் | ☐ |
| ஓட்டைச் சுமப்பேன் | ☐ |
| பாடல் பாடுவேன் | ☐ |

| | |
|---|---|
| மோப்பம் பிடிப்பேன் | ☐ |
| மரம் ஏறுவேன் | ☐ |
| பாரம் சுமப்பேன் | ☐ |



## ஒத்த ஓசையில் முடியும் சொற்களைப் பாடலிலிருந்து எடுத்து எழுதுக

| கரடியிடம் | தூரமென்று |
|---|---|
| | |

## முதல் எழுத்தை மாற்றி எழுதுக

| | | |
|---|---|---|
| ஆடு | பாடு | காடு |
| வால் | | |
| படை | | |
| கல் | | |

## பலமுறை சொல்லிப் பழகுக

சறுக்கு மரத்தில் சறுக்கலாம்
வழுக்கு மரத்தில் வழுக்கலாம்

காற்றிலே பறந்த கீற்று
சேற்றிலே விழுந்தது

உருண்டு விழுந்த உருளை
உருளுது புரளுது

# 3. பேசாதவை பேசினால்...







கட்டளைகளையும் அறிவுரைகளையும் கேட்டுப் புரிந்துகொண்டு செயல்படுக.


மற்றவருக்கும்
வாய்ப்பு அளிப்பீர்
நான்
ஊஞ்சலைவிட்டு
இறங்கப் போகிறேன்.
அவர்கள் ஆடட்டும்
நல்ல பண்பு.
மகிழ்ச்சி


கீழே
இறைக்காமல்
சாப்பிடுகிறாய்.
பாராட்டுகள்
உணவை வீணாக்காதீர்
உணவை
வீணாக்கக்கூடாது.
ஈக்கள் மொய்க்கும்
அல்லவா!


குப்பையைக்
குப்பைத் தொட்டியில் போடுவீர்
கீழே
வீசினால்
புல்தரை பாழாகும்.
குப்பைத்தொட்டியில்
போடலாம்
என்னைப்
பயன்படுத்தினாய்.
நன்று


குடிநீர் கொட்டிக்கொண்டே இருக்கிறதே? மூடிவிட்டுச் செல்வோம்
நீர் வீணாவதைத் தடுத்தாய். நன்றி
தண்ணீரை வீணாக்காதீர்


வருகைக்கு நன்றி
வியப்பாக இருக்கிறது. இங்கு எல்லாமே பேசுகிறதே !


மல்லி எழுந்திரு. பூங்காவிற்குச் செல்ல வேண்டுமே!
ஓ! கண்டது கனவா?

# பயிற்சி

## படித்துப் பழகுக

பூக்களைப் பறிக்காதீர் | மற்றவருக்கும் வாய்ப்பு அளிப்பீர்

உணவை வீணாக்காதீர் | வருகைக்கு நன்றி

தண்ணீரை வீணாக்காதீர்

## எழுதிப் பழகுக

பூங்கா | கனவு | பூக்கள்

குடிநீர் | ஊஞ்சல் | குப்பைத்தொட்டி

## பொருத்தமான குறியிடுக – சரி ✓ தவறு ✗

1. மல்லி சென்ற இடம் கடற்கரை. ☐
2. மல்லி கண்டது கனவு. ☐
3. மல்லி பூங்காவில் பூக்களைப் பறித்தாள். ☐
4. மல்லி தண்ணீர் வீணாகாமல் தடுத்தாள். ☐
5. மல்லியை எழுப்பியவர் அப்பா. ☐

ANMRYX

## பொருத்துக

| | | | |
|---|---|---|---|
| 1. | பூக்கள் | – | குப்பையைத் தொட்டியில் போடுவீர். |
| 2. | ஊஞ்சல் | – | பூக்களைப் பறிக்காதீர். |
| 3. | தண்ணீர்க்குழாய் | – | உணவை வீணாக்காதீர். |
| 4. | குப்பைத்தொட்டி | – | மற்றவருக்கும் வாய்ப்பு அளிப்பீர். |
| 5. | உணவு மேசை | – | தண்ணீரை வீணாக்காதீர். |

## வாய்மொழியாக விடை தருக

1. மல்லி பூங்காவில் என்னென்ன செய்தாள்?
2. இக்கதையிலிருந்து நீ அறிந்தவற்றைக் கூறுக.
3. மல்லியின் எந்தச் செயல் உனக்குப் பிடித்திருக்கிறது?

## விடை எழுதுக

1. உணவைக் கீழே இறைக்கக்கூடாது ஏன்?
2. பூங்காவில் எழுதப்பட்டிருந்த ஏதேனும் இரண்டு அறிவிப்புகளை எழுதுக.

## நீங்கள் இவர்களிடம் என்ன சொல்வீர்கள்?






## இவை பேசினால் என்ன பேசியிருக்கும்? படத்துடன் பொருத்து



படிகளில் பயணம் செய்யாதீர்.

பயணச்சீட்டு வாங்குவீர்.






வரிசையில் நின்று ஏறுவீர்.

கரம், சிரம், புறம் நீட்டாதீர்.




## பொருத்தமான பெயரை உரிய கடையில் எழுதுக

உணவகம் | இனிப்பகம் | பல்பொருள் அங்காடி | ஆடையகம்






# 4. நானும் நாங்களும்




CDHB3K









2nd_Tamil_Term-1_Bodypages.indd 26 4/8/2020 2:18:37 PM


தாத்தாவுடன் வெளியில் செல்வது எனக்குப் பிடிக்கும். அடிக்கடி செல்வேன்


பாட்டி நன்றாகப் பாடுவார். நானும் அவரோடு சேர்ந்து பாடுவேன்


நான் செய்வதையே குட்டித் தங்கையும் செய்து காட்டுவாள். பார்க்கச் சிரிப்பாக இருக்கும்










## மகிழ்ச்சி



நான் நண்பர்களுடன்
விளையாடும்போதும்
உறவினர்களுடன்
இருக்கும்போதும்
மகிழ்ச்சியாய் இருப்பேன்.
நீங்கள் எப்போதெல்லாம்
மகிழ்ச்சியாக இருப்பீர்கள்?

**உன்னுடைய உறவுகள் பற்றி நீயும் கூறலாமே!**

# பயிற்சி

## படித்துப் பழகுக

பொறுமையுடன் கேட்பார் | நன்றாகப் பாடுவார்

செய்து காட்டுவாள் | விளையாடப் பிடிக்கும்

செல்ல நாய்க்குட்டி

## எழுதிப் பழகுக

கதைகள் | கதைத்தலைவன் | நாய்க்குட்டி | உறவினர்

தங்கை | நண்பர்கள் | அடிக்கடி | பாடல்

## பொருத்தமான குறியிடுக – சரி ✓ தவறு ✗

1. எழில் எதையும் தன் நண்பர்களிடம்தான் முதலில் கூறுவான். ☐
2. எழில் வீட்டில் நாய்க்குட்டி இருக்கிறது. ☐
3. எழிலுக்குக் கால்பந்து விளையாடத் தெரியும். ☐
4. எழில் தாத்தாவுடன் சேர்ந்து பாடுவான். ☐
5. வீட்டிற்கு உறவினர்கள் வந்தால் எழில் மகிழ்ச்சி அடைவான். ☐

## பொருத்துக

DMSZ5W

| | | | |
|---|---|---|---|
| 1. | எழிலின் அம்மா | – | வெளியில் அழைத்துச் செல்வார். |
| 2. | எழிலின் அப்பா | – | நன்றாகப் பாடுவார். |
| 3. | எழிலின் தாத்தா | – | கதைகள் கூறுவார். |
| 4. | எழிலின் பாட்டி | – | எதையும் பொறுமையாகக் கேட்பார். |
| 5 | எழிலின் தங்கை | – | எழிலைப் போலவே செய்து காட்டுவாள். |

## வாய்மொழியாக விடை தருக

1. எழிலைப் பற்றி உனக்குத் தெரிந்ததைக் கூறுக.

## விடை எழுதுக

1. எழிலை எவ்வாறெல்லாம் அழைக்கிறார்கள்?
2. எழில் யாருடன் சேர்ந்து பாடல்கள் பாடுவான்?

## இவர்களை இப்படி அழைத்தால்...




பிறரைக் கேலி செய்யும் வகையில் அழைப்பது சரியா? கலந்துரையாடுக .

உன்னை எப்படியெல்லாம் அழைப்பார்கள்?

## உறவுமுறையை அறிந்து அழைப்பேன்

1. அம்மாவின்
   - அக்கா — பெரியம்மா
   - தங்கை — ______
2. அப்பாவின்
   - தம்பி — ______
   - அண்ணன் — ______
3. அம்மாவின்
   - அண்ணன் — ______
   - தம்பி — ______
4. அப்பாவின்
   - அக்கா — ______
   - தங்கை — ______



## என்னைப்பற்றி



1. என் பெயர் அ.க. எழில்
2. என் அம்மா பெயர் கவியரசி
3. என் அப்பா பெயர் அமுதன்
4. எனது ஊர் கோவூர்
5. அலைபேசி எண் 1234567890

1. என் பெயர் _________________________
2. என் அம்மா பெயர் __________________
3. என் அப்பா பெயர் __________________
4. எனது ஊர் _______________________
5. அலைபேசி எண் __________________

நீ விரும்பும் விலங்கு / பறவையை வரைக. அதை எப்படி அழைப்பாய்? எழுதுக.






# 5. வண்ணம் தொட்டு...

வண்ணம்தொட்டு வண்ணம் தொட்டு
படங்கள் வரையலாம்
வானவில்லைத் தொட்டும் கொஞ்சம்
படங்கள் வரையலாம்

நீலம்தொட்டு நீலம்தொட்டு
கடலும் வரையலாம்
கடலலையில் கடலலையில்
கால்கள் நனைக்கலாம்

பச்சைதொட்டு பச்சைதொட்டு
மரங்கள் வரையலாம்
மரக்கிளையில் மரக்கிளையில்
ஊஞ்சல் ஆடலாம்

சிவப்புதொட்டு சிவப்புதொட்டு
பூக்கள் வரையலாம்
பூக்கள்போல பூக்கள்போல
பூத்துச் சிரிக்கலாம்

**பாடல்களைக் கருத்தூன்றிக் கேட்டுப் புரிந்துகொள்க – பாடி மகிழ்க.**

# பயிற்சி

## சொல்லிப் பழகுக

வரையலாம் | நனைக்கலாம் | ஆடலாம்

சிரிக்கலாம் | கடலலை

## படித்தும் எழுதியும் பழகுக

வண்ணம் | கால்கள்

மரங்கள் | கடலலை | வானவில் | படங்கள்

பூக்கள் | மரக்கிளை

## பொருத்துக

| | | | |
|---|---|---|---|
| 1. | கடலலையில் | – | படங்கள் வரையலாம். |
| 2. | பூக்கள்போல | – | கால்கள் நனைக்கலாம். |
| 3. | வண்ணம் தொட்டு | – | ஊஞ்சல் ஆடலாம். |
| 4. | மரக்கிளையில் | – | பூத்துச் சிரிக்கலாம். |

GLY7BV

## பேசுவோம் வாங்க!

வானவில்லைத் தொட்டு என்னென்ன வரைந்தார்கள்?

ஒத்த ஓசையில் முடியும் சொற்களை மட்டும் வட்டமிடுக

படங்கள் ஊஞ்சல் கால்கள் மரங்கள்

வரையலாம் நனைக்கலாம் வானவில் சிரிக்கலாம்

வண்ணம் இது. பொருள்கள் எவை?

| | | | |
|---|---|---|---|
| வெள்ளை | சோறு | பால் | கொக்கு |
| கருப்பு | | | |
| பச்சை | | | |
| சிவப்பு | | | |

பாடலைத் தொடர்ந்து பாடுக

கருப்புதொட்டு கருப்புதொட்டு
__________ வரையலாம்
காகம்போல காகம்போல
கரைந்து பார்க்கலாம்

வெள்ளை தொட்டு வெள்ளை தொட்டு
________________ வரையலாம்
________________________________
________________________________

## படத்தையும் சொல்லையும் பொருத்துக






| | |
|---|---|
| முட்டை | மரங்கள் |
| பெட்டிகள் | தட்டுகள் |
| பூ | மரம் |
| முட்டைகள் | பூக்கள் |
| தட்டு | பெட்டி |








## உரிய பன்மைச் சொல்லை எழுதுக

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மிட்டாய் | மிட்டாய்கள் | பூ | பூக்கள் | பழம் | பழங்கள் |
| சட்டை | ___________ | ஈ | ___________ | பட்டம் | ___________ |
| பொம்மை | ___________ | தேனீ | ___________ | பாடம் | ___________ |
| மேசை | ___________ | புறா | ___________ | புத்தகம் | ___________ |
| பை | ___________ | மைனா | ___________ | வண்ணம் | ___________ |

# 6. என் கற்பனையில்...

நேயன், நாம் படம் வரையலாமா?

ஓ... வரையலாமே!

என்ன வரையலாம்?

வீடு வரையலாமா?





நேயன் நிலா

சரி, எனக்கும் வீடு வரையத் தெரியும். வரையலாமே.

நிலா, உனக்குப் பிடித்தது போல நீ வரை. எனக்குப் பிடித்தது போல நான் வரைகிறேன்.

(இருவரும் வரையத் தொடங்குகின்றனர்)



உரையாடலைக் கேட்டும் படித்தும் புரிந்துகொள்க.

என் வீட்டிலிருந்து பார்த்தால் மலை தெரியும்.



என் வீட்டிற்குப் பக்கத்தில் ஆறு இருக்குமே!



என் வீட்டின் இரு பக்கமும் மரங்கள் இருக்குமே!



என் வீட்டிற்கு முன்பக்கம் அழகான பூச்செடிகள் இருக்கும்.



வீட்டிற்கு எனக்குப் பிடித்த நீல வண்ணம் தீட்டுவேன்.



என் வீட்டிற்கு மஞ்சள் வண்ணம் அடிப்பேன்.



என் வீட்டில் எனக்குப் பிடித்த பூனைக்குட்டி வரைவேனே!



என் வீட்டுத் தோட்டத்தில் வாத்துகள் இருக்குமே!



என் வீட்டு மரத்தில் ஊஞ்சல் ஆடலாம்.



என் வீட்டின் படிக்கட்டில் சறுக்குப் பலகை இருக்குமே!



நான் வரைந்து முடித்துவிட்டேன்.

நானும் வரைந்து விட்டேன்.

நீ வரைந்த வீடு எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது.

உன் வீடும் அழகாக உள்ளது.

எது யாருடைய வீடு? கண்டுபிடியுங்கள். எழுதுங்கள்





பெருமிதம்



நாங்கள் வரைந்த படங்களைப் பார்த்து எல்லாரும் பாராட்டினார்கள். பெருமையாக இருந்தது. நீங்கள் எப்பொழுதெல்லாம் பெருமைப்பட்டிருக்கிறீர்கள்?



உனக்குப் பிடித்ததை நீயும் வரையலாமே

# பயிற்சி

## படித்துப் பழகுக

| | |
|---|---|
| படம் வரையலாமா | பிடித்ததுபோல |
| இரு பக்கமும் | வீட்டிற்குப் பக்கத்தில் |
| ஊஞ்சல் ஆடலாம் | சறுக்கி விளையாடலாம் |

## எழுதிப் பழகுக

வீடு தோட்டம் படிக்கட்டு மலை

ஆறு பூனைக்குட்டி வாத்து சறுக்குப்பலகை

## பொருத்தமான குறியிடுக – சரி ✓ தவறு ✗

1. நிலாவின் வீட்டிலிருந்து பார்த்தால் மலை தெரியும். ☐
2. நேயன் வீட்டின் இரு பக்கங்களிலும் மரங்கள் இருக்கின்றன. ☐
3. நிலாவின் வீடு மஞ்சள் நிறமுடையது. ☐
4. நேயன் வீட்டில் வாத்துகள் இருக்கின்றன. ☐
5. நிலா வீட்டு மரத்தில் ஊஞ்சல் ஆடலாம். ☐

## வாய்மொழியாக விடை தருக

1. நேயன், நிலா வரைந்தனவற்றுள் உனக்குப் பிடித்தவை எவை? காரணம் கூறுக.

JL4EHU

## விடை எழுதுக

1. நேயன், நிலா இருவரும் என்ன வரைந்தார்கள்?
2. நேயன் என்னென்ன வரைந்தான்?
3. நிலா வரைந்த வீடு பற்றி இரண்டு தொடர்கள் எழுதுக.

## படத்திற்குரிய பெயரை எழுதுக



## எந்த இடம்? என்ன பொருள்? எழுதுக



## என்ன பதில் சொல்லியிருப்பார்கள்?



## யார் என்ன செய்கிறார்கள்?



பெயர்: சிறுமி

செயல்: தூங்குகிறாள்



பெயர்: பட்டம்

செயல்: ____________________________



பெயர்: ____________________________

செயல்: ____________________________



பெயர்: ____________________________

செயல்: ____________________________



பெயர்: ____________________________

செயல்: ____________________________



பெயர்: ____________________________

செயல்: ____________________________

# 7. விட்டுச் செல்லாதே







**எளிய சொற்களையும் தொடர்களையும் உரிய ஒலிப்புடன் உரக்கப் படிக்க.**




**அழுகை**

எனக்குப் பிடித்த பொருள்
தொலைந்துவிட்டால், நான் அழுதுவிடுவேன்.
நீங்கள் எதற்கெல்லாம் அழுவீர்கள்?



# பயிற்சி

## படித்துப் பழகுக

| விட்டுச் செல்லாதே | கிடைத்துவிட்டது | மறந்துவிட்டான் |
|---|---|---|
| கரிக்கோல் | தேடுவாளே | தெரிந்துவிடும் |

## எழுதிப் பழகுக

| கரிக்கோல் | பிடிக்கும் | நாளை | மாலை |
|---|---|---|---|
| இங்கே | எங்கே | துருவி | அழிப்பான் |

## பொருத்தமான குறியிடுக – சரி ✓ தவறு ✗

1. பாத்திமா அழிப்பானை வீட்டில் மறந்து வைத்துவிட்டாள். ☐
2. கயல் தனது துருவியை மறந்து பள்ளியில் விட்டுச்சென்றாள். ☐
3. முத்துவிற்குக் கரிக்கோல் கூராக இருந்தால் பிடிக்காது. ☐
4. பாத்திமா, முத்து, கயல் மூவரும் ஒரே வகுப்பில் படிக்கிறார்கள். ☐
5. பொம்மை போட்ட அழிப்பான் பாத்திமாவினுடையது. ☐

## சொன்னது யார்? பொருத்துக

| | | | |
|---|---|---|---|
| 1. | கயல் என்னை எடுக்காமல் சென்றுவிட்டாள் | – | பாத்திமா |
| 2. | எழுதும்போது பிழையானால் என்னைத் தேடுவாளே | – | கயல் |
| 3. | இங்கேயும் இல்லையே | – | முத்து |
| 4. | இங்கேதானே வைத்தேன் | – | கரிக்கோல் |
| 5. | எங்கே போனது? | – | அழிப்பான் |

## வாய்மொழியாக விடை தருக

1. கரிக்கோல், துருவி, அழிப்பான் இவை மூன்றும் என்னென்ன நினைத்து வருத்தப்பட்டன?

MK9LNT

## விடை எழுதுக

1. வகுப்பில் யார் யார் என்னென்ன பொருள்களை விட்டுச் சென்றனர்?
2. விட்டுச்சென்ற பொருள்கள் உரியவர்களுக்குக் கிடைத்தனவா? எப்போது?

## வண்ணமிடப்பட்ட சொல் யாரைக் குறிக்கிறது?




அவள் என்பது

- ▢ கயல்
- ▢ பாத்திமா




அவர்களும் என்பது

- ▢ அழிப்பான், துருவி, கரிக்கோல்
- ▢ கயல், பாத்திமா, முத்து

## பொருத்தமான சொல்லை எழுதி நிரப்புக

(அது, அவன், அவள், அவை, அவர்கள்)

1. மதி ஒளி இரண்டாம் வகுப்பு படிக்கிறாள்.

   _______________ அழகாக ஓவியம் வரைகிறாள்.
2. வளவன் மிதிவண்டி ஓட்டுகிறான்.

   _______________ கடைக்குச் செல்கிறான்.
3. பயணிகள் பேருந்தில் ஏறுகின்றனர்.

   _______________ சுற்றுலா செல்கின்றனர்.
4. பூனை பால் குடிக்கிறது.

   _______________ எலியைப் பிடிக்கும்.
5. கதைப் புத்தகங்கள் எனக்கு மிகவும் பிடிக்கும்.

   _______________ அத்தை வாங்கித் தந்தவை.

# 8. இறகு



பார்க்கப் பார்க்க அழகுதான்
பளபளக்கும் இறகுதான்
நேற்றுக் கண்டு எடுத்தது
நேர்த்தியான இறகிது

ஏழு வண்ணம் காட்டிடும்
இந்த நல்ல இறகினைக்
கீழே போட்ட பறவையே
கேட்டால் உடனே தருகிறேன்

எந்தப் பறவை போட்டதோ?
எங்குத் தேடி அலையுதோ!
சொந்தக்காரப் பறவையே
வந்து கேட்டால் தருகிறேன்

– அழ. வள்ளியப்பா

# பயிற்சி

## சொல்லிப் பழகுக

அழகுதான் | இறகுதான் | எடுத்தது | இறகிது

பறவையே | தருகிறேன் | போட்டதோ | அலையுதோ

## படித்தும் எழுதியும் பழகுக

பார்க்கப் பார்க்க | பளபளக்கும்

நேர்த்தியான | கண்டு எடுத்தது | ஏழு வண்ணம்

உடனே தருகிறேன் | வந்து கேட்டால்

சொந்தக்காரப் பறவை

## ஒத்த ஓசையுடைய சொற்களைப் பொருத்துக

| | | | |
|---|---|---|---|
| 1. | இந்த | – | அலையுதோ |
| 2. | அழகுதான் | – | இறகிது |
| 3. | போட்டதோ | – | எந்த |
| 4. | எடுத்தது | – | இறகுதான் |

PA45SG

## பேசுவோம் வாங்க!

இறகைக் கண்டெடுத்த குழந்தை என்ன செய்ய நினைத்தது? ஏன்?

## எவை யாருடைய கண்கள் கண்டுபிடி

| ரைகுதி | னையா | ந்தைஆ | ல்ணிஅ |
|---|---|---|---|









## தந்தது யார்?






பறவைக் குஞ்சுகளுக்கு உணவு கொடுத்தது யாராக இருக்கும்? கண்டுபிடித்து வட்டமிடுங்கள்.

# 9. ஆத்திசூடி




## நன்மை கடைபிடி

## ஆத்திசூடி




### நீர் விளையாடேல்

# ஆத்திசூடி




நூல் பல கல்

## ஆத்திசூடி






ஈரோடு மாவட்டம் சேமூரைச் சேர்ந்த சிறுவன் முகம்மது யாசின். அரசுப்பள்ளியில் இரண்டாம் வகுப்பு படிக்கிறான்.

ஒருநாள் பள்ளிக்குச் செல்லும்போது சாலையோரத்தில் ஐம்பதாயிரம் ரூபாயைக் கண்டான். அப்பணத்தை ஆசிரியரின் உதவியுடன் காவல் நிலையத்தில் ஒப்படைத்தான்.

அவனுக்குக் காவல் துறையினர் வாழ்த்து தெரிவித்தனர். பலரும் யாசினைப் பாராட்டினர்.

# நேர்பட ஒழுகு

## ஆத்திசூடி




### நோயினுக்கு இடம் கொடேல்

# பயிற்சி

## படித்தும், எழுதியும் பழகுக

நன்மை கடைபிடி

நீர் விளையாடேல்

நூல் பல கல்

நேர்பட ஒழுகு

நோயினுக்கு இடம் கொடேல்

RTQHX4

## பொருத்துக










நூல் பல கல்

நன்மை கடைபிடி

நேர்பட ஒழுகு

நோயினுக்கு இடம் கொடேல்

# தமிழ்ச்சொல் அறிந்து பயன்படுத்துவோம்


கரிக்கோல்


அழிப்பான்


துருவி

வரைமெழுகு



அடையாள அட்டை

புத்தகப்பை



கரும்பலகை

நாள்காட்டி




மின்விசிறி

மேசை



விளையாட்டுத்திடல்

சாலை



வாயில் கதவு

மதில்



பழச்சாறு

பழப்பாகு



வறுவல்

மெதுரொட்டி



பனிக்கூழ்

தண்ணீர்ப் புட்டி


## வந்த பாதை

### முதல் எழுத்தை மாற்றிப் பறவையின் பெயரை உருவாக்குக

| | |
|---|---|
| பேருந்து | |
| வாளி | |
| மத்து | |
| மேகம் | |
| சந்தை | |



### முதல் எழுத்தை நெடிலாக மாற்றிப் புதிய சொல் உருவாக்குக






| | |
|---|---|
| கல் | |
| குடை | |
| பனை | |
| நகம் | |
| மலை | |

### படத்திற்குப் பொருத்தமான சொல்லை எடுத்து எழுதுக

| வால் | வாள் |
|---|---|



| புலி | புளி |
|---|---|



| கோழி | கோலி |
|---|---|



| வெள்ளம் | வெல்லம் |
|---|---|



| பல்லி | பள்ளி |
|---|---|



| மலை | மழை |
|---|---|



## இரண்டாம் எழுத்தை நீக்கிப் புதிய சொல்லை உருவாக்குக

| | |
|---|---|
| பஞ்சு | பசு |
| ஆவணி | |
| சட்டை | |
| பகல் | |
| பாடல் | |
| தவலை | |



## சொல்லுக்குள் மறைந்திருக்கும் சொல்லைக் கண்டுபிடித்து எழுதுக

| பலகை | மாமரம் | வௌவால் | கண்ணாடி | விண்மீன் |
|---|---|---|---|---|
| கை | | | | |

## சொற்படிக்கட்டுகளை நிரப்புக

| | | | | |
|---|---|---|---|---|
| கை | | | | |
| பு | கை | | | |
| ப | ல | கை | | |
| ம | ல் | லி | கை | |
| து | ம் | பி | க் | கை |

| | | |
|---|---|---|
| மை | | |
| | மை | |
| | | மை |

| | | | | |
|---|---|---|---|---|
| பூ | | | | |
| பூ | னை | | | |
| பூ | ட் | டு | | |
| பூ | ச் | செ | டி | |
| பூ | ச் | செ | ண் | டு |

| | | |
|---|---|---|
| வா | | |
| வா | | |
| வா | | |

## என் நினைவில்

### எங்கே வந்தார்கள்?

சுருங்கி விரிந்து
சுருங்கி விரிந்து
புழு வந்தது



வளைந்து நெளிந்து
வளைந்து நெளிந்து
பாம்பு வந்தது





தத்தித் தாவி
தத்தித் தாவி
தவளை வந்தது

கூவிப் பாடி
கூவிப் பாடி
குயில் வந்தது



மெல்ல நகர்ந்து
மெல்ல நகர்ந்து
ஆமை வந்தது





அசைந்து ஆடி
அசைந்து ஆடி
யானை வந்தது

பதுங்கிப் பாய்ந்து
பதுங்கிப் பாய்ந்து
...................... வந்தது

தோகை விரித்து
தோகை விரித்து
...................... வந்தது

குதித்து ஓடி
குதித்து ஓடி
...................... வந்தது

எல்லாரும் எங்கே வந்தார்கள்?

**சிறுசிறு தொடர்களை சொல்லக்கேட்டு, பின்தொடர்ந்து கூறுக.**

எல்லாரும் அருகில் உள்ள அருவியில் குளிக்க வந்தார்கள்.

குளிக்க வந்த நண்பர்களுக்கு வண்ணம் தீட்டி மகிழுங்கள்



பலமுறை சொல்லிப் பழகுக

வழலைக் கட்டி
நழுவி விழுந்தது

ஆற்றங்கரையின் ஓரம்
பாறையெல்லாம் ஈரம்

கிளையின் நிழல்
மலையில் விழுந்தது

வெள்ளை முயல்கள் வயலிலே
துள்ளி விளையாடின

முதலையும் தவளையும்
மழையில் நனைந்தன

குளக்கரையோரத்துக் குழி
குதித்து விழுந்தது நரி

## படம் பார்த்துக் கதையைக் கூறுக



கதைக்குப் பொருத்தமான தலைப்பை எழுதுக

## அகரவரிசைமுறை அறிவோம்




## அகரவரிசைப்படுத்துக

சீப்பு, சங்கு, சூரியன், சாட்டை, சிங்கம், சேவல், சுண்டல்,

சௌ சௌ, செடி, சொட்டுமருந்து, சைகை, சோளம்



## உரிய ஒலிப்புடன் படித்துப் பழகுக



ஆற்றின் இருபுறம் – கரை

ஆடையில் படிவது – கறை





உயர்ந்து நிற்பது – மலை

உயிர்களைக் காப்பது – மழை





நீரில் மலர்வது – அல்லி

நீரை எடுத்தார் – அள்ளி





விளக்கில் கிடைப்பது – ஒளி

வெடித்தால் எழுவது – ஒலி





மாட்டிற்கு இருப்பது – வால்

மரத்தை அறுப்பது – வாள்





சுவரில் ஊர்வது – பல்லி

சுவைத்துக் கற்க – பள்ளி



## 10. அழகுத் தோட்டம்

தோட்டத்திலே வண்ணப்பூவும்
பூத்துக் குலுங்குது
பார்த்ததுமே சின்னத்தேனீ
பாட்டுப் பாடுது

பசுமையான புல்லைத்தேடி
மாடும் மேயுது
பக்கத்திலே கன்றுக்குட்டி
துள்ளி ஓடுது

உயரமான மரத்தினிலே
பழமும் தொங்குது
பச்சைக்கிளி பறந்துவந்து
கொத்தப் பார்க்குது

அழகுத்தோட்டம் பார்க்கும்போதே
நம்மை இழுக்குது
ஆட்டம்ஆடி பாட்டுப்பாட
ஆசை பொங்குது.

**பாடலைக் கேட்டுப் புரிந்துகொள்க – பாடி மகிழ்க**

# பயிற்சி

## ஒலித்துப் பழகுக

பூத்துக் குலுங்குது | பாட்டுப் பாடுது | துள்ளி ஓடுது

மாடும் மேயுது | பழமும் தொங்குது | கொத்தப் பார்க்குது

நம்மை இழுக்குது | ஆசை பொங்குது

## படித்தும் எழுதியும் பழகுக

ஆசை | சின்னத்தேனீ

பச்சைக்கிளி | கன்றுக்குட்டி | தோட்டம்

3I8DLR

## படத்தை உரிய சொல்லுடன் இணைக்க





பச்சைக்கிளி

வண்ணப்பூ

சின்னத்தேனீ

பசும்புல்

உயரமான மரம்







## பேசுவோம் வாங்க!

அழகுத்தோட்டத்தில் எவையெல்லாம் இருந்தன?

## உனக்குப் பிடித்த வருணனைத் தொடரைக் ✓ குறியிடுக



இனிப்புப் பழம்

பழுத்த பழம்

சிவந்த பழம்

நல்ல நாய்க்குட்டி

சின்ன நாய் குட்டி

கருப்பு நாய்க்குட்டி





வட்ட நிலா

முழு நிலா

வெள்ளை நிலா

ஆடும் மயில்

அழகு மயில்

வண்ண மயில்



## படத்திற்குப் பொருத்தமான வருணனைத் தொடரை எழுதுக









# சொல்லோடு விளையாடு




## உரிய எழுத்தை எழுதி நிரப்புக



ஆமை    மைனா



எறும்___    ___றா



கு___    ___க்குட்டை

## முடியும் எழுத்தில் தொடங்கும் சொல்லை எழுதுக

| | |
|---|---|
| சிறகு → ______ | அடுப்பு → ______ |
| சிரிப்பு → ______ | அம்மி → ______ |

புகை
மிளகு
புத்தாடை
குயில்

# 11. நண்பரைக் கண்டுபிடி!

DPZP7Z






முயல் : நீங்களே
கண்டுபிடியுங்களேன்.
நான்கு கால்கள் கொண்டவர்.

வாத்து : மாடுதானே?

முயல் : இல்லை.
கூரான கொம்புகள் இருக்காது.
பெரிய உருவம் கொண்டவர்.

குரங்கு : ஓ... நான்
சொல்லட்டுமா...
யானைதானே?

முயல் : ஊஹும். நீண்ட
தும்பிக்கை இருக்காது.
வேகமாக ஓடுவார்.





கழுகு : எனக்குத் தெரியும்.
சிறுத்தைதானே?

முயல் : இல்லை.
கருப்புப் புள்ளிகள் இருக்காது.
நீண்ட கால்கள் இருக்கும்.



நரி : வரிக்குதிரையா?

முயல் : இல்லை.
கருப்பு வெள்ளை வரிகள்
இருக்காது. நீண்ட கழுத்தைக்
கொண்டவர்.



**கிளி :** ஐ! தெரிந்துவிட்டது. ஒட்டகம்தானே?

**முயல் :** இல்லையே! உருண்டையான திமில் இருக்காது. உடலில் கட்டங்கள் இருக்கும்.

**அனைவரும் :** ஓ! நாங்கள் கண்டுபிடித்துவிட்டோம்.

புது நண்பர் வந்தார். விளையாட்டு தொடங்கியது.



புது நண்பர் யாரென்று உங்களுக்குத் தெரியும்தானே?

அவர் பெயரை எழுதுங்கள்...............................................................................

# பயிற்சி

## படித்துப் பழகுக

கூரான கொம்புகள் நீண்ட தும்பிக்கை

கருப்புப் புள்ளிகள்

உருண்டையான திமில் கருப்பு வெள்ளை வரிகள்

## எழுதிப் பழகுக

நண்பர் திமில் தும்பிக்கை கொம்புகள்

வரிகள் ஒட்டகச்சிவிங்கி கழுத்து

## பொருத்தமான குறியிடுக – சரி ✓ தவறு ✗

SBG31I

1. நீண்ட தும்பிக்கை உடையது யானை.
2. ஒட்டகச் சிவிங்கியின் முதுகில் திமில் இருக்கும்.
3. சிறுத்தையின் உடலில் கருப்பு வெள்ளை வரிகள் இருக்கும்.
4. வரிக்குதிரைக்குக் கொம்புகள் இல்லை.
5. மாட்டிற்குக் கூரான கொம்புகள் இருக்கும்.

## பொருத்துக

| | | | |
|---|---|---|---|
| 1. | நான்கு கால்கள், கூரான கொம்புகள் | – | ஒட்டகம் |
| 2. | பெரிய உருவம், நீண்ட தும்பிக்கை | – | வரிக்குதிரை |
| 3. | நீண்ட கால்கள், கருப்பு வெள்ளை வரிகள் | – | யானை |
| 4. | நீண்ட கழுத்து, உருண்டையான திமில் | – | மாடு |

## வாய்மொழியாக விடை தருக

1. இக்கதையில் புது நண்பர் எவ்வாறெல்லாம் வருணிக்கப்படுகிறார்?

## விடை எழுதுக

1. உடலில் கருப்பு வெள்ளை வரிகளைக் கொண்ட விலங்கு எது?
2. புதிதாக வந்த நண்பர் யார்?

## ஆதிரையின் பெட்டியில்...



இவள் ஆதிரை. சின்னச் சின்னப் பொருள்களைத் தேடித் தேடிச் சேர்த்து வைப்பாள்.

இது, ஆதிரையின் பெட்டி. எத்தனை பொருள்கள் பாருங்களேன்!



சேர்த்து வைத்தவை பற்றி எழுதி வைப்பது ஆதிரையின் வழக்கம்.




இதுபோல நீங்களும் சேகரிப்பது உண்டா? அவற்றைப் பற்றியும் எழுதலாமே!

ஆறு வேறுபாடுகளைக் கண்டுபிடித்து வட்டமிடுக





உற்றுநோக்கு → சேர் → உருவாக்கு



சேர்ப்போம்
உருவாக்குவோம்



பல்வேறு உருவங்களை உருவாக்கி மகிழுங்கள்

# குட்டிக்குரங்கின் ஒருநாள்...

















வேரில் பழுத்த **பெரிய** பலா
வேண்டும் அளவு தின்றிடுவேன்



குளத்தின் **குளிர்ந்த** நீரிலே
குதித்து விளையாடிடுவேன்



**வளைந்த** கிளையில் வாலைச்சுருட்டித்
தலைகீழாகத் தொங்கிடுவேன்



அம்மா என்னைத் தேடும் முன்னே
**விரைந்து** ஓடிச் சேர்ந்திடுவேன்

VQ558T



# 12. பூம்வண்டி

பூம்பூம் பூம்பூம் பூம்வண்டி

புறப்படப் போகுது ஏறிடுங்க

ஆயிஷா வண்டியின் ஓட்டுநராம்

நளனும் ஜெரினும் பயணிகளாம்





தலைநகர் டெல்லி பார்த்திடலாம்

ஸ்ரீநகர்கூட போய் வரலாம்

காடு மலைகள் பலதாண்டி

கடக்கப் போகுது பூம்வண்டி

ஆக்ரா நகரின் தாஜ்மஹால்

காஷ்மீர் ரோஜாத் தோட்டங்கள்

பார்க்க அழைக்குது பூம்வண்டி

புறப்படப் போகுது ஏறிடுங்க



## படித்தும் எழுதியும் பழகுக

ஜ் ஜ ஜா ஜி ஜீ ஜு ஜூ ஜெ ஜே
ஜை ஜொ ஜோ

ஸ் ஸ ஸா ஸி

ஷ் ஷ ஷா ஷி ஷீ ஷு ஷூ ஷெ ஷே ஷை

ஹ் ஹ ஹா ஹி ஹீ ஹு ஹூ ஹெ ஹே ஹை

ஸ்ரீ


எவரெஸ்ட்


ரோஜா


தாஜ்மஹால்


ஷாஜஹான்


ஜான்சி ராணி


ஜவஹர்லால் நேரு


நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ்

ரம்ஜான், கிறிஸ்துமஸ், பாகிஸ்தான், ஜப்பான்,
அஸ்ஸாம், காஷ்மீர், ஸ்ரீநகர், ஜாங்கிரி, ஜிலேபி,
குலாப் ஜாமூன், பாதுஷா, பஜ்ஜி

# எறும்பூரில் இனிப்பு விழா



# பயிற்சி

யாரைப் போல் வேடமிட்டுள்ளனர்? பெயர்களை எழுதுக




படம் பார்த்துப் பெயர் எழுதுக











# 13. வாழ்த்தலாம் வாங்க



பர்வீன் படம் வரைந்துகொண்டு இருந்தாள். அப்போது அஜ்மல் வந்தான்.

"ஐ! மயில். அழகாக உள்ளது, அக்கா" என்றான் அஜ்மல்.

"வா! வா! உனக்குப் பிடிக்குமே... வண்ணம் தீட்டுகிறாயா?" என்றாள் பர்வீன்.

"ஓ!" ஆர்வத்துடன் அமர்ந்தான் அஜ்மல்.

"இறகின் நடுவில் எழுத இடம் விட்டு வண்ணம் தீட்டு அஜ்மல்" என்றாள் பர்வீன்.

"ஏன் அக்கா?" என்று கேட்டான் அஜ்மல்.



"அந்த இடங்களில் ஆங்கில மாதங்களின் பெயர்களை எழுதப் போகிறேன்" என்றாள் பர்வீன்.

"இது நாள்காட்டியா அக்கா?" என்று கேட்டான் அஜ்மல்.

"இல்லை. இது நினைவூட்டி" என்றாள் பர்வீன்.

"நினைவூட்டியா... புரியும்படி சொல்லேன் அக்கா" சிணுங்கினான் அஜ்மல்.

"இதை ஆசிரியரிடம் தருவேன். அந்தந்த மாதத்தில் பிறந்தவர்களின் பெயர்களை எழுதுவோம்" என்றாள் பர்வீன்.

"எதற்காக அக்கா?" என்றான் அஜ்மல்.

"மறக்காமல் வாழ்த்து சொல்லத்தான் இந்தப் பிறந்தநாள் நினைவூட்டி" என்றாள் பர்வீன்.

"நன்றாக இருக்கிறதே. எங்கள் வகுப்புக்கும் ஒன்று செய்யலாமா அக்கா?" என்றான் அஜ்மல்.

"ஓ, செய்யலாமே! இனி எல்லாரின் பிறந்தநாளிலும் மறக்காமல் வாழ்த்தலாம்"



படித்தும் எழுதியும் பழகுக!

| | | | |
|---|---|---|---|
| ஜனவரி | பிப்ரவரி | மார்ச் | ஏப்ரல் |
| மே | ஜூன் | ஜூலை | ஆகஸ்ட் |
| செப்டம்பர் | அக்டோபர் | நவம்பர் | டிசம்பர் |

# பயிற்சி

## படித்துப் பழகுக

வண்ணம் நாள்காட்டி

நினைவூட்டி

பிறந்தநாள் வாழ்த்து

## எழுதிப் பழகுக

பிறந்தநாள் வாழ்த்து ஜனவரி ஜூன்

ஜூலை செப்டம்பர் ஆகஸ்ட்

## பொருத்தமான குறியிடுக – சரி ✓ தவறு ✗

1. பர்வீன் மயில் படம் வரைந்தாள். ▢
2. அஜ்மலுக்கு வண்ணம் தீட்டப் பிடிக்கும். ▢
3. பர்வீன் செய்தது நாள்காட்டி. ▢
4. நினைவூட்டியில் தமிழ் மாதங்களின் பெயர்களை எழுதினர். ▢

## பொருத்துக

| | | | |
|---|---|---|---|
| 1. | வண்ணம் தீட்டியது | – | பர்வீன் |
| 2. | மயில் வரைந்தது | – | நினைவூட்டி |
| 3. | பிறந்தநாள் | – | பன்னிரண்டு |
| 4. | ஆங்கில மாதங்கள் | – | அஜ்மல் |

ABKI2C

## வாய்மொழியாக விடை தருக

1. அஜ்மலும் பர்வீனும் பிறந்தநாள் நினைவூட்டியை எப்படியெல்லாம் உருவாக்கினார்கள்?

## விடை எழுதுக

1. ஆங்கில மாதங்களில் முதல் மாதம் எது?
2. நீ பிறந்த ஆங்கில மாதம் எது?
3. ஆங்கில மாதங்களில் இறுதி மாதம் எது?

## இதோ உங்கள் வகுப்புக்கான பிறந்தநாள் நினைவூட்டி

**ஆங்கில மாதங்களையும் அம்மாதங்களில் பிறந்த நண்பர்களின் பெயர்களையும் எழுதுக.**




## குறுக்கெழுத்துப் புதிரில் ஆங்கில மாதங்களின் பெயர்களை நிரப்புக



# 14. ஓடி விளையாடு பாப்பா



ஓடி விளையாடு பாப்பா – நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா
கூடி விளையாடு பாப்பா – ஒரு
குழந்தையை வையாதே பாப்பா

காலை எழுந்தவுடன் படிப்பு – பின்பு
கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு
மாலை முழுதும் விளையாட்டு –என்று
வழக்கப்படுத்திக் கொள்ளு பாப்பா

சாதிகள் இல்லையடி பாப்பா –குலத்
தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்
நீதி உயர்ந்தமதி கல்வி – அன்பு
நிறைய உடையவர்கள் மேலோர்

*– சுப்பிரமணிய பாரதியார்*




பாடலைக் கேட்டுப் புரிந்துகொள்க – பாடி மகிழ்க.

# பயிற்சி

## ஒலித்துப் பழகுக

ஓடி விளையாடு | ஓய்ந்திருக்கலாகாது | கூடி விளையாடு

குழந்தையை வையாதே | கனிவு கொடுக்கும் | சாதிகள் இல்லை

உயர்ந்தமதி

## படித்தும் எழுதியும் பழகுக

விளையாடு | வையாதே | கனிவு | உயர்ந்த மதி

குழந்தை | அன்பு | படிப்பு | பாட்டு

Z4T7G4

## பாடலில் உள்ளபடி பொருத்துக

| | |
|---|---|
| கனிவு கொடுக்கும் | விளையாட்டு |
| காலை | இல்லை |
| மாலை | மேலோர் |
| சாதிகள் | படிப்பு |
| அன்பு நிறைய உடையவர் | பாட்டு |

## பேசுவோம் வாங்க!

இப்பாடலில் பாரதியார் என்னென்ன கூறுகிறார்?

## உரையாடலைக் கவனி. சரியான தொடருக்குக் ✓ குறியிடுக.

ராமு... கலாவுக்கும் வேடிக்கை பார்க்க ஆசையாக இருக்கும் அல்லவா? சண்டை போடாதே. அவளுக்கும் சன்னல் ஓரத்தில் இடம் கொடு



☐ இருவருக்கும் சன்னல் ஓரத்தில் அமர இடம் கிடைக்கவில்லை.

☐ ராமு சன்னல் ஓரத்தில் அமர்ந்து இருக்கிறான்.

☐ கலா சன்னல் ஓரத்தில் அமர்ந்து இருக்கிறாள்.



இந்தப் பூந்தோட்டத்தில் எனக்கு மிகவும் பிடித்தவை மஞ்சள் வண்ணப் பூக்கள்

மஞ்சள் வண்ணப் பூக்கள் மட்டுமே அழகானவை. ☐

பூந்தோட்டத்தில் மஞ்சள் வண்ணப் பூக்கள் மட்டுமே உள்ளன. ☐

பூந்தோட்டத்தில் பல வண்ணப் பூக்கள் இருக்கின்றன. ☐

கோமதி, வழக்கமாக ஓட்டப்பந்தயத்தில் நான்தான் வெற்றி பெறுவேன். இந்தமுறை நீ வென்று விட்டாய். வாழ்த்துகள்!



☐ கோமதிக்கு ஓடத் தெரியாது.

☐ கோமதி வேகமாக ஓடுவாள்.

☐ கோமதி இந்தமுறை போட்டியில் கலந்துகொள்ளவில்லை.



அமுதா, நீ பாடுவதைக் கேட்டுக்கொண்டே இருக்கலாம். நேரம் போவதே தெரியவில்லை

அமுதாவுக்கு நன்றாகப் பாடத் தெரியாது. ☐

ஆனந்திக்கு அமுதாவின் பாடல்களைக் கேட்கப் பிடிக்காது. ☐

அமுதா நன்றாகப் பாடுவாள். ☐

அத்தையின் அன்புப் பரிசான கிளி பொம்மை உடைந்துவிட்டது. வருத்தமாக இருக்கிறது



மரியாவின் வருத்தத்திற்கான காரணம்...

☐ மரியாவிடம் வேறு பொம்மைகள் இல்லாததால்

☐ அத்தை அன்பாகக் கொடுத்த பரிசு உடைந்ததால்

☐ அத்தை திட்டுவார் என்பதால்

# 15. ஆத்திசூடி

E5IJ9B

ஒரு குளத்தில் நிறைய மீன்கள் இருந்தன.
மீன் குஞ்சு ஒன்று அதன் அம்மாவுடன்
இரை தேடச் சென்றது.





அப்போது பெரிய புழு ஒன்றைக் கண்டது.
"ஆகா! நல்ல உணவு கிடைத்துவிட்டது,
அம்மா! நான் அதைப் பிடிக்கட்டுமா?" என்று
அம்மாவைக் கேட்டது மீன்குஞ்சு.

"சற்றுப் பொறு செல்லமே!
இதுபோன்ற புழுவை நான் இந்தக் குளத்தில்
இதுவரை கண்டதில்லை. அருகே சென்று
பார்ப்போம் வா" என்று கூறியது அம்மா மீன்.





புழுவின் அருகில் சென்று பார்த்தன. " அந்தப் புழு
எதிலோ மாட்டிக்கொண்டிருக்கிறது, அம்மா"
என்றது மீன்குஞ்சு.

"ஆமாம். இதுதான் தூண்டில். இதைக்
கவனிக்காமல் பிடித்திருந்தால் நாம் இதில்
மாட்டியிருப்போம்" என்றது அம்மா மீன்.

" இனி உங்களைப் போலவே நானும் கவனமாய்
இருப்பேன், அம்மா" என்றது மீன் குஞ்சு.
புரிந்துகொண்ட மீன் குஞ்சுக்கு அம்மாவிடம்
இருந்து முத்தம் ஒன்று பரிசாகக் கிடைத்தது.



## பெரியாரைத் துணைகொள்

# ஆத்திசூடி




## இளமையில் கல்

# ஆத்திசூடி

## கேள்வி எழுந்தது

## வழி பிறந்தது


























## கேள்வி முயல்

## ஆத்திசூடி




வைகறை துயில் எழு

## ஆத்திசூடி






### வித்தை விரும்பு

# பயிற்சி

## படித்தும் எழுதியும் பழகுக

வைகறை துயில் எழு

பெரியாரைத் துணைகொள்

கேள்வி முயல்

இளமையில் கல்

வித்தை விரும்பு

ZJ36FS

## உரிய தொடரைப் படத்துடன் பொருத்துக





இளமையில் கல்

கேள்வி முயல்

வைகறை துயில் எழு

வித்தை விரும்பு





# தமிழ்ச்சொல் அறிந்து பயன்படுத்துவோம்


பல்துலக்கி

குவளை



காலுறை

சீருடை



கழுத்துப்பட்டி

பொத்தான்



வெள்ளைத்தாள்

மட்டை



அழைப்புமணி

மின்விளக்கு



மெத்தை

நகரும் படிக்கட்டு



நிலைப்பேழை

வழலைக்கட்டி



கணினி

மடிக்கணினி



சுழல் நாற்காலி

தோள்பை



தொலைக்காட்சி

தொலைபேசி


## வந்த பாதை

பொருத்தமான தொடருக்குக் ✓ குறியிடுக



- மீன் தண்ணீரில் நீந்துகிறது ☐
- மீன் துள்ளிக் குதிக்கிறது ☐
- மீன் தண்ணீரில் மிதக்கிறது ☐



- வானூர்தி மேலே ஏறுகிறது ☐
- வானூர்தி நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது ☐
- வானூர்தி கீழே இறங்குகிறது ☐



- இது மாலை நேரம் ☐
- இது இரவு நேரம் ☐
- இது பகல் நேரம் ☐

### என்ன செய்கிறார்கள்? எழுதுக



மரம்



மரத்தில் ஒரு கூடு



கூட்டில் ஒரு பறவை

பறவை என்ன செய்கிறது?



தோட்டம்



தோட்டத்தில் ஒரு மலர்



மலரில் ஒரு வண்ணத்துப் பூச்சி

வண்ணத்துப் பூச்சி என்ன செய்கிறது?



ஆறு



ஆற்றில் நீர்



நீரில் மீன்

மீன் என்ன செய்கிறது?

எந்த வாகனம் எந்த விலங்கிற்கு உரியது? எழுதுக – காரணம் கூறுக

| மான், பூனை, புலி, வரிக்குதிரை, ஒட்டகச்சிவிங்கி, சிறுத்தை |
|---|








தொடரை நீட்டித்து எழுதுக



குடை

கருப்புக் குடை

பெரிய கருப்புக் குடை

தாத்தாவின் பெரிய கருப்புக் குடை



ஊஞ்சல்

_________ ஊஞ்சல் ( மர/ இரும்பு )

_________ _________ ஊஞ்சல் (சிவப்பு/ மஞ்சள்)

_________ _________ _________ ஊஞ்சல் (பெரிய/ சிறிய)



மலர்

_______________

____________________________

___________________________________________

## செய்திகளைப் படித்தறிக




## முதல் எழுத்தை மாற்றி உணவுப் பொருளாக்குக



| சொல் | உணவுப் பொருள் |
|---|---|
| கடை | வடை |
| ஏரி | |
| ஆறு | |
| மோப்பம் | |
| தேர் | |
| வண்டல் | |
| உப்பளம் | |
| செங்கல் | |
| ஆசை | |

## என் நினைவில்

## எப்படி உதவலாம்?



குட்டி எலி வெளியே வருவதற்கு இவற்றுள் எந்த வழியில் உதவலாம்? ✓ செய்க







வேறு எப்படி உதவலாம்? கலந்துரையாடுக



# விந்தை மனிதர்





பூசணிக்காய் தலையிலே
பச்சை மிளகாய் மூக்குதான்!
திராட்சை இரண்டு கண்களாம்
தக்காளிப்பழ வாய்தானாம்

பரங்கிக்காய் உடம்பிலே
புடலை இரண்டு கைகளாம்
வெண்டைக் காய்கள் விரல்களாம்
வெள்ளரிக்காய் கால்களாம்

காயும் பழமும் மனிதர்போல்
காண அழகு பாருங்கள்
நடனம் ஆடப் போகிறார்
நாமும் காண்போம் வாருங்கள்

பாடலைக் கேட்டுப் புரிந்துகொள்க – பாடி மகிழ்க.



## பொருத்தமான சொல்லை எழுதுக

லட்டு, மரம், ரோஜா,
மலை, மேசை,
மிட்டாய், வளையல்,
முயல்




பர்வீன்,
ஜ, ஹ, ஷ, ஸ, ஸ்ரீ
ஆகிய வரிசை
எழுத்துகளைக்
கொண்ட தன்
நண்பர்களின் பெயரை
எழுதுகிறாள்.

ஹரீஷ்
ஹரீதர்
ஆயிஷா
ஜூலி
விஜயா
ஜாஸ்மின்

நீங்களும்
எழுதலாமே!

## யார் அவர்?



அம்மா..
நான்
ஒருவரைப்
பார்த்தேன்
யார் அவர்?
அவர்
பாம்பைக்
கையாலேயே
பிடித்தார்
அப்படியா?
யானையையே
வாலைப் பிடித்துத்
தூக்கினார்
என்னது
யானையையா?
புலியையே
காலால்
மிதித்தார்
உண்மையாகவா?


அதுமட்டுமா!
சிங்கத்தின்
காலைப் பிடித்துச்
சுழற்றினார்
நானும்
அவரைப்
பார்க்க
வேண்டுமே!


இதோ...
இவர்தான்
அவர்
என்னையே
ஏமாற்றிவிட்டாயே!









# 16. யாரு ? யாரு? யாரு?

கத்தரிக்காய்க்குக்
குடைபிடிக்கக்
கற்றுக்கொடுத்தது யாரு?

அந்தக் கடலைக்கொட்டைக்கு
முத்துச் சிப்பிபோல
மூடிவச்சது யாரு?

பருத்திச்செடிக்குப்
பஞ்சு மிட்டாயைத்
தின்னக்கொடுத்தது யாரு?

அந்த வாசனையில்லாக்
காகிதப் பூவுக்கு
வண்ணமடிச்சது யாரு?

ஆலமரத்துக்கு
அத்தனை ஊஞ்சலை
ஆடக்கொடுத்தது யாரு?

அந்தத் தொட்டாசிணுங்கி
பட்டுன்னு மூடிக்கக்
கட்டளை போட்டது யாரு?

யாரு? யாரு? கூறு
அந்த இயற்கை
அன்னையாம் பாரு





– வையம்பட்டி முத்துசாமி

**பாடலைக் கேட்டுப் புரிந்துகொள்க – பாடி மகிழ்க.**

# பயிற்சி

## ஒலித்துப்பழகுக

கற்றுக்கொடுத்தது

மூடிவச்சது

தின்னக் கொடுத்தது

வண்ணமடிச்சது

ஆடக் கொடுத்தது

கட்டளை போட்டது

இயற்கை அன்னை

## படித்தும் எழுதியும் பழகுக

கத்தரிக்காய்

கடலைக்கொட்டை

முத்துச்சிப்பி

பருத்திச்செடி

பஞ்சுமிட்டாய்

காகிதப்பூ

தொட்டாசிணுங்கி

## பொருத்துக

1. கத்தரிக்காய் – முத்துச்சிப்பி
2. கடலைக்கொட்டை – ஊஞ்சல்
3. பருத்திச்செடி – வண்ணம்
4. ஆலமரம் – பஞ்சுமிட்டாய்
5. காகிதப்பூ – குடை

PCAUUJ

## கலந்துரையாடுக

இப்பாடலில் உனக்குப் பிடித்த வரிகள் எவை? ஏன் ?

நம்மைச் சுற்றி...



தூங்குமூஞ்சி மரத்தின் இலைகளைக் கவனித்திருக்கிறீர்களா? காலையிலும் மாலையிலும் எப்படி இருக்கும்?





பட்டாசுக்காயைத் தண்ணீரில் போட்டால் என்ன நடக்கும்?





சூரியகாந்திப்பூக்களைப் பார்த்திருக்கிறீர்களா? அனைத்தும் ஒரே திசையை நோக்கி இருக்கும்.



பலமுறை சொல்லிப்பார். கிடைக்கும் சொல்லை எழுதுக.

| | |
|---|---|
| தரிகத் | |
| லைகட | |
| சல்ஊஞ் | |
| டைகு | |
| டாய்மிட் | |

SQYX2U

# 17. சிறிய உருவம், பெரிய உலகம்!



"ஓ குட்டி எறும்பே!
உன்னைவிடப் பெரிய
அரிசியை எப்படித் தூக்கிச்
செல்கிறாய்?

அடடே! பார்த்துக்கொண்டு
இருக்கும்போதே உள்ளே
சென்றுவிட்டாயே!

நானும் உன்னைப்போல்
சிறியதாக இருந்தால்
உன்னுடனேயே
வந்திருப்பேனே!",
என்றாள் கண்மணி.

சட்டென்று அவளுடைய
உடல் அதிர்ந்தது.

உருவம்
சிறியதாகிவிட்டது.

சுற்றிலும் பார்த்தாள்.
எறும்பின் அளவுக்குத்
தானும் சிறியதாகி
இருப்பதைக்கண்டு
வியப்படைந்தாள்.





எறும்பு நுழைந்த புற்றுக்குள் இறங்க
முயற்சி செய்தாள். தடுமாறினாள்.
பொத்தென்று புற்றுக்குள் விழுந்தாள்.

"இந்தப்புற்றுக்குள் இத்தனை
அறைகளா?" எறும்புகளின் சேமிப்பைக்
கண்டாள். எறும்புப் புற்றுக்குள் அங்கும்
இங்கும் சென்று பார்த்தாள்.

வியப்பு குறையாமல் புற்றைவிட்டு
வெளியே வந்தாள். அருகிலிருந்த
மரத்தடியில் அமர்ந்தாள்.

மரத்தின் மேலே ஒரு
தேன்கூடு இருந்தது,

"தேனீக்கள் எப்படி
கூடு கட்டுகின்றன?
தேனைச் சிந்தாமல்
எப்படிச் சேமிக்கின்றன?
அதையும்
பார்க்கவேண்டுமே"
என்று நினைத்தாள்.

உடனே அவளுக்குச்
சிறகுகள் முளைத்தன.



"ஊ ஊ ய்ய்" மகிழ்ச்சியில் கத்தினாள்.
பறந்து சென்று தேன்கூட்டுக்குள் புகுந்தாள்.



பலவகை தேனீக்களை
ஆர்வமாகப் பார்த்தாள்.

இவ்வளவு சிறிய தேனீ,
இத்தனை வேலைகள்
செய்கிறதா? வியப்பு
தாளவில்லை.

தேன்கூட்டைவிட்டு வரவே
மனமில்லை. தயங்கியபடியே
வெளியே வந்தாள்.



மரக்கிளையில் அமர்ந்தாள்.
கீழே அழகான நீரோடை.
அதில் மீன்கள் நீந்துவதைப்
பார்த்தாள்.

மீன்களைப் போல நீந்த
வேண்டுமென்று ஆசை
வந்தது.

அடுத்து என்ன நடந்திருக்கும்? கதையைத் தொடர்ந்து கூறுக.

# பயிற்சி

## படித்துப்பழகுக

உடல் அதிர்ந்தது | மரத்தடியில்

தடுமாறினாள் | சட்டென்று | கத்திக்கொண்டு

வியந்தவாறு | தேனீக்கள்

## எழுதிப் பழகுக

எறும்புப்புற்று | தேன்கூடு

சிறகுகள் | மரக்கிளை | நீரோடை

## பொருத்தமான குறியிடுக – சரி ✓ தவறு ✗

1. எறும்புப்புற்று பெரியதாக வளர்ந்தது. ☐
2. கண்மணி எறும்பாக மாறிவிட்டாள். ☐
3. நீரோடையில் வாத்துகள் நீந்துவதைப் பார்த்தாள். ☐
4. நீரில் நீந்த வேண்டும் என்று கண்மணி நினைத்தாள். ☐
5. கண்மணி மரத்தடியில் அமர்ந்தாள். ☐

3XR8N3

## வாய்மொழியாக விடை கூறு

1. கண்மணி எங்கெங்கே சென்றாள்? என்னவெல்லாம் பார்த்தாள்?
2. கண்மணிக்கு என்னென்ன மாற்றங்கள் ஏற்பட்டன?
3. கண்மணியைப் போல உனக்கு எங்கெல்லாம் சென்று பார்க்க ஆசை?

## விடை எழுதுக

1. கண்மணி எங்கெங்கே சென்றாள்?

## படங்களைத் தொடர்புப்படுத்திக் கதை உருவாக்குக







## கதையைக் கேட்டு முடிவை மாற்றிக் கூறுக







3rd_term_tamil_2nd _std_ CBSE.indd 110 4/8/2020 2:34:47 PM



# 18. விரும்பி வேலை செய்யலாம்



வீட்டில் வேலை செய்யலாம்
விரும்பி நாமும் செய்யலாம்
படுக்கை சுருட்டி வைக்கலாம்
தரையைக் கூட்டிப் பெருக்கலாம்

உண்ணும் தட்டைக் கழுவலாம்
உடுத்தும் உடைகள் மடிக்கலாம்
கடையில் பொருள்கள் வாங்கலாம்
செடிகள் நட்டு வளர்க்கலாம்

இந்த வேலை பெரிதென
ஏற்றத்தாழ்வு இல்லையே!
எந்த வேலை ஆயினும்
எல்லாருமே செய்வோமே!



HJ7LGL

பாடலைக் கேட்டுப் புரிந்துகொள்க – பாடி மகிழ்க.



# பயிற்சி

## ஒலித்துப்பழகுக

செய்யலாம் | பெருக்கலாம்

கழுவலாம் | மடிக்கலாம் | வாங்கலாம்

வளர்க்கலாம் | வைக்கலாம்

## படித்தும் எழுதியும் பழகுக

வீடு | வேலை | செடிகள்

தரை | உடை | கடை

தண்ணீர் | படுக்கை | ஏற்றத்தாழ்வு

## பொருத்துக

1. படுக்கை – மடிக்கலாம்
2. உடுத்தும் உடைகள் – நட்டு வளர்க்கலாம்
3. கடையில் – சுருட்டி வைக்கலாம்
4. உண்ணும் தட்டை – பொருள்கள் வாங்கலாம்
5. செடிகள் – கழுவலாம்

7CFAVD

## இவர்களைத் தெரியுமா?

### விண்வெளியை அடைந்தவர்கள்



ராகேஷ் ஷர்மா



கல்பனா சாவ்லா

### பளு தூக்கும் வீரர்கள்



மல்லேஸ்வரி



ஜெரிமி

### சிகரம் தொட்டவர்கள்



ஹிலாரி, நார்கே



பச்சேந்திரி பால்

### சமையல் கலைஞர்கள்



மஸ்தானம்மா



தாமோதரன்

## கலந்துரையாடுக

ஆணின் வேலைகள், பெண்ணின் வேலைகள் என்று தனித்தனியே உள்ளனவா?

### படத்திற்குரிய செயலை எழுதுக



பாடுகிறான்













KXVNNW

# 19. நாங்கள் நண்பர்கள்

## ஆதி



நடனம் ஆடப் பிடிக்கும்.

நாய்க்குட்டி வளர்க்கிறான். அதனுடன் விளையாடி மகிழ்வான்.

திரைப்படம் பார்ப்பதில் ஆர்வம் அதிகம்.

தான் போகும் திசையில் நிலாவும் வருவதாகக் கூறுவான். அதைப் பார்த்தபடி அங்குமிங்கும் ஓடுவான்.

எளிதில் கோபப்படுவான்.

பழங்களை விரும்பிச் சாப்பிடுவான்.

## தமிழினி



எந்தப் புதிருக்கும் எளிதில் விடை சொல்வாள்.

மீன்கள் வளர்க்கிறாள். அவை நீந்துவதைப் பார்த்து மகிழ்வாள்.

புதிர்க் கதைகளை விரும்பிப் படிப்பாள்.

இரவில் நட்சத்திரங்களை எண்ணுவது பிடிக்கும்.

முட்டையும் மீனும் விருப்பமான உணவு.

தயக்கமின்றித் தெளிவாகப் பேசுவாள். பயப்பட மாட்டாள்.

## ஜெரின்



நன்றாகப் படங்கள் வரைவான்.

பூச்செடிகள் வளர்க்கிறான். வண்ணப் பூக்களைக் கண்டு மகிழ்வான்.

படக்கதைகளை விரும்பிப் படிப்பான்.

மேகங்களில் வெவ்வேறு உருவங்களைக் கண்டு மகிழ்வான்.

வம்புப் பேச்சுகளைத் தவிர்ப்பான்.

இனிப்புப் பண்டங்களை விரும்பிச் சாப்பிடுவான்.

இவர்கள் மூவரும் நண்பர்கள். எப்போதும் ஒன்றாகவே இருப்பார்கள்.

**உங்கள் நண்பர்களைப் பற்றி நீங்களும் கூறலாமே!**

புதியவர் யாரேனும் பிடித்த பொருளைக் கொடுத்து தன்னுடன் வருமாறு அழைத்தால்...




**இந்தச் சூழலில் நீ என்ன செய்வாய்?**

# பயிற்சி

## படித்துப்பழகுக

புதிர்க்கதைகள்

படக்கதைகள் நண்பர்கள் உருவங்கள்

வண்ணப்பூக்கள் மேகங்கள்

## எழுதிப் பழகுக

புதிர்க்கதைகள்

ஆர்வம் நட்சத்திரங்கள் இனிப்புப் பண்டம்

பூச்செடிகள் திரைப்படம்

## பொருத்தமான குறியிடுக – சரி ✓ தவறு ✗

1. ஜெரினுக்கு வம்புப் பேச்சுகள் பிடிக்கும். ☐
2. ஆதிக்குத் திரைப்படங்கள் பார்ப்பதில் ஆர்வம் அதிகம். ☐
3. தமிழினி தயக்கமின்றிப் பேசுவாள். ☐
4. ஜெரின், ஆதி, தமிழினி மூவரும் உடன்பிறந்தவர்கள். ☐

## வாய்மொழியாக விடை கூறுக

1. ஆதி, ஜெரின், தமிழினியிடம் உனக்குப் பிடித்தவை என்னென்ன?

## விடை எழுதுக

1. நண்பர்கள் மூவரில் உனக்குப் பிடித்தவர் யார்? ஏன்?

W5MZA5

தமிழினி இந்தப் புதிருக்கு விடை கண்டுபிடித்துவிட்டாள். நீங்களும் கண்டுபிடித்துப் பொருத்துங்கள்

| | |
|---|---|
| தட... தட... |  |
| டிரிங்... டிரிங்... |  |
| பாம்... பாம்... |  |
| பட்... பட்... |  |

எந்த எழுத்தை ஆதியிடம் கூறினாலும் உடனடியாக அந்த எழுத்தில் தொடங்கும் பல சொற்களைச் சொல்லிவிடுவான். நீங்களும் விளையாடி மகிழுங்கள்

க

கண்
கடல்
கப்பல்
கடை
கழுகு
கண்ணாடி
கரும்பு ....
.......



இந்தப் பூனைகள் ஜெரின் வரைந்தவை. உங்களுக்குப் பிடித்ததை நீங்களும் வரையுங்கள்



# 20. பயணம்...

குட்டிப் பையன் சிட்டி குளிக்கப் போனான். குழாயைத் திறந்தான். தண்ணீர் குபு...குபுவென வந்தது.



'குளிக்கப் போறேன் – நான்
குளிக்கப் போறேன்
அழுக்குப்போக நல்லா
குளிக்கப் போறேன்'

EK2EAM

எனப் பாட்டுப் பாடியபடி வழலைக் கட்டியைக் குழைத்தான்.

'குமிழி வந்தேன்
வண்ணக்குமிழி வந்தேன்
சிட்டியின் கைகளில்
குமிழி வந்தேன்'



சிட்டியின் கையிலிருந்து பாட்டுச் சத்தம் கேட்டது. திடுக்கிட்டுத் தன் கையைப் பார்த்தான். கை, கால்கள் முளைத்த வண்ணக்குமிழி ஒன்று அவன் கையில் இருந்தது. சிட்டியைப் பார்த்துக் குதூகலமாகச் சிரித்தது. அதனைத் தொட்டுப் பார்க்க ஆர்வத்துடன் விரலை நீட்டினான். "ஆ! நீ தொட்டால் நான் உடைந்து விடுவேனே", என்றது குமிழி. சிட்டி சிரித்தபடி தலையை ஆட்டினான்.

மெல்ல, தன் முகத்தைத் தேய்த்தான். குமிழி, சிட்டியின் நெற்றியில் நடந்தபடி,



'நடந்து வந்தேன் – நான்
நடந்து வந்தேன்
சிட்டியின் நெற்றியில்
நடந்து வந்தேன்
' என்று பாடியது.

பாடலைக் கேட்டுப் புன்னகைத்தான் சிட்டி. மீண்டும் தேய்க்கத் தொடங்கினான்.

'சறுக்கி வந்தேன் – நான்
சறுக்கி வந்தேன்
சிட்டியின் மூக்கின்மேல்
சறுக்கி வந்தேன்'



என்று பாடியபடி சறுக்கியது குமிழி. சிட்டி அதன் குறும்பைக் கண்டு மகிழ்ந்தான். தன் காதுகளைத் தேய்க்கத் தொடங்கினான். குமிழி, காதுகளில் வளைந்தபடி,



'வளைந்து வந்தேன் – நான்
வளைந்து வந்தேன்
சிட்டியின் காதுகளில்
வளைந்து வந்தேன்'
என்று பாடியது.

"ஏய்! காதுகளில் இவ்வளவு சத்தமாய்ப் பாடாதே", செல்லமாய் அதட்டினான் சிட்டி. "ஓ! சரி, நண்பனே!" புன்னகையுடன் தலையாட்டியது குமிழி.

தன் தோள்களைத் தேய்த்தான் சிட்டி. குமிழி, சரசரவென்று வழுக்கியபடி,

'வழுக்கி வந்தேன் – நான்
வழுக்கி வந்தேன்
சிட்டியின் தோள்களில்
வழுக்கி வந்தேன்'
என்று பாடியது.



கலகலவெனச் சிரித்தபடி சிட்டி வயிற்றின்மீது தேய்த்தான். கடகடவென உருண்ட குமிழி,



'உருண்டு வந்தேன் – நான்
உருண்டு வந்தேன்
சிட்டியின் வயிற்றின்மேல்
உருண்டு வந்தேன்'
என்று பாடியது.

ஓரக்கண்ணால் பார்த்தபடி தன் கால்களைத் தேய்த்தான் சிட்டி. அவன் குட்டிக் கால்களில் குடுகுடுவென ஓடிவந்த குமிழி,

'ஓடி வந்தேன் – நான்
ஓடி வந்தேன்
சிட்டியின் கால்களில்
ஓடி வந்தேன்'
என்று பாடியது.



தேய்த்து முடித்ததும் தண்ணீரைத் தன்மீது ஊற்றினான் சிட்டி.



அப்போது குமிழி,

'பயணம் வந்தேன் – நான்
பயணம் வந்தேன்
தலைமுதல் கால்வரை
பயணம் வந்தேன் – சிட்டியின்
தலைமுதல் கால்வரை
பயணம் வந்தேன்'

என்று பாடியபடியே
சிட்டிக்குக் கையசைத்தது.

"நாளையும் நீ வரவேண்டும்" என்று அன்புக் கட்டளையிட்டுக் கையசைத்தான், சிட்டி.

# பயிற்சி

## படித்துப்பழகுக

வழுக்கி வந்தேன் | வளைந்து வந்தேன்

உருண்டு வந்தேன் | சறுக்கி வந்தேன்

ஓடி வந்தேன் | நடந்து வந்தேன்

## எழுதிப் பழகுக

வண்ணக்குமிழி

வழலைக்கட்டி | குட்டிப்பையன்

பாட்டுச்சத்தம் | பயணம்

## பொருத்துக

வண்ணக்குமிழி,

| | | | |
|---|---|---|---|
| 1. | மூக்கில் | – | வழுக்கி வந்தது |
| 2. | காதில் | – | வளைந்து வந்தது |
| 3. | தோளில் | – | ஓடி வந்தது |
| 4. | காலில் | – | சறுக்கி வந்தது |

WJWY9T

## வாய்மொழியாக விடை கூறுக

1. வண்ணக்குமிழி எவ்வாறெல்லாம் பயணம் சென்றது?

## விடை எழுதுக

1. வண்ணக்குமிழி எங்கெங்கே பயணம் செய்தது?

குமிழி சிட்டியின் முதுகில் இருக்கிறது. என்ன பாடியிருக்கும்? எழுதுக.

.......................................................................................

.......................................................................................

.......................................................................................

.......................................................................................



ஒரு எழுத்தை நீக்கினால் உடல் உறுப்பு கிடைக்கும். கண்டுபிடித்து எழுதுக.

| | | | |
|---|---|---|---|
| தவலை | | புகை | |
| கவண் | | நகரம் | |
| பகல் | | காவல் | |

**என் பாதுகாப்பு! என் கையில்!**

சத்தான உணவை உண்பேன்.

நாள்தோறும் குளிப்பேன். சுத்தமாக இருப்பேன்.

சாலையில் கவனமாகச் செல்வேன்.

ஆபத்து தரும் செயல்களைச் செய்யமாட்டேன்.

என்னை எவரும் தவறாகத்தொட விடமாட்டேன்.

அன்றாடம் நடப்பதைப் பெற்றோரிடம் கூறுவேன்.

# 21. கடற்கரைக்குப் போகலாம்

கடற்கரைக்குப் போகலாம்
மணலில் வீடு கட்டலாம்
கிளிஞ்சல் சங்கு பொறுக்கலாம்
கட்டும் வீட்டில் ஒட்டலாம்

பந்தைத் தட்டி அடிக்கலாம்
நண்டைத் துரத்தி ஓடலாம்
பட்டம் விட்டுப் பார்க்கலாம்
குட்டிக்கரணம் போடலாம்

ஈர மணலில் எழுதலாம்
அழிக்கும் அலையைத் துரத்தலாம்
துள்ளித்துள்ளிக் குதிக்கலாம்
தண்ணீரிலே நனையலாம்



**பாடலைக் கேட்டுப் புரிந்துகொள்க – பாடி மகிழ்க.**

# பயிற்சி

## ஒலித்துப்பழகுக

கட்டலாம்    பொறுக்கலாம்

ஒட்டலாம்    ஓடலாம்    எழுதலாம்

குதிக்கலாம்    நனையலாம்    துரத்தலாம்

## படித்தும் எழுதியும் பழகுக

கடற்கரை    கிளிஞ்சல்

குட்டிக்கரணம்    ஈரமணல்    அலை

## பொருத்துக

| | | | |
|---|---|---|---|
| 1. | மணலில் வீடு | – | எழுதலாம் |
| 2. | அலையைத் | – | அடிக்கலாம் |
| 3. | பந்தைத் தட்டி | – | துரத்தலாம் |
| 4. | நண்டைத் துரத்தி | – | கட்டலாம் |
| 5. | ஈர மணலில் | – | ஓடலாம் |

7RP9V2

## கலந்துரையாடுக

கடற்கரைக்குச் சென்றால் என்னென்ன செய்யலாம்?

## இந்த இடங்களுக்குச் சென்றால் என்னவெல்லாம் செய்வீர்கள்?





## வண்ணம் தீட்டுக






- படத்தைப் பார்த்துப் பேசுக
- சிறுசிறு தொடர்களை உருவாக்குக

## வினா கேட்கலாம்



1. எத்தனை மரங்கள் உள்ளன?
2. முயல் என்ன செய்கிறது?
3. நரி யாரைத் துரத்துகிறது?

நீங்களும் வினாக்களைக் கேளுங்கள்.

8784WD

---------------------------------------------------------

---------------------------------------------------------

# பறக்கும் யானை



பறக்கும் யானை செய்க... ஊதிப் பறக்க விடுக...

## யானைக்கு வழிகாட்டி உதவுங்கள்



# 23. அன்றும்... இன்றும்...

தாத்தாவும் காவியாவும் குளக்கரையில் நின்றிருந்தனர். தாத்தா குளத்தையே பார்த்துக்கொண்டு இருந்தார். அவருடைய முகம் வாடி இருந்தது.



PRTPVV

"ஏன் தாத்தா கவலையாக இருக்கிறீர்கள்?" என்று கேட்டாள் காவியா.

"இது எப்படி இருந்த குளம் தெரியுமா, காவியா?" தாத்தா சொல்லத் தொடங்கினார்.

"இதோ இந்தத் தார்ச்சாலை அப்போது இல்லை. மண்சாலைதான். குளம் முழுவதும் நீர் நிரம்பி இருக்கும்.   போன்றவை தண்ணீர் குடிக்க வந்து போகும்.  குளத்தில் குளிக்கும்.  துள்ளிக் குதிக்கும்.  கூட்டம் கூட்டமாய் நீந்துவதைப் பார்க்க அழகாக இருக்கும்.  பிடிக்க  நிற்கும். குளத்தின் அருகே பெரிய  இருக்கும். அதன் பழங்களைக் கொத்தித் தின்ன  பறந்து வரும். அங்கு  கீச்சிடும். இவற்றை எல்லாம் பார்க்க எவ்வளவு அழகாக இருக்கும் தெரியுமா?"



"ஓ... அப்படி இருந்த குளமா இது?" என்று வியப்புடன் கேட்டாள் காவியா.

"ஆமாம், ஆனால் இப்போதோ... குளத்தில் எவ்வளவு குப்பைகள் பார். நீரும் வற்றிவிட்டது", வருத்தத்துடன் சொன்னார் தாத்தா.

"நீங்கள் முன்பு பார்த்த அந்தக் குளத்தைப் பார்க்க எனக்கும் ஆசையாக இருக்கிறது. இதைச் சரிசெய்ய முடியாதா தாத்தா?", என்று கேட்டாள் காவியா.



"அதைப்பற்றித்தான் ஊர்த்தலைவரிடம் பேசி இருக்கிறேன். விரைவில் சரிசெய்வதாகச் சொல்லியிருக்கிறார்" என்றார் தாத்தா.

பழைய குளம் காவியாவின் மனதில் கற்பனையாக விரிந்தது. மகிழ்ச்சியில் துள்ளிக்குதித்தபடி நடக்கத்தொடங்கினாள் காவியா.



# பயிற்சி

## படித்துப்பழகுக

கூட்டம் கூட்டமாய் | வாத்துக்கூட்டம்

குருவிகள் கீச்சிடும் | வற்றிவிட்டது | வாடி இருந்தது

ஊர்த்தலைவர் | கற்பனையாக விரிந்தது

## எழுதிப் பழகுக

குளக்கரை | தண்ணீர் | தார்ச்சாலை | மண்சாலை

குருவிகள் | ஊர்த்தலைவர் | கற்பனை | குப்பைகள்

## பொருத்தமான குறியிடுக – சரி ✓ தவறு ✗

1. தாத்தாவும் காவியாவும் பேருந்து நிலையத்தில் நின்றிருந்தனர். ◯
2. குளத்தைக் கண்ட தாத்தாவின் முகம் மலர்ந்தது. ◯
3. மண்சாலை இப்போது தார்ச்சாலையாக மாறியுள்ளது. ◯
4. குளத்தில் தற்போது நீர் நிரம்பியுள்ளது. ◯
5. குளத்தைச் சரிசெய்ய உதவுவதாகச் சொன்னவர் ஊர்த்தலைவர். ◯

4DA3PE

## பொருத்துக










கீச்சிடும் | துள்ளிக் குதிக்கும் | மீன் பிடிக்க நிற்கும் | பழம் தின்னப் பறந்து வரும்

## வாய்மொழியாக விடை கூறுக

1. குளம் எப்படி இருந்ததாகக் காவியாவிடம் தாத்தா கூறினார்?

## விடை எழுதுக

1. குளம் தற்போது எவ்வாறு உள்ளது?
2. குளத்தைச் சரிசெய்யும்படி தாத்தா யாரிடம் கூறினார்?

### இவர்கள் பேசினால் என்ன பேசுவார்கள்?



# எதிர்ச்சொல் அறிவோம்



பெரியது

சிறியது





பல

சில





உயரம்

குட்டை





ஏறு

இறங்கு





இழு

தள்ளு



## படித்துப்பார்



மேசையின் மேலே பூனை

மேசையின் கீழே பானை



கூடையின் உள்ளே பூக்கள்

கூடைக்கு வெளியே ஈக்கள்



சூடான தேநீர்

குளிர்ச்சியான இளநீர்

## பொருத்துக



பழைய

புதிய





முன்னால்

பின்னால்





அருகில்

தொலைவில்



# 24. படவிளக்க அகராதி

ம



### மடிக்கணினி

- கணினியைவிட எடை குறைந்தது.
- விரும்பும் இடங்களுக்கு எடுத்துச் செல்லலாம்.
- குறைந்த மின் ஆற்றலில் இயங்கும்.

மா



### மாம்பழம்

- இது நமது தேசிய கனி.
- மாம்பழத்திலிருந்து பழச்சாறு, பழப்பாகு போன்றவை தயாரிக்கப்படுகின்றன.
- மாம்பழம் பலா, வாழையுடன் இணைந்து முக்கனி என்று அழைக்கப்படுகிறது.

மி



### மின்தூக்கி

- படிக்கட்டுகளில் ஏறுவதை எளிதாக்கும் கருவி.
- மின்சாரத்தால் இயங்கும்.
- இதன் கதவுகள் திறக்கும்போது விரைவாகவும் மூடும்போது மெதுவாகவும் செயல்படும்.

மீ



### மீன்

- நீரில் வாழும் உயிரினம்.
- நாம் மூக்கினால் சுவாசிப்பதுபோல, மீன்கள் செவுள்களால் சுவாசிக்கும்.
- பல வண்ணங்களில், பல வடிவங்களில், பல அளவுகளில் மீன்கள் காணப்படுகின்றன.

மு



### முத்து

- சிப்பி என்ற நீர்வாழ் உயிரினத்திலிருந்து முத்து உருவாகிறது.
- இது விலைமதிப்பு மிக்கது.
- அணிகலன்களை அழகுபடுத்தப் பயன்படும்.

மூ



### மூங்கில்

- புல் வகையைச் சார்ந்தது.
- மிகவேகமாக வளரக்கூடியது.
- பாண்டா கரடிகள் மூங்கில் இலைகளை விரும்பி உண்ணும்.
- மூங்கிலில் கிடைக்கும் ஒருவகை அரிசியில் உணவு தயாரிக்கலாம்.

மெ



## மெழுகு

- தாவரங்கள், விலங்குளிடமிருந்து கிடைக்கிறது.
- செயற்கையாகவும் தயாரிக்கப்படுகிறது.
- மிட்டாய்கள், மருந்துப் பொருள்கள் செய்யவும் பயன்படுகிறது.
- உருகும் தன்மை கொண்டது.

மே



## மேகம்

- நீர்த்துளிகள் பல சேர்ந்து மேகம் ஆகிறது.
- மேகம் குளிர்ந்து மழையாகி மண்ணில் விழுகிறது.
- ஒவ்வொரு மேகமும் பல ஆயிரம் லிட்டர் நீரைக்கொண்டது.

மை



## மைனா

- கூட்டமாக வாழும் பறவை.
- பூச்சிகளையும் பழங்களையும் உண்ணும்.
- மரப்பொந்துகளில் கூடுகட்டும்.

மொ



## மொட்டு

- மலரின் இதழ்கள் விரியும் முன்பு குவிந்து மூடி இருக்கும்.
- இதுவே மொட்டு எனப்படும்.
- மொட்டின் அமைப்பு மலரின் வகையைப் பொருத்து மாறுபடும்.

மோ



## மோர்

- பாலிலிருந்து கிடைக்கும் தயிரைக் கடைவதால் மோரைப் பெறுகிறோம்.
- இது உடலுக்குக் குளிர்ச்சியைத் தரும் உணவு.
- வயிற்றுப்புண்ணைக் குணப்படுத்தும்.

மௌ



## மௌவல்

- இம்மலர் மரமல்லி மற்றும்
- பன்னீர்ப்பூ எனவும் கூறப்படுகிறது.
- இதன் காம்பு நீண்டு இருக்கும்.
- நறுமணம் மிகுந்தது.

HYQGHX

T6HS46

# 25. கொன்றை வேந்தன்

1. **அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.**
   தாயும் தந்தையும் கண்முன்னே காணும் தெய்வங்கள் ஆவர்.

2. **ஊக்கம் உடைமை ஆக்கத்திற்கு அழகு.**
   குறையாத ஆர்வமே முன்னேற்றம் தரும்.

3. **எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்.**
   கணக்கும், மொழியும் இரு கண்கள் போன்றவை.

4. **கைப்பொருள் தன்னின் மெய்ப்பொருள் கல்வி.**
   சேமித்த பொருளைவிட கல்வியே உண்மையான செல்வம்.

5. **தீராக் கோபம் போராய் முடியும்.**
   நெடுநாள் கோபம் சிக்கலில் முடியும்.

6. **நல்லிணக்கம் அல்லது அல்லல்படுத்தும்.**
   இணக்கம் இல்லாத நட்பு துன்பம் தரும்.

7. **நுண்ணிய கருமம் எண்ணித் துணி.**
   சிறிய செயலாக இருந்தாலும் சிந்தித்து முடிவு செய்ய வேண்டும்.

8. **பொல்லாங்கு என்பவை எல்லாம் தவிர்.**
   தீமை தரும் எல்லாவற்றையும் தவிர்க்க வேண்டும்.

9. **மருந்தே ஆயினும் விருந்தோடு உண்.**
   அமிழ்தம் போன்ற அரிய உணவையும் பகிர்ந்து உண்ண வேண்டும்.

10. **முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்.**
    செயல்களுக்கு ஏற்பவே விளைவுகள் இருக்கும்.

– ஔவையார்

TKRR3U

# மொழியோடு விளையாடு

## சொல் விளையாட்டுக்கு...










## குறுக்கெழுத்துப் புதிருக்கு...








## சொல்வளம் பெருக...












3rd_term_tamil_2nd _std_ CBSE.indd 139 4/8/2020 2:35:50 PM

## தமிழ்ச்சொல் அறிந்து பயன்படுத்துவோம்


பள்ளிக்கூடம்

நூலகம்



மருத்துவமனை

மருந்துக்கடை




காவல் நிலையம்

ஒலிவாங்கி



பேருந்து நிலையம்

ஒளிப்படம்



தொடர்வண்டி நிலையம்

இடுப்புப்பட்டி



விமான நிலையம்

கைக்கடிகாரம்



துறைமுகம்

கழிப்பறை



திரையரங்கு

தலைக்கவசம்



உறிஞ்சுகுழல்

வாழ்த்து அட்டை



ஒலிப்பான்

செங்கிழங்கு


## வந்த பாதை

**பொருத்தமான இரட்டைச் சொற்களை நிரப்புக**

**(மெல்ல மெல்ல, துள்ளித் துள்ளி, சலசல, கலகல, பளபள)**



சிறுவர்கள் ---------------- என்று சிரித்தனர்.



நத்தை ---------------- நகர்ந்து செல்கிறது.



புதிய குடம் ---------------- என்று மின்னுகிறது.



மான் ---------------- ஓடுகிறது.



ஆற்று நீர் ---------------- என்று ஓடுகிறது.

**படத்தைப்பார். பொருத்தமான செய்யுள் அடியை எழுதுக.**

(எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும், நல்லிணக்கம் அல்லது அல்லல்படுத்தும், மருந்தே ஆயினும் விருந்தோடு உண்)





**ஒத்த ஓசையுடைய சொற்களைப் பொருத்துக**

| | | |
|---|---|---|
| எண் | – | ஆக்கம் |
| ஊக்கம் | – | கண் |
| மெய்ப்பொருள் | – | விருந்து |
| மருந்து | – | பிற்பகல் |
| முற்பகல் | – | கைப்பொருள் |

## மாறியுள்ள எழுத்துகளை சொல்லாக்குக.

| மை | ற் | ஒ | று |  |  |  |
|---|---|---|---|---|---|---|
| டு | ன் | தே | கூ |  |  |  |
| க | ற் | ட | ரை | க |  |  |
| லை | ண் | ம | சா |  |  |  |
| ண | வ | ண் | க் | மி | கு | ழி |
| சி | ட் | டா | ணு | ங் | தொ | கி |

## படங்களைப் பார். தொடர்புடைய உடல் உறுப்பின் பெயரை எழுதுக.

  

  


  

  

# கற்றல் விளைவுகள்

| 1. கேட்டல் | 2. பேசுதல் | 3. படித்தல் | 4. எழுதுதல் | 5. நடைமுறை இலக்கணம் |
|---|---|---|---|---|
| • படங்கள், ஓவியங்கள், கதைப்படங்களை நுட்பமாக உற்றுநோக்கியும் சொல்லக்கேட்டும் சுவைப்பர்.<br>• கேட்டறியாத, எளிய சொற்களமைந்த பாடல்களைக் கவனத்துடன் கருத்தூன்றிக் கேட்டுப் புரிந்துகொண்டு வெளிப்படுத்துவர்.<br>• சிந்தனையைத் தூண்டும் எளிய கதைகளைக் கவனத்துடன் கருத்தூன்றிக் கேட்டுப் புரிந்துகொண்டு வெளிப்படுத்துவர்.<br>• எளிய வாய்மொழி அறிவுரைகளையும் கட்டளைகளையும் வினாக்களையும் கேட்டுப் புரிந்துகொண்டு எதிர்வினையாற்றுவர்.<br>• பிறர் பேசுவதைப் பொறுப்புடனும் கவனத்துடனும் கேட்டுப் புரிந்துகொண்டு வெளிப்படுத்துவர். | • ஓசைநயமிக்க பாடல்களைத் தனியாகவும் குழுவாகவும் உரிய ஒலிப்புடன் பாடுவர்.<br>• படக்கதையைப் பார்த்து நிகழ்வைக் கூறுவர்.<br>• செய்திகளைத் திரட்டும் பொருட்டு வினா எழுப்புவர்.<br>• பார்த்தவை, கேட்டவை பற்றிப் பேசுவர்.<br>• கேட்டும் படித்தும் அறிந்த பாடல்கள், கதைகளிலிருந்து கேட்கப்படும் எளிய வினாக்களுக்கு முழுமையான சொற்றொடரில் விடை கூறுவர்.<br>• சொற்கள், தொடர்களை முறையாகவும் சரியாகவும் ஒலிப்பர்.<br>• கேட்டறிந்த கதைகள், பாடல்களைத் தம் கற்பனையின் அடிப்படையில் கூறுவர். தமக்குரிய நடையில் பேசுவர்.<br>• கேட்டவற்றுடன் தம் அனுபவங்களைத் தொடர்புபடுத்திப் பொருள் விளங்கும் வகையில் தெளிவாக வெளிப்படுத்துவர். | • தமிழ்மொழியின் அனைத்து எழுத்துகளின் ஒலிவடிவ, வரிவடிவத் தொடர்புகளை இனங்கண்டு முறையாக உச்சரிப்பர்.<br>• வடமொழி ஒலிப்புகளுக்குரிய, கிரந்த வரிவடிவங்களை அறிந்து படிப்பர்.<br>• எளிய சொற்கள், சிறுசிறு தொடர்களை உரிய ஒலிப்புடன் உரக்கப் படிப்பர்.<br>• எளிய சந்தப் பாடல்களை உரிய ஓசையுடன் படிப்பர். எளிமையான சிறுசிறு படக்கதைகளையும் பாடல்களையும் படிப்பர்.<br>• படிக்கும் பகுதியின் பொருளுணர்ந்து வினாக்களுக்கு விடையளிப்பர்.<br>• படித்த பகுதியில் கேட்கப்படும் சிறுசிறு வினாக்களுக்கு விடையளிப்பர். | • படங்களைப் பார்த்துப் பெயர்கள், சிறுசிறு தொடர்களைத் தெளிவாகவும் வரிவடிவம் சிதையாமலும் எழுதுவர்.<br>• வடமொழி ஒலிப்புகளுக்குரிய, கிரந்த வரிவடிவங்களை அறிந்து எழுதுவர்.<br>• சொற்களையும், சிறுசிறு தொடர்களையும் சொல்லக்கேட்டு எழுதுவர்.<br>• எளிய பாடல்கள், கதைகள், உரைநடைப்பகுதிகளிலிருந்து கேட்கப்படும் வினாக்களுக்கு முழுமையான தொடர்களில் விடையளிப்பர்.<br>• சிறுசிறு தொடர்களைத் தம்முடைய நடையில் எழுதுவர்.<br>• கேட்டவற்றை/ படித்தவற்றை / சிந்தித்து உணர்ந்தவற்றைப் படங்களாகவோ, சொற்களாகவோ, தொடர்களாகவோ வெளிப்படுத்துவர். | • ஒலி இயைபுச் சொற்களை உருவாக்குவர்.<br>• ஒருமை, பன்மை விகுதிகளை (கள், க்கள், ங்கள்) அறிந்து பயன்படுத்துவர்.<br>• பெயர்ச்சொற்கள், பதிலிப் பெயர்ச்சொற்கள், வினைச்சொற்களை அறிந்து பயன்படுத்துவர். |

| 6. கற்கக் கற்றல் | 7. சொல்லாட்சித் திறன் | 8. படைப்புத் திறன் | 9 . விழுமியங்கள் | 10. வாழ்வியல் திறன் |
|---|---|---|---|---|
| • படக்கதைகளைப் பார்த்தறிந்து / படித்தறிந்து கதை கூறுவர்.<br>• பெயர்ப்பலகைகள், அறிவிப்புகளைப் படிப்பர்.<br>• விரும்பும் நூல்களைத் தேடிப் படிப்பர். | கீழ்க்காணும் சொற்களைக் கற்றறிந்து பேச்சிலும் எழுத்திலும் பயன்படுத்துவர்.<br>• பெயர்ச்சொற்கள். வினைச்சொற்கள், பதிலிப் பெயர்ச்சொற்கள்<br>• வீடு, பள்ளியில் உள்ள பொருள்களின் பெயர்கள்<br>• குடும்ப உறுப்பினர் பெயர்கள்<br>• தின்பண்டங்களின் பெயர்கள்<br>• எளிய வருணனைச் சொற்கள்<br>• ஆங்கில மாதங்களின் பெயர்கள் | • முதல் எழுத்தை மாற்றி வேறு சொற்களை உருவாக்குவர்.<br>• குறிப்பிட்ட எழுத்தில் தொடங்கும் பல்வேறு சொற்களை எழுதுவர்.<br>• கொடுக்கப்பட்ட சொல்லிலிருந்து பல்வேறு சொற்களை உருவாக்குவர்.<br>• முதல் சொல்லின் இறுதி எழுத்தை அடுத்த சொல்லின் முதல் எழுத்தாகக் கொண்டு சொற்களை உருவாக்குவர். | • நேரந்தவறாமை.<br>• கூட்டுணர்வு<br>• விதிகளைப் பின்பற்றுவர்.<br>• தூய்மை பேணுவர்.<br>• பொருள்களைப் பாதுகாப்பர்.<br>• பிறருக்கு உதவுவர்.<br>• பிற உயிர்களிடத்தில் அன்பு காட்டுவர். | கீழ்க்காணும் வாழ்வியல் திறன்களைப் பெற்று உரிய நேரங்களில் பயன்படுத்துவர்.<br>• தன்னை அறியும் திறன்.<br>• சிக்கல் தீர்க்கும் திறன்.<br>• முடிவெடுக்கும் திறன்.<br>• கூர்சிந்தனைத் திறன்.<br>• படைப்பாக்கச் சிந்தனைத் திறன்.<br>• சிறந்த தகவல் தொடர்புத் திறன்.<br>• உறவுகளை இணக்கத்துடன் பேணும் திறன்.<br>• பிறரை அவர் நிலையிலிருந்து புரிந்துகொள்ளும் திறன்.<br>• உணர்வுகளைக் கையாளும் திறன்.<br>• மன அழுத்தத்தைக் கையாளும் திறன். |

# தமிழ் – இரண்டாம் வகுப்பு

## பாடநூல் உருவாக்கக் குழு

### மேலாய்வாளர்கள்

முனைவர் **ச. மாடசாமி,** பேராசியர் ( ஓய்வு), சென்னை.

திரு. **ச. தமிழ்ச்செல்வன்** எழுத்தாளர், சிவகாசி.

திருமதி **ஏ.எஸ். பத்மாவதி** எழுத்தாளர், சென்னை.

### வல்லுநர் & ஒருங்கிணைப்பாளர்

முனைவர் **வெ. உஷாராணி,** முதல்வர்,
மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம்,
திருவல்லிக்கேணி, சென்னை மாவட்டம்.

திருமதி **இரா. பொன்மணி ,** விரிவுரையாளர்,
மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம், திருவூர்,
திருவள்ளூர் மாவட்டம்.

### நூலாசிரியர்கள்

முனைவர் **அ. மாசிலாமணி,** விரிவுரையாளர்,
மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம்,
குருக்கத்தி,நாகப்பட்டினம் மாவட்டம்.

திருமதி **வே. சுடரொளி,** இடைநிலை ஆசிரியர்,
அம்பத்தூர் நகராட்சி தொடக்கப்பள்ளி, கொரட்டூர்,
வில்லிவாக்கம் ஒன்றியம், திருவள்ளூர் மாவட்டம்.

செல்வி **பா. ப்ரீத்தி,** இடைநிலை ஆசிரியர்,
ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி, சீர்ப்பனந்தல்,
ரிஷிவந்தியம் ஒன்றியம், விழுப்புரம் மாவட்டம்.

திரு. **வெ. ராஜா** இடைநிலை ஆசிரியர்,
ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி, இராக்கியாம்பட்டி,
கொங்கணாபுரம் ஒன்றியம், சேலம் மாவட்டம்.

திரு. **பா. ச. குப்பன்,** இடைநிலை ஆசிரியர்,
ஊராட்சி ஒன்றிய தொடக்கப்பள்ளி, ஐயந்தாங்கல்,
காவேரிப்பாக்கம் ஒன்றியம், வேலூர் மாவட்டம்.

திருமதி **பா. கற்பகம்,** இடைநிலை ஆசிரியர்,
ஊராட்சி ஒன்றிய தொடக்கப்பள்ளி, ஐயப்பநகர்,
வில்லிவாக்கம் ஒன்றியம், திருவள்ளூர் மாவட்டம்.

திருமதி **வீ. சௌரீஸ்வரி,** இடைநிலை ஆசிரியர்,
ஊராட்சி ஒன்றிய தொடக்கப்பள்ளி, குமரன்கட்டம்,
ஆனைமலை ஒன்றியம், கோயம்புத்தூர் மாவட்டம்.

திருமதி **அ. கலைவாணி,** பட்டதாரி ஆசிரியர்,
ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி, காளம்பாளையம்,
தொண்டாமுத்தூர் ஒன்றியம், கோயம்புத்தூர் மாவட்டம்.

திருமதி **ச. பஞ்சவர்ணம்,** தலைமை ஆசிரியர், ஊராட்சி
ஒன்றிய தொடக்கப்பள்ளி, தாம்பரம், சானிடோரியம், சென்னை.

திரு. **கு.வ. மகேந்திரன்** இடைநிலை ஆசிரியர்,
ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி, பெரிய குக்குண்டி,
ஆற்காடு ஒன்றியம், வேலூர் மாவட்டம்.

திருமதி **த. ஜெயமாரி,** இடைநிலை ஆசிரியர்,
ஸ்ரீஜெயேந்திர சுவாமிகள் மேனிலைப்பள்ளி,
மகாராஜா நகர், திருநெல்வேலி மாவட்டம்.

### ஓவியர்கள்

திரு. **சோ. வேல்முருகன்,** ஓவிய ஆசிரியர்,
அரசு மகளிர் மேனிலைப்பள்ளி, கோவில்பட்டி,
தூத்துக்குடி மாவட்டம்.

திரு. **கே.மதியழகன்,** இடைநிலை ஆசிரியர்,
ஊ.ஒ. நடு நிலைப்பள்ளி, ஊத்துக்காடு, வலங்கைமான் ஒன்றியம்,
திருவாரூர் மாவட்டம்.

திரு. **கோபு சுப்பையன்,**
ஐ திங் கிரியேஷன்ஸ், வடபழனி, சென்னை.

திரு. **தே.துரை,** ஓவிய ஆசிரியர்,
பிஷப் ஹீபர் மேல்நிலைப்பள்ளி, தெப்பக்குளம், திருச்சி.

திரு. **சு. மனோகரன்,** ஓவிய ஆசிரியர்,
அரசு மேல்நிலைப்பள்ளி, சிலமலை, தேனி.

திரு. **த.தா.மு. பிரபுராஜ்,** ஓவிய ஆசிரியர்,
அரசு உயர்நிலைப்பள்ளி, மணிமங்கலம், குன்றத்தூர் ஒன்றியம்,
காஞ்சிபுரம் மாவட்டம்.

திரு. **கா. தனஸ் தீபக் ராஜன்**

திரு. **கா. நலன் நான்சி ராஜன்**

திரு. **நா. காசி ராஜன்**

திரு. **வேல்முருகன் இராதாகிருஷ்ணன்**

திரு. **பா. பிரமோத்**

திரு. **சு. முரளி**

### விரைவுக்குறியீடு மேலாண்மைக்குழு

திரு. இரா. ஜெகநாதன், இடைநிலைஆசிரியர்,
ஊராட்சிஒன்றியநடுநிலைப்பள்ளி, கணேசபுரம், போளூர்
,திருவண்ணாமலை.

திரு. ரூ.ஆல்பர்ட் வளவன் பாபு ,பட்டதாரிஆசிரியர்
அரசினர்உயர்நிலைப்பள்ளி, பெருமாள் கோவில்,
பரமக்குடி, இராமநாதபுரம்

திரு. மு.சரவணன் , பட்டதாரிஆசிரியர்,
அரசினர் மகளிர் மேனிலைப்பள்ளி, வாழப்பாடி, சேலம்

### பக்க வடிவமைப்பாளர்

ஓவியர் திரு. **கு. கலைச்செல்வன்,** சென்னை.
திரு. சி. அடைக்கல ஸ்டீபன்.
திரு. சி. பிரசாந்த்
திரு. ஸ்ரீதர்

### தரக்கட்டுப்பாடு

திரு. ராஜேஷ் தங்கப்பன்
திரு. கி.ஜெரால்டு வில்சன்

### ஒருங்கிணைப்பாளர்

திரு. ரமேஷ் முனிசாமி,

இந்நூல் 80 ஜி.எஸ்.எம் எலிகண்ட் மேப்லித்தோ தாளில்
அச்சிடப்பட்டுள்ளது
ஆப்செட் முறையில் அச்சிட்டோர்:

தமிழ்நாடு அரசு

# மூன்றாம் வகுப்பு

# தமிழ்

## பள்ளிக் கல்வித்துறை

தீண்டாமை மனித நேயமற்ற செயலும் பெருங்குற்றமும் ஆகும்

# முகவுரை

குழந்தைகளின் உலகம் வண்ணமயமானது! விந்தைகள் பல நிறைந்தது!! அவர்களின் கற்பனைத்திறன் கானுயிர்களையும் நட்புடன் நடை பயில வைத்திடும். புதியன விரும்பும் அவர்தம் உற்சாக உள்ளம் அஃறிணைப் பொருள்களையும் அழகுதமிழ் பேசிடச் செய்திடும்.

அப்புதிய உலகில் குழந்தைகளோடு பயணம் செய்வது மகிழ்ச்சியும் நெகிழ்ச்சியும் நிறைந்தது.

தமிழ்க் குழந்தைகளின் பிஞ்சுக்கரங்கள் பற்றி, இப்புதிய பாடநூல்களின் துணைகொண்டு கீழ்க்கண்ட நோக்கங்களை அடைந்திடப் பெருமுயற்சி செய்துள்ளோம்.

- கற்றலை மனனத்தின் திசையில் இருந்து மாற்றி படைப்பின் பாதையில் பயணிக்க வைத்தல்.
- தமிழர்தம் தொன்மை, வரலாறு, பண்பாடு மற்றும் கலை, இலக்கியம் குறித்த பெருமித உணர்வை மாணவர்கள் பெறுதல்.
- தன்னம்பிக்கையுடன் அறிவியல் தொழில்நுட்பம் கைக்கொண்டு மாணவர்கள் நவீன உலகில் வெற்றிநடை பயில்வதை உறுதிசெய்தல்.
- அறிவுத்தேடலை வெறும் ஏட்டறிவாய்க் குறைத்து மதிப்பிடாமல் அறிவுச் சாளரமாய்ப் புத்தகங்கள் விரிந்து பரவி வழிகாட்டுதல்.

பாடநூலின் புதுமையான வடிவமைப்பு, ஆழமான பொருள் மற்றும் குழந்தைகளின் உளவியல் சார்ந்த அணுகுமுறை எனப் புதுமைகள் பல தாங்கி உங்களுடைய கரங்களில் இப்புதிய பாடநூல் தவழும்பொழுது, பெருமிதம் ததும்ப ஒரு புதிய உலகத்துக்குள் நீங்கள் நுழைவீர்கள் என்று உறுதியாக நம்புகிறோம்.

# நாட்டுப்பண்

ஜன கண மன அதிநாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
திராவிட உத்கல பங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா.
தவ சுப நாமே ஜாகே
தவ சுப ஆசிஸ மாகே
காஹே தவ ஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா
ஜய ஹே ஜய ஹே ஜய ஹே
ஜய ஜய ஜய ஜய ஹே!

– மகாகவி இரவீந்திரநாத தாகூர்.

# நாட்டுப்பண் - பொருள்

இந்தியத் தாயே! மக்களின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற நீயே எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செய்கிறாய்.

நின் திருப்பெயர் பஞ்சாபையும், சிந்துவையும், கூர்ச்சரத்தையும், மராட்டியத்தையும், திராவிடத்தையும், ஒடிசாவையும், வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சி அடையச் செய்கிறது.

நின் திருப்பெயர் விந்திய, இமயமலைத் தொடர்களில் எதிரொலிக்கிறது; யமுனை, கங்கை ஆறுகளின் இன்னொலியில் ஒன்றுகிறது; இந்தியக் கடலலைகளால் வணங்கப்படுகிறது.

அவை நின்னருளை வேண்டுகின்றன; நின் புகழைப் பரவுகின்றன.

இந்தியாவின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற தாயே!

உனக்கு வெற்றி! வெற்றி! வெற்றி!



# தமிழ்த்தாய் வாழ்த்து

நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரதக் கண்டமிதில்
தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநல் திருநாடும்
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே!
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே!
தமிழணங்கே!
உன் சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே!
வாழ்த்துதுமே!
வாழ்த்துதுமே!

– 'மனோன்மணியம்' பெ. சுந்தரனார்.



## தமிழ்த்தாய் வாழ்த்து – பொருள்

ஒலி எழுப்பும் நீர் நிறைந்த கடலெனும் ஆடையுடுத்திய நிலமெனும் பெண்ணுக்கு, அழகு மிளிரும் சிறப்பு நிறைந்த முகமாகத் திகழ்கிறது பரதக்கண்டம். அக்கண்டத்தில், தென்னாடும் அதில் சிறந்த திராவிடர்களின் நல்ல திருநாடும், பொருத்தமான பிறை போன்ற நெற்றியாகவும், அதிலிட்ட மணம் வீசும் திலகமாகவும் இருக்கின்றன.

அந்தத் திலகத்தில் இருந்து வரும் வாசனைபோல, அனைத்துலகமும் இன்பம் பெறும் வகையில் எல்லாத் திசையிலும் புகழ் மணக்கும்படி (புகழ் பெற்று) இருக்கின்ற பெருமைமிக்க தமிழ்ப் பெண்ணே! தமிழ்ப் பெண்ணே! என்றும் இளமையாக இருக்கின்ற உன் சிறப்பான திறமையை வியந்து உன் வயப்பட்டு எங்கள் செயல்களை மறந்து உன்னை வாழ்த்துவோமே! வாழ்த்துவோமே! வாழ்த்துவோமே!

## தேசிய ஒருமைப்பாட்டு உறுதிமொழி

'நாட்டின் உரிமை வாழ்வையும் ஒருமைப்பாட்டையும் பேணிக்காத்து வலுப்படுத்தச் செயற்படுவேன்' என்று உளமார நான் உறுதி கூறுகிறேன்.

'ஒருபோதும் வன்முறையை நாடேன் என்றும், சமயம், மொழி, வட்டாரம் முதலியவை காரணமாக எழும் வேறுபாடுகளுக்கும் பூசல்களுக்கும் ஏனைய அரசியல் பொருளாதாரக் குறைபாடுகளுக்கும் அமைதி நெறியிலும் அரசியல் அமைப்பின் வழியிலும் நின்று தீர்வு காண்பேன்' என்றும் நான் மேலும் உறுதியளிக்கிறேன்.

## உறுதிமொழி

இந்தியா எனது நாடு. இந்தியர் அனைவரும் என் உடன் பிறந்தவர்கள். என் நாட்டை நான் பெரிதும் நேசிக்கிறேன். இந்நாட்டின் பழம்பெருமைக்காகவும் பன்முக மரபுச் சிறப்புக்காகவும் நான் பெருமிதம் அடைகிறேன். இந்நாட்டின் பெருமைக்குத் தகுந்து விளங்கிட என்றும் பாடுபடுவேன்.

என்னுடைய பெற்றோர், ஆசிரியர்கள், எனக்கு வயதில் மூத்தோர் அனைவரையும் மதிப்பேன்; எல்லாரிடமும் அன்பும் மரியாதையும் காட்டுவேன்.

என் நாட்டிற்கும் என் மக்களுக்கும் உழைத்திட முனைந்து நிற்பேன். அவர்கள் நலமும் வளமும் பெறுவதிலேதான் என்றும் மகிழ்ச்சி காண்பேன்.

# தமிழ்

## மூன்றாம் வகுப்பு



# முன்னுரை

**குழந்தைகள் பூ போன்றவர்கள்! அற்புதமானவர்கள்!**

அவர்கள் பல்வேறு சூழல்களிலிருந்து பள்ளிக்கு வருகின்றனர்.
ஒவ்வொரு குழந்தையும் தனித்திறன் என்னும் முத்தைத் தன்னகத்தே கொண்ட சிப்பிகள்.
அச்சிப்பிகளுக்குள் பொதிந்து கிடக்கும் திறன்களாகிய முத்துகளைக் கண்டு வெளிக் கொணர்வதே உண்மையான கல்வி.



தமிழையும் தமிழர்களையும் போற்றும் வகையில் அமைந்துள்ளதுடன் குழந்தையின் விருப்பம், மனவளர்ச்சி, சமுதாய நோக்கு, பண்பாடு முதலியவற்றையும் கருத்தில் கொண்டு இப்பாடநூல் உருவாக்கப்பட்டுள்ளது. இதில் குழந்தைகளின் கண்ணையும், கருத்தையும் கவரும் வண்ணப் படங்கள், நற்பண்புகளை வளர்க்கும் கதைகள், படக்கதைகள், இசையோடு ஓசை நயமிக்க இனிய பாடல்கள் போன்றவை இடம் பெற்றுள்ளன.



மேலும், குழந்தைகள் தயக்கமின்றித் தமது எண்ணங்களை வெளிப்படுத்த உதவி புரியும் வாங்க பேசலாம்.



குழந்தை வகுப்பறைச் சூழலைத் தாண்டி சிந்திப்பதுடன் அதனை வாழ்க்கையோடு தொடர்புபடுத்திக் கொள்ள உதவும் சிந்திக்கலாமா?



குழந்தைகள் விளையாடிக் கொண்டே தங்களது மொழித் திறனை வளப்படுத்திக் கொள்ள உதவும் மொழியோடு விளையாடு.







ஒவ்வொரு குழந்தையின் படைப்புத் திறன், புதியன உருவாக்கும் சிந்தனை ஆகியவற்றை வளர்க்க உதவும் **கலையும் கைவண்ணமும்.**

திட்டமிட்டு ஒவ்வொரு செயலையும் செய்து முடிக்க உதவும் **செயல்திட்டம்.**






மாணவர்கள் புதிய செய்திகளை அறிந்து கொள்ள உதவும் **அறிந்து கொள்வோம்**

ஒற்றுமையுடன் சேர்ந்து செயல்பட உதவும் **இணைந்து செய்வோம்**




புதிய பாடநூலில் இவைபோன்ற செயல்பாடுகள் இடம்பெற்றுள்ளன.

கற்பிக்க வேண்டிய திறன்கள் அந்தந்தப் பாடப் பகுதியிலும் பெற வேண்டிய கற்றல் விளைவுகள் பாடநூலின் இறுதியிலும் கொடுக்கப்பட்டுள்ளன. விழுமியங்களும் வாழ்வியல் திறன்களும் பாடப் பகுதிகளில் பேசப்பட்டுள்ளன.

**பாடநூலில் உள்ள விரைவுக் குறியீட்டைப் (QR Code) பயன்படுத்துவோம்! எப்படி?**

- உங்கள் திறன் பேசியில் கூகுள் playstore கொண்டு DIKSHA செயலியைப் பதிவிறக்கம் செய்து நிறுவிக்கொள்க.
- செயலியைத் திறந்தவுடன், ஸ்கேன் செய்யும் பொத்தானை அழுத்திப் பாடநூலில் உள்ள விரைவுக் குறியீடுகளை ஸ்கேன் செய்யவும்.
- திரையில் தோன்றும் கேமராவைப் பாடநூலின் QR Code அருகில் கொண்டு செல்லவும்.
- ஸ்கேன் செய்வதன் மூலம், அந்த QR Code உடன் இணைக்கப்பட்டுள்ள மின் பாடப் பகுதிகளைப் பயன்படுத்தலாம்.

QR GUIDE

குறிப்பு: இணையச்செயல்பாடுகள் மற்றும் இணைய வளங்களுக்கான QR code களை Scan செய்ய DIKSHA அல்லாத ஏதேனும் ஓர் QR code Scanner பயன்படுத்தவும்.

மகிழ்ச்சியான வகுப்பறைச் சூழலாலும்
இனிமையான கற்றல் கற்பித்தல் முறைகளாலும்
ஆசிரியர்களின் அனுபவ ஆற்றலாலும் அறிவார்ந்த
சமூகம் அமையட்டும்

வாழ்த்துகள்..!

ஆக்கியோர்.



# பொருளடக்கம்



P1P9IX

மின்னூல்

AF8VQE

மதிப்பீடு

B313_3_TAMIL_LANG

இணைய வளங்கள்

# 1 தமிழ் அமுது




தோண்டுகின்ற போதெல்லாம்
சுரக்கின்ற செந்தமிழே!
வேண்டுகின்ற போதெல்லாம்
விளைகின்ற நித்திலமே!
உன்னைத் தவிர
உலகில் எனைக் காக்க
பொன்னோ! பொருளோ!
போற்றி வைக்க வில்லையம்மா!.

– கவிஞர் கண்ணதாசன்

## பாடல் பொருள்

தோண்டுகின்ற பொழுதெல்லாம் ஊற்றைப்போல் சுரக்கின்ற செந்தமிழே! தேவைப்படும் பொழுதெல்லாம் விளைகின்ற முத்தே! உன்னை அன்றி இவ்வுலகில் என்னைக் காக்க வேறு பொன்னையோ பொருளையோ சேர்த்து வைக்கவில்லை, என்னைக் காத்திடுவாய் அம்மா.

KM17BM

## வாங்க பேசலாம்

நீங்கள் நினைப்பதை எவ்வாறு வெளிப்படுத்துவீர்?

உமக்குத் தெரிந்த தமிழ் மொழியின் சிறப்பை வெளிப்படுத்தும் பாடல் ஒன்றைக் கூறுக.

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

### சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

1. நித்திலம் இச்சொல்லின் பொருள் ..........................

(அ) பவளம் (ஆ) முத்து (இ) தங்கம் (ஈ) வைரம்

2. செந்தமிழ் இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ......................................

(அ) செம்மை + தமிழ் (ஆ) செந் + தமிழ்

(இ) செ + தமிழ் (ஈ) செம் + தமிழ்

3. உன்னை + தவிர என்பதைச் சேர்த்து எழுதக் கிடைக்கும் சொல் ..............................

(அ) உன்னைத் தவிர (ஆ) உனைத்தவிர

(இ) உன்னை தவிர (ஈ) உனை தவிர

### இப்பாடலில் இரண்டாம் எழுத்து ஒன்று போல் வரும் சொற்களைத் தெரிவு செய்து எழுதுவோமா...

தோண்டுகின்ற – வேண்டுகின்ற

____________ ____________

# கலைந்துள்ள எழுத்துகளை வரிசைப்படுத்திச் சொல்லை உருவாக்குக.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| எ.கா | பொ | ள் | ன் | பொ | ரு | பொன்பொருள் |
| 1. | செ | ழ் | மி | த | ந் | |
| 2. | ண | வ | கு | ங் | | |
| 3. | போ | றி | ற் | | | |
| 4. | தி | ம் | த் | ல | நி | |
| 5. | உ | கி | ல் | ல | | |

## மீண்டும் மீண்டும் சொல்லலாமா?












## ஆடிப் பாடி மகிழ்வோம்!

அத்திப்பழத் தேன் எடுப்போம்
ஆலமர விழு தாவோம்
இசையோடு பள்ளி செல்வோம்
ஈகையோடு நட்பு செய்வோம்
உவகையாய்க் கற்றிடுவோம்
ஊர் முழுதும் சுற்றிடுவோம்
எல்லோரும் சேர்ந்திடுவோம்
ஏட்டினிலே பாட்டு செய்வோம்
ஐவகை நிலம் செழிக்க
ஒற்றுமையாய் வாழ்ந்திடுவோம்
ஓடம் விட்டுக் களித்திடுவோம்
ஔவை மொழி கற்றிடுவோம்
எஃகாய் உறுதி கொள்வோம்



Z8GK56

# அறிந்து கொள்வோம்

1. எனது நாடு ......................................
2. எனது மாநிலம் ......................................................
3. எனது மாவட்டம் ....................................................................
4. எனது ஊர் ............................................................................
5. எனது மொழி ..................................................................................
6. எனது பள்ளி ....................................................................................
7. எனது வகுப்பு ....................................................................................
8. என் ஆசிரியர் ........................................................................................
9. என் நண்பர்கள் ......................................................................................
10. வீட்டில் எனக்குப் பிடித்தவை ....................................................................................
11. பள்ளியில் எனக்குப் பிடித்தவை ..................................................................................
12. எனது திறமைகள் ............................................................................
13. என் பெற்றோர் ....................................................................
14. பெற்றோர் அலைபேசி எண் .............................

# மொழியோடு விளையாடு

## "தொட்டால் சுருங்கி"

மாணவர்கள் வட்டமாக நிற்க வேண்டும். ஒரு மாணவன் வட்டத்திற்கு வெளியே சுற்றி ஓடி வரவேண்டும். ஓடி வரும் மாணவன் நிற்கின்ற யாராவது ஒரு மாணவன் முதுகில் தொட்டு ஒரு சொல்லைக் கூற வேண்டும். அந்தச் சொல்லில் முடியும் எழுத்தை முதலாகக்கொண்டு வேறு சொல்லைத் தொடப்பட்ட மாணவன் கூற வேண்டும். அவன் சொல்லைக் கூறிவிட்டால் ஓடி வரும் மாணவனே மீண்டும் ஓடி வந்து வேறு மாணவனைத் தொட்டு வேறு சொல் கூற வேண்டும். தொடப்பட்டவன் சரியாகக் கூற வில்லையென்றால் அவன் ஓடிவர வேண்டும். இவ்வாறே விளையாட்டைத் தொடரலாம்.



எ.கா: விலங்கு என்று சொன்னால் குருவி என்று சொல்ல வேண்டும்.



### செயல் திட்டம்

**கேட்டு, எழுதி வரலாமா. . .**

தமிழ் மொழியின் சிறப்பை வெளிப்படுத்தும் பாடல்கள் இரண்டை எழுதி வருக

# 2 கண்ணன் செய்த உதவி



கதிரவனின் ஒளி எங்கும் படர்ந்திருந்தது. பறவைகள் ஒலியெழுப்பிப் பறந்தன. காலை வேளையில் கண்ணன் பள்ளிக்குப் புறப்பட்டான். அவன் செல்லும் வழியில் பெரியவர் ஒருவரைப் பார்த்தான். அந்தப் பெரியவர் "சாலையைக் கடக்க உதவ வேண்டும்" என்று அவனிடம் கேட்டார்.



"வாருங்கள் போகலாம்" என்று கூறிய கண்ணன், அவரது கையைப் பிடித்துக்கொண்டு பாதுகாப்பாக எதிர்ப்புறத்தில் விடுவதற்குச் சென்றான். அப்போது எதிரே ஒரு பேருந்து வேகமாக வந்தது. ஓட்டுநரின் கட்டுப்பாட்டை இழந்த அந்தப் பேருந்து பக்கத்தில் இருந்த மரத்தில் மோதியது. உடனே கண்ணன் கத்தினான்.

அறிந்த தகவல்களையும், செய்திகளையும் சரியான ஒலிப்புடன் தங்கு தடையின்றிக் கலவைத் தொடரில் பேசுதல்...

என்ன செய்வது
என்று தெரியாமல்
"ஐயோ காப்பாற்றுங்கள்
காப்பாற்றுங்கள்" என்று
உரக்கக் கத்தினான், உடனே
அந்தப் பெரியவர் தம்
பையிலிருந்து செல்பேசியை
எடுத்தார். பின் 108 என்ற
எண்ணிற்குத் தொடர்பு
கொண்டு பேசினார்.
அடுத்த சிறிதுநேரத்தில்
அவசர ஊர்தி வந்தது.
காவலர்களும் வந்தனர்.
பேருந்தில் காயம்
அடைந்தவர்களை மருத்துவமனையில் சேர்த்தனர்.




இதனைப் பார்த்த கண்ணன் பேருந்தில் இருந்தவர்களுக்குத் தன்னால் இயன்ற உதவிகளைச் செய்தான். அதன்பிறகு பள்ளிக்குச் சென்றான். ஆசிரியர் கண்ணனைப் பார்த்து "ஏன் தாமதமாக வருகிறாய்?" எனக் கேட்டார்.



கண்ணன் நடந்தவற்றைத் தெளிவாகக் கூறினான். ஆசிரியர் அவனைப் பாராட்டினார். கண்ணன் மகிழ்ச்சியடைந்தான்.

"மாணவர்களே! நீங்களும் உங்களால் முடிந்த உதவியைப் பிறருக்குச் செய்ய வேண்டும். அதுவே மகிழ்ச்சியைத் தரும்" என்றார். மாணவர்கள் அனைவரும் கையைத் தட்டி கண்ணனுக்குப் பாராட்டு தெரிவித்தனர்.



## வாங்க பேசலாம்

- கண்ணனைப் போல நீ யாருக்காவது உதவி செய்திருக்கிறாயா? உனது அனுபவத்தைக் கூறு
- உனது ஊரில் 108 வாகனத்தைப் பார்த்திருக்கிறாயா?. எதற்காக வந்தது? கலந்துரையாடு.



## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

### சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

1. **கதிரவன்** இச்சொல் உணர்த்தும் பொருள் ................

   (அ) சந்திரன் (ஆ) சூரியன்
   (இ) விண்மீன் (ஈ) நெற்கதிர்

2. **மகிழ்ச்சியடைந்தான்** இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது .......................................

   (அ) மகிழ்ச்சி + அடைந்தான் (ஆ) மகிழ்ச்சி + யடைந்தான்
   (இ) மகிழ்ச்சியை + அடைந்தான் (ஈ) மகிழ்ச்சியை + யடைந்தான்

3. **ஒலியெழுப்பி** இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..............................

   (அ) ஒலி + யெழுப்பி (ஆ) ஒலி + எழுப்பி
   (இ) ஒலியை + யெழுப்பி (ஈ) ஒலியை + எழுப்பி

SFDBR8

### பொருத்தமான குறியிடுக.
### (✓) சரி, (×) தவறு.

1. கண்ணன் பெரியவருக்குச் சாலையைக் கடக்க உதவினான். ☐
2. கண்ணன் பள்ளிக்கு நேரத்தோடு வந்து விட்டான். ☐
3. பெரியவர் செல்பேசியில் 107ஐ அழைத்தார். ☐
4. ஆசிரியரும் மாணவர்களும் கண்ணனைப் பாராட்டினர். ☐

# அகர முதலியைப் பார்த்துப் பொருள் வேறுபாடு அறிக



1. ஒலி: ........................................

2. ஒளி: ........................................



3. பள்ளி: ........................................

4. பல்லி: ........................................



5. காலை: ........................................

6. காளை: ........................................



## சரியான சொல்லால் நிரப்பிப் படி

1. ஒட்டகச்சிவிங்கி மிகவும் __________.
2. அதன் கழுத்து __________ இருக்கும்.
3. ஒட்டகச்சிவிங்கிக்குக் குரல்நாண் இருந்தாலும் அதனால் சத்தம் போட்டு __________ முடியாது.
4. ஒரு சிங்கத்தையே காலால் தாக்கிக் கொல்லும் அளவுக்கு __________ வாய்ந்தது.
5. ஒட்டகச்சிவிங்கி __________ தின்னும்.

(வலிமை, கத்த, இலைதழைகளைத், நீளமாக, உயரமானது)

## வினாக்களுக்கு விடையளி

1. கண்ணன் எங்குப் புறப்பட்டான்?

2. பள்ளி செல்லும் வழியில் கண்ணன் யாரைப் பார்த்தான்?

3. பேருந்து எதில் மோதியது?

4. பெரியவர் எந்த எண்ணிற்குச் செல்பேசியில் பேசினார்?

5. ஆசிரியர் கண்ணனை எதற்காகப் பாராட்டினார்?

## அறிந்து கொள்வோம்

நீ உன் வீட்டில் யாருக்கு என்ன உதவிகளைச் செய்கிறாய்? வகுப்பறையில் கலந்துரையாடு.

## சொல் விளையாட்டு

வாத்தில் உள்ள எழுத்துகளைக் கொண்டு புதிய சொற்களை உருவாக்குக.

எ. கா: நகை

1.

2.

3.

4.

5.

6.






**சிந்திக்கலாமா?**

அகில் பள்ளியில் படிக்கும் சிறுவன். அவனுக்கு உயிர்களிடத்தில் அன்பு காட்டுவதும் பிறருக்கு உதவி செய்வதும் பிடிக்கும். ஆனால் அவன் பெற்றோர்கள், அகில் சிறுவன் என்பதால், அவனுக்கு ஆபத்து ஏதேனும் ஏற்பட்டு விடுமோ என்று பயப்படுகின்றனர்.

அவர்களின் பயம் சரியானதா?
இல்லையா? ஏன்?

# 3 தனித்திறமை

காட்டின் ராஜாவான சிங்கம் சில நாள்கள் வெளியூர் சென்றபோது புலியிடம் தனது பொறுப்புகளை ஒப்படைத்துவிட்டுச் சென்றது. புலியும் சில நாள்களுக்கு ராஜாவாகப் பதவி ஏற்று கொண்டது. படைத்தளபதியாகச் சிங்கக் குட்டி பொறுப்பேற்றது.






கழுதையாரே ...... உமக்கு உரிய பதவி
ராஜாவே..! ராஜாவே..! இந்தக் கழுதை ஒரு முட்டாள். கழுதையால் எந்த ஒரு பயனும் இல்லை.
அப்படியா...!
இதே போல் முயல், ஆமை இரண்டும் எதற்கும் பயன்படாது.




பண்புகளை வளர்த்தல்

## நீதிக் கருத்து

**ஒவ்வொருவருக்கும் தனித்திறமை உண்டு. அதை அறிந்து சூழ்நிலைக்கு ஏற்பப் பயன்படுத்த வேண்டும்.**

## வாங்க பேசலாம்

காட்டின் அரசனாக சிங்கமே இருக்க வேண்டுமா?
புலி காட்டுக்கு அரசனாக இருப்பது குறித்து உனது கருத்து என்ன?
வகுப்பறையில் விவாதிக்க...

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

### சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

1. தகுதி இச்சொல் உணர்த்தும் பொருள் ........................................

(அ) தரம் (ஆ) மரம்

(இ) கரம் (ஈ) வரம்

2. பகைவர்கள் இச்சொல்லின் எதிர்ச்சொல் ........................................

(அ) நண்பர்கள் (ஆ) எதிரிகள்

(இ) அயலவர்கள் (ஈ) சகோதரர்கள்

3. பணி இச்சொல் உணர்த்தும் பொருள் ........................................

(அ) வாழை (ஆ) வேளை

(இ) வேலை (ஈ) வாளை

4. படைத்தளபதி இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..................

(அ) படைத் + தளபதி (ஆ) படை + தளபதி

(இ) படையின் + தளபதி (ஈ) படைத்த + தளபதி

5. எதை + பார்த்தாலும் இதனைச் சேர்த்து எழுதக் கிடைக்கும் சொல் ........................................

(அ) எதைபார்த்தாலும் (ஆ) எதபார்த்தாலும்

(இ) எதைப்பார்த்தாலும் (ஈ) எதைபார்தாலும்

## வினாக்களுக்கு விடையளி

1. காட்டில் விலங்குகளின் கூட்டம் யார் தலைமையில் நடைபெற்றது?
2. புலிராஜா, படைத்தளபதி பொறுப்பை யாருக்குக் கொடுத்தார்?
3. ஆந்தைக்கு என்ன பதவி கொடுக்கப்பட்டது?
4. கரடி எந்தெந்த விலங்குகள் தகுதியற்றவை எனக் கூறியது?
5. இந்தக் கதையின் மூலம் நீ அறிந்து கொள்வது யாது?

## புதிருக்குப் பொருத்தமான படத்தைப் பொருத்துக

பதுங்கிச் செல்வேன்; பாய்ந்து இரையைப் பிடிப்பேன். நான் யார்?



இரவில் விழித்தும் பகலில் தூங்கியும் வாழ்வேன்; என் கண்களை எல்லாத் திசைகளிலும் திருப்புவேன். நான் யார்?



என் காதுகள் நீண்டிருக்கும்; வேகமாக ஓடுவேன்; கேரட் எனக்கு மிகவும் பிடிக்கும். நான் யார்?



## முறைமாறியுள்ள சொற்களை முறைப்படுத்தித் தொடர் உருவாக்குக

1. காட்டில் விலங்குகளின் நடந்தது கூட்டம்

2. இரவுக்காவல் நீங்கள்தாம் அமைச்சர் ஆந்தையாரே

3. முயல் ஓடும் வேகமாக அதி

4. கூடாது யாரையும் போடக் எடை குறைவாக

## எந்த விலங்கிற்கு, எந்தப் பணி?

| | விலங்குகள் | | பணிகள் |
|---|---|---|---|
| 1. |  | – | பொருள்களைச் சேகரிக்கும் வேலை |
| 2. |  | – | எச்சரிக்கைப் பணி |
| 3. |  | – | படைத்தளபதி |
| 4. |  | – | இரவுக்காவல் |
| 5. |  | – | சமையல் வேலை |

## பெயர் எது? செயல் எது?

| | | பெயர் | செயல் |
|---|---|---|---|
| 1. | குழலி பாடம் படித்தாள். | 1. ________<br>2. ________ | 1. ________ |
| 2. | அமுதன் பந்து விளையாடினான். | 1. ________<br>2. ________ | 1. ________ |
| 3. | மரம் செழித்து வளர்ந்தது. | 1. ________ | 1. ________<br>2. ________ |

## மொழியோடு விளையாடு

மாணவர்களை இரு குழுவாகப் பிரிக்கவேண்டும் . முதல் குழுவினருக்கு விலங்குகள் மற்றும் பறவைகளின் பெயர் எழுதப்பட்ட அட்டையினை ஒவ்வொரு மாணவனுக்கும் ஒன்று வீதம் கொடுக்க வேண்டும். ஆசிரியர் ஒலிப்பான் மூலம் ஒலி எழுப்பியவுடன் முதல் குழுவில் இருந்து ஒரு மாணவன் தனது அட்டையில் எழுதப்பட்டு உள்ள விலங்கு (அ) பறவை போல நடித்து (அ) ஒலி எழுப்பிக் காட்ட வேண்டும். நடிக்கும் விதத்தை (அ) ஒலியைக் கேட்டு அது என்ன விலங்கு? (அ) பறவை? என்பதனை இரண்டாவது குழுவினர் கண்டறிந்து கூறவேண்டும். இவ்வாறே அனைத்து மாணவர்களுக்கும் வாய்ப்புகள் வழங்கப்பட வேண்டும்.



# எழுத்துகளின் வகைகள் அறிவோமா?

DTWXXP

குழந்தைகளே! நமக்கெல்லாம் பெயர் இருக்கிறது அல்லவா...
அதுபோல எழுத்துகளுக்கும் பெயர் வைக்கலாமா..
தமிழில் உள்ள உயிரெழுத்துகள் மொத்தம் – 12




இதில்




இந்த ஐந்து எழுத்துகளும் ஓசையில் குறுகி ஒலிக்கின்றன. எனவே, இவற்றிற்குக் குறில் அல்லது குற்றெழுத்துகள் என்று பெயரிடுவோம்.




இந்த ஏழு எழுத்துகளும் ஓசையில் நீண்டு ஒலிக்கின்றன. இவற்றிற்கு நெடில் அல்லது நெட்டெழுத்துகள் என்று பெயரிடுவோம்.

இப்பொழுது மெய்யெழுத்துகளுக்குப் பெயரிடுவோமா...
தமிழில் உள்ள மெய்யெழுத்துகள் மொத்தம் – 18.




இவை ஒலிக்கும் தன்மையை வைத்து மூன்று வகைகளாகப் பிரித்துப் பெயரிடுவோம்.

## வல்லினம்






யானைகள் எப்படி வலிமையாக இருக்கின்றனவோ அப்படியே க், ச், ட், த், ப், ற் – என்ற எழுத்துகளும் வலிய ஓசை உடையவை, எனவே இவற்றுக்கு வல்லினம் என்று பெயரிடுவோம்.

## மெல்லினம்






முயல்கள் எப்படி மென்மையாக இருக்கின்றனவோ அப்படியே ங், ஞ், ண், ந், ம், ன் – என்ற எழுத்துகளும் மெல்லிய ஓசை உடையவை. எனவே இவற்றுக்கு மெல்லினம் என்று பெயரிடுவோம்.

## இடையினம்




மான்கள் யானையைப் போன்று வலிமையாகவும் இல்லை, முயலைப் போன்று மென்மையாகவும் இல்லை, இடைப்பட்ட நிலையில் இருக்கின்றன.

அது போல ய், ர், ல், வ், ழ், ள் – என்ற எழுத்துகளும், வன்மையாகவும் இல்லாமல் மென்மையாகவும் இல்லாமல் இடைப்பட்ட ஓசை உடையதால் இவற்றுக்கு இடையினம் என்று பெயரிடுவோம்.



ஃ என்பது ஆய்த எழுத்து அல்லது தனிநிலை எனப்படும்.

எழுத்துகளின் பெயர்கள் இனிமையாக இருக்கின்றன. அப்படித்தானே!

**உங்கள் பெயரிலும் உங்கள் நண்பர்களின் பெயர்களிலும் இடம்பெற்றுள்ள மெய்யெழுத்துகளை வட்டமிட்டுக் காட்டுக**

# 4 கல்யாணமாம் கல்யாணம்!

3M5MCG

பூனைக்கும் பூனைக்கும் கல்யாணமாம்
பூலோகமெல்லாம் கொண்டாட்டமாம்
யானை மேலே ஊர்கோலமாம்
ஒட்டகச்சிவிங்கி நாட்டியமாம்
கொர்கொர் குரங்கு பின்பாட்டாம்
தடபுடலான சாப்பாடாம்





தாலிகட்டும் வேளையில
மாப்பிள்ளை பூனைய காணோமாம்
சந்தடி புந்தடி செய்யாமல்
சமையல்கட்டில் நுழைந்தாராம்
வாங்கிவச்ச பாலையெல்லாம்
ஒரே மூச்சில் குடித்தாராம்



பார்த்துவிட்ட பெண்ணின் தாயும்
பலத்த சத்தம் போட்டாராம்
திருட்டு மாப்பிள்ளைக்கு என் பெண்ணைத்
திருமணம் செய்ய முடியாது
வேண்டா இந்த சம்பந்தம்
வெட்கக்கேடு போய் வாறோம்

– நாட்டுப்புறப் பாடல்



## வாங்க பேசலாம்

- இப்பாடலை ஓசை நயத்துடன் பாடி மகிழ்க.
- உனது பகுதியில் வழங்கும் உனக்குப் பிடித்த நாட்டுப்புறப் பாடல்களை அறிந்து வகுப்பறையில் பாடுக.

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

### பாடலில் ஒரே ஓசையில் முடியும் சொற்களை எடுத்து எழுதுக.



கல்யாணமாம் ______________

______________ ______________

______________ ______________

## சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

1. பூலோகமெல்லாம் இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது .......................................
   (அ) பூலோக + மெல்லாம் (ஆ) பூலோகம் + மெல்லாம்
   (இ) பூலோகம் + எல்லாம் (ஈ) பூலோக + எல்லாம்

2. கல்யாணத்தில் நாட்டியமாடுபவர் .......................................
   (அ) பூனை (ஆ) ஒட்டகச்சிவிங்கி
   (இ) யானை (ஈ) குரங்கு

3. பாலை + எல்லாம் இதனை சேர்த்து எழுதக் கிடைக்கும் சொல் .........................
   (அ) பாலையெல்லாம் (ஆ) பாலைஎல்லாம்
   (இ) பாலைல்லாம் (ஈ) பாலெல்லாம்

## இணைந்து செய்வோம்

கோப்பைகளை அவற்றின் சரியான தட்டுகளோடு பொருத்துக:

| தட்டு | | கோப்பை |
| --- | --- | --- |
| காணோமாம் | ________ | வேளையிலே |
| வாங்கி வச்ச | ________ | பூனையை |
| வேளையில | ________ | வாங்கிவைத்த |
| பூனைய | ________ | காணவில்லையாம் |

### சிந்திக்கலாமா?



இப்பாடலில் வரும்
பூனைக்கும்
பூனைக்கும் பதிலாக
யானைக்கும்
பூனைக்கும்
கல்யாணம் ஏற்பாடு
செய்திருந்தால்
எவ்வாறு இருக்கும்?

வகுப்பறையில்
பேசுக...



# கலையும் கைவண்ணமும்

## வண்ணமிட்டு மகிழ்க





### செயல் திட்டம்

உமது பகுதியில் வழங்கும் நாட்டுப்புறக் கதைகள் இரண்டினை அறிந்து வருக.

# 5 மாணவர்கள் நினைத்தால்...



சிறுமி மேரி மகிழ்வோடு துள்ளிக் குதித்து ஓடிவந்தாள், தனது தோழி மகிழினியைப் பார்க்க... அவளிடம், "இன்று காலை எங்கள் வீட்டுப்பசு கன்று ஈன்றுள்ளது, இனி நான் எங்கள் வீட்டுக் கன்றுக்குட்டியுடன் விளையாடுவேன்" என்றாள். அதைக்கேட்ட மகிழினி, "என்னையும் விளையாட்டில் சேர்த்துக் கொள்" என்றாள்.

அப்போது மேரியின் வீட்டு மாட்டுத் தொழுவத்தில் ஒரே கும்பல்......ஓடிச்சென்று பார்த்தனர் அவர்கள் கண்ட காட்சி கல்நெஞ்சையும் கசிந்துருகச் செய்வதாக இருந்தது...... கன்றை ஈன்ற பசு தனது கழிவினை வெளியே தள்ள முடியாமல் இறந்து போயிருந்தது. பாதி வெளிவந்திருந்த கழிவில் நிறைய நெகிழிக் குப்பைகள் காணப்பட்டன. அந்நெகிழியால் தான் இறப்பு ஏற்பட்டதாகக் கால்நடை மருத்துவர் கூறிக் கொண்டிருந்தார்.

H8L15Z

வேதனையுடன் பள்ளிக்குச் சென்றனர் மேரியும் மகிழினியும். சோகமாக அமர்ந்திருந்த இருவரையும் அழைத்துக் காரணம் கேட்டார் வகுப்பு ஆசிரியர். பிறகு, "நெகிழிகளைப் பயன்படுத்துவதால் பல தீமைகள் ஏற்படுகின்றன. மட்காத இந்தக் குப்பைகளால் சாக்கடைகளில் நீர்தேங்கி துர்நாற்றம் வீசுவதோடு, ஈ மற்றும் கொசுக்கள் உற்பத்தியாகி நோய் பரவுகிறது. நெகிழிக் குப்பைகளை எரிப்பதால் ஓசோன் படலம் பாதிப்படைகிறது. இதனால், சூரியனின் புற ஊதாக் கதிர்கள் நேரடியாக நம்மைத் தாக்குகின்றன. இதனால், தோல் நோய்கள் ஏற்படுகின்றன", என்று விளக்கினார். இதுபற்றிப் பேசிக்கொண்டிருப்பதை விட்டுவிட்டுச் செயலில் இறங்குவோம் என்றார். பள்ளியின் நலன் காக்கும் பள்ளி மேலாண்மைக் குழுவினைக் கூட்டி, நெகிழி பற்றிய தீமைகளை எடுத்துரைத்தார்.

பள்ளி மாணவர்கள், ஆசிரியர்கள், பள்ளி மேலாண்மைக் குழு உறுப்பினர்கள், ஊர்ப் பொதுமக்கள் ஆகியோரைக் கொண்டு நெகிழி விழிப்புணர்வு பேரணி நடத்தத்

தமக்கு அறிமுகமான செய்திகளையும் விவரங்களையும் சரியான ஒலிப்புடனும் தங்கு தடையின்றியும் படித்தல், விவரித்தல்




தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அனைவரும் விழிப்புணர்வு வாசகங்கள் எழுதப்பட்ட பதாகைகளை ஏந்தி, வாசகங்களைக் கூறிக் கொண்டே, கிராமத்தின் அனைத்துத் தெருக்களிலும் பேரணியாக வந்தனர்.

இம்மாதிரியான விழிப்புணர்வு வாசகங்கள் எழுதப்பட்ட துண்டுப் பிரசுரங்களைப் பொதுமக்களிடம் கொடுத்து நெகிழியின் தீமைகளை எடுத்துக் கூறினர். மேலும் மாணவர்கள் அனைவரும் பயன்படுத்தப்பட்ட காகிதங்களைக் கொண்டு பைகள் செய்து வைத்திருந்தனர் . அதனை அவ்வூரின் அனைத்துக் கடைகளிலும் கொடுத்து அந்தப் பைகளைப் பயன்படுத்தச் சொல்லி நெகிழியின் தீமைகளை எடுத்துக் கூறினர். உள்ளூர் மக்களிடம் இனி கடைகளில் பொருட்கள் வாங்கும்போது துணிப்பைகளைக் கொண்டு செல்ல அறிவுறுத்தினர்.

எறும்பு ஊரக் கல்லும் தேயும் என்ற ஆன்றோரின் வாக்கிற்கு ஏற்ப இச்சிறு பிள்ளைகளின் முயற்சியால் அந்த ஊர் நெகிழியற்ற ஊராக மாறி வருகிறது ..........

## வாங்க பேசலாம்

- நெகிழியினால் ஏற்படும் தீமைகள் குறித்து வகுப்பறையில் கலந்துரையாடுக.
- நெகிழியை அவசியம் பயன்படுத்த வேண்டும் என்ற இடங்களாக எவற்றைக் கருதுகிறாய்? அவ்விடங்களில் நெகிழிக்குப் பதிலாக வேறு என்ன பொருள்களைப் பயன்படுத்தலாம் என வகுப்பறையில் கலந்துரையாடுக.

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

### சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

1. முயற்சி இச்சொல்லின் பொருள் ........................................

(அ) ஆக்கம் (ஆ) ஊக்கம்

(இ) இயக்கம் (ஈ) பக்கம்

2. ஆன்றோர் இச்சொல்லின் பொருள் ........................................

(அ) பெற்றோர் (ஆ) உற்றோர்

(இ) சுற்றோர் (ஈ) பெரியோர்

3. வைத்திருந்தனர் இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ...................................

(அ) வைத்து + யிருந்தனர் (ஆ) வைத் + இருந்தனர்

(இ) வைத்து + இருந்தனர் (ஈ) வைத் + திருந்தனர்

4. வீதியெங்கும் என்ற சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ......................................

(அ) வீதி + எங்கும் (ஆ) வீதி + யெங்கும்

(இ) வீதியெ + ங்கும் (ஈ) வீதி + அங்கும்

5. நெகிழி + அற்ற என்பதைச் சேர்த்து எழுதக் கிடைக்கும் சொல் ...................................

(அ) நெகிழிஅற்ற (ஆ) நெகிழியற்ற

(இ) நெகிழ்அற்ற (ஈ) நெகிழ்யற்ற

6. பாதிப்பு + அடைகிறது என்பதைச் சேர்த்து எழுதக் கிடைக்கும் சொல் ...................................

(அ) பாதிப்அடைகிறது (ஆ) பாதிப்புஅடைகிறது

(இ) பாதிப்படைகிறது (ஈ) பாதிபடைகிறது

71TPJR

## வினாக்களுக்கு விடையளி

1. மேரி இனி யாருடன் விளையாடப் போவதாகக் கூறினாள்?

2. பசு எதனால் இறந்தது?

3. நெகிழியினால் ஏற்படும் தீமைகள் இரண்டினை எழுதுக.

4. நெகிழி விழிப்புணர்வு வாசகம் ஒன்றினை உருவாக்குக.

## பொருத்தமான சொல்லை எடுத்து நிரப்புக

1. நெகிழியற்ற ........................................... உருவாக்குவோம். (**உலகை** / **உளகை**)

2. நெகிழியை ஒழிப்போம் ....................................... காப்போம். (**மன்வளம்** / **மண்வளம்**)

3. மேரி ...................................... குதித்து ஓடிவந்தாள். (**மகிள்வோடு** / **மகிழ்வோடு**)

4. எறும்பு ........................................... கல்லும் தேயும். (**ஊரக்** / **ஊறக்**)

5. துணிப்பை என்பது ........................................... (**எளிதானது** / **எலிதானது**)



**செயல் திட்டம்**

மட்கும் பொருள்களைக் கொண்டு பைகள், கூடைகள் போன்றவற்றினை உமது பெற்றோர் உதவியுடன் செய்து வருக.

## இணைந்து செய்வோம்

நெகிழிப் பொருள்களுக்கு மாற்றாக எளிதில் மட்கும் பொருள்களாக எவற்றையெல்லாம் பயன்படுத்தலாம் என்பதைப் பட்டியலிடுக.

1. ______________
2. ______________
3. ______________
4. ______________
5. ______________

## சொற்களை இனம்கண்டு அதற்குரிய பெட்டிக்குக் கீழே எழுதுக.

**கண்ணாடித்துண்டு, நெகிழிப்பை, காகிதத்தாள், சணல்பை, பீங்கான் தட்டு, இலை**







| மட்கும் குப்பைப் பெட்டி | மட்காத குப்பைப் பெட்டி |
|---|---|
| 1. ______________ | 1. ______________ |
| 2. ______________ | 2. ______________ |
| 3. ______________ | 3. ______________ |

# ஒருமை, பன்மை அறிவோமா?

7G3NJF

ஒரு பொருளை மட்டும் குறிப்பது **ஒருமை**.
ஒன்றுக்கும் மேற்பட்ட பொருள்களைக் குறிப்பது **பன்மை**.

**ஒருமைச் சொல்லுக்கு உரிய பன்மைச் சொல்லை எழுதுவோம்**

| ஒருமை | பன்மை |
|---|---|
| பந்து | |
| ஆமை | |
| முயல் | |
| பூனை | |

| ஒருமை | பன்மை |
|---|---|
| பூ | |
| விழா | |
| பசு | |
| வினா | |



| ஒருமை | பன்மை |
|---|---|
| படம் | |
| மரம் | |
| சிங்கம் | |
| காகம் | |

| ஒருமை | பன்மை |
|---|---|
| பல் | |
| கல் | |
| சொல் | |
| புல் | |

| ஒருமை | பன்மை |
|---|---|
| முள் | |
| தாள் | |
| ஆள் | |
| பொருள் | |

# 6 துணிந்தவர் வெற்றி கொள்வர்




மூன்றாம் வகுப்பிலுள்ள மாணவர்களுக்கு அவர்களின் வகுப்பு ஆசிரியர் ஒரு போட்டியை அறிவித்தார். ஓர் அறையின் நடுவில் பெட்டி ஒன்று வைக்கப்பட்டிருக்கும். அந்த அறையினுள் சென்று பெட்டியினைத் தூக்கி வருபவரே வெற்றியாளர் என்பதே அப்போட்டியாகும்.

அனைத்து மாணவர்களும் ஆவலுடன் பெட்டி வைக்கப்பட்டிருந்த அறையினுள் சென்றனர். அறையின் நடுவில் வைக்கப்பட்டிருந்த பெட்டி உருவ அளவில் பெரியதாக இருந்தது. அதனைக் கண்டவுடன் மாணவர்கள் பலர் தங்களால் அப்பெட்டியினைத் தூக்க இயலாது எனப் போட்டியிலிருந்து விலகி விட்டனர். மேலும் சிலர் பெட்டிக்கு அருகே சென்று பின்னர் தங்களால் பெட்டியைத் தூக்க இயலவில்லை என்றால் மற்றவர்கள் சிரிப்பார்களே என்று நினைத்துப் போட்டியில் கலந்து கொள்ளாமல் திரும்பிவிட்டனர். கவியரசி என்ற மாணவி மட்டும் முயற்சி செய்து பார்ப்போமே என்று எண்ணி, பெட்டியினை நகர்த்தியபோது பெட்டி எளிதாக நகர்ந்தது. உடனே, அம்மாணவி பெட்டியினை எளிதாகத் தூக்கினாள்.

கேட்கும்/ படிக்கும் கதை, கவிதை/ செய்திகள்/ ஆகியவற்றைப் புரிந்துகொண்டு தங்கள் கருத்துகளால் வளப்படுத்துதல்



பிற மாணவர்கள் அனைவரும் இதனை வியப்புடன் பார்த்தனர். பின்னர் தயக்கம் விலகி அனைவரும் ஓடிச்சென்று தாங்களும் பெட்டியினை தூக்கிப் பார்த்தனர். பெட்டி தூக்குவதற்குச் சுலபமாக இருந்தது. மாணவ, மாணவிகள் ஆசிரியரிடம் சென்று பெட்டி பெரியதாக இருந்ததால் நாங்கள் முயற்சி செய்யவில்லை என்றனர். அதற்கு ஆசிரியர் அது காகிதத்தால் செய்த பெட்டி என்று மாணவர்களிடம் விளக்கினார். மேலும் ஒரு செயலில் இறங்குவதற்குமுன் சிந்திக்க வேண்டும், ஆனால் முயற்சி செய்யாமல் இருக்கக் கூடாது. நம்மால் முடியும் என்று நம்ப வேண்டும் என அறிவுறுத்தினார்.

நீங்கள் எல்லாரும் தயக்கம் காட்டியதால் வெற்றி பெறவில்லை. தன்னால் முடியும் என்று நம்பி கவியரசி முயன்றதால் வெற்றி பெற்றாள். எனவே அன்புக் குழந்தைகளே,

"தோல்வியின் அடையாளம் தயக்கம்
வெற்றியின் அடையாளம் முயற்சி
துணிந்தவர் தோற்பதில்லை
தயங்கியவர் வென்றதில்லை"



நாம் விதைக்கும் விதைகளில் முயற்சியுடன் மண்ணைப் பிளந்து கொண்டு வருபவையே செடிகளாகின்றன. தயங்கி நிற்பவை தங்கி விடுகின்றன. அதுபோல கவியரசி தயங்காமல் துணிச்சலாகச் செயல்பட்டதால் வெற்றி பெற்றாள் என ஆசிரியை கூறினார். கவியரசிக்குப் பாராட்டுகளையும் பரிசுகளையும் வழங்கினார். கவியரசியும் மகிழ்ச்சியடைந்தாள்.

"முயற்சியுடையார் இகழ்ச்சி அடையார்."

## வாங்க பேசலாம்

- போட்டி நடந்த இந்த வகுப்பறையில் நீ இருந்திருந்தால் என்ன செய்திருப்பாய்?
- பளு தூக்குதல் போன்ற கடினமான வேலைகளை ஆண் பெண் இருவராலும் செய்ய முடியுமா? உனது கருத்து என்ன? வகுப்பறையில் கலந்துரையாடு

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

### சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

1. வகுப்பறை என்ற சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..........................................

(அ) வகுப்பு + அரை (ஆ) வகுப்பு + அறை

(இ) வகு + அறை (ஈ) வகுப் + அறை

2. இகழ்ச்சி என்ற சொல் உணர்த்தும் பொருள் ..........................................

(அ) மகிழ்ச்சி (ஆ) மதிப்பு

(இ) அவமதிப்பு (ஈ) உயர்வு

3. பெரிய என்ற சொல்லின் எதிர்ச்சொல் ..................................

(அ) சிறிய (ஆ) நிறைய

(இ) அதிகம் (ஈ) எளிய

4. வெற்றி என்ற சொல்லின் எதிர்ச்சொல் ......................................

(அ) சாதனை (ஆ) மகிழ்ச்சி

(இ) நன்மை (ஈ) தோல்வி

5. மண்ணைப்பிளந்து என்ற சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ......................................

(அ) மண் + பிளந்து (ஆ) மண்ணைப் + பிளந்து

(இ) மண்ணை + பிளந்து (ஈ) மன் + பிளந்து

## வினாக்களுக்கு விடையளி

1. மாணவ மாணவிகளுக்கு ஆசிரியர் அறிவித்த போட்டி என்ன?
2. மாணவ மாணவிகள் போட்டியில் பங்கேற்காததற்குக் காரணங்கள் யாவை?
3. கவியரசியின் வெற்றிக்குக் காரணம் என்ன?

## பாடப்பொருளை வரிசைப்படுத்துவோமா?

1. இவ்வளவு பெரிய பெட்டியினை நம்மால் தூக்க இயலாது என்றனர் சிலர்.
2. ஆசிரியரும் மாணவரும் கவியரசியைப் பாராட்டினர்.
3. தம்மால் முடியும் என்று முயன்றதால் கவியரசி வெற்றி பெற்றாள்.
4. ஆசிரியர் ஒரு போட்டியினை அறிவித்தார்.
5. அறையின் நடுவே ஒரு பெட்டி இருந்தது.

## பழத்திற்குள் உள்ள எழுத்துகளைக் கொண்டு சொற்களை உருவாக்கலாமா?




எ. கா: 1. ஆசிரியர்
2. _______________
3. _______________
4. _______________
5. _______________
6. _______________
7. _______________
8. _______________
9. _______________
10. _______________

## பொருத்தமான எதிர்ச்சொல் சாவியைக் கொண்டு பூட்டைத் திறப்போமா?




## இணைந்து செய்வோம்

மாணவர்களுக்கு வேண்டிய குணங்களைக் கொண்ட மீன்களுக்கு மட்டும் வண்ணமிடுக



## மொழியோடு விளையாடு

அம்புக்குறியுடன் கூடிய சுழல் அட்டையில் மொழிமுதல் எழுத்துகளை எழுதிக் கொள்ள வேண்டும். மாணவர்களை வட்ட வடிவில் அமர வைத்து இந்த அட்டையினைக் கொடுக்க வேண்டும். ஒவ்வொரு மாணவரும் அம்புக்குறியினை வேகமாகச் சுற்றி விடுவர். அம்புக்குறி எந்த எழுத்தில் நிற்கிறதோ, அந்த எழுத்தில் தொடங்கும் ஏதேனும் ஒரு சொல்லை அந்த மாணவர் கூறவேண்டும். இவ்வாறே அனைத்து மாணவரையும் பங்கேற்கச் செய்தல் வேண்டும். பயன்படுத்திய பின்பு எழுத்துகளை மாற்றி மீண்டும் பயன்படுத்தவேண்டும்.




## கலையும் கைவண்ணமும்

பயன்படுத்திய மற்றும் உபயோகமற்ற பொருள்களைக் கொண்டு பல்வேறு உருவங்கள் செய்து மகிழ்க.



எ.கா: உதிர்ந்த இலைகளைக் கொண்டு உருவம் அமைத்தல்.



### செயல் திட்டம்

"முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்" என்பது போன்று தன்னம்பிக்கையை வளர்க்கும் ஏதேனும் ஐந்து பொன்மொழிகள் மற்றும் பழமொழிகளை எழுதித் தொகுத்து வருக.

# 7 சான்றோர் மொழி




## இனியவை நாற்பது

கற்றார்முன் கல்வி உரைத்தல் மிகஇனிதே
மிக்காரைச் சேர்தல் மிகமாண முன்இனிதே
எள்துணை யானும் இரவாது தான்ஈதல்
எத்துணையும் ஆற்ற இனிது

– பூதஞ்சேந்தனார்

## பாடல் பொருள்

கற்றவர்களின்முன் தான் கற்ற கல்வியைக் கூறுதல் இனிமையானது. அறிவில் மேம்பட்டவர்களுடன் சேர்ந்திருப்பது மிகவும் இனிமையானது. எள் அளவு சிறியதாயினும் தான் பிறரிடம் கேட்டுப் பெறாமல், பிறருக்குக் கொடுத்தல் எல்லாவற்றையும்விட இனிமையானதாகும்.

## பொருள் அறிவோம்

மிக்கார் : அறிவில் மேம்பட்டவர்
எள்துணை : எள் அளவு
எத்துணையும் : எல்லாவற்றிலும்
மாண்பு : பெருமை

## நூலைப்பற்றி...

இந்நூல் மதுரைத் தமிழாசிரியர் மகனார் பூதஞ்சேந்தனாரால் எழுதப்பட்டது. வாழ்க்கைக்கு நன்மை தரும் இனிய கருத்துகளைக் கூறுவது. நாற்பது பாடல்களைக் கொண்டது. எனவே இனியவை நாற்பது என்று அழைக்கப்படுகிறது.

செய்யுளைத் தெளிவான உச்சரிப்புடன் படித்தல், அதன் சரியான பொருளைப் புரிந்து கொண்டு கருத்தை வெளிப்படுத்துதல்.

## வாங்க பேசலாம்

- பாடலைச் சரியான உச்சரிப்புடன் படித்துக்காட்டுக.
- கற்றவர்க்கும் கல்லாதவர்க்கும் உள்ள வேறுபாடுகள் குறித்து வகுப்பறையில் கலந்துரையாடுக.
- உன் நண்பனின் தேவை அறிந்து அவன் கேட்காமலேயே உதவிய அனுபவம் உனக்கு உண்டா? அதில் உனக்கு மகிழ்ச்சியா? வருத்தமா? ஏன்? கலந்துரையாடு...

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

### சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

1. உரைத்தல் என்ற சொல் குறிக்கும் பொருள் ........................................

(அ) பாடுதல் (ஆ) வரைதல்

(இ) சொல்லுதல் (ஈ) எழுதுதல்

2. ஈதல் என்ற சொல் குறிக்கும் பொருள் ........................

(அ) கொடுத்தல் (ஆ) எடுத்தல்

(இ) தடுத்தல் (ஈ) வாங்குதல்

3. மிக்காரை என்ற சொல்லின் எதிர்ச்சொல் ....................................

(அ) அறிவிலாதார் (ஆ) அறிந்தோரை

(இ) கற்றோரை (ஈ) அறிவில்மேம்பட்டவர்

4. இரவாது என்ற சொல் குறிக்கும் பொருள் ...................................

(அ) பிறரிடம் கேட்டுப் பெறாது (ஆ) பிறரிடம் கேட்டுப் பெறுவது

(இ) பிறரிடம் கொடுப்பது (ஈ) பிறருக்கு கொடுக்காது

5. சேர்தல் என்ற சொல் குறிக்கும் பொருள் ..........................

(அ) தேடுதல் (ஆ) பிரிதல்

(இ) இணைதல் (ஈ) களைதல்

## பொருள்பட எழுதிப் படித்து மகிழ்க

1. என க்குஇனி ப்புபி டிக்கும்

2. உழை ப்புஉ யர்வுத ரும்

3. மர ம் வள ர்ப்போ ம்ம ழைபெ றுவோம்

4. சுத் தம்சு கம்த ரும்

5. இனி யதமி ழில்பே சுங்கள்

## நீ எதை விரும்புவாய்? ஏன்? கலந்துரையாடுக





## அறிந்து கொள்வோம்

- உன் நண்பனை உனக்குப் பிடிக்கக் காரணங்கள் எவை?
- உன்னிடத்தில் உனக்குப் பிடிக்காதது எது?
- வகுப்பறையில் பகிர்ந்து கொள்க.



### சிந்திக்கலாமா?

காதரும் அப்துலும் சகோதரர்கள், இருவரும் தங்களுக்குக் கிடைக்கும் சிறு தொகையைச் சேமித்து வருகின்றனர். அந்த ஆண்டு ஏற்பட்ட புயல் பாதிப்பினை அறிந்த காதர் புயல் நிவாரண நிதிக்காக, தான் உண்டியலில் சேமித்து வைத்திருந்த பணத்தைக் கொடுக்க நினைக்கிறான். அவனின் தம்பி அப்துல், தனது சேமிப்பில் இருந்து கிடைத்த தொகையினைக் கொண்டு பிடித்தமான பொருளை வாங்கிக் கொள்ள நினைக்கிறான். இவர்கள் இருவரில் நீ யாராக இருக்க விரும்புகிறாய்? அதற்குரிய காரணங்களைக் கூறு.



### செயல் திட்டம்

'கல்வி' என்ற அதிகாரத்தில் இருந்து எவையேனும் ஐந்து திருக்குறள்களைப் படித்து, எழுதி வருக.

# 8 நூலகம்




மாமா!.......மாமா! என அழைத்தபடி தேனருவி வீட்டிற்குள் வந்தாள்.

**மாமா:** என்னம்மா! தேனருவி ஏன் இப்படி ஓடி வருகிறாய்?

**தேனருவி:** நான் வழக்கமாகப் பள்ளிக்கூடம் போகும் வழியில் உள்ள ஒரு கட்டடத்தைத் தோரணம் கட்டி அழகுபடுத்தியிருந்தார்கள். அதில் நூலகம் என்று எழுதியிருக்கு அப்படின்னா... என்ன மாமா....?

**மாமா:** அதுவா! நூல்களைச் சேமித்து வைத்திருக்கும் இடம்தான் நூலகம். அது ஒரு பொது இடம். அங்கு அனைவரும் வந்து புத்தகம் படிப்பாங்க ! இன்று "நூலக தினம்" அதைக் கொண்டாடுவதற்காக நூலகத்தை அழகுபடுத்தியிருப்பார்கள்.

கேட்கும் செய்திகளைப் புரிந்துகொண்டு தங்கள் கருத்துகளை வெளிப்படுத்துதல்




**தேனருவி:** **அப்படியா? நாமும் சென்று நூலக தினக் கொண்டாட்டத்தில் கலந்து கொள்வோமா?.**

**மாமா:** **சரி தேனருவி! வா போகலாம்.**

**தேனருவி:** **நூலகத்தைப் பற்றி எனக்கு விளக்கமாகச் சொல்லுங்க... மாமா.**

**மாமா:** சொல்கிறேன் கேள், 'நூல் + அகம் = நூலகம்'. பல்வேறு துறை சார்ந்த நூல்கள் வரிசையாக அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் இடமே நூலகம் ஆகும். நூல் நிலையம், புத்தகச் சாலை என்பன நூலகத்தின் வேறு பெயர்களாகும்.

**தேனருவி:** மாமா இங்கு என்னென்ன நூல்கள் இருக்கும்?

**மாமா:** நூலகத்தில் அறிஞர்களின் வாழ்க்கை வரலாற்று நூல்கள், தமிழ், ஆங்கிலம் மற்றும் வேறு பல மொழிகளைச் சார்ந்த இலக்கிய நூல்கள், அறிவியல் நூல்கள், தத்துவ நூல்கள், வரலாற்று நூல்கள், புவியியல் நூல்கள் போன்றவையும் இடம் பெற்றிருக்கும்.

நூல்கள் மட்டுமின்றி நாளிதழ்கள், வார இதழ்கள், மாத இதழ்கள், பல்வேறு வேலைவாய்ப்புகளைப் பற்றிய செய்திகளைத் தெரிவிக்கும் இதழ்கள் ஆகியவையும் இடம்பெற்றிருக்கும்.



**தேனருவி:** அடேங்கப்பா ! நூலகத்தில் இவ்வளவு வகை நூல்களா? அது சரி மாமா, நூலகத்தினால் நமக்கு என்ன பயன்?

**மாமா:** ம்............. என் செல்லக் குட்டி கேட்டால் சொல்லாமல் இருப்பேனா? இங்கு வந்து நமக்குத் தேவையான அல்லது பிடித்த நூல்களை எடுத்துப் படிக்கலாம். நூலகத்தில் உறுப்பினராகச் சேர்ந்தால் நூல்களை வீட்டிற்கே கொண்டு சென்றும் படிக்கலாம் ஆனால் குறிப்பிட்ட நாளில் மீண்டும் புத்தகங்களைத் திருப்பி அளித்து விடவேண்டும். இதனால்,

- நம் அறிவு வளர்கிறது.
- நம்முடைய நேரம் பயனுள்ள முறையில் அமைகிறது.
- வேலைவாய்ப்புத் தொடர்பான நூல்களைப் படிப்பதால் நல்ல வேலையில் சேரவும் முடிகிறது.
- மூளை புத்துணர்ச்சி பெறுகிறது.
- தன்னம்பிக்கை ஏற்படுகிறது.

**தேனருவி:** மாமா! நூலகம் பற்றி நிறைய செய்திகளைத் தெரிந்து கொண்டேன்.

**மாமா:** தேனருவி! குழந்தைகளுக்கான சிறப்பம்சம் நூலகத்தில் உள்ளது. அது என்ன தெரியுமா?

➢ இங்கே குழந்தைகளுக்கான பிரிவு தனியாகவே உள்ளது.
➢ நூலகத்தில் உள்ள "வாசகர் வட்டம்" மூலமாக "நூலக தினத்தன்று" குழந்தைகளுக்கான போட்டிகள் அனைத்து நூலகங்களிலும் நடத்தப்படுகின்றன.
➢ போட்டிகளில் கலந்து கொள்வோருக்காகவும், போட்டித் தேர்வினை எழுதுவோருக்காகவும் தனியே பயிற்சிகள் வழங்கப்படுகின்றன.
➢ ஒவ்வொரு குழந்தையும் அவரவர் வீட்டில் நூலகம் அமைக்க வேண்டும். அதில் நிறைய புத்தகங்களைச் சேமித்து வைத்துப் புத்தகம் படிக்கும் பழக்கத்தினை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

**தேனருவி:** நன்றி மாமா!............ நான் நம் வீட்டில் ஒரு "சிறிய நூலகம்" அமைப்பேன்.

அதில் நிறைய நூல்களைச் சேமித்து வைத்துப் படிப்பேன்.

## அறிந்துகொள்வோம்

- படிப்புதான் ஒருவன் உயர வழி

  **–காமராசர்**

- புத்தகங்கள் படிப்பதையே வழக்கமாக்குங்கள்.

  **–அப்துல்கலாம்**



## வாங்க பேசலாம்

- உனது பள்ளி நூலகத்தில் உள்ள நூல்களுள் நீ படித்த ஏதேனும் ஒரு நூல் / கதை பற்றி வகுப்பறையில் கலந்துரையாடு.
- அருகில் உள்ள நூலகத்திற்குச் சென்று வந்த அனுபவத்தைப் பற்றி வகுப்பறையில் கலந்துரையாடு.



## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

### சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

W9BCY7

1. நூல் இச்சொல் உணர்த்தும் பொருள் ........................................

(அ) புத்தகம் (ஆ) கட்டகம்
(இ) ஒட்டகம் (ஈ) கோல்

2. அறிஞர் இச்சொல் உணர்த்தும் பொருள் ........................................

(அ) அறிவில் சிறந்தவர் (ஆ) கவிதை எழுதுபவர்
(இ) பாடல் பாடுபவர் (ஈ) மருத்துவம் பார்ப்பவர்

3. தேனருவி இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..............................

(அ) தேன் + அருவி (ஆ) தே + னருவி
(இ) தே + அருவி (ஈ) தேனி + அருவி

4. புத்துணர்ச்சி இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..................................

(அ) புதுமை + உணர்ச்சி (ஆ) புத்து + உணர்ச்சி
(இ) புதிய + உணர்ச்சி (ஈ) புது + உணர்ச்சி

5. அகம் இச்சொல்லின் எதிர்ச்சொல் ..................................

(அ) உள்ளே (ஆ) தனியே
(இ) புறம் (ஈ) சிறப்பு

6. தேன் + இருக்கும் இதனைச் சேர்த்து எழுதக் கிடைக்கும் சொல் ........................................

(அ) தேன்இருக்கும் (ஆ) தேனிருக்கும்
(இ) தேனிறுக்கும் (ஈ) தேனிஇருக்கும்

## வினாக்களுக்கு விடையளி

1. நூலகத்தின் வேறு பெயர்கள் யாவை?

2. நூலகத்தின் பயன்கள் யாவை?

3. நூலகத்தில் குழந்தைகளுக்கான சிறப்பம்சங்கள் என்னென்ன உள்ளன?

4. நீ நூலகத்திற்குச் சென்று வந்ததைப் பற்றி எழுதுக.

## சொற்களை உருவாக்குவோமா?




எ. கா: வரிக்குதிரை – வரி, குதிரை, குதி, திரை, வரை

1. திருநெல்வேலி

_______________
_______________
_______________
_______________
_______________

2. பனிப்புயல்

_______________
_______________
_______________
_______________

## எழுத்துகளை முறைப்படுத்தி சொல் உருவாக்குக

1.

| கூ | க் | ட | ளி | ம் | ப | ள் |
|---|---|---|---|---|---|---|

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|

2.

| நூ | க | தி | ல | ம் | ன |
|---|---|---|---|---|---|

| | | | | | |
|---|---|---|---|---|---|

3.

| ள் | ழ | ந் | கு | தை | க |
|---|---|---|---|---|---|

| | | | | | |
|---|---|---|---|---|---|

4.

| ம | வ | ன | மை | லி |
|---|---|---|---|---|

| | | | | |
|---|---|---|---|---|

5.

| பு | து | ர் | த் | ச் | ண | சி |
|---|---|---|---|---|---|---|

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|

## நிறுத்தக் குறியீடுகளைப் பயன்படுத்திப் படிப்போமா?

PG84K9



நூலகத்திற்கு நீ சென்றுள்ளாயா? அங்குப் பலவகையான நூல்கள் வைக்கப்பட்டுள்ளன. சிறுகதை நூல்கள், புதினங்கள், வரலாற்று நூல்கள், இலக்கிய நூல்கள், இலக்கண நூல்கள் என வரிசைப்படுத்தி வைத்திருப்பர். சிறுவர் இதழ்கள் செய்தித்தாள்கள், வார இதழ்கள், மாத இதழ்கள் போன்ற இதழ்களும் உண்டு. ஆஹா! அங்குச் சென்று படிக்கத் தொடங்கினால் நேரம் போவதே தெரியாது. நூலகத்தின் பொறுப்பாளர் நூலகர் ஆவார். நூலகத்தில் அமைதி காத்திடல் வேண்டும்.

## உரைப்பகுதியைப் படித்து வினாக்களுக்கு விடையளி

பள்ளி முடிந்து வீட்டிற்கு வந்தாள் பூமலர். விளையாடுவதற்காகத் தன் தோழி மாலதியின் வீட்டிற்குச் சென்றாள். வழியில் இரண்டு சிறுவர்கள் வேலியில் உள்ள ஓணானை அடிப்பதற்குக் கையில் கல்லோடு குறிபார்த்துக் கொண்டிருந்தனர். பூமலர் அவர்களிடம், ஓணானை அடிக்காதீர்கள், உங்களை அடித்தால் உங்களுக்கு வலிக்கும் அல்லவா? அது போல அதற்கும் வலிக்கும். எனவே, உயிர்களைத் துன்புறுத்தக் கூடாது என்றாள். சற்றுச் சிந்தித்த அச்சிறுவர்கள் கற்களைக் கீழே போட்டுவிட்டுத் தங்களது செயலுக்கு வருத்தம் தெரிவித்தனர்.

1. பூமலர் யார் வீட்டிற்கு விளையாடச் சென்றாள்?

2. சிறுவர்கள் என்ன செய்து கொண்டிருந்தனர்?

3. உயிர்களைத் துன்புறுத்தக் கூடாது என்று கூறியவர் யார்?

4. இவ்வுரைப்பகுதியிலிருந்து நீ அறிந்து கொண்டது என்ன?

## பொருத்தமான சொல்லால் நிரப்புக

1.  இல்லாமல் _______________ முடியாது

2.  இல்லாமல் செடி _______________

3.  இல்லாமல் வண்டி _______________

ஓடாது

சமைக்க

வளராது



### செயல் திட்டம்

அருகில் உள்ள நூலகத்திற்குச் சென்று உனக்கு விருப்பமான சிறுவர் இதழ்களைப் படித்து அதில் உனக்குப் பிடித்த இதழ்களின் பெயர்களை எழுதி வருக.

# 9 மாட்டு வண்டியிலே...

இளமதியும் மணவாளனும் தங்களது தாத்தாவுடன் வார விடுமுறைக்கு அத்தை வீட்டிற்குச் செல்லத் திட்டமிட்டனர். சலங்கை கட்டிய மாடுகளை வண்டியில் பூட்டினார் தாத்தா. வண்டியின் மீது வைக்கோலைப் பரப்பி மேலே வெள்ளை வேட்டியினை விரித்தார். துள்ளிக் குதித்தபடி ஏறி அமர்ந்தனர் இருபிள்ளைகளும்.

'ஜல் ஜல்' எனச் சத்தமிட்டவாறு வண்டி கிராமத்துச் சாலையில் ஓடத் தொடங்கியது. சாலையின் இருமருங்கிலும் பசுமை போர்த்திய வயல்வெளிகள். தாத்தா மாடுகளை விரட்டியபடி இனிமையாகப் பாடத் தொடங்கினார்.

கழுத்துமணி தாளம் போட
சக்கரமும் சுழன்றோட
உச்சி மண்டையிலே
வெயில் காயுமுன்னே
குண்டு குழிபார்த்து
ஊர் போய்ச் சேர வேணும்
ஊர் போய்ச் சேர வேணும்
வா வா என் செல்லக்கண்ணு..........



புதிர்கள், துணுக்குகளுக்கு விடை எழுதுதல்

பாடினது போதும். ஏதாவது கதை சொல்லுங்க தாத்தா என்றனர் பிள்ளைகள். சொல்லிட்டாப் போச்சி, கதையென்ன புதிர் போடறேனே. சொல்லுங்க பார்க்கலாம்

**தாத்தா:** மூன்றாம் எழுத்து உடலின் உறுப்பு, முதலும் மூன்றும் நட்புக்கு எதிரி, ஒன்றும் இரண்டும் நிறைய தரும், மூன்றும் சேர்ந்தால் உட்கார உதவும் அது என்ன?

**இளமதி:** ம்.......... சிந்தித்துவிட்டு, 'தெரியலை' தாத்தா

**தாத்தா:** நல்லா சிந்தித்துச் சொல்லுங்க

ஓரெழுத்து உறுப்பு எது? இளமதி நீ சொல்லு

**இளமதி:** 'கை' தாத்தா

**தாத்தா:** கொஞ்சமாயிருந்தா சில ன்னு சொல்லுவோம் நிறைய இருந்தா என்ன சொல்லுவோம்?

**இளமதி:** 'பல' தாத்தா ஆங்..........

**மணவாளன்:** எனக்குப் பதில் கிடைச்சிருச்சி.......... 'பலகை' – இது சரியா தாத்தா ..........

**தாத்தா:** நல்லது மிகச்சரியான பதில், இப்ப இளமதியைக் கேட்கிறேன்...........

ஆறையும் ஐந்தையும் கூட்டினால் பணம் வராது........

ஆனா பழம் வரும் அது என்ன?





| | |
|---|---|
| இளமதி: | சற்றுச் சிந்தித்து ........... ஆங் ............ கண்டுபிடிச்சிட்டேன் ............ ஆரஞ்சுப்பழம் தானே ............. |
| தாத்தா: | சரியா சொல்லிட்டியே, செல்லக்குட்டி |
| மணவாளன்: | சரி தாத்தா ........... இப்ப நாங்க கேட்கிறோம் ..... நீங்க சொல்லுங்க, பிறக்கும்போது நிறமும் சுவையும் இல்லாத சுந்தரன், ஊருக்கு ஊர் நிறம் மாறிச் சுவை மாறுவான் அவன் யார்? |
| தாத்தா | அட, எனக்கு விடை தெரியுமே.......... |
| இளமதி: | தாத்தா பதிலைச் சொல்லுங்க. சீக்கிரம்......... |
| தாத்தா | ம் ம் ம் .... எல்லாரோட தாகத்தையும் தீர்க்கும் தண்ணீர் தானே... |
| மணவாளன்: | ஆமா! ஆமா! சரியா சொல்லிட்டிங்களே! |
| இளமதி: | தாத்தா, அத்தை வீடு வந்துவிட்டது. |
| தாத்தா | சரி, சற்றுப் பொறுங்கள் வண்டியை ஓரமாக நிறுத்துகிறேன். |

அனைவரும் வண்டியைவிட்டு இறங்கி, ஆவலுடன் வீட்டை நோக்கிச் சென்றனர்.



## வாங்க பேசலாம்

மாட்டு வண்டியில் அல்லது வேறு ஏதேனும் வாகனத்தில் வெளியூர் சென்றிருக்கிறாயா? அப்படி நீ சென்று வந்த அனுபவம் குறித்து வகுப்பறையில் கலந்துரையாடுக.



## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

### சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

1. தண்ணீர் இச்சொல்லை பிரித்து எழுதக் கிடைப்பது ......................................

   (அ) தண் + ணீர் (ஆ) தண் + நீர்

   (இ) தண்மை + நீர் (ஈ) தன் + நீர்

2. மேலே இச்சொல்லின் எதிர்ச்சொல் ......................................

   (அ) உயரே (ஆ) நடுவே

   (இ) கீழே (ஈ) உச்சியிலே

3. வயல் + வெளிகள் இதனைச் சேர்த்து எழுதக் கிடைக்கும் சொல் ....................................

   (அ) வயல்வெளிகள் (ஆ) வயவெளிகள்

   (இ) வயற்வெளிகள் (ஈ) வயல்வளிகள்

4. கதை + என்ன இதனைச் சேர்த்து எழுதக் கிடைக்கும் சொல் ......................................

   (அ) கதைஎன்ன (ஆ) கதையன்ன

   (இ) கதையென்ன (ஈ) கதயென்ன

5. வெயில் இச்சொல்லின் எதிர்ச் சொல் ......................................

   (அ) நிழல் (ஆ) பகல்

   (இ) வெப்பம் (ஈ) இருள்

# இணைக்கலாமா?

| | |
|---|---|
| அச்சாணி | பச்சை நிறம். |
| பசுமை | நெற்பயிரின் உலர்ந்த தாள் |
| வைக்கோல் | வண்டிச்சக்கரம் உருண்டு செல்ல உதவும் ஆணி |

# சொல் கோபுரம் அமைப்போம்

இதனைக் 'கரம்' என்றும் கூறலாம் [1]

பசு கொடுக்கும் பானம் [2]

ஆறுகள் சென்று சேருமிடம் [3]

வண்டியில் சக்கரம் கழன்று விழாமல் பாதுகாப்பது [4]

பாலைவனக்கப்பல் [5]

# புதிருக்குப் பொருத்தமான படங்களை மரத்திலிருந்து பறிக்கலாமா!



1. எட்டுக் கைகள் விரிந்தால் ஒற்றைக்கால் தெரியும் அது என்ன?..........................................
2. அடிமலர்ந்து, நுனி மலராத பூ என்ன பூ? ..........................................
3. கைமிலே அடங்கும் பிள்ளை, கதை நூறு சொல்லும் பிள்ளை அது என்ன? ..........................................
4. அன்றாடம் மலரும் அனைவரையும் கவரும் அது என்ன? ..........................................
5. என்னோடு இருக்கும் சிறுமணி, எனக்குத் தெரியாது ஆனால் உனக்குத் தெரியும் அது என்ன? ..........................................
6. இடி இடிக்கும், மின்னல் மின்னும், மழை பெய்யாது. அது என்ன? ..........................................
7. அடி காட்டுக்கு, நடு மாட்டுக்கு, நுனி வீட்டுக்கு அது என்ன? ..........................................
8. ஒளி கொடுக்கும் விளக்கல்ல, வெப்பம் தரும் நெருப்பல்ல, பளபளக்கும் தங்கம் அல்ல அது என்ன? ..........................................

# மொழியோடு விளையாடு

புதிர்களையும் விடைகளையும் எழுதிய அட்டைகளை வகுப்பறையின் நடுவில் வைக்க வேண்டும். மாணவர்களை அழைத்து ஒவ்வொரு மாணவனையும் ஓர் அட்டையை எடுக்கச் சொல்ல வேண்டும். புதிர் அட்டையை வைத்திருக்கும் மாணவனோடு அப்புதிருக்கான விடையை வைத்திருக்கும் மாணவன் இணைந்து நிற்க வேண்டும். அவர்கள் இருவரும் அதற்கான விளக்கத்தை அளிக்கவேண்டும். இருவரும் இச்செயலைச் செய்து முடிக்கும் கால அளவை குறித்து வைத்துக் கொள்ள வேண்டும். அடுத்த இருவர் இவ்விளையாட்டை விளையாடுவர். எவர் இருவர் குறைவான கால அளவில் இணை சேர்ந்தனரோ அவர்களே வெற்றி பெற்றவராவர். அனைத்து மாணவர்களையும் விளையாட்டில் பங்கு பெறச்செய்ய வேண்டும்.





**செயல் திட்டம்**

வீட்டில் உள்ள தாத்தா பாட்டியிடம் மூன்று புதிர்களைக் கேட்டறிந்து குறிப்பேட்டில் எழுதி வருக.

10 உண்மையே உயர்வு



கதைப்பாடல்

உப்பு மூட்டை சுமந்துதான்
கழுதை ஒன்று வந்தது
ஓடை கடக்கும் நேரத்தில்
நீரில் மூட்டை விழுந்தது

நீரில் உப்பு கரைந்தது
எடை குறைந்து போனது
நனைந்த மூட்டை அதனையே
கழுதை முதுகில் ஏற்றியே

உரிமையாளர் கழுதையை
வேகமாக ஓட்டினார்
உப்பு எடை குறைந்ததால்
கழுதை மகிழ்ந்து சென்றது.

நாள்தோறும் உப்பு மூட்டையை
கழுதை மீது ஏற்றினார்
ஓடைக் கரையில் வந்ததும்
அசைத்துக் கீழே தள்ளிடும்

எடையும் குறைந்து போய்விடும்
கழுதை மகிழ்ச்சி கொண்டிடும்
புரிந்துகொண்ட உரிமையாளர்
பாடம் புகட்ட எண்ணினார்

அடுத்த நாளும் வந்தது
பஞ்சு மூட்டை ஒன்றையே
கழுதை மீது ஏற்றினார்
ஓடைக்குள்ளே வந்ததும்

அசைத்துக் கீழே தள்ளியது
எடை குறையும் என்றுதான்
உப்பைப் போல நினைத்தது
நீரில் நனைந்த பஞ்சுகளால்

எடையும் அதிகம் ஆனது
உரிமையாளர் மூட்டையை
கழுதை முதுகில் ஏற்றினார்
கனத்த மூட்டை அழுத்தவே

கழுதை வருந்தி அழுதது
உண்மையான உழைப்புத்தான்
வாழ்வில் உயர்வைத் தந்திடும்
ஏய்த்துப் பிழைக்க எண்ணினால்
என்றுமில்லை வெற்றியே!

## பாடல் பொருள்

உரிமையாளர், தம் கழுதையின் மீது உப்பு மூட்டைகளை ஏற்றிக்கொண்டு ஓடை வழியே சென்றார். ஓடையைக் கடந்து செல்லும்போது, கழுதையின் முதுகிலிருந்த மூட்டைகள் நீரில் விழுந்தன. அதனால், உப்பு கரைந்து எடை குறைந்தது. எடை குறைவதை அறிந்துகொண்ட கழுதை, நாள்தோறும் ஓடைநீரில் மூட்டைகளை அசைத்துத் தள்ளியது. கழுதையின் ஏமாற்று வேலையைப் புரிந்துகொண்ட உரிமையாளர், அதற்குப் பாடம் புகட்ட எண்ணினார். மற்றொரு நாள் உரிமையாளர், கழுதையின் முதுகில் பஞ்சுமூட்டைகளை ஏற்றிக்கொண்டு ஓடை வழியே சென்றார். அவரை ஏமாற்ற நினைத்த கழுதை, மூட்டைகளை அசைத்து நீரில் தள்ளியது. ஆனால், நீரில் நனைந்ததால் பஞ்சுமூட்டைகளின் எடை கூடின. உரிமையாளரை ஏமாற்ற நினைத்துத் தன்னைத்தானே கழுதை ஏமாற்றிக்கொண்டது. ஆகையால், உண்மையான உழைப்பே உயர்வு தரும். பிறரை ஏமாற்றி நாம் வாழ்தல் கூடாது.



### வாங்க பேசலாம்

சுமப்பதற்கு எளிதானது பஞ்சுமூட்டையா? உப்பு மூட்டையா? குழுவில் கருத்தைப் பகிர்க.

கதைப்பாடலில் உள்ள கருத்துகளை உம் சொந்த நடையில் கூறுக.



## படிப்போம் சிந்திப்போம் எழுதுவோம்

### சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

1. 'சுமந்து' – இச்சொல்லின் பொருள் ..........................

   (அ) தாங்கி (ஆ) பிரிந்து (இ) சேர்ந்து (ஈ) விரைந்து

2. 'வேண்டுமென்று' – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ......................................

   (அ) வேண்டு + மென்று (ஆ) வேண்டும் + என்று

   (இ) வேண் + டுமென்று (ஈ) வேண்டி + என்று

3. 'நினைத்தது' – இச்சொல்லுக்குரிய எதிர்ச்சொல் ..............................

   (அ) மறந்தது (ஆ) பேசியது

   (இ) எண்ணியது (ஈ) வளர்ந்தது

E9FSZ1

## இப்பாடலில் ஒரே ஓசையில் முடியும் சொற்களைத் தெரிவு செய்து எழுதுவோமா?




## சிறு வட்டத்தில் உள்ள எழுத்தில் முடியும்படி சொற்களை உருவாக்குக.




1. ____________
2. ____________
3 ____________
4. ____________
5. ____________
6 ____________

## படக்குறியீடுகளைக் கொண்டு சொற்களைக் கண்டுபிடிக்கலாமா?




1. புன்னகை
2. ____________
3. ____________
4. ____________
5 ____________
6. ____________

## மீண்டும் மீண்டும் சொல்லலாமா?



கூவுற கோழி கொக்கரக் கோழி

கொக்கரக் கோழி கொழு கொழு கோழி

கொழு கொழு கோழி கொத்தற கோழி

தோணி மேலே கோணி

கோணி மேலே அணில்

அணில் கையில் கனி



## மொழியோடு விளையாடு

### சொற்களைக் கூறுவோம் கைகளைத் தட்டுவோம்



மாணவர்களை வட்டமாக நிற்கச் செய்க. உப்பு, உடை, உண்டியல், போன்று 'உ' எழுத்தில் தொடங்கும் சொற்களைக் கூறினால் மாணவர்கள் ஒருமுறை கை தட்டவேண்டும். கழுதை, கடை, கண் போன்ற 'க' என்ற எழுத்தில் தொடங்கும் சொற்களைக் கூறினால் இருமுறை கையைத் தட்டவேண்டும். இவை அல்லாத சொற்களைக் கூறினால் கைகளைத் தட்டக்கூடாது. இவ்வாறு எழுத்துகளை மாற்றி விளையாடிப் பார்க்கலாம்.

### செயல் திட்டம்



எளிய கதைப்பாடல்களைத் தேடிப் படித்து வந்து வகுப்பில் கூறுக.

# 11 ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு








Tamil 3rd-std_Term2.indd 6 7/29/2019 1:24:22 PM




திறன்: பண்புகளை வளர்த்தல்

**நீதிக் கருத்து : ஒற்றுமையே வலிமை**

## வாங்க பேசலாம்

- மரங்கள் விலங்குகளுக்கு மட்டுமல்ல, நமக்கும் பயன் தருகின்றன. எப்படி? உம் கருத்தை வெளிப்படுத்துக.

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

## சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

1. ஒத்துக்கொள்கிறோம் – இச்சொல்லின் பொருள் ................

(அ) விலகிக் கொள்கிறோம் (ஆ) ஏற்றுக் கொள்கிறோம்
(இ) காத்துக் கொள்கிறோம் (ஈ) நடந்து கொள்கிறோம்

2. வேட்டை+ ஆட – இச்சொல்லைச் சேர்த்து எழுதக் கிடைப்பது ..................

(அ) வேட்டையட (ஆ) வேட்டையாட
(இ) வேட்டைஆடு (ஈ) வெட்டையாட

3. மரங்களிடையே – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..............................

(அ) மரம்+ இடையே (ஆ) மரங்கள்+இடையே

(இ) மரங்கள் + கிடையே (ஈ) மரங்கல் + இடையே

4. அங்குமிங்கும் – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது .......................................

(அ) அங்கு + மிங்கும் (ஆ) அங்கும் + இங்கும்

(இ) அங்கு + இங்கும் (ஈ) அங்கும் + இங்கு

5. 'மரங்களுடன் இருந்தால் தப்பித்திருக்கலாம்' என்று கூறியது ..............................

(அ) சிங்கம் (ஆ) புலி

(இ) முயல் (ஈ) மான்

## வினாக்களுக்கு விடையளி

1. மரங்கள் எவற்றுடன் சண்டையிட்டன?
2. காட்டைவிட்டு எவை வெளியேறின?
3. விலங்குகளுக்கும் மரங்களுக்கும் போட்டிவரக் காரணம் யாது?
4. கதையின் மூலம் நீ அறிந்து கொண்டதை எழுதுக.

## புதிர்களைப் படித்து, விடையைக் கண்டறிக.

காட்டின் அரசன் ஆவான்; நெருப்பு போன்ற கண்கள் உடையவன்; முழக்கமிடுவான்– அவன் யார்?



என் உடலில் புள்ளிகள் உண்டு. நான் துள்ளித் துள்ளி ஓடுவேன். நான் யார்?



வேர்பிடித்து வளர்ந்திடுவேன்; தண்ணீரை உறிஞ்சிடுவேன்; மழைபெற உதவிடுவேன். – நான் யார்?



## எந்த மரத்திலிருந்து என்ன பொருள்? பொருத்துவோமா?



## குழுவில் சேராததை வட்டமிடுக.

1. மயில், கிளி, புறா, புலி, கோழி
2. ஆறு, ஏரி, குளம், மலை, குட்டை
3. தாயம், பல்லாங்குழி, ஐந்தாங்கல், சதுரங்கம், மட்டைப்பந்து
4. வெண்மை, கருமை, மென்மை, பசுமை, செம்மை
5. கத்தரி, வெண்டை, தக்காளி, தென்னை, மிளகாய்

## சொல் விளையாட்டு




1. ..............................................  2. ..............................................  3. ..............................................

4. ..............................................  5. ..............................................

## படம் பார்ப்போம்! பேசி மகிழ்வோம்!




பறவைகள், விலங்குகள், மரங்கள் ஆகியவற்றின் படங்களை வகுப்பின் எண்ணிக்கைக்கு ஏற்பத் தேர்ந்தெடுத்து அட்டைகளில் ஒட்டிக்கொள்ள வேண்டும். அந்த அட்டைகளை மேசையின் மேல் கவிழ்த்து வைக்கவேண்டும். வகுப்பிலுள்ள ஒவ்வொரு மாணவரையும் அழைத்து ஓர் அட்டையை எடுக்கச் செய்யவேண்டும். அந்த அட்டையில் என்ன படம் வருகிறதோ, அதனைப்பற்றி மூன்று தொடராவது பேசச் சொல்லவேண்டும். அவரை வகுப்பிலுள்ள மற்ற மாணவர்கள் பாராட்ட வேண்டும்.





### சிந்திக்கலாமா?



விலங்குகளின் இருப்பிடம் காடுகள். காடுகளை அழித்து, அடுக்குமாடிகளும் தொழிற்சாலைகளும் கட்டினால், விலங்குகள் எங்குச் செல்லும்? உணவுக்கு என்ன செய்யும்? இதற்கென்ன தீர்வு?

# 12 கல்வி கண் போன்றது

விரியூர் கிராமத்திலுள்ள ஊராட்சி மன்ற அலுவலகத்தில் அன்று கிராமசபைக் கூட்டம். வீட்டிற்கு ஒருவர் கூட்டத்தில் கட்டாயம் கலந்து கொள்ளவேண்டும் என்று தண்டோரா போட்டு அறிவிக்கப்பட்டிருந்தது. அறிவிப்பைக் கேட்ட பொன்வண்ணன், தம் கடையைப் பூட்டிவிட்டுக் கூட்டத்திற்குச் சென்றார்.

ஊராட்சி மன்றத் தலைவர் கூட்டத்திற்கு வந்திருந்தவர்களை வரவேற்றுப் பேசினார். சிறுதொழில் தொடங்குவதற்கான உதவித்தொகை வழங்கும் அரசின் திட்டம் குறித்துப் பேசினார். இத்திட்டத்தின்கீழ் யார் யாருக்கெல்லாம் உதவித்தொகை வந்திருக்கிறதோ அவர்களின் பெயர்களைப் படித்தார்.

பொன்வண்ணன் தம்முடைய பெயர் வருகிறதா என ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

ஆனால், கடைசி வரை அவர் பெயர் வரவேயில்லை.



பொன்வண்ணன், தலைவரிடம் சென்றார். "ஐயா! எனக்கு ஏன் உதவித்தொகை இல்லை? நானும் பண வசதியில்லாமல் மிகவும் துன்பப்படுகிறேனே….." என்று கேட்டார்.

"யாருக்கெல்லாம் பண உதவி தேவையோ, அவர்களுக்கான கூட்டம் பற்றி உங்களுக்கு அஞ்சல் மூலம் தெரிவித்து இருந்தோமே.! நீங்கள் ஏன் கலந்து கொள்ளவில்லை?" என்றார் தலைவர்.

"ஆமாம். போன வாரம் அஞ்சல்காரர் கொடுத்தார். படிக்கத் தெரியாததால் அப்படியே வைத்துவிட்டேன்".

"என்னப்பா! உனக்குத்தான் படிக்கத் தெரியல, ஆனா, உம்பையன்தான் பள்ளியிலே படிக்கிறானே, அது எப்படித் தெரியாமல் போகும்?



பொன்வண்ணன் சற்றுக் குற்ற உணர்வோடு தலை குனிந்தபடி கூறினார், "ஐயா! நான் மிதிவண்டி பழுதுபார்க்கும் கடை வைத்திருக்கிறேன். எனக்கு உதவி

செய்வதற்காக, அவனை அடிக்கடி பள்ளிக்கு விடுப்பு எடுக்கச் சொல்வேன். சில சமயங்களில் தொடர்ந்து பள்ளிக்குச் செல்ல இயலாத சூழ்நிலை ஏற்பட்டுவிடும். அதனால்தானோ என்னவோ அவனுக்குச் சரியாக எழுதவும் படிக்கவும் தெரியாமலே போய்விட்டது. அவனுடைய ஆசிரியரும் இதைப்பற்றி என்னிடம் அடிக்கடி சொல்லி வருத்தப்படுவார். பள்ளிக்குத் தொடர்ந்து அனுப்புமாறு அறிவுரையும் கூறுவார். நான்தான் தப்பு செய்துவிட்டேன். என் மகனை இப்படிப் படிக்கத் தெரியாதவனாக ஆக்கிவிட்டேன்." என்று வருத்தத்துடன் கூறினார் பொன்வண்ணன்.

"உங்கள் அறியாமையால் இப்போது என்னவாயிற்று பார்த்தீர்களா? அரசின் உதவித் தொகையை உங்களால் பெற முடியாமல் போய்விட்டதே. கல்வி அறிவு இருந்தால்தான் நாள்தோறும் நம்மைச் சுற்றி நடக்கும் நிகழ்ச்சிகளையும் அறிவியல் மாற்றங்களையும் அறிந்து கொள்ள முடியும். நம்மையும் மேம்படுத்திக் கொள்ள முடியும். கல்வி, தொழிலுக்கு வழிகாட்டுகிறது. வாழ்க்கையை நெறிப்படுத்த உதவுகிறது. இப்போதாவது புரிந்து கொண்டீர்களா?

"ஐயா! இப்ப நான் நன்கு புரிந்து கொண்டேன். நான்தான் கல்வி கற்காமல் இருந்து விட்டேன். என் மகனாவது நன்கு படித்து வாழ்வில் முன்னேறட்டும். இனி நான் என் மகனை வேலைக்காகப் பள்ளியைவிட்டு நிறுத்த மாட்டேன். இப்போதே என் மகனை அழைத்துச் சென்று தலைமை ஆசிரியரிடம் மீண்டும் பள்ளியில் சேர்த்துக்கொள்ளுமாறு நான் வேண்டிக்கொள்வேன்.

புரிந்து கொண்டால் சரிதான். உங்களுக்கு ஏற்பட்ட இந்த அனுபவத்தால நீங்க மட்டும் தெரிந்துகொண்டால் போதாது. நம் கிராமத்தினர் அனைவருமே அறியாமை நீங்கி, கல்வி குறித்த விழிப்புணர்வு பெறவேண்டும்.

கல்வியின் தேவையை எடுத்துக்கூறிய ஊராட்சி மன்றத் தலைவருக்கு, நன்றி கூறிவிட்டு அங்கிருந்து சென்றார் பொன்வண்ணன்.



## வாங்க பேசலாம்

படிக்கத் தெரியாதவர் ஒருவர் பேருந்தில் ஊருக்குச் செல்கிறார். அவருக்கு ஏற்படும் சிக்கல்களைக் குழுவில் கலந்துரையாடுக.



## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்

### சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

1. 'துன்பம்' – இச்சொல்லின் எதிர்ச்சொல் ..........................................

   (அ) இன்பம் (ஆ) துயரம்

   (இ) வருத்தம் (ஈ) கவலை

2. 'உதவித் தொகை' இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..........................................

   (அ) உதவ + தொகை (ஆ) உதவிய + தொகை

   (இ) உதவு + தொகை (ஈ) உதவி + தொகை

3. 'யாருக்கு + எல்லாம்' இச்சொற்களைச் சேர்த்து எழுதக் கிடைப்பது ..........................................

   (அ) யாருக்கு எலாம் (ஆ) யாருக்குல்லாம்

   (இ) யாருக்கல்லாம் (ஈ) யாருக்கெல்லாம்

4. வாழ்க்கையை நெறிப்படுத்த உதவுவது ...................

   (அ) பணம் (ஆ) பொய்

   (இ) தீமை (ஈ) கல்வி

I3DU6Z

5. 'தண்டோரா' என்பதன் பொருள் தராத சொல் ....................................

   (அ) முரசுஅறிவித்தல் (ஆ) தெரிவித்தல்

   (இ) கூறுதல் (ஈ) எழுதுதல்

### வினாக்களுக்கு விடையளி

1. 'தண்டோரா' மூலம் என்ன செய்தி அறிவிக்கப்பட்டது?
2. ஊராட்சி மன்றத்தலைவர் கிராமசபைக் கூட்டத்தில் எதனைக் குறித்துப் பேசினார்?
3. பொன்வண்ணனுக்கு உதவித்தொகை ஏன் கிடைக்கவில்லை?

### அகர முதலியைப் பார்த்து பொருள் எழுதுக.

1. ஆவல் – ___________ 2. தபால் – ___________

3. தண்டோரா – ___________ 4. நெறிப்படுத்துதல் – ___________

## சரியான சொல்லால் நிரப்புக.

1. மக்கள் கிராமசபைக் கூட்டத்தில் _____________(களந்து/கலந்து) கொள்ள வேண்டும்.
2. கல்வி ____________ ( கன்/கண்) போன்றது.
3. நான் மிதிவண்டி ___________ (பளுதுபார்க்கும்/பழுதுபார்க்கும்) கடை வைத்திருக்கிறேன்.
4. ஆசிரியர், மாணவனை பள்ளிக்குத் தொடர்ந்து அனுப்புமாறு ____________ (அரிவுரை/அறிவுரை) கூறினார்.

## உன்னை அறிந்துகொள்

குழந்தைகளை வேலைக்கு அமர்த்துவது சட்டப்படி குற்றமாகும். இதனை வலியுறுத்தும் விதமாக குழந்தைத்தொழிலாளர் ஒழிப்புநாள் ஆண்டுதோறும் ஜூன் 12 அன்று கடைப்பிடிக்கப்படுகிறது.

## எதனை, எங்கே செய்வோம்?

| | |
|---|---|
| கல்வி கற்கச் செல்வோம் | பேருந்து நிலையம் |
| பாதுகாப்பு தேடிச் செல்வோம் | மருத்துவ மனை |
| மருத்துவம் பார்க்கச் செல்வோம் | காவல் நிலையம் |
| அஞ்சல்தலை வாங்கச் செல்வோம் | பள்ளிக்கூடம் |
| பயணம் செய்யச் செல்வோம் | அஞ்சல் நிலையம் |

## சொல் விளையாட்டு

மயில் தோகையில் உள்ள எழுத்துகளைக் கொண்டு சொற்களை உருவாக்குக.

1. ____சுற்றம்____
2. __________
3. __________
4. __________
5. __________
6. __________




## பாடி மகிழ்வோம்



## உனக்குச் சரியானவற்றை எடுத்துக்கொண்டு உயர்ந்து செல்






### சிந்திக்கலாமா?

வளர்மதியும் பொன்மணியும் நல்ல தோழிகள். பொன்மணி சொற்களைத் தெளிவாகவும் அழகாகவும் எழுதுவாள். வளர்மதி சொற்களைத் தெளிவில்லாமல் எழுதுவாள்.

இதனைப்பற்றி உங்கள் கருத்து என்ன?

# 13 திருக்குறள் கதைகள்

ENPRYP

## சரியான தீர்ப்பு

முன்பொரு காலத்தில் மரியாதைராமன் என்பவர் வாழ்ந்து வந்த ஊரில் வளவன் என்பவன் மளிகைக் கடை வைத்து வாணிகம் செய்து வந்தான்.

வளவன் பணம் ஈட்டுவதை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டவன். யாருக்கும் கொடுத்து உதவமாட்டான். அரசுக்கும் முறையாக வரி செலுத்துவதில்லை.

இந்நிலையில், மரியாதைராமன் அவ்வூரின் புதிய நீதிபதியாக நியமிக்கப்பட்டார். மரியாதைராமன் வளவனின் இளம்வயது நண்பன். அதனால், நீதிபதி தனது நண்பன் என, வளவன் ஊர் முழுவதும் கூறிவந்தான். முறையாக வரி செலுத்தாதவர்களின் பட்டியல் நீதிபதியிடம் ஒருநாள் வழங்கப்பட்டது. நீதிபதியின் ஆட்கள் வளவனை அழைத்துச் சென்றனர். நீதிபதி தனது நண்பனாயிற்றே, தனக்குத் தண்டனை தரமாட்டார் என எண்ணியவாறே மகிழ்ச்சியாகச் சென்றான் வளவன். வளவனின் நண்பன் என்பதால் மரியாதைராமனும் எப்படித் தீர்ப்பு வழங்குவாரோ என அவரது



பண்பையும் நேர்மையையும் மக்கள் சந்தேகப்பட்டனர். ஆனால், மரியாதைராமன், நண்பனாக இருந்தாலும் தவறு செய்தவன் என்பதால், முறைப்படி அவனுடைய பொருள்களை அரசாங்கக் கருவூலத்தில் சேர்த்திடச் செய்தார். மேலும், வளவனுக்கு ஆறுமாதக் கடுங்காவல் தண்டனையும் வழங்கி உத்தரவிட்டார்.

எவ்விதச் சார்பும் இன்றி நடுவு நிலைமையோடு தீர்ப்பு வழங்கிய மரியாதைராமனை அனைவரும் பாராட்டினர்.

### குறள்

தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தாற் காணப் படும்.

நடுவுநிலைமை, குறள் 114

### விளக்கம்

ஒருவர் நடுவுநிலைமை உடையவர், இல்லாதவர் என்பது அவருக்குப்பின் நிலைத்து நிற்கும் புகழாலும் பழியாலும் அறியப்படும்.

## காலத்தே பயிர் செய்

முன்னொரு காலத்தில் மலைச்சாமி என்ற ஏழை விவசாயி, இலந்தைக்குட்டை என்ற கிராமத்தில் வாழ்ந்து வந்தான். அவனுக்கென்று சொந்தநிலம் ஏதும் கிடையாது. ஆனால், விவசாயம்தான் சோறு போடும் என்பதை ஆணித்தரமாக நம்பினான். அதே ஊரில் வசித்துவரும் மாதையன் என்ற செல்வந்தனின் நிலத்தைக் குத்தகைக்குக் கேட்டான். அச்செல்வந்தனும் சில நிபந்தனைகளுடன் தன் நிலத்தில் விவசாயம் செய்ய அனுமதிப்பதாகக் கூறினான். அதனை ஒப்புக்கொண்ட விவசாயி செல்வந்தனின் நிலத்தில் விவசாயம் செய்யத் தொடங்கினான். அச்செல்வந்தன் விவசாயியின் உழைப்பைச் சுரண்டுவதிலேயே குறிக்கோளாய் இருந்தான். இருந்தபோதிலும் மலைச்சாமி நேர்மையானவனாகவும், புத்திசாலியாகவும் இருந்ததால் செல்வந்தனிடம் ஏமாறவில்லை.



ஒருமுறை செல்வந்தன் விவசாயியிடம் குத்தகைக்கு ஈடாக "மண்ணுக்கு மேலே விளைபவை எனக்கு, மண்ணுக்குக் கீழே விளைபவை உனக்கு" என்று கட்டளையிட்டான். புத்திக்கூர்மையுடன் விவசாயி நிலக்கடலை பயிரிட்டதால் விவசாயிக்கே இலாபம் கிட்டியது. ஏமாற்றமடைந்த செல்வந்தன் அடுத்தமுறை விவசாயியை ஏமாற்ற எண்ணி நிபந்தனையை மாற்றினான். இம்முறை "மண்ணுக்குக் கீழே விளைபவை எனக்கு, மண்ணுக்கு மேலே விளைபவை உனக்கு" என்றான். ஆராய்ந்த விவசாயி இம்முறை நெல் பயிரிட்டான். இம்முறையும் விவசாயிக்கே இலாபம், ஏமாற்றத்துடன் வீடு திரும்பினான் செல்வந்தன். அதனால் எவ்விடத்து எதை, எப்படி, எக்காலத்தில் செய்ய வேண்டும் என்பதை அறிந்து செய்தால் உலகையே வென்று விடலாம்.

### குறள்

ஞாலம் கருதினும் கைகூடும் காலம்
கருதி இடத்தாற் செயின்

காலமறிதல், குறள் 484

### விளக்கம்

செயலை முடிப்பதற்கு ஏற்ற காலத்தை அறிந்து இடத்தோடு பொருந்துமாறு செய்தால் உலகமே வேண்டும் எனக் கருதினாலும் அது கைகூடும்

## அன்பெனும் அருங்குணம்



அழகிய ஒரு காட்டில் பெரிய மரம் ஒன்று இருந்தது. அம்மரத்தில் பறவைகளும் விலங்குகளும் வாழ்ந்து வந்தன. அங்கு இருந்த கரடி மட்டும் சேட்டைகள் பல செய்து வாழ்ந்தது. பறவையின் கூட்டை எட்டிப்பார்க்கும். குஞ்சுகள் என்றும் பாராமல் "இதோ உங்களைத் தூக்கி எறிகிறேன் பாருங்கள்" என்று கூட்டைப் பிய்த்து எறியும். குரங்குகள் வந்தால் தங்கவே இடம் தராமல் துரத்தி விட்டுவிடும். சில சமயங்களில் குட்டிக் குரங்குகளின் தலையில் குட்டு வைக்கும். அவை தலை வீங்கி அழுவதைப் பார்த்து சிரிக்கும். இவ்வாறு யாரிடமும் அன்பு காட்டாமல் வெறுப்புடனே நடந்து கொள்ளும். அதனால் பறவைகளும் குரங்குகளும் வேறு மரத்திற்கே சென்றுவிட்டன. ஒரு முறை வேடன் ஒருவன் விரித்து வைத்திருந்த வலையில் எதிர்பாராமல் கரடி சிக்கிக்கொண்டது. அது காடே அதிரும் வகையில் சத்தமிட்டு அலறியது. வேடன் விரித்த வலையிலிருந்து தன்னைக் காப்பாற்றும்படி கதறியது. ஆனால், ஒருவரையும் காணோம். தான் யாரிடமும் அன்பு காட்டாமல் இருந்ததுதான் இந்த நிலைமைக்குக் காரணம் என்பதை உணர்ந்து ஓவென அழுதது. இவ்வேளையில் கரடியின் சத்தம் கேட்டு வந்த பறவைகள், வேடனைக் கொத்திக் கொத்தித் துரத்தின. குரங்குகள் வலையைப் பிய்த்துக் காப்பாற்றின. அன்றுமுதல் கரடி எல்லாரிடமும் அன்பு செலுத்தத் தொடங்கியது.

### குறள்

என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம்

அன்புடைமை, குறள் 77

### விளக்கம்

எலும்பு இல்லாத உயிரை வெயில் காய்ந்து வருத்தும். அதுபோல அன்பு இல்லாத உயிர்களை அறம் வருத்தும்.

## கல்வியே நமது செல்வம்



ஓர் ஊரில் முத்தன் என்பவர் வாழ்ந்து வந்தார். சொந்தத் தொழிலில் ஈடுபட்டுக் கடினமாக உழைத்துச் செல்வந்தராக உயர்ந்தார். அவருக்கு இனியன், மதியழகன் என்ற இரண்டு பிள்ளைகள். பிள்ளைகள் இருவருக்கும் கல்விக்கு முதன்மை அளிக்காமல், தொழிலில் ஈடுபடுத்த எண்ணினார். ஆனால், தந்தையின் ஆலோசனையையும் மீறி கல்லூரி வரை இருவரும் படித்து முடித்தனர். முத்தனுக்குக் கல்வியின் மேல் பெரிய ஈடுபாடோ, விருப்பமோ கிடையாது. ஆகவே, சரியாகக் கல்வி கற்காத முத்தனை அவரது வியாபாரக் கூட்டாளிகள் ஏமாற்றி விட்டனர். இதனால் வீடு, வயல், ஆடுமாடுகள் எனச் செல்வத்தை இழந்து ஒருவேளை உணவுக்கே துன்பப்படும் நிலைக்கு அவரும் அவரது குடும்பத்தினரும் ஆளாகினர்.

முத்தனின் பிள்ளைகள் இருவரும் இனியும் தாமதிக்கக் கூடாது என எண்ணிப் பல நிறுவனங்களுக்கு வேலை வேண்டி விண்ணப்பித்தனர். உரிய கல்வித்தகுதி பெற்றிருந்ததால், இருவருக்கும் நல்ல வேலை கிடைத்தது.

சில நாள்களிலேயே குடும்பத்தின் வறுமை நீங்கியது. முத்தன் கல்வியின் சிறப்பினை உணர்ந்து தமது கருத்தினை மாற்றிக்கொண்டார்.

### குறள்

கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை

கல்வி, குறள் 400

### விளக்கம்

ஒருவருடைய நிலைத்த செல்வம் என்பது அவர் கற்ற கல்வியே ஆகும். அதனைத் தவிர வேறு எந்த செல்வமும் நீடித்து இருக்காது.

## உண்மையான அணிகலன்கள்



முதியவர் ஒருவர் ஆலமரத்தடியில் அமர்ந்து இளைப்பாறிக் கொண்டிருந்தார். பக்கத்து ஊருக்குச் செல்வதற்காக அவ்வழியே செல்வந்தர் ஒருவர் வந்தார். அவர் அந்த முதியவரைப் பார்த்து, "என்னையா இவ்வழியே போனால் பருத்தியூர் போய்ச் சேரலாமா?" என்று ஆணவத்துடன் ஓங்கிய குரலில் கேட்டார். அதற்கு அந்த முதியவர் எனக்குத் தெரியாது என்று பதிலளித்தார். முணுமுணுத்துக் கொண்டே அந்தச் செல்வந்தர் அவ்விடத்தைவிட்டு நகர்ந்தார். சற்றுநேரத்தில் மற்றொருவர் ஏராளமான ஆபரணங்கள் அணிந்துகொண்டு அங்கு வந்தார். அவர், "என்ன முதியவரே, இந்த வழியே யாரேனும் சற்றுநேரத்திற்கு முன் போனார்களா?" என்று கேட்டார். அதற்கு முதியவர் எனக்குத் தெரியாது என்று அமர்ந்தபடியே பதில் கூறினார். எனக்கு ஊரில் எவ்வளவு செல்வாக்கு உள்ளது தெரியுமா? நான் கேட்கும்போது எழுந்து பதில் கூறமாட்டாயா?" என்று முதியவரைக் கடிந்து கொண்டு சென்றார் அவர்.

மூன்றாவதாக இளைஞன் ஒருவன் அவ்வழியே வந்து முதியவரிடம் "ஐயா, வணக்கம். நான் வழி தவறி இங்கே வந்துவிட்டேன். எனக்குப் பருத்தியூர் செல்வதற்கு அருள்கூர்ந்து வழி கூறுங்கள்" என்றான். முதியவரும் உரிய வழியைக் கூறினார். "ஐயா, தங்களுக்கு ஏதேனும் உதவி வேண்டுமா?"என்று கேட்டான் அந்த இளைஞன். அதற்கு அந்த முதியவர், "வேண்டா" என மறுத்துக் கூறினார். பின்னர், இதுவரை அங்கு நடந்ததைக் கூறி, "தம்பி, நாம் எவ்வளவுதான் செல்வச்செழிப்புடன் இருந்தாலும் பணிவுடைமையே நமக்குச் சிறந்த பண்பு"என்று கூறி, அந்த இளைஞனை வாழ்த்தி அனுப்பினார்.

### குறள்

பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற.

இனியவை கூறல், குறள் 95

### விளக்கம்

பணிவு உடையவராகவும் இனிமையான சொற்கள் பேசுபவராகவும் இருப்பதே ஒருவருக்கு மிகச்சிறந்த அணிகலன். மற்றவையெல்லாம் உண்மையான அணிகலன்கள் ஆகா.

## ஆசிரியர் குறிப்பு

திருக்குறளை இயற்றியவர் திருவள்ளுவர். இவர் இயற்றிய இந்நூல், எக்காலத்துக்கும் ஏற்ற அறவுரைக் கருத்துகளைக் கொண்டுள்ளது. இந்நூலில் அறம், பொருள், இன்பம் என மூன்று பிரிவுகள் உள்ளன. 133 அதிகாரங்களும் அதிகாரத்திற்குப் பத்துக் குறளென 1330 குறட்பாக்களும் உள்ளன. ஒவ்வொரு குறட்பாவும் ஈரடியால் ஆகிய வெண்பாவாகும்.



### வாங்க பேசலாம்

- உமக்குப் பிடித்த திருக்குறள் கதையை உமது சொந்த நடையில் கூறுக.

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

### சரியான விடையைத் தெரிவு செய்வோமா?



TA65S8

1. ஞாலம்– இச்சொல்லுடன் பொருந்தாத சொல் ......................................

(அ) உலகம் (ஆ) வையகம்

(இ) புவி (ஈ) மலை

2. கீழ்க்காணும் சொற்களுள் மாறுபட்ட பொருள் தருவது ......................................

(அ) அறம் (ஆ) தீமை

(இ) கொடை (ஈ) ஈகை

3. 'என்பு' இச்சொல்லிற்குப் பொருத்தமான சொல் ......................................

(அ) முகம் (ஆ) எலும்பு

(இ) கை (ஈ) கால்

4. 'நல்ல + செயல்' இச்சொற்களைச் சேர்த்து எழுதக் கிடைப்பது ..................

(அ) நல்லசெயல் (ஆ) நல்செயல்

(இ) நற்செயல் (ஈ) நல்லச்செயல்

5. 'இன்சொல்' இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ......................................

(அ) இனிமை + சொல் (ஆ) இன்+ சொல்

(இ) இன்மை + சொல் (ஈ) இனிமை+ செல்

## குறட்பாக்களில் இரண்டாம் எழுத்து ஒன்றுபோல் வரும் சொற்களை எடுத்து எழுதுக

____________ ____________

____________ ____________

## முறைமாறி உள்ள சீர்களை வரிசைப்படுத்தி எழுதுக

இன்சொலன் பணிவுடையன் ஒருவற்கு ஆதல்

பிற மற்றுப் அணியல்ல

__________________________________

__________________________________

தகவிலர் தக்கார் அவரவர் என்பது

படும் எச்சத்தாற் காணப்

__________________________________

__________________________________

## பாடி மகிழ்வோம்

கடலோரத்தில் அலை உருளுது பிரளுது

தத்தளிக்குது தாளம் போடுது.

கொக்கு நெட்ட கொக்கு

நெட்ட கொக்கு இட்ட

முட்ட கட்ட முட்ட

இலந்தப் பழத்திற்கு ஆசப்பட்ட கொழந்த

வாழப்பழம் தின்றது.

## குழு விளையாட்டு

ஞாலம் | அறம் | அணி | என்பு | கேடில் | எலும்பு | உலகம்

அணிகலன் | அழிவில்லாத | தருமம்

மேற்கண்ட சொற்களை ஓர் அட்டையிலும் அவற்றிற்குரிய பொருள்களை வேறு அட்டையிலும் எழுதி வைத்துக் கொள்க. மாணவர்களை இரு குழுவாகப் பிரிக்க. ஒரு குழு அட்டையில் எழுதிய சொற்களைக் கூற, மற்றொரு குழு அவற்றிற்குரிய சரியான பொருளைக் கூறவேண்டும்.

இதே போல் குழுக்களை மாற்றிச் சொற்களைக் கூறச்செய்து, அவற்றின் பொருளைக் கூறச்செய்க.

சரியாகச் செய்யும் குழுவைக் கைகளைத் தட்டி பாராட்டச் செய்க. இதுபோன்று தொடர்ந்து புதிய சொற்களை வைத்து விளையாடச் செய்க.



### செயல் திட்டம்

திருக்குறள் ஓலைச்சுவடி உருவாக்கி, அதில் பத்துக் குறள்களை எழுதி வருக.

# 14 வாலு போயி கத்தி வந்தது! டும் ... டும்... டும் ... டும்

LH2WEA








Tamil 3rd-std_Term2.indd 27 7/29/2019 1:24:44 PM



பிறகு ஓணான், மோர் விற்கும் பெண்ணை வழியில் பார்த்தது
பெண்ணே பசியா? இந்தா, தோசையைச் சாப்பிடு.
மோர் விற்கும் பெண் தோசையைச் சாப்பிட்டு முடித்தாள்
ஓ… தோசை முழுவதையும் சாப்பிட்டு விட்டாயா ?
பெண்ணே என் தோசையைத் தருகிறாயா? இல்லை, பானையைத் தருகிறாயா?
பானையை ஓணான் பெற்றுக்கொண்டது
இந்தா… என் பானையை வைத்துக்கொள்.
வழியில் தோட்டக்காரரைப் பார்த்த ஓணான்,
தோட்டக்காரரே, தண்ணீர் எடுத்து ஊற்றுவதற்கு இந்தப் பானையை வைத்துக்கொள்…
தோட்டக்காரர் செடிகளுக்கு நீரூற்றும்போது பானை உடைந்துவிட்டது
ஆ! என் பானை உடைந்து போயிற்றே!
என் பானையைத் தருகிறாயா? இல்லை, பூவைத் தருகிறாயா?
இந்தா … பூக்களைத் தருகிறேன், எடுத்துக்கொள்
















**நீதிக் கருத்து:**

**துன்பம் வரும் வேளையில் மனம் சோர்வு அடையக்கூடாது.**

## வாங்க பேசலாம்

- 'டும்...டும்...டும்... டும்' படக்கதையை உமது சொந்த நடையில் கூறுக.
- வாரஇதழ்களில் வரும் படக்கதையைப் படித்த அனுபவம் உண்டா? ஆம் எனில், அக்கதையைப் பற்றி கூறுக.

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்

### சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

1. விறகெல்லாம் – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ........................................

(அ) விறகு + எல்லாம் (ஆ) விறகு + கெல்லாம்

(இ) விற + கெல்லாம் (ஈ) விறகு + எலாம்

2. 'படம் + கதை' – இச்சொற்களைச் சேர்த்து எழுதக் கிடைப்பது ........................................

(அ) படம்கதை (ஆ) படக்கதை

(இ) படகதை (ஈ) படகாதை

3.  – இப்படத்திற்கு உரிய சொல்லைக் கண்டறிக. ....................

(அ) ஓனான் (ஆ) ஓநான்

(இ) ஓணான் (ஈ) ஓணன்

4. தோசை– இச்சொல்லின் ஒலிப்புடன் தொடர்பில்லாத சொல் எது? ..................................

(அ) ஆசை (ஆ) மேசை

(இ) பூசை (ஈ) கல்

### வினாக்களுக்கு விடையளி

1. ஓணான் எதற்காக உழவரிடம் சென்றது?
2. தோட்டக்காரர் ஓணானிடம் என்ன கூறினார் ?
3. கதையில் ஓணான் பெற்று வந்த பொருள்களைக் கூறுக.
4. படக்கதையிலிருந்து நீ அறிந்து கொண்ட கருத்து யாது?

WNU7ZI

## புதிருக்குப் பொருத்தமான படத்தைப் பொருத்துக.





ஊர்கூடி என்னை இழுத்தால்தான்

நான் அசைந்து வருவேன்– நான் யார்?

இடிஇடிக்கும்; மின்னல் மின்னும்;

மழை பெய்யாது. – அது என்ன?





நிழல் தருவேன் காய் தருவேன்
பழம் தருவேன். –நான் யார்?

'கலை' என்ற சொல்லில் முதல் எழுத்து

'படம்' என்ற சொல்லில் இடை எழுத்து

'மடல்' என்ற சொல்லில் இறுதி எழுத்து– நான் யார்?

## சொல் விளையாட்டு

ஒரு சொல்லில் உள்ள ஏதாவது ஓர் எழுத்தைக்கொண்டு, புதிய சொற்களை உருவாக்கி மகிழ்க.

பா [த] ம் → தங் [க] ம் → க [த] வு → தலை [வ] ர் →

இதே போன்று ஒட்டகம், குருவி, சிங்கம், கவிதை போன்ற சொற்களைத் தொடக்கமாக வைத்துச் சொற்களை உருவாக்குக.

## அறிந்து கொள்வோம்

உலக கதைசொல்லல் நாள் – மார்ச் 20

# 15 எழில் கொஞ்சும் அருவி

(அங்கவை, சங்கவை இருவரும் சித்தப்பா, சித்தி வீட்டிற்குச் செல்கிறார்கள்)




**சித்தி** வாருங்கள், செல்லங்களே! வீட்டில் எல்லாரும் நலமா?

**அங்கவை**
**சங்கவை** நலமாய் உள்ளோம் சித்தி, நீங்கள் நலமா?

**சித்தப்பா** நீங்கள் இருவரும் கல்விச் சுற்றுலா சென்று வந்தீர்களாமே! அதைப் பற்றிக் கூறுங்கள் கேட்போம்.

**அங்கவை** நாங்கள் தருமபுரி மாவட்டத்தில் உள்ள வரலாற்றுச் சிறப்புமிக்க ஒகேனக்கல் அருவிக்குப் போய்வந்தோம். அதைப் பற்றிக் கூறுகிறேன். கேளுங்கள்.

**சங்கவை** எழில் கொஞ்சும் மலையில் உள்ள அந்த அருவி, பென்னாகரம் ஊராட்சி ஒன்றியத்திலிருந்து 16 கி.மீ. தூரத்தில் உள்ளது. கடல் மட்டத்திலிருந்து 1500 அடி உயரத்தில் உள்ளது.

**சித்தப்பா** மலையின் உச்சியிலிருந்து வெள்ளியை உருக்கி ஊற்றியது போல பேரிரைச்சலுடன் கீழ் நோக்கி விழும் அருவி பார்க்க பார்க்க அழகு, இல்லையா?

அங்கவை ஆம் சித்தப்பா அழகோ, அழகு

சித்தப்பா அதற்கு ஒகேனக்கல் என்ற பெயர் எப்படி வந்ததாம்? தெரிந்து கொண்டீர்களா?

அங்கவை ஒகேனக்கல் என்பதற்குப் புகையும் கல்பாறை எனப்பொருள். கன்னடத்தில் ஒகே என்பது புகை ஆகும். அருவிநீர் கல்பாறையில் பட்டுத் தெறித்து, வெண்புகை போலத் தோற்றம் அளிப்பதால் தான் இப்பெயர் வந்தது. காவேரி ஆறு கர்நாடகத்திலுள்ள குடகுமலையில் தோன்றி இங்குதான் தமிழ்நாட்டு எல்லைக்குள் நுழைகிறது



சங்கவை உல்லாசப் பயணிகளைப் பெரும் ஆரவாரத்தோடு வரவேற்கும் அருவியில் தண்ணீர் கொட்டும் காட்சி அற்புதமாக இருக்கும்.

சித்தி அவ்விடத்திற்கு எதன் மூலம் பயணம் செய்தீர்கள்?

சங்கவை இந்தக் கண்கொள்ளாக் காட்சியினை கண்டுகளிக்க பரிசலில் சென்றோம். என்னே அருமை! 100 அடி உயரத்திலிருந்து விழும் அருவியில் குளித்தது மகிழ்ச்சியாக இருந்தது.



சித்தப்பா பரிசலில் செல்லும் வழியில் என்னென்ன பார்த்தீர்கள்?

அங்கவை மலை நடுவே பாதையமைத்து அருவி நீர் ஓடும் காட்சி வெண்ணெய் உருகுவது போல தெரிந்தது. இந்தப் பரிசலில் பயணம் சென்றது எங்களை ஆனந்தக் களிப்பில் ஆழ்த்தியது.

சங்கவை இரு மலைகளுக்கு இடையே தொங்குபாலத்தில் சென்றோம்.

அங்கவை நாங்கள் எல்லாரும் நீராடி விட்டு, மீண்டும் பரிசலில் கரைக்கு வந்தோம். உணவு உண்டபின், மான்பூங்காவிற்குச் சென்றோம். துள்ளித்திரியும் மான் கூட்டம், முதலைப் பண்ணை முதலியவற்றைப் பார்த்தோம்.

சங்கவை சித்தி, அங்கே மிகப் பழைமையான தேசநாதீஸ்வரர் கோவில் உள்ளது. அது அதியமான் காலத்தைச் சேர்ந்தது என்பதைக் கல்வெட்டைப் படித்து, அறிந்து கொண்டோம்.

**சித்தப்பா** பாராட்டுகள், குழந்தைகளே! அருவியின் அழகை கண்டுகளித்தது மட்டுமின்றி, அங்குள்ள பொதுஅறிவுச் செய்திகளையும் திரட்டியிருக்கிறீர்கள்.

**சித்தி** நன்றி குழந்தைகளே! எங்களுக்கும் ஒகேனக்கலை நேரே சென்று பார்த்த பரவசத்தை உண்டாக்கி விட்டீர்கள்! நாமும் குடும்பத்துடன் ஒருமுறை சென்று வருவோம்.





## வாங்க பேசலாம்

- நீ வசிக்கும் பகுதியில் அல்லது மாவட்டத்தில் ஏதேனும் சுற்றுலாத்தலம் சென்று வந்துள்ளாயா? உனது அனுபவத்தை வகுப்பில் பகிர்ந்துகொள்.



# படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

## சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

1. ஒகேனக்கல் அருவியில் நீர் வீழ்வது ...................................... உருக்கி ஊற்றுவது போல் இருந்தது.

(அ) தங்கத்தை (ஆ) வெள்ளியை

(இ) இரும்பை (ஈ) கற்பாறையை

PVQYLK

2. 'ஒகேனக்கல்' என்ற சொல்லின் பொருள் ......................................

(அ) பவளப்பாறை (ஆ) வழுக்குப்பாறை

(இ) பனிப்பாறை (ஈ) புகைப்பாறை

3. 'வெண்புகை' என்ற சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ................................

(அ) வெண் + புகை (ஆ) வெ + புகை

(இ) வெண்மை + புகை (ஈ) வெம்மை + புகை

4. பாதை + அமைத்து – இச்சொற்களைச் சேர்த்து எழுதக் கிடைப்பது. ..................................

(அ) பாதைஅமைத்து (ஆ) பாதையமைத்து

(இ) பாதம்அமைத்து (ஈ) பாதயமைத்து

5. தோற்றம் – இச்சொல்லின் எதிர்ச் சொல் ....................................

(அ) தொடக்கம் (ஆ) மறைவு

(இ) முதல் (ஈ) ஆரம்பம்

## வினாக்களுக்கு விடையளி

1. ஒகேனக்கல் பகுதியில் நாம் பார்க்க வேண்டிய இடங்களைக் கூறுக.
2. ஒகேனக்கலில் அருவியில் நீர் விழும் காட்சி, பார்ப்பதற்கு எப்படி இருந்தது?
3. சங்கவை பார்த்த மிகப்பழைமையான கோவிலின் பெயர் என்ன?
4. ஒகேனக்கல் அருவி எங்கே அமைந்துள்ளது?

## சரியான தொடரை ✓ எனவும் தவறான தொடரை X எனவும் குறியிடுக.

1. ஒகேனக்கல் திருச்சி மாவட்டத்தில் உள்ளது. ☐
2. அருவியிலிருந்து விழும் நீர், பாறையில் பட்டு, வெண்புகை போலத் தோன்றும் ☐
3. கடல் மட்டத்திலிருந்து ஒகேனக்கல் 1500 அடி உயரத்தில் உள்ளது ☐

## அகர முதலியைப் பார்த்துப் பொருள் எழுதுக

1. எழில் – ____________
2. களிப்பு – ___________
3. நீராடலாம் – ___________
4. பரவசம் – ___________

## பொருத்தமான சொல்லால் நிரப்புக.

1. கடற்கரையில் ____________ ( மனல்/மணல்) வீடு கட்டி விளையாடலாம்.

2. மரத்தில் பழங்கள்____________ (குரைவாக/குறைவாக) உள்ளன.

3. வலப்பக்க சுவரின் மேல் ____________ (பல்லி/பள்ளி) இருக்கிறது.

4. ஆதிரைக்கு நல்ல____________(வேலை/வேளை) கிடைத்துள்ளது.

## படங்களை இணைத்துச் சொற்களைக் கண்டுபிடிப்போமா?



தேன்



நீர்

தேனீர்



__________



__________

__________



__________



__________

__________



__________



__________

__________

## உன்னை அறிந்துகொள்.

தமிழ்நாட்டில் கோடை வாழிடமாகவும் சுற்றுலாத்தலமாகவும் விளங்கும் ஊட்டி (உதகமண்டலம்) 'மலைகளின் அரசி' என அழைக்கப்படுகிறது. இது, நீலகிரி மாவட்டத்தில் அமைந்துள்ளது.

## சிந்திக்கலாமா?





| படங்களை உற்றுநோக்கித் தூய்மையான காற்று எங்கே கிடைக்கிறது.? உன் கருத்துகளை வெளிப்படுத்துக. |
|---|

| பருப்பு அடை பாரம்மா<br>பதமாய் எடுத்து உண்ணம்மா<br>இனிப்புப் பணியாரம் வேணுமா<br>இங்கு வந்து பாரம்மா<br>வெள்ளை நிற உப்புமா<br>வேண்டும் மட்டும் தின்னும்மா<br>கரக் முரக் முறுக்கையே<br>கடித்துத் தின்னு நொறுக்கியே<br>சுவை மிகுந்த கொழுக்கட்டை<br>சூடாய் இருக்கு தட்டிலே!<br>வெல்லம் தேங்காய் சேர்த்துமே<br>வெண்ணெய் பிட்டும் ஈர்க்குமே! | பாடலிலிருந்து உணவுப் பொருள்களின் பெயர்களை எழுதுக.<br>பருப்பு அடை, ------------<br>-------------, ------------<br>-------------, ------------<br>-------------, ------------<br>-------------, ------------<br>-------------, ------------ |
|---|---|

# இன எழுத்துகள்

குழந்தைகளே! நண்பர்களோடு சேர்ந்திருப்பது உங்களுக்கு மிகவும் பிடிக்கும்தானே! உங்களைப்போலத்தான் சில எழுத்துகளும் ஒன்றாகவே இருக்க விரும்புகின்றன. அவற்றை இனஎழுத்துகள் என அழைக்கின்றனர்.

உங்களுக்கும் உங்கள் நண்பர்களுக்கும் அன்பாகப் பேசுவது, ஒரே மாதிரியாக ஆடை அணிவது என்று சில பண்புகள் பொதுவாக இருப்பதைப் போல, இனஎழுத்துகளும் பிறக்கும் இடம், ஒலிக்கும் முயற்சி, கால அளவு, வடிவம் முதலியவற்றில் ஒத்துப்போகின்றன. சரி, எந்த எழுத்து எந்த எழுத்துக்கு இனமாக வரும்? தெரிந்து கொள்வோமா?

### உயிரெழுத்துகள்

உயிரெழுத்துகள் பன்னிரண்டு அல்லவா! அவற்றை உயிர்க்குறில், உயிர்நெடில் எனப் பிரித்துப் படித்திருப்பீர்கள். ஆகையால், உயிர்க்குறில் எழுத்துகளுக்கு உயிர்நெடில் எழுத்துகள் இனமாக வரும். எப்படி?

அ – ஆ | இ – ஈ | உ – ஊ | எ – ஏ | ஐ – ? | ஒ – ஓ | ஔ – ?

என்ன இது? ஐ என்ற எழுத்துக்கும் ஔ என்ற எழுத்துக்கும் இன எழுத்து எங்கே? கண்டுபிடிக்கலாமா? ஐ – இந்த எழுத்தை நன்றாக ஒலித்துப் பாருங்கள். இறுதியில் என்ன ஓசையில் முடிகிறது? இ தானே. அதுபோல, ஔ என்னும் எழுத்தையும் ஒலித்துப் பாருங்கள். எந்த எழுத்தின் ஓசையில் முடிகிறது? உ என்னும் எழுத்தின் ஓசையல்லவா! இப்போது எழுதிப் பார்க்கலாமா?

ஐ – இ | ஔ – உ

### மெய்யெழுத்துகள்

மெய்யெழுத்துகளை நாம் ஏற்கெனவே பெயரிட்டு அழைத்தோமே, நினைவிருக்கிறதா? என்ன அது? வல்லினம், மெல்லினம், இடையினம்.

வல்லின எழுத்துகளுக்கு மெல்லின எழுத்துகள்தாம் இனமாக வரும். கீழே இருப்பதைப் பாருங்கள்.

க் – ங் | ச் – ஞ் | ட் – ண் | த் – ந் | ப் – ம் | ற் – ன்

ய், ர், ல், வ், ழ், ள், இவை ஆறு எழுத்துகளும் இடையினம். இவற்றிற்கு இன எழுத்துகள் இல்லை. ஓர் எழுத்திற்கு அருகில் அதே எழுத்து வந்தாலும் அவை இன எழுத்துகள் அல்ல (பக்கம், அச்சம்…)

இன எழுத்துகள் சேர்ந்தே வருவதைக் கண்டுபிடிக்கலாம் வாருங்கள். கீழே உள்ள படங்களைப் பார்த்து, அவற்றின் பெயர்களைச் சொல்லி, எழுதிப் பாருங்கள்.

|  |  |  |  |  |  |
|---|---|---|---|---|---|
| சங்கு | மஞ்சள் | பந்து | வண்டு | பம்பரம் | கன்று |

## உங்கள் நண்பர்களின் பெயர்களிலுள்ள இன எழுத்துகளைக் கண்டுபிடியுங்கள்

மங்கை, கங்கா, இராமலிங்கம், மஞ்சுளா, அஞ்சலி, காஞ்சனா, அஞ்சனா, பாண்டியன், தண்டபாணி, காந்தி, சாந்தி, ஜெயந்தி, கந்தன், நந்தா, நந்தினி, வந்தனா, அம்பிகா, அம்பு, இளமாறன், மணிமாறன்

## விடுபட்ட இடங்களில் சரியான இனஎழுத்துகளை நிரப்பலாமா?

|  |  |  |  |  |  |
|---|---|---|---|---|---|
| செ – – ருத்தி | கு – – | சு – – ல் | தொ – – பாலம் | இ – – | ஆ – – |



### செயல் திட்டம்

உங்கள் வீட்டில் நீங்கள் காணும் பொருள்களுள் இன எழுத்துகள் இடம்பெற்ற சொற்கள் 20 எழுதி வருக.

# 16 நாயும் ஓநாயும்

பசியால் வாடி மெலிந்த ஓநாய், தின்பதற்கு ஏதாவது அகப்படுமா? என்று காடு முழுவதும் தேடித் திரிந்தது. அப்போது கொழுகொழு என்றிருந்த ஒரு நாய், மகிழ்ச்சியுடன் எதிரே ஓடி வருவதைப் பார்த்தது.

அந்த நாயைத் தின்று விடலாமா என்று ஓநாய் நினைத்தது. ஆனால், தான் அப்போது இருந்த சோர்வான நிலையில் அந்த நாயுடன் சண்டை போட்டுத் தோற்கடிக்க முடியுமா? என்பது சந்தேகமாய் இருந்தது. அதனால் அதனுடன் நட்பாய்ப் பேச ஆரம்பித்தது.

**ஓநாய்** நண்பா, நீ எவ்வளவு அழகாக இருக்கிறாய்!

**நாய்** நண்பனே, மிக்க மகிழ்ச்சி. நான் சொல்கிறபடி செய்தால் நீயும் என்னைப்போலக் கொழுகொழு என்று அழகாய் இருக்கலாம். நீ இந்தக் காட்டில் இருந்து பசியும் பட்டினியுமாக ஏன் துன்பப்படுகிறாய்? என்னுடன் வெளியே வந்துவிடு நல்ல உணவு கிடைக்கும்.

**ஓநாய்** அப்படியானால், நான் என்ன வேலை செய்ய வேண்டும்?



நாய்: வேலையாவது கீலையாவது. ஒன்றுமே கிடையாது. வீட்டுக்கு வருகிற அறிமுகம் இல்லாத புதியவர்களை விரட்டியடிக்க வேண்டும். வீட்டுக்காரர்களைப் பார்த்தால் வாலை ஆட்ட வேண்டும். அவ்வளவுதான், அதற்குப் பதிலாக விதவிதமான உணவுகள் கிடைக்கும். நமது தலையை வீட்டுக்காரர்கள் அன்பாக வருடிக் கொடுப்பார்கள். ஆகா! அது என்ன சுகம் தெரியுமா?

ஓநாய்: ஓ! அப்படியா! அவ்வளவு சுகமான வாழ்க்கையா! தயவு செய்து என்னையும் அழைத்துச் செல், நண்பா.

நாய்: வா நண்பா! என்னுடன் உன்னை அழைத்துச் செல்கிறேன். இன்றிலிருந்து உனக்கு நல்லகாலம்தான்.

ஓநாய்: இதோ, இப்போதே புறப்படுகிறேன். அது சரி, அது என்ன உன் கழுத்தில் ஒரு கருப்புப் பட்டை தொங்குகிறதே!

நாய்: அது ஒன்றுமில்லை, வா.

ஓநாய்: ஒன்றுமில்லை என்றால், கழுத்தில் எப்படி பட்டை வந்தது?

நாய்: என்னைச் சங்கிலியால் கட்டிப் போடுவதற்கு வசதியாகக் கழுத்தில் போடப்பட்ட பட்டை. அவ்வளவுதான்!

ஓநாய்: என்ன, கட்டிப் போடுகிறார்களா! அப்படியானால், உன் விருப்பப்படி எப்பொழுது வேண்டுமானாலும் வெளியே போக முடியாதா?

நாய்: ஊ... கும், எப்பொழுதும் நம் விருப்பம்போல போக முடியாது. அதிலென்ன பிரமாதம்?

ஓநாய்: என்ன பிரமாதமா? அதுதான் எனக்குப் பெரிய காரியம். எப்படிப்பட்ட வாழ்க்கையாய் இருந்தாலும் சரி, என் சுதந்திரத்தை விட்டுக்கொடுக்க மாட்டேன். வீட்டில் மாட்டிக் கொண்டு விதவிதமான உணவுகளைச் சாப்பிடுவதைவிடச் சுதந்திரமாகக் காட்டில் அலைவதே மேல், நான் போகிறேன்.

**திறன் :** முற்றுப்புள்ளி, வினாக்குறி ஆகிய நிறுத்தக்குறியீடுகளை அறிந்து படித்தல்



## வாங்க பேசலாம்

- நாயும் ஓநாயும் கதையை உம் சொந்த நடையில் கூறுக.
- முகமூடி அணிந்து நடித்துக் காட்டுக.



## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

### சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

1. மகிழ்ச்சி– இச்சொல் உணர்த்தும் பொருள் ......................................

(அ) இன்பம் (ஆ) துன்பம்
(இ) வருத்தம் (ஈ) அன்பு

2. ஒன்றுமில்லை – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ......................

(அ) ஒன்று + இல்லை (ஆ) ஒன்றும் + இல்லை
(இ) ஒன்றுமே + இல்லை (ஈ) ஒன்று + மில்லை

3. அப்படி+ ஆனால் – இச்சொற்களைச் சேர்த்து எழுதக் கிடைப்பது ..................................

(அ) அப்படியானால் (ஆ) அப்படியனால்
(இ) அப்படியினால் (ஈ) அப்படிஆனால்

F48M11

4. விருப்பு என்ற சொல்லின் எதிர்ச்சொல் ..................................

(அ) வெறுப்பு (ஆ) கருப்பு
(இ) சிரிப்பு (ஈ) நடிப்பு

### வினாக்களுக்கு விடையளி

1. பசியால் மெலிந்த ஓநாய் எங்குச் சுற்றித் திரிந்தது?
2. நாய், ஓநாயை எங்கு வரச் சொன்னது?
3. நாயின் கழுத்தில் என்ன இருந்தது?

### அகர முதலியைப் பார்த்துப் பொருள் எழுதுக

1. விதவிதமான – __________
2. சுதந்திரம் – __________
3. வருடுதல் – __________
4. பிரமாதம் – __________
5. சந்தேகம் – __________

## சரியான தொடரை ✓ எனவும் தவறான தொடரை X எனவும் குறியிடுக.

1. ஓநாய் தின்பதற்கு எதுவும் கிடைக்காமல் மெலிந்திருந்தது. [ ]
2. நாய் புதியவர்களைக் கண்டால் விரட்டியடிக்காது [ ]
3. ஓநாயின் கழுத்தில் கருப்புப் பட்டை இருந்தது. [ ]
4. ஓநாய் சுதந்திரமாக வாழ ஆசைப்படவில்லை [ ]
5. ஓநாயை நாய் வீட்டிற்கு அழைத்தது. [ ]

## சரியான சொல்லால் நிரப்புக

1. நீ எவ்வளவு ________________ இருக்கிறாய்?
2. நாயின் கழுத்தில் ______________ இருந்தது.
3. வீட்டுக்காரர்கள் நாயை ________________ வருடிக்கொடுப்பார்கள்
4. வீட்டில் மாட்டிக்கொள்வதைவிட _______________ காட்டில் அலைவதே மேல்.
5. என்னைத் தயவுசெய்து அழைத்துச் செல் என்று ________________ கூறியது.




## சொல்லக்கேட்டு எழுதுவோம்

1. நல்ல உணவு கிடைக்கும்
2. கழுத்தில் பட்டை எப்படி வந்தது?
3. நாய் மகிழ்ச்சியாய் ஓடிவந்தது.
4. ஆகா! என்ன சுகம் தெரியுமா!



Tamil 3rd-std_Term2.indd 43 7/29/2019 1:24:55 PM

# சொற்களை இணைத்து எழுதுவோம்







1. ______________________
2. ______________________
3. ______________________

1. ______________________
2. ______________________
3. ______________________

## உன்னை அறிந்துகொள்

நாம் பொருள் உணர்ந்து படிப்பதற்கு நிறுத்தக்குறிகள் உதவுகின்றன.

? – வினாக்குறி

: – முக்காற்புள்ளி

, – காற்புள்ளி

. – முற்றுப்புள்ளி

; – அரைப்புள்ளி

! – வியப்புக்குறி

# சொல் விளையாட்டு




ல், பு, க, ர, ல், டி, ட, ரு, ம்



வி, க, த, ங், ம், க, லை



ப, ம், ட், ழ, வை, டு ற



ச, த, ள, ம், த், கு, ள், ந், ட, ம

## சொற்களை முறைப்படுத்திச் சரியான தொடரை உருவாக்குக.

எ.கா. சுதந்திரத்தை கொடுக்க என் மாட்டேன் விட்டுக்

என் சுதந்திரத்தை விட்டுக்கொடுக்க மாட்டேன்

1. கொழு, கொழு அழகையும் புகழ்ந்தது நாயின் உடம்பையும்.
2. பார்த்தால் வீட்டுக்காரர்களைப் ஆட்ட வாலை வேண்டும்.

## பொருத்தமான நிறுத்தக் குறியிடுக.

எ.கா. நான் என்ன வேலை செய்ய வேண்டும்

நான் என்ன வேலை செய்ய வேண்டும் ?

1. ஆகா என்ன சுகம் தெரியுமா
2. ஒன்றுமில்லை என்றால் கழுத்தில் எப்படி பட்டை ஏற்பட்டது
3. என்ன கட்டிப் போடுகிறார்களா
4. நம் விருப்பம் போல போக முடியாது அது என்ன பிரமாதம்.
5. நல்ல உணவு உனக்கும் கிடைக்கும் என்று சொன்னது

## விளையாடலாம், வாங்க!

**சொன்னால் செய்வேன்!**

குழந்தைகளை வட்டமாக ஓடவிட வேண்டும். ஆசிரியர் நடுவில் நிற்க வேண்டும். ஆசிரியர் ஒரு பாடலைப் பாட வேண்டும். ஆசிரியர் பாடுவதை நிறுத்தியவுடன் எல்லாக் குழந்தைகளும் அப்படியே நிற்க வேண்டும். உடனே ஆசிரியர் ஒரு விலங்கின் பெயரைச் சொல்ல, அந்த விலங்கு போல ஒலி எழுப்ப வேண்டும். எ.கா. பசு– என மா, மா என ஒலி எழுப்புதல், இவ்வாறு வேறு வேறு விலங்குகள் பெயர் சொல்லலாம். இவ்விளையாட்டில் அனைத்துக் குழந்தைகளையும் பங்கேற்கச் செய்தல் வேண்டும்..

## சூழலுக்கேற்ற உணர்வைத் தெரிவு செய்க.

(சிரிப்பு, மகிழ்ச்சி, வருத்தம், வியப்பு, அச்சம்)

| | | |
|---|---|---|
| 1. | பாட்டி புத்தாடை வாங்கித் தரும்போது ஏற்படுவது | மகிழ்ச்சி |
| 2. | மிகப்பெரிய யானையைப் பார்க்கும்போது | |
| 3. | கோமாளி செய்யும் செயல்களைக் காணும்போது | |
| 4. | நம்முடைய நண்பர் கீழே விழுவதைக் காணும்போது | |
| 5. | திடீரென எதிரில் பாம்பைக் காணும்போது | |

### சிந்திக்கலாமா?

எந்தக் கிளி மகிழ்ச்சியாக இருக்கும்? ஏன்?









### செயல் திட்டம்

பல்வேறு விலங்குகள், பறவைகள் படங்களைத் திரட்டுக. அவற்றைத் தொகுப்பேட்டில் ஒட்டி, அவை எழுப்பும் ஒலிகளின் பெயர்களை எழுதி வருக.

# 17 நட்பே உயர்வு

புதிர்க்கதை

அடர்ந்த காட்டில் முயலும் மானும் நெடுநாள் நண்பர்களாக வாழ்ந்து வந்தன. இரண்டு விலங்குகளும் அன்பாய்ப் பழகி வந்தன. மான் பார்ப்பதற்கு அழகாக இருந்ததால் எப்படியாவது வேட்டையாட வேண்டும் என்ற எண்ணம் அங்குள்ள நரிக்குத் தோன்றியது. நரி ஒரு நாள் மானிடம் "நண்பனே! நீ உன் நண்பன் முயல்மீது அளவுக்கு மீறிய பாசம் வைத்துள்ளாய்! என்பதை நான் அறிவேன். ஆனால் முயலோ, உன்னைவிட நான்தான் அழகு என்று எல்லா விலங்குகளிடமும் சொல்லிக்கொண்டு அலைகிறது.



முயலிடம் தொடர்ந்து நீ நட்பு வைத்துக்கொண்டால் உன்னை ஏதாவது ஆபத்தில் மாட்டிவிடும்" என்றது நரி. மானிற்கு நரியின் தந்திரம் புரியவில்லை. "அது எப்படி?" என்று கேட்டது. அதற்கு நரியானது, "அதோ தூரத்தில் தெரிகிற குகைக்கு முயல் உன்னை அழைத்துச் சென்று அங்கு வாழும் சிங்கத்திற்கு இரையாக்கிவிடும்" என்று பொய் கூறியது. மானும் நரியின் சூழ்ச்சியைப் புரிந்து கொள்ளாமல் அதனை நம்பி நடுகாட்டிற்குள் சென்றது. தனது நண்பனை வெகுநேரம் ஆகியும் காணவில்லையே! என்று முயல் துடிதுடித்தது. காட்டிற்குள் அலைந்து திரிந்து தேட ஆரம்பித்தது. கடைசியில் நரி தந்திரமாக மானை வேட்டையாட அழைத்துச் சென்றதைப் பார்த்துவிட்டது. "நரியாரே! என் நண்பனை எங்கு அழைத்துச் செல்கிறாய்?" என்று கேட்டது. "இன்றிலிருந்து மான் உன் நண்பன் அல்ல. மான் என் நண்பன்" என்று நரி பதில் கூறியது "மானை விட்டுவிடு!" என்று கதறியது முயல். அப்படியானால் என் மூன்று புதிர்களுக்கு விடைகூறு? பிறகு விட்டுவிடுகிறேன் என்றது நரி. சரி! புதிர்களைச் சொல் என்றது முயல்.



நரி புதிர்களைச் சொல்லத் தொடங்கியது

புதிர் 1 : கீழே வரும் ஆனால் மேலே போகாது அது என்ன?

புதிர் 2 : கைகள் இருக்கும், ஆனால் கைதட்டமுடியாது அது என்ன?

புதிர் 3 : தொடக்கத்தில் உயரம் எரிந்து முடிந்தவுடன் குட்டை அது என்ன?

முயல் நரியிடம் இவ்வளவுதானே! இதோ விடை சொல்கிறேன் என்றது. முதல் புதிருக்கு 'மழை' என்பதே விடையாகும். இரண்டாவதற்கு 'கடிகாரம்' என்பதே விடையாகும். மூன்றாவதற்கு 'மெழுகுவத்தி' என்பதே விடையாகும் என்றது. முயல் விடை கூறியதைப் பார்த்துத் திகைத்து போனது நரி. நீ கூறியபடி புதிருக்கு விடை சொல்லிவிட்டேன் என் நண்பனை என்னிடம் அனுப்பி விடு! என்று கேட்டது முயல். நரியும் வேறுவழியில்லாமல் மானை விடுவித்தது. மான் மகிழ்ச்சியுடன் முயலுடன் ஒன்று சேர்ந்து வாழ்ந்தது.

**நீதிக் கருத்து: : கூடா நட்பு கேடாய் முடியும்**



## வாங்க பேசலாம்



- உமக்குத் தெரிந்த புதிர் / விடுகதைகளை வகுப்பறையில் கலந்துரையாடுக.
- அன்பை மறவா முயல் கதையை உமது சொந்த நடையில் கூறுக.

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

### சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

1. 'இரை' என்ற சொல்லின் பொருள் ..........................................

(அ) உணவு (ஆ) இருப்பிடம்

(இ) மலை (ஈ) இறைவன்

IHWP8B

2. 'மகிழ்ச்சியுடன்' – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..........................................

(அ) மகிழ்ச்சி + யுடன் (ஆ) மகிழ்ச்சி + உடன்

(இ) மகிழ் + உடன் (ஈ) மகிழ்ச் + சியுடன்

3. சொல்லி + கொண்டு – இச்சொற்களைச் சேர்த்து எழுதக் கிடைப்பது ..............................

(அ) சொல்லிக்கொண்டு (ஆ) சொல்கொண்டு

(இ) சொல்லக்கொண்டு (ஈ) சொல்லிகொண்டு

4. 'முதுமை' என்ற சொல்லின் எதிர்ச்சொல் ..................................

(அ) தீமை (ஆ) சிறுமை

(இ) பெருமை (ஈ) இளமை

5. 'சூழ்ச்சி' என்ற சொல்லுக்குக் கதையின்படி தொடர்புடைய விலங்கு ................................

(அ) மான் (ஆ) முயல்

(இ) நரி (ஈ) சிங்கம்

## வினாக்களுக்கு விடையளி

1. முயல் எந்த விலங்குடன் நண்பனாகப் பழகியது?
2. மானை விட்டுவிடுவதற்காக நரி என்ன செய்தது?
3. மான் எதனால் மாட்டிக்கொண்டது?
4. மற்ற விலங்குகள் நரியிடம் நட்பு கொள்வதை ஏன் தவிர்த்தன?

## புதிருக்குப் பொருத்தமான படத்தைப் பொருத்துக.

1. உணவை எடுத்திடுவாள்
உண்ணாமல் வைத்திடுவாள்
உடல் மெலிந்த பெண்– அவள் யார்?





2. வெள்ளையாம் வெள்ளைக்குடம்
விழுந்தால் சல்லிக்குடம். அது என்ன?



3. கொடிகொடியாம் பூங்கொடியாம்
கிளிதின்னும் பழம் இதுவாம்– அது என்ன?



4. தட்டு தங்கத் தட்டு
தகதகக்கும் வெள்ளித்தட்டு
தலைக்குமேல் உலாவரும் –அது என்ன?



5. ஆயிரம் அறை கொண்ட
மிகப்பெரிய மிட்டாய் கடை – அது என்ன?

## முறைமாறியுள்ள சொற்களை முறைப்படுத்தி எழுதுக.

1. செல்லலாம் இரைதேடச் புல்வெளியில்

_______________________________________

2. அழைத்துச் நண்பனை செல்கிறாய் எங்கு

_______________________________________

3. முடியும் நட்பு கேடாய் முடியும்

_______________________________________

## மொழி விளையாட்டு

மாணவர்களை இரு குழுக்களாகப் பிரிக்க வேண்டும். ஒரு குழுவிலிருந்து மாணவர்கள் இருவரை அழைத்து அதில் ஒருவரின் காதில் அவருக்கு மட்டும் கேட்கும்படியாக மெதுவாக ஒரு சொற்றொடரைக் கூறுக. இப்பொழுது அந்த மாணவர், சொல்லப்பட்ட சொற்றொடருக்கு ஏற்றாற்போல் எதிரே உள்ள மற்றொரு மாணவரிடம் நடித்துக்காட்டவேண்டும். அதனை, அந்த மாணவன் கண்டுபிடிக்கவேண்டும். இவ்வாறு தொடர்ந்து விளையாடி மகிழச் செய்க.

**நெடிலைக் குறில் ஆக்குக**

1. கானல் – ___________  4. தோடு – ___________
2. வாடை – ___________  5. கோடு – ___________
3. ஆடை – ___________  6. பால் – ___________

## மீண்டும் மீண்டும் சொல்லிப்பழகுவோம்

1. விண்ணுக்கும் மண்ணுக்கும் பெண்ணுக்கும் கண்ணுக்கும் டண்ணகரம்

2. உளி கொண்டு சிலையொன்று வடித்தான்.
உலகின் தலைசிறந்த கலையென்று மலைத்தான்.

3. குட்டை மரமும் நெட்டைமரமும் மொட்டைத்தலையைத் தடவிக்கொண்டன.

### ஒரு சொல் பல பொருள் அறிக






## கலையும் கைவண்ணமும்

### விரல் பூக்கள் செய்வோமா

உங்களுக்குப் பிடித்த வண்ணத்தை ஆள்காட்டி விரலால் தொட்டு வையுங்கள். ஒரே ஒரு கோடு நடுவில் போடுங்கள். பூச்செடி தயார்.



### செயல் திட்டம்

எவையேனும் பத்து விடுகதைகளை எழுதி, அவற்றிற்குப் பொருத்தமான படங்களை வரைந்து வருக.

# 18 உள்ளங்கையில் ஓர் உலகம்

உலகைச் சுற்றிக் காட்டிடுவேன்
உனக்கு மகிழ்ச்சியைத் தந்திடுவேன்
என்ன வேண்டும் என்றாலும்
எண்ணும் முன்னே சொல்லிடுவேன்

இணைய வழியில் அனைவரையும்
இணைந்தே இருக்கச் செய்திடுவேன்
கடிதம் அனுப்ப வேண்டுமென்றால்
விரைந்தே அனுப்பத் துணைபுரிவேன்

தகவல் களஞ்சியம் நான்தானே
தரணி போற்றி மகிழ்ந்திடுமே
உலகைச் சுருக்கி உன்கையில்
உலவிடும் கணினி நான்தானே

என்றும் ஓய்வு எனக்கில்லை
எதிலும் சோர்வு என்றில்லை
எந்தப் பொருளின் செய்தியையும்
எடுத்துத் தருவேன் ஒருநொடியில்

உள்ளங்கையில் ஓர் உலகம்
உள்ளதைக் காட்டும் கண்ணாடி
என்றே என்னை எல்லாரும்
ஏற்றம் கொண்டே அழைத்திடுவார்

4WGBES

## பாடல் பொருள்

கணினி நமக்குத் தகவல்களை உடனடியாகத் தருவதால் மன மகிழ்வு ஏற்படுகிறது. இணையத்தின் மூலமாக நல்ல நட்பை உருவாக்குகிறது. கடிதப் போக்குவரத்தை விரைந்து செயல்படுத்துகிறது. கணினி, சிறந்த தகவல் களஞ்சியமாகச் செயல்படுகிறது. உலகையே உள்ளங்கையில் தரவல்லது. ஓய்வில்லாமல் உழைப்பதால், எந்தச் செய்தியைக் கேட்டாலும் உடனடியாக எடுத்துத் தருகிறது. உள்ளதை உள்ளபடி காட்டும் கண்ணாடியாகக் கணினி செயல்படுகிறது.

## சொல் பொருள்

தரணி – உலகம்

சோர்வு – களைப்பு

ஏற்றம் – உயர்வு



### வாங்க பேசலாம்

பாடலை இசை நயத்துடன் பாடி மகிழ்க.

இன்றைய சூழலில் கணினியின் தேவை குறித்துக் கலந்துரையாடுக.



## படிப்போம் சிந்திப்போம் எழுதுவோம்

### சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

1. ஏற்றம் என்ற சொல்லின் பொருள் ........................................

(அ) சோர்வு (ஆ) தாழ்வு

(இ) உயர்வு (ஈ) இறக்கம்

2. என்று + இல்லை –இச்சொல்லைச் சேர்த்து எழுதக் கிடைப்பது. ........................................

(அ) என்றில்லை (ஆ) என்றும்இல்லை

(இ) என்றுஇல்லை (ஈ) என்றல்லை

TPNZTJ

3. முன்னே என்ற சொல்லின் எதிர்ச்சொல் ................................

(அ) எதிரே (ஆ) பின்னே

(இ) உயரே (ஈ) கீழே

4. கணினி ........................................ வழியே அனைவரையும் இணைக்கிறது.

(அ) தகவல் களஞ்சியம் (ஆ) செய்தி

(இ) கடிதம் (ஈ) இணையம்

## வினாக்களுக்கு விடையளிக்க.

1. தகவல்களை எதன் வழியே எளிமையாகப் பெற முடியும்?
2. கணினியின் பயன்கள் குறித்து இப்பாடலின் வழியே நீ அறிந்து கொண்டவற்றைக் கூறுக.

ஒரே ஓசையில் முடியும் சொற்களை எடுத்து எழுதுவோமா?

| காட்டிடுவேன் | தந்திடுவேன் |
|---|---|
| __________ | __________ |
| __________ | __________ |

3. விசைப்பலகையிலுள்ள எழுத்துகளைக்கொண்டு சொற்களைக் கண்டறிவோமா?

| | | | | |
|---|---|---|---|---|
| இ | க | வ | ம் | த |
| உ | தி | ணை | ய | ணி |
| னி | ல | ல் | டி | ரை |

| | |
|---|---|
| திரை | |
| | |
| | |

## சொல் விளையாட்டு

**திறன்பேசியோடு தொடர்புடைய சொற்களை உருவாக்குக.**

**எடுத்துக்காட்டு**

| | | | | |
|---|---|---|---|---|
| ~~நி~~ | ~~ன~~ | தி | ~~மி~~ | ரை |

திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஒ | பு | ன | ல | பு | ம் |
| ச | ம் | கீ | ச் | க | எ |
| ஈ | னை | ணை | ய | இ | ம் |
| னு | கா | க | மு | ல் | நூ |
| கை | மை | நு | து | பு | வி |

# மீண்டும் மீண்டும் சொல்லலாமா?

1 அலையில் மிதந்த மீனை
வலையில் பிடிச்சா விழுகல
கலகலன்னு சிரிப்பு வரல



2 மரக்கிளையக் கையால் பற்றித்
தொங்கயில கையச் சுழற்றினதால
கீழே விழுந்தேன்.



3 காத்துல விழுந்த பழத்துல
சுவையில்லனு சொல்ல முடியல
இந்த நினைப்பில நண்பன்
விழுந்தான் பள்ளத்தில



# கலையும் கைவண்ணமும்

கொடுக்கப்பட்ட படத்திற்கு வண்ணம் தீட்டி மகிழ்க.



## குழு விளையாட்டு

**சொற்களைச் சொல்! மகுடம் சூட்டிக் கொள்!**

மாணவர்களை இரு குழுவாகப் பிரித்துக் கொள்க. சொற்களுக்குரிய அட்டைகளை




என்றவாறு தயார் செய்து கொள்க. எழுத்துகளுக்குரிய அட்டைகளை தி, பு, த, ந, பி என்றவாறும் தயார் செய்து கொள்க.




முதல் குழுவில் உள்ளவர்கள் எழுத்துகளை ஒவ்வொருவராகக் கூற இரண்டாம் குழுவில் உள்ளவர்கள் உரிய சொற்களைக் கூறச் செய்க. பின்னர், குழுவை மாற்றி விளையாட்டைத் தொடர வேண்டும். சரியாகச் செய்த மாணவர்களுக்கு மகுடம் வைத்துப் பாராட்டுக.

## இணைந்து செய்வோம்

**பின்வரும் செயலிகளுக்குப் பொருத்தமான படத்தினைப் பொருத்துக**

1. மின் அஞ்சல்
2. புலனம்
3. முகநூல்

## அறிந்து கொள்வோம்

அலைபேசியை முதன்முதலில் கண்டறிந்தவர் மார்ட்டின் கூப்பர்

மின்னல் வெட்டும்போது அலைபேசியைப் பயன்படுத்தக் கூடாது. ஏனெனில், அலைபேசி இடிதாங்கிபோல் செயல்பட்டு மின்னலை உங்கள் பக்கம் ஈர்த்துவிடும்.



## சிந்திக்கலாமா?

இன்று வாணியின் பிறந்த நாள். வாணியின் மாமா வெளியூரில் வசிக்கிறார். பிறந்தநாளுக்கு அவர் வரமுடியாத சூழ்நிலை ஏற்பட்டுள்ளது. அவளுடைய மாமா எப்படி வாழ்த்துகள் தெரிவிப்பார்?



## செயல் திட்டம்

கணினியில் புதிர் விளையாட்டுகளை விளையாடி மகிழ்வோம்.

# 19 தூக்கணாங்குருவியும் ஒட்டகச்சிவிங்கியும்

காட்டில் இருந்த பெரிய மரம் ஒன்றின் கிளையில் தன் குஞ்சுகளுடன் கூட்டில் தூக்கணாங்குருவி ஒன்று வசித்து வந்தது. அதன் குஞ்சுகள், கீச் …… கீச் …. என்று ஒலி எழுப்பி மகிழ்ச்சியுடன் இருந்தன. அப்போது அந்த வழியாக ஒட்டகச்சிவிங்கி ஒன்று வந்தது.

ஒட்டகச்சிவிங்கி : அப்பாடா… என்ன வெயில்… என்ன வெயில் …. இந்த மரத்தின் அடியில் கொஞ்ச நேரம் ஒதுங்கலாம்.

அப்போது தூக்கணாங்குருவி குஞ்சுகள் மகிழ்ச்சியுடன் சத்தமிட்டுக் கொண்டிருந்தன… என்ன ஒரே சத்தம்! என ஒட்டகச்சிவிங்கி மேலே பார்த்தது. மரக்கிளையில் உள்ள கூட்டில் இருந்த தூக்கணாங்குருவிக் குஞ்சுகள் சத்தமிட்டுக் கொண்டு இருப்பதைப் பார்த்துக் கோபம் கொண்ட ஒட்டகச்சிவிங்கி, மரக்கிளையைப் பிடித்து உலுக்கியது.



**தூக்கணாங்குருவி** ஏ! ஒட்டகச்சிவிங்கியே! ஏன் மரக்கிளையை உலுக்குகிறாய்? என் கூட்டிலுள்ள குஞ்சுகள் பயப்படுகின்றன.

**ஒட்டகச்சிவிங்கி** உன் குஞ்சுகள் கத்துவது எனக்குப் பிடிக்கவில்லை.

(அப்போது... தேனீ ஒன்று பறந்து வந்து மரத்தில் உள்ள பூவில் அமர்ந்தது)

**தேனீ** ஒட்டகச்சிவிங்கியே! மரம் அனைவருக்கும் பொதுவானது. தூக்கணாங்குருவி கூடு கட்டி வாழ்கிறது. உனக்கு ஓய்வெடுக்க நிழல் தருகிறது. எனக்கும் இம்மரத்தில் உள்ள பூக்களில் இருந்து தேன் கிடைக்கிறது. எனவே நாம் அனைவரும் நண்பர்களாக இருப்போம்.

**ஒட்டகச்சிவிங்கி** இல்லை ! இல்லை ! நான் உங்களுடன் சேர முடியாது. எனக்கு இந்தக் குஞ்சுகள் கத்துவது பிடிக்கவில்லை.

(மீண்டும் மரக்கிளையை ஒட்டகச்சிவிங்கி உலுக்கியது)

தூக்கணாங்குருவிக் குஞ்சுகள் பயந்து, காப்பாத்துங்க....
காப்பாத்துங்க என மீண்டும் அலறின.

**தேனீ** நான் உங்களுக்கு உதவி செய்கிறேன். அருகில் உள்ள குளத்தில் புத்திசாலித் தவளை வாழ்ந்து வருகிறது. அதனிடம் சென்று உதவி கேட்போம்.



(தேனீ, ஒட்டகச்சிவிங்கியின் அடாத செயலை தவளையிடம் கூறியது. தூக்கணாங்குருவியும் தன் நிலையைக் கூறித் தவளையிடம் உதவி கேட்டது)

**தவளை** உங்களுக்குக் கட்டாயம் உதவுகிறேன். தண்ணீர் குடிக்க வரும் போதெல்லாம் இந்த ஒட்டகச்சிவிங்கியின் கால்களில் மிதிபட்டு எங்கள் இனம் அழிந்து போகிறது. அதனால், நாம் படும் துன்பம் அதற்குத் தெரியவில்லை. ஆகவே அதற்குச் சரியான பாடம் புகட்டுவோம்

(மறுநாள், ஒட்டகச்சிவிங்கி வழக்கம்போல் அந்த மரத்தின் அருகில் வருகிறது.)

**ஒட்டகச்சிவிங்கி** அப்பாடா! இன்று கொஞ்சம் வெயில் பரவாயிலே. அட, அது என்ன? அந்தத் தேனீக்கூட்டம் எப்போது பார்த்தாலும் ஙொய்…ஙொய்..னு சத்தம் போடுதே. இரு, இரு, இப்ப உங்களை என்ன செய்றேன் பாருங்க.

தேனீக்களின் கூட்டை ஒட்டகச்சிவிங்கி, தன் தலையால் தட்டிக் கலைக்கிறது. சினம் கொண்ட தேனீக்கள், ஒட்டகச்சிவிங்கியின் காதைக் கடிக்கின்றன. வலி பொறுக்கமுடியாமல், ஒட்டகச்சிவிங்கி அருகிலிருந்த குளத்தில் விழுகிறது. அது விழுந்ததால் அங்கிருந்த தவளைகள், அதன் உடலின்மீது அங்குமிங்கும் ஓடுகின்றன. தண்ணீரிலிருந்து தட்டுத்தடுமாறி எழுந்த ஒட்டகச்சிவிங்கி, மீண்டும் மீண்டும் கூச்சம் தாங்காமல் தண்ணீரில் விழுகிறது. தேனீக்கள் கொட்டிக்கொண்டே இருக்கின்றன.

**ஒட்டகச்சிவிங்கி** ஐயோ தேனீக்களே என்னை கொட்டாதீர்கள். தவளைகளே என் மீது ஏறாதீர்கள்

நமக்கு ஏற்பட்டதுபோலத்தானே அந்தத் தூக்கணாங்குருவிகளுக்கும் ஏற்பட்டிருக்கும். தங்கள் கூட்டைக் கலைத்ததால்தானே அந்தத் தேனீக்களும் என்னைக் கொட்டின. பாவம், அந்தத் தவளைகள் எத்தனை முறை அவற்றை நான் காலால் மிதித்திருக்கிறேன். எனக்கு வலித்ததுபோல அவற்றிற்கும் வலித்திருக்கும் என்று ஒட்டகச்சிவிங்கி, தான் செய்த தவற்றை எண்ணுகிறது. இனிமேல், யாருக்கும் தொல்லை தரமாட்டேன். துன்பம் செய்ய மாட்டேன் என்று உண்மையாகவே மனம் வருந்தியது ஒட்டகச்சிவிங்கி. மேலும், தன் தவற்றைப் பொறுத்துக் கொள்ளுமாறு அனைவரிடமும் வேண்டியது. பின்னர், அனைவரோடும் இணைந்து மகிழ்ச்சியுடன் வாழ்ந்தது.

**நீதிக் கருத்து: நல்லதே நினைப்போம்! நன்மை பெறுவோம்!**

## வாங்க பேசலாம்

- நட்பை வலியுறுத்தும் கதையை வகுப்பறையில் அங்க அசைவுகளுடனும் சரியான ஒலிப்புடனும் கூறுக.
- தவளையின் நற்குணத்தை உம் சொந்த நடையில் கூறுக

## படிப்போம் சிந்திப்போம் எழுதுவோம்

### சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

1. மரக்கிளையை உலுக்கியது ................

(அ) தேனீ (ஆ) ஒட்டகச்சிவிங்கி
(இ) தவளை (ஈ) சிட்டுக்குருவி

2. மரத்தூள் என்ற சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ......................................

(அ) மரம் + தூள் (ஆ) மர + தூள்
(இ) மரத்து + தூள் (ஈ) மரத்+தூள்

3. திட்டம் + படி – இச்சொல்லைச் சேர்த்து எழுதக் கிடைப்பது .............................

(அ) திட்டபடி (ஆ) திட்டப்படி
(இ) திட்டம்படி (ஈ) திட்டுபடி

4. மிதிபட்டு – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ......................................

(அ) மிதி + பட்டு (ஆ) மிதிப் + பட்டு
(இ) மீதி + பட்டு (ஈ) மீதிப் + பட்டு

5. இணைந்து என்ற சொல்லின் எதிர்ச்சொல் .............................

(அ) மகிழ்ந்து (ஆ) பிரிந்து
(இ) சேர்ந்து (ஈ) சிறந்து

X4D31U

### வினாக்களுக்கு விடையளிக்க.

1. தூக்கணாங்குருவிக் குஞ்சுகள் ஏன் கத்தின?
2. தூக்கணாங்குருவிக்கு உதவி செய்தவர்கள் யார் யார்?
3. தேனீ எதன் காதைக் கடித்தது?
4. இக்கதையின் மூலம் நீ அறியும் நீதிக்கருத்து யாது?

### அகர முதலியைப் பார்த்துப் பொருள் அறிக.

புத்திசாலி –

அடாத செயல் –

## குருவிக்கேற்ற கூட்டைத் தேர்ந்தெடுப்போமா?









**சரியான சொல்லை நிரப்பிப் படித்துக்காட்டுக.**

1. தூக்கணாங்குருவிக் குஞ்சுகள் ------- என ஒலியெழுப்பி மகிழ்ச்சியாக இருந்தன. (கீச்…கீச்….. / கூக்கு… கூக்கு)
2. மரத்தின் அடியில் ------- ஒதுங்கியது (ஒட்டகம் / ஒட்டகச்சிவிங்கி)
3. தூக்கணாங்குருவிக்கு முதலில் ------- உதவிக்கு வந்தது (மரங்கொத்தி / தேனீ)
4. ஒட்டகச்சிவிங்கி அருகில் இருந்த ------- தொப்பென்று விழுந்தது. (ஆற்றில் / குளத்தில்)

# வினைமரபினை அறிந்துகொள்வோமா?
# பொருத்தமானதை உரிய கோட்டில் எழுதுக



___________________________



___________________________



___________________________



___________________________



___________________________

(மாத்திரை விழுங்குதல் , உணவு உண்ணுதல், பழம் தின்னுதல், பால் பருகுதல். தண்ணீர்குடித்தல்)

## சொல் விளையாட்டு

**ஒன்றை மாற்றினால் மற்றொன்று கிடைக்குமே!**

1. 'வெயில்'–இச்சொல்லில் "வெ" வை மாற்றி 'ம' வை நிரப்பு

   ஆடும் பறவை வரும் அழகாய் இருக்கும் – மயில்

2. 'மரம்' இச்சொல்லில் 'ம'வை மாற்றி 'அ' வை நிரப்பு

   அறுக்க உதவும் கருவியைப் பெறுவாய்_______

3. 'கூச்சம்' இச்சொல்லில் 'கூ'வை மாற்றி 'ம' வை நிரப்பு

   உன் அடையாளங்களில் ஒன்றைப் பெறுவாய் _______

4. 'குருவி' இச்சொல்லில் 'கு'வை மாற்றி 'அ' வை நிரப்பு

   குளித்து மகிழ்ந்து குளிர்ச்சி அடைவாய் _______

5. 'பணம்' இச்சொல்லில் 'ப'வை மாற்றி 'ம' வை நிரப்பு

   மூக்கின் வழியே நுகர்ந்து மகிழ்வாய் _______

## கலையும் கைவண்ணமும்

**வண்ண நூலினைப் படத்தின் மேல் ஒட்டி வண்ணம் தீட்டி வரைக.**



## அறிந்து கொள்வோம்

தலைகீழாகக் கூடுகட்டி
வாழும் பறவை
தூக்கணாங்குருவியாகும்



### சிந்திக்கலாமா?

உன் வீட்டுத்தோட்டத்தில் உள்ள மரத்தில் பறவையோ, அணிலோ கூடு கட்டினால் அதற்குத் தொல்லை தராமல் எவ்விதம் நடந்துகொள்வாய்? சிந்தித்து விடை கூறுக.



### செயல் திட்டம்

நாளிதழ்களில் வெளிவரும் விலங்குகளின் படங்களை ஒட்டிப் படத்தொகுப்பு ஒன்றை உருவாக்குக.

# 20 வீம்பால் வந்த விளைவு

ஓர் ஊரில் வணிகன் ஒருவன் இருந்தான். அவன் குதிரையில் சென்று வாணிகம் செய்து வந்தான். ஒருநாள் அன்றைய வேலையை முடித்துவிட்டுக் களைப்புடன் வந்த அவன், சற்றுநேரம் ஓய்வு எடுக்க நினைத்தான். தனது குதிரையை அங்கிருந்த மரத்தடியில் கட்டி விட்டு ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தான்

அச்சமயம் வீரன் ஒருவன், தனது குதிரையுடன் அதே மரத்தடியில் ஓய்வெடுக்க வந்தான். வணிகன் அந்த வீரனிடம், "உங்கள் குதிரையைச் சற்றுத் தள்ளி கட்டுங்கள். ஏனெனில், எனது குதிரை முரட்டுத்தனமானது" என்றான். அதற்கு வீரன், "முடியாது நான் இங்கேதான் கட்டுவேன்" என்று சொல்லிக் குதிரையைக் கட்டிவிட்டு உணவு உண்ணச் சென்றான்.

வணிகன் கண் அயர்ந்துவிட்டான். வீரன் உணவு உண்ணும் இடைவேளையில் வணிகனின் குதிரை, வீரனின் குதிரையை எட்டி உதைத்துத் தள்ளிவிட்டது. அதனால், வீரனுடைய குதிரையின் கால் உடைந்துவிட்டது. வீரன் உடனே வணிகனை எழுப்பினான். "என் குதிரையின் கால் உன் குதிரையினால் உடைந்துவிட்டதால், எனக்கு நஷ்டஈடு கொடு" என்று வணிகனிடம் கேட்டான் . அதனை வணிகன் ஏற்றுக் கொள்ளவில்லை. "நான் கட்டும்போதே என் குதிரையை முரட்டுக் குதிரை என்றேன். நீ தானே நான் சொன்னதைக் கேட்காமல் கட்டினாய்?" என்று வணிகன் மறுத்துவிட்டான்.





வணிகனே வா! நீதிபதியிடம் செல்லலாம்," என்றான் வீரன். இருவரும் நீதிபதியிடம் சென்றனர். வீரன் அவரிடம் நடந்ததைச் சொன்னான். நீதிபதி, வீரன் சொன்னதைக் கேட்டுவிட்டு, வணிகனிடம் "என்ன நடந்தது?" எனக் கேட்டார். வணிகனோ, பதில் எதுவும் சொல்லாமல் மௌனமாக இருந்தான். உடனே நீதிபதி, "வணிகன் ஊமை போலிருக்கிறதே, காதும் கேட்கவில்லையோ, பலமுறை கேட்டும் பதில் சொல்லாமல் இருக்கிறானே" என்றார்.

அதற்கு வீரன், "அவன் பேசுவான், ஐயா. அவன்தான் எனது குதிரை முரட்டுத்தனமானது உனது குதிரையை அருகில் கட்டாமல் தூரத்தில் கட்டு எனக் கூறினான். நான்தான், எனது குதிரை வீரக்குதிரை என்று சொல்லிக் கட்டி வைத்தேன்" எனக் கூறி முடித்தான்.

வீரன் கூறியதைக் கேட்ட நீதிபதி. "வீரனே!" வணிகன் எதுவும் கூறத் தேவையில்லை. நீயே உனது குற்றத்தை ஒப்புக் கொண்டாய். "வீம்புக் குணம் படைத்த உனக்கு, வணிகன் எந்த வகையிலும் நஷ்ட ஈடு தரத் தேவையில்லை" என்று தீர்ப்பு கூறினார்.

நீதிபதியின் தீர்ப்பைக் கேட்டதும், வீம்புக் குணம் படைத்த வீரன் முகத்தில் அசடு வழிந்தது. அதைக்கேட்ட வணிகன், "ஐயா நீதிபதி அவர்களே! நான் மௌனமாய் இருந்ததற்கு மன்னித்துவிடுங்கள்; உண்மையைப் புரிந்துகொண்டு நல்ல தீர்ப்பளித்தீர்கள்; மிகவும் நன்றி!" என்று கூறினான்.

**நீதிக் கருத்து: வீம்பு செய்தால் துன்பம் உண்டாகும்.**

## வாங்க பேசலாம்

- 'வீம்பால் வந்த விளைவு' கதையை உமது சொந்த நடையில் கூறுக.
- பால் பண்ணையில் வரிசையில் நின்று, பால் வாங்கும்போது ஒருவன் இடையில் குறுக்கே வந்து பால் வாங்கினால் நீ என்ன செய்வாய்?

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்

### வினாக்களுக்கு விடையளிக்க

1. வணிகன் எதில் சென்று வாணிகம் செய்தான்?
2. வணிகன், வீரனிடம் என்ன கூறினான்?
3. வணிகனின் குதிரை, வீரனின் குதிரையை என்ன செய்தது?
4. 'வீம்பால் வந்த விளைவு' இக்கதையிலிருந்து நீ உணர்ந்து கொண்ட கருத்து யாது?

### புதிருக்குப் பொருத்தமான படத்தைப் பொருத்துக

எதிரிகளை வீழ்த்துவான்;
நாட்டைக் காப்பான்.– அவன் யார்?



பந்தயத்தில் வேகமாய் ஓடிடுவான்;
பரிசுகள் பல வென்றிடுவான்.– அவன் யார்?



நான் இல்லையென்றால்,
நீங்கள் யாரையும் பார்க்க முடியாது.
நான் யார்?



பெரிய தேரைத்தாங்கும், ஒரு சிறிய பையன்



## மொழி விளையாட்டு

கட்டங்களில் உள்ள சொற்களைக் கண்டுபிடித்து, வட்டமிட்டுப் பழங்களுக்குள் எழுதுக.

| வ | ணி | க | ன் | இ | உ | நீ |
|---|---|---|---|---|---|---|
| கி | ப | ம | ரு | வ | நூ | தி |
| த | ன் | கு | தி | ரை | ச் | ப |
| ஒ | கா | ல் | னி | தீ | செ | தி |
| ய் | வீ | ர | ன் | மி | ல் | தை |
| வு | கு | ண | ம் | து | ங் | வ் |




## மீண்டும் மீண்டும் ஒலிப்போமா?

1. மலையில் பழுத்த பழம் குலை குலையாய்த் தொங்குது
2. வாழைப்பழத்தோலில் நடந்து வழுக்கி விழுந்தேன். கீழே பார்த்தேன் 'வழவழ'ன்னு தரை இருந்தது
3. அழுத குழந்தை புரளுது. ஆளுக பார்த்தால் விழுதப் பிடிச்சு ஊஞ்சலாடுது

## விடுபட்ட சொற்களைப் படத்திலுள்ள எழுத்துகளைக் கொண்டு நிரப்புக.

1. வணிகன் _______________ அயர்ந்துவிட்டான்
2. _______________ குணம் படைத்த உனக்கு நஷ்டஈடு தரத் தேவையில்லை
3. வணிகனின் குதிரை, வீரனின் குதிரையை _______________ உதைத்துத் தள்ளிவிட்டது
4. வணிகன், வாணிகம் செய்துவிட்டு _______________ எடுக்க நினைத்தான்
5. வீரனுடையகுதிரையின்_______உடைந்துவிட்டது.



## கலையும் கைவண்ணமும்

வண்ணமிட்டு மகிழ்க



### கட்டத்தில் உள்ள மூலிகைச் செடிகளின் பெயர்களை வட்டமிட்டு எடுத்து எழுதுக.

| து | ள | சி | ன் | ர் | பி | வ் | ளி |
|---|---|---|---|---|---|---|---|
| ம் | ச் | ற | கெ | பி | ர | க | கா |
| வ | ல் | லா | ரை | த் | ண் | வா | க் |
| ளை | ந | வ | ன | க் | டை | ற் | த |
| வ | ர | வெ | ற் | றி | லை | சா | த் |
| து | மெ | யா | ப் | கி | ம் | வ | ண |
| தூ | செ | மை | ழை | றா | ற் | க | ம |

1. துளசி
2.
3.
4.
5.
6.
7.





மாலா, தின்பண்டம் வாங்கிச் சாப்பிட தன் பெற்றோரிடம் தினமும் பணம் கேட்பாள். தராவிட்டாலும் அடம்பிடித்து வாங்கிவிடுவாள்.

கயல்விழி, பெற்றோர் வாங்கித் தந்தால் மட்டுமே தின்பண்டம் சாப்பிடுவாள்.

## எதிலிருந்து எதைப் பெறுவோம் என்பதை விடுபட்ட இடத்தில் நிரப்புக











| மரம் | கொடி | செடி |
|---|---|---|
| ____________ | ____________ | ____________ |
| ____________ | ____________ | ____________ |
| ____________ | ____________ | ____________ |

# உயர்திணையும் அஃறிணையும்

எழிலி : "அப்பா, அப்பா, இங்கே வாங்க, இந்தப் பூனையைப் பாருங்க. காலெல்லாம் ஒரே சேறு. அந்தச் சேற்றுக் காலோட நம்ம வீட்டுக்குள்ளும் வந்திருக்கு".

அப்பா : "அட, ஆமா! எங்கேயிருந்து சேற்றைப் பூசிக்கொண்டு வந்ததுன்னு தெரியலேயே?"

எழிலி : "என்னப்பா, இது? தரையில என்ன இருக்குன்னு இந்தப் பூனைக்குத் தெரியாதா? பார்த்து நடக்கலாம்ல."

அப்பா : "அது சரி, எழிலி, நீயா இருந்தா என்ன செய்வே?"

எழிலி : ஐ! நானா இருந்தா, கால்ல சேறு படாம ஒரே தாண்டா தாண்டி ஓடி வந்திருப்பேனே"

அப்பா : அதைத்தான் நானும் சொல்ல வர்றேன். சேற்றில் கால் பட்டால் அழுக்காகும்னு உனக்குத் தெரியுது. ஆனால், பூனைக்குத் தெரியலே. ஏன் தெரியுமா?

எழிலி : தெரியலயே, நீங்களே சொல்லுங்கப்பா.

அப்பா : ஏன்னா, நாமெல்லாம் உயர்திணை. விலங்கு, பறவையெல்லாம் அஃறிணை. அதனாலதான், என்ன நடக்கப்போகுதுன்னு நமக்குத் தெரியுது. ஆனா, விலங்கு, பறவைக்கு நாம என்ன செய்றோம்? செய்தா என்னாகும்னு புரிந்துகொள்ள முடியல.

எழிலி : ஓ! அதுதானா? அது சரிப்பா, உயர்திணை, அஃறிணைன்னு சொன்னீர்களே, அப்படின்னா என்னப்பா?

அப்பா : நான் கேட்கிறதுக்கு முதல்ல விடை சொல்லு, உன்னைச் சுற்றி யாரெல்லாம் இருக்காங்க?

எழிலி : இம். இம்... நீங்க, அம்மா, அண்ணா, அக்கா, தம்பி, சிற்றப்பா, பெரியப்பா, அத்தை அப்புறம்...என்கூட விளையாடுவாங்களே மீனா, ரோசி, கம்ரூன், பாபு, சுரேஷ், கௌதம், சீனு, ராதிகா, ரம்யா, ஐசு, சிருஷ்டி, பாரு, வித்யூன்.....

அப்பா : போதும்....போதும். உனக்கு நிறைய நண்பர்கள் இருக்காங்கன்னு எனக்குத் தெரியும். உன்னைச் சுற்றி இருக்கிறவங்கன்னு நீ இப்ப சொன்னேல, இவங்க எல்லாருக்கும் உயிரிருக்கு. அதுமட்டுமா? நல்லது எது? தீயது எதுன்னு பகுத்துப் பார்க்கும் பண்பும் இருக்கு. இவங்க மட்டுமில்லாம நம்மைப்போலவே பண்புகள் இருக்கிற மக்கள், தேவர், நரகர் இவங்களையெல்லாம் உயர்திணைன்னுதான் சொல்றாங்க. அதுசரி, எழிலி. நீ இன்னும் வேறு என்னவெல்லாம் உன்னைச் சுற்றி இருக்குன்னு சொல்லலியே?

எழிலி : வேறே என்னப்பா இருக்கு?

அப்பா : இதோ இந்த நாற்காலி, மேசை, குடம், மின்விசிறி, புத்தகம் இதுமட்டுமல்லாம பூனை, நாய், மாடு, ஆடு முதலான விலங்குகள், கோழி, காகம், குயில், மயில், கிளி முதலான பறவைகள் அப்படின்னு நிறைய பார்க்கிறாய் அல்லவா! இவற்றில் பறவை, விலங்குகளுக்கு எல்லாம் உயிர் இருக்கு. ஆனால் நாற்காலி, மின்விசிறி இவை போன்றவற்றிற்கு உயிரில்லை. அதனால, இந்த மாதிரி உயிருள்ள, உயிரற்ற பொருள்களெல்லாம் உயர்திணைல சேர்க்க முடியாது. இவையெல்லாம் உயர்திணை அல்லாத திணை. அதனாலதான் அஃறிணைன்னு சொல்றோம். நிலம், நீர், மலை, மரம், கடல் இவையெல்லாம்கூட அஃறிணைதான்.

எழிலி : ஆனா நான் பார்க்கிற பொருள்ல இதுதான் உயர்திணை, இதுதான் அஃறிணைன்னு எப்படிப்பா கண்டுபிடிக்கறது?

அப்பா : அடடே, நீ நல்லாவே யோசிக்கிற எழிலி. ஒவ்வொரு பொருளுக்கும் ஒரு பேரு இருக்குல்லே, அதை வைத்து நீ எளிதாக் கண்டுபிடிக்கலாம். அந்தப் பெயரை வைத்தே அதற்கு உயிரிருக்கா, நம்மைப்போல அது சிந்திக்குமா? வேலை செய்யுமான்னு கண்டுபிடிக்கலாம்ல. பெயரை வைத்தே என்ன திணை, பால், எண், இடம்னு எல்லாத்தையும் கண்டுபிடிக்கலாம். இதைப்பற்றி இன்னும் விரிவா நாளைக்குச் சொல்றேன். இதுவரைக்கும் சொன்னதில என்ன புரிஞ்சு கிட்டன்னு எனக்கும் தெரியணும்ல தென்னை மரம் உயர்திணையா, அஃறிணையா, எங்கே சொல்லு பார்க்கலாம்.

எழிலி : இம்... இம் மரமெல்லாம் அஃறிணைதானே. தென்னைமரம் அஃறிணைதாம்பா. இப்ப நல்லாப் புரிந்துகொண்டேன் அப்பா.

திணை என்பது, ஒழுக்கம். அதன் அடிப்படையில் உயர்திணை, அஃறிணை என இரண்டாகக் கூறுவர்.

### எது உயர்திணை? எது அஃறிணை?

**பிரித்து அறிவோமா?**

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| வாளி | கன்று | மீன் | முருகன் | பசு | கழுதை | குருவி |
| வண்டு | தேனீ | செல்வி | ஒட்டகம் | எறும்பு | குழந்தை | மரங்கள் |
| சிறுமியர் | நாற்காலி | மேசை | மின்விசிறி | சிறுவர் | விலங்கு | பறவை |







## செயல் திட்டம்



உங்கள் வீட்டில் நீங்கள் காணும் பொருள்களை உயர்திணை, அஃறிணை என்று வகைப்படுத்தி எழுதி வருக.

# 21 மழைநீர்

மழைநீர் வெள்ளம் ஓடியே
மண்ணில் வீணாய்ச் செல்லுதே
உழைப்பின் வியர்வை போலவே
உயர்வாய் எண்ண வேண்டுமே !

பொன்னும் பொருளும் போலவே
பொழியும் நீரும் செல்வமே
விண்ணின் கொடை என்பதில்
வியப்பு ஒன்றும் இல்லையே !

குளங்கள் ஏரி நிரம்புமே
குருவி கொக்கும் வாழுமே
வானின் அமுதம் சேமித்தே
வாழ்வைச் செம்மை செய்வமே !

நாடும் வீடும் செழிக்கவே
நல்ல தண்ணீர் வேண்டுமே
ஓடும் நீரைத் தேக்கியே
உலகின் பசியைத் தீர்ப்பமே !

உழவும் தொழிலும் ஓங்கவே
உற்ற துணை மழைதானே
வளமும் நலமும் நிறைந்திட
வணங்கி மழையைப்
போற்றுவோம்!

மனிதர் பறவை விலங்குகள்
மகிழ்ந்து வாழத்தேவையே
இனிய மழை வரும்போதே
இல்லம் முழுதும் சேமிப்போம் !



## வாங்க பேசலாம்

- பாடலை ஓசை நயத்துடன் பாடி மகிழ்க
- மழை பற்றி ஏற்கெனவே நீ அறிந்த பாடலைப் பாடி மகிழ்க
- மழை உனக்கு எவ்வளவு பிடிக்கும் என்று உம் சொந்த நடையில் பேசுக

## ஒரே ஓசையில் முடியும் சொற்களைப் பாடலிலிருந்து எழுதுக

| செல்லுதே | ஓடியே | போலவே | வேண்டுமே |
|---|---|---|---|
| __________ | ___________ | ___________ | ___________ |
| __________ | ___________ | ___________ | ___________ |

## முதலெழுத்து ஒன்றி வரும் சொற்களை எழுதுக

பொன்னும், பொழியும்

______________________ ______________________

______________________ ______________________

______________________ ______________________

## இரண்டாவது எழுத்து ஒன்றி வரும் சொற்களை எழுதுக

மனிதர், இனிவரும்

______________________ ______________________

______________________ ______________________

______________________ ______________________

## அகரமுதலியைப் பார்த்துப் பொருள் எழுதுக.

1) பொழியும் – ________________ 2) செம்மை – ________________

3) ஓங்குதல் – ________________ 4) இல்லம் – ________________

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்

### சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

1. தேக்குதல் – என்ற சொல்லின் எதிர்ச்சொல்--------------

அ) நீக்குதல் ஆ) தெளிதல்

இ) சேமித்தல் ஈ) பாதுகாத்தல்

2. வானின் அமுதம் – இச்சொல் குறிப்பது------------------

அ) அமிழ்தம் ஆ) அமிர்தம்

இ) சோறு ஈ) மழைநீர்

3. மழையாகுமே – இச்சொல்லைப் பிரிக்கக் கிடைப்பது

அ) மழை + யாகுமே ஆ) மழையாய் + யாகுமே

இ) மழை+ ஆகுமே ஈ) மழையாய் + ஆகுமே

C53EU2

4. நினைத்தல் – இச்சொல்லுக்குரிய எதிர்ச்சொல்

அ) கூறுதல் ஆ) எண்ணுதல்

இ) மறத்தல் ஈ) நனைத்தல்

### 'பொன்னும் பொருளும்' இதுபோன்று 'உம்' சேர்ந்துவரும் சொற்களைப் பாடலிலிருந்து எடுத்து எழுதுக.

____________________ ____________________

____________________ ____________________

# இணைந்து செய்வோம்

### பொருத்துவோமா?

| | |
|---|---|
| 1. நாடும் வீடும் | வேண்டுமே |
| 2. வளமும் நலமும் | சேமிப்போம் |
| 3.இல்லத்தில் நீரை | மழையாகுமே |
| 4. உற்ற துணை | செழிக்கவே |
| 5. உயர்வாய் எண்ண | நிறைந்திட |



### சிந்திக்கலாமா?

மழை பொழியும் போது மழைநீரைப் பாத்திரங்களில் பிடித்து வைக்கச் சொல்வார் மான்விழியின் அம்மா. ஆனால், மான்விழியோ ஓடும் நீரில் கப்பல் செய்து விளையாடியபடியே இருப்பாள். மழைநீரைச் சேமிக்கச் சொல்லி, மான்விழியின் அம்மா ஏன் கூறுகிறார்?

## கலையும் கைவண்ணமும்

### தேவையான பொருள்கள்

மண் குவளை அல்லது மின்னட்டை

வண்ணக்குழம்பு –பல நிறம்

தண்ணீர் வாளி

முக்கால் பாகம் நீர் நிரம்பிய வாளியில் வண்ணக் குழம்புகளைத் தேவையான அளவு சேர்க்க வேண்டும். (விரும்பிய வண்ணங்கள் ஒவ்வொரு மூடி) அந்த வண்ணக் குழம்பை, ஒரு குச்சியால் கலக்கவேண்டும். அதில், குவளை அல்லது மின்னட்டையை மூழ்கச் செய்து எடுக்கவேண்டும். இப்போது, அழகான வண்ணங்களுடன் கூடிய குவளை அல்லது மின்னட்டையைக் கண்டு மகிழலாம்.

## சொல்லக் கேட்டு எழுதுக

1) மழைநீர் 2) வெள்ளம் 3) குளங்கள் 4) தண்ணீர்

5) கொடை 6) வியர்வை 7) ஓங்குதல் 8) போற்றுவோம்

## இடமிருந்து வலமாகவும் வலமிருந்து இடமாகவும் படித்துப் பார்ப்போம். விடுபட்ட இடத்தை நிரப்பி மகிழ்வோம்

| | |
|---|---|
| மாலா போலாமா? | கு _ கு |
| யானை பூனையா? | பா _ பா |
| மேளதாளமே | தா _ தா |
| மாறுமா? | கா _ கா |



### செயல் திட்டம்

மழைநீர் சேமிப்புத் தொட்டியுடன் கூடிய படத்தை வரைந்து வண்ணம் தீட்டி வருக.

# 22 காகமும் நாகமும்


காகம் ஒன்று ஆலமரத்தில் கூடு கட்டி வாழ்ந்து வந்தது
FIRH2C
காகம் இரை தேட வெளியேச் சென்றது
தினந்தோறும் பாம்பு ஒன்று வந்து முட்டைகளை உடைத்தது
தினந்தோறும் உடைந்த முட்டைகளைப் பார்த்த காகம் மிகவும் வருத்தம் அடைந்தது
காகம் தன் நண்பன் நரியிடம் அறிவுரை கேட்டது
நண்பனே! அந்தக் கொடிய பாம்பை அழிப்பதற்கு ஒரு வழி சொல்
இளவரசியின் விலையுயர்ந்த பொருள் ஏதாவது ஒன்றை எடுத்துக் கொண்டு வந்து முட்டைகள் இருக்கும் கூட்டின் அருகே போட்டுவிடு


சரி! நீ சொன்னபடியே கொண்டுவந்து போடுகிறேன். அப்படிப் போட்டால் என்ன நடக்கும்?
முதலில் நீ கொண்டுவந்து போடு. அப்புறம் என்ன நடக்கிறது என்று பார்!
இளவரசி தன் தோழிகளுடன் குளத்தில் நீராடிக் கொண்டிருக்க, கரையில் முத்துமாலை இருப்பதை காக்கை பார்த்துக் கொண்டிருந்தது.
காக்கை, இளவரசியின் முத்துமாலையைக் கொத்திக்கொண்டு பறந்தது
யாரங்கே? … காவலர்களே அந்தக் காகம் என் முத்துமாலையை எடுத்துச்செல்கிறது அதைப் பிடியுங்கள்
காவலர்கள் வேல்களுடன் காக்கையைத் துரத்திக் கொண்டு ஓடினர்




**நீதிக் கருத்து : பிறருக்குத் தீங்கு செய்யாமல் வாழ்தல்**

## வாங்க பேசலாம்

- பாம்பு காகத்தின் முட்டைகளை உடைத்தது சரியா? கலந்துரையாடுக.
- காகமும் நாகமும் கதையை உமது சொந்த நடையில் கூறுக.

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்

### சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

1. காகம் ___________ வாழும்

அ) கூட்டில் ஆ) வீட்டில்

இ) புற்றில் ஈ) மண்ணில்

2. நண்பர்கள் இச்சொல்லின் எதிர்ச்சொல்

அ) அன்பானவர்கள் ஆ) உறவினர்கள்

இ) பகைவர்கள் ஈ) நெருங்கியவர்கள்

3. முத்துமாலை இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது

அ) முத்து + மாலை ஆ) முத்தும்+ மாலை

இ) முத்தும்+ ஆலை ஈ) முத்து+மலை

4. மரம் + பொந்து இதனைச் சேர்த்து எழுதக் கிடைப்பது

அ) மரம்பொந்து ஆ) மரப்பொந்து

இ) மரப்பந்து ஈ) மரபொந்து

QQISMK

## வினாக்களுக்கு விடையளிக்க.

1. காகத்தின் முட்டைகளைப் பாம்பு என்ன செய்தது?
2. பாம்பை அழிப்பதற்காகக் காகம் யாரிடம் ஆலோசனை கேட்டது?
3. 'காகமும் நாகமும் 'கதை உணர்த்தும் நீதி என்ன?

## புதிருக்குப் பொருத்தமான படத்தைப் பொருத்துக

நான் ஒரு  வீட்டு விலங்கு ;
இலை, தழைகளை உண்பேன். நான் யார்?





மரத்திற்கு மரம் தாவுவேன்;
வாழைப்பழம் விரும்பி உண்பேன்.. நான் யார்?



கரும்பே எனக்கு உணவாகும்
கருமை எனது நிறமாகும்.– நான் யார்?

## முறைமாறியுள்ள சொற்களை முறைப்படுத்தித் தொடர் உருவாக்குக

1. ஒன்று      கொக்கு      இருந்தது    குளக்கரையில்

_______________________________________

2. எண்ணியது      சாப்பிட      மீன்களைச்

_______________________________________

3. அனைத்தும்      சென்றன      விளையாடிச்

_______________________________________

## எந்த உயிரினத்திற்கு என்ன பண்பு?

**உயிரினம்** | **பண்பு**



ஒற்றுமை



சுறுசுறுப்பு



கூட்டமாக வாழும்



நன்றியுணர்வு

## மொழி விளையாட்டு

**ஒவ்வோர் எழுத்தாகச் சேர்ப்போமா?**

1. தா

    தாய்

        தாய்மை

2. வா

    ________

        _________

3 தூ

    ________

        _________

4 கா

    ________

        _________

## பெயர் எது? செயல் எது?

| | | பெயர் | செயல் |
|---|---|---|---|
| 1. | குதிரை வேகமாக ஓடியது | _______________ | ____________ |
| 2. | ஆசிரியர் பாடம் நடத்தினார் | _______________ | ____________ |
| 3. | குழந்தை சிரித்தது | _______________ | ____________ |

## கலையும் கைவண்ணமும்





**செயல் திட்டம்**

பறவை இறகுகளைச் சேகரித்து வருக.

முத்துமாலை படம் வரைந்து வண்ணம் தீட்டி வருக.

# 23 நல்வழி




## பாடல் பொருள்

ஆற்றில் நீர் வற்றியதால், அதன் வறண்ட மணல்பகுதி, வெப்பத்தால் சூடேறி நடப்பவரின் பாதங்களைச் சுடும். அத்தகைய நிலையிலும் அந்த ஆற்று மணலைத் தோண்டுகின்றபோது, சுரக்கின்ற ஊற்றானது, உலக மக்களுக்கு உணவாய் அமையும். அதுபோல, நல்ல குடிப்பிறப்பில் தோன்றியவர்கள், வறுமைநிலையில் வாடினாலும், தம்மிடம் வந்து பொருள் தருக எனக் கேட்பவர்க்கு இல்லை எனக் கூறாது, தம்மால் முடிந்தவரை கொடுத்து உதவுவார்கள்.

## நூல் குறிப்பு

நாம் வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டிய நல்ல நெறிகளைக் கூறுவது, நல்வழி. இந்நூலை இயற்றியவர், ஔவையார். இந்நூலில் கடவுள் வாழ்த்தோடு மொத்தம் 41 வெண்பாக்கள் அமைந்துள்ளன.



## வாங்க பேசலாம்

உங்களிடம் ஒரு பழம்தான் இருக்கிறது. உங்கள் தம்பியும் தங்கையும் அந்தப் பழம் வேண்டுமென்று கேட்கிறார்கள். அவர்களுக்குப் பழத்தைப் பிரித்துக் கொடுப்பீர்களா? நீங்களே எடுத்துக் கொள்வீர்களா? உங்கள் கருத்தைக் கூறுக.



## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்

### சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

1. 'உலகூட்டும்' இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது____________________

அ) உல+கூட்டும் ஆ) உலகு + கூட்டும்

இ) உலகு + ஊட்டும் ஈ) உலகூட்டு + உம்

2. 'அந்நாளும்' இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ______________

அ) அந் + நாளும் ஆ) அ + நாளும்

இ) அந்நா + ளும் ஈ) அந்த + நாளும்

U57UUV

3. 'இசைந்து' இச்சொல்லின் பொருள் ____________________

அ) மறுத்து ஆ) பாடி

இ) ஒப்புக்கொண்டு ஈ) உதவி

### இரண்டாம் எழுத்து ஒன்று போல் வரும் சொற்களைப் பாடலிலிருந்து எழுதுக.

1. ஆற்று – ஊற்று
2. ____________________
3. ____________________

## வினாக்களுக்கு விடையளிக்க.

1. நல்வழி என்னும் நூலை எழுதியவர் யார்?
2. ஊற்று நீரைக் கொடுப்பது எது?
3. நல்ல குடிப்பிறந்தாரின் இயல்பு எத்தகையது?

## பாடலை நிறைவு செய்க

ஆற்று நீரில் துள்ளியே
அழகாய் நீந்தும் மீன்களே

_____ _____ _____
_____ _____ _____
_____ _____ _____
_____ _____ _____

## கலையும் கைவண்ணமும்



## பொருத்துக

| | |
|---|---|
| நல்ல | மனம் |
| ஆற்று | குணம் |
| மணல் | நீர் |
| உதவும் | வீடு |

## மொழி விளையாட்டு

இரண்டாம் எழுத்தை மாற்றிப் புதிய சொல் உருவாக்கலாமா?

1. படம் – பழம், பணம், பதம்
2. நலம் – ----, ----, ----
3. உதவு – ----, ----, ----
4. பத்து – ----, ----, ----
5. குயில் – ----, ----, ----



**சிந்திக்கலாமா?**

ஒருவர் செல்வம் படைத்தவராயிருந்தும் பிறர்க்கு உதவாமல் இருப்பதாக நீங்கள் அறிகிறீர்கள். உதவுவதால் ஏற்படும் நன்மைகளைப் பற்றி அவர்க்கு எப்படி எடுத்துச் சொல்லலாம்?

## அறிந்து கொள்வோம்

தொட்டனைத்து ஊறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத்து ஊறும் அறிவு

– திருக்குறள்

ஐயம் இட்டு உண் – ஆத்திசூடி

## எதிர்ச்சொல் எழுதுவோம்

பனிக்கட்டி குளிர்ச்சியாய் இருக்கும்.
நெருப்பு _____ இருக்கும்.





பூனை மேசையின் மேல் இருந்தது.
எலி, மேசையின் ------- இருந்தது.





தங்கை ------- சென்றாள்.
அண்ணன் உள்ளே வந்தான்.





சிறுவன் பேருந்தில் ---------.
சிறுமி பேருந்திலிருந்து இறங்கினாள்.






## பொருத்தமான சொல்லைத் தேர்ந்தெடுப்போமா?

1. ஆற்றின் ஓரம்--------------.ஆடையில் இருப்பது------------ (கறை, கரை)

2. காட்டில் வாழ்வது-----------. கடையில் விற்பது-------------- (புலி, புளி)

3. மனிதர் செய்வது------------. மரத்தை அறுப்பது-------------- (அறம், அரம்)

4. மீனைப் பிடிப்பது------------. கையில் அணிவது------------- (வளை, வலை)

5. பொழுதைக் குறிப்பது---------. பொறுப்பாய்ச் செய்வது---------- (வேலை, வேளை)

6. ஒழுக்கத்தைக் குறிப்பது-------. உணவுப் பயிரைக் குறிப்பது------ (தினை, திணை)

7. உயர்ந்து நிற்பது------------. உனக்குப் பிடிக்கும்------------- (மழை, மலை)

8. வீரத்தைக் குறிப்பது----------. விறகைத் தருவது-------------- (மரம், மறம்)

9. விடிந்த பின் வருவது---------. வீரத்தால் அடங்குவது----------- (காளை, காலை)

10. சான்றோர் வெறுப்பது--------. சாலையில் கிடப்பது------------- (கல், கள்)

## வேறுபட்ட வண்ணத்தில் உள்ள எழுத்துகளைச் சேர்த்தால் கிடைக்கும் ஆடை வகைகளை எழுதுக.

| | | | | |
|---|---|---|---|---|
| பள்ளம் | அரும்பு | பார்த்திபன் | ஆர்த்தி | ----------- |
| பருந்து | வட்டம் | கசடு | | ----------- |
| கம்பு | பம்பரம் | அப்பம் | தக்காளி | ----------- |

# 24 தமிழ்மொழியின் பெருமை

உலகில் உள்ள மொழிகளுள் மிகவும் தொன்மை வாய்ந்தது தமிழ்மொழி. 'அமிழ்தினும் இனிய மொழியாக' நம் தமிழ்மொழி விளங்குகிறது. தமிழ், தமிழ் என்று சொல்லிப் பாருங்கள். உங்கள் காதில் '**அமிழ்து, அமிழ்து** எனத் தேனாய்ப் பாய்வதை உணர்வீர்கள். அதனால்தான், பாரதியாரும்,

'செந்தமிழ் நாடெனும் போதினிலே இன்பத்
தேன் வந்து பாயுது காதினிலே என்று பாடியுள்ளார். மேலும்,

'யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவது எங்கும் காணோம்'

எனத் தமிழைப் போற்றிப் புகழ்கிறார்.

'தமிழுக்கும் அமுதென்று பேர் – இன்பத்
தமிழ்எங்கள் உயிருக்கு நேர்'

எனப் பாரதிதாசனாரும் தமிழின் பெருமையைக் கூறுகிறார்.

இயல், இசை, நாடகம் என்னும் மூன்றும் இணைந்தது, முத்தமிழ். இம்மூன்று துறைகளின் கீழ் தமிழ்மொழியின் வெளிப்பாட்டைக் காணலாம்.

எழுத்துநடை வாயிலாக வெளிப்படுவது, இயல்
பாடல்கள் மூலம் வெளிப்படுவது, இசை
அங்க அசைவுகளுடன் வெளிப்படுவது, நாடகம்



பழங்காலத்தில் தமிழர்கள் பயன்படுத்திய மண்பாண்டங்கள், அணிகலன்கள், பண்பாட்டை வெளிப்படுத்தும் ஆடைகள் ஆகியவற்றை அறிந்துகொள்ள அகழாய்வுகள் உதவுகின்றன. அண்மையில் சிவகங்கை மாவட்டத்தில் 'கீழடி' என்னுமிடத்தில் நடைபெற்ற அகழாய்வில் தமிழர்களின் பண்பாட்டு அடையாளங்கள் வெளிப்பட்டுள்ளன. இதன் மூலம் தமிழ்மொழி 'ஆதித் தமிழர் மொழி' என்பது புலப்படுகிறது.

கணியன் பூங்குன்றனார் எழுதிய 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்' என்னும் புறநானூற்றுப் பாடல் தொடர் இன்றளவிலும் ஐக்கிய நாடுகள் அவையில் தமிழ்மொழியின் பெருமையை உலகிற்கு உணர்த்தும் வகையில் அமைந்துள்ளது.

நடுவண் அரசு 12.10.2004 ஆம் ஆண்டு தமிழ்மொழியானது, பிறமொழிகளின் துணையின்றித் தனித்து இயங்கும் திறனுள்ள 'செம்மொழி' என அறிவித்துள்ளது. இது தமிழ்மொழிக்கு வளமை சேர்ப்பதாக உள்ளது.

தமிழர்களின் வீர விளையாட்டுகளை விளக்கும் பாறை ஓவியங்கள், கல்வெட்டுகளில் காணப்படும் அரசர்களின் கொடை பற்றிய செய்திகள், இலக்கியங்கள் குறிப்பிடும் பண்பாட்டுக் கூறுகள் போன்ற யாவும் தமிழர்களின் வீரம், கொடை, பண்பாடு, விருந்தோம்பல் முதலான பண்புகளைத் தெளிவாக விளக்குகின்றன.

'தமிழன் என்று சொல்லடா
தலை நிமிர்ந்து நில்லடா'

என்னும் பாடல் வரிகள், தமிழர்களின் பெருமையைக் கூறுகின்றன. தமிழர்களின் எழுத்து, சொல், உணர்வு, ஒழுக்கம், வாழ்வு, பண்பாடு ஆகியவற்றைத் தமிழின் தொன்மை இலக்கணநூலான தொல்காப்பியம் எடுத்துக் கூறுகிறது. உலக மக்கள் அனைவரும் ஏற்றுக்கொள்ளும் வகையில் சிறப்புப் பெற்று விளங்கும் நூல், திருக்குறள். 'உலகப் பொதுமறை' என்று அழைக்கப்படும் இந்நூலில், தமிழரின் வாழ்வியல் நெறிகள் காணப்படுகின்றன.

தமிழ்மொழியின் சிறப்பை உணர்ந்த அயல்நாட்டார் பலரும் தமிழைக் கற்றுக் கொண்டதோடு, தமிழில் பல இலக்கண, இலக்கியங்களையும் படைத்துள்ளனர். திருக்குறளின் பெருமையை உலகறியச் செய்தவர், ஜி. யு. போப். இவர், ஆங்கிலத்தில் திருக்குறளை மொழிபெயர்த்துள்ளார். தம்மைத் 'தமிழ் மாணவன்' என்றே உலகோர் அறியச்செய்தார்.

நம் தாய்மொழியான தமிழ், ஈராயிரம் ஆண்டுக்குமேல் பேச்சிலும் எழுத்திலும் பயன்பாட்டில் இருந்து வருகிறது. நாளும் பொலிவுடன் வளர்தமிழாய் தன் பெருமையை உலக அரங்கில் நிலைநிறுத்தி வருகிறது. ஆகவே, இன்னும் எத்தனையோ ஆண்டுகள் பிறரை வாழ வைக்கவும், வழிநடத்தவும் திறமையுள்ள மொழியாக விளங்கும் நம் தமிழ்மொழியை உலகில் உள்ளோர் பாராட்டும் வகையில் மென்மேலும் உயர்த்த உறுதுணையாக இருப்போம்.



## வாங்க பேசலாம்

தமிழின் இனிமையைப் பாரதியார் எப்படியெல்லாம் புகழ்கிறார்? கலந்துரையாடுக.



## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்

### சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

1. தமிழுக்கும் அமுது என்று பேர் என்று பாடியவர்----------------

அ) பாரதியார் ஆ) கண்ணதாசன்

இ) கவிமணி ஈ) பாரதிதாசன்

CJL9VD

2. 'செம்மை + மொழி' இச்சொற்களைச் சேர்த்து எழுதக் கிடைப்பது-----------

அ) செம்மொழி ஆ) செம்மொலி

இ) செம்மொளி ஈ) செமொழி

3. 'கீழடி' அகழாய்வு நடந்த மாவட்டம்--------------

அ) புதுக்கோட்டை ஆ) தருமபுரி

இ) சிவகங்கை ஈ) திருச்சி

4. 'ஆதித்தமிழர்' இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது--------------

அ) ஆதி+ தமிழர் ஆ) ஆதி + தமிளர்

இ) அதி + தமிழர் ஈ) ஆதீ + தமிழர்

5. பொலிவு – இச்சொல்லுக்குரிய பொருள்------------

அ) மெலிவு ஆ) அழகு

இ) துணிவு ஈ) சிறப்பு

## கீழ்க்காணும் சொற்றொடர்களைப் படித்துச் சரி ✓ தவறு X எனக் குறியிடுக.

1. இயல், இசை, நாடகம் ஆகியன தமிழின் பெருமையை வெளிப்படுத்தின [      ]
2. தமிழ்மொழி 'ஆதித்தமிழர் மொழி' இல்லை [      ]
3. 'வீரம்' தமிழரின் பண்புகளுள் ஒன்று [      ]
4. "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்னும் தொடர் ஆத்திசூடியில் உள்ளது. [      ]
5. சிவகங்கையிலுள்ள கீழடியில் அகழாய்வு நடைபெறவில்லை. [      ]

## அகரமுதலியைப் பார்த்துப் பொருள் எழுதுக

தொன்மை – ______________________________

அகழாய்வு – ______________________________

ஆபரணம் – ______________________________

கேளிர் – ______________________________

பொலிவு – ______________________________

## மொழி விளையாட்டு

சரியான எழுத்தைத் தேர்ந்தெடுத்துச் சொல்லை முழுமையடையச் செய்க.

இ | சை |   — கை, சை, நை

நா |   | க | ம் — ப, ள, ட

பா |   — ணை, றை, நை

  | ழ | டி — நீ, சீ, கீ

## வினாக்களுக்கு விடையளிக்க

1. தமிழ்மொழியின் பெருமைகளுள் இரண்டு எழுதுக.
2. 'கீழடி' அகழாய்வில் கண்டுபிடிக்கப்பட்ட பொருள்கள் யாவை?
3. தமிழரின் பெருமையைக் கணியன் பூங்குன்றனார் எவ்வாறு வெளிப்படுத்துகிறார்?
4. தமிழ்மொழி 'செம்மொழி' என்று ஏன் அழைக்கப்படுகிறது?
5. தமிழ்மொழி பற்றி நீவிர் அறிந்த கருத்தை எழுதுக.

## பழத்திற்குள் உள்ள சரியான சொல்லைத் தெரிவு செய்து, சொற்றொடர் உருவாக்குக.

1.) இயல் என்பது 

நடை.

இயல் என்பது, எழுத்து நடை

2.)பாறை ஓவியங்களில் தமிழர்களின் 

விளையாட்டுகள் பற்றிய செய்திகள் உள்ளன.

---

3.) பிறமொழி உதவி இல்லாமல் தனித்து இயங்குவதால், தமிழ்மொழி 

ஆகும்.

---

4.) நடுவண் அரசு 

ஆம் ஆண்டு தமிழைச் 'செம்மொழி' என அறிவித்தது.

---

## சிந்திக்கலாமா?





இனியன் தன் நண்பர்களிடம் பிறமொழிகள் கற்பதிலேயே, ஆர்வம் காட்டுவேன் என்று கூறுகிறான்

வீணா தன் தோழிகளிடம் பிறமொழிகளையும் கற்பேன் தமிழ்மொழிக்கு முதலிடம் தருவேன். ஏனெனில் தாய்மொழியே சிந்திக்கும் திறனை வளர்க்கும் என்கிறாள்



**இனியன், வீணா இவர்களின் பேச்சிலிருந்து நீங்கள் அறிந்து கொள்வது என்ன?**

## அறிந்து கொள்வோம்

**லிங்குவா என்பது இலத்தின் மொழிச்சொல் இச்சொல் மூலம் லாங்கவேஜ் என்ற சொல் தோன்றியது. இதனைத் தமிழில் நாம் 'மொழி' என அழைக்கிறோம்.**

# 25 அறிவூட்டும் தொலைக்காட்சிச் செய்திகள்

ஒருநாள் மாலைப்பொழுது. இளவரசி, பூங்குழலி இருவரும் பள்ளி முடிந்து வீடு திரும்பினர். அப்பொழுது வானில் விமானம் ஒன்று பறந்து கொண்டிருந்தது. சிறிது நேரத்தில் கருமேகங்கள் சூழ்ந்து பேரொலியுடன் இடி இடிக்கத் தொடங்கியது. அச்சமயம் பெய்த மழைத் தூறல், இளவரசியையும் பூங்குழலியையும் நனைத்தது.

**இளவரசி :** நாம் வீட்டிற்குச் செல்வதற்குள் முழுவதுமாக நனைந்து விடுவோம்போல் இருக்கிறதே! அதோ, அந்தக் கடையில் சிறிதுநேரம் நின்றுவிட்டு, மழைவிட்டதும் செல்வோமா?

**பூங்குழலி :** சரி. நாமாவது மழையில் நனையாமலிருக்க இங்கே ஒதுங்கி விடுகிறோம். ஆனால் இந்த விமானங்கள் மழையில்கூட வானில் பறக்கின்றன. அவற்றின் பாதையை இந்தக் கருமேகங்கள் மறைக்காதா?

**இளவரசி :** மறைக்காது. ஏனெனில், விமானங்கள் கருமேகங்களைத் தாண்டி உயரத்தில் பறக்கின்றன.



**பூங்குழலி :** அது எப்படி உனக்குத் தெரியும்?

**இளவரசி :** நான் தொலைக்காட்சி நிகழ்ச்சி ஒன்றில் இதைப் பார்த்தேன். அதில் விமானம் பறப்பது பற்றி விரிவாகக் கூறினார்கள்.

**பூங்குழலி :** அப்படியா? தொலைக்காட்சியில் இது பற்றியெல்லாம் சொல்கிறார்களா?

**இளவரசி :** ஆம். பார்ப்பதற்கு மிகவும் ஆர்வமாக இருந்தது. விமானம் உயரத்தில் பறக்குமாறு வடிவமைக்கப்பட்டுள்ளது. புயல், மேகமூட்டம், இடி, மழை போன்றவற்றால் அதன் பயணம் பாதிக்கப்படுவதில்லை என்பதைக் குறும்படம் மூலம் விளக்கினார்கள்.

**பூங்குழலி :** கேட்பதற்கே வியப்பாக இருக்கிறதே! வேறு என்னென்ன நிகழ்ச்சிகளை நீ தொலைக்காட்சிகளில் பார்த்திருக்கிறாய்? மழை, தூறலாகத்தான் இருக்கிறது. பேசிக்கொண்டே செல்வோமா?

**இளவரசி :** கொஞ்சம் பொறு, பூங்குழலி. மழை இன்னும் விடவில்லை. சற்றுநேரம் கழித்துச் செல்வோம். இடிச்சத்தம் காதைப் பிளக்கிறது.

**பூங்குழலி :** இடிதானே இடிக்கிறது. மழை, பெரிதாகப் பெய்யவில்லையே, மழை வந்தால் மரத்தடியில் ஒதுங்கி நின்று விடலாமே!



**இளவரசி :** இல்லை பூங்குழலி. மரத்தடியில் நின்றால், இடிதாக்கி உயிர்களுக்கு ஆபத்து ஏற்படும் என்பதைத் தொலைக்காட்சிச் செய்தியில் பார்த்திருக்கிறேன்.

**பூங்குழலி :** ஓ! சரி, சரி.. வேறு என்னவெல்லாம் நீ தொலைக்காட்சியில் பார்த்திருக்கிறாய்?

**இளவரசி :** பொம்மைப் படங்கள், விளையாட்டு நிகழ்ச்சிகள், செய்து பார்ப்போம் போன்ற ஏராளமான நிகழ்ச்சிகளைக்கூடப் பார்த்திருக்கிறேன்.

**பூங்குழலி :** தொலைக்காட்சி என்றாலே பொழுது போக்கும் ஒரு கருவியென நான் நினைத்திருந்தேன். அதனால்தான் திரைப்படம், திரைப்பாடல்கள், நாடகத் தொடர்கள் போன்றவற்றையே அடிக்கடி பார்க்க நேரிட்டது. ஆனால், நீ கூறியதுபோல் புதிய செய்திகளை அறிந்துகொள்ளவும், அறிவை விரிவு செய்யவும் தொலைக்காட்சி உதவும் என்பதை இப்போது புரிந்துகொண்டேன். இனி, நானும் இவை போன்ற நிகழ்ச்சிகளைப் பார்த்துப் பயனடைவேன்.

**இளவரசி :** மகிழ்ச்சி. இனி, நாள்தோறும் புதுப் புதுச் செய்திகளைத் தோழிகளுக்கு நாம் இருவருமே சொல்லலாம். சரி, இப்போது மழை நின்றுவிட்டது வா, வீட்டுக்குப் போகலாம்.



### வாங்க பேசலாம்

தொலைக்காட்சி, நம் கண்ணுக்கும் காதுக்கும் மட்டுமல்ல, அறிவுக்கும் விருந்தளிக்கும் என்பதைப் பிறருக்கு நீங்கள் எப்படி உணர்த்துவீர்கள்?



## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்

### சரியான விடையைத் தெரிவு செய்வோமா?

1. விமானம் பறப்பது பற்றிய செய்தியை -------வாயிலாக இளவரசி அறிந்து கொண்டாள்.

அ) கணினி ஆ) தொலைக்காட்சி

இ) வானொலி ஈ) அலைபேசி

2. ஆர்வம் – இச்சொல்லின் பொருள்--------------

அ) வெறுப்பு ஆ) மறுப்பு

இ) மகிழ்ச்சி ஈ) விருப்பம்

JCPI9B

3. உயரம் என்ற சொல்லின் எதிர்ச்சொல்__________

அ) குட்டை  ஆ) நீளம்

இ) நெட்டை  ஈ) நீண்ட

4. தொலைக்காட்சி – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது___________

அ) தொலை + காட்சி  ஆ) தொல்லை + காட்சி

இ) தொலைக்+ காட்சி  ஈ) தொல் + காட்சி

5. குறுமை + படம் – இச்சொற்களைச் சேர்த்து எழுதக் கிடைப்பது-------------

அ) குறுபடம்  ஆ) குறுமைபடம்

இ) குறும்படம்  ஈ) குறுகியபடம்

## வினாக்களுக்கு விடையளிக்க

1. பூங்குழலியும் இளவரசியும் வானத்தில் எதைக் கண்டனர்?
2. வானில் பறக்கும் விமானம் எதனால் பாதிக்கப்படாது என்று இளவரசி கூறினாள்?
3. இளவரசி தொலைக்காட்சியில் என்னவெல்லாம் பார்த்ததாகக் கூறினாள்?

## பறவைகளின் ஒலிகளை அறிந்து கோடிட்ட இடங்களை நிரப்புவோம்



கரையும்



அகவும்



பேசும்



அலறும்



கூவும்

______________________ ______________________

______________________ ______________________

______________________

## பொருத்தமான சொல்லால் நிரப்புவோம்

ஒளிர்மதி தோட்டத்தில் பூ பறித்துக்கொண்டு இருந்தாள். ------ கையில் ஒரு பூக்கூடை இருந்தது. அப்போது பரணி அங்கு வந்தான். ______ கையில் இரண்டு பொம்மைகள் இருந்தன.----- பார்ப்பதற்கு அழகாக இருந்தன. ஒளிர்மதி, பொம்மையின் தலையில் செம்பருத்திப் பூ வைத்தாள். ______ சிவப்பு வண்ணத்தில் அழகாக இருந்தது. பிறகு, --------- மாமர ஊஞ்சலில் விளையாடினார்கள்.




## கதையைப் படித்து வினாக்களுக்கு விடையளிக்க.

தவளை ஒன்று மிகவும் உடல்நலம் குன்றியிருந்தது. அதன் குட்டித் தவளை தன் தாயைக் காப்பாற்ற நினைத்தது. மாலைநேரம் முடிவதற்குள் மலைமேல் ஏறி, மூலிகை கொண்டு வர நினைத்தது. அந்த மலையில் ஏராளமான பாம்புகள் வாழ்ந்து வந்தன. பாம்புகளால் தனக்குத் தீங்கு நேரிடும் என்று நினைத்தது குட்டித் தவளை. தன் அறிவைப் பயன்படுத்திச் சென்றால்தான் மாலைக்குள் திரும்ப முடியும் என்று நினைத்தது. மலையில் ஏறத் தொடங்கியதும், அந்தக் குட்டித் தவளை பேசத் தொடங்கியது. "முன்னே செல்லும் பருந்தாரே! பின்னே பெரிய கீரியார் மெள்ள வருகிறார், சற்றுப் பொறுத்தே செல்லுங்கள்" என்று திரும்பத் திரும்பக் கூறிக்கொண்டே சென்றது. பாம்புகள் குட்டித்தவளை கூறுவதைக் கேட்டு ஓடி ஒளிந்துகொண்டன. குட்டித்தவளை, தன் கூர் சிந்தனைத்திறனால் காலம் கடத்தாமல் விரைந்து சென்று, மூலிகை கொண்டு வந்து தன் தாயைக் காப்பாற்றியது.

1. உடல்நலம் குன்றிய நிலையில் எது இருந்தது?
2. குட்டித்தவளை, தனக்கு யாரால் தீங்கு ஏற்படும் என நினைத்தது?
3. குட்டித்தவளை தன்னைக் காப்பாற்றிக் கொள்ள, எந்தெந்தப் பெயர்களைக் கூறியது?
4. குறித்த நேரத்திற்குள் ஒரு செயலைச் செய்து முடிப்பது எதைக் குறிக்கும்?

   அ) பணிவு ஆ) காலந் தவிராமை இ) நேர்மை

## அறிந்து கொள்வோம்




### சிந்திக்கலாமா?



பாவழகி அவளுடைய எழுதுகோலைக் கையிலேயே வைத்திருப்பதால் தவறித் தொலைத்து விடுவாள்...

பாத்திமா தன் எழுதுகோலைப் பெட்டியில் வைத்துப் புத்தகப் பைக்குள் வைத்திருப்பாள் எனவே, அது பாதுகாப்பாக இருக்கிறது

உன் பொருள்களை நீ எவ்வாறு பாதுகாப்பாய்?

# கலையும் கைவண்ணமும்

**மின்அட்டையில் வாழ்த்து அட்டை உருவாக்குதல்**

தேவையான பொருள்கள்

மின் அட்டை

பசை

வண்ண நூல்கள்

- மின் அட்டையின் ஓரங்களில் வண்ண நூல்களை ஒட்டி அலங்காரம் செய்யவேண்டும்.
- நாம் விரும்பும் படம் வரைந்து அதன் மேல் வண்ண நூல்களை ஒட்ட வேண்டும்.
- தேவையான வாழ்த்துச்செய்தியை அட்டையின் நடுப்பகுதியில் எழுதி, வாழ்த்து அட்டையை உருவாக்கவேண்டும்.

## சொந்த நடையில் கூறுக.

தொலைக்காட்சியின் நன்மைகளைப் பற்றி உம் சொந்த நடையில் கூறுக



### செயல் திட்டம்

- தொலைக்காட்சியில் இடம்பெறும் கல்வி பற்றிய செய்திகளைத் தொகுத்து வருக
- உம் சுற்றுப்புறத்திலுள்ள பொருள்களை வரைந்து அவற்றின் பெயர்களை எழுதி வருக.

## பட விளக்க அகரமுதலி

| | |
|---|---|
|  | **பனிக்கரடி**<br>இது உறைபனி சூழ்ந்த ஆர்க்டிக் பகுதியில் காணப்படும். இது நீரிலும் நிலத்திலும் வேட்டையாட வல்லது. இதனைத் துருவக்கரடி எனவும் கூறுவர். |
|  | **பால்**<br>சத்துமிக்க ஓர் உணவு. இதில் கால்சியம், பொட்டாசியம், புரதம் போன்ற சத்துகள் அடங்கியுள்ளன. உலகளவில் மிகுதியாகப் பால் உற்பத்தி செய்யும் நாடாக இந்தியா விளங்குகிறது. |
|  | **பிண்ணாக்கு**<br>தேங்காய், எள், கடலை போன்றவற்றிலிருந்து எண்ணெய் எடுத்தபின் மிஞ்சும் சக்கை. இது விலங்குகளுக்கு உணவாகப் பயன்படுகிறது. |
|  | **பீர்க்கங்காய்**<br>நார்ச்சத்துமிக்க காய்களுள் ஒன்று. இதன் தோல், நோயைக் குணப்படுத்தும். |
|  | **புறா**<br>முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும் பறவைகளுள் ஒன்று. இப்பறவைகள் குச்சிகள், குப்பைகள் கொண்டு கூடு கட்டுகின்றன. இவை, தானிய வகைகளை இரையாக உட்கொள்கின்றன. |
|  | **பூண்டு**<br>மருத்துவப் பயன்மிக்க ஓர் உணவுப் பொருள். இரத்தத்தில் உள்ள கொழுப்பைக் குறைக்கக் கூடியது . |

| | |
|---|---|
|  | பெங்குயின்<br><br>குளிர் மிகுந்த பகுதிகளில் வாழும். இது, பறவை இனத்தைச் சார்ந்து இருந்தாலும், பறக்க முடியாது. மனிதர் நடப்பதுபோல இதன் நடை அமைந்திருக்கும். நீரில் நன்றாக நீந்திச் செல்லும். |
|  | பேரிச்சம்பழம்<br><br>இது, பனைவகையைச் சார்ந்தது. இது மருத்துவக் குணம் உடையது. இதில் இரும்புச்சத்து இருப்பதால், இரத்தசோகையை நீக்கும். |
|  | பை<br><br>இது பொருள்களை எடுத்துச் செல்ல உதவுகிறது. துணி முதலான பொருள்களைக்கொண்டு உருவாக்கப்படுகின்றது. பல வண்ணங்களில் சந்தையில் கிடைக்கிறது. |
|  | பொங்கல் விழா<br><br>இவ்விழா, தைமாதம் முதல்நாள் கொண்டாடப்படுகிறது. உணவுப் பொருள்களை விளைவிக்க உதவுவது இயற்கை. அதற்கு நன்றி செலுத்தும் வகையில் இதனைக் கொண்டாடுகின்றனர். |
|  | போர்வாள்<br><br>பண்டைக் காலத்தில், மன்னர்கள் பயன்படுத்திய படைக்கருவிகளுள் ஒன்று. போரிடும் காலங்களில், வீரர்கள் இக்கருவியைப் பயன்படுத்துவர். |
|  | பௌவம்<br><br>கடலைக் குறிக்கும் ஒரு சொல், பௌவம். பூமியின் பெரும்பகுதி கடலாலேயே சூழப்பட்டுள்ளது. கடல் நீர் உப்புக் கரிக்கும். கடல் நமக்கு மீன், சிப்பி, நண்டு, முத்து, பவளம் முதலான வளங்களைத் தருகிறது. |

# அகரமுதலி

| சொல் | பொருள் |
|---|---|
| அகழாய்வு | நிலத்தைத் தோண்டி ஆராய்தல் |
| அசடு | பேதைமை |
| அடாத செயல் | தகாத செயல் |
| அடையாளம் | இனங்காணல் |
| அவசரம் | விரைவு |
| அதிகம் | மிகுதி |
| அமர்ந்த | உட்கார்ந்த |
| அறிஞர் | அறிவில் சிறந்தவர் |
| ஆணவம் | செருக்கு |
| ஆதி | முதல் |
| ஆபரணங்கள் | அணிகலன்கள் |
| ஆர்வம் | விருப்பம் |
| ஆலோசனை | கருத்து |
| ஆவல் | விருப்பம் |
| ஆனந்தம் | மகிழ்ச்சி |
| ஆன்றோர் | பெரியோர் |
| இசைந்து | ஏற்றுக்கொண்டு |
| இரவாது | பிறரிடம் கேட்டுப் பெறாது |
| இலாபம் | வருமானம் |
| இல்லம் | வீடு |
| ஈதல் | கொடுத்தல் |
| உரைத்தல் | சொல்லுதல் |
| என்பு | எலும்பு |
| எழில் | அழகு |
| ஏய்த்தல் | ஏமாற்றுதல் |
| ஏராளமான | நிறைய |
| ஒலி | ஓசை |
| ஒளி | வெளிச்சம் |
| கதிரவன் | சூரியன் |
| களிப்பு | மகிழ்ச்சி |

# அகரமுதலி

காளை - எருது
குற்றம் - அழுக்கு/தவறு
கூட்டம் - திரள்
கேளாமல் - கேட்காமல்
கோபம் - சினம்
சத்தம் - ஒலி
சந்தேகம் - ஐயம்
சுகம் - நலம்
சுதந்திரம் - விடுதலை
செல்வந்தன் - பணக்காரன்
செல்வாக்கு - சொல்லுக்கு மதிப்பு
சேகரித்தல் - திரட்டுதல்
சேர்த்தல் - இணைத்தல்
ஞாலம் - உலகம்
தகவல் - செய்தி
தகுதி - தரம்
தண்டோரா - முரசறைந்து செய்தி தெரிவித்தல்
தந்திரம் - சூழ்ச்சி
தபால் - அஞ்சல்
தெளிவாக - விளக்கமாக
நல்கூர்ந்தார் - வறுமையுற்றவர்
நஷ்டம் - வருமானம் இழப்பு
நிபந்தனை - கட்டளை
நித்திலம் - முத்து
நீராடலாம் - குளிக்கலாம்
நூல் - புத்தகம்
நெறிப்படுத்துதல் - வழிகாட்டுதல்
நேர்மை - உண்மை
பகைவர்கள் - எதிரிகள்

# அகரமுதலி

| | | |
|---|---|---|
| பணி | - | வேலை |
| பதில் | - | விடை |
| பயம் | - | அச்சம் |
| பரவசம் | - | மகிழ்ச்சி |
| பல்லி | - | சிறியதோர் உயிரி |
| பள்ளி | - | கல்விக்கூடம் |
| பாதிப்பு | - | விளைவு |
| பிரமாதம் | - | பெருஞ்சிறப்பு |
| புத்திசாலி | - | அறிவாளி |
| பொலிவு | - | அழகு |
| பொழியும் | - | பெய்யும் |
| பௌவம் | - | கடல் |
| மிக்காரை | - | உயர்ந்தோரை |
| முயற்சி | - | ஊக்கம் |
| வருடுதல் | - | தடவுதல் |
| விதவிதமான | - | வகை வகையான |
| வியாபாரி | - | வணிகர் |
| விவசாயி | - | உழவர் |

# கற்றல் விளைவுகள்

| | |
|---|---|
| கேட்டல் | கேட்டறியாத, எளிய சொற்களமைந்த பாடல்களையும், கதைகளையும் கவனத்துடன் கருத்தூன்றிக் கேட்டுப் புரிந்து கொள்வர்.<br>அவற்றின் மீதான கருத்தினை/ நோக்கினை வெளிப்படுத்துவர். |
| | தம்மைச்சுற்றி நடைபெறும் உரையாடல்களையும் விவரிப்புகளையும் கேட்டுப் புரிந்து கொள்வர். |
| | வாய்மொழியிலான வருணனைகள், புதிர்கள், சொல் விளையாட்டு விதிமுறைகள் ஆகியவற்றைக் கேட்டுப் புரிந்து கொள்வர். |
| | வானொலி தொலைக்காட்சி செய்திகளைக் கேட்டுப் புரிந்து கொள்வர். |
| பேசுதல் | அறிந்த/கேட்ட கதைகளைக் கலவைத்தொடரில் பேசுவர். |
| | பாடல்களை இசையுடன் உரிய உணர்ச்சியுடன் பாடுவர்.<br>கேட்டுணர்ந்த கதை, கதைப்பாடல்களின் தலைப்புகள், கதை மாந்தர்கள் பற்றி வினாக்கள் கேட்டல், கருத்தாடல் செய்து கருத்துகளை வெளிப்படுத்துவர். |
| | தமக்கு அறிமுகமான, செய்திகளையும் விவரங்களையும் சரியான ஒலிப்புடனும், தங்குதடையின்றியும் விவரித்துக் கூறுவர். |
| | கேட்கும்/ படிக்கும் கதை, கவிதை/ செய்திகள் ஆகியவற்றைப் புரிந்துகொண்டு தங்கள் கருத்துகளால் வளப்படுத்துவர். |
| | பண்புடன் உரையாடுவர். |
| படித்தல் | தெளிவான ஒலிப்புடன் குறில் – நெடில், மயங்கொலிப் பிழைகளின்றிப் படிப்பர். |
| | எளிய தொடர்களைத் தங்குதடையின்றிப் படிப்பர். |
| | முற்றுப் புள்ளி, வினாக் குறி ஆகிய நிறுத்தக்குறியீடுகளை அறிந்து படிப்பர். |
| | மூன்று அல்லது நான்கு தொடர்களைக் கொண்ட சிறுசிறு உரைப்பகுதிகளைப் படித்து வினாக்களுக்கு விடையளிப்பர். |
| | சூழல் சார்ந்து, புதிய சொற்களின் பொருள் புரிந்து படிப்பர். |
| | படிக்கும் பகுதியில் இடம்பெறும் புதிய சொற்களைச் சூழல் அடிப்படையில் புரிந்துகொண்டு பிறகு அவற்றின் சரியான பொருளை அறிந்துகொள்ள முயல்வர். |
| | படிக்கும் பகுதியில் இடம்பெறும் பெயர்ச்சொல், வினைச்சொல், பதிலிப் பெயர்ச்சொல் போன்ற நுட்பங்களைப் புரிந்துகொள்வர். |

<table>
<tr><td rowspan="4">எழுதுதல்</td><td>உரிய வடிவத்தில், முறையான இடைவெளியிட்டு எழுதுவர்.</td></tr>
<tr><td>செய்தி/ உரைப்பகுதி / கதை / இதழ் ஆகியவற்றைப் படித்துப் பொருள் உணர்ந்து, கருத்து தெரிவிப்பர். கேட்கப்படும் வினாக்களுக்கு விடை எழுதுவர்.</td></tr>
<tr><td>புதிர்கள், துணுக்குகளுக்கு விடை எழுதுவர்.</td></tr>
<tr><td>அறிந்த சொற்களைக் கொண்டு, தமக்கான நடையில், நிறுத்தக் குறியீடுகள், எளிய வருணனைச் சொற்களைப் பயன்படுத்திச் சிறுசிறு தொடர்கள் எழுதுவர்.</td></tr>
<tr><td rowspan="2">நடைமுறை இலக்கணமறிந்து பேச்சிலும் எழுத்திலும் பயன்படுத்துதல்</td><td>இன எழுத்துகளை அறிந்துகொள்வர்.<br>வல்லினம், மெல்லினம், இடையினம் எழுத்துகளை அறிவர் (பெட்டிச்செய்தி)<br>ஒருமை, பன்மை வேறுபாடு அறிவர் ( அது – அவை)</td></tr>
<tr><td>இரு திணை அறிந்துகொள்வர். (உயர்திணை, அஃறிணை)</td></tr>
<tr><td>கற்கக் கற்கும் திறன்கள் ( தானே கற்றல்)</td><td>சிறுவர்களுக்கான படவிளக்க அகரமுதலியைப் பயன்படுத்துவர்.<br>கணினியில் குழந்தைகளுக்கான புதிர்கள், மொழி விளையாட்டுகள் விளையாடி மகிழ்வர்.<br>படக்கதைகளைத் தேடிப் படிப்பர்.</td></tr>
<tr><td rowspan="2">சொற்களஞ்சியப் பெருக்கமும் சொல்லாட்சித் திறன்களும்</td><td>கீழ்க்காணும் சொற்களைக் கற்றறிந்து பேச்சிலும் எழுத்திலும் பயன்படுத்துவர்<br>உணவுப் பொருள்களின் பெயர்கள்<br>ஆடை வகைகளின் பெயர்கள்<br>அணிகலன்களின் பெயர்கள்<br>மரம், செடி, கொடிகளின் பெயர்கள்<br>பொது இடங்களின் பெயர்கள் (பள்ளி, வங்கி, பேருந்து நிலையம், மருத்துவமனை…)<br>தன் ஊர், மாவட்டம், மாநிலம், நாடு ஆகியவற்றின் பெயர்கள்<br>இன்றியமையா ஆளுமைகளின் பெயர்கள் (நாட்டின் பிரதமர், குடியரசுத் தலைவர், முதலமைச்சர், ஆளுநர், கல்வி அமைச்சர்…)<br>பழமொழிகள்<br>மரபுத் தொடர்கள்</td></tr>
<tr><td>சொற்களஞ்சியப் பெருக்கத்திற்காகப் படிப்பர்<br>சிறுவர்களுக்கான பெரிய எழுத்து படக்கதைகள்<br>சொல் விளையாட்டுகளில் பங்கேற்பர்</td></tr>
</table>

| | |
|---|---|
| படைப்புத் திறன்கள் | ஒரே சொல்லில் தொடங்கும், முடியும் பல்வேறு சொற்களை உருவாக்க அறிந்துகொள்வர்.<br>கதையைத் தொடர்ந்து கூறி முடிப்பர். |
| விழுமியங்களை உணர்ந்தறிந்து பின்பற்றுவர் | காலம் தவிர்க்காமை<br>விதிகளைப் பின்பற்றுதல்<br>தூய்மை பேணுதல்<br>பொருள்களைப் பாதுகாத்தல்<br>பிறர்க்கு உதவுதல்<br>பிற உயிர்களிடத்தில் அன்பு காட்டுதல்<br>கூட்டுணர்வு<br>நட்புணர்வு<br>உண்மை பேசுதல்<br>சேமிப்பு உணர்வு |
| வாழ்வியல் திறன்களை உணர்ந்தறிந்து செயல்படுவர் | தன்னை அறியும் திறன்<br>சிக்கல் தீர்க்கும் திறன்<br>முடிவெடுக்கும் திறன்<br>கூர்சிந்தனைத் திறன்<br>படைப்பாக்கச் சிந்தனைத் திறன்<br>சிறந்த தகவல் தொடர்புத் திறன்<br>இணக்கமான உறவுக்கான திறன்கள்<br>பிறரை அவர் நிலையிலிருந்து புரிந்துகொள்ளும் திறன்<br>உணர்வுகளைக் கையாளும் திறன்<br>மன அழுத்தத்தைக் கையாளும் திறன் |

## தமிழ் – மூன்றாம் வகுப்பு
## நூல் ஆக்கம்

**கல்வி ஆலோசகர்**

**முனைவர். பொன். குமார்**
இணை இயக்குநர் (பாடத்திட்டம்)
மாநிலக் கல்வியியல் ஆராய்ச்சி மற்றும் பயிற்சி நிறுவனம், சென்னை

**மேலாய்வாளர்கள்**

**திருமதி ஆ.சே.பத்மாவதி**,எழுத்தாளர், சென்னை.

**திருமதி பா. மலர்விழி**, விரிவுரையாளர், மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம், திருவூர், திருவள்ளூர்.

**திரு சி. பன்னீர்செல்வம்**, கல்வி மாவட்ட ஒருங்கிணைப்பாளர், ஒருங்கிணைந்த கல்வி, புதுக்கோட்டை.

**திரு இல. சீனிவாசன்**, முதுகலை ஆசிரியர், மஜ்ஹருல் உலூம் மேனிலைப்பள்ளி, ஆம்பூர், வேலூர் மாவட்டம்.

**ஒருங்கிணைப்பாளர்கள்**

**முனைவர். கா.சா. மொழியரசி**, முதல்வர், மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம், கீழப்பழுவூர், அரியலூர்.

**திரு ந. இராமலிங்கம்**, உதவிப் பேராசிரியர், மாநிலக் கல்வியியல் ஆராய்ச்சி மற்றும் பயிற்சி நிறுவனம், சென்னை

**தே.விமலா தேவி**, விரிவுரையாளர், மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம், சென்னை

**கலை மற்றும் வடிவமைப்புக்குழு**

**பக்க வடிவமைப்பு**

சந்தோஷ்குமார் சக்திவேல்

**வரைபடம்**

**கா. தனஸ் தீபக் ராஜன்**
**கா. நலன் நான்சி ராஜன்**
**ரா.ஷாலினி**
**வை.மை.பிராங்க் டஃப்**
**மதன் கங்காதரன்**
**பா. ரவிகுமார்,**
**வேல்முருகன்**
**பா. பிரமோத்**
**செ. ரமேஷ்குமார்.**

**தரக்கட்டுப்பாடு**

**ராஜேஷ் தங்கப்பன்**

**கி. ஜெரால்டு வில்சன், அருண் காமராஜ் ப**

**காமாட்சிபாலன் ஆறுமுகம்**

**பாடநூல் உருவாக்கக் குழு**

**திருமதி அர. அனுசுயா தேவி**, இடைநிலை ஆசிரியை, ஊ. ஒ. தொ. பள்ளி, சாலையாம்பாளையம், விழுப்புரம் மாவட்டம்.

**திருமதி பெ. முருகராணி**, இடைநிலை ஆசிரியை, ஊ. ஒ. தொ. பள்ளி, மருவத்தூர், பெரம்பலூர் மாவட்டம்.

**திருமதி க. மல்லிகா**, தலைமை ஆசிரியை, ஊ. ஒ. தொ. பள்ளி, அயன்புத்தூர், திருவெறும்பூர், திருச்சி மாவட்டம்

**திரு. பா.ச. குப்பன்**, இடைநிலை ஆசிரியர், ஊ. ஒ. தொ. பள்ளி, அய்யன்தாங்கல், காவேரிப்பாக்கம் ஒன்றியம், வேலூர் மாவட்டம்.

**திரு. ஆ. மாணிக்கம்**, இடைநிலை ஆசிரியர், ஊ. ஒ. தொ. பள்ளி, ஆலங்குடி, அறந்தாங்கி ஒன்றியம், புதுக்கோட்டை.

**திருமதி. ந. பரிமளா**, தலைமைஆசிரியர், அம்பத்தூர் நகராட்சித் தொடக்கப் பள்ளி, வரதராஜபுரம், வில்லிவாக்கம் ஒன்றியம், திருவள்ளூர் மாவட்டம்

**திரு. வெ. பாலமுருகன்**, பட்டதாரி ஆசிரியர், அரசு மேல்நிலைப்பள்ளி, ஆரம்பாக்கம், திருவள்ளூர் மாவட்டம்.

**திரு. ந. மாமலைவாசன்**, பட்டதாரி ஆசிரியர், அரசு மேல்நிலைப் பள்ளி, இராயபுரம், திருவாரூர் மாவட்டம்.

**திரு. வெ. ராஜா**, இடைநிலை ஆசிரியர், ஊ. ஒ. ந.நி. பள்ளி இராக்கியாம்பட்டி, கொங்கணாபுரம், சேலம்.

**திருமதி பி கற்பகம்** இடைநிலை ஆசிரியர், ஊ. ஒ. தொ. பள்ளி, ஐயப்பா நகர், வில்லிவாக்கம், திருவள்ளூர் மாவட்டம்

**திரு. கு. மனத்துணைநாதன்**, இடைநிலை ஆசிரியர், ஊ. ஒ. தொ. பள்ளி, கீழ்வேளூர், நாகப்பட்டினம்.

**திரு. பெ. கார்த்திகேயன்**, இடைநிலை ஆசிரியர் ஊ. ஒ. தொ. பள்ளி, சிங்கிலியன் கோம்பை, நாமகிரிப் பேட்டை ஒன்றியம், நாமக்கல் மாவட்டம்

**விரைவுக்குறியீடு மேலாண்மைக்குழு**

**இரா. ஜெகநாதன்**, இ.நி.ஆ, ஊ.ஒ.ந.நி.பள்ளி, கணேசபுரம், போளூர், திருவண்ணாமலை.

**ஆ.தேவி ஜெஸிந்தா**, ப.ஆ, அ.உ.நி.பள்ளி, என்.எம்.கோவில், வேலூர்

**வ. பத்மாவதி**, ப.ஆ, அ.உ.நி. பள்ளி, வெற்றியூர், திருமானூர், அரியலூர்.

**அட்டை வடிவமைப்பு**
**கதிர் ஆறுமுகம்**

**வடிவமைப்பு ஒருங்கிணைப்பாளர்**
**ரமேஷ் முனிசாமி**

இந்நூல் 80 ஜி.எஸ்.எம் அழகிய மேப்லித்தோ தாளில் அச்சிடப்பட்டுள்ளது.
ஆப்செட் முறையில் அச்சிட்டோர்:

# முகவுரை

குழந்தைகளின் உலகம் வண்ணமயமானது! விந்தைகள் பல நிறைந்தது!! அவர்களின் கற்பனைத்திறன் கானுயிர்களையும் நட்புடன் நடை பயில வைத்திடும். புதியன விரும்பும் அவர்தம் உற்சாக உள்ளம் அஃறிணைப் பொருள்களையும் அழகுதமிழ் பேசிடச் செய்திடும்.

அப்புதிய உலகில் குழந்தைகளோடு பயணம் செய்வது மகிழ்ச்சியும் நெகிழ்ச்சியும் நிறைந்தது.

தமிழ்க் குழந்தைகளின் பிஞ்சுக்கரங்கள் பற்றி, இப்புதிய பாடநூல்களின் துணைகொண்டு கீழ்க்கண்ட நோக்கங்களை அடைந்திடப் பெருமுயற்சி செய்துள்ளோம்.

- கற்றலை மனனத்தின் திசையில் இருந்து மாற்றி படைப்பின் பாதையில் பயணிக்க வைத்தல்.
- தமிழர்தம் தொன்மை, வரலாறு, பண்பாடு மற்றும் கலை, இலக்கியம் குறித்த பெருமித உணர்வை மாணவர்கள் பெறுதல்.
- தன்னம்பிக்கையுடன் அறிவியல் தொழில்நுட்பம் கைக்கொண்டு மாணவர்கள் நவீன உலகில் வெற்றிநடை பயில்வதை உறுதிசெய்தல்.
- அறிவுத்தேடலை வெறும் ஏட்டறிவாய்க் குறைத்து மதிப்பிடாமல் அறிவுச் சாளரமாய்ப் புத்தகங்கள் விரிந்து பரவி வழிகாட்டுதல்.

பாடநூலின் புதுமையான வடிவமைப்பு, ஆழமான பொருள் மற்றும் குழந்தைகளின் உளவியல் சார்ந்த அணுகுமுறை எனப் புதுமைகள் பல தாங்கி உங்களுடைய கரங்களில் இப்புதிய பாடநூல் தவழும்பொழுது, பெருமிதம் ததும்ப ஒரு புதிய உலகத்துக்குள் நீங்கள் நுழைவீர்கள் என்று உறுதியாக நம்புகிறோம்.

# நாட்டுப்பண்

ஜன கண மன அதிநாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
திராவிட உத்கல பங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா.
தவ சுப நாமே ஜாகே
தவ சுப ஆசிஸ மாகே
காஹே தவ ஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா
ஜய ஹே ஜய ஹே ஜய ஹே
ஜய ஜய ஜய ஜய ஹே!

– மகாகவி இரவீந்திரநாத தாகூர்.

---

# நாட்டுப்பண் - பொருள்

இந்தியத் தாயே! மக்களின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற நீயே எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செய்கிறாய்.

நின் திருப்பெயர் பஞ்சாபையும், சிந்துவையும், கூர்ச்சரத்தையும், மராட்டியத்தையும், திராவிடத்தையும், ஒடிசாவையும், வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சி அடையச் செய்கிறது.

நின் திருப்பெயர் விந்திய, இமயமலைத் தொடர்களில் எதிரொலிக்கிறது; யமுனை, கங்கை ஆறுகளின் இன்னொலியில் ஒன்றுகிறது; இந்தியக் கடலலைகளால் வணங்கப்படுகிறது.

அவை நின்னருளை வேண்டுகின்றன; நின் புகழைப் பரவுகின்றன.

இந்தியாவின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற தாயே!

உனக்கு வெற்றி! வெற்றி! வெற்றி!



# தமிழ்த்தாய் வாழ்த்து

நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரதக் கண்டமிதில்
தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநல் திருநாடும்
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே!
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே!
தமிழணங்கே!
உன் சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே!
வாழ்த்துதுமே!
வாழ்த்துதுமே!

– 'மனோன்மணியம்' பெ. சுந்தரனார்.



## தமிழ்த்தாய் வாழ்த்து – பொருள்

ஒலி எழுப்பும் நீர் நிறைந்த கடலெனும் ஆடையுடுத்திய நிலமெனும் பெண்ணுக்கு, அழகு மிளிரும் சிறப்பு நிறைந்த முகமாகத் திகழ்கிறது பரதக்கண்டம். அக்கண்டத்தில், தென்னாடும் அதில் சிறந்த திராவிடர்களின் நல்ல திருநாடும், பொருத்தமான பிறை போன்ற நெற்றியாகவும், அதிலிட்ட மணம் வீசும் திலகமாகவும் இருக்கின்றன.

அந்தத் திலகத்தில் இருந்து வரும் வாசனைபோல, அனைத்துலகமும் இன்பம் பெறும் வகையில் எல்லாத் திசையிலும் புகழ் மணக்கும்படி (புகழ் பெற்று) இருக்கின்ற பெருமைமிக்க தமிழ்ப் பெண்ணே! தமிழ்ப் பெண்ணே! என்றும் இளமையாக இருக்கின்ற உன் சிறப்பான திறமையை வியந்து உன் வயப்பட்டு எங்கள் செயல்களை மறந்து உன்னை வாழ்த்துவோமே! வாழ்த்துவோமே! வாழ்த்துவோமே!

# தேசிய ஒருமைப்பாட்டு உறுதிமொழி

'நாட்டின் உரிமை வாழ்வையும் ஒருமைப்பாட்டையும் பேணிக்காத்து வலுப்படுத்தச் செயற்படுவேன்' என்று உளமார நான் உறுதி கூறுகிறேன்.

'ஒருபோதும் வன்முறையை நாடேன் என்றும், சமயம், மொழி, வட்டாரம் முதலியவை காரணமாக எழும் வேறுபாடுகளுக்கும் பூசல்களுக்கும் ஏனைய அரசியல் பொருளாதாரக் குறைபாடுகளுக்கும் அமைதி நெறியிலும் அரசியல் அமைப்பின் வழியிலும் நின்று தீர்வு காண்பேன்' என்றும் நான் மேலும் உறுதியளிக்கிறேன்.

# உறுதிமொழி

இந்தியா எனது நாடு. இந்தியர் அனைவரும் என் உடன் பிறந்தவர்கள். என் நாட்டை நான் பெரிதும் நேசிக்கிறேன். இந்நாட்டின் பழம்பெருமைக்காகவும் பன்முக மரபுச் சிறப்புக்காகவும் நான் பெருமிதம் அடைகிறேன். இந்நாட்டின் பெருமைக்குத் தகுந்து விளங்கிட என்றும் பாடுபடுவேன்.

என்னுடைய பெற்றோர், ஆசிரியர்கள், எனக்கு வயதில் மூத்தோர் அனைவரையும் மதிப்பேன்; எல்லாரிடமும் அன்பும் மரியாதையும் காட்டுவேன்.

என் நாட்டிற்கும் என் மக்களுக்கும் உழைத்திட முனைந்து நிற்பேன். அவர்கள் நலமும் வளமும் பெறுவதிலேதான் என்றும் மகிழ்ச்சி காண்பேன்.

# தமிழ்

## நான்காம் வகுப்பு



# முன்னுரை

**குழந்தைகள் சிறு பூ போன்றவர்கள்! அற்புதமானவர்கள்!**

அவர்கள் பல்வேறு சூழல்களிலிருந்து பள்ளிக்கு வருகின்றனர்.
ஒவ்வொரு குழந்தையும் தனித்திறன் என்னும் முத்தைத் தன்னகத்தே கொண்ட சிப்பிகள்.
அச்சிப்பிகளுக்குள் பொதிந்து கிடக்கும் திறன்களாகிய முத்துகளைக் கண்டு வெளிக் கொணர்வதே உண்மையான கல்வி.



தமிழையும் தமிழர்களையும் போற்றும் வகையில் அமைந்துள்ளதுடன் குழந்தையின் விருப்பம், மனவளர்ச்சி, சமுதாய நோக்கு, பண்பாடு முதலியவற்றையும் கருத்தில் கொண்டு இந்நூல் தயாரிக்கப்பட்டுள்ளது, இதில் குழந்தைகளின் கண்ணையும், கருத்தையும் கவரும் வண்ணப் படங்கள், நற்பண்புகளை வளர்க்கும் கதைகள், படக்கதைகள், இசையோடு ஓசை நயமிக்க இனிய பாடல்கள் போன்றவை இடம் பெற்றுள்ளன.

மேலும், குழந்தைகள் தயக்கமின்றி தனது எண்ணங்களை வெளிப்படுத்த உதவி புரியும் வாங்க பேசலாம்.





குழந்தை வகுப்பறை சூழலைத் தாண்டி சிந்திப்பதுடன் அதனை வாழ்க்கையோடு தொடர்புபடுத்திக் கொள்ள உதவும் சிந்திக்கலாமா?

குழந்தைகள் விளையாடிக் கொண்டே தங்களது மொழித் திறனை வளப்படுத்திக் கொள்ள உதவும் மொழியோடு விளையாடு.







ஒவ்வொரு குழந்தையின் படைப்புத் திறன், புதியன உருவாக்கும் சிந்தனை ஆகியவற்றை வளர்க்க உதவும் **கலையும் கைவண்ணமும்.**

திட்டமிட்டு ஒவ்வொரு செயலையும் செய்து முடிக்க உதவும் **செயல்திட்டம்.**






மாணவர்கள் புதிய செய்திகளை அறிந்து கொள்ள உதவும் **அறிந்து கொள்வோம்**

ஒற்றுமையுடன் சேர்ந்து செயல்பட உதவும் **இணைந்து செய்வோம்**




புதிய பாடநூலில் இவைபோன்ற செயல்பாடுகள் இடம்பெற்றுள்ளன.

கற்பிக்க வேண்டிய திறன்கள், அந்தந்தப் பாடப் பகுதியிலும் பெற வேண்டிய கற்றல் விளைவுகள், பாடநூலின் இறுதியிலும் கொடுக்கப்பட்டுள்ளன. விழுமியங்களும் வாழ்வியல் திறன்களும் பாடப் பகுதிகளில் பேசப்பட்டுள்ளன.

**பாடநூலில் உள்ள விரைவுக் குறியீட்டைப் (QR Code) பயன்படுத்துவோம்! எப்படி?**

- உங்கள் திறன் பேசியில் கூகுள் playstore கொண்டு DIKSHA செயலியைப் பதிவிறக்கம் செய்து நிறுவிக்கொள்க.
- செயலியைத் திறந்தவுடன், ஸ்கேன் செய்யும் பொத்தானை அழுத்திப் பாடநூலில் உள்ள விரைவுக் குறியீடுகளை ஸ்கேன் செய்யவும்.
- திரையில் தோன்றும் கேமராவைப் பாடநூலின் QR Code அருகில் கொண்டு செல்லவும்.
- ஸ்கேன் செய்வதன் மூலம், அந்த QR Code உடன் இணைக்கப்பட்டுள்ள மின் பாடப் பகுதிகளைப் பயன்படுத்தலாம்.

QR GUIDE

குறிப்பு: இணையச்செயல்பாடுகள் மற்றும் இணைய வளங்களுக்கான QR code களை Scan செய்ய DIKSHA அல்லாத ஏதேனும் ஓர் QR code Scanner பயன்படுத்தவும்.

மகிழ்ச்சியான வகுப்பறைச் சூழலாலும் இனிமையான கற்றல் கற்பித்தல் முறைகளாலும் ஆசிரியர்களின் அனுபவ ஆற்றலாலும் அறிவார்ந்த சமூகம் அமையட்டும்

வாழ்த்துகள்..!

ஆக்கியோர்.

# பொருளடக்கம்



AFHRS2 — மின்னூல்

VU2DYI — மதிப்பீடு

B321_4_TAMIL_LANG — இணைய வளங்கள்

# 1 அன்னைத் தமிழே!



அன்னைத் தமிழே – என்
ஆவி கலந்தவளே!
என்னை வளர்ப்பவளே!
என்னில் வளர்பவளே!
உன்னைப் புகழ்வதற்கே
உலகில் பிறப்பெடுத்தேன்
சொல்லில் விளையாடச்
சொல்லித் தந்தவளே!
சொல்லில் உனது புகழ்
சொல்ல முடியலையே!

– நா. காமராசன்

KMA3DA

## பொருள் அறிவோம்

என் அன்னையாகிய தமிழே! என் உயிரில் கலந்தவளே! என்னை வளர்ப்பதோடு மட்டுமல்லாமல், என் உடன் சேர்ந்து வளர்பவளே! உன்னைப் புகழ்வதற்காகவே இவ்வுலகில் பிறந்துள்ளேன். சொல்லைக் கொண்டு விளையாடுவதற்குச் சொல்லிக் கொடுத்தவளே! அதே சொல்லினால் உனது புகழை என்னால் கூற முடியவில்லையே!

ஓசை நயமும் கருத்தும் மிக்க பாடல்களைக் கேட்டுப் புரிந்துகொள்ளுதல்.

## வாங்க பேசலாம்



- பாடலை ஓசை நயத்துடன் பாடுக.
- பாடலைச் சரியான உச்சரிப்புடன் படித்து மகிழ்க.
- மொழியின் சிறப்பினைக் கூறும் வேறு பாடலை அறிந்து வந்து பாடுக.




நாம் வளரும் போதே நம்முடன் சேர்ந்து வளர்வது தமிழ் மொழி எவ்வாறு? கலந்துரையாடுக.

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

### சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுவோமா?

01. அன்னை + தமிழே – என்பதைச் சேர்த்து எழுதக் கிடைக்கும் சொல் ....................................

அ) அன்னந்தமிழே ஆ) அன்னைத்தமிழே

இ) அன்னத்தமிழே ஈ) அன்னைதமிழே

02. பிறப்பெடுத்தேன் – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..............................................

அ) பிறப் + பெடுத்தேன் ஆ) பிறப்பு + எடுத்தேன்

இ) பிறப் + எடுத்தேன் ஈ) பிறப்ப + எடுத்தேன்

03. மறந்துன்னை – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..............................................

அ) மறந்து + துன்னை ஆ) மறந் + துன்னை

இ) மறந்து + உன்னை ஈ) மறந் + உன்னை

04. சிறப்படைந்தேன் – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..............................................

அ) சிறப்பு + அடைந்தேன் ஆ) சிறப் + அடைந்தேன்

இ) சிற + படைந்தேன் ஈ) சிறப்ப + அடைந்தேன்

05. என்னில் என்ற சொல்லின் பொருள் ..............................................

அ) உனக்குள் ஆ) நமக்குள்

இ) உலகுக்குள் ஈ) எனக்குள்

## வினாக்களுக்கு விடையளி

01 சொல்லில் விளையாடச் சொல்லித் தந்தவள் யார்?

02 எதைச் சொல்ல முடியவில்லை என்று இப்பாடலின் ஆசிரியர் குறிப்பிடுகிறார்?

03 இப்பாடலின் ஆசிரியர் அன்னைத் தமிழை எவ்விதம் புகழ்கிறார்?

**1. இப்பாடலில் இடம் பெற்றுள்ள ஒரே எழுத்தில் தொடங்கும் சொற்களை எடுத்து எழுதுக.**

| | | |
|---|---|---|
| என்னை | – | என்னில் |
| | – | |
| | – | |
| | – | |

**2. இப்பாடலில் இடம் பெற்றுள்ள ஒரே ஓசையில் முடியும் சொற்களை எடுத்து எழுதுக.**

| |
|---|
| கலந்தவளே |
| |
| |
| |
| |



## செயல் திட்டம்

- மொழியின் சிறப்பினைக் கூறும் இரண்டு பாடல்களை எழுதி வந்து படித்து / பாடிக் காட்டுக.

## பாடலை நிறைவு செய்வோம்



பட்டாம் பூச்சி பறந்து வா

பறக்கும் பூவாய் .............................. ................

பட்டுமேனி ஓவியம்

பார்க்க .............................. ...............................

தொட்டு .............................. பார்க்கவா

தோழனாக .............................. ............................



## சொல் உருவாக்கலாமா?






1. ..................................................... 3. .....................................................

2. ..................................................... 4. .....................................................

## வண்ணம் தீட்டி மகிழ்வோம்



## அறிந்து கொள்வோம்



தமிழ்ச்செல்வி,
தமிழரசன்... என்பன
போலத் தமிழ்மொழியை
மட்டுமே பெயராகப்
பயன்படுத்த முடியும்.



# 2 பனைமரச் சிறப்பு

மாலையில் பள்ளி முடிந்து, அழகனும், வண்ணமயிலும் மகிழ்வுடன் பேசிக் கொண்டே வீடு திரும்பிக் கொண்டிருந்தனர். வழியில் சாலையோரத்தில் பந்து போல கருப்பு நிறத்தில் ஒரு பழம் விழுந்து கிடந்தது. அதை எடுத்துப் பார்த்தனர். அது என்னவென்று தெரியவில்லை. அவர்கள் அவ்வழியே வந்த தாத்தாவிடம் இது என்னவென்று கேட்டனர்.

**அழகன்** : தாத்தா, தாத்தா இது என்ன பழம்?

**தாத்தா** : இதுவா! இதுதான் பனம்பழம்

**வண்ணமயில்** : இந்தப் பழத்தைத் தின்னலாமா? தாத்தா

**தாத்தா** : ம்... தின்னலாம் வண்ணமயில். மிகச் சுவையாக இருக்கும். சத்து மிக்கது.

**அழகன்** : இந்தப் பனம்பழத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள ஆவலாக உள்ளது தாத்தா..



DU6TZC

தேசிய மாநில அளவிலான சமூக, உணர்வுபூர்வமான செய்திகளை இனங்கண்டு அவற்றின் மீது கருத்தாடல் செய்தல்

| | | |
|---|---|---|
| தாத்தா | : | சொல்கிறேன் தம்பி! பனம்பழம் பனைமரத்தில் காய்த்துப் பழுக்கும். பனைமரம் நீண்டு வளரக்கூடியது. இது வேர், தூர்ப்பகுதி, நடுமரம், பத்தைமட்டை, உச்சிப்பகுதி, ஓலை, சில்லாட்டை, பாளைப்பீலி, பனங்காய், பச்சைமட்டை, சாரைஓலை, குருத்தோலை என்ற பன்னிரண்டு உறுப்புகளை உடைய மரம். இந்த உறுப்புகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பயனைத் தரக்கூடியது. அதனால் தான் பனைக்குக் "கற்பகத்தரு" என்ற பெயரும் உண்டு. |



| | | |
|---|---|---|
| வண்ணமயில் | : | ஆகா! பனைமரம் இவ்வளவு சிறப்பானதா? தாத்தா, நான் நுங்கு மட்டுமே உண்டுள்ளேன், இந்தப் பனை மரத்தால் நமக்கு வேறு என்ன பயன்? |



| | | |
|---|---|---|
| தாத்தா | : | நுங்கும், பனங்கிழங்கும் உணவாகப் பயன்படுகின்றன. பனை ஓலைகள் கூடைகள் முடையவும், கைவினைப் பொருட்கள் செய்யவும், கூரை வேயவும் பயன்படுகின்றன. பனஞ்சாறு பதநீராகவும், கற்கண்டாகவும், கருப்பட்டியாகவும் பயன்தருகிறது. மேலும், பனைமரம் புயலைத் தாங்கும் வலிமை பெற்றது. |



| | | |
|---|---|---|
| அழகன் | : | இத்தனை பயன்மிக்கதா பனை? |
| தாத்தா | : | ஆமாம், அழகா! அது மட்டுமல்ல நமது முன்னோர்கள் பற்றியும் பண்டைய இலக்கியங்கள் பற்றியும் தெரிந்து கொள்ள நமக்குப் பெரிதும் உதவியது பனை ஓலைச்சுவடிகள்தாம். |



| | | |
|---|---|---|
| வண்ணமயில் | : | அப்படியா! |
| தாத்தா | : | பனைமரத்தின் வேர் நீரைத் தக்க வைத்துக் கொள்ளும் இயல்பு கொண்டது. இது நிலத்தடி நீர்மட்டம் உயரக் காரணமாக அமைகிறது. |
| அழகன் | : | அடேங்கப்பா........! இம்மரத்திற்கு இவ்வளவு சிறப்பா? |





**தாத்தா** : பனங்காய் வண்டி, பனை ஓலைக் காற்றாடி, பனை ஓலை விசிறி, பொம்மைகள், ஆகியவற்றைச் செய்து நீங்கள் பல்வேறு விளையாட்டுகளை விளையாடலாம்.

**வண்ணமயில்** : இத்தகு பயன்மிகு பனைமரத்தை இப்போதெல்லாம் அதிகம் பார்க்க முடிவதில்லையே தாத்தா!



**தாத்தா** : நன்றாகக் கேட்டாயம்மா, சொல்கிறேன் கேளுங்கள். தமிழக இயற்கை வளத்தின் சான்றாக விளங்கும் பனைமரங்கள் எரிபொருளுக்காக வெட்டப்படுகின்றன. அதனால் அந்த மரத்தைச் சார்ந்து இருக்கும் பனங்காடை, பனை உழவரான் போன்ற பறவைகள் தம் வாழிடங்களை இழந்து வருகின்றன. "மரங்கள் இன்றி மனிதர்கள் இல்லை", இதனை உணர்ந்து நாம் அனைவரும் பனைமரம் வெட்டப்படுவதைத் தடுக்க வேண்டும்.





**அழகன்** : பனைமரத்தினைப் பற்றிய பல அரிய செய்திகளை உங்கள் மூலம் அறிந்து கொண்டோம் தாத்தா.

**தாத்தா** : அறிந்து கொண்டதோடு மட்டும் விட்டு விடாதீர்கள். பனையின் சிறப்பினை உங்களது நண்பர்களுக்கும், மற்றவர்களுக்கும் எடுத்துக்கூற வேண்டும்.



**இருவரும்** : கட்டாயமாகக் கூறுவோம் தாத்தா,

**தாத்தா** : மிக்க மகிழ்ச்சி குழந்தைகளே! தமிழரின் பண்பாட்டை உணர்த்தும் பயன்மிகு பனைமரம் நமது தமிழ்நாட்டின் மாநில மரமாகும். இதன் சிறப்புணர்ந்து நாம் பனங்கொட்டைகளைச் சேகரித்து குளம், ஆறு, குட்டை போன்றவற்றின் கரையோரங்களில் ஊன்றிப் பாதுகாக்கலாம்.



**இருவரும்** : அப்படியே செய்வோம்! பனைமரம் காப்போம் பயன்பல பெறுவோம். மிக்க நன்றி தாத்தா!

**தாத்தா** : மகிழ்ச்சி குழந்தைகளே! சென்று வாருங்கள்.

# தமிழக அரசு சின்னங்கள்

## அறிந்து கொள்வோம்

சின்னம்

திருவில்லிபுத்தூர் கோவில் கோபுரம்

பறவை



மரகதப்புறா

பாடல்

**நீராரும் கடலுடுத்த**

தமிழ்த்தாய் வாழ்த்து

மலர்



செங்காந்தள்

நடனம்



பரத நாட்டியம்

மரம்



பனை

விலங்கு



வரையாடு

விளையாட்டு



கபடி



## வாங்க பேசலாம்

மரம் வளர்ப்பதனால் நாம் பெறும் பயன்கள் குறித்துக் கலந்துரையாடுக.



சிந்திக்கலாமா!

கிளி வளர்த்தேன், பறந்து போனது,
அணில் வளர்த்தேன், ஓடிப்போனது,
மரம் வளர்த்தேன்...
இரண்டும் திரும்பி வந்தது...

டாக்டர் அப்துல்கலாம்

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

### சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுவோமா?

01 வல்லமை என்ற சொல்லின் பொருள் ..........

அ) வலிமை  ஆ) எளிமை
இ) இனிமை  ஈ) புதுமை

Z8QG6T

02 உயர என்ற சொல்லின் எதிர்ச் சொல் ..........

அ) மேலே  ஆ) நிறைய
இ) தாழ  ஈ) அதிகம்

03 விழுந்து என்ற சொல்லின் எதிர்ச் சொல் ..........

அ) நடந்து  ஆ) பறந்து
இ) எழுந்து  ஈ) நின்று

04 கரையோரம் இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..........

அ) கரை +ஓரம்  ஆ) கரை + யோரம்
இ) கரைய + ஓரம்  ஈ) கர + ஓரம்

05 அங்கெல்லாம் இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..............................................

அ) அங் + கெல்லாம் ஆ) அங்கு + எல்லாம்

இ) அங்கு + கெல்லாம் ஈ) அங்கெ + ல்லாம்

06 கீழ்க்காணும் சொற்களைப் பிரித்து எழுதுக

அ) சாலையோரம் = ...................................... + ......................................

இ) குருத்தோலை = ...................................... + ......................................

## வினாக்களுக்கு விடையளி

01 பனைமரத்தில் இருந்து கிடைக்கும் உணவுப் பொருள்கள் யாவை?

02 சிறுவர்கள் விளையாடுவதற்குப் பனைமரம் எவ்வாறு உதவுகிறது?

03 பனைமரத்தை நாம் எவ்வாறு பாதுகாக்கலாம்?

04 பனைமரத்தின் பயன்களாக நீ கருதுவனவற்றை உம் சொந்த நடையில் எழுதுக.

## உங்கள் வீட்டில் பயன்படுத்தப்படும் மரத்தாலான பொருள்களைப் பட்டியலிடுக



# இணைந்து செய்வோம்

## சொற்களுக்கு உரிய படங்களைப் பொருத்துக

01 ஆ

02 கை

03 பூ

04 நா

05 ஈ

06 கா















# மொழியோடு விளையாடு

ஒரே பொருள் தரும் சொற்களைக் கண்டுபிடித்து வட்டமிடுக

01 நிலவு – மதி ஆதவன் திங்கள் கதிரவன் சந்திரன் பரிதி.

02 அம்மா – சேய் அன்னை குழந்தை தாய் மழலை மாதா.

03 மகுடம் – அரசன் மணிமுடி தலை கிரீடம் அணிகலன் அரசி.

04 திரள் – கூட்டம் கடைவீதி நெருக்கம் மக்கள் கும்பல் நெரிசல்.

## மாதிரி செயல்திட்டம்

### நோக்கம்

நமது மாவட்டத்தில், ஊராட்சி ஒன்றியத் தொடக்கப்பள்ளியில் பயிலும் மாணவர்களும், ஆசிரியர்களும், உள்ளூர் இளைஞர்களுடன் இணைந்து பள்ளி வளாகத்தினையும், கிராமப் பகுதியையும் பசுமையாக மாற்ற மரக்கன்றுகளை நட்டு வளர்ப்பது என முடிவு செய்தனர்.

### திட்டமிடுதல்

மழை பெய்த அடுத்த நாளில் மரக்கன்றுகள் நடுவது என முடிவு செய்யப்பட்டது. அதற்குள் தேவையான மரக்கன்றுகளைத் தன்னார்வலர்களிடம் இருந்தும், அரசு வனத்துறையிலிருந்தும் பெறுவது என்றும், பராமரிக்கத் தேவையான கூண்டுகளைத் தயார் செய்து வைத்துக் கொள்வது எனவும் கூட்டத்தில் பேசித் திட்டமிடப்பட்டது.

### செயல்படுத்துதல்

மழைபெய்த மறுநாள் பள்ளி வளாகத்தில் போதுமான குழிகள் தோண்டப்பட்டு எருவிட்டு பலன்தரும் வேம்பு, வாகை, புங்கை போன்ற மரக்கன்றுகள் நடப்பட்டு கூண்டுகள் வைக்கப்பட்டன. சாலை ஓரங்களிலும், குளம், குட்டைகளின் கரையோரங்களிலும் பனைவிதைகள் ஊன்றப்பட்டன. மேலும் தன்னார்வலர் மூலம் அனைத்து மாணவர்களுக்கும் மரக்கன்றுகள் வழங்கப்பட்டன. அவற்றை நட்டு வளர்ப்பவர்களுக்குப் பரிசுகளும் அறிவிக்கப்பட்டன.

**மதிப்பீடு:**

திட்டமிட்டபடி செயல் நிறைவு பெற்றது மனத்திற்கு மகிழ்ச்சியை அளித்தது. இச்செயல்பாடுகளினால் விரைவில் பசுமைச்சூழல் ஏற்படும். மேலும் அடுத்த ஆண்டு முன்கூட்டியே திட்டமிட்டு இன்னும் அதிக மரக்கன்றுகளை நட்டு வளர்க்க முடிவு செய்யப்பட்டது.

இது போன்று மரக்கன்றுகளை நீங்களும் நட்டு வளர்க்கலாமே!

## கலையும் கை வண்ணமும்

### செய்முறை

**தேவையான பொருட்கள்:**

பனை ஓலைகள்; தேவையான எண்ணிக்கையில்

பனை ஓலைகளில் நடுவில் உள்ள தண்டை நீக்கி விட்டுப் பட்டைகளாக ஓலைகளை எடுத்துக் கொள்ள வேண்டும். பத்து ஓலைகளை அருகருகே வரிசையாக வைக்க வேண்டும். வேறு ஓர் ஓலையை எடுத்து வரிசையாக அடுக்கி வைக்கப்பட்டுள்ள ஓலைகளின் மேலும் கீழுமாகச் செருக வேண்டும். இப்படியே அடுத்தடுத்த ஓலைகளை இணைத்துப் பின்ன வேண்டும். ஓரங்களை மடித்துச் செருகிவிட வேண்டும். இப்பொழுது அழகிய பனை ஓலைப்பாய் தயார்.





## செயல் திட்டம்

பனை ஓலைகளைக் கொண்டு காற்றாடி, விசிறி, பொம்மைகள், பெட்டிகள் போன்ற பொருள்களைச் செய்து வருக.

## இலக்கணம் – பால்

திணையின் உட்பிரிவே பால் ஆகும், பால் என்ற சொல்லிற்குப் பகுப்பு என்பது பொருள்.

**பால் ஐந்து வகைப்படும்**

3MEIE4

### உயர்திணை



01

ஓர் ஆணைக் குறிப்பது ஆண்பால் எனப்படும்.
* அவன் என்ற பெயரில் சுட்டப்படும்.



02

ஒரு பெண்ணைக் குறிப்பது பெண்பால் எனப்படும்.
* அவள் என்ற பெயரில் சுட்டப்படும்.

03

ஒன்றுக்கு மேற்பட்ட ஆண்கள், பெண்கள் மற்றும் மனிதர்களைக் குறிப்பது பலர்பால் எனப்படும்.
* அவர்கள் என்ற பெயரில் சுட்டப்படும்.



### அஃறிணை



04



அஃறிணையில் ஏதேனும் ஒன்றை மட்டும் குறிப்பது ஒன்றன்பால் ஆகும்.
* அது என்ற பெயரில் சுட்டப்படும்.

05

அஃறிணையில் ஒன்றுக்கு மேற்பட்ட எண்ணிக்கையில் எவை இருந்தாலும் அவை பலவின்பால் ஆகும்.
* அவை என்ற பெயரில் சுட்டப்படும்.



## கீழ்க்காணும் சொற்களை வகைப்படுத்துக

அவள், சென்றனர், படித்தான், வந்தது, பறந்தன, ஓடினர், எழுதினான், விளையாடினர், குயவன், நாட்டிய மங்கை, மேய்ந்தன, வகுப்பறை, கற்கள், ஆசிரியர், மாணவர்கள், வீடு, பெற்றோர், தங்கை, அண்ணன், மரங்கள், செடி, மலர், பூக்கள்.

| ஆண்பால் | பெண்பால் | பலர்பால் | ஒன்றன்பால் | பலவின்பால் |
|---|---|---|---|---|
| | | | | |

## பொருத்துக







01 ..........................................................................

02 ..........................................................................

03 ..........................................................................

04 ..........................................................................

05 ..........................................................................

## 3 ஏழு இறக்கைக் குருவியும் தெனாலிராமனும்

விஜயநகரம் விழாக்கோலம் பூண்டிருந்தது. விழாவிற்கு அண்டை நாட்டு மன்னர் விஜயவர்த்தனர் வருகை தந்திருந்தார். விழா மிகச் சிறப்பாக நடந்து முடிந்தது. அன்று மாலை அரசர் கிருஷ்ணதேவராயரும் அண்டை நாட்டு மன்னர் விஜயவர்த்தனரும் அரண்மனைத் தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்தனர். அப்போது விஜயவர்த்தனர், கிருஷ்ணதேவராயரிடம் தங்கள் அவைப்புலவர் தெனாலிராமன் மிகவும் அறிவுக் கூர்மை உடையவராமே! எனக்கேட்டார். அதற்கு கிருஷ்ணதேவராயர் அதிலென்ன ஐயம் என்றார். விஜயவர்த்தனர், அப்படியானால் நான் தெனாலிராமனைச் சோதிக்கலாமா? எனக் கேட்டார். ஓ...! என்றார் கிருஷ்ணதேவராயர்.





மறுநாள் அரசவை கூடியது. கிருஷ்ணதேவராயர் தெனாலிராமனை அழைத்தார். தெனாலிராமன் அரசர்கள் இருவரையும் வணங்கி நின்றார். மன்னர் விஜயவர்த்தனர் தெனாலிராமனிடம், 'எனக்குக் காலையில் தங்க மஞ்சள் நிறத்திலும், நடுப்பகலில் சிவப்பு நிறத்திலும், இரவில் ஏழு வர்ணங்களிலும் உருமாறும் அற்புதக் குருவி ஒன்றைக் கொண்டுவந்து தரவேண்டும்' என்றார். 'மேலும் அது சிலசமயம் மூன்று கால்களாலும், சில சமயம் இரண்டு கால்களாலும் நடக்க வேண்டும், பிறகு ஏழு இறக்கைகளைக் கொண்டு வானில் பறக்கவும் வேண்டும்' என்றார்.

கிருஷ்ணதேவராயர் உடனே தெனாலிராமனிடம் 'விஜயவர்த்தனர் கூறியவாறு குருவியை விரைவில் கொண்டு வா' என்று உத்தரவிட்டார். அதைக் கேட்ட தெனாலிராமனுக்குத் தலை சுற்றியது. ஆனால் சிரித்தவாறே 'சரி........ அரசே! நாளைக்கு நான் அத்தகைய பறவையோடு வருகிறேன்' என்றார்.

மறுநாள் தெனாலிராமன் அரசவைக்குத் தாமதமாக வந்தார். அவர் நிலைமை மோசமாக இருந்தது. உடை கிழிந்து இருந்ததுடன், அதில் முட்களும், மண்ணும் ஒட்டியிருந்தன. அவரது கையில் காலியான பறவைக் கூண்டு ஒன்று இருந்தது.

கதைகளைத் தங்கள் சொந்த நடையில், தாம் விரும்பும் வகையில் தம் கருத்துகளையும் இணைத்துச் சொல்லுதல்

தெனாலிராமன் அரசரிடம், 'அரசே! அதிசயமான கதை நடந்துவிட்டது, விஜயவர்த்தன மன்னர் கூறியது போன்ற குருவி கையில் கிடைத்தது, நானும் அதைக் கூண்டில் அடைத்தேன். அதை இங்கு எடுத்து வரும்போது, அப்பறவை தனது மாயமான ஏழு இறக்கைகளை விரித்துப் பறந்து சென்றுவிட்டது, காட்டில் அதைத் துரத்திக் கொண்டு வெகுதூரம் சென்றேன்.' பறந்து சென்றவாறே அப்பறவை என்னிடம், "அரசரிடம் போய்ச் சொல், காலைப்பொழுதாகவும் இருக்கக்கூடாது, நடுப்பகல் பொழுதாகவும் இருக்கக்கூடாது, மாலைப்பொழுதாகவும் இருக்கக்கூடாது, வெளிச்சமாகவும் இருக்கக்கூடாது, இருளாகவும் இருக்கக்கூடாது அந்த நேரத்தில் நானே எனது ஏழு இறக்கைகளால் பறந்து திரும்ப வந்துவிடுவேன் என்றது" என்றார்.

அதைக் கேட்டதும் அரசர் கிருஷ்ணதேவராயருக்கும் மன்னர் விஜயவர்த்தனருக்கும் தலை சுற்றியது. 'அப்படிப்பட்ட நேரம் எப்போது உண்டாகும்?' என்று அனைவரும் வியப்படைந்தனர், அரசருக்கோ சிரிப்பு வந்தது.

விஜயவர்த்தனர் சொன்னார் ....'தெனாலியின் அறிவுக் கூர்மை பற்றி இதுவரை கேள்விப்பட்டுள்ளேன் இப்போதுதான் நேரில் பார்த்தேன்' என்று கூறிப் பாராட்டி பரிசுகள் அளித்தார்.



## வாங்க பேசலாம்



- கதையை உம் சொந்த நடையில் கூறுக.
- இதேபோன்று தெனாலிராமனின் வேறு கதைகளை அறிந்து வந்து கூறுக .
- நீ அறிவுக் கூர்மையுடன் நடந்து கொண்ட நிகழ்வுகளைக் கூறுக.




நீ தெனாலிராமனாக இருந்திருந்தால் விஜயவர்த்தன அரசரின் எதிர்பார்ப்பை எவ்வாறு நிறைவேற்றிருப்பாய்?

உன் கற்பனையில் எழுதுக.

## வினாக்களுக்கு விடையளி

01 விஜயநகர அரசின் அவைப்புலவர் யார்?

02 விஜயவர்த்தன அரசர் எப்படிப்பட்ட குருவியைக் கொண்டு வரும்படி கேட்டார்?

03 குருவி கூறியதாக, தெனாலிராமன் அரசவையில் சொன்னது என்ன?

## குறிப்புகளைக் கொண்டு கண்டுபிடி! மணிமகுடம் சூட்டிக்கொள்!

01 மணக்கும் எழுத்து.

02 அரசரும், அமைச்சர்களும் கூடும் இடம்.

03 நிலவும், விண்மீன்களும் வானில் தெரியும் நேரம்.

04 பாகற்காயின் சுவை.

05 சிக்கலைத் தீர்க்க உதவும் குணம்.



## சொல்லின் இடையில் ஓர் எழுத்தைச் சேர்த்துப் புதிய சொல்லை உருவாக்குக.

01 கதை – (எ. கா) கவிதை

02 படு – ..........................................

03 குவி – ..........................................

04 பகு – ..........................................

05 வசை – ..........................................

06 பாவை – ..........................................

07 எது – ..........................................

08 அவை – ..........................................

09 ஆம் – ..........................................

10 கவி – ..........................................

## மீண்டும் மீண்டும் சொல்வோம்

- ✶ மேல் ஏழு ஓலை, கீழ் ஏழு ஓலை.
- ✶ பலாப்பழம் பழுத்துப் பள்ளத்தில் விழுந்தது.
- ✶ குழந்தை வாழைப் பழத்திற்காக விழுந்து விழுந்து அழுதது.
- ✶ ஆடுற கிளையில ஒரு கிளை தனிக்கிளை
  தனிக்கிளை தனில் வந்த கனிகளும் இனிக்கல.
- ✶ மெய்த்தும் பொய்க்கும்
  பொய்த்தும் மெய்க்கும்
  பொய்யா மெய்யா மழை.



## கலையும் கைவண்ணமும்

இக்கதையில் வருகின்ற ஏழு இறக்கைக் குருவியை உம் கற்பனைக்கேற்ப வண்ணம் தீட்டி மகிழ்க.



## அறிந்து கொள்வோம்



தெனாலிராமன் அரசர்
கிருஷ்ணதேவராயரின் அவையை
அலங்கரித்த விகடகவி ஆவார்.
விகடகவி என்றால் நகைச்சுவையாகப்
பேசுபவரைக் குறிக்கும். தெனாலிராமன் சிரிக்க
வைத்துச் சிந்தனையைத் தூண்டும்
வகையில் பேசுவார்.



## செயல் திட்டம்



01 உங்கள் பள்ளியிலுள்ள நூலகத்தில் இருந்து தெனாலிராமன் கதைகள், மரியாதை ராமன் கதைகள், பீர்பால் கதைகள், அப்பாஜி கதைகள் முதலிய புத்தகங்களைத் தேடிப் படித்து ஒவ்வொரு நூலிலும் உனக்குப் பிடித்த ஒரு கதையை எழுதி வருக.

02 நூலகத்தைப் பயன்படுத்தி எவையேனும் ஐந்து கதைகளின் பெயர்களையும், அந்தக் கதைகளின் ஆசிரியர் பெயர்களையும் பட்டியலிடுக.

| வ. எண் | கதையின் பெயர் | ஆசிரியர் பெயர் | குறிப்பு |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | |
| | | | |
| | | | |

# 4 முளைப்பாரி – பாடல்

தன்னா னன்னே னானே தன
தானே னன்னே னானே
ஒண்ணாந்தான் நாளையிலே
ஒசந்த செவ்வா கிழமையிலே
ஓலைக்கொட்டான் இரண்டெடுத்து
ஓடும் பிள்ளை தொண்டலிட்டு – தன்னா
வாங்கியாந்த முத்துகளை
வாளியிலே ஊற வச்சி
கம்மந்தட்டை இரண்டெடுத்து
கணுக்கணுவா முறிச்சி வச்சி
சோளத்தட்டை இரண்டெடுத்து
சுளை சுளையா முறிச்சி வச்சி
மாட்டாந்தொழு தெறந்து
மாட்டெருவு அள்ளி வந்து – தன்னா
ஆட்டாந்தொழு தெறந்து
ஆட்டெருவு அள்ளி வந்து
கடுகுலயுஞ் சிறுபயிறு
காராமணிப் பயிறு
மிளகுளயுஞ் சிறுபயிறு
முத்தான மணிப்பயிறு
மொள போட்ட ஒண்ணா நாளு
ஓரெலையாம் முளைப்பாரி
ஓரெலைக்குங் காப்புக்கட்டி
ஒரு பானை பொங்கலிட்டு
முளைப்பாரி போடுங்கம்மா––––––(2)
தன்னா னன்னே போடுங்கம்மா––––(2)
தையலரே ஒரு குலவை – தன்னா

– நாட்டுப்புறப் பாடல்



பாடல்களைச் சொந்த நடையில் தாம் விரும்பும் வகையில் கருத்துகளை இணைத்துப்பாடுதல்

## வாங்க பேசலாம்



- பாடலை ஓசை நயத்துடன் பாடிக்காட்டுக.
- முளைப்பாரி பற்றி அறிந்து வந்து வகுப்பறையில் பேசுக
- இது போன்று வேறு பாடல்களைக் கேட்டறிந்து வந்து வகுப்பறையில் பாடி மகிழ்க.



### சிந்திக்கலாமா?

மாட்டு எருவையும், ஆட்டு எருவையும் வயலுக்கு இடவேண்டும் என்று தாத்தா கூறுகிறார் ஆனால் அப்பாவோ, உடனே பலன் தருவது செயற்கை உரம் தான் என்கிறார்.

யார் கூறுவது சரி?

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

### பொருள் தருக

01 முளைப்பாரி = ..........................................

02 தையலர் = ..........................................

03 ஓலைக்கொட்டான் = ..........................................

04 மாட்டாந்தொழு = ..........................................

05 ஆட்டாந்தொழு = ..........................................



## சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுவோமா?

01 **இரண்டெடுத்து** இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..........................................

அ) இரண் + டெடுத்து ஆ) இரண்டு + எடுத்து

இ) இரண்டெ + டுத்து ஈ) இரண்டெ + எடுத்து

02 **பொங்கலிட்டு** இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..........................................

அ) பொங்கல் + இட்டு ஆ) பொங்கல் + லிட்டு

இ) பொங்க + இட்டு ஈ) பொங் + கலிட்டு

03 **ஆடு + எரு** என்பதைச் சேர்த்து எழுதக் கிடைக்கும் சொல் ..........................................

அ) ஆடுஎரு ஆ) ஆடெரு

இ) ஆட்டெரு ஈ) ஆடொரு

04 **செவ்வாய் + கிழமை** என்பதைச் சேர்த்து எழுதக் கிடைக்கும் சொல் ....................................

அ) செவ்வாய்கிழமை ஆ) செவ்வாய்க்கிழமை

இ) செவ்வாகிழமை ஈ) செவ்வாக்கிழமை

05 கீழ்க்காணும் சொற்களைப் பிரித்து எழுதுக

அ) சோளத்தட்டை = .................................. + ..................................

இ) மாட்டெரு = .................................. + ..................................

## இப்பாடலில் ஒரேசொல் இரண்டு முறை அடுத்தடுத்து வருவதைக் கண்டறிந்து எழுதுக –அடுக்குத்தொடர்.

எ.கா **கணுக்கணுவா**

______________

## இப்பாடலில் இடம்பெற்றுள்ள ஒரே ஓசையில் முடியும் சொற்களை எடுத்து எழுதுக.

**எ.கா:** நாளையிலே, கிழமையிலே

______________ ______________

______________ ______________

**இப்பாடலில் இடம்பெற்றுள்ள முதல் எழுத்து ஒன்றுபோல் வரும் சொற்களை எடுத்து எழுதுக.**

எ.கா: ஓலைக்கொட்டான் ஓடும் பிள்ளை

______________ ______________

______________ ______________

**மேகத்திலுள்ள பேச்சு வழக்குச் சொற்களைக் குடையிலுள்ள எழுத்து வழக்குச் சொற்களுடன் இணைத்துக் காட்டுக.**




1. ........................ ........................
2. ........................ ........................
3. ........................ ........................
4. ........................ ........................
5. ........................ ........................
6. ........................ ........................

## கலையும் கைவண்ணமும்

முளைப்பாரியை வண்ணமிட்டு மகிழ்க!...



## அறிந்து கொள்வோம்



நவதானியங்கள் எவை என அறிந்து கொள்வோமா...

- நெல்
- கோதுமை
- பாசிப்பயறு
- துவரை
- மொச்சை
- எள்
- கொள்ளு
- உளுந்து
- கடலை



## செயல் திட்டம்

- மாணவர்கள் ஐந்து பேர் கொண்ட குழுவாகப் பிரிந்து கொள்க. ஒவ்வொரு குழுவும் தமக்குக் கிடைக்கும் சிறு தானியங்களைக் கொண்டு முளைப்பாரியிட்டுக் கொண்டு வருக.



- பேச்சுவழக்குச் சொற்களுக்கு இணையான எழுத்துவழக்குச் சொற்களை எழுதுக

| பேச்சுவழக்கு | எழுத்துவழக்கு |
|---|---|
| 1. படிச்சான் | படித்தான் |
| 2. | |
| 3. | |
| 4. | |
| 5. | |
| 6. | |
| 7. | |
| 8. | |
| 9. | |
| 10. | |

# 5 பண்படுத்தும் பழமொழிகள்

அமுதவாணன் தன் தாத்தாவுடன் வாரச் சந்தைக்குச் சென்றான். செல்லும் வழியில் நாய்கள் குரைத்துச் சண்டையிட்டுக் கொண்டிருந்தன. அதைப் பார்த்த அமுதவாணன் நாய்களை விரட்ட கல்லைத் தேடினான்.



SFM7SV

**தாத்தா** : அமுதவாணா, என்ன தேடுகிறாய்?

**அமுதவாணன்** : "நாயைக் கண்டால் கல்லைக் காணோம்" என்பதற்கேற்ப இந்த நாய்களை விரட்ட கல் கிடைக்கவில்லை தாத்தா.

**தாத்தா** : அந்தப் பழமொழிக்குப் பொருள் வேறு அமுதவாணா! கல்லால் செதுக்கிய சிலை தானே கோவில்களில் இருக்கிறது ! அந்தச் சிலைகளைக் கல்லாகப் பார்த்தால், இறைவன் என்ற நாயகன் தெரியமாட்டார். சிலையை நாயகனாகப் பார்த்தால், கல் தெரியாது. இதுதான் இந்தப் பழமொழியின் பொருள்.

**அமுதவாணன்** : தாத்தா, "குரைக்கின்ற நாய் கடிக்காது" என்று என் நண்பன் இன்பவாணன் நேற்று கூறினான். குரைக்கின்ற நாய் கடிக்காதா தாத்தா?

**தாத்தா** : அப்படி இல்லை அமுதவாணா குரைக்கின்ற நாய் என்பது தவறு. குழைகின்ற நாய் கடிக்காது என்பதே சரியானது. குழைகின்ற என்றால் நம்மோடு பழகிய நாய் நம்மைப் பார்த்து வாலை ஆட்டிக் குழைந்து மகிழ்ச்சியை வெளிப்படுத்துமே அதுதான்.



இருவரும் சந்தைக்குள் நுழைந்தனர். நுழைவாயிலில் யானை ஒன்று ஆசி வழங்கிக் கொண்டிருந்தது. அதைப் பார்த்ததும் அமுதவாணனுக்கும் ஆசை வந்தது.

**அமுதவாணன்** : தாத்தா, நானும் இந்த யானையிடம் ஆசி பெற்றுக் கொள்கிறேன் .

**தாத்தா** : பெற்றுக்கொள், இதோ பத்து ரூபாய். யானையிடம் கொடு



**அமுதவாணன்** : தாத்தா, அன்றொரு நாள் அம்மா, அப்பாவிடம் கூறினார்களே, "யானைக்கொரு காலம் வந்தால் பூனைக்கொரு காலம் வரும்" என்று, அதற்குப் பொருள் என்ன தாத்தா?

**தாத்தா** : யானை கிடையாது அது ஆனை அதைப் பிரித்து எழுதினால் ஆ + நெய் அதாவது பசுவின் நெய். பூனை கிடையாது. அது பூநெய் அதைப் பிரித்து எழுதினால் பூ + நெய் அதாவது பூவில் ஊறும் தேன். நாம் இளமையில் பசுநெய்யை விரும்பி உண்போம் வயதான முதுமையில் தேனோடு மருந்து கலந்து உண்போம்.
**இளமையில் ஆநெய், முதுமையில் பூநெய். இதைத்தான் "ஆனைக்கொரு காலம் வந்தால் பூனைக்கொரு காலம் வரும்" என்பர். ஆனால் இன்று இதன் பொருள் மாறுபட்டு வழங்கப்படுகிறது.**

இருவரும் பேசிக் கொண்டே வீட்டிற்குத் தேவையான காய்கறிகள் வாங்கினர்.

**அமுதவாணன்** :தாத்தா, எனக்கு விளையாட பந்தும், மட்டையும் வாங்கித் தாருங்கள், அப்படியே பாப்பாவுக்குப் பலூன்கள் வாங்கிக் கொள்ளலாம்.

**தாத்தா** : வாங்கலாம் அமுதவாணா!

**அமுதவாணன்** : எனக்கும் சேர்த்து பலூன்கள் நிறைய வாங்கலாம் தாத்தா.



**தாத்தா** : போதும், "ஆத்துல போட்டாலும் அளந்து போடணும்"

**அமுதவாணன்** : ஆத்துல போட்டாலும் அளந்து போடணுமா?

**தாத்தா** : சொல்கிறேன்! சொல்கிறேன்! ஆத்துல போட்டாலும் அளந்து போடணும் என்று இப்பொழுது பயன்படுத்துகிறோம் ஆனால் இது தவறு. அகத்தில் போட்டாலும் அறிந்து போடணும் என்பது தான் சரி. அதாவது புரியாமல் எதையும் மனனம் செய்து நினைவில் கொள்ளக்கூடாது. கற்கும்போதே தெளிவாகப் புரிந்த பிறகுதான் நினைவில் கொள்ள வேண்டும்.

(பேசிக்கொண்டே இருவரும் வீட்டை அடைந்தனர்)

படிக்கும் பகுதியில் இடம்பெறும் பழமொழிகளை அறிதல்

**அமுதவாணன்** : உங்களுடன் சென்று வந்தது மிகவும் மகிழ்ச்சி தாத்தா.

## வாங்க பேசலாம்



- பாடப்பகுதியில் இடம்பெற்றுள்ள பழமொழிகளைக் கூறி அவற்றின் பொருளை உம் சொந்த நடையில் கூறுக .
- பாடப்பகுதியை உரிய உச்சரிப்புடன் படித்துப் பழகுக.
- உமக்குத் தெரிந்த பழமொழிகளையும் அவை உணர்த்தும் பொருளையும் வகுப்பில் மாணவர்களுடன் பகிர்ந்து கொள்க

## சிந்திக்கலாமா?



பழமொழிகளின் பொருள் மாறுபட்டு வழங்கப் படுவதற்குக் காரணம் என்னவாக இருக்கும்?

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

### சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுவோமா?

P1Y5KK

01 அமுதவாணன், தன் தாத்தாவுடன் சென்ற இடம் ..............................

அ) கடைத்தெரு ஆ) பக்கத்து ஊர்

இ) வாரச்சந்தை ஈ) திருவிழா

02 யானைக்கொரு இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..............................

அ) யானை + கொரு ஆ) யானை + ஒரு

இ) யானைக்கு + ஒரு ஈ) யானைக் + கொரு

03 பழச்சாறு இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..............................

அ) பழம் + சாறு ஆ) பழச் + சாறு

இ) பழ + ச்சாறு ஈ) பழ + சாறு

04 நாய் ..............................

அ) குரைக்கும் ஆ) குறைக்கும்

இ) குலைக்கும் ஈ) கொலைக்கும்

05 ஆசி இச்சொல்லின் பொருள் ..............................

அ) புகழ்ந்து ஆ) மகிழ்ந்து

இ) இகழ்ந்து ஈ) வாழ்த்து

06 கீழ்க்காணும் சொற்களைச் சேர்த்து எழுதுக

அ) வாரம் + சந்தை = ..............................

இ) பழைமை + மொழி = ..............................

### வினாக்களுக்கு விடையளிக்க.

01 அமுதவாணன் யாரிடம் ஆசி வாங்கினான்?

02 'ஆநெய்' 'பூ நெய்' ஆகியன எவற்றைக் குறிக்கின்றன?

03 "ஆற்றில் போட்டாலும் அளந்து போடு" – இப்பழமொழியின் பொருளைச் சொந்த நடையில் கூறுக.

## பழமொழியை நிறைவு செய்க

| | | |
|---|---|---|
| 01 | யானைக்கொரு<br>காலம் வந்தால் | ..........................................<br>.......................................... |
| 02 | ..........................................<br>.......................................... | கடிக்காது |
| 03 | நாயைக்<br>கண்டால் | ..........................................<br>.......................................... |
| 04 | கல்லைக்<br>கண்டால் | ..........................................<br>.......................................... |
| 05 | ..........................................<br>.......................................... | அளந்து<br>போடணும் |

## படித்தும், பாடியும் மகிழ்க!

அச்சம் இல்லாதவன் தானே!
அம்பலம் ஏறுவான் தேனே!
ஆவும் தென்னையும் தானே!
ஐந்தே வருடம் பலன் தரும் மானே!
எஃகு போல தானே!
உறுதியாய் இரு தேனே!
மூத்தோர் சொல் தானே!
பழமொழிகள் ஆகும் மானே!

## படத்திற்கேற்ற பழமொழியைத் தேர்ந்தெடுக்க.



01 சிறுதுளி பெருவெள்ளம். ☐

02 யானைக்கும் அடி சறுக்கும். ☐

03 காற்றுள்ள போதே தூற்றிக்கொள். ☐

## முதலெழுத்து மாற்றினால் வேறுசொல்

01
படிக்க நீயும் ............விரும்பு............
பாறையை உடைப்பது ....................................
சுவைத்தால் இனிக்கும் ....................................
பூ மலரும் முன்பு ....................................



02
கையின் மறுபெயர் ............கரம்............
வயலுக்கு இடுவது ....................................
பூக்களைத் தொடுத்தால் ....................................
புன்னை என்பது ....................................



03
நீர் இறைத்திடுவது ............ஏற்றம்............
புயலோ இயற்கை ....................................
தவறு இழைப்பது ....................................
வீட்டின் உள்ளே ....................................





## அறிந்து கொள்வோம்

முன்னோர்கள் தங்கள் அனுபவத்தைச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கக் கூறிய மொழிகளே முதுமொழிகள் அல்லது பழமொழிகள் ஆகும்.





## செயல் திட்டம்

ஐந்து பழமொழிகளை எழுதி, அவை இன்று உணர்த்தும் பொருளையும் அதன் உண்மையான பொருளையும் எழுதி வருக.

## இணைத்து மகிழ்வோம்

| | | | |
|---|---|---|---|
| 01 | Talk less work more | | நல்ல அறிவுரை விலை மதிப்பற்றது |
| 02 | No pain no gain | | மின்னுவதெல்லாம் பொன்னல்ல |
| 03 | Good council has no price | | குறைவாகப் பேசு அதிகம் வேலை செய் |
| 04 | Haste makes waste | | உழைப்பின்றி ஊதியமில்லை |
| 05 | All that glitters is not gold | | பதறாத காரியம் சிதறாது |

# 6 முயல் அரசன்

7GCJL3

ஒரு விவசாயியின் தோட்டத்தில் விளைந்திருந்த காய்களையும் கனிகளையும், கிழங்குகளையும் வயிறாரத் தின்று வாழ்ந்து கொண்டிருந்தது ஒரு முயல். ஆனாலும், அதன் மனத்தில் ஒரு கவலை, அதற்குக் காரணம் அது வாழும் அந்தக் காட்டைப் பல்லாண்டு காலமாக ஆட்சி செய்து வரும் ஒரு புலி ஆகும். புலிக்குக் கிடைக்கும் மதிப்பு தனக்கும் கிடைக்கவேண்டும் என்று முயல் விரும்பியது. புலியைவிடத் தானே சிறந்தவன் என்று புலிக்கும் காட்டில் உள்ள பிற விலங்குகளுக்கும் மெய்ப்பிக்க வேண்டுமென முயலுக்கு ஆசை தோன்றியது. உடனே, முயல் சிந்தித்துச் செயல்படத் தொடங்கியது. இனி, கதையைப் படிப்போம்...













ஓடினேனா! நானா! உன்னைக் கண்டா...? உனக்குச் செய்தியே தெரியாதா? உனக்கு எங்கே தெரியப்போகிறது... இங்கு கூட்டம் நடந்த போது நீ தான் அப்பாவி விலங்குகளை வேட்டையாடிக் கொண்டிருந்தாயே...
எல்லா விலங்குகளும் கூட்டத்திற்கு வந்திருந்தனவா?
சில விலங்குகளைத் தவிர எல்லா விலங்குகளும் வந்திருந்தன.
கூட்டத்தில் என்ன தீர்மானம் எடுக்கப்பட்டது?
நீ இந்தக் காட்டின் அரசனாக இனிமேலும் நீடிக்கக் கூடாது என்று எல்லா விலங்குகளும் ஒரே மனதாகத் தீர்மானம் நிறைவேற்றின
நான் அரசனாக நீடிக்கக் கூடாதா? அப்படியானால் வேறு யார் அரசனாக இருப்பது?
இந்தக் காட்டிலேயே பயங்கரமான மூர்க்கமான விலங்காகிய என்னைத் தான் எல்லா விலங்குகளும் புதிய அரசனாகத் தேர்ந்தெடுத்தன.
வேடிக்கைப் பேச்சு பேசுகிறாய்.. பலமற்ற சிறிய மென்மையான நீ இந்தக் காட்டுக்கு அரசனா? உன்னை இப்போதே ...??
உன் முதுகில் என்னை ஏற்றிக்கொண்டு போ. இக்காட்டு விலங்குகள் என்னைப் பார்த்து அஞ்சுவதை உனக்கு மெய்ப்பித்துக் காட்டுகிறேன்


ம்.. ம்.. ம்... நட....
இந்த முயல் எப்படிப் புலியின் மேல் அமர்ந்து வருகிறது!
எல்லா விலங்குகளும் பயப்படுகின்றனவே...! முயல் கொடிய விலங்காகத்தான் இருக்குமோ!
முயல் அரசே! நான் உங்களைத் தவறாகப் பேசியிருந்தால் மன்னித்து விட்டு விடுங்கள்.
இப்பொழுது இந்தக் காட்டுக்கு அரசன் யார்?
நீங்கள் தாம்!
உரக்கச் சொல்
தாங்கள் தாம் இந்தக் காட்டுக்கு அரசன்
உன்னை மன்னித்து விடுகிறேன். நீ இந்தக் காட்டிலேயே இருக்கக்கூடாது. எங்காவது ஓடிப்போய்விடு!
ஐயோ! என்னை விட்டுவிடுங்கள் நான் போய் விடுகிறேன்..!
இப்போதெல்லாம் முயல் வயிறு நிரம்பச் சாப்பிட்டு, நிம்மதியாக, சுகமாகப் பகல் வேளைகளில் ஒரு குட்டித் தூக்கம் போட்டுக் கொண்டிருக்கிறது.



## வாங்க பேசலாம்

- கதையை உம் சொந்த நடையில் கூறுக.
- ஆராய்ந்து செயல்படுவதால் கிடைக்கும் நன்மைகளைக் கூறுக.



## சிந்திக்கலாமா?

நீ செய்யாத செயலுக்கு உனக்கு ஒருவர் நன்றி கூறினால் அல்லது பரிசு அளித்தால் அவ்வேளையில் நீ என்ன செய்வாய்?

LHBSFX

## வினாக்களுக்கு விடையளிக்க

01 குதிரை ஏன் நாய்க்கு உதவி செய்ய நினைத்தது?

02 காவலர்கள், குதிரைமீது இருந்த நாயை ஏன் கீழே இறக்கிவிட்டனர்?

## சொல்லக் கேட்டு எழுதுக.

குதிரை, இரக்கம், நிலைமை, பேராசை, குடிமக்கள்

## நிறுத்தக் குறியிடுக

அரசே அதோ ஒரு நாயானது நடக்க முடியாமல் தத்தித்தத்திச் சென்று கொண்டிருக்கிறது. அந்த நாயை என் முதுகில் ஏற்றிக்கொண்டு அது எந்த இடத்திற்குச் செல்ல வேண்டுமோ அந்த இடத்தில் விட்டுவிடலாமா என்று கேட்டது

**ஒரே சொல் இரண்டுமுறை அடுத்தடுத்து வருமாறு சொற்றொடர் அமைத்து எழுதுக**
(எ.கா.) நாய் ஒன்று நொண்டி, நொண்டி நடந்தது

தத்தித் தத்தி ______________

எழுதி எழுதி ______________

திரும்பித் திரும்பி ______________

குனிந்து குனிந்து ______________

## குறிப்பைப் படி! விடையைக் கொடு!

பேச உதவுவது வாய்
படுக்க விரிப்பது பாய்
கனிக்கு முந்தையது காய்
காவல் காப்பது………….?

வரியில் ஒன்று சுங்கம்
கனிமத்தில் ஒன்று தங்கம்
நாடுகளுள் ஒன்று வங்கம்
தமிழுக்கு மூன்று………?

உழவுக்கு உதவுவது ஏர்
ஊர்கூடி இழுப்பது தேர்
மரத்திற்கு தேவை வேர்
நல்லதை உன்னிடம்……?

## அகரமுதலி பார்த்துப் பொருள் அறிக

போலி, பொறாமை, சவாரி, வருந்தியது, மரியாதை

## சொற்களிலுள்ள பிழைகளை நீக்குக.

மண்னர், குதிறைச் சவாரி, உர்சாகம், சிறந்தவண், மக்கலெள்ளாம், கனைப்பொளி, இறக்கக் குணம், கிராமங்கல்.

## கலையும் கைவண்ணமும்

பயன்படுத்திய காகிதத்தில், உறை தயாரிக்கலாமா?

**தேவையான பொருள்கள்**

பயன்படுத்திய தாள்கள், பசை



## விலங்குகளுக்குரிய ஒலிப்புகளை வட்டமிடுக.







| ல | க | க | னை | க் | கு | ம் | ன | ர |
|---|---|---|---|---|---|---|---|---|
| வ | ழ | மு | ழ | ங் | கு | ம் | அ | ம் |
| ந | டை | னை | வி | ழு | ம் | தி | ப | று |
| கு | ரை | க் | கு | ம் | சை | றா | மு | ளி |
| ம | று | கு | ரு | வி | லு | கே | ள் | பி |
| டு | ன | ம் | மு | று | உ | உ | டை | ழ |





## அறிந்துகொள்வோம்.

**தமிழில் மூவினம்**

த– வல்லினம்

மி– மெல்லினம்

ழ்– இடையினம்

**தமிழும் மூன்றும்**

| | | |
|---|---|---|
| முத்தமிழ் | – | இயல், இசை, நாடகம் |
| முச்சங்கம் | – | முதல், இடை, கடை |
| முக்காலம் | – | இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் |
| முப்பொருள் | – | அறம், பொருள், இன்பம் |
| மூவிடம் | – | தன்மை, முன்னிலை, படர்க்கை |



## செயல்திட்டம்

பிறர் பாராட்டுவதற்குரிய நல்ல செயல்கள் எவையெவை என உன் வீட்டில் உள்ளவர்களிடம் கேட்டு எழுதி வருக.

# முக்காலம் அறிவோமா?





| நடந்து கொண்டிருக்கும் செயல் | நடந்துமுடிந்த செயல் | நடக்கப்போகும் செயல் |
|---|---|---|
| நிகழ்காலம் | இறந்தகாலம் | எதிர்காலம் |

## கீழ்க்காணும் எடுத்துக்காட்டைப் போல் எழுதுக.

**எடுத்துக்காட்டு**

நான் உணவு -------------(உண்) – நான் உணவு உண்டேன் (இறந்தகாலம்)

நான் உணவு உண்கிறேன் (நிகழ்காலம்)

நான் உணவு உண்பேன் (எதிர்காலம்)

| வ.எண் | தொடர் | இறந்தகாலம் | நிகழ்காலம் | எதிர்காலம் |
|---|---|---|---|---|
| 1 | இளவரசி பூ -------- (தொடு) | | | |
| 2 | ஆடு புல் ----------- (மேய்) | | | |
| 3 | நாங்கள் படம்------- (வரை) | | | |
| 4 | கதிர் போட்டியில்---- (வெல்) | | | |
| 5 | மயில்கள் நடனம் ---- (ஆடு) | | | |

## அட்டவணையில் விடுபட்ட இடங்களை நிரப்புக.

| வ.எண் | வினைச்சொல் | இறந்தகாலம் | நிகழ்காலம் | எதிர்காலம் |
|---|---|---|---|---|
| 1 | செய் | | செய்கின்றான் | |
| 2 | | பறந்தது | | |
| 3 | | | | படிப்பான் |
| 4 | கேள் | கேட்டது | | |
| 5 | | | | சொல்வார்கள் |

## படங்களுக்குப் பொருத்தமான காலங்களைப் பயன்படுத்தித் தொடர் எழுதுக.



கண்ணன் ஏணியில் ஏறுகிறான்



________________



________________



________________





________________



________________



________________



________________



________________

# 16 திருக்குறள் கதைகள்

## பொறுமையும் பொறுப்பும்

தாமஸ் ஆல்வா எடிசன் என்பவர், புகழ்பெற்ற அறிவியலறிஞர். இவர், பல முறை தோல்வி கண்டு, பெரும் முயற்சிக்குப் பின்னரே மின் விளக்கைக் கண்டுபிடித்தார்.

BAJGUP

நண்பர்களுக்கும், பிற அறிவியல் அறிஞர்களுக்கும் தம் கண்டுபிடிப்பைச் செய்துகாட்ட எடிசன் விரும்பினார். அதற்காக, நிகழ்ச்சியொன்றை ஏற்பாடு செய்து, அனைவரையும் வரவழைத்தார். அவரது ஆய்வகத்தின் மேல்தளத்தில் இதற்கான கூட்டம் நடைபெற்றது.

எடிசன் தம் உதவியாளரை அழைத்து மின் விளக்கை மேல் தளத்திற்குக் கொண்டு வரச்சொன்னார். உதவியாளர், அதனைக் கொண்டு வரும்போது, திடீரெனக் கைதவறி விழுந்தது. ஆயினும், சற்றும் மனம் கலங்காத எடிசன், உடனே மற்றொரு மின் விளக்கை உருவாக்கினார். அதனை மீண்டும் அதே உதவியாளரிடமே கொடுத்து மேலே எடுத்து வரச் செய்தார்.

"மின் விளக்கைக் கீழே போட்டு உடைத்தவரிடம் மீண்டும் அந்த வேலையைக் கொடுக்கிறீர்களே?" என்று சிலர் எடிசனிடம் கேட்டனர். அதற்கு எடிசன், "உடைந்த பொருளை மீண்டும் உருவாக்க என்னால் முடிந்தது. ஆனால், உதவியாளரின் மனத்தைக் காயப்படுத்திவிட்டால் அதை என்னால் சரிசெய்து கொடுத்துவிட முடியுமா? அதுமட்டுமன்று, மீண்டும் அதே பணியை அவரிடமே கொடுக்கும்போது, தமது பொறுப்பை உணர்ந்து கவனமுடன் பணிபுரிவார். அதனால்தான் அப்படிச் செய்தேன்" என்றார்.



எடிசனுக்கு வெற்றியைப் பெற்றுத்தந்த பொறுமைக் குணத்தை, அப்போதுதான் மற்றவர்கள் முழுமையாக உணர்ந்து கொண்டனர்.

### குறள்

நிறையுடைமை நீங்காமை வேண்டின் பொறையுடைமை

போற்றி ஒழுகப் படும்.

பொறையுடைமை, குறள்.154

### விளக்கம்

நிறை உடையவராக இருக்கும் தன்மை தம்மைவிட்டு நீங்காமலிருக்க வேண்டுமானால், பொறுமையைப் போற்றி ஒழுக வேண்டும்.

## மெய்ப்பொருள் காண்போம்

மாட்டுவண்டி ஒன்றில், தேங்காய்களை ஏற்றிக்கொண்டு வேகமாக வந்து கொண்டிருந்தார் ஒருவர். வழியில், குறுக்குப்பாதை ஒன்று வந்தது. அங்கே சிறுவன் ஒருவன் நின்றிருந்தான்.

"தம்பி, இந்தச் சாலையில் போனால் ஊர் வருமா?" என்று கேட்டார் வண்டிக்காரர். "ஓ, வருமே" என்றான் சிறுவன்.

"போய்ச் சேர எவ்வளவு நேரம் ஆகும்?"

"மெதுவாகச் சென்றால் பத்து நிமிடத்தில் போய்விடலாம்".

"வேகமாகச் சென்றால்.. . .."

"அரை மணி நேரம் ஆகும்".

சிறுவன் சொன்ன பதிலைக் கேட்டு மாட்டு வண்டிக்காரருக்குக் கோபம். "என்ன கிண்டலா? வேகமாகச் சென்றால் எப்படி நேரம் அதிகமாகும்?" என்று கேட்டார்.

"போய்த்தான் பாருங்களேன்" என்று சிறுவன் சொன்னதும், அவர் வண்டியை வேகமாக விரட்டிச் சென்றார்.



சிறிது தூரம் போனதுமே சாலையில் அங்கங்கே கற்கள் நிறைந்து இருந்தன. அதனால், வண்டி தடுமாறிக் கவிழ்ந்தது. தேங்காய்கள் சிதறின. வண்டியைத் தூக்கி நிறுத்திக் கீழே சிதறிய தேங்காய்களை ஒவ்வொன்றாக எடுத்துப் போடுவதற்கு அரை மணி நேரத்திற்கும் மேலாகிவிட்டது. வண்டிக்காரருக்குச் சிறுவன் சொன்னதன் பொருள் புரிந்தது.

## குறள்

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்

மெய்ப்பொருள் காண்பது அறிவு.

அறிவுடைமை, குறள். 423

## விளக்கம்

எப்பொருளை யார் யாரிடம் கேட்டாலும், கேட்டவாறே எடுத்துக்கொள்ளாமல் அப்பொருளின் மெய்யான பொருளைக் காண்பதே அறிவாகும்.

### குற்றமும் குறையும்

கதிரவனிடம் வேண்டாத குணமொன்று இருந்தது. அதாவது, எப்போது பார்த்தாலும் யாரைப் பற்றியாவது எதைப்பற்றியாவது குறை சொல்லிக் கொண்டேயிருப்பான். அதனால், அவனைப் பார்த்தாலே போதும். எல்லா நண்பர்களும் ஓடத் தொடங்கிவிடுவர்.

தமிழ் அழகன் ஒருவன்தான் இப்போது அவனுடன் பேசுகிறான். வேறு எவரும் பேசுவதில்லை. அன்று, தமிழ் அழகன் நான்கு நண்பர்களுடன் பேசிக் கொண்டிருந்ததைக் கண்டான் கதிரவன். ஆர்வத்துடன் அவர்கள் அருகில் வந்தான்.

கதிரவனைப் பார்த்ததும் எல்லாரும் ஒதுங்கிச் செல்ல, தமிழ் அழகன் மட்டுமே தனியாக நின்றான். கதிரவனின் முகம் வாடியது.

"என்ன கதிர்? ஏன், என்னவோ போல் இருக்கிறாய்?" என்று கேட்டான் தமிழ் அழகன்.

"ஆமாம் தமிழ் . என்னைப் பார்த்தாலே எல்லாரும் ஓடிப்போறாங்களே ....." என்றான் கதிரவன்.

"எல்லாம் யாரால? உன்னாலதானே!" என்றான் தமிழ் அழகன் .

"நான் என்ன தப்பு பண்ணினேன்? பிறர்கிட்ட உள்ள குற்றம் குறையைத்தானே பேசினேன்" என்றான் கதிரவன்.



"கதிர், குற்றம்குறை யார்கிட்டேதான் இல்லை. உன்னோட குறை என்னன்னு உனக்குத் தெரியுமா? நீ பிறரைப் புறம் பேசறதுதான் உன்னோட குறை. உன்னோட நாக்கை அடக்கு. எல்லாரும் உன்கிட்ட பேசுவாங்க"என்றான் தமிழ் அழகன் .

கதிரவன் தன்னைத் திருத்திக் கொண்டான். எல்லாரும் அவனுடன் மெள்ள மெள்ளப் பேசத் தொடங்கினர்.

### குறள்

யாகாவார் ஆயினும் நாகாக்க காவாக்கால்

சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு

அடக்கமுடைமை, குறள்.127

### விளக்கம்

காக்க வேண்டியவற்றுள் எவற்றைக் காக்காவிட்டாலும் நாவையாவது காக்க வேண்டும். காக்கத் தவறினால், சொற் குற்றத்தில் அகப்பட்டுத் துன்புறுவர்.

### அழகு

கந்தனின் உருவமே, "கோபம் கோபம் கோபம்" என்றாகிப் போனது. கந்தனை யாராவது விசாரித்தால், "எப்பவும் கோபத்தோடே 'உர்' ருன்னு அலைவானே அவனைத்தானே கேட்கிறீங்க" என்று மாணவர்கள் எளிதாகச் சொல்லிவிடுவர். அதனால், அவனிடம் நெருங்கிப் பழகவும் மாணவர்கள் பயந்தனர்.

கந்தன் ஒருநாள் அவன் நண்பனான நன்மாறனிடம் பேசிக் கொண்டிருந்தான். "நீயெல்லாம் சும்மா ஜம்முனு அழகா இருக்கியே! நான் மட்டும் ஏன் முகமெல்லாம் கறுத்துப்போய் இப்படி இருக்கேன்" என்றான்.

நன்மாறன் சிரித்தான். "நீ தினமும் உன்னோட முகத்தைக் கண்ணாடியில் பார்க்கிறியா?" என்று கேட்டான்.

"தினமும் பார்க்கிறேன்"

"இன்னும் உனக்குக் காரணம் புரியலையா?"

"புரியலை"

"கந்தா, நெருப்பில் வாடிய பூக்கள் தம்மோட அழகை எல்லாம் இழக்கும், அதுபோலத்தான் உன்கிட்ட மாறாம இருக்கிற கோபத்தால உன் முகம் அழகையெல்லாம் இழந்திருக்கு. பொடி வைத்தாற்போல் சொன்னான் நன்மாறன்.

நன்மாறன் சொன்னதில் உண்மை இருக்கவே, தன் கோபத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கட்டுப்படுத்தத் தொடங்கினான் கந்தன். ஒரு மாத காலம் கடுமையான விரதம்போல் காத்தான். அன்று கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்தான். அஃது எத்துணை அழகாக இருந்தது தெரியுமா?



### குறள்

தன்னைத்தான் காக்கின் சினம்காக்க காவாக்கால்

தன்னையே கொல்லுஞ் சினம்.

வெகுளாமை, குறள். 305

### விளக்கம்

ஒருவன் தன்னைத் தானே காக்க விரும்பினால் சினம் வராமல் காத்துக்கொள்ள வேண்டும். அவ்வாறு காத்துக்கொள்ளாவிட்டால், சினம் தன்னையே அழித்துவிடும்.



## வாங்க பேசலாம்

- நாவைக் காக்காவிட்டால் ஏற்படும் துன்பம் குறித்துப் பேசுக.
- கதையில் ஒன்றைத் தெரிவு செய்து நண்பர்களுடன் இணைந்து நாடகமாக நடித்துக் காட்டுக.



### சிந்திக்கலாமா?

அனுவும், பானுவும் சாலையைக் கடக்க, நின்று கொண்டு இருந்தனர். அப்போது மஞ்சள் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அனு சாலையைக் கடக்கத் தொடங்கினாள். பானு, பச்சை விளக்கு ஒளிர்ந்தால் மட்டுமே கடக்க வேண்டும். பொறுமையாக இரு என்றாள். எது சரியான செயல்?

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

BPTFUD

### சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுவோமா?

01. 'பொறை' என்பதன் பொருள் ..................................

அ) முழுமை ஆ) வளமை

இ) பொறுமை ஈ) பெருமை

02. நிறையுடைமை – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..................................

அ) நிறை + யுடைமை ஆ) நிறை + உடைமை

இ) நிறைய + உடைமை ஈ) நிறையும் + உடைமை

03. 'மெய் + பொருள்' – இச்சொற்களைச் சேர்த்து எழுதக் கிடைப்பது ..................................

அ) மெய்பொருள் ஆ) மெய்யானபொருள்

இ) மெய்ப்பொருள் ஈ) மெய்யாய்ப்பொருள்

04. வெகுளாமை – இச்சொல்லின் பொருள் ..................................

அ) அன்பு இல்லாமை ஆ) பொறாமை கொள்ளாமை

இ) சினம் கொள்ளாமை ஈ) பொறுமை இல்லாமை

05. போற்றி ஒழுகப்படும் பண்பு ..................................

அ) சினம் ஆ) பொறையுடைமை

இ) அடக்கமில்லாமை ஈ) அறிவில்லாமை

## வினாவிற்கு விடையளிக்க

01 பொறையுடைமை எப்போது போற்றப்படும்?

02 மெய்ப்பொருள் காண்பதே அறிவு என வள்ளுவர் கூறக் காரணம் என்ன?

03 நாவைக் காக்காவிடில் ஏற்படும் துன்பம் என்ன?

04 சினம் எப்போது ஒருவரை அழிக்கும்?

05 நீங்கள் படித்த திருக்குறள் கதைகளுள் உங்களுக்குப் பிடித்த கதை எது? ஏன்?

## பொருத்துக

1. பொறை – சொல்குற்றம்
2. மெய்ப்பொருள் – துன்பப்படுவர்
3. காவாக்கால் – பொறுமை
4. சோகாப்பர் – காக்காவிட்டால்
5. சொல்லிழுக்கு – உண்மைப்பொருள்

## பொருத்தமான சொல்லைத் தேர்ந்தெடுத்துத் தொடரை நிரப்புக.

01 ஆய்வகம் _______________ இருந்தது. (மேல் தளத்தில் / மேல் தலத்தில்)

02 வழியில் _______________ ஒன்று வந்தது. (குருக்குப்பாதை / குறுக்குப்பாதை)

03 உனக்குக் காரணம் _______________ ( புறியவில்லையா / புரியவில்லையா)

04 எடிசன் மின் _______________ உருவாக்கினார். (விளக்கு / விலக்கு)

05 குற்றம் _____ யாரிடம்தான் இல்லை. (குரை / குறை)

## சொல்லக் கேட்டு எழுதுக.

01 மெய்ப்பொருள்

02 பொறையுடைமை

03 சோகாப்பர்

04 நிறையுடைமை

## மொழியோடு விளையாடு

**பொருத்தமான வினாச் சொல்லை எடுத்து வினாத் தொடரை முழுமையாக்குக.**

01 உன்னுடைய ஊரின் பெயர் _______________?

02 உனக்குப் பிடித்த வண்ணம் _______________?

03 நீ பள்ளிக்கு _______________ வருகிறாய்?

04 உன்னுடைய நண்பன் _______________?

05 கோடை விடுமுறைக்கு _______________ சென்றாய்?

06 மெய்ப்பொருள் என்பதன் பொருள் _______________?

07 குறில் எழுத்துகள் _______________?

08 சாருமதி _______________ வீட்டிற்குச் சென்றாள்?

யாது
யாவை
எங்கு
எது
எப்படி
என்ன
யார்
யாருடைய

**நமக்குத் தேவையான பண்புகளைத் தேர்ந்தெடுப்போமா?**

| அ | ன் | பு | ம் | வ | க |
|---|---|---|---|---|---|
| ட | பொ | வு | ன | சை | ல் |
| க் | ஈ | றி | சி | பொ | லா |
| க | கை | அ | வா | ய் | மை |
| ம் | க | க் | ழு | ஒ | ரு |
| செ | ய் | ந் | ந | ன் | றி |

1. அன்பு 2. ______ 3. _____ 4. ______ 5. ______ 6. ______ 7. _____

## கலையும் கைவண்ணமும்

### சூரியகாந்திக்கு வண்ணமிடுவோமா?

இதழ்களுக்கு மஞ்சள் தூள், விதைகளுக்கு உலர்ந்த தேயிலைத்தூள்... பயன்படுத்தி அழகாக்குக.



## அறிந்து கொள்வோம்



1. திருக்குறள் முதன்முதலில் அச்சிடப்பட்ட ஆண்டு 1812.
2. திருக்குறள் அகர எழுத்தில் தொடங்கி னகர எழுத்தில் முடிகிறது.
3. திருக்குறளில் இடம்பெறும் இருமலர்கள் அனிச்சம், குவளை.



## செயல்திட்டம்



நீங்கள் நன்கு அறிந்த திருக்குறளுக்கு உம் சொந்த நடையில் கதை எழுதி வருக.



Tamil 4th-std_Term2.indd 45 8/7/2019 6:03:39 PM

# 17 பசுவுக்குக் கிடைத்த நீதி

(நாடகம்)

**முன்கதைச் சுருக்கம்**

சோழ மன்னர்களுள் ஒருவர் மனுநீதி. முறைமை தவறாது ஆட்சி புரிவதையே தம் நோக்கமாகக் கொண்டவர். ஆயினும், அவரது ஆட்சிக்காலத்தில் வாயில்லாப் பசுவுக்கு ஏற்பட்டது ஒரு பேரிழப்பு. அதற்குக் காரணமானவன் வேறுயாருமல்லன், அரசரின் மகனே. இப்போது, அரசர் என்ன செய்வார்? தம் மகன் என்று அவனைக் காப்பாற்றுவாரா? அல்லது தன் கன்றை இழந்து வாடும் அந்தப் பசுவுக்கு உரிய நீதியை வழங்குவாரா?

வாருங்கள் தெரிந்துகொள்ள அரங்கத்துக்குள் நுழைவோம்.

**காட்சி – 1**

இடம் : அரசவை மண்டபம்

காலம் : நண்பகல்

உறுப்பினர்கள் : அரசர் மனுநீதிச் சோழர், அமைச்சர் பெருமக்கள்

(அவையில் மன்னரும் அமைச்சர் பெருமக்களும் வீற்றிருக்கின்றனர். அப்போது அங்கு வந்த தச்சர் ஒருவர், மன்னரை வணங்கிப் பணிகிறார். இனி....)



அரசர் : வாருங்கள், தச்சரே. நேற்று உம்மிடம் ஒரு வேலையைக் கொடுத்தேனே, முடித்துவிட்டீரா?

தச்சர் : ஆம். முடித்துவிட்டேன் மன்னா. நீங்கள் நேரிலேயே வந்து பார்வையிடலாம் மன்னா.

அரசர் : அப்படியா? மிக்க மகிழ்ச்சி. அமைச்சர் பெருமக்களே, 'சோழ நாடு சோறுடைத்து' என்பது உலகோர் அறிந்த செய்தி. அதுமட்டுமா? நம் சோழர் குலத்துக்குப் பெருமை சேர்க்கும் மற்றொரு செய்தி, நீதி தவறாத ஆட்சிமுறை அல்லவா? அதனால்தான், என் ஆட்சியில் குடிமக்கள் யாரும் துன்பப்படக் கூடாது என்று நினைத்தேன். அதற்காக நான் ஏற்படுத்திய

ஓர் அமைப்பே ஆராய்ச்சிமணி. அதைத்தான் இந்தத் தச்சர் சிறப்பாகச் செய்து முடித்துள்ளார்.

**அமைச்சர்** : ஆராய்ச்சி மணியா? அது எதற்கு மன்னா? அதைக்கொண்டு நீங்கள் எப்படி நீதி வழங்குவீர்கள்?

**அரசர்** : சொல்கிறேன், அமைச்சரே. நம் அரண்மனை வாயிலிலே கோவில் மணிபோல் பெரியதொரு மணியைக் கட்டச் செய்துள்ளேன். குடிமக்கள், தங்களுக்கு ஏற்படும் குறைகளை உடனுக்குடன் தீர்த்துக்கொள்ள இந்த ஆராய்ச்சிமணியைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

**அமைச்சர்** : அரசே, இதிலென்ன புதுமை? நீங்கள்தாம் எந்தக் குறையும் மக்களுக்கு வைப்பதில்லையே.

**அரசர்** : நீங்கள் சொல்வது உண்மையாகக்கூட இருக்கலாம். ஆனால், தங்கள் குறைகளை வெளிப்படையாகச் சொல்வதற்குச் சிலர் தயங்கலாம் அல்லவா? மேலும், இந்த ஆராய்ச்சிமணியின் நோக்கமே, உடனுக்குடன் நீதி வழங்குவதில்தான் உள்ளது. அதுமட்டுமா? குடிமக்கள் எப்போது ஆராய்ச்சிமணியை ஒலித்தாலும், அவர்கள் முன் நானே ஓடோடிச் சென்று நிற்பேன். அவர்களின் மனக்குறையையும் உடனடியாகத் தீர்த்துவைப்பேன்.



**அமைச்சர்கள்** : ஆஹா, நீங்கள்தாம் சிறந்த மன்னர். இவ்வுலகம் உள்ளவரை உங்கள் புகழ் ஓங்கும்.

(அரசவை கலைகிறது. சில மாதங்களாக ஆராய்ச்சிமணியின் ஓசையை அரசர் கேட்கவேயில்லை. இந்நிலையில் ஒருநாள் வழக்கம்போல் அமைச்சர்கள் சூழ மன்னர் அமர்ந்திருக்கிறார். அப்போது, ஆராய்ச்சிமணி ஒலிக்கத் தொடங்குகிறது. இனி....)

## காட்சி – 2

**இடம்** : அரசவை

**காலம்** : மாலை

**உறுப்பினர்கள்** : அரசர், அமைச்சர் பெருமக்கள், அரண்மனைக் காவலாளி

**காவலாளி** : மன்னா.....மன்னா.....

(என்றழைத்தவாறே பதற்றத்துடன் ஓடி வருகிறான், அரண்மனைக் காவலாளி.)

**அரசர்** : என்ன ஆயிற்று? ஏன் இப்படி மூச்சிரைக்க ஓடிவருகிறாய்? பதறாமல் சொல்.

**காவலாளி** : மன்னா, இதுவரை நான் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை. அதனால்தான் எப்படிச் சொல்வது என்று தயங்குகிறேன்.

**அரசர்** : என்ன ஆனாலும் பரவாயில்லை. சொல்ல வந்த செய்தியைத் தயங்காமல் உடனே சொல்.

**காவலாளி** : மன்னா, அதுவந்து....அதுவந்து.... நம் அரண்மனை வாயிலில் கட்டப்பட்டிருந்த ஆராய்ச்சிமணி....

**அரசர்** : என்ன? ஆராய்ச்சிமணியை யாராவது அடிக்கிறார்களா? இவ்வளவு மாதங்களாக யாருக்கும் எந்தக் குறையும் இல்லையென்று நினைத்தேனே. பரவாயில்லை. இதோ நானே வருகிறேன்.

(அரசர் அரண்மனை வாயிலுக்கு விரைய, அமைச்சர்களும் பின்தொடர்ந்து செல்கின்றனர்.)

**அரசர்** : ஐயகோ, என்ன ஆயிற்று? பசுவொன்று ஆராய்ச்சிமணியை அடித்துக் கொண்டிருக்கிறதே? என் ஆட்சியில் வாயில்லாத பசுவுக்குக் குறை நேர்ந்ததா? இதை நான் எங்ஙனம் பொறுத்துக்கொள்வேன்? அதன் கண்களில் வழியும் கண்ணீரைப் பாருங்கள். தாங்கமுடியாத துயரத்தில் அது துன்பப்படுவதுபோல் இருக்கிறதே? ஐந்தறிவு விலங்குகளின் துயர் நீக்க மறுத்தான் என்று இந்த வியனுலகம் என்னைப்பழிக்குமோ? இனி என் வாழ்நாளெல்லாம் பழிச்சொல்லைச் சுமந்து திரிவேனோ? எனக்கொன்றும் விளங்கவில்லையே, கதறும் அந்தப் பசுவின் கண்ணீரைத் துடைக்க இதோ புறப்பட்டான் இந்த

மன்னன் என்று பிறர் அறியட்டும். யாரங்கே? உடனே சென்று அந்தப் பசுவுக்கு ஏற்பட்ட இன்னலை அறிந்து வாருங்கள்.

**காவலாளிகள்** : உத்தரவு மன்னா. இதோ சென்று விரைவில் செய்தியுடன் மீள்கிறோம்.

(அரசனின் மகன், தேரைத் தெருவில் ஓட்டிச் செல்லும்போது, அங்குத் துள்ளிக் குதித்துக் கொண்டிருந்த பசுவின் கன்று, எதிர்பாராத வகையில் தேர்க்காலில் மாட்டி இறக்கிறது. தன் கன்றைக் காணாது தேடியலைந்த பசு, அதன் இறந்த உடலைக் கண்டு கண்ணீர் விடுகிறது. அதன் ஆற்றொணாத் துயரே ஆராய்ச்சிமணி வடிவில் ஒலிக்கத் தொடங்கியது. இனி...)

### காட்சி – 3

**இடம்** : **அரசவை**

**காலம்** : காலை

**உறுப்பினர்கள்** : அரசர், அமைச்சர் பெருமக்கள்

**அமைச்சர்** : மன்னா, தங்கள் முடிவை அருள்கூர்ந்து மாற்றிக்கொள்ளுங்கள்.

**அரசர்** : என்ன சொல்கிறீர் அமைச்சரே? மண்ணுயிர் காக்கும் மன்னன், நீதி வழங்கும் நெறிமுறையாளன் என்று மக்கள் என்னைப் போற்றுகிறார்களே, அதற்கு இழுக்கு நேரிட ஒருபோதும் நான் அனுமதிக்க மாட்டேன். பசுவின் கதறலுக்குச் செவிசாய்க்காக் கொடியோன் என்னும் அவச்சொல்லுக்கு நான் ஆளாக விரும்பவில்லை. கண்ணுக்குக் கண். பல்லுக்குப் பல் என்பதுதான் நான் எடுத்த முடிவு. இதில் எந்த மாற்றமும் இல்லை.

**அமைச்சர்** : மன்னா, சற்றுப் பொறுங்கள். உங்களுக்கு இருப்பதோ ஒரே ஒரு மகன். பசுவின் கன்றை அவன் வேண்டுமென்றே கொல்லவில்லையே, அவன் அறியாமல் செய்த தவறுதானே அது? அதற்காக நீங்கள் இப்படி ஒரு முடிவை எடுக்க வேண்டுமா?

**அரசர்** : ஆம். அதுதான் சரி. கண்ணீரும் கம்பலையுமாய் நின்ற அந்த பசுவின் முகம் உங்கள் கண்களுக்குத் தெரிகிறதா? அதன் கண்ணில் வழியும் கண்ணீர், "நீயும் ஒரு மன்னனா? உனக்கு உன் மகன் எப்படியோ அப்படியே எனக்கும் என் கன்று அல்லவா? அந்தச் சின்னஞ்சிறு கன்று என்ன பாவம் செய்தது? அதன் உயிரைப் போக்க உங்களுக்கு எப்படி மனம் வந்தது? கன்றை இழந்து தவிக்கும் எனக்கு யார் ஆறுதல் தருவார்? இனி என் வாழ்நாளெல்லாம் வீண்தானோ" என்று என்னைக் கேட்பதுபோல் இருக்கிறதே, ஆகவே, நான் எடுத்த முடிவிலிருந்து சற்றும் பின்வாங்கமாட்டேன்.

**அமைச்சர்** : அரசே, மீண்டும் தங்களைப் பணிந்து வலியுறுத்துகிறேன். உங்கள் மகனைக் கொல்லும் எண்ணத்தை விட்டுவிடுங்கள்.

**அரசர்** : போதும், அமைச்சரே. நிறுத்துங்கள். இனி, யார் சொன்னாலும் நான் கேட்கமாட்டேன். பசுவின் கன்றைத் துடிக்க, துடிக்கத் தேர்க்காலிலிட்டுக் கொன்ற என் மகனை அதே தேர்க்காலிலிட்டுக் கொல்லத்தான் போகிறேன். அந்தப் பசு அடைந்த துயரத்தை நானும் அடையவேண்டும். இதுதான் அந்தப்பசுவுக்கு நான் அளிக்கும் தீர்ப்பு. இந்தச் சோழப் பரம்பரை என்னால் தலைகுனியக் கூடாது. பல காலங்கள் தோன்றி மறைந்தாலும், நீதி தவறா மனுநீதிச் சோழன் என்று என்னைப் பலரும் நினைவுகூர்தல் வேண்டும். யாரங்கே? தேரைப் பூட்டி, வாயிலில் கொண்டு வந்து நிறுத்து. இழுத்து வா, என் மகனை. இப்போதே அவனைத் தேர்க்காலிலிட்டு நீதியை நிலைநாட்டுகிறேன்.

(தவறிழைத்தவன் தன் மகனேயானாலும், குற்றம் குற்றமே என்று எண்ணியதோடு அல்லாமல், அந்தத் தவற்றுக்குச் சரியான தண்டனையும் வழங்கிப் பசுவின் துயர் துடைத்து, வரலாற்றில் அழியா இடம்பெற்றான் மனுநீதிச் சோழன்.)

**(திரை விழுகிறது.)**



**வாங்க பேசலாம்**

- நீங்கள் மனுநீதிச் சோழனாக இருந்தால், பசுவின் துயரத்தை எப்படிப் போக்குவீர்கள்?




வீட்டிற்குப் போகும் வழியில் ஓணான் ஒன்றைச் சிறுவர்கள் சிலர் துன்புறுத்துகின்றனர். அவர்கள் செய்தது சரியா அந்தச் செயலை நீங்கள் எப்படித் தடுப்பீர்கள்?

# படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

## சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுவோமா?

01 இன்னல் – இச்சொல்லிற்குரிய பொருள்

அ) மகிழ்ச்சி ஆ) நேர்மை

இ) துன்பம் ஈ) இரக்கம்

02 அரசவை – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ------------------

அ) அரச + அவை ஆ) அர+அவை

இ) அரசு+அவை ஈ) அரச+வை

03 மண்ணுயிர் இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ------------------

அ) மண்+ணுயிர் ஆ) மண்+உயிர்

இ) மண்ண+உயிர் ஈ) மண்ணு+உயிர்

TPXVV7

## வினாவிற்கு விடையளிக்க

01 மனுநீதிச் சோழன் ஆராய்ச்சி மணியை அமைத்ததற்கான காரணம் என்ன?

02 பசு, ஆராய்ச்சி மணியை ஏன் அடித்தது?

03 பசுவின் துயரை மன்னன் எவ்வாறு போக்கினான்?

## அகரமுதலி பார்த்துப் பொருள் அறிக

ஆற்றொணா, வியனுலகம், செவி சாய்த்தல், கொடியோன், பரம்பரை

## சொல்லக் கேட்டு எழுதுக

1. அரங்கம்
2. ஆராய்ச்சி மணி
3. மனக்குறை
4. விலங்குகள்
5. வாழ்நாள்

## சொல் உருவாக்குக

| ச | ழ | பு | உ | து | ர |
|---|---|---|---|---|---|
| தே | நே | ப் | ண் | லி | ர் |
| ரு | சோ | பெ | மை | னி | அ |
| ச் | வ | ச | வை | இ | தீ |
| ம | க | ன் | மா | லை | ணை |

இனிமை

## கலையும் கைவண்ணமும்

வண்ணம் தீட்டி மகிழ்வோம்



## அறிந்து கொள்வோம்!

மாநகரம், மாமலை, மாமதுரை, மாமுனி, மாதவம் என்று ஒன்றை சிறப்பித்து கூறுவதற்கு மா என்ற சொல் வழக்கத்தில் உள்ளது.



## செயல்திட்டம்

நீ வாழும் சூழலில் காணும் பறவைகள் விலங்குகள் பற்றிய செய்திகளைத் திரட்டிப் படத்தொகுப்பு ஒன்றை உருவாக்குக.

# 18 வேலைக்கேற்ற கூலி

அழகாபுரி மன்னர், சிறந்த முறையில் ஆட்சி செய்துவந்தார். அவரது நாட்டில் மக்கள் அனைவரும் மகிழ்ச்சியாக வாழ்ந்தார்கள். மன்னரின் புகழ், அண்டை நாடுகளுக்கும் பரவியது. அண்டை நாடுகளுள் ஒன்றான இரத்தினபுரி மன்னரும் இதனைக் கேள்விப்பட்டார். தம் நாட்டு அமைச்சர்களிடம் இதைப்பற்றி ஆலோசனை நடத்தினார்.

"நானும் சிறந்த முறையில்தானே ஆட்சி நடத்துகிறேன். ஆனால், என்னை மட்டும் ஏன் யாரும் புகழவில்லை? என்று அமைச்சர்களிடம் வினவினார். அமைச்சர்கள் விடை கூறத் தெரியாமல் விழித்தனர். அவர்களுள் ஒருவர் மட்டும் எழுந்தார். "மன்னா, உங்கள் ஆட்சியில் நம் நாட்டு மக்களுக்கும் எந்தக் குறையும் இல்லை. ஆனால்...." என்று மெல்லிய குரலில் கூறி, நிறுத்தினார் அந்த அமைச்சர்.



"என்ன ஆனால். . . . சொல்லுங்கள் அமைச்சரே, நான் மக்களை மகிழ்ச்சியாக வைத்திருக்கவில்லையா? நான் வேறென்ன செய்யவேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்கள்?" என்று கேட்டான் மன்னன்.

"நான் சொல்வதைத் தவறாக நினைக்காதீர்கள். அழகாபுரி நாட்டுக்குச் சென்று, ஒருநாள் முழுவதும் அந்த நாட்டு மன்னருடன் நீங்கள் உடனிருக்கவேண்டும். அவர், தம் நாட்டிலுள்ள ஒவ்வொரு குடிமக்களிடமும் எப்படி நடந்து கொள்கின்றார் என்று அறிந்துகொண்டால், நாமும் அவற்றுள் சிலவற்றையாவது பின்பற்றலாம் மன்னா" என்று ஒரே மூச்சில் கூறி முடித்தார் அந்த அமைச்சர்.

மற்ற அமைச்சர்களும், ஆமாம் மன்னா, இவர் சொல்வதும் நல்ல யோசனைதான். அதுமட்டுமின்றி, அழகாபுரி மன்னர், உங்களிடம் மிகுந்த நட்பு பாராட்டுபவர். ஆகையால், நட்பின் நிமித்தமாக நீங்கள் ஒருநாள் அங்குச் செல்லவேண்டும் என்பதுதான் எங்களுடைய கருத்து" என்று கூறினர்.

"அப்படியா? சரி, சரி. நான் நாளைக்கே புறப்படுகிறேன். எனக்கும் அழகாபுரி மன்னரின் ஆட்சிமுறையை நேரடியாகக் காண்பதற்கு ஒரு வாய்ப்பு கிடைக்குமல்லவா?" என்று கூறிய இரத்தினபுரி மன்னர், தம் பயணத்திற்குத் தேவையான ஏற்பாடுகளைச் செய்ய கட்டளையிட்டார்.

நட்பின் நிமித்தமாகத் தம் நாட்டிற்கு வருகை புரிந்த இரத்தினபுரி மன்னரை ஆரத்தழுவி வரவேற்றார் அழகாபுரி மன்னர். இருவரும் தத்தமது நாட்டைப் பற்றிச் சிறிதுநேரம் பேசிக்கொண்டிருந்தனர். பின்னர், "நீங்கள் நன்றாக ஓய்வெடுங்கள். நான் அரசவைக்குச் சென்று வருகிறேன்" என்று கூறியவாறே எழுந்தார் அழகாபுரி மன்னர். "இருங்கள், மன்னா. நானும் உங்களுடனே அரசவைக்கு வர விரும்புகிறேன்" என்று துள்ளிக் குதித்து எழுந்தார் இரத்தினபுரி மன்னர். "அப்படியா, மிக்க மகிழ்ச்சி. வாருங்கள், இருவரும் சேர்ந்தே போகலாம்" என்று கூறிய அழகாபுரி மன்னர், அவரையும் உடன் அழைத்துக்கொண்டு அரசவைக்குச் சென்றார்.

அரசவையில் இரத்தினபுரி மன்னரை அனைவருக்கும் அறிமுகம் செய்து, அவரைத் தமக்குச் சமமான இருக்கையில் அமர்த்தினார் அழகாபுரி மன்னர். அப்போது, ஒருவன், தன் கைகளைக் கட்டிக்கொண்டு அவர்முன்பு பணிவாக வந்துநின்றான். அவனைப் பார்த்ததும் அழகாபுரி மன்னர், "யாரப்பா நீ? உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார்.

அதற்கு அந்த ஆள், "மன்னா, நான் ஒரு விறகுவெட்டி. என் மனத்தில் சிறியதாக ஒரு குறை. உங்களிடம் கூறினால், எப்படி எடுத்துக் கொள்வீர்களோ என்று பயமாக இருந்தது. இருந்தாலும் உங்களிடம் கேட்டுவிடலாம் என்றுதான் இங்கு வந்திருக்கிறேன்" என்றான் அந்த விறகுவெட்டி.

"அடடா, நாம் இதை . .. . இதைத்தானே எதிர்பார்த்தோம். இந்த அழகாபுரி மன்னர் இந்த விறகுவெட்டியின் குறையை எப்படித் தீர்த்து வைக்கிறார் என்று பார்ப்போம்" என்று ஆவலுடன் உற்றுநோக்கத் தொடங்கினார் இரத்தினபுரி மன்னர்.

"ஐயா, விறகு வெட்டுபவரே, உங்கள் மனக்குறையைச் சொல்லுங்கள். என்னால் முடிந்தஅளவு தீர்த்து வைக்கிறேன்" என்ற அழகாபுரி மன்னர்.

"மன்னா, எங்களைப் போன்றோர்க்கு நாள்தோறும் இரண்டு ரூபாய் கூலி கொடுக்கிறீர்கள். ஆனால், உங்களிடம் பணிபுரியும் அமைச்சர்களுக்கு மட்டும் மாதம் ஆயிரம் ரூபாய் கொடுக்கிறீர்களே, இது எந்த வகையில் நியாயமாகும்? இதுதான் உங்களின் சிறந்த ஆட்சிமுறையா? எங்களைச் சமமாக நடத்தாதது மிகப்பெரிய குறையாக உங்களுக்குத் தோன்றவில்லையா? என்று அடுக்கடுக்காகக் கேள்வி கேட்டான் அந்த விறகுவெட்டி.

அழகாபுரி மன்னர் புன்முறுவலுடன், "என் ஆட்சியில் யாருக்கும் எந்தக் குறையும் இருக்கக்கூடாது என்பதில் நான் மிகவும் கவனமாகத்தான் இருக்கிறேன். ஆனால், உங்கள் மனக்குறையின்படி உங்களையும் அமைச்சர்களையும் நான் சமமாக நடத்தவில்லை என்று எண்ணுகிறீர்கள். கொஞ்சம் பொறுங்கள். உங்கள் ஐயத்தை இப்போதே தீர்த்து வைக்கிறேன்" என்று கூறிய மன்னர், அமைச்சர்களுள் ஒருவரை அழைத்தார். பின்னர், அவர்களிருவரையும் பார்த்து, "அரண்மனைக்கு வெளியே ஏதாவது வண்டி செல்கிறதா? என்று பார்த்துவிட்டு வாருங்கள்" என்று கூறினார்.

இரத்தினபுரி மன்னர் அரசவையில் நடப்பதை அமைதியாகப் பார்த்துக் கொண்டிருந்தார். வெளியில் சென்ற விறகுவெட்டி, உடனே திரும்பி வந்து, "ஆம். மன்னா, அரண்மனைக்கு வெளியே ஒரு வண்டி செல்கிறது" என்றான்.



"அந்த வண்டியில் என்ன இருக்கிறது?" என்று கேட்டார், மன்னர். "இருங்கள், மன்னா. இதோ பார்த்துவிட்டு வருகிறேன்" என்று வெளியில் ஓடினான் அந்த விறகுவெட்டி. "மன்னா, அந்த வண்டியில் நெல்மூட்டைகள் இருக்கின்றன" என்றான் அவன்.

"அப்படியா? அந்த வண்டி எந்த ஊரிலிருந்து வருகிறது?" என்று கேட்ட மன்னரிடம், "அடடா, அதைக் கேட்காமல் வந்துவிட்டேனே, சற்றுப் பொறுங்கள். இதோ வருகிறேன்" என்று கூறியவாறே ஓடத் தொடங்கினான் அந்த விறகுவெட்டி. வெளியில் சென்றிருந்த அமைச்சர் அப்போது அரசவையினுள் நுழைந்தார். அவரைப் பார்த்த மன்னர், "ஐயா, விறகுவெட்டி. சற்று நில்லுங்கள். இதோ அமைச்சர் வந்துவிட்டார். உங்களிடம் கேட்ட அதே கேள்வியை அவரிடமும் கேட்கிறேன். என்ன சொல்கிறார் என்று பார்ப்போம்" என்று கூறிய மன்னர், "அமைச்சரே, நீங்கள் என்ன பார்த்தீர்கள்? சொல்லுங்கள்" என்றார்.

அமைச்சரும் மன்னரைப் பார்த்து, "மன்னா, அரண்மனைக்கு வெளியே முப்பது நெல்மூட்டைகள் ஏற்றிய வண்டியொன்று, வளவனூரிலிருந்து அண்டை நாட்டுக்குச் சென்று கொண்டிருக்கிறது. நம் நாட்டில் தயாரான தரமான நெல்வகைகள் அந்த மூட்டைகளில் உள்ளன. வண்டியில் வண்டியோட்டியும் அவரின் பத்து வயது மகனும் உள்ளனர். மழை வருவதற்குள் நெல்மூட்டைகளைப் பாதுகாப்பாக இறக்கிவிட்டு, இன்று இரவுக்குள் மீண்டும் வளவனூர் திரும்பிவிட வேண்டுமென விரைந்து செல்கின்றனர்" என்று கூறி முடித்தார் அமைச்சர்.

அமைச்சர் கூறியதைக் கேட்டு, வாய் பிளந்து நின்றான் அந்த விறகுவெட்டி. அழகாபுரி மன்னர், விறகுவெட்டியைப் பார்த்து, "ஐயா, விறகுவெட்டி, உங்கள் மனத்திலிருந்த சந்தேகம் இப்போது நீங்கியிருக்கும் என்று எண்ணுகிறேன். அமைச்சருக்கு நான் கொடுக்கும் கூலி சரியானதுதானே? இப்போது சொல்லுங்கள்" என்று கூறினார்.

"மன்னா என் மனக்குறை நீங்கிவிட்டது. உங்களைப்பற்றித் தவறாக எண்ணிவிட்டேன். அமைச்சரின் அறிவுக்கூர்மையையும் அவருடைய திறமையையும் கண்டுவியக்கிறேன்.அவருடன் ஒப்பிடும்போது,என் அறியாமையையும் நான் உணர்ந்து கொண்டேன். நான், நான்தான். அமைச்சர், அமைச்சர்தாம். அவரவர் திறமைக்கேற்ற, வேலைக்கேற்ற கூலி கொடுப்பதுதான் நியாயம் என்பதைப் புரிந்துகொண்டேன்" என்றான் அந்த விறகுவெட்டி.

இவ்வளவு நேரமாக அரசவையில் நடந்த நிகழ்வுகளைப் பார்த்துக் கொண்டிருந்த இரத்தினபுரி மன்னர் தம் மனத்துக்குள், "அடடா நாம்கூட இந்த மன்னருக்குக் கிடைத்த பேரும்புகழும் எண்ணிப் பொறாமை கொண்டோமே, இப்போது உண்மையை உணர்ந்துகொள்ள நமக்கும் நல்லதொரு வாய்ப்பு கிடைத்தது" என்று அழகாபுரி மன்னர் தம் குடிமக்களிடம் நடந்துகொண்ட அணுகுமுறையை எண்ணி வியப்பெய்தினார். தாமும் தம் குடிமக்களை எவ்வாறு நடத்தவேண்டும் என்பதையும் அறிந்துகொண்டார்.



## வாங்க பேசலாம்

- கதையை உம் சொந்த நடையில் கூறுக




அமைச்சர் வண்டிக்காரரிடம் எல்லாத் தகவல்களையும் பெறுவதற்கு என்னென்ன கேள்விகளைக் கேட்டிருப்பார்? எழுதுங்கள்

________________________________________

________________________________________

________________________________________

## வினாக்களுக்கு விடையளிக்க

4WQ7GF

01 அழகாபுரி மன்னர் தம் குடிமக்களை எவ்வாறு நடத்தினார்?

02 விறகுவெட்டி, மன்னரிடம் தம் மனக்குறையாக என்ன கூறினார்?

03 மன்னர் அமைச்சரிடமும் விறகுவெட்டியிடமும் என்ன வேலை அளித்தார்?

## படத்தைப்பார்ப்போம் வினாக்கள் உருவாக்குவோம்



எ.கா: படத்தில் எத்தனை விலங்குகள் உள்ளன?

01 ____________________ 02 ____________________

03 ____________________ 04 ____________________

05 ____________________ 06 ____________________

# மொழியோடு விளையாடு

## சொல் உருவாக்கப்புதிர்

வடிவங்களைக்கொண்டு அவற்றிற்குரிய எழுத்துகளை எழுதிச் சொல் உருவாக்குக. ஒவ்வொரு வடிவமும் ஓர் எழுத்தைக் குறிக்கும்




01  வரி

02  ____________________

03  ____________________

04  ____________________

05  ____________________

06  ____________________

07  ____________________

## சொல் எழுதுக சொற்றொடர் அமைக்க

| | | | | |
|---|---|---|---|---|
| ம | ண / ன | ம் | மணம் | பூக்கள் மணம் வீசும் |
| | | | மனம் | மனிதருக்கு நல்ல மனம் வேண்டும் |

| | | | |
|---|---|---|---|
| க | லை | ______ | ______________________ |
| | ளை | ______ | ______________________ |
| | ழை | ______ | ______________________ |
| க | ரை | ______ | ______________________ |
| | றை | ______ | ______________________ |
| இ | லை | ______ | ______________________ |
| | ளை | ______ | ______________________ |
| | ழை | ______ | ______________________ |

## விடுபட்ட எழுத்துகளை நிரப்பி விடுகதைக்கு விடையைக் கண்டுபிடிக்க.

01 கரைந்து அழைப்பேன் நான் யார்?

02 கடலில் கிடைப்பேன் நான் யார்?

03 சமையலுக்கு உதவுவேன் நான் யார்?

04 இனிப்பாய் இருப்பேன் நான் யார்?

| | | | | |
|---|---|---|---|---|
| | கா | | ம் | |
| | ச | | கு | |
| வெ | ங் | | ய | ம் |
| | க | | ம் | பு |

நீண்ட தூரம் தாவிடுவேன் தவளையும் இல்லை

குதித்துக் குதித்து ஓடிடுவேன் குதிரையும் இல்லை

பையைத் தான் கொண்டிருப்பேன் சட்டையும் இல்லை

கண்டுபிடித்த எழுத்துகளை ஒன்று சேர்த்தால் வருவேன் நான் யார்?

## செயல் திட்டம்



பல்வேறு தொழில் செய்பவர்களின் படங்களை ஒட்டித் தொகுப்பு ஏடு தயாரித்து வருக.

# 19 உலா வரும் செயற்கைக்கோள்



பட்டுக் குழந்தைகள் வாருங்கள்
பறவைக் கப்பல் பாருங்கள்
விட்டுச் சிறகை விரித்தபடி
விண்ணில் பறக்குது பாருங்கள்
உலகைச் சுற்றி வந்திடுமே
உயர உயரப் பறந்திடுமே
எல்லை இல்லா நற்பயனை
எவர்க்கும் தந்து விளங்கிடுமே
விண்வெளி ஆய்வு செய்திடவே
விண்ணில் சீறிப் பாய்ந்திடுமே
மண்ணிலுள்ள வளத்தை யெல்லாம்
உண்மை யாகச் சொல்லிடுமே
தகவல் தொடர்பில் உதவிடுமே
தன்னிச்சை யாக இயங்கிடுமே
தட்பவெப்ப நிலை யாவும்
தக்க நேரத்தில் சொல்லிடுமே
அருகில் சுற்றும் கோள்களையும்
அளவாய் நிழற்படம் எடுத்திடுமே
உருவில் சிறிய இடங்களையும்
ஒவ்வொன் றாகக் காட்டிடுமே
கனிமவளமும் கடல் வளமும்
கணக்காய்க் குறித்துக் காட்டிடுமே
மனித உயிரைக் காப்பதற்கே
புயல் மழை வருவதை உணர்த்திடுமே
இதுவரை சொன்னது எதையென்று
இன்னுங் கூடத் தெரியலையா?
அதுதான் உலாவரும் செயற்கைக்கோள்
அறிந்தே மகிழ்ச்சி கொள்வோமே!

II6K9Y

## பொருள் அறிவோம்

வானில் உலா வரும் செயற்கைக்கோளைப் பற்றி இப்பாடல் கூறுகிறது. உலகைச் சுற்றிவரும் இச்செயற்கைக்கோள், நமக்கு அளவில்லாத பயன்களை வழங்குகிறது. மண்ணிலுள்ள வளங்களை நுட்பமாகக் காட்டுகிறது. தகவல் தொடர்புக்கு உதவுகிறது. வானிலை குறித்த தகவல்களையும் உடனுக்குடன் அறிந்துகொள்ள முடிகிறது. வானில் சுழலும் கோள்களை நிழற்படம் எடுத்து, நமக்கு அனுப்புகிறது. கனிம வளத்தையும் கடல்வளத்தையும் குறிப்பிடுவதோடு ஆழிப்பேரலை (சுனாமி) போன்ற பேரழிவுகள் வருவதற்கு முன்பே அறிவித்து, மனித உயிர்களையும் காக்கிறது.

ஓசை நயமும் கருத்தும் மிக்க பாடல்களைக் கேட்டுப் புரிந்துகொள்ளுதல்.



## வாங்க பேசலாம்

- பாடலை ஓசைநயத்துடன் பாடுக.
- செயற்கைக்கோள்களின் வகைகளை அறிந்துகொண்டு வந்து பேசுக.




செயற்கைக்கோள் கண்டுபிடிக்கப்படாமல் இருந்தால் இந்த உலகம் எப்படி இருந்திருக்கும்?

# படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

## சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுவோமா!

01 மண்ணிலுள்ள – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..................................

அ) மண்ணி + லுள்ள ஆ) மண்ணில் + உள்ள

இ) மண் + உள்ள ஈ) மண்ணில் + உள்ளே

02 நிழற்படம் – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..........................................

அ) நிழள் + படம் ஆ) நிழை + படம்

இ) நிழல் + படம் ஈ) நிலை + படம்

03 உண்மை என்ற சொல்லின் பொருள் .........................................

அ) பொய் ஆ) தவறு

இ) சரி ஈ) மெய்

8BE9NQ

04 நற்பயன் – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..........................................

அ) நல்ல + பயன் ஆ) நன்மை + பயன்

இ) நல் + பயன் ஈ) நற் + பயன்

05 அருகில் என்ற சொல்லின் எதிர்ச்சொல் ..........................................

அ) பக்கத்தில் ஆ) எதிரில்

இ) அண்மையில் ஈ) தொலைவில்

## வினாக்களுக்கு விடையளிக்க

01 'பறவைக் கப்பல்' எனக் குறிப்பிடப்படுவது எது?

02 செயற்கைக்கோளினால் விளையும் பயன்களுள் இரண்டைக் குறிப்பிடுக.

## இணைந்து செய்வோம்

| இரண்டாம் எழுத்து ஒன்றுபோல் அமைந்துள்ள சொற்களைப் பாடலிலிருந்து எடுத்து எழுதுக. |
| --- |
| பட்டு – விட்டு |
| |
| |
| |
| |

| ஒரே ஓசையில் முடியும் சொற்களைப் பாடலிலிருந்து எடுத்து எழுதுக. |
| --- |
| வந்திடுமே – பறந்திடுமே |
| |
| |
| |
| |

## பாடலை நிறைவு செய்வோம்



| | | |
| --- | --- | --- |
| பஞ்சு | போன்ற | மேகமே |
| பார்க்க | நெஞ்சு | மகிழுமே |
| காற்று | வீசும் | -------- |
| கலைந்தே | -------- | -------- |
| மக்கள் | உள்ளம் | -------- |
| மழையாய் | -------- | மேகமே! |

## வண்ணம் தீட்டி மகிழ்வோம்





## சொல் உருவாக்கலாமா!

கொடுக்கப்பட்ட சொற்களின் முதலெழுத்தை மாற்றினால், செயற்கைக்கோளுடன் தொடர்புபடுத்தலாம்.

அகவல்

தாள்கள்

தழை

அப்பம்

தனிமம்



## அறிந்து கொள்வோம்



இந்தியா, வானில் செலுத்திய செயற்கைக்கோள்களுக்கு ஆரியபட்டர், பாஸ்கரர் ஆகியோரின் பெயர்கள் சூட்டப்பட்டுள்ளன. இவர்கள் இருவரும் வானவியலிலும் கணிதவியலிலும் சிறந்து விளங்கியவர்கள்.

## செயல் திட்டம்



நம் நாட்டில் இதுவரை விண்ணுக்கு அனுப்பப்பட்ட செயற்கைக்கோள்களின் பெயர்களை எழுதி வருக.

# 20 மாசில்லாத உலகம் படைப்போம்

ஆசிரியர் வகுப்பினுள் நுழைந்தார். அவரது கைகளில் ஓர் அழைப்பிதழ் இருந்தது. அது என்னவாக இருக்கும் என்ற ஆவல் மாணவர்களின் முகத்தில் பளிச்சிட்டது.

X4LY3H

மெல்ல எழுந்த முகிலன், "அது என்ன அழைப்பிதழ் ஐயா?" என்று கேட்டான்.

'மாணவர்களே! நமது மாவட்டக் கல்வித்துறை சார்பில் அறிவியல் திருவிழா நடைபெறவுள்ளது. உங்களுடைய புதுமையான படைப்புகளை அவ்விழாவில் காட்சிப்படுத்தலாம். சிறந்த படைப்புகளுக்குப் பரிசுகள் உண்டு. நம் பள்ளி மாணவர்களின் திறமையை வெளிப்படுத்த நல்ல வாய்ப்பு இது!" என்றபடி கையிலுள்ள அழைப்பிதழை முகிலனிடம் கொடுத்துப் படிக்கச் சொன்னார் ஆசிரியர்.முகிலன் படிப்பதை ஆர்வமுடன் கேட்ட மாணவர்கள், 'நாம் என்னென்ன மாதிரியெல்லாம் உருவாக்கலாம்' என்று சிந்திக்கத் தொடங்கினர்.

அரியலூர் மாவட்டக் கல்வித் துறை நடத்தும் மாபெரும்
அறிவியல் திருவிழா – 2020

நாள் : 28.02.2020

மாணவச் செல்வங்களின் திறமையை வெளிப்படுத்த ஓர் அரிய வாய்ப்பு!

உங்கள் அறிவியல் ஆர்வத்தினை, ஆய்வுச் சிந்தனையைப் படைப்புகளாக மாற்றிடுங்கள்! பரிசுகளை வென்றிடுங்கள்!!

தலைப்பு

மாசில்லாத உலகம்

மகிழ்வான உலகம்!

குறிப்பு

ஆய்வுகள் மாணவர்தம் சொந்த முயற்சியாகவும் இதுவரை வெளிவராத புதிய முன்னெடுப்பாகவும் அமைதல் வேண்டும்.

எதிர்கால அறிவியல் அறிஞர்களுக்கு

வாழ்த்துகள் !

இவண்,

அரியலூர் கல்வி மாவட்டம்

அவர்களின் முகக்குறிப்பை உணர்ந்த ஆசிரியர்,"வழக்கமான ஆய்வுகள் போல் அல்லாமல், புதுமையாக முயற்சி செய்யுங்கள். பரிசு பெறுவதனைவிட, உங்களுடைய மாறுபட்ட சிந்தனைக்கு முன்னுரிமை தாருங்கள். அதனையே செயல்படுத்துங்கள்" என்று மாணவர்களுக்கு ஊக்கமூட்டினார்.

நாள்கள் நகர்ந்தன. அறிவியல் விழா நாளன்று....

விழா அரங்கின் வாசலில் நெடிதுயர்ந்து நின்றது ஓர் உருவம். முழுவதும் பயன்படுத்தித் தூக்கி எறியப்பட்ட மின்னணுக் கழிவுகளால் அவ்வுருவம் செய்யப்பட்டிருந்தது. பழுதான கணினிகளின் பகுதிப் பொருள்கள் ஓர் அரக்கனின் வடிவில் உருவாக்கப்பட்டிருந்தன. அதன் மார்புப் பகுதியில் ஒரு மடிக்கணினி பொருத்தப்பட்டிருந்தது. தோள்பட்டையில் ஒலிபெருக்கி அமைக்கப்பட்டிருந்தது. அரக்கன் பேசுவதுபோல அவ்வுருவம் பேசத் தொடங்கியது.




"அன்புக்குரியவர்களே!

நான் யாரென்று தெரிகிறதா? நீங்கள் பயன்படுத்தித் தூக்கி எறிந்த மின்னணுப் பொருள்களின் கழிவுகளால் உருவாக்கப்பட்டவன்தான் நான். இப்போது உங்கள்முன்

பேசுகிறேன். நீர், நிலம், காற்று, ஒலி போன்றவற்றில் ஏற்படும் பல்வேறு மாசுகளைப் பற்றி, நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். அவையெல்லாம் மனிதர்களுக்கு மிகுந்த துன்பத்தைத் தருகின்றன. அவைபோலவே, சற்றும் குறையாத பாதிப்புகள் என்னாலும் ஏற்படுகின்றன என்பதை நீங்கள் அறிவீர்களா? ஒவ்வொரு நாளும் உங்களால் தூக்கி எறியப்படும் மின்னணுக் கழிவுகள் நிலத்தையும், சுற்றுச் சூழலையும் பெரிதும் சீர்கேட்டிற்கு உள்ளாக்குகின்றன. இவற்றை எவ்வாறு மேலாண்மை செய்வது என்பது மிகப்பெரிய கேள்விக்குறியாக உள்ளது. எங்களை முறையாக வகைப்படுத்தி, மறுசுழற்சி செய்வதொன்றே இச்சிக்கலுக்குத் தீர்வாகும். அதனை வலியுறுத்தவே ஓர் அரக்கனின் வடிவில் நான் வந்துள்ளேன்.

எனவே, மின்னணுப் பொருள்களைத் தேவைக்குப் பயன்படுத்துங்கள். கண்ட இடங்களில் எங்களைத் தூக்கி எறியாமல், முறையாக மறு சுழற்சிக்கு உட்படுத்துங்கள். அப்போதுதான் நாம் எந்தத் துன்பமும் இன்றி மகிழ்ச்சியாக வாழ்ந்திடமுடியும்.

"மாசில்லாத உலகம் படைப்போம்! மகிழ்வான வாழ்வு பெறுவோம்!"

என்று தங்குதடையின்றிப் பேசிக்கொண்டிருந்தது அவ்வுருவம்.

அரங்கினுள் நுழைந்த அனைவரும், மிகப்பெரிய அந்த அரக்க உருவத்தைப் பார்த்து வியந்தபடியும், அது கூறிய கருத்துகளைக் கேட்டுச் சிந்தித்தபடியும் சென்றனர். அந்த ஆண்டிற்கான சிறந்த அறிவியல் படைப்புக்குரிய விருது, முகிலனது பள்ளிக்கே கிடைத்தது.

மாணவர்களும் ஆசிரியர்களும் தலைமையாசிரியரும் முகிலனின் புதுமையான படைப்பைப் பாராட்டி மகிழ்ந்தனர்.

கணினியில் உரைகள், வசனங்கள், முழக்கத் தொடர்கள் கேட்டல்

**வாங்க பேசலாம்**



**நீர் எதனால் மாசடைகிறது? நீர் மாசு ஏற்படுவதை எப்படித் தவிர்க்கலாம்? குழுவில் கலந்துரையாடுக.**



**சிந்திக்கலாமா!**

**உன் பள்ளியில் நடைபெறப்போகும் அறிவியல் கண்காட்சிக்காக நீ புதுமையாகச் செய்ய விரும்புவது என்ன?**

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

### சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுவோமா?

01 'மாசு' – என்னும் பொருள் தராத சொல் ..........................

அ) தூய்மை ஆ) தூய்மையின்மை

இ) அழுக்கு ஈ) கசடு

02 'மாசு + இல்லாத' – இச்சொல்லைச் சேர்த்து எழுதக் கிடைப்பது ..........................

அ) மாசிலாத ஆ) மாசில்லாத

இ) மாசிஇல்லாத ஈ) மாசுஇல்லாத

03 'அவ்வுருவம்' என்ற சொல்லைப் பிரிக்கக் கிடைப்பது ..........................

அ) அவ் + வுருவம் ஆ) அந்த + உருவம்

இ) அ + உருவம் ஈ) அவ் + உருவம்

04 'நெடிதுயர்ந்து' என்ற சொல்லைப் பிரிக்கக் கிடைப்பது ..........................

அ) நெடிது + உயர்ந்து ஆ) நெடி + துயர்ந்து

இ) நெடிது + துயர்ந்து ஈ) நெடிது + யர்ந்து

05 'குறையாத' என்ற சொல்லின் எதிர்ச்சொல் ..........................

அ) நிறையாத ஆ) குறைபாடுடைய

இ) குற்றமுடைய ஈ) முடிக்கப்படாத

8QN8NE

### வினாக்களுக்கு விடையளிக்க

01 ஆசிரியர் வைத்திருந்த அழைப்பிதழில் என்ன செய்தி இருந்தது?

02 அறிவியல் விழாவில் கலந்துகொள்வதற்காக மாணவர்களை ஆசிரியர் எவ்வாறு ஊக்கப்படுத்தினார்?

03 அறிவியல் விழாவில் காணப்பட்ட நெடிதுயர்ந்த உருவத்தை எப்படி உருவாக்கினர்?

04 சுற்றுச்சூழல் சீர்கேட்டிற்கு எவையெல்லாம் காரணமாக அமைகின்றன?

05 நாம் பயன்படுத்திய மின்பொருள்களை என்ன செய்யவேண்டும்?

# பாடுவோம் விடை கூறுவோம்

## எது சரி? எது தவறு?

சொல்லு,சொல்லு!
நீயும் சொல்லு!
எதுசரி?
எது தவறு?
மேலே பார்!
கீழே பார்!
அங்கே பார்!
இங்கே பார்!
சொல்லு, சொல்லு!
நீயும் சொல்லு!
எது சரி?
எது தவறு?

| | |
|---|---|
| கண்ட இடத்தில் குப்பையைக் கொட்டுவது | தவறு |
| குப்பையைக் குப்பைத்தொட்டியில் போடுவது | சரி |
| பயன்படுத்தாதபோதும் மின்விளக்கை எரிய விடுவது | |
| நீரைச் சிக்கனமாகப் பயன்படுத்துவது | |
| சாலையின் ஓரமாக நடந்து செல்வது | |
| பறவைகளையும் விலங்குகளையும் துன்புறுத்துவது | |

## தொடர் இரண்டு; விடை ஒன்று கண்டுபிடிப்போமா?

1. காலைக்குப் பின்னால் வரும்; கழுத்தில் வந்து விழும் ------
2. ஆடையுமாகும்; அறிவையும் தரும் ------



## மொழியோடு விளையாடு

ஒரு சொல்லுக்கு இருபொருள் எழுதுக.

01 அணி < வரிசை / அணிந்துகொள்

02 ஆடு <

03 நாடு <

04 படி <

05 ஓடு <

06 மெய் <

## கலையும் கை வண்ணமும்

**காகிதக் குவளை செய்வோமா!**

**செய்முறை**

தேவையான பொருள்: பயன்படுத்திய தாள் ஒன்று.




## இயற்கையைக் காப்போம்

வாடி வதங்கிய மரங்கள்; வண்ணம் இழந்த இலைகள்; காய்ந்து கருகிய பூக்கள்; வறண்ட பூமி; வற்றிக் கிடக்கும் ஆறு; வெண்பஞ்சு மேகம்; பசுமை இழந்து பாளம் பாளமாக வெடித்துக் கிடக்கும் வயல்வெளிகள்; என்னவாயிற்று? அவற்றின் அழகெல்லாம் எங்கே போயிற்று? அதோ, ஒரு வீட்டின் அருகே தண்ணீர்க் குழாய். அதில் சொட்டுச் சொட்டாக நீர். அதனை நிரப்பிக்கொள்ள எத்தனை குடங்கள் வரிசை வரிசையாக. அப்பப்பா! இந்தச் சொட்டு நீர் நாளையும் வருமா? வினாக்குறியுடன் சிறுமி.

இந்த உரைப்பகுதிக்குப் பொருத்தமான முழக்கத்தொடர்கள் எழுதுக.

நீரைச் சேமிப்போம்; நீடுழி வாழ்வோம்

--------------------------- ---------------------------

## செயல் திட்டம்



உங்கள் பள்ளியில் நடைபெற உள்ள ஆண்டுவிழா, இலக்கிய மன்ற விழா போன்றவற்றுள் ஏதேனும் ஒரு விழாவுக்கு அழைப்பிதழ் உருவாக்குக.

# 21 காட்டுக்குள்ளே பாட்டுப்போட்டி




காடே அமைதியாய் இருந்தது. வீசிய காற்றில் மரக்கிளைகள் அசைந்தன. இலைகள் உரசும் சத்தம் தவிர மற்றபடி எங்கும் ஒரேஅமைதி. சேவல் ஒன்று தயங்கியபடி வந்தது. சுற்றும் முற்றும் பார்த்தது. மெதுவாய் நடந்து செடிகொடிகளின் மறைவிற்கு வந்தது. 'யாராவது பார்க்கிறார்களா..?' என நோட்டமிட்டது. யாரும் தன்னைப் பார்க்கவில்லை என்பதை உறுதி செய்த சேவல்,"கொக்... கொக்... கொக்... கொக்கரக்கோ..!"

மெலிதாய் குரல் எழுப்பியது. வானத்தைப் பார்த்து, தலையை உயர்த்திக் "கொக்கரக்கோ... கோ... கோ..!" என இராகம் போட்டுப் பாடியது. அப்போது, திடீரென சிரிப்பொலியொன்று கேட்டது. சட்டெனப் பாட்டை நிறுத்தியது சேவல். சுற்றிலும் யாருமே இல்லை. 'யார் சிரித்தது..?' லேசாய் தைரியத்தை வரவழைத்துக் கொண்ட சேவல், "யாரது..?" என்று கேட்டது. "நாந்தான்; மேலே இருக்கேன்...பாரு!" என்று மேலேயிருந்து குரல் வந்தது.

நிமிர்ந்து பார்த்தது சேவல். மரக்கிளையில் குரங்கு ஒன்று உட்கார்ந்திருந்தது. "என்ன… பாட்டு பலமா இருக்கு. என்ன விசேஷம்..?" என்று குரங்கு கேட்டது. சேவலுக்கு வெட்கம் வந்துவிட்டது.

"ஒண்ணுமில்லே. நாளைக்குக் காட்டில பறவைகளுக்கான பாட்டுப் போட்டி நடக்குதில்லே. அதுல கலந்துக்க எனக்கும் ஆசை. அதான், பாடிப் பயிற்சி எடுக்கிறேன்..!" என்றது சேவல். "ஆகா… கதை அப்படிப் போகுதா! நல்லாத்தான் பாடுறே. நாளைக்குப் போட்டியில நீயும் பாடு; என் மனமார்ந்த வாழ்த்துகள்..!" என்றபடி, அடுத்த கிளைக்குத் தாவியது குரங்கு. "ரொம்ப நன்றி..!" என்று சேவலும் தலையாட்டியது. மறுநாள்….

மொத்தக் காடுமே ஒன்றுகூடி விட்டது. போட்டியில் கலந்துகொள்ள வந்த பறவைகள் மேடையருகே வரிசையில் நின்றன. ஒவ்வொருவரின் பெயரையும் ஆந்தை மாமா எழுதிக்கொண்டே வந்தது.

குருவி மேடைக்குப் பறந்து வந்தது. ஒலிபெருக்கி முன்னே நின்றது. "அன்பு நண்பர்களே! இன்று நம் காட்டில் அனைத்துப் பறவைகளுக்கான பாட்டுப் போட்டி நடைபெறுகிறது. இதில் நன்றாகவும் அதிக நேரமெடுத்தும் பாடவும் வேண்டும்; அனைவரும் இரசிக்கும்படியான பாட்டாகவும் இருக்க வேண்டும். அப்படியான பாடலை யார் பாடுகிறார்களோ, அவர்களுக்கே பரிசு வழங்கப்படும். என்ன போட்டியாளர்களே, தயார்தானே..?" என்று கேட்டது குருவி. "நாங்க தயார்..!" என்று பறவைகள் குரல் கொடுத்தன.

"இந்தப் போட்டிக்கு நடுவராக இருந்து, நல்ல தீர்ப்பினை வழங்கிட, உங்கள் அனைவரின் சார்பாக நம்ம மயில் மேடைக்கு வருமாறு அன்போடு அழைக்கிறேன்..!" என்று குருவி சொன்னது. ஒய்யாரமாகத் தோகை விரித்தபடி மேடையேறி அமர்ந்தது நடுவர் மயில்.

"முதலில் பாட மைனாவை அழைக்கிறேன் !" என்று சொன்னதும், மேடைக்கு வந்த மைனா. "பிக்பி…பிக்பி…பிபிக்பி…பிக்பி…" என்று ஐந்து நிமிடம் பாடியது மைனா. அதற்குள் தொண்டை கட்டிவிட்டது. "நல்லாப் பாடினீங்க. போதும்..!" என்று நடுவர் மயில் சொன்னதும், மைனா தன் இடத்துக்குப் பறந்துபோனது. "அடுத்த போட்டியாளராக உங்களுக்குப் பிடித்தமான பாடலைப் பாட வருகிறார் கிளியரசன்…" என்று நடுவர் சொன்னதும்,

"கீ… கீ… கீ… கிக்கீ… கிக்கீ…" எனத் தலையை நீட்டிநீட்டிப் பாடியது கிளியரசன்.



பாடலைக் கேட்ட சில விலங்குகள் எழுந்து ஆட்டம் போட ஆரம்பித்தன. விசில் சத்தம் விண்ணைத் தொட்டது. பத்து நிமிடங்கள் தொடர்ந்து பாடிய கிளிக்கு, மூச்சு முட்டியது. பாட்டை நிறுத்திவிட்டுக் கீழே இறங்கி வந்தது.

"நம்ம அடுத்த போட்டியாளர் சேவல். வாங்க... மேடைக்கு!"

அறிவிப்பு வந்ததும், பக்கத்தில் இருந்த குரங்கைப் பார்த்தபடியே, மேடைக்கு வந்தது சேவல்.

"கொக்... கொக்... கொக்கரக்கோ... கோ..."

தூங்கிக் கொண்டிருந்த ஒன்றிரண்டு கரடிகளும் விழித்துக் கொண்டன. சேவலைப் பார்த்து, "தூங்கிறவங்களை எழுப்புறதே உன் பாட்டா இருக்கு. அருமையான பாட்டு. போதும்ப்பா, நிப்பாட்டு..!" என்று மற்ற பறவைகள் கத்தின.சேவல் வெட்கத்தோடு கீழே இறங்கியது. அடுத்து படபடவென இறக்கைகளை அடித்தபடி மேடையேறியது கழுகு. தலையை முன்னும் பின்னுமாய் ஆட்டிக்கொண்டே பாடியது கழுகு.

"கொவ்வ்... கொவ்வ்... கொவ்வ்வ்வ்வ்..."

காடெங்கும் எதிரொலித்தது பாட்டு. மான்குட்டிகள் பயந்து போய்விட்டன. சில பயத்தில் அழுதன. சில எழுந்து ஓடத் தொடங்கின. இதைப் பார்த்துச் சிரித்த யானைக்குக் கண்ணில் நீரே வந்துவிட்டது.

"இப்பப் பாடப்போறது, நம்ம கொக்கு..!" மயில் சொன்னதும் கை தட்டல் ஓசை பலமாய் எழுந்தது. மேடைக்கு வந்த கொக்கு,

"கர்... க்கர்... க்கர்..." என்று இரண்டுமுறை இராகம் போட்டு இழுத்தது.

"என்னாச்சு..? பாடு, பாடு..!" கூட்டத்தில் ஒரே கூச்சல். "இம்புட்டுத்தான் என் பாட்டு..!"என்று சிரித்தபடியே பறந்து போனது கொக்கு. அடுத்து, குயில் மேடைக்கு வந்தது. உற்சாகமாய் எல்லாமும் எழுந்து நின்று கைகளைத் தட்டின. குயிலுக்கு நிறைய விலங்குகள் இரசிகர்களாய் இருந்தன. ஒவ்வொன்றாக எழுந்து நின்று குயில் குமாரிக்குப் பூங்கொத்துகளைக் கொடுத்தன. வாழ்த்துகளைச் சொல்லி அனுப்பி வைத்தன. குயிலுக்கு ரொம்பவும் பெருமை தாங்கவில்லை. குதித்துக் குதித்து மேடையேறியது.



"க்கூ... குக்கூ... குக்கூ... கூ... குக்கூ... கூகூ..."

குயிலின் பாட்டிற்கு மொத்தக் கூட்டமும் எழுந்து ஆடியது.

"கூக்கூ... குக்கூ... கூக்கூகூகூ...ஐந்து, பத்து, பதினைந்து நிமிடம்வரை குயில் பாடியது. அதற்குமேல் மூச்சுத் திணறவே, பாடலை நிறுத்திவிட்டு இறங்கி வந்தது குயில். "இன்னும் கொஞ்ச நேரம் பாடு... குயிலு..!" கூட்டத்திலிருந்து இரசிகர்கள் குரல் எழுப்பினார்கள்.

"நமது போட்டியின் கடைசிப் போட்டியாளராக காக்கா வருகிறார்..!" மொத்தக் கூட்டமும் அமைதியானது. "பெரிசாப் பாட வந்திடுச்சு..!" என்றது மரங்கொத்தி. "நீயெல்லாம் பாடலேன்னு யாரு கேட்டா..?" வம்புக்கு இழுத்தது நாரை.

காக்கா எதையும் கேட்டுத் தயங்கி நிற்காமல், மேடைக்குத் துணிச்சலாய் வந்தது. ஒரே கூச்சல். "நீ ரொம்ப நல்லா பாடுவே. போதும்டா… சாமி..!" என்று சில விலங்குகள் கத்தின. நடுவர் மயில் அனைவரையும் சத்தம் போடாமல் அமைதியாய் உட்கார வைத்தது. காக்கா மெல்ல தன் குரலைச் செருமியது. "கா… கா… கா…"



மெல்லிய குரலில் முதலில் பாட ஆரம்பித்தது. கூச்சல்போட்டுப் பாட விடாமல் தடுத்த விலங்குகள், சற்றே ஆச்சரியத்தோடு கவனித்தன. "கா… கா… கா கா கா கா..!" ஓர் எழுத்திலேயே புதுப்புது இராக ஆலாபனைகள். சுருதி கூட்டிப் பாடிக்கொண்டே இருந்தது காக்கா. "ஏம்ப்பா, நல்லாத்தான் பாடுது..!" என்றன பாட்டைக் கேட்ட விலங்குகள். "ககா… கக கா… கக ககா கா கா…" என்று பாடலில் சுருதியைக் கூட்டிக்கொண்டே பாடியது காக்கா. கேலி செய்த பறவைகளுக்கு என்னவோ போலாகிவிட்டது. அவை அனைத்தும் எழுந்து, பாட்டிற்கேற்ப ஆட்டம் போடத் தொடங்கின. புலி புவனா, "பிரமாதம்..!" என்றது. "ஆகா… என்ன சுருதி சுத்தம். அற்புதம்..!" என்று தலையாட்டி இரசித்தது சிங்க ராஜா.

"கா… கா க கா… கா ககா ககா ககா..!" தன் பாட்டை எந்தத் தடுமாற்றமுமின்றித் தொடர்ந்தது காக்கா. மொத்தக் கூட்டமும் கை தட்டிப் பாராட்டின. சரியாய் அரைமணி நேரத்திற்கு, காக்காவின் பாட்டுமழை நன்றாக வெளுத்து வாங்கியது. இப்படி ஒரு பாட்டை இதுவரை காட்டில் எந்த விலங்குமே கேட்டதில்லை. புலி எழுந்துவந்து, காக்காவைக் கட்டிப் பிடித்துக் கொண்டது.

பாட்டுப்போட்டிக்கான தீர்ப்பைச் சொல்ல மேடையிலிருந்த ஒலிபெருக்கி முன் நடுவர் மயில் வந்தது.

"பாருங்க. காக்கா பாட வர்றபோது கேலி செஞ்சீங்க. ஆனா, தயங்கி நிற்காம, விடாமுயற்சியோட பாடுச்சு. அது மட்டுமில்ல, நிறைய பயிற்சி எடுத்துப் புதுப்புது இராகத்தில பாடியிருக்கு. அதுவும் நீங்க எல்லாருமே கை தட்டி பாராட்டுற அளவுக்கு அரைமணி நேரம் பாடியிருக்கு. எல்லாரோட குரலுக்கும் ஈர்ப்பு ஒன்னு இருக்கு. அதுபோல ஒவ்வொரு குரலுக்குள்ளும் அழகுமிருக்கு. நமக்கு இன்னிக்குத்தான் காக்கா குரலோட சிறப்பு தெரிஞ்சிருக்கு. முயற்சியும் பயிற்சியும் இருந்தா எல்லாராலும் பாடமுடியும்னு இந்தப் போட்டி மூலமா காக்கா நிரூபிச்சுக் காட்டியிருக்கு. தான் பாடியதோடு மற்றவர்களுக்கும் ஒரு தன்னம்பிக்கையை ஊட்டிய காக்காவிற்கே

இந்தப் பாட்டுப் போட்டியில் முதல்பரிசு வழங்கிப் பாராட்டுகின்றேன்..!" என்று நடுவர் மயில் தன் தீர்ப்பை அறிவித்தது.

காட்டின் எல்லா விலங்குகளும் இதை ஆமோதித்தன. "ஆகா... நல்ல தீர்ப்பு..!" என்று ஒற்றுமையாய் குரல் எழுப்பின நடுவர் மயில் 'பாட்டு ராணி' பட்டத்தை காக்கா தலையில் கிரீடமாய்ச் சூட்டியது.

அனைவருக்கும் நன்றி கூறி, மேடையிலிருந்து பறந்து சென்றது காக்கா.

## வாங்க பேசலாம்



- கதையில் நடுவர் மயில் கூறும் தீர்ப்பு சரியானதா? உம் கருத்தைச் சொந்தநடையில் கூறுக.
- உங்கள் பள்ளியில் நடைபெற்ற பாட்டுப்போட்டி நிகழ்வுகள் குறித்துப் பேசுக.



## சிந்திக்கலாமா?

போட்டியில் வெற்றி பெறுவதைக்காட்டிலும் பங்கேற்பதுதான் இன்றியமையாதது என்று உன் தந்தை கூறுகிறார். ஏன் தெரியுமா?

MC4LGX

## வினாக்களுக்கு விடையளிக்க

01 காட்டில் நடந்த போட்டியின் பெயர் என்ன?

02 காக்காவின் பாட்டைக் கேட்ட சிங்கராஜா என்ன கூறினார்?

03 'பாட்டு ராணி' பட்டம் பெற்ற பறவை எது?

## புதிர்களைப் படிப்போம்! விடை காண்போம்! படத்துடன் பொருத்துவோம்!

இரவில் உணவு தேடிடுவேன்,

தலைகீழாகத் தொங்கிடுவேன்.

நான் யார்?



கரைந்து கரைந்து அழைத்திடுவேன்,

கூட்டமாக வாழ்ந்திடுவேன்.

நான் யார்?



பச்சைநிறத்தில் இருந்திடுவேன்,

பழங்களைக் கொத்தித் தின்றிடுவேன்.

நான் யார்?



மழை வருமுன்னே உணர்த்திடுவேன்,

தோகை விரித்து ஆடிடுவேன்.

நான் யார்?



வெண்மை நிறத்தில் நானிருப்பேன்,

ஒற்றைக் காலில் நின்றிடுவேன்,

நான் யார்?



## மீண்டும் மீண்டும் சொல்வோம்

- ✶ ஒரு குடம் எடுத்து அரைக்குடம் இறைத்துக் குறைகுடம் நிரப்பி நிறைகுடம் ஆக்கினான்.
- ✶ துள்ளி எழுந்து பள்ளி சென்றாள் வள்ளி. அவளுடன் மெள்ள மெள்ள வந்து சேர்ந்து கொண்டாள் அல்லி.

## கலையும் கைவண்ணமும்

### காகிதத்தில் கரடி செய்வோம்



## அறிந்து கொள்வோம்



- ஆண்மயிலுக்குத்தான் தோகை உண்டு.
- ஆண் சிங்கத்துக்குத்தான் பிடரிமயிர் உண்டு.
- மரங்கொத்திப் பறவை மரத்தை ஒரு நொடிக்கு 20 முறை கொத்தும்.
- புறா ஓய்வெடுக்காமல் சுமார் ஆயிரம் கிலோ மீட்டர் வரை பறக்கும் திறன் கொண்டது.



## செயல் திட்டம்



எவையேனும் ஐந்து பறவைகளின் படங்களை ஒட்டி, அவற்றைப்பற்றி ஐந்து வரிகள் எழுதி வருக.

# 22 ஆனந்தம் விளையும் பூமியடி




கும்மியடி பெண்ணே கும்மியடி – சுகம்

கோடி விளைந்திடக் கும்மியடி

நமது இன்னல் போனதடி – என்று

நெஞ்சம் நெகிழ்ந்தே கும்மியடி

பாவலர் புகழும் பூமியடி– நம்

பாரதம் என்னும் தேசமடி

ஆனந்தம் விளையும் பூமியடி– புகழ்

ஆரம் கொண்ட தேசமடி

அறிவில் சிறந்த தேசமடி–நல்

அறிஞர்கள் வாழும் பூமியடி

மலையாய் உயர்ந்த தேசமடி– பெரும்

வளமும் கொண்ட பூமியடி

இந்தியா நமது தேசமடி– நீ

இணைந்து ஒன்றாய் வாழ்ந்திடவே

மண்ணைத் தாயாய் போற்றிடடி.–உன்

கண்ணைப் போலக் காத்திடடி

## வாங்க பேசலாம்



- நமது இந்திய நாட்டின் பெருமைகள் குறித்து உமது கருத்துகளைப் பகிர்ந்து கொள்க.
- உங்கள் ஊரிலுள்ள சிறப்புவாய்ந்த இடங்களைப் பற்றி, உமது கருத்துகளை எடுத்துக் கூறுக.






கண்ணைப்போல காக்கவேண்டும் எவ்வாறு?

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

### சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுவோமா?

01. 'இன்னல்' – இச்சொல்லின் பொருள் ..............................

| | | | |
|---|---|---|---|
| அ) | மகிழ்ச்சி | ஆ) | கன்னல் |
| இ) | துன்பம் | ஈ) | இன்பம் |

02. கும்மியடி – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..............................

| | | | |
|---|---|---|---|
| அ) | கும்மி + யடி | ஆ) | கும் + மியடி |
| இ) | கும் + மடி | ஈ) | கும்மி + அடி |

03. ஆனந்தம் – இச்சொல்லின் எதிர்ச்சொல் ..............................

| | | | |
|---|---|---|---|
| அ) | மகிழ்ச்சி | ஆ) | வருத்தம் |
| இ) | அன்பு | ஈ) | கோபம் |

QQSNP8

**04** ஒரே ஓசையில் முடியாத சொற்கள் ..............................................

அ) தேசமடி – பூமியடி ஆ) போற்றிடடி – காத்திடடி

இ) கும்மியடி – கோடி ஈ) போனதடி – போற்றிடவே

**05** கும்மியாட்டத்தைக் குறிக்கும் படம் ..............................................

அ)  ஆ) 

இ)  ஈ) 

## மொழியோடு விளையாடு

படங்களின் பெயரை எழுதுக. பெயரின் முதல் எழுத்துகளில் உருவாகும் சொல்லுக்குரிய படத்துடன் இணைக்க.


கடல்


விறகு


தையல் இயந்திரம்



























கவிதை

## பாடலில் இடம்பெற்றுள்ள ஒத்த ஓசைச் சொற்களை எழுதுக.




## பொருத்துக

| | | | |
|---|---|---|---|
| 1. | பாரதம், தேசம் | – | இன்னல் |
| 2. | ஆனந்தம், சந்தோஷம் | – | அன்னை |
| 3. | நெஞ்சம், உள்ளம் | – | மகிழ்ச்சி |
| 4. | துன்பம், துயர் | – | நாடு |
| 5. | தாய், அம்மா | – | மனம் |

## அறிந்து கொள்வோம்



நாட்டுப்புறக் கலைகள் என்பவை நாட்டுப்புற மக்களின் உணர்ச்சி வெளிப்பாடாகும். இந்த உணர்ச்சிகள் பாடலாகவும், ஆடலாகவும் மக்களிடையே வெளிப்படுகின்றன.



## செயல் திட்டம்



உமது ஊரில் பாடப்படும் நாட்டுப்புறப் பாடல்களைக் கேட்டு, எழுதி வருக.

FJ1D3Z

# 23 கணினி உலகம்

மதி, பூவிழி இருவரும் நல்ல தோழிகள். இருவரும் கோடை விடுமுறையில் வெளியூருக்குச் சென்றிருந்தனர். விடுமுறை முடிந்து பள்ளி தொடங்கும்முன் இருவரும் சந்திக்கின்றனர். அப்போது....

**பூவிழி** தோழி! நலமாக இருக்கிறாயா?

**மதி** ஓ! நலமாக இருக்கிறேனே. விடுமுறையை எப்படிக் கழித்தாய்? எங்கேயாவது வெளியூருக்குச் சென்றாயா?

**பூவிழி** ஆமாம், மதி. என் மாமாவின் திருமணம் சென்னையில் நடைபெற்றதால், நான் அங்குச் சென்றிருந்தேன்.

**மதி** அப்படியா! சென்னையில் சுற்றிப் பார்ப்பதற்கு நிறைய இடங்கள் இருக்கிறதே. அங்கு நீ கண்டுகளித்த இடங்களைப் பற்றிச் சொல்லேன்.

**பூவிழி** சென்னை, நம் ஊரைப்போல இல்லை. அடுக்குமாடிக் கட்டடங்கள், அகன்ற சாலைகள், மெரினா கடற்கரை, விமான நிலையம், மிகப்பெரிய அண்ணா நூற்றாண்டு நூலகம், உயிர்க்காட்சிச் சாலை, பொழுதுபோக்கு மையங்கள், தகவல் தொழில்நுட்பப் பூங்கா என எல்லாம் புதுமையிலும் புதுமையாக இருந்தன.

**மதி** அதுசரி, பூங்கா என்றால் செடி, கொடி, மரம்தானே இருக்கும். அது என்ன தகவல் தொழில் நுட்பப் பூங்கா? அதை நீ எங்குப் பார்த்தாய்?

**பூவிழி** சென்னையில் தரமணி ராஜுவ்காந்தி சாலையில்தான் அந்தத் தொழில் நுட்பப் பூங்காவைப் பார்த்தேன். பதின்மூன்று அடுக்கு மாடிகளுடன் அது செயல்பட்டு வருகிறதாம்.



**மதி** தொழில் நுட்பப் பூங்காவில் என்னென்ன பணிகள் நடக்கின்றன?

**பூவிழி** அங்கே கணினி தகவல் தொழில் நுட்பச் செயல்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

**மதி** கணினி தகவல் தொழில்நுட்பமா? இப்போது எங்கு பார்த்தாலும் கணினியைப் பற்றித்தான் பேசுகிறார்கள். உனக்கு ஒரு செய்தி தெரியுமா? நம் பள்ளியில்கூட கையடக்கக் கணினியைப் பயன்படுத்தப் போகிறார்களாம். நாமும் அதன் செயல்பாட்டை எளிதாகக் கற்றுக்கொண்டு, கற்றல் திறனை வளர்த்துக் கொள்ளலாமாம். அதனால், கணினி பற்றி நான் அறிந்துகொள்ள விரும்புகிறேன்.

**பூவிழி** எனக்கும்கூட தெரிந்துகொள்ள ஆவல்தான். யாரிடம் கேட்கலாம்? அடடே, நான் மறந்துபோய்விட்டேனே, என் அத்தை அந்தத் தொழில்நுட்பப் பூங்காவில்தான் பணியாற்றுகிறார். அவர், நேற்றுத்தான் சென்னையிலிருந்து வந்தார்.வா, மதி! நாம் அவரிடமே சென்று கேட்கலாம்.

(பூவிழியும் மதியும் அத்தையைக் கண்டு தங்கள் எண்ணத்தைத் தெரியப்படுத்துகின்றனர். அத்தையும் அவர்களுக்குக் கணினி பற்றி விளக்கமாகக் கூறத் தொடங்குகிறார்.)

**அத்தை** கணினி என்பது, நாம் தரும் உள்ளீடுகளைப் பெற்று அதனைச் செயல்படுத்தி அதற்கேற்ற வெளியீடுகளைத் தரும் ஒரு மின்னணு சாதனம். இதனைச் சார்லஸ் பாப்பேஜ் கண்டுபிடித்தார். முதன்முதலில் கண்டுபிடிக்கப்பட்ட கணினி அளவில் மிகப் பெரியது. அதனை எளிதாக ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குக் கொண்டு செல்ல இயலாது. ஆனால், இப்போதோ கையடக்க வடிவிலேகூடக் கணினிகள் உருவாக்கப்படுகின்றன.

**மதி** ஆமாம், ஆமாம். நாங்கள்கூடக் கேள்விப்பட்டுள்ளோம். எங்களுக்குக் கணினியின் முதன்மையான பகுதிகள் எவை என்று சொல்லுங்களேன்.

**அத்தை** மையச் செயல்பாட்டுப் பகுதி (CPU), கட்டுப்பாட்டகம் (Control unit), நினைவகம் (Memory) உள்ளீடு மற்றும் வெளியீடு (Input and output) இவைதாம் ஒரு கணினியின் முதன்மையான பகுதிகள்.

**பூவிழி** அத்தை, இவற்றைப்பற்றிக் கொஞ்சம் சொல்லுங்க.

**அத்தை** சொல்கிறேன். மையச் செயல்பாட்டுப்பகுதி என்பது, செய்நிரல் அடிப்படையில் கணிதச் செயல்பாடுகளை அமைக்கும். கட்டுப்பாட்டகம் என்பது, செய்திகளைத் திரளாகச் சேமித்து வைத்திருக்கும். செய்திகள்/ தகவல்களை நிலையாகச் சேமித்து வைக்கும் இடம்தான் நினைவகம். மையச் செயலகம் ஒருங்கிணைந்த உள்ளீடு, வெளியீடு கருவிகளைத் தன்னுள் பெற்றிருக்கும்.

**மதி** கணினியின் அமைப்பைத் தெளிவாகக் கூறினீர்கள். அதன் செயல்பாடுகள் பற்றியும் தெரிந்துகொள்ள ஆவலாக உள்ளோம்.

**அத்தை** நீங்கள் கட்டாயம் தெரிந்துகொள்ள வேண்டும். அப்போதுதான் கணினியை இயக்க உதவும். அதைப்பற்றி நான் விளக்குவதைவிடக் கணினியை உங்கள்முன் இயக்கிக்காட்டும்போது இன்னும் எளிதாகப் புரியும். ஆனால், இங்குக் கணினி இல்லாததால், அதில் பயன்படும் கருவிகள், செயலிகள் பற்றி அறிந்து கொள்வோம்.

**பூவிழி** புரிகிறது அத்தை. கணினியில் உள்ளீடு, வெளியீடு கருவிகள் உள்ளன என்று கூறினீர்களே, அவைபற்றிச் சொல்லுங்களேன்.

**அத்தை** சொல்கிறேன் பூவிழி. விசைப்பலகை (Keyboard), சுட்டி (Mouse) போன்றவை உள்ளீட்டுக் கருவிகள். காட்சித்திரை (Monitor), கணினிஅச்சுப்பொறி (Printer) போன்றவை வெளியீட்டுக் கருவிகள்.



**மதி** தரவு (Data), பதிவேற்றம் (Upload), பதிவிறக்கம் (Download) என்று கூறுகிறார்களே, அப்படி என்றால் என்ன?

**அத்தை** கூறுகிறேன். கவனமாகக் கேளுங்கள். நாம் கணினிக்குக் கொடுக்கும் தகவல்கள்தாம் தரவுகள் (Data). தரவுகள் பதிவு செய்வதைப் பதிவேற்றம் (upload) எனவும், தகவல் பெறுவதைப் பதிவிறக்கம் (Download) எனவும் அழைக்கிறோம்.

**மதி** நன்றாக விளக்கினீர்கள். வலைத்தளம் (Website) பற்றியும் சொல்லுங்களேன்.

**அத்தை** கணினிகளின் தொடர்ச்சியான வலை அமைப்புகள் சேர்ந்திருக்கும் இணைப்பே வலைத்தளம் அல்லது இணையம் ஆகும். இதன்மூலம் எந்தவொரு நாட்டு நிகழ்வுகளையும் நாம் நேரடியாகக் காண முடியும்.

**பூவிழி** வியப்பாக உள்ளது அத்தை. இணையம் மூலமாகக் கடிதமும் எழுதலாம் என்று கூறுகிறார்களே, அது எப்படி?

**அத்தை** ஓ! மின்னஞ்சல் (Email ID) பற்றிக் கேட்கிறாயா? கணினிகளுக்கு இடையே இணையத்தின் வாயிலாகச் செய்யப்படும் தகவல் பரிமாற்றமே மின்னஞ்சல். இதன்மூலம் தகவல்களைப் பரிமாறிக் கொள்ளலாம்.

**மதி** இப்போதெல்லாம் புலனம் (Whatsapp) முகநூல் (Facebook) சுட்டுரை (Twitter) என்றெல்லாம் அடிக்கடி கேள்விப்படுகிறோமே, அவையெல்லாம் என்ன என்று கூறுங்கள்.

**அத்தை** நீங்கள் கூறியவற்றை வலைத்தளச் செயலிகள் (Webapps) என்று அழைப்பர். இவற்றைச் செயலி உருவாக்கம் (Play store) சென்று, நம் மின்னஞ்சல் முகவரி கொடுத்து உருவாக்கி, நம் கருத்துகளைப் பதிவிடலாம் அல்லது பெறலாம்.

**பூவிழி** மிக்க நன்றி, அத்தை. எங்களுக்குக் கணினிபற்றி நன்கு அறிமுகப்படுத்தினீர்கள். நாங்கள் அறிந்துகொண்டதை எல்லாருக்கும் எடுத்துச் சொல்வோம்.

**அத்தை** உங்கள் இருவருக்கும் தேடல் பண்பு உள்ளது. புதிய செய்திகளை அறிந்துகொள்ள மிகவும் ஆர்வம் காட்டுகிறீர்கள். ஆகையால், உங்கள் அறிவை நாள்தோறும் வளப்படுத்திக் கொள்ள மறந்துவிடாதீர்கள். உங்களோடு உரையாடியதற்காக நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்.

எங்களுக்கும் மகிழ்ச்சி. போய் வருகிறோம், நன்றி! என்று சொல்லிவிட்டு மதியும் பூவிழியும் வீட்டுக்குச் சென்றனர்.

திறன்: சொற்களஞ்சியப் பெருக்கமும் சொல்லாட்சித் திறனும்



## வாங்க பேசலாம்

**கணினியின் திரைபோன்று செய்து கணினியைப் பற்றிப்பேசுக.**



## சிந்திக்கலாமா?

அழகன், புத்தகத்தில் மட்டுமே படிக்கமுடியும் என்கிறான்.

அவன் நண்பனோ கணினியிலும் படிக்கலாம் என்கிறான்.

இதுபற்றி உங்கள் கருத்து என்ன?

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

### சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுவோமா?

5C92HR

01. சார்லஸ் பாப்பேஜ் கண்டறிந்த அறிவியல் கருவி ..........................

அ) தொலைக்காட்சி ஆ) கணினி

இ) கைப்பேசி ஈ) மடிக்கணினி

02. இப்போதெல்லாம் இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..........................

அ) இப்போது + எல்லாம் ஆ) இப்போ + எல்லாம்

இ) இப்போதே + எல்லாம் ஈ) இப்போ + வெல்லாம்

03. நினைவகம் – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..........................

அ) நினை + வகம் ஆ) நினை + அகம்

இ) நினைவு + வகம் ஈ) நினைவு + அகம்

04. மின் + அஞ்சல் – இச்சொற்களைச் சேர்த்து எழுதக் கிடைக்கும் சொல் ..........................

அ) மின்அஞ்சல் ஆ) மின்னஞ்சல்

இ) மினஅஞ்சல் ஈ) மினஞ்சல்

05. பதிவேற்றம் – இச்சொல்லின் பொருள் ..........................

அ) தகவல் ஆராய்தல் ஆ) தகவல் வரிசைப்படுத்துதல்

இ) தகவல் பதிவுசெய்தல் ஈ) தகவல் பெறுதல்

### வினாக்களுக்கு விடையளிக்க.

01. சென்னையில் பூவிழி கண்டுகளித்த இடங்கள் யாவை?

02. கணினியின் முதன்மைப் பகுதிகளை எழுதுக.

03. இணையம் என்றால் என்ன?

04. மின்னஞ்சல் எதற்குப் பயன்படுகிறது?

## குறிப்புகளைப் படித்துச் சொற்களைத் தேர்ந்தெடுப்போமா?

காட்சிகளைக் காண்பது

செய்தியைக் குறிக்கும் வேறு பெயர்

படங்களுடன் கருத்துகளைப் பரிமாறிக் கொள்வது

கணினியின் தொடர்ச்சியான வலை அமைப்பு

தகவல்களைப் பதிவு செய்தல்




## மொழி விளையாட்டு

கை என்னும் சொல்லை முதலெழுத்தாகக் கொண்டு பல சொற்களை உருவாக்கலாமா?



கைக்குட்டை



________



________

## செயல் திட்டம்



- கணினியில் படம் வரைந்து வண்ணம் தீட்டுக.
- நாளிதழ், வார இதழ்களில் வெளியாகும் கணினி பற்றிய செய்திகளைப் படங்களுடன் உன் குறிப்பேட்டில் ஒட்டி மகிழ்க.

## விடுபட்ட இடங்களில் உரிய சொற்களை நிரப்பிக் கடிதத்தை முழுமையாக்குவோம்

________

________

அன்புள்ள அத்தை,

நாங்கள் அனைவரும் ________. அதுபோல ________ அனைவரின் ________ அறிய ஆவல்.

அடுத்த வாரம் ________ ஊரில் ________ கண்காட்சி நடைபெற ________. அதில் பல்வேறு ________ காட்சிக்கு வைக்கப்படும். ________ வளர்ச்சிக்கு ________ பல்வேறு நூல்களை ஒரே ________ கண்டு மகிழலாம். ________யில் கலந்து கொள்ள கதிரையும் கோமதியையும் அனுப்பினால் நாங்கள் ________ சேர்ந்து ________ பார்த்து மகிழ்வோம். பல ________ வாங்கிப் ________ பயன் பெறுவோம்.

எனவே ________யும் அனுப்பி வைக்குமாறு ________ வேண்டுகிறேன்.

தங்கள் அன்புள்ள

________



# 24 மலையும் எதிரொலியும்

தந்தையும் மகனும் மலைப்பகுதியில் நடந்து சென்று கொண்டிருந்தனர். அப்பொழுது திடீரென்று மகன் கீழே விழுந்து அடிபட்டு, "ஆஆஆஆஆஆஆ!!!" என்று கத்தினான்.

என்ன ஆச்சரியம்! அவனுடைய சத்தம் அவனுக்கே திருப்பிக் கேட்டது, "ஆஆஆஆஆ ஆ ஆ!!!"

அவன் ஆவலுடன் "யார் நீ" என்று கேட்டான். திரும்ப அவனுக்கு "யார் நீ" என்ற ஒலி கேட்டது.

"உன்னை எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது" என்று மலையைப் பார்த்து அவன் கத்தினான்.

உடனே மலையும் "உன்னை எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது" என்று பதிலளித்தது.

இதைக் கேட்டதும் அவனுக்குக் கோபம் வந்துவிட்டது. "உன்னால் நேரில் வர முடியாதா?" என்று திட்டினான்.

அவனுக்கு மறுபடியும் அதே பதிலே வந்தது. "உன்னால் நேரில் வர முடியாதா?"

அவன் தன்னுடைய தந்தையைப் பார்த்து "அப்பா இங்கு என்ன நடக்கிறது?" என்று கேட்டான்.

அவனுடைய அப்பா சிரித்துக் கொண்டே, "மகனே! கவனமாகக் கேள்!" என்றார்.



U5GQWI

இப்பொழுது அவர் மலையைப் பார்த்து "நீ ஒரு வெற்றி வீரன்" என்றார். அந்த மலையும் "நீ ஒரு வெற்றி வீரன்" என்று திரும்பிச் சொன்னது.

அந்தச் சிறுவனுக்கு மிகவும் வியப்பாக இருந்தது. ஆனால், அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. அவனுடைய அப்பா, இதை எல்லாரும் எதிரொலி என்று கூறுவர். ஆனால், வாழ்க்கைக்கான தத்துவம் இது. நாம் தருவதை எல்லாம் அது நமக்குத் திருப்பித் தரும். நம்முடைய வாழ்க்கை நம்முடைய செயல்பாட்டின் எதிரொலிதான். அடுத்தவர் உன்மீது அன்பு செலுத்த வேண்டும் என விரும்பினால் அடுத்தவர் மீது நீ அன்பு செலுத்த வேண்டும்.

நீ மற்றவர்களிடம் அதிகமான திறமையை எதிர்பார்த்தால், முதலில் உன்னுடைய திறமையை அதிகரித்துக் கொள்.

நாம் எதைக் கொடுக்கிறோமோ, அதையே வாழ்க்கையும் நமக்குத் திருப்பிக் கொடுக்கிறது.

உன்னுடைய வாழ்க்கை எதிர்பாராமல் நடக்கும் ஒன்றன்று; அது உன்னுடைய எதிரொலிதான் என்று கூறி முடித்தார் தந்தை.

**நீதி: நாம் செய்கின்ற செயல்களே நன்மையையும் தீமையையும் விளைவிக்கின்றன.**

9673PQ

**வாங்க பேசலாம்**



- மலைப்பகுதிக்குச் சென்றிருக்கிறீர்களா? உங்களுக்கு ஏற்பட்ட அனுபவத்தைப் பேசுக.








மேலே உள்ள இரண்டு படங்களிலும் நீங்கள் காண்பது என்ன? இருவரில் யாருடைய செயல் சிறந்தது?

## வினாக்களுக்கு விடையளிக்க

01. தந்தையும் மகனும் எங்குச் சென்று கொண்டிருந்தனர்?

02. சிறுவன் பேசியபோது மலை என்ன செய்தது?

03. சிறுவன் "நான் அன்பு கொண்டவன்" என்று சொல்லியிருந்தால் மலை என்ன சொல்லி இருக்கும்?

04. இக்கதையின் மூலம் தந்தை மகனுக்குக் கூறிய அறிவுரை யாது?

## கலையும் கைவண்ணமும்

### வண்ணம் தீட்டி மகிழ்வோம்



## விடுகதைக்குரிய சரியான படத்தைத் தேர்ந்தெடுப்போமா?

**01** வட்டமாய் இருந்திடுவேன் உண்ணுவதற்கே என்னை வாங்குவர். ஆனால் என்னை யாரும் உண்ணுவதில்லை. நான் யார்?





**02** உயரமாய் இருந்திடுவேன்; பச்சை ஆடை உடுத்தியிருப்பேன்; குளிர்ச்சியான தண்ணீரைக் கொட்டுவேன். நான் யார்?





**03** நீல நிறமாய்த் தோன்றிடுவேன். ஓயாமல் அலைந்திடுவேன். தவழ்ந்து தவழ்ந்து வந்திடுவேன். நான் யார்?





**04** நீ பார்த்தால் நானும் பார்ப்பேன். நீ சிரித்தால் நானும் சிரிப்பேன். நீ செய்தால் நானும் செய்வேன். நான் யார்?





**05** தரையிலே ஊர்ந்திடுவேன். வானத்திலே பறந்திடுவேன். கடலைத் தாண்டிடுவேன். மக்களைச் சுமந்து செல்வேன். நான் யார்?





# மொழியோடு விளையாடு

## குறிப்புகளைப் படி, விடையைக் கண்டுபிடி

01

மூன்றெழுத்துச் சொல்
நடு எழுத்து எடுத்துவிட்டால்
படுக்கச் சொல்லும்
காஞ்சிபுரம் இதனால் புகழ் பெறும்

| | | |
|---|---|---|
| | | |

02

நான்கெழுத்துச் சொல்
முதல் இரண்டு எழுத்து விடச்சொல்லும்
கடை இரண்டு எழுத்து பாட்டி சொல்வார்
முதலும் கடையும் வித்தாகும்.

| | | | |
|---|---|---|---|
| | | | |

03

ஐந்தெழுத்துச் சொல்
முதல் இரண்டும் இனிக்கும்
கடைசி மூன்றும் பறக்கும்
முதலும் கடையும் தேடும்
அது என்ன?

| | | | | |
|---|---|---|---|---|
| | | | | |

## அறிந்துகொள்வோம்



உலகின் மிக உயரமான சிகரம்
– இமயமலையில் உள்ள எவரெஸ்ட்

தமிழ்நாட்டின் மிக உயரமான சிகரம்
– ஆனை மலையிலுள்ள ஆனைமுடி



## செயல் திட்டம்



உனக்குப் பிடித்த செல்லப் பிராணி எது? அதனிடம் நீ எவ்வாறு நடந்து கொள்வாய்? எழுதி வருக.

# எழுவாய், பயனிலை அறிவோமா?

## எழுவாய், பயனிலை அறிமுகம்

சொற்கள் தொடர்ந்து அமைவதே தொடர். ஒரு தொடரில் எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் ஆகிய மூன்றும் இருக்கும். இவற்றுள், செயப்படுபொருள் இல்லாமலும் வரலாம். எழுவாய் தோன்றாமலும்கூட வரலாம். ஆயினும், எழுவாயும் பயனிலையும் ஒரு தொடரில் இன்றியமையாத கூறுகளாக விளங்குகின்றன.




### எழுவாய்

முல்லை படம் வரைந்தாள்.

படம் வரைந்தவர் யார் என்னும் வினாவுக்கு விடையாக வரும் முல்லை என்னும் சொல்லே எழுவாய்.

குரங்கு மரத்தில் ஏறியது.

எது மரத்தில் ஏறியது? என்னும் வினாவுக்கு விடையாக வரும் குரங்கு என்னும் சொல்லே எழுவாய்.




ஒரு தொடரில் யார், எவர், எது, எவை என்னும் வினாக்களுக்கு விடையாக வருவதே எழுவாய்.

### பயனிலை

அவன் வந்து . . . . . .

அவன் வந்து சென்றான்

மேற்கண்ட இரு தொடர்களுள் முதல் தொடர் முழுமை பெறவில்லை. ஆனால், இரண்டாம் தொடர் முழுமை பெற்றுள்ளது. ஆகவே, 'சென்றான்' என்பது, இத்தொடரின் பயனிலை.

ஒரு தொடரை முழுமை பெறச் செய்யும் சொல்லே பயனிலை.

## பயனிலையின் வகைகள்




பயனிலை மூன்று வகைப்படும். அவையாவன:

### பெயர்ப் பயனிலை

**அவன் வளவன்**

இத்தொடரில் அவன் என்பது எழுவாய், வளவன் என்பது பெயர்ப் பயனிலை.

### வினைப் பயனிலை

**குமரன் பாடினான்**

இத்தொடரில், குமரன் என்பது, எழுவாய். பாடினான் என்பது, வினைப் பயனிலை.

### வினாப் பயனிலை

நீ யார்?

இத்தொடரில், நீ என்பது, எழுவாய். யார் என்பது, வினாப் பயனிலை.




வளவன் நல்லவன்

வளவன் சென்றான்

வளவன் யார்?

☞ பெயரைக் கொண்டு முடிவது, பெயர்ப் பயனிலை

☞ வினையைக் கொண்டு முடிவது, வினைப்பயனிலை

☞ வினாவைக் கொண்டு முடிவது, வினாப்பயனிலை.

- ஒரு தொடரின் பயனிலையைக் கொண்டே எழுவாயை அறியலாம்.
- எழுவாயும் பயனிலையும் திணை, பால், எண், இடங்களோடு இயைந்துவரும்.

**கீழ்க்காணும் தொடர்களில் எழுவாயைக் கண்டறிந்து வட்டமிடுக.**

1. குழந்தை சிரித்தது.
2. கண்ணன் படம் வரைந்தான்.
3. பூங்கோதை பள்ளி சென்றாள்.
4. அண்ணன் தம்பிக்கு உதவினான்.
5. பறவைகள் வானில் பறந்தன.
6. பசு புல் மேய்ந்தது.

**கீழ்க்காணும் தொடர்களைப் பயனிலைகளுக்கேற்றவாறு அட்டவணைப்படுத்துக.**

1. அவர் சிறந்த மருத்துவர்.
2. என்னை அழைத்தவர் யார்?
3. அருளரசன் நல்ல மாணவன்.
4. நேற்று அழகன் ஊருக்குச் சென்றான்.
5. முக்கனிகள் யாவை?
6. புலி உறுமியது.

| வ. எண் | பெயர்ப் பயனிலை | வினைப் பயனிலை | வினாப் பயனிலை |
|---|---|---|---|
| 1 | அவர் சிறந்த மருத்துவர் | – | – |
| 2 | | | |
| 3 | | | |
| 4 | | | |
| 5 | | | |
| 6 | | | |

# 25 நீதிநெறி விளக்கம்

அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியும் கல்லார்

அவையஞ்சா ஆகுலச் சொல்லும் – நவையஞ்சி

ஈத்துணாச் செல்வமும் நல்கூர்ந்தார் இன்னலமும்

பூத்தலின் பூவாமை நன்று

– குமரகுருபரர்



## பாடல் பொருள்

பலர் நிறைந்த அவையிலே, உடல் நடுங்கித் தம் கருத்தை எடுத்துக்கூற முடியாமல் தடுமாறுபவர் பெற்ற கல்வியும், அவையினர்முன் கல்வியறிவில்லாதவர் பேசும் பொருளற்ற ஆரவாரச் சொல்லும், செய்யத் தக்கவற்றைச் செய்யாமையால் ஏற்படும் குற்றத்துக்கு அஞ்சிப் பிறருக்குக் கொடுத்து எஞ்சியவற்றை உண்ணாதவரின் செல்வமும், வறுமையுற்றவரிடத்தே உள்ள இனிய அழகும் உண்டாதலைவிட உண்டாகாமல் இருப்பதே நல்லது.



## சொல்பொருள்

மெய் – உடல், விதிர்ப்பார் – நடுங்குவார், கல்லார் – படிக்காதவர், ஆகுலச்சொல் – பொருளற்ற ஆரவாரச் சொல், நவை – குற்றம், அஞ்சி – அச்சமுற்று, நல்கூர்ந்தார் – வறுமையுற்றார், பூத்தல் – உண்டாதல்

## நூல் குறிப்பு

நீதிநெறிகளை விளக்குவதற்குக் கருவியாக இருப்பதால் இந்நூல், நீதிநெறி விளக்கம் எனப் பெயர் பெற்றது. திருக்குறளில் கூறப்பெற்றுள்ள அறவுரைகள் பலவற்றையும் தொகுத்துச் சுருக்கமாகவும் தெளிவாகவும் இந்நூல் விளக்குகிறது. இந்நூலை இயற்றியவர் குமரகுருபரர்.

### வாங்க பேசலாம்



- செய்யுளின் பொருள் உணர்ந்து படித்து மகிழ்க.
- முதன்முதலில் மேடையில் பேசிய அனுபவத்தை வகுப்பில் பகிர்ந்து கொள்க.



### சிந்திக்கலாமா?

ஜீனத் நன்றாகப் படிப்பவள். ஆனால், வகுப்பில் ஆசிரியர் ஏதாவது கேள்வி கேட்டால் பதில் சொல்லத் தயங்குவாள். அவள் கூச்சத்தை எவ்வாறு போக்கலாம்?

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

### சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுவோமா?

UJQPW7

01. 'நவை' என்னும் சொல்லின் பொருள் ........................................

அ) அச்சம் ஆ) மகிழ்ச்சி

இ) வருத்தம் ஈ) குற்றம்

02. 'அவையஞ்சி' இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ........................................

அ) அவைய + அஞ்சி ஆ) அவை + அஞ்சி

இ) அவை + யஞ்சி ஈ) அவ் + அஞ்சி

03 'இன்னலம்' இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ................................

அ) இன் + னலம் ஆ) இன் + நலம்

இ) இனிமை + நலம் ஈ) இனிய + நலம்

04 'கல்லார்' – இச்சொல்லின் எதிர்ச்சொல் ................................

அ) படிக்காதவர் ஆ) கற்றார்

இ) அருளில்லாதவர் ஈ) அன்பில்லாதவர்

## வினாக்களுக்கு விடையளிக்க

01 கல்வி கற்றவரின் இயல்பு எவ்வாறு இருக்க வேண்டும்?

02 பொருளற்ற சொற்களை அவையினர்முன் பேசுபவர் யார்?

03 பூத்தலின் பூவாமை நன்று என்று நீதிநெறி விளக்கம் எவற்றைக் குறிப்பிடுகிறது?

## முதல் எழுத்து ஒன்றிவரும் சொற்களைப் பாடலிலிருந்து எடுத்து எழுதுக.

01 அவையஞ்சி – அவையஞ்சா

02 ________ – ________

03 ________ – ________

# மொழியோடு விளையாடு

**குறிப்புகளைப் படி. சொல்லிலிருந்தே சொல்லைக் கண்டுபிடி.**

| | | |
|---|---|---|
| விலங்குகள் வாழுமிடம் | பாலைவனம் | வனம் |
| பூவின் வேறு பெயர் | பொன்மலர் | |
| பிறருக்குக் கொடுப்பது | கொடைக்கானல் | |
| விலங்குகளுக்கு மட்டும் உண்டு | வெளவால் | |
| பால் தரும் வீட்டுவிலங்கு | கடற்பசு | |

## இணைந்து செய்வோம்

சங்குச் சக்கரத்தைச் சுழற்றிக் கல்வியின் பெருமைகளை உணர்த்தும் சொற்றொடர்களை முறையாக எழுதுக.




1. ______________________________

2. ______________________________

3. ______________________________

## அறிந்து கொள்வோம்



கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள் – சபை நடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பு அறிய
மாட்டா தவன்நல் மரம்

பாடற்பொருளை ஆசிரியரிடம் கேட்டு அறிந்து கொள்க.



## செயல் திட்டம்



நாளிதழ்கள் மற்றும் சிறுவர்மலர் இதழ்களில் வெளிவரும் கல்விதொடர்பான செய்திகளைத் தொகுக்க (தேவையான கால இடைவெளி தருக.)

# 26 உறவுமுறைக் கடிதம்

XYES4H

எண். 4, தில்லை நகர்,

கடலூர்.

20.03.2020

அன்புள்ள இளவேனில்,

நான் நலம், நீ அங்கு நலமா? உன்னோடு சிலவற்றைப் பகிர்ந்து கொள்ள ஆசை. என்னவென்று அறிந்தால் நீயும் மகிழ்ச்சி அடைவாய். என் பள்ளியில் "பாரம்பரிய விளையாட்டு விழா" நடைபெற்றது. உள்ளரங்கு விளையாட்டுகளும் வெளியரங்கு விளையாட்டுகளுமாய்க் களைகட்டியது விழா. நாம் எத்தனை விளையாட்டில் வேண்டுமென்றாலும் பங்கு பெறலாம்.

நான் பாண்டிஆட்டம், கபடி முதலிய வெளிவிளையாட்டுகளிலும் தாயம், ஐந்தாங்கல், பல்லாங்குழி முதலிய உள்விளையாட்டுகளிலும் கலந்துகொண்டேன். உடலுக்கு மட்டுமன்று; அறிவுக்கும் ஆற்றல் தரும் விளையாட்டுகள் நம் தமிழக விளையாட்டுகள். பாண்டி ஆட்டம் ஒருமுகப்படுத்தும் திறன், கூர்மைப் பண்பு, குதிதிறன் ஆகியவற்றைத் தருகிறது.

"பலிஞ்சடுகுடு, சடுகுடு, சடுகுடு"

ஊசி ஊசி கம்மந்தட்டு, ஊட்டப் பிரிச்சிக் கட்டு, காசுக்கு ரெண்டு தட்டு,

கருணைக் கிழங்குடா, தோலை உரியடா,

தொண்டையில வையடா..வையடா..வையடா

என்று பாடியபடி நாங்கள் ஆடிய கபடி, பார்வையாளரையும் மகிழ்ச்சிப்படுத்தியது. "பாடலோடு ஆடல்" தெரியும். பாடலோடு விளையாட்டு எங்களுக்குப் புதிய அனுபவமாக இருந்தது.

பிற்பகலில் நான் பல்லாங்குழி ஆடினேன். என் சிந்தனையைச் சிதறாமல் வளர்க்கும் ஆற்றல்மிகு விளையாட்டு அது. இருப்பவரிடம் இருந்து இல்லாதவர்க்குக் கொடுக்கும் நற்பண்பை உணர்த்துகிறது. தாயவிளையாட்டில் என் கண்கள் தாயத்தின் மீதே இருந்தன. விழும் புள்ளிகளின் எண்ணிக்கைக்கு ஏற்ப ஏறுவதும் இறங்குவதுமாய்.... அப்பப்பா.... என் ஆர்வத்தைத் தூண்டியது. ஏற்றத்திற்கான நல்ல வழிகளையும், இறக்கத்திற்கான தீய வழிகளையும் தெரிந்து கொண்டேன். வாழ்வின் அவசியமான ஒழுக்கத்தை அறிந்துகொள்ளும் சரியான விளையாட்டு அது.



"கல்லாட்டம்", ஐந்தாங்கல் போன்ற விளையாட்டுகள் சீனா, பர்மா, இலங்கை போன்ற நாடுகளிலும் விளையாடப்படுகின்றன. தூக்கிப்போட்டு விளையாடும்போது 'கவனச் சிதறல்' வராமல் ஒருமுகப்படுத்தி வெற்றி பெறுதல் பயிற்சி ஆகிறது. அடுத்த கல்லில் விரல்படாது எடுத்து ஆடுகையில், விரலின் பங்கோடு எண்ணமும் சரியாகப் பங்காற்றுகிறது. கைகளுக்கு வலிமை சேர்க்கிறது.

'கரும்பு தின்னக் கூலியா?' என்று சொல்வார்களே அதுபோல், எனக்கு விருப்பமான விளையாட்டுகளை எல்லாம் ஆசை தீர விளையாடினேன். அந்த நாள் முழுவதும் சோலையில் சுற்றும் தேனீபோல மகிழ்வுடன் விளையாடினேன். என்னோடு நீயில்லாதது மட்டும் சிறு வருத்தம். நீயும் உன் பள்ளியில் கொண்டாடப் போகும் இதுபோன்ற விழாவில் கலந்துகொண்டு இன்புற வேண்டும். நம் பாரம்பரிய விளையாட்டுகள் பெருமையின் அடையாளம் மட்டுமன்று; நன்மையின் விளைநிலமும் ஆகும். இக்கடிதம் குறித்து உன் பதிலை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்.

என்றும் அன்புடன்,

குறள்செல்வி

உறை மேல் முகவரி:

தி. இளவேனில்

எண். 2/10, கீழ மாசி வீதி,

மதுரை.



## வாங்க பேசலாம்

• உறவுமுறைக் கடிதத்தில் உள்ள செய்திகளை சொந்த நடையில் கூறுக.




நவீன் தான் நினைப்பதையெல்லாம் தன் மாமாவிடம் சொல்ல நினைப்பான். ஆனால், அலைபேசியில் பேசும்போது அத்தனையும் மறந்துவிடுவான்.

குழலி, தான் பேச நினைப்பதையெல்லாம் ஒன்றுவிடாமல் கடிதத்தில் எழுதித் தன் அக்காவுக்கு அனுப்புவாள்

**மேற்கண்ட சூழல்கள் பற்றி நீ என்ன நினைக்கிறாய்? எது சிறந்தது என நீ கருதுகிறாய்?**

# படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

## சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுவோமா?

01 நற்பண்பு – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ........................................

அ) நல்ல + பண்பு  ஆ) நற் + பண்பு
இ) நல் + பண்பு  ஈ) நன்மை + பண்பு

02 பின்வருவனவற்றுள் எது உள்ளரங்க விளையாட்டு இல்லை? ........................................

அ) தாயம்  ஆ) ஐந்தாங்கல்
இ) பல்லாங்குழி  ஈ) கபடி

03 பாரம்பரியம் – இச்சொல்லுக்குரிய பொருளைத் தராத சொல் ........................................

அ) அண்மைக்காலம்  ஆ) தொன்றுதொட்டு
இ) தலைமுறை  ஈ) பரம்பரை

## வினாக்களுக்கு விடையளி

01 தமிழகப் பாரம்பரிய விளையாட்டுகள் எவை?

02 உள்ளரங்க விளையாட்டுகளின் பெயர்களை எழுதுக.

03 கடிதத்தில் இடம்பெற்றுள்ள பழமொழியின் பொருள் யாது?

JCYEAY

# மொழியோடு விளையாடு

## உங்களுக்குப் பிடித்த விளையாட்டுகளைக் கட்டத்தில் கண்டறிந்து எழுதுக.









| கி | ளி | த் | த | ட் | டு | கா |
|---|---|---|---|---|---|---|
| ப | ம் | ப | ர | ம் | கு | யா |
| ல் | அ | ம் | மா | னை | டு | ப |
| லா | தா | ய | ம் | ம | ச | ழ |
| ங் | ஆ | டு | பு | லி | கோ | மா |
| கு | ஐ | ந் | தா | ங் | க | ல் |
| ழி | கி | ட் | டி | ப் | பு | ள் |



______________ ______________ ______________

## கலையும் கைவண்ணமும்

**இராக்கெட் செய்வோம்! செடிக்கு நீர் ஊற்றுவோம்!**



## உரைப்பகுதியைப் படித்து வினாக்களுக்கு விடையளிக்க.

விளையாட்டும் பொழுதுபோக்கும் ஓரினத்தின் பண்பாட்டு வரலாற்றில் குறிப்பிடத்தக்க இடம்பெறுவன. சங்க காலத்தில் இளையவரும் முதியவரும் பலவகையான விளையாட்டுகளிலும் பொழுதுபோக்குகளிலும் ஈடுபட்டனர். அவற்றுள் ஒன்று, ஏறு தழுவுதல். முல்லை நிலத்தில் வாழ்ந்த மக்கள், கூரிய கொம்புகளை உடைய காளைகளை அடக்குவதனை வீர விளையாட்டாகக் கருதினர்.



01 ஓரினத்தின் பண்பாட்டு வரலாற்றில் குறிப்பிடப்படுவன யாவை?

02 ஏறு தழுவுதல் என்றால் என்ன?

03 உரைப்பகுதியில் இடம்பெற்றுள்ள எதிர்ச்சொற்களை எழுதுக.

04 ஏறு தழுவுதல் எந்த நிலத்துடன் தொடர்புடையது?

05 நிரப்புக. ஏறு தழுவுதல் என்பது, ------------ விளையாட்டு. (உள்ளரங்க/ வெளியரங்க)

## அறிந்து கொள்வோம்



கடிதத்தில் அனுப்புநர், பெறுநர் முகவரி தெளிவாகக் குறிப்பிடப்பட வேண்டும். இல்லையெனில் அனுப்பியவர்க்கே திரும்பி வந்துவிடும்.



## செயல் திட்டம்



எவையேனும் பத்து விளையாட்டுகளின் பெயர்களையும் அவற்றிற்குரிய படங்களையும் திரட்டிப் படத்தொகுப்பை உருவாக்குக.




## புதிர்க்கதை

ஓர் ஊரில் அண்ணனும் தம்பியும் வாழ்ந்து வந்தனர். அவர்களில் தம்பி வறுமையில் வாடினான். அண்ணனோ செல்வச் செழிப்பில் இருந்தான். தம்பி ஒருநாள், அண்ணனிடம் சென்று, தனக்கு ஒரு பசுவை வழங்குமாறு கேட்டான். தம்பியிடம் பசுவைக் கொடுப்பதற்குமுன் "தன் நிலத்தில் அவன் நாள்தோறும் வந்து, ஓராண்டு உழைக்க வேண்டும்" என்று அண்ணன் சொன்னான்.

தம்பியும் ஏற்றுக்கொண்டான். அண்ணனுடைய நிலத்தில் ஓராண்டு முழுவதும் உழைத்தான். ஓராண்டு முடிந்தபின் தம்பி, அண்ணனிடம் வேலைக்குச் செல்லவில்லை. மறுநாளே பசுவைத் திருப்பிக்கேட்டான் அண்ணன்.

"ஓராண்டு உன் நிலத்தில் உழைத்தேன் அல்லவா, பசு எனக்குத்தான் ! என்றான் தம்பி.

அண்ணன், "அதெப்படி முடியும்? ஓராண்டுக் காலம் நீ என் பசுவிடம் பால் கறந்து பலனை அனுபவித்தாய் அல்லவா? அதனால் இரண்டிற்கும் சரியாகிவிட்டது" என்றான். இருவருக்கும் வாய்ச்சண்டை முற்றியது. அதனால், இருவரும் தங்களுக்குச் சரியான தீர்ப்பைத் தேடி, பெரியவர் ஒருவரிடம் சென்றனர். வழக்கை விசாரித்த பெரியவர் அவர்கள் இருவருக்கும் மூன்று புதிர்களைக் கொடுத்து, இவற்றிற்குச் சரியான பதில்களை யார் சொல்கிறீர்களோ அவர்களுக்குத்தாம் பசு" என்று கூறிப் புதிரைச் சொன்னார்.

"முதல் புதிர், மனிதனுடைய வயிற்றை நிரப்புவது எது? இரண்டாவது புதிர், மனிதனுக்கு மிக மகிழ்ச்சியைத் தருவது எது? மூன்றாவது புதிர், அதிவிரைவாகச் செல்வது எது? இந்த மூன்று புதிர்களுக்கும் நாளை விடை கூறுங்கள்" என்றார்.

இருவரும் வீட்டிற்குவந்து நெடுநேரம் சிந்தித்தனர் மறுநாள் காலை பெரியவரைச் சந்தித்தனர் மூத்தவனைப் பெரியவர் அழைத்து "என் புதிருக்கு விடை சொல்!" என்றார்.

அண்ணன், அவரிடம், "பெரியவரே! ஒரு மனிதனுடைய வயிற்றை நிரப்புவது எது என்று கேட்டீர்கள். அதற்குச் சரியான விடை அறுசுவை உணவு சாப்பிட்டால் வயிறு நிரம்பும். பல மணி நேரம் பசிக்காது.

இரண்டாவது மனிதனுக்கு மகிழ்ச்சியைத் தருவது எது என்று கேட்டீர்கள். அதற்கு விடை பணம். பணம் பெட்டி நிறைய இருக்கும்போது எவ்வளவு மகிழ்ச்சி ஏற்படுகிறது தெரியுமா? பணம் குறையக் குறைய மகிழ்ச்சியும் குறையும். மூன்றாவதாக அதி விரைவாகச் செல்வது எது என்று கேட்டீர்கள். அதற்குச் சரியான விடை வேட்டை நாய். வேட்டை நாய்கள் விரைவாக ஓடி. முயல்களைக்கூடப் பிடித்து விடுகின்றனவே" என்று சொல்லிவிட்டுப் பெரியவரைப்பார்த்து, "பசு எனக்குத்தானே" என்று கேட்டான்.

மூத்தவனே, நீ சொன்ன அனைத்தும் தவறான பதில்கள் என்றார் பெரியவர்.



இளையவன் அழைக்கப்பட்டான். அவன் பெரியவரைப் பார்த்து, "நம் வயிற்றை நிரப்புவது பூமி. பூமித்தாயிடம்தான் நாம் உண்ணும் தானியங்களும், கிழங்குகளும் கிடைக்கின்றன. அந்த உணவால்தான் விலங்குகளும், பறவைகளும் வாழ்கின்றன. இரண்டாவதாக, ஒரு மனிதனுக்கு அதிக மகிழ்ச்சி தருவது தூக்கம், தூக்கத்திற்காக விலையுயர்ந்த செல்வத்தையும் மனிதன் விட்டுவிடுவான். மூன்றாவது அதிவிரைவாகச் செல்வது நமது சிந்தனை ஓட்டம் அது நாம் விரும்பியபோது, விரும்பிய இடத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கும்" என்றான்.

"ஆஹா! சரியான விடைகள். இந்தப் பசு உனக்குத்தான் என்று பசுவைக் கொடுத்தபின் பெரியவர் கேட்டார்" இந்தப் புதிர்களுக்கு உனக்கு விடை கூறியது யார்? என்றார்.

" என் மகள் கவின்நிலா! "

" அவள் என்ன அவ்வளவு புத்திசாலியா?" என்றார் பெரியவர்

" ஏதோ கொஞ்சம்" என்றான் இளையவன்.

"அப்படியா? என் அளவிற்கு அவளுக்கு அறிவு இருக்கிறதா? என்பதை ஆராய்ந்து பார்த்துவிடுகிறேன்" என்ற பெரியவர் பத்து அவித்த முட்டைகளை அவனிடம் கொடுத்து, இதோ இந்தப் பத்து அவித்த முட்டைகளையும் உன் மகளிடம் கொடுத்து, ஒரு கோழியினால் அடைகாக்க வைத்து, பத்துக் குஞ்சுகளை ஓர் இரவிற்குள் பொரிக்க வைத்து, அதே குஞ்சுகளை அதே இரவில் கோழியாக்கி, முட்டை போட வைத்து, பத்து முட்டைகளில் மூன்றை எடுத்து அடையாக்கி நாளை காலை உணவிற்கு எனக்குக் கொண்டுவா என்றார்.

தன் மகள் கவின்நிலாவிடம் சென்று, பெரியவர் சொன்னதை அப்படியே சொன்னான் இளையவன்.

தன் மகள் இந்தப் புதிருக்கு விடை எப்படிச் சொல்லப் போகிறாள் என்று கவலைப்பட்டான். ஆனால் அவளோ எதிர் புதிர் போட்டாள். தன் தந்தையிடம் வேகவைத்த துவரைகள் அடங்கிய ஒரு பானையைக் கொடுத்து. "இதில் உள்ள துவரையை நிலத்தில் விதைத்து முற்றியவுடன் அறுத்து எனது கோழிக் குஞ்சுகளுக்கு உணவாகத் தயாராக வைக்கும்படி பெரியவரிடம் கூறுங்கள். "என்றாள் கவின்நிலா. அவளுடைய தந்தையும் அவ்வாறே பெரியவரிடம் சென்று சொன்னார்.

துவரையைப் பார்த்த பெரியவர் அவற்றை நாய்க்குப் போட்டுவிட்டு, சணல்கண்டு ஒன்றைக் கொடுத்து, "இதை ஊறவைத்து,காயவைத்து,நல்ல தரமான துணி தயாரிக்கச் சொல், " என்றார். ஆனால், அவளோ அதற்குப் பதிலாக மிக மெல்லிய குச்சி ஒன்றைக் கொடுத்து" இதிலிருந்து நூலை நூற்பதற்கு ஓர் இராட்டை செய்து தரும்படி கூறுங்கள்!" என்றாள். அவளது அறிவின் ஆழத்தைக் கண்ட பெரியவர், "உன் மகளை நாளை என்னை வந்து பார்க்கச் சொல். ஆனால்,அவள் நடக்கவோ சவாரி செய்யவோ கூடாது. வெறுங்காலுடனோ செருப்புடனோ வரக்கூடாது. பரிசுடனோ, பரிசின்றியோ வரக்கூடாது இது கடுமையான உத்தரவு!" என்றார்.

மறுநாள் பனிச்சறுக்கு வண்டியில் வெள்ளாடுகளைப் பூட்டி, ஒரு காலில் மட்டும் செருப்பு அணிந்து, முயல் ஒன்றைத் தெரியும்படியும் சிட்டுக்குருவி ஒன்றைத் தெரியாமலும் எடுத்துச் சென்றாள் கவின்நிலா. அவள் மிகுந்த புத்திசாலித்தனத்துடன் வருவதைக் கண்ட பெரியவர் அவள்மீது நாய்களை ஏவினார். பதிலுக்கு இவள் முயலை வெளியேவிட நாய்கள் முயலைத் துரத்தின. "இதோ உங்களுக்கு ஒரு சிறிய பரிசு" என்று சிட்டுக் குருவியைக் கொடுத்தாள். அது அவரது கையில் சிக்காமல் பறந்து விட்டது. தான் சொல்லியபடியே வந்துவிட்ட அவளை நினைத்துப் பெருமைப்பட்டார் பெரியவர். "கவின்நிலா, நீ புத்திசாலிதான்" என்று பாராட்டிய பெரியவர், அவளுக்குப் பரிசுகள் அளித்து அனுப்பி வைத்தார்.

**நீதி : வல்லவனுக்கு வல்லவன் வையகத்தில் உண்டு.**
**வல்லவனுக்கு புல்லும் ஆயுதம்**

## வாங்க பேசலாம்



- நீங்கள் அறிந்திருக்கும் புதிர்க்கதைகளுள் ஒன்றை வகுப்பில் பகிர்ந்து கொள்க.




இக்கதையில் வரும் அண்ணனைப்போல் நீ இருந்தால், தம்பிக்கு என்ன செய்திருப்பாய்? கூறுக.

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

### சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுவோமா?




01. 'தினமும்' என்ற சொல்லின் பொருள் ..........

அ) நாள்தோறும் ஆ) வேலைதோறும்
இ) மாதந்தோறும் ஈ) வாரந்தோறும்

02. 'பனிச்சறுக்கு' இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..........

அ) பனி + சறுக்கு ஆ) பனிச் + சறுக்கு
இ) பன + சறுக்கு ஈ) பன் + சறுக்கு

03. 'வேட்டை + நாய்' – இச்சொற்களைச் சேர்த்து எழுதக் கிடைப்பது ..........

அ) வேட்ட நாய் ஆ) வேட்நாய்
இ) வேட்டைநாய் ஈ) வேட்டநாய்

## வினாக்களுக்கு விடையளிக்க.

01. ஓராண்டு நிலத்தில் உழைத்தவர் யார்?
02. பெரியவர் சொன்ன புதிர்கள் எத்தனை?
03. புதிருக்குச் சரியான பதிலளித்தவர் யார்?
04. பெரியவர் பசுவை யாருக்குக் கொடுத்தார்?
05. கவின்நிலா பெரியவருக்குக் கொடுத்த பரிசு என்ன?

## எதிர்ச்சொல்லுடன் இணைப்போமா?

| | |
|---|---|
| குறைய | இளைத்த |
| மெல்லிய | முடியாது |
| முடியும் | மெதுவாக |
| விரைவாக | தடித்த |
| கொழுத்த | நிறைய |

## கலையும் கைவண்ணமும்

**வரைந்து வண்ணமிட்டு மகிழ்வோம் !**

**பாதி என்னிடம் மீதி உன்னிடம் வரைக! வண்ணம் தீட்டுக**



## இணைந்து செய்வோம்

**விளையாடலாம் வாங்க ! தூண்டில் மீன் விளையாட்டு !**

மீன் வடிவத்தில் அட்டைகளை வெட்டிக் கொண்டு அட்டையில் பின்வரும் சொற்களை எழுதிக் கொள்ள வேண்டும். அட்டையில் குண்டூசியைக் குத்தி, வகுப்பறையின் நடுவில் வட்டமிட்டு அதில் அட்டைகளை பரப்பி வைக்க வேண்டும். ஒரு குச்சியின் நுனியில் நூலின் ஒரு முனையைக் கட்ட வேண்டும். மறுநுனியில் காந்தத்தை வைத்துக் கட்டிக் கொள்ள வேண்டும். வகுப்பறையில் பெரியதொரு வட்டமிட்டு வட்டத்தில் ஓர் அம்புக்குறி இடவேண்டும். வட்டத்தில் மாணவர்களை ஓடவிட வேண்டும். ஆசிரியர் ஊதலை ஊதியவுடன் மாணவர்கள் வட்டத்தில் நிற்க வேண்டும். அம்புக்குறி இட்ட இடத்தில் எந்த மாணவர் நிற்கிறாரோ அவர், தூண்டில் மூலம் ஓர் அட்டையை எடுத்து, அதில் உள்ள சொல்லுக்குப் பன்மைச்சொல் கூற வேண்டும்.

எடுத்துக்காட்டு : முட்டை – முட்டைகள்

| | | | | |
|---|---|---|---|---|
| புதிர் | வீடு | கோழி | நாய் | துணி |
| குச்சி | வண்டி | பரிசு | முயல் | குருவி |

## மொழியோடு விளையாடு

### புகைவண்டி

1. புகை
2. வண்டி
3. கை
4. வடி
5. வகை
6. கைவண்டி

### கவிதைப்பாட்டு

1. ______
2. ______
3. ______
4. ______
5. ______
6. ______

### பருத்தி ஆடைகள்

1. ______
2. ______
3. ______
4. ______
5. ______
6. ______

## அறிந்து கொள்வோம்



விடுகதைகளுக்கு ஒன்பது வடிவங்கள் உள்ளன. 1. புதிர் 2. சொல் விளையாட்டு 3. மாற்றெழுத்துப் புதிர், 4. வினோதச் சொற்கள், 5. எழுத்துக் கூட்டு, 6. விகடம், 7. ஓவியப் புதிர், 8. சொற்புதிர், 9. நொடிவினா



## சொல்லுக்குள் சொல் கண்டுபிடி!

கொடுக்கப்பட்ட சொல்லின் பொருள் கட்டத்திலுள்ள எழுத்துகளுள் ஒளிந்திருக்கிறது கண்டுபிடித்து எழுதுக.

**சதம் – ?**

| க | ண் | நூ | தை |
|---|---|---|---|
| எ | சி | ஃ | மி |
| அ | று | யா | பி |

= நூறு

**சித்திரம்**

| ஓ | ர | ய | யா |
|---|---|---|---|
| ரே | கே | ஏ | பி |
| ர் | ம் | ஃ | வ் |
| ப | ல | ஓ | வி |

= __________

**நட்சத்திரம்**

| ரி | ற் | மீ | ரு |
|---|---|---|---|
| இ | வி | லை | பே |
| ற் | ண் | மீ | ன் |

= _________



## செயல் திட்டம்

உங்கள் வீட்டிலுள்ள பெரியவர்களிடம் கேட்டு, 20 விடுகதைகள் எழுதி வருக.

# அகரமுதலி

| சொல் | | பொருள் |
|---|---|---|
| அண்டை நாடு | - | பக்கத்து நாடு |
| அண்ணல் | - | இரக்கம் உடையவர் |
| அதிகம் | - | மிகுதி |
| அதிகரித்தல் | - | மிகுதல் |
| அதிர்கின்ற | - | ஒலிக்கின்ற |
| அபத்தமான பதில்கள் | - | பொய்யான விடைகள் |
| அவசியம் | - | தேவை |
| அற்புதம் | - | புதுமை |
| அழல்கதிர் | - | சூரியன் |
| ஆசி | - | வாழ்த்து |
| ஆச்சரியம் | - | வியப்பு |
| ஆட்டாந்தொழு | - | ஆடு கட்டும் இடம் |
| ஆமோதித்தன | - | உடன்பட்டன |
| ஆர்வம் | - | விருப்பம் |
| ஆல் | - | ஆலமரம் |
| ஆவி | - | உயிர் |
| ஆற்றொணா | - | தாங்கமுடியாத |
| ஆனந்தம் | - | மகிழ்ச்சி |
| இயைந்து | - | பொருந்தி |
| இரசிகர்கள் | - | சுவைஞர்கள் |
| இரசித்தல் | | சுவைத்தல் |
| இராகம் | - | இன்னிசை |
| இலகுவான | - | எளிமையான |
| இன்சொல் | - | இனிமையான சொல் |
| இன்னல் | - | துன்பம் |
| உற்சாகம் | - | மகிழ்ச்சி/ ஊக்கம் |
| எண்ணும் | - | நினைக்கும் |
| எதிரொலி | - | ஒலியைக் கேட்டு மீண்டும் ஒலித்தல் |
| என்னில் | - | எனக்குள் |

| சொல் | | பொருள் |
|---|---|---|
| ஒலைக்கொட்டான் | - | ஓலையால் செய்யப்பட்ட சிறுகூடை |
| கனிந்து | - | பழுத்து |
| காவாக்கால் | - | காக்காவிட்டால் |
| கிரீடம் | - | மணிமுடி |
| குனிந்து | - | வளைந்து |
| கேலி | - | விளையாட்டுப் பேச்சு |
| கொடியடுப்பு | - | பக்க அடுப்பு |
| கொடியோன் | - | துன்புறுத்துபவன் |
| கோபம் | - | சினம் |
| சவாரி | - | பயணம் |
| சிந்தை | - | மனம் |
| சீர்கேடு | - | ஒழுக்கக் குறைவு |
| சுகம் | - | இன்பம் |
| சுத்தம் | - | தூய்மை |
| சுருதி | - | இன்னிசை |
| செருமியது | - | இருமியது |
| செவிசாய்த்தல் | - | கேட்க விரும்புதல் |
| சேதாரம் | - | வீணாதல் |
| சோகாப்பர் | - | துன்பப்படுவர் |
| தண்ணெண்கதிர் | - | குளிர்ச்சி பொருந்திய நிலவின் ஒளி |
| தத்துவம் | - | உண்மை நிலை |
| தந்திரம் | - | சூழ்ச்சி |
| துயரம் | - | துன்பம் |
| துளிர் | - | இளம் இலை |
| தையலர் | - | பெண்கள் |
| தைரியம் | - | துணிவு |
| தொலைவு | - | தூரம் |
| நித்தம் | - | நாள்தோறும் |
| நிரூபித்தல் | - | மெய்ப்பித்தல் |
| பரம்பரை | - | தலைமுறை |

# அகரமுதலி

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பழுதான | - | பயன்படுத்த முடியாத | மெய்ப்பொருள் | - | உண்மைப்பொருள் |
| பாதிப்புகள் | - | விளைவுகள் | லேசாய் | - | மெதுவாய் |
| பாரம்பரியம் | - | தொன்றுதொட்டு | வம்பு | - | வீண்பேச்சு |
| புத்திசாலித்தனம் | - | அறிவுக்கூர்மை | வருந்தியது | - | துன்பமடைந்தது |
| பொதி | - | மூட்டை | வல்லமை | - | வலிமை |
| பொறாமை | - | காழ்ப்புணர்ச்சி | வன்சொல் | - | கடுஞ்சொல் |
| பொறை | - | அடக்கம் | விசாரித்தல் | - | ஆராய்தல் |
| போலி | - | ஒன்றைப்போல இருத்தல் | விசேஷம் | - | சிறப்பு |
| போற்றுதல் | - | வாழ்த்துதல் | வியனுலகம் | - | பரந்த உலகம் |
| மரியாதை | - | மதிப்பு | வெட்கம் | - | நாணம் |
| மாட்டாந்தொழு | - | மாடு கட்டும் இடம் | வெட்டவெளி | - | திறந்தவெளி |
| மனமார்ந்த | - | மனம் நிறைந்த | வேளாண்மை | - | உழவு |
| மன்னர் | - | அரசர் | வேளை | - | பொழுது |
| மாசு | - | குற்றம்/ அழுக்கு | | | |
| முளைப்பாரி | - | நவதானியங்கள் முளைத்துச் சிறிது வளர்ந்து நிறைந்துள்ள மட்பாண்டம் | | | |

# கற்றல் விளைவுகள்

| கேட்டல் | பேசுதல் | படித்தல் | எழுதுதல் |
|---|---|---|---|
| ஓசைநயமும் கருத்தும் மிக்க பாடல்கள், புதிர்க் கதைகளைக் கேட்டுப்புரிந்து கொள்வர்.<br>சூழ்நிலையில் தாம் உற்றுக்கேட்ட பல்வேறு விவரங்களைப் புரிந்து கொண்டு வெளிப்படுத்துவர்.<br>தொடர் வாய்மொழிக் கூற்றுகளையும் விடுகதைகளையும் கேட்டுப் புரிந்து கொள்வர்.<br>பிறர் கூறுவதைக் கவனமுடன் கேட்டல் / வினாக்கள் எழுப்புதல் அவற்றின் மீதான தங்கள் கருத்துகளை/ எதிர் வினைகளை வெளிப்படுத்துவர். | தங்குதடையின்றி இயல்பாகத் தொடர்ந்து பேசுவர்.<br>எளிய வருணனைச் சொற்களைக் கலந்து பேசுவர்<br>தெளிவாகப் பொருள் விளங்க ஒப்பிப்பர்.<br>கதைகள், பாடல்களைத் தங்கள் சொந்த நடையில், தாம் விரும்பும் வகையில் தம் கருத்துகளையும் இணைத்துச் சொல்வர்.<br>விடுகதைகளுக்கு விடை கூறுவர்.<br>பல்வேறு படைப்புகளின் தலைப்புகள், சூழல், கதைமாந்தர்கள் குறித்துப் பேசுதல், தனிப்பட்ட கருத்துகளை வெளிப்படுத்துவர்.<br>எளிய வகுப்பறைக் கருத்தாடல், கலந்துரையாடலில் பங்கேற்பர்.<br>தேசிய மாநில அளவிலான, சமூக, உணர்வுபூர்வமான செய்திகளை இனங்கண்டு அவற்றின்மீது கருத்தாடல் செய்வர். | சிறு சிறு உரைப்பகுதிகளை நிறுத்தக்குறிகளுக்கு ஏற்பப் படிப்பர்.<br>சிறு சிறு கதைகள், பாடல்களை உரிய ஒலிப்புடன் பொருள் விளங்கப் படிப்பர்.<br>படிக்கும் பகுதியில் இடம்பெறும் பழமொழிகள், மரபுச் சொற்களை அறிவர்.<br>செய்தித்தாள்கள், சுவரொட்டிகள், அறிவிப்புகள், விளம்பரங்கள் ஆகியவற்றைப் படித்துப் புரிந்துகொள்வர்.<br>படித்து உணர்ந்தவற்றோடு தங்கள் அனுபவங்களையும் தொடர்புபடுத்துவர்.<br>உரைப்பகுதிகளைப் படித்து வினாக்களுக்கு விடையளிப்பர்.<br>தாங்கள் விரும்பும் நூல்களைத் தெரிந்தெடுத்துப் படிக்க ஆர்வம் கொள்வர்.<br>ஒரே பொருண்மையுள்ள பல்வேறு சொற்களுக்கு இடையிலான நுட்பமான வேறுபாடுகளை அறிந்து பயன்படுத்துவர். | உரைப்பகுதியை உரிய நிறுத்தக்குறிகளுடன் எழுதுவர்.<br>எளிய வருணனைச் சொற்களைப் பயன்படுத்திச் சிறுசிறு உரைப் பகுதிகளைத் தமக்கான நடையில் எழுதுவர்.<br>பொருத்தமான நிறுத்தக் குறிகளைப் பயன்படுத்தி எழுதுவர்<br>திருக்குறள், செய்யுள் பகுதிகளை அடி பிறழாமல் எழுதுவர்.<br>பல்வேறு நோக்கங்களுக்கேற்ப / சூழல்களுக்கேற்ப எழுதுவர்<br>உறவு முறைக் கடிதம் சிறுசிறு கட்டுரைகள் புதிய பொருண்மைகளை உணர்ந்து தம் சொற்களில் (பேச்சில் / எழுத்தில்) பயன்படுத்துவர்.<br>கற்பனையாகக் கதை எழுதுவர்.<br>எழுதியவற்றைத் தாமே மதிப்பீடு செய்வர். |

| நடைமுறை இலக்கணமறிந்து பேச்சிலும் எழுத்திலும் பயன்படுத்துவர் | விழுமியங்களை உணர்ந்து பின்பற்றும் திறன் | வாழ்வியல் திறன்களை உணர்ந்தறிந்து செயல்படுவர் |
|---|---|---|
| ஐம்பால் வகையறிவர் – (ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் ).<br>உரிய இணைப்புச் சொற்களைப் பொருத்தமான இடங்களில் சேர்த்து எழுதுவர். (ஆனால், எனவே…..).<br>காலம் அறிவர் (இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம்) எழுவாய்,<br>பயனிலை அறிமுகம்<br>பெயர்ப்பயனிலை,<br>வினைப் பயனிலை,<br>வினாப் பயனிலை.<br>குழந்தைகளுக்கான எளிய அகரமுதலிகளைப் பயன்படுத்த அறிவர்.<br>கணினியில் உரைகள், வசனங்கள், முழக்கத்தொடர்கள் கேட்பர்.<br>தகவல்கள், சொற்பொருள் தேடி அறிவர்<br>கதை நூல்கள் படிப்பர்.<br>கீழ்க்காணும் சொற்களைக் கற்றறிந்து பேச்சிலும் எழுத்திலும் பயன்படுத்துவர்<br>தொழிலாளர், தொழில்சார் பெயர்கள்<br>சிறப்பு வாய்ந்த நகரங்கள், ஊர்களின் பெயர்கள்<br>இன்றியமையா இடங்களின் பெயர்கள் (இந்திய மாநிலங்கள், தமிழ்நாட்டின் மாவட்டங்கள்)<br>பழமொழிகள்<br>மரபுத் தொடர்கள்<br>கணினி இணையம் சார்ந்த கலைச்சொற்கள்<br>சொற்களஞ்சியப் பெருக்கத்திற்காகப் படித்தல்<br>சிறுவர்களுக்கான கதைகள், பாடல்கள்<br>விளம்பரங்கள் உருவாக்குதல்<br>அறிவிப்புகள், நிகழ்ச்சிநிரல் உருவாக்குதல்<br>குறுந்தகவல்கள், நகைச்சுவைத் துணுக்குகள் உருவாக்குதல்<br>பாடலின் வரிகளை மாற்றிப் பாடுதல்<br>கற்பனைக் கடிதம் எழுதுதல் | காலம் தவிறாமை<br>விதிகளைப் பின்பற்றுதல்<br>தூய்மை பேணுதல்<br>பொருள்களைப் பாதுகாத்தல்<br>பிறர்க்கு உதவுதல்<br>பிற உயிர்களிடத்தில் அன்பு காட்டுதல்<br>கூட்டுணர்வு<br>நட்புணர்வு<br>உண்மை பேசுதல்<br>சேமிப்பு உணர்வு<br>சிக்கனம்<br>நேர்மை<br>நன்றியுணர்வு<br>தன்னம்பிக்கை | தன்னை அறியும் திறன்<br>சிக்கல் தீர்க்கும் திறன்<br>முடிவெடுக்கும் திறன்<br>கூர்சிந்தனைத் திறன்<br>படைப்பாக்கச் சிந்தனைத் திறன்<br>சிறந்த தகவல் தொடர்புத் திறன்<br>இணக்கமான உறவுக்கான திறன்கள்<br>பிறரை அவர் நிலையிலிருந்து புரிந்துகொள்ளும் திறன்<br>உணர்வுகளைக் கையாளும் திறன்<br>மன அழுத்தத்தைக் கையாளும் திறன் |

## தமிழ் – நான்காம் வகுப்பு
## நூல் ஆக்கம்

**கல்வி ஆலோசகர்**

**முனைவர். பொன். குமார்**
இணை இயக்குநர் (பாடத்திட்டம்)
மாநிலக் கல்வியியல் ஆராய்ச்சி மற்றும் பயிற்சி நிறுவனம், சென்னை

**மேலாய்வாளர்கள்**

**திருமதி ஆ.சே.பத்மாவதி**,எழுத்தாளர், சென்னை.

**திருமதி பா. மலர்விழி**, விரிவுரையாளர், மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம், திருவூர், திருவள்ளூர்.

**திரு சி. பன்னீர்செல்வம்**, கல்வி மாவட்ட ஒருங்கிணைப்பாளர், ஒருங்கிணைந்த கல்வி, புதுக்கோட்டை.

**திரு இல. சீனிவாசன்**, முதுகலை ஆசிரியர், மஜ்ஹருல் உலூம் மேனிலைப்பள்ளி, ஆம்பூர், வேலூர் மாவட்டம்.

**ஒருங்கிணைப்பாளர்கள்**

**முனைவர். கா.சா. மொழியரசி**, முதல்வர், மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம், கீழப்பழுவூர், அரியலூர்.

**திரு ந. இராமலிங்கம்**, உதவிப் பேராசிரியர், மாநிலக் கல்வியியல் ஆராய்ச்சி மற்றும் பயிற்சி நிறுவனம், சென்னை

**தே.விமலா தேவி**, விரிவுரையாளர், மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம், சென்னை

**கலை மற்றும் வடிவமைப்புக்குழு**

**பக்க வடிவமைப்பு**

சந்தோஷ்குமார் சக்திவேல்

**வரைபடம்**

**கா. தனஸ் தீபக் ராஜன்**
**கா. நலன் நான்சி ராஜன்**
**ரா.ஷாலினி**
**வை.மை.பிராங்க் டஃப்**
**மதன் கங்காதரன்**
**பா. ரவிகுமார்**
**வேல்முருகன்**
**பா. பிரமோத்**
**செ. ரமேஷ்குமார்.**

**தரக்கட்டுப்பாடு**

**ராஜேஷ் தங்கப்பன், காமாட்சிபாலன் ஆறுமுகம்**
**கி. ஜெரால்டு வில்சன், அருண் காமராஜ் ப**
**பிரசாந்த் பெருமாள்சாமி**

**பாடநூல் உருவாக்கக் குழு**

**திருமதி அர. அனுசுயா தேவி**, இடைநிலை ஆசிரியை, ஊ. ஒ. தொ. பள்ளி, சாலையாம்பாளையம், கோலியனூர் ஒன்றியம், விழுப்புரம் மாவட்டம்.

**திருமதி பெ. முருகராணி**, இடைநிலை ஆசிரியை, ஊ. ஒ. தொ. பள்ளி, மருவத்தூர், வேப்பூர் ஒன்றியம் பெரம்பலூர் மாவட்டம்.

**திருமதி க. மல்லிகா**, தலைமை ஆசிரியை, ஊ. ஒ. தொ. பள்ளி, அயன்புத்தூர், திருவெறும்பூர், திருச்சி மாவட்டம்

**திரு. பா.ச. குப்பன்**, இடைநிலை ஆசிரியர், ஊ. ஒ. தொ. பள்ளி, அய்யன்தாங்கல், காவேரிப்பாக்கம் ஒன்றியம், வேலூர் மாவட்டம்.

**திரு. ஆ. மாணிக்கம்**, இடைநிலை ஆசிரியர், ஊ. ஒ. தொ. பள்ளி, ஆலங்குடி, அறந்தாங்கி ஒன்றியம், புதுக்கோட்டை.

**திருமதி. ந. பரிமளா**, தலைமை ஆசிரியர், அம்பத்தூர் நகராட்சித் தொடக்கப் பள்ளி ,வரதராஜபுரம் , வில்லிவாக்கம் ஒன்றியம், திருவள்ளூர் மாவட்டம்

**திரு. வெ. பாலமுருகன்**, பட்டதாரி ஆசிரியர், அரசு மேல்நிலைப்பள்ளி, ஆரம்பாக்கம், திருவள்ளூர் மாவட்டம்.

**திரு. ந. மாமலைவாசன்**, பட்டதாரி ஆசிரியர், அரசு மேல்நிலைப் பள்ளி, இராயபுரம், திருவாரூர் மாவட்டம்.

**திரு. வெ. ராஜா**, இடைநிலை ஆசிரியர், ஊ. ஒ. ந.நி. பள்ளி இராக்கியாம்பட்டி, கொங்கணாபுரம், சேலம்.

**திருமதி. பி. கற்பகம்** இடைநிலை ஆசிரியர், ஊ. ஒ. தொ. பள்ளி, ஐயப்பா நகர், வில்லிவாக்கம், திருவள்ளூர் மாவட்டம்

**திரு. கு. மனத்துணைநாதன்**, இடைநிலை ஆசிரியர், ஊ. ஒ. தொ. பள்ளி, கீழ்வேளூர், நாகப்பட்டினம்.

**திரு. பெ. கார்த்திகேயன்**, இடைநிலை ஆசிரியர் ஊ. ஒ. தொ. பள்ளி, சிங்கிலியன் கோம்பை, நாமகிரிப் பேட்டை ஒன்றியம், நாமக்கல் மாவட்டம்

**விரைவுக்குறியீடு மேலாண்மைக்குழு**

**இரா. ஜெகநாதன்**, இ.நி.ஆ, ஊ.ஒ.ந.நி.பள்ளி, கணேசபுரம், போளூர், திருவண்ணாமலை.

**ஆ.தேவி ஜெஸிந்தா**, ப.ஆ, அ.உ.நி.பள்ளி, என்.எம்.கோவில், வேலூர்

**வ. பத்மாவதி**, ப.ஆ, அ.உ.நி. பள்ளி, வெற்றியூர், திருமானூர், அரியலூர்.

**அட்டை வடிவமைப்பு**
**கதிர் ஆறுமுகம்**

**வடிவமைப்பு ஒருங்கிணைப்பாளர்**
**ரமேஷ் முனிசாமி**

இந்நூல் 80 ஜி.எஸ்.எம் அழகிய மேப்லித்தோ தாளில் அச்சிடப்பட்டுள்ளது.
ஆப்செட் முறையில் அச்சிட்டோர்:

## முகவுரை

குழந்தைகளின் உலகம் வண்ணமயமானது! விந்தைகள் பல நிறைந்தது!! அவர்களின் கற்பனைத்திறன் கானுயிர்களையும் நட்புடன் நடை பயில வைத்திடும். புதியன விரும்பும் அவர்தம் உற்சாக உள்ளம் அஃறிணைப் பொருள்களையும் அழகுதமிழ் பேசிடச் செய்திடும்.

அப்புதிய உலகில் குழந்தைகளோடு பயணம் செய்வது மகிழ்ச்சியும் நெகிழ்ச்சியும் நிறைந்தது.

தமிழ்க் குழந்தைகளின் பிஞ்சுக்கரங்கள் பற்றி, இப்புதிய பாடநூல்களின் துணைகொண்டு கீழ்க்கண்ட நோக்கங்களை அடைந்திடப் பெருமுயற்சி செய்துள்ளோம்.

- கற்றலை மனனத்தின் திசையில் இருந்து மாற்றி படைப்பின் பாதையில் பயணிக்க வைத்தல்.
- தமிழர்தம் தொன்மை, வரலாறு, பண்பாடு மற்றும் கலை, இலக்கியம் குறித்த பெருமித உணர்வை மாணவர்கள் பெறுதல்.
- தன்னம்பிக்கையுடன் அறிவியல் தொழில்நுட்பம் கைக்கொண்டு மாணவர்கள் நவீன உலகில் வெற்றிநடை பயில்வதை உறுதிசெய்தல்.
- அறிவுத்தேடலை வெறும் ஏட்டறிவாய்க் குறைத்து மதிப்பிடாமல் அறிவுச் சாளரமாய்ப் புத்தகங்கள் விரிந்து பரவி வழிகாட்டுதல்.

பாடநூலின் புதுமையான வடிவமைப்பு, ஆழமான பொருள் மற்றும் குழந்தைகளின் உளவியல் சார்ந்த அணுகுமுறை எனப் புதுமைகள் பல தாங்கி உங்களுடைய கரங்களில் இப்புதிய பாடநூல் தவழும்பொழுது, பெருமிதம் ததும்ப ஒரு புதிய உலகத்துக்குள் நீங்கள் நுழைவீர்கள் என்று உறுதியாக நம்புகிறோம்.

# நாட்டுப்பண்

ஜன கண மன அதிநாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
திராவிட உத்கல பங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா.
தவ சுப நாமே ஜாகே
தவ சுப ஆசிஸ மாகே
காஹே தவ ஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா
ஜய ஹே ஜய ஹே ஜய ஹே
ஜய ஜய ஜய ஜய ஹே!

– மகாகவி இரவீந்திரநாத தாகூர்.

---

# நாட்டுப்பண் - பொருள்

இந்தியத் தாயே! மக்களின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற நீயே எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செய்கிறாய்.

நின் திருப்பெயர் பஞ்சாபையும், சிந்துவையும், கூர்ச்சரத்தையும், மராட்டியத்தையும், திராவிடத்தையும், ஒடிசாவையும், வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சி அடையச் செய்கிறது.

நின் திருப்பெயர் விந்திய, இமயமலைத் தொடர்களில் எதிரொலிக்கிறது; யமுனை, கங்கை ஆறுகளின் இன்னொலியில் ஒன்றுகிறது; இந்தியக் கடலலைகளால் வணங்கப்படுகிறது.

அவை நின்னருளை வேண்டுகின்றன; நின் புகழைப் பரவுகின்றன.

இந்தியாவின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற தாயே!

உனக்கு வெற்றி! வெற்றி! வெற்றி!



# தமிழ்த்தாய் வாழ்த்து

நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரதக் கண்டமிதில்
தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநல் திருநாடும்
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே!
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே!
தமிழணங்கே!
உன் சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே!
வாழ்த்துதுமே!
வாழ்த்துதுமே!

– 'மனோன்மணியம்' பெ. சுந்தரனார்.



## தமிழ்த்தாய் வாழ்த்து – பொருள்

ஒலி எழுப்பும் நீர் நிறைந்த கடலெனும் ஆடையுடுத்திய நிலமெனும் பெண்ணுக்கு, அழகு மிளிரும் சிறப்பு நிறைந்த முகமாகத் திகழ்கிறது பரதக்கண்டம். அக்கண்டத்தில், தென்னாடும் அதில் சிறந்த திராவிடர்களின் நல்ல திருநாடும், பொருத்தமான பிறை போன்ற நெற்றியாகவும், அதிலிட்ட மணம் வீசும் திலகமாகவும் இருக்கின்றன.

அந்தத் திலகத்தில் இருந்து வரும் வாசனைபோல, அனைத்துலகமும் இன்பம் பெறும் வகையில் எல்லாத் திசையிலும் புகழ் மணக்கும்படி (புகழ் பெற்று) இருக்கின்ற பெருமைமிக்க தமிழ்ப் பெண்ணே! தமிழ்ப் பெண்ணே! என்றும் இளமையாக இருக்கின்ற உன் சிறப்பான திறமையை வியந்து உன் வயப்பட்டு எங்கள் செயல்களை மறந்து உன்னை வாழ்த்துவோமே! வாழ்த்துவோமே! வாழ்த்துவோமே!



# தேசிய ஒருமைப்பாட்டு உறுதிமொழி

'நாட்டின் உரிமை வாழ்வையும் ஒருமைப்பாட்டையும் பேணிக்காத்து வலுப்படுத்தச் செயற்படுவேன்' என்று உளமார நான் உறுதி கூறுகிறேன்.

'ஒருபோதும் வன்முறையை நாடேன் என்றும், சமயம், மொழி, வட்டாரம் முதலியவை காரணமாக எழும் வேறுபாடுகளுக்கும் பூசல்களுக்கும் ஏனைய அரசியல் பொருளாதாரக் குறைபாடுகளுக்கும் அமைதி நெறியிலும் அரசியல் அமைப்பின் வழியிலும் நின்று தீர்வு காண்பேன்' என்றும் நான் மேலும் உறுதியளிக்கிறேன்.



# உறுதிமொழி

இந்தியா எனது நாடு. இந்தியர் அனைவரும் என் உடன் பிறந்தவர்கள். என் நாட்டை நான் பெரிதும் நேசிக்கிறேன். இந்நாட்டின் பழம்பெருமைக்காகவும் பன்முக மரபுச் சிறப்புக்காகவும் நான் பெருமிதம் அடைகிறேன். இந்நாட்டின் பெருமைக்குத் தகுந்து விளங்கிட என்றும் பாடுபடுவேன்.

என்னுடைய பெற்றோர், ஆசிரியர்கள், எனக்கு வயதில் மூத்தோர் அனைவரையும் மதிப்பேன்; எல்லாரிடமும் அன்பும் மரியாதையும் காட்டுவேன்.

என் நாட்டிற்கும் என் மக்களுக்கும் உழைத்திட முனைந்து நிற்பேன். அவர்கள் நலமும் வளமும் பெறுவதிலேதான் என்றும் மகிழ்ச்சி காண்பேன்.

**அழகிய தமிழில் அறிவுக்கருவூலம்; அடிப்படைத் திறன்களின் வளர்நிலைப் பெட்டகம்; உயர்தொடக்க நிலைக்கு உதவும் கற்றல் ஏணியாய் இப்பாடநூல்**



**கற்றல் நோக்கங்கள்**
பாடப்பொருள் சார்ந்த குறிக்கோள்கள்



**கற்பவை கற்றபின்**
பாடப்பகுதிக்கு வலிமை சேர்க்கும் செயல்பாடுகள்



**மதிப்பீடு**
கற்றல் அடைவை அளவிடும் கருவி



**சிந்தனை வினா**
பாடப்பொருள்சார்ந்த விரிவான பார்வை



**மொழியை ஆள்வோம்**
மொழித்திறனை மேம்படுத்தும் செயல்பாடுகள்



**மொழியோடு விளையாடு**
ஆர்வமூட்டும் மொழி விளையாட்டுகள்



**நிற்க அதற்குத் தக**
கற்றுக்கொண்டதன் வெளிப்பாடு



**செயல் திட்டம்**
கற்ற கல்வியை வாழ்க்கையோடு தொடர்புபடுத்தும் செயல்கள்

# பொருளடக்கம்



| VUBA16 | AFRMTP | B329_5_TAMIL_LANG |
|---|---|---|
| மின்னூல் | மதிப்பீடு | இணைய வளங்கள் |

பாடநூலில் உள்ள விரைவுக் குறியீட்டைப் (QR Code) பயன்படுத்துவோம்!

- உங்கள் திறன் பேசியில் கூகுள் playstore கொண்டு DIKSHA செயலியை பதிவிறக்கம் செய்து நிறுவிக்கொள்க.
- செயலியை திறந்தவுடன், ஸ்கேன் செய்யும் பொத்தானை அழுத்தி பாடநூலில் உள்ள விரைவு குறியீடுகளை ஸ்கேன் செய்யவும்.
- திரையில் தோன்றும் கேமராவை பாடநூலின் QR Code அருகில் கொண்டு செல்லவும்.
- ஸ்கேன் செய்வதன் மூலம். அந்த QR Code உடன் இணைக்கப்பட்டுள்ள மின் பாட பகுதிகளை பயன்படுத்தலாம்.

QR GUIDE

குறிப்பு: இணையச்செயல்பாடுகள் மற்றும் இணைய வளங்களுக்கான QR code களை Scan செய்ய DIKSHA அல்லாத ஏதேனும் ஒரு QR code Scanner பயன்படுத்தவும்.

இயல்
ஒன்று

மொழி

## கற்றல் நோக்கங்கள்

- செய்யுளைப் பிழையின்றிச் சரியான ஒலிப்புடன் படித்தல்.
- தன் கருத்தைக் கவிதை மூலம் வெளிப்படுத்த முயலுதல்.
- இரண்டு கருத்துகளை ஒப்பிட்டும் வேறுபடுத்தியும் பேசும் திறன் பெறுதல்
- மரபு என்பதன் பொருளை உணர்ந்து போற்றுதல்.
- மரபின் பல்வேறு வகைகளை அறிந்து பயன்படுத்துதல்

723KLE

பாடல்

# தமிழின் இனிமை!

கனியிடை ஏறிய சுளையும் – முற்றல்

கழையிடை ஏறிய சாறும்

பனிமலர் ஏறிய தேனும் – காய்ச்சும்

பாகிடை ஏறிய சுவையும்

நனிபசு பொழியும் பாலும் – தென்னை

நல்கிய குளிரிள நீரும்

இனியன என்பேன் எனினும் – தமிழை

என்னுயிர் என்பேன் கண்டீர்!

– புரட்சிக்கவிஞர் பாரதிதாசன்

## சொல்பொருள்

| | | | |
|---|---|---|---|
| கனி – | பழம் | கழை – | கரும்பு |
| நனி – | மிகுதி | நல்கிய– | வழங்கிய |

## பாடல் பொருள்

கனியின் சுளையில் உள்ள சுவையும், முற்றிய கரும்புச் சாற்றின் சுவையும், மலரிலிருந்து எடுக்கப்பட்ட தேனின் சுவையும், காய்ச்சிய பாகின் சுவையும், சிறந்த பசு தந்த பாலின் சுவையும், தென்னை மரத்திலிருந்து பெறப்பட்ட குளிர்ந்த இளநீரின் சுவையும் இனிமையானவை. ஆனால், தமிழ் இத்தகைய சுவைகளையும்விட உயர்ந்தது. தமிழோ என் உயிர் போன்றது என்கிறார் பாரதிதாசன்.

## ஆசிரியர் குறிப்பு

இப்பாடலைப் பாடியவர் பாரதிதாசன். புதுச்சேரியில் பிறந்த இவர், பாரதியாரின் மீது கொண்ட பற்றினால், கனக சுப்பு ரத்தினம் என்ற தம் இயற்பெயரைப் பாரதிதாசன் என மாற்றி அமைத்துக்கொண்டார். இவர் பாடிய இப்பாடல், பாரதிதாசன் கவிதைகள் என்னும் நூலின் முதல் தொகுப்பில், தமிழின் இனிமை என்னும் தலைப்பில் அமைந்துள்ளது.

## கற்பவை கற்றபின்

- பாடலைச் சரியான உச்சரிப்புடன் படித்துக் காட்டுக.
- பாடலை உரிய ஓசையுடன் பாடுக.
- பாரதிதாசன் தமிழை உயிர் என்கிறார். உங்களுக்குத் தமிழ் எது போன்றது? கலந்துரையாடுக.
- மொழி தொடர்பான பாடல்கள் மற்றும் கவிதைகளைப் படித்து மகிழ்க.

மதிப்பீடு

# படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

**அ. சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுக.**

1. 'கழை' இச்சொல் உணர்த்தும் சரியான பொருள் ____________

அ) கரும்பு ஆ) கறும்பு
இ) கருப்பு ஈ) கறுப்பு

2. கனியிடை இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..............................

அ) கனி + யிடை ஆ) கணி + யிடை
இ) கனி + இடை ஈ) கணி + இடை

3. பனி + மலர் என்பதைச் சேர்த்து எழுதக் கிடைக்கும் சொல் ..............................

அ) பனிம்மலர் ஆ) பனிமலர்
இ) பன்மலர் ஈ) பணிமலர்

**ஆ. கீழ்க்காணும் சொற்களைப் பிரித்து எழுதுக.**

அ) கழையிடை – ---------- + ----------
ஆ) என்னுயிர் – ---------- + ----------

**இ. பெட்டியிலுள்ள சொற்களைப் பொருத்தி மகிழ்க.**

| கரும்பு |
|---|
| வெல்லம் |
| பசு |
| தென்னை |

1. பால் – ______ 2. சாறு – ______
3. இளநீர் – ______ 4. பாகு – ______

**ஈ. இப்பாடலில்வரும்ஒரேஓசையுடையசொற்களைஎடுத்துஎழுதுக** __________

**உ. பாடலில் இரண்டாம் எழுத்து ஒன்றுபோல் உள்ள சொற்களை எடுத்து எழுதுக**

_________ _________

**ஊ. பாடலில் வரும் வருணனைச் சொற்களை எடுத்து எழுதுக.** ______________

**எ. வினாக்களுக்கு விடையளிக்க.**

1. பாரதிதாசன் எவற்றையெல்லாம் இனியன என்று கூறுகிறார்?

2. பாரதிதாசன் எதனை என் உயிர் என்று கூறுகிறார்?

**ஏ. சிந்தனை வினா**

பாரதிதாசன் சிலவற்றை இனியன என்று கூறுகிறார்.
உனக்கு எவையெல்லாம் இனிமையானவை? ஏன்?

இயல் ஒன்று

## கவிதைப் பட்டிமன்றம்

உரைநடை




### கவிதைப் பட்டிமன்றத்துக்கான அறிமுகம்

பேசுதல் என்பது அடிப்படைத்திறன் எனில், பேச்சாற்றல் என்பது உயர்நிலைத் திறன். பேசுதலின் வளர்நிலையே பேச்சாற்றல். அத்தகைய பேச்சாற்றல் திறனை வளர்க்கும் பாடங்களுள் ஒன்று, இக்கவிதைப் பட்டிமன்றம்.

பலர் நிறைந்த அவையினிலே தாம் இயற்றிய கவிதையை வெளியிட்டபோது, பாரதியாருக்கு 11 வயதுதான். ஆதலால், கவி பாடும் திறமையை இளமையிலேயே வளர்த்துக்கொள்வது சாலச் சிறந்தது. இங்கு உரைநடைப் பாடமாக அமைந்துள்ள இப்பகுதி, இலக்கியத்தின் ஒரு வடிவமான கவிதை நடையில் அமைந்துள்ளமை, புதுமையின் நுழைவாயில். கவிதைக்குரிய சொல்லாடல், உவமைச்சிறப்பு, மோனை, எதுகை போன்ற நயங்கள் மேலும் பாடப்பகுதியைச் சிறப்புடையதாக்குகின்றன. மாணவர்கள், குரல் ஏற்றஇறக்கத்தோடும் தங்குதடையின்றியும் வாய்விட்டுப் படிக்கும்போதுதான் இக்கவிதைப் பட்டிமன்றப் பேச்சு, ஆற்றல் வாய்ந்த பேச்சுக்கலையாக மிளிரும். அதற்கான வாய்ப்பை ஆசிரியர்கள் ஏற்படுத்தித் தரவேண்டும்.

இடம் : பள்ளிவளாகம் காலம் : பிற்பகல் 3. 00 மணி

உறுப்பினர்கள் : நடுவராகச் சிறப்பு விருந்தினர், ஐந்தாம் வகுப்பு மாணவர்கள் இன்சுவை, அருளப்பன், மதியொளி, சலீமா.

## அறிவா? பண்பா?

நடுவர் : செந்தமிழே ! நறுந்தேனே !
செகம் போற்றும் செம்மொழியே !
முத்தமிழ் சொல்லெடுத்து
நற்றமிழ்ப் பட்டி மண்டபத்தின்
நடுவராக நான் வந்துள்ளேன்.
வணக்கம்
தித்திக்கும் தேன்தமிழில்
எத்திக்கும் புகழ்பரப்பும்
வித்தகக் கவிதையால்,
பெரிதும் தேவை அறிவா? பண்பா?
எனக் கவிதை வாசிக்க வருகின்றனர்
பாராட்டுக்குரிய நால்வர்,
தனித்துவமிக்க இன்சுவை,
சொல்லழகி சலீமா
அருமையான அருளப்பன்
ஒப்பற்ற மதியொளி.....
முதல் கவிதை முத்தாய்ப் பாட
இனிதே அழைக்கின்றேன் இன்சுவையை......

இன்சுவை : புவி காக்கும் தமிழ்த் தாய்க்கும்
கவியரங்கத் தலைமைக்கும்
ஆன்றோருக்கும் சான்றோருக்கும்
அறிவுதான் முன்னேற்றத்தின்
ஆணிவேர் என்றே
அடித்துக் கூற வந்துள்ளேன்
'அக்னி' தந்த அப்துல்கலாம்
அசத்தியதும் அறிவாலே! அறிவாலே!
அறிவின் துணை கொண்டே
ஆயிரம் கண்டுபிடிப்பால் தாமஸ்
ஆல்வா எடிசனும் வாழ்கின்றார் அறிவாலே!
அறிவுமிகு மனிதனாக
அகிலத்தில் உயர்ந்து நின்றால்
அத்தனையும் நம் கையில்
என்று கூறி விடை பெறுகின்றேன்........

விவசாயி தன் விளைச்சலைப் பாழாக்கும் விலங்கைப் பிடிக்க முடிவு செய்கிறான். .

அடுத்த நாள் வழக்கம் போல் மான் நரியோடு அந்த வயலுக்குச் சென்று பயிரை மேய்கிறது. அந்த நேரத்தில் விவசாயி வருவதைப் பார்த்தவுடன், தப்பிக்க நினைத்த மான், வேகமாக ஓடும்போது அருகிலிருந்த கம்பிவேலியில் எதிர்பாராமல் சிக்கிக் கொள்கிறது.

இதையறிந்த நரி, எதிர்பார்த்துக் கொண்டிருந்த வாய்ப்பு வந்துவிட்டதை நினைத்து மகிழ்ந்தது. மானை அப்படியே தவிக்க விட்டுவிட்டு ஓடிப்போய் அருகிலுள்ள கரும்பு வயலில் மறைந்து கொண்டு நடக்க இருப்பதைக் கவனித்துக் கொண்டிருந்தது.

**காகம்** : நண்பா.... நண்பா.... எங்கே இருக்கிறாய்?

காகம் தேடி வருகிறது

என் ஆருயிர் நண்பா ! இங்கேயா இருக்கிறாய்? ஆ! வேலியில் மாட்டிக்கொண்டாயே கத்துவதற்குக்கூட முடியாத நிலையில் இப்படி கம்பிவேலியில் சிக்கிக் கொண்டாயே......

சரி, சரி நீ தப்பித்துக் கொள்ள ஒரு யோசனை சொல்கிறேன். விவசாயி அருகில் வரும்வரை நீ இறந்ததுபோல் அசையாமல் இரு விவசாயி உன்னை வேலியிலிருந்து விடுவித்தவுடன், நான் மரத்திலிருந்து கா கா கா என்று குரல் கொடுக்கிறேன், உடனே தப்பித்து விடு.





**விவசாயி** : ஓ..... மானா? நீ தான் இத்தனை நாளாக என் பயிரை நாசப் படுத்தினாயா? இன்று வேலியில் மாட்டிக்கொண்டாய் என்று கூறியவாறே மானைப் பிடிக்க வருகிறான். ஓ.. இறந்துவிட்டதுபோல் இருக்கிறதே! சரி, வேலியிலிருந்து மானை விடுவித்து வீட்டிற்கு எடுத்துச் செல்வோம் என்று சொல்லிக்கொண்டே வேலியிலிருந்து மானை விடுவிக்கிறான்.

அப்போது,. காகம் கரைகிறது, அதுவரை இறந்தவாறு நடித்துக்கொண்டிருந்த மான் கண்ணிமைக்கும் நேரத்தில் உயிர் பிழைத்தால் போதும் எனத் துள்ளிப் பாய்ந்து வேகமாக ஓடியது.

**விவசாயி** : அடடே.......மான் என்னை ஏமாற்றிவிட்டதே!

தன் நீண்ட தடியை எடுத்து, ஓடும் மானை நோக்கி வேகமாக வீசுகிறான். அந்தத் தடி பதுங்கியிருந்த நரியின்மேல் பட்டு, நரி மயங்கிக் கீழே விழுகிறது. விவசாயி ஏமாந்து போகிறான்.

சிறிது நேரத்திற்குப் பின் மயக்கம் தெளிந்து எழுந்த நரியிடம்,

**காகம்** : நரியே ! உன் வஞ்சக எண்ணம் உனக்கே கேடாக முடிந்தது. நம்பினவர்களுக்கு என்றும் துரோகம் செய்யாதே !

**நரி** : வெட்கித் தலைகுனிந்தவாறே மன்னித்துவிடு நண்பா! இனிமேல் இப்படி நடந்து கொள்ளமாட்டேன்.



**காகம்** : தன்னைப் போல் பிறரையும் நேசிக்க வேண்டும். நண்பர்களோடு உண்மை அன்புடன் பழக வேண்டும்.

**நீதி : 'ஆபத்தில் உதவுபவனே உண்மையான நண்பன்'**

## கற்பவை கற்றபின்

- ஆபத்தில் உதவுபவர்களே உண்மையான நண்பர்கள் என்னும் தலைப்பில் பேசுக.
- தீயோருடன் கொள்ளும் நட்பு, தீமையையே தரும் என்பதற்கு வேறொரு கதையைக் கூறுக.

## மதிப்பீடு

### வினாக்களுக்கு விடையளிக்க.

1. நரி, காகத்திடமிருந்து ஏன் மானைப் பிரிக்க எண்ணியது?
2. நரியை நண்பனாக ஏற்றுக்கொண்ட மானிடம் காகம் கூறியதென்ன?
3. நரி, மானை எங்கு அழைத்துச் சென்றது?
4. வேலியில் மாட்டிக்கொண்ட மானைக் காகம் எவ்வாறு காப்பாற்றியது?
5. 'தப்பிப் பிழைத்த மான்' கதையிலிருந்து நீங்கள் அறிந்துகொண்ட நீதி யாது?

### சிந்தனை வினா

நமக்கு நண்பர்களாக இருப்பவர்களிடம் என்னென்ன நற்குணங்கள் இருக்கவேண்டும்? பட்டியலிடுக.

# கற்கண்டு

## சொற்றொடர் அமைப்பு முறை

### எழுவாய்

ஒரு தொடரில், யார், எது, எவை, யாவர் என்னும் வினாக்களுக்கு விடையாக வரும் சொல்லே எழுவாய் (எழுவாய் எப்போதும் பெயர்ச்சொல்லாகவே இருக்கும்)

எடுத்துக்காட்டு : **தென்றல்** நடனம் ஆடினாள்

### செயப்படுபொருள்

ஒரு தொடரில் யாரை, எதனை, எவற்றை என்னும் வினாக்களுக்கு விடையாக வரும் சொல்லே செயப்படுபொருள்

எடுத்துக்காட்டு : தென்றல் **நடனம்** ஆடினாள்

### பயனிலை

ஒரு தொடரில் அமைந்துள்ள வினைமுற்றையே பயனிலை என்கிறோம்.

எடுத்துக்காட்டு : தென்றல் நடனம் **ஆடினாள்**
ஆடினாள் – என்பது வினைமுற்று

- எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் ஆகிய மூன்றும் ஒரு தொடரில் இடம் பெற்றிருக்கும்.
- எழுவாயோ, செயப்படுபொருளோ இல்லாமலும் தொடர் அமையும்.

  எ.கா. நடனம் ஆடினாள் – இத்தொடரில் எழுவாய் இல்லை.
- தென்றல் ஆடினாள் – இத்தொடரில் செயப்படுபொருள் இல்லை
- ஒரு தொடர் எழுவாய் அல்லது செயப்படுபொருள் இல்லாமல் அமையலாம். ஆனால், பயனிலை கட்டாயம் இடம்பெற்றிருக்கும்.

## கற்பவை கற்றபின்

- தொடரின் அமைப்பு முறையை அறிந்து கூறுக.
- எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் ஆகிய மூன்றும் தொடரில் சில இடங்களில் வருவதையும், அவை வராமல் தொடர் அமைவதையும் குறித்துக் கலந்துரையாடுக.

மதிப்பீடு

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

**அ. சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுக.**

1. எழுவாய் எப்போதும் __________ லாகவே இருக்கும்.

அ) வினைச்சொல் ஆ) இடைச்சொல்
இ) பெயர்ச்சொல் ஈ) உரிச்சொல்

2. பாடல் பாடினாள் – இத்தொடரில் __________ இல்லை.

அ) எழுவாய் ஆ) பயனிலை
இ) செயப்படுபொருள் ஈ) சொல்

3. அமுதன் ஓடினான் – இத்தொடரில் __________ உண்டு

அ) பயனிலை ஆ) செயப்படுபொருள்
இ) இடைச்சொல் ஈ) உரிச்சொல்

**ஆ. எழுவாய், செயப்படுபொருள், பயனிலைகளை எடுத்து எழுதுக.**

1. மாதவி சித்திரம் தீட்டினாள்
2. இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தை இயற்றினார்.
3. அன்பழகன் மிதிவண்டி ஓட்டினான்
4. கிளி பழம் தின்றது.

| வ.எண் | எழுவாய் (யார், எது, எவை, யாவர்) | செயப்படுபொருள் (யாரை, எதனை, எவற்றை) | பயனிலை (முடிந்த செயல்) |
|---|---|---|---|
| 1. | | | |
| 2. | | | |
| 3. | | | |
| 4. | | | |

**இ. எழுவாய், பயனிலை மட்டும் உள்ள தொடர்கள் மூன்று எழுதுக.**

1. __________ 2. __________ 3. __________

**ஈ) பயனிலை, செயப்படுபொருள் மட்டும் உள்ள தொடர்கள் மூன்று எழுதுக.**

1. __________
2. __________
3. __________

## மொழியை ஆள்வோம்

### அ. கேட்டல்

- இயற்கை சார்ந்த பாடல்களை வகுப்பறையில் பாடச் செய்து கேட்டு அதுபோலப் பாடி மகிழ்க.
- புதிர்களைத் தொகுத்து வந்து வகுப்பறையில் கூறுக. நண்பன் கூறிய புதிருக்குச் சரியான விடை கூறி மகிழ்க.
- இயற்கையைக் காக்க வேண்டியதன் அவசியம் பற்றிய உரைகளைக் கேட்டு வந்து வகுப்பறையில் பகிர்க.

### ஆ. பேசுதல்

- இயற்கை சார்ந்த பாடல்களைப் பாடி மகிழ்க.
- பழமொழிக் கதைகளை உம் சொந்த நடையில் கூறுக.
- நீ சென்று வந்த சுற்றுலா (அ) ஊர் பற்றி வருணித்துப் பேசுக.
- மழை எவ்வாறு பெய்கிறது? அறிந்து வந்து வகுப்பறையில் பேசுக.
- தென்னை, வாழை, பனை, வேம்பு, முருங்கை ஆகிய மரங்கள் பேசுவது போல நடித்து "நானே அதிகம் பலன் தருவேன்" என ஒவ்வொருவரும் வகுப்பில் பேசிக்காட்டுக.

### இ. படித்தல்

- பழமொழிகளைப் படித்துத் தொகுப்பு தயார் செய்க.
- சிறந்த புதிர்களைப் படித்துச் சேகரித்துத் தொகுப்பு தயார் செய்க.
- புத்தகப் பூங்கொத்துப் பகுதியைப் படித்து, அதில் இடம்பெற்றுள்ள பழமொழி, புதிர்களைத் தொகுத்து வருக.

### ஈ. எழுதுதல்

1. **சொல்லக் கேட்டு எழுதுக.**
    1. மாங்காய் பறித்துத் தருகிறேன்
    2. ஆடிக்காற்றில் அம்மியும் பறக்கும்
    3. பழமொழி ஒன்று சொல்
    4. கண்ணிமைக்கும் நேரம்

2. **சொற்களைத் தொடரில் அமைத்து எழுதுக.**

| | | | |
|---|---|---|---|
| 1. | அமைதியாக __________ | 2. | தருகிறேன் __________ |
| 3. | சிறுவர்கள் __________ | 4. | முழக்கம் __________ |
| 5. | தங்கம் __________ | 6. | விளைவு__________ |

## 3. பொருத்தமான நிறுத்தக் குறியிடுக.

என் உடல் ஏழு நிறங்களால் ஆனது ஊதா கருநீலம் நீலம் பச்சை மஞ்சள் இளஞ்சிவப்பு சிவப்பு என்ற வரிசையில் நிறங்கள் அமைந்திருக்கும் எனது பெயரின் முன்பகுதி என் இருப்பிடம் பின்பகுதி என் வடிவம் என் பெயரைக் கண்டுபிடித்துவிட்டாயா

## 4. பொருத்தமான சொற்களால் நிரப்புக.

(உறுதியாக, சொத்தையாக, பல்வலி, பல்துலக்க)

மருத்துவர் : விமலா உன் உடம்புக்கு என்ன?

விமலா : எனக்கு ___________ ஐயா,

மருத்துவர் : எங்கே வாயைத் திற, பல்லெல்லாம் ___________ இருக்கிறதே.

விமலா : அதற்கு நான் என்ன செய்ய வேண்டும் ஐயா?

மருத்துவர் : இனிப்புகளை அதிகமாகச் சாப்பிடக்கூடாது. தினமும் இருமுறை காலையிலும், இரவிலும் ___________ வேண்டும். அப்பொழுதுதான் பற்கள் ___________ இருக்கும்.

விமலா : நீங்கள் சொன்னதை நான் பின்பற்றுகிறேன் ஐயா.

## 5. கதையை நிறைவு செய்க.

ஒரு நாள் அந்த நாட்டின் அரசர் குதிரையின் மேல் வலம் வந்து கொண்டிருந்தார். வயதான மனிதர் ஒருவர், தம்முடைய தள்ளாத வயதிலும் சாலையின் ஓரங்களில் குழிகளைத் தோண்டி, விதைகளையும் செடிகளையும் நட்டுத் தண்ணீர் ஊற்றியதைப் பார்த்தார். அரசர் அந்த வயதானவர் செய்யும் செயல்களைத் தொடர்ந்து பார்வையிட்டு வந்தார். ஒரு நாள் ……….. ………………………………………

……………………………………………………………………………………………………………

## 6. இணைத்துக் கூறுவோம்

- தொடர்புடைய பல சொற்றொடர்களைத் தனித்தனி அட்டைகளில் எழுதிக் கொள்ளுங்கள்.

  எ.கா. மழையில் நனைந்தேன்.
  சட்டை ஈரமானது.

- அனைவரும் வட்டமாக அமர்ந்து கொள்ளுங்கள்
- ஒவ்வொருவரும் ஓர் அட்டையை எடுத்துக் கொள்ளுங்கள்
- ஒருவர் எழுந்து கையிலுள்ள அட்டையில் எழுதியுள்ளதைப் படியுங்கள்.
- அதனோடு தொடர்புடைய சொற்றொடர் எழுதியுள்ள அட்டையை வைத்துள்ளவர் உடனே எழுந்து படிக்க வேண்டும்.
- மற்றவர்கள் இரண்டு சொற்றொடர்களையும் இணைத்துக் கூற வேண்டும்.

மழையில் நனைந்ததால் சட்டை ஈரமானது.

## 6. விளம்பரத்தைப் படித்துப் புரிந்துகொண்டு விடையளிக்க.



காண வாரீர்! களிக்க வாரீர்!

நாள்தோறும்

**ஜம்போ சர்க்கஸ்**

நேரம்: மாலை 6.00 மணி

இடம்: நேரு விளையாட்டரங்கம்,
விழுப்புரம்







பேசும் கிளி! தீ வளையத்திற்குள் பாயும் புலி! பார் விளையாட்டில் பறக்கும் தேவதைகள்! கூண்டுக்குள் உருண்டோடும் குல்லா மனிதர்! வெள்ளைப் புறாக்களின் எல்லையில்லா ஆட்டம்! கோமாளிக் குள்ளர்களின் கும்மாள விளையாட்டு! குதிரையேறும் கொஞ்சும் மழலைகள்!

வாருங்கள்! வண்ணவொளியில் காணுங்கள்!

### விளம்பரம் படி ! விடையைக் கொடு

1. சர்க்கஸ் நடைபெறும் இடம் எது?

2. விளையாடுபவர்கள் யார்?

3. குதிரையேறுபவர்கள் யார்?

4. சர்க்கஸ் நடைபெறும் அரங்கத்தின் பெயர் என்ன?

5. சர்க்கஸின் பெயர் என்ன?

## 9. பத்தியைப் படித்து வினாக்களுக்கு விடையளிக்க

ஒரு நாள் மாலை முத்துவின் வீட்டிற்கு அவனுடைய நண்பர்களான கென்னடியும் அன்வரும் விளையாட வந்தனர். பிறந்து சில நாள்களே ஆன நான்கு நாய்க் குட்டிகளைத் தோட்டத்தில் கண்டனர். நாய்க் குட்டிகளைத் தங்கள் வீட்டிற்குக் கொண்டு செல்ல விரும்பினர். இருவரும் ஆளுக்கொரு நாய்க் குட்டியைத் தூக்கிக் கொண்டனர். முத்து அவர்களிடம், "நண்பர்களே, பால் குடிக்கும் இந்தக் குட்டிகளைத் தாயிடமிருந்து பிரிக்க வேண்டா. நம்மை நம் பெற்றோரிடமிருந்து யாராவது பிரித்தால் நாம் எவ்வளவு துன்பப்படுவோம், சிந்தித்துப் பாருங்கள்" என்று கூறினான்.

நண்பர்கள் அமைதியாக நாய்க்குட்டிகளைக் கீழே இறக்கி விட்டனர். நாய்க் குட்டிகள் மகிழ்ச்சியாகத் தம் தாயோடு விளையாடுவதை நண்பர்கள் மூவரும் பார்த்து மகிழ்ந்தனர்.

### விடை தருக

1. முத்துவின் தோட்டத்தில் எத்தனை நாய்க்குட்டிகள் இருந்தன?
2. நண்பர்கள் இருவரும் முத்துவின் வீட்டிற்கு எதற்காக வந்தனர்?
3. கென்னடியும் அன்வரும் என்ன செய்ய விரும்பினர்?
4. நண்பர்களுக்கு முத்துவின் அறிவுரை என்ன?
5. நண்பர்கள் நாய்க்குட்டிகளை எடுத்துச் சென்றனரா? ஏன்?



## மொழியோடு விளையாடு

### 1. ஆங்கிலச் சொல்லுக்கு இணையான தமிழ்ச்சொல் எழுதுக.

| | | |
|---|---|---|
| 1. | Seashore | 6. Nature |
| 2. | Morning | 7. Pearl |
| 3. | Field | 8. Farmer |
| 4. | Mango tree | 9. Project |
| 5. | Cyclone | 10. Circus |

### 2. கலங்கரை விளக்கம் – இச்சொல்லிலிருந்து புதிய சொற்களை உருவாக்குக.

எ. கா

1. கலம்__________
2. __________
3. __________
4. __________

3. கண்டுபிடித்து எழுதுக.

1. மணம் மிக்க மலர் __________
2. சிலந்திக்கு எத்தனை கால்கள்? __________
3. பந்தை அடிக்க உதவுவது __________
4. பசுவின் உணவு __________
5. மீன் பிடிக்க உதவும் __________
6. ஒரு தின்பண்டம் __________

| க | டு | டை | ன் | த | பு |
|---|---|---|---|---|---|
| லி | எ | ட் | டு | பா | ல் |
| கா | சு | ம | சொ | ட் | தை |
| வ | ட | ம் | ல் | வ | சி |
| ல் | ர் | த | லை | லி | டை |
| ம் | ப | ப் | அ | கு | கை |

4. ஒரு கதையின் முதல் தொடர் கொடுக்கப்பட்டுள்ளது. நீங்கள் ஒவ்வொருவரும் ஒரு தொடர் கூறிக்கதையை நிறைவு செய்க.

**கதைத் தொடர் : 1**

அன்று காட்டு அரசன் சிங்கத்திற்குப் பிறந்த நாள்

**கதைத் தொடர் : 2**

இன்சுவை பள்ளி செல்லும் வழியில் பணப்பை ஒன்றைக் கண்டெடுத்தாள்.

**கதைத் தொடர் : 3**

கவியரசன் நாய், பூனை போன்ற விலங்குகளைத் துன்புறுத்தி அதில் மகிழ்ச்சியடைவான்.

**கதைத் தொடர் : 4**

நரி ஒன்று கூட்டமாக மேய்ந்து கொண்டிருந்த மான்களைக் கண்டது.

## 5. கடல் வளங்களைக் கண்டுபிடிப்போம்

| ப | மீ | மு | ல் | லை |
|---|---|---|---|---|
| வ | ன் | த் | பா | சி |
| ள | வ | து | ஆ | ப் |
| ம் | லை | சு | மை | பி |
| ச | ங் | கு | அ | லை |

1. சிப்பி__________ 2. ___________ 3. ___________
4. ___________ 5. ___________ 6. ___________

## 6. சரியான சொற்களை எடுத்துப் பொருத்துக

1. வீட்டுக்கு ஒரு ...................... வளர்ப்போம். — மறம் / மரம்
2. உயிர் கொடுப்பான் ...................... — தோழன் / தோலன்
3. நேர்மை எப்போதும் ...................... தரும். — நண்மை / நன்மை
4. கொடுத்து ...................... இன்பம். — மகிழ்வது / மகிள்வது
5. ...................... இருக்கும் இடம் கலகலப்பாக இருக்கும். — குழந்தை / குலந்தை

## 7. பின்வரும் சொற்களைக் கொண்டு சொற்றொடர் உருவாக்கலாமா!

எ. கா: மழை – மரம் வளர்ப்போம்,மழை பெறுவோம்

மலை – உயர்ந்து நிற்பது மலை

கரி – 

கறி – 

தவளை – 

தவலை – 

வழி –

வலி –

அரை –

அறை –

மனம் –

மணம் –

## அறிந்து கொள்வோம்

**கடலைக் குறிக்கும் வேறு பெயர்கள்**

1. புணரி
2. ஆழி
3. சாகரம்
4. சமுத்திரம்
5. பௌவம்
6. வேலை
7. முந்நீர்
8. நீராழி
9. பெருநீர்

## நிற்க அதற்குத் தக

- என்னால் இயன்றவரை இயற்கையைக் காப்பேன்
- எனது வாழ்நாளில் ஒரு மரக்கன்றையாவது நட்டு வளர்ப்பேன்
- எனது சுற்றுப்புறத்தைத் தூய்மையாக வைத்திருப்பேன்

## செயல் திட்டம்



- கடல் படம் வரைந்து கடலின் பயன்களைப் பட்டியலிட்டு வருக.
- உமது பள்ளியில் மரக்கன்றுகளை நட்டு வளர்ப்பதைத் செயல்திட்டமாக மேற்கொள்க. புகைப்படத்துடன் எழுதி வழங்குக.
- பழமொழிகள், புதிர்கள், விடுகதைகள் தொகுப்பு தயார் செய்க.

பாடல்

இயல் நான்கு

அறிவியல்/ தொழில்நுட்பம்

**கற்றல் நோக்கங்கள்**

- அறிவியல் விழிப்புணர்வுப் பாடல்களைக் கேட்டுப் புரிந்துகொள்ளுதல்
- சுற்றுப்புறத்தில் நிகழும் ஒவ்வொரு நிகழ்வுக்கும் அறிவியல் பின்புலம் உள்ளதை அறிந்துகொள்ளுதல்
- அறிவியல் கண்டுபிடிப்புகளையும் கண்டுபிடித்தவர்களையும் தெரிந்துகொள்ளல்
- காரணகாரியங்களை அறிவியல் மனப்பான்மையுடன் அணுகுதல்
- மூவிடப்பெயர்களை அறிந்துகொண்டு, உரிய இடங்களில் பயன்படுத்துதல்



# எதனாலே, எதனாலே?

எதனாலே, எதனாலே?<br>
பலவண்ண வானவில் எதனாலே?<br>
விண்மீன் ஒளிர்வது எதனாலே?<br>
ரோஜாப்பூ சிவப்பது எதனாலே?<br>
இலைகள் உதிர்வது எதனாலே?<br>
மின்மினி மின்னுவது எதனாலே?<br>
பறவைகள் பறப்பது எதனாலே?<br>
மின்னல் மின்னுவது எதனாலே?<br>
மேகம் கறுப்பது எதனாலே?<br>
கடலில் அலைகள் எதனாலே?<br>
அனைத்தின் காரணம் கண்டறிந்தால்<br>
அறிஞனாகலாம் அதனாலே!

L32TG9

## பாடல் பொருள்

ஏன், எதற்கு, எப்படி என்னும் அறிவியல் சிந்தனையைத் தூண்டும் வகையில் இப்பாடல் அமைந்துள்ளது. நம்மைச் சுற்றி நிகழும் மாற்றங்களைக் காரணகாரியங்களுடன் விளக்க முற்படுகிறது.

- வானில் உள்ள நீர்த்துளிகளுள் சூரிய ஒளி ஊடுருவும்போது, நீர்த்துளிகளின் பின்புறமாக எதிரொளிப்பதால் வானவில் தோன்றுகிறது.
- விண்மீன்கள், தங்களிடம் உள்ள ஒன்றிற்கும் மேற்பட்ட ஹைட்ரஜன் அணுக்களை இயற்பியல் நிகழ்வின் உதவியுடன் ஒன்றிணைப்பதன் மூலம் ஒளி வீசுகின்றன.
- ரோஜாப்பூவில் 'ஆந்தோசைனின்' என்ற நிறமி இருப்பதால், சிவந்த நிறத்தில் காணப்படுகின்றது.
- கோடைக்காலங்களில் நீராவிப் போக்கைத் தடுப்பதற்காகத் தாவரங்களிலிருந்து இலைகள் உதிர்கின்றன.
- மின்மினிப் பூச்சிகளின் பின்னால் அடிக்கடி விளக்கு எரிவதைப் போல் மின்னுகின்றன. காரணம், லூசிஃபெரேஸ் என்சைம் மின்மினிப்பூச்சி பின்னால் இருப்பதால் மின்னுகிறது.
- பறவைகள், பறக்கக் காரணம் அவற்றின் எலும்புகளிலும் இறகுகளிலும் காற்றுப் பைகள் உள்ளன. அவை, பறப்பதற்கு உதவுகின்றன.
- மின்னிறக்கத்தால் மின்னல் மின்னுகிறது.
- மேகத்தில் அதிக அளவு நீர் இருப்பதால், சூரிய ஒளி ஊடுருவ முடியாது. ஆதலால், மேகம் கறுப்பாகத் தோன்றுகிறது.
- பூமியின் மீது சந்திரனின் ஈர்ப்பு விசை இருப்பதால், கடலில் அலைகள் தோன்றுகின்றன.

## கற்பவை கற்றபின்

- பாடலைப் புரிந்துகொண்டு பாடுக.
- அறிவியல் சிந்தனையைத் தூண்டும் வினாக்களுக்கு விடை அறிந்துகொள்க.
- பாடலில் உள்ளதுபோல், வேறு சில வினாக்களுக்குரிய விடைகளை அறிய முயல்க.

மதிப்பீடு

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

**அ. பொருத்துக**

1. விண்மீன் – உதிரும்
2. ரோஜாப்பூ – பறக்கும்
3. மேகம் – ஒளிரும்
4. இலை – சிவக்கும்
5. பறவை – கறுத்திருக்கும்

ZNI79S

**ஆ. வினாக்களுக்கு விடையளிக்க.**

1. வானவில் எப்படி தோன்றுகிறது?
2. கடலில் ஏன் அலைகள் உண்டாகின்றன?

**இ. சிந்தனை வினா**

நாம் வாழும் பூமி, சுழன்று கொண்டேயிருக்கிறது. ஆனால், அதில் வாழும் நாம் சுழல்வதில்லை. ஏன்? விடை காண்போமா?

### அறிந்து கொள்வோமா?

### மோட்டார் வண்டி உருவான கதை

தந்தையுடன் சிறுவன் ஒருவன் தெருவில் சென்று கொண்டிருந்தான். எதிரில், ஒரு வண்டி மெதுவாக ஊர்ந்து வந்து கொண்டிருந்தது. அந்த வண்டியை மாடும் இழுக்கவில்லை; குதிரையும் இழுக்கவில்லை. அதைப் பார்த்த சிறுவனுக்கு வியப்பு ஏற்பட்டது. அப்பாவிடம் அதைப் பற்றிக் கூறினான். அதுமட்டுமின்றி, அந்த வண்டியோட்டியிடமும் சென்று வண்டியைப் பற்றிப் பல கேள்விகள் கேட்டான். அந்த வண்டியின் பெயர் ரோடு – என்ஜின் எனவும் அது, நீராவியால் ஓடுகிறது எனவும் அறிந்துகொண்டான். அன்றே அந்தச் சிறுவனுக்கு ஓர் ஆசை உண்டாயிற்று. மனிதர்கள் ஓட்டிச் செல்லக்கூடிய வண்டிகளைச் செய்து, அவை மிக வேகமாக ஓடுமாறு செய்ய வேண்டும் என்று நினைத்தான்.

பெரியவனானதும் ஓர் இயந்திரத் தொழிற்சாலையில் வேலைக்குச் சேர்ந்தான். பகலில் அங்கு வேலை செய்வான். இரவில், வேகமாக ஓடும் வண்டியை எப்படிக் கண்டுபிடிக்கலாம் என்று ஆராய்ச்சி செய்யத் தொடங்கிவிடுவான். பல நாள் செய்த முயற்சி ஒரு நாள் வெற்றி பெற்றது. ஆம். மோட்டார் வண்டி கண்டுபிடிக்கப்பட்டது. அன்று மோட்டார் வண்டியைக் கண்டுபிடிக்க அயராது முயற்சி செய்து வெற்றி கண்ட அந்தச் சிறுவன்தான், அமெரிக்காவைச் சேர்ந்த ஹென்றி போர்ட் என்பவர். தாமே சொந்தமாக மோட்டார் தொழிற்சாலையொன்றை நிறுவி, ஆயிரக்கணக்கான மோட்டார்களை உருவாக்கினார். 'மோட்டார் மன்னன்' என்று உலகமே அவரைப் புகழ்ந்தது. அவருடைய தொழிற்சாலையில் உருவான மோட்டார் கார்கள் உலகப் புகழ் பெற்றன.

இளம்வயதிலிருந்தே புதிதாக ஒன்றை உருவாக்க வேண்டும் என எண்ணும் எண்ணத்தை நாம் வளர்த்துக்கொண்டால், முடியாததனையும் முடித்துக்காட்டலாம். விடாமுயற்சியும் கடின உழைப்பும் நம்மை மென்மேலும் உயர்த்தும்.

உரைநடை

இயல் நான்கு

# அறிவின் திறவுகோல்

முதன்முதலில் அறிவு என்னும் கருவி செயல்படத் தொடங்கிய நாள், மனிதனுக்கு அச்சம் மிகுந்ததாகவே இருந்திருக்கும். தன் அறிவைக் கொண்டு, அவன் சுற்றும் முற்றும் பார்த்தான். காலையில் ஒளிவீசிக் கொண்டிருந்த கதிரவன், திடீரென மாலையில் மறைந்ததும் அவனது அறிவு விழித்துக் கொண்டது. அந்தக் கதிரவன் எங்கே போனான்? இப்படியே இருளாகத்தான் இருக்குமா? என்று அவன் எண்ணிக் கொண்டிருக்க மறுநாள் மீண்டும் கதிரவன் தோன்றினான். அப்போதே மனிதனின் அறிவு வேலை செய்யத் தொடங்கியது. இந்தக் கதிரவன் நேற்றுத் தோன்றிய இடத்திலேயே ஏன் இன்றும் தோன்றுகிறான்? இதுபோன்று அடுக்கடுக்காக அவன் உள்ளத்தில் சிந்தனை தோன்றியது. ஏன்? எதற்கு? எப்படி? என்றெல்லாம் அவன் சிந்திக்கத் தொடங்கியபோதுதான் அறிவியல் வளரத் தொடங்கியது. அவ்வகையில் அறிவியலை வளர்த்த அறிஞர்களைப்பற்றி நாம் அறிந்துகொள்வது மிகவும் தேவை. இப்பாடப்பகுதியில் அறிவால் வளர்ந்த அறிவியல் சிந்தனையாளர்களைப் பற்றித் தெரிந்துகொள்வோம்.

## ஆப்பிளைக் கண்டார்; ஆற்றலைத் தந்தார்



தன் வீட்டுத் தோட்டத்திலுள்ள ஆப்பிள் மரத்தினடியில் சிறுவன் ஒருவன் உட்கார்ந்திருந்தான். அப்போது, மரத்திலிருந்த ஒரு பறவை சிறகடித்துப் பறந்து செல்ல, திடீரென ஆப்பிள் ஒன்று மரத்திலிருந்து கீழே விழுந்தது. நாமாக இருந்தால் என்ன செய்திருப்போம்? "ஆகா, நமக்கு ஓர் ஆப்பிள் கிடைத்ததே" என்று மகிழ்ச்சியோடு உண்ணத் தொடங்கியிருப்போம் அல்லவா? ஆனால், அந்தச் சிறுவன், அப்படி நினைக்கவில்லை. இந்த ஆப்பிள் ஏன் மேலே மேலே வானத்தைநோக்கிப் போகாமல் கீழிறங்கி வந்து விழுகிறது? என்று சிந்திக்கத் தொடங்கிவிட்டான். இதில் ஏதோ ஓர் இயற்கைச் சக்தி இருக்கவேண்டும் என எண்ணினான். இதன் காரணத்தைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று தன் பிறந்தநாளில் முடிவு செய்தான். அன்று தன் பிறந்தநாள் பரிசாக ஆப்பிள் கிடைத்ததை எண்ணி மகிழ்ந்தான். அன்று சிந்திக்கத் தொடங்கிய அந்தச் சிறுவன்தான், புவியீர்ப்புச் சக்தியைக் கண்டுபிடித்துப் பின்னாளில் உலகப்புகழ் பெற்ற சர் ஐசக் நியூட்டன். அவர், பூமிக்கு ஈர்ப்புச் சக்தி உண்டு என்ற உண்மையை உலகுக்கு உணர்த்திய அறிவியலறிஞர் ஆவார்.

## வேடிக்கை பார்த்தார்; வியக்க வைத்தார்



பூங்கா ஒன்றில் சிறுவர்கள் சிலர் விளையாடிக் கொண்டிருந்தனர். அருகில் சிந்தனையுடன் அமர்ந்திருந்தார் மருத்துவர் ஒருவர். சிறுவனொருவன், 'ஸீஸா' என்ற ஒருவகை மரப்பலகையின் மீது ஒரு முனையில் குண்டூசியால் கீறிக்கொண்டிருந்தான்.

பலகையின் மறுமுனையில் தன் காதைப் பொருத்தி, எழும் ஒலியைக் கேட்டுக் கொண்டிருந்தான் மற்றொரு சிறுவன். பலகையின் ஒரு முனையில் குண்டூசியால் மெதுவாகக் கீறும்போது எழுந்த ஒலி, மறுமுனையில் மிகத் தெளிவாகக் கேட்பதைக் கண்டு அந்தச் சிறுவன் வியப்படைந்தான்.

ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்த அந்த மருத்துவர், சிறுவர்களின் செய்கையைக் கண்டார். அவர் உள்ளத்தில் மின்னல்போல் ஓர் ஒளிக்கீற்று தோன்றியது. தாம் விடை தெரியாமல் தவித்த ஒரு வினாவுக்கு இப்போது விடை கிடைத்துவிட்டது. அவர், அந்தச் சிறுவர்களை நோக்கிச் சென்றார். மரம் போன்ற திடப்பொருள்கள் ஒலியைப் பெருக்கும் தன்மையுடையவை. அதனால்தான், ஒரு முனையில் மெதுவாகக் கீறினாலும் மறுமுனையில் தெளிவாகக் கேட்கிறது என அவர்களிடம் விளக்கினார்.

அந்த விளக்கம் சிறுவர்களுக்கு மட்டுமல்ல, அவருக்கும்தாம். ஏனெனில், நோயாளியின் இதயத் துடிப்பை எவ்வாறு துல்லியமாகக் கேட்கமுடியும் என்றுதானே அவர் கவலைப்பட்டார். இப்போது, அவருக்கே விடை காண முடிந்ததல்லவா? உடனே ஓட்டமும்நடையுமாக மருத்துவமனையை அடைந்தார். தாள்களை ஓர் உருளை வடிவமாகச் சுருட்டிக் கொண்டு, நோயாளியை நெருங்கினார். காகித உருளையின் ஒரு முனையை நோயாளியின் மார்பில் வைத்து, மறுமுனையில் தம் காதை வைத்துக் கேட்டார். என்ன வியப்பு! நோயாளியின் இதயத்துடிப்பு இவருக்குத் துல்லியமாகக் கேட்டது. அந்த மணித்துளியில் மருத்துவ உலகம் அதுவரை கண்டிராத மாபெரும் ஒரு முயற்சிக்கு வித்திட்டது. ஆம். ஸ்டெதஸ்கோப் எனப்படும் இதயத்துடிப்பைக் கண்டறியும் கருவி அப்போதுதான் உருவானது. அதைக் கண்டுபிடித்தவர், வேறு யாருமல்லர், அந்தப் பூங்காவில் சிறுவர்களின் விளையாட்டிலிருந்து ஓர் உண்மையைக் கண்டுபிடித்தாரே அந்த மருத்துவர்தாம். அவர் பெயர், இரேனே லென்னக்.

### ஆவியைக் கண்டார்; நீராவி இயந்திரம் தந்தார்



அந்தச் சிறுவனுக்கு வயது பன்னிரண்டு. சமையலறைக்குள் நுழைந்த சிறுவன், தேநீர் தயாரிப்பதற்காகக் கெட்டிலில் நீர் கொதித்துக் கொண்டிருப்பதைக் கண்டான். நீர் நன்றாகக் கொதித்தவுடன் அந்தக் கெட்டிலின் மூக்கு வழியாகக் 'குப் குப்' என்று ஆவி வெளிவருவதைப் பார்த்தான். இந்த ஆவி வெளிவராதபடி கெட்டிலின் மூக்கை அடைத்தால் என்ன நடக்கும் என்று எண்ணினான். உடனே, அந்தப் பாத்திரத்தின் மூக்குப்பகுதியை மூடினான். இப்போது ஆவி வரவில்லை. சிறிதுநேரம் சென்றது. கெட்டிலின் மூடி மெல்ல அசையத் தொடங்கியது. அதனால், சிறிது இடைவெளி ஏற்பட்டது. இப்போது, நீராவி கொப்புளித்துக்கொண்டு வெளியேறியது. அந்தச் சிறுவன் பார்த்துக்கொண்டே நின்றான். மேலும் சிறிதுநேரம் சென்றபின், கெட்டிலின் மூடி மேலெழும்பத் தொடங்கியது. அப்புறம்… அப்புறம் என்ன? மூடியைத் தள்ளிவிட்டு நீராவி வேகமாக வெளிவரத் தொடங்கியது. அந்தச் சிறுவனுக்கு வியப்பு மேலிட்டது. இந்த நீராவியும் புகையும்தான் அந்தச் சிறுவனை நீராவி என்ஜினையும் புகைவண்டியையும் கண்டுபிடிக்கத் தூண்டியது. அந்தச் சிறுவன்தான் ஸ்காட்லாந்து நாட்டில் பிறந்த ஜேம்ஸ் வாட். இவர்தாம் நீராவி இயந்திரம் கண்டுபிடிக்கக் காரணமாக இருந்தார்.

## கற்பவை கற்றபின்

- நம்மைச் சுற்றி நிகழும் மாற்றங்களை உற்றுநோக்கிக் காரணகாரியம் கண்டறிக.
- அறிவியல் அறிஞர்களைப் பற்றிய செய்திகளைத் திரட்டித் தொகுப்பேடு உருவாக்குக.
- 'அறிவுக்கு விருந்தாகும் அறிவியல்' என்னும் தலைப்பில் 5 மணித்துளி பேசுக.
- எளிய கண்டுபிடிப்பு ஒன்றை வகுப்பில் நிகழ்த்திக்காட்டுக.

E9YK3B

## மதிப்பீடு

### படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

**அ. சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுக.**

1. அறிவியலறிஞர் – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ............

அ) அறிவியல் + அறிஞர்    ஆ) அறிவு + அறிஞர்
இ) அறிவியல் + லறிஞர்    ஈ) அறவியல் + அறிஞர்

2. மணித்துளி – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ............

அ) மணித் + துளி    ஆ) மணி + துளி
இ) மண் + துளி    ஈ) மனி + துளி

3. பத்து + இரண்டு – இச்சொற்களைச் சேர்த்து எழுதக் கிடைப்பது ............

அ) பன்னிரெண்டு    ஆ) பன்னொண்டு
இ) பன்னிரண்டு    ஈ) பன்னண்டு

4. **வேகமாக** – இச்சொல்லுக்குரிய பொருள் ..................................................

அ) மெதுவாக  ஆ) விரைவாக  இ) கவனமாக  ஈ) மெலிதாக

5. **மரப்பலகை** – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது..................................................

அ) மரப் + பலகை  ஆ) மர + பலகை

இ) மரம் + பலகை  ஈ) மரப்பு + பலகை

## ஆ. கீழ்க்காணும் சொற்களைப் பிரித்து எழுதுக.

அ) நீராவி – -------- + ---------

ஆ) புவியீர்ப்பு – -------- + ---------

## இ. கீழ்க்காணும் சொற்களைச் சேர்த்து எழுதுக.

அ) சமையல் + அறை – --------------------

ஆ) இதயம் + துடிப்பு – --------------------

## ஈ. பொருத்துக.

1. ஐசக் நியூட்டன் – நீராவி இயந்திரம்
2. இரேனே லென்னக் – புவியீர்ப்பு விசை
3. ஜேம்ஸ் வாட் – ஸ்டெதஸ்கோப்

## உ. வினாக்களுக்கு விடையளிக்க.

1. மனிதனின் சிந்தனையால் எது வளரத் தொடங்கியது?
2. ஐசக் நியூட்டன், புவியீர்ப்பு விசையைக் கண்டறிய எந்த நிகழ்ச்சி காரணமாக இருந்தது?
3. ஸ்டெதஸ்கோப் கண்டுபிடிப்பதற்குக் காரணமான நிகழ்வு எது?
4. நீராவி இயந்திரத்தைக் கண்டுபிடித்தவர் யார்?
5. அறிவியலறிஞர்களிடம் உற்றுநோக்கும் திறன் உள்ளது என்பதை எடுத்துக்காட்டுடன் விளக்குக.

## ஊ. சிந்தனை வினாக்கள்

1. ஒவ்வொரு நிகழ்வுக்குப் பின்னும் ஓர் அறிவியல் உண்மை உள்ளதா? உங்களால் விளக்க இயலுமா?
2. நீரில் நீந்தும் மீனால், நிலத்தில் வாழ முடிவதில்லையே, ஏன்?

துணைப்பாடம்

இயல் நான்கு

# நானும் பறக்கப் போகிறேன்




ஆம் மகளே.. மனிதன் பறவையைக் கண்டான்; விமானம் படைத்தான். அப்படி விமானத்தைக் கண்டுபிடித்தவர் யாரென்று உனக்குத் தெரியுமா?
எனக்குத் தெரியுமே! ரைட் சகோதரர்கள் அல்லவா!
சரியாகச் சொன்னாய். பாராட்டுகள். அவர்களும் உன்னைப்போல் பறக்க ஆசைப்பட்டவர்கள்தாம்.
அதற்காக அவர்கள் என்ன முயற்சி செய்தார்கள்?
சிறுவயதிலே இருவரும் பறவைகளைப் பார்ப்பது, பல வகைகளில் பட்டங்கள் செய்து பறக்கவிடுவது என ஆர்வமாக இருந்தனர்.
அருமை. இயற்கையைப் பார்த்து வியப்பது, விளையாடுவது இவற்றிலிருந்துகூட நம்மால் நிறைய கற்றுக்கொள்ள முடியுமா?
ஆம். ரைட் சகோதரர்கள் தாங்கள் பறப்பதற்காகப் பலமுறை முயற்சி செய்தனர். அனைத்திலும் தோல்வியே. ஆனாலும், தோல்வியிலிருந்து நிறைய கற்றுக்கொண்டார்கள்.
ஓட்டப் பந்தயத்தில் தோற்றால்கூட சிலர் அழுகிறார்களே, அப்பா.
ஆம். நாம் எதிலும் தொடர்ந்து முயற்சி செய்தால், கட்டாயம் ஒருநாள் வெற்றி பெறலாம்.
அப்போ... ரைட் சகோதரர்கள் இதில் எப்படி வெற்றி பெற்றார்கள்?
அவர்கள் செய்த முயற்சிகளில் உள்ள குறைகளைச் சரிசெய்து கொண்டே வந்தார்கள். ஒரு நாள் பறப்பதற்கான கருவியைக் கண்டுபிடித்து விட்டார்கள்.
அது எப்போது நடந்தது? .
1903 ஆம் ஆண்டு டிசம்பர் 17அன்று 12 நொடிகள் ரைட் சகோதரர்களில் ஒருவர், தாங்கள் சொந்தமாக உருவாக்கிய விமானத்தில் உயர்ந்த பகுதியிலிருந்து சிறிது தூரம் பறந்து அனைவரையும் வியப்பில் ஆழ்த்தினார்.
நானும்கூட அப்படி ஒருநாள் பறந்துகாட்டுவேன், மேலும் சாதனைகள் படைப்பேன் அப்பா.
நல்லது, முயற்சி செய்.

## கற்பவை கற்றபின்

- ரைட் சகோதரர்கள் விமானத்தைக் கண்டுபிடிக்க என்னென்ன முயற்சிகளை மேற்கொண்டனர்? நூலகத்தில் தேடிப் படிக்க.
- நீங்களே கண்டறிந்த எளிய கண்டுபிடிப்பை விளக்கப்படமாக வரைந்துகாட்டுக.
- எவரேனும் அறிவியலறிஞர் ஒருவரின் வாழ்வில் நடந்த நிகழ்வுகளை நாடகமாக நடித்துக்காட்டுக.
- கற்பனையாக அறிவியல் புனைகதையொன்றை எழுதி, வகுப்பில் படித்துக்காட்டுக.

PVZUN8

## மதிப்பீடு

**வினாக்களுக்கு விடையளிக்க.**

1. தன்னால் பறக்க முடியாததற்கு அமுதா கூறிய காரணம் என்ன?
2. பறப்பதற்கு ஏற்றவகையில் பறவையின் உடலமைப்பு எவ்வாறு உள்ளது?
3. பறக்கும் விமானத்தைக் கண்டறிந்தவர்கள் யார், யார்?

**சிந்தனை வினா.**

பறவைகளைப்போல் பறக்க முடிந்தால், நமக்கு எத்தகைய உடலமைப்பு இருக்கவேண்டும்?

# கற்கண்டு

## மூவிடப்பெயர்கள்



**மானவிழி :** அடடே! கலையரசியா? ஆளே அடையாளம் தெரியவில்லையே? இவ்வளவு நாளாக எங்கே இருந்தாய்?

**கலையரசி :** நானும்கூட உன்னைப் பார்த்து நெடுநாளாகிவிட்டது. எங்கள் குடும்பத்துடன் மும்பையில் அல்லவா இருந்தோம். சென்ற வாரம்தான் என் தந்தைக்குப் பணிமாற்றம் நம்ம ஊரிலேயே கிடைத்தது.

மேற்கண்ட செய்தியைப் படித்தீர்களா? நீங்கள் எந்த அளவிற்குப் புரிந்து கொண்டீர்கள் என்று பார்க்கலாமா?

- நீங்கள் படித்த செய்தி, என்ன வடிவத்தில் உள்ளது?

  **உரையாடல் வடிவம்**

- நீங்கள் படித்த பகுதியில் பேசுபவர் யார்? கேட்பவர் யார்?

  **பேசுபவர் மான்விழி, கேட்பவர் கலையரசி**

- இருவரும் என்ன பேசுகிறார்கள்?

  **இருவரும் நெடுநாள் கழித்து ஒருவரையொருவர் பார்த்துக் கொள்வது குறித்துப் பேசுகின்றனர்.**

சரியாகச் சொல்லிவிட்டீர்கள். ஆகவே, நீங்கள் படித்த உரையாடலில் பேசுவோர், கேட்போர், பேசப்படும் பொருள் ஆகிய மூன்றும் அமைந்துள்ளன. இங்கு பேசுபவர் யார்? மான்விழி. அதனால், பேசுவோரைக் குறிக்கும் இடம் தன்மை. அடுத்ததாக, கேட்பவர் யார்? கலையரசி. ஆதலால், கேட்போரைக் குறிக்கும் இடம், முன்னிலை. இருவரும் யாரோ ஒருவரைப்பற்றி அல்லது ஏதோ ஒரு செய்தியைப் பற்றிப் பேசுகின்றனர். ஆதலால், பேசப்படுபவர் அல்லது பேசப்படும் செய்தியைக் குறிக்கும் இடம், படர்க்கை.



- ☞ தன்னைக் குறிப்பது, தன்மை.
- ☞ முன்னால் இருப்பவரைக் குறிப்பது, முன்னிலை.
- ☞ இவ்விருவரையும் தவிர மற்றவற்றை/ மற்றவர்களைக் குறிப்பது, படர்க்கை.

- ஒரு பெயர்ச்சொல்லை வேறொரு பெயர்ச்சொல்லால் குறிப்பது, மாற்றுப் பெயர்ச்சொல்.
- இந்த மாற்றுப் பெயர்ச்சொல்தான் இடம் நோக்கித் தன்மை, முன்னிலை, படர்க்கை என மூவிடப்பெயர்களாக அமைகிறது.



தன்மை – நான், நாம், யான், யாம், நாங்கள்

முன்னிலை – நீ, நீர், நீவிர், நீயிர், நீங்கள்

படர்க்கை – அவன், அவள், அவர், அது, அவை

தற்போதைய வழக்கில், அவர் என்பது, ஒருவரைக் குறிக்கிறது; அவர்கள் என்பது, பலரைக் குறிக்கிறது. எ.கா. **அவர் பேசினார்/ அவர்கள் பேசினார்கள்.**

ஆனால், **அது வந்தது, அவை வந்தன** என்று இருப்பதைப்போல், **அதுகள் வந்தது, அவைகள் வந்தன** என்பன வழக்கில் இல்லை. அவை, வழூஉச்சொற்களாகக் (பிழையானவையாகக்) கூறப்படுகின்றன.

| மூவிடப்பெயர்கள் – ஒருமையும் பன்மையும் | | | | | |
|---|---|---|---|---|---|
| தன்மை | | முன்னிலை | | படர்க்கை | |
| ஒருமை | பன்மை | ஒருமை | பன்மை | ஒருமை | பன்மை |
| நான், யான் | நாம், யாம் நாங்கள் | நீ | நீர், நீங்கள், நீவிர், நீயிர் | அவன், அவள், அது | அவர், அவை |

## கற்பவை கற்றபின்

- மூவிடப்பெயர்கள் பயன்படும் இடங்களை அறிந்துகொள்க.
- ஒருமையிலும் பன்மையிலும் மூவிடப்பெயர்கள் மாற்றம் அடைவதைக் கண்டறிக.
- உங்கள் பெற்றோரிடம் பேசும்போதும் உங்கள் நண்பர்களிடம் பேசும்போதும் நீங்கள் பயன்படுத்தும் மூவிடப்பெயர்களைக் குறிப்பிடுக.

மதிப்பீடு

# படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

**அ. சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுவோமா?**

1. ___________ எங்குச் சென்றீர்கள்?

அ) நீ ஆ) நாங்கள் இ) நீங்கள் ஈ) அவர்கள்

2. செடியில் பூக்கள் பூத்திருந்தன. --------- அழகாக இருந்தன.

அ) அது ஆ) அவை இ) அவள் ஈ) அவர்

3. இந்த வேலையை ---------- செய்தேன்.

அ) அவன் ஆ) அவர் இ) நான் ஈ) அவள்

**ஆ. பொருத்துக.**

1. தன்மைப் பெயர் – அவர்கள்
2. முன்னிலைப் பெயர் – நாங்கள்
3. படர்க்கைப் பெயர் – நீங்கள்

**இ. உரைப்பகுதியில் பொருத்தமான இடப்பெயர்களை நிரப்புக.**

தென்றலும் அமுதனும் அறிவியல் கண்காட்சிக்குச் சென்றனர். அங்கு மனிதர்போன்ற வடிவத்துடன் ரோபோ சிலை ஒன்று இருந்தது. ------- எல்லாரையும் இரு கைகூப்பி வரவேற்றது. அந்தச் சிலை --------க்கண்டதும் ------------ யார்? எங்கிருந்து வருகிறீர்கள் என்று கேட்டது. உடனே, இருவரும் --------- அருகிலிருக்கும் பள்ளியில் படிப்பவர்கள் என்றனர். அமுதன், அந்தச் சிலையிடம் ----- யார்? இங்கு என்ன செய்கிறாய்? என்று கேட்டான்.

**ஈ. தொடர்களிலுள்ள பெயர்ச்சொற்களைத் தன்மை, முன்னிலை, படர்க்கை என வகைப்படுத்துக.**

1. நீங்கள் எங்குச் சென்றீர்கள்? நீங்கள் – முன்னிலை
2. குழலி படம் வரைந்தாள் _______________
3. கதிர் நேற்று வரவில்லை _______________
4. நான் ஊருக்குச் சென்றேன் _______________
5. மயில் ஆடியது _______________

## மொழியை ஆள்வோம்

### அ. கேட்டல்

- ஏன்? எதற்கு? எப்படி? எங்கே போன்ற வினாக்களை எழுப்பக்கூடிய அறிவியல் விழிப்புணர்வுப் பாடல்களைக் கேட்டறிக.
- அறிவியல் மன்றங்களில் சிந்தனையைத் தூண்டும் வினாக்களைக் கேட்டு, விடை காண்க.

### ஆ. பேசுதல்

- அறிவியல் வளர்ச்சி ஆக்கத்திற்கா/ அழிவிற்கா பட்டிமன்ற உரை தயாரித்துப் பேசுக.
- அறிவியலறிஞர் ஒருவரின் கண்டுபிடிப்பு குறித்து 5 மணித்துளி பேசுக.

### இ. படித்தல்

- அறிவியல் சார்ந்த நூல்களை நூலகத்தில் தேடிப் படித்து மகிழ்க.
- நீங்கள் விரும்பிப் படித்த அறிவியல் புனைகதையொன்றை வகுப்பில் கூறுக.

### ஈ. சொல்லக்கேட்டு எழுதுக.

1. பறவைகள் பறக்கின்றன
2. ரோஜாப்பூ சிவப்பு நிறத்தில் உள்ளது.
3. கடலில் அலைகள் தோன்றுகின்றன.

### உ. தொடரில் அமைத்து எழுதுக.

1. பறவை – ____________________________________
2. விமானம் – ____________________________________
3. முயற்சி – ____________________________________
4. வானவில் – ____________________________________
5. மின்மினி – ____________________________________

### ஊ. பொருத்துக

1. மின்மினி – சிறகு
2. இறகின் தொகுப்பு – ஹைட்ரஜன் அணுக்கள்
3. வானவில் – பறவையின் இறகு
4. காற்றுப்பைகள் – லூசிஃபெரேஸ் என்சைம்
5. விண்மீன் – நீர்த்துளி எதிரொளிப்பு

**எ. உரைப்பகுதியைப் படித்து வினாக்களுக்கு விடை எழுதுக.**

தொழிற்சாலைகளிலிருந்து வெளியேறும் புகை மூலம் வானத்தில் நைட்ரஜன் ஆக்ஸைடுகள் அதிகரிக்கின்றன. தொழிற்சாலைகள் மிகுந்துள்ள நாடுகளிலும், மோட்டார் போக்குவரத்து அதிகமாக உள்ள பிரதேசங்களிலும் அமில மழை அதிகமாகப் பெய்வதாகக் கண்டறிந்துள்ளனர். நிலப்பரப்பில் கால்சியம் கார்பனேட் பத்து மில்லி கிராமுக்குக் குறைவாக இருந்தால் அந்த நிலப்பரப்பில் அமில மழையின் பாதிப்பு அதிகமாக இருக்கிறது. அமிலமழை அடிக்கடி பெய்யும் இடங்களில் கடல் பகுதி மீன்களும், சின்னஞ்சிறு உயிரினங்களும் உயிரிழக்க நேரிடுகின்றன.

**வினாக்கள்**

1. அமில மழை எங்கு அதிகமாகப் பெய்கிறது?
2. அமில மழையின் பாதிப்பு எங்கு அதிகமாக இருக்கும்?
3. மீன்களும், சின்னஞ்சிறு உயிரினங்களும் உயிரை இழக்கக் காரணம் என்ன?
4. பொருள் தருக. அதிகரித்தல் ---------, பிரதேசம் ---------, பாதிப்பு ---------

**ஏ. வண்ண எழுத்திலுள்ள பிறமொழிச் சொல்லுக்குத் தமிழ்ச்சொல் எழுதுக.**

1. நான் தபால் நிலையத்திற்குச் சென்றேன். ______________________________
2. ஓய்வு நேரத்தில் ரேடியோ கேட்பேன் ______________________________
3. பஞ்சாயத்துக் கூட்டம் நாளை கூடுகிறது ______________________________
4. ஹோட்டலில் உணவு தயாராக உள்ளது ______________________________
5. அலமாரியில் துணிகள் உள்ளன. ______________________________

**ஐ. பாடலை நிறைவு செய்க**





செடிகள் நாளும் வளருதே
ஏன்? ஏன்? ஏன்?
பனிமலை உருகிப் போகுதே
ஏன்? ஏன்? ஏன்?
_________________________
_________________________
_________________________
_________________________
_________________________
_________________________
_________________________







## மொழியோடு விளையாடு

### 1. ஒரே ஓசையில் முடியும் பெயர்களைக் கொண்ட படங்களை இணைக்க.











### 2. சொல்லிலிருந்து புதிய சொற்களை உருவாக்குவோம்

**பட்டுக்கோட்டை**

பட்டு __________ __________ __________ __________

__________ __________ __________ __________

3. குறிப்புகளைப் படித்து, விடை கண்டறிக.

| 8 வா 2 | ன | ம் | ளி | ஒ | ம | 6 வி |
|---|---|---|---|---|---|---|
| ன | ந் | பு | 5 கு | தி | ரை | மா |
| வி | ஆ | ப் | ல் | ய | 7 ப | ன |
| ல் | கி | டு | 1 ப | ட் | ட | ம் |
| ல | ரீ | 4 து | ப் | ம | கு | க |
| டி | ணா | ண் | 3 9 க | ப | லை | 10 கா |

1 பறக்கவிட்டு மகிழ்வோம்

2 நீல நிறத்தில் காட்சியளிக்கும்

3 கடற்பயணத்திற்கு உதவும்

4 படகு செலுத்த உதவும்

5 உயிரினங்களுள் ஒன்று

6 இதன் உதவியால் வானில் பயணிக்கலாம்

7 பறவைகள் இதுபோன்ற உடலமைப்பு கொண்டுள்ளது

8 ஏழு நிறங்கள் கொண்டது

9 இராமன் இதன் மூலம் எதிரொளிப்பு விளையாட்டு விளையாடினான்

10 பொழுது விடிவது

4. பாடப்பகுதியில் 'சுற்றும்முற்றும், ஓட்டமும்நடையுமாய் என்று சொற்கள் இடம்பெற்றுள்ளன. இவற்றிற்கு இணைச்சொற்கள் என்று பெயர். இவைபோன்று நான்கு சொற்கள் எழுதுக.

1. -----------------------  2. --------------------

3. -----------------------  4. --------------------

**5. ஒரே ஓசையுடைய சொற்களின் பொருள் எழுதுக.**

1. தேநீர் = தேயிலையைக் கொண்டு கொதிக்க வைத்த நீர் (டீ)

 தேனீர் = தேனும் நீரும் கலந்த நீர்

2. பரவை = ------------------------------------

 பறவை = ------------------------------------

3. கோரல் = ------------------------------------

 கோறல் = ------------------------------------

4. வன்னம் = ------------------------------------

 வண்ணம் = ------------------------------------

5. எதிரொலி = ------------------------------------

 எதிரொளி = ------------------------------------

**6. ஒரு சொல்லைப் பிரித்து இரு பொருள் எழுதுக.**

1. பலகை = மரப்பலகை

 பல + கை = பல கைகள்

2. அந்தமான் = ----------------------

 = ----------------------

3. தாமரை = ----------------------

 = ----------------------

4. பழம்பால் = ----------------------

 = ----------------------

5. மருந்துக்கடை = ----------------------

 = ----------------------

## நிற்க அதற்குத் தக

1. அறிவியல் சார்ந்த தமிழ்ச் சொற்களை அறிந்துகொண்டு பயன்படுத்துவேன்.

2. ஏன்? எதற்கு? எப்படி? என்ற வினாக்களுக்கு விடை காண்பேன்.

## செயல் திட்டம்



- அறிவியல்தமிழ்ச் சொற்களுள் 20 எழுதி வருக.
- அறிவியலறிஞர்களுள் எவரேனும் ஐவரின் படத்தை ஒட்டியும் அவர்களின் கண்டுபிடிப்புகளை எழுதியும் தொகுப்பேடு உருவாக்குக.

## விண்ணப்பம் எழுதுதல்

### பிர்லா கோளரங்கத்தைச் சுற்றிப் பார்க்க அனுமதி வேண்டி விண்ணப்பித்தல்

திருவள்ளூர்,
07.10. 2019

**அனுப்புநர்**

செல்வன் ந. பூங்குன்றன்,
பள்ளி மாணவர் தலைவர்,
ஊராட்சி ஒன்றியத் தொடக்கப்பள்ளி,
திருவூர், திருவள்ளூர் மாவட்டம்.

**பெறுநர்**

இயக்குநர்,
பிர்லா கோளரங்கம்,
சென்னை.

மதிப்பிற்குரிய ஐயா,

**பொருள்:** **அறிவியல் தொழில்நுட்பக் கூடத்தைச் சுற்றிப் பார்க்க, அனுமதி வேண்டுதல் – சார்பு.**

வணக்கம். தலைமையாசிரியரின் இசைவுடன் எங்கள் பள்ளியின் மகிழ் உலா குழு, பிர்லா கோளரங்கத்தை 09.10.2019 அன்று, சுற்றிப்பார்க்க விரும்புகிறது. அக்குழுவில், ஆசிரியர்கள் மூவரும் 40 மாணவர்களும் இருப்பர். ஆகையால், அன்பு கூர்ந்து எங்களுக்கு அனுமதி வழங்கிட வேண்டுகிறேன். அறிவியல் தொழில்நுட்பம் சார்ந்த கருத்துகளை விளக்குவதற்கு அலுவலர் ஒருவரையும் ஏற்பாடு செய்யுமாறு பணிவுடன் வேண்டுகிறேன்.

**தங்கள் உண்மையுள்ள,**

செல்வன். ந. பூங்குன்றன்,
ஊ.ஒ.தொ.ப., திருவூர்.
திருவள்ளூர்.

**கற்றல் நோக்கங்கள்**

**செய்யுள்**

**இயல் ஐந்து**

**நாகரிகம்/ பண்பாடு**

- திருக்குறளின் மேன்மையை அறிந்துகொள்ளுதல்
- தமிழகத்தின் பாரம்பரிய விளையாட்டுகளை அறிந்துகொள்ளுதல்
- தமிழர்கள் வீரக்கலைகளுக்கு அளித்த முதன்மையைப் புரிந்துகொள்ளுதல்
- தமிழர் கட்டடக்கலை, சிற்பக்கலை குறித்துத் தெரிந்துகொள்ளுதல்
- உரையாடல்களிலும் தொடர்களிலும் இணைப்புச்சொற்களைப் பயன்படுத்துதல்

# திருக்குறள்

EP8J2Z

## பண்புடைமை

**1** அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்
பண்புடைமை என்னும் வழக்கு

**பொருள்** அன்புடையவராக இருத்தல், உயர்ந்த குடியில் பிறந்திருத்தல் ஆகிய இவ்விரண்டும் பண்பு உடையவராக வாழ்வதற்கு உரிய நல்ல வழியாகும்.

**சொல்பொருள்** ஆன்ற – உயர்ந்த

**2** நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டும் உலகு

**பொருள்** நேர்மையையும் நன்மையையும் விரும்பி, பிறருக்குப் பயன்படும்படி வாழும் பெரியோரின் நல்ல பண்பை உலகத்தார் போற்றிக் கொண்டாடுவர்.

**சொல்பொருள்** நயன் – நேர்மை; நன்றி – நன்மை

**3** பண்புஉடையார்ப் பட்டுண்டு உலகம்; அதுஇன்றேல்
மண்புக்கு மாய்வது மன்

**பொருள்** நற்பண்பு உடையவர் செய்யும் நல்ல செயல்களாலேயே இவ்வுலகம் இயங்குகிறது. இல்லையெனில், அது மண்ணோடு மண்ணாகி அழிந்துவிடும்.

**சொல்பொருள்** புக்கு – புகுந்து; மாய்வது – அழிவது

**4** அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண்பு இல்லா தவர்.

**பொருள்** அரத்தைப்போல் கூர்மையான அறிவு உடையவரானாலும் மக்களுக்கு உரிய பண்பு இல்லாதவர், மரத்தைப் போன்றவரே ஆவர்.

**சொல்பொருள்** அரம் – வாளைக் கூர்மையாக்கும் கருவி; போல்வர் – போன்றவர்

**5** பண்புஇலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலம்தீமை யால்திரிந் தற்று

**பொருள்** பண்பு இல்லாதவன் பெற்ற பெருஞ்செல்வமானது, தூய்மையற்ற பாத்திரத்தின் தன்மையால் நல்ல பால் திரிவது போன்றதாகும்.

**சொல்பொருள்** பெருஞ்செல்வம் – மிகுந்த செல்வம்; நன்பால் – நல்ல பால்

## நூல்குறிப்பு

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று, திருக்குறள். இந்நூல் அறம், பொருள், இன்பம் என்னும் முப்பிரிவுகளை உடையது. இதில் 133 அதிகாரங்களும் 1330 குறட்பாக்களும் உள்ளன. உலகிலுள்ள அனைவரும் பின்பற்றத்தக்க சிறந்த அறநெறிக் கருத்துகள் இந்நூலில் உள்ளதால், இது உலகப்பொதுமறை எனப் போற்றப்பெறுகிறது. இந்நூலை இயற்றியவர், திருவள்ளுவர்.

## கற்பவை கற்றபின்

- பாடலைச் சரியான ஒலிப்புடன் படித்து மகிழ்க.
- நம்மிடம் இருக்கவேண்டிய நற்பண்புகளைப் பட்டியலிடுக.
- பண்பா, பணமா எதற்கு முதன்மையளிக்க வேண்டும்? பட்டிமன்றத்திற்கு உரை தயாரித்துப் பேசுக.

## மதிப்பீடு

# படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

**அ. சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுக.**

1. 'ஆன்ற' – இச்சொல்லின் பொருள் ..............................................

அ) உயர்ந்த ஆ) பொலிந்த
இ) அணிந்த ஈ) அயர்ந்த

7W5AP2

2. பெருஞ்செல்வம் – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ___________

அ) பெருஞ் + செல்வம் ஆ) பெரும் + செல்வம்

இ) பெருமை + செல்வம் ஈ) பெரு + செல்வம்

3. பண்புடைமை – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது. ___________

அ) பண் + புடைமை ஆ) பண்பு + புடைமை

இ) பண்பு + உடைமை ஈ) பண் + உடைமை

4. அது + இன்றேல் – இச்சொற்களைச் சேர்த்து எழுதக் கிடைப்பது ___________

அ) அதுஇன்றேல் ஆ) அதுயின்றேல்

இ) அதுவின்றேல் ஈ) அதுவன்றேல்

5. பாடலில், நேர்மை என்னும் பொருள் தரும் சொல் ___________

அ) நயன் ஆ) நன்றி

இ) பயன் ஈ) பண்பு

**ஆ. கீழ்க்காணும் சொற்களைப் பிரித்து எழுதுக.**

அ) இவ்விரண்டும் = _____________ + ____________

ஆ) மக்கட்பண்பு = _____________ + ____________

**இ. உயிரெழுத்தில் தொடங்கும் சொற்களை எழுதுக.**

அன்புடைமை ___________ ___________ ___________

___________ ___________ ___________ ___________

**ஈ. பாடலில் இரண்டாம் எழுத்து ஒன்றுபோல் வரும் சொற்களை எடுத்து எழுதுக.**

___________ ___________ ___________ ___________

**உ. அன்புடைமை, பண்புடைமை போல் ஈற்றில் 'மை' என முடியும்படி நான்கு சொற்கள் எழுதுக.**

___________ ___________ ___________ ___________

**ஊ. வினாக்களுக்கு விடையளிக்க.**

1. பண்புடையவராக வாழ்வதற்குரிய நல்ல செயல்கள் யாவை?
2. 'மரம் போன்றவர்' எனத் திருக்குறள் யாரைக் குறிப்பிடுகிறது?
3. பண்பில்லாதவன் பெற்ற செல்வம் எவ்வாறு பயனிலாது போகும்?

**எ. சிந்தனை வினா**

ஒருவரின் பண்புகளைக்கொண்டே, இந்த உலகம் அவரை மதிக்கிறது. இதுபற்றி உங்கள் கருத்தென்ன?

இயல்
ஐந்து

உரைநடை

# தமிழர்களின் வீரக்கலைகள்

தனக்கென்று தனித்த நாகரிகமும் பண்பாடும் உடையது தமிழ் மரபு. தமிழரின் பண்பாட்டுக் கூறுகளும் கலைகளும் இலக்கியங்கள் வாயிலாக வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

பண்டைத்தமிழன், வாளாண்மையால் பகைவரை வென்றான். தாளாண்மையால் நன்னிலம் ஆக்கினான். வேளாண்மையால் வளம் பெருக்கினான். வீரமும் தீரமும் நிறைந்த விளையாட்டுகளிலும் சிறந்து விளங்கினான். தமிழர்க்கென்றே இருக்கும் வீரம் செறிந்த கலைகளை அறியுந்தோறும் வியப்பு மேலிடும்; மனம் மகிழ்ச்சியில் நிறைந்திடும்.

ஏறுதழுவுதல், சிலம்பாட்டம், இளவட்டக்கல் தூக்குதல், மற்போர் முதலான கலைகள் தமிழர்களின் வீரக்கலைகளாக விளங்குகின்றன. இக்கலைகளுள் இன்றளவும் நடைமுறையில் உள்ள சில விளையாட்டுகளைப் பற்றி அறிந்துகொள்வோம்.

## ஏறுதழுவுதல்

TANWVI



தமிழரின் வீரத்தைப் பறைசாற்றும் விளையாட்டுகளுள் ஒன்று, ஏறுதழுவுதல். ஏறு என்பது, காளை மாட்டைக் குறிக்கும். ஏறு தழுவுதல் என்பது, காளையைத் தழுவி, அதன் வீரத்தை அடக்குவதாகும். இவ்விளையாட்டு, பழங்காலந்தொட்டு இன்றுவரை விளையாடப்பட்டு வருகிறது. வளமான புல்வளம் கொண்ட முல்லைநிலமே ஏறு தழுவுதலுக்கு உகந்த நிலமாக விளங்கியது. இன்று பல மாவட்டங்களில் இவ்வீர விளையாட்டு நடைபெறுகிறது. பொங்கல் திருவிழா கொண்டாடப்படும் நாள்களில் ஏறுதழுவுதல் என்னும் இவ்விளையாட்டு நடத்தப்படுகிறது. ஜல்லிக்கட்டு, மஞ்சு

விரட்டு எனப் பல பெயர்களிலும் அது அழைக்கப்படுகிறது. ஊரிலுள்ள இளைஞர்கள், காளைகளை அடக்கித் தங்கள் வீரத்தை வெளிப்படுத்துகின்றனர்.

காளையின் கொம்பைப் பிடித்தல் ஆண்மை; வாலைப் பிடித்தல் தாழ்மை என்பது, தமிழர் கொள்கை. கொம்பிலே உள்ளது காளையின் தெம்பு என்பதைத் தமிழர்கள் திடமாக நம்பினர். காளையின் வாலைப் பிடித்தவன், அதன் காலால் உதைபட்டு, மண்ணிடை வீழ்வான். ஆதலால், கொம்பைவிட்டு வாலைப் பற்றுதல் கோழையின் செயல். வசமாகப் பிடி கிடைத்தால், காளையின் விசை அடங்கும்; வீரம் அடங்கும்; திடமின்றி மண்ணில் சோர்ந்து விழும். இத்தகைய வீர விளையாட்டை விளையாடுவதற்குச் சில விதிமுறைகள் இன்று பின்பற்றப்படுகின்றன.

இவ்விளையாட்டில் பங்குபெறும் காளைக்குக் கன்று பருவத்திலிருந்தே பாய்ச்சலுக்குப் பயிற்சி அளிக்கப்படுகிறது. காளையின் கொம்பில் கட்டப்பட்டிருக்கும் ஜல்லிக்கட்டுத் துணியை எடுப்பவரே வெற்றிபெற்றவர் ஆவர். தற்காலத்தில் போட்டியில் கலந்து கொள்ளும் வீரர் மற்றும் காளைகளுக்கு உடல் பரிசோதனை செய்யப்படுகிறது. போட்டி நடைபெறும்போது வாடிவாசலை மறித்துக்கொண்டு போட்டியாளர்கள் நிற்கக்கூடாது. காளையின் திமில் பகுதியைப் பிடித்தபடி 15 மீட்டர் தூரம் அல்லது 30 வினாடிகள் அல்லது மூன்று துள்ளல்கள்வரை ஓடும் போட்டியாளர் வெற்றி பெற்றவர் ஆவார். இவ்விளையாட்டில் ஈடுபடுவதற்கு நல்ல உடல் திறனும், அஞ்சா நெஞ்சமும் தேவை.

## சிலம்பாட்டம்



தமிழர்களின் மற்றொரு வீர விளையாட்டு, சிலம்பம். சிலம்பு என்றால் ஒலித்தல் என்பது பொருள். கம்பு சுழலும்போது ஏற்படும் ஓசையை அடிப்படையாகக் கொண்டே சிலம்பம் எனப் பெயரிட்டனர். **கம்பு சுழற்றுதல்** என்னும் பெயரும் இதற்கு உண்டு. தற்காப்புக்காகத் தோன்றிய இக்கலை, இன்று வீர விளையாட்டாக அறியப்படுகிறது.

சிலம்பாட்டத்தில் எதிராளி வீசும் கம்பினைத் தடுத்தல் எதிராளியின் உடலில் சிலம்புக் கம்பினால் தொடுதல் போன்றவை அடிப்படையாகும். இதற்கான கம்பு நன்கு வளைந்து கொடுக்கக்கூடிய 'சிறுவாரைக்கம்பு' என்னும் மூங்கில் இனத்திலிருந்து செய்யப்படுகிறது.

சிலம்பக் கலையில் மான்கொம்பு, பிச்சுவா கத்தி, சுருள்பட்டா, வளரி போன்ற ஆயுதங்களையும் பயன்படுத்துவர். நாடிநரம்புகளையும் மனத்தையும் ஒருங்கிணைக்கும் இவ்விளையாட்டு, தமிழரின் வீரத்திற்கும் நுட்பமான செயல்திறனுக்கும் எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

## வில்வித்தை



வித்தை என்பது, வியப்படையச் செய்யும் வகையில் நிகழ்த்தப்படும் ஒரு செயல். அவற்றுள் வில் வித்தையும் ஒன்று. பண்டைத் தமிழர் விரும்பிக் கற்றுக்கொண்ட விளையாட்டாக வில்வித்தை விளங்கியது. தொடக்கத்தில் அம்பெய்தி விலங்குகளை வேட்டையாடவும், போர்முனைகளில் எதிரிகளை வெல்லவும் இவ்வில்லாற்றல் பயன்பட்டது.

கடையெழு வள்ளல்களுள் ஒருவரான 'வல்வில் ஓரி' வில்லாற்றலில் சிறந்து விளங்கியவர் என்பதைத் தமிழ் இலக்கியங்களில் காணலாம். அவர், வேட்டையாட காட்டுக்குச் சென்றபோது, பெரிய யானையொன்று எதிர்ப்பட, அதன்மீது அம்பெய்தினார். அந்த அம்பானது, அப்பெரிய யானையின் தலையில் பாய்ந்தும், அங்குக் குறுக்கிட்ட பெரும்புலியைக் கொன்றும், அதனைக் கடந்து சென்ற கலைமானைச் சாய்த்தும், மேலும் விசை குறையாமல் சென்று, ஒரு பன்றியின் மேல் பாய்ந்ததோடு அல்லாமல், புற்றிலே இருந்த ஓர் உடும்பின் மீதும் பாய்ந்து தன் சினம் தீர்த்தது என்று புறநானூற்றுப் பாடல்வழி அறிகிறோம். படைத்திறமும் கொடைத்திறமும் கொண்டு விளங்கிய வல்வில் ஓரியை வன்பரணர் பாடி மகிழ்ந்தார்.

இன்று வில்வித்தை, ஒலிம்பிக் போட்டிகளில் சேர்க்கப்பட்டுள்ளமை தமிழர்களுக்குப் பெருமை சேர்ப்பதாகும்.

## மற்போர்



படைக்கலன்கள் ஏதுமின்றி இருவர் போரிடும் விளையாட்டே மற்போர். மல் என்பது, வலிமையைக் குறிக்கும். ஒருவன் தன் உடல் வலிமையால் செய்யும் போரே, 'மற்போர்'. மற்போரில் வெற்றி பெற்றவர்களை 'மல்லன்' என்னும் சொல்லால் குறிக்கும் வழக்கம் இருந்தது. மற்போரில் சிறந்து விளங்கியமையாலேயே மாமல்லன் என்று அக்கால அரசர்கள் போற்றப்பெற்றனர்.

மல்யுத்தம் என உலகம் முழுதும் போற்றப்படும் இவ் வீரக்கலை, பண்டைத்தமிழரின் போர்முறைகளுள் ஒன்றாக இருந்தது. புறநானூற்றுப் பாடலொன்றில் மற்போர் பற்றிய நிகழ்ச்சி இடம்பெற்றுள்ளது.

இருவர் கைகோத்துக் கால்களாலும் தலையாலும் இடித்தும் உதைத்தும் ஒருவருடன் ஒருவர் போர் செய்வதே மற்போர். பகைவரை எதிர்கொள்ளும் வகையில் விளங்கிய இம்மற்போர், பின்னர் வீரவிளையாட்டாக மாறியது. நம் நாட்டில் ஒவ்வொரு மாநிலத்திலும் மற்போர் கழகங்கள் உள்ளன. ஒலிம்பிக் போட்டிகளில் மற்போரிடுவதும் ஒன்றாக இருந்து வருகின்றது.

மேலும் பல விளையாட்டுகள், பண்டைக் காலம்முதல் இன்றுவரை வழக்கில் இருந்து வருகின்றன. வழுக்குமரம், நீர் விளையாட்டு, கபடி என்கின்ற சடுகுடு போன்றபல விளையாட்டுகளை நாம் இப்போதும் விளையாடி மகிழ்கிறோம். உடலில் வலிமையும் உள்ளத்தில் மகிழ்ச்சியும் விளையாட்டால் ஏற்படுகின்றது. உடலில் உறுதி உடையவரே, உலகை ஆளும் உள்ள உறுதியும் உடையவர் ஆவர். ஆகையால், குழந்தைப் பருவத்திலிருந்தே நமக்குப் பிடித்த வீரவிளையாட்டுகளை விளையாடி மகிழ்வோம். அதுமட்டுமின்றி, உலக விளையாட்டுப் போட்டிகளிலும் கலந்து கொண்டு வெற்றியை நாட்டிற்கு அளிப்போம்.

## கற்பவை கற்றபின்

- உங்கள் ஊரில் விளையாடும் விளையாட்டுகளைப் பற்றிப் பேசுக.
- உங்களுக்குப் பிடித்த விளையாட்டுகள் எவை? ஏன்?
- விழாக்காலங்களில் ஊர் கூடி விளையாடும் விளையாட்டுகள் எவை? அவற்றைப்பற்றி உங்களுடைய கருத்துகளைக் கூறுக.

## படித்து அறிக

வங்கனூர் வாழ் பொதுமக்களுக்கு ஒரு நற்செய்தி ... டம்...டம்...டம்

இதன் மூலம் தெரிவிப்பது என்னவென்றால், வரும் பொங்கல் திருவிழா அன்று மாலை 4.00 மணியளவில் பூங்கா நகர் மைதானத்தில் சிலம்பாட்டம் நடைபெற உள்ளது. விருப்பமுள்ளவர்கள் திரு. மணி அவர்களிடம் பெயரைப் பதிவு செய்யுமாறு ஊராட்சி சார்பில் தெரிவிக்கலாகிறது.

டம்...டம்...டம்



மதிப்பீடு

# படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

## அ. சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுக.

1. தமிழரின் வீர விளையாட்டாகக் கருதப்படாதது ..................................................

அ) சிலம்பம் ஆ) மற்போர்

இ) மட்டைப்பந்து ஈ) நீர் விளையாட்டு

2. 'மஞ்சு விரட்டு' என்பதைக் குறிக்கும் விளையாட்டு ..................................................

அ) மற்போர் ஆ) ஏறுதழுவுதல்

இ) சிலம்பாட்டம் ஈ) வில்வித்தை

3. மற்போர் – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ......................................

அ) மற் + போர் ஆ) மள் + போர்

இ) மல் + போர் ஈ) மறு + போர்

4. தன் + காப்பு –இச்சொற்களைச் சேர்த்து எழுதக் கிடைப்பது ...................................

அ) தன்காப்பு ஆ) தண்காப்பு

இ) தனிகாப்பு ஈ) தற்காப்பு

5. ஒலிம்பிக் போட்டியில் சேர்க்கப்பட்டுள்ள கலை ..................................................

அ) சிலம்பாட்டம் ஆ) வில்வித்தை

இ) ஏறுதழுவுதல் ஈ) வழுக்கு மரம் ஏறுதல்

## ஆ. கீழ்க்காணும் சொற்களைச் சேர்த்து எழுதுக

I3WLAA

1. சிலம்பு + ஆட்டம் = ______________
2. வீரம் + கலை = ______________

## இ. கீழ்க்காணும் சொற்களைப் பிரித்து எழுதுக

1. தனக்கென்று = ________ + ______
2. கொடைத்திறம் = ________ + ______

## ஈ. பொருத்துக

1. காளை – கம்பு
2. சிலம்பம் – மூங்கில்
3. சிறுவாரைக்கம்பு – திமில்
4. தாளாண்மை – உழவு
5. வேளாண்மை – முயற்சி

## உ. வினாக்களுக்கு விடையளிக்க.

1. தமிழர்களின் வீரக்கலைகளுள் இரண்டைக் குறிப்பிடுக.
2. ஏறுதழுவுதல் என்றால் என்ன?
3. சிலம்பாட்டம்– பெயர்க்காரணம் தருக.
4. வல்வில் ஓரியின் வில்லாற்றல் சிறப்பைக் கூறுக.
5. மற்போர் எவ்வாறு நடைபெறுகிறது?

## ஊ. சிந்தனை வினாக்கள்

1. சிலம்பாட்டம் தற்காப்புக்கலைகளுள் ஒன்று. ஏன்?
2. உடலில் உறுதி உடையவரே உலகை ஆளும் உள்ள உறுதி உடையவர் இவ்வரிகளைப் பற்றி உமது கருத்து யாது?

## எ. எதிர்ச்சொல் உருவாக்குக.




__________ X __________




__________ X __________




__________ X __________




__________ X __________




__________ X __________




__________ X __________

துணைப்பாடம்

இயல் ஐந்து

# கங்கை கொண்ட சோழபுரம்

கயலினி மகிழ்ச்சியில் துள்ளிக் குதித்தாள். ஏன்? இந்த விடுமுறை நாள்களை அவள் மகிழ்வுடன் கழிக்கப் போகிறாள் அல்லவா! அதனால்தான். அன்பு தரும் ஆசைப் பாட்டியின் ஊருக்குப் புறப்படத் தயாராகிவிட்டாள். வாருங்கள், குழந்தைகளே! நாமும் அவள் மகிழ்ச்சியில் பங்கெடுத்துக் கொள்வோம்.

சிதம்பரத்திலிருந்து ஜெயங்கொண்டம் செல்லும் சாலையில்தான் உள்ளது, அந்த ஊர். தன் தாயுடன் பேருந்தில் ஏறிச் சன்னலோரம் அமர்ந்து கொண்ட அவளுக்கு வாயெல்லாம் ஒரே பாட்டுத்தான்.

'ஆறு சட்டம் நூறு பண்ணி

ஐம்பத்தாறு ரயில் வண்டி

கங்கை கொண்டான் மண்ணெடுத்து

கிண்ணுது பார் ரயில் வண்டி...'

WPCZ3T

அவள் பாட்டி சொல்லிக் கொடுத்த நாட்டுப்புறப் பாட்டுத்தான் அது. இப்போது உங்களுக்குத் தெரிந்திருக்குமே, அவள் எங்கே செல்கிறாள் என்று? ஆமாம், அரியலூர் மாவட்டத்திலுள்ள கங்கை கொண்ட சோழபுரத்திற்குத்தான் அவள் செல்கிறாள். அவள் பாட்டி, இந்த விடுமுறையில் சில இடங்களுக்கு அழைத்துச் செல்வதாகக் கூறியிருந்தாள். அதுதான் கயலினியின் துள்ளலுக்குக் காரணம். ஊர் வந்ததும் அவள் பாட்டி அவர்களை வரவேற்க பேருந்து நிறுத்தத்தில் காத்திருந்தார்.

பாட்டியைக் கண்டதும் ஓடிச்சென்று ஆரத் தழுவிக் கொண்டாள் கயலினி. "பாட்டி... பாட்டி, நீங்க தொலைபேசியில சொல்லிக் கொடுத்த பாட்டு எனக்கு மிகவும் பிடித்திருந்தது. அதுல கங்கை கொண்டான் மண்ணெடுத்து என்று வருதுல அப்படினா என்ன பாட்டி?" எனக்கேட்டாள். " ஓ... அதுவா! சோழர்கள் காலத்துல தமிழ்நாட்டை ஆண்ட முதலாம் இராசேந்திர சோழன் என்னும் மன்னன் வட நாடு சென்று பகைவர்களை வென்று கங்கை நீரைக் கொண்டு வந்தான். அதன் அடையாளமாகத்தான் அவனைக் கங்கை கொண்டான் என்று சொல்கிறோம். அந்த வெற்றியைக் கொண்டாட, தான் உருவாக்கிய புதிய நகரத்திற்குக் கங்கை கொண்ட சோழபுரம் என்று பெயரும் வைத்து விட்டான்" என்று பதிலளித்தாள் பாட்டி.

- வெற்றித் திருநகரான கங்கை கொண்ட சோழபுரம் 'கங்காபுரி' என்றும் 'கங்காபுரம்' என்றும் புலவர் பெருமக்களால் போற்றப் பெற்றுள்ளது.
- 'கங்கா நதியுங் கடாரமுங் கைக்கொண்டு கங்காக புரிபரந்த கற்பம்' என்று ஒட்டக்கூத்தர் குறிப்பிடுகிறார்.

"ஓ! அப்படியா? நம் ஊருக்கு இப்படித்தான் பெயர் வந்ததா?" சரி, பாட்டி. எங்கேயோ அழைத்துச் செல்கிறேன் என்றீர்களே, போகலாமா?" என்றாள் கயலினி. "முதலில் சாப்பிட்டு ஓய்வெடு. பிறகு போகலாம்" என்ற பாட்டி அவர்களை வீட்டிற்கு அழைத்துச் சென்றாள்.

சிறிது ஓய்வுக்குப் பிறகு மீண்டும், 'பாட்டி…' என்று இழுத்தாள் கயலினி." சரி…சரி.. நான் புரிந்து கொண்டேன் வா போகலாம்" என்று பாட்டி கூற இருவரும் சோழ நாட்டுக்கு வளம் சேர்த்த சோழ கங்கத்தை அடைந்தனர். 'இதுதான் சோழ கங்கம். பார்த்தாயா இதன் அழகை!' என்று பாட்டி சொல்லி முடிக்கவில்லை. அதற்குள் கயலினி, "பாட்டி, இது என்ன பொன்னேரினு எழுதியிருக்கு? நீங்க சோழ கங்கம்னு சொல்றீங்க?" எனக் கேட்டாள்.

"ஆமாம், சோழ கங்கப் பேரேரிதான் இன்று பொன்னேரினு பெயர் மாறியிருக்கு. பல்லாயிரக் கணக்கான ஏக்கர் நிலங்கள் இதனால் பாசன வசதி பெற்று உழவுத்தொழில் தழைத்தோங்கியது". என்றாள் பாட்டி.



மலைகளும் குன்றுகளும் இல்லாத சமவெளியில் பதினாறு கல் தொலைவுவரை வலிமையான உயரமான கரைகளைக் கட்டி, நீண்ட கால்வாய் வெட்டித் தண்ணீரைப் பள்ளத்தாக்கிலிருந்து மேட்டிற்குக் கொண்டு வந்து, ஏரியில் தேக்கி வைத்ததைக் கற்பனையில்கூட எண்ணிப் பார்க்கவே கயலினிக்குக் கடினமாகத் தோன்றியது. "பாட்டி, இது அவ்வளவு எளிமையான செயலன்று" என்று சோழர்களின் நீர்ப்பாசன முறையை எண்ணி வியப்புற்றாள்.

இருவரும் பேசிக்கொண்டே கங்கை கொண்ட சோழபுரத்தை அடைந்தனர். கோவிலைப் பார்த்ததும் "இதுவும் தஞ்சைப் பெரிய கோவில் போன்ற அமைப்பிலேயே உள்ளதே"? வியப்புடன் கேட்டாள் கயலினி. "ஆமாம், இருந்தாலும் இக்கோவில் இராசேந்திரனின் தந்தை இராஜராஜ சோழன் கட்டிய தஞ்சைப் பெரிய கோவிலைவிட உயரம் குறைவானதுதான்" என்றாள் பாட்டி.

"அது என்ன பாட்டி? "என்று கோவிலின் விமானத்தைப் பார்த்துக் கேட்டாள் கயலினி. அதற்கு பாட்டி "அதுதான் விமானம். அங்கே பார், விமானத்தின் உச்சியில் பொருத்தப்பட்டுள்ள மிகப்பெரிய வட்ட வடிவக்கல். அது 34 அடி குறுக்களவு கொண்டது. மேலும், இது ஒரே கல்லால் அமைக்கப்பெற்ற விமானம் ' என்று கூறிக் கயலினியை வியப்படையச் செய்தாள் பாட்டி.

"பாட்டி, அதோ பாருங்கள் நந்தி! இது கல்லால் செதுக்கப்பட்டதுதானே"? என்று கூறிக்கொண்டே ஓடிப்போய் அதனைத் தொட்டுப்பார்த்தாள் கயலினி. ."இல்லை,



இல்லை. இது முழுவதும் செங்கற்களால் கட்டப்பட்டது" என்று உரைத்தாள் பாட்டி. அழகு மிளிர்ந்த இச்சிலையைக் கண்டபடி உள்ளே சென்றாள் கயலினி.



'என்ன பாட்டி, கோவிலின் வாயில் இவ்வளவு உயரத்தில் உள்ளதே!' என்றாள் கயலினி. "ஆமாம். எல்லாக் கோவிலின் வாயில்களைக்காட்டிலும் தரைமட்டத்திலிருந்து 20 அடி உயரத்தில் இருப்பதே இதன் சிறப்பு" என்று கூறிய பாட்டி, கயலினியை உள்ளே அழைத்துச் சென்றாள்.

படியைக் கடந்து ஏறியதும் வாயிற்காவலர் சிலைகளைக் கண்டு களித்தாள் கயலினி. அவற்றைப் பார்த்ததும் அவளுக்கு அடக்கமுடியாமல் சிரிப்பு பொங்கியது.

தூண்களிலும் கோவில்களிலும் இருந்த சிற்பக்கலைகளைக் கண்டு களித்தாள் கயலினி. கோவிலின் வடக்குப் பக்க நுழைவாயிலின் இருபக்கங்களிலும் உள்ள கலைச்செல்வி மற்றும் சண்டேசுவர அனுக்கிரக மூர்த்தி ஆகிய சிற்பங்கள் உலகப் புகழ் பெற்றவை என்பதைப் பாட்டி மூலம் அறிந்து கொண்டாள்.



"பாட்டி, இங்கே பாருங்க, சிங்கம் வடிவத்திலிருக்கும் இந்தச்சிற்பத்தின் வயிற்றிலே ஒரு வாயில் இருக்கிறதே" என்றாள் கயலினி". அதற்குப் பாட்டி, "அதுதான் சிங்க முகக் கிணறு"என்றாள். "என்னது? சிங்கத்தின் வயிற்றுக்குள் கிணறா?" என்று தன் இரு கைகளையும் கன்னத்தில் வைத்தபடி சோழர்களின் கலையை எண்ணி வியந்தாள். தமிழர்களின் கலைத் திறமையை கண்டு உள்ளம் மகிழ்ந்த அவள், அக்கலைக்கூடத்தைவிட்டு வரவே மனமில்லாமல் பாட்டியுடன் வீடு வந்து சேர்ந்தாள்.

இந்தியச் சிற்ப வரலாற்றில் கங்கை கொண்ட சோழபுரச் சிற்பங்கள் தமக்கென ஒரு தனியிடத்தைப் பெற்றுள்ளன. கலையழகும் புதுப்பொலிவும் கொண்ட சிற்பக் கூடமாகவே கங்கை கொண்ட சோழபுரம் அமைந்துள்ளது. யுனெஸ்கோ நிறுவனம் உலகப் பாரம்பரியச் சின்னமாகக் கங்கை கொண்ட சோழபுரத்தை அறிவித்துள்ளது நமக்கெல்லாம் பெருமைதானே!

என்ன, குழந்தைகளே, கயலினியோடு நாமும் அருமையும் பெருமையும் மிக்க கங்கை கொண்ட சோழபுரத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டோமே! இப்போது, உங்களுக்கும் மகிழ்ச்சிதானே. நாம் மீண்டும் சந்திப்போமா?

## கற்பவை கற்றபின்

- காலம் வென்ற கங்கை கொண்ட சோழபுரம் என்ற பாடப் பகுதியைச் சரியான ஒலிப்போடும் நிறுத்தக்குறிகளோடும் படித்துக்காட்டுக.
- கங்கை கொண்ட சோழபுரம் பற்றியும் அக்கோவிலிலுள்ள சிற்பங்களின் சிறப்புகளைப் பற்றியும் வகுப்பறையில் கலந்துரையாடுக.
- நீங்கள் கண்டுகளித்த சுற்றுலா இடங்களின் சிறப்புகளைப் பட்டியலிடுக.

## மதிப்பீடு

LHKNHK

**வினாக்களுக்கு விடையளிக்க.**

1. முதலாம் இராசேந்திர சோழனை ஏன் கங்கை கொண்ட சோழன் என்று அழைக்கிறோம்?
2. சிங்கமுகக் கிணறு – குறிப்பு எழுதுக.
3. சோழ கங்கப் பேரேரிக்கு நீர் எங்கிருந்து வருகிறது?
4. கங்கை கொண்ட சோழபுரம் கோவிலிலுள்ள வாயில்களின் பெயர்களைக் கூறுக.

**சிந்தனை வினா**

ஏரிகளும் குளங்களும் தூர் வாரப்படாமல் மண்மூடி இருந்தால் என்ன ஆகும்? கருத்துகளைக் குழுவில் பகிர்ந்து கொள்க.

# கற்கண்டு

## இணைப்புச்சொற்கள்

செழியன் : இளந்தமிழா, நாளை வெளியூர் செல்வதாகக் கூறினாயே? மறந்துவிட்டாயா? உன்னுடன் யாரெல்லாம் வருகிறார்கள்?

இளந்தமிழ் : மறக்கவில்லை, செழியா! நாளை நான் மட்டும்தான் செல்வதாக இருக்கிறேன். அதனால், என்னுடன் யாரும் வரவில்லை.

செழியன் : அப்படியானால் நீ கவனமாக இருக்கவேண்டும் அல்லவா?

இளந்தமிழ் : நான் ஏற்கெனவே சென்ற இடம்தான். ஆதலால், அச்சம் ஒன்றும் இல்லை.

செழியன் : அது சரி, இளந்தமிழ். மறுநாளே வந்துவிடுவாயா அல்லது வருவதற்கு நாளாகுமா?

இளந்தமிழ் : நான் திரும்பி வருவதற்கு இரண்டு நாளாகும். ஆகையால், தேவையான உடைகளைக் கொண்டு செல்கிறேன்.

செழியன் : ஏனெனில், இந்த வார இறுதியில், நமக்கு மட்டைப்பந்து போட்டி இருக்கிறது. அதனால்தான் கேட்கிறேன். நீ கட்டாயம் கலந்துகொள்ள வேண்டும். ஆகவே, மறந்துவிடாதே நண்பா!

குழந்தைகளே! மேற்கண்ட உரையாடலைப் படித்தீர்களா? உங்களிடம் வழக்கம்போல ஒரு வினா கேட்கலாமா? நீங்கள் படித்த உரையாடலில் எத்தனை இணைப்புச் சொற்கள் உள்ளன? கண்டுபிடியுங்கள் பார்க்கலாம். அட, மீண்டும் உரையாடலைப் படிக்கத் தொடங்கிவிட்டீர்களா?

**நாம் கண்டுபிடித்த இணைப்புச் சொற்களைப் பட்டியலிடலாமா?**

மட்டும், அதனால், அப்படியானால், ஆதலால், அல்லது, ஆகையால், ஏனெனில், ஆகவே

படித்தீர்களா? இவைபோன்ற இணைப்புச்சொற்கள், நாம் பேசும் பேச்சில் இயல்பாகவே இடம்பெறுகின்றன. இவற்றைப் பொருத்தமான இடங்களில் பயன்படுத்திப் பேசவும் எழுதவும் நாம் அறிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாதது. நாம் தங்குதடையின்றிப் பேசவும் எழுதவும் இணைப்புச்சொற்கள் பயன்படுகின்றன.

தொடர்களை இணைப்பதற்கு இணைப்புச்சொற்கள் பயன்படுகின்றன. இவற்றை இணைப்பிடைச் சொற்கள் எனவும் கூறுவர். தொடர்களில் பயன்படும் சில இணைப்புச்சொற்கள் பின்வருமாறு:

அதனால், அப்படியானால், அல்லது, அவ்வாறெனில், ஆனால், ஆகையால், ஆகவே, ஆதலால், ஆயினும், இருந்தபோதும், உம், எனவே, எனில், ஏனெனில், எவ்வாறெனில்

## கற்பவை கற்றபின்

- புத்தகப் பூங்கொத்து கதையொன்றில் இடம்பெற்றிருக்கும் இணைப்புச்சொற்களைக் கண்டறிக.
- வீட்டிலோ பள்ளியிலோ பிறர் பேசும்போது, என்னென்ன இணைப்புச்சொற்களைப் பயன்படுத்துகின்றனர்? அவற்றைப் பட்டியலிடுக.

## மதிப்பீடு

## படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

**அ. சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுக.**

1. 'அதனால்' என்பது ..............................................

அ) பெயர்ச்சொல் ஆ) வினைச்சொல்

இ) உரிச்சொல் ஈ) இணைப்புச்சொல்

2. கருமேகங்கள் வானில் திரண்டன .............................................. மழை பெய்யவில்லை. இத்தொடருக்குப் பொருத்தமான இணைப்புச்சொல்

அ) எனவே ஆ) ஆகையால்

இ) ஏனெனில் ஈ) ஆயினும்

3. கண்ணன் பேருந்தில் செல்ல விரும்பினான் ................................... அவன் நண்பன் மிதிவண்டியே போதும் என்றான்.

அ) அதனால் ஆ) ஆதலால்

இ) இருந்தபோதிலும் ஈ) ஆனால்

**ஆ. கீழ்க்காணும் தொடர்களை இணைத்து எழுதுக.**

1. நான் விளையாடச் சென்றேன். கண்ணன் விளையாடச் சென்றான். (உம்)

நானும் கண்ணனும் விளையாடச் சென்றோம்.

2. வள்ளி எழுதி முடித்துவிட்டாள். எழிலி எழுதவில்லை. (ஆனால்)

________________________________________

3. பெருமழை பெய்தது. ஏரி, குளங்கள் நிரம்பின. (அதனால்)

________________________________________

4. முகில் பள்ளிக்குச் செல்லவில்லை. அவனுக்கு உடல்நலமில்லை. (ஏனெனில்)

________________________________________

5. அறிவுவளர்ச்சிக்குக் கணினி தேவை. கணினியை இயக்கத் தெரிதல் வேண்டும்.(ஆகவே)

________________________________________

**இ. கீழ்க்காணும் உரைப்பகுதியில் பொருத்தமான இணைப்புச்சொற்களை இணைத்து எழுதுக.**

(ஆனால், அதனால், ஏனெனில், ஆகையால், எனவே, ஆகவே, பிற)

அடர்ந்த காடு ஒன்றில் பல விலங்குகள் வாழ்ந்து வந்தன. __________, சிங்கம் மட்டும் அரசனாக விளங்கியது. __________, அது பார்ப்பதற்கு மிடுக்கான தோற்றமுடையது. __________, அதனைக் கண்டு __________ விலங்குகள் அஞ்சின. __________ அது தனியாகக் குகையில் வசித்தது. __________, அது எப்போதும் விழிப்போடு இருந்தது. ஒருநாள் அதற்குப் பசித்தது. __________, குகைக்கு வெளியே வந்து இரைக்காகக் காத்திருந்தது. சிங்கத்தைப் பார்த்தவுடன் __________ விலங்குகள் அஞ்சியோடின. __________, அவற்றைச் சிங்கம் அடித்துவிடும் அல்லவா?

**ஈ. வினாக்களுக்கு விடையளிக்க.**

1. இணைப்புச் சொற்கள் எதற்குப் பயன்படுகின்றன?
2. இணைப்புச்சொற்களுள் நான்கு எழுதுக.
3. இணைப்புச்சொற்களைப் பயன்படுத்தி, எவையேனும் இரண்டு தொடர்களை எழுதுக.

## மொழியை ஆள்வோம்

### அ. கேட்டல்

- நாள்தோறும் வழிபாட்டுக்கூட்டத்தில் சொல்லப்படும் திருக்குறளைக் கேட்டறிக.
- வானொலி, தொலைக்காட்சி நிகழ்ச்சிகளில் ஒளிபரப்பாகும் கட்டடக்கலைகள் பற்றிய செய்திகளைக் கேட்டு அறிந்துகொள்க.

### ஆ. பேசுதல்

- நீங்கள் கண்டுகளித்த வரலாற்றுச் சிறப்புமிக்க இடங்கள் குறித்து 5 மணித்துளி பேசுக.
- நற்பண்புகள் கொண்ட சான்றோர் ஒருவரைப்பற்றி 5 மணித்துளி பேசுக.

### இ. படித்தல்

- திருக்குறளைப் பொருள் விளங்கப் படித்துக்காட்டுக.
- புத்தகப் பூங்கொத்தில் விளையாட்டுகள் தொடர்பான கதைகளைப் படித்துக்காட்டுக.

### ஈ. எழுதுதல்

**1. சொல்லக் கேட்டு எழுதுக.**

1. பண்பு உடையவராக வாழ்தல் நல்வழியாகும்.
2. திருக்குறள் "உலகப்பொதுமறை" என்றழைக்கப்படுகிறது.
3. கங்கை கொண்ட சோழபுரம் உலகப் பாரம்பரியச் சின்னமாகும்.

## 2. தொடரில் அமைத்து எழுதுக.

1. வெற்றி ________________________________________
2. நாகரிகம் ________________________________________
3. உழவுத்தொழில் ________________________________________
4. கலையழகு ________________________________________

## 3. உரைப்பகுதியைப் படித்து வினாக்களுக்கு விடை எழுதுக.

அரசர்க்குரிய அங்கங்களுள் தலைசிறந்தது படை. படைத்திறத்தால் அரசன் உட்பகையை அழிப்பான். புறப்பகையை ஒழிப்பான். முன்னாளில் தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, காலாட்படை என்னும் நாற்படையுடைய அரசன் மிகச் சிறந்தவனாக மதிக்கப்பெற்றான். நால்வகைப் படைகளுள் ஏற்றமும் தோற்றமும் பெற்றது யானைப்படை. போர்க்களத்தில் வீறுகொண்டு செம்போர் விளைப்பதும், மாற்றார்க்குரிய மாட மதில்களைத் தாக்கித் தகர்ப்பதும் யானைப்படையே ஆகும். வலிமை சான்ற அழகிய யானை, பட்டத்து யானை என்று பெயர் பெற்றது. உயர்ந்த மேனியும், ஓங்கிய நடையும், சிறந்த கொம்பும், பரந்த அடியும், சிறிய கண்ணும், செந்நிற வாயும் உடைய யானையே அப்பதவிக்கு உரியதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது.

1. நால்வகைப்படைகள் யாவை?
2. நால்வகைப் படைகளுள் ஏற்றமும் தோற்றமும் பெற்றது எது?
3. மாற்றார் என்னும் சொல்லின் பொருள் யாது?
4. உரைப்பகுதியில் இடம்பெற்றுள்ள வருணனைச் சொற்களை எடுத்து எழுதுக.
5. காலாட்படை – இச்சொல்லைப் பிரித்து எழுதுக.

## 4. கோடிட்ட இடத்தை நிரப்புக.

1. மக்களுக்கு உரிய பண்பில்லாதவர் ______________________ போன்றவர் என வள்ளுவர் கூறுகிறார்.
2. கங்கை கொண்ட சோழபுரம் ______________________ என்று புலவர்களால் போற்றப்பட்டது.
3. கம்பைக் குறிக்கும் வீரக்கலை ______________________ ஆகும்.

## 5. பிறமொழிச் சொற்களையும் பேச்சுத்தமிழையும் நீக்கிச் சரியாக எழுதுக.

1. டுமாரோ ஈவினிங் என் ஸிஸ்டர் ஊருக்குப் போவா.

   நாளை மாலை என் தங்கை ஊருக்குச் செல்வாள்.

2. ஷேர் ஆட்டோவில பைவ் பாசஞ்சர்ஸ் இருக்காங்க.

   ____________________________________.

3. என் வீட்டில் வாசிங் மிஷின் ரிப்பேராக இருக்கு.

   ____________________________________.

## 6. பொருத்துக.

1. தொடர்வண்டி –



2. மிதிவண்டி –



3. தானியங்கி –



4. இருசக்கர வண்டி –



5. மகிழுந்து –



## 7. பாடலை நிறைவு செய்க

திருவிழாவாம் திருவிழா
எங்கள் ஊர்த் திருவிழா
ஊர் கூடும் திருவிழா
உறியடிக்கும் திருவிழா

_______________

_______________

_______________

_______________







## 8. கீழ்க்காணும் குறட்பாக்களிலுள்ள சொற்களைப் பின்வருமாறு அட்டவணைப்படுத்துக.

நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டும் உலகு.

அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்
பண்புஉடைமை என்னும் வழக்கு.

| உயிர் எழுத்து இடம்பெறாத சொற்கள் | மெய் எழுத்து இடம்பெறாத சொற்கள் |
| --- | --- |
| நயனொடு<br>நன்றி | |

## நிறுத்தக்குறிகளை அறிந்துகொள்வோம்

| | | |
| --- | --- | --- |
| காற்புள்ளி | , | ஒரு தொடரில் பல பொருள்கள் அடுக்கி வரும்போது குறிக்கப்படுவது.<br>மா, பலா, வாழை ஆகியவற்றை முக்கனி என்பர். |
| அரைப்புள்ளி | ; | ஓர் எழுவாய், பல பயனிலைகளைப் பெற்று வரும்போது, ஒவ்வொரு பயனிலையின் இறுதியிலும் குறிக்கப்படுவது.<br>(எ.கா.) காளையின் கொம்பைப் பிடித்தல் ஆண்மை; வாலைப் பிடித்தல் தாழ்மை. |
| முற்றுப்புள்ளி | . | ஒரு தொடர் முடிவு பெற்றதனை உணர்த்துவதற்காகக் குறிக்கப்படுவது.<br>(எ.கா.) எனக்கு மட்டைப்பந்து விளையாடப் பிடிக்கும். |
| வினாக்குறி | ? | ஒரு தொடர் வினாப்பொருளைத் தரும்போது, குறிக்கப்படுவது.<br>(எ.கா.) அப்பா என்னால் பறக்க முடியாதா? |
| உணர்ச்சிக்குறி | ! | ஒரு தொடர் உணர்ச்சியை வெளிப்படுத்தும்போது குறிக்கப்படுவது.<br>(எ.கா.) என்னே! கங்கை கொண்ட சோழபுரக் கோவிலின் அழகு! |
| ஒற்றை மேற்கோள்குறி | ‘ ’ | ஒரு தொடரில் நூல் பெயர், கட்டுரை பெயர், பழமொழி முதலியன வந்தால் குறிக்கப்படுவது.<br>(எ.கா.) பிரபஞ்சனின் படைப்புகளுள் 'வானம் வசப்படும்' என்னும் நூல் குறிப்பிடத்தக்கது. |
| இரட்டை மேற்கோள் குறி | “ ” | ஒரு தொடரில் ஒருவர் கூறியதை நேர்கூற்றாகக் கூறும்போதும், ஒரு தொடரை மேற்கோளாகப் பயன்படுத்தும் போதும் குறிக்கப்படுவது.<br>(எ.கா.) "கண்வனப்பு கண்ணோட்டம்" என்று சிறுபஞ்சமூலம் குறிப்பிடுகிறது. |



# மொழியோடு விளையாடு

## 1. சுழலட்டையைப் பயன்படுத்திக் குறிப்புகளுக்கு விடை எழுதுக.

1. உடலுறுப்புகளுள் ஒன்று ___________
2. உப்புநீர் அதிகம் உள்ள இடம் ___________
3. அழியாத செல்வம் ___________
4. பொருள்கள் வாங்கும் இடம் ___________
5. சமையலுக்குப் பயன்படுவது ___________
6. வீடு கட்டப் பயன்படுவது ___________
7. ஓவியம் என்பது ___________
8. பாரதியார் இயற்றியவை ___________




## 2. நீக்குவோம்! சேர்ப்போம்!

1. விதையில் ஓரெழுத்தை நீக்கி, வேறோர் எழுத்தைச் சேர்க்க.







2. சபையில் ஓரெழுத்தை நீக்கி, வேறோர் எழுத்தைச் சேர்க்க.






3. விலையில் ஓரெழுத்தை நீக்கி, வேறோர் எழுத்தைச் சேர்க்க.






4. ஆசையில் ஓரெழுத்தை நீக்கி, வேறோர் எழுத்தைச் சேர்க்க.






5 கடையில் ஓரெழுத்தை நீக்கி, வேறோர் எழுத்தைச் சேர்க்க.






## நிற்க அதற்குத் தக



- பிற உயிரினங்களின் மீது அன்பு காட்டுவேன்.
- விளையாட்டு, உடலுக்கும் மனத்திற்கும் நல்லது என அறிந்துகொண்டேன்.
- நீர்த்தேக்கங்கள், வேளாண்மைக்கு உயிர் என்பதைப் புரிந்துகொண்டேன்.

## அறிந்து கொள்வோம்

### பண்பு

- தன்னை நோக்கி வரும் விருந்தினரை நாள்தோறும் போற்றுகின்றவனுடைய வாழ்க்கை, துன்பத்தால் வருந்திக் கெட்டுப் போவதில்லை.

வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதல் இன்று

## செயல் திட்டம்

தமிழர் கலைகள் குறித்துச் செய்தித்தாளில் வரும் படங்களையும் செய்திகளையும் தொகுத்து வருக.



பாடல்

இயல்
ஆறு

தொழில்/
வணிகம்

### கற்றல் நோக்கங்கள்

- உழைப்பின் மேன்மையை அறிந்துகொள்ளுதல்
- உழவுத்தொழிலே உலகத்தின் அச்சாணி எனப் புரிந்துகொள்ளுதல்
- இயற்கை வேளாண்மையைப் பற்றித் தெரிந்துகொள்ளுதல்
- செய்யும் தொழிலில் நேர்மையின் இன்றியமையாமையை உணர்ந்துகொள்ளுதல்
- அடுக்குத் தொடர்களையும் இரட்டைக் கிளவிகளையும் இடமறிந்து பயன்படுத்துதல்

## உழவுப் பொங்கல்

BATCWC

பொங்குக பொங்கல் பொங்குகவே
புதுவனம் நிறைந்தறம் தங்குகவே
எங்கணும் யாவரும் இன்பமுற
ஏர்த்தொழில் ஒன்றே தெம்புதரும்

உணவுப் பொருள்கள் இல்லாமல்
உயிரோ டிருப்பது செல்லாது
பணமும் அதுதரும் நலனெல்லாம்
பயிர்கள் விளைப்பதன் பலனேயாம்

உழவுத் தொழில்தான் உணவுதரும்
உடையும் அதனால் அணியவரும்
பழகும் மற்றுள தொழில்யாவும்
பயிர்த்தொழில் இன்றேல் விழலாகும்

தங்கமும் வெள்ளியும் இருந்தாலும்
தானியம் ஒன்றே விருந்தாகும்
இங்கிதன் உண்மையை உணர்ந்திடுவோம்
ஏர்த்தொழில் மிகுந்திடத் துணிந்திடுவோம்

உழவே செல்வம் உண்டுபண்ணும்
உழைப்பே இன்பம் கொண்டுவரும்
உழவைத் தொழுதிட வருநாளே
உற்றஇப் பொங்கல் திருநாளாம்

ஏழையும் செல்வரும் இங்கிதமாய்
இசைந்துளம் களித்திடும் பொங்கலிது
வாழிய பயிர்த்தொழில் வளம்பெருகி
வையகம் முழுதும் வாழியவே

– நாமக்கல் வெ. இராமலிங்கனார்





## சொல்பொருள்

எங்கணும் – எங்கும்  ஏர்த்தொழில் – உழவுத்தொழில்  விழலாகும் – வீணாகும்

களித்து – மகிழ்ந்து  இசைந்து – ஏற்றுக்கொண்டு  வையகம் – உலகம்

## பாடல் பொருள்

உழவுத்தொழிலின் மேன்மையை இப்பாடல் விளக்குகின்றது. உழவின் சிறப்பால் பொங்குகின்ற பொங்கலை அனைவரும் கொண்டாடி மகிழவேண்டும் எனக் கூறுகின்றது. எங்கும் யாவரும் இன்பமாய் வாழ்வதற்கு ஏற்ற தொழில் ஏர்த்தொழிலே. உணவுப்பொருள்கள் இல்லையென்றால் நாம் வாழ்வது அரிது. பயிர்கள் விளைவிப்பதால் செல்வம் சேரும்; உணவு கிடைக்கும்; உடையும் தரும். மற்ற தொழில்களைக் கற்றுக்கொண்டாலும், பயிர்த்தொழில் இல்லையெனில் எல்லாம் வீணாகும். தங்கம், வெள்ளி போன்றவற்றை நாம் உண்ணமுடியாது. உணவுப்பயிர்களே நமக்கு உணவாக அமையும். இன்பத்தைத் தருவதும் உழவுத்தொழிலே ஆகும். பொருளில்லாதவரும் செல்வமுடையவரும் இணக்கமாய் வாழும் திருநாள் பொங்கல் நாளே. ஆகையால், ஏற்றம் தரும் ஏர்த்தொழிலின் பெருமையை உணர்ந்து அனைவரும் உழவுப் பொங்கலிட்டுப் பயிர்வளம் பெருக்குவோம்.

## நூல் குறிப்பு

உழவுப் பொங்கலின் சிறப்பை விளக்கும் இப்பாடலை இயற்றியவர், நாமக்கல் வெ. இராமலிங்கனார். அவருடைய கவிதைத் தொகுப்பிலிருந்து இப்பாடல் எடுத்தாளப் பெற்றுள்ளது. இந்திய விடுதலை குறித்தும், காந்தியடிகள் குறித்தும் பல பாடல்களைப் பாடியுள்ளார். காந்தியக் கவிஞர் என்றும் போற்றப்படுகிறார். இவருடைய 'கத்தியின்றி இரத்தமின்றி யுத்தமொன்று வருகுது' என்னும் பாடல் வரி மிகவும் புகழ்பெற்றதாகும். 'தமிழன் என்றோர் இனமுண்டு' என்றும் 'தமிழன் என்று சொல்லடா, தலை நிமிர்ந்து நில்லடா' என்றும் அவர் பாடிய பாடல் வரிகள் என்றும் நிலைத்திருப்பவை. இவர், தமிழகத்தின் முதல் அரசவைக் கவிஞராக இருந்துள்ளார்.

## கற்பவை கற்றபின்

- உழவுத் தொழிலின் பெருமையை உணர்ந்து போற்றுக.
- பாடலை ஓசைநயத்துடன் பாடி மகிழ்க.
- பாடலிலுள்ள நயங்களைப் பாராட்டுக.
- உழவு நடக்கும் இடத்திற்குச் சென்று, செய்தி திரட்டுக.

மதிப்பீடு

# படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

**அ. சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுவோமா?**

LWUMH9

1. வையகம் என்பதன் பொருள்

அ) ஊர் ஆ) வயல்

இ) உலகம் ஈ) கிராமம்

2. நலனெல்லாம் – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது

அ) நலன்+ எல்லாம் ஆ) நல + னெல்லாம்

இ) நலன் + னெல்லாம் ஈ) நலம் + எல்லாம்

3. நிறைந்தறம் – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது _______________

அ) நிறைந்து + அறம் ஆ) நிறைந்த + அறம்

இ) நிறை + அறம் ஈ) நிறை + தறம்

4. 'இன்பம்' – இச்சொல்லுக்குரிய எதிர்ச்சொல் _____________

அ) மகிழ்ச்சி ஆ) களிப்பு

இ) கவலை ஈ) துன்பம்

**ஆ. பாடலில் முதல் எழுத்து ஒன்றுபோல் வரும் சொற்களை எழுதுக.**

_______________ _______________

_______________ _______________

**இ. பாடலில் இரண்டாம் எழுத்து ஒன்றுபோல் வரும் சொற்களை எடுத்து எழுதுக.**

_______________ _______________

_______________ _______________

**ஈ. பாடலில் ஒரே ஓசையில் முடியும் சொற்களை எடுத்து எழுதுக.**

_______________ _______________

_______________ _______________

**உ. வினாக்களுக்கு விடையளிக்க.**

1. அனைவரும் இன்பமுடன் வாழ்வதற்குத் தெம்பு தரும் தொழில் எது?
2. உழவுத்தொழிலால் என்னென்ன நன்மைகள் ஏற்படுகின்றன?
3. பொங்கலை நாம் எவ்வாறு கொண்டாட வேண்டுமெனக் கவிஞர் கூறுகிறார்?

**ஊ. சிந்தனை வினா**

'உழவர், சேற்றில் கால் வைத்தால்தான் நாம் சோற்றில் கை வைக்கமுடியும்' இதுபற்றி உங்கள் கருத்தென்ன?

இயல்
ஆறு

உரைநடை

# விதைத் திருவிழா




காலை வழிபாட்டுக் கூட்டத்தில், தலைமையாசிரியர் கூறிய செய்தி, மாணவர்களின் உள்ளத்தை மகிழ்ச்சியில் ஆழ்த்தியது. காரணம், அருகிலுள்ள மேல்நிலைப் பள்ளியில் நடைபெறும் விதைத் திருவிழாவிற்கு அடுத்த வாரம் அவர்களை அழைத்துச் செல்லப் போகிறார்கள். அன்று முழுவதும் அங்கு நடைபெறும் நிகழ்வுகளைத் தம் நண்பர்களுடன் கண்டு மகிழலாம் அல்லவா!

விதைத் திருவிழா தொடர்பான துண்டு விளம்பரத் தாள்களைத் தலைமையாசிரியர் வகுப்பாசிரியர்களிடம் வழங்கினார். நம் பள்ளியிலிருந்து விதைத் திருவிழாவில் மாணவர்கள் பங்கேற்பதற்கான ஏற்பாடுகளைச் செய்யுமாறு கூறினார்.

தலைமையாசிரியரிடமிருந்து பெற்ற விளம்பரத் தாள்களை, ஆசிரியர்கள் மாணவர்களுக்கு வழங்கினர். துண்டு விளம்பரத்தாளிலுள்ள செய்திகளைப் படித்துப் பார்க்கச் செய்தனர்.

மாணவர்கள், விளம்பரத்தைப் படித்துப் புரிந்துகொண்டனர். விதைத் திருவிழாவில் தங்களுடைய பள்ளி சார்பாக என்னென்ன படைப்புகளை வழங்கலாம் எனக் குழுவில் கலந்துரையாடினர். பின்னர், தாங்கள் திரட்டிய படைப்புகளை ஆசிரியரிடம் காண்பித்து அனுமதி பெற்றனர். விதைத் திருவிழாவுக்குச் செல்லும் நாளை ஆவலுடன் எதிர்பார்க்கத் தொடங்கினர்.




மாணவர்கள் எதிர்பார்த்த நாளும் வந்தது. பள்ளியிலிருந்து அழைத்துச் செல்ல, வண்டி ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஆசிரியர்களின் கனிவான பேச்சு, மாணவர்களுக்கு உற்சாகம் தந்தது.

**ஆசிரியர் :** மாணவர்களே, நாம் விதைத் திருவிழா நடைபெறும் அரங்கை நெருங்கி விட்டோம். நமது படைப்புகளைக் கண்காட்சியில் வைப்பதற்கு நான் உதவுகிறேன். வாருங்கள்.

**ரமணன்:** எனக்கு இந்த விதைத் திருவிழா பெருமகிழ்ச்சியைத் தருகிறது. மாலா, ரெஹானா விதைகளையெல்லாம் பாருங்களேன். இத்தனை வகைகளா? வியப்பாக இருக்கிறதே!

**மாலா:** ஆமாம், ரமணா! வகை வகையான விதைகள் என்பதைவிட, இந்த விதைகளை நாம் எப்படி சேகரிக்க வேண்டும், அதை எவ்வாறு பாதுகாக்க வேண்டும், அவற்றை எவ்வாறு முறைப்படி பயன்படுத்த வேண்டும் என்பதையும் எழுதி வைத்துள்ளார்கள். விதைகள் எல்லாம் தரமானவையாக உள்ளன. இந்த விதைகள் மூலம் கிடைக்கும் சத்துக்கள், மருத்துவப் பயன்கள் பற்றியும் விளக்கமாகக் கூறுகிறார்கள், மேலும், விளக்கப் பலகைகளும் வைத்திருப்பது, மிகவும் பயனுள்ள வகையில் உள்ளது.

**மணிமொழி:** முகிலா, நெல் விதைகளின் பெயர்களைப் பார்த்தாயா? நாட்டு நெல் ரகங்களான மாப்பிள்ளை சம்பா முதலான பல்வேறு மரபு நெல் விதைகள், நாட்டுக்கம்பு, குதிரைவாலி, சோளம் போன்ற சிறு

நிலவளத்தைக் காப்போம்! நீர்வளத்தைப் பெருக்குவோம் ! பூமித்தாயைப் போற்றுவோம்.!

**இயற்கை வேளாண்மையின் இன்றியமையாமை**

350க்கும் மேற்பட்ட பாரம்பரிய விதைகள் சேகரிப்பு

- இயற்கை வேளாண் பொருள்கள்
- இயற்கை இடு பொருள்கள்
- இயற்கை பருத்தி ஆடைகள்
- இயற்கை கைவினைப் பொருள்கள்
- மண்ணோடு மட்கக்கூடிய பொருள்கள்
- மண்ணின் ஊட்டச்சத்து நீர் மேலாண்மை
- சூழலியல்
- தோட்டக்கலை
- பண்ணை அமைப்பு
- உணவுப் பாதுகாப்பு
- இயற்கை வேளாண்மை

அனைவரையும் சுண்டி இழுக்கும் 27 அரங்கங்கள்

தானியங்களும் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. மேலும் கடலை, உளுந்து, முந்திரி, நாட்டுப்பருத்தி விதைகள், சிறுதானிய விதைகள் மட்டுமல்லாமல் அரிய மூலிகைச் செடிகளும் வைக்கப்பட்டுள்ளன. இவற்றையெல்லாம் பார்ப்பதை நமக்குக் கிடைத்த அரிய வாய்ப்பாகக் கருதுகிறேன்.

பாரதி: மணிமொழி அதோ, அங்கே பார்! அந்த அரங்கில் இயற்கை இடுபொருள்கள் இயற்கை உணவுகள், வீட்டுத்தோட்டம் அமைப்பதற்கான குறிப்புகளும் தருகிறார்கள். வாங்க, வாங்க, என்ன சொல்கிறார்கள் எனக் கேட்போம்.

மணிமொழி: ரமணா, பாதிப்பு என்று இந்த அரங்கத்தில் எழுதியிருக்கே, என்னவாக இருக்கும்?

ரமணா: இரசாயன விதைகள், இரசாயனப் பூச்சி மருந்துகள் பயன்படுத்துவதால் ஏற்படும் விளைவுகளைத்தாம் பாதிப்பு என்று சொல்கிறார்கள். இதனால், மண்ணின் தன்மை கெடுகிறது. இதனைத் தடுக்கும்வகையில் இயற்கை முறையில் வேளாண்மை செய்ய வேண்டும் என்பதே அதன் பொருள்.

ரெஹானா: பாரதி, இங்கே பார்! சமையல் பாத்திரங்கள். இவை சாதாரண பாத்திரங்கள் அல்ல; பழங்காலத்தில் பயன்படுத்தப்பட்ட செம்பு, மரத்தாலான சமையல் பாத்திரங்கள், கருவிகள். இவற்றையும் நாம் பார்வையிடுவதற்காக வைத்துள்ளனர்.

ஆசிரியர்: மாணவச் செல்வங்களே, அனைத்துக் கூடங்களையும் பார்த்தீர்களா? இந்த விதைத் திருவிழா, உங்களுக்கு மிகுந்த பயனைத் தந்திருக்குமென நினைக்கிறேன்.



(மாணவர்கள் அனைவரும் "ஆமாம், ஐயா!" என்று கூறுகின்றனர்.)

பாரதி: ஐயா! அங்கே பாருங்கள். இயற்கை உணவுப்பொருள்கள் என்று எழுதப்பட்ட அந்த அரங்கத்தில் எல்லாரும் ஏதோ சுவைக்கிறார்கள். நாமும் அங்கே செல்லலாமா?

மணிமொழி: விழாவிற்கு வந்தவர்களுக்கு இயற்கை முறையில் தயாரித்த நவதானிய உணவுகளான இனிப்பு உருண்டை, பிட்டு, பொங்கல், கேழ்வரகுக் கூழ், கேழ்வரகு அடை, முளைகட்டிய பாசிப்பயறு, நவதானிய சுண்டல். கொண்டைக்கடலை, தட்டைப்பயறு, மொச்சை போன்ற தின்பொருள்களை வழங்குகிறார்கள்

ஆசிரியர்களுடன் மாணவர்களும் அந்த அரங்கில் நுழைந்தார்கள். இயற்கை உணவுகளைச் சுவைத்து மகிழ்ந்தார்கள்.

"இந்த **விதைத் திருவிழா** எங்களுக்குப் பயனுள்ள நிகழ்ச்சியாக இருந்தது. இந்த நாள் எங்களுக்கு இனிய நிகழ்வாகவும் அமைந்தது. இங்குப் பார்த்தவற்றை நாங்கள் அனைவருக்கும் எடுத்துச் சொல்வோம்" என்று மாணவர்கள் அனைவரும் மகிழ்ச்சி பொங்கக் கூறினார்கள். விதைத் திருவிழாவுக்கு ஏற்பாடு செய்த தலைமையாசிரியருக்கும் ஆசிரியர்களுக்கும் நன்றி கூறி, மீண்டும் தங்களுடைய பள்ளிக்குத் திரும்பிச் சென்றார்கள்.

## கற்பவை கற்றபின்

- இயற்கை வேளாண்மையின் சிறப்புகளைப் பற்றி, வழிபாட்டுக்கூட்டத்தில் பேசுக.
- இயற்கை உணவுப்பொருள்களின் படங்களைத் திரட்டித் தொகுப்பேடு உருவாக்குக.
- 'இயற்கை உரம் பயன்படுத்துவோம், இனிமையாய் வாழ்வோம்' என்னும் தலைப்பில் கட்டுரை எழுதுக.
- உங்கள் இருப்பிடத்திற்கு அருகிலுள்ள இயற்கை விதைப் பண்ணைகளுக்குச் சென்று, செய்தி திரட்டுக.
- உங்கள் பள்ளியில் நடைபெறும் ஏதேனும் ஒரு விழாவுக்கு மாதிரி அழைப்பிதழ்/ துண்டு விளம்பரம் உருவாக்கி மகிழ்க.

மதிப்பீடு

# படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

## அ. சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுவோமா?

1. அனுமதி – இச்சொல் குறிக்கும் பொருள்-------------

அ) கட்டளை  ஆ) இசைவு  இ) வழிவிடு  ஈ) உரிமை

2. விளம்பரத்தாள்கள் – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது-----------

அ) விளம்பர + தாள்கள்  ஆ) விளம்புரத்து + தாள்கள்
இ) விளம்பரம் + தாள்கள்  ஈ) விளம்பு + தாள்கள்

3. ஆலோசித்தல் – இச்சொல்லுக்குரிய பொருள்------------

அ) பேசுதல்  ஆ) படித்தல்  இ) எழுதுதல்  ஈ) சிந்தித்தல்

4. தோட்டம் + கலை– இச்சொற்களைச் சேர்த்து எழுதக் கிடைப்பது----------

அ) தோட்டம்கலை  ஆ) தோட்டக்கலை
இ) தோட்டங்கலை  ஈ) தோட்டகலை

5. பழங்காலம் இச்சொல்லுக்குரிய எதிர்ச்சொல்-----------------------

அ) பழைய காலம்  ஆ) பிற்காலம்
இ) புதிய காலம்  ஈ) இடைக்காலம்

## ஆ. கீழ்க்காணும் சொற்களைச் சேர்த்து எழுதுக.

அ) வழிபாடு + கூட்டம் – ------------------
ஆ) வீடு + தோட்டம் – ------------------

## இ. கீழ்க்காணும் சொற்களைப் பிரித்து எழுதுக.

அ) அழைப்பிதழ் = ------ + -------
ஆ) விதைத்திருவிழா = ------ + -------

4WZ3I3

## ஈ. கோடிட்ட இடத்தை நிரப்புக

அ) விதைத்திருவிழாவில் அமைக்கப்பட்டிருந்த அரங்குகளின் எண்ணிக்கை--------.
ஆ) விதைகள்---------ஆனவையாக இருத்தல் வேண்டும்.
இ) கொண்டைக்கடலை என்பது, ----------ஒன்று.

## உ. வினாக்களுக்கு விடையளிக்க.

1. மாணவர்களை எங்கே அழைத்துச் செல்வதாகத் தலைமையாசிரியர் கூறினார்?
2. ஆசிரியர் வழங்கிய துண்டு விளம்பரத்தாளில் என்ன செய்தி இருந்தது?
3. 'பாதிப்பு' என்று எழுதப்பட்ட அரங்கத்தில் என்ன செய்தி சொல்லப்பட்டது?
4. நவதானியங்களுள் ஐந்தின் பெயரை எழுதுக.

## ஊ. சிந்தனை வினா

செயற்கை உரங்கள், மண்ணின் வளத்தைக் கெடுக்கும் எனில், அதற்கு மாற்றாக நாம் என்ன செய்யலாம்?

துணைப்பாடம்

இயல் ஆறு

# நேர்மை நிறைந்த தீர்ப்பு

பல ஆண்டுகளுக்குமுன் தென் பாண்டிய நாட்டை மங்கையர்க்கரசி என்பவர் ஆண்டு வந்தார். அவர், நீதியும் நேர்மையும் மிக்கவராக விளங்கினார். அவர் ஆட்சியில் மக்கள் குறைவின்றி வாழ்ந்து வந்தனர்.

ஒருநாள், கிராமத் தலைவர் ஒருவர் அரசியிடம் ஒரு வழக்கைக் கொண்டு வந்தார். அவருடன் நான்கு பேர்களும் அரண்மனைக்கு வந்தனர். அரசியை வணங்கிய கிராமத் தலைவர், தம் வழக்கை எடுத்துரைத்தார்.

"செல்வந்தர் ஒருவர், அரிய சாதனை புரிபவருக்கு நூறு பொற்காசுகள் கொண்ட பொற்கிழி ஒன்றைப் பரிசளிப்பதாக அறிவித்து, அதனைப் பஞ்சாயத்தாரிடம் கொடுத்தார். அந்தப் பொற்கிழியைப் பெறுவதற்கு இவர்கள் நால்வரும் போட்டி போட்டனர். நால்வருடைய அரிய சாதனையைக் கேட்ட எங்கள் ஊர்ப் பஞ்சாயத்தினர், யாருடைய சாதனை சிறந்தது என்று முடிவு கட்ட முடியாமல், பரிசுத் தொகையை நால்வருக்கும் சரிசமமாகப் பிரித்துக் கொடுக்கலாம் என முடிவெடுத்தனர்.



ஆனால், இந்நால்வரும் அதற்கு உடன்பட மறுத்தனர். அவரவர்க்கும் தங்கள் சாதனையே பெரியது என்று கூறி, பரிசுத் தொகை முழுமையாகத் தங்களுக்கே சேர வேண்டும் என்றனர். அதனால், தாங்களே இவர்கள் செய்த சாதனையைக் கேட்டு விசாரித்து, பொற்கிழியை யாருக்குக் கொடுப்பது என்று சரியான தீர்ப்பளிக்க வேண்டும்" என்று பணிவுடன் கேட்டுக் கொண்டார் அந்தப் பஞ்சாயத்து தலைவர்.

அரசியார் அந்நால்வரையும் பார்த்தார்., "ஒவ்வொருவராக உங்கள் சாதனையைச் சொல்லுங்கள்," என்று ஆணையிட்டார்.

முதலில், முருகேசன் என்பவர் தம் சாதனையைச் சொல்லத் தொடங்கினார்; "நான் ஒரு வியாபாரி. மளிகைக் கடை வைத்துள்ளேன். வியாபாரத்தில் முழுக்கவனத்தோடு ஈடுபட்டிருந்தபோது, சிறுமி ஒருத்தி ஒருநாள் என் கடைக்கு வந்தாள். கடையில் சில பொருள்களை வாங்கினாள். நான் வேலையில் மும்முரமாக இருப்பதைக் கவனித்துவிட்டுப் பணம் கொடுக்காமல் நழுவப் பார்த்தாள். அப்போது தெருவில் வந்த மாடு, அவளை ஆவேசமாக முட்டுவதற்குப் போனது. நான் பாய்ந்துசென்று அவளைக் காப்பாற்றினேன். இத்தனைக்கும் அவள் தந்தைக்கும் எனக்கும் நிலத்தகராறு உண்டு. அடிதடிவரைகூடப் போய்விட்டோம். அப்படியிருந்தும் அவளை நான் காப்பாற்றினேன். அதைக் கண்ட ஊர்மக்கள் எல்லாரும் என்னைப் பாராட்டினார்கள். ஓர் உயிரைக் காப்பாற்றியது அதுவும் பகைவனின் மகளைக் காப்பாற்றியது பெரிய சாதனை இல்லையா? அதனால்தான் பொற்கிழியை எனக்கே கொடுக்க வேண்டும் என்கிறேன்."என்று சொன்னார் முருகேசன்.

இரண்டாவதாக, கண்ணன் என்பவர் தம் சாதனையைச் சொல்லலானார்."நான் ஒரு கவிஞன். பல பாடல்களும் கவிதைகளும் இயற்றியுள்ளேன். ஒரே இரவில், உலகம் வியக்கும்படியாக நூறு செய்யுள்களைக் கொண்ட 'ஆனந்த வாழ்வு' என்ற காவியத்தைப் படைத்துள்ளேன். மக்கள் எல்லாரும் அதை விரும்பிப் படிக்கிறார்கள். ஒரே இரவில் இப்படி ஒரு காவியத்தைப் படைத்தது ஓர் இலக்கிய சாதனை அல்லவா? எனவே பொற்கிழி பெற முற்றிலும் தகுதி உள்ளவன் நான் ஒருவனே!" இவ்வாறு தன்னிலை விளக்கம் அளித்தார் கவிஞர்.

அடுத்ததாக மூன்றாவது ஆள், கல்தச்சர் கந்தசாமி. அவர் தம் சாதனையைப் பற்றிச் சொல்லத் தொடங்கினார். "கரடுமுரடான பாறையையும் வெட்டிக்கொண்டு வந்து, அழகிய சிலையாகவும் எழிலான தூண்களாகவும் செய்யும் கல் தச்சன் நான். சிற்றுளியைக் கையில் எடுத்தால் போதும், அது பேசும்; பாடும்; நடனமாடும். பாறையைக் குடைந்து குடைவரைக் கோவில்களும் மண்டபங்களும் செய்துள்ளேன். நான் செதுக்கிய குகைக் கோவிலைக் கண்டு வியந்து பாராட்டாதவர்களே இல்லை. அது என் அரிய சாதனை. அதில் என்னை வெல்ல எவருமில்லை. எனவே, பொற்கிழியை எனக்குக் கொடுப்பதே பொருத்தம்!" என்றார் கல்தச்சர் கந்தசாமி.

நான்காவதாக முதியவர் ஒருவர் வந்தார். அவர், தமது சாதனை என்ன என்று சொல்லலானார். "நான் சாதாரண ஓர் ஏழை விவசாயி. என் மூதாதையர் வழியில் எனக்குக் கிடைத்த ஒரு காணி நிலத்தை நன்கு உழுது பயிரிட்டுப் பிழைத்து

வருகிறேன். என் மனைவி காலமாகிவிட்டாள். என் மகளும் நானும்தான் வயலில் உழைத்து வாழ்க்கை நடத்துகிறோம். இருவரும் பாடுபட்டு வேலை செய்ததால், கடந்த ஆண்டைவிட இந்த ஆண்டு மூன்று மடங்கு விளைச்சல் கண்டுள்ளது. என் குடும்பத்திற்குத் தேவையான நெல் போக, மீதியைப் பத்துக் குடும்பத்திற்கு விற்றேன். ஒரு காணி நிலத்தைக் கொண்டு பத்துக் குடும்பத்தைக் காப்பாற்றியது என் சாதனைதானே?" என்று கேட்டார் முதியவர்.

மங்கையர்க்கரசி சற்று யோசித்தார். பிறகு தம் தீர்ப்பைக் கூறலானார்.

"தன் உயிரையோ, பகையையோ பொருட்படுத்தாமல், பாய்ந்துசென்று பகையாளி மகளைக் காப்பாற்றியது அரிய சாதனைதான். பகைவருக்கும் நட்பு காட்டுவது நமது பண்பாடு. "இராவணனைப் பார்த்து, இன்றுபோய் நாளை வா!" என்றதும் "சுற்றி நில்லாதே போ பகையே, துள்ளி வருகுது வேல்" என்ற பாடல் வரிகளும் பண்பாட்டையே வெளிப்படுத்துகின்றன. எனவே, பகைவரின் மகளை நீர் காப்பாற்றியது, நமது பண்பாட்டுச் செயலே தவிர, புதிய சாதனை ஏதுமில்லை".

"அடுத்து, கவிஞர் ஒரே இரவில் நூறு கவிதைகளைப் புனைந்து காவியம் படைத்துள்ளதாகச் சொன்னார். சோழ நாட்டில் இருந்த பெண் கவி ஒருவர், ஒரே இரவில் ஆயிரம் கவிதை புனைந்து காவியம் படைத்தது பழைய செய்தி. எனவே, ஒரே இரவில் நீர் நூறு கவிதை புனைந்து காவியம் படைத்ததை அரிய சாதனையாக ஏற்க முடியாது".



"அடுத்ததாகக் கல் தச்சர், பாறையைக் குடைந்து பார்ப்போர் வியக்கும்வகையில் குடைவரைக் கோவில் உருவாக்கியதை ஒரு சாதனையாகச் சொன்னால், மாமல்லபுரம் கோவில்களும், திருச்சி பல்லவர்காலக் கோவில்களும் அழகிய குடைவரைக் கோவில்களே! எனவே, இவர் செய்தது புதுமையான சாதனை அன்று".

நாலாவதாக, முதிய விவசாயி, தமது ஒருகாணி நிலத்தில் மும்மடங்கு நெல் உற்பத்தி செய்து சாதனை படைத்துள்ளார். உண்மையில் இது பெரிய சாதனைதான். எந்த அளவிற்குப் பாடுபட்டு உழைத்திருந்தால், இந்த அளவு பலன் காண முடியும்! அவரது உழைப்பால், மேலும் பத்துக் குடும்பங்களுக்குப் பயன் கிடைத்துள்ளது. விவசாயிகள் ஒவ்வொருவரும் இப்படிச் சாதனை செய்தால் நாட்டில் பஞ்சம், பசி இருக்காது; நோய்நொடி இருக்காது; வறுமையும் இருக்காது. எனவே, பொற்கிழி பெறத் தகுதியானவர் இவர்தாம். இவருக்கே பொற்கிழியை வழங்க ஆணையிடுகிறேன்" என்று நேர்மை நிறைந்த தீர்ப்பை வழங்கினார் மங்கையர்க்கரசி. அவரது தீர்ப்பைக் கேட்டு, மக்கள் எல்லாரும் அவரை வாழ்த்தினர்.

## கற்பவை கற்றபின்

- நேர்மையால் உயர்ந்தவர்களின் வாழ்க்கை வரலாற்றை அறிந்துகொள்க.
- நேர்மை நிறைந்த தீர்ப்பு கதையை நாடகமாக நடித்துக்காட்டுக.

## மதிப்பீடு

F4RE4B

### வினாக்களுக்கு விடையளிக்க.

1. அரசியிடம் கிராமத் தலைவர் கொண்டுவந்த வழக்கு யாது?

2. முருகேசன் தாம் என்ன சாதனை புரிந்துள்ளதாகக் கூறினார்?

3. விவசாயியின் சாதனைதான் உயர்ந்தது என்று அரசி கூறக் காரணம் என்ன?

### சிந்தனை வினா

நண்பர்கள் உன்னை வீட்டில் வந்து சந்திக்கின்றனர். அவர்கள் சென்றபிறகு, பணப்பை ஒன்று நாற்காலியில் இருப்பதைக் காண்கிறாய். இந்நிலையில் நீ செய்யப்போவது என்ன?

அ) பணப்பையை உரியவரிடம் கொடுப்பேன்

ஆ) உரியவரே தேடிக்கொண்டு வரட்டும் எனக் காத்திருப்பேன்.

இ) நான் பார்த்ததால், எனக்குத்தான் உரியது என வைத்துக்கொள்வேன்.

# கற்கண்டு

## அடுக்குத் தொடர், இரட்டைக்கிளவி

தேனிசை: அடடே, செல்வியா? வா! வா! வா! எப்படி இருக்கிறாய்?

செல்வி: (**கலகலவென** நகைத்தவாறே) ஓ! நன்றாக இருக்கிறேன். அத்தை எங்கே?

தேனிசை: அவர்கள் வேலைக்குச் சென்றிருக்கிறார்கள்.

(அப்போது **தடதட வென** அங்கே ஓடி வருகிறான் தேனிசையின் தம்பி மதியழகன்)

செல்வி: மதி, ஏன் இப்படி **படபடவென** மூச்சு இரைக்க ஓடி வருகிறாய்? என்ன ஆயிற்று?

மதியழகன்: அக்கா, அங்கே **பாம்பு, பாம்பு**……

தேனிசை: மதி, விளையாடாதே, அன்றும் இப்படித்தான் **தீ, தீ, தீ** என்று சொல்லிக்கொண்டே ஓடி வந்தாய். ஆனால், அப்படி எதுவும் இல்லை. **போ, போ, போ** இப்படியெல்லாம் பொய் சொல்லாதே.

மதியழகன்: அக்கா, உண்மையாகத்தான் சொல்கிறேன். நீங்களே வந்து பாருங்கள்.

செல்வி: தேனிசை, தம்பி **திரும்பத் திரும்பச்** சொல்வதைப் பார்த்தால் பொய் சொல்வதுபோல் தெரியவில்லையே, **வா, வா**, போய்ப் பார்க்கலாம்.

(அவர்கள் வெளியில் வந்து பார்த்தபோது, அருகிலிருந்த மரத்தின்மீது பாம்பொன்று **சரசரவென** ஊர்ந்து கொண்டிருந்தது. அதன் உடல் **பளபளவென** வெயிலில் மின்னியது).

மேற்கண்ட உரையாடலில் சில சொற்கள் தடித்த எழுத்துகளில் உள்ளன. அவை என்னவென்று அறிந்துகொள்வோமா?

சில சொற்கள் எப்போதும் இரண்டாகவே வரும். அவற்றைத் தனித்தனியாகப் பிரித்தால் பொருள் தரா. உரையாடலில் **கலகல, தடதட, படபட, பளபள** என வரும் சொற்களில் **கலகல** என்பதைக் **கல** எனத் தனியாகப் பிரித்தால் பொருள் இல்லை. அதனால், இம்மாதிரியான சொற்கள் எப்போதும் இரட்டைச் சொல்லாகவே வரும். ஆகவே, இவற்றை இரட்டைக்கிளவி என்பர்.

இரட்டை என்பது, இரண்டு. கிளவி என்பது, சொல். இரட்டைக் கிளவி ஒலிக்குறிப்பு, விரைவுக்குறிப்பு, வியப்புக்குறிப்பு, சினக்குறிப்பு போன்ற பலவகைக் குறிப்புகளை உணர்த்தும்.

சில சொற்கள் இரண்டாகவோ மூன்றாகவோ ஏன் நான்காகவோ கூட அடுக்கி வரலாம். ஆனால், அவற்றைத் தனித்தனியாகப் பிரித்தாலும் பொருள் தரும். உரையாடலில் **வா வா வா, பாம்பு பாம்பு, தீ தீ தீ, போ போ போ, திரும்பத் திரும்ப** போன்ற சொற்கள் வந்துள்ளன. இவற்றைத் தனித்தனியாகப் பிரித்தாலும் பொருள் தரும். இவற்றை அடுக்குத்தொடர் என்பர்.

வா, வா, வா என மூன்றுமுறை அடுக்கிவரும் சொல்லை வா எனத் தனியே பிரித்தாலும் அஃது ஓரெழுத்து ஒருமொழியாய் வருகையைக் குறிக்கிறது. அடுக்குத்தொடர் அசைநிலை, விரைவு, வெகுளி, அச்சம், உவகை, அவலம், இசைநிறை முதலிய பொருள்களைக் குறித்து வரும்.

- ☞ எப்போதும் இரட்டைச் சொல்லாகவே வருவது, இரட்டைக்கிளவி.
- ☞ ஒரு சொல்லே இரண்டு அல்லது அதற்குமேல் அடுக்கி வருவது, அடுக்குத்தொடர்.

| இரட்டைக்கிளவி | அடுக்குத்தொடர் |
|---|---|
| இரட்டைச் சொல்லாக வரும் | ஒரே சொல் மீண்டும் மீண்டும் அடுக்கி வரும். |
| தனித்தனியே பிரித்தால் பொருள் தராது | தனித்தனியே பிரித்தாலும் பொருள் தரும். |
| இரண்டு முறைக்குமேல் அடுக்கி வராது | இரண்டு அல்லது அதற்குமேல் அடுக்கி வரும். |

## கற்பவை கற்றபின்

- இரட்டைக்கிளவிகளைப் பயன்படுத்தித் தொடர்கள் எழுதுக.
- உரைப்பகுதிகளில் காணப்படும் அடுக்குத்தொடர்களைத் தொகுத்து எழுதுக.
- அடுக்குத்தொடர், இரட்டைக்கிளவி வருமாறு கற்பனைக் கதையொன்றை எழுதுக.

## மதிப்பீடு

# படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

**அ. சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுக.**

1. அடிபட்ட கால் __________ என வலித்தது.

   அ) கடகட　ஆ) விண்விண்　இ) படபட　ஈ) கணகண

2. காலைப்பொழுது __________ வென புலர்ந்தது.

   அ) பலபல　ஆ) தடதட　இ) புலபுல　ஈ) மளமள

3. குயில் ___________ எனக் கூவியது.

   அ) கீச்கீச்　ஆ) கூகூ　இ) கொக்கொக்　ஈ) பக்பக்

4. மணமக்களை __________ என வாழ்த்தினர்.

   அ) வருக வருக　ஆ) வாழ்க வாழ்க　இ) வீழ்க வீழ்க　ஈ) வளர்க வளர்க

ஆ. பொருத்துக.

| | | | |
|---|---|---|---|
| 1. | கலகலவென | – | விரைவுக்குறிப்பு |
| 2. | நறநறவென | – | ஒலிக்குறிப்பு |
| 3. | தடதடவென | – | சினக்குறிப்பு |

இ. கீழ்க்காணும் உரைப்பகுதிக்குப் பொருந்துமாறு இரட்டைக்கிளவி/ அடுக்குத்தொடர்களைத் தேர்ந்தெடுத்து நிரப்புக.



அடர்ந்த காடு. ஒன்றையொன்று துரத்தி விளையாடிக்கொண்டிருந்த குரங்குகள், திடீரெனக் குரலெழுப்பியவாறு, ஒவ்வொரு மரமாக ஏறியும்இறங்கியும் கிளைக்குக் கிளை ---------------ச் சென்றன. அவை எழுப்பிய ஓசையினால், பறவைகள் தத்தம் சிறகுகளைப் --------வென அடித்துக்கொண்டு பறந்தன. அருகிலிருந்த சிற்றாற்றில், நீர் --------வென ஓடிக்கொண்டிருந்தது. நீர்நிலை தேடிக் ----------மாக வந்த யானைகள், அந்த ஆற்றைக்கண்டு, களிநடனமிட்டன. அருகில் வளர்ந்திருந்த தென்னை மரமொன்றிலிருந்த தேங்காய்கள், ---------எனக் கீழே விழுந்தன. அந்த ஓசையைக் கேட்டு, மிரண்ட யானைக்கன்று --------வென ஓட, அருகிலிருந்த மான்கள் அங்குமிங்கும் -----------ஓடின. சூல்கொண்ட மேகங்கள், ----------வெனத் திரள, --------வென மின்னல் மின்னியது. சற்றுநேரத்தில், --------வென மழை பெய்ய, குரங்குகள் மரத்தின் மீது -------- வென ஏறின.

தபதப, துள்ளித் துள்ளி, கூட்டம் கூட்டம், படபட, சலசல,
சடசட, கருகரு, பளபள, மடமட, தாவித் தாவி, பொத்து பொத்து

## மொழியை ஆள்வோம்

### அ. கேட்டல்

- எளிய, இனிய ஓசைநயமிக்க பாடல்களைக் கேட்டு மகிழ்க.
- உழவு வேலை நடைபெறும் இடங்களில் பாடப்படும் பாடல்களைக் கேட்டு மகிழ்க.

### ஆ. பேசுதல்

- 'உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்' என்னும் தலைப்பில் 5 மணித்துளி பேசுக.
- நேர்மையாக வாழ்ந்தவர்களுள் யாரேனும் ஒருவரின் பண்புகளைப் பாராட்டிப் பேசுக.

### இ. படித்தல்

- செய்தித்தாளில் இடம்பெறும் வேளாண்மை பற்றிய செய்திகளை வகுப்பில் படித்துக்காட்டுக.
- உங்கள் பள்ளியில் நடைபெறும் விழாவுக்குத் துண்டு விளம்பரத்தாள் தயாரித்து, அனைவருக்கும் படித்துக்காட்டுக.

### ஈ. எழுதுதல்

#### 1. சொல்லக் கேட்டு எழுதுக.

1. விதைத் திருவிழாவிற்குச் செல்வோம்.
2. இயற்கை வேளாண்மை அன்புடன் வரவேற்கிறது.
3. நீர்வளத்தைப் பெருக்குவோம்.
4. மண்ணின் ஊட்டச்சத்து நீர் மேலாண்மை
5. ஆர்வலர்களைச் சுண்டியிழுக்கும் அரங்குகள்

#### 2. சொற்களைத் தொடரில் அமைத்து எழுதுக.

1. திருவிழா ________________________________________
2. இரசாயன விதை ________________________________________
3. விளம்பரப் பலகை ________________________________________
4. வீட்டுத் தோட்டம் ________________________________________
5. பழங்காலம் ________________________________________

#### 3. ஒருபொருள் தரும் பல சொற்களை எழுதுக.

1. வயல் – செய், கழனி
2. உழவு – ------, ------
3. மகிழ்ச்சி – ------, ------
4. வீடு – ------, ------
5. பேசு – ------, ------

## 4. கீழ்க்காணும் உரைப்பகுதியைப் படித்து, வினாக்களுக்கு விடை எழுதுக.

நீர்வளமும் நிலவளமும் உடைய தமிழ்நாட்டில் பண்டைக் காலத்திலிருந்தே பயிர்த்தொழில் சிறந்ததாகக் கருதப்பட்டது. முற்காலத் தமிழர் தொழுதுண்டு வாழ விரும்பினார் அல்லர்; உழுதுண்டு வாழவே விரும்பினார்கள். 'சீரைத் தேடின் ஏரைத் தேடு' என்றார் ஒரு புலவர். ஏர்த்தொழில் இனிது நடைபெறுவதற்கு மழை இன்றியமையாதது. தாய் முகம் காணாப் பிள்ளையும் மழை முகம் காணாப் பயிரும் செழிப்படைவதில்லை. ஆகவே, தமிழ்நாட்டார் வானத்திலே தவழும் மேகத்தையே நோக்கி வாழ்ந்தார்கள். உயர்ந்து ஓங்கிய மலைகளில் மேகம் தவழக் கண்டால் தமிழர் உள்ளம் தழைக்கும்; கார்மேகத்தின் இடையே மின்னல் வீசக் கண்டால் அவர் உள்ளம் துள்ளி மகிழும்.

1. பண்டைக்காலத்திலேயே சிறந்ததாகக் கருதப்பட்ட தொழில் எது?
2. முற்காலத் தமிழர் எப்படி வாழ விரும்பினர்?
3. ஏர்த்தொழில் இனிது நடைபெற எது தேவை?
4. தமிழர் உள்ளம் துள்ளி மகிழக் காரணம் என்ன?
5. மழையுடன் தொடர்புடைய சொற்களை எழுதுக.

## 5. கீழ்க்காணும் பாடலைப் படித்து மகிழ்க.

**நீர் மேலாண்மை ஆத்திசூடி**

அகலத் தூறிடு

ஆழ்துளை நீக்கு

இருகரை சமன்செய்

ஈராறு இணை

உப்புநீர் வடி

ஊற்றுநீர் பெருக்கு

எரிபொருள் சேமி

ஏரியைக் காத்தல் செய்

ஐம்பொறி அழுக்கறு

ஒன்றாக்கு நீர்நிலை

ஓங்கிடும் உலகெலாம்

ஔடதம் நீர்



# மொழியோடு விளையாடு

**1. உழவுத் தொழிலுடன் தொடர்புடைய பழமொழிகளின் சொற்கள் இடம் மாறியுள்ளன. அவற்றை முறைப்படுத்தி எழுதுக.**

1. பட்டம், தேடி, ஆடிப், விதை, – ஆடிப்பட்டம் தேடி விதை
2. தேடு, ஏரைத், தேடின், சீரைத் – ------------------
3. உழுவதை, அகல, விட, உழு, ஆழ – ------------------

**2. கீழ்க்காணும் பாடலிலுள்ள தொகைச்சொற்களை விரித்து எழுதுக.**

இருவினை அறிந்து கொள்வோமே!
முத்தமிழ் கற்றுத் தேர்வோமே!
நாற்றிசை தேடிச் செல்வோமே!
ஐந்திணை சுற்றி வருவோமே!
அறுசுவை உண்டு மகிழ்வோமே!

இருவினை – நல்வினை, தீவினை
முத்தமிழ் – -----, -----, -----,
நாற்றிசை – -----, -----, -----, -----,
ஐந்திணை – -----, -----, -----, -----, -----
அறுசுவை – -----, -----, -----, -----, -----, -----,

**3. குறிப்புகளைப் படித்துத் 'தை' என முடியும் சொற்களை எழுதுக.**

1. மெதுவாக ஊர்ந்து செல்லும் ஓர் உயிரி
2. பொதி சுமக்கும் விலங்கு
3. பகலில் கண் தெரியாப் பறவை
4. பாரதியாரின் சிறப்பு




**4. கீழ்க்காணும் தொடரைப் பல தொடர்களாக மாற்றுக.**

1. மணமலர் படம் வரைந்தாள்

அ) மணமலர் படம் வரைந்தாளா?
ஆ) மணமலரா படம் வரைந்தாள்?
இ) மணமலர் படம் வரை
ஈ) மணமலர் படம் வரைவாயா?

2. கதிரவன் வீட்டுக்குச் சென்றான்

அ) --------------------- ஈ) ---------------------

ஆ) -------------------- உ) --------------------

இ) ---------------------

## 5. புதிய சொற்களை உருவாக்குக.

1. விளையாட்டுத் திடல் – விளை, விளையாட்டு, திடல், விடல், விடு., விடுதி, வில்
2. பல்கலைக்கழகம் – ---------------------------------------
3. கவிதைத்திரட்டு – ---------------------------------------

## 6. பாடலைத் தொடர்ந்து பாடி மகிழ்க.

விடுகதையாம் விடுகதை
விடை காணும் விடுகதை
உயரமாக இருப்பானாம்
ஒரே இடத்தில் நிற்பானாம்
இளநீர்,தேங்காய் தருவானாம்
ஓலைக்கீற்றும் தருவானாம்
அவன் பெயர் என்ன?
தென்னை மரம் அவன்தானே
விடுகதையாம் விடுகதை
-----------------
-----------------
-----------------
-----------------

## நிற்க அதற்குத் தக

- உழவின் மேன்மையை அனைவருக்கும் உணர்த்துவேன்.
- இயற்கை உரங்களின் பயன்களைச் சொல்வேன்.
- மழைவளம் பெருக மரம் வளர்க்க உதவுவேன்.

## செயல் திட்டம்



- உழவு தொடர்பான படம் ஒன்றை வரைந்து வண்ணம் தீட்டுக.
- உழவு தொடர்பான பாடல்களுள் ஐந்து எழுதி வருக.

**செய்யுள்**

**இயல் ஏழு**

நாடு/சமூகம்/அரசு/நிருவாகம்

**கற்றல் நோக்கங்கள்**

- பண்டைத் தமிழ் மன்னர்களின் நிருவாகத் திறனையும் ஆட்சிமுறையையும் அறிந்துகொள்ளுதல்
- கடையெழு வள்ளல்களின் கொடைத்தன்மையைத் தெரிந்துகொள்ளுதல்
- தமிழர்களின் சமூகச் சிந்தனைகளைப் புரிந்துகொள்ளுதல்
- நடைமுறை வாழ்க்கையில் இணைச்சொற்களைப் பயன்படுத்துதல்

# சிறுபஞ்சமூலம்

கண்வனப்புக் கண்ணோட்டம் கால்வனப்புச் செல்லாமை

எண்வனப்பு இத்துணையாம் என்றுரைத்தல் – பண்வனப்புக்

கேட்டார்நன் றென்றல் கிளர்வேந்தன் தன்னாடு

வாட்டான்நன் றென்றல் வனப்பு

– காரியாசான்



TQ7RWU

## சொல்பொருள்

வனப்பு – அழகு

கண்ணோட்டம் – இரக்கம்

இத்துணை – இவ்வளவு

வேந்தன் – அரசன்

வாட்டான் – வருத்தமாட்டான்

பண் – இசை

## பாடல் பொருள்

கண்ணுக்கு அழகு, இரக்கம் கொள்ளுதல்; காலுக்கு அழகு, பிறரிடம் பொருள் வேண்டிச் செல்லாமை; ஆராய்ச்சிக்கு அழகு, இது இவ்வாறு முடியும் என்று உறுதி செய்து கூறுதல்; இசைக்கு அழகு, அதனைக் கேட்டோர் நன்று எனச் சொல்லுதல்; அரசனுக்கு அழகு, தன் நாட்டு மக்களை வருத்த மாட்டான் என்று பிறர் அவனைப் புகழ்ந்து கூறுதல்.

## நூல் குறிப்பு

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று சிறுபஞ்சமூலம். கண்டங்கத்தரி, சிறுவழுதுணை, சிறுமல்லி, பெருமல்லி, நெருஞ்சி ஆகிய ஐந்து மூலிகையின் வேர்கள் உடல் நோயைத் தீர்க்கின்றன. அதுபோல, இந்நூலின் ஒவ்வொரு பாடலிலும் கூறப்படும் ஐந்து கருத்துகள், மக்கள் மனநோயைத் தீர்ப்பனவாக உள்ளன. ஆகையால், இந்நூல் சிறுபஞ்சமூலம் எனப் பெயர் பெற்றது. இந்நூலை இயற்றியவர், காரியாசான்.

## கற்பவை கற்றபின்

- பாடலைப் பொருள் புரிந்து படித்துக்காட்டுக.
- பாடலை ஓசைநயத்துடன் பாடி மகிழ்க.
- பாடலை அடிபிறழாமல் எழுதுக

IIFGBL

## மதிப்பீடு

# படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

**அ. சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுக.**

1. **வனப்பு** – இச்சொல்லின் பொருள் ______________

அ) அறிவு ஆ) பொறுமை

இ) அழகு ஈ) சினம்

2. **நன்றென்றல்** – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ........................

அ) நன் + றென்றல் ஆ) நன்று + என்றல்

இ) நன்றே + என்றல் ஈ) நன்றெ + என்றல்

3. என்று + உரைத்தல் – இச்சொற்களைச் சேர்த்து எழுதக் கிடைப்பது ................................

அ) என்றுஉரைத்தல் ஆ) என்றுயுரைத்தல்

இ) என்றஉரைத்தல் ஈ) என்றுரைத்தல்

4. கண்ணுக்கு அழகு ..................................................

அ) வெறுப்பு ஆ) பொறுமை

இ) இரக்கம் ஈ) பொறாமை

## ஆ. பொருத்துக

1. கண்ணுக்கு அழகு – கேட்பவர் நன்று என்று சொல்லுதல்
2. காலுக்கு அழகு – இவ்வளவுதான் என உறுதி செய்து கூறுதல்
3. ஆராய்ச்சிக்கு அழகு – நாட்டு மக்களை வருத்தாமை
4. இசைக்கு அழகு – பிறரிடம் சென்று கேட்காமை
5. அரசனுக்கு அழகு – இரக்கம் காட்டல்

## இ. பாடலில் இரண்டாம் எழுத்து ஒன்றுபோல் வரும் சொற்களை எடுத்து எழுதுக

_______________ _______________

_______________ _______________

## ஈ. வினாக்களுக்கு விடையளிக்க.

1. கண்ணுக்கு எது அழகு?
2. காலுக்கு எது அழகைத் தருகிறது?
3. இசைக்கு அழகாக எது கூறப்படுகிறது?
4. அரசனுக்கு அழகைத் தருவது எது?

## உ. சிந்தனை வினா

நம்மைப் பிறர் பாராட்ட வேண்டுமெனில், நம்மிடம் எத்தகைய பண்புகள் இருக்கவேண்டும்?

இயல் ஏழு

உரைநடை

# வாரித் தந்த வள்ளல்




சென்று வாருங்கள்! தாங்கள் வரும் வழிநோக்கி எங்கள் விழிகள் பார்த்திருக்கும்
அரசவை
வாழிய, மன்னா! இசைப் பாணர் ஒருவர் உங்களைக் காண வாயிலில் காத்திருக்கிறார்.
தடுக்காதே! அவரை விரைந்து உள்ளே அனுப்புக!
கொல்லிமலைக் கொற்றவா! கொடைத் திறத்தின் கோமகனே! நீவிர் வாழ்க! உமது படை வாழ்க!
தரணியெங்கும் தமிழ் இசையின் புகழ் பரப்பும் பாணரே! வருக! வளரட்டும் தமிழ்த் தொண்டு! எம்மை நாடி வந்த காரணம்?
வள்ளலே! வறுமை காரணமாக எமது வீட்டின் அடுப்பில் பூனை உறங்குகிறது
தமிழ் பரப்பும் பாணரே! உமது நிலை என்னை வருத்தமுறச் செய்கிறது.
உணவின்றி என் இல்லாள் மெலிந்து கிடக்கிறாள். பிள்ளைகளோ காற்றை உண்டு கண்ணில் உயிரைத் தேக்கியபடி இருக்கின்றனர்


கலக்கம் வேண்டாம் பாணரே! உம் வறுமையைப் போக்குவது என் பொறுப்பு.


மரம் பழுத்து எல்லாருக்கும் பயன் தருவது போல, எம் துயர் துடைத்து உதவுங்கள்


ஆகட்டும் பாணரே! அமைச்சரே! வாருங்கள்! இப்பாணரின் குடும்பம் பல தலைமுறைகள் வாழ வழி செய்திடுங்கள்


அப்படியே அரசே! தங்கள் ஆணைப்படி செய்கிறேன்.


பொற்காசுகளை அள்ளித்தருக! அணி மணிகளும் களிறுகளும் அனுப்பிடுக, பற்பல பரிசுகளைப் பேழைகளில் நிறைத்து அனுப்பிடுக


தங்கள் ஆணைப்படியே அனைத்தையும் அனுப்பி வைக்கிறேன் அரசே!


கற்ற கல்வி அறியாமை அகற்றுதல் போல, உற்ற துயர் துடைக்கும் வள்ளலே! உங்களின் குன்றாப் புகழ்,கொடைப் பண்பு ஓங்குக! வாழ்க! வாழ்க! நீவிர் வாழ்க!


போய் வாரும் பாணரே! நீரும் உமது சுற்றத்தாரும் குறைவின்றி நீடுழி வாழ்க!

## கற்பவை கற்றபின்

- கல்விச் செல்வமே பிற செல்வங்களைவிட நிலையானது– இக்கூற்றைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?
- வல்வில் ஓரி அன்பில் சிறந்தவன்–இக்கூற்றுக்கு விளக்கம் தருக.
- கடையெழு வள்ளல்களின் கொடைச் சிறப்பை அறிந்துகொண்டு வந்து பேசுக.

## படித்து அறிக

IXPFBA

### சொற்போர் மன்றம்

**கல்வியா? செல்வமா? வீரமா?**

இடம்: ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி, கம்மங்காடு

நேரம்: பிற்பகல் 3.00 மணி

நாள்: 10.01.2020

**நிகழ்ச்சி நிரல்**

| | | |
|---|---|---|
| தமிழ்த்தாய் வாழ்த்து | – | மாணவ, மாணவியர் |
| வரவேற்புரை | – | தமிழாசிரியர் |
| தலைமை | – | தலைமை ஆசிரியர் |
| சிறப்பு விருந்தினர் | – | 'சொற்போர் சுடர்' திரு. நா. எழிலன் |
| பங்கேற்பாளர்கள் | – | செல்வன் அ. .சுரேஷ், ஐந்தாம் வகுப்பு 'அ' பிரிவு |
| | | செல்வி பி. அகிலா, ஐந்தாம் வகுப்பு 'ஆ' பிரிவு |
| | | செல்வி ஏ. கம்ருன்னிஷா, ஐந்தாம் வகுப்பு 'இ' பிரிவு |
| நன்றியுரை | – | திருமதி ஆ. வளர்மதி, சமூக ஆர்வலர் |

**நாட்டுப்பண்**

## மதிப்பீடு

# படிப்போம்! சிந்திப்போம்! எழுதுவோம்!

**அ. சரியான சொல்லைத் தெரிவு செய்து எழுதுக.**

1. பொற்காசு – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..........................................

அ) பொற் + காசு ஆ) பொல் + காசு

இ) பொன் + காசு ஈ) பொ + காசு

2. கொடைத்திறம் – இச்சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ..........................................

அ) கொடை + திறம் ஆ) கோடை + திறம்

இ) கொட + திறம் ஈ) கொடு + திறம்

3. **களிறு** என்பது .............................................. யைக்குறிக்கும்

அ) குதிரை ஆ) கழுதை இ) யானை ஈ) ஒட்டகம்

4. **தரணி** – இச்சொல்லின் பொருள் ..................................................

அ) மலை ஆ) உலகம் இ) காடு ஈ) வானம்

5. **'சோறு'** இச்சொல்லுடன் பொருந்தாதது ..................................................

அ) உணவு ஆ) அமுது இ) அன்னம் ஈ) கல்

## ஆ. பொருத்துக

| | | | |
|---|---|---|---|
| 1. | பேழை | – | வாசல் |
| 2. | மாரி | – | கடன் |
| 3. | வாயில் | – | பெட்டி |
| 4. | ஆணை | – | மழை |
| 5. | இரவல் | – | கட்டளை |

## இ. வினாக்களுக்கு விடையளிக்க.

1. பாணனின் குழந்தைகள் பசியால் வாடக் காரணம் என்ன?
2. வல்வில் ஓரியின் சிறந்த பண்பு யாது?
3. பரிசு பெற்ற பாணன், மன்னனை எவ்வாறு வாழ்த்தினான்?
4. "வாரித் தந்த வள்ளல்" – இப்படக்கதை மூலம் நீவிர் அறிந்து கொண்டதை எழுதுக.

## ஈ. சிந்தனை வினா

வல்வில் ஓரியைப் போல் ஈகைக் குணம் உனக்கிருந்தால் நீ யாருக்கெல்லாம் உதவி செய்வாய்?

## உ. உரைப்பகுதியைப் படித்து வினாக்களுக்கு விடை எழுதுக.

குப்பன் ஐந்தாம் வகுப்பு படிக்கிறான் தன் வேலையில் யாரும் குறுக்கிடக்கூடாது என்று எண்ணுவான். சுதந்திரமாகச் செயல்பட வேண்டுமென்பதே அவன் ஆசை. ஒருநாள், அவன் பட்டம் விட்டுக்கொண்டிருந்தான். அப்போது, அவனுடைய தந்தை அங்கு வந்தார். "இந்தப் பட்டத்தைப் பார்க்கும்போது உனக்கு என்ன தோன்றுகிறது" எனக்கேட்டார். அதற்குக் குப்பன், "இந்த நூல் பட்டத்தின் சுதந்திரத்தைத் தடுத்துக் கொண்டிருக்கிறது" என்றான். உடனே அவன் தந்தை, பட்டத்தின் நூலை அறுத்துவிட்டார் பட்டம் தடுமாறிக் கீழே விழுந்தது. இப்பொழுது பார், வரையறைக்குட்பட்டு நூலுடன் இருக்கும்போது இந்தப் பட்டம் எவ்வளவு அழகாகப் பறந்து கொண்டிருந்தது? ஆனால்,

அந்த நூல்தான் பட்டத்தின் சுதந்திரத்தைத் தடுக்கிறது என்று நீ நினைத்தாய். இப்போது என்ன ஆயிற்று? நூல் அறுந்ததும் நிலை தடுமாறி, அந்தப் பட்டம் கீழே விழுந்துவிட்டதே! இதுபோலத்தான் நம் வாழ்க்கையும் நூலறுந்த பட்டமாய் இருந்தால் நாமும் வாழ்வில் தடுமாறக்கூடும்" என்று கூறினார்.

1. குப்பன் எந்த வகுப்பில் படிக்கிறான்?

2. பட்டத்தின் நூல் அறுந்ததும் அதன் நிலை என்னவாயிற்று?

3. இக்கதையின் மூலம் நீங்கள் அறிந்து கொண்டது என்ன?

**ஊ. கோடிட்ட இடங்களை நிரப்புக.**

1. கண்ணுக்கு அழகு பிறரிடம் -------------காட்டல்.
2. சிறுபஞ்ச மூலம் ____________ என்பவரால் எழுதப்பட்டது.
3. வாரிக் கொடுக்கும் வள்ளல்____________
4. நாட்டு மக்களை வருத்தாமை____________ க்கு அழகு

**எ. பிறமொழிச் சொற்கள் கலவாமல் எழுதுக.**

1. என்னுடைய புக் டேபிளில் உள்ளது. _____________________
2. நான் டிவியில் நியூஸ் பார்த்தேன் _____________________
3. தை மாதம் பர்ஸ்ட் நாள் பொங்கல் பெஸ்டிவெல் கொண்டாடினான்

   ________________________________________________
4. பாலன் ஸ்நாக்ஸ் சாப்பிட்டான். _____________________

**ஏ. பாடலை நிறைவு செய்க**

நாடு அதை நீயும் நாடு

பாடு அதன் புகழ் பாடு

_____________________________

_____________________________

_____________________________

_____________________________

இயல் ஏழு

துணைப்பாடம்

## தலைமைப் பண்பு

செந்தூர் என்ற சிற்றூரில் வேம்பன் என்ற ஊர்த்தலைவர் வாழ்ந்து வந்தார். அவ்வூரை முன்னேற்ற வேண்டும் என்பதற்காகப் பலரை நாடிச்சென்று பொருளுதவி பெற்றார். பல திட்டங்களைச் செயல்படுத்த திறமையான நிருவாகி ஒருவரை நியமிக்க எண்ணினார். இச்செய்தியை ஊர்மக்களுக்கு முரசு அறைந்து அறிவித்தார். அவ்வூரைச் சேர்ந்த பாலன், பூவண்ணன் இருவருமே அப்பொறுப்பைத் தம்மிடம் வழங்குமாறு விருப்பம் தெரிவித்தனர். இருவரில் யாரைத் தேர்ந்தெடுப்பது என்று சிந்தித்த தலைவர் ஒரு முடிவிற்கு வந்தார். மக்கள்மீது உண்மையான அன்புகொண்டு, தேவையானவற்றைச் செய்து, சரியான நிருவாகத் திறமை உள்ளவர் யார் என்பதை அறிந்து கொள்வதற்காக அவர்களுக்கு மூன்று போட்டிகள் வைத்தார்.

அவ்விருவரும் போட்டிகளில் கலந்து கொண்டனர். முதல் போட்டி, மக்களுக்குப் பிடித்தவராக இருக்க வேண்டும். போட்டியைப் புரிந்துகொண்ட பாலன், அவ்வூர் மக்களுக்கு அறுசுவை விருந்தளித்தார். மக்கள் மகிழ்ந்தனர். பூவண்ணன் அவ்வூரிலுள்ள திறமைசாலிகள் சிலரைத் தேர்ந்தெடுத்துத் தொழில் சார்ந்த பயிற்சிகளைக் கற்றுக் கொடுத்தார்.





இரண்டாவது போட்டியானது, அவ்வூர் மக்களின் சமூகப் பொருளாதார முன்னேற்றத்தை மேம்படுத்த வேண்டும் என்பதாகும். இதற்காகப் பாலன் தம்மிடமிருந்த செல்வங்களை மக்களுக்குப் பிரித்துக் கொடுக்கத் தொடங்கினார். இதனால், மக்களுக்குப் பாலன்மீது அளவற்ற நம்பிக்கை ஏற்பட்டது. பூவண்ணன் தாம் தேர்ந்தெடுத்த திறமைசாலிகளுக்குக் கல்வியுடன் மற்ற கலைகளையும் சேர்த்துக் கற்றுக் கொடுக்க ஏற்பாடுகளைச் செய்தார். மக்கள், இந்தச் செயல்களைக் கண்டு அவரை ஏளனமாகப் பார்த்தனர். அதனைப் பார்த்த பாலனுக்கு எல்லையற்ற மகிழ்ச்சி ஏற்பட்டது.

மூன்றாவது போட்டி மக்களிடம் பரிவு காட்டவேண்டும் என்பதாகும். அதனை ஒப்புக்கொண்டு இருவரும் சென்றனர். மறுநாள் பாலன் சிந்தித்துக் கொண்டே நடந்து சென்றார். அவ்வழியில் மூதாட்டி ஒருவர் மரத்தடியில் படுத்திருந்தார். "தம்பி, என்னைத் தூக்கிவிடு, என்னால் எழுந்திருக்க முடியவில்லை" என்றார். "எனக்கு அவசர வேலை இருக்கிறது" என்று கூறிக்கொண்டே பாலன் வேகமாகச் சென்றுவிட்டார். சற்று நேரத்தில் அவ்வழியே வந்த பூவண்ணன், அந்த வயதான மூதாட்டியின் அருகில் சென்று, "என்ன வேண்டும்?" என்று கேட்டார். "தம்பி என்னைத் தூக்கிவிடு" என்று அந்த மூதாட்டி கூறினாள். உடனே பூவண்ணன் மூதாட்டியின் அருகில் சென்று, அவரைத் தூக்கி உட்கார வைத்தார். பிறகு, மூதாட்டியின் களைப்பைப் போக்க உணவும் வாங்கிக் கொடுத்தார்.

மறுநாள் ஊர்மக்கள் முன்னிலையில், நிருவாகி பதவி யாருக்கு கிடைக்கப்போகிறது என்பதை அறிவிக்க ஊர்த்தலைவரால் கூட்டம் கூட்டப்பட்டது. மக்களில் பெரும்பாலானோர் பாலனே நிருவாகி பதவிக்குத் தகுதியானவர் என முணுமுணுத்தனர். பூவண்ணன் அமைதியாக நின்றிருந்தார்.

ஊர்த் தலைவர் இருவரின் செயல்களையும் கேட்டறிந்தார். பாலன், மக்களுக்கு அறுசுவை உணவு வழங்கியதையும், தம் செல்வத்தைப் பகிர்ந்து கொடுக்க திட்டமிட்டதையும் கூறினார். மேலும், அனைவருடனும் அன்பாகப் பழகுவதாகவும் கூறினார். அதுமிட்டுமின்றி, தமக்கு அப்பதவி கிடைத்தால் சிறப்பாகச் செயல்படுவேன் என்றும் கூறினார்.

பூவண்ணன், திறமைசாலிகளைத் தேர்ந்தெடுத்துக் கல்வியுடன் தனியாகத் தொழில் செய்து, பொருளாதாரத்தை மேம்படுத்தவும் பயிற்சிகள் கொடுத்திருக்கிறேன் என்று சொன்னார். மேலும், மற்றக் கலைகளையும் கற்றுத்தர ஏற்பாடு செய்திருக்கிறேன் என்றார். இருவரின் கருத்துகளைக் கேட்ட ஊர்த்தலைவர், மக்களின் இப்போதைய தேவைக்குப் பாலனால் வழங்கப்படும் அறுசுவை உணவும் செல்வமும் பயன்படலாம். அதைப் பகிர்ந்து கொடுக்க நினைத்ததில் மகிழ்ச்சி. ஆனால், எதிர்காலத்தேவை, மக்கள் முன்னேற்றம், சமூக முன்னேற்றத்திற்குக் கல்வியறிவு இன்றியமையாதது. அதனால், இந்த நிருவாகிப் பதவிக்கு ஏற்றவர் பூவண்ணனே என்று கூறினார். மக்களிடம் சலசலப்பு ஏற்பட்டது. அவர் கூறியதை மக்கள் ஏற்றுக் கொள்ளத் தயங்கினர். அதைப் புரிந்து கொண்ட ஊர்த்தலைவர், "சற்றுப் பொறுத்திருங்கள். இதோ வருகிறேன்" என்று கூறிச் சென்றார். சிறிதுநேரம் கழித்துப் பாலன், பூவண்ணனிடம் உதவி கேட்ட



மூதாட்டி தள்ளாடியபடியே மக்கள் கூடியிருக்கும் இடத்திற்கு வந்தார். தட்டுத் தடுமாறிக் கீழே விழப்போன மூதாட்டியைப் பூவண்ணன் விரைந்து சென்று, தாங்கிப் பிடித்தார். எல்லாரும் அவரைப் பார்த்தனர். தடுமாறி விழுந்த மூதாட்டி, தம்முடைய வேடத்தைக் கலைத்தார். அவர் வேறு யாரும் அல்லர்; ஊர்த்தலைவர் வேம்பனே ஆவார்.

மக்களே, நான் பூவண்ணனைச் சிறந்த நிருவாகி என்றபோது, அதை ஏற்றுக்கொள்ள நீங்கள் தயங்கினீர்கள். இப்பொழுது உண்மையை உணர்ந்து கொண்டீர்களா? எதிர்காலச் சிந்தனை, சமூகப் பொருளாதார முன்னேற்றம், மக்களிடம் பரிவு காட்டும் தன்மை இவை அனைத்தையும் பெற்றவரே சிறந்த நிருவாகத் திறமை உடையவர் என்றார் ஊர்த்தலைவர். இந்தத் திறமை முழுவதும் பூவண்ணனிடமே உள்ளது. எனவே, அவரே சிறந்த நிருவாகி என்றார். ஊர்த்தலைவரின் முடிவை மக்கள் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டனர்.



## கற்பவை கற்றபின்

- இக்கதையை உம் சொந்த நடையில் கூறுக.
- உமக்கு மிகவும் பிடித்த போட்டி எது? அதில் பங்கேற்றிருப்பின் அந்த அனுபவத்தைப் பற்றிக் கூறுக.

கற்கண்டு

இயல் மூன்று

# வழக்கு

RPJD5R

எழுத்திலும் பேச்சிலும் சொற்களைப் பயன்படுத்தும் முறை வழக்கு எனப்படும். நம் முன்னோர் எந்தெந்தச் சொற்களை என்னென்ன பொருளில் பயன்படுத்தினார்களோ, அச்சொற்களை அவ்வாறே பயன்படுத்துவதை வழக்கு என்பர்.

இயல்பு வழக்கு, தகுதி வழக்கு என வழக்கு இருவகைப்படும்.

## இயல்பு வழக்கு

ஒரு பொருளை அதற்கே உரிய இயல்பான சொற்களால் குறிப்பிடுவது இயல்பு வழக்கு ஆகும். இயல்பு வழக்கு மூன்று வகைப்படும்.

1. இலக்கணமுடையது
2. இலக்கணப்போலி
3. மரூஉ

### 1. இலக்கணமுடையது

நிலம், மரம், வான், எழுது – ஆகிய சொற்களை நோக்குங்கள். இவை தமக்குரிய பொருளை எவ்வகை மாறுபாடும் இல்லாமல் இயல்பாகத் தருகின்றன. இவ்வாறு இலக்கண நெறி மாறாமல் முறையாக அமைந்த சொல் இலக்கணமுடையது ஆகும்.

### 2. இலக்கணப்போலி

இல்லத்தின் முன் பகுதியை இல்முன் எனக் குறிக்க வேண்டும். ஆனால் அதனை நம் முன்னோர் முன்றில் என மாற்றி வழங்கினர். கிளையின் நுனியைக் கிளைநுனி எனக் கூறாமல் நுனிக்கிளை எனக் குறிப்பிடுகிறோம். இவ்வாறு இலக்கண முறைப்படி அமையாவிடினும், இலக்கணமுடையவை போலவே ஏற்றுக் கொள்ளப்படும் சொற்கள் இலக்கணப்போலி எனப்படும்.

இலக்கணப்போலி என்பது பெரும்பாலும் சொற்களின் முன்பின் பகுதிகள் இடம்மாறி வருவதையே குறிக்கும். எனவே, இலக்கணப் போலியை முன்பின்னாகத் தொக்க போலி எனவும் குறிப்பிடுவர்.

(எ.கா.) புறநகர், கால்வாய், தசை, கடைக்கண்.

**தெரிந்து தெளிவோம்**

**வாயில்–வாசல்**

இல்லத்துக்குள் நுழையும் வழி இல்வாய் (இல்லத்தின் வாய்) எனக் குறிப்பிடப்பட வேண்டும். ஆனால் அதனை வாயில் என வழங்குகிறோம். இது இலக்கணப் போலியாகும்.

வாயில் என்னும் சொல்லைப் பேச்சு வழக்கில் வாசல் என வழங்குகிறோம். இது மரூஉ ஆகும்.

### 3. மரூஉ

நாம் எல்லாச் சொற்களையும் எல்லா இடங்களிலும் முழுமையான வடிவத்தில் பயன்படுத்துவது இல்லை. தஞ்சாவூர் என்னும் பெயரைத் தஞ்சை என்றும், திருநெல்வேலி என்னும் பெயரை நெல்லை எனவும் வழங்குகிறோம். இவ்வாறு இலக்கண நெறியிலிருந்து பிறழ்ந்து, சிதைந்து வழங்கும் சொற்கள் மரூஉ எனப்படும்.

(எ.கா.)- கோவை, குடந்தை, எந்தை, போது, சோணாடு

### தகுதி வழக்கு

ஏதேனும் ஒரு காரணத்தினால் பிறரிடம் சொல்லத் தகுதியற்ற சொற்களைத் தகுதியான வேறு சொற்களால் குறிப்பிடுவது தகுதி வழக்கு ஆகும். தகுதி வழக்கு மூன்று வகைப்படும்.

1. இடக்கரடக்கல்
2. மங்கலம்
3. குழூஉக்குறி

### 1. இடக்கரடக்கல்

பிறரிடம் வெளிப்படையாகச் சொல்லத் தகாத சொற்களைத் தகுதியுடைய வேறு சொற்களால் கூறுவது இடக்கரடக்கல் ஆகும்.

(எ.கா.) கால் கழுவி வந்தான்.

குழந்தை வெளியே போய்விட்டது.

ஒன்றுக்குப் போய் வந்தேன்.

### 2. மங்கலம்

செத்தார் என்பது மங்கலமில்லாத சொல் என நம் முன்னோர் கருதினர். எனவே, செத்தார் எனக் குறிப்பிடாமல் துஞ்சினார் எனக் குறிப்பட்டனர். நாம் இக்காலத்தில் இயற்கை எய்தினார் என்று குறிப்பிடுகிறோம். இவ்வாறு மங்கலமில்லாத சொற்களை மங்கலமான வேறு சொற்களால் குறிப்பதை மங்கலம் என்பர்.

(எ.கா.) ஓலை – திருமுகம்

கறுப்பு ஆடு – வெள்ளாடு

விளக்கை அணை – விளக்கைக் குளிரவை

சுடுகாடு – நன்காடு

### 3. குழூஉக்குறி

பலர் கூடியிருக்கும் இடத்தில் சிலர் மட்டும் தமக்குள் சில செய்திகளைப் பகிர்ந்துகொள்ள விரும்பினால் மற்றவர்கள் புரிந்துகொள்ள இயலாத வகையில் சொற்களைப் பயன்படுத்துவர். இவ்வாறு ஒரு குழுவினர் ஒரு பொருள் அல்லது செயலைக் குறிக்கத் தமக்குள் பயன்படுத்திக்கொள்ளும் சொற்கள் குழூஉக்குறி எனப்படும்.

(எ.கா.) பொன்னைப் பறி எனல் (பொற்கொல்லர் பயன்படுத்துவது)

ஆடையைக் காரை எனல் (யானைப்பாகர் பயன்படுத்துவது)

## தெரிந்து தெளிவோம்

**இப்படியும் கூறலாம்**

இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக்குறி மூன்றும் ஒரு சொல்லுக்கு மாற்றாக வேறு சொல்லைப் பயன்படுத்தும் முறைகளாகும்.

- நாகரிகம் கருதி மறைமுகமாகக் குறிப்பிடுதல் இடக்கரடக்கல்
- மங்கலமற்ற சொற்களை மாற்றி மங்கலச் சொற்களால் குறிப்பிடுதல் மங்கலம்
- பிறர் அறியாமல் ஒரு குழுவுக்கு மட்டும் புரியும் வகையில் குறிப்பிடுதல் குழூஉக்குறி

## போலி

அறம் செய விரும்பு- இஃது ஔவையார் வாக்கு.

அறன் வலியுறுத்தல் என்பது திருக்குறள் அதிகாரங்களுள் ஒன்று.

இத்தொடர்களில் அறம், அறன் ஆகிய சொற்களில் ஓர் எழுத்து மாறியுள்ளது. ஆனால் பொருள் மாறுபடவில்லை.

இவ்வாறு சொல்லின் முதலிலோ, இடையிலோ, இறுதியிலோ இயல்பாக இருக்க வேண்டிய ஓர் எழுத்திற்குப் பதிலாக வேறு ஓர் எழுத்து இடம்பெற்று அதே பொருள் தருவது போலி எனப்படும். போலி என்னும் சொல் போல இருத்தல் என்பதிலிருந்து தோன்றியது. போலி மூன்று வகைப்படும்.

1. முதற்போலி
2. இடைப்போலி
3. கடைப்போலி

### 1. முதற்போலி

பசல் – பைசல், மஞ்சு- மைஞ்சு, மயல்- மையல் ஆகிய சொற்களில் முதல் எழுத்து மாறினாலும் பொருள் மாறவில்லை.

இவ்வாறு சொல்லின் முதலில் இருக்க வேண்டிய எழுத்திற்குப் பதிலாக வேறு ஓர் எழுத்து அமைந்து அதே பொருள் தருவது முதற்போலியாகும்.

### 2. இடைப்போலி

அமச்சு – அமைச்சு, இலஞ்சி – இலைஞ்சி, அரயர்- அரையர் ஆகிய சொற்களில் இடையில் உள்ள எழுத்து மாறினாலும் பொருள் மாறவில்லை.

இவ்வாறு சொல்லின் இடையில் இருக்க வேண்டிய எழுத்திற்குப் பதிலாக வேறு ஓர் எழுத்து அமைந்து அதே பொருள் தருவது இடைப்போலியாகும்.

### 3. கடைப்போலி

அகம்- அகன், நிலம்- நிலன், முகம் – முகன், பந்தல்- பந்தர், சாம்பல்- சாம்பர் ஆகிய சொற்களில் இறுதியில் உள்ள எழுத்து மாறினாலும் பொருள் மாறவில்லை.

இவ்வாறு சொல்லின் இறுதியில் இருக்க வேண்டிய எழுத்திற்குப் பதிலாக வேறு ஓர் எழுத்து அமைந்து அதே பொருள் தருவது கடைப்போலியாகும்.

அஃறிணைப் பெயர்களின் இறுதியில் நிற்கும் மகர எழுத்திற்குப் பதிலாக னகரம் கடைப்போலியாக வரும். லகர எழுத்திற்குப் பதிலாக ரகரம் கடைப்போலியாக வரும்.

### முற்றுப்போலி

மூவகைப் போலிகள் மட்டுமன்றி வேறு ஒரு வகைப் போலியும் உண்டு. ஐந்து- அஞ்சு- இச்சொற்களை நோக்குங்கள். இதில் அஞ்சு என்னும் சொல் ஐந்து என்னும் சொல்லின் போலி வடிவமாகும். அஞ்சு என்ற சொல்லில் உள்ள எழுத்துகள் அனைத்தும் வேறுபட்டு இருந்தாலும் அஃது ஐந்து என்னும் பொருளையே தருகிறது.

இவ்வாறு ஒரு சொல்லில் இயல்பாக அமைந்த எழுத்துகளுக்குப் பதிலாக எழுத்துகள் அனைத்தும் வேறுபட்டாலும் பொருள் மாறாமல் இருப்பது முற்றுப்போலி எனப்படும்.

## கற்பவை கற்றபின்

மூவகைப் போலிகளிலும் எந்தெந்த எழுத்துகள் எந்தெந்த எழுத்துகளாக மாறுகின்றன என்பதை அறிந்து தொகுக்க.

## மதிப்பீடு

### பொருத்துக.

1. பந்தர் - முதற்போலி
2. மைஞ்சு - முற்றுப்போலி
3. அஞ்சு - இடைப்போலி
4. அரையர் - கடைப்போலி

### குறுவினா

1. வழக்கு என்றால் என்ன?
2. தகுதி வழக்கின் வகைகள் யாவை?
3. வாழைப்பழம் மிகவும் நஞ்சு விட்டது. – இத்தொடரில் இடம்பெற்றுள்ள போலிச் சொல்லைக் கண்டறிக. அதன் சரியான சொல்லை எழுதுக.

## மொழியை ஆள்வோம்!

S53873

### கேட்க.

பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் பேச்சின் ஒலிப்பதிவைக் கேட்டு மகிழ்க.

### கீழ்க்காணும் தலைப்புகளுள் ஒன்று பற்றி இரண்டு நிமிடம் பேசுக.

1. தேசியம் காத்த செம்மல்
2. கப்பலோட்டிய தமிழர்

### சொல்லக் கேட்டு எழுதுக.

1. அவன் எங்குள்ளான் என எனக்குத் தெரியவில்லை.
2. வீடுகள்தோறும் மணிகளால் அழகுசெய்யப்பட்ட மேடைகள் இருக்கும்.
3. தெய்வீகத்தையும் தேசியத்தையும் தமது இரு கண்களாகக் கருதியவர் முத்துராமலிங்கத்தேவர்.
4. தொல்காப்பியத்தைப் படித்துத் தொல்லையெல்லாம் மறந்தேன்.
5. இலக்கண நெறி மாறாமல் முறையாக அமைந்த சொல் இலக்கணமுடையது ஆகும்.

### அறிந்து பயன்படுத்துவோம்.

ஒரு தொடரில் மூன்று பகுதிகள் இடம்பெறும்.

அவை 1. எழுவாய் 2. பயனிலை 3. செயப்படுபொருள்

ஒரு தொடரில் யார்? எது? எவை? என்னும் வினாக்களுக்கு விடையாக அமைவது எழுவாய்.

(எ.கா.) நீலன் பாடத்தைப் படித்தான்.

பாரி யார்?

புலி ஒரு விலங்கு.

இத்தொடர்களில் நீலன், பாரி, புலி ஆகியன எழுவாய்கள்.

ஒரு தொடரை வினை, வினா, பெயர் ஆகியவற்றுள் ஏதேனும் ஒன்றைக் கொண்டு முடித்து வைப்பது பயனிலை.

(எ.கா.) கரிகாலன் கல்லணையைக் கட்டினான்.

கரிகாலன் யார்?

கரிகாலன் ஒரு மன்னன்.

இத்தொடர்களில் கட்டினான், யார், மன்னன் ஆகியன பயனிலைகள்.

யாரை, எதை, எவற்றை என்னும் வினாக்களுக்கு விடையாக வருவது செயப்படுபொருள்.

(எ.கா.) நான் கவிதையைப் படித்தேன்.

என் புத்தகத்தை எடுத்தது யார்?

நெல்லிக்கனியைத் தந்தவர் அதியமான்.

இத்தொடர்களில் கவிதை, புத்தகம், நெல்லிக்கனி ஆகியன செயப்படு பொருள்கள்.

**பின்வரும் தொடர்களை எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் எனப் பிரிக்க.**

1. வீரர்கள் நாட்டைக் காத்தனர்.
2. பொதுமக்கள் அந்நியத்துணிகளைத் தீயிட்டு எரித்தனர்.
3. கொற்கைத் துறைமுகத்திலே பாண்டியனுடைய மீனக்கொடி பறந்தது.
4. திருக்குறளை எழுதியவர் யார்?
5. கபிலர் குறிஞ்சிப்பாட்டை எழுதிய புலவர்.

| எழுவாய் | பயனிலை | செயப்படுபொருள் |
|---|---|---|
| | | |
| | | |
| | | |
| | | |
| | | |

**எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் ஆகிய மூன்றும் அமையும்படி ஐந்து தொடர்களை எழுதுக.**

1. ______________________________________________
2. ______________________________________________
3. ______________________________________________
4. ______________________________________________
5. ______________________________________________

**கீழ்க்காணும் தலைப்பில் கட்டுரை எழுதுக.**

நான் விரும்பும் தலைவர்.

## மொழியோடு விளையாடு

**இடைச்சொல் 'கு' சேர்த்துத் தொடரை எழுதுக.**

(எ.கா.) வீடு சென்றான் – வீடு+கு+சென்றான் – வீட்டுக்குச் சென்றான்

1. மாடு புல் கொடுத்தார் ____________________________________
2. பாட்டு பொருள் எழுது ____________________________________
3. செடி பாய்ந்த நீர் ____________________________________
4. முல்லை தேர் தந்தான் பாரி ____________________________________
5. சுவர் சாந்து பூசினாள் ____________________________________

**இரண்டு சொற்களை இணைத்துப் புதிய சொற்களை உருவாக்குக.**

| கண் | அழகு<br>உண்டு | கண்ணழகு | கண்ணுண்டு |
|---|---|---|---|
| மண் | | | |
| விண் | | | |
| பண் | | | |

**அகம் என முடியும் சொற்களை எழுதுக.**

(எ.கா.) நூலகம்

1. ____________________________________
2. ____________________________________
3. ____________________________________
4. ____________________________________

**கோடிட்ட இடங்களைத் தமிழ் எண் கொண்டு நிரப்புக.**

(எ.கா.) திருக்குறள் ௩ பால்களைக் கொண்டது.

1. எனது வயது ___________.
2. நான் படிக்கும் வகுப்பு ___________.
3. தமிழ் இலக்கணம் ___________ வகைப்படும்.
4. திருக்குறளில் ___________ அதிகாரங்கள் உள்ளன.
5. இந்தியா ___________ ஆம் ஆண்டு விடுதலை பெற்றது.

குறிப்புகளைக் கொண்டு தலைவர்களின் பெயர்களைக் கட்டங்களிலிருந்து கண்டுபிடித்து எழுதுக.

| தி | ரு | ப் | பூ | ர் | கு | ம | ர | ன் |
|---|---|---|---|---|---|---|---|---|
| ரு | தா | கா | ன் | க | க் | க | நா | லை |
| வ | ந் | ம | யா | ர் | டு | ட் | க | ம |
| ள் | ஜி | ரா | ஜா | யா | ர் | ட | ம் | ன |
| ளி | ஜா | ச | ர | தி | யா | பொ | மை | ன் |
| ய | ரா | ர் | னா | ர | ப | ம் | த | சி |
| ம் | இ | டி | ண் | பா | ர | ம | மி | ற |
| மை | வா | ஞ் | சி | நா | த | ன் | ழி | ப் |
| ர் | யா | சி | ச் | நா | லு | வே | ல் | பு |

1. மூதறிஞர்
2. வீரமங்கை
3. பாஞ்சாலங்குறிச்சி வீரன்
4. வெள்ளையரை எதிர்த்த தீரன்
5. கொடிகாத்தவர்
6. எளிமையின் இலக்கணம்
7. தில்லையாடியின் பெருமை
8. கப்பலோட்டிய தமிழர்
9. பாட்டுக்கொரு புலவன்
10. விருதுப்பட்டி வீரர்
11. கள்ளுக்கடை மறியல் பெண்மணி
12. மணியாட்சியின் தியாகி

## நிற்க அதற்குத் தக...

### என் பொறுப்புகள்....

1. விடுதலைப் போராட்ட வீரர்களின் வரலாறுகளை அறிந்து போற்றுவேன்.
2. தலைவர்களின் அரிய பண்புகளை உணர்ந்து பின்பற்றுவேன்

### கலைச்சொல் அறிவோம்.

**கதைப்பாடல்** – *Ballad*
**துணிவு** – *Courage*
**தியாகம்** – *Sacrifice*
**அரசியல் மேதை** – *Political Genius*
**பேச்சாற்றல்** – *Elocution*
**ஒற்றுமை** – *Unity*
**முழக்கம்** – *Slogan*
**சமத்துவம்** – *Equality*

## இணையத்தில் காண்க

வ.உ. சிதம்பரனார் வாழ்க்கைக் குறிப்புகளை இணையத்தில் தேடி எழுதுக.

இயல்
நான்கு

# அறிவியல் ஆக்கம்



## கற்றல் நோக்கங்கள்

- சங்கப் பாடல்களைச் சீர்பிரித்துப் படிக்கும் திறனும் கருத்தை உணரும் திறனும் பெறுதல்
- தமிழர்களின் கப்பல் கட்டும் தொழில்நுட்ப முறையை இலக்கியங்கள் வழி அறிந்து வியத்தல்
- மொழிபெயர்ப்புப் புதினத்தைப் படித்தறிந்து, கதையைச் சுருக்கமாகச் சுவைபட எடுத்துரைத்தல்
- மொழியில் பயன்படுத்தப்படும் இலக்கிய வகைச் சொற்களைக் கண்டறிதல்

கவிதைப்பேழை

இயல் நான்கு

# கலங்கரை விளக்கம்

AJGM7K

**நுழையும்முன்**

கடலும் கடல்சார்ந்த இடமும் தமிழரின் வாழ்நிலங்களுள் ஒன்று. கடலோடு வாழ்ந்த தமிழர், தம் தொழில்நுட்ப அறிவால் கலம் படைத்து, அதனைக் கொண்டு மீன்பிடித்தும், வணிகம் செய்தும் வாழ்ந்து வந்தனர். கடற்பயணம் சென்று கரை திரும்பத் தமிழர் கண்ட தொழில்நுட்பமே கலங்கரை விளக்கம். அது குறித்துச் சங்கப் பாடல் விளக்குவதைக் காண்போம்.

*வானம் ஊன்றிய மதலை போல*
*ஏணி சாத்திய ஏற்றருஞ் சென்னி*
*விண்பொர நிவந்த வேயா மாடத்து*
*இரவில் மாட்டிய இலங்குசுடர் ஞெகிழி*
*உரவுநீர் அழுவத்து ஓடுகலம் கரையும்*
*துறை*.......*

*– கடியலூர் உருத்திரங் கண்ணனார்*



## சொல்லும் பொருளும்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மதலை | – | தூண் | சென்னி | – | உச்சி |
| ஞெகிழி | – | தீச்சுடர் | உரவுநீர் | – | பெருநீர்ப் பரப்பு |
| அழுவம் | – | கடல் | கரையும் | – | அழைக்கும் |

*வேயா மாடம் – வைக்கோல் போன்றவற்றால் வேயப்படாது, திண்மையாகச் சாந்து பூசப்பட்ட மாடம்*

## பாடலின் பொருள்

*கலங்கரை விளக்கமானது வானம் கீழே விழுந்துவிடாமல் தாங்கிக் கொண்டிருக்கும் தூண் போலத் தோற்றமளிக்கிறது; ஏணி கொண்டு ஏறமுடியாத உயரத்தைக் கொண்டிருக்கிறது; வேயப்படாமல் சாந்து பூசப்பட்ட விண்ணை முட்டும் மாடத்தை உடையது. அம்மாடத்தில் இரவில் ஏற்றப்பட்ட எரியும் விளக்கு, கடலில் துறைமுகம் அறியாமல் கலங்கும் மரக்கலங்களைத் தன் துறைமுகம் நோக்கி அழைக்கிறது.*

### நூல் வெளி

கடியலூர் உருத்திரங்கண்ணனார் சங்ககாலப் புலவர். இவர் கடியலூர் என்ற ஊரில் வாழ்ந்தவர். இவர் பத்துப்பாட்டில் உள்ள பெரும்பாணாற்றுப்படை, பட்டினப்பாலை ஆகிய நூல்களை இயற்றியுள்ளார்.

பெரும்பாணாற்றுப்படையின் பாட்டுடைத்தலைவன் தொண்டைமான் இளந்திரையன். இந்நூலின் 346 முதல் 351 வரை உள்ள அடிகள் நமக்குப் பாடப்பகுதியாகத் தரப்பட்டுள்ளன.

வள்ளல் ஒருவரிடம் பரிசு பெற்றுத் திரும்பும் புலவர், பாணர் போன்றோர் அந்த வள்ளலிடம் சென்று பரிசு பெற, பிறருக்கு வழிகாட்டுவதாகப் பாடப்படுவது ஆற்றுப்படை இலக்கியம் ஆகும்.

### தெரிந்து தெளிவோம் — பத்துப்பாட்டு நூல்கள்

| | |
|---|---|
| திருமுருகாற்றுப்படை | மதுரைக்காஞ்சி |
| பொருநராற்றுப்படை | நெடுநல்வாடை |
| பெரும்பாணாற்றுப்படை | குறிஞ்சிப்பாட்டு |
| சிறுபாணாற்றுப்படை | பட்டினப்பாலை |
| முல்லைப்பாட்டு | மலைபடுகடாம் |

## கற்பவை கற்றபின்

1. கடற்கரைக்குச் சென்று அங்குள்ள காட்சிகளைக் கண்டு மகிழ்க.
2. 'கலங்கரை விளக்கம்'– மாதிரி ஒன்று செய்து வருக.
3. கடலும் கலங்கரை விளக்கமும் – ஓவியம் வரைந்து வண்ணம் தீட்டுக.

## மதிப்பீடு

### சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. வேயாமாடம் எனப்படுவது ______.

   அ) வைக்கோலால் வேயப்படுவது ஆ) சாந்தினால் பூசப்படுவது

   இ) ஓலையால் வேயப்படுவது ஈ) துணியால் மூடப்படுவது

2. உரவுநீர் <u>அழுவம்</u> – இத்தொடரில் அடிக்கோடிட்ட சொல்லின் பொருள் ______.

   அ) காற்று ஆ) வானம் இ) கடல் ஈ) மலை

3. கடலில் துறைமுகம் அறியாமல் கலங்குவன ______.

   அ) மீன்கள் ஆ) மரக்கலங்கள் இ) தூண்கள் ஈ) மாடங்கள்

4. தூண் என்னும் பொருள் தரும் சொல் ______.

   அ ) ஞெகிழி ஆ) சென்னி இ) ஏணி ஈ) மதலை

### குறுவினா

1. மரக்கலங்களைத் துறைமுகம் நோக்கி அழைப்பது எது?
2. கலங்கரை விளக்கத்தில் எந்நேரத்தில் விளக்கு ஏற்றப்படும்?

### சிறுவினா

கலங்கரை விளக்கம் பற்றிப் பெரும்பாணாற்றுப்படை கூறும் கருத்துகளை எழுதுக.

### சிந்தனை வினா

கலங்கரை விளக்கம் கப்பல் ஓட்டிகளைத் தவிர வேறு யாருக்கெல்லாம் பயன்படும் என நீங்கள் கருதுகிறீர்கள்?

கவிதைப்பேழை

இயல் நான்கு

# கவின்மிகு கப்பல்

AYZH8W

**நுழையும்முன்**

*கடலும் கப்பலும் கண்ணுக்கு விருந்தாகக் காட்சியளிப்பவை. அலைவீசும் கடலில் அசைந்தாடிச் செல்லும் கப்பலைக் காணக் காண உள்ளம் உவகையில் துள்ளும். அச்சம் தரும் கடலில், அஞ்சாது கப்பலோட்டியவர் நம் தமிழர். காற்றின் துணைகொண்டு கப்பலைச் செலுத்திய நம் முன்னோரின் திறத்தைச் சங்கப்பாடலின்வழி அறிவோமா?*

*உலகுகிளர்ந் தன்ன உருகெழு வங்கம்*
*புலவுத்திரைப் பெருங்கடல் நீர்இடைப் போழ*
*இரவும் எல்லையும் அசைவுஇன்று ஆகி*
*விரைசெலல் இயற்கை வங்கூழ் ஆட்ட*
*கோடுஉயர் திணிமணல் அகன்துறை நீகான்*
*மாட ஒள்ளரி மருங்குஅறிந்து ஒய்ய*

*– மருதன் இளநாகனார்*



### சொல்லும் பொருளும்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| உரு | – | அழகு | வங்கம் | – | கப்பல் |
| போழ | – | பிளக்க | எல் | – | பகல் |
| வங்கூழ் | – | காற்று | கோடு உயர் | – | கரை உயர்ந்த |
| நீகான் | – | நாவாய் ஓட்டுபவன் | மாட ஒள்எரி | - | கலங்கரை விளக்கம் |

### பாடலின் பொருள்

*உலகம் புடைபெயர்ந்தது போன்ற அழகு பொருந்திய தோற்றத்தை உடையது நாவாய். அது புலால் நாற்றமுடைய அலைவீசும் பெரிய கடலின் நீரைப் பிளந்து கொண்டு செல்லும். இரவும் பகலும் ஓரிடத்தும் தங்காமல் வீசுகின்ற காற்றானது நாவாயை அசைத்துச் செலுத்தும். உயர்ந்த கரையை உடைய மணல் நிறைந்த துறைமுகத்தில் கலங்கரை விளக்கத்தின் ஒளியால் திசை அறிந்து நாவாய் ஓட்டுபவன் நாவாயைச் செலுத்துவான்.*

### நூல் வெளி

மருதன் இளநாகனார் சங்ககாலப் புலவர்களுள் ஒருவர். கலித்தொகையின் மருதத்திணையில் உள்ள முப்பத்து ஐந்து பாடல்களையும் பாடியவர் இவரே. மருதத்திணை பாடுவதில் வல்லவர் என்பதால் மருதன் இளநாகனார் என அழைக்கப்படுகிறார்.

அகநானூறு எட்டுத்தொகை நூல்களுள் ஒன்று. புலவர் பலரால் பாடப்பட்ட நானூறு பாடல்களைக் கொண்டது. இந்நூலினை நெடுந்தொகை என்றும் அழைப்பர். இந்நூலின் 255 ஆம் பாடல் இங்குத் தரப்பட்டுள்ளது.

### தெரிந்து தெளிவோம்

**எட்டுத்தொகை நூல்கள்**

| | |
|---|---|
| நற்றிணை | பரிபாடல் |
| குறுந்தொகை | கலித்தொகை |
| ஐங்குறுநூறு | அகநானூறு |
| பதிற்றுப்பத்து | புறநானூறு |

## கற்பவை கற்றபின்

1. *கடலில் கிடைக்கும் பொருள்களின் பெயர்களைத் தொகுக்க.*
2. *கடற்பயணம் பற்றிய சிறுகதை ஒன்றை அறிந்துவந்து வகுப்பறையில் பகிர்க.*

# மதிப்பீடு

**சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.**

1. இயற்கை <u>வங்கூழ்</u> ஆட்ட –அடிக்கோடிட்ட சொல்லின் பொருள் ____________.

   அ) நிலம் ஆ) நீர் இ) காற்று ஈ) நெருப்பு

2. மக்கள் __________ ஏறி வெளிநாடுகளுக்குச் சென்றனர்.

   அ) கடலில் ஆ) காற்றில் இ) கழனியில் ஈ) வங்கத்தில்

3. புலால் நாற்றம் உடையதாக அகநானூறு கூறுவது _____________.

   அ) காற்று ஆ) நாவாய் இ) கடல் ஈ) மணல்

4. 'பெருங்கடல்' என்னும் சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது ____________.

   அ) பெரு + கடல் ஆ) பெருமை + கடல் இ) பெரிய + கடல் ஈ) பெருங் + கடல்

5. இன்று + ஆகி என்பதனைச் சேர்த்தெழுதக் கிடைக்கும் சொல் ____________.

   அ) இன்றுஆகி ஆ) இன்றிஆகி இ) இன்றாகி ஈ) இன்றாஆகி

6. எதுகை இடம்பெறாத இணை ____________.

   அ) இரவு– இயற்கை ஆ) வங்கம் – சங்கம்

   இ) உலகு – புலவு ஈ) அசைவு – இசைவு

**பொருத்துக.**

1. வங்கம் – பகல்
2. நீகான் – கப்பல்
3. எல் – கலங்கரை விளக்கம்
4. மாட ஒள்ளெரி – நாவாய் ஓட்டுபவன்

**குறுவினா**

1. நாவாயின் தோற்றம் எவ்வாறு இருந்ததாக அகநானூறு கூறுகிறது?
2. நாவாய் ஓட்டிகளுக்குக் காற்று எவ்வாறு துணைசெய்கிறது?

**சிறுவினா**

கடலில் கப்பல் செல்லும் காட்சியை அகநானூறு எவ்வாறு விளக்குகிறது?

**சிந்தனை வினா**

தரைவழிப்பயணம், கடல்வழிப் பயணம் ஆகியவற்றுள் நீங்கள் விரும்புவது எது? ஏன்?

உரைநடை உலகம்

இயல் நான்கு

# தமிழரின் கப்பற்கலை

B8I16C

நுழையும்முன்

பயணம் செய்வதில் தமிழர்களுக்கு எப்போதும் பெருவிருப்பம் உண்டு. பயணம் தரைவழிப் பயணம், நீர்வழிப் பயணம், வான்வழிப் பயணம் என மூன்று வகைப்படும். நீர்வழிப் பயணத்தை உள்நாட்டு நீர்வழிப் பயணம், கடல்வழிப் பயணம் என இருவகைப்படுத்தலாம். வானூர்திகள் கண்டுபிடிக்கப்படாத காலத்தில் வெளிநாட்டுப் பயணத்திற்கு உதவியவை கப்பல்களே! கப்பல் கட்டுவதும் கப்பலைச் செலுத்துவதும் மிகச் சிறந்த தொழில்நுட்பம் சார்ந்த கலைகள் ஆகும். கப்பலைப் பார்ப்பதும் கப்பலில் பயணம் செய்வதும் மட்டுமல்லாமல் கப்பலைப் பற்றிப் படிப்பதும் உள்ளத்திற்கு உவகை தரும்.



மழை என்றதும் குழந்தைகளின் நினைவுக்கு வருவது காகிதக் கப்பல். மழை நீரில் காகிதக் கப்பல் விட்டு விளையாடாத குழந்தைகளே இல்லை எனலாம். அந்த அளவிற்கு நம் ஆழ்மனத்தில் கப்பல் இடம் பெற்றுள்ளது. பழங்காலம் முதல் தமிழர்கள் கப்பல் கட்டும் கலையில் சிறந்திருந்ததன் மரபுத் தொடர்ச்சி என்று இதனைக் கூறலாம். தமிழர்கள் கப்பல்களைக் கட்டினர் என்பதற்கும் கப்பல் மூலம் வெளிநாடுகளுக்குச் சென்றனர் என்பதற்கும் நம் இலக்கியங்களில் ஏராளமான சான்றுகள் உள்ளன. நமக்குக் கிடைத்துள்ள நூல்களிலேயே மிகவும் பழமையானது தொல்காப்பியம். அந்நூல் முந்நீர் வழக்கம் என்று கடற்பயணத்தைக் குறிப்பிடுகிறது. எனவே, தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே தமிழர்கள் கடல் பயணம் செய்துள்ளனர் என்பதை அறியலாம்.

கடலோடா கால்வல் நெடுந்தேர் கடலோடும்
நாவாயும் ஓடா நிலத்து (குறள் 496)

என்னும் திருக்குறள், திருவள்ளுவர் காலத்திலேயே பெரிய கப்பல்கள் இருந்தன என்பதற்குச் சான்றாகும். பூம்புகார் துறைமுகத்திலிருந்து கப்பல்கள் மூலம் பொருள்கள் ஏற்றுமதியும் இறக்குமதியும் செய்யப்பட்டன என்பதைப் பட்டினப்பாலை விரிவாக விளக்குகிறது.

உலகு கிளர்ந்தன்ன உருகெழு வங்கம்– (பாடல் 255)

என்று பெரிய கப்பலை அகநானூறு குறிப்பிடுகிறது. இதனையே பதிற்றுப்பத்து என்னும் நூலும்,

"அருங்கலம் தரீஇயர் நீர்மிசை நிவக்கும்
பெருங்கலி வங்கம்" (பாடல் 52 )

என்று குறிப்பிடுகிறது. சேந்தன் திவாகரம் என்னும் நிகண்டு நூலில் பலவகையான கப்பல்களின் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இதன் மூலம் தமிழர்கள் கப்பல் கட்டும் தொழிலில் பரந்துபட்ட அறிவு பெற்றிருந்தார்கள் என்பதை உணரலாம்.

### நீர்வழிப் பயணத் தொடக்கம்

நீர்நிலைகளில் மரக்கிளைகள் மிதந்து செல்வதையும் அவற்றின்மீது பறவைகள், தவளைகள் முதலியன அமர்ந்து செல்வதையும் பழங்கால மனிதன் கண்டான். நீரில் மிதக்கும் பொருட்களின் மீது தானும் ஏறிப் பயணம் செய்ய முடியும் என அவன் உணர்ந்தான். மிதக்கும் மரக்கட்டைகள் மீது ஏறி அமர்ந்து சிறிய நீர்நிலைகளைக் கடக்கத் தொடங்கினான். மீன்கள் தம் உடலின் இரு பக்கங்களிலும் உள்ள துடுப்புப் போன்ற பகுதிகளைப் பயன்படுத்தித் தண்ணீரைப் பின்னுக்குத் தள்ளி நீந்துவதைக் கண்டான். தானும் மரத்துண்டுகளைத் துடுப்புகளாகப் பயன்படுத்தத் தொடங்கினான். பிறகு மரங்கள் பலவற்றை இணைத்துக் கட்டி அவற்றின் மீது ஏறிப் பயணம் செய்தான். அவையே இன்றுவரை வழக்கத்தில் உள்ள கட்டுமரங்கள் ஆகும். அதன் பின்னர் எடை குறைந்த பெரிய மரங்களின் உட்பகுதியைக் குடைந்து எடுத்துவிட்டுத் தோணியாகப் பயன்படுத்தினான். உட்பகுதி தோண்டப்பட்டவை என்பதால் அவை தோணிகள் எனப்பட்டன.

தமிழர்கள் தோணி, ஓடம், படகு, புணை, மிதவை, தெப்பம் போன்றவற்றைச் சிறிய நீர்நிலைகளைக் கடக்கப் பயன்படுத்தினர். கலம், வங்கம், நாவாய் முதலியவை அளவில் பெரியவை. இவற்றைக் கொண்டு தமிழர்கள் கடல் பயணம் மேற்கொண்டனர்.

### தெரிந்து தெளிவோம்

நியூசிலாந்து நாட்டு வெலிங்டன் அருங்காட்சியகத்தில் பழங்காலத் தமிழ்நாட்டுக் கப்பல்களில் பயன்படுத்தப்பட்ட மணி ஒன்று இடம்பெற்றுள்ளது. தமிழர்கள் அயல் நாடுகளுக்குக் கப்பல்களில் சென்றனர் என்பதற்கு இதுவும் ஒரு சான்றாகும். பிற்காலச் சோழர்களில் இராசராச சோழனும், இராசேந்திர சோழனும் பெரிய கப்பற்படையைக் கொண்டு பல நாடுகளை வென்றனர் என்பதை வரலாறு பகர்கிறது.



### கப்பல் கட்டும் கலை

தமிழர்கள் முற்காலத்திலேயே கப்பல் கட்டும் கலையை நன்கு அறிந்திருந்தனர். கப்பல் கட்டும் கலைஞர்கள் கம்மியர் என்று அழைக்கப்பட்டனர். இதனைக்,

*"கலஞ்செய் கம்மியர் வருகெனக் கூஉய்"* (காதை 25, அடி 124 )

என்னும் மணிமேகலை அடியால் அறியலாம். பெருந்திரளான மக்களையும் பொருள்களையும் ஏற்றிச் செல்லும் வகையில் பெரிய கப்பல்களைத் தமிழர் உருவாக்கினர். நீண்ட தூரம் கடலிலேயே செல்ல வேண்டி இருந்ததால் கப்பல்களைப் பாதுகாப்பானவையாகவும் வலிமை மிக்கவையாகவும் உருவாக்கினர்.

கப்பல் கட்டுவதற்கு உரிய மரங்களைத் தேர்ந்தெடுப்பதில் தமிழர்கள் மிகுந்த கவனம் செலுத்தினர். கப்பல்கள் தண்ணீரிலேயே இருப்பவை என்பதால் தண்ணீரால் பாதிப்பு அடையாத மரங்களையே கப்பல் கட்டப் பயன்படுத்தினர். நீர்மட்ட வைப்பிற்கு வேம்பு, இலுப்பை, புன்னை, நாவல் போன்ற மரங்களைப் பயன்படுத்தினர். பக்கங்களுக்குத் தேக்கு, வெண்தேக்கு போன்ற மரங்களைப் பயன்படுத்தினர். மரத்தின் வெட்டப்பட்ட பகுதியை வெட்டுவாய் என்பர். அதன் நிறத்தைக் கொண்டு மரத்தின் தன்மையை அறிவர். கண்ணடை என்பது இழைத்த மரத்தில் காணப்படும் உருவங்கள் ஆகும். மேலும் சுழி உள்ள மரங்களைப் பயன்படுத்தாமல் தவிர்த்தனர். நீளம், அகலம், உயரம் ஆகியவற்றைச் சரியான முறையில் கணக்கிட்டுக் கப்பல்களை உருவாக்கினர். இவற்றைத் தச்சுமுழம் என்னும் நீட்டலளவையால் கணக்கிட்டனர். பெரிய படகுகளில் முன்பக்கத்தை யானை, குதிரை, அன்னம் முதலியவற்றின் தலையைப் போன்று வடிவமைப்பதும் உண்டு. கரிமுக அம்பி, பரிமுக அம்பி என்றெல்லாம் இவை அழைக்கப்பட்டன.

மரங்களையும் பலகைகளையும் ஒன்றோடு ஒன்று இணைக்கும்போது அவற்றுக்கு இடையே தேங்காய் நார், பஞ்சு ஆகியவற்றில் ஒன்றை வைத்து நன்றாக இறுக்கி ஆணிகளை அறைந்தனர். சுண்ணாம்பையும் சணலையும் கலந்து அரைத்து அதில் எண்ணெய் கலந்து கப்பலின் அடிப்பகுதியில் பூசினர். இதனால் கப்பல்கள் பழுதடையாமல் நெடுங்காலம் உழைத்தன. இம்முறையை இத்தாலி நாட்டைச் சேர்ந்த மார்க்கோபோலோ என்னும் கடற்பயணி வியந்து பாராட்டியுள்ளார். இரும்பு ஆணிகள் துருப்பிடித்துவிடும் என்பதால் மரத்தினாலான ஆணிகளையே பயன்படுத்தினர். இந்த ஆணிகளைத் தொகுதி என்பர்.

**தெரிந்து தெளிவோம்**

"ஆங்கிலேயர் கட்டிய கப்பல்களைப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை பழுது பார்க்க வேண்டும். ஆனால் தமிழர் கட்டிய கப்பல்களை ஐம்பது ஆண்டுகள் ஆனாலும் பழுது பார்க்க வேண்டிய அவசியமில்லை" என்று வாக்கர் என்னும் ஆங்கிலேயர் கூறியுள்ளார்.

### பாய்மரக் கப்பல்கள்

காற்றின் உதவியால் செலுத்தப்படும் கப்பல்கள் பாய்மரக் கப்பல்கள் எனப்பட்டன. பெரிய பாய்மரம், திருக்கைத்திப் பாய்மரம், காணப் பாய்மரம், கோசுப் பாய்மரம் போன்ற பலவகையான பாய்மரங்களைத் தமிழர் பயன்படுத்தினர். பாய்மரங்களைக் கட்டும் கயிறுகளும் பல வகையாக இருந்தன. ஆஞ்சான் கயிறு, தாம்பாங்கயிறு, வேடாங்கயிறு, பளிங்கைக் கயிறு, மூட்டங்கயிறு, இளங்கயிறு,

கோடிப்பாய்க்கயிறு என்பவை அவற்றுள் சில. பாய்மரக் கப்பலின் பாய், கயிறு ஆகியவற்றில் பழுது ஏற்படும் பொழுது அவற்றை மரப்பிசின் கொண்டு இணைத்தனர் என்று பரிபாடல் கூறுகிறது.

### கப்பலின் உறுப்புகள்

கப்பல் பல்வேறு வகையான உறுப்புகளை உடையது. எரா, பருமல், வங்கு, கூம்பு, பாய்மரம், சுக்கான், நங்கூரம் போன்றவை கப்பலின் உறுப்புகளுள் சிலவாகும். கப்பலின் முதன்மையான உறுப்பாகிய அடிமரம் எரா எனப்படும். குறுக்கு மரத்தைப் பருமல் என்பர். கப்பலைச் செலுத்துவதற்கும் உரிய திசையில் திருப்புவதற்கும் பயன்படும் முதன்மையான கருவி சுக்கான் எனப்படும். கப்பலை நிலையாக ஓரிடத்தில் நிறுத்தி வைக்க உதவும் உறுப்பு நங்கூரம் ஆகும். சமுக்கு என்னும் ஒரு கருவியையும் கப்பல்களில் பயன்படுத்தினர் என்று கப்பல் சாத்திரம் என்னும் நூல் குறிப்பிடுகிறது. இது காந்த ஊசி பொருத்தப்பட்ட திசைகாட்டும் கருவியாக இருக்கலாம் என ஆய்வாளர்கள் கருதுகின்றனர். கப்பல் செலுத்துபவரை மாலுமி, மீகாமன், நீகான், கப்பலோட்டி முதலிய பல பெயர்களால் அழைப்பர்.

### கப்பலைச் செலுத்தும் முறை

காற்றின் திசையை அறிந்து கப்பல்களைச் செலுத்தும் முறையைத் தமிழர்கள் நன்கு அறிந்திருந்தனர். இவ்வுண்மையை,

*"நளியிரு முந்நீர் நாவாய் ஓட்டி*
*வளி தொழில் ஆண்ட உரவோன் மருக"* (பாடல் 66)



என்னும் புறப்பாடல் அடிகளில் வெண்ணிக்குயத்தியார் குறிப்பிடுகிறார். கடலில் காற்று வீசும் திசை, கடல் நீரோட்டங்களின் திசை ஆகியவற்றைத் தமிழர்கள் தம் பட்டறிவால் நன்கு அறிந்து அவற்றுக்கேற்ப உரிய காலத்தில் சரியான திசையில் கப்பலைச் செலுத்தினர். திசைகாட்டும் கருவியைப் பயன்படுத்தியும் வானில் தோன்றும் விண்மீன்களின் நிலையை வைத்தும் திசையை அறிந்து கப்பலைச் செலுத்தினர். கப்பல் ஓட்டும் மாலுமிகள் சிறந்த வானியல் அறிவையும் பெற்றிருந்தனர். கோள்களின் நிலையை வைத்துப் புயல், மழை போன்றவை தோன்றும் காலங்களையும் கடல்நீர் பொங்கும் காலத்தையும் அறிந்து தகுந்த காலத்தில் கப்பல்களைச் செலுத்தினர்.



### கலங்கரை விளக்கம்

கடலில் செல்லும் கப்பல்களுக்குத் துறைமுகம் இருக்கும் இடத்தைக்

காட்டுவதற்காக அமைக்கப்படுவது கலங்கரை விளக்கம் ஆகும். உயரமான கோபுரத்தின் உச்சியில் ஒளிவீசும் விளக்கினைக் கொண்டதாக இஃது அமைக்கப்படும். கலம் என்றால் கப்பல். கரைதல் என்றால் அழைத்தல். கப்பலை அழைக்கும் விளக்கு என்னும் பொருளில் இது கலங்கரை விளக்கம் எனப்பட்டது.

பெரிய கப்பல்கள் துறைமுகத்தில் கரைக்கு அருகில் வர இயலாது. எனவே கப்பலில் வரும் பொருள்களைத் தோணிகள் மூலம் கரைக்குக் கொண்டு வந்தனர். இச்செய்தியை,

*கலம் தந்த பொற்பரிசம்*

*கழித்தோணியால் கரை சேர்க்குந்து* (பாடல் 343) என்று புறநானூறு கூறுகிறது.

### தெரிந்து தெளிவோம்

கடல் ஆமைகள் இனப்பெருக்கத்துக்காகத் தகுந்த இடம் தேடி நீண்ட தூரம் பயணம் செய்கின்றன. அவை செல்லும் வழியைச் செயற்கைக்கோள்கள் மூலம் தற்போது ஆராய்ந்துள்ளனர். அவ்வழியில் உள்ள நாடுகளுடன் தமிழர்கள் வாணிகத் தொடர்பு கொண்டு இருந்ததை அறிய முடிகிறது. எனவே பழந்தமிழர்கள் ஆமைகளை வழிகாட்டிகளாகப் பயன்படுத்திக் கடல் பயணம் செய்து இருக்கலாம் என்னும் கருத்தும் உள்ளது.

முற்காலத்தில் மக்கள் பயணம் செய்வதற்கு மட்டுமன்றிப் போர் புரியவும் கப்பல்கள் பெரிதும் பயன்பட்டன. ஆனால் இக்காலத்தில் பெரும்பாலும் பொருள்களை ஏற்றிச் செல்லவே கப்பல்கள் பயன்படுத்தப்படுகின்றன. அவற்றைச் சரக்குக் கப்பல்கள் என்பர். போருக்குப் பயன்படும் பெரிய கப்பல்களும் இன்று உள்ளன.

இத்தகைய சீர்மிகு கப்பற்கலையில் நம் முன்னோர் சிறந்து விளங்கினர் என்பது நமக்குப் பெருமை அளிக்கும் செய்தியாகும்.

## கற்பவை கற்றபின்

1. பலவகையான கப்பல்களின் படங்களைச் சேகரித்துப் படத்தொகுப்பு ஒன்று உருவாக்குக.
2. தரைவழிப் பயணம், கடல்வழிப்பயணம், வான்வழிப்பயணம் ஆகியவை குறித்து வகுப்பறையில் கலந்துரையாடுக.

## மதிப்பீடு

சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. தமிழர்கள் சிறிய நீர்நிலைகளைக் கடக்கப் பயன்படுத்தியது ___________.

   அ) கலம் ஆ) வங்கம் இ) நாவாய் ஈ) ஓடம்

2. தொல்காப்பியம் கடற்பயணத்தை ____________ வழக்கம் என்று கூறுகிறது.

அ) நன்னீர் ஆ) தண்ணீர் இ) முந்நீர் ஈ) கண்ணீர்

3. கப்பலை உரிய திசையில் திருப்புவதற்குப் பயன்படும் கருவி __________.

அ) சுக்கான் ஆ) நங்கூரம் இ) கண்ணடை ஈ) சமுக்கு

## கோடிட்ட இடங்களை நிரப்புக.

1. கப்பல் கட்டுவதற்குப் பயன்படும் மர ஆணிகள் _________ என அழைக்கப்படும்.
2. கப்பல் ஓரிடத்தில் நிலையாக நிற்க உதவுவது ___________.
3. இழைத்த மரத்தில் காணப்படும் உருவங்கள் __________ எனக் குறிப்பிடப்படும்.

## பொருத்துக.

1. எரா - திசைகாட்டும் கருவி
2. பருமல் - அடிமரம்
3. மீகாமன் - குறுக்கு மரம்
4. காந்த ஊசி - கப்பலைச் செலுத்துபவர்

## தொடர்களில் அமைத்து எழுதுக.

1. நீரோட்டம் 2. காற்றின் திசை 3. வானியல் அறிவு 4. ஏற்றுமதி

## குறுவினா

1. தோணி என்னும் சொல்லின் பெயர்க்காரணத்தைக் கூறுக.
2. கப்பல் கட்டும்போது மரப்பலகைகளுக்கு இடையே தேங்காய் நார் (அ) பஞ்சு வைப்பதன் நோக்கம் என்ன?
3. கப்பலின் உறுப்புகள் சிலவற்றின் பெயர்களைக் கூறுக.

## சிறுவினா

1. சிறிய நீர்நிலைகளையும் கடல்களையும் கடக்க, தமிழர்கள் பயன்படுத்திய ஊர்திகளின் பெயர்களை எழுதுக.
2. பண்டைத் தமிழரின் கப்பல் செலுத்தும் முறை பற்றி எழுதுக.
3. கப்பல் பாதுகாப்பானதாக அமையத் தமிழர்கள் கையாண்ட வழிமுறைகள் யாவை?

## சிந்தனை வினா

இக்காலத்தில் மக்கள் வெளிநாடுகளுக்குச் செல்வதற்குக் கடற்பயணத்தைப் பெரிதும் மேற்கொள்ளாதது ஏன் எனச் சிந்தித்து எழுதுக.

விரிவானம்

இயல் நான்கு

# ஆழ்கடலின் அடியில்

C9B6B8

நுழையும்முன்

கடல் பல்வேறு விந்தைகளைத் தன்னுள் கொண்டது. கடலுக்கடியில் பலவகையான தாவரங்கள், மீன்கள், விலங்குகள், பவளப்பாறைகள், எரிமலைகள் எனப் புதுமைகள் பலவும் நிறைந்து கிடக்கின்றன. மேலும் கடலுக்கடியில் பல நகரங்களும் கப்பல்களும் மூழ்கிக்கிடக்கின்றன. ஒரு கற்பனையான நீர்மூழ்கிக் கப்பலில் சென்று அவற்றை எல்லாம் காண்போம்.



என் பெயர் பியரி. நான் ஒரு விலங்கியல் பேராசிரியர். கடலின் அடியில் உள்ள விலங்குகளைப் பற்றி ஆராய்வதில் எனக்கு விருப்பம் மிகுதி. 1886 ஆம் ஆண்டு கப்பல் மாலுமிகளிடையே ஓர் அதிர்ச்சியான தகவல் பரவியது. கடலில் செல்லும் பெரிய கப்பல்களை உலோகத்தால் ஆன உடலைக் கொண்ட ஒரு விந்தையான விலங்கு தாக்குகிறது என்பதுதான் அந்தச் செய்தி.

அந்த விந்தை விலங்கைக் கண்டுபிடித்து அழிப்பதற்காக அமெரிக்காவின் நியூயார்க் நகரிலிருந்து ஒரு போர்க்கப்பல் புறப்பட்டது. கடல் பயணத்தில் திறமை வாய்ந்த ஃபராகட் என்பவர் அக்கப்பலின் தலைவராக இருந்தார். ஈட்டி எறிந்து திமிங்கிலங்களை

வேட்டையாடுவதில் வல்லவரான நெட் என்ற வீரரும் அக்கப்பலில் இருந்தார். நானும் எனது உதவியாளர் கான்சீலும் அக்கப்பலில் சென்றோம்.

மூன்று மாதங்கள் அமெரிக்காவுக்கும் ஜப்பானுக்கும் இடையே உள்ள பெருங்கடல் பரப்பில் ஓர் இடம் விடாமல் தேடினோம். அந்த விலங்கு எங்கள் கண்ணில் படவே இல்லை. எனவே, கப்பல் எங்கள் நகரத்தை நோக்கிப் பயணத்தைத் தொடங்கியது.

அப்பொழுது பளபளப்பான உடலைக் கொண்ட அந்த விலங்கு மிக வேகமாக எங்கள் கப்பலை நோக்கி வந்தது. "அந்த விலங்கைச் சுட்டுத் தள்ளுங்கள்" என்று கப்பல் தலைவர் ஃபராகட் கட்டளையிட்டார். வீரர்கள் சுடத் தொடங்கினர். பீரங்கிக் குண்டுகள் அனைத்தும் அந்த விலங்கின் உடலைத் துளைக்க முடியாமல் தெறித்து விழுந்தன. நெட் வலிமை வாய்ந்த ஈட்டிகளை எய்தார். அவற்றாலும் அவ்விலங்கை எதுவும் செய்யமுடியவில்லை.

அந்த விலங்கு நீரைப் பீய்ச்சியடித்தபடி எங்கள் கப்பலின் மீது வேகமாக மோதியது. நாங்கள் கப்பலிலிருந்து கடலில் தூக்கி வீசப்பட்டோம். நான் அப்படியே மயக்கமடைந்து போனேன்.

நான் கண்விழித்தபோது உலோகத்தினாலான அந்தக் கொடிய விலங்கின் மீது படுத்திருந்தேன். எனக்கு முன்னால் எனது உதவியாளர் கான்சீலும் நெட்டும் அமர்ந்திருந்தனர். "நாம் தேடிவந்த விலங்கு இதுதான். உண்மையில் இஃது ஒரு நீர்மூழ்கிக் கப்பல்" என்றார் நெட்.

நாங்கள் அந்த நீர்மூழ்கிக் கப்பலின் மீது வேகமாகத் தட்டி உள்ளே இருப்பவர்களை உதவிக்கு அழைத்தோம். நீண்ட நேரத்திற்குப் பிறகு மேல்பக்கத்தில் இருந்த மூடி திறக்கப்பட்டது. உள்ளே இருந்து வந்தவர்கள் எங்கள் மூவரையும் சிறைப்பிடித்து ஓர் அறைக்குள் வைத்துப் பூட்டினர்.

மறுநாள் காலை கப்பல் தலைவர் எங்கள் அறைக்குள் வந்தார். தமது பெயர் நெமோ என்று அவர் தம்மை அறிமுகப்படுத்திக்கொண்டார். "நாட்டிலஸ் என்னும் இந்த நீர்மூழ்கிக் கப்பலை ஒரு விந்தையான விலங்கு என்று நான் எல்லோரையும் நம்பவைத்திருக்கிறேன். இந்த உண்மையைத் தெரிந்து கொண்ட நீங்கள் எக்காலத்திலும் இங்கிருந்து விடுதலையாக முடியாது. எனக்கான ஒரு தனி உலகத்தை இந்த நீர்மூழ்கிக் கப்பலிலேயே நான் உருவாக்கி வைத்துள்ளேன். எனது நம்பிக்கைக்குரிய வேலையாள்கள் இங்கே இருக்கிறார்கள். எங்களுக்குத் தேவையான அனைத்து உணவுகளையும் கடல்வாழ் உயிரிகளிடமிருந்தே உருவாக்கிக் கொள்கிறோம். இனி நான் கரைக்குத் திரும்பவேமாட்டேன். உங்களையும் திரும்ப விடமாட்டேன்" என்றார் நெமோ.

நாங்கள் அதிர்ச்சியில் உறைந்து போனோம். அவரது மனத்தை மாற்ற முடியாது என்பது எங்களுக்குப் புரிந்துபோயிற்று. எப்படியாவது இந்தக் கப்பலில் இருந்து தப்பி விட வேண்டும் என்று நாங்கள் மனத்துக்குள் திட்டமிட்டுக்கொண்டோம்.

ஆழ்கடலுக்கு அடியில் நீர்மூழ்கிக் கப்பலில் எங்களது பயணம் தொடர்ந்தது.

அந்த நீர்மூழ்கிக் கப்பலினுள் எல்லா இடங்களுக்கும் செல்ல எனக்கு நெமோ இசைவு அளித்திருந்தார். கப்பலில் மிகச்சிறந்த நூலகம் ஒன்றும் மிகப்பெரிய அருங்காட்சியகம்

ஒன்றும் இருந்தன. இந்த அரிய அறிவுக்கருவூலங்கள் யாருக்கும் பயன்படாமல் ஆழ்கடலில் மூழ்கி கிடக்கின்றவே என்று நான் வருந்தினேன். இந்தக் கப்பல் எந்தக் கடலில் எந்தப் பகுதியில் இருக்கிறது, கடலுக்கு அடியில் எவ்வளவு ஆழத்தில் இருக்கிறது ஆகியவற்றைத் துல்லியமாக காட்டும் பெரிய திரை ஒன்றும் அங்கே இருந்தது.

"இந்தக் கப்பல் செல்வதற்கான ஆற்றல் எதிலிருந்து கிடைக்கிறது?" என்று நான் நெமோவிடம் கேட்டேன்.

"இந்தக் கப்பல் செல்வதற்கும் இங்குள்ள விளக்குகள் எரிவதற்கும் தேவையான மின்சாரத்தைத் தயாரிக்கும் கருவிகள் இங்கேயே உள்ளன" என்றார் அவர்.

"கப்பலை ஆழத்துக்கும் கடல் மேல் மட்டத்துக்கும் எப்படிக் கொண்டு செல்கிறீர்கள்?" என்று கேட்டேன்.

"இந்தக் கப்பலில் மிகப்பெரிய நீர்த்தொட்டிகள் உள்ளன. அவற்றில் தண்ணீரை நிரப்பும்போது கப்பல் கடலுக்கு அடியில் செல்லும். அந்தத் தண்ணீரை எந்திரங்கள் மூலம் வெளியேற்றும் பொழுது கப்பலின் எடை குறைவதால் கப்பல் கடல் மட்டத்திற்குச் செல்லும்" என்று விளக்கினார் நெமோ.

"எல்லாம் சரி, நாம் அனைவரும் மூச்சு விடுவதற்கான காற்று எப்படிக் கிடைக்கிறது?"

"சில நாட்களுக்கு ஒருமுறை கப்பல் கடல் மட்டத்திற்கு மேலே வரும்பொழுது அதன் மேல்மூடியைத் திறந்து காற்றைப் புதுப்பித்துக் கொள்வோம். அதுமட்டுமல்லாமல் இங்குக் காற்றைச் சேகரித்து வைத்துக்கொள்ளும் பைகள் இருக்கின்றன. அவற்றை முதுகில் கட்டிக்கொண்டு அதன் முகமூடியை முகத்தில் வைத்துக் கொண்டால் ஒன்பது மணி நேரம் வரை கடலுக்குள் நீந்த முடியும்" என்றார் அவர்.

இப்படியாக எங்களது பயணம் தொடர்ந்து கொண்டிருந்தது. அந்த நீர்மூழ்கிக் கப்பலில் இருந்து தப்பிவிட வேண்டும் என்ற எங்களது முயற்சி பலமுறை தோல்வியிலேயே முடிந்தது.

ஒருநாள் திடீரென்று கப்பல் கடல் மட்டத்தில் நின்றுவிட்டது. "என்ன ஆயிற்று?" என்று நான் நெமோவிடம் கேட்டேன். "கடலுக்குள் இருக்கும் கடல்புற்று எனப்படும் மணல் திட்டில் கப்பல் சிக்கிக் கொண்டுவிட்டது. இன்னும் ஒரு வாரத்தில் முழுநிலவு நாளன்று கடலின் நீர்மட்டம் உயரும். அப்போது நமது நீர்மூழ்கிக் கப்பல் தானாகவே நீர்மட்டத்தில் மிதக்கத் தொடங்கும். அதுவரை பொறுத்திருக்க வேண்டும்" என்றார் நெமோ.



நாட்டிலஸின் மேல்தளத்தில் நின்று பார்த்தபொழுது சற்றுத் தொலைவில் ஒரு தீவு தெரிந்தது. நெமோவிடம் இசைவு பெற்று நானும் நெட்டும் கான்சீலும் ஒரு படகை எடுத்துக்கொண்டு அந்தத் தீவிற்குச் சென்றோம். அங்கிருந்து ஏராளமான காய்கறிகளைச் சேகரித்துக் கொண்டு படகில் ஏறினோம். திடீரென்று அந்தத்தீவைச் சேர்ந்த, மனிதர்களைக் கொன்று தின்னும் வழக்கமுடையவர்கள் எங்களைத் துரத்திக்கொண்டு வந்தார்கள். நாங்கள் மிகுந்த அச்சத்தோடு விரைவாகப் படகைச் செலுத்திக்கொண்டு கப்பலுக்கு வந்து சேர்ந்தோம்.

ஏராளமான படகுகளில் அந்த மனிதர்கள் எங்கள் நாட்டிலஸைச் சூழ்ந்தார்கள். நாங்கள் மேல்மூடியை இறுக மூடிக்கொண்டு உள்ளே இருந்தோம். இந்த முற்றுகை ஆறு நாள்கள் தொடர்ந்தது. ஏழாம் நாள் முழுநிலவு நாளன்று கடல்மட்டம் உயர்ந்தது. "இப்பொழுது நாம் மூடியைத் திறந்து காற்றைப் புதுப்பித்துக்கொண்டு நமது பயணத்தைத் தொடங்கலாம்" என்றார் நெமோ.

மேல் மூடியைத் திறந்தால் அந்த மனிதர்கள் உள்ளே வந்து விடுவார்களே என்று நான் அஞ்சினேன். நெமோ சிரித்தபடியே மேல் மூடியைத் திறந்தார். உள்ளே இறங்குவதற்கு ஏணியில் கால் வைத்தவர்கள் அலறிக் கொண்டு ஓட்டம் பிடித்தனர். அந்த ஏணியில் மின்சாரம் பாய்ச்சி இருந்தார் நெமோ. அதன்பிறகு நாங்கள் காற்றைப் புதுப்பித்துக் கொண்டு பயணத்தைத் தொடர்ந்தோம்.

பல நாட்கள் பயணத்திற்குப் பிறகு இந்தியாவுக்கும் இலங்கைக்கும் அருகில் நாட்டிலஸ் சென்று கொண்டிருந்தது. "இது முத்துக்குளிக்கும் தொழில் சிறப்பாக நடைபெறும் இடம் என்பது உங்களுக்குத் தெரியுமா? இந்த ஆண்டுக்கான முத்துக்குளிக்கும் பருவம் இன்னும் தொடங்கவில்லை. என்றாலும் நாம் காற்றுப்பைகளைக் கட்டிக்கொண்டு சென்று கொஞ்சம் முத்துச்சிப்பிகள் சேகரித்து வருவோமா?" என்று கேட்டார் நெமோ.

நானும் நெமோவும் கடலுக்கடியில் சென்றோம். அங்கே தன்னந்தனியாக ஓர் இந்தியர் முத்துக்குளிப்பதற்காகக் கடலுக்குள் இறங்கினார். அவர் காற்றுப்பைகள் இல்லாமல் மூச்சை அடக்கிக்கொண்டு முத்துச்சிப்பிகளைச் சேகரிக்கத் தொடங்கினார். அப்போது அந்த மனிதரை நோக்கி ஒரு சுறாமீன் வேகமாகப் பாய்ந்து வந்தது. நெமோ தம் கையிலிருந்த நீளமான வாளினால் அந்தச் சுறாமீனைக் குத்திக்கிழித்து அந்த மனிதரைக் காப்பாற்றினார். ஓர் இந்தியரைக் காப்பாற்றிய மனநிறைவோடு நாங்கள் மீண்டும் நாட்டிலஸ்க்குத் திரும்பினோம். மீண்டும் எங்கள் பயணம் தொடர்ந்தது.

வழியில் நாங்கள் பலவகையான விந்தைகளைக் கண்டோம். இங்கிலாந்துக்கும் ஸ்பெயினுக்கும் இடையே நடைபெற்ற போரின்போது கடலில் மூழ்கடிக்கப்பட்ட கப்பல்களைப் பார்த்தோம். அந்தக் கப்பல்களின் சிதைவுகளில் இருந்து தங்கம், வெள்ளி, வைரம் போன்றவற்றை அள்ளிக்கொண்டோம்.

இன்னோர் இடத்தில் கடலுக்குள் தீப்பிழம்பைக் கக்கிக்கொண்டிருக்கும் எரிமலையைக் கண்டு வியந்தோம். அதன் அடியில் பலநூறு ஆண்டுகளுக்கு முன்பு ஒரே நாளில் பூகம்பத்தால் கடலுக்குள் மூழ்கிப்போன 'அட்லாண்டிஸ்' என்னும் நகரத்தின் இடிபாடுகளைக் கண்டோம். பிறகு பூமியின் தென்துருவத்திற்குச் சென்றோம். அங்கே பென்குவின், கடல்சிங்கம் போன்ற அரிய பறவைகளையும் விலங்குகளையும் கண்டோம்.

அங்கிருந்து திரும்பும் வழியில் மிகப்பெரிய ஆக்டோபஸ் ஒன்றுடன் போரிட்டு அதனைக் கொன்றோம்.

இப்படியே எங்கள் பயணம் தொடர்ந்தது. நாள்கள் கடந்தன. மீண்டும் நிலப்பரப்பை அடைய முடியும் என்ற நம்பிக்கையை நாங்கள் இழந்துவிட்டோம்.

ஒருநாள் தொலைவில் கரை ஒன்று தெரிந்தது. இன்று எப்படியாவது தப்பிவிட வேண்டும் என்று நாங்கள் மூவரும் எண்ணினோம். அதன்படி கப்பலுடன் இணைந்திருந்த சிறிய படகு ஒன்றில் ஏறினோம். அப்போது நாட்டிலஸ் ஒரு பெரும் கடல்சுழலுக்குள் சிக்கிக்கொண்டது. கப்பலுடன் இணைந்திருந்த எங்கள் படகும் சுழலில் சிக்கிக் கொண்டது. அதன் மேல் தளத்தில் நின்றுகொண்டிருந்த நாங்கள் மூவரும் கடலுக்குள் தூக்கி வீசப்பட்டோம்.

நாங்கள் கண்விழித்தபோது நார்வே நாட்டின் கடற்கரையில் மீனவர் ஒருவரின் குடிசையில் இருந்தோம். அதன்பிறகு நாட்டிலஸ்க்கு என்ன நேர்ந்தது என்பது பற்றியோ, நெமோ என்ன ஆனார் என்பது பற்றியோ யாருக்கும் எந்தச் செய்தியும் கிடைக்கவில்லை.

**நூல் வெளி**



அறிவியல் புனைகதைகளின் தலைமகன் என்று புகழப்படுபவர் ஜூல்ஸ் வெர்ன். இவர் பிரான்சு நாட்டைச் சேர்ந்தவர். அறிவியல் கண்டுபிடிப்புகள் பல கண்டுபிடிக்கப்படுவதற்கு முன்பே அவற்றைப் பற்றித் தமது புதினங்களில் எழுதியவர். எண்பது நாளில் உலகத்தைச் சுற்றி, பூமியின் மையத்தை நோக்கி ஒரு பயணம் உள்ளிட்ட பல புதினங்களைப் படைத்துள்ளார். அவர் எழுதிய ஆழ்கடலின் அடியில் என்னும் புதினம் குறிப்பிடத்தக்க ஒன்று. அதன் மொழிபெயர்ப்பின் சுருக்கம் நமக்குப் பாடமாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

## கற்பவை கற்றபின்

1. ஆழ்கடல் காட்சியொன்றைக் கற்பனையாகப் படம் வரைந்து வண்ணம் தீட்டுக.
2. நீர்மூழ்கிக் கப்பல் இயங்கும் முறைபற்றிய செய்திகளைத் திரட்டித் தொகுத்து எழுதுக.

## மதிப்பீடு

'ஆழ்கடலின் அடியில்' கதையைச் சுருக்கி எழுதுக.

கற்கண்டு

இயல் நான்கு

# இலக்கியவகைச் சொற்கள்

CXCJ9Z

பூ, வா, அறம், புத்தகம் இச்சொற்களை நோக்குங்கள்.

இவற்றில் முதல் இரு சொற்கள் ஓரெழுத்தைக் கொண்டவை. அடுத்த இரண்டு சொற்களும் மூன்று, நான்கு எழுத்துகளைக் கொண்டவை. இவை அனைத்தும் பொருள் தருகின்றன.

இவ்வாறு ஓர் எழுத்து தனித்தும் ஒன்றிற்கும் மேற்பட்ட எழுத்துகள் தொடர்ந்தும் வந்து பொருள் தருவது சொல் எனப்படும். மொழி, பதம், கிளவி என்பன சொல் என்னும் பொருள் தரும் வேறு சொற்களாகும்.

இலக்கண முறைப்படி பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் எனச் சொற்கள் நான்கு வகைப்படும் என்பதை முன் வகுப்பில் கற்றீர்கள். அதேபோல் இலக்கிய வகையில் சொற்களை இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என நான்கு வகையாகப் பிரிக்கலாம்.

## இயற்சொல்

கடல், கப்பல், எழுதினான், படித்தான் ஆகிய சொற்களைக் கவனியுங்கள். இவற்றின் பொருள் இயல்பாகவே எளிதில் விளங்குகிறது. இவ்வாறு எளிதில் பொருள் விளங்கும் வகையில் அமைந்த சொற்கள் இயற்சொற்கள் எனப்படும். இயற்சொல் பெயர், வினை, இடை, உரி ஆகிய நான்கு வகையிலும் வரும்.

(எ.கா.)

| | |
|---|---|
| மண், பொன் | பெயர் இயற்சொல் |
| நடந்தான், வந்தான் | வினை இயற்சொல் |
| அவனை, அவனால் | இடை இயற்சொல் |
| மாநகர் | உரி இயற்சொல் |

## திரிசொல்

வங்கூழ், அழுவம், சாற்றினான், உறுபயன் ஆகிய சொற்களைக் கவனியுங்கள். இச்சொற்கள் இலக்கியங்களில் பயின்று வரும் சொற்களாகும். இவை முறையே காற்று, கடல், சொன்னான், மிகுந்த பயன் எனப் பொருள் தரும். இவ்வாறு கற்றோர்க்கு மட்டுமே விளங்குபவையாகவும் இலக்கியங்களில் மட்டுமே பயின்று வருபவையாகவும் அமையும் சொற்கள் திரிசொற்கள் எனப்படும்.

திரிசொல் பெயர், வினை, இடை, உரி ஆகிய நான்கு வகையிலும் வரும்.

(எ.கா.)

| | |
|---|---|
| அழுவம், வங்கம் | பெயர்த் திரிசொல் |
| இயம்பினான், பயின்றாள் | வினைத் திரிசொல் |
| அன்ன, மான | இடைத் திரிசொல் |
| கூர், கழி | உரித் திரிசொல் |

திரிசொற்களை ஒரு பொருள் குறித்த பல திரிசொற்கள் எனவும், பல பொருள் குறித்த ஒரு திரிசொல் எனவும் இருவகைப்படுத்தலாம்.

வங்கம், அம்பி, நாவாய் – என்பன கப்பல் என்னும் ஒரே பொருளைத் தருவதால் ஒரு பொருள் குறித்த பல திரிசொற்கள் என்பர்.

இதழ் என்னும் சொல் பூவின் இதழ், உதடு, கண்ணிமை, பனையேடு, நாளிதழ் ஆகிய பல பொருள்களைத் தருவதால் பல பொருள் குறித்த ஒரு திரிசொல் என்பர்.

### திசைச்சொல்

சாவி, சன்னல், பண்டிகை, இரயில் முதலிய சொற்கள் தமிழில் வழக்கில் இருந்தாலும் இவை தமிழ்ச்சொற்கள் அல்ல. பிறமொழிகளில் இருந்து வந்து தமிழில் வழங்கி வருபவையாகும். இவ்வாறு வடமொழி தவிர, பிற மொழிகளில் இருந்து வந்து தமிழில் இடம்பெறும் சொற்கள் திசைச்சொற்கள் எனப்படும்.

முற்காலத்தில் பாண்டிநாட்டைத் தவிர, தமிழ்நாட்டின் பிற பகுதிகளில் வழங்கிய கேணி(கிணறு), பெற்றம் (பசு) போன்ற சொற்களையும் திசைச்சொற்கள் என்றே வழங்கினர்.

### வடசொல்

வருடம், மாதம், கமலம், விடம், சக்கரம் முதலிய சொற்கள் தமிழில் வழக்கில் இருந்தாலும் இவை தமிழ்ச்சொற்கள் அல்ல. இவை வடமொழி எனப்படும் சமஸ்கிருத மொழிச்சொற்கள் ஆகும். இவ்வாறு வடமொழியிலிருந்து வந்து தமிழில் இடம்பெறும் சொற்கள் வடசொற்கள் எனப்படும்.

வடசொற்களைத் தற்சமம், தற்பவம் என இருவகையாகப் பிரிப்பர்.

கமலம், அலங்காரம் என வடமொழியில் இருப்பது போன்றே தமிழில் எழுதுவதைத் தற்சமம் என்பர். லக்ஷ்மி என்பதை இலக்குமி என்றும், விஷம் என்பதை விடம் என்றும் தமிழ் எழுத்துகளால் மாற்றி எழுதுவதைச் தற்பவம் என்பர்.

## கற்பவை கற்றபின்

நாளிதழ் செய்தியொன்றை எடுத்துக்கொண்டு அதிலுள்ள நால்வகைச் சொற்களையும் வகைப்படுத்திப் பட்டியல் உருவாக்குக.

# மதிப்பீடு

**சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.**

1. எல்லார்க்கும் எளிதில் பொருள் விளங்கும் சொல் ________.

   அ) இயற்சொல் ஆ) திரிசொல் இ) திசைச்சொல் ஈ) வடசொல்

2. பலபொருள் தரும் ஒருசொல் என்பது ___________.

   அ) இயற்சொல் ஆ) திரிசொல் இ) திசைச்சொல் ஈ) வடசொல்

3. வடமொழி என்று அழைக்கப்படும் மொழி ___________.

   அ) மலையாளம் ஆ) கன்னடம் இ) சமஸ்கிருதம் ஈ) தெலுங்கு

**பொருத்துக.**

1. இயற்சொல் – பெற்றம்
2. திரிசொல் – இரத்தம்
3. திசைச்சொல் – அழுவம்
4. வடசொல் – சோறு

**குறுவினா**

1. மண், பொன் என்பன எவ்வகைச் சொற்கள்?
2. இயற்சொல்லின் நான்கு வகைகள் யாவை?
3. குங்குமம், கமலம் என்பன எவ்வகை வடசொற்கள்?

**சிறுவினா**

1. இலக்கிய வகைச் சொற்கள் எத்தனை வகைப்படும்? அவை யாவை?
2. திரிசொல்லின் வகைகள் குறித்து விளக்குக.
3. பண்டிகை, கேணி என்பன எவ்வகைச் சொற்கள்? விளக்குக.

## மொழியை ஆள்வோம்!

**கேட்க.**

கடற்பயணம் தொடர்பான கதைகளைப் பெரியோரிடம் கேட்டு மகிழ்க.

DILUDJ

### பின்வரும் தலைப்பில் இரண்டு நிமிடம் பேசுக.

கப்பல்களின் வகைகளும் பயன்களும்.

### சொல்லக் கேட்டு எழுதுக.

1. பெருந்திரளான மக்களையும் பொருள்களையும் கப்பல்கள் ஏற்றிச்செல்லும்.
2. காற்றின் உதவியால் செலுத்தப்படுபவை பாய்மரக் கப்பல்கள்.
3. வானில் தோன்றும் விண்மீன்களின் நிலையை வைத்துத் திசையை அறிவர்.
4. ஆழ்கடல் விந்தைகளைப் பற்றி ஆய்வுகள் செய்தார்.
5. நார்வே நாட்டின் கடற்கரையில் கண்விழித்தோம்.

### அறிந்து பயன்படுத்துவோம்.

காலம் மூன்று வகைப்படும். அவை 1. இறந்த காலம் 2. நிகழ்காலம் 3. எதிர்காலம்.

1. நடந்த செயலைக் குறிப்பது இறந்தகாலம். (எ.கா.) பார்த்தான், ஆடினாள், பறந்தது.
2. நடக்கின்ற செயலைக் குறிப்பது நிகழ்காலம். (எ.கா.) பார்க்கிறான், ஆடுகின்றாள், பறக்கின்றது.
3. நடக்கவிருக்கும் செயலைக் குறிப்பது எதிர்காலம். (எ.கா.) காண்பான், ஆடுவாள், பறக்கும்.

### கட்டங்களை நிரப்புக.

| வேர்ச்சொல் | இறந்தகாலம் | நிகழ்காலம் | எதிர்காலம் |
|---|---|---|---|
| நட | நடந்தாள் | நடக்கிறாள் | நடப்பாள் |
| எழுது | | | |
| ஓடு | | | |
| சிரி | | | |
| பிடி | | | |
| இறங்கு | | | |

### பொருத்தமான காலம் அமையுமாறு திருத்தி எழுதுக.

1. அமுதன் நேற்று வீட்டுக்கு வருவான்.
2. கண்மணி நாளை பாடம் படித்தாள்.
3. மாடுகள் இப்பொழுது புல் மேயும்.
4. ஆசிரியர் நாளை சிறுதேர்வு நடத்தினார்.
5. நாங்கள் நேற்று கடற்கரைக்குச் செல்கிறோம்.

**கொடுக்கப்பட்டுள்ள குறிப்புகளைக் கொண்டு கட்டுரை எழுதுக.**

**பயணங்கள் பலவகை**

முன்னுரை – பயணத்தின் தேவை – தரைவழிப்பயணம் – கடல்வழிப் பயணம் – வான்வழிப் பயணம் – முடிவுரை.



## மொழியோடு விளையாடு

### குறுக்கெழுத்துப் புதிர்.

**பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்களை அறிவோம்.**

| 1 | | | ■ | 2 | | 3 | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | ■ | 4 | | | ■ | | ■ | |
| | | ■ | ■ | ■ | ■ | | ■ | 5 |
| | | 6 | ■ | 7 | ■ | | ■ | ■ |
| ■ | | ■ | | | 8 | ■ | ■ | |
| ■ | 9 | 10 | | | | ■ | | |
| ■ | ■ | ■ | ■ | | ■ | ■ | 11 | |
| 12 | ■ | ■ | ■ | | ■ | ■ | ■ | |
| | | | 13 | ■ | | 14 | ■ | 15 |

**இடமிருந்து வலம்**

1. அச்சன்
2. விஞ்ஞானம்
4. பரீட்சை
10. லட்சியம்

**மேலிருந்து கீழ்**

1. அதிபர்
3. ஆச்சரியம்
7. ஆரம்பம்
12. சதம்

**வலமிருந்து இடம்**

6. அபாயம்
8. தேகம்
13. சரித்திரம்
14. சத்தம்

**கீழிருந்து மேல்**

5. ஆதி
9. உத்தரவு
11. தினம்
15. சந்தோசம்

**குறிப்புகளைக் கொண்டு 'மா' என்னும் எழுத்தில் தொடங்கும் சொற்களைக் கண்டறிந்து கட்டங்களை நிரப்புக.**

1. முக்கனிகளுள் ஒன்று
2. கதிரவன் மறையும் நேரம்
3. பெருந்திரளான மக்கள் கூடும் நிகழ்வு
4. எழுத்துகளை ஒலிக்க ஆகும் கால அளவு
5. அளவில் பெரிய நகரம்

## நிற்க அதற்குத் தக...

**என் பொறுப்புகள்...**

1. கடல் மற்றும் கடற்கரையின் தூய்மை காப்பேன்.
2. சுற்றுச்சூழலுக்குத் தீங்கு தராத பொருள்களையே பயன்படுத்துவேன்.

**கலைச்சொல் அறிவோம்**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கலங்கரை விளக்கம் | – | Light house | துறைமுகம் | – | Harbour |
| பெருங்கடல் | – | Ocean | புயல் | – | Storm |
| கப்பல் தொழில்நுட்பம் | – | Marine technology | மாலுமி | – | Sailor |
| கடல்வாழ் உயிரினம் | – | Marine creature | நங்கூரம் | – | Anchor |
| நீர்மூழ்கிக்கப்பல் | – | Submarine | கப்பல்தளம் | – | Shipyard |

## இணையத்தில் காண்க

1. இந்தியக் கப்பற்படையில் உள்ள போர்க்கப்பல்கள் பற்றிய செய்திகளை இணையத்தின் மூலம் திரட்டுக.
2. கப்பலைக் குறிக்கும் வேறு பெயர்களை இணையம் மூலம் திரட்டுக.

இயல்
ஐந்து

# ஓதுவது ஒழியேல்




## கற்றல் நோக்கங்கள்

- கல்வியே அனைத்திற்கும் அடிப்படை என்பதனை உணர்தல்
- எளிய பாடல்களைச் சீர்பிரித்துப் படித்துப் பொருள் புரிந்துகொள்ளுதல்
- கதை படிக்கும் ஆர்வத்தை உருவாக்குதல்
- மொழியில் உள்ள எழுத்துகள் சொற்கள் ஆகியவற்றின் கட்டமைப்பை அறிந்து பயன்படுத்துதல்

கவிதைப்பேழை

இயல் ஐந்து

# இன்பத்தமிழ்க் கல்வி

DY5PEV



## நுழையும்முன்

பாரதிதாசன் கவிதை எழுதுவதற்காகத் தாளையும் எழுதுகோலையும் எடுத்தார். எதைப்பற்றி எழுதுவது எனச் சிந்தித்தார். வானம், ஓடை, காடு, தென்றல், மயில் போன்ற இயற்கைப் பொருள்கள் எல்லாம் அவர் கருத்தைக் கவர்ந்தன. எனினும் புரட்சிக்கவிஞராகிய பாவேந்தர் தமிழரின் இன்னல் தீர்க்கும் வழி ஒன்றைக் கவிதையாகப் படைத்தார். அதை நாமும் படித்துச் சுவைப்போம்.

*ஏடெடுத்தேன் கவி ஒன்று வரைந்திட*
*என்னை எழுதென்று சொன்னது வான்*
*ஓடையும் தாமரைப் பூக்களும் தங்களின்*
*ஓவியந் தீட்டுக என்றுரைக்கும்*
*காடும் கழனியும் கார்முகிலும் வந்து*
*கண்ணைக் கவர்ந்திட எத்தனிக்கும்*
*ஆடும் மயில் நிகர் பெண்களெல்லாம் உயிர்*
*அன்பினைச் சித்திரம் செய்க என்றார்*

*சோலைக் குளிர்தரு தென்றல் வரும்பசுந்*
*தோகை மயில்வரும் அன்னம் வரும்*
*மாலைப் பொழுதினில் மேற்றிசையில் விழும்*
*மாணிக்கப் பரிதி காட்சி தரும்*
*வேலைச் சுமந்திடும் வீரரின் தோள் உயர்*
*வெற்பென்று சொல்லி வரைக என்னும்*
*கோலங்கள் யாவும் மலை மலையாய் வந்து*
*கூவின என்னை – இவற்றிடையே*

*இன்னலிலே தமிழ் நாட்டினிலேயுள்ள*
*என்தமிழ் மக்கள் துயின்றிருந்தார்*
*அன்னதோர் காட்சி இரக்கமுண்டாக்கியென்*
*ஆவியில் வந்து கலந்ததுவே*
*இன்பத் தமிழ்க் கல்வி யாவரும் கற்றவர்*
*என்றுரைக்கும் நிலை எய்தி விட்டால்*
*துன்பங்கள் நீங்கும் சுகம் வரும் நெஞ்சினில்*
*தூய்மை உண்டாகிடும் வீரம் வரும் !*

– பாரதிதாசன்









### சொல்லும் பொருளும்

| | | | | |
|---|---|---|---|---|
| எத்தனிக்கும் | – முயலும் | | பரிதி | – கதிரவன் |
| வெற்பு | – மலை | | அன்னதோர் | – அப்படிஒரு |
| கழனி | – வயல் | | கார்முகில் | – மழைமேகம் |
| நிகர் | – சமம் | | துயின்றிருந்தார் | – உறங்கியிருந்தார் |

### பாடலின் பொருள்

கவிதை எழுத ஏடு ஒன்று எடுத்தேன். என்னைக் கவிதையாக எழுதுக என்று வானம் கூறியது. நீரோடையும் தாமரை மலர்களும் "எங்களைக் கவி ஓவியமாகத் தீட்டுக" என்றன. காடும் வயல்களும் கருநிற மேகங்களும் என் கண்களைக் கவர்ந்து, கவிதையில் இடம்பெற முயன்றன. ஆடும் மயில் போன்ற பெண்கள் "அன்பினைக் கவிதையாக எழுதுக" என்றனர்.

சோலையின் குளிர்ந்த தென்றல் வந்தது. பசுமையான தோகையையுடைய மயில் வந்தது. அன்னம் வந்தது. மாணிக்கம் போல் ஒளி வீசி மாலையில் மேற்குத் திசையில் மறைகின்ற கதிரவனும் வந்தான். வேல் ஏந்திய வீரர்கள், "மலை போன்ற எங்களது தோள்களின் அழகினை எழுதுங்கள்" என்றனர். இவ்வாறு அழகிய காட்சிகள் எல்லாம் பெருந்திரளாக வந்து தங்களைக் கவிதையாக எழுதுமாறு கூறின.

ஆனால், துன்பத்தில் கிடக்கும் என் தமிழ்நாட்டு மக்கள் அறியாமையில் தூங்கிக் கிடக்கிறார்கள். அந்தக் காட்சி என் மனத்தில் இரக்கத்தை உண்டாக்கி, என் உயிரில் வந்து கலந்து விட்டது. இத்துன்பம் நீங்க அனைவரும் இன்பத்தமிழ்க் கல்வியைக் கற்றவர்கள் என்னும் நிலை ஏற்பட வேண்டும். அந்நிலை ஏற்பட்டால் வாழ்வில் துன்பங்கள் நீங்கிடும். நெஞ்சில் தூய்மை உண்டாகிடும். வீரம் வரும்.

#### நூல் வெளி



கவிஞர், இதழாளர், தமிழாசிரியர் எனப் பன்முக ஆற்றல் கொண்டவர் பாரதிதாசன். இவர் கவிதை, கதை, கட்டுரை, நாடகம் ஆகியவற்றைப் படைப்பதில் வல்லவர். பாண்டியன் பரிசு, அழகின் சிரிப்பு, இசையமுது, இருண்ட வீடு, குடும்ப விளக்கு, கண்ணகி புரட்சிக் காப்பியம் உள்ளிட்ட பல நூல்களை எழுதியுள்ளார். இவர் எழுதிய பிசிராந்தையார் என்னும் நாடகநூலுக்குச் சாகித்திய அகாடமி விருது அளிக்கப்பட்டது.

பாரதிதாசன் கவிதைகள் என்னும் தொகுப்பிலிருந்து தமிழ்ப்பேறு என்னும் தலைப்பில் உள்ள பாடல் இங்குப் பாடமாக வைக்கப்பட்டுள்ளது.

## கற்பவை கற்றபின்

1. இயற்கைக்காட்சி குறித்து நான்கு வரிகளில் கவிதை எழுதுக.
2. 'தாய்மொழி வழிக் கல்வியே சிறந்தது' என்பது குறித்து வகுப்பில் கலந்துரையாடுக.

## மதிப்பீடு

சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. பெண்களுக்கு நிகராகப் பாரதிதாசன் கூறுவது________.

அ) மயில் ஆ) குயில் இ) கிளி ஈ) அன்னம்

2. பின்வருவனவற்றுள் 'மலை'யைக் குறிக்கும் சொல்

அ) வெற்பு ஆ) காடு இ) கழனி ஈ) புவி

3. 'ஏடெடுத்தேன்' என்னும் சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது _______.

அ) ஏடெடு + தேன் ஆ) ஏட்டு + எடுத்தேன்

இ) ஏடு + எடுத்தேன் ஈ) ஏ + டெடுத்தேன்

4. 'துயின்றிருந்தார்' என்னும் சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது _______.

அ) துயின்று + இருந்தார் ஆ) துயில் + இருந்தார்

இ) துயின்றி + இருந்தார் ஈ) துயின் + இருந்தார்

5. என்று + உரைக்கும் என்பதனைச் சேர்த்தெழுதக் கிடைக்கும் சொல் ________.

அ) என்றுஉரைக்கும் ஆ) என்றிரைக்கும்

இ) என்றரைக்கும் ஈ) என்றுரைக்கும்

பொருத்துக.

1. கழனி - கதிரவன்
2. நிகர் - மேகம்
3. பரிதி - சமம்
4. முகில் - வயல்

குறுவினா

1. பாரதிதாசனின் மனத்தைக் கவர முயன்ற இயற்கைப் பொருள்கள் யாவை?
2. தமிழ் மொழிக்கல்வி பயில்வதால் உண்டாகும் நன்மைகள் எவையெனப் பாரதிதாசன் குறிப்பிடுகிறார்?

சிறுவினா

'இன்பத்தமிழ்க் கல்வி' - பாடலின் மையக்கருத்தை உங்கள் சொந்த நடையில் எழுதுக.

சிந்தனை வினா

தமிழ் மொழிக்கல்வி பயில்வதால் ஏற்படும் நன்மைகளாக நீங்கள் கருதுவனவற்றைத் தொகுத்து எழுதுக.

கவிதைப்பேழை

இயல் ஐந்து

# அழியாச் செல்வம்

E7N8CB

**நுழையும்முன்**

பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்குப் பல்வகையான செல்வங்களைச் சேர்த்து வைக்கின்றனர். அவற்றுள் சில செல்வங்கள் களவு போகவோ, அழியவோ கூடும். ஆகையால் பெற்றோர் தம் குழந்தைகளுக்குச் சேர்த்து வைக்க வேண்டிய செல்வங்களுள் சிறந்ததும், அழியாததும் ஆகிய செல்வத்தைப் பற்றி அறிவோம்.

*வைப்புழிக் கோட்படா வாய்த்தீயிற் கேடில்லை*
*மிக்க சிறப்பின் அரசர் செறின்வவ்வார்*
*எச்சம் எனவொருவன் மக்கட்குச் செய்வன*
*விச்சைமற்று அல்ல பிற.**

*–சமண முனிவர்*

### சொல்லும் பொருளும்

வைப்புழி – பொருள் சேமித்து வைக்கும் இடம்
கோட்படா –ஒருவரால் கொள்ளப்படாது
வாய்த்து ஈயில் – வாய்க்கும்படி கொடுத்தலும்
விச்சை – கல்வி

### பாடலின் பொருள்

கல்வியைப் பொருள் போல வைத்திருப்பினும் அது பிறரால் கொள்ளப்படாது. ஒருவற்கு வாய்க்கும்படி கொடுத்தாலும் குறைவுபடாது. மிக்க சிறப்பினை உடைய அரசராலும் கவர முடியாது. ஆதலால் ஒருவர் தம் குழந்தைகளுக்குச் சேர்த்து வைக்க வேண்டிய செல்வம் கல்வியே ஆகும். மற்றவை செல்வம் ஆகா.

### நூல் வெளி

நாலடியார் சமண முனிவர்கள் பலரால் எழுதப்பட்ட நூலாகும். இந்நூல் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகும். இது நானூறு வெண்பாக்களால் ஆனது. இந்நூலை நாலடி நானூறு என்றும், வேளாண்வேதம் என்றும் அழைப்பர். திருக்குறள் போன்றே அறம், பொருள், இன்பம் என்னும் முப்பால் பகுப்புக் கொண்டது. இந்நூல் திருக்குறளுக்கு இணையாக வைத்துப் போற்றப்படுவதை நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி என்னும் தொடர் மூலம் அறியலாம்.

கருவேலங் காட்டுலதான்
கனமழையும் இல்லாமே
கருவேலும் பூக்கலையே
கமகமன்னும் மணக்கலையே

மானத்தை நம்பி நாங்க
மக்களைத் தான் பெற்றெடுத்தோம்
மானம் செய்த பாவமுங்க
மக்கள் பசி தீரலையே

காட்டுமல்லி வேலியிலே
கனமழையும் இல்லாமே
காட்டு மல்லியும் பூக்கலையே
காததூரம் மணக்கலையே

கலப்பைப் பிடிக்கும் தம்பி
கைசோர்ந்து நிக்குதம்மா!
ஏற்றம் இறைக்கும் தம்பி
ஏங்கி மனம் தவிக்குதம்மா!

*(இவ்வாறு மூன்று அல்லது ஐந்து நாள்கள் பாடி வழிபாடு செய்கின்றனர். அதன் பிறகும் மழை பெய்யாததால் காட்டிற்குச் செல்ல முடிவெடுக்கின்றனர்.)*

கண்மணியே பெண்டுகளே
கனத்த மழை பெய்யவில்லை
கதறி அழுது விட்டோம்
கடிமழையும் பெய்ய வில்லை

மண்ணு வறண்டும் நம்
மாரியாத்தா இரங்கலையே
வாடிகளா பெண்டுகளே – நாம்
வனவாசம் சென்றிடுவோம்

*(இவ்வாறு பாடிக் கொண்டே சோறு வாங்கிய பானை, அகப்பை, பழைய முறம் போன்றவற்றைத் தலையில் வைத்தவாறு ஊரை விட்டு வெளியேற முனைகின்றனர். அப்பொழுது மழை பெய்யத் தொடங்குகிறது. )*

பேயுதைய்யா பேயுது
பேய்மழையும் பேயுது
ஊசிபோலக் காலிறங்கி
உலகமெங்கும் பேயுது

சிட்டுப் போல மின்னி மின்னி
சீமையெங்கும் பேயுது
சீமை யெங்கும் பேஞ்சமழை
செல்ல மழை பேயுது

## தெரிந்து தெளிவோம்

மழை பெய்யாமல் ஊரில் பஞ்சம் ஏற்படும் காலங்களில், சிற்றூர் மக்கள் ஒவ்வொரு வீடாகச் சென்று உப்பில்லாச் சோற்றை ஒரு பானையில் வாங்குவர். ஊர்ப் பொது இடத்தில் வைத்து அச்சோற்றை அனைவரும் பகிர்ந்து உண்பர். கொடிய பஞ்சத்தைக் காட்டும் அடையாளமாக நிகழும் இதனைக் கண்டு வானம் மனமிரங்கி மழை பெய்யும் என்பது மக்களின் நம்பிக்கை. இந்நிகழ்வை மழைச்சோற்று நோன்பு என்பர்.

## நூல் வெளி

பழந்தமிழர் வழிபாட்டு மரபுகள் என்னும் நூலில் உள்ள கொங்குநாட்டு மழைச்சோற்று வழிபாடு என்னும் கட்டுரையிலிருந்து இப்பாடல் எடுக்கப்பட்டுள்ளது. இந்நூலின் பதிப்பாசிரியர் அ. கௌரன்.

## கற்பவை கற்றபின்

உங்கள் பகுதியில் பாடப்படும் மழை தொடர்பான நாட்டுப்புறப் பாடல்களைத் தொகுத்து எழுதுக.

## மதிப்பீடு

சரியான விடையைத் தேர்தெடுத்து எழுதுக.

1. கனத்த மழை என்னும் சொல்லின் பொருள் _____.

அ) பெருமழை ஆ) சிறு மழை

இ) எடைமிகுந்த மழை ஈ) எடை குறைந்த மழை

2. 'வாசலெல்லாம்' என்னும் சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது _____.

அ) வாசல் + எல்லாம் ஆ) வாசல் + எலாம்

இ) வாசம் + எல்லாம் ஈ) வாசு + எல்லாம்

3. 'பெற்றெடுத்தோம்' என்னும் சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது _____.

அ) பெறு+ எடுத்தோம் ஆ) பேறு + எடுத்தோம்

இ) பெற்ற + எடுத்தோம் ஈ) பெற்று + எடுத்தோம்

4. கால் + இறங்கி என்பதனைச் சேர்த்தெழுதக் கிடைக்கும் சொல் _____.

அ) கால்லிறங்கி ஆ) காலிறங்கி

இ) கால் இறங்கி ஈ) கால்றங்கி

### குறுவினா

1. மழைச்சோறு பாடலில் உழவர் படும் வேதனை எவ்வாறு கூறுப்படுகிறது?
2. மக்கள் ஊரைவிட்டு வெளியேறக் காரணம் என்ன?

### சிறுவினா

1. கோலம் கரையாத நிலையை மழைச்சோறு பாடல் எவ்வாறு விளக்குகிறது?
2. மழையின்மையால் செடிகள் வாடிய நிலையை விளக்குக.
3. மழைச்சோறு எடுத்தபின் எவ்வாறு மழை பெய்தது?

### சிந்தனை வினா

மழைவளம் பெருக நாம் செய்ய வேண்டுவன யாவை?

# இயல் ஆறு

# கொங்குநாட்டு வணிகம்

BK4IYQ

**நுழையும்முன்**

'திரைகடல் ஓடியும் திரவியம் தேடு' என்பது பழமொழி. அதற்குப் பழந்தமிழர்களே சான்றுகளாக விளங்கினர். காலத்தால் முற்பட்டவர்களான பழந்தமிழர் சோம்பித் திரிந்தவர் அல்லர். உழைத்து உயர்ந்து வாழ்க்கையில் இன்பங்காணுவதிலேயே கண்ணுங்கருத்துமாய் விளங்கினர் என்பர். அவர்கள் மலைகளுடனும் காடுகளுடனும் கடலுடனும் கலந்து உறவாடினர். பழந்தமிழர்கள் ஆண்ட கொங்கு நாட்டின் அன்றைய வணிகம், இன்றைய வணிகம் குறித்து அறிவோம்.

தொல்காப்பியமும் சங்க இலக்கியங்களும் தமிழகத்தைச் சேர, சோழ, பாண்டியர்களுக்கு உரியதாகக் கூறுகின்றன. வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு என்று தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது. மூவேந்தர்களின் காலத்தை வரையறுத்துக் கூறமுடியவில்லை. வால்மீகி இராமாயணம், மகாபாரதம், அர்த்தசாத்திரம், அசோகர் கல்வெட்டு ஆகியவற்றில் மூவேந்தர்கள் குறித்த செய்திகள் இடம்பெற்றுள்ளன. இதனால் இவர்கள் பன்னெடுங் காலத்திற்கு முற்பட்டவர்கள் என்பதை அறியலாம்.



### சேரர்

முடியுடைய மூவேந்தர்களில் சேரர்களே பழமையானவர்கள் என்று கூறுபவர் உண்டு. சேர, சோழ, பாண்டியர் என்னும் தொடரையே இதற்குச் சான்றாகக் காட்டுவர். மேலும் தொல்காப்பியமும் போந்தை வேம்பே ஆரென வரூஉம் மாபெருந் தானையர் மலைந்த பூவும் எனச் சேரரை முன் வைக்கின்றது.

சேரர்களின் நாடு குடநாடு எனப்பட்டது. இவர்களின் தலைநகராக வஞ்சி விளங்கியது. இந்நகர் மேற்கு மலைத்தொடரில் தோன்றி அரபிக்கடலில் கலக்கும் பேரியாற்றங்கரையில் இருந்தது. இதனைக் கருவூர் என்றும் அழைப்பர். தொண்டி, முசிறி, காந்தளூர் என்பன சேரநாட்டின் துறைமுகப் பட்டினங்களாக விளங்கின. சேரர்களின் கொடி விற்கொடி ஆகும். பனம்பூ இவர்களுக்குரிய பூ ஆகும்.

### சேர நாட்டின் எல்லைகள்

பண்டைய சேர நாடு என்பது இன்றைய கேரளப் பகுதிகளும் தமிழ்நாட்டின் சேலம், கோவை மாவட்டங்களின் பகுதிகளும் இணைந்த பகுதியாக விளங்கியது என்பர். சேலம், கோவைப் பகுதிகள் கொங்கு நாடு என்று பெயர்பெற்றன. இப்பகுதிகளைச் சேரர்களின் உறவினர்கள் ஆட்சி செய்து வந்தனர்.

### கொங்கு மண்டலம்

கார்மேகக் கவிஞர் இயற்றிய கொங்கு மண்டலச் சதகம் என்னும் நூலில் வடக்கே பெரும்பாலை, தெற்கே பழனிமலை, மேற்கே வெள்ளிமலை, கிழக்கே மதிற்கரை என இந்நான்கு எல்லைகளுக்குட்பட்ட பகுதியாகக் கொங்குமண்டலம் விளங்கியதாகக் கூறப்படுகிறது. இன்றைய நீலகிரி, கோயம்புத்தூர், திருப்பூர், ஈரோடு, நாமக்கல், திண்டுக்கல் ஆகிய மாவட்டங்களையும் சேலம், கரூர் மாவட்டங்களின் சில பகுதிகளையும் உள்ளடக்கியதாகக் கொங்குமண்டலம் விளங்கியது என்பர்.

கொங்குநாட்டுப் பகுதியை காவிரி, பவானி, நொய்யல், ஆன்பொருநை என்று அழைக்கப்படும் அமராவதி ஆகிய ஆறுகள் வளம் செழிக்கச் செய்கின்றன.

### பழங்கால வணிகம்

உழவு, கைத்தொழில், வணிகம் என்னும் மூன்றும் ஒரு நாட்டு மக்களின் நாகரிக நல்வாழ்விற்கு அடிப்படைகளாகும் என்பர். உள்நாட்டு, வெளிநாட்டு வணிகத்தில் தமிழர்கள் சிறந்து விளங்கியுள்ளனர். கடல் வணிகத்தில் சேரநாடு சிறப்புற்றிருந்தது. அதற்கு அந்நாட்டின் இயற்கை அமைப்பே காரணமாக அமைந்திருந்தது. சேரர்கள் வலிமை மிகுந்த கப்பல் படையை வைத்திருந்தனர். செங்குட்டுவனின் கடற்போர் வெற்றியால் அவன் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் என்று அழைக்கப்பட்டான். கடம்பர் என்னும் கடற்கொள்ளையர்களைச் சேரமன்னர்கள் அடக்கினர். முசிறி சேரர்களின் சிறந்த துறைமுகங்களுள் ஒன்றாக விளங்கியது. இங்கிருந்துதான் மற்ற நாடுகளுக்கு மிளகு, முத்து, யானைத் தந்தங்கள், பட்டு, மணி போன்றவை ஏற்றுமதி செய்யப்பட்டன. பொன்,



மென்மைமிக்க புடவைகள், சித்திர வேலைப்பாடமைந்த ஆடைகள், பவளம், செம்பு, கோதுமை ஆகியன இறக்குமதி செய்யப்பட்டன. இச்செய்தியை,

*மீனோடு நெற்குவைஇ*
*மிசையம்பியின் மனைமறுக்குந்து*
*.........*
*கலந்தந்த பொற்பரிசம்*
*கழித்தோணியால் கரைசேர்க்குந்து* – *புறம் 343 : 1– 8*

என்னும் பாடல் விளக்குகிறது.

சேரநாட்டில் உள்நாட்டு வணிகமும் நன்கு வளர்ச்சியுற்றிருந்தது. மக்கள் தத்தம் பொருள்களைத் தந்து தமக்குத் தேவையான பொருளைப் பெற்றனர். நெல்லே விலையைக் கணக்கிட அடிப்படையாக இருந்தது என்பர். உப்பும் நெல்லும் ஒரே மதிப்புடையனவாக இருந்தன என்பதை,

*நெல்லும் உப்பும் நேரே ஊரீர்*
*கொள்ளீ ரோவெனச் சேரிதொறும் நுவலும்* – *(அக. 390)*

என்னும் அகப்பாடல் மூலம் அறியலாம்.

### கொங்கு மண்டலப் பகுதிகளில் இன்றைய வணிகம்

#### நீலகிரி



கிழக்குத் தொடர்ச்சி மலையும் மேற்குத் தொடர்ச்சி மலையும் சந்திக்கும் இடமே நீலகிரி ஆகும். இம்மாவட்டம் முழுவதும் மலைப் பகுதியாலானது. காடுகள் நிறைந்த இம்மாவட்டத்தில் தோட்டப்பயிர்களான காப்பி, தேயிலை, உருளைக்கிழங்கு, கேரட், முட்டைகோசு ஆகியவை பெருமளவில் பயிரிடப்படுகின்றன; தைலமரம் (யூகலிப்டஸ்) வளர்க்கப்படுகிறது.

நீலகிரி மாவட்டம் தேயிலைத் தொழிற்சாலைகள் நிறைந்தது. புகைப்படச் சுருள் தயாரிப்புத் தொழிற்சாலை, துப்பாக்கி வெடிமருந்துத் தொழிற்சாலை, தைலமரம் (யூகலிப்டஸ்) எண்ணெய்த் தொழிற்சாலை ஆகியனவும் உள்ளன.

#### கோயம்புத்தூர்



கோவன்புத்தூர் என்னும் பெயரே கோயம்புத்தூர் என்று மருவி வழங்கப்பட்டு வருகிறது. இம்மாவட்டத்தில் நெல், வாழை, கரும்பு, காய்கறிகள், பூக்கள் போன்றவை பெருமளவில் பயிரிடப்படுகின்றன. பஞ்சாலைகள், நூற்பாலைகள், மின்சாரப் பொருள்கள், எந்திரங்கள், வீட்டுஉபயோகப் பொருள்கள் தயாரிக்கும் தொழிற்சாலைகள் இம்மாவட்டத்தில் நிறைந்துள்ளன.

### திண்டுக்கல்

வரலாற்றுச் சிறப்புமிக்க திண்டுக்கல்லில் நெல், சோளம், தினை வகைகள், வாழைப்பழம், காய்கறிகள் போன்றவை விளைவிக்கப்படுகின்றன. இப்பகுதி மலர் உற்பத்தியில் முதலிடம் வகிக்கின்றது. எனவே தமிழ்நாட்டின் ஹாலந்து என்றும் சிறப்பிக்கப்படுகிறது.

அரிசி, தோல், பூட்டுத் தொழிற்சாலைகள் நிறைந்த மாவட்டம் இது. இங்குள்ள சின்னாளபட்டிச் சுங்குடிச் சேலைகள் புகழ்பெற்றவை.

### ஈரோடு



பரப்பளவில் ஈரோடு தமிழ்நாட்டின் இரண்டாவது பெரிய நகரமாக விளங்குகிறது. இம்மாவட்டத்தில் நெல், நிலக்கடலை, மஞ்சள், கரும்பு, பருத்தி, எள் போன்றவை பயிரிடப்படுகின்றன. தமிழகத்திலேயே மஞ்சள் சந்தை ஈரோட்டில்தான் நடைபெறுகின்றது.

துணி நூற்பாலைகள், எண்ணெய் ஆலைகள், சர்க்கரை ஆலைகள் பெருமளவில் உள்ளன. நூல் நூற்பு, துணிகளுக்குச் சாயம் ஏற்றுதல், அச்சிடுதல், தோல் பதனிடுதல் முதலான தொழில்களும் இம்மாவட்டத்தில் நடைபெறுகின்றன.

### திருப்பூர்




இன்று திருப்பூர் மிகச்சிறந்த பின்னலாடை நகரமாக விளங்குகிறது. நெல், கரும்பு, பருத்தி, வாழை போன்றவை இங்கு விளைவிக்கப்படும் முதன்மையான பயிர்களாகும். இம்மாவட்டம் பின்னலாடைகள், ஆயத்த ஆடைகள் மூலம் தமிழ் நாட்டிற்குப் பெரும் வருவாயை ஈட்டித்தருகிறது. இந்தியாவின் முதல் ஆயத்த ஆடைப் பூங்காவான நேதாஜி ஆயத்த ஆடை பூங்கா இம்மாவட்டத்தில் அமைந்துள்ளது. தேசிய அளவில் புகழ்பெற்ற காங்கேயம் காளைகள் இம்மாவட்டத்திற்குப் பெருமை சேர்க்கின்றன.

### நாமக்கல்

பச்சைமலை, கொல்லிமலை, சேர்வராயன் மலையின் ஒரு பகுதி ஆகியவை இம்மாவட்டத்தில் உள்ளன. நெல், கரும்பு, சோளம், நிலக்கடலை, பருத்தி ஆகியவற்றுடன் மலைப்பகுதிகளில் விளையும் திராட்சை, ஆரஞ்சு, காப்பி, பாக்கு, ஏலம் போன்றவையும் பயிரிடப்படுகின்றன.

முட்டைக்கோழி வளர்ப்பிலும் முட்டை உற்பத்தியிலும் தென்னிந்தியாவிலேயே

நாமக்கல் முதன்மையான இடம் வகிக்கின்றது. இங்கே சிமெண்ட், காகிதத் தொழிற்சாலைகள் உள்ளன. கைத்தறி நெசவு, வெண்கலப் பொருள்கள் செய்தல் முதலான தொழில்களும் நடைபெறுகின்றன. சிற்றுந்து, சரக்குந்து ஆகியவை அதிக அளவில் இயங்கும் மாவட்டமாக நாமக்கல் விளங்குகிறது.



### சேலம்

*மாங்கனி நகரம்* என்னும் சிறப்புப் பெயர் கொண்டது சேலம். இம்மாவட்டத்தில் நெல், பருப்பு வகைகள், பருத்தி, கரும்பு, மாம்பழம், காப்பி, பாக்கு ஆகியன பயிரிடப்படுகின்றன. இந்தியாவிலேயே இம்மாவட்டத்தில்தான் ஜவ்வரிசி அதிக அளவு உற்பத்தி செய்யப்படுகின்றது. தமிழ்நாட்டில் கைத்தறி நெசவு அதிகமாக உள்ள மாவட்டம் இதுவே. இங்குப் பால் பண்ணைத் தொழிலும் சிறப்பாக நடைபெறுகின்றது. இரசாயனப் பொருள், அலுமினியம், சந்தன எண்ணெய், வனஸ்பதி ஆகியவை தயாரிக்கும் ஆலைகள் நிறைந்த மாவட்டமாகவும் சேலம் விளங்குகிறது. முலாம் பூசும் தொழிலும் பெருமளவில் நடைபெறுகிறது. *ஏழைகளின் ஊட்டி* என்று அழைக்கப்படும் *ஏற்காடு* இம்மாவட்டத்தில் அமைந்துள்ளது.

### கரூர்

கொங்கு நாட்டின் ஒரு பகுதியாக விளங்கிய இப்பகுதிக்கு 'வஞ்சிமாநகரம்' என்னும் பெயரும் உண்டு. *கிரேக்க அறிஞர் தாலமி,* கரூரைத் தமிழகத்தின் முதன்மையான உள்நாட்டு வணிக மையமாகக் குறிப்பிட்டுள்ளார்.

நெல், சோளம், கேழ்வரகு, கம்பு, கரும்பு போன்றவை இங்குப் பயிரிடப்படுகின்றன. கல்குவாரித் தொழிற்சாலைகள் இங்கு உள்ளன. கைத்தறி நெசவு ஆடைகளுக்குப் பெயர்பெற்ற மாவட்டமாகக் கரூர் விளங்குகிறது. தோல் பதனிடுதல், சாயமேற்றுதல், கற்சிற்ப வேலைகள் போன்ற தொழில்களும் நடைபெறுகின்றன. பேருந்துக் கட்டுமானத் தொழிலின் சிகரமாகக் கரூர் விளங்குகிறது.

#### தெரிந்து தெளிவோம்

**ஊர்களும் சிறப்புப் பெயர்களும்**

| | |
|---|---|
| தூத்துக்குடி | – முத்து நகரம் |
| சிவகாசி | – குட்டி ஜப்பான் |
| மதுரை | – தூங்கா நகரம் |
| திருவண்ணாமலை | – தீப நகரம் |

## கற்பவை கற்றபின்

1. உங்கள் மாவட்டம் பற்றிய செய்திகளைத் திரட்டி எழுதுக.
2. பல்வகைத் தொழில்கள் என்னும் தலைப்பில் படத்தொகுப்பு உருவாக்குக.

# மதிப்பீடு

சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. 'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு' என்று குறிப்பிடும் நூல் _____.
   அ) தொல்காப்பியம் ஆ) அகநானூறு இ) புறநானூறு ஈ) சிலப்பதிகாரம்
2. சேரர்களின் தலைநகரம் _____.
   அ) காஞ்சி ஆ) வஞ்சி இ) தொண்டி ஈ) முசிறி
3. பழங்காலத்தில் விலையைக் கணக்கிட அடிப்படையாக அமைந்தது _____.
   அ) புல் ஆ) நெல் இ) உப்பு ஈ) மிளகு
4. ஆன்பொருநை என்று அழைக்கப்படும் ஆறு _____.
   அ) காவிரி ஆ) பவானி இ) நொய்யல் ஈ) அமராவதி
5. வீட்டுஉபயோகப் பொருள்கள் தயாரிக்கும் தொழிற்சாலைகள் நிறைந்த மாவட்டம் _____.
   அ) நீலகிரி ஆ) கரூர் இ) கோயம்புத்தூர் ஈ) திண்டுக்கல்

கோடிட்ட இடங்களை நிரப்புக.

1. 'மாங்கனி நகரம்' என்று அழைக்கப்படும் நகரம் _____.
2. சுங்குடிச் சேலைகளுக்குப் புகழ்பெற்ற ஊர் _____.
3. சேரர்களின் நாடு _____ எனப்பட்டது.
4. பின்னலாடை நகரமாக _____ விளங்குகிறது.

குறுவினா

1. மூவேந்தர்களின் காலம் குறித்து எழுதுக.
2. கொங்கு நாட்டில் பாயும் ஆறுகள் யாவை?
3. 'தமிழ்நாட்டின் ஹாலந்து' என்று அழைக்கப்படும் ஊர் எது? ஏன்?

சிறுவினா

1. கொங்கு மண்டலச் சதகம் கூறும் கொங்கு மண்டலத்தின் எல்லைகள் யாவை?
2. கரூர் மாவட்டம் பற்றிய செய்திகளைச் சுருக்கி எழுதுக.

நெடுவினா

கொங்கு நாட்டின் உள்நாட்டு, வெளிநாட்டுவணிகம் குறித்து எழுதுக.

சிந்தனை வினா

நாட்டு மக்களின் நாகரிக நல்வாழ்விற்கு வணிகம் தவிர்த்து வேறு எவையெல்லாம் உதவும் என்று நீங்கள் கருதுகிறீர்கள்?

விரிவானம்

இயல் ஆறு

# காலம் உடன் வரும்

M75TJM

**நுழையும்முன்**

உழவும் நெசவும் பழந்தமிழர் வாழ்வோடு பின்னிப் பிணைந்தவை. உழவு மக்களின் பசியைப் போக்குகிறது. நெசவு மக்களின் மானம் காக்கிறது. நெசவுத் தொழிலாளர்கள் இரவு, பகல் என்ற பேதமின்றி உழைக்கக் கூடியவர்கள். அவ்வாறு அவர்கள் வியர்வைசிந்தி உழைத்தவையே நாம் அணியும் வண்ண உடைகள். நெசவுத் தொழிலாளரின் வாழ்வை விளக்கும் கதை ஒன்றை அறிவோம்.



நாளை மறுநாளுக்குள் லாரி பிடித்துச் சரக்கை ஏற்றித் தூத்துக்குடி துறைமுகத்தில் சேர்க்க வேண்டிய நிர்பந்தம். 'அனந்திகா நிறுவனத்து'க்கு இன்னும் மிச்சம்மீதிகளாக வரவேண்டிய துணிகள் தறிகளில் இருந்தன. இவற்றைச் சேகரிக்க பள்ளிப்பாளையம், மொங்கநல்லாம்பாளையம், வெள்ளக்கோயில் இப்படிப் பல இடங்களுக்கு நேரில் ஆட்கள் சென்றனர். ஆட்கள் அவசியமில்லை எனும் இடத்துக்கு, தொலைபேசி அழைப்புகள். வெள்ளக்கோயில் தினேஷ் டெக்ஸில் தொலைபேசி மணி ஒலித்தது. சுப்பிரமணி போனை எடுத்தான்.

"அனந்திகாவுல இருந்து பேசறமுங்க....

"நாளைக்குச் சாயங்காலத்துக்குள்ள லாரில ஏத்தணும். சீக்கிரமா முடிங்க . உங்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை...."

"இங்கே பாவு பிணைக்கக்கூட ஆள் இல்லீங்க...."

"ஏனுங்க. நம்ம சிரமந் தெரியாதவராட்டம் புதுசாப் பேசறீங்க....? எப்படியாச்சும் ஒட்டி வச்சிருங்க. நாளைக்கு ரண்டு மணிக்கு நம்ம டெம்போ உங்க பட்டறைல நிக்கும். ஏத்தி அனுப்ப வேண்டியது உங்க பொறுப்பு...."

தொலைபேசித் தொடர்பு துண்டிக்கப்பட்டது. கூடவே உற்சாக நரம்புகளும் துண்டித்தாற்போலிருந்தது சுப்பிரமணிக்கு. நேரம் இப்போது இரவு பதினொன்று.

பாவு பிணைக்க ரங்கன் இருந்தால் பரவாயில்லை. முந்தாநாள் மனைவியோடு மாமனார் ஊருக்குப் போய்விட்டான். இப்போது என்ன செய்வது...?

உள்ளே நான்கு தறிகள் ஓடிக்கொண்டிருந்தன. மாணிக்கம் ஓட்டுகிற தறியில், சற்று நேரத்தில் 'பாவு' தீர்ந்துவிடும். மிச்சம் கொஞ்சம் நூல் வைத்து அடுத்த பாவைப் பிணைத்து விட்டால் நாளைக்குள் ஓடி அடைந்து விடும். பாவு பிணைக்க ஆள் வேண்டும் இப்போது. நண்பன் ரகுவின் 'குமரன் டெக்ஸில்' யாராவது இருப்பார்கள். இம்மாதிரி அவசர காலத்துக்கு ஆபத்பாந்தவன் ரகுநாதன்.

பாவு பிணைக்க இரண்டு ஆளாகக் கிடைத்தால் வேலை விரைவில் முடியும். அதைவிட ஆள் தேடி அஞ்செட்டுக் கிலோமீட்டர் போகவும் வேண்டி வரலாம். வெளியே குளிர் வேறு தாக்கிக்கொண்டிருக்கிறது. 'கார்' தான் நல்லது. காரில் போகையில் அவனுக்குப் பாட்டு கேட்கக்கூடத் தோணவில்லை. தேவைகளின் அவசரப் பதற்றம் கடல் தாண்டி இங்கு வரை தாக்கிக்கொண்டிருக்கிறது.

தறியின் வாசலிலேயே நின்றுகொண்டிருந்த ரகுவைப் பார்த்துக் காரிலிருந்து இறங்கிக் கொண்டே, 'நீயும் வீட்டுக்குப் போகலியா,...? ' என்றான்.

ரகு விரக்தியை வென்ற புன்னகையோடு, "எங்கே போறது? கடவுள் நம்மளத் தூங்கறதுக்கா படைச்சிருக்கான்? என்ன சோலியா இப்ப வந்தே... நீ ஒண்ணும் சும்மா வரமாட்டியே!"

"பாவு பிணைக்க ஆள் வேணும். உடனடியா யாரையாவது அனுப்பு... இங்க யாரும் இருக்காங்களா...?

"இங்க ஒருத்தரும் இல்லியே..."

சுப்பிரமணியின் முகம் சோர்ந்து விழுவதைப் பார்த்துவிட்டு ரகு, " உனக்கு மாயழகு தெரியுமா?... இங்கே தறி ஓட்ற ஆள் ....?" என்று கேட்டான்.

"ஆமா ! தெக்கத்திக்காரன் ...."

"ம்... அந்த ஆளும் சம்சாரமும் வீட்லதான் இருப்பாங்க. நான் சொன்னேன்னு சொல்லிக் கூட்டிக்கிட்டுப் போ. சம்பளம் சேர்த்துப் போட்டுக் கொடுத்துடு..."

"திடுதிப்புனு இப்ப நடுராத்திரியில போயி..."

பேய்களும்கூடத் தூங்கும் இந்த நடுராத்திரியில் போய், புதிய ஒரு பெண்ணை வேலைக்கெனக் கூப்பிடுவதைக் குறித்துச் சுப்பிரமணி தயங்கினான்.

"உனக்குப் பாவு ஓடணுமா, வேண்டாமா...? அவங்க வந்தாலும் நீ விட மாட்டே போலிருக்கே" - ரகு முறைத்தான்.

"இப்ப இங்க வேலை இல்லீனா, நானே வந்திருவேன். மாயழகுகிட்ட ரகு சொன்னார்னு சொல்லு, அனுப்பி வைப்பாப்டி."

மாயழகுவின் வீட்டைக் கண்டுபிடித்து, சுப்பிரமணி கதவைத் தட்டினான். மாயழகுதான் கதவு திறந்தான். கண்களை இடுக்கிப் பார்த்துவிட்டுப் பின் புன்னகைத்தான்.

"பாவு பிணைக்கணும்ப்பா... ரொம்ப அவசரம்! எங்க பட்டறை ஆளு ஊருக்குப் போயிட்டான். வேற வழியே இல்ல. உங்க ஓனரைப் பார்த்தேன். அவருதான் சொன்னார், உஞ் சம்சாரம் பாவு பிணைக்குமாம்ல..."

"அவ்வளவுதானுங்களா...? இதா எழுப்பறேன்..." என்றவாறு அவளை நோக்கித் திரும்பினான்.

ஒச்சம்மா மூச்சுக்காற்றைத் தவிர உலகின் சகல தொடர்புகளையும் துண்டித்தாற்போலத் தூங்கிக்கொண்டிருந்தாள். அவளது தூக்கத்துக்காக, சரக்குக் கப்பல்கள் காத்து நிற்பதில்லை. மார்போடணைந்து இரண்டரை வயதுக் குழந்தை தூங்கிக் கொண்டிருந்தது.

"யே...ஒச்சு... எந்திரி புள்ளே..." என அவளை எழுப்பினான். கண்ணைக் கசக்கிக் கொண்ட நான்காம் வினாடியில் "வாங்கண்ணே..." என்றாள், சுப்பிரமணியைப் பார்த்து.

அடுத்த இரு வினாடிகளில் மாயழகைப் பார்த்தாள். அவளது கண்கள் 'இவருக்கிட்டே ஏதும் கடன் வாங்கியிருக்கியா...?' என்கின்றன.

"பாவு பிணைக்கக் கூட்டிக்கிட்டுப் போக வந்திருக்காரு..."

ஒச்சம்மா கையில் நீர்ச்சொம்புடன் எழுந்து வெளியே சென்றாள். முகம் கழுவிக்கொண்டு வரும்போது சற்றே மலர்ச்சியாகத் தெரிந்தாள்.

"கார்ல வந்தீங்களா..?" எனக் கேட்டவாறு குழந்தையைத் தூக்கிக்கொண்டு வெளியில் இறங்கினாள்.

சுப்பிரமணி, மாயழகைப் பார்த்து, "மாயழகு வர்றாப்டியா...?" என்றான்.

"நான் எதுக்குண்ணே...? காவலா?... காலை முத ஷிஃப்ட்டுக்குப் போகணும். நீங்க கொண்டு வந்து விட்டுருங்க, அது போதும்..."

"ம்..." என்றவாறு சுப்பிரமணி வெளியே வந்து காரின் பின் கதவைத் திறந்து ஒச்சம்மாவை உட்கார வைத்துவிட்டுக் காரைக் கிளப்பினான்.

தனது பட்டறைக்குச் சுப்பிரமணி காரைச் செலுத்தினான். தறிப்பட்டறைக்குள் நுழைகிற நேரம், இரண்டாம் நம்பர் தறி ஓடி முடிந்து ஒன்றரை மீட்டர் நூலை மிச்சம் வைத்திருந்தது. இனி, அதே நூலின் பாவைப் பிணைத்து, தொடர்ந்து ஓட்ட வேண்டியதுதான். பாவு பீமிலிருந்து செல்கிற இந்த நாலாயிரம் நூல்கள் பெரிய இசைக்கருவியின் தந்திகள் போல் உள்ளன. இத்தனைத் தந்திகளிலிருந்தும் 'டக்..டடக்..' என ஒற்றைத் தறிச் சத்தம்தான்.

தறிமுகப்பில் ஊடுபாவாக நூல் கோத்துக்கொண்டு எலி மாதிரி 'தார்க்கதிர்' ஓடினால், நூல்களுக்குத் துணி வடிவம் வந்துவிடும். துணியின் டிசைனைத் தறிக்கு மேலே வெட்டி வெட்டி நகரும் ஜக் கார்டுகள் தீர்மானிக்கும்.

பழைய வெற்று பீமைக் கழற்றிவிட்டு, புதிய பாவு பீமைத் தறிப் பையன்கள் உதவியோடு சுப்பிரமணி பொருத்தினான். ஒச்சம்மாவுக்கு வேலை துவங்க இருந்தது. குழந்தை தோளில் தூங்கிக் கொண்டிருந்தது.

சுவரோரமாக ஒரு பெட்ஷீட்டைத் தேடி விரித்து, அதில் குழந்தையைப் படுக்க வைத்தாள். தறிச் சத்தத்தில் கூட விழிக்காத குழந்தை, தாயின் அருகாமை தவறியதும் சிணுங்கியது. சில கழிநூல்களை எடுத்து அதன் விலாப் பகுதியில் வைத்தாள். அதன் மீது கைபோட்டு குழந்தை அமைதியானது.

தறியின் அருகே வந்து நூல்களை முடிச்சிட்டு இணைக்க ஆரம்பித்தாள் ஒச்சம்மா. அவளுக்குச் சொந்த ஊர் உசிலம்பட்டி பக்கமுள்ள கிருஷ்ணாபுரம். சீமைக்கருவேல முட்கள் அதிகம் உள்ள ஊர். மாயழகு 'கோம்பைத்தொழுவு' க்காரன். கோம்பைத் தொழுவென்றால் அது வெள்ளிமலை அடிவாரத்தில் இருக்கிறது. வருசநாட்டு மலைத் தொடர்ச்சி. கண்டமனூர் எல்லை தாண்டிப்போக வேண்டும்.

அங்கிருந்துதான் மூன்று மாவட்டங்களைத் தாண்டி மாயழகு வெள்ளக்கோயிலுக்குத் தறி ஓட்டவருவான். கொஞ்சம் காசு பிடித்ததும் கோம்பைத்தொழுவுக்குப் போய்ச் சுற்றிக் கொண்டிருந்துவிட்டு வருவான். அப்படித் தனது ஊரில் இருந்தபோதுதான் ஒச்சம்மாவுடன் முடிச்சானது.

எதிர்கால நலன்களை எடுத்துப் பேசி வெள்ளக்கோயிலுக்குக் குடும்பத்துடன் வரச் செய்தான். வீடு முதலான ஏற்பாடுகள் முடித்தபின் மாயழகுக்கு 'இது பரவாயில்லையே' என்று தோன்றியது. ஆனால் வெள்ளக்கோயில் வந்த அன்று ஒச்சம்மா அழுத அழுகை இருக்கிறதே! " தினம் ஒரு மரத்தின் கீழ் அடுப்புப் பற்ற வைக்கிற நாடோடிப் பிழைப்புதானா நம்முது" என விம்மிவிட்டாள். ஆயினும், இனியும் இடம் மாறினால், தான் பிழைக்க மாட்டோம் என்பதாக அவளுக்குப் பட்டது. இந்தப் பகுதியின் வேலிகள், வீடுகள், நாகரிகம் குறிப்பாக உணவுப்பழக்கம் எல்லாமே வியப்பைத் தந்தன அவளுக்கு. ஒச்சம்மா "வெஞ்சனம் இல்லாமல் சாப்பிட முடியாது" என்றாள். இங்குள்ள பெண்கள், "வெஞ்சனம்... ஓ பொரியலா? பொரியல் இல்லாமல் சாப்பிட்டுறலாம். தயிரோ மோரோ இல்லாமத்தான் சாப்பிட முடியாது" என்றார்கள். உணவு, காற்று, நீர், ஒப்பனை எல்லாமும் மாற வேண்டியிருந்தது.

தறித்தொழில் இயந்திர நேர்த்தி அதிகம் கொண்டது. நுட்பங்களுக்கு மூளையைச் செலவிடத் தேவையில்லை. ஆனால் பிசகாமல் ஒரே மனசாக நேரம் செலவிட்டாக வேண்டும். பாவு பிணைத்தல், ஒடி எடுத்தல், கோன் போடுதல் எல்லாம் சில மாதங்களில் ஒச்சம்மா கற்றுக் கொண்டாள். தறிதான் ஓட்டத்தெரியாது. தொழிலில் தறி ஓட்டுகிற பெண்களும் இருக்கிறார்கள். விமானமே ஓட்டுகிறவர்கள் தறி ஓட்ட மாட்டார்களா என்ன?

தன் குழந்தையின் கல்வி பற்றி இப்போதே கவலை வந்துவிட்டது. தன் பையன் "தார் போடுகிற பையனாக" மாறுவதை அவளால் சகிக்க முடியாது. தம்மைப் போல வந்தேறிய சக குடும்பங்களைக் கவனித்துத்தான் வருகிறாள். அடிக்கடி ஊர் மாறினால் குழந்தைகள்

படிப்பு போச்சு. பக்கத்து வீட்டு ராமாயி அக்கா மகனுக்கு வயசு பதினாலு. அ... ஆ... தெரியாது. பாவு பிணைத்தலினூடே அவள் குழந்தையைப் பார்த்துக் கொள்கிறாள். அவளது பூங்கனா படுத்திருக்கிறது. "உன்னை நிச்சயம் பள்ளியில் சேர்த்துப் படிக்க வைப்பேன்" என்று மனத்துக்குள் சொல்லிக்கொண்டாள்.



பாவு பிணைத்தல்

சட்டென பாவு பிணைப்பதை நிறுத்திவிட்டுக் குழந்தையை நோக்கி நடந்தாள். குழந்தை அழ ஆரம்பித்தது. மழலையின் பசி தாய் அறிவாள். குழந்தையைத் தூக்கிக் கொண்டாள். தறிக்கு வெளியில் வந்து இருள் நிழல் தேடிப் போய் அமர்ந்து பாலூட்டினாள். குழந்தை அப்படியே தூங்கிவிட்டது. அவள் தூங்க முடியாது.

திரும்ப உள்ளே எடுத்துவந்து கிடத்தினாள். குழந்தை ஒருவிதமாகப் பிறை வடிவத்தில் கிடந்தது. ஒச்சம்மா நூல் பிணைவதன் வேகம் மங்குவதைச் சுப்பிரமணி உணர்ந்தான். அவன் எல்லாவற்றையும் பார்த்துத்தான் ஆக வேண்டும். தார் போடுகிற பையனைப் பார்த்து, "டேய் முருகா இங்கே வா" என அழைத்தான். இருபது ரூபாயைக் கொடுத்ததும் எல்லாருக்கும் அவன் தேநீர் வாங்கி வந்தான்.

ஒச்சம்மா தேநீரை வாங்கிப் பருகினாள். பின், பழைய வேகத்தோடு நூல் பிணைக்கத் தொடங்கினாள். வேலையும் முடிந்துவிட்டது. இரவும் விடிந்துவிட்டது. அந்தத் தறிக்கான மாணிக்கத்தைக் கூப்பிட்டு சுப்பிரமணி, "டீ, பீடின்னு அடிக்கடிப் போகாம இதச் சீக்கிரமா முடிக்கணும்!" எனக் கட்டளை வடிவத்தில் கேட்டுக் கொண்டான்.

ஒச்சம்மா குழந்தையைத் தூக்கிக் கொண்டு சுப்பிரமணி அருகில் வந்தாள். சுப்பிரமணி இரட்டைச் சம்பளத்துக்கான தொகையை அவளிடம் தந்தான். அவளது கண்கள் திளைப்பிலும் திகைப்பிலும் ஒரு கணம் ஒளிர்ந்தன. தனது எதிர்காலமேபோல் அந்த ரூபாய்த் தாள்களை வலது கையில் இறுக்கிக் கொண்டாள்.

சுப்பிரமணி, 'கொண்டுவந்து விட்டுடறேன்...' என்று காருக்கு நடக்க, அவள் பின்னால் நடந்தாள். அவன் ஓட்டுநர் இருக்கையில் அமர்ந்து, இருபது விநாடிகள் கண்களை மூடிக்கொண்டான். இந்த இரவுக்கும் பகலுக்குமான இடைவெளியை இப்போது பிரித்து விடுவது போல இருந்தது இந்தச்செயல். பின் அடக்கமாகச் சோம்பல் முறித்துவிட்டுக் காரைக் கிளப்பினான். ஆங்காங்கே டீக்கடைகள் விழித்து டேப் சத்தம் கேட்கவும் பாட்டுப் போடலாமே எனத் தோன்றி டேப்பைப் போட்டான்.

செம்மாண்டம்பாளையத்தில் அவளது வீடு வந்தாயிற்று. கார்ச்சத்தம் கேட்டு மாயழகு வெளியே வந்தான். ஒச்சம்மாளை இறக்கி விட்டுவிட்டு அப்படியே போக எண்ணியிருந்த சுப்பிரமணியை, "டீ சாப்பிட்டுதாண்ணே போகணும்!" என வற்புறுத்தி மாயழகு இறங்க வைத்துவிட்டான். பிறகு தூக்குச் செம்பை எடுத்துக்கொண்டு தேநீர்க் கடைக்கு ஓடினான்.

ஒச்சம்மா எந்தப் புள்ளியில் துவங்கினாள் எனத் தெரியாதபடி வீட்டுக் காரியங்களில் முனைந்துவிட்டாள். குழந்தை இதற்குள் விழித்துவிட்டான். பயல் நேற்றுப்படுத்த கூரையின் கீழ்தான் இன்றைக்கும் விழிக்கிறான். மாயழகு தேநீருடன் வந்து ஒச்சம்மாவுக்கும் சுப்பிரமணிக்கும் அவனே ஊற்றியும் கொடுத்தான்.

ஏதாவது பேசவேண்டும் என்பதற்காகச் சுப்பிரமணி "ரொம்ப கஷ்டந்தான் நம்ம தொழிலு..." என்றான்.

"அப்படித்தாண்ணே இருக்கும் எல்லாமும்... உங்கள நம்பித்தான் ஊருவிட்டு ஊரு வந்திருக்கோம். உங்களுக்கு நாங்க ஒத்தாசை... இப்படி ஏதும் அவசரம்னா சொல்லுங்கண்ணே... எங்களால முடிஞ்சதச் செய்யறம்..."

"சரி, வர்றேன் மாயழகு" என்றவாறு காரில் ஏறினான். ஒச்சம்மா உள்ளிருந்து வந்து, "வாங்கண்ணே..." என்று விடையளித்துத் தலையாட்டினாள். சுப்பிரமணி எதிர்பாராவிதமாக "டாட்டா டாட்டா" என்று குழந்தையின் குரல் கேட்டது. பதிலுக்குத் தலையசைத்துவிட்டுக் காரைக் கிளப்பினான்.

**நூல் வெளி**

கன்னிவாடி சீரங்கராயன் சிவக்குமார் திருப்பூர் மாவட்டத்தைச் சேர்ந்த கன்னிவாடியில் பிறந்தவர். சிறந்த சிறுகதை, புதின எழுத்தாளர். நூற்றைம்பதுக்கும் மேற்பட்ட சிறுகதைகளை எழுதியுள்ளார். சிறந்த சிறுகதைக்கான இலக்கியச் சிந்தனை விருது பெற்றவர். கன்னிவாடி, குணச்சித்திரங்கள், உப்புக்கடலைக் குடிக்கும் பூனை முதலிய நூல்களை எழுதியுள்ளார். அவர் எழுதிய சிறுகதைகளில் ஒன்று இங்குத் தரப்பட்டுள்ளது.



## கற்பவை கற்றபின்

1. காலம் உடன் வரும் – கதையை வகுப்பில் நாடகமாக நடித்துக்காட்டுக.
2. காலம் உடன் வரும் கதையில் இடம்பெற்றுள்ள ஆங்கிலச் சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்களை எழுதுக.

## மதிப்பீடு

'காலம் உடன் வரும்' – கதையைச் சுருக்கி எழுதுக.

கற்கண்டு

இயல் ஆறு

# புணர்ச்சி

BZDHYE

தமிழ், அமுதம் ஆகிய இரு சொற்களையும் சேர்த்துச் சொல்லிப் பாருங்கள். தமிழமுதம் என்று ஒலிக்கிறது அல்லவா?

இவற்றுள் முதலில் உள்ள சொல்லை நிலைமொழி என்றும் அதனுடன் வந்து சேரும் சொல்லை வருமொழி என்றும் கூறுவர். இவ்விரு சொற்களும் சேரும்போது நிலைமொழியின் இறுதி எழுத்தும் வருமொழியின் முதல் எழுத்தும் இணைகின்றன. இவ்வாறு நிலைமொழி ஈறும், வருமொழி முதலும் இணைவதைப் புணர்ச்சி என்கிறோம்.

நிலைமொழியின் இறுதி எழுத்து உயிர் எழுத்தாக இருந்தால் அஃது உயிரீற்றுப் புணர்ச்சி எனப்படும். (எ.கா.) சிலை + அழகு = சிலையழகு (லை=ல்+ஐ)

நிலைமொழியின் இறுதி எழுத்து மெய் எழுத்தாக இருந்தால் அஃது மெய்யீற்றுப் புணர்ச்சி எனப்படும். (எ.கா.) மண் + அழகு = மண்ணழகு

வருமொழியின் முதல் எழுத்து உயிர் எழுத்தாக இருந்தால் அஃது உயிர்முதல் புணர்ச்சி எனப்படும். (எ.கா.) பொன் + உண்டு = பொன்னுண்டு

வருமொழியின் முதல் எழுத்து மெய் எழுத்தாக இருந்தால் அஃது மெய்முதல் புணர்ச்சி எனப்படும். (எ.கா.) பொன் + சிலை = பொற்சிலை (சி = ச்+ இ)

### இயல்பு புணர்ச்சியும் விகாரப் புணர்ச்சியும்

நிலைமொழியும் வருமொழியும் எவ்வித மாற்றமும் இன்றி இணைவது இயல்பு புணர்ச்சி ஆகும். (எ.கா.) தாய் + மொழி = தாய்மொழி (இரு சொற்களிலும் எம்மாற்றமும் நிகழவில்லை.)

உடல் + ஓம்பல் = உடலோம்பல் (இங்கு ல் + ஓ இணைந்து லோ என்னும் உயிர்மெய் எழுத்து ஆயிற்று. புதிய எழுத்து எதுவும் தோன்றவோ வேறு எழுத்தாகத் திரியவோ மறையவோ இல்லை.)

இரண்டு சொற்கள் இணையும்போது நிலைமொழியிலோ வருமொழியிலோ அல்லது இரண்டிலுமோ மாற்றங்கள் நிகழுமாயின், அது விகாரப் புணர்ச்சி எனப்படும். விகாரப் புணர்ச்சி தோன்றல், திரிதல், கெடுதல் என மூவகைப்படும்.

நிலைமொழியும் வருமொழியும் இணையும்போது புதிதாக ஓர் எழுத்துத் தோன்றுவது தோன்றல் விகாரம் ஆகும். (எ.கா.) தமிழ் + தாய் = தமிழ்த்தாய்

நிலைமொழியும் வருமொழியும் இணையும்போது ஓர் எழுத்து வேறு எழுத்தாக மாறுவது திரிதல் விகாரம் ஆகும். (எ,கா.) வில் + கொடி = விற்கொடி

நிலைமொழியும் வருமொழியும் இணையும்போது ஓர் எழுத்து மறைவது கெடுதல் விகாரம் ஆகும். (எ.கா.) மனம் + மகிழ்ச்சி = மனமகிழ்ச்சி

இரண்டு சொற்கள் இணையும்போது ஒன்றுக்கு மேற்பட்ட விகாரங்கள் நிகழ்வதும் உண்டு. (எ.கா.) நாடகம் + கலை = நாடகக்கலை

இங்குக் கெடுதல் விகாரத்தின்படி நிலைமொழி ஈற்றில் உள்ள மகர மெய் மறைந்தது. தோன்றல் விகாரத்தின்படி க் என்னும் மெய்யெழுத்து தோன்றியது.

## கற்பவை கற்றபின்

இயல்பு, தோன்றல், திரிதல், கெடுதல் ஆகிய புணர்ச்சிகளுக்குரிய எடுத்துக்காட்டுகளைக் கொண்டு பட்டியல் ஒன்று உருவாக்குக.

## மதிப்பீடு

**சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.**

1. விகாரப் புணர்ச்சி _ _ _ _ _ வகைப்படும்.

   அ) ஐந்து ஆ) நான்கு இ) மூன்று ஈ) இரண்டு

2. 'பாலாடை' – இச்சொல்லுக்குரிய புணர்ச்சி _ _ _ _ _

   அ) இயல்பு ஆ) தோன்றல் இ) திரிதல் ஈ) கெடுதல்

**பொருத்துக.**

| | | | |
|---|---|---|---|
| 1. | மட்பாண்டம் | – | தோன்றல் விகாரம் |
| 2. | மரவேர் | – | இயல்புப் புணர்ச்சி |
| 3. | மணிமுடி | – | கெடுதல் விகாரம் |
| 4. | கடைத்தெரு | – | திரிதல் விகாரம் |

**சிறுவினா**

1. இயல்பு புணர்ச்சியை எடுத்துக்காட்டுடன் விளக்குக.
2. மரக்கட்டில் – இச்சொல்லைப் பிரித்து எழுதிப் புணர்ச்சியை விளக்குக.

## மொழியை ஆள்வோம்!

QKTVRX

**கேட்க.**

நெசவுத்தொழில் குறித்த நாட்டுப்புறப் பாடல்களைக் கேட்டு மகிழ்க.

**கீழ்க்காணும் தலைப்புகளுள் ஒன்று பற்றி இரண்டு நிமிடம் பேசுக.**

1. உழவும் நெசவும்.
2. தொழில்கள் பலவிதம்.

## சொல்லக் கேட்டு எழுதுக.

பூமிக்குள் புதைந்த தாவர இனங்களும் விலங்கினங்களும் அழுகி, மட்கிப் பழுப்பு நிலக்கரியாக மாறுகின்றன. இது மின் உலைகளிலும் ஊது உலைகளிலும் எரிபொருளாகப் பயன்படுகின்றது. உலோக உருக்குத் தொழிலிலும் பயன்படுகின்றது. தமிழ்நாட்டில் கடலூர் மாவட்டம் நெய்வேலியிலும் புதுச்சேரியின் சில பகுதிகளிலும் பழுப்பு நிலக்கரி கிடைக்கிறது. இது தஞ்சை, பெரம்பலூர், சிவகங்கை, நீலகிரி, திண்டுக்கல், திருவள்ளூர், கன்னியாகுமரி மாவட்டங்களிலும் குறைந்த அளவு காணப்படுகிறது. நெய்வேலியில் பழுப்பு நிலக்கரிச் சுரங்கம் உள்ளது. இங்குக் கிடைக்கும் நிலக்கரி அனல்மின்சாரம் தயாரிக்க உதவுகின்றது.

## அறிந்து பயன்படுத்துவோம்.

### மரபுத்தொடர்கள்.

நாம் பேச்சிலும் எழுத்திலும் சில மரபுத்தொடர்களைப் பயன்படுத்துகிறோம். அத்தொடர்கள் நம்முடைய கருத்துகளுக்கு வலுச்சேர்க்கின்றன. சில மரபுத்தொடர்களுக்கு நேரடிப்பொருள் கொள்ளாமல், அவற்றின் உட்பொருளை அறிந்து பயன்படுத்த வேண்டும்.

(எ.கா.) 1. திண்டுக்கல், பூக்கள் உற்பத்தியில் கொடிகட்டிப் பறக்கும் நகரமாக விளங்குகிறது.

கொடிகட்டிப் பறத்தல் – புகழ்பெற்று விளங்குதல்

2. அவர் ஓர் அவசரக்குடுக்கை.

அவசரக்குடுக்கை – எண்ணிச் செயல்படாமை

## பின்வரும் மரபுத்தொடர்களைப் பொருளோடு பொருத்துக.

| | | |
|---|---|---|
| ஆயிரங்காலத்துப் பயிர் | – | இயலாத செயல். |
| கல்லில் நார் உரித்தல் | – | ஆராய்ந்து பாராமல். |
| கம்பி நீட்டுதல் | – | இருப்பதுபோல் தோன்றும்; ஆனால் இருக்காது. |
| கானல்நீர் | – | நீண்டகாலமாக இருப்பது. |
| கண்ணை மூடிக்கொண்டு | – | விரைந்து வெளியேறுதல் |

## பின்வரும் மரபுத்தொடர்களைத் தொடரில் அமைத்து எழுதுக.

1. வாழையடி வாழையாக – ______________________________________
2. முதலைக்கண்ணீர் –______________________________________
3. எடுப்பார் கைப்பிள்ளை –______________________________________

## கட்டுரை எழுதுக.

கைத்தொழில் ஒன்றைக் கற்றுக்கொள்.

## மொழியோடு விளையாடு

**ஊர்களையும் அவற்றின் சிறப்புகளையும் அறிவோம்!**




**இடமிருந்து வலம்**

1. சிவகாசி
5. திருபாச்சி
7. திருநெல்வேலி
12. கோவில்பட்டி

**வலமிருந்து இடம்**

3. மதுரை
4. பண்ருட்டி
9. தஞ்சாவூர்
10. மணப்பாறை

**மேலிருந்து கீழ்**

1. காஞ்சிபுரம்
2. சேலம்
4. பழனி

**கீழிருந்து மேல்**

6. தூத்துக்குடி
8. ஸ்ரீவில்லிப்புத்தூர்
11. திண்டுக்கல்

## நிற்க அதற்குத் தக...

**என் பொறுப்புகள்...**

1. கைத்தொழில் ஒன்றைக் கற்றுத் தெளிவேன்.
2. நெசவுத் தொழிலின் சிறப்பை அறிந்து போற்றுவேன்.

**கலைச்சொல் அறிவோம்.**

| | | | |
|---|---|---|---|
| நூல் | – *Thread* | தையல் | – *Stitch* |
| தறி | – *Loom* | ஆலை | – *Factory* |
| பால்பண்ணை | – *Dairy farm* | சாயம் ஏற்றுதல் | – *Dyeing* |
| தோல் பதனிடுதல் | – *Tanning* | ஆயத்த ஆடை | – *Readymade Dress* |

## இணையத்தில் காண்க

குடிசைத் தொழில்களின் பட்டியலை இணையத்தில் தேடி எழுதுக.

இயல் ஏழு

# பாருக்குள்ளே நல்ல நாடு



## கற்றல் நோக்கங்கள்

- சிற்றிலக்கியங்களில் உள்ள இலக்கிய நயங்களை நுகர்தல்
- தேசிய விழாக்களின் சிறப்பினை உணர்ந்து கொண்டாடுதல்
- நாட்டுக்கு உழைத்த நல்லோரின் வாழ்க்கையை அறிந்து பின்பற்றுதல்
- நாடகத்தைப் படித்துக் கதையைப் புரிந்துகொள்ளும் திறன் பெறுதல்
- வல்லினம் மிகும் இடங்கள், மிகா இடங்கள் அறிந்து பயன்படுத்துதல்

கவிதைப்பேழை

இயல் ஏழு

# படை வேழம்

57A9KG

நுழையும்முன்

தமிழர்கள் அறத்தையும் வீரத்தையும் தமது உடைமைகளாகக்கொண்டவர்கள். அவர்தம் வீரமும் போர்அறமும் தனிச்சிறப்பு வாய்ந்தவை. பகைவரை அஞ்சச்செய்யும் வீரமும் அஞ்சியோடும் பகைவரைத் துன்புறுத்தாத அறமும் தமிழரின் மாண்பினை நமக்கு உணர்த்துவன. அதனைப் போற்றிப் பாடும் சிற்றிலக்கியமான கலிங்கத்துப்பரணியின் பாடல்கள் சிலவற்றை அறிவோம்.



### கலிங்கப் படையின் நடுக்கம்

எதுகொல் இது மாயை ஒன்றுகொல்
எரிகொல் மறலிகொள் ஊழி யின்கடை
அதுகொல் என அலறா இரிந்தனர்
அலதி குலதியொடு ஏழ்க லிங்கரே (1)

### கலிங்கர் தோற்றுச் சிதைந்தோடல்

*வழிவர் சிலர்கடல் பாய்வர் வெங்கரி
மறைவர் சிலர்வழி தேடி வன்பிலம்
இழிவர் சிலர்சிலர் தூறு மண்டுவர்
இருவர் ஒருவழி போகல் இன்றியே (2)

ஒருவர் ஒருவரின் ஓட முந்தினர்
உடலின் நிழலினை வெருவி அஞ்சினர்
அருவர் வருவர் எனா இறைஞ்சினர்
அபயம் அபயம் எனநடுங்கியே* (3)

மழைகள் அதிர்வன போல் உடன்றன
வளவன் விடுபடை வேழம் என்றிருள்
முழைகள் நுழைவர்கள் போரில் இன்றுநம்
முதுகு செயும்உப காரம் என்பரே (4)

– செயங்கொண்டார்

## சொல்லும் பொருளும்

| சொல் | | பொருள் | சொல் | | பொருள் |
|---|---|---|---|---|---|
| *மறலி* | – | *காலன்* | *வழிவர்* | – | *நழுவி ஓடுவர்* |
| *கரி* | – | *யானை* | *பிலம்* | – | *மலைக்குகை* |
| *தூறு* | – | *புதர்* | *மண்டுதல்* | – | *நெருங்குதல்* |
| *அருவர்* | – | *தமிழர்* | *இறைஞ்சினர்* | – | *வணங்கினர்* |
| *உடன்றன* | – | *சினந்து எழுந்தன* | *முழை* | – | *மலைக்குகை* |

## பாடலின் பொருள்

*சோழர் படையின் தாக்குதலைக் கண்ட கலிங்கர், இஃது என்ன மாய வித்தையா என வியந்தனர். தம்மை எரிக்கவந்த தீயோ என அஞ்சினர். சோழர்படை தம் உயிரைப் பறிக்கும் காலனோ என அஞ்சினர்; தமது இறுதிக்காலம் நெருங்கிவிட்டதோ என எண்ணி, அலைந்து குலைந்து நடுங்கினர்.*

*அப்படி நடுங்கிய கலிங்கப் படையினர் படைக் கூட்டத்திலிருந்து விலகி ஓடினர். சிலர் கடலில் தாவிக் குதித்துத் தப்பினர். சிலர் யானைகளின் பின்னே மறைந்துகொண்டனர். எத்திசையில் செல்வது எனத் தெரியாமல், செல்வதற்கு அரிதான மலைக் குகைகளினுள்ளும் புதர்களுக்குள்ளும் தப்பி ஓடினர்.*

*கலிங்க வீரர்கள் ஒருவரை ஒருவர் முந்திக் கொண்டு ஓடினர். தம் நிழலையும் மற்றவர் நிழலையும் கண்டு தமிழர்கள் துரத்தி வருவதாக எண்ணி அஞ்சினர்; தஞ்சம் வேண்டி வணங்கினர்.*

*சோழ மன்னனின் படையிலுள்ள யானைகள் சினமுற்று இடியைப் போலப் பிளிறின; அவ்வோசையைக் கேட்டு அஞ்சிய வீரர்கள் இருள் நிறைந்த குகைக்குள் சென்று மறைந்தனர்; ஏனையோர் புறமுதுகுகாட்டி ஓடிப் பிழைத்தனர்.*

### நூல் வெளி

செயங்கொண்டார் தீபங்குடி என்னும் ஊரினைச் சேர்ந்தவர் என்பர். இவர் முதற்குலோத்துங்கச் சோழனுடைய அவைக்களப் புலவராகத் திகழ்ந்தவர். இவரைப் பரணிக்கோர் செயங்கொண்டார் என்று பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் புகழ்ந்துள்ளார்.

கலிங்கத்துப்பரணி தொண்ணூற்றாறு வகைச் சிற்றிலக்கியங்களுள் ஒன்றான பரணி வகையைச் சார்ந்த நூல். தமிழில் முதல்முதலில் எழுந்த பரணி இந்நூலே ஆகும். இது முதலாம் குலோத்துங்க சோழன், அவருடைய படைத்தலைவர் கருணாகரத் தொண்டைமான் ஆகியோரின் கலிங்கப்போர் வெற்றியைப் பேசுகிறது. இந்நூலைத் தென்தமிழ்த் தெய்வப்பரணி என்று ஒட்டக்கூத்தர் புகழ்ந்துள்ளார். கலிங்கத்துப் பரணி கலித்தாழிசையால் பாடப்பெற்றது; 599 தாழிசைகள் கொண்டது.

போர்முனையில் ஆயிரம் யானைகளைக் கொன்று வெற்றிகொண்ட வீரரைப் புகழ்ந்து பாடும் இலக்கியம் பரணி ஆகும்.

## கற்பவை கற்றபின்

1. உங்களுக்குத் தெரிந்த சிற்றிலக்கிய வகைகளின் பெயர்களைத் தொகுத்து எழுதுக.
2. போர்க்கருவிகளின் படங்களைத் திரட்டிப் படத்தொகுப்பு உருவாக்குக.

## மதிப்பீடு

### சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. சிங்கம் _____யில் வாழும்.

   அ) மாயை ஆ) ஊழி இ) முழை ஈ) அலை

2. கலிங்க வீரர்களிடையே தோன்றிய உணர்வு _____.

   அ) வீரம் ஆ) அச்சம் இ) நாணம் ஈ) மகிழ்ச்சி

3. 'வெங்கரி' என்னும் சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது _____.

   அ) வெம் + கரி ஆ) வெம்மை + கரி இ) வெண் + கரி ஈ) வெங் + கரி

4. 'என்றிருள்' என்னும் சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது _____.

   அ) என் + இருள் ஆ) எட்டு + இருள்

   இ) என்ற + இருள் ஈ) என்று + இருள்

5. போல் + உடன்றன என்பதனைச் சேர்த்தெழுதக் கிடைக்கும் சொல் _____.

   அ) போன்றன ஆ) போலன்றன

   இ) போலுடன்றன ஈ) போல்உடன்றன

### குறுவினா

1. சோழ வீரர்களைக் கண்டு கலிங்கர் எவ்வாறு நடுங்கினர்?
2. கலிங்க வீரர்கள் எவ்வாறு அஞ்சி ஓடினர்?
3. சோழனின் யானைப் படையைக் கண்ட வீரர்களின் செயல்கள் யாவை?

### சிறுவினா

சோழ வீரர்களைக் கண்ட கலிங்கப் படை வீரர்களின் செயல்களாகக் கலிங்கத்துப்பரணி கூறுவன யாவை?

### சிந்தனை வினா

ஒரு நாட்டின் பாதுகாப்பிற்குத் தேவையானவை எவை எனக் கருதுகிறீர்கள்?

கவிதைப்பேழை

இயல் ஏழு

# விடுதலைத் திருநாள்

FE2K6P

**நுழையும்முன்**

பிறந்தநாள், திருமணநாள் போன்றன தொடர்புடைய குடும்பத்தினருக்கு மட்டுமே மகிழ்ச்சி அளிக்கும் நாள்களாகும். சமயத் தொடர்பான விழாக்கள் குறிப்பிட்ட சமயத்தினருக்கு மட்டுமே மகிழ்ச்சி அளிக்கும். இந்தியர் அனைவருக்கும் மகிழ்ச்சி அளிக்கும் இன்றியமையா நாள் ஒன்றின் சிறப்பை அறிவோம்.

*முன்னூறு வருடமாய்*<br>
*முற்றுகை யிட்ட*<br>
*அந்நிய இருட்டின்*<br>
*அரக்கக் கூத்து*<br>
*முடிந்தது என்று*<br>
*முழங்கி நின்றது*<br>
*எந்த நாளோ*<br>
*அந்த நாள் இது.*

*செத்த பிணமாய்ச்*<br>
*சீவனில் லாமல்*<br>
*மொத்தமாய்த் தேசத்தை*<br>
*முற்றுகையிட்ட*<br>
*மூட மூட*<br>
*நிர்மூட உறக்கத்தை*<br>
*ஓட ஓட*<br>
*விரட்டி யடித்து*<br>
*விழிக்க வைத்தது –*<br>
*வையம்*<br>
*வியக்க வைத்தது –*<br>
*எந்த நாளோ*<br>
*அந்த நாள் இது.*

*பரிதவித் திருந்த*<br>
*பாரத அன்னை*<br>
*காளியாய்ச் சீறிக்*<br>
*கைவிலங் கொடித்து*<br>
*பகையைத் துடைத்து*<br>
*சத்திய நெஞ்சின்*<br>
*சபதம் முடித்து*<br>
*கூந்தல் முடித்துக்*<br>
*குங்குமப் பொட்டு வைத்து*<br>
*ஆனந்த தரிசனம்*<br>
*அளித்து நின்றது*<br>
*எந்த நாளோ*<br>
*அந்த நாள்இது.*

*சதி வழக்கினிலே*<br>
*சம்பந்தப் பட்டுத்*<br>
*தூக்குக் கயிற்றில்*<br>
*தொங்கப் போகும்*<br>
*கடைசிக் கணத்திலும்*<br>
*கண்முன் நிறுத்திப்*<br>
*பகத்சிங் பார்த்துப்*<br>
*பரவசப் பட்ட*<br>
*அற்புத விடியலை*<br>
*அழைத்து வந்தது*<br>
*எந்த நாளோ*<br>
*அந்த நாள் இது.*

*முற்றிப் படர்ந்த*<br>
*முட்காட்டை எரித்து*<br>
*விளைந்த மூங்கிலை*<br>
*வீரமாய்த் துளைத்து*<br>
*மூச்சுக் காற்றை*<br>
*மோகித்து நுழைத்து*<br>
*புரட்சிப்*<br>
*புல்லாங் குழலில்*



*பூபாளம் இசைத்தது*<br>
*எந்த நாளோ*<br>
*அந்த நாள் இது.*

*இதந்தரும் இந்தச்*<br>
*சுதந்திர நாளைச்*<br>
*சொந்தம் கொண்டாடத்*<br>
*தந்த பூமியைத்*<br>
*தமிழால் வணங்குவோம்.*

*– மீரா*

### சொல்லும் பொருளும்

| | | | |
|---|---|---|---|
| சீவன் | – உயிர் | வையம் | – உலகம் |
| சத்தியம் | – உண்மை | சபதம் | – சூளுரை |
| ஆனந்த தரிசனம் | – மகிழ்வான காட்சி | மோகித்து | – விரும்பி |

### பாடலின் பொருள்

முந்நூறு ஆண்டுகள் நம்மை அடிமைப்படுத்தி ஆண்ட அரக்கராகிய அந்நியரின் இருண்ட ஆட்சி முடிந்தது என்பதைக் கூறும் நாள் இன்று. உயிரற்ற பிணங்களைப் போலக் கிடந்த நாட்டு மக்கள் அனைவரையும் பற்றியிருந்த அறியாமை என்னும் உறக்கத்தை ஓட ஓட விரட்டிய நாள் இன்று.

அடிமையாய்த் தவித்துக் கொண்டிருந்த இந்தியத்தாய் சினந்து எழுந்து தன் கைவிலங்கை உடைத்துப் பகைவரை அழித்து, அவிழ்ந்த கூந்தலை முடித்து நெற்றியில் திலகமிட்டு, இந்தியருக்கு மகிழ்வான காட்சியை அளித்த நாள் இன்று.

சதி வழக்கில் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்ட பகத்சிங், தூக்கிலிடப்படும் கடைசி நேரத்திலும் தன் மனக்கண்ணில் கனவுகண்ட இந்தியாவின் விடியல் தோன்றிய நாள் இன்று. பகைமை என்னும் முள்காட்டினை அழித்து, அங்கு விளைந்த மூங்கிலைப் புரட்சி என்னும் புல்லாங்குழல் ஆக்கி மூச்சுக்காற்றால் பூபாள இசை பாடும் இனிய நாள் இன்று.

இன்பம் தரும் இந்த விடுதலைத் திருநாளைக் கொண்டாட வாய்ப்பளித்த நம் தாய்நாட்டை தமிழால் வணங்குவோம்.

### நூல் வெளி



மீ. இராசேந்திரன் என்னும் இயற்பெயரை உடைய மீரா கல்லூரிப் பேராசிரியராகப் பணியாற்றியவர். அன்னம் விடு தூது என்னும் இதழை நடத்தியவர். ஊசிகள், குக்கூ, மூன்றும் ஆறும், வா இந்தப் பக்கம் உள்ளிட்ட பல நூல்களை எழுதியுள்ளார்.

இவர் எழுதிய கோடையும் வசந்தமும் என்னும் நூலிலிருந்து ஒரு கவிதை இங்குத் தரப்பட்டுள்ளது.

## கற்பவை கற்றபின்

நீங்கள் விரும்பும் விழா ஒன்றனைப் பற்றி ஒரு பத்தி அளவில் எழுதுக.

# மதிப்பீடு

சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. வானில் முழுநிலவு அழகாகத் ___________ அளித்தது.

   அ) தயவு　　ஆ) தரிசனம்　　இ) துணிவு　　ஈ) தயக்கம்

2. இந்த _________ முழுவதும் போற்றும்படி வாழ்வதே சிறந்த வாழ்வு.

   அ) வையம்　　ஆ) வானம்　　இ) ஆழி　　ஈ) கானகம்

3. 'சீவனில்லாமல்' என்னும் சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது _____.

   அ) சீவ + நில்லாமல்　　ஆ) சீவன் + நில்லாமல்

   இ) சீவன் + இல்லாமல்　　ஈ) சீவ + இல்லாமல்

4. 'விலங்கொடித்து' என்னும் சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது _____.

   அ) விலம் + கொடித்து　　ஆ) விலம் + ஒடித்து

   இ) விலன் + ஒடித்து　　ஈ) விலங்கு + ஒடித்து

5. காட்டை + எரித்து என்பதனைச் சேர்த்தெழுதக் கிடைக்கும் சொல் _____.

   அ) காட்டைஎரித்து　　ஆ) காட்டையெரித்து

   இ) காடுஎரித்து　　ஈ) காடுயெரித்து

6. இதம் + தரும் என்பதனைச் சேர்த்தெழுதக் கிடைக்கும் சொல் _____.

   அ) இதந்தரும்　　ஆ) இதம்தரும்　　இ) இதத்தரும்　　ஈ) இதைத்தரும்

குறுவினா

1. பகத்சிங் கண்ட கனவு யாது?
2. இருண்ட ஆட்சி என எதனை மீரா குறிப்பிடுகிறார்?

சிறுவினா

இந்தியத்தாய் எவ்வாறு காட்சியளிக்கிறாள்?

சிந்தனை வினா

நாட்டுப்பற்றை வளர்க்கும் வகையில் விடுதலை நாளை எவ்வாறு கொண்டாடலாம்?

உரைநடை உலகம்

இயல் ஏழு

# பாரத ரத்னா எம்.ஜி. இராமச்சந்திரன்

TZHXZ8

**நுழையும்முன்**

*தான் எடுத்துக்கொண்ட செயலில் வெற்றியாளராக விளங்கிட வேண்டும் என்கிற எண்ணம் எல்லோருக்கும் உண்டு. எண்ணியதை எண்ணியவாறே செய்து முடிக்கும் வல்லமை சிலருக்கே வாய்க்கும். அத்தகையோர் மக்கள் மனத்தில் தலைவர்களாக நின்று வாழ்கிறார்கள். அத்தகைய தலைவரைப் பற்றி அறிந்து கொள்வோம்.*

கும்பகோணத்தில் உள்ள ஆனையடிப் பள்ளி. நண்பகல் உணவு இடைவேளையின்போது மாணவர்கள் ஆங்காங்கே அமர்ந்து தாம் கொண்டுவந்த உணவை உண்கின்றனர். உடன்பிறந்தோராகிய இரண்டு சிறுவர்கள் பசியுடன் ஓர் ஓரமாக அமர்ந்திருக்கின்றனர்.

"பசிக்குது அண்ணா" என்கிறான் தம்பி.

"கொஞ்சம் பொறுத்துக்கோ தம்பி. மாலை வீட்டுக்குப் போனதும் சாப்பிடலாம்" என்கிறான் அண்ணன்.

"அம்மா ஏன் நமக்குச் சாப்பாடு கொடுத்தனுப்புறதில்ல?"

"வீட்டுவேலை செஞ்சு அம்மா கொண்டுவருகிற பணம் நமக்கு ஒருவேளை சாப்பாட்டுக்குத்தான் போதுமானதா இருக்கு. அம்மா என்ன செய்வாங்க பாவம். வீட்டுவேலைக்குப் போயிருக்கிற அம்மா, மாலையில் எப்படியும் அரிசியோடு வருவாங்க. நமக்கு ஏதாவது உணவு சமைச்சுத் தருவாங்க" என்று தம்பியை அணைத்துக்கொண்டு ஆறுதல் கூறுகிறான் அண்ணன்.

இருவரும் பசியுடன் பாடம் படிக்கின்றனர்.

காலம் வேகமாகச் சுழல்கிறது.

அந்தச் சிறுவர்களில் தம்பி இப்போது தமிழ்நாட்டின் முதலமைச்சர். பசியால் வாடிய தமது இளமைக்கால நினைவுகள் இப்போதும் மறையாமல் அவரது உள்ளத்தில் சுற்றிக்கொண்டே இருக்கின்றன. தமிழ்நாட்டுக் குழந்தைகள் பசியறியாமல் படிக்கவேண்டும் என்று விரும்புகிறார் அவர். எனவே, "காமராசர் காலத்தில் தொடங்கப்பட்ட மதிய உணவுத்திட்டத்தை விரிவுபடுத்தப்போகிறேன். இனிமேல் பள்ளிக் குழந்தைகளுக்குக் காய்கறிகள், பருப்பு முதலியவற்றுடன்கூடிய உணவு வழங்கப்படும். இந்தத் திட்டம் இனி சத்துணவுத் திட்டம் என அழைக்கப்படும்" என்று அறிவிக்கிறார்.

இளமைக்காலத்தில் பசியின் கொடுமையால் வாடியதை மறவாமல், தாம் ஆட்சிக்கு வந்ததும் பள்ளிக்குழந்தைகளின் பசியைத் தீர்க்கத் திட்டம் தீட்டியஅந்த உயர்ந்த மனிதர்தாம் புரட்சித்தலைவர் எம்.ஜி.ஆர். என்று அனைவராலும் அழைக்கப்படும் எம்.ஜி.இராமச்சந்திரன்.



### புரட்சி நடிகர்

எம்.ஜி.ஆர். வறுமையின் கொடுமையை நன்கு உணர்ந்தவர். வறுமை காரணமாகவே அவரும் அவருடைய அண்ணனும் பள்ளிப்படிப்பைத் தொடரமுடியாமல் நாடகக்குழுவில் சேர்ந்தனர். நாடகங்களில் சிறுசிறு வேடங்களில் நடிக்கத் தொடங்கினர். எம்.ஜி.ஆர். தமது நடிப்பாற்றலால் நாடகக்குழுவின் முதன்மை நடிகராக உயர்ந்தார்.

அதன்பின்னர் எம்.ஜி.ஆர். திரைப்படத்துறையில் நுழைந்தார். நாடகத்துறையைப் போலவே, திரைத்துறையிலும் முதலில் சிறுசிறு வேடங்களில் நடிக்கத் தொடங்கி விரைவிலேயே கதாநாயகனாக உயர்ந்தார். எம்.ஜி.ஆர். தாம் ஏற்று நடித்த கதைமாந்தர்கள் மூலம் ஏழை, எளியோர், உழவர்கள், தொழிலாளர்கள் ஆகியோரின் முன்னேற்றத்துக்கு உரிய கருத்துகளை எடுத்துரைத்தார். எனவே, மக்கள் அவரைப் புரட்சி நடிகர், மக்கள் திலகம் என்றெல்லாம் போற்றினர். மேலும் இந்திய அரசு மிகச் சிறந்த நடிகருக்கு வழங்கும் பாரத் பட்டத்தை அவருக்கு வழங்கிச் சிறப்பித்தது. திரைத்துறையில் நடிகர், தயாரிப்பாளர், இயக்குநர் எனப் பன்முகத் திறமை கொண்டு விளங்கினார்.

#### தெரிந்து தெளிவோம்

கேரளாவைச் சேர்ந்தவர்களாகிய எம்.ஜி.ஆரின் பெற்றோர் குடும்பத்துடன் இலங்கைக்குக் குடிபெயர்ந்தனர். இலங்கையில் உள்ள கண்டியில் கி.பி. (பொ. ஆ.) 1917 சனவரித் திங்கள் பதினேழாம் நாள் கோபாலன் – சத்தியபாமா இணையருக்கு ஐந்தாம் மகனாக எம்.ஜி.ஆர். பிறந்தார். இவர் குழந்தையாக இருக்கும்போதே தந்தையை இழந்தார். இதனால் எம்.ஜி.ஆரின் தாயார் குழந்தைகளுடன் தமிழ்நாட்டுக்கு வந்து, கும்பகோணத்தில் குடியேறினார்.

எம்.ஜி.ஆர். திரைப்படங்களில் தாம் பாடி நடித்த பாடல்கள் மூலம் உயர்ந்த கருத்துகளை மக்களிடம் விதைத்தார்.

*மாபெரும் சபைதனில் நீ நடந்தால்*
*உனக்கு மாலைகள் விழவேண்டும் – ஒரு*
*மாற்றுக் குறையாத மன்னவன் இவன் என்று*
*போற்றிப் புகழ வேண்டும்*

போன்ற பாடல்கள் மூலம் மனிதன் எத்தகைய நோக்கத்துடன் வாழவேண்டும் என்பதை எடுத்துரைத்தார்.

வாழ்வில் உயர்நிலையை அடைந்த பின்னரும் எளிமையாக வாழவேண்டும் என்பதை,

*பதவி வரும்போது பணிவு வர வேண்டும்!*

*துணிவு வர வேண்டும் தோழா!*

என்னும் பாடல் வரிகள் மூலம் எடுத்துரைத்தார். மேலும் அப்பாடல் வரிகளுக்குத் தாமே இலக்கணமாகவும் திகழ்ந்தார்.

### பொன்மனச் செம்மல்

எம்.ஜி.ஆர். தாம் ஈட்டிய செல்வத்தை மற்றவர்களுக்குக் கொடுத்து மகிழ்ந்தவர். புயல், வெள்ளம் போன்ற இயற்கைச் சீற்றங்கள் நிகழ்ந்த போதெல்லாம், பாதிக்கப்பட்டவர்களுக்கு உணவு, உடை வழங்கி அவர்களின் துயர் துடைக்க இவரின் கொடைக்கரங்கள் நீண்டன.



எம்.ஜி.ஆர். ஒருமுறை வெளியூரிலிருந்து மகிழ்வுந்தில் சென்னைக்கு வந்துகொண்டிருந்தார். வழியில் மூதாட்டி ஒருவரும் பத்து வயதுச் சிறுமி ஒருத்தியும் தலையில் புல்கட்டுகளைச் சுமந்தவாறு கால்களில் காலணிகள் இல்லாமல் சென்றுகொண்டிருந்தனர். சாலையின் சூடு பொறுக்கமுடியாமல் அவர்கள் சாலையோர மரநிழலில் நிற்பதும் ஓடுவதுமாக இருந்ததைக் கண்ட எம்.ஜி.ஆர். உடனே தமது மகிழ்வுந்தை நிறுத்தச்செய்தார். உடன்வந்த தமது துணைவியாரது காலணியையும் உறவினரான பெண்ணின் காலணியையும் அவர்களிடம் கொடுக்கச்செய்தார். மேலும் அவர்களுக்குப் பணமும் கொடுத்துவிட்டுப் பயணத்தைத் தொடர்ந்தார்.

ஏழை எளியவர்கள் காலில் காலணிகூட இல்லாமல் நடந்துசெல்லும் இந்நிகழ்ச்சி அவரது மனத்தில் ஆழமாகப் பதிந்திருக்கவேண்டும். அதனால்தான் பின்னர்ப் பள்ளிக் குழந்தைகளுக்குக் காலணிகள் வழங்கும் திட்டத்தை நடைமுறைப்படுத்தினார்.

எம்.ஜி.ஆர். ஒருமுறை படப்பிடிப்பிற்காகக் காஷ்மீருக்குச் சென்றிருந்தார். அங்கிருந்த இந்தியப் படைவீரர் நலச்சங்கத்தினர் தமது

#### தெரிந்து தெளிவோம்

சென்னைப் பல்கலைக் கழகம் எம்.ஜி.ஆரின் பணிகளைப் பாராட்டி டாக்டர்பட்டம் வழங்கியது. தமிழக அரசு அவர் நினைவைப் போற்றும் வகையில் எம்.ஜி.ஆர். மருத்துவப் பல்கலைக் கழகத்தை நிறுவியுள்ளது; சென்னைக் கடற்கரையில் இவருக்கு எழிலார்ந்த நினைவிடம் ஒன்றையும் அமைத்துள்ளது. அவரது இறப்புக்குப்பின் இந்திய அரசு, மிக உயரிய பாரத ரத்னா (இந்திய மாமணி) விருதினை 1988ஆம் ஆண்டு வழங்கிப் பெருமைப்படுத்தியது.

சங்க விழாவிற்கு எம்.ஜி.ஆர். வருகைதர வேண்டும் எனக் கேட்டுக்கொண்டனர். அதற்கு ஒப்புக்கொண்ட அவர் அச்சங்கத்திற்கு நன்கொடை வழங்க விரும்பினார். ஆனால், அப்பொழுது அவரிடம் பணம் இல்லை. எனவே, அங்குத் தங்கியிருந்த தமிழ்நாட்டுத் தொழிலதிபர் ஒருவரிடம் பெருந்தொகையைக் கடனாகப் பெற்று அதனை நன்கொடையாக வழங்கினார். சென்னை திரும்பியதும் முதல்வேலையாக அத்தொகையைத் திருப்பிக்கொடுத்தார்.

இவ்வாறு பிறர் வியக்கத்தக்க வகையில் தம் செல்வத்தை வாரி வழங்கியமையால்தான் அவரைப் பொன்மனச் செம்மல் என்று மக்கள் அன்புடன் அழைக்கின்றனர்.

### சமூக நலத்திட்டங்கள்

எம்.ஜி.ஆர். தமிழக முதலமைச்சராக இருந்தபோது ஏழை எளிய மக்களின் வாழ்க்கைத்தரம் உயர அரும்பாடுபட்டார். உழவர்களின் கடன் தள்ளுபடி, ஏழைகளுக்கான வீட்டு வசதித்திட்டம், ஆதரவற்ற மகளிருக்குத் திருமண உதவித்திட்டம், தாய்சேய் நல இல்லங்கள், பற்பொடி வழங்கும் திட்டம், நலிவடைந்த பிரிவைச் சேர்ந்த மாணவர்களுக்குப் பாடநூல் வழங்கும் திட்டம், முதியோருக்கு உதவித்தொகை வழங்கும் திட்டம், வேலைவாய்ப்பு அற்றவர்களுக்கு உதவித்தொகை வழங்கும் திட்டம் போன்ற பல்வேறு திட்டங்களைச் செயல்படுத்திப் புகழ் பெற்றார்.

### தமிழ் வளர்ச்சிப் பணிகள்

எம்.ஜி.ஆர். தமிழ் வளர்ச்சிக்காகப் பல்வேறு பணிகளை ஆற்றினார். தந்தை பெரியார் உருவாக்கிய எழுத்துச் சீர்திருத்தங்களுள் சிலவற்றை நடைமுறைப்படுத்தித் தமிழ் எழுத்துமுறையை எளிமைப்படுத்தினார். மதுரை மாநகரில் ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டைச் சிறப்பாக நடத்தினார். தஞ்சையில் ஆயிரம் ஏக்கர் பரப்பளவில் தமிழ்ப் பல்கலைக்கழகத்தைத் தோற்றுவித்தார்.

இத்தகைய தமது செயல்பாடுகள்மூலம் அனைவரையும் கவர்ந்த எம்.ஜி.ஆர். புரட்சி நடிகராகப் பெயர்பெற்று, பொன்மனச் செம்மலாக வளர்ந்து,மக்கள் திலகமாக உயர்ந்து புரட்சித்தலைவராக மக்கள் மனத்தில் நீங்கா இடம்பெற்று நிலைத்து வாழ்கிறார்.

#### தெரிந்து தெளிவோம்

எம்.ஜி.ஆர். நூற்றாண்டு விழாவை ஒட்டி (2017 – 2018) தமிழக அரசால் சென்னையிலும் மதுரையிலும் பேருந்து நிலையங்களுக்கு எம்.ஜி.ஆர். பெயர் சூட்டப்பட்டுள்ளது.

இந்திய அரசு, சென்னை சென்ட்ரல் ரயில் நிலையத்திற்குப் புரட்சித் தலைவர் டாக்டர். எம்.ஜி. இராமச்சந்திரன் மத்திய ரயில் நிலையம் எனப் பெயர் மாற்றம் செய்து, அவரைப் பெருமைப்படுத்தியுள்ளது.

## கற்பவை கற்றபின்

1. தமிழக முதலமைச்சர்களின் பெயர்களைப் பட்டியலிடுக.
2. எம்.ஜி.ஆர். நடித்த திரைப்படங்களில் உள்ள சமூகநலன் சார்ந்த பாடல்களைத் தொகுத்து எழுதுக.

## மதிப்பீடு

சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக

1. எம்.ஜி.ஆர் _____ என்னும் ஊரில் கல்வி பயின்றார்.

   அ) கண்டி ஆ) கும்பகோணம் இ) சென்னை ஈ) மதுரை

2. எம்.ஜி.ஆர். படிப்பைத் தொடர முடியாமைக்குக் காரணம் _____ .

   அ) நடிப்பு ஆர்வம் ஆ) பள்ளி இல்லாமை
   இ) குடும்ப வறுமை ஈ)படிப்பில் ஆர்வமில்லாமை

3. இந்திய அரசு சிறந்த நடிகருக்கான _____ எனும் பட்டத்தை எம்.ஜி.ஆருக்கு வழங்கியது.

   அ) புரட்சித் தலைவர் ஆ) பாரத் இ) பாரத மாமணி ஈ) புரட்சி நடிகர்

4. ஐந்தாம் உலகத் தமிழ்மாநாடு நடைபெற்ற இடம் _____

   அ) திருச்சி ஆ) சென்னை இ) மதுரை ஈ) கோவை

5. எம்.ஜி.ஆருக்கு அழியாத புகழைத் தேடித் தந்த திட்டம் _____.

   அ) மதிய உணவுத்திட்டம் ஆ) வீட்டு வசதித் திட்டம்
   இ) மகளிர் நலன் திட்டம் ஈ) இலவசக் காலணித் திட்டம்

குறுவினா

1. எம்.ஜி.ஆர். நாடகத்துறையில் ஈடுபடக் காரணம் என்ன?
2. திரைத்துறையில் எம்.ஜி.ஆரின் பன்முகத் திறமைகள் யாவை?
3. எம்.ஜி.ஆரின் சமூக நலத்திட்டங்களுள் நான்கனை எழுதுக.

சிறுவினா

1. பள்ளிக் குழந்தைகளுக்குக் காலணி வழங்கும் திட்டத்துக்கு அடிப்படையாக அமைந்த நிகழ்வை எழுதுக.
2. தமிழ்மொழியின் வளர்ச்சிக்காக எம்.ஜி.ஆர். ஆற்றிய பணிகள் யாவை?

நெடுவினா

எம்.ஜி.ஆரின் பண்புநலன்களை விளக்கி எழுதுக..

சிந்தனை வினா

சிறந்த அரசியல் தலைவருக்கு இருக்க வேண்டிய பண்புகளாக நீங்கள் கருதுவன யாவை?

விரிவானம்

இயல் ஏழு

# அறிவுசால் ஔவையார்

ISQMDZ

நுழையும்முன்

கல்வி அறிவில் சிறந்த அறவோரையும் நல்லொழுக்கம் மிக்க மக்களையும் கொண்டது நம் தமிழ்நாடு. இவர்களைப் போற்றிப் பாதுகாக்க வேண்டியது மன்னர்களின் கடமையாகக் கருதப்பட்டது. அறிவிற் சிறந்த புலவர்கள் மன்னர்களுக்குத் தேவையான அறிவுரைகளை வழங்கி நாட்டைப் பாதுகாக்க உதவினர். அவ்வாறு இரண்டு நாடுகளுக்கு இடையே நடைபெற இருந்த போரை ஔவையார் தடுத்த நிகழ்வை நாடகமாகப் படித்துச் சுவைப்போம்.

**காட்சி – 1**

**இடம் : அதியமான் அரண்மனை**

**நாடக மாந்தர்கள் : அதியமான், ஔவையார், அமைச்சர்.**



ஔவையார்: நாட்டுமக்கள் நலனையே நாளெல்லாம் நினைத்து நல்லாட்சி செய்யும் அதியமான் நெடுமான் அஞ்சியே வணக்கம்.

அதியமான்: அருந்தமிழ்க் கவிதைகளால் அனைவரையும் கவர்ந்த ஔவையே வாருங்கள்! வாருங்கள்! வணக்கம்.

ஔவையார்: ஊர் ஊராகச் சென்று மக்களையும் மன்னர்களையும் கவிதையால் மகிழ்வித்து வந்த என்னை, உன் அன்பினால் கட்டிப்போட்டுவிட்டாய். நானும் நீண்டகாலமாக உன் அரண்மனையிலேயே தங்கிவிட்டேன்.

அதியமான்: நீங்கள் என் அரண்மனையில் தங்கியிருப்பது எனக்குக் கிடைத்த பெரும்பேறு.

ஔவையார்: அதெல்லாம் இருக்கட்டும். காலையிலிருந்து உன்னை அரண்மனையில் காணவில்லையே, எங்கே சென்றிருந்தாய்?

அதியமான்: காட்டுவளத்தைக் கண்டுமகிழ்ந்து நீண்ட நாள்கள் ஆகிவிட்டன. அதனால்தான் இன்று நம் அமைச்சரோடும் வீரர்கள் சிலரோடும் காட்டுக்குச் சென்றிருந்தேன். அங்கே

இந்தக் கனியைப் பறித்தேன். இதைச் சாப்பிட்டுப் பார்த்துச் சுவை எப்படி இருக்கிறது என்று சொல்லுங்கள் தாயே.

ஔவையார்: நீ தரும் கனி என்றால் அது சுவையாகத்தான் இருக்கும். பல கடல்களுக்கு அப்பால் எங்கோ தொலைவில் இருக்கும் ஒரு நாட்டிலிருந்து இந்தத் தமிழ்நாட்டிற்குக் கரும்பைக் கொண்டு வந்தவர்கள் உனது முன்னோர்கள்தானே? இனிப்புக்கும் உங்கள் குலத்திற்கும் தொடர்பு உண்டு அல்லவா? அதனால் நீ கொடுக்கும் கனியும் இனிக்கத்தானே செய்யும்?

அதியமான்: அந்தக் கரும்பைவிட இனிக்கிறது தங்கள் பேச்சு. சரி, இதோ இந்தக்கனியைச் சுவைத்துப் பாருங்கள்.

(அதியமான் நெல்லிக்கனியை ஔவையாரிடம் தருகிறான். ஔவையார் அதனை வாயிலிட்டுச் சுவைக்கிறார்.)

ஔவையார்: அடடா! என்ன சுவை! என்ன சுவை! இவ்வளவு சுவையுள்ள கனியை நான் இதுவரை உண்டதே இல்லை. என்ன கனி இது?

அதியமான்: இது நெல்லிக்கனியின் ஒரு வகை.

அமைச்சர்: தாயே, நமது அரசர் மிகவும் எளிதாகக் கூறிவிட்டார். இஃது எங்கும் எளிதாகக் கிடைக்கும் கனியன்று. கிடைப்பதற்கு அரிதான நெல்லிக்கனி இது. எப்போதாவது ஒருமுறைதான் காய்த்துப் பழுக்கும். இன்று நாங்கள் காட்டுப்பகுதிக்குச் சென்றிருந்தபோது ஒரு மலையுச்சியில் இருந்த கருநெல்லி மரத்தில் இக்கனி பழுத்திருந்தது. அந்த மரத்தில் நமது வீரர்களால் ஏறமுடியவில்லை. பிறகு நமது அரசரே முயன்று மரத்தில் ஏறி இந்தக் கனியைப் பறித்தார்.

ஔவையார்: (வியப்புடன்) என்ன, அதியமானே மலையுச்சியில் இருந்த மரத்தில் ஏறி இதனைப் பறித்தானா?

அமைச்சர்: அது மட்டுமன்று. இக்கனியை உண்டவர்கள் நோய்நொடியின்றி நீண்டகாலம் வாழ்வார்கள் என்று பெரியோர் கூறுவர்.

ஔவையார்: அதியமானே! என்ன செயல் செய்துவிட்டாய்? நாட்டைக் காக்கும் பொறுப்பை உடைய நீ இதனை உண்ணாமல் எனக்குக் கொடுத்துவிட்டாயே. முன்பே தெரிந்திருந்தால் இதனை நான் உண்ணாமல் உன்னையே சாப்பிட வைத்திருப்பேனே.

அதியமான்: என்னைப்போன்ற ஓர் அரசன் இறந்துபோனால் வேறு ஒருவர் அரசராகிவிடுவார். ஆனால் உங்களைப் போன்ற அறிவிற்சிறந்த புலவர் ஒருவர் மறைந்தால் அந்த இழப்பை யாராலும் ஈடுசெய்ய முடியாது. அதனால்தான் நான் எதுவும் கூறாமல் நெல்லிக்கனியை உங்களை உண்ணச்செய்தேன்.

ஔவையார்: அதியமானே! தமிழின்மீது நீ கொண்டுள்ள பற்று என் உள்ளத்தை உருகச்

**தெரிந்து தெளிவோம்**

*சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது*
*ஆதல் நின்னகத்து அடக்கிச்*
*சாதல் நீங்க எமக்கீந் தனையே.*

*– ஔவையார்*

இயல் ஒன்பது

கவிதைப்பேழை

# உயிர்க்குணங்கள்

5LT4LS

நுழையும்முன்

ஒவ்வொரு மனிதனிடமும் பலவகையான பண்புகள் குவிந்து கிடக்கின்றன. அவற்றுள் நற்பண்புகளும் உண்டு; தீய பண்புகளும் உண்டு. தீயனவற்றை விலக்கி, நல்லனவற்றை வளர்த்து வாழ்வாங்கு வாழ்வதே மனிதனின் கடமையாகும். மனிதனுக்குள் நிறைந்திருக்கும் பண்புகளைக் கன்னிப்பாவை என்னும் நூலின் பாடல்வழி அறிவோம்.

*அறிவுஅருள் ஆசைஅச்சம்*
*அன்புஇரக்கம் வெகுளிநாணம்*
*நிறைஅழுக்காறு எளிமை*
*நினைவுதுணிவு இன்பதுன்பம்*
*பொறைமதம் கடைப்பிடிகள்*
*பொச்சாப்பு மானம்அறம்*
*வெறுப்புஉவப்பு ஊக்கம்மையல்*
*வென்றிஇகல் இளமைமூப்பு*
*மறவிஓர்ப்பு இன்னபிற*
*மன்னும்உயிர்க் குணங்கள்எல்லாம்*
*குறைவறப் பெற்றவள்நீ*
*குலமாதே பெண்ணரசி*
*இறைமகன் வந்திருக்க*
*இன்னும்நீ உறங்குதியோ*
*புறப்படு புன்னகைநீ*
*பூத்தேலோ ரெம்பாவாய்!*

– இறையரசன்

### சொல்லும் பொருளும்

| | | | |
|---|---|---|---|
| நிறை – மேன்மை | | அழுக்காறு – பொறாமை | |
| பொறை – பொறுமை | | மதம் – கொள்கை | |
| பொச்சாப்பு – சோர்வு | | இகல் – பகை | |
| மையல் – விருப்பம் | | மன்னும் – நிலைபெற்ற | |
| ஓர்ப்பு – ஆராய்ந்து தெளிதல் | | | |



8th Std Tamil _20-12-2019.indd 192 03-01-2020 19:34:56

### பாடலின் பொருள்

அறிவு, கருணை, ஆசை, அச்சம், அன்பு, இரக்கம், சினம், நாணம், மேன்மை, பொறாமை, எளிமை, நினைவு, துணிவு, இன்பம், துன்பம், பொறுமை, கொள்கையைப் பின்பற்றுதல், சோர்வு, மானம், அறம், வெறுப்பு, மகிழ்ச்சி, ஊக்கம், விருப்பம், வெற்றி, பகை, இளமை, முதுமை, மறதி, ஆராய்ந்து தெளிதல் போன்றவை இவ்வுலகில் நிலைபெற்ற மனிதர்களிடம் உள்ள பண்புகளாகும். இவற்றையுடைய மனிதகுலத்தில் பிறந்த பெண்ணே! நற்பண்புகள் எவையென அறிவுறுத்த இறைவனின் திருக்குமாரன் வந்தபின்னும் நீ உறங்கலாமா? உண்மையை உணர, புன்னகை பூத்து நீ புறப்படுவாயாக!

### தெரிந்து தெளிவோம் — பாவை நூல்கள்

மார்கழித் திங்களில் பொழுது விடியும் முன்பே பெண்கள் துயிலெழுந்து, பிற பெண்களையும் எழுப்பிக்கொண்டு, ஆற்றுக்குச் சென்று நீராடி, இறைவனை வழிபடும் வழக்கம் உண்டு. இதனைப் பாவை நோன்பு என்பர். அவ்வாறு திருமாலை வழிபடச் செல்லும் பெண்கள், பிற பெண்களை எழுப்புவதாக ஆண்டாள் பாடிய நூலே திருப்பாவை.

இதேபோலச் சிவபெருமானை வழிபடச் செல்லும் பெண்கள், பிற பெண்களை எழுப்புவதாகப் பாடப்பட்ட நூல் திருவெம்பாவை. இதனை இயற்றியவர் மாணிக்கவாசகர்.



### நூல் வெளி

இறையரசனின் இயற்பெயர் சே. சேசுராசா என்பதாகும். கல்லூரி ஒன்றில் தமிழ்ப்பேராசிரியராகப் பணிபுரிந்தவர். ஆண்டாள் இயற்றிய திருப்பாவையைத் தழுவி, கன்னிப்பாவை என்னும் நூலை எழுதியுள்ளார். அந்நூலில் இருந்து ஒரு பாடல் இங்குத் தரப்பட்டுள்ளது.

## கற்பவை கற்றபின்

*பின்வரும் திருப்பாவைப் பாடலைப் படித்து மகிழ்க.*

உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள்
　　செழுங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய் கூம்பின் காண்;
செங்கல் பொடிக்கூறை வெண்பல் தவத்தவர்,
　　தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்றார்
எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்
　　நங்காய்! எழுந்திராய், நாணாதாய்! நாவுடையாய்!
சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்
　　பங்கயக் கண்ணானைப் பாடேலோ ரெம்பாவாய். பாடல்–14

## மதிப்பீடு

சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. அடுத்தவர் வாழ்வைக் கண்டு _____ கொள்ளக்கூடாது.

   அ) உவகை ஆ) நிறை இ) அழுக்காறு ஈ) இன்பம்

2. நாம் நீக்கவேண்டியவற்றுள் ஒன்று _____ .

   அ) பொச்சாப்பு ஆ) துணிவு இ) மானம் ஈ) எளிமை

3. 'இன்பதுன்பம்' என்னும் சொல்லைப் பிரித்து எழுதக்கிடைப்பது _____.

   அ) இன்பம் + துன்பு ஆ) இன்பம் + துன்பம்

   இ) இன்ப + அன்பம் ஈ) இன்ப + அன்பு

4. குணங்கள் + எல்லாம் என்பதனைச் சேர்த்தெழுதக் கிடைக்கும் சொல் _____.

   அ) குணங்கள்எல்லாம் ஆ) குணமெல்லாம்

   இ) குணங்களில்லாம் ஈ) குணங்களெல்லாம்

பொருத்துக

1. நிறை – பொறுமை
2. பொறை – விருப்பம்
3. மதம் – மேன்மை
4. மையல் – கொள்கை

குறுவினா

1. மனிதர்களின் பொது இயல்பாகக் கன்னிப்பாவை நூல் கூறுவது யாது?
2. மனிதர்களிடம் உள்ள பண்புகளாகக் கன்னிப்பாவை நூல் கூறுவனவற்றுள் நற்பண்புகள் யாவை?

சிறுவினா

மனிதர்களிடம் குவிந்திருக்கும் பண்புகளாகக் கன்னிப்பாவை நூல் கூறுவன யாவை?

சிந்தனை வினா

மனிதர்கள் வளர்க்கவேண்டிய பண்புகளாகவும் விலக்கவேண்டிய பண்புகளாகவும் நீங்கள் கருதுவன யாவை?

கவிதைப்பேழை

# இயல் ஒன்பது

# இளைய தோழனுக்கு

JMIGEZ

**நுழையும்முன்**

மனித உடலில் இரண்டு கைகள் உண்டு. உள்ளத்தில் இருக்கவேண்டிய 'கை' ஒன்று உண்டு. அதுவே நம்பிக்கை. இது மக்கள்அனைவருக்குள்ளும் இருந்தாலும், அதன் ஆற்றலை உணர்ந்து, வாழ்வுக்கு உறுதுணையாக்கி வாழ்வில் வென்றவர் சிலரே. உங்களுக்குள் துவண்டிருக்கும் நம்பிக்கையைத் தட்டி எழுப்பும் கவிதை ஒன்றை அறிவோம்.

*நட<br>நாளைமட்டுமல்ல<br>இன்றும்<br>நம்முடையதுதான்*

*நட<br>பாதங்கள்<br>நடக்கத்<br>தயாராய் இருந்தால்<br>பாதைகள்<br>மறுப்புச் சொல்லப்<br>போவதில்லை.*

*நெய்யாய்த் திரியாய்<br>நீயே மாறினால்<br>தோல்வியும் உனக்கொரு<br>தூண்டுகோலாகும்!<br>வெற்றி<br>உனைச்சுற்றி<br>வெளிச்சவிதை<br>விதைக்கும்!*

*கவலைகளைத்<br>தூக்கிக்கொண்டு<br>திரியாதே ...<br>அவை<br>கைக்குழந்தைகளல்ல..*

**ஓடிவந்து கைகுலுக்க<br>ஒருவருமில்லையா?<br>உன்னுடன் நீயே<br>கைகுலுக்கிக் கொள்!*

*தூங்கி விழுந்தால்<br>பூமி உனக்குப்<br>படுக்கையாகிறது.<br>விழித்து நடந்தால்<br>அதுவே உனக்குப்<br>பாதையாகிறது!*

*நீ<br>விழித்தெழும் திசையே<br>பூமிக்குக் கிழக்கு!<br>உன்<br>விரல்களில் ஒளிரும்<br>சூரியவிளக்கு!*

*நட!<br>நாளைமட்டுமல்ல<br>இன்றும்<br>நம்முடையதுதான்<br>நட! **

– மு.மேத்தா

### பாடலின் பொருள்

செயல்படத்தொடங்கு! நாளை மட்டுமல்ல, இன்றும் நமது நாள்தான். உனது பாதங்கள் நடக்கத் தயாராக இருந்தால், நீ செல்லும் பாதைகள் உன்னை எதிர்க்கப்போவதில்லை.

உலகிற்கு ஒளியேற்ற எண்ணெயாய், திரியாய் உன்னையே நீ மாற்றினால் தோல்வியும் உன் உயர்விற்குத் தூண்டுகோலாகும்! வெற்றி உன் அங்கமாகி, வாழ்வில் ஒளியேற்றும்.

கவலைகளை உள்ளத்தில் தேங்கவிட வேண்டாம். உன்னைப் பாராட்டிப் புத்துணர்வூட்ட ஒருவரும் இல்லையென்று வருந்தாதே! உன்னைவிட ஒருவரும் உன்னைப் பாராட்டிப் புத்துணர்வூட்ட முடியாது.

நீ சோர்ந்து தளர்ந்தால் பூமி உன் நோய்ப்படுக்கையாகும். நீ கிளர்ந்து எழுந்தால் அதுவே உனக்குப் பாதையாகும்.

நீ செயல்படப் புறப்படும் திசைதான் இனி இந்தப் பூமிக்குக் கிழக்கு. கதிரவன் உன் விரல்களில் விளக்காக ஒளிவீசும். செயல்படத் தொடங்கு! நாளை மட்டுமல்ல, இன்றும் நமது நாள்தான்.

### நூல் வெளி

வானம்பாடி இயக்கக் கவிஞர்களுள் குறிப்பிடத்தக்கவர் மு. மேத்தா. புதுக்கவிதையைப் பரவலாக்கிய முன்னோடிகளுள் ஒருவராக இவரைப் போற்றுவர்; கண்ணீர்ப் பூக்கள், ஊர்வலம், சோழநிலா, மகுடநிலா உள்ளிட்ட பல நூல்களையும் திரையிசைப்பாடல்களையும் எழுதியுள்ளார்; கல்லூரிப் பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். இவர் எழுதிய ஆகாயத்துக்கு அடுத்த வீடு என்னும் புதுக்கவிதை நூலுக்குச் சாகித்திய அகாதெமி விருது வழங்கப்பட்டது.

மு. மேத்தா கவிதைகள் என்னும் நூலிலிருந்து ஒரு கவிதை இங்குத் தரப்பட்டுள்ளது.

## கற்பவை கற்றபின்

1. 'தன்னம்பிக்கை' என்னும் தலைப்பில் கவிதை ஒன்றை எழுதி வகுப்பில் பகிர்க.
2. 'நம்பிக்கையே வெற்றி' – என்பதை உணர்த்தும் கதை ஒன்றனைத் தேடி எழுதி வருக.

## மதிப்பீடு

சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. உன்னுடன் நீயே_____கொள்.

அ) சேர்ந்து ஆ) பகை இ) கைகுலுக்கிக் ஈ) நட்பு

2. கவலைகள் _ _ _ _ _ அல்ல

அ) சுமைகள் ஆ) சுவைகள்

இ) துன்பங்கள் ஈ) கைக்குழந்தைகள்

3. 'விழித்தெழும்' என்னும் சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது _ _ _ _ _.

அ) விழி + எழும் ஆ) விழித்து + எழும்

இ) விழி + தெழும் ஈ) விழித் + தெழும்

4. 'போவதில்லை' என்னும் சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது _ _ _ _ _.

அ) போவது + இல்லை ஆ) போ + இல்லை

இ) போவது + தில்லை ஈ) போவது + தில்லை

5. 'படுக்கையாகிறது' என்னும் சொல்லைப் பிரித்து எழுதக் கிடைப்பது _ _ _ _ _.

அ) படுக்கை + யாகிறது ஆ) படுக்கையா + ஆகிறது

இ) படுக்கையா + கிறது ஈ) படுக்கை + ஆகிறது

6. தூக்கி + கொண்டு என்பதனைச் சேர்த்தெழுதக் கிடைக்கும் சொல் _ _ _ _ _.

அ) தூக்கிகொண்டு ஆ) தூக்குக்கொண்டு

இ) தூக்கிக்கொண்டு ஈ) தூக்குகொண்டு

7. விழித்து + எழும் என்பதனைச் சேர்த்தெழுதக் கிடைக்கும் சொல் _ _ _ _ _.

அ) விழியெழும் ஆ) விழித்தெழும்

இ) விழித்தழும் ஈ) விழித்துஎழும்

## குறுவினா

1. கவலைகளைக் கவிஞர் எவ்வாறு உருவகப்படுத்துகிறார்?
2. தோல்வி எப்போது தூண்டுகோலாகும்?

## சிறுவினா

பூமி எப்போது பாதையாகும்?

## சிந்தனை வினா

வாழ்வில் உயர நம்பிக்கையைப் போன்று வேறு என்னென்ன பண்புகள் தேவை என்று நீங்கள் கருதுகிறீர்கள்?

இயல் ஒன்பது

# சட்டமேதை அம்பேத்கர்

நுழையும்முன்

தன்னலமற்ற தலைவர்கள் பலர் இந்திய விடுதலைக்குப் பாடுபட்டனர். அவர்கள் தமது தொண்டினால் மக்களின் மனத்தில் நீங்கா இடம் பெற்றனர். இந்திய மக்களுக்கு அரசியல் விடுதலையோடு, சமூக விடுதலையும் கிடைக்கும்போதுதான் இந்தியா முழுமையான விடுதலைபெற்ற நாடாக இருக்க முடியும் என்று கருதி உழைத்த தலைவர் ஒருவரைப் பற்றி அறிவோம்.

G8UE7P



விடுதலைபெற்ற இந்தியாவின் முதல் சட்ட அமைச்சராகவும் இந்திய அரசியல் சாசனத்தின் தந்தையாகவும் விளங்கியவர் பீமாராவ் ராம்ஜி அம்பேத்கர். இவர் சமூகச் சீர்திருத்தவாதியாக மட்டுமல்லாமல், மிகச்சிறந்த பொருளியல் அறிஞராகவும் அரசியல் தத்துவமேதையாகவும் பகுத்தறிவுச் சிந்தனையாளராகவும் விளங்கினார். சிறந்த எழுத்தாளராகவும் பேச்சாளராகவும் மக்களால் போற்றப்பட்டார்.

## பிறப்பு

அம்பேத்கர் 1891 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 14 ஆம் நாள் ராம்ஜி சக்பால் – பீமாபாய் இணையருக்குப் பதினான்காவது குழந்தையாகப் பிறந்தார். இவரது ஊர் மகாராட்டிர மாநிலத்தில் உள்ள இரத்தினகிரி மாவட்டத்தைச் சேர்ந்த அம்பவாதே என்பதாகும். இவருடைய தந்தை இராணுவப்பள்ளி ஒன்றில் ஆசிரியராகப் பணிபுரிந்து வந்தார்.



8th Std Tamil _20-12-2019.indd 198 03-01-2020 19:34:57

## கல்வி

அம்பேத்கர் சதாராவில் உள்ள பள்ளியில் தமது கல்வியைத் தொடங்கினார். இவர் ஒடுக்கப்பட்ட பிரிவைச் சேர்ந்தவர் என்பதால் பள்ளிப் பருவத்திலேயே பல அவமதிப்புகளுக்கு ஆளானார். மகாதேவ் அம்பேத்கர் என்ற ஆசிரியர், இவர்மீது அன்பும் அக்கறையும் கொண்டவராக விளங்கினார். இதனால், பீமாராவ் சக்பால் அம்பவாதேகர் என்னும் தம் பெயரைப் பீமாராவ் ராம்ஜி அம்பேத்கர் என்று மாற்றிக்கொண்டார்.

1904 ஆம் ஆண்டு, இவருடைய குடும்பம் மும்பைக்குக் குடிபெயர்ந்தது. அங்கு எல்பின்ஸ்டன் உயர்நிலைப்பள்ளியில் சேர்ந்தார். குடும்பத்தில் மிகவும் வறுமை சூழ்ந்த நிலையிலும் கல்வியை விடாமல் தொடர்ந்த அவர், 1907 ஆம் ஆண்டு தமது பள்ளிப்படிப்பை முடித்தார். பிறகு, பரோடா மன்னரின் உதவியுடன் மும்பைப் பல்கலைக்கழகத்தில் படித்து 1912 ஆம் ஆண்டு இளங்கலைப் பட்டம் பெற்றார். சிறிதுகாலம் பரோடா மன்னரின் அரண்மனையில் உயர்அலுவலராகவும் பணியாற்றினார்.

## அமெரிக்காவில் உயர்கல்வி

பரோடா மன்னர் சாயாஜிராவ் உதவியுடன் உயர்கல்வி கற்க அமெரிக்கா சென்றார். கொலம்பியா பல்கலைக்கழகத்தில் சேர்ந்து பொருளாதாரம், அரசியல், தத்துவம், சமூகவியல் ஆகிய பாடங்களைக் கற்றார். 1915 இல் பண்டைக்கால இந்திய வணிகம் என்ற ஆய்விற்காக முதுகலைப் பட்டம் பெற்றார். இந்தியாவில் சாதிகளின் தோற்றமும் வளர்ச்சியும் என்னும் தலைப்பில் ஆய்வுக் கட்டுரை ஒன்றைப் படைத்தளித்தார். அதைச் சிறுபுத்தகமாகவும் வெளியிட்டார். அச்சில் வெளிவந்த அம்பேத்கரின் முதல் நூல் இதுவே. பின்னர் இந்தியாவின் தேசியப்பங்கு வீதம் என்ற ஆய்வுக்காக, கொலம்பியா பல்கலைக்கழகம் அவருக்கு முனைவர் பட்டம் வழங்கியது.

1920 ஆம் ஆண்டு பொருளாதாரப் படிப்பிற்காக இலண்டன் சென்றார். அங்கிருந்த பல நூலகங்களில் தமது பெயரைப் பதிவு செய்துகொண்டார்; நூலகம் திறக்கும் போது முதல்ஆளாக நுழைந்து மூடும்போது கடைசி ஆளாக வெளியேறுவார்; இத்தகைய அயராத உழைப்பின் பயனாக 1921 ஆம் ஆண்டு முதுநிலை அறிவியல் பட்டமும் 1923 ஆம் ஆண்டு ரூபாய் பற்றிய பிரச்சனை என்னும் ஆராய்ச்சிக் கட்டுரைக்காக முனைவர் பட்டமும் பெற்றார்; அதே ஆண்டில் சட்டப் படிப்பில் பாரிஸ்டர் பட்டமும் பெற்றார்.

## சமூகப்பணிகள்

படிப்பை முடித்து இந்தியா திரும்பினார் அம்பேத்கர். இந்தியாவில் நடைபெற்றுக் கொண்டிருந்த ஆங்கிலேய ஆட்சிக்கு எதிரான போராட்டங்களில் தம்மை ஈடுபடுத்திக்கொண்டார். அதுமட்டுமல்லாமல், ஒடுக்கப்பட்ட மக்களுக்கு அதிகாரம் கிடைக்கப் போராட வேண்டும் என்றும் முடிவு செய்தார். 1924 ஆம் ஆண்டு ஒடுக்கப்பட்ட மக்களின் முன்னேற்றத்திற்காக ஒடுக்கப்பட்டோர் நல்வாழ்வுப் பேரவை என்ற அமைப்பை நிறுவினார். இவ்வமைப்பின் மூலம் தாழ்த்தப்பட்ட மக்களின் கல்வி மற்றும்

### தெரிந்து தெளிவோம்

**அம்பேத்கரின் பொன்மொழி**

"நான் வணங்கும் தெய்வங்கள் மூன்று. முதல் தெய்வம் அறிவு; இரண்டாவது தெய்வம் சுயமரியாதை; மூன்றாவது தெய்வம் நன்னடத்தை."

சமுதாய உரிமைக்காகப் போராடினார். 1930 ஆம் ஆண்டு இலண்டனில் நடைபெற்ற வட்டமேசை மாநாட்டில் கலந்துகொள்வதற்காகப் புறப்படும் முன் "என் மக்களுக்கு நியாயமாக என்ன கிடைக்க வேண்டுமோ, அதற்காகப் போராடுவேன்; அதே சமயத்தில் சுயராஜ்ய கோரிக்கைகளை முழு மனத்துடன் ஆதரிப்பேன்" என்று கூறினார்.

### பூனா ஒப்பந்தம்

ஒடுக்கப்பட்டோருக்குத் தனி வாக்குரிமையும் விகிதாச்சாரப் பிரதிநிதித்துவமும் வழங்கப்படவேண்டும் என்று இரண்டாவது வட்டமேசை மாநாட்டில் அம்பேத்கர் வலியுறுத்தினார். இதன் விளைவாக, ஒரு தொகுதியில் பொது வேட்பாளரைத் தேர்ந்தெடுக்க ஒரு வாக்கும் ஒடுக்கப்பட்ட சமூக வேட்பாளரைத் தேர்ந்தெடுக்க ஒரு வாக்கும் அளிக்கும் இரட்டை வாக்குரிமை வழங்கப்பட்டது. ஆனால், இதை ஏற்க மறுத்த காந்தியடிகள் உண்ணாவிரதம் மேற்கொண்டார். இதன் விளைவாக 1931 ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் இருபத்து நான்காம் நாள் காந்தியடிகளும் அம்பேத்கரும் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டனர். அதன்படி ஒடுக்கப்பட்டோருக்குத் தனி வாக்குரிமை என்பதற்குப் பதிலாகப் பொது வாக்கெடுப்பில் தனித்தொகுதி வழங்குவது என முடிவு செய்யப்பட்டது. இந்த ஒப்பந்தமே பூனா ஒப்பந்தம் எனப்பட்டது.

### சுதந்திரத் தொழிலாளர் கட்சி

1935 ஆம் ஆண்டில் மாநில சுயாட்சி வழங்குவதற்கான இந்திய அரசாங்கச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. அதன்படி பொதுத்தேர்தல் நடைபெறும் என்று அறிவிக்கப்பட்டது. ஏழை விவசாயிகள், தொழிலாளர்கள் ஆகியோரின் நலனைப் பாதுகாக்கத் தேர்தலில் போட்டியிட அம்பேத்கர் விரும்பினார்; சுதந்திரத் தொழிலாளர் கட்சியைத் தொடங்கித் தேர்தலில் போட்டியிட்டார். அவர் வெற்றி பெற்றதுடன் அவரின் கட்சி வேட்பாளர்கள் பதினைந்து பேரும் வெற்றிபெற்றனர்.

### தீண்டாமைக்கு எதிராக அம்பேத்கர்

அம்பேத்கர் இந்தியச் சமூக அமைப்பில் நிலவிய சாதியமைப்பையும் தீண்டாமைக் கொடுமைகளையும் எதிர்த்துத் தீவிரமாகப் போராடினார். ஒடுக்கப்பட்ட பாரதம் என்னும் இதழை 1927 ஆம் ஆண்டு துவங்கினார். சமத்துவச் சமுதாயத்தை அமைக்கும் நோக்கில் இவர் சமாஜ் சமாத சங்கம் என்னும் அமைப்பை உருவாக்கினார்; 1930 ஆம் ஆண்டு நாசிக் கோயில் நுழைவுப் போராட்டத்தினை நடத்தி வெற்றி கண்டார்.

### அரசியல் அமைப்பில் அம்பேத்கரின் பங்கு

1947 ஆம் ஆண்டு ஆகஸ்ட் திங்கள் பதினைந்தாம் நாள் இந்தியா விடுதலை பெற்றது. ஜவகர்லால் நேரு தலைமையில் அமைந்த அரசில் அம்பேத்கர் சட்ட அமைச்சராகவும் இந்திய அரசியல் சாசன சபையின் தலைவராகவும் பொறுப்பேற்றுக் கொண்டார்.

**தெரிந்து தெளிவோம்**

**இரட்டைமலை சீனிவாசன்**

இந்தியர்களுக்கு அரசியல் உரிமை வழங்குவதைப் பற்றி முடிவு செய்ய 1930 ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் இங்கிலாந்தில் முதலாவது வட்டமேசை மாநாடு நடைபெற்றது. ஒடுக்கப்பட்ட மக்களின் சார்பாளராக அம்பேத்கருடன் தமிழகத்தைச் சேர்ந்த இராவ்பகதூர் இரட்டைமலை சீனிவாசனும் கலந்துகொண்டார்.

1947 ஆம் ஆண்டு ஆகஸ்ட் திங்கள் 29 ஆம் நாள் அரசியல் நிர்ணய மன்றம் ஒரு தீர்மானம் நிறைவேற்றியது. அதன்படி இந்திய அரசியலமைப்புச் சட்டத்தை எழுத அம்பேத்கர் தலைமையில் அவர் உட்பட ஏழுபேர் கொண்ட அரசியலமைப்புச் சட்ட வரைவுக்குழு (Drafting committee) உருவாக்கப்பட்டது. இக்குழுவில், கோபால்சாமி, அல்லாடி கிருஷ்ணமூர்த்தி, கே. எம். முன்ஷி, சையது முகமது சாதுல்லா, மாதவராவ், டி. பி. கைதான் ஆகியோர் உறுப்பினர்களாக இடம்பெற்றனர். இக்குழு தனது அறிக்கையை 1948, பிப்ரவரி 21-இல் ஒப்படைத்தது. அம்பேத்கர் தலைமையிலான சட்ட வரைவுக்குழு, அப்போது மக்களாட்சி நடைபெற்ற நாடுகள் பலவற்றிலிருந்து இந்திய நடைமுறைக்குப் பொருந்தும் சட்டக்கூறுகளை, இந்திய அரசியலமைப்பு வரைவில் சேர்த்தது.

### தெரிந்து தெளிவோம்

**அரசியல் அமைப்புச் சட்டம்**

உலகின் மிகப்பெரிய குடியரசு நாடாக இந்தியா விளங்குகிறது. இந்நாட்டில் பல்வேறுபட்ட இன, மொழி, சமயங்களைச் சார்ந்த மக்கள் வாழ்கின்றனர். இவர்களை ஒன்றிணைக்க, ஆட்சி நடத்த அடிப்படையான சட்டம் தேவைப்படுகிறது. இச்சட்டத்தினையே அரசியலமைப்புச் சட்டம் என்பர். உலகில் உள்ள அனைத்து நாடுகளும் அந்தந்த நாட்டு அரசியலமைப்புச் சட்டத்தைக் கொண்டே இயங்குகின்றன. அஃது எழுதப்பட்டதாகவோ அல்லது எழுதப்படாததாகவோ இருக்கக்கூடும்.

இங்கிலாந்து, ஐக்கிய அமெரிக்கா, அயர்லாந்து, ஆஸ்திரேலியா, கனடா, சோவியத்யூனியன், ஜெர்மனி, தென் ஆப்பிரிக்கா முதலிய நாடுகளின் சட்டங்களையும் ஆராய்ந்து இந்திய நாட்டிற்கான சட்டம் இயற்றப்பட்டுள்ளது. அம்பேத்கரால் உருவாக்கப்பட்ட இந்த அரசியல் அமைப்புச் சட்டம், குடிமக்களின் உரிமைகளுக்குப் பலவகைகளில் பாதுகாப்பை அளிப்பதாக அமைந்தது. இது மிகச்சிறந்த சமூக ஆவணம் என வரலாற்று ஆசிரியர்களால் போற்றப்படுகிறது.

### புத்த சமயம் மீது பற்று

அம்பேத்கர் புத்த சமயக் கொள்கைகளின் மீது ஈடுபாடு கொண்டார். இலங்கையில் நடைபெற்ற புத்தத் துறவிகள் கருத்தரங்கில் கலந்துகொண்ட அவர், உலகப் பௌத்த சமய மாநாடுகளிலும் கலந்துகொண்டார். 1956 ஆம் ஆண்டு அக்டோபர் 14 ஆம் நாள் நாக்பூரில் இலட்சக்கணக்கான மக்களோடு புத்த சமயத்தில் தன்னை இணைத்துக்கொண்டார். அவர் எழுதிய புத்தரும் அவரின் தம்மமும் என்னும் புத்தகம் அவரது மறைவுக்குப் பின் 1957 ஆம் ஆண்டு வெளியானது.

ஒடுக்கப்பட்ட மக்களுக்காகத் தம் வாழ்நாள் முழுவதும் உழைத்த அம்பேத்கர், 1956 ஆம் ஆண்டு டிசம்பர் 6 ஆம் நாள் காலமானார். அவருடைய மறைவிற்குப் பின், இந்தியாவின் உயரிய விருதான பாரத ரத்னா விருது 1990 ஆம் ஆண்டு வழங்கப்பட்டது.

## கற்பவை கற்றபின்

1. சமூகச் சீர்திருத்தத்திற்கு உழைத்த பிற தலைவர்களின் பெயர்களைப் பட்டியலிடுக.
2. அம்பேத்கரின் பண்புகளாக நீங்கள் உணர்ந்தவற்றை எழுதுக.

## மதிப்பீடு

சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. இந்தியாவின் முதல் சட்ட அமைச்சர் ___________

அ) இராதாகிருட்டிணன் ஆ) அம்பேத்கர்

இ) நௌரோஜி ஈ) ஜவஹர்லால் நேரு

2. பூனா ஒப்பந்தம் __________ மாற்ற ஏற்படுத்தப்பட்டது.

அ) சொத்துரிமையை ஆ) பேச்சுரிமையை

இ) எழுத்துரிமையை ஈ) இரட்டை வாக்குரிமையை

3. சமத்துவச் சமுதாயம் அமைய அம்பேத்கர் ஏற்படுத்திய இயக்கம் ________

அ) சமாஜ் சமாத சங்கம் ஆ) சமாத சமாஜ பேரவை

இ) தீண்டாமை ஒழிப்புப் பேரவை ஈ) மக்கள் நல இயக்கம்

4. அம்பேத்கரின் சமூகப்பணிகளைப் பாராட்டி இந்திய அரசு ______ விருது வழங்கியது.

அ) பத்மஸ்ரீ ஆ) பாரத ரத்னா இ) பத்மவிபூசண் ஈ) பத்மபூசன்

கோடிட்ட இடத்தை நிரப்புக.

1. புத்த சமயம் தொடர்பாக அம்பேத்கர் எழுதிய நூல் __________.
2. அம்பேத்கர் நிறுவிய அரசியல் கட்சியின் பெயர் ________.
3. பொருளாதாரப் படிப்பிற்காக அம்பேத்கர் ________ சென்றார்.

குறுவினா

1. அம்பேத்கர் தன் பெயரை ஏன் மாற்றிக்கொண்டார்?
2. தீண்டாமைக்கு எதிராக அம்பேத்கர் மேற்கொண்ட பணிகள் இரண்டினை எழுதுக.
3. வட்டமேசை மாநாட்டில் கலந்து கொள்ளும் முன் அம்பேத்கர் கூறியது யாது?

சிறுவினா

1. இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் உருவாக அம்பேத்கர் ஆற்றிய பணிகள் யாவை?
2. அம்பேத்கரின் முதல் தேர்தல் வெற்றி குறித்து எழுதுக.

நெடுவினா

பூனா ஒப்பந்தம் பற்றி எழுதுக

சிந்தனை வினா

பாகுபாடில்லாத மக்கள் சமூகம் உருவாக நமது கடமைகளாக நீங்கள் கருதுவன யாவை?

விரிவானம்

# இயல் ஒன்பது

# பால் மனம்

6233LG




குழந்தை மனம் எல்லா உயிர்களையும் சமமாகக் கருதுவது; பிறர் துன்பம் கண்டு இரங்குவது; அதனை நீக்க முயல்வது. குழந்தைகளின் வளர்ச்சியில் பெற்றோர்கள் முக்கியப் பங்கு வகிக்கின்றனர். சமூகம், பெற்றோர்களின் தாக்கத்தால் குழந்தைகளின் மன இயல்புகளில் ஏற்படும் மாற்றத்தை விளக்கும் கதை ஒன்றை அறிவோம்.

படைப்பின் நேர்த்தி வெகு விசித்திரமானது. அதில் மனிதனின் ஆரம்பக்கட்டமான குழந்தைப் பிராயம்தான் எத்தனை அழகு!

"கிருஷ்ணா!" என்று குரல் கொடுத்தவாறே குழந்தையைத் தேடினாள் மன்னி.

பிஞ்சு விரல்களால் ஜன்னலைப் பிடித்தவாறே நின்று தெருவைப் பார்த்துக்கொண்டிருந்த குழந்தை கிருஷ்ணா, தன் முகத்தைத் திருப்பிப் பார்த்தாள். ஈரம் பிதுங்கும் வெள்ளரிப் பிஞ்சாக முகம். சிறகுகளாகப் படபடக்கும் இமைகள். கண்ணாடி மணிகளாக உருளும் விழிகள். பூ நயம் போல் உதடுகள். ஒளியரும்புகளான பற்கள். நுங்கு நீரின் குளிர்ச்சியாகக் குரல். தெய்வ வடிவைச் சின்ன உடலில் சிறைப்பிடித்த களை. முகத்தில் எந்த நேரமும் உலகைப் புரிந்துகொள்ள முயலும் மனவளர்ச்சிக்கான ஒரு சிந்தனைச் சாயல்.

"அம்மா! அதோ பாரம்மா, நாய்க்குட்டி!" அவள் பிஞ்சு விரல் காட்டிய இடத்தில் குப்பைத் தொட்டியோரம் ஒரு சொறிநாய் படுத்திருந்தது.

"சீ! அது அசிங்கம்! நம்ம நாய்க்குட்டி 'டாமி'யைப் பார். அழகாக, சுத்தமாக.."

"அம்மா! அந்த நாய்க்கும் சோப்புப் போட்டுக் குளிப்பாட்டினா என்னம்மா?"

"அது தெரு நாய். அதைத் தொடப்படாது."

"ஏன் தொடப்படாது? நம்ப நாயை மட்டும் தொடலாமா?"

"அப்பா திட்டுவாங்க" என்று முத்தாய்ப்பு வைக்க முயன்றாள் மன்னி.

குழந்தையா விடுவாள்? "அப்பா, திட்டாட்டா தொடலாமா அம்மா?" என்று தன் கேள்வியைத் தொடர்ந்ததும் நான் அடக்க முடியாமல் சிரித்துவிட்டேன்.

மன்னி என்னிடம் குறைப்பட்டுக் கொண்டாள். "பாரேன் ராமு! இவள் கேள்விக்குப் பதில்சொல்லவே ஒரு தனி ஆள் போட வேண்டியதுதான்! உம்! நீ படி. இவள் இப்படிப் பேசினால் நீ படிக்கிறதெங்கே?... வாம்மா, கிருஷ்ணா! உள்ளே போகலாம். சித்தப்பா படிக்கட்டும்."



எனக்குப் படிக்க ஓடவில்லை. குழந்தைக்குத் தெரு நாயும் வீட்டு நாயும் வேறில்லை என்ற சமரச நோக்கா? அல்லது இத்தகு சந்தேகங்களின் மூலம் உலகை அறிய முயலும் ஆவலா?

காலையில் கீரை கொண்டு வரும் பாட்டியைக் கண்டதும் கிருஷ்ணா உற்சாகமாக ஓடினாள்.

"கிருஷ்ணா! கிழவியைப் போய்த் தொடாதே. உடம்பு சரியில்லாதவள்" என்று மன்னி கூவினாள்.

அவள் குரலிலிருந்த கண்டிப்பால் திகைப்படைந்த குழந்தை என்னைப் பார்த்தாள். "அப்பாவுக்கு உடம்பு சரியில்லாதப்போ நீ தொடலியா சித்தப்பா?"

நான் கிருஷ்ணாவைத் தூக்கிக் கொண்டேன். "சமர்த்தா அம்மா சொன்னபடி கேட்டா, சாயந்திரம் காந்தி மண்டபம் அழைச்சுக்கிட்டு போவேன்."

"நிஜம்மாவா சித்தப்பா?"

"ஆமாம் !"

சொன்னபடியே அன்று மாலை கிருஷ்ணாவைக் காந்தி மண்டபத்துக்கு அழைத்துச் சென்றுவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்தேன். கைவண்டியை நிறைந்த பாரத்துடன் நெம்பி இழுத்தவாறே சென்றுகொண்டிருந்தார் ஒருவர்.

"சித்தப்பா! பாவம் அவர்! காலிலே செருப்பே போடலை சித்தப்பா! கல் குத்துமே, வெயில் சுடுமே! என்னோட செருப்பு அவருக்குச் சின்னது! உன் செருப்பைக் குடுத்துடு சித்தப்பா! நீதான் பூட்ஸ் வச்சிருக்கியே...!"

குழந்தையின் குரலிலிருந்த உருக்கத்தையும், துன்பம் கண்டு பொறாத மனத்தையும் கண்டு நான் நெகிழ்ந்தேன். அவளை அப்படியே வாரி அணைத்துக் கொண்டேன். குழந்தையா பேசுகிறாள்?

"செருப்பைக் குடுத்திடு சித்தப்பா."

"அவர் தூரப்போயிட்டார். இன்னொரு நாள் குடுத்துக்கலாம்" என்று அவளைச் சமாதானப்படுத்தி வீட்டுக்கு அழைத்து வந்தேன்.

கோடைமழை கொட்டிக்கொண்டிருந்தது. தெருவெல்லாம் ஈர நசநசப்பு. மரங்களும் செடிகளும் மண்ணும் குளிர்ந்து கிடந்தன. இரவின் அமைதியை மழையும் சில்வண்டுகளின் ரீங்காரமும் தவளைகளின் சத்தமும் அவ்வப்போது கலைத்த வண்ணம் இருந்தன.

தெருவை ஒட்டிய வராந்தாவில் மழையின் குளிர் நடுக்கத்தைக் குரலில் பிரதிபலித்தவாறு இரண்டு சிறு ஆட்டுக்குட்டிகள் நின்றிருந்தன.

பொழுது விடிந்தது.

மன்னியின் குரல் பல் விளக்கிக்கொண்டிருந்த என்னை உசுப்பியது. "எங்கே, கைக்குழந்தைகிட்டே இருந்த பால் புட்டியைக் காணோம்? பால் வாங்கணும்னு போனேன். இரண்டுவாய் பால்தான் குழந்தை குடிச்சிருப்பான். புட்டியைக் கீழே வச்சிட்டுப் போயிருந்தேன். இங்கே காணோமே?"

எனக்கு ஒரு சந்தேகம் ஏற்பட்டது. தெருக் கதவருகே ஓசையிடாது எட்டிப் பார்த்தேன். என் ஊகம் பொய்யாகவில்லை. என்ன விந்தை? உணர்ச்சியைக் கூறுபோட்டுக்கொள்ள அண்ணாவையும், மன்னியையும் ஓசையிடாது வரவழைத்துவிட்டுக் காமிராவையும் எடுத்து வந்தேன்.

மழைச்சாரலில் ஒன்றி நின்றதால் உரோமங்கள் நனைந்து கரும்பட்டாகப் படிந்திருக்க, இளம் குழவிகளாக நின்ற அந்த இரு ஆட்டுக்குட்டிகளில் ஒன்றின் வாயில் பால்புட்டியின் குமிழை வைத்துக் குழந்தை கிருஷ்ணா அதற்குப் பாலை ஊட்டிக் கொண்டிருந்தாள். அவள் கண்களில் அருள் வெள்ளம். முகத்தில் அன்பு நிழல். மனத்திலோ பொங்கிப் பெருகும் கருணைப்பரிவு. அந்த இரு சின்ன உயிர்களுக்கும் அவள் ஒரு தாயாகி விட்டாளா? அந்த உணர்ச்சிக்கு வேறு என்ன பெயர் சூட்டலாம்? வியப்புடன் நிற்கிறோம் நாங்கள்.

என் ஃபிளாஷ் அந்தக் காட்சிக்கு நிரந்தர உருவம் தருகிறது. அப்போதும் குழந்தையின் ஈடுபாடு சிதறவில்லை.

"பாவம்மா, ஆட்டுக்குட்டி! அதுக்கு யாரம்மா பால் தருவா? ராத்திரி பூரா சாப்பிடாமே இந்த ஆட்டிக்குட்டிக்கு ரொம்பப் பசிக்கும்மா?"

"நீதான் இருக்கியேடி!" என்று கிருஷ்ணாவை ஆரத் தழுவிக் கொண்டே மன்னி அவள் கன்னங்களில் மாறி மாறி முத்தமழை பொழிந்தாள்.

அதே சமயம் குழந்தை கிருஷ்ணா தனக்கென்று பெற்றிருந்த இரக்க சுபாவம், கருணைமனம் இவற்றைக் கண்டு மன்னி ரொம்பவும் வருத்தப்பட ஆரம்பித்தாள். இப்படியிருக்கிறாளே, தம்பிக்கு வைத்திருந்த பாலை வீணாக்குகிறோமே என்று தெரியவில்லையே, எப்படி இந்த உலகத்திலே பேர் சொல்லப் போகிறாள்? ஒரொரு குழந்தைக எப்படிச் சமர்த்தாக இருக்கிறதுகள்!" என்று பேச ஆரம்பித்துவிட்டாள்.

"குழந்தைதானே அவள்! வளர்ந்தால் சரியாகிவிடும்" என்றேன் நான். மனதுக்குள் மட்டும் அவளைப் பற்றிய பெருமிதம் தங்கியிருந்தது.



காலப்பூங்காவில் ஐந்து வசந்தங்கள் வண்ண ஜாலம் செய்து மறைந்தன. அண்ணா ஊர் ஊராக மாறிக்கொண்டிருந்தார். நான் சென்னையிலேயே தங்கிப் படிப்பை முடித்தேன். அதன்பின் வாழ்க்கைக்கு நிலைத்த ஒரு வருமானம் தரும் உத்தியோகத்தையும் ஏற்றேன். என் முதல் சம்பளத்தைப் பெற்றுக்கொண்ட நான், அதை என் அண்ணாவின் கையில் தந்து வாழ்த்துப் பெறத் திருச்சிக்குப் புறப்பட்டேன்.

முதலில் என் நினைவுக்கு வந்தவள் குழந்தை கிருஷ்ணா. இப்போது எட்டு வயதிருக்குமே, பள்ளியில் படிப்பாள். எப்படிப் பேசுவாள்! எப்படி நடப்பாள்? என்னுள் இனிய கற்பனையாக அவள் நடையுடை பாவனைகள் பொங்கிப் பிரவகித்தன. என் டயரியில் பத்திரப்படுத்தியிருந்த அவள் புகைப்படத்தை எடுத்துப் பார்த்தேன். என்ன அழகான காட்சி! குழந்தை கிருஷ்ணா ஆட்டுக்குட்டிக்குப் பாலூட்டும் காட்சி நேற்று நடந்தாற்போல் தோன்றுகிறது.

கிருஷ்ணா என்னிடம் உடனே ஓடி வராமல் வெட்கத்துடன் நின்றிருந்தாள். சிறிது நேரத்திலேயே, பிரிந்திருந்ததால் ஏற்பட்ட வெட்கம் நீங்கப் பெற்றவளாய்ச் சகஜ பாவத்துடன் என்னுடன் பழகினாள்.

அன்று மாலை கிருஷ்ணாவை அழைத்துக்கொண்டு கடைத்தெருப்பக்கம் போனேன். தன் பள்ளியைப் பற்றி, கூடப் படிக்கும் மாணவிகளைப் பற்றி, அப்பாவும் அம்மாவும் வாங்கித் தந்த உடைகளைப் பற்றி அவள் கலகலப்பாகப் பேசிக்கொண்டே வந்தாள். நான் மகிழ்ச்சியாகக் கேட்டுக்கொண்டே வந்தேன். கிருஷ்ணா தொடர்ந்தாள். "ரவியைப் பாரு சித்தப்பா! பால்சாதத்தைத் தெருநாய்க்குப் போடறான். நம்ம 'டாமி'க்குத்தானே போடணும்?"

நான் குழந்தையைப் பார்த்தேன். அவள் வளர்ந்துவிட்டாள். உலகைப் போலவே மற்றவர்களைப்பற்றி நினைக்கக் கற்றுக்கொண்டாள். ஆனால் என்னுள் மகிழ்ச்சி

எழவேயில்லை. சிரிப்பதைவிடச் சிந்திப்பதில் அதிகம் ஈடுபட்டிருந்த குழந்தை எப்படித்தான் மாறிவிட்டாள்?

தெருவில் கிருஷ்ணாவின் அட்டகாசச் சிரிப்பொலி கேட்கிறது. என்னவென்று எட்டிப்பார்த்தேன். எனக்கு அதிர்ச்சி! கல்லடிபட்ட ஆட்டுக்குட்டி, "ம்மே! ம்மே!" என்ற வேதனை முனகலோடு நொண்டியவாறே தத்தித் தத்தி ஓடிக்கொண்டிருந்தது. அதைப் பார்த்துக் கைகொட்டி நகைக்கிறாள் கிருஷ்ணா.

"கிருஷ்ணா! இப்படித்தான் ஆட்டுக்குட்டியைக் கல்லால் அடிக்கிறதா? நொண்டுகிறது பார்! முட்டாள்! இங்கே வா, சின்னக் குழந்தையில் இரக்கத்துடன் நடப்பாய். வளர வளர எல்லாம் போய்விட்டதா? உள்ளே போ!"

இயல்புக்கு மாறான சூழ்நிலையில் அகப்பட்டுக்கொண்டாற்போல் அவள் முகம் வாடியது.

வாசலில் சாலைவேலை செய்யும் கூலியாள் குடிக்கத் தண்ணீர் கேட்கிறார். அவரைப் 'போ போ' வென்று விரட்டுகிறாள் கிருஷ்ணா. "எப்பவும் இங்கேதான் கேட்பே, போ, நான் தர மாட்டேன்."

நான் கண்டிக்கக் குரலெடுக்கும்முன் மன்னியின் குரல் கேட்கிறது. "நேத்திக்கு வந்தவர் தானே? தினமும் ஒரு ஆள் தண்ணீர் கொடுக்க நிற்க வேண்டியதுதான். வேறே வேலை இல்லை."

"நான் விரட்டிட்டேன்மா!"

"அதுதான் சரி. சமர்த்து! உள்ளே வா!"

குழந்தை தெய்வீக மனம் படைத்திருந்தபோது சலித்த தாயார், சாதாரண உணர்வை ஏந்தியதும் புகழ்கிறாள். மலையருவி இமயப்போர்வையிலிருந்து விடுபட்டுப் பூமித் தூசியில் கலந்து விட்டதற்கு இத்தனை மகிழ்வா?

இப்பத்தான் சமர்த்தாமே! எம்மாதிரி பழக்குகிறோமோ அம்மாதிரிதான் பண்பு வளர்கிறது. இயற்கை உணர்வையே செயற்கை உணர்வாகத் திசை திருப்பிவிடும் நம் பழக்க வழக்கங்களுக்கு நாம்தான் பொறுப்பென்றால், நம்மைத் திசை மாற்றி அமைத்த பெற்றோர், நம் சமூகம் எல்லாம் பொறுப்பேற்க வேண்டியதுதான். குழந்தைகள் குப்பைகள் கலக்காத மாணிக்கங்கள்! அவற்றின் மனமொழி மெய்யைச் சூழலுக்கு ஏற்ப நாம்தான் திருத்தியமைக்கிறோம். அப்படி மாறாதவர்களை வெகுளி, அசடு என்கிறோம்.

அன்று ஆட்டுக்குட்டிக்குப் பசிக்குமே என்று பரிதாபப்பட்டுத் தம்பிக்கு வைத்திருந்த பால்புட்டியை எடுத்து ஊட்டிய குழந்தை, இன்று கல்லால் அடித்து, அது நொண்டுவதைக் கண்டு கைகொட்டிச் சிரிக்கிறாள். தெருநாயையும் குளிப்பாட்டலாம் என்றவள், அதற்கு ஏன் பால்சோறு, நம் நாய்க்கே போடலாம் என்கிறாள். செருப்பில்லாமல் வண்டி இழுக்கும் கூலியாளைக் கண்டு மனம் வெதும்பி என் செருப்பைத் தரும்படி தூண்டியவள், சாலையில் வேலைசெய்யும் தொழிலாளியின் தாகத்துக்குத் தண்ணீர் தராமல் விரட்டுகிறாள்.

இனி, மன்னி பயப்பட வேண்டாம்! கிருஷ்ணா தனியே பஸ்ஸில் பள்ளிகூடம் சென்று படித்து வருகிறாள். சின்ன டிபன் பாத்திரத்தில் ஓர் உருண்டை தயிர்சாதம் மட்டும்

எடுத்துப்போய்ச் சாப்பிட்டுப் பசியை அடக்கக் கற்றுக்கொண்டாள். இயந்திரமாக நாம் நிர்ணயித்த சட்டதிட்டங்களுக்குள் எவ்வித எதிர்ப்பும் இன்றி லயித்துக் கலந்து பழகிய பசுவாகிவிட்டாள்!

"நீ பார்த்த கிருஷ்ணா ரொம்ப வளர்ந்துடலை? கெட்டிக்காரி ஆகிவிட்டாள்!" அண்ணன் பெருமைப்படுகிறார்.

அருள் வடிவானவள், வெறும் லோகாயதச் சேற்றில் முளைத்த பூண்டாகிவிட்டாளே... அதை வளர்ச்சி என்று எப்படி ஏற்பது?

நான் என் கிருஷ்ணாவை, எனக்குப் பிடித்த உணர்வுகளை ஏந்தி நின்ற குழந்தையைக், காண வந்தேன். அவளைக் காணமுடியாத ஏமாற்றத்தோடு திரும்பிப் போகிறேன். அப்படிப்பட்டவளைக் காணமுடியாது என்ற உண்மை, என் கண்டத்துள் ஓர் இரகசிய வேதனையாக முட்டுகிறது.

கடவுளின் பிரதிநிதியாகக் குழந்தை பூமியில் ஜனிக்கிறது. ஆனால் மனிதனின் பிரதிநிதியாக உலகை விட்டு நீங்குகிறது!

**நூல் வெளி**



கோமகளின் இயற்பெயர் இராஜலட்சுமி; சிறுகதைகள், புதினங்கள், குறும்புதினங்கள், வானொலி, தொலைக்காட்சி நாடகங்கள் முதலியவற்றை எழுதியுள்ளார். இவரது அன்னை பூமி என்னும் புதினம் தமிழ்நாடு அரசின் விருதினைப் பெற்றது. தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் தமிழ் அன்னை விருதினையும் பெற்றுள்ளார். உயிர் அமுதாய், நிலாக்கால நட்சத்திரங்கள், அன்பின் சிதறல் உள்ளிட்ட பல நூல்களை எழுதியுள்ளார்.

பால் மனம் எனும் இக்கதை அ. வெண்ணிலா தொகுத்த மீதமிருக்கும் சொற்கள் எனும் நூலிலிருந்து எடுக்கப்பட்டுள்ளது.

## கற்பவை கற்றபின்

குழந்தைகளின் நற்பண்புகளாகப் 'பால் மனம்' கதையின் வழி நீங்கள் அறிந்தவற்றை எழுதுக.

## மதிப்பீடு

குழந்தை கிருஷ்ணாவின் பண்புநலன்களைப் பற்றித் தொகுத்து எழுதுக.

கற்கண்டு

இயல் ஒன்பது

# அணி இலக்கணம்

UUAS18

செய்யுளுக்கு அழகு தருவனவாகிய அணிகள் சிலவற்றை முன் வகுப்புகளில் கற்றோம். இன்னும் சில அணிகளை இங்குக் கற்போம்.

## பிறிது மொழிதல் அணி

மலையப்பன் சிறந்த உழைப்பாளி. ஆனால் தனது உடல்நலத்தில் அக்கறை காட்ட மாட்டான். அதனால் அடிக்கடி நோய்வாய்ப்படுவான். ஒருமுறை நோயுற்றிருந்த அவனைப் பார்க்கவந்த அவனது உறவினர் ஒருவர், "தம்பி சுவர் இருந்தால்தான் சித்திரம் வரைய முடியும். இதை நன்றாகப் புரிந்துகொள்" என்றார். மலையப்பன், "எனக்கும் இப்போதுதான் புரிகிறது. இனி நான் என் உடல்நலத்தில் போதிய அக்கறை செலுத்துவேன்" என்றான்.

இப்பகுதியைப் படித்துப் பாருங்கள். "சுவர் இருந்தால்தான் சித்திரம் வரைய முடியும். அதுபோல உடல் நலமாக இருந்தால்தான் உழைக்க முடியும்" என்று சொல்லவந்த உறவினர் உவமையை மட்டுமே கூறினார். அவர் சொல்லவந்த கருத்தை மலையப்பன் தானாகப் புரிந்துகொண்டான். இவ்வாறு உவமையை மட்டும் கூறி, அதன் மூலம் கூறவந்த கருத்தை உணரவைப்பது பிறிதுமொழிதல் அணி எனப்படும்.

(எ.கா.) *கடலோடா கால்வல் நெடுந்தேர் கடலோடும்*
*நாவாயும் ஓடா நிலத்து*

இத்திருக்குறள், "நிலத்தில் ஓடும் தேர் கடலில் ஓடாது. கடலில் ஓடும் கப்பல் நிலத்தில் ஓடாது" என்று உவமையை மட்டும் கூறுகிறது. இதன்மூலம் ஒவ்வொருவரும் தமக்கு உரிய இடத்தில் வெற்றி பெறமுடியும்; தமக்குப் பொருத்தமில்லாத இடத்தில் வெற்றிபெறுதல் இயலாது என்னும் கருத்தை நாம் உணர்ந்துகொள்கிறோம். எனவே இக்குறட்பாவில் பிறிதுமொழிதல் அணி இடம்பெற்றுள்ளது.

## வேற்றுமை அணி

தேனும் வெள்ளைச்சர்க்கரையும் இனிப்புச்சுவை உடையவை. அவற்றுள், தேன் உடலுக்கு நன்மை செய்யும்; வெள்ளைச் சர்க்கரை உடலுக்குத் தீங்கு செய்யும்.

இப்பகுதியைக் கவனியுங்கள். வெள்ளைச்சர்க்கரைக்கும் தேனுக்கும் இடையே ஒற்றுமையும் உண்டு; வேற்றுமையும் உண்டு. இரண்டும் இனிப்புச்சுவை உடையவை என்பது ஒற்றுமை. ஒன்று உடலுக்கு நன்மை செய்யும்; இன்னொன்று தீங்கு செய்யும் என்பது வேற்றுமை. இவ்வாறு இரண்டு பொருள்களுக்கு இடையே உள்ள ஒற்றுமையைக் கூறி, பிறகு அவற்றுள் ஒன்றை வேறுபடுத்திக் காட்டுவது வேற்றுமையணி எனப்படும்.

எ.கா.) *தீயினால் சுட்ட புண் உள்ளாறும் ஆறாதே*
*நாவினால் சுட்ட வடு.*

இத்திருக்குறளில் முதலில் நெருப்பு, கொடுஞ்சொல் ஆகிய இரண்டும் சுடும்தன்மை உடையவை என்று கூறப்படுகிறது. பின்னர், நெருப்பினால் சுட்ட காயம் ஆறிவிடும்; உள்ளத்தில் ஏற்பட்ட வடு ஆறாது என்று இரண்டுக்கும் இடையே உள்ள வேறுபாடு கூறப்படுகிறது. எனவே இது வேற்றுமை அணி ஆகும்.

### இரட்டுறமொழிதல்அணி

காலில் காயத்திற்குக் கட்டுப்போட்டிருந்த இளைஞன் ஒருவன் பேருந்தில் ஏறினான். "எந்த ஊருக்குப் பயணச்சீட்டு வேண்டும்?" என்று நடத்துநர் கேட்டார். அதேநேரம் அருகிலிருந்தவர், "உன் காலில் எதனால் காயம் ஏற்பட்டது?" என்று கேட்டார். அவன், "செங்கல்பட்டு" என்று கூறினான். அவன் கூறியது இருவரின் வினாக்களுக்கும் பொருத்தமான விடையாக அமைந்தது. அவன் செல்ல வேண்டிய ஊர் செங்கல்பட்டு என்று நடத்துநர் புரிந்துகொண்டார். அவன் காலில் செங்கல் பட்டதால் காயம் ஏற்பட்டது என மற்றவர் புரிந்துகொண்டார். இவ்வாறு ஒரு சொல் அல்லது தொடர் இருபொருள் தருமாறு அமைவது இரட்டுறமொழிதல் என்னும் அணியாகும். இதனைச் சிலேடை என்றும் கூறுவர்.

(எ.கா.) *ஓடும் இருக்கும் அதனுள்வாய் வெளுத்திருக்கும்*
*நாடுங் குலைதனக்கு நாணாது – சேடியே*
*தீங்காயது இல்லா திருமலைரா யன்வரையில்*
*தேங்காயும் நாயும்நேர் செப்பு*

இப்பாடலின் பொருள் தேங்காய், நாய் ஆகிய இரண்டுக்கும் பொருந்துவதாக அமைந்துள்ளது.

தேங்காயில் ஓடு இருக்கும்; தேங்காயின் உட்பகுதி வெண்மை நிறத்தில் இருக்கும்; தேங்காய் கோணல் இல்லாமல் குலையாகத் தொங்கும்.

நாய் சிலசமயம் ஓடிக்கொண்டிருக்கும்; சிலசமயம் ஓரிடத்தில் படுத்து இருக்கும்; அதன் வாயின் உட்பகுதி வெண்மையாக இருக்கும்; குரைப்பதற்கு வெட்கப்படாது.

இவ்வாறு இப்பாடல் இரண்டு பொருள் தரும்படி பாடப்பட்டுள்ளதால் இஃது இரட்டுறமொழிதல் அணி ஆகும்.

## கற்பவை கற்றபின்

திருக்குறளில் அணிகள் இடம் பெற்றுள்ள குறட்பாக்களுள் ஐந்தனைக் கண்டறிந்து அவற்றில் இடம்பெற்றுள்ள அணிகளின் பெயர்களை எழுதுக

## மதிப்பீடு

**சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.**

1. பிறிதுமொழிதல்அணியில்_____ மட்டும் இடம்பெறும்.

   அ) உவமை  ஆ) உவமேயம்  இ) தொடை  ஈ) சந்தம்

2. இரண்டு பொருள்களுக்கு இடையே உள்ள ஒற்றுமையையும் வேற்றுமையையும் கூறுவது _____ அணி.

   அ) ஒற்றுமை  ஆ) வேற்றுமை  இ) சிலேடை  ஈ) இரட்டுற மொழிதல்

3. ஒரே செய்யுளை இருபொருள்படும்படி பாடுவது __________ அணி.

   அ) பிறிதுமொழிதல்  ஆ) இரட்டுறமொழிதல்

   இ) இயல்பு நவிற்சி  ஈ) உயர்வு நவிற்சி

4. இரட்டுறமொழிதல் அணியின் வேறு பெயர் _____________ அணி.

   அ) பிறிதுமொழிதல்  ஆ) வேற்றுமை

   இ) உவமை  ஈ) சிலேடை

**சிறுவினா**

1. பிறிதுமொழிதல் அணியை விளக்கி எடுத்துக்காட்டுத் தருக.
2. வேற்றுமை அணி என்றால் என்ன?
3. இரட்டுறமொழிதல் அணி எவ்வாறு பொருள் தரும்?

**மொழியை ஆள்வோம்!**

Y8YU8I

**கேட்க.**

தன்னம்பிக்கையை வளர்க்கும் கதைகளைப் பெரியவர்களிடம் கேட்டு மகிழ்க.

**கீழ்க்காணும் தலைப்பில் இரண்டு நிமிடம் பேசுக.**

1. நம்பிக்கையே உயர்வு.
2. நல்வாழ்விற்குத் தேவையான நற்பண்புகள்.

### சொல்லக் கேட்டு எழுதுக.

அம்பேத்கர் தமது வாழ்க்கையில் 'புதிய திருப்பம்' காண வழி ஒன்றைக் கண்டறிந்தார். அது 'படிப்பு, படிப்பு, படிப்பே' ஆகும். அதை அடையும் முயற்சியில் அயராது உழைக்கத் தொடங்கினார். எப்போதும் புத்தகமும் கையுமாகவே திகழ்ந்தார். இதைக் கண்ட அவருடைய தந்தை வேறு செலவுகளைக் குறைத்துக் கொண்டும் கடன் வாங்கியும் புத்தகங்களை வாங்கித் தந்தார். புத்தகங்கள் படிக்கும் பழக்கத்தை அம்பேத்கர் கடைசிவரை கடைப்பிடித்தார். வட்டமேசை மாநாட்டிற்காக அம்பேத்கர் இங்கிலாந்து சென்றார். மாநாடு முடிந்தபிறகு அமெரிக்கா சென்ற அவர் தம் பழைய நண்பர்களையும் பேராசிரியர்களையும் கண்டு மகிழ்ந்தார். தாய்நாடு திரும்பிய போது பதினான்கு பெட்டிகள் நிறையப் புத்தகங்களைக் கொண்டுவந்தார்.

### அறிந்து பயன்படுத்துவோம்

### தான், தாம் என்னும் சொற்கள்

தான் என்பது ஒருமையைக் குறிக்கும். தாம் என்பது பன்மையைக் குறிக்கும். இவ்வேறுபாட்டினை அறிந்து தொடர்களில் பயன்படுத்த வேண்டும்.

தான், தன்னை, தன்னால், தனக்கு, தனது ஆகியவற்றை ஒருமைத் தொடர்களில் பயன்படுத்த வேண்டும்.

தாம், தம்மை, தம்மால், தமக்கு, தமது ஆகியவற்றைப் பன்மைத் தொடர்களில் பயன்படுத்த வேண்டும்.

(எ.கா.) தலைவர் தமது கையால் பரிசு வழங்கினார்.

மாணவன் தனது கையால் பெற்றுக் கொண்டான்.

(இங்குத் தலைவர் என்பது ஒருவரைக் குறித்தாலும் இது மரியாதைப் பன்மை ஆகும்)

(எ.கா.) மாடுகள் தமது தலையை ஆட்டின.

கன்று தனது தலையை ஆட்டியது.

### கோடிட்ட இடங்களைப் பொருத்தமான சொற்களால் நிரப்புக.

1. சிறுமி ______ (தனது/தமது) கையில் மலர்களை வைத்திருந்தாள்.
2. அம்பேத்கர் ஒடுக்கப்பட்ட மக்களின் உயர்வுக்காகத் ______ ( தனது/தமது) உழைப்பை நல்கினார்.
3. உயர்ந்தோர் ________ (தம்மைத்தாமே/தன்னைத்தானே) புகழ்ந்து கொள்ள மாட்டார்கள்.
4. இவை ______ (தான்/தாம்) எனக்குப் பிடித்த நூல்கள்.
5. குழந்தைகள் ________ (தன்னால்/தம்மால்) இயன்ற உதவிகளைப் பிறருக்குச் செய்கின்றனர்.

**தொடரில் உள்ள பிழைகளைத் திருத்தி எழுதுக.**

முதியவர் ஒருவர் தனது கால்களில் செருப்பில்லாமல் தன்னால் இழுக்க முடியாத வண்டியை இழுத்துச் சென்றார். அதனைக் கண்ட கிருஷ்ணா தம்முடைய சித்தப்பாவிடம் அவருடைய காலணிகளைக் கொடுக்குமாறு கூறினாள். அவரிடம் விலையுயர்ந்த காலணிகள்தான் இருந்தன. எனவே, தனது வேறு காலணிகளைப் பிறகு தருவதாகச் சித்தப்பா கூறினார்.

**கட்டுரை எழுதுக.**

உழைப்பே உயர்வு.

## மொழியோடு விளையாடு

**பின்வரும் வினாக்களைப் படித்து இருவினாக்களுக்கு ஒரு விடை தருக.**

(எ.கா) குழம்பும் கூட்டும் மணப்பது ஏன்?

குருதி மிகுதியாய்க் கொட்டுவது ஏன்? பெருங்காயத்தால்

1. ஆடை நெய்வது எதனாலே? அறிவைப் பெறுவது எதனாலே?
2. மாடுகள் வைக்கோல் தின்பது எங்கே? மன்னர்கள் பலரும் இறந்தது எங்கே?
3. கதிரவன் மறையும் நேரம் எது? கழுத்தில் அழகாய்ச் சூடுவது எது?
4. வானில் தேய்ந்து வளர்வது எது? வாரம் நான்கு கொண்டது எது?

## நிற்க அதற்குத் தக...

என் பொறுப்புகள்...

1. வாழ்வுக்கு வெற்றிதரும் நற்பண்புகளை வளர்த்துக் கொள்வேன்.
2. சமுதாய விடுதலைக்குப் பாடுபட்ட தலைவர்களின் வரலாற்றை அறிந்து போற்றுவேன்.

**கலைச்சொல் அறிவோம்.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| குறிக்கோள் | – | *Objective* | பல்கலைக்கழகம் | – | *University* |
| நம்பிக்கை | – | *Confidence* | ஒப்பந்தம் | – | *Agreement* |
| முனைவர் பட்டம் | – | *Doctorate* | அரசியலமைப்பு | – | *Constitution* |
| வட்ட மேசை மாநாடு | – | *Round Table Conference* | | | |
| இரட்டை வாக்குரிமை | – | *Double voting* | | | |

## இணையத்தில் காண்க

இந்திய அரசியலமைப்பின் சிறப்புகள் குறித்து இணையத்தில் தேடி எழுதுக.

# திருக்குறள்

9FR5TR

## 12. நடுவுநிலைமை

1. தகுதிஎன ஒன்று நன்றே பகுதியான்
பாற்பட்டு ஒழுகப் பெறின்.

2. செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவின்றி
எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து.

3. நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல்.

4. தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தால் காணப் படும்.

5. கேடும் பெருக்கமும் இல்அல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க்கு அணி.

6. கெடுவல்யான் என்பது அறிகதன் நெஞ்சம்
நடுவொரீஇ அல்ல செயின்.

7. கெடுவாக வையாது உலகம் நடுவாக
நன்றிக்கண் தங்கியான் தாழ்வு.

8. சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்துஒருபால்
கோடாமை சான்றோர்க்கு அணி.

9. சொற்கோட்டம் இல்லது செப்பம் ஒருதலையா
உட்கோட்டம் இன்மை பெறின்.

10. வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோல் செயின்.

## 28. கூடா ஒழுக்கம்

1. வஞ்ச மனத்தான் படிற்றுஒழுக்கம் தங்கள்
ஐந்தும் அகத்தே நகும்.

2. வான்உயர் தோற்றம் எவன்செய்யும் தன்நெஞ்சம்
தான்அறி குற்றப் படின்.

3. வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று.

4. தவம்மறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று.

5. பற்றற்றேம் என்பார் படிற்றொழுக்கம் எற்றுஎற்றுஎன்று
ஏதம் பலவும் தரும்.

6. நெஞ்சில் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணார் இல்.

7. புறம்குன்றி கண்டனைய ரேனும் அகம்குன்றி
மூக்கில் கரியார் உடைத்து.

8. மனத்தது மாசாக மாண்டார்நீர் ஆடி
மறைந்துஒழுகு மாந்தர் பலர்.

9. கணைகொடிது யாழ்கோடு செவ்விதுஆங்கு அன்ன
வினைபடு பாலால் கொளல்.

10. மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின்.

## 41. கல்லாமை

1. அரங்குஇன்றி வட்டுஆடி அற்றே நிரம்பிய
நூல்இன்றிக் கோட்டி கொளல்.

2. கல்லாதான் சொல்கா முறுதல் முலைஇரண்டும்
இல்லாதாள் பெண்காமுற்று அற்று.

3. கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்
சொல்லாது இருக்கப் பெறின்.

4. கல்லாதான் ஒட்பம் கழியநன்று ஆயினும்
கொள்ளார் அறிவுடை யார்.

5. கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும்.

6. உளர்என்னும் மாத்திரையர் அல்லால் பயவாக்
களர்அனையர் கல்லா தவர்.

7. நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
மண்மாண் புனைபாவை அற்று.

8. நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கண் பட்ட திரு.

9. மேற்பிறந்தார் ஆயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்றார் அனைத்திலர் பாடு.

10. விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோடு ஏனை யவர்.

## 44. குற்றங்கடிதல்

1. செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து.

2. இவறலும் மாண்புஇறந்த மானமும் மாணா
உவகையும் ஏதம் இறைக்கு.

3. தினைத்துணையாம் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார்.

4. குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
அற்றம் தரூஉம் பகை.

5. வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்.

6. தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்
என்குற்றம் ஆகும் இறைக்கு.

7. செயற்பால செய்யாது இவறியான் செல்வம்
உயற்பாலது அன்றிக் கெடும்.

8. பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்
எண்ணப் படுவதுஒன்று அன்று.

9. வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை.

10. காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்
ஏதில ஏதிலார் நூல்.

## 50. இடனறிதல்

1. தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்
இடங்கண்ட பின்அல் லது.

2. முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கும் அரண்சேர்ந்தாம்
ஆக்கம் பலவும் தரும்.

3. ஆற்றாரும் ஆற்றி அடுப இடன்அறிந்து
போற்றார்கண் போற்றிச் செயின்.

4. எண்ணியார் எண்ணம் இழப்பர் இடன்அறிந்து
துன்னியார் துன்னிச் செயின்.

5. நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற.

6. கடல்ஓடா கால்வல் நெடுந்தேர் கடல்ஓடும்
நாவாயும் ஓடா நிலத்து.

7. அஞ்சாமை அல்லால் துணைவேண்டா எஞ்சாமை
எண்ணி இடத்தால் செயின்.

8. சிறுபடையான் செல்லிடம் சேரின் உறுபடையான்
ஊக்கம் அழிந்து விடும்.

9. சிறைநலனும் சீரும் இலர்எனினும் மாந்தர்
உறைநிலத்தோடு ஒட்டல் அரிது.

10. கால்ஆழ் களரின் நரிஅடும் கண்அஞ்சா
வேல்ஆழி முகத்த களிறு.

## 52. தெரிந்து வினையாடல்

1. நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த
தன்மையான் ஆளப் படும்.

2. வாரி பெருக்கி வளம்படுத்து உற்றவை
ஆராய்வான் செய்க வினை.

3. அன்புஅறிவு தேற்றம் அவாவின்மை இந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு.

4. எனைவகையால் தேறியக் கண்ணும் வினைவகையால்
வேறாகும் மாந்தர் பலர்.

5. அறிந்துஆற்றிச் செய்கிற்பாற்கு அல்லால் வினைதான்
சிறந்தான்என்று ஏவற்பாற்று அன்று.

6. செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோடு
எய்த உணர்ந்து செயல்.

7. இதனை இதனால் இவன்முடிக்கும் என்றுஆய்ந்து
அதனை அவன்கண் விடல்.

8. வினைக்குஉரிமை நாடிய பின்றை அவனை
அதற்குஉரியன் ஆகச் செயல்.

9. வினைக்கண் வினையுடையான் கேண்மைவேறு ஆக
நினைப்பானை நீங்கும் திரு.

10. நாள்தோறும் நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடாது உலகு.

## 55. செங்கோன்மை

1. ஓர்ந்துகண் ணோடாது இறைபுரிந்து யார்மாட்டும்
   தேர்ந்துசெய் வஃதே முறை.
2. வான்நோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
   கோல்நோக்கி வாழும் குடி.
3. அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
   நின்றது மன்னவன் கோல்.
4. குடிதழீஇக் கோல்ஓச்சும் மாநில மன்னன்
   அடிதழீஇ நிற்கும் உலகு.
5. இயல்புளிக் கோல்ஓச்சும் மன்னவன் நாட்ட
   பெயலும் விளையுளும் தொக்கு.
6. வேல்அன்று வென்றி தருவது மன்னவன்
   கோல்அதூஉம் கோடாது எனின்.
7. இறைகாக்கும் வையகம் எல்லாம் அவனை
   முறைகாக்கும் முட்டாச் செயின்.
8. எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன்
   தண்பதத்தான் தானே கெடும்.
9. குடிபுறம் காத்துஓம்பிக் குற்றம் கடிதல்
   வடுஅன்று வேந்தன் தொழில்.
10. கொலையின் கொடியாரை வேந்துஒறுத்தல் பைங்கூழ்
    களைகட் டதனோடு நேர்.

## 57. வெருவந்த செய்யாமை

1. தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்
   ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து.
2. கடிதுஓச்சி மெல்ல எறிக நெடிதுஆக்கம்
   நீங்காமை வேண்டு பவர்.
3. வெருவந்த செய்துஒழுகும் வெங்கோலன் ஆயின்
   ஒருவந்தம் ஒல்லைக் கெடும்.
4. இறைகடியன் என்றுஉரைக்கும் இன்னாச்சொல் வேந்தன்
   உறைகடுகி ஒல்லைக் கெடும்.
5. அருஞ்செவ்வி இன்னா முகத்தான் பெருஞ்செல்வம்
   பேஎய்கண்டு அன்னது உடைத்து.
6. கடுஞ்சொல்லன் கண்இலன் ஆயின் நெடுஞ்செல்வம்
   நீடுஇன்றி ஆங்கே கெடும்.
7. கடுமொழியும் கையிகந்த தண்டமும் வேந்தன்
   அடுமுரண் தேய்க்கும் அரம்.
8. இனத்தாற்றி எண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
   சீறின் சிறுகும் திரு.
9. செருவந்த போழ்தில் சிறைசெய்யா வேந்தன்
   வெருவந்து வெய்து கெடும்.
10. கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் அதுஅல்லது
    இல்லை நிலக்குப் பொறை.

## 65. சொல்வன்மை

1. நாநலம் என்னும் நலன்உடைமை அந்நலம்
யாநலத்து உள்ளதூஉம் அன்று.

2. ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்
காத்துஓம்பல் சொல்லின்கண் சோர்வு.

3. கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல்.

4. திறன்அறிந்து சொல்லுக சொல்லை அறனும்
பொருளும் அதனினூஉங்கு இல்.

5. சொல்லுக சொல்லைப் பிறிதுஓர்சொல் அச்சொல்லை
வெல்லும்சொல் இன்மை அறிந்து.

6. வேட்பத்தாம் சொல்லிப் பிறர்சொல் பயன்கோடல்
மாட்சியின் மாசற்றார் கோள்.

7. சொலல்வல்லன் சோர்வுஇலன் அஞ்சான் அவனை
இகல்வெல்லல் யார்க்கும் அரிது.

8. விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்துஇனிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்.

9. பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்லல் தேற்றா தவர்.

10. இணர்ஊழ்த்தும் நாறா மலர்அனையர் கற்றது
உணரவிரித்து உரையா தார்.

## 72. அவையறிதல்

1. அவைஅறிந்து ஆராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகைஅறிந்த தூய்மை யவர்.

2. இடைதெரிந்து நன்குஉணர்ந்து சொல்லுக சொல்லின்
நடைதெரிந்த நன்மை யவர்.

3. அவைஅறியார் சொல்லமேற் கொள்பவர் சொல்லின்
வகைஅறியார் வல்லதூஉம் இல்.

4. ஒளியார்முன் ஒள்ளியர் ஆதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணம் கொளல்.

5. நன்றஎன்ற வற்றுள்ளும் நன்றே முதுவருள்
முந்து கிளவாச் செறிவு.

6. ஆற்றின் நிலைதளர்ந்து அற்றே வியன்புலம்
ஏற்றுஉணர்வார் முன்னர் இழுக்கு.

7. கற்றுஅறிந்தார் கல்வி விளங்கும் கசடறச்
சொல்தெரிதல் வல்லார் அகத்து.

8. உணர்வது உடையார்முன் சொல்லல் வளர்வதன்
பாத்தியுள் நீர்சொரிந்து அற்று.

9. புல்அவையுள் பொச்சாந்தும் சொல்லற்க நல்அவையுள்
நன்கு செலச்சொல்லு வார்.

10. அங்கணத்துள் உக்க அமிழ்துஅற்றால் தம்கணத்தார்
அல்லார்முன் கோட்டி கொளல்.

## 78. படைச்செருக்கு

1. என்ஐமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்ஐ
முன்நின்று கல்நின் றவர்.
2. கான முயல்எய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது.
3. பேராண்மை என்ப தறுகண்ஒன்று உற்றக்கால்
ஊராண்மை மற்றுஅதன் எஃகு.
4. கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்.
5. விழித்தகண் வேல்கொண்டு எறிய அழித்துஇமைப்பின்
ஒட்டன்றோ வன்கண் அவர்க்கு.
6. விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்
வைக்கும்தன் நாளை எடுத்து.
7. சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து.
8. உறின்உயிர் அஞ்சா மறவர் இறைவன்
செறினும்சீர் குன்றல் இலர்.
9. இழைத்தது இகவாமைச் சாவாரை யாரே
பிழைத்தது ஒறுக்கிற் பவர்.
10. புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு
இரந்துகோள் தக்கது உடைத்து.

## 79. நட்பு

1. செயற்கரிய யாவுள நட்பின் அதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு.
2. நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்நீர பேதையார் நட்பு.
3. நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு.
4. நகுதல் பொருட்டுஅன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென்று இடித்தல் பொருட்டு.
5. புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும்.
6. முகம்நக நட்பது நட்புஅன்று நெஞ்சத்து
அகம்நக நட்பது நட்பு.
7. அழிவின் அவைநீக்கி ஆறுய்த்து அழிவின்கண்
அல்லல் உழப்பதாம் நட்பு.
8. உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு.
9. நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனின் கொட்பின்றி
ஒல்லும்வாய் ஊன்று நிலை.
10. இனையர் இவர்எமக்கு இன்னம்யாம் என்று
புனையினும் புல்லென்னும் நட்பு.

## 80. நட்பு ஆராய்தல்

1. நாடாது நட்டலின் கேடுஇல்லை நட்டபின்
வீடுஇல்லை நட்புஆள் பவர்க்கு.

2. ஆய்ந்துஆய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாம் துயரம் தரும்.

3. குணனும் குடிமையும் குற்றமும் குன்றா
இனனும் அறிந்தியாக்க நட்பு.

4. குடிப்பிறந்து தன்கண் பழிநாணு வானைக்
கொடுத்தும் கொளல்வேண்டும் நட்பு.

5. அழச்சொல்லி அல்லது இடித்து வழக்கறிய
வல்லார்நட்பு ஆய்ந்து கொளல்.

6. கேட்டினும் உண்டுஓர் உறுதி கிளைஞரை
நீட்டி அளப்பதோர் கோல்.

7. ஊதியம் என்பது ஒருவற்குப் பேதையார்
கேண்மை ஒரீஇ விடல்.

8. உள்ளற்க உள்ளம் சிறுகுவ கொள்ளற்க
அல்லற்கண் ஆற்றறுப்பார் நட்பு.

9. கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை அடுங்காலை
உள்ளினும் உள்ளம் சுடும்.

10. மருவுக மாசற்றார் கேண்மை ஒன்றுஈத்தும்
ஒருவுக ஒப்பிலார் நட்பு.

## 97. மானம்

1. இன்றி அமையாச் சிறப்பின ஆயினும்
குன்ற வருப விடல்.

2. சீரினும் சீர்அல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர்.

3. பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு.

4. தலையின் இழிந்த மயிர்அனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை.

5. குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ
குன்றி அனைய செயின்.

6. புகழ்இன்றால் புத்தேள்நாட்டு உய்யாதால் என்மற்று
இகழ்வார்பின் சென்று நிலை.

7. ஒட்டார்பின் சென்றுஒருவன் வாழ்தலின் அந்நிலையே
கெட்டான் எனப்படுதல் நன்று.

8. மருந்தோமற்று ஊன்ஓம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடுஅழிய வந்த இடத்து.

9. மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்.

10. இளிவரின் வாழாத மானம் உடையார்
ஒளிதொழுது ஏத்தும் உலகு.

## 100. பண்புடைமை

1. எண்பதத்தால் எய்தல் எளிதுஎன்ப யார்மாட்டும்
   பண்புடைமை என்னும் வழக்கு.
2. அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்
   பண்புடைமை என்னும் வழக்கு.
3. உறுப்புஒத்தல் மக்கள்ஒப்பு அன்றால் வெறுத்தக்க
   பண்புஒத்தல் ஒப்பதாம் ஒப்பு.
4. நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
   பண்புபா ராட்டும் உலகு.
5. நகையுள்ளும் இன்னாது இகழ்ச்சி பகையுள்ளும்
   பண்புள பாடறிவார் மாட்டு.
6. பண்புடையார்ப் பட்டுஉண்டு உலகம் அதுஇன்றேல்
   மண்புக்கு மாய்வது மன்.
7. அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
   மக்கள்பண்பு இல்லா தவர்.
8. நண்பாற்றார் ஆகி நயம்இல செய்வார்க்கும்
   பண்பாற்றார் ஆதல் கடை.
9. நகல்வல்லர் அல்லார்க்கு மாஇரு ஞாலம்
   பகலும்பாற் பட்டுஅன்று இருள்.
10. பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
    கலம்தீமை யால்திரிந்து அற்று.

வான்புகழ் வள்ளுவரின் அறக்கருத்துகள் மாணவரிடம் சென்று சேர வேண்டும். அதன்வழி நன்னெறிப் பண்புகள் மாணவரிடையே வளர வேண்டும் என்ற நோக்கில் திருக்குறளின் 150 பாக்கள் சேர்க்கப்பட்டுள்ளன.

மாணவர்கள் எளிதில் படித்துப் பொருள் புரிந்துகொள்வதற்கு ஏற்றவகையில் குறட்பாக்களின் சீர்கள் பிரித்துத் தரப்பட்டுள்ளன; அலகிடுவதற்காக அல்ல.

## திருக்குறள் கருத்துகளை மாணவர்களிடையே பரப்புவதற்கான வழிகாட்டுதல்கள்

- நாள்தோறும் வழிபாட்டுக் கூட்டத்தில் திருக்குறளைப் பொருளுடன் கூறலாம்.
- வகுப்பு வாரியாகத் திருக்குறள் ஒப்புவித்தல் போட்டி நடத்தலாம்.
- இலக்கிய மன்றக் கூட்டங்களில் குறட்பாக்கள் தொடர்பான கதைகளைக் கூறலாம்.
- திருக்குறள் கருத்துகளை விளக்கும் நாடகங்களை நடத்தச் செய்யலாம்.
- திருக்குறள் கருத்துகளை விளக்கும் ஓவியப் போட்டியை நடத்தலாம்.
- குறட்பாக்கள் தொடர்பான வினாக்களைத் தொகுத்து வினாடி வினா நடத்தலாம்.
- சான்றோர் வாழ்வில் நிகழ்ந்த சுவையான நிகழ்ச்சிகள் மூலம் திருக்குறள் கருத்துகளை விளக்கலாம்.
- திருக்குறளின் ஆங்கில மொழிபெயர்ப்பை ஒரு மாணவர் கூற மற்றொருவர் அந்தக் குறளைச் சரியாக அடையாளம் கண்டு கூறுமாறு போட்டி வைக்கலாம்.

## எட்டாம் வகுப்பு – தமிழ்
### ஆக்கம்

**பாட வல்லுநர் குழு**

**முனைவர் நா. அருள்முருகன்**
இணை இயக்குநர்,
ஒருங்கிணைந்த பள்ளிக் கல்வி, சென்னை.

**முனைவர் மு. சுதந்திரமுத்து**
பேராசிரியர் (பணி நிறைவு), மாநிலக் கல்லூரி, சென்னை.

**முனைவர் சி. செல்வகுமார்**
உதவிப்பேராசிரியர், மாநிலக்கல்லூரி, சென்னை.

**மேலாய்வாளர் குழு**

**முனைவர் பொன். குமார்**
இணை இயக்குநர்,
மாநிலக் கல்வியியல் ஆராய்ச்சி மற்றும் பயிற்சி நிறுவனம்,
சென்னை.

**முனைவர் இராம. பாண்டுரங்கன்**
இணை இயக்குநர், (பணிநிறைவு),
மாநிலக் கல்வியியல் ஆராய்ச்சி மற்றும் பயிற்சி நிறுவனம், சென்னை.

**திருமதி ஏ.எஸ். பத்மாவதி**
எழுத்தாளர், சென்னை.

**முனைவர் பூந்துறயான் இரத்தினமூர்த்தி**
முதுநிலை ஆசிரியர் (பணி நிறைவு),
கள்ளிப்பட்டி, ஈரோடு மாவட்டம்.

**பாடநூல் ஒருங்கிணைப்பு**

**முனைவர் மு. தீபாஞ்சி**
துணை இயக்குநர்,
மாநிலக் கல்வியியல் ஆராய்ச்சி மற்றும் பயிற்சி நிறுவனம், சென்னை.

**திருமதி மு. செல்வி**
பட்டதாரி ஆசிரியர், அரசு உயர் நிலைப்பள்ளி, சேரி,
காவேரிப்பாக்கம் ஒன்றியம், வேலூர் மாவட்டம்.

**கலை மற்றும் வடிவமைப்புக்குழு**

**ஓவியம்**

**திரு. கே. புகழேந்தி**
பட்டதாரி ஆசிரியர், அரசு மேல்நிலைப்பள்ளி, கரம்பக்குடி,
புதுக்கோட்டை மாவட்டம்.

**திரு. சி. தெய்வேந்திரன்**
ஓவிய ஆசிரியர், அரசு உயர் நிலைப்பள்ளி, மாங்குளம்,
மதுரை மாவட்டம்.

**பக்க வடிவமைப்பாளர்**

**பழையவலம் பா. இராமநாதன்**
சென்னை.

**தரக் கட்டுப்பாடு**

**திரு. வே.சா. ஜாண்ஸ்மித்**

**அட்டைப்படம்**

**திரு. கதிர் ஆறுமுகம்**

**ஒருங்கிணைப்பு**

**திரு. ரமேஷ் முனிசாமி**

**பாடநூலாசிரியர் குழு**

**முனைவர் செ. ராஜா**
விரிவுரையாளர், மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம்,
திருப்பூர் மாவட்டம்.

**திரு. நி. சிவக்குமார்**
விரிவுரையாளர், மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம்,
குமுளூர், திருச்சி மாவட்டம்.

**திரு. கு. சம்பந்தம்**
முதுநிலை ஆசிரியர் (பணிநிறைவு)
டி.ஆர்.பி.சி.சி.சி. இந்து மேல்நிலைப்பள்ளி, திருவள்ளூர்.

**திரு. சிவ. முரளி**
பட்டதாரி ஆசிரியர், ஜே.எப்.மேல்நிலைப்பள்ளி, புலிவலம்,
திருச்சி மாவட்டம்.

**திரு. த. ஜீவானந்தம்**
பட்டதாரி ஆசிரியர், ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி,
அட்டப்பட்டி, கொட்டாம்பட்டி ஒன்றியம், மதுரை மாவட்டம்.

**திரு. வெ. பாலமுருகன்**
பட்டதாரி ஆசிரியர், அரசு மேல்நிலைப்பள்ளி, ஆரம்பாக்கம்,
திருவள்ளூர் மாவட்டம்.

**திருமதி ப. செந்தில்குமாரி**
பட்டதாரி ஆசிரியர், ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி,
முதல்மைல், கூடலூர், நீலகிரி மாவட்டம்.

**திரு. ந. மாமலைவாசன்**
பட்டதாரி ஆசிரியர், அரசு மேல்நிலைப்பள்ளி,
இராயபுரம், திருவாரூர் மாவட்டம்.

**திரு. ஜெ. அலெக்ஸ் கிறிஸ்டோபர்**
பட்டதாரி ஆசிரியர், ச.உ.நி. மேல்நிலைப்பள்ளி,
ராயப்பன்பட்டி, தேனிமாவட்டம்.

**முனைவர் ப. மெய்யப்பன்**
ஆசிரியப் பயிற்றுநர், வட்டார வளமையம், பவானிசாகர்,
ஈரோடு மாவட்டம்.

**விரைவுக் குறியீடு மேலாண்மைக் குழு**

**திரு. இரா. ஜெகநாதன்**
இடைநிலை ஆசிரியர், ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி,
கணேசபுரம்- போளூர், திருவண்ணாமலை மாவட்டம்.

**ஜே.எப்.பால் எட்வின் ராய்**
பட்டதாரி ஆசிரியர், ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி,
இராக்கிப்பட்டி, வீரபாண்டி, சேலம்.

**மு.சரவணன்**
பட்டதாரி ஆசிரியர், அரசினர் மகளிர் மேனிலைப்பள்ளி,
புதுப்பாளையம், வாழப்பாடி, சேலம்.

இந்நூல் 80 GSM எலிகண்ட் மேப்லித்தோ தாளில் அச்சிடப்பட்டுள்ளது.
ஆப்செட் முறையில் அச்சிட்டோர் ;

தமிழ்நாடு அரசு

# ஒன்பதாம் வகுப்பு

# தமிழ்

தமிழ்நாடு அரசு விலையில்லாப் பாடநூல் வழங்கும் திட்டத்தின்கீழ் வெளியிடப்பட்டது

## பள்ளிக் கல்வித்துறை

தீண்டாமை மனித நேயமற்ற செயலும் பெருங்குற்றமும் ஆகும்

தமிழ்நாடு அரசு

முதல்பதிப்பு - *2018*
திருத்திய பதிப்பு - *2019, 2020*

(புதிய பாடத்திட்டத்தின்கீழ்
வெளியிடப்பட்ட நூல்)





## பாடநூல் உருவாக்கமும் தொகுப்பும்

மாநிலக் கல்வியியல் ஆராய்ச்சி
மற்றும் பயிற்சி நிறுவனம்





## நூல் அச்சாக்கம்

தமிழ்நாடு பாடநூல் மற்றும்
கல்வியியல் பணிகள் கழகம்

www.textbooksonline.tn.nic.in

# முகவுரை

கல்வி, அறிவுத் தேடலுக்கான பயணம் மட்டுமல்ல; எதிர்கால வாழ்விற்கு அடித்தளம் அமைத்திடும் கனவின் தொடக்கமும்கூட. அதே போன்று, பாடநூல் என்பது மாணவர்களின் கைகளில் தவழும் ஒரு வழிகாட்டி மட்டுமல்ல; அடுத்த தலைமுறை மாணவர்களின் சிந்தனைப் போக்கை வடிவமைத்திடும் வல்லமை கொண்டது என்பதையும் உணர்ந்துள்ளோம். பெற்றோர், ஆசிரியர் மற்றும் மாணவரின் வண்ணக் கனவுகளைக் குழைத்து ஓர் ஓவியம் தீட்டியிருக்கிறோம். அதனூடே கீழ்க்கண்ட நோக்கங்களையும் அடைந்திடப் பெருமுயற்சி செய்துள்ளோம்.

- கற்றலை மனனத்தின் திசையில் இருந்து மாற்றிப் படைப்பின் பாதையில் பயணிக்க வைத்தல்.
- தமிழர்தம் தொன்மை, வரலாறு, பண்பாடு மற்றும் கலை, இலக்கியம் குறித்த பெருமித உணர்வை மாணவர்கள் பெறுதல்.
- தன்னம்பிக்கையுடன் அறிவியல் தொழில்நுட்பம் ஆகியவற்றைக் கைக்கொண்டு மாணவர்கள் நவீன உலகில் வெற்றிநடை பயில்வதை உறுதிசெய்தல்.
- அறிவுத்தேடலை வெறும் ஏட்டறிவாய்க் குறைத்து மதிப்பிடாமல் அறிவுச் சாளரமாய்ப் புத்தகங்கள் விரிந்து பரவி வழிகாட்டுதல்.
- தோல்வி பயம் மற்றும் மன அழுத்தத்தை உற்பத்தி செய்யும் தேர்வுகளை உருமாற்றி, கற்றலின் இனிமையை உறுதிசெய்யும் தருணமாய் அமைத்தல்.

புதுமையான வடிவமைப்பு, ஆழமான பொருள் மற்றும் குழந்தைகளின் உளவியல் சார்ந்த அணுகுமுறை எனப் புதுமைகள் பல தாங்கி உங்களுடைய கரங்களில் இப்புதிய பாடநூல் தவழும்பொழுது, பெருமிதம் ததும்ப ஒரு புதிய உலகத்துக்குள் நீங்கள் நுழைவீர்கள் என்று உறுதியாக நம்புகிறோம்.

# நாட்டுப்பண்

*ஜன கண மன அதிநாயக ஜய ஹே*
*பாரத பாக்ய விதாதா*
*பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா*
*திராவிட உத்கல பங்கா*
*விந்திய ஹிமாசல யமுனா கங்கா*
*உச்சல ஜலதி தரங்கா.*
*தவ சுப நாமே ஜாகே*
*தவ சுப ஆசிஸ மாகே*
*காஹே தவ ஜய காதா*
*ஜன கண மங்கள தாயக ஜய ஹே*
*பாரத பாக்ய விதாதா*
*ஜய ஹே ஜய ஹே ஜய ஹே*
*ஜய ஜய ஜய ஜய ஹே!*

*- மகாகவி இரவீந்திரநாத தாகூர்.*

---

## நாட்டுப்பண் – பொருள்

இந்தியத் தாயே! மக்களின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற நீயே எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செய்கிறாய்.

நின் திருப்பெயர் பஞ்சாபையும், சிந்துவையும், கூர்ச்சரத்தையும், மராட்டியத்தையும், திராவிடத்தையும், ஒடிசாவையும், வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சி அடையச் செய்கிறது.

நின் திருப்பெயர் விந்திய, இமயமலைத் தொடர்களில் எதிரொலிக்கிறது; யமுனை, கங்கை ஆறுகளின் இன்னொலியில் ஒன்றுகிறது; இந்தியக் கடலலைகளால் வணங்கப்படுகிறது.

அவை நின்னருளை வேண்டுகின்றன; நின் புகழைப் பரவுகின்றன.

இந்தியாவின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற தாயே!

உனக்கு வெற்றி! வெற்றி! வெற்றி!



# தமிழ்த்தாய் வாழ்த்து

நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரதக் கண்டமிதில்
தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநல் திருநாடும்
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே!
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே!
தமிழணங்கே!
உன் சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே!
வாழ்த்துதுமே!
வாழ்த்துதுமே!

– 'மனோன்மணீயம்' பெ. சுந்தரனார்.



## தமிழ்த்தாய் வாழ்த்து – பொருள்

ஒலி எழுப்பும் நீர் நிறைந்த கடலெனும் ஆடையுடுத்திய நிலமெனும் பெண்ணுக்கு, அழகு மிளிரும் சிறப்பு நிறைந்த முகமாகத் திகழ்கிறது பரதக்கண்டம். அக்கண்டத்தில், தென்னாடும் அதில் சிறந்த திராவிடர்களின் நல்ல திருநாடும், பொருத்தமான பிறை போன்ற நெற்றியாகவும், அதிலிட்ட மணம் வீசும் திலகமாகவும் இருக்கின்றன.

அந்தத் திலகத்தில் இருந்து வரும் வாசனைபோல, அனைத்துலகமும் இன்பம் பெறும் வகையில் எல்லாத் திசையிலும் புகழ் மணக்கும்படி (புகழ் பெற்று) இருக்கின்ற பெருமைமிக்க தமிழ்ப் பெண்ணே! தமிழ்ப் பெண்ணே! என்றும் இளமையாக இருக்கின்ற உன் சிறப்பான திறமையை வியந்து உன் வயப்பட்டு எங்கள் செயல்களை மறந்து உன்னை வாழ்த்துவோமே! வாழ்த்துவோமே! வாழ்த்துவோமே!

# தேசிய ஒருமைப்பாட்டு உறுதிமொழி

'நாட்டின் உரிமை வாழ்வையும் ஒருமைப்பாட்டையும் பேணிக்காத்து வலுப்படுத்தச் செயற்படுவேன்' என்று உளமார நான் உறுதி கூறுகிறேன்.

'ஒருபோதும் வன்முறையை நாடேன் என்றும் சமயம், மொழி, வட்டாரம் முதலியவை காரணமாக எழும் வேறுபாடுகளுக்கும் பூசல்களுக்கும் ஏனைய அரசியல் பொருளாதாரக் குறைபாடுகளுக்கும் அமைதி நெறியிலும் அரசியல் அமைப்பின் வழியிலும் நின்று தீர்வு காண்பேன்' என்றும் நான் மேலும் உறுதியளிக்கிறேன்.

# உறுதிமொழி

இந்தியா எனது நாடு. இந்தியர் அனைவரும் என் உடன் பிறந்தவர்கள். என் நாட்டை நான் பெரிதும் நேசிக்கிறேன். இந்நாட்டின் பழம்பெருமைக்காகவும் பன்முக மரபுச் சிறப்புக்காகவும் நான் பெருமிதம் அடைகிறேன். இந்நாட்டின் பெருமைக்குத் தகுந்து விளங்கிட என்றும் பாடுபடுவேன்.

என்னுடைய பெற்றோர், ஆசிரியர்கள், எனக்கு வயதில் மூத்தோர் அனைவரையும் மதிப்பேன்; எல்லாரிடமும் அன்பும் மரியாதையும் காட்டுவேன்.

என் நாட்டிற்கும் என் மக்களுக்கும் உழைத்திட முனைந்து நிற்பேன். அவர்கள் நலமும் வளமும் பெறுவதிலேதான் என்றும் மகிழ்ச்சி காண்பேன்.

உலகின் மூத்த மொழியாம் தமிழின் பல்வேறு பரிமாணங்களை
இன்றைய இளம்தலைமுறைக்கு
அறிமுகப்படுத்தும் ஒரு துணைக்கருவியாக இப்பாடநூல்.

ஒவ்வொரு இயலையும்
ஆர்வத்துடன் அணுக
உரைநடைஉலகம்,
கவிதைப்பேழை, விரிவானம்,
கற்கண்டு
ஆகிய தலைப்புகளாக . . . . .

பொருண்மைக்கு ஏற்ப
இயலின் தொடக்கத்தில்
கற்றல் நோக்கங்கள்

பாடப்பகுதிகளின்
கருத்தை விளக்க அரிய,
புதிய செய்திகளை
அறிந்து கொள்ளத்
தெரிந்து தெளிவோம்

தெரியுமா? . . . .

காலத்தின் பாய்ச்சலுக்கு
ஈடுகொடுப்பதாக
இணையவழி உரலிகள் . . .

ஆளுமை மிக்க
**ஆசிரியர்களுக்கும்**
ஆற்றல் நிறை
**மாணவர்களுக்கும்...**

பாடப்பகுதிகளின் தொழில்
நுட்பக் கருத்தை விளக்கத்
திட்பமும் நுட்பமும். . . .

படிப்பின்
அகலமும் ஆழமும் தொடர
அறிவை விரிவு செய் . . .

பயின்ற பாடங்கள் குறித்துச்
சிந்திக்க, கற்றல்
செயல்பாடுகளாகக்
கற்பவை கற்றபின் . . . .

இயலின் இறுதியில்
விழுமியப் பக்கமாக
நிற்க அதற்குத் தக. . .

உயர்சிந்தனைத் திறன்பெற,
படைப்பாக்கத்தின்வழி
வாழ்வைத் தன்னம்பிக்கையுடன்
எதிர்கொள்ள, படித்துச்சுவைக்க,
மொழிவிளையாட்டு . . . .

இலக்கியச்சுவை உணர்ந்து
நுட்பங்களை உள்வாங்கி
மொழியை ஆற்றலுடன்
பயன்படுத்த
மொழியை ஆள்வோம் . . . .

மாணவர்தம்
அடைவை அளவிட
மதிப்பீடு . . . .

பாடநூலில் உள்ள விரைவுக் குறியீட்டைப் (QR Code) பயன்படுத்துவோம்! எப்படி?

- உங்கள் திறன்பேசியில், கூகுள் playstore /ஆப்பிள் app store கொண்டு QR Code ஸ்கேனர் செயலியை இலவசமாகப் பதிவிறக்கம் செய்து நிறுவிக்கொள்க.
- செயலியைத் திறந்தவுடன், ஸ்கேன் செய்யும் பொத்தானை அழுத்தித் திரையில் தோன்றும் கேமராவை QR Code–இன் அருகில் கொண்டு செல்லவும்.
- ஸ்கேன் செய்வதன் மூலம் திரையில் தோன்றும் உரலியைச் (URL) சொடுக்க, அதன் விளக்கப் பக்கத்திற்குச் செல்லும்.

மொழிப்பாடத்தை மட்டுமல்லாமல் பிறபாடங்களைப் பயில,
கருத்துகளைப் புரிந்து எதிர்வினையாற்ற உதவும் ஏணியாய்..... புதிய வடிவம், பொலிவான
உள்ளடக்கத்துடன் இப்பாடநூல் உங்கள் கைகளில்...

# பொருளடக்கம்

*( * ) இக்குறியிட்ட பாடல்கள் மனப்பாடப்பகுதி*

3YL9N5 — *மின் நூல்*

4B9E6C — *மதிப்பீடு*

*இணைய வளங்கள்*

இயல் ஒன்று

மொழி

# அமுதென்று பேர்



## கற்றல் நோக்கங்கள்

- மொழியின் தேவை, தோற்றம், தொன்மை, தனித்தன்மைகள் ஆகியவற்றை அறிதல்
- வேறுபட்ட கவிதை வடிவங்களைப் படித்துப் பொருளுணர்தல்
- தமிழ்ச் சொற்களையும் பிறமொழிச் சொற்களையும் வேறுபடுத்தி அறிதல்
- தொடர்களின் அமைப்பினை அறிந்து பயன்படுத்துதல்
- கடிதம், கட்டுரை வாயிலாகக் கருத்துகளை வெளிப்படுத்துதல்

உரைநடை உலகம்

# மொழி க

# திராவிட மொழிக்குடும்பம்

**நுழையும்முன்**

*திராவிட மொழிகளுக்குள் மூத்த மொழியாய் விளங்குவது தமிழ். எத்தகைய கால மாற்றத்திலும் எல்லாப் புதுமைகளுக்கும் ஈடுகொடுத்து இயங்கும் ஆற்றல் தமிழுக்கு உண்டு. தமிழாய்ந்த அயல்நாட்டறிஞரும் செம்மொழித் தமிழின் சிறப்பைத் தரணியெங்கும் எடுத்துரைத்து மகிழ்கின்றனர். இவ்வுரைப்பகுதி, தமிழின் சிறப்பைப் பிறமொழிகளுடன் ஒப்பிட்டு உணர்த்துகிறது.*

தமக்குத் தோன்றிய கருத்துகளைப் பிறருக்கு உணர்த்த மனிதர் கண்டுபிடித்த கருவியே மொழியாகும். முதலில் தம் எண்ணங்களை மெய்ப்பாடுகள், சைகைகள், ஒலிகள், ஓவியங்கள் முதலியவற்றின் மூலமாகப் பிறருக்குத் தெரிவிக்க முயன்றனர். இவற்றின் மூலம் பருப்பொருள்களை மட்டுமே ஓரளவு உணர்த்த முடிந்தது. நுண்பொருள்களை உணர்த்த இயலவில்லை. அதனால், ஒலிகளை உண்டாக்கிப் பயன்படுத்தத் தொடங்கினர். சைகையோடு சேர்ந்து பொருள் உணர்த்திய ஒலி, காலப்போக்கில் தனியாகப் பொருள் உணர்த்தும் வலிமைபெற்று மொழியாக வளர்ந்தது.

மனிதஇனம் வாழ்ந்த இடஅமைப்பும் இயற்கை அமைப்பும் வேறுபட்ட ஒலிப்பு முயற்சிகளை உருவாக்கத் தூண்டின. இதனால் பல மொழிகள் உருவாயின. உலகத்திலுள்ள மொழிகளெல்லாம் அவற்றின் பிறப்பு, தொடர்பு, அமைப்பு, உறவு ஆகியவற்றின் அடிப்படையில் பல மொழிக்குடும்பங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

## மொழிகளின் காட்சிச் சாலை

இந்தியாவில் பேசப்படும் மொழிகளின்




எண்ணிக்கை 1300க்கும் மேற்பட்டது. இவற்றை நான்கு மொழிக்குடும்பங்களாகப் பிரிக்கின்றனர். அவை,

1. இந்தோ – ஆசிய மொழிகள்
2. திராவிட மொழிகள்
3. ஆஸ்திரோ ஆசிய மொழிகள்
4. சீன – திபெத்திய மொழிகள்

என அழைக்கப்படுகின்றன. பல கிளை

மொழிகளும் இங்குப் பேசப்படுவதால் இந்திய நாடு மொழிகளின் காட்சிச்சாலையாகத் திகழ்கிறது என்று ச. அகத்தியலிங்கம் குறிப்பிட்டுள்ளார்.

உலகின் குறிப்பிடத்தக்க, பழைமையான நாகரிகங்களுள் இந்திய நாகரிகமும் ஒன்று. மொகஞ்சதாரோ – ஹரப்பா அகழாய்வுக்குப் பின்னர் இது உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. இதைத் திராவிட நாகரிகம் என்று அறிஞர்கள் கருதுகின்றனர். திராவிடர் பேசிய மொழியே திராவிட மொழி எனப்படுகிறது. திராவிடம் என்னும் சொல்லை முதலில் குறிப்பிட்டவர் குமரிலபட்டர். தமிழ் என்னும் சொல்லிலிருந்துதான் திராவிடா என்னும் சொல் பிறந்தது என்று மொழி ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். ஹீராஸ் பாதிரியார் என்பார் இம்மாற்றத்தைத் தமிழ் → தமிழா → தமிலா → டிரமிலா → ட்ரமிலா → த்ராவிடா → திராவிடா என்று வந்ததாக விளக்குகின்றார்.

### மொழி ஆய்வு

திராவிட மொழிக்குடும்பம் என்னும் பகுப்பு உருவாவதற்கு ஒரு வரலாறு இருக்கிறது. தமிழ், கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகள் சமஸ்கிருத மொழியிலிருந்து உருவானவை என்ற கருத்து அறிஞர் பலரிடையே நிலவிவந்தது. இம்மொழிகளில் வடமொழிச் சொற்கள் மிகுந்து காணப்பட்டதால் 18ஆம் நூற்றாண்டின் தொடக்கம்வரை இந்திய மொழிகள் அனைத்திற்கும் வடமொழியே மூலம் எனவும் அதிலிருந்தே மற்ற மொழிகள் தோன்றி வளர்ந்தன எனவும் அறிஞர்கள் கருதினர். அறிஞர் வில்லியம் ஜோன்ஸ் என்பார் வடமொழியை ஆராய்ந்து மற்ற ஐரோப்பிய மொழிகளோடு தொடர்புடையது வடமொழி என முதன்முதலில் குறிப்பிட்டார். தொடர்ந்து, 1816ஆம் ஆண்டில் பேராசிரியர்கள் பாப், ராஸ்க், கிரிம் முதலானோராலும் மொழி சார்ந்த பல ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன.

முதன்முதலில் பிரான்சிஸ் எல்லிஸ் என்பார் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் போன்ற மொழிகளை ஒப்புமைப்படுத்தி ஆய்ந்து இவை தனியொரு மொழிக்குடும்பத்தைச் சேர்ந்தவை என்ற கருத்தை முன்வைத்தார். இம்மொழிகளை ஒரே இனமாகக் கருதித் தென்னிந்திய மொழிகள் எனவும் பெயரிட்டார். இதனையொட்டி, மால்தோ, தோடா, கோண்டி முதலான மொழிகள் பற்றிய ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. ஹோக்கன் என்பார் இம்மொழிகள் அனைத்தையும் இணைத்துத் தமிழியன் என்று பெயரிட்டதோடு ஆரிய மொழிகளிலிருந்து இவை மாறுபட்டவை என்றும் கருதினார். மாக்ஸ் முல்லரும் இதே கருத்தைக் கொண்டிருந்தார்.

1856இல் திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் என்னும் நூலில் கால்டுவெல், திராவிட மொழிகள், ஆரிய மொழிக்குடும்பத்திலிருந்து வேறுபட்டவை எனவும் இம்மொழிகள் சமஸ்கிருத மொழிக்குள்ளும் செல்வாக்குச் செலுத்தியுள்ளன எனவும் குறிப்பிட்டார். இதனை மேலும் உறுதிப்படுத்தப் பல்வேறு இலக்கணக் கூறுகளைச் சுட்டிக்காட்டி, திராவிட மொழிகளுக்குள் இருக்கும் ஒற்றுமைகளையும் எடுத்துரைத்தார்.

கால்டுவெல்லுக்குப் பின்னர் ஸ்டென்கனோ, கே.வி. சுப்பையா, எல். வி.இராமசுவாமி, பரோ, எமினோ, கமில்சுவலபில், ஆந்திரனோவ், தெ.பொ. மீனாட்சிசுந்தரம் முதலான அறிஞர்கள் திராவிட மொழிகளின் ஆய்விற்குப் பங்களிப்புச் செய்தவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள்.

### திராவிட மொழிக்குடும்பம்

திராவிட மொழிக்குடும்பம், மொழிகள் பரவிய நில அடிப்படையில் தென்திராவிட மொழிகள், நடுத்திராவிட மொழிகள், வடதிராவிட மொழிகள் என மூன்றாக வகைப்படுத்தப்பட்டுள்ளது. திராவிட மொழிக்குடும்பத்திலுள்ள தமிழ், கன்னடம், மலையாளம் முதலானவை தென்திராவிட மொழிகள் எனவும் தெலுங்கு முதலான சில மொழிகள் நடுத்திராவிட மொழிகள் எனவும் பிராகுயி முதலானவை வடதிராவிட மொழிகள் எனவும் பகுக்கப்பட்டுள்ளன.

| தென்திராவிடம் | நடுத்திராவிடம் | வடதிராவிடம் |
|---|---|---|
| தமிழ் | தெலுங்கு | குரூக் |
| மலையாளம் | கூயி | மால்தோ |
| கன்னடம் | கூவி (குவி) | பிராகுய் (பிராகுயி) |
| குடகு (கொடகு) | கோண்டா | |
| துளு | கோலாமி (கொலாமி) | |
| கோத்தா | நாய்க்கி | |
| தோடா | பெங்கோ | |
| கொரகா | மண்டா | |
| இருளா | பர்ஜி | |
| | கதபா | |
| | கோண்டி | |
| | கோயா | |

பலமொழிகளிலும் உங்கள் பெயரை எழுதி மகிழுங்கள்

http://mylanguages.org/tamil_write.php

மேலுள்ள பட்டியலில் உள்ள 24 மொழிகள் தவிர அண்மையில் கண்டறியப்பட்ட எருகலா, தங்கா, குறும்பா, சோழிகா ஆகிய நான்கு மொழிகளையும் சேர்த்துத் திராவிட மொழிகள் மொத்தம் 28 எனக் கூறுவர்.

### திராவிடமொழிகளின் பொதுப்பண்புகள்

சொற்களின் இன்றியமையாப் பகுதி வேர்ச்சொல், அடிச்சொல் எனப்படும். திராவிட மொழிகளின் சொற்களை ஆராய்ந்தால், அவை பொதுவான அடிச்சொற்களைக் கொண்டிருப்பதைக் காணமுடிகிறது.

#### தெரியுமா?



தமிழ் வடமொழியின் மகளன்று; அது தனிக் குடும்பத்திற்கு உரியமொழி; சமஸ்கிருதக் கலப்பின்றி அது தனித்தியங்கும் ஆற்றல் பெற்ற மொழி; தமிழுக்கும் இந்தியாவின் பிற மொழிகளுக்கும் தொடர்பு இருக்கலாம்.

– கால்டுவெல்

#### சான்று

| அடிச்சொல் | திராவிட மொழிகள் |
|---|---|
| கண் | – தமிழ் |
| கண்ணு | – மலையாளம், கன்னடம் |
| கன்னு | – தெலுங்கு, குடகு |
| ஃகன் | – குரூக் |
| கெண் | – பர்ஜி |
| கொண் | – தோடா |

திராவிட மொழிகளில் எண்ணுப் பெயர்கள் ஒன்று போலவே அமைந்துள்ளன.

| | |
|---|---|
| மூன்று | – தமிழ் |
| மூணு | – மலையாளம் |
| மூடு | – தெலுங்கு |
| மூரு | – கன்னடம் |
| மூஜி | – துளு |

### குறில், நெடில் வேறுபாடு

திராவிட மொழிகளில் உயிர் எழுத்துகளில் உள்ள குறில், நெடில் வேறுபாடுகள் பொருளை வேறுபடுத்தத் துணை செய்கின்றன.

அடி – குறில் வளி – குறில்

ஆடி – நெடில் வாளி – நெடில்

### பால்பாகுபாடு

திராவிட மொழிகளில் பொருள்களின் தன்மையை ஒட்டிப் பால்பாகுபாடு அமைந்துள்ளது. ஆனால், வடமொழியில் இவ்வாறு அமையவில்லை. உயிரற்ற பொருள்களும் கண்ணுக்கே புலப்படாத நுண்பொருள்களும்கூட ஆண், பெண் என்று பாகுபடுத்தப்படுகின்றன. இம்மொழியில் கைவிரல்கள் பெண்பால் என்றும் கால்விரல்கள் ஆண்பால் என்றும் வேறுபடுத்தப்படுகின்றன. ஜெர்மன் மொழியிலும் இத்தகைய தன்மையைக் காணமுடிகிறது. முகத்தின் பகுதிகளான வாய், மூக்கு, கண் ஆகியவை வேறுவேறு பால்களாகச் சுட்டப்படுகின்றன. வாய்– ஆண்பால், மூக்கு – பெண்பால், கண் – பொதுப்பால் எனப் பகுக்கும் நிலை உள்ளது.

திராவிட மொழிகளில் ஆண்பால், பெண்பால் என்ற பகுப்பு உயர்திணை ஒருமையில் காணப்படுகிறது. அஃறிணைப் பொருள்களையும் ஆண், பெண் என்று பால் அடிப்படையில் பகுத்தாலும் அவற்றிற்கெனப் பால்காட்டும் விகுதிகள் இல்லை. தனிச்சொற்களாலேயே ஆண், பெண் என்ற பகுப்பை உணர்த்தினர். (எ.கா. கடுவன் – மந்தி; களிறு – பிடி)

### வினைச்சொற்கள்

ஆங்கிலம் போன்ற மொழிகளில் வினைச்சொல் காலத்தை மட்டும் காட்டுமே தவிர திணை, பால், எண், இடம் ஆகிய வேறுபாட்டைக் காட்டுவதில்லை. திராவிட மொழிகளின் வினைச்சொற்கள் இவற்றைத் தெளிவாகக் காட்டுகின்றன.

எடுத்துக்காட்டு:

வந்தான் – உயர்திணை ஆண்பால் படர்க்கை ஒருமை

இவ்வியல்புக்கு மாறாக மலையாள மொழி மட்டுமே அமைந்துள்ளது. அம்மொழியில் திணை, பால், எண் ஆகியவற்றைக் காட்டும் பால் காட்டும் விகுதிகள் இல்லை. தனிச் சொற்களாலேயே ஆண், பெண் பகுப்பை அறிந்துகொள்ள முடியும்.

இவ்வாறு திராவிடமொழிகள் சில பொதுப்பண்புகளைப் பெற்றிருந்தாலும்

**காலந்தோறும் தமிழின் வரிவடிவ வளர்ச்சி**



## சில திராவிடமொழிகளின் பழமையான இலக்கிய இலக்கணங்கள்

| மொழி | இலக்கியம் | காலம் | இலக்கணம் | காலம் | சான்று |
|---|---|---|---|---|---|
| தமிழ் | சங்க இலக்கியம் | பொ.ஆ.மு. 5 – பொ.ஆ. 2ஆம் நூற்றாண்டு அளவில் | தொல்காப்பியம் | பொ.ஆ.மு. 3ஆம் நூற்றாண்டு அளவில் | தமிழ் இலக்கிய வரலாறு (மு.வ.) சாகித்திய அகாதெமி |
| கன்னடம் | கவிராஜ மார்க்கம் | பொ.ஆ. 9ஆம் நூற்றாண்டு | கவிராஜ மார்க்கம் | பொ.ஆ. 9ஆம் நூற்றாண்டு | இந்திய இலக்கணக் கொள்கைகளின் பின்னணியில் தமிழ் இலக்கணம் – செ. வை. சண்முகம் |
| தெலுங்கு | பாரதம் | பொ.ஆ. 11ஆம் நூற்றாண்டு | ஆந்திர பாஷா பூஷணம் | பொ.ஆ. 12ஆம் நூற்றாண்டு | |
| மலையாளம் | ராம சரிதம் | பொ.ஆ. 12ஆம் நூற்றாண்டு | லீலா திலகம் | பொ.ஆ. 15ஆம் நூற்றாண்டு | மலையாள இலக்கிய வரலாறு – சாகித்திய அகாதெமி |

## திராவிட மொழிகளில் சொல் ஒற்றுமை

| தமிழ் | மலையாளம் | தெலுங்கு | கன்னடம் | துளு | கூர்க் |
|---|---|---|---|---|---|
| மரம் | மரம் | மானு | மரம் | மர | மர |
| ஒன்று | ஒண்ணு | ஒகடி | ஒந்து | ஒஞ்சி | --------- |
| நூறு | நூறு | நூரு | நூரு | நூது | --------- |
| நீ | நீ | நீவு | நீன் | ஈ | நின் |
| இரண்டு | ஈர்ரெண்டு | ஈர்ரெண்டு | எரடு | ரட்டு | ------ |
| நான்கு | நால், நாங்கு | நாலுகு | நாலு | நாலு | ------ |
| ஐந்து | அஞ்சு | ஐது | ஐது | ஐனு | ------- |

டாக்டர் கால்டுவெல்லின் திராவிடமொழிகளின் ஒப்பிலக்கணம்

அவற்றுள் தமிழுக்கென்று சில சிறப்புக் கூறுகளும் தனித்தன்மைகளும் உள்ளன.

### தமிழின் தனித்தன்மைகள்

1. தொன்மையும் இலக்கண இலக்கியவளமும் உடையது தமிழ் மொழியாகும்.

2. இலங்கை, மலேசியா, பர்மா, சிங்கப்பூர், இந்தோனேஷியா, பிஜித்தீவு ஆகிய நாடுகளில் மட்டுமல்லாமல் தென்ஆப்பிரிக்கா, மொரிஷியஸ், இங்கிலாந்து, கயானா, மடகாஸ்கர், ட்ரினிடாட், ஆஸ்திரேலியா, கனடா போன்ற நாடுகளிலும் பேசப்படும் பெருமையுடையது தமிழ் மொழி.

**தெரியுமா ?**

**மொரிசியஸ், இலங்கை உள்ளிட்ட நாடுகளின் பணத்தாள்களில் தமிழ்மொழி இடம்பெற்றுள்ளது.**







3. ஏனைய திராவிட மொழிகளை விடவும் தமிழ்மொழி தனக்கெனத் தனித்த இலக்கணவளத்தைப் பெற்றுத் தனித்தியங்கும் மொழியாகும்.

4. திராவிட மொழிகளுள் பிற மொழித் தாக்கம் மிகவும் குறைந்ததாகக் காணப்படும் மொழி தமிழேயாகும்.

5. தமிழ்மொழி, திராவிட மொழிகள் சிலவற்றின் தாய்மொழியாகக் கருதப்படுகிறது.

6. ஒரேபொருளைக் குறிக்கப் பலசொற்கள் அமைந்த சொல்வளமும் சொல்லாட்சியும் நிரம்பப் பெற்ற மொழி தமிழேயாகும்.

7. இந்தியாவின் தொன்மையான கல்வெட்டுகளில் பெரும்பாலானவை தமிழிலேயே அமைந்துள்ளன.

8. தமிழின் பல அடிச்சொற்களின் ஒலியன்கள், ஒலி இடம்பெயர்தல் என்ற விதிப்படி பிற திராவிட மொழிகளில் வடிவம் மாறியிருக்கின்றன. சுட்டுப்பெயர்களும் மூவிடப்பெயர்களும் பெரும்பாலும் குறிப்பிடத் தக்க மாற்றங்களைப் பெற்றிருக்கின்றன.

திராவிட மொழிக்குடும்பத்தின் தொன்மையான மூத்த மொழியாகத் திகழ்கின்ற தமிழ், பிற திராவிட மொழிகளைவிட ஒப்பியல் ஆய்வுக்குப் பெருந் துணையாக அமைந்துள்ளது.

தமிழ் மொழி மூலத்திராவிட மொழியின் பண்புகள் பலவற்றையும் பேணிப் பாதுகாத்து வருகிறது. அத்துடன் தனித்தன்மை மாறுபடாமல் காலந்தோறும் தன்னைப் புதுப்பித்துக் கொள்ளும் பண்பு கொண்டதாகவும் தமிழ்மொழி விளங்கி வருகிறது.

## கற்பவை கற்றபின்...

3YV5PS

1. உங்கள் பெயருக்கான விளக்கம் தெரியுமா? உங்கள் பெயரும் உங்கள் நண்பர் பெயரும் தனித்தமிழில் அமைந்துள்ளதா? கண்டறிக.

2. பயன்பாட்டில் எவ்வாறெல்லாம் தமிழ்மொழியின் வேர்ச்சொற்கள், வடிவ மாற்றம் பெறுகின்றன என்பது குறித்து வகுப்பில் கலந்துரையாடுக .

   (எ.கா.) செய் – செய்தாள், செய்கிறாள், செய்வாள், செய்து, செய்த, செய்வீர், செய்கிறோம்

   வா – ........................................................................................................

கவிதைப் பேழை

மொழி

க

# தமிழோவியம்

– ஈரோடு தமிழன்பன்

**நுழையும்முன்**

என்றென்றும் நிலைபெற்ற தமிழே! தோற்றத்தில் தொன்மையும் நீதான்! தொழில்நுட்பத்தை ஏற்ற புதுமையும் நீதான்! அறியும் இலக்கணம் தந்ததும் நீதான்! அரிய இலக்கணம் கொண்டதும் நீதான்! காலந்தோறும் உன்னைப் புதுப்பித்துக் கொண்டு கணினித் தமிழாய் வலம் வருகிறாய்! ஆதிமுதல் எல்லாமுமாய் இலங்குகிற உன்னைத் தமிழோவியமாகக் கண்டு மகிழ்கிறோம்!

*காலம் பிறக்கும்முன் பிறந்தது தமிழே! எந்தக்*
*காலமும் நிலையாய் இருப்பதும் தமிழே!*

*அகமாய்ப் புறமாய் இலக்கியங்கள் – அவை*
*அமைந்ததைச் சொல்லும் இலக்கணங்கள்*
*நிகரிலாக் காப்பியப் பூவனங்கள் – உன்*
*நெஞ்சம் நடத்தட்டும் ஊர்வலங்கள்!*
*– காலம் பிறக்கும் முன்....*

*ஏனிவ் விருட்டெனக் கேட்டுவரும் – நீதி*
*ஏந்திய தீபமாய்ப் பாட்டுவரும்*
*மானிட மேன்மையைச் சாதித்திடக் – குறள்*
*மட்டுமே போதுமே ஓதி, நட...*
*– காலம் பிறக்கும் முன்....*

*எத்தனை எத்தனை சமயங்கள் – தமிழ்*
*ஏந்தி வளர்த்தது தாயெனவே*
*சித்தர் மரபிலே தீதறுக்கும் – புதுச்*
*சிந்தனை வீச்சுகள் பாய்ந்தனவே...*
*– காலம் பிறக்கும் முன்...*

*விரலை மடக்கியவன் இசையில்லை – எழில்*
*வீணையில் என்று சொல்வதுபோல்*
*குறைகள் சொல்வதை விட்டுவிட்டுப் புதுக்*
*கோலம் புனைந்து தமிழ் வளர்ப்பாய்!*



### இலக்கணக்குறிப்பு

எத்தனை எத்தனை, விட்டு விட்டு – அடுக்குத் தொடர்கள்

ஏந்தி – வினையெச்சம்

காலமும் – முற்றும்மை

### பகுபத உறுப்பிலக்கணம்

வளர்ப்பாய் – வளர் + ப் + ப் + ஆய்

வளர் – பகுதி

ப் – சந்தி, ப் – எதிர்கால இடைநிலை

ஆய் – முன்னிலை ஒருமை வினைமுற்று விகுதி

### நூல் வெளி

ஈரோடு தமிழன்பன் எழுதிய 'தமிழோவியம்' என்னும் நூலில் இடம்பெற்றுள்ள கவிதை இது. இக்கவிதை குறித்துக் கவிஞர் முன்னுரையில் "ஒரு பூவின் மலர்ச்சியையும் ஒரு குழந்தையின் புன்னகையையும் புரிந்துகொள்ள அகராதிகள் தேவைப்படுவதில்லை. பாடலும் அப்படித்தான்!" என்று குறிப்பிட்டுள்ளார்.

ஈரோடு தமிழன்பன் புதுக்கவிதை, சிறுகதை முதலான பல வடிவங்களிலும் படைப்புகளை வெளியிட்டுள்ளார். ஹைக்கூ, சென்ரியு, லிமரைக்கூ எனப் புதுப்புது வடிவங்களில் கவிதை நூல்களைத் தந்துள்ளார். இவரது 'வணக்கம் வள்ளுவ' என்னும் கவிதை நூலுக்கு 2004ஆம் ஆண்டுக்கான சாகித்திய அகாதெமி விருது வழங்கப்பட்டது. 'தமிழன்பன் கவிதைகள்' தமிழக அரசின் பரிசுபெற்ற நூல். இவரது கவிதைகள் இந்தி, உருது, மலையாளம், ஆங்கிலம் உள்ளிட்ட மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

### தெரிந்து தெளிவோம்

இனிமையும் நீர்மையும் தமிழெனல் ஆகும்

– பிங்கல நிகண்டு

யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவது எங்கும் காணோம்

– பாரதியார்



### தெரியுமா?

உலகத் தாய்மொழி நாள்
பிப்ரவரி 21

தமிழை ஆட்சி மொழியாகக் கொண்ட நாடுகள்

இலங்கை, சிங்கப்பூர்

## கற்பவை கற்றபின்...

*1.* *பிறமொழிக் கலப்பின்றித் தனித்தமிழில் இரண்டு மணித்துளிகள் வகுப்பறையில் பேசுக.*

*2.* ***கவிதையைத் தொடர்க.***

*அன்னை சொன்ன மொழி*
*ஆதியில் பிறந்த மொழி*
*இணையத்தில் இயங்கும் மொழி*
*ஈடிலாத் தொன்மை மொழி*
*உலகம் போற்றும் மொழி*
*ஊர்கூடி வியக்கும் மொழி*
………………………………………………
………………………………………………

கவிதைப் பேழை

மொழி

க

# தமிழ்விடு தூது

**நுழையும்முன்**

தமிழின் பெருமையைப் பாடக் கவிஞர்கள் கையாளும் உத்திகள் பற்பல. கவிதை, அதற்கொரு கருவி. கிளி, அன்னம், விறலி, பணம், தந்தி என்று பல தூது வாயில்களைப்பற்றி அறிந்துள்ளோம். தமிழையே தூதுப் பொருளாக்கியுள்ளது 'தமிழ்விடு தூது'. தமிழின் இனிமை, இலக்கிய வளம், பாச்சிறப்பு, சுவை, அழகு, திறம், தகுதி ஆகியன இச்சிற்றிலக்கியத்தில் விரவியுள்ளன.

## சீர்பெற்ற செல்வம்

*தித்திக்கும் தெள்அமுதாய்த் தெள்அமுதின் மேலான*
*முத்திக் கனியேஎன் முத்தமிழே – புத்திக்குள்*

*உண்ணப் படும்தேனே உன்னோடு உவந்துஉரைக்கும்*
*விண்ணப்பம் உண்டு விளம்பக்கேள் – மண்ணில்*

*குறம்என்றும் பள்ளுஎன்றும் கொள்வார் கொடுப்பாய்க்கு*
*உறவுஎன்று மூன்றுஇனத்தும் உண்டோ – திறம்எல்லாம்*

*வந்துஎன்றும் சிந்தா மணியாய் இருந்தஉனைச்*
*சிந்துஎன்று சொல்லிய நாச்சிந்துமே* – அந்தரமேல்*

*முற்றும்உணர்ந்த தேவர்களும் முக்குணமே பெற்றார்நீ*
*குற்றம்இலாப் பத்துக் குணம்பெற்றாய் – மற்றொருவர்*

*ஆக்கிய வண்ணங்கள் ஐந்தின்மேல் உண்டோநீ*
*நோக்கிய வண்ணங்கள் நூறுஉடையாய் – நாக்குலவும்*

*ஊனரசம் ஆறுஅல்லால் உண்டோ செவிகள்உணவு*
*ஆன நவரசம்உண் டாயினாய் – ஏனோர்க்கு*

*அழியா வனப்பு ஒன்று அலது அதிகம் உண்டோ*
*ஒழியா வனப்புஎட்டு உடையாய்....*

*(கண்ணிகள் 69 – 76)*

### சொல்லும் பொருளும்

குறம், பள்ளு – சிற்றிலக்கிய வகைகள்; மூன்றினம் – துறை, தாழிசை, விருத்தம் ; திறமெல்லாம் – சிறப்பெல்லாம்; சிந்தாமணி – சிதறாத மணி(சீவகசிந்தாமணி), என்னும் இருபொருளையும் குறிக்கும் ; சிந்து – ஒருவகை இசைப்பாடல்.

முக்குணம் – மூன்று குணங்கள் (சத்துவம்-அமைதி, மேன்மை ஆகியவற்றைச் சுட்டும் குணம்; இராசசம் - போர், தீவிரமான செயல்களைக் குறிக்கும் குணம்; தாமசம்-சோம்பல், தாழ்மை போன்றவற்றைக் குறிக்கும் குணம்); பத்துக்குணம் – செறிவு, சமநிலை முதலிய பத்துக்குண அணிகள்.

வண்ணங்கள் ஐந்து – வெள்ளை, சிவப்பு, கறுப்பு, மஞ்சள், பச்சை; வண்ணம்நூறு – குறில், அகவல், தூங்கிசை வண்ணம் முதலாக இடை மெல்லிசை வண்ணம் ஈறாக நூறு.

ஊனரசம் – குறையுடைய சுவை; நவரசம் – வீரம், அச்சம், இழிப்பு, வியப்பு, காமம், அவலம், கோபம், நகை, சமநிலை ஆகிய ஒன்பது சுவை; வனப்பு- அழகு. அவை அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு.

### பாடலின் பொருள்

இனிக்கும் தெளிந்த அமுதமாய் அந்த அமிழ்தினும் மேலான முத்தி ஆகிய விடுதலை தரும் கனியே! இயல், இசை, நாடகம் என, மூன்றாய்ச் சிறந்து விளங்கும் என் தமிழே! அறிவால் உண்ணப்படும் தேனே! உன்னிடம் நான் மகிழ்ந்து விடுக்கும் வேண்டுகோள் ஒன்றுள்ளது. அதைக் கேட்பாயாக.

தமிழே! உன்னிடமிருந்து குறவஞ்சி, பள்ளு என்ற நூல்களைப் பாடிப் புலவர்கள் சிறப்புக் கொள்கின்றனர். பிறர் படிக்கும் வகையில் நீ அவற்றைக் கொண்டிருக்கிறாய். அதனால் உனக்குத் தாழிசை, துறை, விருத்தம் என்னும் மூவகைப் பாவினங்களிலும் உறவு ஏதேனும் உண்டோ?

### தெரிந்து தெளிவோம்

**கண்ணி** – இரண்டு கண்களைப் போல் இரண்டிரண்டு பூக்களை வைத்துத் தொடுக்கப்படும் மாலைக்குக் கண்ணி என்று பெயர். அதேபோல் தமிழில் இரண்டிரண்டு அடிகள் கொண்ட எதுகையால் தொடுக்கப்படும் செய்யுள் வகை கண்ணி ஆகும்.

பாவின் திறம் அனைத்தும் கைவரப்பெற்று (பொருந்தி நின்று) என்றுமே 'சிந்தா (கெடாத) மணியாய்' இருக்கும் உன்னை (இசைப்பாடல்களுள் ஒருவகையான) 'சிந்து' என்று (அழைப்பது நின் பெருமைக்குத் தகுமோ? அவ்வாறு) கூறிய நா இற்று விழும் அன்றோ?

வானத்தில் வசிக்கும் முற்றும் உணர்ந்த தேவர்கள்கூட சத்துவம், இராசசம், தாமசம் என்னும் மூன்று குணங்களையே பெற்றுள்ளார்கள். ஆனால், நீயோ பத்துக்குற்றங்கள் இல்லாமல் செறிவு, தெளிவு, சமநிலை, இன்பம், ஒழுகிசை, உதாரம், உய்த்தலில் பொருண்மை, காந்தம், வலி, சமாதி என்னும் பத்துக்குணங்களையும் பெற்றுள்ளாய்.

மனிதரால் உண்டாக்கப்பட்ட வண்ணங்கள் வெண்மை, செம்மை, கருமை, பொன்மை, பசுமை என ஐந்திற்குமேல் இல்லை. நீயோ புலவர்கள் கண்டடைந்த குறில், அகவல், தூங்கிசை வண்ணம் முதலாக இடைமெல்லிசை வண்ணம் ஈறாக நூறு வண்ணங்களைக் கொண்டுள்ளாய்.

நாவின்மீது பொருந்தும் குறைபாடுடைய உணவின் சுவைகள் ஆறுக்கு மேல் இல்லை. நீயோ செவிகளுக்கு விருந்தளிக்கும் ஒன்பது சுவைகளைப் பெற்றுள்ளாய். தமிழை அடையப் பெறாத மற்றையோர்க்கு அழியாத அழகு ஒன்றே ஒன்று அல்லாமல் அதிகம் உண்டோ? நீயோ நீங்காத அம்மை முதலிய அழகுகள் எட்டினைப் பெற்றுள்ளாய்.

**இலக்கணக் குறிப்பு**

முத்திக்கனி – உருவகம்

தெள்ளமுது – பண்புத்தொகை

குற்றமிலா – ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்

நா – ஓரெழுத்து ஒருமொழி

செவிகள் உணவான – நான்காம் வேற்றுமைத்தொகை.

சிந்தா மணி – ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்

**பகுபத உறுப்பிலக்கணம்**

கொள்வார் – கொள் + வ் + ஆர்

கொள் – பகுதி

வ் – எதிர்கால இடைநிலை

ஆர் – பலர்பால் வினைமுற்று விகுதி

உணர்ந்த – உணர் + த் (ந்) + த் + அ

உணர் – பகுதி

த் – சந்தி, த் – ந் ஆனது விகாரம்

த் – இறந்தகால இடைநிலை

அ – பெயரெச்ச விகுதி

**நூல் வெளி**



தமிழ்ச் சிற்றிலக்கிய வகைகளுள் 'தூது' என்பதும் ஒன்று. இது, 'வாயில் இலக்கியம்', 'சந்து இலக்கியம்' என்னும் வேறு பெயர்களாலும் அழைக்கப்படுகிறது. இது தலைவன் தலைவியருள் காதல் கொண்ட ஒருவர் மற்றொருவர்பால் செலுத்தும் அன்பைப் புலப்படுத்தித் தம்முடைய கருத்திற்கு உடன்பட்டமைக்கு அறிகுறியாக 'மாலையை வாங்கிவருமாறு' அன்னம் முதல் வண்டு ஈறாகப் பத்தையும் தூது விடுவதாகக் 'கலிவெண்பா'வால் இயற்றப்படுவதாகும். தமிழ்விடு தூது, மதுரையில் கோவில்கொண்டிருக்கும் சொக்கநாதர் மீது காதல்கொண்ட பெண் ஒருத்தி, தன் காதலைக் கூறிவருமாறு தமிழ்மொழியைத் தூதுவிடுவதாக அமைந்துள்ளது. இந்நூல் 268 கண்ணிகளைக் கொண்டுள்ளது. தமிழின் சிறப்புகளைக் குறிப்பிடும் சில கண்ணிகள் இப்பாடப்பகுதியில் இடம்பெற்றுள்ளன. இந்நூலை 1930இல் உ.வே.சா. முதன் முதலில் பதிப்பித்தார். இதன் ஆசிரியர் யார் என அறிந்துகொள்ள இயலவில்லை.

## கற்பவை கற்றபின்...

1. நமது எண்ணங்களையும் கருத்துகளையும் எளிதாக எடுத்துரைக்க உதவுவது தமிழ்மொழி என்ற தலைப்பில் ஒரு பக்க அளவில் உரை ஒன்றை எழுதுக.

2. படித்துத் திரட்டுக.

"காதொளிரும் குண்டலமும் கைக்கு வளையாபதியும் கருணை மார்பின்
மீதொளிர் சிந்தாமணியும் மெல்லிடையில் மேகலையும் சிலம்பார் இன்பப்
போதொளிரும் திருவடியும் பொன்முடி சூளாமணியும் பொலியச் சூடி
நீதியொளிர் செங்கோலாய்த் திருக்குறளைத் தாங்குதமிழ் நீடுவாழ்க"
– கவியோகி சுத்தானந்த பாரதியார்.

இப்பாடல் காட்டும் இலக்கியங்களின் பெயர்களை வரிசைப்படுத்துக.

3Z51RF

விரிவானம்

# மொழி
## க

# வளரும் செல்வம்




சொற்கள் வரலாற்றைப் பேசுபவை. ஒவ்வொரு சொல்லிலும் இனத்தின், மொழியின் வரலாறு இருக்கிறது. தமிழ்ச் சொற்கள்வழி தமிழர் நாகரிகத்தையும் வாழ்வையும் அறியமுடியும். இதேபோலத் தமிழில் வழங்கும் பிறமொழிச் சொற்களும் அவைசார்ந்த இனத்தின், மொழியின் வரலாற்றைக் காட்டுகின்றன. தமிழ்மொழி, பிறமொழிச் சொற்களை அப்படியே ஏற்பதில்லை என்பது மரபு. அந்த வகையில் கலைச்சொல்லாக்கத்திற்கான பணிகள் இன்று முதன்மை பெற்றுள்ளன. இதுவே மொழி வளர்ச்சிக்கான வாயிலாகவும் உள்ளது. சொற்கள் புலப்படுத்தும் வரலாறு, பண்பாடு ஆகியவற்றை உரையாடல்வழிக் காண்போம்.

## உரையாடல்

### பங்கு பெறுவோர்
### ஆனந்தி, மும்தாஜ், டேவிட்

டேவிட்: ஆனந்தி, தமிழில் முதல் மதிப்பெண் பெற்றுள்ளாய். என் வாழ்த்துகள்.

ஆனந்தி: நன்றி.

மும்தாஜ்: எனக்கு ஓர் ஐயம். உன்னைக் கேட்கலாமா?

ஆனந்தி: உறுதியாக! கேள் மும்தாஜ்.

மும்தாஜ்: நாமெல்லோரும் மடிக்கணினி (Laptop) பயன்படுத்துகிறோம். கணினி தொடர்பான சொற்களை அப்படியே ஆங்கிலத்தில் வழங்குகிறோமே? அவற்றுக்கெல்லாம் தமிழ்ச்சொற்கள் உள்ளனவா ஆனந்தி?

ஆனந்தி: அவ்வாறான தமிழ்ச் சொற்கள் இப்போது எங்கும் நிறைந்துள்ளன. எடுத்துக்காட்டாக

சாப்ட்வேர் [software] – மென்பொருள்

ப்ரௌசர் [browser] – உலவி

க்ராப் [crop] – செதுக்கி

கர்சர் [cursor] – ஏவி அல்லது சுட்டி

சைபர்ஸ்பேஸ் [cyberspace] – இணையவெளி

சர்வர் [server] – வையக விரிவு வலை வழங்கி

ஃபோல்டர் [Folder] – உறை

லேப்டாப் [Laptop] – மடிக்கணினி

என்றெல்லாம் பயன்படுத்தத் தொடங்கி விட்டோம்.

டேவிட்: எனக்கும் ஐயம் இருக்கிறது.

ஆனந்தி: சொல் டேவிட்.

டேவிட்: கணிதத்தில் ஒன்று, பத்து, ஆயிரம் ஆகிய எண்ணிக்கைகளுக்கான தமிழ்ச்சொற்கள் எனக்குத் தெரியும். 1/320, 1/160 ஆகிய பின்ன எண்ணிக்கைகளுக்கான தமிழ்ச் சொற்களை எனக்குச் சொல்வாயா?

மும்தாஜ்: சொல். நானும் கேட்கிறேன்.

ஆனந்தி:

| பெயர் | எண் அளவு |
|---|---|
| முந்திரி | 1/320 |
| அரைக்காணி | 1/160 |
| அரைக்காணி முந்திரி | 3/320 |
| காணி | 1/80 |
| கால் வீசம் | 1/64 |
| அரைமா | 1/40 |
| அரை வீசம் | 1/32 |
| முக்காணி | 3/80 |
| முக்கால் வீசம் | 3/64 |
| ஒருமா | 1/20 |
| மாகாணி (வீசம்) | 1/16 |
| இருமா | 1/10 |
| அரைக்கால் | 1/8 |
| மூன்றுமா | 3/20 |
| மூன்று வீசம் | 3/16 |
| நாலுமா | 1/5 |

போன்ற பின்ன இலக்கங்களுக்கும் தமிழ்ச்சொற்கள் உள்ளன.

டேவிட்: இவையெல்லாம் புழக்கத்தில் இருந்திருந்தால் நம் எல்லோருக்கும் தெரிந்திருக்கும் இல்லையா?

ஆனந்தி: ஆம். நம் முன்னோர்கள் பயன்படுத்திய சொற்களைக் கால மாற்றத்தில் கைவிட்டுவிட்டோம். நாம் நினைத்தால் அவற்றை மீட்டெடுக்கலாம். என்ன சிந்தனை மும்தாஜ்?

மும்தாஜ்: நீ சொல்வதெல்லாம் நன்றாகப் புரிகிறது. இவ்வளவு வளர்ச்சி பெற்ற நாம் ஏன் கணினித்துறைச் சொற்களை ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்க்கிறோம்?

ஆனந்தி: நல்ல கேள்வி மும்தாஜ். ஒரு துறை எங்கு வளர்க்கப்படுகிறதோ அங்குள்ள மொழி, அத்துறையில் செல்வாக்குப் பெற்றிருக்கும். அத்துறையைப் பெறுபவர்கள் அது சார்ந்த மொழிக்கூறுகளைத் தம் மொழியில் மாற்ற வேண்டும்.

மும்தாஜ்: ஏன் மாற்ற வேண்டும்?

ஆனந்தி: வேற்று மொழிச்சொற்களை எளிதாக நாம் நினைவில் வைத்துக்கொள்ள முடியாது. அவ்வாறு நினைவில் வைத்துக் கொள்வதற்கு மேலும் நேரத்தைச் செலவிட வேண்டும். நம் சிந்தனை வேகத்தையும் இது மட்டுப்படுத்தும். சொற்கள் அந்தந்த மொழி பேசுவோரின் பேச்சுறுப்புகளுக்கு ஏற்ப அமைந்தவை. அவற்றை நாம் பேசும்போது ஒலித்திரிபு ஏற்பட்டுப் பொருள்மயக்கம் உண்டாகும். கேட்போர்க்குப் பொருள்புரியாத நிலை ஏற்படும்.

இது ஒருபுறமிருக்க ஒரு காலகட்டத்தில் தாய்மொழி சார்ந்த சொற்களின் எண்ணிக்கையைவிட வேற்று மொழிச் சொற்களின் எண்ணிக்கை மிகுதியாகும். எனவேதான் நம் வாழ்க்கையில் இடம்பெறும் அறிவியல் கருத்துகளுக்கான கலைச்சொற்களை எல்லாம் நம் மொழியிலும் உருவாக்க வேண்டிய தேவை ஏற்படுகிறது.

டேவிட்: ஆமாம். கலைச்சொற்களை ஒலிபெயர்ப்புச் செய்தோ மொழிபெயர்ப்புச் செய்தோ உருவாக்கலாம் என எங்கோ படித்திருக்கிறேன். ஆனாலும், எனக்கோர் ஐயம்.

ஆனந்தி: என்ன?

டேவிட்: வளர்ந்த துறைகளுக்கான சொற்களை வேற்று மொழிகளிலிருந்து

தமிழ் மொழி பெறுவதைப் போன்று, வேற்று மொழிகள் தமிழிலிருந்து பெற்றுள்ளனவா?

ஆனந்தி: பெற்றுள்ளன டேவிட். தமிழர்கள் பழங்காலத்திலேயே கடல்துறையில் பெரும் முன்னேற்றம் அடைந்திருந்தனர். சங்க இலக்கியத்தில் நாவாய், வங்கம், தோணி, கலம் போன்ற பலவகையான கடற்கலன்கள் இயக்கப்பட்டதற்கான குறிப்புகள் உள்ளன. இதில் தமிழ்ச்சொல்லாகிய நாவாய் என்பதே ஆங்கிலத்தில் நேவி என ஆகியுள்ளது டேவிட்.

மும்தாஜ்: தமிழரின் கடல் ஆளுமை சார்ந்த வேறு எவ்வகைச் சொற்கள் எந்தெந்த மொழிகளில் இடம்பெற்றுள்ளன ஆனந்தி?

ஆனந்தி: உலகின் தொன்மையான மொழியாகவும் செவ்வியல் மொழிகளுள் ஒன்றாகவும் திகழ்வது கிரேக்க மொழியாகும். இம் மொழியின் கடல் சார்ந்த சொற்களில்

எறிதிரை {**Ἐρύθραν** [எறுதிரான்]}, கலன் {**Γλαύκου** [கலயுகோய்]}, நீர் {**Νηρῆος** [ நீரியோஸ்]}, **Νηρέα** [நீரிய], நாவாய் {**Ναύ** [நாயு]}, தோணி {**Θῶνις** [தோணீஸ்]}

போன்ற தமிழ்ச் சொற்கள் இடம்பெற்றுள்ளன.

மும்தாஜ்: மிக வியப்பாக இருக்கிறது. கடல் சார்ந்த சொற்கள் மட்டும்தாம் தமிழிலிருந்து வேற்று மொழிகளுக்குச் சென்றுள்ளனவா?

ஆனந்தி: இல்லை மும்தாஜ், பல்வேறு துறை சார்ந்த தமிழ்ச்சொற்களும் வேற்று மொழிகளுக்குச் சென்றுள்ளன.



டேவிட்: இதைக் கேட்பதற்கு ஆவல் உண்டாகிறது. விரிவாகக் கூறுகிறாயா?

ஆனந்தி: கடல்சார் துறையில் மட்டுமல்லாது பண்டைத் தமிழர்கள் கவிதையியலிலும் முன்னேற்றம் பெற்றிருந்தனர். கவிதை சார்ந்த சொற்களைத் தமிழிலும் கிரேக்க மொழியிலும் ஒப்பாகக் காணமுடிகிறது.

தமிழில் பா என்றால் என்னவென்று உனக்குத் தெரியும். இச்சொல் கிரேக்க மொழியின் தொன்மையான காப்பியமாகிய இலியாத்தில் பாய்யியோனா (παιήονα) எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அப்போலோ என்னும் கடவுளுக்குப் பாடப்படுவது 'பா' எனக் கிரேக்கத்தில் குறிக்கப்படுகிறது.

பா வகைகளுள் ஒன்று வெண்பா என்பது உனக்குத் தெரியும். வெண்பாவின் ஓசையானது செப்பலோசை ஆகும். கிரேக்கத்தில் வெண்பா வடிவப் பாடல்கள் சாப்போ என அழைக்கப்படுகின்றன.

இது கிரேக்கத்திலிருந்து இலத்தீன் மொழிக்கு வந்து பின் ஆங்கிலத்தில் சேப்பிக் ஸ்டேன்சா என இன்று வழங்கப்படுகிறது.

பாவின் சுவைகளில் ஒன்றாக இளிவரல் என்ற துன்பச் சுவையினைத் தமிழிலக்கணங்கள் சுட்டுகின்றன. கிரேக்கத்தில் துன்பச் சுவையுடைய பாடல்கள் இளிகியா (ελεγεία) என அழைக்கப்படுகின்றன.

டேவிட்: நீ கூறும் இலியாத் காப்பியம் கி.மு. எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்தது அல்லவா?

ஆனந்தி: ஆமாம்.

டேவிட்: இன்று வேற்று நாட்டினருடன் தொடர்புகொள்வதற்குக் கணினி உள்ளது, சென்றுவர வானூர்தி உள்ளது. அன்றைய காலகட்டத்தில் அவர்கள் எவ்வாறு தகவல் தொடர்புகொண்டிருந்தனர் ஆனந்தி?

ஆனந்தி: நல்ல கேள்வி. நான் முன்னரே தமிழரின் கடல் ஆளுமை பற்றி விளக்கினேன் அல்லவா. தமிழரும் கிரேக்கரும் கடல்வழியாகவும் தொடர்புகொண்டனர்.

மும்தாஜ்: விளக்கமாகச் சொல் ஆனந்தி.

ஆனந்தி: கிரேக்கத்திலிருந்து தமிழ்நாட்டிற்குக் கடலில் எவ்வழியாக வரவேண்டும் என்பதைக் கிரேக்க நூலொன்று விளக்குகிறது.

டேவிட்: எவ்வளவு வியப்பாக உள்ளது. அந்நூலில் தமிழ்நாடு பற்றியெல்லாம் குறிப்பிடப்பட்டுள்ளதா ஆனந்தி?

ஆனந்தி: ஆம். குறிப்பிடப்பட்டுள்ளது டேவிட். அவ்வளவு ஏன், எறிதிரேசியன் ஆப் த பெரிபுலஸ் (Periplus of the Erythraean Sea) என்னும் அந்நூலின் பெயரிலேயே தமிழ்ச்சொல் இருப்பதாகக் கூறுகின்றனர்.

மும்தாஜ்: அப்படியா? என்ன சொல் அது?

ஆனந்தி: எறிதிரை என்பதுதான் அது. கடலைச் சார்ந்த பெரிய புலம் என்பதே எறிதிரேசியன் ஆப் த பெரிபுலஸ் என ஆகியுள்ளது. இதுபோல் தொல்தமிழின் வளர்ச்சி தொடரவும் நிலைத்திருக்கவும் நம்மாலான பணிகளைச் செய்ய வேண்டும்.

டேவிட்: நம் தமிழ்மொழி நிலைத்திருக்க நாம் என்ன செய்ய வேண்டும்?

ஆனந்தி: வளர்ந்துகொண்டிருக்கும் அறிவியல் துறைக் கலைச்சொற்களை உடனுக்குடன் தமிழ்மொழியில் மொழி பெயர்த்து அத்துறைகளை மேலும் வளர்க்க வேண்டும். அப்போதுதான் நம் தமிழ்மொழி அறிவுக்கான கருவியாக மாறும். தமிழில் உள்ள தத்துவம், அரசியல் ஆகிய துறைகளின் சிந்தனைகளை எல்லாம் பிற மொழிகளுக்குக் கொண்டு செல்லவேண்டும். இதுவும் நம் தமிழ்மொழி நிலைத்திருக்க நாம் செய்யவேண்டிய இன்றியமையாத பணியாகும்.

மும்தாஜ்: ஆமாம்... ஆமாம். சரியாகச் சொன்னாய்.

நம்மொழி தொடர்ந்து நிலைத்திருக்க வேண்டுமானால் வளர்ந்துவரும் மருத்துவம், பொறியியல், கணினி, விண்வெளி போன்ற பிறதுறைகளின் பதிவுகள் எல்லாம் உடனுக்குடன் நம் மொழிக்குக் கொண்டுவரப்பட வேண்டும். நம்மொழியில் புதிய புதிய சொல்வளம் பெருகவேண்டும்.

ஆனந்தி: நன்றாகச் சொன்னாய் மும்தாஜ். நாமும் நம்மாலான பணிகளைத் தொடர்ந்து செய்வோம்.

டேவிட், மும்தாஜ்: ஆம். அப்படியே செய்வோம்.

(மூவரும் விடைபெற்றுச் சென்றனர்)

## தமிழ் எண்கள் அறிவோம்.

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| க | உ | ங | ச | ரு | சு | எ | அ | கூ | க0 / ய |

## கற்பவை கற்றபின்...

1. நீங்கள் நாள்தோறும் வகுப்பறையில் மிகுதியாகப் பயன்படுத்தும் சொற்களைப் பட்டியலிட்டு, அவற்றில் இடம்பெற்றுள்ள பிறமொழிச் சொற்களுக்கு நிகரான தமிழ்ச்சொற்களை அறிந்து எழுதுக.

| சொற்பட்டியல் | பிறமொழிச் சொற்கள் | நிகரான தமிழ்ச் சொற்கள் |
|---|---|---|
| வகுப்பு, புத்தகம், பிளாக் போர்டு, பேனா, பென்சில், நோட்டு, | ப்ளாக்போர்டு (BLACK BOARD) | கரும்பலகை |
| ……………………………… | ……………………………… | ……………………………… |
| ……………………………… | ……………………………… | ……………………………… |

2. உரையாடலை நிறைவு செய்க. அவற்றுள் இடம்பெறும் பிறமொழிச் சொற்களைத் தமிழாக்கம் செய்க.

அருண் : ஹலோ! நண்பா!

நளன் : ………………………….

அருண் : ஆமாம்! டென் இயர்ஸ் ஆச்சு இல்லையா?

நளன் : ஆமாம். நான் இப்ப மல்ட்டி நேஷனல் கம்பெனி ஒன்றில் பிராஜக்ட் மேனேஜரா இருக்கேன். நீ?

அரண் : …………………………

நளன் : அந்த காலேஜ்லதான் என் தம்பி பஸ்டு இயர் படிக்கிறான்.

அருண் : …………………………….

நளன் : பை! பை!

கற்கண்டு

மொழி
க

# தொடர் இலக்கணம்

**எட்வர்டு வந்தான்.**

இந்தச் சொற்றொடரில் பெயர்ச்சொல், எட்வர்டு என்பதாகும். இந்தச் சொற்றொடர் எழுவதற்கு அடிப்படையாக அமைந்த பெயர்ச்சொல்லையே எழுவாய் என்கிறோம்.

**கனகாம்பரம் பூத்தது.**

இந்தச் சொற்றொடரில் வினைச்சொல், பூத்தது. இந்த வினைச்சொல்லே பயனிலை ஆகும். ஒரு தொடரில் பயன் நிலைத்து இருக்கும் இடத்தைப் பயனிலை என்கிறோம்.

**மீனா கனகாம்பரத்தைச் சூடினாள்.**

இத்தொடரில், சொற்றொடர் எழுவதற்குக் காரணமாக அமைந்த மீனா என்னும் பெயர்ச்சொல்லே எழுவாய் ஆகும். அவ்வெழுவாயின் பயனிலை சூடினாள் என்பதாகும். எனில், மற்றொரு பெயர்ச்சொல்லான கனகாம்பரம் என்பது யாது? அது செயப்படுபொருள் என்று அழைக்கப்படுகிறது. எழுவாய் ஒரு வினையைச் செய்ய அதற்கு அடிப்படையாய்த் தேர்ந்தெடுக்கப்பட்ட பொருளே, செயப்படுபொருள் ஆகும்.

ஒரு தொடரில் எழுவாயும், செயப்படு பொருளும் பெயர்ச்சொல்லாகவும் பயனிலை வினைமுற்றாகவும் இருக்கும். பயனிலை, அந்தத் தொடரின் பயன் நிலைத்து இருக்கும் இடமாகும். ஒரு தொடரில் செயப்படுபொருள் இருக்க வேண்டும் என்கிற கட்டாயம் இல்லை. செயப்படுபொருள் தோன்றும் தொடர், விளக்கமாக இருக்கும்.

**படித்தாய்.**

இத்தொடரில் படித்தாய் என்பது பயனிலை. நீ என்னும் எழுவாய் வெளிப்படையாகத் தெரியவில்லை. இதைத் தோன்றா எழுவாய் என்று கூறுகிறோம்.

**நான் வந்தேன்.**

இத்தொடரில் வினைமுற்று பயனிலையாக வந்தது. இது வினைப் பயனிலை எனப்படும்.

**சொன்னவள் கலா.**

இங்கு கலா என்னும் பெயர்ச்சொல் பயனிலையாக வந்துள்ளது. இது பெயர்ப் பயனிலை எனப்படும்.

**விளையாடுபவன் யார்?**

இங்கு யார் என்னும் வினாச்சொல் பயனிலையாக வந்துள்ளது. இது வினாப் பயனிலை எனப்படும்.

சில இடங்கள் தவிர, ஒரு சொற்றொடரில் எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் மூன்றும் இந்த வரிசையில்தான் வரவேண்டும் என்று எந்தக் கட்டுப்பாடும் இல்லை. தமிழின் தொடர் அமைப்பின் சிறப்புகளுள் இதுவும் ஒன்று.

எடுத்துக்காட்டு: நான் பாடத்தைப் படித்தேன் (எழுவாய், செயப்படுபொருள், பயனிலை)

பாடத்தை நான் படித்தேன் (செயப்படுபொருள், எழுவாய், பயனிலை)

படித்தேன் நான் பாடத்தை (பயனிலை, எழுவாய், செயப்படுபொருள்)

நான் படித்தேன் பாடத்தை (எழுவாய், பயனிலை, செயப்படுபொருள்)

பாடத்தைப் படித்தேன் நான் (செயப்படுபொருள், பயனிலை, எழுவாய் )

**நல்ல நூல் ஒன்று படித்தேன்.**

இத்தொடரில் நல்ல என்னும் சொல், எழுவாயாக வரும் பெயர்ச்சொல்லுக்கு அடையாக வருகிறது. இவ்வாறு அமைவதனைப் பெயரடை என்கிறோம்.

**மகிழ்நன் மெல்ல வந்தான்.**

இத்தொடரில் மெல்ல என்னும் சொல், வந்தான் என்னும் வினைப் பயனிலைக்கு அடையாக வருகிறது. இதை வினையடை என்கிறோம்.

## வினை வகைகள் – தன்வினை, பிறவினை



மாணவர்கள் கால்பந்து விளையாடிக்கொண்டிருக்கின்றார்கள். எங்கும் விளையாட்டு, மகிழ்ச்சியின் ஆரவாரம். கண்ணன் முகமதுவை நோக்கி, "பந்தை என்னிடம் உருட்டு" என்று கத்தினான். முகமது பந்தைக் கண்ணனிடம் உருட்டினான். பந்து உருண்டது. கண்ணன் முகமது மூலம் பந்தை உருட்டவைத்தான்.

மேற்கண்ட சூழலில்,

பந்து உருண்டது என்பது தன்வினை.

உருட்டவைத்தான் என்பது பிறவினை.

எழுவாய் ஒரு வினையைச் செய்தால் அது தன்வினை எனப்படும்.

எழுவாய் ஒரு வினையைச் செய்ய வைத்தால் அது பிறவினை எனப்படும்

பிறவினைகள், வி, பி போன்ற விகுதிகளைக் கொண்டும் செய், வை, பண்ணு போன்ற துணை வினைகளை இணைத்தும் உருவாக்கப்படுகின்றன.

| | |
|---|---|
| **தன்வினை** | அவன் திருந்தினான்<br>அவர்கள் நன்றாகப் படித்தனர் |
| **பிறவினை** | அவனைத் திருந்தச் செய்தான்<br>தந்தை மகனை நன்றாகப் படிக்க வைத்தார்.<br>பள்ளிக்குப் புத்தகங்கள் வருவித்தார். |

# செய்வினை, செயப்பாட்டுவினை



அப்பா சொன்னார், "குமுதா, இலையில் உள்ள இட்டிலியை விரைந்து சாப்பிடு. அடுத்துத் தோசை வரப்போகிறது." அவள் சாப்பிட்டு முடிப்பதற்குள், தோசை வைக்கப்பட்டது.

அப்பா சொன்னார் – செய்வினைத் தொடர்

தோசை வைக்கப்பட்டது – செயப்பாட்டுவினைத் தொடர்

இது போலவே, பாட்டுப் பாடுகிறாள் – செய்வினைத் தொடர்

பாட்டுப் (அவளால்) பாடப்பட்டது – செயப்பாட்டுவினைத் தொடர்

### தெரிந்து தெளிவோம்

செய்பவரை முதன்மைப்படுத்தும் வினை செய்வினை; செயப்படுபொருளை முதன்மைப்படுத்தும் வினை செயப்பாட்டு வினை என்பதை நினைவில் கொள்க.

'படு' என்னும் துணை வினைச்சொல் செயப்பாட்டு வினைத்தொடரில் சேர்ந்துவிடுகிறது.

'படு' என்பதைப் போல, 'உண், பெறு' முதலான துணைவினைகள் செயப்பாட்டு வினைகளாக அமைகின்றன. அவற்றைப் போலவே, எச்சங்களுடன் சேர்ந்து 'ஆயிற்று, போயிற்று, போனது' முதலான துணை வினைகள் செயப்பாட்டுவினைகளை உருவாக்குகின்றன.

கோவலன் கொலையுண்டான்.
ஓவியம் குமரனால் வரையப்பட்டது.
வீடு கட்டியாயிற்று.
சட்டி உடைந்து போயிற்று.
பணம் காணாமல் போனது.

## பயன்பாட்டுத் தொடர்கள்

| | |
|---|---|
| அப்துல் நேற்று வந்தான் | தன்வினைத் தொடர் |
| அப்துல் நேற்று வருவித்தான் | பிறவினைத் தொடர் |
| கவிதா உரை படித்தாள் | செய்வினைத் தொடர் |
| உரை கவிதாவால் படிக்கப்பட்டது | செயப்பாட்டுவினைத் தொடர் |
| குமரன் மழையில் நனைந்தான் | உடன்பாட்டுவினைத் தொடர் |
| குமரன் மழையில் நனையவில்லை | எதிர்மறைவினைத் தொடர் |
| என் அண்ணன் நாளை வருவான் | செய்தித் தொடர் |
| எவ்வளவு உயரமான மரம்! | உணர்ச்சித் தொடர் |
| உள்ளே பேசிக்கொண்டிருப்பவர் யார்? | வினாத் தொடர் |
| பூக்களைப் பறிக்காதீர் | கட்டளைத் தொடர் |
| இது நாற்காலி<br>அவன் மாணவன் | பெயர்ப் பயனிலைத் தொடர் |

## பகுபத உறுப்பிலக்கணம்

பதம்(சொல்) இருவகைப் படும். அவை பகுபதம், பகாப்பதம் ஆகும். பிரிக்கக்கூடியதும், பிரித்தால் பொருள் தருவதுமான சொல் பகுபதம் எனப்படும். இது பெயர்ப் பகுபதம், வினைப் பகுபதம் என இரண்டு வகைப்படும்.

பகுபத உறுப்புகள் ஆறு வகைப்படும்.

| | |
|---|---|
| **பகுதி** (முதனிலை) | சொல்லின் முதலில் நிற்கும்; பகாப் பதமாக அமையும்; வினைச்சொல்லில் ஏவலாகவும், பெயர்ச் சொல்லில் அறுவகைப் பெயராகவும் அமையும். |
| **விகுதி** (இறுதிநிலை) | சொல்லின் இறுதியில் நின்று திணை, பால், எண், இடம் காட்டுவதாகவும் அமையும். |
| **இடைநிலை** | பகுதிக்கும் விகுதிக்கும் இடையில் நின்று காலம் காட்டும். |
| **சந்தி** | பகுதியையும் பிற உறுப்புகளையும் இணைக்கும்; பெரும்பாலும் பகுதிக்கும் இடைநிலைக்கும் இடையில் வரும். |
| **சாரியை** | பகுதி, விகுதி, இடைநிலைகளைச் சார்ந்து வரும்; பெரும்பாலும் இடைநிலைக்கும் விகுதிக்கும் இடையில் வரும். |
| **விகாரம்** | தனி உறுப்பு அன்று; மேற்கண்ட பகுபத உறுப்புகளில் ஏற்படும் மாற்றம். |

### பகுதி:

ஊரன் – ஊர், வரைந்தான் – வரை

நடிகன் – நடி, மடித்தார் – மடி

பார்த்தான் – பார், மகிழ்ந்தாள் – மகிழ்

### விகுதி:

| | | |
|---|---|---|
| படித்தான் | ஆன் – ஆண்பால் வினைமுற்று விகுதி | அன், ஆன் |
| பாடுகிறாள் | ஆள் – பெண்பால் வினைமுற்று விகுதி | அள், ஆள் |
| பெற்றார் | ஆர் – பலர்பால் வினைமுற்று விகுதி | அர், ஆர் |
| நீந்தியது | து – ஒன்றன்பால் வினைமுற்று விகுதி | து, று |
| ஓடின | அ – பலவின்பால் வினைமுற்று விகுதி | அ, ஆ |
| சிரிக்கிறேன் | ஏன் – தன்மை ஒருமை வினைமுற்று விகுதி | என், ஏன் |
| உண்டோம் | ஓம் – தன்மைப் பன்மை வினைமுற்று விகுதி | அம், ஆம், எம், ஏம், ஓம் |
| செய்தாய் | ஆய் – முன்னிலை ஒருமை வினைமுற்று விகுதி | ஐ, ஆய், இ |
| பாரீர் | ஈர் – முன்னிலைப் பன்மை வினைமுற்று விகுதி | இர், ஈர் |
| அழகிய, பேசும் | அ, உம் – பெயரெச்ச விகுதிகள் | அ, உம் |
| வந்து, தேடி | உ, இ – வினையெச்ச விகுதிகள் | உ, இ |
| வளர்க | க – வியங்கோள் வினைமுற்று விகுதி | க, இய, இயர் |
| முளைத்தல் | தல் – தொழிற்பெயர் விகுதி | தல், அல், ஐ, கை, சி, பு... |

### இடைநிலைகள்

| | | |
|---|---|---|
| வென்றார் | ற்-இறந்தகால இடைநிலை | த், ட், ற், இன் |
| உயர்கிறான் | கிறு – நிகழ்கால இடைநிலை | கிறு, கின்று, ஆநின்று |
| புகுவான், செய்கேன் | வ், க் – எதிர்கால இடைநிலைகள் | ப், வ், க் |
| பறிக்காதீர் | ஆ – எதிர்மறை இடைநிலை | இல், அல், ஆ |
| மகிழ்ச்சி, அறிஞன் | ச், ஞ் – பெயர் இடைநிலைகள் | ஞ், ந், வ், ச், த் |

### சந்தி

| | | |
|---|---|---|
| உறுத்தும் | த் - சந்தி | த், ப், க் |
| பொருந்திய | ய் – உடம்படுமெய் சந்தி | ய், வ் |

### சாரியை

| | | |
|---|---|---|
| நடந்தனன் | அன் – சாரியை | அன், ஆன், இன், அல், அற்று, இற்று, அத்து, அம், தம், நம், நும், ஏ, அ, உ, ஐ, கு, ன் |

### எழுத்துப்பேறு

பகுபத உறுப்புகளுள் அடங்காமல் பகுதி, விகுதிக்கு நடுவில் காலத்தை உணர்த்தாமல் வரும் மெய்யெழுத்து எழுத்துப்பேறு ஆகும். பெரும்பாலும் 'த்' மட்டுமே வரும். சாரியை இடத்தில் 'த்' வந்தால் அது எழுத்துப்பேறு.

### எடுத்துக்காட்டுகள்

வந்தனன்: வா(வ) + த் (ந்) + த் + அன் + அன்

வா – பகுதி ('வ' ஆனது விகாரம்)
த்(ந்) – சந்தி ('ந்' ஆனது விகாரம்)
த் – இறந்தகால இடைநிலை
அன் – சாரியை
அன் – ஆண்பால் வினைமுற்று விகுதி

செய்யாதே: செய் + ய் + ஆ + த் + ஏ

செய் – பகுதி
ய் – சந்தி
ஆ – எதிர்மறை இடைநிலை
த் – எழுத்துப்பேறு
ஏ – முன்னிலை ஒருமை ஏவல் வினைமுற்று விகுதி

## தமிழ் எண்களில் எழுதுக.

| | |
|---|---|
| பன்னிரண்டு | |
| பதின்மூன்று | |
| நாற்பத்து மூன்று | |
| எழுபத்தெட்டு | |
| தொண்ணூறு | |

## கற்பவை கற்றபின்...

**1. தொடர்களை மாற்றி உருவாக்குக.**

அ) பதவியைவிட்டு நீக்கினான் - இத்தொடரைத் தன்வினைத் தொடராக மாற்றுக.

ஆ) மொழியியல் அறிஞர்கள் திராவிட மொழிகளை ஆய்வு செய்தனர்– இத்தொடரைப் பிறவினைத் தொடராக மாற்றுக.

இ) உண்ணப்படும் தமிழ்த்தேனே – இத்தொடரைச் செய்வினைத் தொடராக மாற்றுக.

ஈ) திராவிட மொழிகளை மூன்று மொழிக் குடும்பங்களாகப் பகுத்துள்ளனர் – இத்தொடரைச் செயப்பாட்டுவினைத் தொடராக மாற்றுக.

உ) நிலவன் சிறந்த பள்ளியில் படித்தார் – இத்தொடரைக் பிறவினைத் தொடராக மாற்றுக.

**2. சொற்களைத் தொடர்களாக மாற்றுக.**

அ) மொழிபெயர் – தன்வினை, பிறவினைத் தொடர்களாக.

ஆ) பதிவுசெய் – செய்வினை, செயப்பாட்டுவினைத் தொடர்களாக.

இ) பயன்படுத்து – தன்வினை, பிறவினைத் தொடர்களாக.

ஈ) இயங்கு - செய்வினை, செயப்பாட்டுவினைத் தொடர்களாக.

**3. பொருத்தமான செயப்படுபொருள் சொற்களை எழுதுக.**

(தமிழிலக்கிய நூல்களை, செவ்விலக்கியங்களைக், நம்மை, வாழ்வியல் அறிவைக்)

அ) தமிழ் .............................. கொண்டுள்ளது.

ஆ) நாம் ___________ வாங்கவேண்டும்.

இ) புத்தகங்கள் _____________ கொடுக்கின்றன.

ஈ) நல்ல நூல்கள் _________ நல்வழிப்படுத்துகின்றன.

**4. பொருத்தமான பெயரடைகளை எழுதுக.**

(நல்ல, பெரிய, இனிய, கொடிய)

அ) எல்லோருக்கும் _______________ வணக்கம்.

ஆ) அவன் _____________நண்பனாக இருக்கிறான்.

இ) _____________ ஓவியமாக வரைந்து வா.

ஈ) ______ விலங்கிடம் பழகாதே.

**5. பொருத்தமான வினையடைகளைத் தேர்வுசெய்க.**

(அழகாக, பொதுவாக, வேகமாக, மெதுவாக)

அ) ஊர்தி _____________ சென்றது.

ஆ) காலம் ____________ ஓடுகிறது.

இ) சங்க இலக்கியம் வாழ்க்கையை _________ காட்டுகிறது.

ஈ) இணையத்தளத்திலிருந்து பதிவிறக்கம் செய்யப்பட்டதை அனைவருக்கும்____ காட்டு.

**6. அடைப்புக் குறிக்குள் கேட்டுள்ளவாறு தொடர்களை மாற்றி எழுதுக.**

அ) நம் முன்னோர் இயற்கையோடு இயைந்த வாழ்வு நடத்தினர். (வினாத்தொடராக)

ஆ) இசையின்றி அமையாது பாடல். (உடன்பாட்டுத் தொடராக)

இ) நீ இதைச் செய் எனக் கூறினேன் அல்லவா? (கட்டளைத் தொடராக)

**7. வேர்ச்சொற்களை வைத்துச் சொற்றொடர்களை உருவாக்குக.**

அ) தா (உடன்பாட்டுவினைத் தொடர், பிறவினைத் தொடர்)

ஆ) கேள் (வினாத் தொடர்)

இ) கொடு (செய்தித் தொடர், கட்டளைத் தொடர்)

ஈ) பார் (செய்வினைத் தொடர், செயப்பாட்டுவினைத் தொடர், பிறவினைத் தொடர்)

**8. சிந்தனை வினா**

அ) அவை யாவும் இருக்கின்றன.

அவை யாவையும் இருக்கின்றன.

அவை யாவும் எடுங்கள்.

அவை யாவையும் எடுங்கள்.

அவை யாவற்றையும் எடுங்கள்

3ZDHT3

மேற்கண்ட சொற்றொடர்கள் சரியானவையா? விளக்கம் தருக.

ஆ) நீங்கள் ஒரு நாளிதழில் பணிபுரிகிறீர்கள். அங்குப் புதிய வார இதழ் ஒன்று தொடங்கவிருக்கிறார்கள். அதற்காக அந்நாளிதழில் விளம்பரம் தருவதற்குப் பொருத்தமான சொற்றொடர்களை வடிவமைத்து எழுதுக.

இ) சொற்றொடர் வகைகளை அறிந்து, அவை எவ்வாறு பேசுவதற்கும் எழுதுவதற்கும் பயன்படுகின்றன என்பதைப் பதிவு செய்க.

ஈ) வந்திருப்பவர்கள் அனைவரும் இருக்கையில் அமருமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். இத்தொடர் ஆங்கிலத்திலிருந்து நேரடியான தமிழ் மொழிபெயர்ப்பாக இருந்தாலும் மொழி மரபை இத்தொடரில் பேணுகிறோமா?

# மதிப்பீடு

**பலவுள் தெரிக.**

1. குழுவில் விடுபட்ட வரிசையைத் தேர்ந்தெடுக்க.

| குழு – 1 | குழு – 2 | குழு – 3 | குழு – 4 |
|---|---|---|---|
| நாவாய் | மரம் | துறை | தன்வினை |
| ……………. | ……………. | ……………. | ……………. |

அ. 1– வங்கம், 2– மானு, 3– தாழிசை, 4– பிறவினை

ஆ. 1– தாழிசை, 2– மானு, 3– பிறவினை, 4– வங்கம்

இ. 1– பிறவினை, 2– தாழிசை, 3– மானு, 4– வங்கம்

ஈ. 1– மானு, 2– பிறவினை, 3– வங்கம், 4– தாழிசை

2. தமிழ் விடு தூது ……………. என்னும் இலக்கிய வகையைச் சேர்ந்தது.

அ. தொடர்நிலைச் செய்யுள் ஆ. புதுக்கவிதை

இ. சிற்றிலக்கியம் ஈ. தனிப்பாடல்

3. விடுபட்ட இடத்திற்குப் பொருத்தமான விடை வரிசையைக் குறிப்பிடுக.

அ. …………….இனம் ஆ. வண்ணம் …………….

இ. …………….குணம் ஈ. வனப்பு …………….

க) மூன்று, நூறு, பத்து, எட்டு உ) எட்டு, நூறு, பத்து, மூன்று

ங) பத்து, நூறு, எட்டு, மூன்று ச) நூறு, பத்து, எட்டு, மூன்று

4. "காலம் பிறக்கும்முன் பிறந்தது தமிழே! – எந்தக்
காலமும் நிலையாய் இருப்பதும் தமிழே!".......... இவ்வடிகளில் பயின்று வரும் நயங்கள் –

அ. முரண், எதுகை, இரட்டைத் தொடை ஆ. இயைபு, அளபெடை, செந்தொடை

இ. மோனை, எதுகை, இயைபு ஈ. மோனை, முரண், அந்தாதி

5. <u>அழியா</u> வனப்பு, <u>ஒழியா</u> வனப்பு, <u>சிந்தா</u> மணி – அடிக்கோடிட்ட சொற்களுக்கான இலக்கணக்குறிப்பு –

அ. வேற்றுமைத்தொகை ஆ. ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்

இ. பண்புத்தொகை ஈ. வினைத்தொகை

## குறுவினா

1. நீங்கள் பேசும் மொழி எந்த இந்திய மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தது?
2. தமிழோவியம் கவிதையில் உங்களை மிகவும் ஈர்த்த அடிகள் குறித்து எழுதுக.
3. கண்ணி என்பதன் விளக்கம் யாது?
4. கணினி சார்ந்து நீங்கள் அறிந்த எவையேனும் ஐந்து தமிழ்ச் சொற்களைத் தருக .
5. அகமாய்ப் புறமாய் இலக்கியங்கள் – அவை

   அமைந்ததைச் சொல்லும் இலக்கணங்கள் – இலக்கியங்களின் பாடுபொருள்களாக இவ்வடிகள் உணர்த்துவன யாவை?
6. செய்வினையைச் செயப்பாட்டு வினையாக மாற்றும் துணைவினைகள் இரண்டினை எடுத்துக்காட்டுடன் எழுதுக.
7. வீணையோடு வந்தாள், கிளியே பேசு – தொடரின் வகையைச் சுட்டுக.

## சிறுவினா

1. சங்க இலக்கியத்தில் காணப்படும் கடற்கலனுக்குரிய சொல் கிரேக்க மொழியில் எவ்வாறு மாற்றம் பெற்றுள்ளது?
2. திராவிடமொழிகளின் பிரிவுகள் யாவை? அவற்றுள் உங்களுக்குத் தெரிந்த மொழிகளின் சிறப்பியல்புகளை விளக்குக.
3. மூன்று என்னும் எண்ணுப்பெயர் பிற திராவிட மொழிகளில் எவ்வாறு இடம்பெற்றுள்ளது?
4. காலந்தோறும் தமிழ்மொழி தன்னை எவ்வாறு புதுப்பித்துக் கொள்கிறது?
5. வளரும் செல்வம் - உரையாடலில் குறிப்பிடப்படும் பிறமொழிச்சொற்களைத் தொகுத்து அவற்றிற்கு இணையான தமிழ்ச்சொற்களைப் பட்டியலிடுக
6. தன்வினை, பிறவினை - எடுத்துக்காட்டுகளுடன் வேறுபடுத்திக் காட்டுக.
7. "புதுக்கோலம் புனைந்து தமிழ் வளர்ப்பாய்"- உங்கள் பங்கினைக் குறிப்பிடுக.

## நெடுவினா

1. திராவிட மொழிகளின் ஒப்பியல் ஆய்விற்குத் தமிழே பெருந்துணையாக இருக்கிறது என்பதை எடுத்துக்காட்டுகளுடன் விவரிக்க.
2. தூது அனுப்பத் தமிழே சிறந்தது என்பதற்குத் தமிழ்விடுதூது காட்டும் காரணங்களை விளக்கி எழுதுக.

## மொழியை ஆள்வோம்!

### படித்துச் சுவைக்க.

விறகுநான்; வண்டமிழே! உன்னருள் வாய்த்த
பிறகுநான் வீணையாய்ப் போனேன்; – சிறகுநான்
சின்னதாய்க் கொண்டதொரு சிற்றீசல்; செந்தமிழே!
நின்னால் விமானமானேன் நான்!

தருவாய் நிழல்தான் தருவாய்; நிதம்என்
வருவாய் எனநீ வருவாய்; – ஒருவாய்
உணவாய் உளதமிழே! ஓர்ந்தேன்; நீ பாட்டுக்
கணவாய் வழிவரும் காற்று!

– கவிஞர் வாலி

### மொழிபெயர்க்க.

1. Linguistics – ......................................
2. Literature– ......................................
3. Philologist – ......................................
4. Polyglot – ......................................
5. Phonologist – ......................................
6. Phonetics – ......................................

### அடைப்புக்குள் உள்ள சொற்களைப் பொருத்தமான வினைமுற்றாக மாற்றி, கோடிட்ட இடங்களில் எழுதுக.

1. இந்திய மொழிகளின் மூலமும் வேருமாகத் தமிழ் ................. (திகழ்)
2. வைதேகி நாளை நடைபெறும் கவியரங்கில் ................ (கலந்துகொள் )
3. உலகில் மூவாயிரம் மொழிகள் ............................. (பேசு)
4. குழந்தைகள் அனைவரும் சுற்றுலா ................. (செல்)
5. தவறுகளைத் ………… (திருத்து)

### வடிவம் மாற்றுக.

பின்வரும் பத்தியைப் படித்துப் பார்த்து, அச்செய்தியை உங்கள் பள்ளி அறிவிப்புப் பலகையில் இடம்பெறும் அறிவிப்பாக மாற்றுக.

மருதூர் அரசு மேல்நிலைப்பள்ளி இருபத்தைந்து ஆண்டுகளாகச் சிறந்த கல்விப்பணியை வழங்கி வருகிறது. இப்பள்ளி, சிறந்த கவிஞராகத் திகழும் இன்சுவை முதலான பன்முகப் படைப்பாளிகளை உருவாக்கிய பெருமை கொண்டது. ஒரு சோற்றுப் பதமாய் மருதூர்ப் பள்ளி மாணவி பூங்குழலி படைத்த "உள்ளங்கையில் உலகம்" என்ற நூலின் வெளியீட்டு விழா 21 ஜூன் திங்கள், பிற்பகல் 3:00 மணியளவில் நடைபெற உள்ளது. அவ்விழாவில் (கின்னஸ் சாதனை படைத்த) முன்னாள் மாணவர் இன்சுவை நூலை வெளியிட்டு, சிறப்புரை ஆற்றுவார். மருதூர்ப் பள்ளி விழா அரங்கத்தில் நிகழும் இந்நூல் வெளியீட்டு விழாவில் கலந்துகொள்ள, அனைவரையும் அழைக்கின்றோம்.

### தொடரைப் பழமொழிகொண்டு நிறைவு செய்க.

1. இளமையில் கல்வி …………………… 2. சித்திரமும் கைப்பழக்கம் ………………………
3. கல்லாடம் படித்தவரோடு …………… 4. கற்றோர்க்குச் சென்ற …………………………….

### கடிதம் எழுதுக.

உங்களின் நண்பர், பிறந்த நாள் பரிசாக அனுப்பிய எழுத்தாளர் எஸ். இராமகிருஷ்ணனின், "கால்முளைத்த கதைகள்" என்னும் நூல் குறித்த கருத்துகளைக் கடிதமாக எழுதுக.

### நயம் பாராட்டுக.

*விரிகின்ற நெடுவானில், கடற்பரப்பில்*
*விண்ணோங்கு பெருமலையில், பள்ளத்தாக்கில்*
*பொழிகின்ற புனலருவிப் பொழிலில், காட்டில்*
*புல்வெளியில், நல்வயலில், விலங்கில், புள்ளில்*
*தெரிகின்ற பொருளிலெல்லாம் திகழ்ந்து நெஞ்சில்*
*தெவிட்டாத நுண்பாட்டே, தூய்மை ஊற்றே,*
*அழகு என்னும் பேரொழுங்கே, மெய்யே, மக்கள்*
*அகத்திலும் நீ குடியிருக்க வேண்டுவேனே!*

– *ம.இலெ. தங்கப்பா*

### நிகழ்ச்சி நிரல் வடிவமைக்க.

உங்கள் பள்ளி இலக்கிய மன்றத்தின் சார்பில் நடைபெறவிருக்கும் உலகத் தாய்மொழி நாள் (பிப்ரவரி 21) விழாவிற்கான நிகழ்ச்சி நிரல் ஒன்றினை வடிவமைக்க.

## மொழியோடு விளையாடு

### அந்தாதிச் சொற்களை உருவாக்குக.

அத்தி, குருவி, விருது, இனிப்பு, வரிசையாக.

(எ.கா) அத்தி
திகைப்பு
புகழ்ச்சி
சிரிப்பு
புன்னகை
கைபேசி
சிறப்பு
புதுமை
மைனா

### அகராதியில் காண்க.

நயவாமை, கிளத்தல், கேழ்பு, செம்மல், புரிசை.

**கொடுக்கப்பட்ட வேர்ச்சொற்களைப் பயன்படுத்தி விடுபட்ட கட்டங்களில் காலத்திற்கேற்ற வினைமுற்றுகளை நிறைவு செய்க.**

| வா | | | |
|---|---|---|---|
| | இறந்த காலம் | நிகழ்காலம் | எதிர்காலம் |
| நான் | வந்தேன் | | |
| நாங்கள் | | | வருவோம் |
| நீ | | வருகிறாய் | |
| நீங்கள் | வந்தீர்கள் | | |
| அவன் | | வருகிறான் | |
| அவள் | | | |
| அவர் | வந்தார் | | |
| அவர்கள் | | | |
| அது | | | வரும் |
| அவை | | வருகின்றன | |

தா, காண், பெறு, நீந்து, பாடு, கொடு போன்ற வேர்ச்சொற்களைப் பயன்படுத்தி மேற்கண்ட கட்டத்தினைப் போன்று காலத்திற்கேற்ற வினைமுற்றுகளை அமைத்து எழுதுக.

**அடைப்புக்குள் உள்ள சொற்களைக் கொண்டு எழுவாய், வினை அடி, வினைக்குப் பொருத்தமான தொடர் அமைக்க. (திடலில், போட்டியில், மழையில், வேகமாக, மண்ணை)**

(எ.கா) நான் திடலில் ஓடினேன் (தன்வினை).

திடலில் மிதிவண்டியை ஓட்டினேன் (பிறவினை).

| எழுவாய்/ பெயர் | வினை அடி | தன்வினை | பிறவினை |
|---|---|---|---|
| காவியா | வரை | | |
| கவிதை | நனை | | |
| இலை | அசை | | |
| மழை | சேர் | | |

**காட்சியைக் கண்டு கவினுற எழுதுக.**



..........................................................................

..........................................................................

..........................................................................

..........................................................................

## செயல் திட்டம்

நீங்கள் வாழும் பகுதியில் மக்கள் பேசும் மொழிகளைப் பட்டியலிட்டு அம்மொழி பேசப்படுகின்ற இடங்களை நிலப்படத்தில் வண்ணமிட்டுக் காட்டுக.

## நிற்க அதற்குத் தக...

உங்களுடைய நாட்குறிப்பில் இடம்பெற்ற ஒரு வாரத்திற்குரிய மகிழ்ச்சியான செய்திகளைத் தொகுத்து அட்டவணைப்படுத்துக.

| | |
|---|---|
| திங்கள் | வருத்தம் தெரிவிக்கிறேன், பொறுத்துக் கொள்ளவும் ஆகிய சொற்றொடர்களை இன்று இரண்டு முறை வகுப்பில் பயன்படுத்தினேன். இதனால் புதிய நண்பர் கிடைத்தார். |
| செவ்வாய் | |
| புதன் | |
| வியாழன் | |
| வெள்ளி | வீட்டிற்குத் தேவையான பொருள்களை நானாக முன்வந்து வாங்கிக் கொடுத்தேன். அம்மா பாராட்டினார். |
| சனி | |
| ஞாயிறு | |

### கலைச்சொல் அறிவோம்

உருபன் – *Morpheme*

ஒலியன் – *Phoneme*

ஒப்பிலக்கணம் – *Comparative Grammar*

பேரகராதி – *Lexicon*

## அறிவை விரிவு செய்

திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் – ராபர்ட் கால்டுவெல்

மொழிபெயர்ப்பும் ஒலிபெயர்ப்பும் – மணவை முஸ்தபா

தமிழ்நடைக் கையேடு

மாணவர்களுக்கான தமிழ் – என். சொக்கன்

## இணையத்தில் காண்க.

1. திராவிட மொழிகள் *http://www.tamilvu.org/courses/degree/a051/a0511/html/a051142.htm*
2. திராவிட மொழிகளும் தமிழும் *http://www.tamilvu.org/ta/courses-degree-a051-a0511-html-a05115in-9477*

இயல் இரண்டு

இயற்கை, சுற்றுச்சூழல்

# உயிருக்கு வேர்



## கற்றல் நோக்கங்கள்

- நீரின் இன்றியமையாமையை உணர்ந்து நீர்நிலைகளைப் பாதுகாத்தல்
- கருத்தரங்கில் கருத்துகளை வெளிப்படுத்த அறிதல்
- கட்டுரைகள், கதைகளைப் படித்துக் கருத்துகளைச் சுருக்கியும் விரித்தும் எழுதுதல்
- இயற்கை அழகைப் போற்றும் கவிதைகளைப் படைத்தல்
- துணைவினைகளை முறையாகப் பயன்படுத்துதல்

உரைநடை உலகம்

# இயற்கை

உ

# நீரின்றி அமையாது உலகு

நுழையும்முன்

இயற்கை என்பது உயிர்களுக்குக் கிடைத்த பெரும்பேறு. உயர்ந்தோங்கிய மலைகள், காடுகள், பசுமைப் புல்வெளிகள், நீர்நிலைகள், வயல்வெளிகள், பசுமையான தோப்புகள் என இயற்கையின் கொடைகள் கணக்கிலடங்காதவை. அவற்றை உரிய வகையில் பயன்படுத்தியும் பாதுகாத்தும் அடுத்த தலைமுறையினருக்கு அளிப்பது நமது பொறுப்பு. எனவே, நீர் மேலாண்மையின் தேவையை உணர்ந்தே ஆகவேண்டிய காலகட்டம் இது.

## கருத்தரங்க அழைப்பிதழ்

பள்ளிச் சுற்றுச்சூழல் மன்றத்தின் சார்பில் நடைபெறும் மாணவர் கருத்தரங்கம்

**தலைமை:** மாணவர் **வெண்மதி**

**முன்னிலை:** தமிழாசிரியர் **கலைச்செல்வி**

| கருத்தாளர்கள் | தலைப்புகள் |
|---|---|
| மாணவர் **ஆமீனா** | நீர் மேலாண்மை |
| மாணவர் **முகிலன்** | தமிழ் மக்களும் தண்ணீரும் |
| மாணவர் **மெர்சி** | இன்றைய வாழ்வில் தண்ணீர் |

அனைவரும் வருக!

3ZHNHD

### தலைமையுரை – மாணவர் வெண்மதி

வணக்கத்திற்குரிய தமிழாசிரியர் அவர்களே! இனிய நண்பர்களே! வணக்கம். வான்சிறப்பு என்னும் தலைப்பில் பத்துக் குறட்பாக்களைப் பாடிய வள்ளுவரையும் மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும் என்று இயற்கையை வாழ்த்திப் பாடிய இளங்கோவடிகளையும் வணங்கி என் உரையைத் தொடங்குகின்றேன்.

ஒவ்வோர் ஆண்டும் ஜூன் 5ஆம் நாள் உலகச் சுற்றுச்சூழல் நாளாகக் கொண்டாடப்படுகிறது. இயற்கை வழங்கிய தண்ணீரின் இன்றியமையாமை குறித்து எல்லோரும் சிந்திக்கவே இந்த ஏற்பாடு.

**தெரிந்து தெளிவோம்**

அகழி, ஆழிக்கிணறு, உறைக்கிணறு, அணை, ஏரி, குளம், ஊருணி, கண்மாய், கேணி – எனப் பல்வேறு பெயர்களில் நீர்நிலைகள் உள்ளன.

நீரின்று அமையாது உலகம் என்னும் தம் கருத்தைத் தெளிவாகப் பதிவுசெய்துள்ளார் திருவள்ளுவர். நீரே மனித வாழ்வின் அடிப்படை என்பதால், நம்முடைய முன்னோர்கள் பல்வேறு வகையான நீர் நிலை வடிவங்களை உருவாக்கி நீரைப் பாதுகாத்தனர்.

ஒவ்வோர் ஆண்டும் பெய்கின்ற மழையின் அளவு கூடுதலாகவோ குறைவாகவோ இருக்கலாம். ஆனால், மழை வழங்கிய நீரை இத்தகைய நீர்நிலைகளே பாதுகாத்துத் தருகின்றன.

மழையே பயிர்க்கூட்டமும் உயிர்க்கூட்டமும் மகிழ்ச்சியாக வாழப் பெருந்துணை புரிகின்றது.

மழை உழவுக்கு உதவுகிறது. விதைத்த விதை ஆயிரமாகப் பெருகுகிறது. நிலமும் மரமும் உயிர்கள் நோயின்றி வாழவேண்டும் என்னும் நோக்கில் வளர்கின்றன என்று மாங்குடி மருதனார் கூறியதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

இக்கருத்தரங்கம் நீரைப்பற்றிய ஆக்கம் நிறைந்த சிந்தனைகளை முன்வைக்க இருக்கின்றது.

முதல் கருத்தாளராக நண்பர் ஆமீனா அவர்களை நீர் மேலாண்மை என்னும் தலைப்பில் உரை நிகழ்த்த அழைக்கிறேன்.

**ஆமீனா**

எல்லோருக்கும் இனிய வணக்கம்.

மனித வாழ்வின் அடிப்படைத் தேவைகள் உணவு, உடை, உறைவிடம். இவற்றுள் முதலிரண்டும் வேளாண்மையை ஆதாரமாகக் கொண்டவை. வேளாண்மையோ நீரை அடிப்படையாகக் கொண்டது.

மழைநீர், ஆற்றுநீர், ஊற்றுநீர் ஆகியவற்றைச் சிறிய, பெரிய நீர்நிலைகளில் சேகரிக்க வேண்டும். அதனை வேளாண்மைக்குப் பயன்படுத்த வேண்டும் என்பதை நம் முன்னோர்கள் திட்டமிட்டுச் செய்தனர்.

### திட்பமும் நுட்பமும்

காவிரி ஆற்றின் மீது பெரிய பாறைகளைக் கொண்டுவந்து போட்டனர். அந்தப் பாறைகளும் நீர் அரிப்பின் காரணமாகக் கொஞ்சம் கொஞ்சமாக மண்ணுக்குள் சென்றன. அவற்றின்மேல் வேறொரு பாறையை வைத்து நடுவே தண்ணீரில் கரையாத ஒருவித ஒட்டும் களிமண்ணைப் புதிய பாறைகளில் பூசி, இரண்டையும் ஒட்டிக்கொள்ளும் விதமாகச் செய்தனர். இதுவே, கல்லணையைக் கட்டப் பயன்படுத்தப்பட்ட தொழில்நுட்பமாகக் கருதப்படுகிறது.

ஒவ்வொரு வட்டாரத்தின் நில அமைப்பு, மண்வளம், மக்கள்தொகை ஆகியவற்றைக் கருத்தில்கொண்டே நீர்நிலைகளை வடிவமைத்தனர். இதில் ஏரிகளும் குளங்களும் பாசனத்திற்கான அமைப்புகளாய்ப் பெருமளவில் பயன்பட்டன.

பாண்டி மண்டலத்து நிலப்பகுதியில் ஏரியைக் கண்மாய் என்று அழைப்பர். கம்மாய் என்பது வட்டார வழக்குச் சொல்லாகும்.

மணற்பாங்கான இடத்தில் தோண்டிச் சுடுமண் வளையமிட்ட கிணற்றுக்கு உறைக்கிணறு என்றும் மக்கள் பருகுநீர் உள்ள நீர்நிலைக்கு ஊருணி என்றும் பெயர் சூட்டியுள்ளனர்.

தமிழக வரலாற்றில் பல நூற்றாண்டுகளுக்கு முன் கரிகால்சோழன் காலத்தில் கட்டப்பட்ட கல்லணையே விரிவான பாசனத்திட்டமாக இருந்துள்ளது. கல்லணையின் நீளம் 1080 அடியாகவும் அகலம் 40 முதல் 60 அடியாகவும் உயரம் 15 முதல் 18 அடியாகவும் இருக்கிறது. அது வலுவான கட்டுமானத் தொழில்நுட்பத்தால் இன்றும் பயன்படுவதோடு நமது வரலாற்றுப் பெருமைக்கும் சான்றாக நிலைத்து நிற்கிறது.

*மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்*
*காடும் உடையது அரண்*

என்னும் குறட்பாவில் நாட்டின் சிறந்த பாதுகாப்புகளுள் நீருக்கே முதலிடம் தருகிறார் திருவள்ளுவர். உணவெனப்படுவது நிலத்தொடு நீரே (புறம் 18) என்று சங்கப்பாடல், நீரின் இன்றியமையாமையை எடுத்துரைக்கிறது.

### யார் இவர்?



இந்திய நீர்ப் பாசனத்தின் தந்தை என அறியப்படும் சர் ஆர்தர் காட்டன் என்ற ஆங்கிலப் பொறியாளர் கல்லணையைப் பல ஆண்டுகாலம் ஆராய்ந்தார்.



கல்லணை பலகாலம் மணல் மேடாகி நீரோட்டம் தடைபட்டது. ஒருங்கிணைந்த தஞ்சை மாவட்டம் தொடர்ச்சியாக வெள்ளத்தாலும் வறட்சியாலும் வளமை குன்றியது. இந்தச் சூழலில் 1829இல் காவிரிப் பாசனப் பகுதிக்குத் தனிப் பொறுப்பாளராக ஆங்கிலேய அரசால் சர் ஆர்தர் காட்டன் நியமிக்கப்பட்டார்.

இவர்தான் பயனற்று இருந்த கல்லணையைச் சிறு சிறு பகுதிகளாய்ப் பிரித்து மணல் போக்கிகளை அமைத்தார். அப்போது, கல்லணைக்கு அமைக்கப்பட்ட அடித்தளத்தை ஆராய்ந்த அவர் பழந்தமிழரின் அணை கட்டும் திறனையும் பாசன மேலாண்மையையும் உலகுக்கு எடுத்துக் கூறினார். கல்லணைக்கு கிராண்ட் அணைக்கட் என்ற பெயரையும் சூட்டினார்.

மேலும் கல்லணையின் கட்டுமான உத்தியைக் கொண்டுதான் 1873ஆம் ஆண்டு கோதாவரி ஆற்றின் குறுக்கே தௌலீஸ்வரம் அணையைக் கட்டினார்.

இவ்வாறு தமிழர்கள் தண்ணீரின் தேவையை நன்றாகப் புரிந்துகொண்டு, நீர் மேலாண்மையை அறிவியல் நோக்கில் கட்டமைத்தனர். அவற்றை இன்றைய காலச்சூழலுக்கு ஏற்ப வளப்படுத்துவது நம் அனைவரின் கடமையாகும். நன்றி, வணக்கம்.

### அரங்கத் தலைவர்

ஒரு நாட்டின் வளர்ச்சிப்போக்கை நெறிப்படுத்துவதே நீர் மேலாண்மைதான் என்பதைக் கருத்தாழத்துடன் நண்பர் ஆமீனா சிறப்பாக விளக்கினார். இப்போது கேள்வி நேரம். பார்வையாளர்கள் வினாக்களை எழுப்பலாம்.

**(கலந்துரையாடல்)**

இப்போது அடுத்த தலைப்பிற்குச் செல்வோம். தமிழ்மக்களும் தண்ணீரும் என்னும் தலைப்பில் நண்பர் முகிலன் தமது கருத்துரையை முன்வைக்க வருகின்றார்.

### முகிலன்

அனைவருக்கும் அன்பு வணக்கம்.

நாம் வாழும் தமிழ்நாடு வெப்பமண்டலப் பகுதியில் உள்ளது. எனவே, நீர் சார்ந்த தன்னுணர்ச்சி தமிழக மக்களுக்கு மிகுதி. தாயைப் பழித்தாலும் தண்ணீரைப் பழிக்காதே என்பது சொல் வழக்கு.

தமிழ் மரபில் நீரும் நீராடலும் வாழ்வியலோடு பிணைக்கப்பட்டவையாக விளங்குகின்றன என்பார் பேராசிரியர் தொ.பரமசிவன். அவர் குளித்தல் என்ற சொல்லைக் குறித்துக் கூறும் கருத்துகள் நமக்குப் புதிய சிந்தனைகளைத் தருகின்றன.

குளித்தல் என்ற சொல்லுக்கு உடம்பினைத் தூய்மை செய்தல் அல்லது அழுக்கு நீக்குதல் என்பதல்ல பொருள்; சூரியவெப்பத்தாலும் உடல் உழைப்பாலும் வெப்பமடைந்த உடலைக் குளிர வைத்தல் என்பதே அதன் பொருளாகும். குளிர்த்தல் என்பதே குளித்தல் என்று ஆயிற்று என்பது அவரது விளக்கம். குள்ளக் குளிரக் குடைந்து நீராடி என்கிறார் ஆண்டாள். தெய்வச்சிலைகளைக் குளி(ர்)க்க வைப்பதை திருமஞ்சனம் ஆடல் என்று கூறுவர்.

சிற்றிலக்கியமாகிய பிள்ளைத்தமிழில் நீராடல் பருவம் என்று ஒரு பருவம் உண்டு. நாட்டுப்புறத் தெய்வக்கோவில்களில் சாமியாடிகளுக்கு மஞ்சள் நீர் கொடுத்து அருந்தச் செய்வதும் நீராட்டுவதும் இப்போதும் நடைமுறையில் உள்ளன.

திருமணம் முடிந்த பின் அதன் தொடர்ச்சியாய்க் கடலாடுதல் என்பதை மேற்கொள்ளும் வழக்கமும் தமிழகத்தில் நிலவுகிறது. இறப்புச் சடங்கிலும் உடலை நீராட்டுவதற்காக நீர்மாலை எடுத்து வருதல் என்பதும் நடைமுறையில் உள்ளது.

அம்மை நோய் கண்டவர்கள் குணமடைந்தபின் தலைக்குத் தண்ணீர் ஊற்றியாகிவிட்டதா? என்று கேட்பது வழக்கம்.

சுமார் 40 ஆண்டுகளுக்கு முன்னர் வாரந்தோறும் நல்லெண்ணெய் தேய்த்துக் குளிப்பதைத் தமிழர்கள் மரபாகவே வைத்திருந்தனர். சனி நீராடு என்பது ஔவையின் வாக்கு.

அதிகாலையில் வேளாண் நிலத்திற்கு உழைக்கச் செல்வோர் நீராகாரம் குடிப்பார்கள். வீட்டிற்கு வரும் விருந்தினர்க்கு அன்பான வரவேற்பின் அடையாளமாக நீரே வழங்கப்படுகிறது.

இவ்வாறு தமிழக மக்களின் குடும்பம் தொடங்கி, சமூகம் வரை அனைத்திலும் தண்ணீர் முதன்மைப் பங்காற்றுகிறது. நன்றி வணக்கம்.

**அரங்கத் தலைவர்**

கேள்வி நேரம். (கலந்துரையாடல் நடைபெறுகிறது)

அடுத்து இன்றைய வாழ்வில் தண்ணீர் என்னும் தலைப்பில் கருத்துரையாற்ற வருகிறார் மெர்சி.

### திட்பமும் நுட்பமும்



**சோழர் காலக் குமிழித்தூம்பு**

மழைக்காலங்களில் ஏரி நிரம்பும்போது நீந்துவதில் வல்லவரான ஒருவர் தண்ணீருக்குள் சென்று கழிமுகத்தை அடைந்து குமிழித்தூம்பை மேலே தூக்குவார். அடியில் இரண்டு துளைகள் காணப்படும். மேலே இருக்கும் நீரோடித் துளையிலிருந்து நீர் வெளியேறும். கீழே உள்ள சேறோடித் துளையிலிருந்து நீர் சுழன்று சேற்றுடன் வெளியேறும். இதனால் தூர் வார வேண்டிய அவசியம் இல்லை.




குமிழித்தூம்பு செயல்படும் விதம்

**மெர்சி**

எல்லோருக்கும் இனிய வணக்கம்.

அறிவியல் தொழில்நுட்பம் வளர்ந்தோங்கிய இன்றைய வாழ்வில் தண்ணீரின் நிலை குறித்து ஆய்வுசெய்ய வேண்டியது இன்றியமையாததாகும்.

உலகம் முழுவதும் தண்ணீர்ப் பஞ்சம் உருவாகத் தொடங்கிவிட்டது. அமெரிக்கா, இந்தியா, பாகிஸ்தான், சீனா ஆகிய நாடுகளில் நிலத்தடி நீர்வளம் குறைந்து வருகின்றது. குறிப்பாக நமது நாட்டில் இராஜஸ்தான் மாநிலத்தில் பத்தாண்டுகளுக்கு முன்பே 700 அடிவரை ஆழ்குழாய்கள் இறக்கியும் நீர் கிட்டவில்லை. சிறுநகரங்களிலும்கூட நிலத்தடி நீர் குறைந்து வருகிறது. கோடைக் காலத்தில் தண்ணீர்ப் பற்றாக்குறை மக்களுக்குப் பெரும் வாழ்வியல் நெருக்கடியாக மாறியுள்ளது.

உலகச் சுகாதார நிறுவனம், உலகம் விரைவில் குடிநீருக்கான கடும் சிக்கலை எதிர்கொள்ளும் என எச்சரிக்கிறது.

குடிநீரை விலைகொடுத்து வாங்கும் அவலம் தொடரும் நிலையை மாற்றியமைக்கத் திட்டமிட வேண்டியது உடனடித் தேவையாகும். ஆண்டுதோறும் பெய்கின்ற மழைப்பொழிவை ஆக்கநிலையில் பயன்படுத்தும் செயல் திட்டத்தை நாம் உருவாக்க வேண்டும்.

அறிவியல் அணுகுமுறையில் மழைநீரைத் தேக்கி வைத்துப் பாசனத்திற்குப் பயன்படுத்த ஊர்தோறும் ஏரிகளை உருவாக்கினர் நம் முன்னோர். அவற்றைத் தூர்வாரி முறையாகப் பராமரிப்புப் பணிகளைச் செய்தல் வேண்டும். இதை ஒரு மக்கள் இயக்கமாக, மழைக்காலத்திற்கு முன்பே செய்ய வேண்டும்.

இயற்கை நமக்குத் தரும் தண்ணீர்க்கொடையைத் திட்டமிட்டுப் பயன்படுத்துவதே நீர்த்தட்டுப்பாட்டை எதிர்கொள்ளும் சிறந்த வழியாகும் என்பதைக் கூறி நிறைவு செய்கின்றேன். வணக்கம்.

## தெரிந்து தெளிவோம் — தமிழகத்தின் நீர்நிலைப் பெயர்களும் விளக்கமும்

அகழி – கோட்டையின் புறத்தே அகழ்ந்தமைக்கப்பட்ட நீர் அரண்

அருவி – மலைமுகட்டுத் தேக்கநீர் குத்திட்டுக் குதிப்பது

ஆழிக்கிணறு – கடலருகே தோண்டிக் கட்டிய கிணறு

ஆறு – இரு கரைகளுக்கிடையே ஓடும் நீர்ப்பரப்பு

இலஞ்சி – பலவகைக்கும் பயன்படும் நீர்த்தேக்கம்

உறைக்கிணறு – மணற்பாங்கான இடத்தில் தோண்டிச் சுடுமண் வளையமிட்ட கிணறு

ஊருணி – மக்கள் பருகுநீர் உள்ள நீர்நிலை

ஊற்று – அடியிலிருந்து நீர் ஊறுவது

ஏரி – வேளாண்மைப் பாசன நீர்த்தேக்கம்.

கட்டுக்கிணறு – சரளை நிலத்தில் தோண்டி கல், செங்கற்களால் அகச்சுவர் கட்டிய கிணறு

கடல் – அலைகளைக் கொண்ட உப்புநீர்ப் பெரும்பரப்பு

கண்மாய் – பாண்டி மண்டலத்தில் ஏரிக்கு வழங்கப்படும் பெயர்

குண்டம் – சிறியதாய் அமைந்த குளிக்கும் நீர்நிலை

குண்டு – குளிப்பதற்கேற்ற சிறுகுளம்

குமிழிஊற்று – அடிநிலத்து நீர், நிலமட்டத்திற்குக் கொப்புளித்து வரும் ஊற்று

கூவல் – உவர்மண் நிலத்தில் தோண்டப்படும் நீர்நிலை

கேணி – அகலமும் ஆழமும் உள்ள பெருங்கிணறு

புனற்குளம் – நீர்வரத்து மடையின்றி மழைநீரையே கொண்டுள்ள குளிக்கும் நீர்நிலை

பூட்டைக் கிணறு – கமலை நீர்பாய்ச்சும் அமைப்புள்ள கிணறு

### அரங்கத் தலைவர்

நடப்பு வாழ்க்கையில் உள்ள நீர்த்தட்டுப்பாட்டைச் சான்றுகளுடன் மெர்சி விளக்கியுள்ளார். இப்போது வினாக்கள் கேட்கலாம்.

**(கலந்துரையாடல்)**

மூன்று கருத்தாளர்களின் கருத்துகளையும் இன்றைய சமூகச் சூழ்நிலைகளையும் இணைத்துச் சிந்திக்க வேண்டியது நமது கடமை.

உலகின் பல்லுயிர்ப் பாதுகாப்பிற்கு அடிப்படைத் தேவையாக உள்ள தண்ணீரைப் பாதுகாத்துப் பயன்படுத்த வேண்டும். நமது முன்னோர்கள் கண்டுணர்ந்த மரபார்ந்த அணுகுமுறைகளைப் பின்பற்றவேண்டும். குளம், ஏரி, கால்வாய், கிணறு போன்ற நீர்நிலைகளின் பாதுகாப்புக் குறித்த விழிப்புணர்வை மக்களிடம் உருவாக்குதல் வேண்டும்.

பணம் கொடுத்தால் உணவை விலைக்கு வாங்கிவிடலாம் என்னும் மேலோட்டமான கருத்தோட்டத்தை மாற்றிக் கொள்வோம். உணவு உற்பத்திக்கு அடிப்படை நீரே. அதுமட்டுமன்றி நீரே உணவாகவும் இருக்கிறது என்பதை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே,

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை

என்று திருவள்ளுவர் கூறியுள்ளதைக் கருத்தில்கொண்டு செயல்படுவோம். அடுத்த உலகப்போர் ஒன்று உருவானால், அது தண்ணீருக்காகத்தான் உருவாகும் என்னும் நிலைமைக்கு முடிவுரை எழுதுவோம்.

நன்றி, வணக்கம்.

### யார் இவர்?



தமிழ்நாட்டின் தென் மாவட்டங்களான தேனி, திண்டுக்கல், மதுரை, சிவகங்கை, இராமநாதபுரம் ஆகியவற்றின் விவசாயத்திற்கும் குடிநீருக்கும் உதவும் முல்லைப் பெரியாறு அணையைக் கட்டியவர் ஜான் பென்னி குவிக்.

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் வைகை வடிநிலப் பரப்பில் மழை பொய்த்துப் பஞ்சம் ஏற்பட்டதால் பல்லாயிரக்கணக்கான மக்கள் பாதிக்கப்பட்டனர். மேற்குத் தொடர்ச்சி மலையில் பெய்யும் மழைநீர் பெரியாற்றில் ஓடி வீணாகக் கடலில் கலப்பதை அறிந்த இவர், அங்கு ஓர் அணை கட்ட முடிவு செய்தார். கட்டுமானத்தின்போது இடையில் கூடுதல் நிதி ஒதுக்க ஆங்கிலேய அரசு மறுத்தபோது தனது சொத்துகளை விற்று அணையைக் கட்டி முடித்தார். அவருக்கு நன்றி செலுத்தும் விதமாக அப்பகுதி மக்கள் தம் குழந்தைகளுக்குப் பென்னி குவிக் எனப் பெயர் சூட்டும் வழக்கம் இன்றும் உள்ளது.





## கற்பவை கற்றபின்...

1. நீரின்று அமையாது உலகு, நீரின்று அமையாது யாக்கை இவ்விரண்டு தொடர்களையும் ஒப்புமைப்படுத்தி வகுப்பில் கலந்துரையாடுக .

2. வீடுகளில் பயன்படுத்தப்படும் தண்ணீர் எங்கிருந்து கிடைக்கிறது? இதற்கான நீர் எங்கிருந்து வருகிறது? இன்னும் எவ்வளவு காலத்திற்குத் தண்ணீர் போதுமானதாக இருக்கும்? என்பவற்றுக்கான தகவல்களைத் திரட்டி ஒப்படைவு உருவாக்குக.

கவிதைப் பேழை

# இயற்கை

உ

# பட்ட மரம்

–கவிஞர் தமிழ்ஒளி

**நுழையும்முன்**

நம் முன்னோரின் வாழ்க்கை இயற்கையோடு இயைந்தது. அவர்கள் மரம், செடி, கொடிகளையும் போற்றிக்காத்தனர். கால மாற்றத்தில் இவ்வாழ்வு சிறிது சிறிதாக மறைந்துகொண்டே வருகிறது. மரம் என்பது மனித வாழ்வில் மிகவும் இன்றியமையாதது. மரங்கள் இல்லை என்றால் நமக்கு உயிர்வளி கிடைக்காமல் போய்விடும். அவ்வகையில் பட்டுப்போன மரமொன்று கவிஞர் ஒருவரின் உள்ளத்தில் ஏற்படுத்திய குமுறலை வெளிப்படுத்தும் இக்கவிதை, மரங்களை வளர்த்துப் பேணிக் காத்திட வேண்டும் என்ற உணர்வை நமக்கு ஏற்படுத்துகிறது.

*மொட்டைக் கிளையொடு*
*நின்று தினம்பெரு*
*மூச்சு விடும்மரமே !*
*வெட்டப் படும்ஒரு*
*நாள்வரு மென்று*
*விசனம் அடைந்தனையோ ?*
*குந்த நிழல்தரக்*
*கந்த மலர்தரக்*
*கூரை விரித்தஇலை !*
*வெந்து கருகிட*
*இந்த நிறம்வர*
*வெம்பிக் குமைந்தனையோ ?*
*கட்டை யெனும்பெயர்*
*உற்றுக் கொடுந்துயர்*
*பட்டுக் கருகினையே !*
*பட்டை யெனும்உடை*
*இற்றுக் கிழிந்தெழில்*
*முற்றும் இழந்தனையே !*



*காலம் எனும்புயல்*
*சீறி எதிர்க்கக்*
*கலங்கும் ஒருமனிதன்*
*ஓலமி டக்கரம்*
*நீட்டிய போல்இடர்*
*எய்தி உழன்றனையே!*
*பாடும் பறவைகள்*
*கூடி உனக்கொரு*
*பாடல் புனைந்ததுவும்*
*மூடு பனித்திரை*
*யூடு புவிக்கொரு*
*மோகங் கொடுத்ததுவும்*
*ஆடுங் கிளைமிசை*
*ஏறிச் சிறுவர்*
*குதிரை விடுத்ததுவும்*
*ஏடு தருங்கதை*
*யாக முடிந்தன!*
*இன்று வெறுங்கனவே!*

### சொல்லும் பொருளும்

குந்த – உட்கார, கந்தம் – மணம்

மிசை – மேல் , விசனம் – கவலை

### இலக்கணக்குறிப்பு

வெந்து, வெம்பி, எய்தி – வினையெச்சங்கள்

மூடுபனி – வினைத்தொகை,

ஆடுங்கிளை – பெயரெச்சத் தொடர்

### பகுபத உறுப்பிலக்கணம்

விரித்த – விரி + த் + த் + அ

விரி – பகுதி

த் – சந்தி

த் – இறந்தகால இடைநிலை

அ – பெயரெச்ச விகுதி

குமைந்தனை – குமை + த்(ந்) + த் + அன்+ஐ

குமை – பகுதி

த் – சந்தி. த் – ந் ஆனது விகாரம்

த் – இறந்தகால இடைநிலை, அன் – சாரியை

ஐ – முன்னிலை ஒருமை வினைமுற்று விகுதி

### நூல் வெளி

கவிஞர் தமிழ்ஒளி (1924–1965) புதுவையில் பிறந்தவர். பாரதியாரின் வழித்தோன்றலாகவும் பாரதிதாசனின் மாணவராகவும் விளங்கியவர்: மக்களுக்காகப் பல படைப்புகளை உருவாக்கியவர். நிலைபெற்ற சிலை, வீராயி, கவிஞனின் காதல், மே தினமே வருக, கண்ணப்பன் கிளிகள், குருவிப்பட்டி, தமிழர் சமுதாயம், மாதவி காவியம் முதலானவை இவரின் படைப்புகளுள் குறிப்பிடத்தக்கவை. இப்பாடப்பகுதி தமிழ் ஒளியின் கவிதைகள் என்னும் நூலில் இடம்பெற்றுள்ளது.

## கற்பவை கற்றபின்...

1. *விளைநிலங்கள் கட்டடங்களாகின்றன – என்னும் தலைப்பில் ஒட்டியும் வெட்டியும் பேசுக.*

2. *பட்டமரம், புதிதாக முளைவிட்ட குருத்து ஆகிய இரண்டும் பேசிக்கொள்வதாய்க் கற்பனை உரையாடல் நிகழ்த்துக.*

3. *'பட்டணத்துப் பறவைகளும்' 'ஊர்ப் பறவைகளும்' பேசுவது போலச் சிறு சிறு கவிதைகள் படைக்க.*

*எ.கா – பட்டணத்துக் காக்கை*

*ஊரைத் தூய்மை செய்கின்றோம்*
*உறவைக் கூட்டிப் பகிர்கின்றோம்*
*கரைந்து தாகம் எடுக்கிறதே*
*விரைந்து நீரை வைப்பீரே!*

*கிராமத்துக் கிளி*

*தத்திப் பறக்கும் உறவுகளே*
*கொத்தித் தின்ன வாருங்கள்*
*பழுத்துத் தொங்கும் பழக்கூட்டம்*
*கழுத்து வரைக்கும் உண்பீரே!*

கவிதைப் பேழை

இயற்கை

உ

# பெரியபுராணம்

– சேக்கிழார்

நுழையும்முன்

வரப்புயர நீர் உயரும்; நீருயர நெல் உயரும்; நெல்லுயரக் குடி உயரும். உயர்ந்த குடியாக, நாடெல்லாம் நீர் நாடாகச் சோழநாடு திகழ்கிறது. காவிரியின் பாதையெல்லாம் பூவிரியும் கோலத்தை அழகாக விவரித்துரைக்கிறது பெரியபுராணம்; வளங்கெழு திருநாட்டின் சிறப்பை இயற்கை எழிற் கவிதைகளாய்ப் படரச் செய்துள்ளது.



## திருநாட்டுச் சிறப்பு

1. *மாவி ரைத்தெழுந் தார்ப்ப வரைதரு*
*பூவி ரித்த புதுமதுப் பொங்கிட*
*வாவி யிற்பொலி நாடு வளந்தரக்*
*காவி ரிப்புனல் கால்பரந் தோங்குமால் (பா.எ.59)*

சொல்லும் பொருளும்: மா – வண்டு ; மது – தேன் ; வாவி–பொய்கை.

416JY1

2. *மண்டுபுனல் பரந்தவயல் வளர்முதலின் சுருள்விரியக்*
*கண்டுழவர் பதங்காட்ட களைகளையுங் கடைசியர்கள்*
*தண்டரளஞ் சொரிபணிலம் இடறியிடை தளர்ந்தசைவார்*
*வண்டலையும் குழல்அலைய மடநடையின் வரம்பணைவார் (பா.எ.63)*

சொல்லும் பொருளும்: வளர் முதல் – நெற்பயிர் ; தரளம் – முத்து; பணிலம் – சங்கு; வரம்பு – வரப்பு.

3. *காடெல்லாம் கழைக்கரும்பு காவெல்லாம் குழைக்கரும்பு*
*மாடெல்லாம் கருங்குவளை வயலெல்லாம் நெருங்குவளை*
*கோடெல்லாம் மடஅன்னம் குளமெல்லாம் கடல்அன்ன*
*நாடெல்லாம் நீர்நாடு தனைஒவ்வா நலமெல்லாம்* (பா.எ.67)*

சொல்லும் பொருளும்: கழை – கரும்பு ; கா – சோலை ; குழை – சிறு கிளை; அரும்பு – மலர் மொட்டு; மாடு – பக்கம்; நெருங்கு வளை – நெருங்குகின்ற சங்குகள் ; கோடு – குளக்கரை.

4. *அன்னம் ஆடும் அகன்துறைப் பொய்கையில்*
*துன்னும் மேதி படியத் துதைந்தெழும்*
*கன்னி வாளை கமுகின்மேற் பாய்வன*
*மன்னு வான்மிசை வானவில் போலுமால் (பா.எ.69)*

சொல்லும் பொருளும்: ஆடும் – நீராடும் ; மேதி – எருமை ; துதைந்து எழும் – கலக்கி எழும்; கன்னி வாளை – இளமையான வாளைமீன்.

5. *அரிதரு செந்நெற் சூட்டின் அடுக்கிய அடுக்கல் சேர்ப்பார்*
*பரிவுறத் தடிந்த பன்மீன் படர்நெடுங் குன்று செய்வார்*
*சுரிவளை சொரிந்த முத்தின் சுடர்ப்பெரும் பொருப்பு யாப்பார்*
*விரிமலர்க் கற்றை வேரி பொழிந்திழி வெற்பு வைப்பார் (பா.எ.73)*

சொல்லும் பொருளும்: சூடு – நெல் அரிக்கட்டு ; சுரிவளை – சங்கு ; வேரி – தேன்.

6. *சாலியின் கற்றை துற்ற தடவரை முகடு சாய்த்துக்*
*காலிரும் பகடு போக்கும் கரும்பெரும் பாண்டில் ஈட்டம்*
*ஆலிய முகிலின் கூட்டம் அருவரைச் சிமயச் சாரல்*
*போல்வலங் கொண்டு சூழும் காட்சியின் மிக்க தன்றே. (பா.எ.74)*

சொல்லும் பொருளும்: பகடு – எருமைக்கடா ; பாண்டில் – வட்டம் ; சிமயம் – மலையுச்சி.

7. *நாளிகே ரஞ்செ ருந்தி நறுமலர் நரந்தம் எங்கும்*
*கோளிசா லந்த மாலம் குளிர்மலர்க் குரவம் எங்கும்*
*தாளிரும் போந்து சந்து தண்மலர் நாகம் எங்கும்*
*நீளிலை வஞ்சி காஞ்சி நிறைமலர்க் கோங்கம் எங்கும். (பா.எ.78)*

சொல்லும் பொருளும்: நாளிகேரம் – தென்னை ; நரந்தம் – நாரத்தை ; கோளி – அரசமரம் ; சாலம் – ஆச்சா மரம் ; தமாலம் – பச்சிலை மரம்; இரும்போந்து – பருத்த பனைமரம் ; சந்து – சந்தன மரம் ; நாகம் – நாகமரம் ; காஞ்சி – ஆற்றுப்பூவரசு.

## பாடலின் பொருள்

1. காவிரிநீர் மலையிலிருந்து புதிய பூக்களை அடித்துக்கொண்டு வருகிறது. அப்பூக்களில் தேன் நிறைந்திருப்பதால் வண்டுகள் சூழ்ந்து ஆரவாரம் செய்கின்றன. நீர்நிலைகள் நிறைந்த நாட்டுக்கு வளத்தைத் தரும் பொருட்டுக் காவிரி நீர் கால்வாய்களில் பரந்து எங்கும் ஓடுகிறது.

2. நட்டபின் வயலில் வளர்ந்த நாற்றின் முதலிலை சுருள் விரிந்தது. அப்பருவத்தைக் கண்ட உழவர் இதுதான் களைபறிக்கும் பருவம் என்றனர். அவ்வாறே களைகளைக் களைந்து செல்லும் உழத்தியரின் கால்களில் குளிர்ந்த முத்துகளை ஈனும் சங்குகள் இடறின. அதனால், இடை தளர்ந்து வண்டுகள் மொய்க்கும் கூந்தல் அசையுமாறு மென்மையாக நடந்து அருகில் உள்ள வரப்பினை அடைவர்.

3. காடுகளில் எல்லாம் கழையாகிய கரும்புகள் உள்ளன. சோலைகள் எங்கும் குழைகளில் (செடிகளின் புதிய கிளைகளில், புதிய தளிர்களில்) மலர் அரும்புகள் உள்ளன. பக்கங்களில் எங்கும் கரிய குவளை மலர்கள் மலர்ந்துள்ளன. வயல்களில் எங்கும் நெருக்கமாகச் சங்குகள் கிடக்கின்றன. நீர்நிலையின் கரையெங்கும் இளைய அன்னங்கள் உலவுகின்றன. குளங்கள் எல்லாம் கடலைப்போன்ற பரப்பை உடையன. அதனால், நாடு முழுதும் நீர்நாடு என்று சொல்லத்தக்கதாய் உள்ளது. இத்தகைய சிறப்புடைய சோழநாட்டிற்குப் பிற நாடுகள் ஈடாக மாட்டா.

4. அன்னங்கள் விளையாடும் அகலமான துறைகளைக் கொண்ட நீர்நிலைகளில் எருமைகள் வீழ்ந்து மூழ்கும். அதனால், அந்நீர்நிலைகளில் உள்ள வாளை மீன்கள் துள்ளி எழுந்து அருகில் உள்ள பாக்கு மரங்களின் மீது பாயும். இக்காட்சியானது நிலையான வானத்தில் தோன்றி மறையும் வானவில்லைப் போன்று விளங்கும்.

5. அரியப்பட்ட செந்நெற்கட்டுகளை அடுக்கிப் பெரிய போராகக் குவிப்பர். மிகுதியாகப் பிடிக்கப்பட்ட பலவகை மீன்களையும் நீண்ட குன்றைப்போல் குவிப்பர்.



வளைந்த சங்குகள் ஈன்ற முத்துகளையும் குன்றைப்போல் உயர்த்திக் கூட்டுவர். தேன்வடியும் விரிந்த மலர்த்தொகுதியை மலைபோல் குவித்து வைப்பர்.

6. நெல்கற்றைகள் குவிந்த பெரிய மலைபோன்ற போரை மேலேயிருந்து சாயச் செய்வர். பெரிய வண்டிகளைச் செலுத்தும் கருமையான எருமைக்கூட்டங்கள் வலமாகச் சுற்றிச்சுற்றி மிதிக்கும். இத்தோற்றமானது கரிய மேகங்கள் பெரிய பொன்மலைச் சாரல் மீது வலமாகச் சுற்றுகின்ற காட்சிபோல உள்ளது. இத்தகைய காட்சிகள் அங்கு மிகுதியாகத் தோன்றும்.

7. அந்நாட்டில் எங்கும் தென்னை, செருந்தி, நறுமணமுடைய நரந்தம் போன்றவை உள்ளன. அரச மரம், கடம்ப மரம், பச்சிலை மரம், குளிர்ந்த மலரையுடைய குரா மரம் போன்றவை எங்கும் வளர்ந்துள்ளன. பெரிய அடிப்பாகத்தைக் கொண்ட பனை, சந்தனம், குளிர்ந்த மலரையுடைய நாகம், நீண்ட இலைகளையுடைய வஞ்சி, காஞ்சி, மலர்கள் நிறைந்த கோங்கு முதலியன எங்கெங்கும் செழித்து வளர்ந்துள்ளன.

### இலக்கணக்குறிப்பு

கருங்குவளை, செந்நெல் – பண்புத் தொகைகள்.

விரிமலர் – வினைத்தொகை

தடவரை – உரிச்சொல் தொடர்

### பகுபத உறுப்பிலக்கணம்

பாய்வன – பாய் + வ் + அன் + அ

பாய் – பகுதி

வ் – எதிர்கால இடைநிலை, அன் – சாரியை

அ – பலவின்பால் வினைமுற்று விகுதி

### நூல் வெளி

சுந்தரரின் திருத்தொண்டத் தொகை அடியவர் பெருமையைக் கூறுகிறது. இதைச் சிறிது விரித்து நம்பியாண்டார்நம்பியால் எழுதப்பட்ட திருத்தொண்டர் திருவந்தாதி ஒவ்வொரு பாடலிலும் அடியார்களின் சிறப்பைக் கூறுவதாக அமைந்துள்ளது. இந்த இரண்டு நூல்களையும் அடிப்படையாகக் கொண்டு சேக்கிழாரால் ஒவ்வொரு புராணத்திலும் ஒவ்வோர் அடியாராக அறுபத்துமூவரின் சிறப்புகளை விளக்கிப் பாடப்பட்டது திருத்தொண்டர் புராணம். இதன் பெருமை காரணமாக இது பெரியபுராணம் என்று அழைக்கப்படுகிறது.

கி.பி. 12ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சேக்கிழார், சோழ அரசன் இரண்டாம் குலோத்துங்கன் அவையில் முதலமைச்சராக இருந்தார். 'பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவ' என்று இவரை மகாவித்துவான் மீனாட்சி சுந்தரனார் பாராட்டுகிறார்.

## கற்பவை கற்றபின்...

1. மூச்சு விடும் மரம், புரட்டிப் போட்ட புயல் , இசை பாடும் பறவைகள், பனித்துளியில் தெரியும் பனை, என் இனிய கனவு போன்ற தலைப்புகளில் பள்ளி இலக்கிய மன்றத்தில் கவிதை படிக்க.
2. பின்வரும் கவிதையின் விவரிப்பை உரைநடையில் எழுதுக.

வானகமே, இளவெயிலே, மரச்செறிவே, நீங்களெல்லாம்
கானலின் நீரோ? – வெறுங் காட்சிப் பிழைதானோ?
போன தெல்லாம் கனவினைப்போல் புதைந்தழிந்தே
போனதனால் நானும்ஓர் கனவோ? – இந்த
ஞாலமும் பொய்தானோ? – பாரதியார்

41FFZN

கவிதைப் பேழை

# இயற்கை
## உ

# புறநானூறு

குடபுலவியனார்

**நுழையும்முன்**

நிலம், நீர், காற்று என்பவை மனிதனின் அடிப்படைத் தேவைகளாகும். இயற்கை நமக்குக் கொடையாகத் தந்திருக்கும் இவற்றை உரிய முறையில் பேணிப் பாதுகாக்க வேண்டும். நீரின் இன்றியமையாமையை உணர்ந்த நம் முன்னோர்கள், நீர்நிலைகளை உருவாக்குபவர்களை "உயிரை உருவாக்குபவர்கள்" என்று போற்றினர்.



*வான் உட்கும் வடிநீண் மதில்,*
*மல்லல் மூதூர் வய வேந்தே!*
*செல்லும் உலகத்துச் செல்வம் வேண்டினும்*
*ஞாலம் காவலர் தோள்வலி முருக்கி,*
*ஒருநீ ஆகல் வேண்டினும், சிறந்த*
*நல்லிசை நிறுத்தல் வேண்டினும், மற்றுஅதன்*
*தகுதி கேள்இனி மிகுதி ஆள!*

*நீர்இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்*
*உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே!*
*உண்டி முதற்றே உணவின் பிண்டம்;*
*உணவெனப் படுவது நிலத்தொடு நீரே;*
*நீரும் நிலமும் புணரியோர், ஈண்டு*
*உடம்பும் உயிரும் படைத்திசினோரே!**

*வித்திவான் நோக்கும் புன்புலம் கண்ணகன்*
*வைப்பிற்று ஆயினும், நண்ணி ஆளும்*
*இறைவன் தாட்கு உதவாதே ! அதனால்*
*அடுபோர்ச் செழிய ! இகழாது வல்லே ;*
*நிலன் நெளிமருங்கின் நீர்நிலை பெருகத்*
*தட்டோர் அம்ம ! இவண் தட்டோரே !*
*தள்ளாதோர் இவண் தள்ளா தோரே !*

*(புறம் 18: 11 – 30)*

(பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாடியது)

திணை: பொதுவியல்   துறை: முதுமொழிக்காஞ்சி



விண்ணை முட்டும் திண்ணிய நெடுமதில்
வளமை நாட்டின் வலிய மன்னவா
போகும் இடத்திற்குப் பொருள்
உலகம் வெல்லும் ஒரு தனி ஆட்சி
வாடாத புகழ் மாலை வரவேண்டுமென்றால்
தகுதிகள் இவைதாம் தவறாது தெரிந்துகொள்
உணவால் ஆனது உடல்
நீரால் ஆனது உணவு
உணவு என்பது நிலமும் நீரும்
நீரையும் நிலத்தையும் இணைத்தவர்
உடலையும் உயிரையும் படைத்தவர்
புல்லிய நிலத்தின் நெஞ்சம் குளிர
வான் இரங்கவில்லையேல்
யார் ஆண்டு என்ன
அதனால் எனது சொல் இகழாது
நீர்வளம் பெருக்கி நிலவளம் விரிக்கப்
பெற்றோர் நீடுபுகழ் இன்பம் பெற்றோர்
நீணிலத்தில் மற்றவர் இருந்தும் இறந்தும்
கெட்டோர் மண்ணுக்குப் பாரமாய்க் கெட்டோர்

## பொதுவியல் திணை

வெட்சி முதலிய புறத்திணைகளுக் கெல்லாம் பொதுவான செய்திகளையும் முன்னர் விளக்கப்படாத செய்திகளையும் கூறுவது பொதுவியல் திணையாகும்.

## முதுமொழிக்காஞ்சித் துறை

அறம், பொருள், இன்பம் என்னும் முப்பொருளினது உறுதி தரும் தன்மையைக் கூறுதல்.

## சொல்லும் பொருளும்

யாக்கை – உடம்பு, புணரியோர் – தந்தவர், புன்புலம் – புல்லிய நிலம், தாட்கு – முயற்சி, ஆளுமை; தள்ளாதோர் இவண் தள்ளாதோரே – குறைவில்லாது நீர் நிலை அமைப்பவர்கள் குறைவில்லாது புகழுடையவர்களாக விளங்குவார்கள்.

## பாடலின் பொருள்

வான்வரை உயர்ந்த மதிலைக் கொண்ட பழைமையான ஊரின் தலைவனே! வலிமை மிக்க வேந்தனே! நீ மறுமை இன்பத்தை அடைய விரும்பினாலோ உலகு முழுவதையும் வெல்ல விரும்பினாலோ நிலையான புகழைப் பெற விரும்பினாலோ செய்ய வேண்டியன என்னவென்று கூறுகிறேன். கேட்பாயாக!

உலகில் உள்ள யாவற்றையும் மிகுதியாகக் கொண்டு விளங்கும் பாண்டிய நெடுஞ்செழியனே! நீர் இன்றி அமையாத உடல் உணவால் அமைவது; உணவையே முதன்மையாகவும் உடையது. எனவே உணவு தந்தவர் உயிரைத் தந்தவர் ஆவர்.

உணவு எனப்படுவது நிலத்துடன் நீரும் ஆகும். நிலத்தையும் நீரையும் ஒன்று சேர்த்தவர் இவ்வுலகில் உடலையும் உயிரையும் ஒன்று சேர்த்தவர். நெல் முதலிய தானியங்களை விதைத்து மழையைப் பார்த்திருக்கும் பரந்த நிலமாயினும் அதனைச் சார்ந்து ஆளும் அரசனின் முயற்சிக்குச் சிறிதும் உதவாது. அதனால், நான் கூறிய மொழிகளை இகழாது விரைவாகக் கடைப்பிடிப்பாயாக.

நிலம் குழிந்த இடங்கள்தோறும் நீர்நிலையைப் பெருகச் செய்தல் வேண்டும். அவ்வாறு நிலத்துடன் நீரைக் கூட்டியோர் மூவகை இன்பத்தையும் நிலைத்த புகழையும் பெறுவர். இதைச் செய்யாதவர் புகழ் பெறாது வீணே மடிவர்.

## இலக்கணக்குறிப்பு

மூதூர், நல்லிசை, புன்புலம் – பண்புத்தொகைகள்; நிறுத்தல் – தொழிற்பெயர் ; அமையா – ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

நீரும் நிலமும், உடம்பும் உயிரும் – எண்ணும்மைகள்; அடுபோர் – வினைத்தொகை.

கொடுத்தோர் – வினையாலணையும் பெயர்.

### பகுபத உறுப்பிலக்கணம்

நிறுத்தல் – நிறு + த் + தல்

நிறு – பகுதி

த் – சந்தி

தல் – தொழிற்பெயர் விகுதி

கொடுத்தோர் – கொடு +த் + த் + ஓர்

கொடு – பகுதி

த் – சந்தி

த் – இறந்தகால இடைநிலை

ஓர் – பலர்பால் வினைமுற்று விகுதி

### நூல்வெளி

எட்டுத்தொகை நூல்களுள் ஒன்று புறநானூறு. இது பண்டைய வேந்தர்களின் வீரம், வெற்றி, கொடை குறித்தும் குறுநில மன்னர்கள், புலவர்கள், சான்றோர்கள் உள்ளிட்டவர்களின் பெருமைகளைப் பற்றியும் அன்றைய மக்களின் புறவாழ்க்கையைப் பற்றியும் கூறுகிறது. இந்நூல் பண்டைத் தமிழர்களின் அரிய வரலாற்றுச்செய்திகள் அடங்கிய பண்பாட்டுக் கருவூலமாகத் திகழ்கிறது.

குளம்தொட்டுக் கோடு பதித்து வழிசீத்து
உளம்தொட்டு உழுவயல் ஆக்கி – வளம்தொட்டுப்
பாகுபடும் கிணற்றோடு என்று இவ்வைம் பாற்படுத்தான்
ஏகும் சொர்க்கத்து இனிது

– சிறுபஞ்சமூலம் 64

## கற்பவை கற்றபின்...

1. பின்வரும் புறநானூற்றுத் தொடர்களுக்கான பொருளைப் பள்ளி நூலகத்திற்குச் சென்று அறிந்து எழுதுக.

   அ) உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே! ( புறம் – 18)

   ஆ) உண்பது நாழி உடுப்பவை இரண்டே ! (புறம் – 189)

   இ) யாதும் ஊரே யாவரும் கேளிர் ! ( புறம் – 192 )

   ஈ) சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே !
   நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே ! ( புறம் – 312 )

   உ) உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும் ,
   பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே ! ( புறம் – 183 )

2. "உணவாகும் மழை" என்னும் தலைப்பில் விளக்கக் குறிப்புகளுடன் கூடிய படத்தொகுப்பை உருவாக்குக.

விரிவானம்

# இயற்கை

உ

# தண்ணீர்

– கந்தர்வன்

நுழையும்முன்

தண்ணீரின் இன்றியமையாமையையும் தேவையையும் பண்டைய காலத்திலிருந்து இலக்கியங்கள் வலியுறுத்திக் கொண்டேயிருக்கின்றன. இன்று நீர் நெருக்கடி உச்சத்தில் இருக்கிறது. குறிப்பாகச் சிற்றூர்களில் இந்த நெருக்கடி வாழ்க்கைச் சிக்கலாகவே மாறிவருகிறது. இதை உணர்த்துகிறது இச்சிறுகதை.



வெயில் குரூரமாய் அடித்துவிட்டுத் தணியத் தொடங்கிய வேளை; பாசஞ்ஜர் ரயிலின் கூவல் வெகு தொலைவிலிருந்து அருவலாகக் கேட்டது. வல்லநேந்தல் தாண்டியதும் இன்ஜின் டிரைவர்கள் இப்படித்தான் ஒலி எழுப்புவார்கள். திண்ணைக்கு ஓடிவந்து, தூணைப் பிடித்துக் கொண்டு திரும்பிப் பார்த்தாள் இந்திரா. தூரத்தில் ரயில் வருவது மங்கலாகத் தெரிந்தது.

உள்ளே அம்மா 'பொட்டுத் தண்ணியில்லை' என்று ரயில் ஊதல் கேட்டு

அனிச்சையாகச் சொல்லிக் கொண்டிருந்தது. ஐயா, சினை ஆட்டைப் பார்த்தபடி திண்ணையில் உட்கார்ந்திருந்தார். ஐயாவுக்கு எப்போதும் கணக்குத்தான். ஆடு குட்டி போட... குட்டி பெருத்துக் குட்டிகள் போட்டுக் குபேரனாகும் கணக்கு.

இந்திரா குடத்தைத் தூக்கி இடுப்பில் வைத்துக்கொண்டு வாரியைத் தாண்டி ஓடினாள். மேட்டை எட்டும்போது ஏழெட்டுப் பெண்கள் இடுப்பில் குடங்களோடு ஓடிவந்து இந்திராவை முந்தப் பார்த்தார்கள். எல்லோரும் வாலிபப் பெண்கள். முந்துகிற பெண்களைப் பிந்துகிற பெண்கள் சடைகளைப் பிடித்து இழுத்தார்கள். கைகளைப் பிடித்து மடக்கினார்கள். அடுத்தவர் குடங்களைப் படபடவென்று கையால் அடித்தார்கள். சிரிப்பும் கனைப்புமாக ஓடினாலும் முந்துபவர்களைப் பார்த்து நொடிக்கொருமுறை கடுகடுவென்று கோபமானார்கள். அடுத்த நொடியில் முந்தும்போது சிரித்துக் கொண்டார்கள்.

இரண்டு மூன்று குடங்களைத் தூக்கிக்கொண்டு புயல் நுழைவது போல் ரயில் நிலையத்துக்குள் பாய்ந்தார்கள்.

இந்திரா இதில் படுகெட்டியான பெண். எல்லோருக்கும் முன்பாக இடம்பிடித்ததோடு மட்டுமல்லாமல், பதற்றமேயில்லாமல் அலட்சியமாக நிற்கிற அழகைப் பார்த்தால் ஐந்தாறு வருசங்களாக அதே இடத்தில் நிற்பது போல இருந்தது. இடம்பிடிக்க முடியாத பெண்கள் சுவர்களில் சாய்ந்துகொண்டு எகத்தாளம் பேசினார்கள். ஸ்டேஷன் மாஸ்டர் வெள்ளை உடைகளோடும் பச்சைக் கொடியோடும் வந்தவர் இந்தச் சச்சரவைப் பார்த்துவிட்டு, 'ஒரு நாளைக்கு ஸ்குவார்டை வரச்சொல்லி எல்லோரையும் அள்ளிக்கிட்டுப் போயி ஜெயில்ல போடுறேன்' என்றார். பெண்கள் இடுப்புக் குடங்களுக்குள் முகங்களைக் கவிழ்த்து வக்கணையாகச் சிரித்தார்கள்.

ரயில், காட்டுயானை பிளிறிக்கொண்டு வருவதுபோல் நிலையத்துக்குள் நுழைந்தது. பயணிகள் யாரும் இறங்கும் முன்பாக இந்திரா குடத்தோடு பெட்டிக்குள் பாய்ந்தாள். முகம் கழுவும் பேசின் குழாயை அழுத்தி வேகம் வேகமாக அரைச்செம்பும் கால் செம்புமாகப் பிடித்துக் குடத்தில் ஊற்றிக்கொண்டிருந்தாள். இந்தக் குழாயில் தண்ணீர்ச் சனியனும் விறுவிறுவென்று வந்துவிடாது; இந்தப் பீடைக் குடமும் நிறைந்து தொலைக்காது.

இதுதான் நாளை சாயந்திரம்வரை வீட்டுக்குக் குடிதண்ணீர். இதுவும் கிடையாதென்றால், பிலாப்பட்டிக்குப் போக வேண்டும் நல்ல தண்ணீருக்கு. இந்த ஊரும் அக்கம்பக்கத்து ஊர்களும் உவடு அரித்துப் போய்விட்டன. ஊருக்குள் நாலு இடங்களில் கிணறு வெட்டிப் பார்த்தார்கள். உப்பென்றால் குடலை வாய்க்குக் கொண்டுவருகிற உப்பு. கடல் தண்ணீரைவிட ஒருமடங்கு கூடுதலான உப்பு. கிணற்றுத் தண்ணீரில் உப்பளம் போடலாம் என்றார்கள்.

எல்லா ஊர்களும் தீய்ந்து போய்விட்டன. எல்லா ஊரிலும் பருவகாலத்தில் மழை பெய்யும். புயல் வந்தால்தான் இந்தப் பக்கம் பூராவுக்கும் மழை. மழை பெய்வதில்லை... பெய்தால் பேய் மழை. கண்மாய், ஊருணி எல்லாம் உடைப்பெடுத்து வெள்ளம் போய் மூன்றாம் நாள் மறுபடி நீரில்லாப் பூமியாகக் கிடக்கும். ஆகாயத்துக்கும் பூமிக்கும் இந்த ஊர்ப்பக்கம் நிரந்தரப் பகை. ஐயா காலத்தில் உலகம்மாள் கோயில் கிணறு மட்டும் நல்ல தண்ணீர்க் கிணறாக இருந்தது. ஏற்றம் வைத்து அதிகாலை முதல் டின் கட்டி நாலைந்து இளவட்டங்கள் இறைத்துக்கொண்டே இருந்தார்கள். பெண்கள் தலையில் ஒரு குடம், இடுப்பில் ஒரு குடமென்று எடுத்துவந்தார்கள். ஜனங்கள் இலுப்பை மரத்துக்காய், கண்மாய்க் கரம்பை என்று தலை தேய்த்து ஜன்னி வருகிற மாதிரி சுகமாகக் குளித்தார்கள். சனிக்கிழமைகளில் வானவில்லாக எண்ணெயும் வாசனையாகச் சீயக்காயும் மிதக்கும், நந்தவனத்துக்குப் பாயும் தண்ணீரில்.

இப்போது எல்லாமே பூண்டற்றுப் போய்விட்டன. முல்லை மணந்த

நந்தவனம் குட்டிச்சுவர்களில் சின்ன அடையாளங்களோடு பாழடைந்து கிடக்கிறது. கிணற்றில் முள்ளை வெட்டிப் போட்டிருக்கிறார்கள். மழைபெய்து குண்டுக்கால் நிறையும்வரை குடிக்கத் தண்ணீர் வேண்டிப் பெண்கள் குடங்களோடு பிலாப்பட்டிக்குப் போகிறார்கள்.

மூணு மைல் தூரம் நடக்கவேண்டும் பிலாப்பட்டிக்கு. ஊருணிக்குப் பக்கமாயிருக்கிறது அந்த நல்ல தண்ணீர்க் கிணறு. ஊற ஊறத்தான் இறைக்கவேண்டும். மதியம் வரை பிலாப்பட்டி ஜனம் மட்டும் இறைத்துக்கொள்ளும். மதியத்துக்குமேல் வெளியூர் ஆள்களுக்கு விடுவார்கள். காய்ந்து கருவாடாகக் கிடந்து, ஒரு சொட்டுச் சிந்தாமல் நடந்து ஊர் திரும்பி, வீட்டுப் படியேறினால் பொழுது சாய்ந்துகொண்டிருக்கும்.

அம்மாதான் தினமும் பிலாப்பட்டிக்குப்போய் வந்து கொண்டிருந்தது. வயிற்றில் கட்டி வந்ததிலிருந்து இந்திரா குடத்தை எடுத்தாள். நாலு மாசத்துக்கு முன்தான் ரயில் நிலைய ஓரத்து வீடுகளில் இந்தப் பேச்சு வந்தது. 'ஒலகம் பூராவும் தண்ணியில்லைன்னாலும் சரி, நாள் தவறாம ரயிலுக்கு மட்டும் எங்கிருந்தாவது கொண்டு வந்து ஊத்திவிட்டுருறான் பாரு'. இப்படிப் பேசிப்பேசியே மூன்று மணிக்கு வரும் பாசஞ்சர் ரயிலைக் குறிவைத்துத் தண்ணீர் பிடிக்க ஆரம்பித்தார்கள்.

மூன்று மணி ரயிலுக்கு மதியம் பன்னிரண்டு மணிக்கே பெண்கள் வந்தார்கள். இந்திரா இந்த நேரங்களில் அதிகமாகக் கனவு கண்டாள். உள்ளூரில் எவனுக்கும் கழுத்தை நீட்டிவிடக் கூடாதென்றும் பிலாப்பட்டி மாதிரி தண்ணீருள்ள ஊர்களிலிருந்து பெண்கேட்டு வருவது மாதிரியும் கனவு காண்பாள். பிலாப்பட்டிக்கு நடந்துபோய்த் தண்ணீர் தூக்கிவந்த ராத்திரிகளில், கால் வலியோடு விடிய விடியக் கிடந்திருக்கிறாள்.

நோவோ நோக்காடோ, பொம்பிளை பிலாப்பட்டி போயாக வேண்டும். தண்ணீர்



கொண்டுவந்து சோறு பொங்க வேண்டும். குடிக்கக் கொடுக்கவேண்டும்.

இந்திரா மாதிரி அமைதியாக மற்ற பெண்கள் கனவு காணாமல் இடம்பிடிக்க அடிதடிச் சண்டைகளில் இறங்குவதையும் ரயில் நிலையமே அவர்கள் ஆதிக்கத்துக்குப் போய்க் கொண்டிருப்பதையும் ஸ்டேஷன் மாஸ்டர் விரும்பவில்லை. சிப்பந்திகளைக் கொண்டு ஒருநாள் வீடுவரை விரட்டினார். அன்று ஒரு பொட்டுத் தண்ணீர்கூட ரயிலிலிருந்து யாராலும் கொண்டு போகமுடியவில்லை. பாய்ண்ட்ஸ்மேன் பக்கத்து ஊர்க்காரர். அவரை வைத்துப் பேசித்தான் இந்த ஏற்பாடு. ரயில் வரும்போதுதான் வரவேண்டும். வந்து சத்தம் போடக்கூடாது. தண்ணீர் கொஞ்சம்தான் பிடிக்க வேண்டும். இவற்றுக்குக் கட்டுப்பட்டு

வருவதாகப் பேர்; சண்டை இன்னும் நாறிக்கொண்டுதானிருக்கிறது. எந்தச் சண்டை எப்படி நடந்தாலும் இந்தப் பெண்களுக்கு ஆறாத ஆச்சரியம் ஒன்று உண்டு. நம் ஊர்த் தண்ணீரைவிட ஒசத்தியான தண்ணீர் ரயில் குழாயில் வரும்போது, ஏன் சில ரயில் பயணிகள் வெள்ளை வெள்ளை பாட்டில்களில் தண்ணீரைப் பதினைந்து ரூபாய்க்கும் இருபது ரூபாய்க்கும் வாங்கி வைத்துக்கொண்டு திரிகிறார்களென்று.

இந்திரா உள்ளங்கையை இன்னும் அழுத்திக் கொண்டிருந்தாள். தண்ணீர் சன்னமாக வந்தது குழாயில். பாதிக்குடம் கூட நிறையவில்லை. இன்ஜினிலிருந்து ஊதல் ஒலி வந்தது. அம்மா 'சொட்டுத் தண்ணியில்லை ' என்று முனகியது ஞாபகத்துக்கு வந்தது. சில நேரங்களில் இன்ஜினிலிருந்து ஊதல் ஒலி வந்தாலும் புறப்படத் தாமதமாகும். ரயில் நகர்கிற மாதிரி இருந்தது. இன்னும் கொஞ்சம் மட்டிலும் பிடித்துக் குடத்தில் ஊற்றிவிட்டுக் குதித்துவிடலாம் என்று நினைத்துக்கொண்டே உள்ளங்கையை மேலும் அழுத்தினாள்.

ரயில் வேகம் அதிகரித்து பிளாட்பார முனை வருவது போலிருந்தது. படபடவென்று செம்பை எடுத்துக் குடத்தைப் பாதையில் வைத்துவிட்டுக் குதிக்கப் போனாள். முழங்கை வரை கண்ணாடி வளையல்கள் அணிந்த ஒரு வடக்கத்திப் பெண் ஓடிவந்து இவளை இழுத்து வண்டிக்குள் தள்ளிவிட்டுக் கோபமாகக் கத்தினாள். மொழி புரியவில்லையென்றாலும், 'தற்கொலை பண்ணிக் கொள்ளவா பார்த்தாய்?' என்கிற மாதிரி ஒலித்தது.

சினை ஆட்டைப் பார்த்தபடி கணக்குப் போட்டுக்கொண்டிருந்த ஐயா காலாறக் கடைத் தெருவுக்குப் போனபோது சின்னவன் ஓடிவந்து இரைந்துகொண்டே சொன்னான், 'ரயில் போயிருச்சு ... அக்கா இன்னும் வரலை.'

ஐயா ரொம்ப சாதாரணமாகச் சொன்னார், 'எங்கெயாவது வாயளந்துகிட்டிருக்கும். போய் நல்லாப் பாருலெ.'

'நல்லாப் பாத்துட்டுத்தான் அம்மா சொல்லச் சொன்னுச்சு.'

லேசான பதற்றத்துடன் வீடு வந்தவரிடம் அம்மா படபடவென்று சொன்னாள். 'ஓடுங்க... அந்த ரயிலைப் பிடிங்க. எம்மக அதிலெதான் போயிட்டா. அடுத்த டேசன்ல பிடிங்க போங்க.'

அண்ணன் வீடு, தம்பிவீடு, மச்சினன் வீடுகளிலிருந்து ஆட்கள் ஓடி வந்தார்கள். இரண்டு பஸ்கள் போய் மூன்றாவதாக வந்த ராமநாதபுரம் பஸ்ஸில் ஏறியும் ஏறாமலுமாக கண்டக்டரிடம் கத்தினார்கள். 'பாசஞ்சர் ரயிலைப் பிடிப்பா...' டிக்கெட் கொடுப்பதில் மும்முரமாயிருந்த கண்டக்டர், அதைச் சாதாரண முறையில் கேட்டுக்கொண்டு பதறாமலுமிருக்கவே ஐயாவின் மைத்துனர் பாய்ந்தார்...

'பொண்ணு ரயிலோட போயிருச்சுனு நாங்க ஈரக்குலையைப் பிடிச்சுக்கிட்டுக் கத்துறோம். சிணுங்காமக் கேட்டுக்கிட்டு நிக்கிறீரு. டிரைவர்ட்ட சொல்லுமய்யா, வேகமா ஓட்டச் சொல்லி...' விவகாரம் வேண்டாமென்று கண்டக்டரும், 'வேகமாப் போங்கண்ணே' என்று ஒப்புக்குச் சொல்லிவிட்டு டிக்கெட் கொடுத்துக்கொண்டிருந்தார்.

கும்பல், டிரைவரிடம் போய்க் கத்தியது. டிரைவர் விரட்டிக் கொண்டுபோய்ச் சேர்ந்தார்.

இவர்கள் போய்ச் சேர்ந்தபோது ராமநாதபுரம் ரயில் நிலையத்தில் ஈ எறும்புகூட இல்லை. ஸ்டேஷன் மாஸ்டரிலிருந்து ஒவ்வொருவரிடமாக விசாரித்தார்கள்.

'குடத்தோட ஒரு பொண்ணு எறங்குச்சா...?' என்று. யாரும் பார்த்ததாகச் சொல்லவில்லை. போன ஆட்களில் குயுக்தியான ஒருவர் சொன்னார், 'புள்ளைட்ட டிக்கெட் இல்லைங்கிறதனாலெ யாருக்கும் தெரியாம ஒளிஞ்சு ஒளிஞ்சு வெளியே போயிருக்கும்யா.'

ரயில் நிலையத்துக்கு வெளியே எல்லா இடங்களிலும் கேட்டார்கள். ராமநாதபுரம் வடக்குத் தெருவில், அத்தை வண்டிக்காரத் தெருவில், சின்னம்மா வீடு, தெரிந்தவீடு,

அறிந்தவீடு பூராவும் தேடிவிட்டு பஸ் ஸ்டாண்டுக்குப் போனார்கள். பால்கடை, பழக்கடையென்று ராமநாதபுரத்தையே சல்லடை போட்டுச் சலித்துப் பார்த்துவிட்டுக் கவலையும் அசதியுமாக ஆட்கள் ஊர் திரும்பினார்கள்.

வீட்டு வாசலில் இவர்களை எதிர்பார்த்துக் காத்திருந்த கூட்டத்தில் ஒருவர் 'மெட்ராசுக்கே போயிருச்சோ புள்ளை' என்று சந்தேகம் எழுப்ப.... ஐயா கத்தினார், 'ஒன் கழுத்தைக் கடிச்சு மென்னுபுருவேன்; பேசாம இரு' ஐயா கூடப் போய்த் திரும்பிய ஆள்களில் ஒருவர் கூட்டத்தின் கவலையைக் கவனித்துவிட்டுச் சொன்னார். 'நாம அடுத்தடுத்த ஸ்டேஷன்களுக்குப் போய்ப் பார்த்திருக்கணும் எங்கெயாவது புள்ளை எறங்கித் தெசை தெரியாம நிக்குதான்னு... இங்கெ உக்காந்து என்ன செய்யிறது.'

அம்மாவுக்கு இந்தப் பேச்சுகளைக் கேட்டுக் குமட்டலும் மயக்கமுமாய் வந்தது. இந்தக் கூட்டத்தில் யாரும் எட்டமுடியாத யோசனைக்குப் போய், பொருமிக்கொண்டும் வாயில் முந்தானையை அழுத்திக்கொண்டும் சொன்னாள், 'எம்புள்ளை எந்த ஊரு தண்டவாளத்திலெ விழுந்து கெடக்கோ' அவளால் அடக்கமுடியவில்லை. அவளை யாரும் பிடித்து அடக்கவும் முடியவில்லை.

ஆவேசம் வந்தவள்போல் ரயில் நிலையத்துக்கு ஓடினாள். பின்னாலேயே ஐயாவும் ஊர் ஜனமும் ஓடியது. பொழுது இருட்டிக்கொண்டு வந்தது. அம்மா தண்டவாளத்தின் ஓரத்திலேயே ஓட ஆரம்பித்தாள். பத்தடி ஓடியதும் ஐயா, அம்மாவைப் பிடித்து இழுத்து நிறுத்திவிட்டுக் கூர்ந்து பார்த்தார். தூரத்தில் ஒரு உருவம் தெரிந்தது.

நெருங்க நெருங்க அம்மாதான் முதலில் கத்தினாள். 'அந்தா, இந்திரா வருது. இடுப்பில் தண்ணீர்க் குடத்தோடு இந்திரா கூட்டத்தருகில் வந்தாள். அம்மா நிறை பூரிப்பில் விம்மிக்கொண்டு போய்க் குடத்தை வாங்கினாள். நிறைகுடம், சொட்டுச் சிந்தாமல் கொண்டு வந்துவிட்டாள்.

மகள் வந்து சேர்ந்ததில் மலர்ந்துபோய் ஐயா கேட்டார்... 'பயமகளே... இதையும் சொமந்துக்கிட்டா வரணும்; இத்தனை மைலுக்கும்?' இந்திரா சொன்னாள்... 'ஊக்கும்.. நாளைக்கு வரை குடிக்க எங்கெ போறது?'

**நூல் வெளி**

கந்தர்வனின் இயற்பெயர் நாகலிங்கம். இராமநாதபுரம் மாவட்டத்தைச் சேர்ந்தவர். தமிழ்நாடு அரசின் கருவூலக் கணக்குத்துறையில் பணியாற்றியவர். கவிதைகளையும் எழுதியிருக்கிறார். சாசனம், ஒவ்வொரு கல்லாய், கொம்பன் முதலியவை இவரது குறிப்பிடத் தகுந்த சிறுகதைத் தொகுப்புகள்.

## கற்பவை கற்றபின்...

1. உலகில் நீர் இல்லை என்றால் என்னவெல்லாம் நடக்கும் என்பதைக் கற்பனை செய்து உங்கள் கருத்துகளை வகுப்பறையில் பகிர்ந்து கொள்க.

2. பீங்... பீங்... என்ற சத்தத்துடன் தண்ணீர் வாகனம் ஒன்று வேகமாக வந்து நின்றது. அம்மா குடங்களுடன் ஓடிச்சென்று வரிசையில் நின்றாள். அப்போது கருமேகங்கள் திரண்டன……….. கதையைத் தொடர்ந்து எழுதி நிறைவு செய்க.

கற்கண்டு

இயற்கை
உ

# துணைவினைகள்

## வினைவகைகள்

வினைச்சொற்களை அவற்றின் அமைப்பு, பொருள், சொற்றொடரில் அவை தொழிற்படும் விதம் முதலான அடிப்படைகளில் பலவகையாகப் பாகுபடுத்தலாம்.

## தனிவினையும் கூட்டுவினையும்

வினைச்சொற்களை அமைப்பின் அடிப்படையில் தனிவினை, கூட்டுவினை என இருவகைப்படுத்தலாம்.

### தனிவினை

படி, படியுங்கள், படிக்கிறார்கள்.

மேற்காணும் சொற்களைக் கவனியுங்கள். இவற்றில் படி என்னும் வினையடியும் சில ஒட்டுகளும் உள்ளன. படி என்னும் வினையடி, பகாப்பதம் ஆகும். அதை மேலும் பொருள்தரக்கூடிய கூறுகளாகப் பிரிக்க முடியாது. இவ்வாறு, தனிவினையடிகளை அல்லது தனிவினையடிகளைக் கொண்ட வினைச்சொற்களைத் தனிவினை என்பர்.

### கூட்டுவினை

ஆசைப்பட்டேன், கண்டுபிடித்தார்கள், தந்தியடித்தேன், முன்னேறினோம்.

மேற்காணும் சொற்களைக் கவனியுங்கள். ஆசைப்படு, கண்டுபிடி, தந்தியடி, முன்னேறு என்பன அவற்றின் வினையடிகள். அவை பகுபதங்கள் ஆகும். இவ்வாறு பகுபதமாக உள்ள வினையடிகளைக் கூட்டுவினையடிகள் என்பர். அவ்வகையில் கூட்டுவினையடிகளைக் கொண்ட வினைச்சொற்களைக் கூட்டுவினை என்பர்.

கூட்டுவினைகள் பொதுவாக மூன்று வகையாக ஆக்கப்படுகின்றன.

1) **பெயர் + வினை = வினை**

தந்தி + அடி = தந்தியடி

ஆணை + இடு = ஆணையிடு

கேள்வி + படு = கேள்விப்படு

2) **வினை + வினை = வினை**

கண்டு + பிடி = கண்டுபிடி

சுட்டி+ காட்டு = சுட்டிக்காட்டு

சொல்லி + கொடு = சொல்லிக்கொடு

3) **இடை + வினை = வினை**

முன் + ஏறு = முன்னேறு

பின் + பற்று = பின்பற்று

கீழ் + இறங்கு = கீழிறங்கு

## முதல்வினையும் துணைவினையும்

நான் படம் பார்த்தேன்.

கண்ணன் போவதைப் பார்த்தேன்.

இந்தச் சொற்றொடர்களில், பார் என்னும் வினை, கண்களால் பார்த்தல் என்னும் பொருளைத் தருகிறது. இது பார் என்னும் வினையின் அடிப்படைப் பொருள் அல்லது சொற்பொருள்(LEXICAL MEANING) எனலாம்.

ஓடப் பார்த்தேன்.

எழுதிப் பார்த்தாள்.

இந்தச் சொற்றொடர்களில் ஓடப்பார், எழுதிப்பார் என்பன கூட்டுவினைகள் ஆகும். இவற்றில் இரண்டு உறுப்புகள் உள்ளன. ஓட,

எழுதி என்பன முதல் உறுப்புகள். இவை அந்தந்த வினைகளின் அடிப்படைப் பொருளைத் தருகின்றன. பார் என்பது இரண்டாவது உறுப்பு. இது இவ்வினையின் அடிப்படைப் பொருளான பார்த்தல் என்னும் பொருளைத் தராமல் தனது முதல் உறுப்போடு சேர்ந்து வேறு பொருள் தருகிறது.

ஓடப் பார்த்தேன் – இதில் பார் என்பது முயன்றேன் என்னும் முயற்சிப் பொருளைத் தருகிறது.

எழுதிப் பார்த்தாள் – இதில் பார் என்பது சோதித்து அறிதல் என்னும் பொருளைத் தருகிறது.

ஒரு கூட்டுவினையின் முதல் உறுப்பாக வந்து தன் அடிப்படைப் பொருளைத் தரும் வினை, முதல் வினை (MAIN VERB) எனப்படும். ஒரு கூட்டுவினையின் இரண்டாவது உறுப்பாக வந்து தன் அடிப்படைப் பொருளை விட்டுவிட்டு முதல் வினைக்குத் துணையாக வேறு இலக்கணப் பொருளைத் தரும் வினை, துணைவினை எனப்படும்.

கூட்டுவினையின் முதல் வினை செய அல்லது செய்து என்னும் வினையெச்ச வடிவில் இருக்கும். துணைவினை, வினையடி வடிவில் இருக்கும். துணைவினையே திணை, பால், இடம், காலம் காட்டும் விகுதிகளைப் பெறும். தமிழில் ஏறத்தாழ 40 துணைவினைகள் உள்ளன. அவற்றுள் பெரும்பாலானவை முதல்வினையாகவும் செயல்படுகின்றன.

பார், இரு, வை, கொள், போ, வா, முடி, விடு, தள்ளு, போடு, கொடு, காட்டு முதலானவை இருவகை வினைகளாகவும் செயல்படுகின்றன.

### துணைவினைகளின் பண்புகள்

1. துணைவினைகள் பேசுவோரின் மனநிலை, செயலின் தன்மை போன்றவற்றைப் புலப்படுத்துகின்றன.

2. இவை முதல் வினையைச் சார்ந்து அதன் வினைப்பொருண்மைக்கு மெருகூட்டுகின்றன.

3. பேச்சு மொழியிலேயே துணைவினைகளின் ஆதிக்கம் அதிகமாக உள்ளது.

தற்காலத் தமிழில் ஆம், ஆயிற்று, இடு, ஒழி, காட்டு, கூடும், கூடாது, கொடு, கொண்டிரு, கொள், செய், தள்ளு, தா, தொலை, படு, பார், பொறு, போ, வை, வந்து, விடு, வேண்டாம், முடியும், முடியாது, இயலும், இயலாது, வேண்டும், உள் போன்ற பல சொற்கள் துணைவினைகளாக வழங்குகின்றன.

| வினையடி | முதல்வினை | துணைவினை |
|---|---|---|
| இரு | புத்தகம் மேசையில் இருக்கிறது | நான் மதுரைக்குப் போயிருக்கிறேன். |
| | என்னிடம் பணம் இருக்கிறது. | அப்பா வந்திருக்கிறார். |
| வை | அவள் நெற்றியில் பொட்டு வைத்தாள். | நீ என்னை அழ வைக்காதே. |
| | அவன் வானொலியில் பாட்டு வைத்தான். | அவர் ஒருவரைப் பாட வைத்தார். |
| கொள் | பானை நான்கு படி அரிசி கொள்ளும். | நீ சொன்னால் அவன் கேட்டுக் கொள்வான். |
| | நான் சொன்னதை நீ கருத்தில் கொள்ளவில்லை. | நோயாளியைப் பார்த்துக் கொள்கிறேன். |

<table>
<tr><td rowspan="2">போ</td><td>அவன் எங்கே போகிறான்?</td><td>மழை பெய்யப் போகிறது.</td></tr>
<tr><td>நான் கடைக்குப் போனேன்.</td><td>நான் பயந்துபோனேன்.</td></tr>
<tr><td rowspan="2">வா</td><td>நீ நாளைக்கு வீட்டுக்கு வா.</td><td>அந்நியர் நம்மை ஆண்டு வந்தனர்.</td></tr>
<tr><td>எனக்கு இப்போதுதான் புத்தி வந்தது.</td><td>வானம் இருண்டு வருகிறது.</td></tr>
<tr><td rowspan="2">விடு</td><td>யாரையும் உள்ளே விடாதே.</td><td>அடுத்த மாதம் நான் போய்விடுவேன்.</td></tr>
<tr><td>மழைவிட்டதும் போகலாம்.</td><td>அப்பா இனி வந்துவிடுவார்.</td></tr>
<tr><td rowspan="2">தள்ளு</td><td>அவன் என்னைக் கீழே தள்ளினான்.</td><td>அவர் கதைகதையாக எழுதித்தள்ளுகிறார்.</td></tr>
<tr><td>காய்கறிவண்டியைத் தள்ளிச் சென்றார்.</td><td>அவன் அனைத்தையும் வாசித்துத் தள்ளுகிறான்.</td></tr>
<tr><td rowspan="2">போடு</td><td>புத்தகத்தைக் கீழே போடாதே.</td><td>மலிவான விலையில் வாங்கிப் போட்டேன்.</td></tr>
<tr><td>தலையில் தொப்பியைப் போடு.</td><td>விழித்தவுடன் பாயைச் சுருட்டிப் போடவேண்டும்.</td></tr>
<tr><td rowspan="2">கொடு</td><td>நான் அவருக்குப் பணம் கொடுத்தேன்.</td><td>பசித்தவனுக்குச் சோறு வாங்கிக் கொடுத்தான்.</td></tr>
<tr><td>அவன் உயிரைக் கொடுத்து வேலை செய்கிறான்.</td><td>பாடம் சொல்லிக் கொடுப்பேன்.</td></tr>
<tr><td rowspan="2">காட்டு</td><td>தாய் குழந்தைக்கு நிலவைக் காட்டினாள்.</td><td>ஆசிரியர் செய்யுளைப் பாடிக் காட்டினார்.</td></tr>
<tr><td>சான்றோர் காட்டிய பாதையில் செல்.</td><td>படித்தபடி நடந்துகாட்ட வேண்டும்.</td></tr>
</table>

தமிழ் மற்றும் ஜப்பானிய மொழிகளில் துணைவினைகள் முதல் வினைகளுக்குப் பின்பே இடம்பெறும். (எ.கா.) கீழே விழப் பார்த்தான். இத்தொடரில் விழு (விழ) என்பது முதல்வினை; பார்த்தான் என்பது துணைவினை.

தமிழின் துணைவினைக் கொள்கை ஆங்கிலத்தின் துணைவினைக் கொள்கையிலிருந்து வேறுபட்டது. அதாவது, தமிழில் துணைவினையாக வரும் வேர்ச்சொல் சில தொடர்களில் முதல்வினையாகவும் வரும்.

## கற்பவை கற்றபின்...

1. பொருத்தமான துணைவினைகளைப் பயன்படுத்துக.

   அ) மனிதனையும் விலங்குகளையும் (வேறு) ______________ மொழியாகும்.

   ஆ) திராவிட மொழிகள் சில, பொதுப் பண்புகளைப் (பெறு) _____________ .

   இ காலந்தோறும் தன்னைப் (புதுப்பித்து) _____________ மொழி தமிழ்.

   ஈ) என் ஐயத்தைக் கேட்பதற்கு எவரேனும் கிடைக்கமாட்டார்களா என்று (தேடு) ___________.

2. கீழ்க்காணும் துணைவினைகளைப் பயன்படுத்திப் புதிய தொடர்களை எழுதுக.

   அ) வேண்டும் ஆ) பார் இ) உள் ஈ) வா உ) விடு

3. பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்துகையில் துணைவினைகளைச் சேர்க்கிறோம். பிறமொழிச் சொற்களைத் தமிழ்ச் சொற்களாக மாற்றி, ஏற்ற துணைவினைகளை இட்டு எழுதுக



மார்னிங் எழுந்து, பிரஷ் பண்ணி, யூனிஃபார்ம் போட்டு ஸ்கூலுக்குப் போனாள்.

..........................................................................

..........................................................................

..........................................................................

..........................................................................

**4. சிந்தனை வினா**

அ) வேற்று மொழிச் சொற்களைப் பயன்படுத்துகையில் துணைவினைகளின் பங்கு குறித்துச் சிந்தித்து எழுதுக. (எடுத்துக்காட்டு: பேனாவை யூஸ் பண்ணு)

ஆ) சந்தையில் காய்கறிகளை வாங்கும்போது, உங்களுக்கும் கடைக்காரருக்கும் நடக்கும் உரையாடலைத் துணைவினைகளைப் பயன்படுத்தி எழுதுக.

# மதிப்பீடு

**பலவுள் தெரிக.**

1. "மிசை" – என்பதன் எதிர்ச்சொல் என்ன ?

   அ) கீழே　　ஆ) மேலே　　இ) இசை　　ஈ) வசை

2. நீர் நிலைகளோடு தொடர்பில்லாதது எது ?

   அ) அகழி　　ஆ) ஆறு　　இ) இலஞ்சி　　ஈ) புலரி

3. பொருத்தமான விடையைத் தேர்க.

   அ. நீரின்று அமையாது உலகு – திருவள்ளுவர்

   ஆ. நீரின்று அமையாது யாக்கை – ஔவையார்

   இ. மாமழை போற்றுதும் – இளங்கோவடிகள்

   க) அ, இ　　உ) ஆ, இ　　ங) அ, ஆ　　ச) அ, ஆ, இ

4. பொருத்தமான வினையை எடுத்து எழுதுக.

   கதிர் அலுவலகத்திலிருந்து விரைவாக ---------------.

   அவன் பையன் பள்ளியிலிருந்து இன்னும் --------------.

   அ) வந்தான் , வருகிறான்　　ஆ) வந்துவிட்டான், வரவில்லை

   இ) வந்தான் , வருவான்　　ஈ) வருவான், வரமாட்டான்

5. <u>மல்லல்</u> மூதூர் வயவேந்தே- கோடிட்ட சொல்லின் பொருள் என்ன?

   அ) மறுமை　　ஆ) பூவரசு மரம்　　இ) வளம்　　ஈ) பெரிய

**குறுவினா**

1. "கூவல்" என்று அழைக்கப்படுவது எது?
2. உங்களது பள்ளியைச் சுற்றியுள்ள நீர்நிலைகளின் பெயர்களைக் குறிப்பிடுக.
3. உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே – குறிப்புத் தருக.
4. நிலையான வானத்தில் தோன்றி மறையும் காட்சிக்குப் பெரியபுராணம் எதனை ஒப்பிடுகிறது?
5. மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்
   காடும் உடையது அரண் – இக்குறள் கூறும் நாட்டின் அரண்கள் யாவை?

## சிறுவினா

1. அடுத்த தலைமுறைக்கும் தண்ணீர் தேவை – அதற்கு நாம் செய்யவேண்டியவற்றை எழுதுக.
2. நிலைத்த புகழைப் பெறுவதற்குக் குடபுலவியனார் கூறும் வழிகள் யாவை?
3. சோழர்காலக் குமிழித்தூம்பு எதற்காகப் பயன்படுத்தப்பட்டது?
4. பட்ட மரத்தின் வருத்தங்கள் யாவை?

## நெடுவினா

1. நீரின்று அமையாது உலகு – என்னும் வள்ளுவரின் அடி உணர்த்தும் பொருள் ஆழத்தை எடுத்துக்காட்டுடன் விவரிக்க.
2. பெரியபுராணம் காட்டும் திருநாட்டுச் சிறப்பினைத் தொகுத்து எழுதுக.
3. 'தண்ணீர்' கதையைக் கருப்பொருள் குன்றாமல் சுருக்கித் தருக.

## மொழியை ஆள்வோம்!

**படித்துச் சுவைக்க.**

### பூ மொழி

*வீட்டின் பக்கத்தில் நிற்கிறது ஒரு மரம்*<br>
*கூடத்துச் சன்னலையும்*<br>
*சமையலறைச் சன்னலையும்*<br>
*விரிந்த கிளைகளால்*<br>
*பார்த்துக் கொண்டிருக்கிறது.*<br>
*கைகளசைத்துக் கால்களுதைத்துக்*<br>
*கூடத்தில் கிடக்கும் சிசு*<br>
*மிழற்றுகிறது ஒரு சொல்லை*<br>
*சமையலறையில்*<br>
*பணி முனைந்திருக்கிற அம்மா*<br>
*அச்சொல்லையே நீள வாக்கியங்களாக்கிப்*<br>
*பதில் அனுப்புகிறாள்.*<br>
*விரல் நீட்டிச் சிசு பேசுகிறது மீண்டும்*<br>
*அத்தொனியிலேயே அம்மா குழறுகிறாள்*<br>
*கடவுளுக்கும் புரியாத அவ்வுரையாடலைக் கிரகிக்கக்*<br>
*கூடத்துச் சன்னலுக்கும்*<br>
*சமையலறைச் சன்னலுக்குமாய்க்*<br>
*கிளைகளின் வழியே ஓடி ஓடிக்*<br>
*கவனிக்கிறது அணில்.*

*பெருகும் சொற்களும்*
*அபூர்வ எதிர்வினைகளும்*
*அதீதக் குழப்பத்திலாழ்த்த*
*அணில் ஓடிக் களைக்கிறது சன்னல்களுக்கிடையே*
*அர்த்தங்களை மரம் பூக்களாக மொழிபெயர்த்து*
*அதன்மீது உதிர்த்துக்கொண்டிருப்பது தெரியாமல்.*

–யூமா வாசுகி

**அறிஞர்களின் பொன்மொழிகளைத் தமிழில் மொழிபெயர்த்து எழுதுக.**

1. *Every flower is a soul blossoming in nature – Gerard De Nerval*
2. *Sunset is still my favourite colour, and rainbow is second – Mattie Stepanek*
3. *An early morning walk is a blessing for the whole day – Henry David Thoreau*
4. *Just living is not enough... One must have sunshine, freedom, and a little flower – Hans Christian Anderson*

**பிழை நீக்கி எழுதுக.**

1. சர் ஆர்தர் காட்டன் கல்லணையின் கட்டுமான உத்திகொண்டுதான் தௌலீஸ்வரம் அணையைக் கட்டியது.
2. மதியழகன் தீக்காயம் ஏற்பட்ட இடத்தில் உடனடியாகத் தண்ணீர் கொண்டு குளிர வைத்தாள்.
3. மழையே பயிர்க்கூட்டமும் உயிர்க்கூட்டமும் வாழப் பெருந்துணை புரிகின்றன.
4. நீலனும் மாலனும் அவசரகாலத் தொடர்புக்கான தொலைப்பேசி எண்களின் பட்டியலை வைத்திருக்கிறோம்.
5. சூறாவளியின் போது மேல்மாடியில் தங்காமல் தரைத்தளத்திலேயே தங்கியதால் தப்பிப்பான்.

**பழமொழிகளைப் பயன்படுத்திச் சொற்றொடர் அமைக்க.**

1. நெல்லுக்குப் பாய்கிற தண்ணீர் புல்லுக்குப் பாய்வது போல.
2. தண்ணீர் வெந்நீர் ஆனாலும் நெருப்பை அணைக்கும்.
3. மெல்லப் பாயும் தண்ணீர் கல்லையும் கரைக்கும்.
4. கிணற்றுத் தண்ணீரை வெள்ளம் கொண்டு போகாது.

**வடிவ மாற்றம் செய்க.**

நீர்ச் சுழற்சி குறித்த கருத்து விளக்கப்படத்தின் உட்பொருளைப் புரிந்துணர்ந்து பத்தியாக மாற்றி அமைக்க.




## வரவேற்பு மடல் எழுதுக.

சுற்றுச் சூழலைப் பேணிக்காக்கும் பள்ளிகளின் வரிசையில் மாவட்டத்திலேயே சிறந்ததாக உங்கள் பள்ளி தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது. அதனைக் கொண்டாடும் விழாவில் கலந்துகொள்ளும் மாவட்டக் கல்வி அலுவலருக்கு வரவேற்பு மடல் ஒன்றை எழுதுக.

## நயம் பாராட்டுக.

*கல்லும் மலையும் குதித்துவந்தேன் – பெருங்*
*காடும் செடியும் கடந்துவந்தேன்;*
*எல்லை விரிந்த சமவெளி – எங்கும்நான்*
*இறங்கித் தவழ்ந்து தவழ்ந்துவந்தேன்.*
*ஏறாத மேடுகள் ஏறிவந்தேன்–பல*
*ஏரி குளங்கள் நிரப்பிவந்தேன்;*
*ஊறாத ஊற்றிலும் உட்புகுந்தேன்–மணல்*
*ஓடைகள் பொங்கிட ஓடிவந்தேன்.*

– *கவிமணி*

## மொழியோடு விளையாடு

## சொல்லுக்குள் சொல் தேடுக.

எ.கா. ஆற்றங்கரையோரம் – ஆறு, கரை, ஓரம்

கடையெழுவள்ளல்கள், எடுப்பார்கைப்பிள்ளை, தமிழ்விடுதூது

பாய்மரக்கப்பல், எட்டுக்கால்பூச்சி.

## அகராதியில் காண்க.

கந்தி, நெடில், பாலி, மகி, கம்புள், கைச்சாத்து.

**சொற்களை இணைத்துத் தொடர்களை விரிவுபடுத்துக.**

(எ.கா.) அரிசி போடுகிறேன்.

விடை:

புறாவுக்கு அரிசி போடுகிறேன்.

காலையில் புறாவுக்கு அரிசி போடுகிறேன்.

நாள்தோறும் காலையில் புறாவுக்கு அரிசி போடுகிறேன்.

நான் நாள்தோறும் காலையில் புறாவுக்கு அரிசி போடுகிறேன்.

நான் நாள்தோறும் காலையில் மறக்காமல் புறாவுக்கு அரிசி போடுகிறேன்.

நான் நாள்தோறும் காலையில் ஒருபோதும் மறக்காமல் புறாவுக்கு அரிசி போடுகிறேன்.

1. மழை பெய்தது.
2. வானவில்லைப் பார்த்தேன்.
3. குழந்தை சிரித்தது.
4. எறும்புகள் போகின்றன.
5. படம் வரைந்தான்.

**வேறுபட்ட வினையெச்சங்களைப் பயன்படுத்தி, முதல்வினைகளைத் துணைவினைகளாக மாற்றுக.**

முதல்வினைகள் - பார்த்தேன், கொடுத்தார், நடந்தான், சேர்ந்தார், அமைத்தோம்.

(எ.கா.) பார்த்தேன்




**வினையடிகளை முதல்வினையாகவும் துணைவினையாகவும் அமைத்துத் தொடர்களை உருவாக்குக.**

வினையடி – வா, போ, செய், மாற்று, இரு, கொடு, கொள், எழுது, விடு, போடு.

(எ.கா.) வினையடி – வை

| முதல்வினை | துணைவினை |
| --- | --- |
| மூட்டையைத் தலையில் வைத்தான்.<br>இலையில் இனிப்பை வைத்தனர். | அம்மா குழந்தையைத் தூங்க வைத்தார்.<br>நான் உனக்கு ஒரு நூல் வாங்கி வைத்தேன்.<br>எதற்கும் சொல்லி வை. |

## காட்சியைக் கண்டு கவினுற எழுதுக.



.......................................................................

.......................................................................

.......................................................................

.......................................................................

## செயல்திட்டம்

கொடுக்கப்பட்ட இணையத்தள இணைப்பில் உள்ள காணொலியைக் கண்டு அதுகுறித்த உங்கள் கருத்துகளை இருபக்க அளவில் எழுதி வகுப்பறையில் கலந்துரையாடுக.

*https://www.youtube.com/watch?v=0ReVrONNvoQ*

## நிற்க அதற்குத் தக...

### என் பொறுப்புகள்...

அ) தண்ணீரைச் சிக்கனமாகப் பயன்படுத்துவேன்.

ஆ) வகுப்பறையில் நண்பர்கள் வைத்திருக்கும் புதிய அழகிய பொருள்களைப் பார்த்தால் ஆசை வரும். அவர்களைப் போல நானும் முயன்று உழைத்து அவற்றை என்னுடைய பணத்தில் வாங்குவேன்.

இ) அறையை விட்டு வெளியே செல்லும்போது மின்விசிறி, மின்விளக்குகளை நிறுத்திவிட்டுச் செல்வேன்.

ஈ) ---------------------------------------------------------------------------

உ) ---------------------------------------------------------------------------

ஊ) ---------------------------------------------------------------------------

## கலைச்சொல் அறிவோம்

குமிழிக் கல் – *Conical Stone*

நீர் மேலாண்மை – *Water Management*

பாசனத் தொழில்நுட்பம் – *Irrigation Technology*

வெப்ப மண்டலம் – *Tropical Zone*

## அறிவை விரிவு செய்

1. அழகின் சிரிப்பு – பாவேந்தர் பாரதிதாசன்
2. தண்ணீர் தண்ணீர் – கோமல் சுவாமிநாதன்
3. தண்ணீர் தேசம் – வைரமுத்து
4. வாய்க்கால் மீன்கள் – வெ. இறையன்பு
5. மழைக்காலமும் குயிலோசையும் – மா. கிருஷ்ணன்

### மறைநீர் (Virtual Water)

கண்ணுக்குத் தெரியாமல் நாம் இரண்டு வகையில் நீரைப் பயன்படுத்துகிறோம். முதல் வகை நாம் பயன்படுத்தும் பொருள்கள் வழியாக; இரண்டாவது வகை நாம் உண்ணும் உணவின் வழியாக. புலப்படாத் தண்ணீர் என்பது உணவுப் பொருள்களின் உற்பத்தி குறித்தும் அதனை உற்பத்தி செய்யச் செலவிடப்பட்ட தண்ணீர்த் தேவை குறித்தும் பேசுவது ஆகும். ஒரு கிலோ ஆப்பிளை உற்பத்தி செய்ய 822லிட்டர் தண்ணீரும் ஒரு கிலோ சர்க்கரையை உற்பத்தி செய்ய 1780லிட்டர் தண்ணீரும் ஒரு கிலோ அரிசியை உற்பத்தி செய்ய 2500 லிட்டர் தண்ணீரும் ஒரு கிலோ காப்பிக் கொட்டையை உற்பத்தி செய்ய 18,900 லிட்டர் தண்ணீரும் தேவைப்படுகின்றது. நீர்வளத்தைப் பாதுகாக்க நாட்டின் மேல்புற நீர்வளம் மற்றும் நிலத்தடி நீர்வளம் குறித்து அக்கறை கொள்ளவேண்டும். நீர் அதிகம் தேவைப்படும் உணவுப் பொருள்களை ஏற்றுமதி செய்வதைத் தவிர்த்து, தேவைக்கேற்ப இறக்குமதி செய்துகொள்ள வேண்டும். இதனால் நாட்டின் நிலத்தடி நீரும் ஆற்று நீரும் சேமிக்கப்படும்.

( மா. அமரேசன்--கண்ணுக்குப் புலப்படாத தண்ணீரும் புலப்படும் உண்மைகளும்)

இயல் மூன்று

பண்பாடு

# உள்ளத்தின் சீர்



## கற்றல் நோக்கங்கள்

- தமிழர்களின் பண்பாட்டு அசைவுகளை உணர்ந்து பின்பற்றுதல்
- அறவுணர்வை வெளிப்படுத்தும் வீர விளையாட்டென ஏறுதழுவுதலை ஏற்றல்
- தொல்லியல் எச்சங்களைப் பாதுகாத்தல்
- விழாக்கள் பண்பாட்டின் தொடர்ச்சியாகக் கொண்டாடப்பட்டு வருபவை என்பதை உணர்ந்து பங்கேற்றல்
- பட்டிமன்றம் என்ற கருத்துப்பரிமாற்ற வடிவத்தை நேர்த்தியுடன் பயன்படுத்துதல்

பண்பாடு

௩

# ஏறு தழுவுதல்

நுழையும்முன்

வீரத்திற்கும் விளைச்சலுக்கும் செழிப்பிற்கும் செல்வத்திற்கும் தமிழர்களால் அடையாளப்படுத்தப்படுபவை மாடுகள். முல்லை, மருதநிலங்களில் கால்கொண்டு தமிழர்தம் வாழ்வோடு பின்னிப்பிணைந்து பண்பாடாகியுள்ளது ஏறுதழுவுதல். ஏறுதழுவுதல், தமிழரின் நாகரிகத்தை உணர்த்தும் விளையாட்டு; இளைஞர்களின் வீரத்தைப் பெருமிதப்படுத்தும் பண்பாட்டு நிகழ்வு. இது, நூற்றாண்டுகள் பல கடந்தும் தமிழர்தம் அடையாளமாகவே நிறுவப்பட்டிருக்கிறது.

பண்பாட்டுத் தொன்மையும் இலக்கிய வளமையும் வாய்ந்தது தமிழர் வரலாறு. இயற்கையைச் சார்ந்தும் பிற உயிர்களோடு இணைந்தும் வாழ்ந்தனர் சங்ககாலத் தமிழர்கள். இதற்குச் சங்க இலக்கியங்களில் ஏராளமான சான்றுகள் உள்ளன. அவற்றுள் ஒன்று ஏறு தழுவுதல் நிகழ்வாகும்.

## இலக்கியங்களில் ஏறு தழுவுதல்

சங்க இலக்கியமான கலித்தொகையில், ஏறு தழுவுதல் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. முல்லைநில ஆயர்கள் பங்கேற்கும் இந்நிகழ்வு, அவர்களின் வீரத்தினை மெய்ப்பிக்கக்கூடிய ஒன்றாகத் திகழ்கிறது.

49F7TT

*எழுந்தது துகள்,*
*ஏற்றனர் மார்பு*
*கவிழ்ந்தன மருப்பு,*
*கலங்கினர் பலர்*

*(கலி – 102: அடி 21–24)*

என்று முல்லைக்கலியில் ஏறு தழுவுதல் களம் குறித்த அடிகள், காட்சியை நம் கண்முன்னே நிறுத்துகின்றன. காளைகளின் பாய்ச்சல் பற்றியும் கலித்தொகை கூறுகிறது.



திமில் பெருத்த காளைகள் பல, காலாலே தரையைக் கிளறி, புழுதியை எழுப்பின. சில நிலத்தை நொறுக்கின; சில தம்முள் முரண்பட்டு ஒன்றோடொன்று எதிர்த்துக் கொண்டன; சில மண்டியிட்டுப் பாய்ந்தன. இந்தக் காளைகள் மிடுக்குடனும் வீரத்துடனும்

போருக்குச் செல்லும் மருதநிலத்துப் போர் வீரர்களை நிகர்த்தனவாக இருந்தன. இதனை,

*நீறு எடுப்பவை, நிலம் சாடுபவை,*
*மாறுஏற்றுச் சிலைப்பவை, மண்டிப் பாய்பவையாய்*
*துளங்கு இமில் நல்ஏற்றினம் பல களம்புகும்*
*மள்ளர் வனப்பு ஒத்தன*

(கலி – 106: அடி 7–10)

என்று கலித்தொகை விவரிக்கிறது.

கலித்தொகை தவிர, சிலப்பதிகாரம் முதலான இலக்கியங்களிலும் புறப்பொருள் வெண்பாமாலை என்னும் இலக்கண நூலிலும் ஏறுகோள் குறித்துக் கூறப்பட்டுள்ளது.

ஏறு தழுவுதல் பற்றிப் பிற்காலச் சிற்றிலக்கியங்களுள் ஒன்றான பள்ளு இலக்கியத்திலும் குறிப்புகள் உள்ளன. எருதுகட்டி என்னும் மாடு தழுவுதல் நிகழ்வைக் கண்ணுடையம்மன் பள்ளு பதிவு செய்துள்ளது.

### தொல்சான்றுகள்

ஏறு தழுவுதல் குறித்த பல நடுகற்கள், புடைப்புச் சிற்பங்கள் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் கண்டறியப்பட்டுள்ளன. சேலம் மாவட்டத்தில் எருது விளையாடி



நடுகல் – சேலம்

### தெரிந்து தெளிவோம்

எகிப்தில் உள்ள பெனி – ஹாசன் சித்திரங்களிலும், கிரீட் தீவிலுள்ள கினோஸஸ் என்னுமிடத்தில் உள்ள அரண்மனைச் சித்திரங்களிலும் காளைப்போர் குறித்த செய்திகள் இடம்பெற்றுள்ளன.

மரணமுற்றவன் பெயரால் எடுக்கப்பட்ட எருது பொருதார் கல் ஒன்று உள்ளது. கோவுரிச் சங்கன் கருவந்துறையிலே எருது விளையாடிப் பட்டான் சங்கன் மகன் பெரிய பயலு நட்டகல்லு என்பது அந்நடுகல் பொறிப்பு. கருவந்துறை என்னும் ஊரில் எருதோடு போராடி இறந்துபட்டவனாகிய சங்கன் என்பவனுக்கு அவனுடைய மகன் பெரிய பயல் எடுத்த நடுகல் என்பது இதன் பொருள்.



கரிக்கையூர் பாறை ஓவியம்

கூரிய கொம்புகளும் சிலிர்த்த திமில்களும் கொண்ட மூன்று எருதுகளைப் பலர் கூடி விரட்டுவதுபோன்ற பண்டைய ஓவியம் நீலகிரி மாவட்டம் கோத்தகிரி அருகேயுள்ள கரிக்கையூரில் காணப்படுகிறது. திமிலுடன் கூடிய காளையொன்றை ஒருவர் அடக்க முயல்வது போன்ற ஓவியம் மதுரை மாவட்டம் உசிலம்பட்டி அருகே கல்லூத்து மேட்டுப்பட்டியில் கண்டறியப்பட்டுள்ளது. தேனி மாவட்டம் மயிலாடும் பாறை அருகே சித்திரக்கல் புடவில் என்ற இடத்தில் திமிலுடன் கூடிய காளை ஓவியம் கண்டறியப்பட்டுள்ளது.



9th_Tamil_Pages 001-121.indd 65 23-01-2020 20:00:29

சிந்துவெளி நாகரிக வரலாற்றிலும் காளை முக்கியப் பங்கு வகிக்கின்றது. இம்மக்கள் காளையைத் தெய்வமாக வழிபட்டதை அகழாய்வில் கிடைக்கப்பெற்ற சான்றுகள் வாயிலாக அறிகிறோம். சிந்துவெளி அகழாய்வுகளில் கண்டறியப்பட்ட மாடு தழுவும் கல் முத்திரை ஒன்று தமிழர்களின் பண்பாட்டுத் தொல்லியல் அடையாளமான ஏறு தழுவுதலைக் குறிப்பதாக ஐராவதம் மகாதேவன் தெரிவித்துள்ளார்.



**சிந்துவெளி கல் முத்திரை**

## பண்பாட்டு அடையாளம்

ஏறு தழுவுதல், முல்லை நிலத்து மக்களின் அடையாளத்தோடும் மருத நிலத்து வேளாண் குடிகளின் தொழில் உற்பத்தியோடும் பாலை நிலத்து மக்களின் தேவைக்கான போக்குவரத்துத் தொழிலோடும் பிணைந்தது. இதுவே வேளாண் உற்பத்தியின் பண்பாட்டு அடையாளமாக நீட்சி அடைந்தது.

ஏரில் பூட்டி உழவு செய்ய உதவிய காளை மாடுகள் ஏர் மாடுகள், எருதுகள், ஏறுகள் என்று அழைக்கப்பட்டன. தமிழக உழவர்கள் தங்களின் உழவு சார்ந்த கருவிகளோடு அறுவடைக்குப் பெரிதும் துணைநின்ற மாடுகளைப் போற்றி மகிழ்விக்க ஏற்படுத்திய விழாவே மாட்டுப் பொங்கல். அவ்விழாவன்று மாடுகளைக் குளிப்பாட்டிப் பல வண்ணங்களில் பொட்டிட்டு, மூக்கணாங் கயிறு, கழுத்துக் கயிறு, பிடி கயிறு அனைத்தையும் புதிதாக அணிவிப்பர். கொம்புகளைப் பிசிறு சீவி, எண்ணெய் தடவி, கழுத்து மணியாரம் கட்டி, வெள்ளை வேட்டியோ, துண்டோ கழுத்தில் கட்டுவர். பின்னர், பூமாலை அணிவித்துப் பொங்கலிட்டுத் தம்மோடு உழைப்பில் ஈடுபட்ட மாடுகளுக்கு நன்றி தெரிவிக்கும் விதத்தில் தளிகைப் பொங்கலை ஊட்டிவிடுவர்.

இதன் தொடர்ச்சியாக, வேளாண் குடிகளின் வாழ்வோடும் உழைப்போடும் பிணைந்துகிடந்த மாடுகளுடன் அவர்கள் விளையாடி மகிழும் மரபாக உருக்கொண்டதே ஏறு தழுவுதலாகும்.

ஏறு தழுவுதல், தமிழகத்தின் வெவ்வேறு பகுதிகளில் வெவ்வேறு பெயர்களில் அழைக்கப்படுகின்றது. அது மாடு பிடித்தல், மாடு அணைதல், மாடு விடுதல், மஞ்சுவிரட்டு, வேலி மஞ்சுவிரட்டு, எருது கட்டி, காளை விரட்டு, ஏறு விடுதல், சல்லிக்கட்டு எனப் பல பெயர்களில் அழைக்கப்படுகின்றது.

சல்லிக்கட்டு பேச்சுவழக்கில் திரிபுற்று, ஜல்லிக்கட்டு என அழைக்கப்படுகிறது. சல்லி என்பது மாட்டின் கழுத்தில் கட்டப்படுகின்ற வளையத்தினைக் குறிக்கும். புளியங்கொம்பினால் வளையம் செய்து காளையின் கழுத்தில் அணிவிக்கும் வழக்கம் தற்போதும் உள்ளது. அக்காலத்தில் புழங்கிக் கொண்டிருந்த சல்லி நாணயங்களை, துணியில் முடிந்து மாட்டின் கொம்புகளில் கட்டிவிடும் பழக்கமும் இருந்தது. மாட்டைத் தழுவும் வீரருக்கு அந்தப் பணமுடிப்புச் சொந்தமாகும்.

## ஏறு தழுவுதலும் தமிழர் அறமும்

மேலைநாடுகளில் குறிப்பாக, தேசிய விளையாட்டாகக் காளைச் சண்டையைக் கொண்டிருக்கும் ஸ்பெயின் நாட்டில், காளையைக் கொன்று அடக்குபவனே வீரனாகக் கருதப்படுவான். அவ்விளையாட்டில், ஆயுதங்களைப் பயன்படுத்துவதும் உண்டு.



மேலை நாட்டுக் காளை விளையாட்டு



தமிழக ஏறு தழுவுதல்

சில நாட்டு விளையாட்டுகளில் காளையை அடக்கும் வீரன் வென்றாலும் தோற்றாலும் ஆட்டத்தின் முடிவில் அந்தக் காளை கொல்லப்படுதலும் உண்டு. மேலைநாடுகளில் ஆண்டு முழுவதும் நடத்தப்படும் காளை விளையாட்டு, மனிதனுள் ஒளிந்திருக்கும் வன்மத்தையும் போர் வெறியையும் வெளிப்படுத்துவது போல் இருக்கிறது.

தமிழகத்தில் நடைபெறும் ஏறு தழுவுதலில் காளையை அடக்குபவர்கள் எந்த ஆயுதத்தையும் பயன்படுத்தக் கூடாது. நிகழ்வின் தொடக்கத்திலும் முடிவிலும் காளைகளுக்கு வழிபாடு செய்வர். எவராலும் அடக்க முடியாத காளைகளும் உண்டு. எனவே, காளைகளும் வெற்றி பெற்றதாகக் கருதப்படும். அன்பையும் வீரத்தையும் ஒருசேர வளர்த்தெடுக்கும் இவ்விளையாட்டில் காளையை அரவணைத்து அடக்குபவரே வீரராகப் போற்றப்படுவர்.

### நம் கடமை

தமிழர்களின் பண்பாட்டுத் திருவிழாவாக விளங்கும் ஏறு தழுவுதல் இரண்டாயிரம் ஆண்டுகாலத் தொன்மையுடையது.

பண்டைய வீரவுணர்வை நினைவூட்டும் ஏறுதழுவுதல் விலங்குகளை முன்னிலைப்படுத்தும் வழிபாட்டையும் இயற்கை வேளாண்மையையும் வலியுறுத்தும் பண்பாட்டுக் குறியீடு ஆகும். நம் முன்னோரின் இத்தகைய பண்பாட்டுக்கூறுகளைப் பேணிப் பாதுகாப்பது நம் ஒவ்வொருவரின் கடமையுமாகும்.

## கற்பவை கற்றபின்...

1. இலக்கியங்கள் காட்டும் ஏறுதழுவுதல் காட்சிகளை உங்கள் பகுதியில் நடைபெற்ற எருது விடும் விளையாட்டு நிகழ்வுடன் ஒப்பிட்டு வகுப்பறையில் கலந்துரையாடுக.

2. உங்கள் ஊரில் பொங்கல்விழா நடைபெறுகிறது. அவ்விழாவில் சாக்கு ஓட்டம், தவளை ஓட்டம், புட்டியில் தண்ணீர் நிரப்புதல், இசை நாற்காலி, உருளைக் கிழங்கு பொறுக்குதல், ஊசியில் நூல் கோத்தல், கோலம் போடுதல், கயிறு இழுத்தல், மெதுவாக மிதிவண்டி ஓட்டுதல், பானை உடைத்தல் ஆகிய போட்டிகள் நடைபெறுகின்றன. அப்போட்டிகள் குறித்து நேரடி வருணனை செய்க.

கவிதைப் பேழை

# பண்பாடு ௩

# மணிமேகலை

– சீத்தலைச் சாத்தனார்

நுழையும்முன்

மக்களின் வாழ்வில் பிறந்தது முதலாக நடத்தப்படுகின்ற நிகழ்வுகளில் விழா, தனக்கென ஒரு தனியிடம் பெறுகிறது. மனித மாண்புகளை எடுத்துரைக்கும் விழா, பண்பாட்டின் வெளிப்பாடாகவும் திகழ்கிறது. அல்லும் பகலும் உழைப்பில் திளைக்கின்ற மக்களை உற்சாகப்படுத்தி ஓய்வு தரும் வாயில் விழாதான். அவ்வகையில் புகார் நகரோடு அதிகம் தொடர்புடையதாகத் திகழ்ந்த இந்திரவிழா சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் விவரிக்கப்படுகிறது. அவ்விழா நிகழ்வுகளைக் கண்முன்னே காட்சிப்படுத்துவதாய் அமைகிறது மணிமேகலையின் விழாவறை காதை.



49P3VG

## விழாவறை காதை

*மெய்த்திறம் வழக்கு நன்பொருள் வீடெனும்*
*இத்திறம் தத்தம் இயல்பினிற் காட்டும்*
*சமயக் கணக்கரும் தந்துறை போகிய*
*அமயக் கணக்கரும் அகலா ராகிக்*
*கரந்துரு எய்திய கடவு ளாளரும்*
*பரந்தொருங்கு ஈண்டிய பாடை மாக்களும்*
*ஐம்பெருங் குழுவும் எண்பேர் ஆயமும்*
*வந்தொருங்கு குழீஇ வான்பதி தன்னுள்*

*(அடிகள் 11–18)*

*தோரண வீதியும் தோம்அறு கோட்டியும்*
*பூரண கும்பமும் பொலம்பா லிகைகளும்*
*பாவை விளக்கும் பலவுடன் பரப்புமின்;*
*காய்க்குலைக் கமுகும் வாழையும் வஞ்சியும்*
*பூக்கொடி வல்லியும் கரும்பும் நடுமின்;*
*பத்தி வேதிகைப் பசும்பொன் தூணத்து*
*முத்துத் தாமம் முறையொடு நாற்றுமின்;*
*விழவுமலி மூதூர் வீதியும் மன்றமும்*
*பழமணல் மாற்றுமின்; புதுமணல் பரப்புமின்;*
*கதலிகைக் கொடியும் காழ்ஊன்று விலோதமும்*
*மதலை மாடமும் வாயிலும் சேர்த்துமின்;*
*(அடிகள் 43–53)*

*தண்மணற் பந்தரும் தாழ்தரு பொதியிலும்*
*புண்ணிய நல்லுரை அறிவீர் பொருந்துமின்;*
*ஒட்டிய சமயத்து உறுபொருள் வாதிகள்*
*பட்டிமண் டபத்துப் பாங்கறிந்து ஏறுமின்;*
*பற்றா மாக்கள் தம்முடன் ஆயினும்*
*செற்றமும் கலாமும் செய்யாது அகலுமின்;*
*வெண்மணற் குன்றமும் விரிபூஞ் சோலையும்*
*தண்மணல் துருத்தியும் தாழ்பூந் துறைகளும்*
*தேவரும் மக்களும் ஒத்துடன் திரிதரும்*
*நாலேழ் நாளினும் நன்கறிந்தீர் என –*
*ஒளிறுவாள் மறவரும் தேரும் மாவும்*
*களிறும் சூழ்தரக் கண்முரசு இயம்பி*
*பசியும் பிணியும் பகையும் நீங்கி*
*வசியும் வளனும் சுரக்க! என வாழ்த்தி;*
*அணிவிழா அறைந்தனன் அகநகர் மருங்கென் .*
*(அடிகள் 58–72)*

## சொல்லும் பொருளும்

சமயக் கணக்கர் –சமயத் தத்துவவாதிகள், பாடைமாக்கள் – பல மொழிபேசும் மக்கள், குழீஇ– ஒன்றுகூடி, தோம் – குற்றம், கோட்டி–மன்றம், பொலம்–பொன், வேதிகை–திண்ணை, தூணம்–தூண், தாமம்–மாலை, கதலிகைக் கொடி –சிறு சிறு கொடியாகப் பல கொடிகள் கட்டியது, காழூன்று கொடி – கொம்புகளில் கட்டும் கொடி, விலோதம் – துணியாலான கொடி, வசி– மழை, செற்றம்– சினம், கலாம்–போர், துருத்தி– ஆற்றிடைக்குறை (ஆற்றின் நடுவே இருக்கும் மணல்திட்டு).

## பாடலின் பொருள்

### இந்திர விழாவைக் காண வந்தோர்

உயர்வுடைய புகார் நகரில் மெய்ப்பொருள் உணர்த்தும் உலகியல், தத்துவம், வீடுபேறு ஆகிய பொருள்களை அவரவர் இயற்கைத் தன்மைக்கு ஏற்ப விளக்குபவராகிய சமயவாதிகள் கூடியிருக்கின்றனர். தமது நெறியில் சிறந்தவராக விளங்கும் காலத்தைக் கணக்கிட்டுச் சொல்லும் காலக்கணிதரும் கூடியிருக்கின்றனர். இந்நகரை விட்டு நீங்காதவராய்த் தம் தேவருடலை மறைத்து மக்கள் உருவில் வந்திருக்கும் கடவுளரும் கடல்வழி வாணிகம் செய்து பெரும் செல்வம் காரணமாய்ப் புகார் நகரில் ஒன்று திரண்டிருக்கும் பல மொழி பேசும் அயல் நாட்டினரும் குழுமியிருக்கின்றனர். அரசர்க்குரிய அமைச்சர் குழுவாகிய ஐம்பெருங்குழு, எண்பேராயத்தைச் சேர்ந்தவர்களும் அரசவையில் ஒன்று திரண்டிருக்கின்றனர்.

### விழா முன்னேற்பாடுகள் பற்றி அறிவித்தல்

"தோரணம் கட்டிய தெருக்களிலும் குற்றமில்லாத மன்றங்களிலும் பூரணகும்பம், பொற்பாலிகை, பாவை விளக்கு மற்றும் பலவகையான மங்கலப் பொருள்களை முறையாக அழகுபடுத்தி வையுங்கள். குலை முற்றிய பாக்கு மரத்தையும் வாழை மரத்தையும் வஞ்சிக்கொடியையும் பூங்கொடிகளையும் கரும்பையும் நட்டு வையுங்கள். வீடுகளின்முன் தெருத் திண்ணையில் வரிசை வரிசையாக இருக்கும் தங்கத் தூண்களிலே முத்து மாலைகளைத் தொங்கவிடுங்கள்.

விழாக்கள் நிறைந்த இம்மூதூரின் தெருக்களிலும் மன்றங்களிலும் பழைய மணலை மாற்றிப் புதிய மணலைப் பரப்புங்கள். துகில் கொடிகளையும் கம்புகளில் கட்டிய கொடிகளையும் பெரிய மாடங்களிலும் மாடங்களின் வாயில்களிலும் சேர்த்துக் கட்டுங்கள்.

### பட்டிமண்டபம் ஏறுமின்

குளிர்ந்த மணல் பரப்பிய பந்தல்களிலும் மரங்கள் தாழ்ந்து நிழல்தரும் ஊர் மன்றங்களிலும் நல்லன பற்றிச் சொற்பொழிவாற்றுங்கள். அவரவர் சமயத்திற்கு உரிய உட்பொருளறிந்து வாதிடுவோர் பட்டிமண்டப முறைகளைத் தெரிந்து வாதிட்டுத் தீர்வு காணுங்கள்.



### சினமும் பூசலும் கைவிடுக

மாறுபாடு கொண்ட பகைவர்களிடம் கூடக் கோபமும் பூசலும் கொள்ளாது அவர்களைவிட்டு விலகி நில்லுங்கள். வெண்மையான மணல் குன்றுகளிலும் மலர் செறிந்த பூஞ்சோலைகளிலும் குளிர்ந்த ஆற்றிடைக்குறைகளிலும் மரக்கிளைகள் நிழல் தரும் தண்ணீர்த் துறைகளிலும் விழா நடைபெறும். அந்த இருபத்தெட்டு நாள்களிலும் தேவரும் மக்களும் ஒன்றுபட்டு மகிழ்வுடன் உலாவிவருவர் என்பதை நன்கு அறியுங்கள்."

### வாழ்த்தி அறிவித்தல்

ஒளிவீசும் வாளேந்திய காலாட் படையினரும் தேர்ப்படையினரும் குதிரைப் படையினரும் யானைப் படையினரும் சூழ்ந்து வர, அகன்ற முரசினை அறைந்து, "பசியும் நோயும் பகையும் நீங்கி மழையும் வளமும் எங்கும் பெருகுவதாகுக" என வாழ்த்தி மேற்கண்ட செய்திகளை நகருக்கு முரசறைவோன் அறிவித்தான்.

## தெரிந்து தெளிவோம்

### ஐம்பெருங்குழு

1. அமைச்சர்
2. சடங்கு செய்விப்போர்
3. படைத்தலைவர்
4. தூதர்
5. சாரணர் (ஒற்றர்)

### எண்பேராயம்

1. கரணத்தியலவர்
2. கரும விதிகள்
3. கனகச்சுற்றம்
4. கடைக்காப்பாளர்
5. நகரமாந்தர்
6. படைத்தலைவர்
7. யானை வீரர்
8. இவுளி மறவர்

## இலக்கணக் குறிப்பு

தோரணவீதியும், தோமறு கோட்டியும் – எண்ணும்மைகள்

காய்க்குலைக் கமுகு, பூக்கொடி வல்லி, முத்துத்தாமம் – இரண்டாம் வேற்றுமை உருபும்பயனும் உடன்தொக்கத் தொகைகள்

மாற்றுமின், பரப்புமின் – ஏவல் வினைமுற்றுகள்

உறுபொருள் – உரிச்சொல்தொடர்

தாழ்பூந்துறை – வினைத்தொகை

பாங்கறிந்து – இரண்டாம் வேற்றுமைத்தொகை

நன்பொருள், தண்மணல், நல்லுரை – பண்புத்தொகைகள்

### பகுபத உறுப்பிலக்கணம்

பரப்புமின் – பரப்பு + மின்

பரப்பு – பகுதி

மின் – முன்னிலைப் பன்மை வினைமுற்று விகுதி

அறைந்தனன் – அறை +த்(ந்) + த் +அன்+அன்

அறை – பகுதி

த் – சந்தி. த் – ந் ஆனது விகாரம்

த் – இறந்தகால இடைநிலை

அன் – சாரியை

அன் – ஆண்பால் வினைமுற்று விகுதி

### நூல் வெளி

தொடர்நிலைச் செய்யுள் வரிசையில் இரட்டைக் காப்பியங்களான சிலப்பதிகாரம், மணிமேகலை இரண்டும் தமிழ் மக்களின் வாழ்வியலைச் சொல்லும் கருவூலங்களாகத் திகழ்கின்றன. மணிமேகலை, ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்று. மணிமேகலையின் துறவு வாழ்க்கையைக் கூறுவதால், இந்நூலுக்கு மணிமேகலைத் துறவு என்னும் வேறு பெயரும் உண்டு. இது பெண்மையை முதன்மைப்படுத்தும் புரட்சிக் காப்பியம்; பண்பாட்டுக் கூறுகளைக் காட்டும் தமிழ்க்காப்பியம். இக்காப்பியம் சொற்சுவையும் பொருட்சுவையும் இயற்கை வருணனைகளும் நிறைந்தது; பௌத்த சமயச் சார்புடையது. கதை அடிப்படையில் மணிமேகலையைச் சிலப்பதிகாரத்தின் தொடர்ச்சியெனக் கூறுவர். முப்பது காதைகளாக அமைந்துள்ள மணிமேகலையின் முதல் காதையே விழாவறை காதை.

மணிமேகலைக் காப்பியத்தை இயற்றியவர் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார். சாத்தன் என்பது இவரது இயற்பெயர். இவர், திருச்சிராப்பள்ளியைச் சேர்ந்த சீத்தலை என்னும் ஊரில் பிறந்து மதுரையில் வாழ்ந்தவர் என்று கூறுவர். கூலவாணிகம் (கூலம் – தானியம்) செய்தவர். இக்காரணங்களால் இவர் மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் என்று அழைக்கப்பெற்றார். சிலப்பதிகாரம் இயற்றிய இளங்கோவடிகளும் இவரும் சமகாலத்தவர் என்பர். தண்டமிழ் ஆசான், சாத்தன், நன்னூற்புலவன் என்று இளங்கோவடிகள் சாத்தனாரைப் பாராட்டியுள்ளார்.

அறம் எனப்படுவது யாதெனக் கேட்பின்<br>
மறவாது இதுகேள்! மன்னுயிர்க் கெல்லாம்<br>
உண்டியும் உடையும் உறையுளும் அல்லது<br>
கண்டது இல். (மணிமேகலை 25: 228 – 231)

## கற்பவை கற்றபின்...

1. *உங்கள் ஊரில் நடைபெறும் திருவிழாவிற்கான அழைப்பிதழ் ஒன்றினை வடிவமைக்க.*
2. *குறிப்புகளைக் கொண்டு ஓர் இயற்கைக் காட்சியை விரித்தெழுதுக.*

   *பூஞ்சோலை – சிரிக்கும் மலர்கள் – பசுமையான புல்வெளி – கூவும் குயில் – வீசும் தென்றல் – விளையாடும் குழந்தைகள் – அழகிய காட்சிகள்*

விரிவானம்

# பண்பாடு

௩

# அகழாய்வுகள்
## (பட்டிமன்றம்)




மனிதன் தோன்றிப் பல்லாயிரம் ஆண்டுகள் கடந்துவிட்டன. இன்றும் பண்பாட்டு அளவில் சிறந்த வாழ்வை வெளிப்படுத்திய தமிழர்களின் வரலாற்றை அறிந்துகொள்ளத் தமிழகத்தின் தொன்மையான பகுதிகளை அகழாய்வு செய்தல் இன்றியமையாதது. அகழாய்வு செய்தல் என்பது தேர்ந்தெடுக்கப்பட்ட நிலப்பகுதியில் தோண்டிச் செதுக்கி ஆராய்தல் ஆகும். அகழாய்வு வரலாறு முழுமை பெற உதவுகிறது. அகழாய்வில் கிடைத்த பொருள்கள் நாம் வாழ்ந்த காலத்தை மட்டுமன்றி, நமது வரலாற்றையும் உணர்த்துகின்றன.

### பட்டிமன்ற அழைப்பிதழ்

**பள்ளி இலக்கிய மன்றத் தொடக்கவிழாவில் மாணவர்களே பங்கேற்று நடத்தும் சிந்தனைப் பட்டிமன்றம்**

49XYX4

நடுவர்: மாணவர் பூங்குன்றன்

முன்னிலை: தமிழாசிரியர் கலைவாணன்

**இன்றைய சூழ்நிலையில் அகழாய்வு என்பது**

**தேவையான செயல்பாடே!**

மாணவர் பாத்திமா

மாணவர் செல்வன்



**தேவையற்ற செலவினமே!**

மாணவர் முத்து

மாணவர் அன்புமேரி

அனைவரும் வருக!

### அறிமுகவுரை ( இலக்கிய மன்றச் செயலர்)

அன்பிற்குரிய நல்லுள்ளங்களே! வணக்கம். இன்று நம் பள்ளியில் இலக்கிய மன்றத் தொடக்கவிழா இனிதே தொடங்குகிறது. அதனை முன்னிட்டு நடைபெறவுள்ள பட்டிமன்றத் தலைப்பினை அறிய ஆவலாக இருக்கிறதா? இதோ சொல்கிறேன். இன்றைய சூழ்நிலையில் அகழாய்வு என்பது தேவையான செயல்பாடா? தேவையற்ற செலவினமா? (மாணவர்கள் கரவொலி எழுப்புதல்)

அண்மையில் நடைபெற்ற மாநில அளவிலான பேச்சுப்போட்டியில் முதல் பரிசுபெற்ற நம் வகுப்புத்தோழர் பூங்குன்றன் நடுவராகப் பொறுப்பேற்கிறார். வாதிடுவோராக நம்முடன் பயிலும் முத்து, பாத்திமா, அன்புமேரி, செல்வன் ஆகியோர் பங்கேற்கின்றனர். இதோ பட்டிமன்றம் தொடங்குகிறது.

### நடுவர்

அருந்தமிழ் வணக்கம்.

## திட்பமும் நுட்பமும்

மதுரை நகருக்கு அருகே உள்ள கீழடி என்னுமிடத்தில் நடத்தப்பட்ட அகழாய்வில் சுடுமண் பொருள்கள், உலோகப் பொருள்கள், முத்துகள், கிளிஞ்சல் பொருள்கள், மான்கொம்புகள், சோழிகள், கிண்ணங்கள், துளையிடப்பட்ட பாத்திரங்கள், இரத்தினக்கல் வகைகள், பழுப்பு, கறுப்பு, சிவப்பு–கறுப்புப் பானைகள், சதுரங்கக் காய்கள், தானியங்களைச் சேகரிக்கும் கலன்கள், செம்பு, சங்கு வளையல்கள், எலும்பினால் ஆன கூர் முனைகள், தமிழ் எழுத்துகள் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள், கற்கருவிகள், நீர் சேகரிக்கும் பெரிய மட்கலன்கள், சிறிய குடுவைகள், உறைக்கிணறுகள், சுடுமண் கூரை ஓடுகள் போன்ற பல்வேறு தொல்லியல் பொருள்கள் கிடைத்துள்ளன. மூன்று வெவ்வேறு காலகட்டங்களைச் சேர்ந்த இவற்றுள் தொன்மையானவை சுமார் 2300ஆண்டுகளுக்கு முற்பட்டவை எனக் கருதப்படுகின்றன. இதுவரை அகழாய்வு செய்யப்பட்ட பெரும்பான்மையான இடங்கள், இறப்புத் தொடர்பான தடயங்களை வெளிப்படுத்துவனவாக அமைந்திருந்தன. ஆனால், கீழடியில் கண்டறியப்பட்டுள்ள முழுமையான வாழ்விடப்பகுதியும் செங்கல் கட்டுமானங்களும் இதரப்பொருள்களும் தமிழரின் உயரிய நாகரிகத்தைக் கண்முன் காட்டும் சாட்சிகளாய் அமைந்துள்ளன.



**கீழடி அகழாய்வுக்களம்**

*மதிப்பிற்குரிய தமிழாசிரியர் அவர்களே! அன்பிற்குரிய ஆசிரியப் பெருமக்களே! அருமை மாணவ நண்பர்களே! அனைவருக்கும் அன்பான வணக்கம்.*

வரலாற்றை அறிவதற்கு வழிகாட்டும் ஒரு தலைப்பெடுத்துப் பேச முனைகின்றோம். ஒரு செடி வளர்வதற்கு, விதையை ஊன்றுவதற்குக்கூடக் குழி தோண்டுகிறோம். தோண்டிய குழிக்குள் ஒரு பழம்பொருள் கிடைத்தால்கூடக் கொண்டாடுகிறோம். அதில் பயன் இருக்கிறதா என்பதைச் சிந்திப்பதற்கே இந்த மாபெரும் சிந்தனைப் பட்டிமன்றம்.

ஆய்வு என்பது அறிவின் வெளிப்பாடு. அதற்கு ஓய்வு என்பதே கிடையாது. இதோ! இன்றைய சூழ்நிலையில் அகழாய்வு என்பது தேவையற்ற செலவினமே! என்னும் தலைப்பில் உரைவீச்சைத் தொடங்க வருமாறு அன்புத் தோழர் முத்து அவர்களை அழைத்து என் முன்னுரையை நிறைவு செய்கிறேன். நன்றி, வணக்கம். ( மாணவர் கரவொலி)

### முத்து

உங்கள் அனைவருக்கும் என் பணிவான வணக்கம். நடுவர் அவர்களே! உள்ளங்கையில் உலகத்தை அளந்து பார்க்கும் காலகட்டத்தில் மண்ணைத் தோண்டி எலும்புகளைத் தேடும் மனிதர்களைப் பற்றி நான் என்ன சொல்ல?

அறிவியல் உலகத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். பழைய தலைமுறையைப் பற்றித் தெரிந்து என்ன செய்யப் போகிறோம்? செல்லிடப் பேசிக்குள்ளே, உலகத்தைச் சுற்றும் வேளையில் அகழாய்வில் கிடைக்கும் செல்லாக் காசுகளை வைத்து என்ன செய்வதாம்?

வானுலகத்தில் பறந்து செவ்வாயில் குடியேற வழிதேடும் நேரத்தில் பழைய வரலாற்றுக்கு முந்தைய காலத்தைப் பற்றி அறிந்து என்ன பயன்? உள்ளங்கையில் உலகம் இருக்கிறது. மடிக்கணினி மலைக்க வைக்கிறது. அதையெல்லாம் விட்டுவிட்டு மண் ஓடுகள், இறந்தோரைச் சுமந்த மண்தாழிகள் இவற்றைக் கண்டறிந்து எதைச் சாதிக்கப் போகிறோம்?

நாம் கண்டுபிடிக்க வேண்டியவை எவ்வளவோ இருக்கின்றன. அறிவை விரிவுசெய் எனப் பாவேந்தர் கூறினார். நாம் அறிவை வீணாக்கிக் கொண்டிருக்கிறோம். எனவே, நடுவர் அவர்களே! அகழாய்வு என்பது தேவையற்ற செலவினமே, தேவையற்ற செலவினமே என்றுகூறி என் வாதத்தை நிறைவு செய்கிறேன். நன்றி, வணக்கம்.

### நடுவர்

நண்பர் முத்து, காரசாரமான தன் வாதத்தை முன்வைத்தார். மிகவும் அருமை. இதற்குப் பாத்திமா, எப்படித்தான் பதில் சொல்லப் போகிறார் என்பது தெரியவில்லை. வாங்கம்மா! வாங்க எப்படிச் சமாளிக்கப் போறீங்க!

### பாத்திமா

அவையோரை வணங்கி என் உரையைத் தொடங்குகிறேன்.

மண்ணைத் தோண்டிப் பார்ப்பது எலும்புகளைச் சேகரித்து எண்ணிப் பார்ப்பதற்கன்று. நம் முன்னோர்களின் பண்பாட்டை எண்ணிப் பார்ப்பதற்கு. கடந்த காலத்தைப் புரிந்துகொள்ளாமல் நிகழ்காலத்தில் வெற்றிபெற முடியுமா? எதிர்காலத்தைத்தான் கணிக்க இயலுமா?

நமது வரலாறு மிக நீண்டது. 150 ஆண்டுகளுக்கு முன்னால் 1863ஆம் ஆண்டு இராபர்ட் புரூஸ்புட் என்னும் தொல்லியல் அறிஞர் சென்னைப் பல்லாவரம் செம்மண் மேட்டுப்பகுதியில் எலும்பையும் கற்கருவியையும் கண்டுபிடித்தார். இந்தக் கற்கருவிதான் இந்தியாவில் கண்டெடுக்கப்பட்ட முதல் கல்லாயுதம். இந்தக் கல்லாயுதம் கண்டுபிடிக்கப்படுவதற்கு முன்பே, ரோமானியர்களின் பழங்காசுகளைக் கோவையில் கண்டெடுத்தோம்.

அரிக்கமேடு அகழாய்வில் ரோமானிய மட்பாண்டங்கள் கிடைத்தன. அதனால், ரோமானியர்களுக்கும் நமக்கும் இருந்த வணிகத் தொடர்பு உறுதிப்படுத்தப்பட்டது.

அதற்குப் பின்னால், 1914ஆம் ஆண்டு ஆதிச்சநல்லூரில் நடத்தப்பட்ட அகழாய்வில் ஏராளமான முதுமக்கள் தாழிகள் கண்டுபிடிக்கப்பட்டன. நண்பர் சொன்னார்! உள்ளங்கையில் உலகம் இருக்கிறதாம். மடிக்கணினி மலைக்க வைக்கிறதாம். நம் முன்னோர்கள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, அறிவியல் அடிப்படையிலான பண்பாட்டு வாழ்க்கையை வாழ்ந்தவர்கள். தமிழர்களின் உணவு, உடை, வாழிடம் முதலியன இயற்கையைச் சிதைக்காத இயல்புகளைக் கொண்டவை என்பதற்கு அகழாய்வில் கண்ட சான்றுகளே ஆவணங்களாகத் திகழ்கின்றன.

எதிரணித் தலைவருக்கு ஒன்றைச் சொல்லி விடைபெறுகிறேன். மடிக்கணினியில் பூக்கின்ற ரோஜா மணக்காது; செல்லிடப் பேசியில் பார்க்கும் வற்றல் குழம்பு சுவைக்காது; மாறாக நமது மூளையைக்

**தெரிந்து தெளிவோம்** — **பட்டிமண்டபம்**

பட்டிமண்டபம் என்பதுதான் இலக்கியவழக்கு. ஆனால் இன்று நடைமுறையில் பலரும் பட்டிமன்றம் என்றே குறிப்பிடுகிறார்கள். பேச்சுவழக்கையும் ஏற்றுக்கொள்கிறோம்.

மகத நன்நாட்டு வாள்வாய் வேந்தன், பகைப்புறத்துக் கொடுத்த பட்டிமண்டபம் என்று சிலப்பதிகாரத்திலும் (காதை 5, அடி 102)

பட்டிமண்டபத்துப் பாங்கு அறிந்து ஏறுமின் என்று மணிமேகலையிலும் (காதை 1, அடி 16)

பட்டிமண்டபம் ஏற்றினை, ஏற்றினை; எட்டினோடு இரண்டும் அறியேனையே என்று திருவாசகத்திலும் (சதகம் 41)

பன்ன அரும் கலைதெரி பட்டிமண்டபம் என்று கம்பராமாயணத்திலும் (பாலகாண்டம், நகரப் படலம் 154) பட்டிமண்டபம் என்ற சொல் பயின்று வருகிறது.

குப்பைத்தொட்டியாக்கும்; நமது மண்ணை நெகிழிக் கிடங்காக மாற்றும். ஆனால், அகழாய்வில் கிடைத்த ஆவணங்களோ அடுத்த தலைமுறைக்கு நம் பண்பாட்டின் மேன்மையைப் பறைசாற்றும். எனவே, நடுவர் அவர்களே! அகழாய்வு என்பது நமக்கு மிகமிகத் தேவையான செயல்பாடே! என்றுகூறி நல்ல தீர்ப்பு வேண்டி விடைபெறுகின்றேன்.

### நடுவர்

அடேயப்பா! பாத்திமாவின் வார்த்தைகளுக்குள் மின்னிய வரலாறு புதிய வெளிச்சத்தைக் காட்டியது. என்ன அன்புமேரி! என்ன செய்யப் போறீங்க? பேசத்தான் போறீங்களா? இல்லை பட்டிமன்றத்தை இப்படியே முடிச்சிட்டுத் தீர்ப்பைச் சொல்லிவிடட்டுமா?

### அன்புமேரி

பாரதியை வணங்கித் தொடங்குகின்றேன்.

ஐயா, நடுவர் அவர்களே! எங்க ஊர்ல ஒரு சொலவடை சொல்லுவாங்க. பகுமானக் கோழி பறந்துக்கிட்டே முட்டை போட்டுச்சாம்.

### நடுவர்

என்ன! பகுமானக் கோழி பறந்துக்கிட்டே முட்டை போட்டுச்சா? சரி, தலைப்புக்கு வாங்கம்மா.

### அன்புமேரி

இல்லைங்கய்யா, வெட்டிப் பெருமைக்காகவே வீறாப்பா பேசுபவர்களைப் பற்றிச் சொல்ல வந்தேன். நாம் எப்படிப்பட்ட காலத்தில் வாழ்ந்துகொண்டிருக்கிறோம்? உலகத்தில் குட்டி நாடுகள்கூட அறிவியல் விந்தைகளால் வானத்தை அளந்து பார்க்கின்றன. அமெரிக்காவில் இருக்கும் என் தோழியின் நட்பை இணையத்தளம் இணைத்துக் காட்டுகிறது. விபத்தில் துண்டிக்கப்பட்ட கால்களுக்கு அறிவியல், செயற்கைக் கால் பொருத்தி அழகு பார்க்கிறது. பழுதுபட்ட இதயத்திற்கு மாற்று இதயம் பொருத்தி மருத்துவ அறிவியல் மனிதனை வாழவைக்கிறது.

புற்றுநோய் என்னும் அரக்கனை வீழ்த்த, புதிய மருந்து கண்டுபிடிக்க அறிவியலாளர்கள் பெருமுயற்சி மேற்கொண்டு வருகிறார்கள். இன்னும் எவ்வளவோ சாதனைகள் கண்முன்னே நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. இந்த உலகப்போக்கிற்கு ஈடுகொடுத்து நாமும் நமது அறிவியல் பயணத்தை முன்னெடுக்காமல் அகழாய்வுக்குள் விழுந்து கிடப்பது என்ன நியாயம்? நானொன்றும் அகழாய்விற்கு எதிரானவள் இல்லை.

இன்றைய மாறிவரும் உலகச் சூழலில் அகழாய்வு என்ன, முக்கியத் தேவைகளுள் ஒன்றா? இருபத்தோராம் நூற்றாண்டு

அறிவியலால் வியக்க வைக்கின்ற காலத்தில், இந்தப் பழைய காலத்துப் பொருள்களையும் கட்டடங்களையும் கண்டுபிடித்து என்ன சாதிக்கப் போகின்றோம்?

நடுவர் அவர்களே! பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையினானே என்று நமது இலக்கணப் புலவர் ஒருவர் சொன்னதை எதிரணிக்கு நினைவூட்டி நல்ல தீர்ப்புத் தருமாறு கேட்டு விடைபெறுகின்றேன். நன்றி, வணக்கம்.

### நடுவர்

அருமை, அன்புமேரி... அருமை. உங்களுக்கு ஆதரவா நன்னூலை இயற்றிய பவணந்தி முனிவரையும் துணைக்கு இழுத்து வந்துட்டீங்க. மிக்க மகிழ்ச்சி. இப்போ இந்த அணி கொஞ்சம் சோர்ந்து போனமாதிரி தெரியுது. நண்பர் செல்வன் வாங்க. எப்படிப் பதில் சொல்லப் போறீங்க.

### செல்வன்

அவைக்கு என் பணிவான வணக்கத்தைக் கனிவோடு தெரிவித்துக் கொள்கின்றேன்.

நடுவர் அவர்களே! அறிவியலைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு ஆடுகிறார் சகோதரி அன்புமேரி. ஏதோ, நாங்கள் எல்லாம் அறிவியலுக்குப் பகைவர் என்பதைப் போல. அகழாய்வே அறிவியலை அடிப்படையாகக் கொண்டதுதான் என்பதை அறியாதவராக இருக்கின்றார். இதில் பவணந்தி முனிவரைவேறு சாட்சிக்கு இழுத்திருக்கிறார். பழைமையின் பட்டையை உரித்துக் கொண்டுதான் புதுமையே பிறக்கும். தனியாகப் புதுமைக்கென்று வேரோ விதையோ கிடையாது நண்பர்களே!

கடந்த காலத்தை ஆராய்ந்து அறிந்துகொண்டால்தான் நிகழ்காலத்தைச் செம்மைப்படுத்திக் கொள்ளலாம். வருங்காலம் வளமாக அமைவதற்கு வலிமையான கட்டமைப்பை உருவாக்கலாம். நமது முன்னோர்கள் வாழ்ந்து பெற்ற பட்டறிவை வகைப்படுத்தித் தொகுத்துப் பார்ப்பதற்குத் தொல்லியல் ஆய்வே பெரும் கல்வியாக அமைகின்றது.

வேடிக்கை என்னவென்றால், தமிழகத்தில் பண்டைக் காலத்திலேயே நமது தமிழ் முன்னோர்கள் செம்மையான பண்பாட்டுக் கட்டமைப்போடு வாழ்ந்திருக்கிறார்கள். நாம்தான் அந்தத் தொன்மை வரலாற்றின் உண்மையை அறியாமல் தொடர்ச்சி அறுபட்டு இடையில் எங்கோ பாதைமாறி, பயணித்துக் கொண்டிருக்கிறோம்.

இன்றைக்கு நாம் ஒரு புதிய நாகரிகச் சூழலைப் பழகிக் கொண்டிருக்கிறோம். அது என்னவென்றால், ஒரு பொருளை ஒருமுறை பயன்படுத்திவிட்டுத் தூக்கி எறி என்பதாகும். எழுதுகிற பேனா, குடிக்கிற தண்ணீர்ப்புட்டி, பழுதுபட்ட மடிக்கணினி, செல்லிடப்பேசி போன்றவற்றை ஒருமுறை பயன்படுத்தித் தூக்கி எறிகிற வழக்கத்தால் மின்சாதனக் குப்பைகள் மலையெனக் குவிந்துவிட்டன. சுற்றுச்சூழல் சிதைந்து புற்றுநோயாளிகள் பெருகும் அபாயம் வந்துவிட்டது. ஆனால், நமது முன்னோர்கள் கண்டுபிடித்துச் சுடுமண்ணிலும் உலோகத்திலும் செய்து பயன்படுத்திய பொருள்கள் பல தலைமுறைகளைக் கடந்தும் பயன்பாட்டில் இருந்திருக்கின்றன.

பழுதுபட்டால் சரிசெய்து மீண்டும் பயன்படுத்துவோம். இது கடந்த நூற்றாண்டுவரை தொடர்ந்தது. எதிரணி கூறிய போலி அறிவியல் பண்பாட்டுச் சூழல் வளர்ந்த பின்தான் "பயன்படுத்து, தூக்கி எறி" என்ற பழக்கம் பிறந்து வளர்ந்தது. அதன் தொடர்ச்சி எதுவரை வந்தது தெரியுமா? பெற்றெடுத்து வளர்த்த தாய்தந்தையரையும் கூடப் பயன்படுத்திவிட்டு முதியோர் இல்லத்தில் தூக்கி எறிகிற மூடத்தனம் உருவாகியிருக்கிறது.

எனவே, நடுவர் அவர்களே! அகழாய்வு தரும் சான்றுகளின் மூலம் நமது வளமான வரலாற்றையும் பண்பாட்டையும் அறிந்துகொண்டு வலிமையான எதிர்காலத்தை உருவாக்க முடியும். நெடிய வரலாறு நமக்கு இருக்கிறது. எனவே, அதனை உறுதியுடன்

வலியுறுத்துகிறோம்.

நடுவர் அவர்களே! அகழாய்வு என்பது தேவையற்ற செலவினமல்ல. தேவையான செயல்பாடே! என்று திசைகள்தோறும் அறிவியல் குரல்கள் ஒலிக்கத் தொடங்கிவிட்டன. நல்ல தீர்ப்புத் தாருங்கள். நன்றி, வணக்கம்.

### நடுவர்

செல்வனின் ஆய்வுக் கண்ணோட்டம் அருமையானது. அரிய செய்திகளோடு இரண்டு அணிகளும் வாதிட்டுள்ளன. 1863இல் ஆரம்பித்த அகழாய்வுப் பணி இன்றுவரையிலும் தொடரும்போது பல உண்மைகள் உறைக்கத்தொடங்கி இருக்கின்றன. பழையனவற்றை ஏன் தோண்டியெடுத்துப் பாதுகாக்க வேண்டும்? ஆராய வேண்டும்? அதற்கு நம் புழங்குபொருள் பண்பாடே சான்றாக நிற்கின்றது. தேவையற்ற செயல்பாடே! என்று பேசிய அணியினர் கூறியது போல அகழாய்வு என்பது அறிவியலுக்கு எதிரான சிந்தனை அன்று.

அறிவியலில் இரண்டு வகையுண்டு. ஒன்று வணிக அறிவியல். மற்றொன்று மக்கள் அறிவியல். வணிக அறிவியல், முதலீட்டைப் பெருக்குவதற்காகப் பொருள்களைக் கண்டுபிடிக்கிறது. அதனை விற்பனை செய்கிறது. அதன் விளைவுதான் நெகிழிக் குப்பைகள். ஆனால், அகழாய்வில் கிடைத்த சுடுமண், கல், இரும்பு, செம்பு ஆகியவற்றாலான புழங்கு பொருள்கள், கருவிகள் பல நூற்றாண்டுகளாக வாழையடி வாழையாகப் பயன்பாட்டில் இருந்தன. இயற்கையோடு இணைந்த பண்பாட்டு வாழ்க்கை நம்முடையது என்பதனை அறிந்துகொண்டோம். இதுவே, மக்கள் அறிவியல்.

மக்கள் அறிவியல் என்கிற மகத்தான சிந்தனையைப் புரிந்துகொள்வதற்கும் நமது பண்பாட்டின் மேன்மைகளை இன்றைய தலைமுறை எடுத்துக்கொண்டு சிறப்பாக வாழ்வதற்கும் அகழாய்வு துணைநிற்கின்றது.

எனவே, அகழாய்வு என்பது அனைவரும் தெரிந்துகொள்ள வேண்டிய, புரிந்துகொள்ள வேண்டிய, தேவையான செயல்பாடே! அகழாய்வைத் தொடர்வோம், தொன்மை வரலாற்றை மீட்போம் என்ற எனது தீர்ப்பினைக் கூறி, நல்ல வாய்ப்பைத் தந்த இலக்கிய மன்றத்திற்கு நன்றி பாராட்டி, பட்டிமன்றத்தை நிறைவு செய்கிறேன்.

வாழிய செந்தமிழ்! வாழ்க நற்றமிழர்!

வாழிய பாரத மணித்திருநாடு!

நன்றி, வணக்கம்.

## கற்பவை கற்றபின்...

1. இளைஞர்களிடையே பண்பாட்டினை வளர்ப்பதில் பெரும்பங்கு வகிப்பது குடும்பமா? சமூகமா? – என்னும் தலைப்பில் சொற்போர் நிகழ்த்துக.
2. தொல்லியல் துறை சார்ந்த அலுவலர் ஒருவரிடம் நேர்காணல் நிகழ்த்துவதற்கான வினாப்பட்டியலை உருவாக்குக.
3. உங்கள் ஊருக்கு அருகில் உள்ள தொன்மையான இடத்தைப் பார்வையிட்டுக் குறிப்பு எழுதுக.

4A7UYR

கற்கண்டு

## பண்பாடு ௩

# வல்லினம் மிகும் இடங்கள்

வாணன் வேலைக் கொடுத்தான்.

வாணன் வேலை கொடுத்தான்.

இந்த இரண்டு தொடர்களுக்கும் உள்ள பொருள் வேறுபாடு யாது?

வல்லெழுத்துகள் க, ச, த, ப ஆகிய நான்கும் மொழிக்கு முதலில் வரும். இவை நிலைமொழியுடன் புணர்கையில் அவற்றின் மெய்யெழுத்துகள் தோன்றிப் புணரும். இதை வல்லினம் மிகுதல் என்பர். இவ்வாறு எந்த எந்த இடங்களில் அவ்வல்லினம் மிகும் என்பதை விதிகளின் மூலமும் எடுத்துக்காட்டுகள் மூலமும் அறியலாம்.

> தோன்றல், திரிதல், கெடுதல் என விகாரப் புணர்ச்சி மூன்று வகைப்படும்
>
> வல்லினம் மிகுந்து வருதல் தோன்றல் விகாரப் புணர்ச்சியின்பாற்படும்.

> சொல்லமைப்பின் கட்டுப்பாடுகளைப் பேணவும் பொருள் மயக்கத்தைத் தவிர்க்கவும் பேச்சின் இயல்பைப் பேணவும் இனிய ஓசைக்காகவும் இவ்வல்லின எழுத்துகளின் புணர்ச்சி இலக்கணம் தேவைப்படுகிறது.

### வல்லினம் மிகும் இடங்கள்

தற்கால உரைநடையில் வல்லினம் மிகவேண்டிய இடங்களாகக் கீழ்க்காண்பனவற்றைக் கூறலாம்.

| | | |
|---|---|---|
| 1. | அச்சட்டை<br>இந்தக்காலம்<br>எத்திசை?<br>எந்தப்பணம்? | அ, இ என்னும் சுட்டெழுத்துகளுக்குப் பின்னும், அந்த, இந்த என்னும் சுட்டுப் பெயர்களின் பின்னும், எ என்னும் வினாவெழுத்தின் பின்னும், எந்த என்னும் வினாச் சொல்லின் பின்னும் வல்லினம் மிகும். |
| 2. | கதவைத்திற<br>தகவல்களைத்திரட்டு<br>காட்சியைப்பார் | ஐ என்னும் இரண்டாம் வேற்றுமை உருபு வெளிப்படும் தொடர்களில் வல்லினம் மிகும். |
| 3. | முதியவருக்குக்கொடு<br>மெட்டுக்குப்பாட்டு<br>ஊருக்குச்செல் | கு என்னும் நான்காம் வேற்றுமை உருபு வெளிப்படும் தொடர்களில் வல்லினம் மிகும். |
| 4. | எனக்கேட்டார்<br>வருவதாகக்கூறு | என, ஆக போன்ற சொல்லுருபுகளின்பின் வல்லினம் மிகும். |

மேற்கண்டவாறு வல்லினம் மிகும் இடங்களை இனங்கண்டு பயன்படுத்தத் தொடங்கினாலே, தவறுகளைத் தவிர்த்துவிடலாம். மரபையும் பட்டறிவையும் தாண்டி, சொற்களை ஒலித்துப் பார்ப்பதும் வல்லினம் மிகும், மிகா இடங்களை அறிவதற்கு எளியவழி எனலாம்.

### மேலும் சில வல்லினம் மிகும் இடங்களை அறிந்துகொள்வோம்

| | |
|---|---|
| அதற்குச் சொன்னேன்<br>இதற்குக் கொடு<br>எதற்குக் கேட்கிறாய்? | அதற்கு, இதற்கு, எதற்கு என்னும் சொற்களின் பின் வல்லினம் மிகும். |
| இனிக் காண்போம்<br>தனிச் சிறப்பு | இனி, தனி ஆகிய சொற்களின்பின் வல்லினம் மிகும். |
| மிகப் பெரியவர் | மிக என்னும் சொல்லின்பின் வல்லினம் மிகும். |
| எட்டுத்தொகை<br>பத்துப்பாட்டு | எட்டு, பத்து என்னும் எண்ணுப் பெயர்களின்பின் வல்லினம் மிகும். |
| தீப் பிடித்தது<br>பூப் பந்தல் | ஓரெழுத்து ஒரு மொழிக்குப் பின் வல்லினம் மிகும். |
| கூவாக் குயில்<br>ஓடாக் குதிரை | ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சத்தின்பின் வல்லினம் மிகும். |
| கேட்டுக் கொண்டான்<br>விற்றுச் சென்றான் | வன்தொடர்க் குற்றியலுகரங்கள் நிலை மொழியாக இருந்து புணர்கையில் வல்லினம் மிகும். |
| ஆடச் சொன்னார்<br>ஓடிப் போனார் | (அகர, இகர ஈற்று) வினையெச்சங்களுடன் புணர்கையில் வல்லினம் மிகும். |
| புலித்தோல் | ஆறாம் வேற்றுமைத் தொகையில் வல்லினம் மிகும். |
| கிழக்குப் பகுதி<br>வடக்குப் பக்கம் | திசைப் பெயர்களின்பின் வலிமிகும். |
| மல்லிகைப்பூ<br>சித்திரைத்திங்கள் | இரு பெயரொட்டுப் பண்புத் தொகையில் வல்லினம் மிகும். |
| தாமரைப்பாதம் | உவமைத் தொகையில் வல்லினம் மிகும். |
| சாலப்பேசினார்<br>தவச்சிறிது | சால, தவ, தட, குழ என்னும் உரிச்சொற்களின்பின் வல்லினம் மிகும். |
| நிலாச் சோறு<br>கனாக் கண்டேன் | தனிக் குற்றெழுத்தை அடுத்துவரும் ஆகார எழுத்தின்பின் வல்லினம் மிகும். |
| வாழ்க்கைப்படகு<br>உலகப்பந்து | சில உருவகச் சொற்களில் வல்லினம் மிகும். |

## கற்பவை கற்றபின்...

**1. வல்லினம் மிகலாமா?**

அ) பெட்டி __செய்தி

ஆ) விழா __ குழு

இ) கிளி __ பேச்சு

ஈ) தமிழ் __ தேன்

உ) தை __பூசம்

ஊ) கூட __கொடு

எ) கத்தியை விட __ கூர்மை

ஐ) கார் __பருவம்

**2. தொடர் தரும் பொருளைக் கூறுக.**

அ) சின்னக்கொடி, சின்னகொடி

ஆ) தோப்புக்கள், தோப்புகள்

இ) கடைப்பிடி, கடைபிடி

ஈ) நடுக்கல், நடுகல்

உ) கைம்மாறு, கைமாறு

ஊ) பொய்ச்சொல், பொய்சொல்

**3. சிந்தனை வினா**

நாளிதழ்கள் சிலவற்றில் வல்லினம் மிகவேண்டிய இடத்தில் மிகாமல் எழுதிவருவதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அவ்வாறு எழுதுவது மொழிக்கு வளம் சேர்க்குமா? வல்லினம் மிகவேண்டியதன் முக்கியத்துவத்தை எழுதுக.

**4. உரிய இடங்களில் வல்லின மெய்களை இட்டும் நீக்கியும் எழுதுக.**

பழங்கால மக்களின் நாகரிகம், பண்பாடு தொடர்பான வரலாறுகளை அகழாய்வில் கிடைக்கின்றப் பொருள்களும் உறுதி படுத்துகின்றன. பல்வேறு இடங்களில் அகழாய்வுகள் மேற்கொள்ளப்படுகின்றன. அவ்வகையில் ஆய்வு நடைபெறுகின்ற இடங்களில் கீழடியும் ஒன்று.

கீழடியில் வாழ்ந்த மக்களுள் பலர்ச் செல்வந்தர்களாக இருந்துள்ளனர் என்பதை அகழாய்வில் கிடைத்தப் பொருள்கள் நமக்கு உணர்த்துகின்றன. இங்கு குறைவான எண்ணிக்கையில் தான் தங்கத்தினாலானப் பொருள்கள் கிடைக்கின்றன.

மேலும் இரும்பை பயன்படுத்தி செய்தக் கோடரி, குத்தீட்டிகள் முதலான கருவிகளும் யானை தந்தத்தினால் செய்தச் சீப்பு, மோதிரம், பகடை, காதணிகள், கண்ணாடிப் பொருள்களில் உருவாக்கிய மணிகள், வளையல், தோடு போன்றவையும் கிடைத்துள்ளன .

| | |
|---|---|
| அதற்க்கு – தவறு | அதற்கு = அது+அன்+கு<br>அது (சுட்டுப்பெயர்) + அன் (சாரியை) + கு (வேற்றுமை உருபு)<br>அதன்+கு = அதற்கு – என்பதே சரி<br>(எ.கா.)<br>இந்தப் பொருள் வேண்டாம். அதற்குப் பதிலாக இதை வைத்துக்கொள். |
| கடைபிடித்தல்<br>கடைப்பிடித்தல் | கடைபிடித்தல் – கடையைப்பிடித்தல்<br>கடைப்பிடித்தல் – பின்பற்றுதல்<br>(எ.கா.)<br>சேகர் புதிதாக வாணிகம் தொடங்கக் கடைபிடித்தார்.<br>நாங்கள் என்றும் தூய்மையைக் கடைப்பிடிப்போம். |

# மதிப்பீடு

## பலவுள் தெரிக.

1. பொருந்தாத இணை எது?

   அ) ஏறுகோள் – எருதுகட்டி　　ஆ) திருவாரூர் – கரிக்கையூர்

   இ) ஆதிச்சநல்லூர் – அரிக்கமேடு　　ஈ) பட்டிமன்றம் – பட்டிமண்டபம்

2. முறையான தொடர் அமைப்பினைக் குறிப்பிடுக.

   அ) தமிழர்களின் வீரவிளையாட்டு தொன்மையான ஏறுதழுவுதல்.

   ஆ) தமிழர்களின் வீரவிளையாட்டு ஏறுதழுவுதல் தொன்மையான.

   இ) தொன்மையான வீரவிளையாட்டு தமிழர்களின் ஏறுதழுவுதல்.

   ஈ) தமிழர்களின் தொன்மையான வீரவிளையாட்டு ஏறுதழுவுதல்.

3. பின்வருவனவற்றுள் தவறான செய்தியைத் தரும் தொடர் –

   அ) அரிக்கமேடு அகழாய்வில் ரோமானிய நாணயங்கள் கிடைத்தன.

   ஆ) புறப்பொருள் வெண்பாமாலை என்னும் இலக்கண நூலிலும் ஏறுகோள் குறித்துக் கூறப்பட்டுள்ளது.

   இ) எட்டு, பத்து ஆகிய எண்ணுப் பெயர்களின் பின் வல்லினம் மிகாது.

   ஈ) பட்டிமண்டபம் பற்றிய குறிப்பு மணிமேகலையில் காணப்படுகிறது.

4. ஐம்பெருங்குழு, எண்பேராயம் – சொற்றொடர்கள் உணர்த்தும் இலக்கணம்

   அ) திசைச்சொற்கள்　　ஆ) வடசொற்கள்

   இ) உரிச்சொற்கள்　　ஈ) தொகைச்சொற்கள்

5. சொற்றொடர்களை முறைப்படுத்துக.

   அ) ஏறுதழுவுதல் என்பதை　ஆ) தமிழ் அகராதி　இ) தழுவிப் பிடித்தல் என்கிறது

   i) ஆ – அ – இ　　ii) ஆ – இ – அ　　iii) இ – ஆ – அ　　iv) இ – அ – ஆ

## குறுவினா

1. நீங்கள் வாழும் பகுதியில் ஏறுதழுவுதல் எவ்வாறெல்லாம் அழைக்கப்படுகிறது?
2. தொல்லியல் சான்றுகள் காணப்படும் இடங்களை அகழாய்வு செய்ய வேண்டும். ஏன்?
3. ஏறுதழுவுதல் நிகழ்விற்கு இலக்கியங்கள் காட்டும் வேறுபெயர்களைக் குறிப்பிடுக.
4. பழமணல் மாற்றுமின்; புதுமணல் பரப்புமின் – இடஞ்சுட்டிப் பொருள்விளக்குக.
5. பட்டிமண்டபம், பட்டிமன்றம் – இரண்டும் ஒன்றா? விளக்கம் எழுதுக.
6. ஏறுதழுவுதல் குறித்துத் தொல்லியல் சான்றுகள் கிடைத்த இடங்களைப் பட்டியலிடுக.

### சிறுவினா

1. வேளாண் உற்பத்தியின் பண்பாட்டு அடையாள நீட்சியை விளக்குக.
2. ஏறுதழுவுதல், திணைநிலை வாழ்வுடன் எவ்விதம் பிணைந்திருந்தது?
3. வியத்தகு அறிவியல் விரவிக் கிடக்கும் நிலையில் அகழாய்வின் தேவை குறித்த உங்களது கருத்துகளைத் தொகுத்துரைக்க.
4. உங்கள் ஊரில் நடைபெறுகின்ற விழா முன்னேற்பாடுகளை இந்திரவிழா நிகழ்வுகளுடன் ஒப்பிடுக

### நெடுவினா

1. ஏறுதழுவுதல் தமிழரின் அறச்செயல் என்று போற்றப்படுவதற்கான காரணங்களை விவரிக்க.
2. பண்பாட்டுக் கூறுகளைப் பேணிப் பாதுகாக்க நாம் செய்ய வேண்டிய செயல்களைத் தொகுத்து எழுதுக.

## மொழியை ஆள்வோம்!

### படித்துச் சுவைக்க.

*ஆராரோ ஆரிராரோ ஆராரோ ஆரிராரோ*
*தூங்காத கண்ணே உனைத் தூங்க வைப்பேன் ஆரிராரோ*
*மாம்பழத்தைக் கீறி வயலுக்கு உரம்போட்டுத்*
*தேன் பார்த்து நெல்விளையும் செல்வந்தனார் புத்திரனோ!*
*வெள்ளித்தேர் பூட்டி மேகம்போல் மாடுகட்டி*
*அள்ளிப் படியளக்கும் அதிர்ஷ்டமுள்ள புத்திரனோ*
*முத்துச் சிரிப்பழகா முல்லைப்பூப் பல்லழகா*
*தொட்டில் கட்டித் தாலாட்டத் தூக்கம் வருமோடா*
*கதிரறுக்கும் நேரத்திலே கட்டியுன்னைத் தோளிலிட்டால்*
*மதியத்து வெயிலிலே மயக்கமும்தான் வாராதோ*
*வயலிலே வேலை செய்வேன் வரப்பினிலே போட்டிடுவேன்*
*வயலைவிட்டு ஏறுமுன்னம் வாய்விட்டு அழுவாயோ?*

*– நாட்டுப்புறப்பாட்டு, தகவலாளர்: வேலம்மாள்*

### பொன்மொழிகளை மொழிபெயர்க்க.

*A nation's culture resides in the hearts and in the soul of its people – Mahatma Gandhi*

*The art of people is a true mirror to their minds – Jawaharlal Nehru*

*The biggest problem is the lack of love and charity – Mother Teresa*

*You have to dream before your dreams can come true – A.P.J. Abdul Kalam*

*Winners don't do different things; they do things differently – Shiv Khera*

### வடிவம் மாற்றுக.

பின்வரும் கருத்துகளை உள்வாங்கிக் கொண்டு, வரிசைப்படுத்தி முறையான பத்தியாக்குக.

1. உலகின் மிகப்பெரிய கல்மரப் படிமமும் இங்கேதான் கண்டெடுக்கப்பட்டுள்ளது.
2. டைனோசர்கள் உலாவித் திரிந்த தமிழ்மண் என்று அரியலூர், பெரம்பலூர் மாவட்டங்கள் அறியப்படுகின்றன. பெரம்பலூர் மாவட்டத்தில் கடல்பகுதி இருந்துள்ளது என்பதை அங்குக் கிடைத்துள்ள ஆதாரங்கள் உறுதி செய்கின்றன.
3. இங்குக் கல்லாகிப் போன டைனோசர் முட்டைகள், பாறைப் படிமமாகக் கிடைத்த கடல் நத்தை, டைனோசரின் வால்பகுதி, கடல் கிளிஞ்சல்களின் பாறைப் படிமங்கள் போன்றவை கிடைத்துள்ளன.
4. தமிழ்மக்களின் தொன்மையை மீட்டெடுப்பதுடன் நாம் வாழ்கின்ற நிலப்பகுதியின் வரலாற்றையும் தெரிந்துகொள்ள அரியலூரும் பெரம்பலூரும் அரிய ஊர்களாய்த் திகழ்கின்றன.

### மரபு இணைச் சொற்களைத் தொடரில் அமைத்து எழுதுக.

1. மேடும் பள்ளமும் 2. நகமும் சதையும் 3. முதலும் முடிவும்

4. கேளிக்கையும் வேடிக்கையும் 5. கண்ணும் கருத்தும்

(எ.கா.) ஆரிப் சொன்னதில் நம்பிக்கை இல்லாமல் குமார் மேலும் கீழும் பார்த்தான்.

### தொகுப்புரை எழுதுக.

பள்ளியில் நடைபெற்ற இலக்கியமன்ற விழா நிகழ்ச்சி செய்திகளைத் திரட்டித் தொகுப்புரை உருவாக்குக.

### பத்தியைப் படித்து வினாக்களுக்கு விடையளிக்க.

தென்னிந்தியாவின் அடையாளச் சின்னமாகக் காங்கேயம் மாடுகள் போற்றப்படுகின்றன. தமிழக மாட்டினங்களின் தாய் இனம் என்று 'காங்கேயம்' கருதப்படுகிறது. பிறக்கும்போது சிவப்பு நிறத்தில் இருக்கும் காங்கேயம் மாடுகள், ஆறு மாதம் வளர்ந்த பிறகு சாம்பல் நிறத்துக்கு மாறிவிடுகின்றன. பசுக்கள் சாம்பல் அல்லது வெள்ளை நிறத்தில் இருக்கின்றன. மிடுக்கான தோற்றத்துக்குப் பெயர்பெற்ற காங்கேயம் இனக் காளைகள் ஏறுதழுவுதல் நிகழ்விற்கும் பெயர் பெற்றுள்ளன. அத்துடன், ஏர் உழுவதற்கும் வண்டி இழுப்பதற்கும் அதிகம் பயன்படுத்தப்படுகின்றன.

கடுமையாக உழைக்கக்கூடிய காங்கேயம் மாடுகள் கேரளம், கர்நாடகம், ஆந்திரம் ஆகிய மாநிலத்தவரால் விரும்பி வாங்கிச் செல்லப்படுகின்றன. இலங்கை, பிரேசில், பிலிப்பைன்ஸ், மலேசியா ஆகிய நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. கரூர் அமராவதி ஆற்றுத் துறையில் காங்கேய மாடுகளின் உருவம் பொறித்த கி.மு. முதல் நூற்றாண்டைச் சேர்ந்த சேரர் கால நாணயங்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

**1. பின்வரும் நான்கு வினாக்களுக்கும் பொருந்தும் ஒரு விடையைத் தருக.**

அ) மிடுக்குத் தோற்றத்திற்கும் ஏறுதழுவுதலுக்கும் பெயர் பெற்றவை எவை?

ஆ) தமிழக மாட்டினங்களின் தாய் இனம் என்று கருதப்படுவது யாது?

இ) பிற மாநிலத்தவர் விரும்பி வாங்கிச் செல்கின்ற காளை இனம் எது?

ஈ) மேற்கண்ட பத்தி எதைக் குறிப்பிடுகிறது?

**2. பொருந்தாத சொல்லைக் கண்டறிக.**

அ) கர்நாடகம் ஆ) கேரளா இ) இலங்கை ஈ) ஆந்திரா

**3. பிரித்து எழுதுக: கண்டெடுக்கப்பட்டுள்ளன.**

அ) கண்டு + எடுக்கப்பட்டு + உள்ளன

ஆ) கண்டு + எடுக்கப் + பட்டுள்ளன

இ) கண்டெடுக்க + பட்டு + உள்ளன

ஈ) கண் + டெடுக்க + பட்டு + உள்ளன

**4. தென்னிந்தியாவின் அடையாளச் சின்னமாகக் காங்கேயம் மாடுகள் போற்றப்படுகின்றன – இது எவ்வகைத் தொடர்?**

அ) வினாத்தொடர் ஆ) கட்டளைத்தொடர்

இ) செய்தித்தொடர் ஈ) உணர்ச்சித்தொடர்

## மொழியோடு விளையாடு

**பொருள் எழுதித் தொடரமைக்க.**

கரை, கறை; குளவி, குழவி; வாளை, வாழை; பரவை, பறவை; மரை, மறை;

எ.கா

அலை – கடலலை இன்று கடலலையின் வேகம் மிக அதிகமாகவுள்ளது.

அழை – வரவழைத்தல் என் நண்பர்களை வரவழைத்துள்ளேன்.

**அகராதியில் காண்க.**

இயவை, சந்தப்பேழை, சிட்டம், தகழ்வு, பௌரி

**பொருள்தரும் வகையில் சொற்றொடர் உருவாக்குக.**

கொடுக்கப்பட்டுள்ள சொற்களைக் கொண்டு பொருள்தரும் வகையில் ஒரு சொல்லில் தொடரைத் தொடங்குக. அத்துடன் அடுத்தடுத்துச் சொற்களைச் சேர்த்து, புதிய புதிய சொற்றொடர்களை உருவாக்குக. இறுதியாக அத் தொடர் அனைத்துச் சொற்களையும் சேர்த்ததாக அமைய வேண்டும்.

காலங்களில் தெருவில் வைக்காதீர்கள் காப்புக் கம்பிகள் கவனக் குறைவுடன் ஆகியவற்றின் மீது காலை அறுந்த மழை மின்கம்பிகள்.

1. வைக்காதீர்கள்

2. .... ........... வைக்காதீர்கள்

3. .... ........... ............... .... வைக்காதீர்கள்

4. .... ...........

## குறுக்கெழுத்துப் புதிர்



### இடமிருந்து வலம்

2. விழாவறை காதை குறிப்பிடும் விழா (6)
5. சரி என்பதற்கான எதிர்ச்சொல் தரும் எழுத்துகள் இடம் மாறியுள்ளன (3)
7. பொங்கல் விழாவையொட்டி நடத்தப்படும் சிறுவர்களுக்கான போட்டிகளில் ஒன்று (7)
10. ஊழ் என்பதற்குத் தற்காலப் பயன்பாட்டில் உள்ள சொல் (2)
13. மா + அடி – இதன் புணர்ந்த வடிவம் (3)
19. கொள்ளுதல் என்பதன் முதல்நிலை திரிந்த சொல் (2)

### வலமிருந்து இடம்

9. தூய்மையற்ற குருதியை எடுத்துச் செல்லும் இரத்தக் குழாய் (2)
11. ஆராய்ச்சி என்பதன் சொற்சுருக்கம் (3)
12. மணிமேகலைக் காப்பியத்தின் ஆசிரியர் (5)
16. சல்லிக்கட்டு விளையாட்டுக்கு உரிய விலங்கு (2)
18. தனி + ஆள் –சேர்த்து எழுதுக. (4)

### மேலிருந்து கீழ்

1. தமிழர்களின் வீர விளையாட்டு (7)
2. இவள் + ஐ – சேர்ந்தால் கிடைப்பது (3)
3. மரத்தில் காய்கள் ……………………ஆகக் காய்த்திருந்தன (4)
4. ஆடிப்பட்டம் தேடி ………… (2)
5. உரிச்சொற்களுள் ஒன்று (2)
6. …………..சிறந்தது (2)
8. நேரத்தைக் குறிப்பிடும் வானியல் சொல் (2)
12. அகழாய்வில் கிடைத்த கொள்கலன்களுள் ஒருவகை (4)
15. காய் பழுத்தால் ………(2)

### கீழிருந்து மேல்

14. ஒருவர் பற்றி ஒருவர் பிறரிடம் இதை வைக்கக் கூடாது (3)
17. யா முதல் வரும் வினாப்பெயர்(2)
18. தகவிலர் என்பதற்கு எதிர்ச்சொல்லாகத் திருவள்ளுவர் குறிப்பிடுவது (4).

## காட்சியைக் கண்டு கவினுற எழுதுக



…………………………………………………………………………………………

…………………………………………………………………………………………

…………………………………………………………………………………………

…………………………………………………………………………………………

…………………………………………………………………………………………

## செயல்திட்டம்

*தமிழ்நாட்டில் அகழாய்வு மேற்கொள்ளப்பட்ட இடங்கள் குறித்த செய்திகளை, நாளிதழ்களிலிருந்தோ புத்தகங்களிலிருந்தோ திரட்டிச் செய்திப் படத்தொகுப்பினை உருவாக்குக.*

## நிற்க அதற்குத் தக…

### நான் பாராட்டுப் பெற்ற சூழல்கள்

*அ) கூடுதலாக மீதம் கொடுத்த கடைக்காரரிடம் அந்தப் பணத்தை மீண்டும் அளித்த போது.*

*ஆ) கட்டுரை ஏடுகளைக் கீழே தவறவிட்ட என் ஆசிரியருக்கு அதை எடுத்துத் தந்தபோது.*

*இ) ………………………………………………………………………………*

*ஈ) ………………………………………………………………………………*

## அறிவை விரிவு செய்

1. *தமிழர் நாகரிகமும் பண்பாடும் – அ. தட்சிணாமூர்த்தி*
2. *தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும் – மா. இராசமாணிக்கனார்*
3. *தமிழ்ச் செவ்வியல் இலக்கியத்தில் பறவைகள் – க. ரத்னம்*
4. *தொல்லியல் நோக்கில் சங்க காலம் – கா. ராஜன்*
5. *தமிழர் சால்பு – சு. வித்யானந்தன்*

வாழ்வியல் இலக்கியம்

பண்பாடு

௩

# திருக்குறள்

–திருவள்ளுவர்



### பொறையுடைமை(13)

1) *அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை*
*இகழ்வார்ப் பொறுத்தல் தலை.*

தன்னைத் தோண்டுபவரைத் தாங்கும் நிலம் போலத் தன்னை இகழ்பவரைப் பொறுப்பது தலைசிறந்தது.

*அணி* – உவமையணி

2) *திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்து*
*அறனல்ல செய்யாமை நன்று.*

பிறர் தனக்குத் தரக்கூடாத துன்பத்தைத் தந்தாலும் மனம் நொந்து அறம் அல்லாத செயல்களைச் செய்யாமலிருப்பதே நன்றாம்.

4AGR1E

3) *மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்*
*தகுதியான் வென்று விடல்.**

செருக்கினால் துன்பம் தந்தவரை நம்முடைய பொறுமையால் வெல்ல வேண்டும்.

### தீவினை அச்சம்(21)

4) *தீயவை தீய பயத்தலால் தீயவை*
*தீயினும் அஞ்சப் படும்.*

தீயவை தீயவற்றையே தருதலால்
தீயைவிடக் கொடியதாகக் கருதி அவற்றைச் செய்ய அஞ்சவேண்டும்.

5) *மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்*
*அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு.*

மறந்தும்கூடப் பிறருக்குக் கெடுதல் செய்ய நினைக்கக் கூடாது.
நினைத்தால், நினைத்தவருக்குக் கெடுதல் செய்ய அறம் நினைக்கும்.

### கேள்வி(42)

6) *செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்*
*செல்வத்துள் எல்லாந் தலை.*

செல்வத்தில் சிறந்தது செவியால் கேட்டறியும் கேள்விச்செல்வம்.
அது பிற வழிகளில் வரும் செல்வங்களைவிடத் தலைசிறந்தது.
அணி – சொற்பொருள் பின்வருநிலையணி

7) *எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்*
*ஆன்ற பெருமை தரும். **

எவ்வளவு சிறிதானாலும் நல்லவற்றைக் கேட்டால்,
கேட்ட அளவுக்குப் பெருமை உண்டாகும்.

8) *நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய*
*வாயினர் ஆதல் அரிது.*

நுட்பமான கேள்வியறிவு இல்லாதவர்
அடக்கமான சொற்களைப் பேசுவது அரிது.

9) *செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்*
*அவியினும் வாழினும் என்.*

கேட்பதன் சுவையை உணராமல் நாவின் சுவை மட்டும் உணர்பவர்
இறந்தால்தான் என்ன! இருந்தால்தான் என்ன!

**தெரிந்துதெளிதல்(51)**

10) *குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்*
*மிகைநாடி மிக்க கொளல்.*

ஒருவரின் குணத்தையும் குற்றத்தையும் ஆராய்ந்து,
அவற்றுள் மிகுதியானதைக் கொண்டு அவரைப்பற்றி முடிவு செய்க.
அணி – சொற்பொருள் பின்வருநிலையணி

11) *பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்*
*கருமமே கட்டளைக் கல்.*

ஒருவரின் பெருமைக்கும் சிறுமைக்கும்
அவரது செயல்பாடுகளே ஆராய்ந்து அறியும் உரைகல் ஆகும்.
அணி – ஏகதேச உருவக அணி

12) *தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்*
*தீரா இடும்பை தரும்.*

ஆராயாமல் ஒருவரைத் தேர்வு செய்வதும் அவ்வாறு தேர்வு செய்தபின்
அவரைப்பற்றி ஐயப்படுதலும் தீராத துன்பம் தரும்.

**ஒற்றாடல்(59)**

13) *ஒற்றொற்றித் தந்த பொருளையும் மற்றுமோர்*
*ஒற்றினால் ஒற்றிக் கொளல்.*

ஒற்றர் ஒருவர் சொன்ன செய்தியை மற்றோர் ஒற்றரால் அறிந்து முடிவு செய்க!

**வினைத்தூய்மை(66)**

14) *ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை*
*ஆஅதும் என்னு மவர்.**

வாழ்வில் உயர நினைப்பவர் புகழைக் கெடுக்கும் செயல்களைப் புறம் தள்ளவேண்டும்.

15) *ஈன்றாள் பசிகாண்பான் ஆயினுஞ் செய்யற்க*
*சான்றோர் பழிக்கும் வினை.*

தாயின் பசியைக் கண்டபோதும் சான்றோர் பழிக்கும் செயல்களைச் செய்யாதே.

16) *சலத்தால் பொருள்செய்தே மார்த்தல் பசுமண்*
*கலத்துநீர் பெய்திரீஇ யற்று.*

தீய செயலால் பொருள் சேர்த்துப் பாதுகாத்தல் பச்சைக் களி மண்கலத்தில் நீரூற்றி வைப்பதைப் போன்றது.
அணி - உவமையணி

### பழைமை(81)

*17) விழைதகையான் வேண்டி இருப்பர் கெழுதகையாற்*
*கேளாது நட்டார் செயின்.*

நட்பின் உரிமையில் தம்மைக் கேட்காமலேயே ஒரு செயலைச் செய்தாலும் நட்பு பாராட்டுவோர் விருப்பத்தோடு அச்செயலுக்கு உடன்படுவர்.

### தீ நட்பு(82)

*18) கனவினும் இன்னாது மன்னோ வினைவேறு*
*சொல்வேறு பட்டார் தொடர்பு.*

செயல் வேறு, சொல் வேறு என்று உள்ளவர் நட்பு கனவிலும் இனிமை தராது.

### பேதைமை(84)

*19) நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்*
*பேணாமை பேதை தொழில்.*

தகாத செயலுக்கு வெட்கப்படாமை, தக்கவற்றை நாடாமை, பிறரிடம் அன்பு இல்லாமை, ஏதொன்றையும் பாதுகாக்காமை ஆகியவை பேதையின் செயல்கள்.

*20) ஓதி உணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்*
*பேதையின் பேதையார் இல்.*

படித்தும் படித்ததை உணர்ந்தும் உணர்ந்ததை மற்றவருக்குக் கூறியும் தான் அதன்படி செயல்படாத பேதையைப் போலப் பேதை யாருமில்லை!

#### நூல் வெளி



உலகப் பண்பாட்டிற்குத் தமிழினத்தின் பங்களிப்பாக அமைந்த நூல், திருக்குறள். இனம், சாதி, நாடு குறித்த எவ்வித அடையாளத்தையும் முன்னிலைப்படுத்தாத உலகப் பொதுமறை இந்நூல். இது முப்பால், பொதுமறை, பொய்யாமொழி, வாயுறைவாழ்த்து, தெய்வநூல், தமிழ்மறை, முதுமொழி, பொருளுறை போன்ற பல பெயர்களால் அழைக்கப்படுகிறது. தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பரிதி, பரிமேலழகர், திருமலையர், மல்லர், பரிப்பெருமாள், காளிங்கர் ஆகிய பதின்மரால் திருக்குறளுக்கு முற்காலத்தில் உரை எழுதப்பட்டுள்ளது. இவ்வுரைகளுள் பரிமேலழகர் உரையே சிறந்தது என்பர். இந்நூல் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. இந்நூலைப் போற்றும் பாடல்களின் தொகுப்பே திருவள்ளுவ மாலை.

உலகின் பல மொழிகளிலும் பன்முறை மொழிபெயர்க்கப்பட்டதுடன், இந்திய மொழிகளிலும் தன் ஆற்றல் மிக்க அறக் கருத்துகளால் இடம் பெற்றது திருக்குறள். தமிழில் எழுதப்பட்ட உலகப் பனுவல் இந்நூல்.

பிற அறநூல்களைப் போல் அல்லாமல் பொது அறம் பேணும் திருக்குறளை இயற்றியவர் திருவள்ளுவர். இவருக்கு நாயனார், தேவர், முதற்பாவலர், தெய்வப் புலவர், நான்முகனார், மாதானுபங்கி, செந்நாப்போதார், பெருநாவலர் போன்ற சிறப்புப் பெயர்கள் உண்டு.

## கற்பவை கற்றபின்...

**1. படத்திற்கேற்ற குறளைத் தேர்வு செய்க.**



.....................................................................

.....................................................................

.....................................................................

.....................................................................

.....................................................................

அ) நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில்.

ஆ) விழைதகையான் வேண்டி இருப்பர் கெழுதகையாற்
கேளாது நட்டார் செயின்.

இ) செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாந் தலை.

**2. பாடலின் பொருளுக்குப் பொருத்தமான திருக்குறளைக் கண்டறிக.**

**பாடல்**

ஆண்டில் இளையவனென்று அந்தோ அகந்தையினால்
ஈண்டிங்கு இகழ்ந்தென்னை ஏளனம்செய் – மாண்பற்ற
காரிருள்போல் உள்ளத்தான் காந்திமதி நாதனைப்
பாரதி சின்னப் பயல்.

**குறள்**

அ) செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்.

ஆ) மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்
தகுதியான் வென்று விடல்.

இ) குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்.

3. பொருளுக்கேற்ற அடியைக் கண்டுபிடித்துப் பொருத்துக.

| | |
|---|---|
| பசுமண் கலத்துநீர் பெய்திரீஇ யற்று | ஒருவனின் செயல்பாடுகளே உரசி அறியும் உரைகல் |
| தத்தம் கருமமே கட்டளைக்கல் | அவ்வளவிற்குப் பெருமை உண்டாக்கும் |
| அனைத்தானும் ஆன்ற பெருமை தரும் | சுடாத மண்கலத்தில் நீரூற்றி வைப்பதைப் போல |

4. தீரா இடும்பை தருவது எது?

அ. ஆராயாமை, ஐயப்படுதல்

ஆ. குணம், குற்றம்

இ. பெருமை, சிறுமை

ஈ. நாடாமை, பேணாமை

5. சொல்லுக்கான பொருளைத் தொடரில் அமைத்து எழுதுக.

அ. நுணங்கிய கேள்வியர் - நுட்பமான கேள்வியறிவு உடையவர்

\-----------------------------------------------------

ஆ. பேணாமை - பாதுகாக்காமை

\-----------------------------------------------------

இ. செவிச் செல்வம் – கேட்பதால் பெறும் அறிவு

\-----------------------------------------------------

ஈ. அறனல்ல செய்யாமை – அறம் அல்லாத செயல்களைச் செய்யாதிருத்தல்

\-----------------------------------------------------

## குறுவினா

1. நிலம் போல யாரிடம் பொறுமை காக்கவேண்டும்?

2. தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும்.

இக்குறட்பாவின் கருத்தை விளக்குக.

3. ஒற்றொற்றித் தந்த பொருளையும் மற்றுமோர்
ஒற்றினால் ஒற்றிக் கொளல்.

இக்குறட்பாவில் அமைந்துள்ள நயங்களை எழுதுக.

4. கனவிலும் இனிக்காதது எவர் நட்பு?

**கதைக்குப் பொருத்தமான குறளைத் தேர்வு செய்து காரணத்தை எழுதுக.**

மௌனவிரதம் என்னும் தலைப்பில் நான்கு நண்பர்கள் ஒரு சொற்பொழிவைக் கேட்டனர். தாங்களும் ஒரு வாரத்துக்கு மௌனவிரதம் இருப்பதாகத் தீர்மானம் செய்தனர். மௌனவிரதம் ஆரம்பமாகி விட்டது! கொஞ்ச நேரம் போனதும் ஒருவன் சொன்னான், "எங்கள் வீட்டு அடுப்பை அணைத்துவிட்டேனா தெரியவில்லையே!"

பக்கத்திலிருந்தவன் "அடப்பாவி! பேசிட்டியே!" என்றான்.

உடனே மூன்றாவது ஆள், "நீ மட்டும் என்ன? நீயும்தான் பேசிவிட்டாய்!" என்றான்.

நான்காவது ஆள், "நல்லவேளை! நான் மட்டும் பேசவில்லை!" என்றான்.

இப்படியாக அவர்களின் மௌனவிரதம் முடிந்துபோனது.

1. *மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்*
   *அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு.*

2. *திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்து*
   *அறனல்ல செய்யாமை நன்று.*

3. *ஓதி உணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்*
   *பேதையின் பேதையார் இல்.*

## திருக்குறள் பற்றிய சில ஆராய்ச்சிச் செய்திகள்

திருக்குறள் முதன்முதலில் அச்சிடப்பட்ட ஆண்டு-1812

திருக்குறள் அகரத்தில் தொடங்கி னகர ஒற்றில் முடிகிறது.

திருக்குறளில் இருமுறை வரும் ஒரே அதிகாரம்- குறிப்பறிதல்

திருக்குறள் மூலத்தை முதன் முதலில் அச்சிட்டவர்- தஞ்சை ஞானப்பிரகாசர்

திருக்குறளுக்கு முதன் முதலில் உரை எழுதியவர்-மணக்குடவர்

திருக்குறளில் கோடி என்ற சொல் ஏழு இடங்களில் இடம்பெற்றுள்ளது.

ஏழு என்ற சொல் எட்டுக் குறட்பாக்களில் எடுத்தாளப்பட்டுள்ளது.

திருக்குறளை ஆங்கிலத்தில் முதலில் முழுமையாக மொழிபெயர்த்தவர்- ஜி.யு. போப்

திருக்குறள் இதுவரை நூற்றுக்கும் மேற்பட்ட மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

## கலைச்சொல் அறிவோம்

*அகழாய்வு* – *Excavation*

*கல்வெட்டியல்* – *Epigraphy*

*நடுகல்* – *Hero Stone*

*பண்பாட்டுக் குறியீடு* – *Cultural Symbol*

*புடைப்புச் சிற்பம்* – *Embossed sculpture*

*பொறிப்பு* – *Inscription*

## தமிழகத்தில் அகழாய்வு நடைபெற்ற முக்கிய இடங்கள்



இயல் நான்கு

அறிவியல், தொழில்நுட்பம்

# எட்டுத்திக்கும் சென்றிடுவீர்



## கற்றல் நோக்கங்கள்

- மின்னனு இயந்திரங்களின் தேவையையும் இணையத்தின் இன்றியமையாமையையும் அறிந்து பயன்படுத்துதல்
- இலக்கியங்கள் காட்டும், தமிழர்களின் அறிவியல் சிந்தனைகள், சமூகத் தேவைகளுக்கு ஏற்ப மேம்பட்டு வருவதை உணர்தல்
- தொல்காப்பியம் குறிப்பிடும் உயிர்களின் வகைப்பாட்டினை அறிவியல் செய்திகளோடு ஒப்பிடல்
- அறிவியல் செய்திகளையும் கவிதையாக்க முடியும் என்பதை அறிந்து படைப்பூக்கம் பெறுதல்
- நேர்காணலின் நோக்கமறிந்து ஏற்றவாறு வினாக்களை வடிவமைத்தல்

தொழில்நுட்பம்

௪

# இயந்திரங்களும் இணையவழிப் பயன்பாடும்

**நுழையும்முன்**

இயந்திரங்கள் இல்லாத மனித வாழ்க்கையைக் கற்பனை செய்ய முடியாத அளவிற்கு இன்று தொழில்நுட்பம் நம்மைச் சூழ்ந்துள்ளது. இணையவழிப் பயன்பாடு வாழ்வை எளிதாக்கி, நேரத்தையும் உழைப்பையும் வீணாக்காமல் தடுக்கிறது. இதன்வழி, பல நன்மைகளும் சில தீமைகளுமாக மாற்றங்களும் முன்னேற்றங்களும் நம்மை முன்னோக்கிப் பயணிக்கச் செய்கின்றன. எதிர்கால நலன் ஒன்றையே கருத்தில்கொண்டு இயந்திரங்களையும் இணையத்தையும் முறையாகப் பயன்படுத்தி வாழ்வில் ஏற்றம் பெறுவோம்.




படி 1
செயலியை நிறுவுதல்




படி 2
முன்பதிவு செய்தல்



படி 3
பயணச்சீட்டைப் பெறுதல்




படி 4
பயணப் பதிவு (PNR) நிலையை அறிதல்

பேருந்துகளில் பயணச்சீட்டு வழங்குவதற்கும் உணவு விடுதிகளில் உணவுக் கட்டணச் சீட்டு வழங்குவதற்கும் உரிய கருவிகளைப் பார்த்திருப்போம். அவை எளிய வடிவிலான மின்னணு இயந்திரங்கள்; இணைய இணைப்பு இல்லாதவை. அந்தந்த நிறுவனத்தின் தேவைக்கென்று மட்டுமே வடிவமைக்கப்பட்டவை. இவற்றைப் போன்ற பல இயந்திரங்களை அன்றாடம் பயன்படுத்தும் காலத்தில் நாம் வாழ்கிறோம்.

முதன்முதலாக மின்னஞ்சல் மூலம் தொடர்புகொண்டபோது உலகம் சுருங்கிவிட்டது என்று மகிழ்ந்தோம். கடிதப் போக்குவரத்து குறைந்தது. குறுஞ்செய்தியின் வருகைக்குப்பின் தந்தி விடைபெற்றுக் கொண்டது. சமூக வலைத்தளங்கள் மூலம் காணொலி இணைப்பில் பேசுகையில், உலகம் உள்ளங்கைக்குள் அடங்கிவிடுகிறது. ஆண்டிப்பட்டியில் நடைபெறும் திருமணத்தை அமெரிக்காவில் அதே நேரத்தில்

இணையவழிக் காணொலிமூலம் காண முடிகிறது. இணையம் என்னும் தொழில்நுட்ப உலகில், அனைத்துத் துறைகளும் புகுந்துகொண்டன. வங்கிகள் தரும் அட்டைகளில் உருள்கிறது வாழ்க்கை.

அறிவியல் முன்னேற்றத்தால், மனிதனின் பயணநேரம் குறைந்துள்ளது. அறிவியல் கண்டுபிடிப்புகள் நமது நேரத்தைப் பலவழிகளிலும் மிச்சப்படுத்துகின்றன. கணினிப் பயன்பாடு மிகுந்துள்ளதால் சமையல் எரிவாயு பதிவு செய்வது, மின் கட்டணம் செலுத்துவது, பயணத்திற்கு முன்பதிவு செய்வது போன்ற செயல்களுக்குகாக நேரில் சென்று வரிசையில் நிற்பது குறைந்துள்ளது. அங்காடிகளுக்குச் சென்று பொருள்களை வாங்குவதும்கூட இணையவழியில் தொடங்கிவிட்டது. தெருவுக்குத் தெரு 24 x 7 தானியங்கிப் பண இயந்திரமும் கடைக்குக் கடை வங்கி அட்டைகள் பயன்படுத்தும் இயந்திரமும் புழக்கத்திற்கு வந்துவிட்டன. இந்த இயந்திரங்களின் பின்னால் இருப்பது கணினி யுகத்தின் கண்ணுக்குத் தெரியாத இணைய வலை! இணைப்பு அலை!

### ஒளிப்படி இயந்திரம் ( Photo copier)



கல்வி, வணிகம், அரசு, தனியார் அலுவலகங்கள் என அனைத்துத் துறைகளிலும் நகல் எடுக்கப் பயன்படுகின்ற முக்கியமான இயந்திரம் இது. அனைவரும் இதனை ஜெராக்ஸ் (Xerox) என்று பொதுவாகக் கூறுவது வழக்கத்தில் உள்ள சொல்.

நியூயார்க்கைச் சேர்ந்த காப்புரிமைச் சட்ட வல்லுநரும் பகுதிநேர ஆய்வாளருமான செஸ்டர் கார்ல்சன் (Chester Carlson), தம் தொழிலுக்காக நிறையக் காகிதங்களைப் படி எடுக்க வேண்டியிருந்தது. அந்தப் பணிச்சுமையே அவரை இப்புதிய கண்டுபிடிப்பை நோக்கித் தள்ளியது. மின்னணுப் புகைப்பட ஆய்வுகளுக்குத் தமது சமையலறையையே அவர் பயன்படுத்திக்கொண்டார். கந்தகம் தடவிய துத்தநாகத் தட்டைக்கொண்டு, 1938இல் உலகின் முதல் ஒளிப்படியை எடுத்தார். கிரேக்க மொழியில் சீரோகிராஃபி (Xerography) என்றால் உலர் எழுத்துமுறை (dry writing) என்று பொருள். அவரால் 1959இல் இந்த ஜெராக்ஸ் இயந்திரம் உலகிற்கு அறிமுகப்படுத்தப்பட்டது. இன்று, பல பெரிய நிறுவனங்கள் ஒளிப்படி எடுக்கும் கருவிகளை உருவாக்கி விற்பனை செய்தாலும் அவற்றுக்கு ஜெராக்ஸ் என்ற பெயரே நிலைத்து விட்டது.

### தொலைநகல் இயந்திரம் (Fax)

தொலைநகல் இயந்திரம் கோப்புகளையும் ஒளிப்படங்களையும் உடனடியாக ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு அனுப்பப் பயன்படுகிறது.

1846இல் ஸ்காட்லாந்துக் கண்டுபிடிப்பாளர் அலெக்சாண்டர் பெயின் (Alexander Bain) என்பார் குறியீடுகளை மின்னாற்றல் உதவியுடன் அச்சிடுவதில் வெற்றிகண்டு அதற்குரிய காப்புரிமையைப் பெற்றார். இத்தாலி நாட்டு இயற்பியல் அறிஞர் ஜியோவான்னி காசில்லி (Giovanni Caselli) பான்டெலிகிராஃப் (Pantelegraph) என்ற தொலைநகல் கருவியை உருவாக்கினார். அவருடைய கண்டுபிடிப்பைக்கொண்டு, 1865இல் பாரிஸ் நகரிலிருந்து லியான் நகரத்துக்குத் தொலைநகல் சேவை




தொடங்கப்பட்டது.

தொலைபேசியைக் கண்டுபிடிப்பதற்குப் பதினோராண்டுகளுக்கு முன்பே இந்நிகழ்வு நடந்தது. பின்னர் அறிவியல் அறிஞர் பலரின் முயற்சியால் இந்த இயந்திரம் மேம்படுத்தப்பட்டது.

1985இல் அமெரிக்காவின் ஹாங்க் மாக்னஸ்கி (Hank Magnuski) என்பவர் கணினி மூலம் தொலைநகல் எடுக்கும் தொழில்நுட்பத்தைக் கண்டுபிடித்தார். அந்த இயந்திரத்திற்கு காமா ஃபேக்ஸ் (Gamma Fax) என்று பெயரிட்டு விற்பனைக்குக் கொண்டுவந்தார்.

### தானியங்கிப் பண இயந்திரம் (Automated Teller Machine)

உழைத்துச் சேர்த்த பணத்தைப் பெட்டியில் பூட்டி வைக்கும் பழக்கம் இன்று இல்லை.

**தெரிந்து தெளிவோம்**

நான் இங்கிலாந்திலோ உலகின் எந்த மூலையிலோ இருந்தாலும் என் வங்கிப் பணத்தை எடுத்துப் பயன்படுத்துவதற்கொரு வழியைச் சிந்தித்தேன். சாக்லேட்டுகளை வெளித்தள்ளும் இயந்திரத்திலிருந்து யோசனை கிடைத்தது. அங்கு சாக்லேட்; இங்கே பணம்.

– ஜான் ஷெப்பர்டு பாரன்

அரசின் உதவித்தொகை, ஊக்கத்தொகை, பணியாளரின் ஊதியம் போன்றவற்றை வங்கிக் கணக்குகளில் நேரடியாகச் செலுத்தும் மின்னணுப் பரிமாற்றமுறை நடைமுறைக்கு வந்துவிட்டது. அதனை எடுக்க வங்கிக்குச் செல்லவேண்டியதில்லை. தானியங்கிப் பண இயந்திரம் மூலமே பணம் எடுக்கலாம்; செலுத்தலாம்.




இங்கிலாந்தைச் சேர்ந்த பொறியாளரான ஜான் ஷெப்பர்டு பாரன் (John Shepherd Barron) என்பவர் தலைமையிலான குழுவொன்று, பார்க்லேஸ் வங்கிக்காக இலண்டனில் 1967 ஜூன் 27இல் தானியங்கிப் பண இயந்திரத்தை நிறுவியது.

வங்கி அட்டையெல்லாம் அப்போது கிடையாது. வங்கியில் வழங்கப்பட்ட காசோலையைக் கொண்டுதான் பணம் எடுக்கப்பட்டது. அந்தக் காசோலையில் உள்ள குறியீடுகளை இயந்திரம் படித்துப் புரிந்துகொண்டு பணத்தைத் தள்ளும். பின்னர், வாடிக்கையாளரின் ஆறிலக்கக் கடவுச்சொல் தருமாறு அது மேம்படுத்தப்பட்டது. இந்தக் காசோலைகளை ஒருமுறை மட்டுமே

4AQH32

பயன்படுத்த முடியும். பணம் எடுக்கும்போது காசோலை, இயந்திரத்துக்கு உள்ளே போய்விடும்.

பின்னர் வங்கிகளின் அட்டைகளில் தனிப்பட்ட அடையாள எண்ணை உருவாக்கித் தானியங்கிப் பண இயந்திரத்தில் பயன்படுத்தத் தொடங்கினர். இன்று உலகெங்கும் பரவியுள்ள தானியங்கி இயந்திரம் பல வசதிகளுடன் விளங்குகிறது. வங்கி அட்டையே இல்லாமல், அலைபேசி எண் மற்றும் வங்கிக் கணக்கு எண் ஆகியவற்றைப் பயன்படுத்திப் பணம் செலுத்தும் முறை வந்துவிட்டது.

இது வங்கிக்குச் செல்வதைப் பெருமளவு குறைத்துவிட்டது. ஆனாலும், பெருகிவரும் இணையப் பயன்பாட்டின் காரணமாகவும் பணமற்ற வணிகமுறை அனைத்து இடங்களிலும் நடைமுறைப்படுத்தப்படுவதன் காரணமாகவும் இந்தத் தானியங்கிப் பண இயந்திரங்களின் பங்கு எதிர்காலத்தில் குறைந்துவிடக்கூடும்.

### அட்டை தேய்ப்பி இயந்திரம் (Swiping Machine)

கையில் பணமே இல்லாமல் கடைக்குச் சென்று பொருள் வாங்கவும் மற்ற வணிகப் பரிமாற்றங்களுக்கும் இந்தக் கருவி பயன்படுத்தப்படுகிறது. இது, கட்டணம் செலுத்தும் கருவி (payment terminal) என்றும் விற்பனைக் கருவி (point of sale terminal) என்றும் அழைக்கப்படுகிறது.

இந்த இயந்திரத்தில் வங்கி அட்டையின்



### தெரிந்து தெளிவோம்

ஆட்ரியன் ஆஷ்ஃபீல்டு (Adrian Ashfield) என்பவர் 1962இல் கடவுச்சொல்லுடன் கூடிய அட்டைக்கு இங்கிலாந்தில் காப்புரிமை பெற்றிருந்தார். ஆரம்பத்தில் பெட்ரோல் தருவதற்குப் பயன்படுத்தவே காப்புரிமை தரப்பட்டது. அதுவே பின்னர் அனைத்துப் பயன்பாட்டுக்குமான காப்புரிமையாக மாற்றப்பட்டது.

காந்தப்பட்டை இருக்கும் பகுதியைத் தேய்க்கும்போது வாடிக்கையாளரின் விவரங்கள், இணையத் தொடர்பின் மூலம் வங்கிக் கணினிக்குச் செல்கிறது. கணினியால் அட்டை ஆராயப்பட்டுக் கடவுச் சொல்லைச் சரிபார்த்தபின் பணப்பரிமாற்றத்திற்கு வங்கி ஒப்புதல் அளிக்கிறது. தற்காலத்தில் பயன்படுத்தப்படும் அட்டைகளில் சில்லு (chip) என்று சொல்லப்படும் (எண்ணிய) சில்லுகள் மூலம் வணிகப் பரிமாற்றங்கள் நடைபெறுகின்றன.

### தமிழக அரசின் நியாயவிலைக் கடை – திறனட்டைக் கருவி (TNePDS)



தமிழக மக்கள் பயன்படுத்தும் குடும்ப அட்டைகள் திறன் அட்டைகளாக (smart cards) மாற்றப்பட்டுள்ளன. குடும்பத்தில் உள்ளவர்களின் ஆதார் எண்கள், அலைபேசி எண்கள், முகவரி உள்ளிட்ட விவரங்களைச் சேர்த்துத் திறன் அட்டைகள் வழங்கப்படுகின்றன. குடும்ப உறுப்பினர்

நியாயவிலைக் கடைக்குச் செல்கையில் அவர்களது திறன் அட்டை அங்கிருக்கும் விற்பனைக் கருவியில் வருடப்படுகிறது (scanning). அங்கு விற்பனை செய்யப்படும் பண்டங்களும் விலை விவரங்களும் பற்றிய குறிப்புகள் பதிவு செய்யப்பட்ட அலைபேசி எண்ணுக்குக் குறுஞ்செய்தியாக வந்துவிடுகின்றன.

### ஆளறிசோதனைக் கருவி (Biometric Device)

ஆளறிசோதனைக் கருவி மனிதனின் கைரேகை, முகம், விழித்திரை ஆகியவற்றில் ஒன்றையோ அனைத்தையுமோ அடையாளமாகப் பதிவு செய்யவும் பதிவு செய்த அடையாளம் மூலம் மறுபடி ஆளை அறியவும் பயன்படுகிறது. நடுவண் அரசின் ஆதார் அடையாள அட்டையைப் பெறுவதற்கு நம்முடைய ஒளிப்படத்தையும் விழித்திரையையும் இரு கைகளின் பத்து விரல் ரேகைகளையும் பதிவு செய்கிறோம்.



அரசு நிறுவனங்களிலும் தனியார் நிறுவனங்களிலும் வருகைப் பதிவுக்காகவும் வெளியேறுகைப் பதிவுக்காகவும் இக்கருவி பயன்படுகிறது.

### இணைய வணிகம்

இங்கிலாந்தைச் சேர்ந்த மைக்கேல் ஆல்ட்ரிச் (Michael Aldrich) 1979இல் இணைய வணிகத்தைக் கண்டுபிடித்தார். இது இணைய உலகின் மற்றொரு பாய்ச்சலாகக் கருதப்படுகிறது. 1989இல் அமெரிக்காவில் இணையவழி மளிகைக்கடை தொடங்கப்பட்டது.

1991இல் இணையம், பொதுமக்களின் பயன்பாட்டுக்கு வந்தது. இன்று இணைய நிறுவனங்கள் விற்காத பொருள்கள் எதுவும் உலகில் இல்லை. கரும்பு முதல் கணினி வரை இணையவழியில் விற்கப்படுகின்றன. இணைய வணிகம் தவிர்க்க முடியாத இடத்தைப் பிடித்துள்ளது.

**தெரிந்து தெளிவோம்**

1990இல் டிம் பெர்னெர்ஸ் லீ (Tim Berners – Lee) வையக விரிவு வலை வழங்கியை (www – server) உருவாக்கினார். "இணையத்தில் இது இல்லையெனில், உலகத்தில் அது நடைபெறவேயில்லை!" என்பது லீயின் புகழ் பெற்ற வாசகம்.

### இந்தியத் தொடர்வண்டி உணவு வழங்கல் மற்றும் சுற்றுலாக் கழக இணைய வழிப் பதிவு (IRCTC)

மக்கள்தொகை மிகுந்த இந்தியா போன்ற நாடுகளில் வரிசையில் நிற்பது நேர வீணடிப்பு. இதனைக் குறைப்பதுடன், இருந்த இடத்திலிருந்தே பயணச்சீட்டு எடுப்பதை எளிதாக்கிய மிகப் பெரிய இந்திய நிறுவனம் இந்தியத் தொடர்வண்டி உணவு வழங்கல் மற்றும் சுற்றுலாக் கழகம். இது பயணச்சீட்டு வழங்குவதையும் சுற்றுலாவுக்கு ஏற்பாடு செய்வதையும் திறம்படச் செய்து வருகிறது.

இதன் இணையத்தளத்தில் பதிவு செய்வது, மிகவும் எளிதானது. பயணம் செய்ய வேண்டிய நாளில் ஊர்களுக்குச் செல்லும் தொடர்வண்டிகளையும் அவற்றின் நேரங்களையும் பயணம் செய்ய விரும்பும் வகுப்புகளையும் (பெட்டி வகைகள்) அதற்குண்டான தொகையையும் காண்பிக்கிறது. வங்கி அட்டைகளின் உதவியுடன் தொகையைச் செலுத்தி முன்பதிவு செய்துகொள்ளலாம். மின்னஞ்சலில் பயணச்சீட்டு வந்துவிடுகிறது. நமது




அலைபேசிக்குக் குறுஞ்செய்தியும் வந்துவிடுகிறது. பயணத்தின்போது குறுஞ்செய்தியையும் நமது அடையாள அட்டையையும் காண்பித்தாலே போதும். பயணம் தேவையில்லையெனில், பயணப் பதிவை நீக்கம் செய்வதையும் இந்தத் தளத்திலேயே செய்து கொள்ளலாம்.

> 2002ஆம் ஆண்டு இணையவழிப் பதிவு அறிமுகப்படுத்தப்பட்ட போது சராசரியாக ஒரு நாளைக்கு 29 பயணச்சீட்டுகள் இணையவழியே பதிவு செய்யப்பட்டன. ஆனால், 13 ஆண்டுகள் கழித்து 2015 ஏப்ரல் 1 அன்று ஒரே நாளில் 13 இலட்சம் பயணச்சீட்டுகள் பதிவு செய்யப்பட்டது ஒரு சாதனை. தற்போது ஒரு நிமிடத்திற்கு 1500 பயணச்சீட்டுகள் பதிவு செய்யும் வகையிலும் 3 இலட்சம் பயனர்கள் ஒரே நேரத்தில் இணையவழிச் சேவையைப் பயன்படுத்தவும் உரிய வழிவகை செய்யப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

### இணையப் பயன்பாடு




தற்காலத்தில் பேருந்து முன்பதிவு, வானூர்தி முன்பதிவு, தங்கும் விடுதிகள் முன்பதிவு ஆகியவற்றை இணையம் மூலமாக மேற்கொள்ளப் பல முகமைகள் உள்ளன. இது பலருக்கு வேலைவாய்ப்பையும் தருகிறது. பெருநகரங்களில் திரையரங்குகளின் இருக்கைகள் முன்பதிவு செய்வதுகூட இணையம் மூலம் நடைபெறுகின்றது.

அரசுக்குச் செலுத்தவேண்டிய சொத்து வரி, தண்ணீர் வரி ஆகியன இணையவழியில் செலுத்தப்படுகின்றன. அரசின் அனைத்துத் திட்டங்களுக்கும் உரிய படிவங்களைப் பதிவிறக்கம் செய்துகொள்ளலாம். அவற்றை நிரப்பி இணையம் மூலமாகவே விண்ணப்பிக்கலாம். பிறப்புச் சான்றிதழ், வருமானவரிச் சான்றிதழ், சாதிச் சான்றிதழ் போன்றவை அரசால் மக்களுக்கு இணையம் மூலம் வழங்கப்படுகின்றன. அரசின் மின்னணுச் சேவை மையங்களின் உதவியை நாடியும் மேற்கண்ட சேவைகளைப் பெறலாம்.



**தெரியுமா ?**

பத்தாம் வகுப்பும் பன்னிரண்டாம் வகுப்பும் முடித்த மாணவர்களுக்கு, அரசின் வேலைவாய்ப்பு அலுவலகத்தில் செய்யப்படவேண்டிய பதிவு, அவர்கள் படித்த பள்ளிகளிலேயே ஆண்டுதோறும் இணையத்தின் வழியாகச் செய்யப்பட்டு வருகிறது. அரசின் விலையில்லா மிதிவண்டி, மடிக்கணினி ஆகியவற்றைப் பெற்ற மாணவர்களின் விவரங்கள் இணையத்தின் மூலம் பதிவு செய்யப்படுகின்றன.

நடுவண் அரசும் மாநில அரசும் பள்ளி மாணவர்களுக்குக் கல்வி உதவித் தொகை வழங்குவதற்கு ஆண்டுதோறும் பல போட்டித் தேர்வுகளை நடத்துகின்றன. பத்தாம் வகுப்பு மாணவர்களுக்குத் தேசியத் திறனறித் தேர்வு (National Talent Search Exam), எட்டாம் வகுப்பு மாணவர்களுக்குத் தேசியத் திறனறித் தேர்வு மற்றும் கல்வி உதவித் தொகைத் தேர்வு (National Means-cum -Merit Scholarship Scheme Exam), கிராமப்புறப் பள்ளிகளில் படிக்கும் ஒன்பதாம் வகுப்பு மாணவர்களுக்கு ஊரகத் திறனறித் தேர்வு (TRUST – Tamilnadu Rural Students Talent Search Examination) ஆகியவை நடத்தப்படுகின்றன. அவற்றில் கலந்து கொள்ள விரும்பும் மாணவர்கள் தாங்கள் படிக்கும் பள்ளிகளிலேயே இணையத்தின்வழி விண்ணப்பிக்கலாம்.

பள்ளிக்கல்வி முடித்த மாணவர்கள் கல்லூரிகளுக்கு இணையம் வழியாக விண்ணப்பிக்கலாம். பள்ளிக் கட்டணம், கல்லூரிக் கட்டணம் ஆகியவற்றையும் இணையம் வழியாகவே செலுத்த முடியும். தேர்வுக் கட்டணங்கள் செலுத்துதல், தேர்வு அறை அடையாளச் சீட்டுத் தர பதிவிறக்கம் செய்தல் ஆகியவை இணையச் செயல்பாடுகளாக ஆகிவிட்டன. தமிழ்நாடு அரசுப் பணியாளர் தேர்வாணையம் போன்ற தேர்வு முகமைகள் நடத்தும் தேர்வுகளுக்கு இணையம் மூலமே விண்ணப்பித்தால் போதுமானது. பன்னிரண்டாவது முடித்தபின் மாணவர்கள் பல்வேறு தொழிற்கல்வி நுழைவுத்தேர்வுகளுக்கு இணையத்திலேயே விண்ணப்பிக்கின்றனர்.

மனிதஇனம் தோன்றியது முதல் இன்றுவரை பல்வேறுவிதமான வளர்ச்சிகளைக் கண்டுள்ளது. மனிதனது தேவைகள் பெருகப் பெருக, கண்டுபிடிப்புகளும் பெருகின. நேரத்தையும் தூரத்தையும் சுருக்குவதில் மனிதன் வெற்றி பெற்றான். நீரின்றி அமையாது உலகு என்பதுபோல, இன்று இயந்திரங்களும் கணினிகளும் இன்றி உலகம் இயங்குவதில்லை!

## கற்பவை கற்றபின்...

1. வங்கியில் இணையவழிச் சேமிப்புக் கணக்குத் தொடங்கும் நடைமுறையை எழுதுக.
2. உங்கள் குடும்பத்தினருடன் வெளியூர் சென்ற தொடர்வண்டிப் பயணத்திற்கு இணையத்தில் எவ்வாறு முன்பதிவு செய்தீர்கள்? அதன் வழிமுறைகளை அனுபவத்தில் (அ) கேட்டறிந்து வகுப்பறையில் வழங்குக.
3. விரலியில் (Pendrive) உள்ள பாடல்களையும் எழுத்துக் கோப்புகளையும் (Document) கணினியில் நுழைந்து உறைகளில் (Folder) இட்டுச் சேமிப்பதைச் செய்து பார்த்துத் தெரிந்து கொள்க.

கவிதைப் பேழை

தொழில்நுட்பம்

௪

# ஓ, என் சமகாலத் தோழர்களே!

– வைரமுத்து

நுழையும்முன்

அறவியலும் அறிவியலும் இணைந்து வளர்ந்ததே தமிழ்ச் சமூகம். எனவே அறவியலோடு அறிவியல் கண்ணோட்டமும் வளர்க்கப்பட வேண்டும் என்பதைத் தற்காலப் படைப்பாளர்கள் வலியுறுத்துகின்றனர். அவ்வகையில் அறிவியல் துறையில் தமிழர்கள் சிறந்து விளங்க வேண்டும் என்ற தம் விழைவை இப்பாடல் மூலம் கவிஞரும் வெளிப்படுத்துகின்றார்.



*கிளிக்கு றெக்கை இருக்கும் வரைக்கும்*
*கிழக்கு வானம் தூரமில்லை*
*முளைக்கும் விதைகள் முளைக்கத் துடித்தால்*
*பூமி ஒன்றும் பாரமில்லை*

*பாய்ந்து பரவும் இளைய நதிகளே*
*பள்ளம் நிரப்ப வாருங்கள்*
*காய்ந்து கிடக்கும் கழனிகள் எங்கும்*
*கதிர்கள் சுமந்து தாருங்கள்*

*முன்னோர் சொன்ன முதுமொழி எல்லாம்*
*முதுகில் சுமந்தால் போதாது*
*சொன்னோர் கருத்தை வாழ்க்கைப் படுத்த*
*துணிந்தால் துன்பம் வாராது*

*காட்டும் பொறுமை அடக்கம் என்னும்*
*கட்டுப் பாட்டைக் கடவாதீர்*
*கூட்டுப் புழுதான் பட்டுப் பூச்சியாய்க்*
*கோலம் கொள்ளும் மறவாதீர்*

*அறிவை மறந்த உணர்ச்சி என்பது*
*திரியை மறந்த தீயாகும்*
*எரியும் தீயை இழந்த திரிதான்*
*உணர்ச்சி தொலைந்த அறிவாகும்*

*பழையவை எல்லாம் பழமை அல்ல*
*பண்பும் அன்பும் பழையவைதாம்*
*இளையவர் கூட்டம் ஏந்தி நடக்க*
*இனமும் மொழியும் புதியவைதாம்*

*அறிவியல் என்னும் வாகனம் மீதில்*
*ஆளும் தமிழை நிறுத்துங்கள்*
*கரிகா லன்தன் பெருமை எல்லாம்*
*கணிப்பொறி யுள்ளே பொருத்துங்கள்**

*ஏவும் திசையில் அம்பைப் போல*
*இருந்த இனத்தை மாற்றுங்கள்*
*ஏவு கணையிலும் தமிழை எழுதி*
*எல்லாக் கோளிலும் ஏற்றுங்கள்.**

### இலக்கணக்குறிப்பு

பண்பும் அன்பும், இனமும் மொழியும் – எண்ணும்மைகள்.

சொன்னோர் – வினையாலணையும் பெயர்.

### பகுபத உறுப்பிலக்கணம்

பொருத்துங்கள் – பொருத்து + உம் + கள்

பொருத்து – பகுதி

உம் – முன்னிலைப் பன்மை விகுதி

கள் – விகுதி மேல் விகுதி

### நூல் வெளி

கவிஞர் வைரமுத்து தேனி மாவட்டத்திலுள்ள மெட்டூர் என்னும் ஊரில் பிறந்தவர். இந்திய அரசின் உயர்ந்த விருதுகளுள் ஒன்றான பத்மபூஷண் விருதினைப் பெற்றவர். கள்ளிக்காட்டு இதிகாசம் புதினத்துக்காக 2003ஆம் ஆண்டு சாகித்திய அகாதெமி விருது பெற்றவர். இந்தியாவின் சிறந்த பாடலாசிரியருக்கான தேசிய விருதினை ஏழு முறையும் மாநில அரசின் விருதினை ஆறு முறையும் பெற்றவர். இவருடைய கவிதைகள் இந்தி, தெலுங்கு, மலையாளம், வங்காளம், ஆங்கிலம் உள்ளிட்ட பல மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இப்பாடப் பகுதி வைரமுத்து கவிதைகள் என்னும் தொகுப்பில் இடம்பெற்றுள்ளது.

### இலக்கியங்களில் அறிவியல்

புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவன் ஏவா வான ஊர்தி

புறநானூறு
பாடல் 27, அடி 7–8.

*அந்தரத் தார்மய னேஎன ஐயுறும்*
*தந்திரத்தால் தம நூல்கரை கண்டவன்*
*வெந்திற லான், பெருந் தச்சனைக் கூவி,"ஓர்*
*எந்திர வூர்திஇ யற்றுமின்" என்றான்.*

*– சீவக சிந்தாமணி*
*நாமகள் இலம்பகம் 50.*

## கற்பவை கற்றபின்...

1. *அறிவியல் செய்திகளை வெளிப்படுத்தும் கவிதைகளைத் தொகுத்து வகுப்பறையில் படித்துக் காட்டுக.*
2. *விமானமும் ஏவுகணையும் பேசிக்கொள்வதுபோல ஓர் உரையாடலைக் குழுவாகச் சேர்ந்து உருவாக்குக.*
3. *பாடலில் அமைந்துள்ள தொடைநயங்களை எழுதுக.*

*கிளிக்கு றெக்கை இருக்கும் வரைக்கும்*
*கிழக்கு வானம் தூரமில்லை*

*முளைக்கும் விதைகள் முளைக்கத் துடித்தால்*
*பூமி ஒன்றும் பாரமில்லை"*

கவிதைப் பேழை

தொழில்நுட்பம்

ச

# உயிர்வகை

– தொல்காப்பியர்




கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புல உணர்வுகளின் வாயிலாகவே அறிவு என்பதை நாம் பெறுகிறோம். இதற்குரிய பொறிகளான கண், காது, வாய், மூக்கு, உடல் என்னும் ஐந்து உறுப்புகளில் எது குறைந்தாலும் குறிப்பிட்ட ஓர் அனுபவத்தை இழந்துவிடுவோம். ஆனால், அனைத்து உயிரினங்களுக்கும் இந்தப் புலன் அறிவுகள் எல்லாம் இருப்பதில்லை. இதைக் கொண்டு உயிரினங்களைப் புலன்களின் எண்ணிக்கை அடிப்படையில் முன்னோர் பகுத்தனர். ஆறாவது அறிவு மனத்தால் அறியப்படுவது என்பர்.



*ஒன்றறி வதுவே உற்றறி வதுவே*
*இரண்டறி வதுவே அதனொடு நாவே*
*மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே*
*நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே*
*ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே*
*ஆறறி வதுவே அவற்றொடு மனனே*
*நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே**

*(நூ.எ.1516)*

### இலக்கணக்குறிப்பு

உணர்ந்தோர் – வினையாலணையும் பெயர்.

### பகுபத உறுப்பிலக்கணம்

நெறிப்படுத்தினர் – நெறிப்படுத்து+இன்+அர்

நெறிப்படுத்து – பகுதி

இன் – இறந்தகால இடைநிலை

அர் – பலர்பால் வினைமுற்று விகுதி

| அறிவுநிலை | அறியும் ஆற்றல் | உரையாசிரியர்களின் எடுத்துக்காட்டு |
|---|---|---|
| ஓரறிவு | உற்றறிதல் (தொடுதல் உணர்வு) | புல், மரம் |
| ஈரறிவு | உற்றறிதல் + சுவைத்தல் | சிப்பி, நத்தை |
| மூவறிவு | உற்றறிதல் + சுவைத்தல் + நுகர்தல் | கரையான், எறும்பு |
| நான்கறிவு | உற்றறிதல் + சுவைத்தல் + நுகர்தல் + காணல் | நண்டு, தும்பி |
| ஐந்தறிவு | உற்றறிதல் + சுவைத்தல் + நுகர்தல் + காணல் + கேட்டல் | பறவை, விலங்கு |
| ஆறறிவு | உற்றறிதல் + சுவைத்தல் + நுகர்தல் + காணல் + கேட்டல் +பகுத்தறிதல் (மனம்) | மனிதன் |

### நூல் வெளி

தமிழ்மொழியில் கிடைக்கப்பெற்ற முதல் இலக்கணநூல் தொல்காப்பியம். இதனை இயற்றியவர் தொல்காப்பியர். தொல்காப்பியம் பிற்காலத்தில் தோன்றிய பல இலக்கண நூல்களுக்கு முதல் நூலாக அமைந்திருக்கிறது. இது எழுத்து, சொல், பொருள் என மூன்று அதிகாரங்களையும் 27 இயல்களையும் கொண்டுள்ளது. எழுத்து, சொல் அதிகாரங்களில் மொழி இலக்கணங்களை விளக்குகிறது. பொருளதிகாரத்தில் தமிழரின் அகம், புறம் சார்ந்த வாழ்வியல் நெறிகளையும் தமிழ் இலக்கியக் கோட்பாடுகளையும் இந்நூல் விளக்குகிறது. இந்நூலில் பல அறிவியல் கருத்துகள் இடம்பெற்றுள்ளன. குறிப்பாகப் பிறப்பியலில் எழுத்துகள் பிறக்கும் இடங்களை உடற்கூற்றியல் அடிப்படையில் விளக்கியிருப்பதை அயல்நாட்டு அறிஞர்களும் வியந்து போற்றுகின்றனர். இது தமிழர்களின் அறிவாற்றலுக்குச் சிறந்த சான்றாகும்.

## கற்பவை கற்றபின்...

1. அ. தட்டான் பூச்சி தாழப்பறந்தால் தப்பாமல் மழை வரும்.

   ஆ. வானில் பறக்குது குதிரை
   பறக்கப் பறக்க வால் குறையும் குதிரை – அது என்ன?

   –இவை போன்ற அறிவியல் செய்திகள் கொண்ட பழமொழிகள், விடுகதைகளைப் படித்தும் கேட்டும், அவற்றின் அறிவியல் அடிப்படையை வகுப்பறையில் கலந்துரையாடுக.

2. 'விமான நிலையத்தில் நான்' – கற்பனையாகக் கதை ஒன்றினை எழுதுக.

விரிவானம்

தொழில்நுட்பம்

௪

# விண்ணையும் சாடுவோம்

4AZI4P

**நுழையும்முன்**

ஒரு வண்ணத்துப் பூச்சியின் சிறகசைப்பு, உலகில் எங்கோ ஓர் எதிர்விளைவை ஏற்படுத்தும் என்று அறிவியல் கூறுகிறது. ஆனால், நம் இந்திய விண்வெளித்துறை விண்ணில் அனுப்பிய செயற்கைக்கோள்கள் மக்களின் வாழ்க்கைத் தரத்தில் வியத்தகு மாற்றங்களை ஏற்படுத்தியிருக்கின்றன. விசையுறு பந்தினைப் போல் உள்ளம் வேண்டிய நேரத்தில் எல்லாம் நம்மால் திசையன்விளையிலிருந்து தில்லிவரை தொடர்புகொள்ள முடிகிறது. இணையத்தில் வாழ்க்கைப் பயணம் – பயணத்தில் பாதி இணையம் என்று நம்நாடு மாறிக்கொண்டிருக்கிறது. இந்த மாற்றத்தில் தமிழ் அறிவியலாளர்களுக்கும் பங்கு உண்டு. இவற்றையெல்லாம் நாம் அறியக்கூடிய வாயிலாக விளங்குவது, தொலைக்காட்சியிலும் வானொலியிலும் இதழ்களிலும் காணும் ஒரு கலை வடிவமான நேர்காணல். செய்திகளைத் தருவதில் கட்டுரை, கதை, கவிதை வடிவங்களைப் போல நேர்காணல் வடிவமும் நேர்த்தியானதுதான்.





இருபதாம் நூற்றாண்டில் இந்திய வானியல் அறிவியல் துறையில் தமிழர்களின் பங்கு மகத்தானது! அப்துல் கலாம், மயில்சாமி அண்ணாதுரை, வளர்மதி போன்றோர் வரிசையில் மற்றுமொரு வைரம், தமிழ்நாட்டைச் சேர்ந்த அறிவியலாளர் சிவன். இஸ்ரோவின் ஒன்பதாவது தலைவர், இந்தப் பதவியை ஏற்றிருக்கும் முதல் தமிழர் என்னும் சிறப்புகளுக்கு உரியவர். 2015ஆம் ஆண்டில் விக்ரம் சாராபாய் விண்வெளி மையத்தின் இயக்குநராக இருந்து, இந்திய விண்வெளி ஆராய்ச்சி நிறுவனத்தின் (ISRO) தலைவராகப் பொறுப்பேற்றுள்ளார்.

*அவர் இஸ்ரோவின் தலைவரான பிறகு அளித்த நேர்காணல்*

**ஐயா வணக்கம்! தங்களுக்கு எங்கள் வாழ்த்துகள்! தங்களின் இளமைக்காலம் பற்றிக் கூறுங்கள்.**

'நான் பிறந்த ஊர், நாகர்கோவில் பக்கம் சரக்கல்விளை என்ற கிராமம். வல்லங்குமாரவிளையிலுள்ள அரசுப் பள்ளியில் தமிழ்வழியில் படித்தேன். என் அப்பா கைலாச வடிவுக்கு, மாங்காய் வியாபாரம். அவர், 'எவ்வளவு வேணும்னாலும் படி. ஆனால், உன் படிப்புக்கு உண்டான செலவை நீயே வேலை செஞ்சு சம்பாதிச்சுக்க' என்று சொன்னார். அதனால் வேலை செய்துகொண்டே படித்தேன். கல்லூரியில் கணினி அறிவியல் இளங்கலைப் படிப்பில் முதலாவதாக வந்தேன். என் ஆசிரியர், 'நீ நன்றாகப் படிக்கிறாய். எம்.ஐ.டி-யில் வானூர்திப் பொறியியல் என்னும் துறையை எடுத்துப் படி' என்று அறிவுரை கூறினார். அந்த வார்த்தையை அப்போதுதான் நான் கேள்விப்பட்டேன். இருந்தாலும் நம்பிக்கையோடு நுழைவுத்தேர்வு எழுதி, எம்.ஐ.டி-யில் சேர்ந்தேன். அதே துறையில் எம்.இ படித்து முடித்து, விக்ரம் சாராபாய் நிறுவனத்தில் பொறியாளர் ஆனேன்.

**சிறிய வயதில் உங்கள் கனவு என்னவாக இருந்தது?**

சின்ன வயதில் என்னுடைய அதிகபட்சக் கனவு, எங்கள் கிராமத்துக்கு மேலே பறக்கும் விமானத்தில் என்றாவது ஒருநாள் பறக்க வேண்டும் என்பதுதான். 'இந்த ஏரோப்பிளேன் எப்படிப் பறக்குது? நாமும் இதுபோல ஒன்று செய்து பறக்கவிடணும்'னு நினைப்பேன். சிறிய வயதிலிருந்தே நான் நினைத்தது எதுவும் நடக்கவில்லை. ஒவ்வொரு முறையும் நான் ஆசைப்படுவது நிராகரிக்கப்படும். இருந்தாலும் கிடைத்ததை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்வேன். ஆனால், 'எல்லாம் நன்மைக்கே' என்று சொல்வதுபோல, முடிவில் எனக்கு எல்லாம் நல்லதாகவே முடிந்திருக்கிறது. அப்படித்தான் நான் அறிவியல் வல்லுநர் ஆனதும்.

**தங்களுடைய ஆரம்பகாலப் பணி பற்றிக் கூறுங்களேன்...**

1983ஆம் ஆண்டு, முதன்முதலில் பி.எஸ்.எல்.வி (Polar Satellite Launch Vehicle) திட்டத்தைத் தொடங்க, அரசாங்கம் இசைவு தந்தது. அதற்கு ஓர் ஆண்டு முன்னால்தான் நான் வேலையில் சேர்ந்தேன். விண்வெளி ஆராய்ச்சியில் ஆனா ஆவன்னாகூடத் தெரியாது. மற்ற அறிவியலாளர்களுக்கும் அந்தத் திட்டப்பணி புதிதுதான். ஒரு குழந்தைபோல் எல்லாருமே தத்தித் தத்தித்தான் கற்றுக்கொண்டோம்.

ஒரு செயற்கைக்கோள் ஏவுதளத்தில் என்னமாதிரி மென்பொருள் பயன்படுத்த வேண்டும், வாகனத்தின் வடிவம் எப்படி இருக்க வேண்டும், எவ்வளவு உயரம், எவ்வளவு அகலம், எந்தப் பாதையில் போக

**விக்ரம் சாராபாய்**



இவர் 'இந்திய விண்வெளித் திட்டத்தின் தந்தை' என்று அழைக்கப்படுகிறார்; ஆரியபட்டா என்ற முதல் செயற்கைக்கோள் ஏவுதலுக்குக் காரணமானவர். செயற்கைக்கோள் உதவியுடன் தொலைக்காட்சி வழியாக 24,000 இந்திய கிராமங்களில் உள்ள ஐம்பது இலட்சம் மக்களுக்குக் கல்வியை எடுத்துச் செல்ல உதவினார். இவரின் பெயரால் 'விக்ரம் சாராபாய் விண்வெளி மையம்' திருவனந்தபுரத்தில் செயல்பட்டுவருகிறது. இங்கு, வானூர்தியியல் (Aeronautics), வான்பயண மின்னணுவியல் (Avionics), கூட்டமைப் பொருள்கள் (Composites), கணினி – தகவல் தொழில்நுட்பம் உள்ளிட்ட பல துறைகளில் ஆராய்ச்சிகளும் வடிவமைப்புகளும் மேற்கொள்ளப்படுகின்றன. இவருடைய முயற்சியால்தான் இஸ்ரோ தொடங்கப்பட்டது.

வேண்டும் ஆகியவற்றை முடிவுசெய்வது என் வேலை. வன்பொருள் பகுதியைத் தவிர்த்த மற்ற வேலைகள் எல்லாவற்றையும் நான் கவனிக்க வேண்டும். அப்போது நான் இரவு பகலாக முயற்சி செய்து, ஒரு செயலியை உருவாக்கினேன். அதற்குப் பெயர் 'சித்தாரா'. (SITARA – Software for Integrated Trajectory Analysis with Real time Application). இது, செயற்கைக்கோள் ஏவு ஊர்தி பற்றிய முழு விவரங்களையும் மின்னிலக்க முறையில் (Digital) சேகரிக்கும். அதைப் பயன்படுத்தி, வாகனத்தின் செயல்பாடு எப்படி இருக்கும் என்பதை முன்கூட்டியே கணிக்கலாம்.

எளிதாகச் சொல்வதானால், ஒரு கல்லைத் தூக்கி வீசும்போது, அந்தக் கல் எந்தத் திசையில், எவ்வளவு கோணத்தில், எவ்வளவு நேரத்தில், எந்த இடத்தில், எவ்வளவு அழுத்தத்தில் விழும் என்று சொல்வதுதான் 'சித்தாரா'வின் பணி. ஏதாவது தவறு நடந்திருந்தால், உடனே கண்டுபிடித்துச் சரி செய்துவிடலாம். இதைப் பயன்படுத்தித்தான் பி.எஸ்.எல்.வி. ஏவப்பட்டது.

இப்போதுவரை நம்முடைய நாட்டிலிருந்து ஏவப்படும் அனைத்துச் செயற்கைக்கோள் ஏவு ஊர்திகளும் 'சித்தாரா' செயலியைப் பயன்படுத்தித்தான் விண்ணில் ஏவப்படுகின்றன. இந்திய விண்வெளி ஆராய்ச்சித் துறைக்கு இதுவே என் முக்கியமான பங்களிப்பு.

## முன்னாள் குடியரசுத் தலைவர் அறிவியல் வல்லுநர் அப்துல் கலாம் பற்றி...

என் அனுபவத்தில் நான் பார்த்த சிறந்த மனிதர், அப்துல் கலாம். தன்னுடன் வேலை செய்பவர்களுக்குத் தன்னால் முடிந்த உதவிகளைச் செய்வார். கலாம், எனக்கு வயதில் மூத்தவர்; மிகவும் அமைதியானவர்; யாராவது சிறியதாகச் சாதித்தாலே, பெரிதாகப் பாராட்டுவார். நான் 'சித்தாரா' போன்ற தொழில்நுட்ப மென்பொருள் உருவாக்கியதால், என்னை எப்போதும் மென்பொறியாளர் என்றே அழைப்பார்.



**அப்துல்கலாம்**

இவர், இந்தியாவின் 11ஆவது குடியரசுத் தலைவராகப் பணியாற்றிய இந்திய அறிவியலாளர்; தமிழ்நாட்டின் இராமேசுவரத்தைச் சேர்ந்தவர்; ஏவுகணை, ஏவுகணை ஏவு ஊர்தித் தொழில்நுட்ப வளர்ச்சியில் கலாம் காட்டிய ஈடுபாட்டினால் இவர், 'இந்திய ஏவுகணை நாயகன்' என்று போற்றப்படுகின்றார்; பாதுகாப்பு ஆராய்ச்சி, மேம்பாட்டு நிறுவனத்திலும் இந்திய விண்வெளி ஆராய்ச்சி நிறுவனத்திலும் விண்வெளிப் பொறியாளராகப் பணியாற்றினார்; இந்தியாவின் உயரிய விருதான பாரதரத்னா விருது பெற்றவர். இவர் தம் பள்ளிக் கல்வியைத் தமிழ்வழியில் கற்றவர் என்பது குறிப்பிடத்தக்கது.

## நீங்கள் அனுப்புகிற செயற்கைக்கோள்கள் இந்தியக் குடிமக்களுக்கு எப்படிப் பயனளிக்கின்றன?

1957ஆம் ஆண்டு முதலே இரஷ்யா உட்பட, பல நாடுகள் செயற்கைக்கோள்களை ஏவியிருக்கின்றன. அவற்றையெல்லாம் இராணுவத்துக்கு மட்டுமே பயன் படுத்தினார்கள். வல்லரசு நாடுகள், அவற்றின் ஆற்றலைக் காண்பிக்கவே இந்தத் தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தின. ஆனால் ஐம்பது ஆண்டுகளுக்கு முன் நம் நாட்டு அறிவியலாளர் டாக்டர் விக்ரம் சாராபாய் இந்தத் தொழில்நுட்பத்தை மக்களுக்கு எப்படிப் பயன்படுத்தலாம் என்றே சிந்தித்தார்.

### பொதுமக்களுக்கு இந்தத் தொழில் நுட்பத்தால் என்ன பயன்?

ஒவ்வோர் ஆண்டும் விவசாயத்தின் மூலம் எவ்வளவு விளைச்சல் கிடைக்கும் என்பதைக் கணித்து அரசுக்குத் தெரிவிக்கிறோம். இதைப் பயன்படுத்தி அரசால் அதற்கு ஏற்ற திட்டங்களை வகுக்க முடிகிறது. நிலத்தில் எந்த இடத்தில் நீரின் அளவு எவ்வளவு இருக்கும் என்பதைச் செயற்கைக் கோள் மூலம் சொல்கிறோம். கடல் பகுதியில் எந்த எந்த இடங்களில் மீன்கள் அதிகமாகக் கிடைக்கும் என்றும் மீனவர்களுக்குச் சொல்ல முடிகிறது.

இப்போது நாம் திறன்பேசிகளைப் (Smart phones) பயன்படுத்துகிறோம்; தானியக்கப் பணஇயந்திரம், அட்டை பயன்படுத்தும் இயந்திரம் இதற்கெல்லாம் செயற்கைக்கோள் பயன்படுகிறது. மக்கள் பயன்படுத்தும் இணையச் செயல்கள் அனைத்திற்கும் செயற்கைக்கோள்கள் அவசியம் தேவை. நாட்டு மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்வதற்குச் செயற்கைக்கோள்கள் பயன்படுகின்றன.

### இஸ்ரோவின் தலைவராக நீங்கள் எதற்கு முன்னுரிமை தருவீர்கள்?

இந்திய விண்வெளி ஆராய்ச்சி நிறுவனத்தின் முக்கிய நோக்கமே, இந்தத் தொழில்நுட்பத்தைப் பயன்படுத்திக் குறைந்த செலவில் மக்களுக்குத் தரமான சேவைகளைக் கொடுப்பதுதான்.

### தற்போது உங்கள் முன் உள்ள அறைகூவல்கள் எவை?

இதுவரை இந்தியாவுக்காக 45 செயற்கைக்கோள்கள் செலுத்தப்பட்டுள்ளன. ஆனால் நம்முடைய தேவைகளுக்கு மேலும் 45 செயற்கைக்கோள்கள் தேவை! இப்போது இருக்கும் வசதி வாய்ப்புகளை வைத்து இவற்றை விண்வெளியில் நிறுவக் குறைந்தது நான்கு ஆண்டுகளாவது ஆகும். ஆனால், அதற்குள் நம்முடைய தேவைகள் இன்னும் இரண்டு மடங்காகிவிடும்!



**வளர்மதி**

அரியலூரில் பிறந்த இவர், 2015இல் தமிழ்நாடு அரசின் அப்துல்கலாம் விருதைப் பெற்ற முதல் அறிவியல் அறிஞர். இஸ்ரோவில் 1984ஆம் ஆண்டு முதல் பணியாற்றி வருகிறார். 2012இல் உள் நாட்டிலேயே உருவான முதல் ரேடார் இமேஜிங் செயற்கைக்கோள் (RISAT–1) திட்டத்தின் இயக்குநராகப் பணியாற்றினார். இவர், இஸ்ரோவின் செயற்கைக்கோள் திட்ட இயக்குநராகப் பணியாற்றிய இரண்டாவது பெண் அறிவியல் அறிஞர் ஆவார்.

### 30,000 அடி உயரத்தில் பறந்து கொண்டே, கீழே நம் அலுவலகத்தில் உள்ளவர்களோடு தொடர்பு கொள்ளமுடிகிறது. ஆனால் கடலில் சென்று மீன்பிடிக்கும் மீனவர்கள் ஆழ்கடலுக்கோ அல்லது 300 கடல்மைல் தூரம் சென்றாலோ நம்மால் தொடர்பு கொள்ள முடியவில்லையே, ஏன்?

'நேவிக்' (NAVIC) என்ற செயலியைக் கடல் பயணத்திற்காக உருவாக்கி இருக்கிறோம். அனைத்து மீனவர்களுக்கும் அந்தச் செயலி பொருத்தப்பட்ட கருவி, பலவிதங்களில் பயன்படும். அவர்கள், கடலில் எல்லை தாண்டினால் உடனடியாக எச்சரிக்கும். மீன்கள் அதிகம் உள்ள பகுதியைக் காட்டும் செயலியையும் உருவாக்கியிருக்கிறோம். இந்தக் கண்டுபிடிப்புகளை மக்களிடம் கொண்டு சேர்க்கும் முயற்சிகளை முன்னெடுப்போம்.

### நாம் செயற்கைக்கோள் உருவாக்குவதில் அடைந்த முன்னேற்றத்தினை, அதனைச் செலுத்தும் தொழில்நுட்பத்தில் அடையவில்லை என்ற கருத்தை எப்படிப் பார்க்கிறீர்கள்?

இது தவறான கருத்து. விண்வெளித் துறையில் மூன்று வகையான தொழில்நுட்பங்கள் இருக்கின்றன. செயற்கைக்கோளை ஏவுவதற்கான தொழில்நுட்பம், செயற்கைக்கோளை ஏற்றிச்செல்லும் ஏவு ஊர்தி, அந்த ஏவு ஊர்தியிலிருந்து விடுபட்ட செயற்கைக்கோள் தரும் செய்திகளைப் பெற்று அதைப் பொதுமக்கள் பயன்பாட்டுக்குக் கொண்டுவருதல். இந்த மூன்று கூறுகளுக்கும் தேவையான அனைத்து மூலப்பொருள்களையும் தொழில்நுட்பங்களையும் இந்தியாவிலேயே உருவாக்கியிருக்கின்றோம். விண்வெளித்துறையில் இந்தியா தன்னிறைவு பெற்றுவிட்டது என்பதே உண்மை.

**உலகிலேயே இந்தியா குறைந்த செலவில் செயற்கைக்கோள்களை விண்வெளியில் நிறுவுகிறது. இதை எப்படிச் சாத்தியப்படுத்துகிறீர்கள்?**

தொழில்நுட்பம் நாளுக்கு நாள் மாறிக்கொண்டே வருகிறது. குறைந்த செலவில் நிறைந்த பயனைப் பெறுவதே சிறப்பானது. செலவைக் குறைப்பதில் பல வழிகள் இருக்கின்றன. தற்போது மறுபயன்பாட்டிற்கு ஏற்ற ஏவு ஊர்திகளை உருவாக்கிக்கொண்டிருக்கிறோம். அந்த முயற்சியில் முதல் கட்டத்தையும் வெற்றிகரமாகக் கடந்துவிட்டோம். இன்னும் சில ஆண்டுகளில் மறுபயன்பாட்டு ஏவு ஊர்திகளை உருவாக்குவதில் வெற்றி பெற்றுவிடுவோம்.

**அதிக எடைகொண்ட செயற்கைக் கோள்களை அவற்றின் வட்டப்பாதைகளில் நிறுவ, பிற நாடுகளைத்தான் சார்ந்திருக்கிறோம், இல்லையா?**

உண்மைதான். கூடிய விரைவில் இந்த நிலையில் மேம்பாடு அடைந்துவிடுவோம். ஜி.எஸ்.எல்.வி. மார்க்-2 ஏவுகணை 2.25 டன்களிலிருந்து 3.25 டன்கள் சுமக்கும் திறன் கொண்டதாக மாற்றப்படும். ஜி.எஸ். எல்.வி. மார்க்-3 ஏவுகணையின் சுமக்கும் திறன் 3 டன்களிலிருந்து 6 டன்களாக அதிகரிக்கப்படும்.

**சந்திரயான் – 1 நம் விண்வெளித் துறைக்குப் பெரிய புகழைக் கொடுத்தது. சந்திரயான் –2 இன் பணிகள் என்ன?**

சந்திரயான் -1 நிலவின் புறவெளியை ஆராய்வதை நோக்கமாகக் கொண்டது. செயற்கைக்கோளை நிலவில் இறக்குவதன் விளைவை ஆராய்ந்து பார்த்துவிட்டோம். சந்திரயான்-2இன் பணியில், ஆய்வுப் பயண ஊர்தி இறங்குதலை (exploration vehicle lander) நிலவின் மேற்பரப்பில் துல்லியமான கட்டுப்பாடுகளின் மூலம் செயல்படுத்த உள்ளோம். அதிலிருந்து ரோவர் (rover) எனப்படும் ஆராயும் ஊர்தி, ரோபோட்டிக் (robotic) தொழில்நுட்ப உதவியினால் தானாகவே வெளிவந்து, நிலவில் இறங்கிப் பதினான்கு நாள்கள் பயணிக்கும். பல்வேறு பரிசோதனைகளை அங்கு மேற்கொள்ளும். அதற்கான ஏற்பாடுகள் முழுவதும்



**அருணன் சுப்பையா**

இந்திய விண்வெளி ஆய்வு மையத்தின் அறிவியலாளரும் திட்ட இயக்குநரும் ஆவார். திருநெல்வேலி மாவட்டத்தின் ஏர்வாடி அருகில் உள்ள கோதைசேரி என்னும் ஊரைச் சேர்ந்தவர். இயந்திரப் பொறியியலில் பட்டம் பெற்று, 1984இல் திருவனந்தபுரத்திலுள்ள விக்ரம்சாராபாய் விண்வெளி மையத்தில் பணியில் சேர்ந்து, தற்போது பெங்களூரில் உள்ள இந்திய விண்வெளி ஆய்வு மையத்தில் பணிபுரிகிறார். 2013இல் மங்கள்யான் செயற்கைக்கோளை உருவாக்கிய இந்தியாவின் செவ்வாய் சுற்றுகலன் திட்டத்தின் திட்ட இயக்குநராக இருக்கின்றார்.



**மயில்சாமி அண்ணாதுரை**

'**இளைய கலாம்**' என்று அன்புடன் அழைக்கப்படும் இவர் கோவை மாவட்டம் பொள்ளாச்சி வட்டம், கோதவாடி என்னும் சிற்றூரில் பிறந்தவர். மேல்நிலை வகுப்பு வரை அரசுப் பள்ளிகளில் தமிழ்வழியில் படித்தவர். இதுவரை 5 முனைவர் பட்டங்கள் பெற்றுள்ளார். 1982ஆம் ஆண்டு இந்திய விண்வெளி ஆய்வு மையத்தில் பணியில் சேர்ந்த இவர் தற்போது இயக்குநராகப் பணிபுரிகிறார். நம் நாடு நிலவுக்கு முதன் முதலில் அனுப்பிய **ஆய்வுக்கலம் சந்திரயான்–1 திட்டத்தின் திட்ட இயக்குநராகப் பணியாற்றியவர்**. சந்திரயான் – 2 திட்டத்திலும் பணியாற்றிவருகிறார். சர்.சி.வி. இராமன் நினைவு அறிவியல் விருது உள்ளிட்ட பல விருதுகளைப் பெற்றவர். தமது அறிவியல் அனுபவங்களை, **கையருகே நிலா** என்னும் நூலாக எழுதியுள்ளார்.

முடிந்துவிட்டன. சந்திரயான் – 2 நிலவில் இறங்கும் இடத்தைக் கூடத் தீர்மானித்து விட்டோம்.

**விண்வெளித்துறையில் உங்களின் எதிர்காலச் செயல்திட்டம் என்ன ?**

மூன்று ஆண்டுகள், ஏழு ஆண்டுகள், 15 ஆண்டுகள் என இஸ்ரோவில் மூன்று வகையான திட்டங்கள் எப்போதும் இருக்கும். அதைச் செயல்படுத்துவதில் தீவிரமாகச் செயல்பட்டு வருகிறோம்.

**வணிக நோக்கில் இஸ்ரோவின் செயல்பாடு என்ன ?**

நம் நாட்டிற்குத் தேவையான செயற்கைக்கோளை விண்ணில் அனுப்பி நம் தேவைகளை நிறைவு செய்வதே இஸ்ரோவின் செயல்பாடு. அதேநேரத்தில் அருகில் உள்ள நாடுகளின் செயற்கைக்கோள்களையும் அனுப்புவதன் மூலம் கிடைக்கும் வருவாய் இஸ்ரோவின் வளர்ச்சித்திட்டங்களுக்கு உதவும்.

**மாங்காய் வியாபாரக் குடும்பத்தில் பிறந்த நீங்கள் கடினமான பாதையைக் கடந்து வந்திருக்கிறீர்கள். தற்போது இஸ்ரோவின் தலைவராகியிருக்கிறீர்கள். உங்கள் வெற்றியின் பின்னுள்ள காரணிகள் யாவை?**

படிப்பாக இருப்பினும் பணியாக இருப்பினும் நான் முழு ஈடுபாட்டுடன் செயல்படுவேன். நிதி நெருக்கடிகளுக்கிடையில் என்னை உயர்கல்வி படிக்க வைத்த என் பெற்றோர், பள்ளி ஆசிரியர்கள், தொழில்நுட்பக் கல்லூரி ஆசிரியர்கள், இஸ்ரோவின் மூத்த அறிஞர்கள், சகபயணிகள், அனைவருக்கும் நான் என்றென்றும் நன்றியுடையவன்.

*விண்வெளித்துறையில் நீங்கள் மேன்மேலும் மகத்தான சாதனைகள் படைக்க வாழ்த்துகள்.*

நன்றி!

## கற்பவை கற்றபின்...

1) பி.எஸ்.எல்.வி. (PSLV) பற்றியும் ஜி.எஸ்.எல்.வி. (GSLV) பற்றியும் செய்திகளைத் திரட்டி விளக்கப் படத்தொகுப்பு உருவாக்குக.

2) வகுப்புத் தோழர் ஒருவரை அறிவியல் அறிஞராக அமரச்செய்து வகுப்பறையில் கற்பனையாக நேர்காணல் ஒன்றை நிகழ்த்துக.

கற்கண்டு

தொழில்நுட்பம்

ச

# வல்லினம் மிகா இடங்கள்

தோப்புக்கள் – தோப்புகள்

கத்தி கொண்டு வந்தான் – கத்திக்கொண்டு வந்தான்

மேற்கண்ட சொற்களில் வல்லினம் மிகும்போது ஒரு பொருளும் மிகாதபோது வேறொரு பொருளும் வருவதை அறியலாம். நாம் பேசும்போதும் எழுதும்போதும் பொருள் மயக்கம் தராத வகையில் மொழியைப் பயன்படுத்துவதற்கு வல்லினம் மிகா இடங்களை அறிவது இன்றியமையாததாகும்.

### வல்லினம் மிகா இடங்கள்:

தற்கால உரைநடையில் வல்லினம் மிகா இடங்களாகக் கீழ்க்காண்பவற்றைக் கூறலாம்.

| | |
|---|---|
| அது செய்<br>இது காண் | அது, இது என்னும் சுட்டுப் பெயர்களின் பின் வல்லினம் மிகாது. |
| எது கண்டாய்?<br>எவை தவறுகள்? | இவ்வினாப் பெயர்களின் பின் வல்லினம் மிகாது. |
| குதிரை தாண்டியது.<br>கிளி பேசும். | எழுவாய்த் தொடரில் வல்லினம் மிகாது. |
| அண்ணனோடு போ.<br>எனது சட்டை. | மூன்றாம், ஆறாம் வேற்றுமை விரிகளில் வல்லினம் மிகாது. |
| தந்தையே பாருங்கள்.<br>மகளே தா. | விளித் தொடர்களில் வல்லினம் மிகாது. |
| வந்த சிரிப்பு<br>பார்த்த பையன் | பெயரெச்சத்தில் வல்லினம் மிகாது. |
| நாடு கண்டான்.<br>கூடு கட்டு | இரண்டாம் வேற்றுமைத் தொகையில் வல்லினம் மிகாது. |
| வரும்படி சொன்னார்.<br>பெறும்படி கூறினார். | படி என்று முடியும் வினையெச்சத்தில் வல்லினம் மிகாது. |
| வாழ்க தமிழ்<br>வருக தலைவா! | வியங்கோள் வினைமுற்றுத் தொடரில் வல்லினம் மிகாது. |
| குடிதண்ணீர், வளர்பிறை,<br>திருவளர்செல்வன் | வினைத்தொகையில் வல்லினம் மிகாது. |

| | |
|---|---|
| ஒரு புத்தகம், மூன்று கோடி | எட்டு, பத்து தவிர பிற எண்ணுப் பெயர்களுடன் புணரும் வல்லினம் மிகாது. |
| தாய்தந்தை, இரவுபகல் | உம்மைத் தொகையில் வல்லினம் மிகாது. |
| அன்று சொன்னார்.<br>என்று தருவார்.<br>அவராவது தருவதாவது<br>யாரடா சொல்.<br>ஏனடி செல்கிறாய்?<br>கம்பரைப் போன்ற கவிஞர் யார்? | அன்று, இன்று, என்று, ஆவது, அடா, அடி, போன்ற என்னும் சொற்களின் பின் வல்லினம் மிகாது. |
| அவ்வளவு பெரியது.<br>அத்தனை சிறியது.<br>அவ்வாறு பேசினான்.<br>அத்தகைய பாடங்கள்.<br>அப்போதைய பேச்சு.<br>அப்படிப்பட்ட காட்சி.<br>நேற்றைய சண்டை. | அவ்வளவு, இவ்வளவு, எவ்வளவு, அத்தனை, இத்தனை, எத்தனை,<br>அவ்வாறு, இவ்வாறு, எவ்வாறு,<br>அத்தகைய, இத்தகைய, எத்தகைய,<br>அப்போதைய, இப்போதைய, எப்போதைய,<br>அப்படிப்பட்ட, இப்படிப்பட்ட, எப்படிப்பட்ட<br>நேற்றைய, இன்றைய, நாளைய ஆகிய<br>சொற்களின் பின் வல்லினம் மிகாது. |
| என்னோடு சேர்.<br>மரத்திலிருந்து பறி.<br>குரங்கினது குட்டி. | மூன்று, ஐந்து, ஆறாம் வேற்றுமைத் தொடர்களில் வல்லினம் மிகாது. |
| தமிழ் படி. (ஐ)<br>கை தட்டு. (ஆல்)<br>வீடு சென்றாள். (கு)<br>கரை பாய்ந்தான். (இருந்து) | இரண்டாம், மூன்றாம், நான்காம், ஐந்தாம், வேற்றுமைத் தொகைகளில் வல்லினம் மிகாது. |
| தலைவி கூற்று.<br>தொண்டர் படை | நிலைமொழி உயர்திணையாய் அமையும் தொடரில் வல்லினம் மிகாது. |
| உறு பொருள்<br>நனி தின்றான்.<br>கடி காவல் | சால, தவ, தட, குழ என்னும் உரிச்சொற்களைத் தவிர ஏனைய உரிச்சொற்களின் பின் வல்லினம் மிகாது. |
| பார் பார்<br>சலசல | அடுக்குத் தொடர், இரட்டைக் கிளவி ஆகியவற்றில் வல்லினம் மிகாது. |
| கருத்துகள்<br>பொருள்கள்<br>வாழ்த்துகள் | கள் என்னும் அஃறிணைப் பன்மை விகுதி சேரும்போது வல்லினம் மிகாது.<br>(மிகும் என்பர் சிலர்) |
| பைகள், கைகள் | ஐகார வரிசை உயிர்மெய் ஓரெழுத்துச் சொற்களாய் வர, அவற்றோடு கள் விகுதி சேரும்போது வல்லினம் மிகாது. |

# கற்பவை கற்றபின்...

**1. வல்லினம் வருமா?**

அ) தோழி _ _ கூற்று

ஆ) பெரிய _ _தம்பி

இ) சிறிய _ _ பறவை

ஈ) பழகு _ _தமிழ்

உ) இது _ _கேள்

ஊ) எலி _ _ கடிக்கும்

எ) ஓடிய _ _ குதிரை

ஏ) தரும்படி _ _ சொன்னார்

ஐ) வாழ்க _ _ தலைவர்

ஒ) கார் _ _ காலம்

**2. வல்லினம் இடலாமா?**

அ) வாழ்த்து _ _கள்

ஆ) எழுத்து_ _ கள்

இ) திருநிறை _ _ செல்வன்

ஈ) திருவளர் _ _ செல்வி

**3. எது சரி? எது தவறு? காரணம் கூறுக.**

அ) அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

ஆ) அத்தனைச் சிறிய

இ) ஆத்திச்சூடி

ஈ) எடுத்துக்காட்டுகள்

உ) கீழ்பக்கம்

ஊ) சான்றோர் பேரவை

எ) சென்னைப் பல்கலைக்கழகம்

ஏ) தயிர்ச்சோறு

**4. கீழ்க்காணும் தொடர்களில் வல்லினம் மிகும், மிகா இடங்களைக் கண்டறிந்து அதற்கான இலக்கணம் அறிக.**

அ) வங்கி கடன்

ஆ) பழங்களை பறிக்காதீர்கள்

இ) திட்ட குழு

ஈ) அரசு ஆணை பிறப்பித்தது

உ) மருந்து கடை

ஊ) வேலையில்லா பட்டதாரி

எ) சிறப்பு பரிசு

**அறிவை விரிவு செய்.**

1. அக்னிச் சிறகுகள் – அப்துல் கலாம்
2. மின்மினி– ஆயிஷா நடராஜன்
3. ஏன், எதற்கு, எப்படி? – சுஜாதா

# மதிப்பீடு

**பலவுள் தெரிக.**

1. கீழ்க்காணும் மூன்று தொடர்களுள் –

அ) இருந்த இடத்திலிருந்தே பயணச்சீட்டு எடுப்பதை எளிதாக்கிய மிகப் பெரிய இந்திய நிறுவனம் இந்தியத் தொடர்வண்டி உணவு வழங்கல் மற்றும் சுற்றுலாக் கழகம் ஆகும்.

ஆ) வங்கி அட்டை இல்லை என்றால் அலைபேசி எண், வங்கிக் கணக்கு எண் ஆகியவற்றைக் கொண்டு பணம் செலுத்துதல் இயலாது.

இ) திறன் அட்டைகள் என்பவை குடும்ப அட்டைகளுக்கு மாற்றாக வழங்கப்பட்டனவாகும்.

i) அ, ஆ ஆகியன சரி; இ தவறு     ii) அ, இ ஆகியன சரி; ஆ தவறு

iii) அ தவறு; ஆ, இ ஆகியன சரி     iv) மூன்றும் சரி

2. தமிழ்நாடு அரசு கிராமப்புற மாணவர்களுக்கு நடத்தும் திறனாய்வுத் தேர்வு எது?

அ) தேசியத் திறனறித் தேர்வு     ஆ) ஊரகத் திறனறித் தேர்வு

இ) தேசியத் திறனறி, கல்வி உதவித் தொகைத் தேர்வு     ஈ) மூன்றும் சரி

3. ஒன்றறிவதுவே உற்றறிவதுவே
இரண்டறிவதுவே அதனொடு நாவே

இவ்வடிகளில் அதனொடு என்பது எதைக் குறிக்கிறது?

அ) நுகர்தல்     ஆ) தொடு உணர்வு     இ) கேட்டல்     ஈ) காணல்

4. பின்வரும் தொடர்களைப் படித்து 'நான்' யார் என்று கண்டுபிடிக்க.

அறிவியல் வாகனத்தில் நிறுத்தப்படுவேன்

எல்லாக் கோளிலும் ஏற்றப்படுவேன்

இளையவர் கூட்டம் என்னை ஏந்தி நடப்பர்

அ) இணையம்     ஆ) தமிழ்     இ) கணினி     ஈ) ஏவுகணை

5. விடை வரிசையைத் தேர்க.

அ) இது செயற்கைக்கோள் ஏவு ஊர்தியின் செயல்பாட்டை முன்கூட்டியே கணிக்கும்.

ஆ) இது கடல்பயணத்துக்காக உருவாக்கப்பட்ட செயலி.

க) நேவிக், சித்தாரா     உ) நேவிக், வானூர்தி     ங) வானூர்தி, சித்தாரா     ச) சித்தாரா, நேவிக்

### குறுவினா

1. கூட்டுப் புழுவை எடுத்துக்காட்டிக் கவிஞர் உணர்த்தும் கருத்துகளை எழுதுக.
2. இணையவழியில் இயங்கும் மின்னணு இயந்திரங்கள் எவையேனும் ஐந்தினைக் குறிப்பிடுக.
3. மூன்றறிவதுவே அவற்றொடு மூக்கே
   நான்கறிவதுவே அவற்றொடு கண்ணே
   ஐந்தறிவதுவே அவற்றொடு செவியே
   இவ்வடிகளில் தொல்காப்பியர் குறிப்பிடும், மூவறிவு, நான்கறிவு, ஐந்தறிவு உயிர்கள் யாவை?
4. செயற்கைக்கோள் ஏவு ஊர்தியில் பொருத்தும் செயலியைப் பற்றி திரு. சிவன் கூறுவது யாது?

### சிறுவினா

1. 'என் சமகாலத் தோழர்களே' கவிதையில் கவிஞர் விடுக்கும் வேண்டுகோள் யாது?
2. அறிவையும் உயிரினங்களையும் தொல்காப்பியர் எவ்வாறு தொடர்புபடுத்துகிறார்?
3. பள்ளி மாணவர்களுக்கான தமிழக அரசின் இணையவழிச் சேவைகளை எழுதுக.
4. மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்வதில் செயற்கைக்கோளின் பங்கு யாது?
5. வல்லினம் இட்டும் நீக்கியும் எழுதுவதன் இன்றியமையாமையை எடுத்துக்காட்டுகளுடன் விளக்குக.

### நெடுவினா

1. அன்றாட வாழ்வில் நீங்கள் பயன்படுத்தும் இரண்டு இணையவழிச் சேவைகள் பற்றி விரிவாகத் தொகுத்து எழுதுக.
2. இந்திய விண்வெளித் துறை பற்றிய செய்திகளை விவரிக்க.

## மொழியை ஆள்வோம்!

### படித்துச் சுவைக்க.

*மயில்பொறியை வானத்தில் பறக்க வைத்தோம்*
*மணிபல்லவத் தீவிற்குப் பறந்து சென்றோம்*
*குயில்மொழியாம் கண்ணகியை அழைத்துச் செல்லக்*
*குன்றுக்கு வானவூர்தி வந்த தென்றே*
*உயில்போன்று நம்முன்னோர் எழுதி வைத்த*
*உண்மைகளை அறிவியலின் அற்பு தத்தைப்*
*பயில்கின்ற காப்பியத்தில் படித்த தெல்லாம்*
*பார்தன்னில் நனவாகக் காணு கின்றோம்!*

**மொழிபெயர்க்க.**



*Bottle xylophone: Make music with bottles*

*You will need: 6 glass bottles, Wooden spoon, Water, Food coloring.*

1. *Fill one bottle with water, then fill each other bottle with slightly less than the bottle next to it.*
2. *Add some food coloring to help you to see the different levels of water.*
3. *Tap the bottles with the end of a wooden spoon. Can you play a tune?*

## Water music

*Hitting the bottles with the spoon makes them vibrate and produce a sound. The more the bottle vibrates, the higher the note will be. The more water in a bottle, the less it vibrates, so less water means higher notes.*

**பின்வரும் பத்தியில் இடம்பெற்றுள்ள பிறமொழிச் சொற்களுக்கு நிகரான தமிழ்ச் சொற்களை எழுதுக.**

நாக்குதான் ஐம்புலன்களிலேயே ரொம்ப வீக்கு! அதற்கு நான்கு ஆதார ருசிகள்தாம் தெரியும். எலுமிச்சையின் புளிப்பு, சர்க்கரையின் தித்திப்பு, காபியின் கசப்பு, உப்பு. இவை தவிர ஸேவரி என்று சொல்கிற டேஸ்ட் எல்லாம் இந்த நான்கு ஆதார ருசிகளின் கலப்புதான். இந்த ருசிகளைத் தொட்டு அறிய நாக்கில் வெவ்வேறு இடங்கள் உண்டு. தித்திப்பு – நுனி நாக்கு, உப்பு – பரவலாக, குறிப்பாக நுனியில். கசப்பு – உள்நாக்கு. புளிப்பு, ஸேவரி – நாக்கின் வலது – இடது புறங்கள்! ஒரு சராசரி மனிதனுடைய நாக்கில் 9,000 சுவை அரும்புகள் உண்டு. அலட்டல் வேண்டாம். குழந்தையின் நாக்குடன் ஒப்பிடும்போது இது ஒன்றுமே இல்லை. ஏதாவது மருந்தை நாக்கில் தொட்டால் குழந்தைகள் என்னமாக எக்ஸ்பிரஷன் காட்டுகின்றன! சுவைக்கு வாசனையும் சேரவேண்டும். இரண்டும் ஒத்துழைத்தால்தான் பாதாம் அல்வா, ஐஸ்க்ரீம் போன்றவற்றை ரசிக்க முடியும். மூக்கைப் பிடித்துக் கொண்டு ஐஸ்க்ரீம் சாப்பிட்டுப் பாருங்கள். ஜில்லென்று இருக்கும். அவ்வளவே. கூடவே சூடும், உணவின் தோற்றமும் முக்கியம். மூக்குக்கு மொத்தம் ஏழு வாசனைகள். கற்பூர வாசனை, பெப்பர்மிண்ட் வாசனை, மலர்களின் வாசனை, மஸ்க் என்னும் அரபுசேக் செண்ட் வாசனை, ஈத்தர் அல்லது பெட்ரோல் வாசனை, அழுகிய முட்டை வாசனை, காட்டமான அமில வாசனை. இந்த ஏழு வாசனைகளின் கலப்புகளால் நம்மால் ஆயிரக்கணக்கான வாசனைகளை உணர முடிகிறது. (ஏன்? எதற்கு? எப்படி? – சுஜாதா)

**கதையைப் படித்து உரையாடலாக மாற்றுக.**

ஒரு சிப்பி, இன்னொரு சிப்பியிடம் சொன்னது – 'ஐயோ, என்னால் வலி தாங்கமுடியவில்லையே'. 'ஏன்? என்னாச்சு? ' என்று விசாரித்தது இரண்டாவது சிப்பி.

'எனக்குள் ஏதோ ஒரு கனமான உருண்டை, பந்து உருள்வதுபோல் இருக்கிறது. ரொம்ப வலி. '

இதைக் கேட்டதும் இரண்டாவது சிப்பிக்கு மிகுந்த மகிழ்ச்சி. பெருமையுடன் நெஞ்சு நிமிர்த்தி, 'ஆகா! நான் எந்த வலியும் இல்லாமல், நலமாக இருக்கிறேன்' என்றது உற்சாகமாக.

இவர்கள் பேசுவதைக் கேட்டுக்கொண்டிருந்த ஒரு நண்டு, இரண்டாவது சிப்பியிடம் சொன்னது– 'உனக்கு எந்த வலியும் இல்லை என்பது உண்மையாக இருக்கலாம். வலியைத் தாங்க விரும்பாத நீ, எப்பொழுதும் இப்படியே வெறுமையாகக் கிடக்க வேண்டியதுதான். ஆனால், இப்போது சிரமப்படுத்தும் அந்த வலி, இன்னும் சில நாள்களில், ஓர் அழகான முத்தாக உருவெடுக்கும். அது பெருமை தேடித்தரும். '

**செய்து கற்க.**

1) செய்தித்தாள்களில் இடம்பெற்றுள்ள ஒரு வாரத்திற்குரிய அறிவியல் செய்திகளைப் படித்துக் குறிப்பெடுக்க.

2) அங்காடியில் வாங்கிய உணவுப் பொருளின் உருவாக்க நாள், கெடுநாள், உறையில் அச்சடிக்கப்பட்ட உணவுப்பொருளின் ஆற்றல், குறியீட்டுப் பட்டை (Barcode) ஆகியவற்றின் விவரங்களைக் கொண்டு உணவுப் பொருளின் உண்மைத்தன்மையை எவ்வாறு அறிவது?

**நயம் பாராட்டுக.**

*பொங்கியும் பொலிந்தும் நீண்ட புதுப்பிடர் மயிர்சி லிர்க்கும்*
*சிங்கமே! வான வீதி திகுதிகு எனஎ ரிக்கும்*
*மங்காத தணற்பி ழம்பே! மாணிக்கக் குன்றே! தீர்ந்த*
*தங்கத்தின் தட்டே! வானத் தகளியிற் பெருவி ளக்கே!*

*கடலிலே கோடி கோடிக் கதிர்க்கைகள் ஊன்று கின்றாய்*
*நெடுவானில் கோடி கோடி நிறைசுடர்க் கைகள் நீட்டி*
*இடைப்படு மலையோ காடோ இல்லமோ பொய்கை ஆறோ*
*அடங்கநின் ஒளிஅ ளாவ அமைந்தனை! பரிதி வாழி!*

– பாரதிதாசன்



## மொழியோடு விளையாடு

**குழுவில் விளையாடுக.**

- நான்கு மாணவர்கள் கொண்ட குழுக்களாக எண்ணிக்கைக்கு ஏற்பப் பிரிந்து கொள்க.
- முதல் மாணவர் ஒரு சொல்லைத் தொடங்குக.
- அதனோடு தொடர்புடைய ஒரு சொல்லை இரண்டாம் மாணவர் கூறுக.
- இப்படியே நான்கு மாணவர்களும் கூறிய சொற்களைக் கொண்டு ஒரு தொடர் அமைக்க.

எ.கா. மாணவர் 1 : கணினி மாணவர் 2 : அறிவியல்

மாணவர் 3 : தமிழ் மாணவர் 4 : மொழி

சொல்லப்பட்ட சொற்கள்: கணினி, அறிவியல், தமிழ், மொழி

தொடர்: அறிவியல், கணினித் தொழில்நுட்ப வளர்ச்சி ஆகியவற்றுக்கு ஈடுகொடுத்துத் தமிழ் மொழி வளர்ந்து வருகிறது.

### அகராதியில் காண்க.

இமிழ்தல், இசைவு, துவனம், சபலை, துகலம்

### ஒரு சொல்லால் தொடரின் இரு இடங்களை நிரப்புக. (விலங்கு, எழுதி, அகல், கால், அலை)

அ) எண்ணெய் ஊற்றி ..... விளக்கு ஏற்றியவுடன், இடத்தைவிட்டு .....

ஆ) எனக்கு ..... பங்கு பிரித்துக் கொடுக்க வா! கீழே ஈரம்; பார்த்து உன் ..... ஐ வை.

இ) கைப்பொருளைக் கடல் ..... யில் தொலைத்துவிட்டு, கரையில் தேடி ......ந்தால் கிடைக்குமா?

ஈ) வீட்டு ...... ஆன நாயுடன் விளையாடுவது மகிழ்ச்சி தரும்; வெளியில் அதனைக் கழுத்து ...... உடன் மட்டுமே பிடித்துச் செல்ல வேண்டும்.

உ) எழுத்தாணி கொண்டு ......ய தமிழை, ஏவுகணையில் ....... எல்லாக் கோளிலும் ஏற்றுங்கள்.

### ஒரு தொடரில் இருவினைகளை அமைத்து எழுதுக.

குவிந்து – குவித்து; சேர்ந்து - சேர்த்து; பணிந்து – பணித்து; பொருந்து – பொருத்து; மாறு – மாற்று.

(எ.கா.) விரிந்தது – விரித்தது

அ. மழைக்காற்று வீசியதால், பூவின் இதழ்கள் விரிந்தன; மயில் தோகையை விரித்தது.

ஆ. ------------------------------------------------------------------------

இ. ------------------------------------------------------------------------

ஈ. ------------------------------------------------------------------------

### காட்சியைக் கண்டு கவினுறக் கருத்தளிக்க.



.................................................................

.................................................................

.................................................................

.................................................................

## செயல்திட்டம்

*மின்சாரச்சேமிப்புப் பற்றிய விழிப்புணர்வு முழக்கத்தொடர்களை எழுதி வகுப்பறையிலும் பள்ளியிலும் காட்சிப்படுத்துக.*

## நிற்க அதற்குத்தக...

*என் பெற்றோர் மகிழுமாறு நான் செய்ய வேண்டியது*

*என் வீட்டின் நிலையறிந்து, தேவையறிந்து பொருள்கள் வாங்குவது.*

*அலைபேசிப் பயன்பாட்டினைப் பத்து நிமிடங்களுக்கு மேல் நீட்டிக்காமல் இருப்பது.*

*தொலைக்காட்சி பார்ப்பதைக் குறிப்பிட்ட நேரமாகக் குறைத்துக் கொள்வது.*

-----------------------------------------------------------------

-----------------------------------------------------------------

-----------------------------------------------------------------

## கலைச்சொல் அறிவோம்

*ஏவு ஊர்தி – Launch Vehicle*

*ஏவுகணை – Missile*

*கடல்மைல் – Nautical Mile*

*காணொலிக் கூட்டம் – Video Conference*

*பதிவிறக்கம் – Download*

*பயணியர் பெயர்ப் பதிவு – Passenger Name Record (PNR)*

*மின்னணுக் கருவிகள் – Electronic devices*

## இணையத்தில் காண்க

**செயல்பாட்டிற்கான மென்பொருள் / செயலியைத் தரவிறக்கம் செய்யும் உரலி**

*IRCTC – இணையத்தில் தொடர் வண்டிப் பயணத்திற்கான முன்பதிவு செய்து PNR நிலையை அறிதல்*

*http://play.google.com/store/apps/details?id=cris.org.in.prs.ima*

# இணையச் செயல்பாடுகள்

## விண்வெளி ஆய்வு

விண்ணில் கொஞ்சம்
மிதப்போமா!




படிகள்

- கொடுக்கப்பட்டிருக்கும் உரலி / விரைவுக்குறியீட்டைப் பயன்படுத்தி "solarsystemscope" இணையச்செயலியின் பக்கம் செல்க.
- திரையில் தோன்றும் 'start online model' என்பதைச் சொடுக்கி, செயல்பாட்டின் உட்பக்கம் செல்க.
- திரையில் தோன்றும் சூரிய மண்டலத்தைச் சொடுக்கி, சூரிய மண்டலத்தின் அனைத்துச் செயல்பாட்டையும் அறிக.










செயல்பாட்டிற்கான உரலி

https://www.solarsystemscope.com

இயல் ஐந்து

கல்வி

# கசடற மொழிதல்



## கற்றல் நோக்கங்கள்

- கல்வி, பெண்கள் முன்னேற்றத்தில் பெரும்பங்கு ஆற்றியுள்ளமையை உணர்ந்து பெண்கல்விக்குத் தம் பங்களிப்பை நல்குதல்
- பலவாறான இலக்கிய வடிவங்களின்வழி கருத்துகளைப் படித்து அறிதல்
- குறிப்பிட்ட தலைப்பின்கீழ் கருத்துகளைத் திரட்டிக் கோவையாக எழுதும் திறன் பெறுதல்
- நூலகத்தின் பயனறிந்து பயன்படுத்த முனைதல்
- இடைச்சொல், உரிச்சொல் ஆகியவற்றை எழுதுதலில் முறையாகப் பயன்படுத்துதல்



## தெரியுமா?

**ஹிப்பாலஸ் பருவக்காற்று**

கி.பி. (பொ. ஆ.) முதல் நூற்றாண்டில் ஹிப்பாலஸ் என்னும் பெயர்கொண்ட கிரேக்க மாலுமி, பருவக் காற்றின் உதவியினால் நடுக்கடல் வழியாக முசிறித் துறைமுகத்திற்கு நேரே விரைவில் பயணம் செய்யும் புதிய வழியைக் கண்டுபிடித்தார். அதுமுதல், யவனக் கப்பல்கள் விரைவாகவும் அதிகமாகவும் சேரநாட்டு முசிறித் துறைமுகத்துக்கு வந்துசென்றன. அந்தப் பருவக் காற்றுக்கு யவனர், அதைக் கண்டுபிடித்தவர் பெயராகிய ஹிப்பாலஸ் என்பதையே சூட்டினார்கள். ஹிப்பாலஸ் பருவக்காற்றின் வழியில் யவனக் கடல் வணிகம் பெருகிற்று.

எனக் கரிகால் பெருவளத்தானைப் புகழ்ந்து பாடிய பாடலில், சங்ககாலப் பெண் புலவர் வெண்ணிக்குயத்தியார் 'வளி' எனக் குறிப்பிட்டுச் சிறப்புச் செய்திருப்பது என்னையே!

கிரேக்க அறிஞர் "ஹிப்பாலஸ்" (Hippalus) என்பவர் பருவக்காற்றின் பயனை உலகிற்கு உணர்த்தினார் என்பது வரலாறு. அதற்கும் முன்னரே என் ஆற்றலைப் பயன்படுத்திக் கடல் கடந்து வணிகம் செய்து அதில் வெற்றி கண்டவர்கள் தமிழர்கள்!

### மழை தருவேன் நான்

நான் பருவ காலங்களில் மேகத்தைக் கொண்டுவந்து மழையைத் தருகிறேன்; தென்மேற்குப் பருவக்காற்றாக, வடகிழக்குப் பருவக்காற்றாக உலா வந்து மேகத்தைக் குளிர்வித்து மழையாகத் தருகின்றேன். கதிரவனின் வெப்பத்தால் சூடாகி, அடர்த்தி குறைந்து மேலே செல்லும் நான், அங்கு ஏற்பட்ட வெற்றிடத்தை நிரப்பியும் பருவக்காற்றாக மாறுகின்றேன்; ஜூன்முதல் செப்டம்பர்வரை தென்மேற்குப் பருவக்காற்றாகவும் அக்டோபர்முதல் டிசம்பர்வரை வடகிழக்குப் பருவக்காற்றாகவும் வீசுகின்றேன்; இவ்வாறாக மழைப்பொழிவைத் தருகின்றேன். இந்தியாவின் முதுகெலும்பு வேளாண்மைதானே! இவ்வேளாண்மை சிறப்பதிலும் நாடு தன்னிறைவு பெறுவதிலும் நான் பங்கெடுக்கின்றேன். இந்தியாவிற்குத் தேவையான எழுபது விழுக்காடு மழையளவினைத் தென்மேற்குப் பருவக்காற்றாகக் கொடுக்கின்றேன்.

### தடம் பதிப்பேன் நான்

வடகிழக்குப் பருவ காலங்களில், தாழ்வுமண்டலமாய்த் தவழ்ந்து புயலாய் மாறிப் புறப்படுவேன். ஆற்றலுடன் வீறுகொண்டு பயணிக்கத் தொடங்கினால் என்னைத் தடுக்க யாராலும் இயலாது; மழையாகப் புயலாகத் தடம் பதிப்பேன் நான்.

என் ஆற்றலை, வளி மிகின் வலி இல்லை (புறம். 51) என்று ஐயூர் முடவனார் சிறப்பித்துள்ளார். இதுபோன்றே மதுரை இளநாகனார் (புறம். 55) கடுங்காற்று, மணலைக் கொண்டு வந்து சேர்க்கிறது என்று என் வேகத்தைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

### ஆற்றலாக நான்

நான் உயிர்வளி தந்து உயிர்களைக் காக்கின்றேன்; தாவரங்களின் ஒளிச்சேர்க்கையில் உணவு உற்பத்திக்கு உதவுகின்றேன்; விதைகளை எடுத்துச் சென்று பல இடங்களிலும் தூவுகின்றேன். பூவின், தேனின், கனியின், தாவரத்தின், உயிரினத்தின் மணத்தை என்னில் சுமந்து, புவியின் உயிர்ச் சங்கிலித்தொடர் அறுபடாதிருக்க உதவுகின்றேன். இவை மட்டுமல்ல, உங்கள் நவீன தொலைத்தொடர்பின் மையமாகவும் நானே உள்ளேன்.

'காற்றுள்ள போதே மின்சாரம் எடுத்துக்கொள்' எனும் புதுமொழிக்கு வித்தாகிறேன். புதுப்பிக்கக் கூடிய ஆற்றல் வளமான என்னைப் பயன்படுத்தி மின்னாற்றலை உருவாக்கும்போது நிலக்கரியின் தேவை குறைந்து கனிமவளங்கள் பாதுகாக்கப்படக் காரணமாகிறேன். உலகக் காற்றாலை மின் உற்பத்தியில் இந்தியா ஐந்தாம் இடம்பெற்றுள்ளது என்பதும் இந்தியாவில் தமிழகம் முதலிடம் வகிக்கிறது என்பதும் எனக்குப் பெருமையே. ஆனால், என்னை

**தெரிந்து தெளிவோம்**

ஒருகாலத்தில் குழாயிலிருந்து அப்படியே தண்ணீர் குடித்த நாம், நீர் மாசுபாடு அடைந்ததன் காரணமாக அதனைத் தூய்மைப்படுத்தியும் விலைக்கு வாங்கியும் குடிக்கும் நிலையில் இருக்கிறோம். இப்போது காற்றும் மாசுபாடு அடைந்துவருகிறது. தண்ணீரைப் புட்டியில் அடைத்து விற்பது போன்று, உயிர்வளியையும் (ஆக்சிஜன்) விற்கும் நிலையங்கள் தொடங்கப்பட்டிருக்கின்றன. ஒரு புட்டியின் விலை 1000 ரூபாய்க்கும் அதிகமாகும்.

உலகிலேயே அதிகளவு மாசுபடுத்தும் நாடுகளில் இரண்டாம் இடம் இந்தியாவுக்கு என்பதை அறியும்போது எனக்குப் பெருந்துயரே.

### மனிதனால் மாசடையும் நான்

நீங்கள் உணவின்றி ஐந்து வாரம் உயிர்வாழ முடியும்; நீரின்றி ஐந்து நாள் உயிர் வாழ முடியும்; ஆனால் நானின்றி ஐந்து நிமிடம் கூட உங்களால் உயிர் வாழ முடியாது. இந்த உண்மையை நீங்கள் உணர்ந்தும் என்னை நேசிப்பதில்லை. ஒவ்வொரு விநாடியும் நான் உங்களால் மாசுபடுகிறேன். குப்பைகள், நெகிழிப் பைகள், மெதுஉருளைகள் (tyres) போன்றவற்றை எரிப்பது, குளிர்சாதனப் பெட்டி, குளிரூட்டப்பட்ட அறை ஆகியவற்றை மிகுதியாகப் பயன்படுத்துவது, மிகுதியாகப் பட்டாசுகளை வெடிப்பது, புகை வடிகட்டி இல்லாமல் தொழிற்சாலைகளை இயக்குவது, பொதுப்போக்குவரத்தைப் பயன்படுத்தாத தனிமனிதரின் மிகுதியான ஊர்திப்பயன்பாடு, வானூர்திகள் வெளிவிடும் புகை என உங்களின் அத்தனை செயல்பாடுகளாலும் என்னைப் பாழாக்குகிறீர்கள். இதனால் கண் எரிச்சல், தலைவலி, தொண்டைக்கட்டு, காய்ச்சல், நுரையீரல் புற்றுநோய், இளைப்பு நோய் எனப் பல நோய்களால் துன்பமடைகிறீர்கள். இந்தியாவில் மிகுந்த உயிரிழப்பைத் தரும் காரணங்களில் ஐந்தாம் இடம் பெறுவது காற்று மாசுபாடே என்பது தெரியுமா உங்களுக்கு?

நான் மாசுபடுவதால் குழந்தைகளின் மூளை வளர்ச்சி குறைவதாக ஐக்கிய நாடுகளின் சிறுவர் நிதியம் (UNICEF) தெரிவித்துள்ளது.

என்னுடைய மேலடுக்கில் உள்ள ஓசோன் படலத்தின்மூலம் கதிரவனிடமிருந்து வெளிவரும் புறஊதாக் கதிர்களைத் தடுக்கும் அரணாக விளங்குகின்றேன். புவியை ஒரு போர்வை போலச் சுற்றிக்கிடந்து பரிதியின் கதிர்ச்சூட்டைக் குறைத்துக் கொடுக்கின்றேன். உங்கள் வசதிக்காக என்னை வைத்து குளோரோ புளோரோ கார்பன் என்னும் நச்சுக்காற்றை வெளிவிடும் இயந்திரங்களான குளிர்பதனப் பெட்டி முதலானவற்றை உருவாக்கியிருக்கிறீர்கள்! அந்த நச்சு, ஓசோன் படலத்தை ஓட்டையிடுகின்றது; இதனால் புறஊதாக் கதிர்கள் நேரடியாக உங்களைத் தாக்குகின்றன. இதனால் ஓரறிவு முதல் ஆறறிவுவரை உள்ள அனைத்து உயிர்களும் துன்பம் அடைகின்றன. உங்கள் கண்களும் தோலும் பாதிப்படைகின்றன. இதைக் குறைக்கும் விதமாக ஹைட்ரோ கார்பன் (HC) என்னும் குளிர்பதனியை இப்போது பயன்படுத்தத் தொடங்கியிருக்கின்றீர்கள்.

உங்கள் நடவடிக்கைகளால் எனக்குள் கலந்துவிடும் கந்தக டை ஆக்சைடு, நைட்ரஜன் டை ஆக்சைடு ஆகியவை மழை பெய்யும்போது நீரில் கரைந்துவிடுவதால் அமிலமழை பெய்கிறது. இதனால் மண், நீர், கட்டடங்கள், காடுகள், நீர்வாழ் உயிரினங்கள் ஆகியவை துன்பத்துக்குள்ளாகின்றன. இதனால் நான் மிக வருந்துகிறேன். உங்கள் விழிப்புணர்வாலும் காற்றைத் தூய்மையாக்கும் உங்கள் நடவடிக்கைகளாலும் மட்டுமே நான் வருந்தாமல் இருக்க இயலும்.

## மரம் தரும் வரம் நான்

ஒரு மணித்துளிக்கு 12 முதல் 18 முறை மூச்சுக்காற்றாய் நீங்கள் வெளிவிடும் கார்பன் டை ஆக்சைடை எடுத்துக்கொண்டு உங்கள் நுரையீரலுக்குத் தேவையான உயிர்வளியைத் (ஆக்சிஜன்) தரும் என் தோழர்களான மரங்களை வளருங்கள். மேம்பட்ட குப்பை மேலாண்மையை மேற்கொள்ளுங்கள்; பொதுப்போக்குவரத்துக்கு முன்னுரிமை தாருங்கள்; மின்னாற்றலால் இயங்கும் ஊர்திகளை மிகுதியாகப் பயன்படுத்துங்கள்; கச்சா எண்ணெய், நிலக்கரி முதலிய புதைவடிவ எரிபொருள்களைத் தவிருங்கள்; வீட்டுச் சமையலுக்கு விறகுகளைப் பயன்படுத்துவதைக் கைவிடுங்கள்.

நீங்கள் ஒவ்வொரு ஆண்டும் ஜூன் 15ஐ உலகக் காற்று நாளாகக் கொண்டாடி வருகிறீர்கள். என்னை, ஒருநாள் மட்டும் கொண்டாடினால் போதாது. நீங்கள் ஒவ்வொரு நாளும் கொண்டாட வேண்டும். ஆம், என்னைத் தூய்மையாக வைத்திருக்க வேண்டும். இதுவே என் ஆசையாகும். இதுவே உங்களின் எதிர்கால நலனும் ஆகும்.



### தெரியுமா?

குளோரோ புளோரோ கார்பனின் ஒரு மூலக்கூறு, ஒரு இலட்சம் ஓசோன் மூலக்கூறுகளைச் சிதைத்துவிடும்.

### பின் வருத்தங்கள்

*மென்துகிலாய் உடல்வருடி*
*வாஞ்சையுடன் மனம்வருடி*

*பகலெரிச்சல் பணக்கவலை*
*பயக் குழப்பம்*

*மொட்டை மாடித்தனியிரவில்*
*நட்சத்திரக் கணக்கெடுப்பில்*
*மறுபடியும் தவறவிட்ட*
*தாளாத தன்னிரக்கம்*

*இவை எல்லாமே*
*எளிதாகக் கரைந்து போகும்*
*மாயங்கள் செய்கின்ற*
*பூங்காற்றே!*

*இத்தனை நாள்*
*உனைப் பாடாதிருந்து விட்டேன்*
*புதுக் கவிதையில் சிக்கிப் போனேன்.*

தேவகோட்டை வா.மூர்த்தி



### எத்திசையும் புகழ் மணக்க.....

**தாய்லாந்து மன்னரின் முடிசூட்டு விழா**

*தாய்லாந்து மன்னரின் முடிசூட்டு விழாவில் திருவெம்பாவை, திருப்பாவை பாடல்களைத் தாய் மொழியில் எழுதிவைத்துப் பாடுகின்றனர்.*

– தனிநாயக அடிகள்(ஒன்றே உலகம்)



## கற்பவை கற்றபின்...

1. காற்று பேசியதைப் போல, நிலம் பேசுவதாக எண்ணிக்கொண்டு பேசுக.
2. 17ஆம் நூற்றாண்டில் வெள்ளைப் பளிங்குக் கற்களால் கட்டப்பட்டு இன்றும் உலக விந்தையாகத் திகழும் தாஜ்மகால், இன்றளவில் மஞ்சள், பழுப்பு என நிறம் மாறிக் காட்சியளிப்பதன் காரணங்களையும் தீர்வுகளையும் கலந்துரையாடுக.

இயற்கை

உ

கவிதைப் பேழை

# காற்றே வா!

– பாரதியார்

7MX9I3

நுழையும்முன்

நம்மை எப்போதும் சூழ்ந்திருக்கும் இயற்கையை நாம் என்றேனும் உற்றுப் பார்க்கிறோமா? இருளில் நடந்தாலும் வானத்து விண்மீன்களையும் நம்முடனேயே நடந்துவரும் நிலவையும் கண்டு மகிழ்கிறோமா? காடு, மலை, அருவி, கதிரவன் இவற்றோடு இயைந்ததே இயற்கை வாழ்வு. 'நீரின்றி அமையாது உலகு' என்றாற் போல 'காற்றின்றி அமையாது உலக உயிரியக்கம்' என்பதையே வெவ்வேறு கோணங்களில் காலந்தோறும் கவிஞர்கள் பலரும் பாடிவருகிறார்கள்.



*காற்றே, வா.*
*மகரந்தத் தூளைச் சுமந்துகொண்டு, மனத்தை*
*மயலுறுத்து கின்ற இனிய வாசனையுடன் வா;*
*இலைகளின்மீதும், நீரலைகளின்மீதும் உராய்ந்து, மிகுந்த*
*ப்ராண – ரஸத்தை எங்களுக்குக் கொண்டு கொடு.*

*காற்றே, வா.*
*எமது உயிர் – நெருப்பை நீடித்துநின்று நல்லொளி தருமாறு*
*நன்றாக வீசு.*

*சக்தி குறைந்துபோய், அதனை அவித்துவிடாதே.*
*பேய்போல வீசி அதனை மடித்துவிடாதே.*
*மெதுவாக, நல்ல லயத்துடன், நெடுங்காலம்*
*நின்று வீசிக் கொண்டிரு.*
*உனக்குப் பாட்டுகள் பாடுகிறோம்.*

*உனக்குப் புகழ்ச்சிகள் கூறுகிறோம்.*
*உன்னை வழிபடுகின்றோம்.*

*பாரதியார் கவிதைகள்*

## சொல்லும் பொருளும்:

மயலுறுத்து – மயங்கச்செய்
ப்ராண – ரஸம் – உயிர்வளி
லயத்துடன் – சீராக

## நூல் வெளி

மகாகவி சுப்பிரமணிய பாரதியார், 'நீடுதுயில் நீக்கப் பாடிவந்த நிலா', 'சிந்துக்குத் தந்தை' என்றெல்லாம் பாராட்டப் பெற்றவர்; எட்டயபுர ஏந்தலாக அறியப்பட்டவர்; கவிஞர்; கட்டுரையாளர்; கேலிச்சித்திரம்–கருத்துப்படம் போன்றவற்றை உருவாக்கியவர்; சிறுகதை ஆசிரியர்; இதழாளர்; சமுதாய ஏற்றத்தாழ்வுகளையும், பெண்ணடிமைத்தனத்தையும் தன் பாடல்களில் எதிர்த்து எழுதியவர்; குயில்பாட்டு, பாஞ்சாலி சபதம் முதலிய காவியங்களையும் கண்ணன் பாட்டையும் பாப்பா பாட்டு, புதிய ஆத்திசூடி என, குழந்தைகளுக்கான நீதிகளையும் பாடல்களில் தந்தவர்; இந்தியா, சுதேசமித்திரன் முதலிய இதழ்களின் ஆசிரியராகப் பணியாற்றியவர். பாட்டுக்கொரு புலவன் எனப் பாராட்டப்பட்டவர் பாரதியார்; இவருடைய கவிதைத் தொகுப்பிலுள்ள காற்று என்னும் தலைப்பிலான வசனகவிதையின் ஒரு பகுதியே பாடப்பகுதியாக இடம்பெற்றுள்ளது.

## தெரிந்து தெளிவோம்

உரைநடையும் கவிதையும் இணைந்து யாப்புக் கட்டுகளுக்கு அப்பாற்பட்டு உருவாக்கப்படும் கவிதை வடிவம் வசனகவிதை எனப்படுகிறது. ஆங்கிலத்தில் Prose Poetry (Free verse) என்றழைக்கப்படும் இவ்வடிவம் தமிழில் பாரதியாரால் அறிமுகப்படுத்தப்பட்டது. உணர்ச்சி பொங்கக் கவிதை படைக்கும் இடங்களில் யாப்பு, தடையாக இருப்பதை உணர்ந்த பாரதியார் இவ்வடிவத்தை இலகுவாகக் கையாண்டுள்ளார். இவ்வசன கவிதையே புதுக்கவிதை என்ற வடிவம் உருவாகக் காரணமாயிற்று..

## கற்பவை கற்றபின்...

1. *இவ்வசன கவிதையில் இடம்பெற்றுள்ள வேண்டுகோள் சொற்களும் கட்டளைச் சொற்களும் (வாசனையுடன் வா, அவித்து விடாதே.....) கவிதையின் உட்பொருளை வெளிப்படுத்தத் துணைநிற்பது குறித்துப் பேசுக.*

2. *"திக்குகள் எட்டும் சிதறி – தக்கத்*
   *தீம்தரிகிட தீம்தரிகிட தீம்தரிகிட தீம்தரிகிட*
   *பக்க மலைகள் உடைந்து வெள்ளம்*
   *பாயுது பாயுது பாயுது – தாம்தரிகிட*
   *தக்கத் ததிங்கிட தித்தோம் – அண்டம்*
   *சாயுது சாயுது சாயுது – பேய்கொண்டு*
   *தக்கை யடிக்குது காற்று – தக்கத்*
   *தாம்தரிகிட தாம்தரிகிட தாம்தரிகிட தாம்தரிகிட" –பாரதியார்*

   *இது போன்ற இயற்கையொலிகளை உணர்வுடன் வெளிப்படுத்தும் கவிதைகளைத் திரட்டி வந்து வகுப்பறையில் படித்துக்காட்டுக.*

கவிதைப் பேழை

# இயற்கை

உ

# முல்லைப்பாட்டு

– நப்பூதனார்

8HYYKQ

**நுழையும்முன்**

இயற்கைச் சூழல் நமக்குள் இனிய உணர்வுகளைத் தூண்டுகிறது. தமிழர்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வைக் கொண்டிருந்தனர். மழைக்காலத்தில் அவர்கள் வாழ்வை எதிர்கொள்கிற இயல்பு இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. மழையின் சீற்றம் இயல்பு வாழ்வில் ஏற்படுத்தும் மாற்றங்களைச் சங்க இலக்கியம் படம்பிடித்துக் காட்டுகிறது.



## நல்லோர் விரிச்சி கேட்டல்

*நனந்தலை உலகம் வளைஇ நேமியொடு*
*வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை*
*நீர் செல, நிமிர்ந்த மாஅல் போல,*
*பாடுஇமிழ் பனிக்கடல் பருகி, வலன் ஏர்பு,*
*கோடு கொண்டு எழுந்த கொடுஞ் செலவு எழிலி*
*பெரும்பெயல் பொழிந்த சிறுபுன் மாலை,*
*அருங்கடி மூதூர் மருங்கில் போகி,*
*யாழ்இசை இன வண்டு ஆர்ப்ப, நெல்லொடு,*
*நாழி கொண்ட, நறுவீ முல்லை*
*அரும்பு அவிழ் அலரி தூஉய், கைதொழுது,*
*பெருமுது பெண்டிர், விரிச்சி நிற்ப*
**சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்*
*உறுதுயர் அலமரல் நோக்கி, ஆய்மகள்*
*நடுங்கு சுவல் அசைத்த கையள், "கைய*
*கொடுங்கோற் கோவலர் பின்நின்று உய்த்தர*
*இன்னே வருகுவர், தாயர்" என்போள்*
*நன்னர் நன்மொழி கேட்டனம் **

*அடி : 1–17*

### சொல்லும் பொருளும்

| | | |
|---|---|---|
| நனந்தலை உலகம் | – | அகன்ற உலகம் |
| நேமி | – | சக்கரம் |
| கோடு | – | மலை |
| கொடுஞ்செலவு | – | விரைவாகச் செல்லுதல் |
| நறுவீ | – | நறுமணமுடைய மலர்கள் |
| தூஉய் | – | தூவி |
| விரிச்சி | – | நற்சொல் |
| சுவல் | – | தோள் |

### பாடலின் பொருள்

அகன்ற உலகத்தை வளைத்துப் பெருமழை பொழிகிறது. வலம்புரிச்சங்கு பொறித்த கைகளையுடைய திருமால், குறுகிய வடிவம் கொண்டு மாவலி மன்னன் நீர் வார்த்துத் தரும்பொழுது, மண்ணுக்கும் விண்ணுக்குமாகப் பேருருவம் எடுத்து உயர்ந்து நிற்பது போன்றுள்ளது மழைமேகம். அம்மேகம், ஒலிக்கும் கடலின் குளிர்நீரைப் பருகிப் பெருந்தோற்றம் கொண்டு, வலமாய் எழுந்து, மலையைச் சூழ்ந்து, விரைந்த வேகத்துடன் பெருமழையைப் பொழிகிறது.

துன்பத்தைச் செய்கின்ற அம்மாலைப்பொழுதில், முதிய பெண்கள் மிகுந்த காவலையுடைய ஊர்ப்பக்கம் சென்றனர். யாழிசை போன்று ஒலிக்கும் வண்டுகள் சூழ்ந்து ஆரவாரிக்கும் நறுமணம் கொண்ட அரும்புகள்; அந்த மலர்ந்த முல்லைப் பூக்களோடு நாழியில் கொண்டு வந்த நெல்லையும் சேர்த்துத் தெய்வத்தின்முன் தூவினர். பிறகு தெய்வத்தைத் தொழுது, தலைவிக்காக நற்சொல் கேட்டு நின்றனர்.

அங்கு, சிறு தாம்புக் கயிற்றால் கட்டப்பட்ட இளங்கன்று பசியால் வாடிக்கொண்டிருந்தது. அதன் வருத்தத்தை ஓர் இடைமகள் கண்டாள். குளிர்தாங்காமல் கைகளைக் கட்டியபடி நின்ற அவள், "புல்லை மேய்ந்து உன் தாய்மார் வளைந்த கத்தியை உடைய கம்பைக் கொண்ட எம் இடையர் ஓட்டிவர இப்போது வந்துவிடுவர், வருந்தாதே" என்றாள். இது நல்ல சொல் எனக்கொண்டு முதுபெண்கள் தலைவியிடம் நற்சொல்லை நாங்கள் கேட்டோம் என்று கூறினர். இவ்வாறு தலைவன் வருகை குறித்து முதுபெண்டிர் விரிச்சி கேட்டு நின்றனர்.

நின் தலைவன் பகைவரை வென்று திறைப்பொருளோடு வருவது உறுதி. தலைவியே! மனத்தடுமாற்றம் கொள்ளாதே! என ஆற்றுப்படுத்தினர் முதுபெண்டிர்.

### இலக்கணக்குறிப்பு

| | | |
|---|---|---|
| மூதூர் | – | பண்புத்தொகை |
| உறுதுயர் | – | வினைத்தொகை |
| கைதொழுது | – | மூன்றாம் வேற்றுமைத் தொகை |
| தடக்கை | – | உரிச்சொல் தொடர் |

### பகுபத உறுப்பிலக்கணம்

பொறித்த – பொறி + த் + த் +அ

பொறி – பகுதி

த் – சந்தி

த் – இறந்தகால இடைநிலை

அ – பெயரெச்ச விகுதி

### தெரிந்து தெளிவோம்

**விரிச்சி**

ஏதேனும் ஒரு செயல் நன்றாக முடியுமோ? முடியாதோ? என ஐயம் கொண்ட பெண்கள், மக்கள் நடமாட்டம் குறைவாக இருக்கும் ஊர்ப்பக்கத்தில் போய், தெய்வத்தைத் தொழுது நின்று அயலார் பேசும் சொல்லைக் கூர்ந்து கேட்பர்; அவர்கள் நல்ல சொல்லைக் கூறின் தம் செயல் நன்மையில் முடியும் என்றும் தீய மொழியைக் கூறின் தீதாய் முடியும் என்றும் கொள்வர்.

### பாடப்பகுதிப் பாடலில் இடம்பெற்றுள்ள முதல் கரு உரிப்பொருள்கள்

- முதற்பொருள்
  - முல்லை — (காடும் காடு சார்ந்த இடமும்)
  - பொழுது
    - பெரும்பொழுது — கார்காலம் ஆவணி, புரட்டாசி
    - சிறுபொழுது — மாலை
- கருப்பொருள்
  - நீர் — குறுஞ்சுனை நீர், காட்டாறு
  - மரம் — கொன்றை, காயா, குருந்தம்
  - பூ — முல்லை, பிடவம், தோன்றிப்பூ
- உரிப்பொருள் → இருத்தலும் இருத்தல் நிமித்தமும் (காத்திருத்தல்)

### நூல் வெளி

முல்லைப்பாட்டு, பத்துப்பாட்டு நூல்களுள் ஒன்று. இது 103 அடிகளைக் கொண்டது. இப்பாடலின் 1– 17அடிகள் பாடப்பகுதியாக இடம்பெற்றுள்ளன. முல்லைப்பாட்டு ஆசிரியப்பாவால் இயற்றப்பட்டது; முல்லை நிலத்தைப் பற்றிப் பாடப்பட்டது; பத்துப்பாட்டில் குறைந்த அடிகளை உடைய நூல் இது. இதைப் படைத்தவர் காவிரிப்பூம்பட்டினத்துப் பொன்வணிகனார் மகனார் நப்பூதனார்.

## கற்பவை கற்றபின்...

1. *முல்லைப்பாட்டின் காட்சிகளிலிருந்து சங்ககால மக்களின் வாழ்க்கைச் சூழலை உணர முடிகிறதா? உங்களின் கருத்துகளைப் பதிவு செய்க.*

2. *குறிப்புகளைக் கொண்டு ஆர்வமூட்டும் வகையில் கதை/நிகழ்வை எழுதுக.*

   *அமைதி – வனம் – மனத்தைத் தொட்டது – கொஞ்சம் அச்சம் – ஆனால் பிடித்திருந்தது – இரவில் வீட்டின் அமைதியை விட – வனத்தின் அமைதி – புதுமை – கால்கள் தரையில் – இலைகளின் சலசலப்பு – பறவைகள் மரங்களின் மேல் – சிறகடிப்பு – அருகில் திரும்பியவுடன் – திடீரென ஆரவார ஓசை – தண்ணீரின் ஓட்டம் – அழகான ஆறு – உருண்ட சிறுகூழாங்கற்கள் –இயற்கையின் கண்காட்சி*

விரிவானம்

# இயற்கை
## ௨

# புயலிலே ஒரு தோணி

– ப.சிங்காரம்

8X8XKE

**நுழையும்முன்**

இயற்கையின் அசைவுகள் அனைத்தும் அழகிய நாட்டியமாய் அமையும்போது இனிமையும் மகிழ்வும் ஒருங்கே பெறுகிறோம். அதே இயற்கையின் அசைவு சீற்றமாய், ஊழித் தாண்டவமாக மாறுகையில் எதிர்நிற்க இயலாது தோற்றுத்தான் போகிறோம். சுற்றியுள்ள இயற்கை நம்மைச் சுருட்டிச் செல்ல எத்தனிக்கும்போது, புயலின் பெருங்காட்சி உயிரை உறையவைக்கிறது. அதில் கிடைக்கும் பட்டறிவு அனைவருக்கும் பயன்படும் இலக்கியமாகிறது. இந்த நெடுங்கதையின் சில பக்கங்களும் அப்படித்தான்... புயலின் சீற்றத்தைக் கண்முன் விவரிக்கின்றன , புயல் மழை தெறிக்கும் அக்காட்சி...

[பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தெற்காசிய நாடுகளில் பல்வேறு நாடுகளைச் சேர்ந்தவர்கள் குடியேறினர். அவ்வாறு குடியேறிய இனங்களில் தமிழினமும் ஒன்று. தமிழ்க்குடிகள் மலேசியா, சிங்கப்பூர், இந்தோனேசிய நாடுகளில் நெடுங்காலமாக வாழ்ந்துவருகின்றனர். நூலாசிரியர் அவ்வாறு புலம்பெயர்ந்த தமிழர்களில் ஒருவர். அவர் இந்தோனேசியாவில் மெபின் நகரில் இருந்தபோது இரண்டாம் உலகப்போர் நிகழ்ந்தது. ஆசிரியரின் நேரடி அனுபவங்களோடு கற்பனையும் கலந்த கதைதான் **புயலிலே ஒரு தோணி** என்னும் புதினம். கடற்பயணத்தில் கண்ட காட்சிகளும், அதன் தொடர்ச்சியாக நடைபெறும் நிகழ்வுகளும்தான் இக்கதைப்பகுதி]

கொளுத்திக்கொண்டிருந்த வெயில் இமைநேரத்தில் மறைந்துவிட்டது; புழுங்கிற்று. பாண்டியன் எழுந்து போய் அண்ணாந்து பார்த்தான். மேகப் பொதிகள் பரந்து திரண்டொன்றிக் கும்மிருட்டாய் இறுகி நின்றன. அலைகள் எண்ணெய் பூசியவை போல் மொழுமொழுவென நெளிந்தன. காற்றையே காணோம். ஒரே இறுக்கம். எதிர்க்கோடியில் வானையும் கடலையும் மாறிமாறிப் பார்த்தவாறு *கப்பித்தானுடன் பரபரப்பாகப் பேசிக்கொண்டிருந்த மாலுமிகள் திடுமெனப் பாய்மரத்தை நோக்கி ஓடிச்சென்று கட்டுக் கயிறுகளை இறுக்குகிறார்கள். விவரிக்க இயலாத ஓர் உறுத்தல் ஒவ்வோர் உணர்விலும்பட்டது. எல்லோரும் எழுந்து ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து மிரண்டு விழித்தனர்.



கலக்கும் காற்று கலங்கும் கப்பல்

கிடுகிடுக்கும் இடி முழக்கத்துடன் மின்னல் கீற்றுகள் வானைப் பிளந்தன. அதே சமயம் மதிப்பிட முடியாத விரைவும் பளுவும் கொண்ட

மோதல் *தொங்கானையும் அதிலிருந்து நடப்பன கிடப்பனவற்றையும் உலுக்கிற்று. வானம் உடைந்து கொட்டுகொட்டென்று வெள்ளம் கொட்டியது. சூறாவளி மாரியும் காற்றும் கூடிக்கலந்து ஆடிக் குதித்துக் கெக்கலித்தன. அலையோட்டம் தெரியவில்லை – வானுடன் கடல் கலந்துவிட்டது. மழை தெரியவில்லை – வளியுடன் இணைந்துவிட்டது. தொங்கான் அப்படியும் இப்படியுமாய்த் தாவிக்குதித்து விழுந்து திணறித் தத்தளிக்கிறது. எலும்புகள் முறிவதுபோல் நொறுநொறு நொறுங்கல் ஒலி. தலைக்கு மேல் கடல்... இருளிருட்டு, இருட்டிருட்டு, கடல் மழை புயல் வானம்... எங்கிருந்தோ தொங்கிய வடக்கயிற்றை வலக்கையால் பற்றிக் கிடந்தான். அருவியருவி, உப்பருவி, கடலருவி. மற்றவர்கள் எங்கேயெங்கே? மின்னொளி, கப்பித்தான் பொந்து, தாவும் பேயுருவங்கள். சுறாமீன், ரம்பப்பல், காற்றோலக் கடல், சீற்ற மழை. உடலயர்வுப் புலன் மயக்கம்.

திடுமென அமைதி பாய்ந்து வந்து மிரட்டியது. வானும் கடலும் பிரிந்து தனித்துத் தென்பட்டன.

பலகை அடைப்புக்குள்ளிருந்து கப்பித்தான் கத்துகிறான்:

"ஓடி வாருங்கள்! இங்கே ஓடி வாருங்கள்! லெக்காஸ், லெக்காஸ்!"

பாண்டியன் எழுந்தான். எங்கெங்கோ இடுக்குகளில் முடங்கிக் கிடந்த உருவங்கள் தலை தூக்கின. தொங்கான் தள்ளாடுகிறது – அலைகள் – மலைத்தொடர் போன்ற அலைகள் மோதித் தாக்குகின்றன. தட்டுத் தடுமாறி நடந்தோடினர்.

வானும் கடலும் வளியும் மழையும் மீண்டும் ஒன்று கூடிக் கொந்தளிக்கின்றன. வானம் பிளந்து தீ கக்கியது. மழை வெள்ளம் கொட்டுகிறது. வளி முட்டிப் புரட்டுகிறது. கடல், வெறிக் கூத்தாடுகிறது. தொங்கான் நடுநடுங்கித் தாவித் தாவிக் குதிகுதித்து விழுவிழுந்து நொறுநொறு நொறுங்குகிறது.

* கப்பித்தான் – தலைமை மாலுமி (கேப்டன்)

* தொங்கான் – கப்பல்



### தெரியுமா?

**புயலுக்குப் பெயர் சூட்டல் ஏன்?**

• புயலுக்கு முன்பு பேரழிவு பற்றிய விழிப்புணர்வு, தயாரிப்பு, பேரிடர் மேலாண்மை, பாதிப்புக் குறைப்பு நடவடிக்கைகள் போன்றவற்றை மேற்கொள்வதற்குப் புயலின் பெயர்கள் உதவும்.

- வட இந்தியப் பெருங்கடலில் உருவாகும் புயல்களுக்குப் பெயர் வைக்கும் நடைமுறை 2000ஆம் ஆண்டில் தொடங்கியது.
- புதுதில்லியில் உள்ள உலக வானிலை அமைப்பின் மண்டலச் சிறப்பு வானிலை ஆய்வு மையம் 2004 செப்டம்பரில் இருந்து புயல்களுக்குப் பெயர் வைக்க 64 பெயர்களைப் பட்டியலிட்டுள்ளது.
- வங்கதேசம், இந்தியா, மாலத்தீவுகள், மியான்மர், ஓமன், பாகிஸ்தான், இலங்கை, தாய்லாந்து ஆகிய நாடுகள் இந்தப் பெயர்களை வழங்கியுள்ளன.
- இதில் இந்தியா கொடுத்து ஏற்கெனவே பயன்படுத்தப்பட்ட பெயர்கள் அக்னி, ஆகாஷ், பிஜ்லி, ஜல் (நான்கு பூதங்கள்), கடைசியாக லெஹர் (அலை). இன்னும் வரவிருப்பவை மேக், சாஹர், வாயு. 'கஜா' புயலின் பெயர் இலங்கை தந்தது. அடுத்து வந்த 'பெய்ட்டி' புயல் பெயர் தாய்லாந்து தந்தது.

முகத்தில் வெள்ளம். உடலில் வெள்ளம். கால் கையில் வெள்ளம். உடை, உடலை இறுக்கியிறுக்கி ரம்பமாய் அறுக்கிறது. மரத்தூண், கல்தூண், இரும்புத்தூண், உயிர்த்தூண். தொங்கான் தாவி விழுந்து சுழல்கிறது. மூழ்கி நீந்துகிறது. தாவி நீந்துகிறது. இருட்டிருட்டு, கும்மிருட்டு, குருட்டிருட்டு. சிலுசிலு மரமரப்பு. நொய்ங் புய்ங் நொய்ங் புய்ங் நொய்ங் புய்ங். இடி முழக்கச் சீனப் பிசாசுகள் தாவி வீசுகின்றன. மூடைகள் சிப்பங்கள் நீந்தியோடி மறைகின்றன. தொங்கான் குதித்து விழுந்து நொறுநொறு

நொறுங்குகிறது. சுழன்று கிறுகிறுத்துக் கூத்தாடுகிறது. கடலலை அடிக்கிறது...

என்னயிது! சூரிய வெளிச்சம்! சூரியன் சூரியன் சூரியன் ... தொங்கானில் நீர் நெளிகிறது. பாய்மரம் ஒடிந்து கிடக்கிறது. பொத்துக் கொப்புளிக்கும் பவ்வ நீரை மாலுமிகள் இறைத்து ஊற்றுகின்றனர். ஓட்டையை அடைக்கிறார்கள். ஆப்பு அடிக்கிறார்கள். மரம் வெட்டுகிறார்கள், செதுக்குகிறார்கள்...

தொங்கானின் இருபுறமும், பின்னேயும் தேயிலைப் பெட்டிகளும் புகையிலைச் சிப்பங்களும் மிதந்து வருகின்றன.

பாண்டியன் நாற்புறமும் கடலைப் பார்த்து மலைத்து நின்றான்.

கடற்கூத்து எவ்வளவு நேரம் நீடித்ததென்று கணக்கிட முடியவில்லை.

### தெரிந்து தெளிவோம்

**இடம்புரிப் புயலும் வலம்புரிப் புயலும்**

மேட்டிலிருந்து தாழ்வுக்குப் பாயும் தண்ணீர்போல, காற்றழுத்தம் அதிகமான இடத்திலிருந்து, குறைவான இடத்துக்குக் காற்று வீசும். இப்படி வீசும் காற்றின் போக்கை, புவி தனது அச்சில் மேற்கிலிருந்து கிழக்காகச் சுழல்கையில் மாற்றும். நிலநடுக்கோட்டின் வடக்குப் பகுதியில் வீசும் காற்றை வலப்புறமாகத் திருப்பும். தெற்குப் பகுதியில் வீசும் காற்றை இடப்புறமாகத் திருப்பும். காற்றின் வேகம் கூடினால் இந்த விலக்கமும் கூடும். வங்கக் கடலில் வீசும் புயலும், அமெரிக்காவை, ஜப்பானை, சீனாவைத் தாக்கும் புயல்களும் இடம்புரிப் புயல்கள்! ஆஸ்திரேலியாவின் கிழக்குக் கரை, ஹவாய் தீவுகளைத் தாக்கும் புயல்கள் வலம்புரிப் புயல்கள்! பிரெஞ்சு நாட்டைச் சேர்ந்த கணித வல்லுநர் காஸ்பார்ட் குஸ்டாவ் கொரியாலிஸ் இந்த விளைவை 1835இல் கண்டுபிடித்தார். புயலின் இந்த இருவகைச் சுழற்சிக்குக் கொரியாலிஸ் விளைவு என்று பெயர்.

தொடங்கியபோதோ, முடிந்தபோதோ, முடிந்து வெகுநேரம் வரையிலோ யாரும் கடிகாரத்தைப் பார்க்கவில்லை. பார்த்தபோது எல்லாக் கடிகாரங்களும் நின்றுபோயிருந்தன.

தொங்கான் தன்வசமின்றித் தடுமாறிச் செல்கிறது. கடற்கூத்தின்போது மாலுமிகளால் தூக்கி எறியப்பட்ட பெட்டிகளும் சிப்பங்களும் மூடைகளும் மிதந்து உடன் வந்தன. புயல் மயக்கத்திலிருந்து யாரும் இன்னும் முற்றாகத் தெளிச்சி பெறவில்லை. பினாங்கு எவ்வளவு தொலைவில் இருக்கிறது, எப்போது போய்ச் சேரலாம்? பதில் சொல்வார் யாருமில்லை.

இரவில் மேல் தட்டுக்கு வந்து கப்பித்தான் வானையும் கடலையும் ஒரு சுற்றுப் பார்த்துவிட்டுத் தலையைச் சொறியலானான். பாண்டியன் நெருங்கிச் சென்று நிலவரத்தைக் கேட்டான். கப்பித்தான் சீனமும் மலாயும் கலந்த மொழியில் சொன்னான்.

"இனிமேல் பயமில்லை. இரண்டு நாளில் கரையைப் பார்க்கலாம்."

அன்றிரவு யாரும் உண்ணவில்லை; பேச்சாடவில்லை.

**

மறுநாள் காலையில் சூரியன் உதித்தான். கடல் அலைகள் ஒன்றன்பின் ஒன்றாய், முந்தியதைத் தொடர்ந்த பிந்தியதாய் வந்து மொத்து மொத்தென்று தொங்கானை மோதின. பறவை – மீன்கள் இருபுறமும் கூட்டம் கூட்டமாய்ப் பறந்து விளையாடின.

தொங்கான் மிதந்து சென்றது, கடலின் இழுவைக்கிணங்கி.

பகல் இரவாகி பகலாகி இரவாகியது. பிறைமதி வெளிச்சம் சிந்திற்று. கருநீலவானில் விண்மீன்கள் வெகு ஒளியுடன் கண் சிமிட்டி நின்றன. உப்பங்காற்று உடலை வருடியது. அவுலியா மீன்கள் கூட்டம் கூட்டமாய், கண்மாயில் முதுகு தெரிய மூழ்கி நீந்தும் எருமைகளென

பறவை மீன், அவுலியா மீன் – மீன் வகை
பிலவான் – இந்தோனேசியாவிலுள்ள இடம்

முனகல் ஒலியோடு பின் தொடர்ந்தன. அலைகள் நெளிந்தோடின.

கடற்கூத்துக்குப் பின் ஐந்தாம் நாள் மாலையில் வானோடு வானாய்க் கடலோடு கடலாய் மரப்பச்சை தெரிவது போலிருந்தது. சுமார் அரைமணி நேரத்துக்குப் பின் மீன்பிடி படகு விளக்குகள் தென்பட்டன.

கரை! கரை! கரை!

அடுத்தநாள் முற்பகலில் பினாங்குத் துறைமுகத்தை அணுகினார்கள். மணிக்கூண்டு தெரிகிறது. வெல்ட்கீ கட்டட வரிசை. தெருவில் திரியும் வண்டிகள், ஆட்கள்...

தொங்கான் கரையை நெருங்கிப் போய் நின்றது. தொலைதூர நாவாய்கள் கரையை மொய்த்திருந்தன. ஒவ்வொன்றிலிருந்தும் கேள்வி எழுந்தது.

"எங்கிருந்து வருகிறீர்கள்? எங்கிருந்து வருகிறீர்கள்?"

"பிலவான்... பிலவான்."

சுமத்ரா பிரயாணிகள் துடுப்புப் படகில் இறங்கிப் போய் நடைபாலத்தில் ஏறி நடந்து சுங்க அலுவலகத்திற்குச் சென்று பிரயாண அனுமதிச் சீட்டுகளை நீட்டினர்.

"தமிரோ?" ஜப்பானிய அதிகாரி உறுமினார்.

"யா, மஸ்தா." தமிழர்கள்தாம் என்று தலைகுனிந்து வணங்கித் தெரிவித்தனர்.

பிரயாணிகளைச் சில விநாடிகள் நோட்டமிட்ட அதிகாரி, சீட்டுகளில் முத்திரை வைத்துத் திருப்பிக் கொடுத்தார்.

### நூல் வெளி



புலம்பெயர்ந்த தமிழர்கள் பற்றிய முதல் புதினம், புயலிலே ஒரு தோணி. இந்நூலாசிரியர் ப.சிங்காரம் (1920 – 1997). இந்தோனேசியாவில் இருந்தபோது, தென்கிழக்காசியப் போர் மூண்டது. அச்சூழலில், மலேசியா, இந்தோனேசியா பகுதிகளில் நிகழ்வதாக உள்ள கற்பனைப் படைப்பு இப்புதினம். அதில் கடற்கூத்து என்னும் அத்தியாயத்தின் சுருக்கப்பட்ட பகுதி இங்குப் பாடமாக வைக்கப்பட்டுள்ளது.

ப.சிங்காரம் சிவகங்கை மாவட்டம், சிங்கம்புணரியைச் சேர்ந்தவர். வேலைக்காக இந்தோனேசியா சென்றார். மீண்டும் இந்தியா வந்து தினத்தந்தி நாளிதழில் பணியாற்றினார். இவர் அன்றைய சூழலில் அவருடைய சேமிப்பான ஏழரை இலட்சம் ரூபாயை மாணவர்களின் கல்வி வளர்ச்சிக்காக வழங்கினார்.

### முன்தோன்றிய மூத்தகுடி

*"பல் பழுப் பலவின் பயங்கெழு கொல்லி"*

*அகநானூறு 208 : 22*

நாமக்கல் மாவட்டத்தின் கொல்லிமலை

## கற்பவை கற்றபின்...

1. கடலில் புயலின் தாக்கத்தினால் ஏற்பட்ட பதற்றத்தை வெளிப்படுத்த அடுக்குத் தொடர்களும் வருணனைகளும் எவ்வாறெல்லாம் பயன்பட்டுள்ளன என்பது குறித்து வகுப்பில் பேசுக.
2. நீங்கள் எதிர்கொண்ட இயற்கை இடர் குறித்து விவரித்து எழுதுக. (மழை, வெள்ளம், புயல், வறட்சி)

கற்கண்டு

இயற்கை

உ

# தொகைநிலைத் தொடர்கள்

9CRSLQ

## சொற்றொடர்

சொற்கள் பல தொடர்ந்து நின்று பொருள் தருவது "சொற்றொடர்" அல்லது "தொடர்" எனப்படும்.

**எ.கா.** நீர் பருகினான், வெண்சங்கு ஊதினான்.

## தொகைநிலைத் தொடர்

பெயர்ச்சொல்லோடு வினைச்சொல்லும் பெயர்ச்சொல்லும் சேரும் தொடரின் இடையில், வேற்றுமை உருபுகளோ, வினை, பண்பு முதலியவற்றின் உருபுகளோ தொக்கி (மறைந்து) இரண்டு அல்லது அதற்கும் மேற்பட்ட சொற்கள் ஒரு சொல் போல் நிற்குமானால் அதனைத் தொகைநிலைத்தொடர் என்று கூறுவர்.

**எ.கா.** கரும்பு தின்றான்.

மேற்கண்ட தொடர் கரும்பைத் தின்றான் என்னும் பொருளை உணர்த்துகிறது. இத்தொடரில் உள்ள இரண்டு சொற்களுக்கு நடுவில் ஐ என்னும் உருபு மறைந்து நின்று, அப்பொருளைத் தருகிறது. எனவே, இது தொகைநிலைத் தொடர் எனப்படும்.

தொகைநிலைத் தொடர் ஆறு வகைப்படும். அவை வேற்றுமைத்தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உவமைத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை என்பன ஆகும்.

## வேற்றுமைத்தொகை

**எ.கா.** மதுரை சென்றார்

இத்தொடர் மதுரைக்குச் சென்றார் என விரிந்து நின்று பொருள் தருகிறது. கொடுக்கப்பட்டுள்ள இரு சொற்களுக்கு இடையில் "கு" என்னும் வேற்றுமை உருபு இல்லை. அது தொக்கி நின்று பொருளை உணர்த்துகிறது.

இவ்வாறு ஒரு தொடரில் வேற்றுமை உருபுகள் (ஐ, ஆல், கு, இன், அது, கண்) ஆகியவற்றுள் ஒன்று மறைந்து வந்து பொருள் உணர்த்துவது வேற்றுமைத்தொகை எனப்படும்.

## உருபும் பயனும் உடன்தொக்க தொகை

**எ.கா.** தேர்ப்பாகன்

இத்தொடர் "தேரை ஓட்டும் பாகன்" என விரிந்து பொருளை உணர்த்துகிறது. கொடுக்கப்பட்டுள்ள தேர், பாகன் என்னும் சொற்களுக்கிடையில் "ஐ" என்னும் வேற்றுமை உருபும் "ஓட்டும்" என்னும் பொருளை விளக்கும் பயனும் மறைந்து வந்துள்ளன.

இவ்வாறு ஒரு தொடரில் வேற்றுமை உருபும் அதன் பொருளை விளக்கும் பயனும் சேர்ந்து மறைந்து வருவது உருபும் பயனும் உடன் தொக்க தொகை எனப்படும். இதுவும் வேற்றுமைத் தொகையே ஆகும்.

தமிழ்த்தொண்டு (தமிழுக்குச் செய்யும் தொண்டு) நான்காம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை.

## வினைத்தொகை

காலம் காட்டும் இடைநிலையும் பெயரெச்ச விகுதியும் மறைந்து நிற்க, வினைப் பகுதியைத் தொடர்ந்து ஒரு பெயர் வந்து ஒரு சொல்லைப் போல் நடப்பது "வினைத்தொகை" எனப்படும். காலம் கரந்த பெயரெச்சமே வினைத்தொகையாகும்.

**எ.கா.** வீசுதென்றல், கொல்களிறு

வீசு, கொல் என்பவை வினைப்பகுதிகள். இவை முறையே தென்றல், களிறு என்னும் பெயர்ச்சொற்களோடு சேர்ந்து காலத்தை வெளிப்படுத்தாத பெயரெச்சங்களாயின. மேலும் இவை வீசிய காற்று, வீசுகின்ற காற்று, வீசும் காற்று எனவும் கொன்ற களிறு, கொல்கின்ற களிறு, கொல்லும் களிறு எனவும் முக்காலத்திற்கும் பொருந்தும்படி விரிந்து பொருள் தருகின்றன. காலம்காட்டும் இடைநிலைகள் இப்பெயரெச்சங்களில் தொக்கி இருக்கின்றன.

வினைப்பகுதியும் அடுத்துப் பெயர்ச்சொல்லும் அமைந்த சொற்றொடர்களிலேயே வினைத்தொகை அமையும்.

### பண்புத்தொகை

நிறம், வடிவம், சுவை, அளவு முதலானவற்றை உணர்த்தும் பண்புப்பெயருக்கும் அது தழுவிநிற்கும் பெயர்ச்சொல்லுக்கும் இடையில் "மை" என்னும் பண்பு விகுதியும் ஆகிய, ஆன என்னும் பண்பு உருபுகளும் மறைந்து வருவது பண்புத்தொகை எனப்படும்.

செங்காந்தள் – செம்மையாகிய காந்தள், வட்டத்தொட்டி – வட்டமான தொட்டி, இன்மொழி – இனிமையானமொழி,

### இருபெயரொட்டுப் பண்புத்தொகை

சிறப்புப்பெயர் முன்னும் பொதுப்பெயர் பின்னும் நின்று இடையில் 'ஆகிய' என்னும் பண்பு உருபு தொக்கி வருவது இருபெயரொட்டுப் பண்புத்தொகையாகும்.

**எ.கா.** மார்கழித் திங்கள், சாரைப்பாம்பு.

திங்கள், பாம்பு ஆகிய பொதுப் பெயர்களுக்குமுன் மார்கழி, சாரை எனும் சிறப்புப் பெயர்கள் வந்து மார்கழி ஆகிய திங்கள் என்றும் சாரை ஆகிய பாம்பு என்றும் இருபெயரொட்டாக வந்துள்ளன.

### உவமைத்தொகை

உவமைக்கும் பொருளுக்கும் (உவமேயம்) இடையில் உவமஉருபு மறைந்து வருவது உவமைத்தொகை எனப்படும்.




**எ.கா.** மலர்க்கை (மலர் போன்ற கை)

மலர் – உவமை, கை – உவமேயம் (பொருள்) இடையே 'போன்ற' என்னும் உவம உருபு மறைந்து வந்துள்ளது.

### உம்மைத்தொகை

இருசொற்களுக்கு இடையிலும் இறுதியிலும் 'உம்' என்னும் இடைச்சொல் மறைந்து வருவது உம்மைத்தொகையாகும். உம்மைத்தொகை எண்ணல், எடுத்தல், முகத்தல் , நீட்டல் என்னும் நான்கு அளவுப் பெயர்களைத் தொடர்ந்து வரும்.

**எ.கா.** அண்ணன் தம்பி, தாய்சேய்

அண்ணனும் தம்பியும், தாயும் சேயும் என விரிந்து பொருளை உணர்த்துகின்றன.

### அன்மொழித்தொகை

வேற்றுமை, வினை, பண்பு, உவமை, உம்மை ஆகிய தொகைநிலைத் தொடர்கள் அவை அல்லாத வேறு சொற்கள் மறைந்து நின்று பொருள் தருவது அன்மொழித் தொகை ஆகும்.

**எ.கா.** சிவப்புச் சட்டை பேசினார்
முறுக்கு மீசை வந்தார்

இவற்றில் சிவப்புச் சட்டை அணிந்தவர் பேசினார், முறுக்கு மீசையை உடையவர் வந்தார் எனத் தொகைநிலைத்தொடர் அல்லாத வேறு சொற்கள் மறைந்து நின்று பொருள் தருகின்றன.

## கற்பவை கற்றபின்...

**வண்ணமிட்ட தொகைநிலைத் தொடர்களை வகைப்படுத்துக.**

1. *அன்புச்செல்வன்* திறன்பேசியின் *தொடுதிரை*யில் படித்துக்கொண்டிருந்தார்.
2. அனைவருக்கும் *மோர்ப்பானை*யைத் திறந்து *மோர் கொடுக்கவும்*.
3. *வெண்டைக்காய்ப்* பொரியல் *மோர்க்குழம்புக்குப்* பொருத்தமாக இருக்கும்.
4. *தங்கமீன்கள் தண்ணீர்த்தொட்டி*யில் விளையாடுகின்றன.

## இணையச் செயல்பாடுகள்

### சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்!



படிநிலைகள்

1. கீழ்க்காணும் உரலி / விரைவுக் குறியீட்டைப் பயன்படுத்தி இணையப் பக்கத்திற்குச் செல்க.
2. திரையில் தமிழ் நூல்களின் பட்டியல்கள் வரிசையாகக் கொடுக்கப்பட்டிருக்கும். அவற்றில் தமிழ் இலக்கணம் என்னும் தலைப்பின் கீழ் உள்ள இலக்கணம் என்பதைச் சொடுக்கி, இடப்பக்கம் உள்ள சொல் என்பதைத் தேர்வு செய்க.
3. சொல்லின் வகைகள் அவற்றின் விளக்கம் மற்றும் எடுத்துக்காட்டுகளுடன் கொடுக்கப்பட்டிருக்கும். அவற்றை ஒவ்வொன்றாகச் சொடுக்கி அறிந்து கொள்க.








செயல்பாட்டிற்கான உரலி

https://store.tamillexicon.com

B369_10_TAMIL

கொடுக்கப்பட்டிருக்கும் படங்கள் அடையாளத்திற்கு மட்டுமே.

# திறன் அறிவோம்

9SAMN2

## பலவுள் தெரிக.

1. "உனக்குப் பாட்டுகள் பாடுகிறோம்
உனக்குப் புகழ்ச்சிகள் கூறுகிறோம்" – பாரதியின் இவ்வடிகளில் இடம்பெற்றுள்ள நயங்கள் யாவை?

   அ) உருவகம், எதுகை ஆ) மோனை, எதுகை இ) முரண், இயைபு ஈ) உவமை, எதுகை

2. செய்தி 1 – ஒவ்வோர் ஆண்டும் ஜூன் 15ஐ உலகக் காற்று நாளாகக் கொண்டாடி வருகிறோம்.
செய்தி 2 – காற்றாலை மின் உற்பத்தியில் இந்தியாவில் தமிழகம் இரண்டாமிடம் என்பது எனக்குப் பெருமையே.
செய்தி 3–காற்றின் ஆற்றலைப் பயன்படுத்திக் கடல்கடந்து வணிகம்செய்து அதில் வெற்றி கண்டவர்கள் தமிழர்கள்!

   அ) செய்தி 1 மட்டும் சரி ஆ) செய்தி 1, 2 ஆகியன சரி

   இ) செய்தி 3 மட்டும் சரி ஈ) செய்தி 1, 3 ஆகியன சரி

3. "பாடுஇமிழ் பனிக்கடல் பருகி" என்னும் முல்லைப்பாட்டு அடி உணர்த்தும் அறிவியல் செய்தி யாது?

   அ) கடல் நீர் ஆவியாகி மேகமாதல் ஆ) கடல் நீர் குளிர்ச்சி அடைதல்

   இ) கடல் நீர் ஒலித்தல் ஈ) கடல் நீர் கொந்தளித்தல்

4. 'பெரிய மீசை' சிரித்தார் – வண்ணச் சொல்லுக்கான தொகையின் வகை எது?

   அ) பண்புத்தொகை ஆ) உவமைத்தொகை இ) அன்மொழித்தொகை ஈ) உம்மைத்தொகை

5. பொருந்தும் விடைவரிசையைத் தேர்ந்தெடுக்க.

   அ) கொண்டல் – 1. மேற்கு
   ஆ) கோடை – 2. தெற்கு
   இ) வாடை – 3. கிழக்கு
   ஈ) தென்றல் – 4. வடக்கு

   அ) 1, 2, 3, 4 ஆ) 3, 1, 4, 2 இ) 4, 3, 2, 1 ஈ) 3, 4, 1, 2

## குறுவினா

1. 'நமக்கு உயிர் காற்று
காற்றுக்கு வரம் மரம் – மரங்களை
வெட்டி எறியாமல் நட்டு வளர்ப்போம்' – இதுபோன்று உலகக் காற்று நாள் விழிப்புணர்வுக்கான இரண்டு முழக்கத்தொடர்களை எழுதுக.

2. வசன கவிதை – குறிப்பு வரைக.

3. தண்ணீர் குடி, தயிர்க்குடம் ஆகிய தொகைநிலைத் தொடர்களை விரித்து எழுதுக; தொடரில் அமைக்க.

4. பெற்றோர் வேலையிலிருந்து திரும்பத் தாமதமாகும்போது அழும் தம்பிக்கு நீங்கள் கூறும் ஆறுதல் சொற்களை எழுதுக.

5. மாஅல் – பொருளும் இலக்கணக் குறிப்பும் தருக.

## சிறுவினா

1. உயிராக நான், பல பெயர்களில் நான், நான்கு திசையிலும் நான், இலக்கியத்தில் நான், முந்நீர் நாவாய் ஓட்டியாக நான்.....முதலிய தலைப்புகளில் காற்று தன்னைப் பற்றிப் பேசுகிறது. இவ்வாறு 'நீர்' தன்னைப் பற்றிப் பேசினால்..... உங்களுடைய கற்பனையில் தலைப்புகளை எழுதுக.

2. சோலைக்(பூங்கா) காற்றும் மின்விசிறிக் காற்றும் பேசிக்கொள்வதுபோல் ஓர் உரையாடல் அமைக்க.

3. தோட்டத்தில் மல்லிகைப்பூ பறித்த பூங்கொடி, வரும்வழியில் ஆடுமாடுகளுக்குத் தண்ணீர்த் தொட்டியில் குடிநீர் நிரப்பினாள். வீட்டினுள் வந்தவள் சுவர்க்கடிகாரத்தில் மணி பார்த்தாள்.

   இப்பத்தியில் உள்ள தொகைநிலைத் தொடர்களின் வகைகளைக் குறிப்பிட்டு, விரித்து எழுதுக.

4. மழைநின்றவுடன் புலப்படும் காட்சியை வருணித்து எழுதுக.

   குறிப்பு: இலைகளில் சொட்டும் நீர் – உடலில் ஓடும் மெல்லிய குளிர் – தேங்கிய குட்டையில் 'சளப் தளப்' என்று குதிக்கும் குழந்தைகள் – ஓடும் நீரில் காகிதக் கப்பல்.

## நெடுவினா

1. முல்லைப் பாட்டில் உள்ள கார்காலச் செய்திகளை விவரித்து எழுதுக.

2. புயலிலே ஒரு தோணி கதையில் இடம்பெற்றுள்ள வருணனைகளும் அடுக்குத் தொடர்களும் ஒலிக்குறிப்புச் சொற்களும் புயலில், தோணி படும்பாட்டை எவ்வாறு விவரிக்கின்றன?

3. மலர்ந்தும் மலராத பாதிமலர் போல
   வளரும் விழி வண்ணமே – வந்து
   விடிந்தும் விடியாத காலைப் பொழுதாக
   விளைந்த கலை அன்னமே
   நதியில் விளையாடி கொடியில் தலைசீவி
   நடந்த இளந் தென்றலே – வளர்
   பொதிகை மலைதோன்றி மதுரை நகர் கண்டு
   பொலிந்த தமிழ் மன்றமே

   –கவிஞர் கண்ணதாசனின் இப்பாடலில் தவழும் காற்றையும் கவிதை நயத்தையும் பாராட்டி உரைசெய்க.

## மொழியை ஆள்வோம்!

### படித்துச் சுவைக்க.

*அந்த இடம்*
*காற்றே ! வா*
*உன்னைப் பாடாமல்*
*இருக்க முடியாது*
*ஏனெனில்*
*பாட்டின் மூல ஊற்றே*
*நீதான்*
*……………….*
*………………*
*பொய்கையிடம் போனால்*
*குளிர்ந்து போகிறாய்*
*பூக்களைத் தொட்டால்*
*நறுமணத்தோடு வருகிறாய்*
*புல்லாங்குழலில் புகுந்தால்*
*இசையாகிவிடுகிறாய்*
*எங்களிடம்*
*வந்தால் மட்டுமே*
*அழுக்காகி விடுகிறாய்*
*மரங்களின்*
*ஊமை நாவுகள்*
*உன்னிடம் மட்டுமே*
*பேசுகின்றன*
*கடல் அலைகள்*
*உன்னோடு மட்டுமே*
*குதித்துக் கும்மாளமிடுகின்றன*
*வயலின் பச்சைப் பயிர்கள்*
*நீ வந்தால் மட்டுமே*
*ஆனந்த நடனம்*
*ஆடுகின்றன*
*நீ என்ன குதூகலமா?*
*கொண்டாட்டமா?*
*கோலாகலமா?*

*நெடுநாட்களாகவே*
*எனக்கொரு சந்தேகம்*

*விளக்குகளிலிருந்து*
*பறிக்கும் சுடர்களை*

*பூக்களிலிருந்து*
*திருடும் நறுமணத்தை*

*வீணையிலிருந்து*
*கவர்ந்த இசையை*

*எங்கே கொண்டு போய்*
*ஒளித்து வைக்கிறாய்?*

*– அப்துல் ரகுமான்.*

### தமிழில் மொழிபெயர்த்துத் தலைப்பிடுக.

*The Golden sun gets up early in the morning and starts its bright rays to fade away the dark. The milky clouds start their wandering. The colourful birds start twitting their morning melodies in percussion. The cute butterflies dance around the flowers. The flowers' fragrance fills the breeze. The breeze gently blows everywhere and makes everything pleasant.*

### சொற்களில் மறைந்துள்ள தொகைகளை அடையாளம் கண்டு தொடரில் அமைக்க.

இன்சொல், எழுகதிர், கீரிபாம்பு, பூங்குழல் வந்தாள், மலை வாழ்வார், முத்துப்பல்

**எ.கா.** இன்சொல் – பண்புத்தொகை – இனிமையான சொல் கூறுதல் சான்றோர்க்கு அழகு.

## செய்திகளைப் படித்து வினாக்களுக்கு விடை எழுதுக.

### பூக்களைப் பற்றிய அரிய இலக்கியச் செய்திகள்

பூ உண்டு. ஆனால் கண்ணிற்குக் காட்சி தராமல் காண்டற்கு அரியனவாய் இருக்கும் மலர்கள்: ஆல மலர்; பலா மலர்.

மலர் உண்டு; பெயரும் உண்டு; ஆனால் இதுதான் அது என்று உறுதியாக அறிய இயலாதுள்ள நிலையில் இருக்கும் மலர்கள்: சுள்ளி மலர், பாங்கர் மலர்.

அகவிதழ் முதலிய உறுப்புகள் இருந்து அவை புறத்தே காட்சிப்படாமல் உள்ளேயே பொதிந்திருக்கும் மலர்கள்: அத்தி, ஆலம், கொழிஞ்சி, பலா.

பயன்பாடு, நாற்றம், மக்களது விருப்பில் இடம் பெறாமை, பொதுவில் ஒதுக்கப்பட்டமை கொண்டு மலரில் சில எளியவை ஆகின்றன. அவையாவன: நெருஞ்சி, எருக்கு, பூளை, குரீஇப் பூளை, வேளை, ஊமத்தம், கள்ளி, முருங்கை .

இலுப்பைப் பூக்கள் இனிப்பானவை. கரடிகள் மரத்தின் மீதேறி அவற்றைப் பறித்து உண்ணும். பாதிரிப் பூ குடிநீருக்குத் தன் மணத்தை ஏற்றும். மூங்கில் பூவில் காய் தோன்றிக் கனியாகி அதிலிருந்து ஒருவகை அரிசி தோன்றும். இது மூங்கில் அரிசி எனப்படும்.

– கோவை.இளஞ்சேரன்

1. மலர் உண்டு; பெயரும் உண்டு – இரண்டு தொடர்களையும் ஒரு தொடராக்குக.
2. அரும்பாகி மொட்டாகிப் பூவாகி.... என்பதை ஒத்து அமைந்துள்ள தொடரைக் கண்டறிக.
3. நீங்கள் அறிந்த இரு பூக்களின் பெயர்களையும் பயன்களையும் எழுதுக.
4. அரிய மலர் – இலக்கணக் குறிப்புத் தருக.
5. தொடரில் பொருந்தாப் பொருள்தரும் மயங்கொலி எழுத்துகளைத் திருத்துக.
   இலுப்பைப் பூக்கள் இனிப்பானவை. கரடிகள் மறத்தின் மீதேறி அவற்றைப் பரித்து உண்ணும். பாதிரிப் பூ குடிநீருக்குத் தன் மனத்தை ஏற்றும்.

## வாழ்த்துமடல் எழுதுக.

மாநில அளவில் நடைபெற்ற "மரம் இயற்கையின் வரம்" எனும் தலைப்பிலான கட்டுரைப் போட்டியில் வெற்றி பெற்று முதல் பரிசு பெற்ற தோழனை வாழ்த்தி மடல் எழுதுக.

## பாரதியின் வசனநடை – சிட்டுக்குருவி

சிறியதானியம் போன்ற மூக்கு; சின்னக்கண்கள்; சின்னத்தலை; வெள்ளைக் கழுத்து; அழகிய மங்கல் வெண்மை நிறமுடைய பட்டுப்போர்த்த வயிறு; கருமையும் வெண்மையும் கலந்த சாம்பல் நிறத்தாலாகிய பட்டுப்போர்த்த முதுகு; சிறிய தோகை; துளித்துளிக் கால்கள்; இத்தனையும் சேர்த்து ஒரு பச்சைக் குழந்தையின் கைப்பிடியிலே பிடித்துவிடலாம். இவ்விதமான உடலைச் சுமந்து கொண்டு என் வீட்டிலே இரண்டு உயிர்கள் வாழ்கின்றன. அவற்றில் ஒன்று ஆண் மற்றொன்று பெண்.

– இது போன்று உங்களுக்குப் பிடித்த ஏதேனும் ஒன்றைப் பற்றி வசனநடையில் எழுதுக.

## மொழியோடு விளையாடு

**சொல்லைக் கண்டுபிடித்துப் புதிரை விடுவிக்க.**

1. முதல் இரண்டை நீக்கினாலும் வாசனை தரும்; நீக்காவிட்டாலும் வாசனை தரும்.
2. பழமைக்கு எதிரானது – எழுதுகோலில் பயன்படும்
3. இருக்கும்போது உருவமில்லை – இல்லாமல் உயிரினம் இல்லை.
4. நாலெழுத்தில் கண் சிமிட்டும் – கடையிரண்டில் நீந்திச் செல்லும்
5. ஒரெழுத்தில் சோலை – இரண்டெழுத்தில் வனம்

(காடு, புதுமை, விண்மீன், காற்று, நறுமணம்)

**நயமிகு தொடர்களைப் படித்து ஏற்ற தலைப்புகளை எடுத்தெழுதுக.**

1. கொளுத்தும் வெயில் சட்டெனத் தணிந்தது. வானம் இருண்டது. வாடைக் காற்று வீசியது.
2. புவி சிலிர்த்து, மண்ணிலிருந்து சின்னஞ்சிறு மொட்டு முகிழ்த்தது; அச்செடியை வரவேற்கும் விதமாகப் பக்கத்துச் செடிகள் தலையாட்டி மகிழ்கின்றன.
3. சோலைக்குள் சத்தமில்லாமல் வீசியது தென்றல்; பூக்கள் அதன் வருகையை உணர்ந்து நறுமணத்துடன் வரவேற்கின்றன. பூவாசம் கலந்த தென்றலில் வண்டுகள் மிதந்து சென்று மலர்களில் அமர்கின்றன.
4. இரவின் இருளமைதியில் இரைச்சலாய்ச் சில சுவர்க்கோழிகள். வறண்ட வானத்தின் இருண்ட புழுக்கம்; மழைக்கு ஏங்கும் புவி வெப்பப் பெருமூச்சு விடும்; கசகசத்த உயிரினங்கள்.
5. நின்றுவிட்ட மழை தரும் குளிர்; சொட்டுச் சொட்டாக விளிம்புகளிலிருந்தும் மரங்களிலிருந்தும் விழும் மழைநீர்பட்டுச் சிலிர்க்கும் உயிரினம்.
6. குயில்களின் கூவலிசை. புள்ளினங்களின் மேய்ச்சலும் பாய்ச்சலும். இலைகளின் அசைவுகள், சூறைக்காற்றின் ஆலோலம்.

(வனத்தின் நடனம், மிதக்கும் வாசம், காற்றின் பாடல், மொட்டின் வருகை, உயிர்ப்பின் ஏக்கம், நீரின் சிலிர்ப்பு)

**எ.கா.** கொளுத்தும் வெயில் சட்டெனத் தணிந்தது; வானம் இருண்டது. வாடைக் காற்று வீசியது.
தலைப்பு – காற்றின் பாடல்

**அகராதியில் காண்க.**

அகன்சுடர், ஆர்கலி, கட்புள், கொடுவாய், திருவில்

**காட்சியைக் கண்டு கவினுற எழுதுக.**



.........................................................................

.........................................................................

.........................................................................

.........................................................................

## செயல்திட்டம்

தூய்மையான காற்றைப் பெறுவதற்கு மேற்கொள்ள வேண்டிய வழிமுறைகள் குறித்துப் படத்தொகுப்பு உருவாக்குக.

## நிற்க அதற்குத் தக

### வானொலி அறிவிப்பு

ஜல் புயல் சென்னைக்குத் தென்கிழக்கே 150 கி.மீ. தொலைவில் மையம் கொண்டுள்ளது. இன்று இரவு சென்னைக்கும் நெல்லூருக்கும் இடையே கரையைக் கடக்கும் என்று சென்னை வானிலை ஆய்வு மையம் தெரிவித்துள்ளது.

### புயலின்போது

| | |
|---|---|
| புயலின்போது வெளியே செல்லவேண்டாம். | வெளியேற நேர்ந்தால் ஆரம்பகட்ட எச்சரிக்கையின்போதே வெளியேறவும். |
| தொலைபேசி, மின்சாதனங்கள் பயன்படுத்துவதைத் தவிர்க்கவும். | மாடியில் இருப்பதைத் தவிர்த்துத் தளப் பகுதியிலேயே தங்கவும். |
| வானொலி அறிவிப்பைக் கேட்டுப் பின்பற்றவும். | காற்று அடிப்பது நின்றாலும் எதிர்த்திசையிலிருந்து மறுபடி வேகமாக வீச ஆரம்பிக்கும். எனவே, காற்றடிப்பது முடிந்துவிட்டதாக நினைக்கவேண்டாம். |
| மீனவர்கள் கடலுக்குச் செல்வதைத் தவிர்க்கவும். | வாகனத்தை ஓட்ட நேர்ந்தால் கடற்கரைப் பகுதிகளுக்குத் தொலைவிலும், மரங்கள் மின்கம்பிப் பாதைகள், நீர் வழிகள் ஆகியவற்றிலிருந்து விலகியும் வாகனத்தின் உள்ளேயே தங்கியிருக்கவும். |

மேற்கண்ட அறிவிப்பைக் கேட்ட நீங்கள், உங்களையும் உங்கள் குடும்பத்தாரையும் காப்பாற்றும் வகையில் செய்யும் செயல்களை வரிசைப்படுத்தி எழுதுக.

### கலைச்சொல் அறிவோம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Storm | – | புயல் | Land Breeze | – | நிலக்காற்று |
| Tornado | – | சூறாவளி | Sea Breeze | – | கடற்காற்று |
| Tempest | – | பெருங்காற்று | Whirlwind | – | சுழல்காற்று |

## அறிவை விரிவு செய்

குயில்பாட்டு – பாரதியார்
அதோ அந்தப் பறவை போல – ச. முகமது அலி
உலகின் மிகச்சிறிய தவளை – எஸ்.ராமகிருஷ்ணன்




## இணையத்தில் காண்க

1. https://ta.wikipedia.org/wiki/காற்றுத்_திறன்
2. https://ta.wikipedia.org/wiki/வளி_மாசடைதல்
3. http://agritech.tnau.ac.in/ta/environment/envi_pollution_intro_air_ta.html

இயல் மூன்று

பண்பாடு

# கூட்டாஞ்சோறு



உணவு ஆக்கலும் அளித்தலும் – 17ஆம் நூற்றாண்டுச் சுவரோவியம், சிதம்பரம்.

## கற்றல் நோக்கங்கள்

- நம் பண்பாட்டுக் கூறுகளுள் ஒன்றான விருந்தோம்பலின் மாண்பை உணர்ந்து பெருமிதத்துடன் பின்பற்றுதல்.
- உணவு வகைகளும் உணவு சமைக்கும் முறைகளும் மொழியில் நயம்படச் சொல்லப்படும் முறைமையைப் படித்துச் சுவைத்து அது போல ஈர்ப்புடன் எழுதப்பழகுதல்.
- உடலை மட்டும் வளர்க்கும் உணவுகளைத் தவிர்த்தல் குறித்தும் உயிரை உணர்வை வளர்க்கும் உணவுகளைக் குறித்தும் செய்திகளை அறிந்து வெளிப்படுத்துதல்.
- சிற்றூர் மக்களின் வாழ்வியல் முறைகளை வட்டார இலக்கியங்களின் நடையில் புரிந்து படித்தல்.
- மொழிப் பயன்பாட்டில் தொகாநிலைத் தொடர்களின் வகைகளை அறிந்து பயன்படுத்துதல்.



10th_Tamil_Unit 3.indd 49 24-01-2020 10.05.31 AM

உரைநடை உலகம்

# பண்பாடு ௩

# விருந்து போற்றுதும்!

4913CF

நுழையும்முன்

முளிதயிர் பிசைந்த சோற்றை உருட்டி அனைவருக்கும் கையில் ஓர் உருண்டை கொடுத்து, உருண்டையின் நடுவில் வைத்த குழியில் புளிக்குழம்பு இட்டு உண்ணச் சொன்ன அன்னையின் அன்பில் தொடங்குகிறது அனைவருடனான பகிர்ந்துண்ணல். சிறு வயதில் மகனுடனோ மகளுடனோ வரும் நண்பர்களுக்கும் சேர்த்து அம்மா தரும் சிற்றுண்டியில் தொடங்குகிறது, தமிழரின் விருந்து போற்றுதல். தமிழர் மரபில் உணவோடு உணர்வையும் குழைத்துச் செய்த சமையல் விருந்தாகிறது.

தம் வீட்டுக்கு வரும் விருந்தினரை முகமலர்ச்சியோடு வரவேற்று உண்ண உணவும் இருக்க இடமும் கொடுத்து அன்பு பாராட்டுவதே விருந்தோம்பல். விருந்தினர் என்றால் உறவினர் என்று இக்காலத்தினர் கருதுகின்றனர். உறவினர் வேறு, விருந்தினர் வேறு. முன்பின் அறியாத புதியவர்களுக்கே விருந்தினர் என்று பெயர். 'விருந்தே புதுமை' என்று தொல்காப்பியர் கூறியுள்ளார்.



விருந்தோம்பல்
17 ஆம் நூற்றாண்டுச் சுவரோவியம், சிதம்பரம்.

## அறவுணர்வும் தமிழர் மரபும்

திருவள்ளுவர் இல்லறவியலில் 'விருந்தோம்பலை வலியுறுத்த ஓர் அதிகாரத்தையே' அமைத்திருக்கிறார்; இல்லறம் புரிவது விருந்தோம்பல் செய்யும் பொருட்டே என்கிறார்; முகம் வேறுபடாமல் முகமலர்ச்சியோடு விருந்தினரை வரவேற்க வேண்டும் என்பதை "மோப்பக் குழையும் அனிச்சம்" என்ற குறளில் எடுத்துரைக்கிறார். விருந்தினரைப் போற்றுதல் இல்லறக் கடமையாக இருந்தது.

"…………………….. தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை"
– *சிலப்பதிகாரம், 16:72,73*

என்று கண்ணகி வருந்துகிறாள். கோவலனைப் பிரிந்து வாழும் கண்ணகி அவனைப் பிரிந்ததைவிட விருந்தினரைப் போற்ற முடியாத நிலையை எண்ணியே வருந்துவதாகக் குறிப்பிடுவதன் மூலம் விருந்தினரைப் போற்றிப் பேணல் பழந்தமிழர் மரபு என்பதை இளங்கோவடிகள் உணர்த்துகிறார்.

கல்வியும் செல்வமும் பெற்ற பெண்கள், விருந்தும் ஈகையும் செய்வதாகக் கம்பர் குறிப்பிட்டுள்ளார்.

கலிங்கத்துப்பரணியிலும் செயங்கொண்டார் விருந்தினர்க்கு உணவிடுவோரின் முகமலர்ச்சியை உவமையாக்கியுள்ளார்.

| "பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்<br>வருந்தி வந்தவர்க்கு ஈதலும் வைகலும்<br>விருந்தும் அன்றி விளைவன யாவையே"<br>– கம்பராமாயணம், 1:2:36 | "விருந்தினரும் வறியவரும் நெருங்கி யுண்ண<br>மேன்மேலும் முகமலரும் மேலோர் போல"<br>– கலிங்கத்துப்பரணி, 477 |
|---|---|

## தனித்து உண்ணார்

தனித்து உண்ணாமை என்பது தமிழரின் விருந்தோம்பல் பண்பின் அடிப்படை. அமிழ்தமே கிடைத்தாலும் தாமே உண்ணாது பிறருக்கும் கொடுப்பர் நல்லோர்; அத்தகையோரால்தான் உலகம் நிலைத்திருக்கிறது என்பதை,

"உண்டால் அம்ம, இவ்வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும், இனிதுஎனத்
தமியர் உண்டலும் இலரே…….."

– புறநானூறு, 182

என்று கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி குறிப்பிட்டுள்ளார்.

## அல்லில் ஆயினும்

விருந்தோம்பல் என்பது பெண்களின் சிறந்த பண்புகளுள் ஒன்றாகக் கருதப்படுகிறது. நடு இரவில் விருந்தினர் வந்தாலும் மகிழ்ந்து வரவேற்று உணவிடும் நல்லியல்பு குடும்பத் தலைவிக்கு உண்டு. இதை

"அல்லில் ஆயினும் விருந்து வரின்
உவக்கும்"

என்று நற்றிணை (142) குறிப்பிடுகிறது.



**தெரியுமா?**

ஏழு அடி நடந்து சென்று வழியனுப்பினர்

பண்டைத் தமிழர்கள் வீட்டிற்கு வந்த விருந்தினர் திரும்பிச் செல்லும்போது, அவர்களைப் பிரிய மனமின்றி வருந்தினர். மேலும், வழியனுப்பும் பொழுது அவர்கள் செல்லவிருக்கிற நான்கு குதிரைகள் பூட்டப்பட்ட தேர்வரை ஏழு அடி நடந்து சென்று வழியனுப்பினர்.

"காலின் ஏழடிப் பின் சென்று"

–பொருநராற்றுப்படை, 166

## இன்மையிலும் விருந்தோம்பல்

வீட்டிற்கு வந்தவருக்கு வறிய நிலையிலும் எவ்வழியிலேயேனும் முயன்று விருந்தளித்து மகிழ்ந்தனர் நம் முன்னோர். தானியம் ஏதும் இல்லாத நிலையில் விதைக்காக வைத்திருந்த தினையை உரலில் இட்டுக் குத்தியெடுத்து விருந்தினருக்கு விருந்தளித்தாள் தலைவி. இதனை,

குரல்உணங்கு விதைத் தினை உரல்வாய்ப் பெய்து
சிறிது புறப்பட்டன்றோ இலள்

என்று புறநானூறு (333) காட்சிப்படுத்துகிறது.

நேற்று வந்த விருந்தினரைப் பேணுவதற்குப் பொருள் தேவைப்பட்டதால் இரும்பினால் செய்த பழைய வாளைப் பணையம் வைத்தான் தலைவன்; இன்றும் விருந்தினர் வந்ததால் தன் கருங்கோட்டுச் சீறியாழைப் பணையம் வைத்து விருந்தளித்தான் என்கிறது புறநானூறு. இச்செய்தி,

நெருநை வந்த விருந்திற்கு மற்றுத்தன்
இரும்புடைப் பழவாள் வைத்தனன் இன்றுஇக்
கருங்கோட்டுச் சீறியாழ் பணையம்....

– புறநானூறு, 316

என்ற பாடலடிகளில் இடம்பெறுகிறது.

இளையான்குடி மாறநாயனாரின் வீட்டுக்கு வந்த சிவனடியார்க்கு விருந்தளிக்க அவரிடம் தானியமில்லை; எனவே, அன்று விதைத்துவிட்டு வந்த நெல்லை அரித்து வந்து, பின் சமைத்து விருந்து படைத்த திறம் பெரியபுராணத்தில் காட்டப்படுகிறது.

## நிலத்திற்கேற்ற விருந்து

நெய்தல் நிலத்தவர் பாணர்களை வரவேற்றுக் குழல் மீன் கறியும் பிறவும் கொடுத்தனர் என்கிறது சிறுபாணாற்றுப்படை (அடி:160–163).

"இலையை மடிப்பதற்கு முந்தைய
வினாடிக்கு முன்பாக
மறுக்க மறுக்க
பரிமாறப்பட்ட கூடுதல் இட்லியில்
நீண்டு கொண்டிருந்தது
பிரியங்களின் நீள் சரடு"

–அம்சப்பிரியா

### விருந்தை எதிர்கொள்ளும் தன்மை

இல்லத்தில் பலரும் நுழையும் அளவிற்கு உள்ள பெரிய வாயிலை இரவில் மூடுவதற்கு முன்னர், உணவு உண்ண வேண்டியவர்கள் யாரேனும் உள்ளீர்களா? என்று கேட்கும் வழக்கம் இருந்ததை,

"பலர்புகு வாயில் அடைப்பக் கடவுநர்
வருவீர் உளீ ரோ"

என்ற குறுந்தொகை (118) அடிகள் புலப்படுத்துகின்றன.

"மருந்தே ஆயினும் விருந்தொடு உண்" என்று கொன்றை வேந்தனில் ஔவையார் பாடியுள்ளார். அவர் பாடிய தனிப்பாடலில்,

"வரகரிசிச் சோறும் வழுதுணங்காய் வாட்டும்
முரமுரெனவே புளித்த மோரும் – திறமுடனே
புள்வேளூர்ப் பூதன் புரிந்துவிருந்து இட்டான்ஈ(து)
எல்லா உலகும் பெறும்"

என்று அவர் கூறுவதிலிருந்து வள்ளல்களால் விருந்தினர் போற்றப்பட்டதை அறியமுடிகிறது.

### உற்றாரோடு நின்ற விருந்து . . .

சங்க காலத்திலிருந்தே அரசராயினும் வறியோராயினும் விருந்தினர்களைப் போற்றினர். கால மாற்றத்தில் புதியவர்களாகிய விருந்தினர்களை வீட்டுக்குள் அழைத்து உணவிடுவது குறைந்தது. விருந்து புரப்பது குறைந்ததால் சத்திரங்கள் பெருகின. நாயக்கர், மராட்டியர் ஆட்சிக் காலங்களில் மிகுதியான சத்திரங்கள் வழிச் செல்வோர்க்காகக் கட்டப்பட்டன.

புதியவர்களான விருந்தினர்களை ஏற்பது குறைந்துவிட்ட காலத்தில், ஓரளவு தெரிந்தவர்களை மட்டுமே விருந்தினர்களாக ஏற்றனர். படிப்படியாக உற்றார் உறவினர்கள், நண்பர்கள் ஆகியோரையே விருந்தினர்களாகப் போற்றும் நிலைக்கு மாறினர்.

### விருந்தோம்பல் இன்றும். . .

புதியதாக வருவோர் இரவில் தங்குவதற்கு வீட்டின் முன்புறம் திண்ணையும் அதில் தலை வைக்கத் திண்டும் அமைத்தனர் முன்னோர். இன்று வீட்டுக்குத் திண்ணை வைத்துக் கட்டுவதுமில்லை; அறிமுகமில்லாத புதியவர்களை விருந்தினர்களாக ஏற்பதுவும் இல்லை. இருப்பினும் திருவிழாக் காலங்களில்

### தெரிந்து தெளிவோம்

**வாழை இலையில் விருந்து**

தமிழர் பண்பாட்டில் வாழை இலைக்குத் தனித்த இடமுண்டு. தலைவாழை இலையில் விருந்தினருக்கு உணவளிப்பது நம் மரபாகக் கருதப்படுகிறது. நம் மக்கள் வாழை இலையின் மருத்துவப் பயன்களை அன்றே அறிந்திருந்தனர்.

தமிழர்கள் உணவு பரிமாறும் முறையை நன்கு அறிந்திருந்தனர். உண்பவரின் இடப்பக்கம் வாழை இலையின் குறுகலான பகுதியும் வலப்பக்கம் இலையின் விரிந்த பகுதியும் வரவேண்டும். ஏனென்றால் வலது கையால் உணவு உண்ணும் பழக்கமுடையவர்கள் நாம். இலையில் இடது ஓரத்தில் உப்பு, ஊறுகாய், இனிப்பு முதலான அளவில் சிறிய உணவு வகைகளையும் வலது ஓரத்தில் காய்கறி, கீரை, கூட்டு முதலான அளவில் பெரிய உணவு வகைகளையும் நடுவில் சோறும் வைத்து எடுத்துண்ண வசதியாகப் பரிமாறுவார்கள். உண்பவர் மனமறிந்து, அவர்கள் விரும்பிச் சாப்பிடும் உணவு வகைகளைப் பரிவுடன் பரிமாறுவர்.

ஊருக்கு வரும் புதியவர்களையும் அழைத்து அன்போடு விருந்தளிப்பதைச் சில இடங்களில் காணமுடிகிறது.

திருமணத்தை உறுதி செய்தல், திருமணம், வளைகாப்பு, பிறந்தநாள், புதுமனை புகுவிழா போன்றவற்றை இல்ல விழாக்களாகவே கொண்டாடினர். அப்போது மிகுதியான விருந்தினர்களை வரவேற்று உணவளித்து மகிழ்ந்தனர். அந்த இல்லவிழா நாள்களில் அப்பகுதி வாழ் மக்களும் வெளியூர் விருந்தினர்களுக்குத் தேவையான உதவிகளைச் செய்தனர்.

காலப்போக்கில் வீட்டில் நடைபெற்ற விழாக்கள் திருமணக்கூடங்களுக்கு இடம்பெயர்ந்துவிட்டன. பண்பாட்டு மாற்றமாக இன்று சில இடங்களில் விருந்தினர்களை வரவேற்பது முதல் பந்தியில் உபசரித்து வழியனுப்பும்வரை 'திருமண ஏற்பாட்டாளர்'களே செய்யும் விருந்தோம்பல் நடைபெறுவதைக் காணமுடிகிறது.

பண்டைத் தமிழர் இல்லங்களிலும் உள்ளங்களிலும் விருந்தோம்பல் பண்பாடு செழித்திருந்தது. அந்த உயரிய தமிழ்ப் பண்பாடு இன்றைய தமிழர்களிடம் மேற்கூறிய முறைகளில் பின்பற்றப்படுகின்றது. காலந்தோறும் தமிழர்களின் அடையாளமாக விளங்கும் உயர் பண்பான விருந்தோம்பலைப் போற்றிப் பெருமிதம் கொள்வோம்.

### எத்திசையும் புகழ் மணக்க.....

அமெரிக்காவின் மினசோட்டா தமிழ்ச் சங்கம் 'வாழையிலை விருந்து விழா'வை ஆண்டுதோறும் கொண்டாடி வருகின்றது. தமிழர்களின் பாரம்பரிய உணவு வகைகளைக் கொண்டு வாழையிலையில் விருந்து வைக்கின்றனர். முருங்கைக்காய் சாம்பார், மோர்க்குழம்பு, வேப்பம்பூ ரசம், வெண்டைக்காய்க் கூட்டு, தினைப் பாயசம், அப்பளம் எனச் சுவையாகத் தமிழர் விருந்து கொடுக்கின்றனர். அங்கு வாழும் தமிழர்கள் பலரும் இந்த விருந்தில் பங்கேற்றுச் சிறப்பிக்கின்றனர். தொடர்ந்து பல பண்பாட்டு நிகழ்வுகளையும் நிகழ்த்தி வருகின்றனர்.







## கற்பவை கற்றபின்...

1. வீட்டில் திண்ணை அமைத்த காரணம், விருந்தினர் பேணுதல், தமிழர் பண்பாட்டில் ஈகை, பசித்தவருக்கு உணவிடல் – இவைபோன்ற செயல்கள் குறித்து உங்கள் வீட்டிலுள்ளவர்களிடம் கேட்டுத் தெரிந்து வந்து கலந்துரையாடல் செய்க.
2. "இட்டதோர் தாமரைப்பூ<br>இதழ்விரித் திருத்தல் போலே<br>வட்டமாய்ப் புறாக்கள்கூடி<br>இரையுண்ணும்................."  பாரதிதாசனார்<br>இவ்வாறாகக் கவிதைகளில் பதிவு செய்யப்பட்டுள்ள பகிர்ந்துண்ணல் குறித்துப் பேசுக.

கவிதைப் பேழை

# பண்பாடு

ரு

## காசிக்காண்டம்

*– அதிவீரராம பாண்டியர்*

54AWDF

**நுழையும்முன்**

விருந்தோம்பல் முறைகள் வேறுவேறாக இருந்தாலும் எல்லாச் சமூகங்களிலும் இப்பண்பாடு போற்றப்படுகிறது. விருந்தினரை உளமார வரவேற்று விருந்தளிக்கும் முறைபற்றி இலக்கியங்கள் பேசுகின்றன. விருந்தினர் மனம் மகிழக்கூடிய முறைகளில் விருந்தோம்ப வேண்டுமல்லவா? அத்தகைய பாடல் ஒன்று விருந்தோம்பும் நெறியை வரிசைப்படுத்திக் காட்டுகிறது.



*விருந்தினனாக ஒருவன் வந்து எதிரின்*
*வியத்தல் நன்மொழி இனிது உரைத்தல்*
*திருந்துற நோக்கல் வருக என உரைத்தல்*
*எழுதல் முன் மகிழ்வன செப்பல்*
*பொருந்து மற்றுஅவன் தன்அருகுற இருத்தல்*
*போமெனில் பின் செல்வதாதல்*
*பரிந்துநன் முகமன் வழங்கல் இவ்வொன்பான்*
*ஒழுக்கமும் வழிபடும் பண்பே* *

*இல்லொழுக்கம், (பா எண் : 17)*

### சொல்லும் பொருளும்

அருகுற – அருகில்

முகமன் – ஒருவரை நலம் வினவிக் கூறும் விருந்தோம்பல் சொற்கள்

## பாடலின் பொருள்

விருந்தினராக ஒருவர் வந்தால், அவரை வியந்து உரைத்தல், நல்ல சொற்களை இனிமையாகப் பேசுதல், முகமலர்ச்சியுடன் அவரை நோக்குதல், 'வீட்டிற்குள் வருக' என்று வரவேற்றல், அவர் எதிரில் நிற்றல், அவர்முன் மனம் மகிழும்படி பேசுதல், அவர் அருகிலேயே அமர்ந்துகொள்ளுதல், அவர் விடைபெற்றுச் செல்லும்போது வாயில்வரை பின் தொடர்ந்து செல்லல், அவரிடம் புகழ்ச்சியாக முகமன் கூறி வழியனுப்புதல் ஆகிய ஒன்பதும் விருந்தோம்பல் செய்யும் இல்லற ஒழுக்கமாகும்.

## இலக்கணக்குறிப்பு

நன்மொழி – பண்புத்தொகை

வியத்தல், நோக்கல், எழுதல், உரைத்தல், செப்பல், இருத்தல், வழங்கல் } தொழிற்பெயர்கள்

## பகுபத உறுப்பிலக்கணம்

உரைத்த – உரை + த் + த் + அ

உரை – பகுதி
த் – சந்தி
த் – இறந்த காலஇடைநிலை
அ – பெயரெச்ச விகுதி

வருக – வா(வரு) + க

வா – பகுதி
வரு எனத் திரிந்தது விகாரம்
க – வியங்கோள் வினைமுற்று விகுதி

"ஒப்புடன் முகம் மலர்ந்தே
உபசரித்து உண்மை பேசி
உப்பிலாக் கூழ் இட்டாலும்
உண்பதே அமிர்தம் ஆகும்
முப்பழமொடு பால் அன்னம்
முகம் கடுத்து இடுவாராயின்
கப்பிய பசியி னோடு
கடும்பசி ஆகும் தானே"

–விவேகசிந்தாமணி. (4)

### நூல் வெளி

காசி நகரத்தின் பெருமைகளைக் கூறுகிற நூல் காசிக்காண்டம். இந்நூல் துறவு, இல்லறம், பெண்களுக்குரிய பண்புகள், வாழ்வியல் நெறிகள், மறுவாழ்வில் அடையும் நன்மைகள் ஆகியவற்றைப் பாடுவதாக அமைந்துள்ளது. 'இல்லொழுக்கங் கூறிய' பகுதியிலுள்ள பதினேழாவது பாடல் பாடப்பகுதியாக இடம்பெற்றுள்ளது.

முத்துக் குளிக்கும் கொற்கையின் அரசர் அதிவீரராம பாண்டியர். தமிழ்ப் புலவராகவும் திகழ்ந்த இவர் இயற்றிய நூலே காசிக்காண்டம். இவரின் மற்றொரு நூலான வெற்றி வேற்கை என்றழைக்கப்படும் நறுந்தொகை சிறந்த அறக்கருத்துகளை எடுத்துரைக்கிறது. சீவலமாறன் என்ற பட்டப்பெயரும் இவருக்கு உண்டு. நைடதம், லிங்கபுராணம், வாயு சம்கிதை, திருக்கருவை அந்தாதி, கூர்ம புராணம் ஆகியனவும் இவர் இயற்றிய நூல்கள்.

## கற்பவை கற்றபின்...

*நெடுநாளாகப் பார்க்க எண்ணியிருந்த உறவினர் ஒருவர் எதிர்பாராத வகையில் உங்கள் வீட்டிற்கு வருகிறார். நீங்கள் அவரை எதிர்கொண்டு விருந்து அளித்த நிகழ்வினை விரிவாக எழுதிப் படித்துக் காட்டுக.*

கவிதைப் பேழை

# பண்பாடு

௩

## மலைபடுகடாம்

*– பெருங்கௌசிகனார்*

83G4JE

**நுழையும்முன்**

பண்டைத் தமிழர்கள் பண்பில் மட்டுமன்றி, கலைகளிலும் சிறந்து விளங்கினர். அன்று கூத்தர், பாணர், விறலியர் போன்ற கலைஞர்கள் ஊர் ஊராகச் சென்று தம் கலைத்திறன்களை நிகழ்த்திக்காட்டி மக்களை மகிழ்வித்தனர். அவர்களுக்கு மன்னர்களும் வள்ளல்களும் விருந்தோம்பியும் பரிசளித்தும் போற்றினர். அவ்வகையாக விருந்தோம்பிய தன்மையைக் காட்சிப்படுத்துகிறது தினைச்சோற்று விருந்து.

*அன்று அவண் அசைஇ, அல்சேர்ந்து அல்கி,*
*கன்று எரி ஒள்இணர் கடும்பொடு மலைந்து*
*சேந்த செயலைச் செப்பம் போகி,*

*அலங்கு கழை நரலும் ஆரிப்படுகர்ச்*
*சிலம்பு அடைந்திருந்த பாக்கம் எய்தி*
*நோனாச் செருவின் வலம்படு நோன்தாள்*
*மான விறல்வேள் வயிரியம் எனினே,*

*நும்இல் போல நில்லாது புக்கு,*
*கிழவிர் போலக் கேளாது கெழீஇ*
*சேட் புலம்பு அகல இனிய கூறி*
*பரூஉக்குறை பொழிந்த நெய்க்கண் வேவையொடு*
*குரூஉக்கண் இறடிப் பொம்மல் பெறுகுவிர்*

*அடி : 158 – 169*



### சொல்லும் பொருளும்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அசைஇ | – | இளைப்பாறி, | அல்கி | – | தங்கி |
| கடும்பு | – | சுற்றம், | நரலும் | – | ஒலிக்கும் |
| ஆரி | – | அருமை, | படுகர் | – | பள்ளம் |
| வயிரியம் | – | கூத்தர், | வேவை | – | வெந்தது |
| இறடி | – | தினை, | பொம்மல் | – | சோறு |

### பாடலின் பொருள்

நன்னனைப் புகழ்ந்து பாடிப் பரிசில் பெற்ற கூத்தர், பரிசில் பெறப்போகும் கூத்தரைக் கானவர்களின் வளம் நிறைந்த புதுவருவாயை உடைய சிறிய ஊர்களில் தங்கி உணவு பெறுவதற்கு வழிப்படுத்துதல்.

"பகலில் இளைப்பாறிச் செல்லுங்கள்; இரவில் சேர்ந்து தங்குங்கள்; எரியும் நெருப்பைப் போல ஒளிரும் பூங்கொத்துகளைச் சுற்றத்தோடு அணிந்துகொள்ளுங்கள்; சிவந்த பூக்கள் கொண்ட அசோக மரங்களை உடைய பொருத்தமான பாதையில் செல்லுங்கள்; அசையும் மூங்கில்கள் ஓசை எழுப்பும் கடினப்பாதையில் சென்று மலைச்சரிவில் உள்ள சிற்றூரை அடையுங்கள். அங்குள்ளவர்களிடம், 'பகைவரைப் பொறாமல் போர் செய்யும் வலிய முயற்சியும் மானமும் வெற்றியும் உடைய நன்னனின் கூத்தர்கள்' என்று சொல்லுங்கள்.

அதன் பிறகு நீங்கள் உங்கள் வீட்டிற்குள் போவது போலவே அவர்களுடைய வீட்டுக்குள் உரிமையுடன் நுழையுங்கள். உறவினர் போலவே அவர்கள் உங்களுடன் பழகுவர். நீண்ட வழியைக் கடந்துவந்த உங்களின் துன்பம்தீர இனிய சொற்களைக் கூறுவர். அங்கே, நெய்யில் வெந்த மாமிசத்தின் பொரியலையும் தினைச் சோற்றையும் உணவாகப் பெறுவீர்கள்."

### இலக்கணக் குறிப்பு

அசைஇ, கெழீஇ – சொல்லிசை அளபெடைகள்

பரூஉக், குரூஉக்கண் } – சொல்லிசை அளபெடைகள்

### பகுபத உறுப்பிலக்கணம்

மலைந்து – மலை + த்(ந்) + த் + உ

மலை – பகுதி

த் – சந்தி 'ந்' ஆனது விகாரம்

த் – இறந்தகால இடைநிலை

உ – வினையெச்ச விகுதி

பொழிந்த – பொழி + த்(ந்) + த் + அ

பொழி – பகுதி

த் – சந்தி 'ந்' ஆனது விகாரம்

த் – இறந்தகால இடைநிலை

அ – பெயரெச்ச விகுதி

ஆற்றுப்படுத்தும் கூத்தன், வள்ளலை நாடி எதிர்வரும் கூத்தனை அழைத்து, யாம் இவ்விடத்தே சென்று இன்னவெல்லாம் பெற்று வருகின்றோம், நீயும் அந்த வள்ளலிடம் சென்று வளம்பெற்று வாழ்வாயாக என்று கூறுதல் ஆற்றுப்படை.



### நூல் வெளி

பத்துப்பாட்டு நூல்களுள் ஒன்று 'மலைபடுகடாம்'. 583 அடிகளைக் கொண்ட இது கூத்தராற்றுப்படை எனவும் அழைக்கப்படுகிறது; மலையை யானையாக உருவகம் செய்து மலையில் எழும் பலவகை ஓசைகளை அதன் மதம் என்று விளக்குவதால் இதற்கு மலைபடுகடாம் எனக் கற்பனை நயம் வாய்ந்த பெயர் சூட்டப்பட்டுள்ளது.

நன்னன் என்னும் குறுநில மன்னனைப் பாட்டுடைத் தலைவனாக் கொண்டு இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர் பெருங்கௌசிகனார் பாடியது மலைபடுகடாம்.

## கற்பவை கற்றபின்...

1. **உணவு, விருந்து குறித்த பழமொழிகளைத் திரட்டி, அவை சார்ந்த நிகழ்வுகளை எடுத்துரைக்க.**

   எ.கா. 'உப்பிட்டவரை உள்ளளவும் நினை'

2. **பத்தியைப் படித்து, வார இதழ் ஒன்றிற்கு அனுப்பும் வகையில் சமையல் குறிப்பாக மாற்றுக.**

   **கம்மங்கூழ்**

   பொசுக்குகிறது வெயில். ஒரு துளி மழை பட்டால் வறுத்த உளுந்தின் வாசம் பரப்பும் வறண்ட மண். வெடித்த நிலம். செழித்து விளைகிறது கம்மம் பயிர். உரலில் குத்தி, சுளகில் புடைக்க அதன் உமி நீங்கும். நீர் தெளித்துத் தெளித்து, மீண்டும் உரலில் இடிக்க அது ஒன்றுடன் ஒன்று ஒட்டி மாவாகும். உப்புக்கலந்து, உலையில் ஏற்றி, கொதிக்கும் நீரில் கரையவிட்டுக் கிண்ட, கட்டியாகி அது சோறாகும். கம்மஞ் சோற்றை உருட்டிவைத்து, பின் மோர் விட்டுக் கரைத்தால் அது கம்மங்கஞ்சி அல்லது கம்மங்கூழ். மோர்மிளகாய் வற்றல், உப்பில் தோய்த்த பச்சை மிளகாய் அல்லது சின்ன வெங்காயம் கடித்துக் கஞ்சியைக் குடித்தால் உச்சி தொட்டு உள்ளங்கால்வரை தேகம் குளிர்ந்து போகும். அனல் அடங்கும். உயிர் வரும். கம்பு – கறுப்பு நிறக் கரிசல் மண்ணின் இயற்கைத் தங்கம்.

விரிவானம்

# பண்பாடு ௩

# கோபல்லபுரத்து மக்கள்

– கி.ராஜநாராயணன்

255P7G

**நுழையும்முன்**

கிராமத்து வெள்ளந்தி மனிதர்கள் காட்டும் விருந்தோம்பல் மனசுக்குள் எப்பவும் பசுமையாக இருக்கும். அவர்களது இயல்பான வரவேற்பும் எளிமையான உணவும் மதிய வேக்காட்டில் நடந்துவந்த களைப்பை மறக்கடிக்கச் செய்யும். பசித்த வேளையில் வந்தவர்களுக்குத் தம்மிடம் இருப்பதையே பகிர்ந்து கொடுக்கிற நேயம் கிராமத்து விருந்தோம்பல். அப்படி நடக்கும் ஒரு நிகழ்வு நம் கண் முன் காட்சியாகிறது.



சுப்பையாவின் புஞ்சையில் அருகு எடுத்துக் கொண்டிருந்தார்கள்.

அதிகாலை நேரத்தில் ஒரு பாச்சல் அருகு எடுத்து முடித்துவிட்டுக் காலைக் கஞ்சி குடிக்க உட்காரப் போகும் வேளை, யாரோ ஒரு சன்யாசியைக் கூட்டிக்கொண்டு அன்னமய்யா தூரத்தில் வருவது தெரிந்தது. வாயிலிருந்த பல்க்குச்சியை எடுத்துத் துப்பிவிட்டு சுப்பையா கேட்டான், "யாரோ ஒரு சாமியாரை இழுத்துட்டு வாரான்?"

"வரட்டும் வரட்டும்; ஒரு வயித்துக்குக் கஞ்சி ஊத்தி நாமும் குடிப்போம்" என்றார் கொத்தாளி.

அந்தப் புஞ்சை ரோட்டோரத்தில் இருந்ததால் இப்படி தேசாந்திரிகள் வந்து இவர்களிடம் தண்ணீரோ கஞ்சியோ சாப்பிட்டு விட்டுப் போவது வழக்கம்.

அன்னமய்யாவின் கூட வந்தது சன்யாசியோ பரதேசியோ இல்லை. அந்த ஆள் நடக்க முடியாமல் உட்கார்ந்து உட்கார்ந்து

எழுந்திருந்து ஆயாசமாக, மெதுவாக நடந்து வந்து கொண்டிருந்தான். தாடியும் அழுக்கு ஆடையும் அந்தத் தள்ளாட்டமும் ஒரு பார்வைக்கு வயோதிகனாகவும் சாமியாரைப் போலவும் தோணவைத்தது. தற்செயலாக அந்தப் பக்கம் வந்த அன்னமய்யாவின் கண்ணில் இதுபட்டது. கிட்டே போய்ப் பார்த்த பிறகுதான் தெரிந்தது அவன் ஒரு வாலிபன் என்று. கால்களை நீட்டி, புளிய மரத்தில் சாய்ந்து உட்கார்ந்திருந்த அவனை நெருங்கிப் போய்ப் பார்த்தபோது, பசியால் வாடிப் போய்விட்ட அந்த முகத்தில் தெரிந்த கண்களின் தீட்சண்யம், கவனிக்கக் கூடியதாய் இருந்தது. அன்னமய்யாவைப் பார்த்ததும் அவன் ஒரு சிறு புன்னகை காட்டினான். பேசுவதற்கு இஷ்டப்படாதது போலிருந்தது அவன் இருப்பு. அந்த ரோடு வழியாக எத்தனையோ வகை தேசாந்திரிகள் வகைவகையான மொழியில் புரியாதபடி பேசிக்கொண்டு நடந்து வருவார்கள். அவர்களில் முக்கியமானவர்கள் லாட சன்யாசிகள். அவர்கள் வேட்டிகட்டிக் கொண்டிருப்பதே ஒரு தினுசு! இடுப்பை மறைத்த வேட்டி அதன் ரண்டு சொருகுநுனிகளும் குறுக்க மறுக்க மார்பின் மேலேறிப் பிடரியில் வந்து முடிச்சாகி இருக்கும். வேட்டியே, வேட்டியும் மேல் வேட்டியுமாக அவர்கள் அப்படி அதை உடுத்தியிருப்பதைப் பார்க்கும் கோபல்லபுரத்துக் குழந்தைகள், அதேபோல் தங்கள் தகப்பனார்களின் மேல்த் துண்டுகளை எடுத்து உடுத்திக்கொண்டு லாட சன்யாசி விளையாட்டு விளையாடியது அன்னமய்யாவுக்கு ஞாபகம் வந்தது.

தன்னைப் பார்த்து ஒரு நேசப் புன்னகை காட்டிய அந்த வாலிப மனிதனிடம் போய் கிட்டே நின்று பார்த்துக் கொண்டே இருந்தான் அன்னமய்யா வாய் திறக்காமல்.

கொஞ்சம் அலுப்புத் தீர்ந்தவுடன், "தம்பி, கொஞ்சம் குடிக்கத் தண்ணி கிடைக்குமா?" என்று தமிழில் அவன் பேசியது இவனுக்கு ரொம்ப ஆச்சரியமாக சந்தோஷமாக இருந்தது. "இந்தா பக்கத்துல அருகெடுத்துக் கிட்டிருக்கிறவங்ககிட்ட நீச்சுத் தண்ணி இருக்கும்; வாங்கிட்டு வரட்டுமா?"

"நீச்சுத் தண்ணி"? என்று தனக்குள் அந்த வாலிபன் சொல்லிப் பார்த்துக் கொள்வது தெரிந்தது. கொஞ்சம் கை அமர்த்திவிட்டு, நாமே அங்கே போய்விடலாமே என்பது போல் அங்கே அவர்களைப் பார்த்தான். எழுந்திருப்பதுக்கு ஒத்தாசனையாக நீட்டிய கையை நன்றியுடன் மறுத்துவிட்டு அவனே சிரமப்பட்டு எழுந்து நின்றான்.

"எங்கிருந்து வர்ரீங்க?"

கேள்விக்குப் பதில், அலுப்புடன் கூடிய ஒரு இதழ் விரியாத சிரிப்பே பதிலாக வந்தது.

சொல்லுகிறேன் என்றும் இப்பவே அது தேவைதானா என்றும் இப்ப அதெல்லாம் எதுக்கு, கொஞ்சம் பொறு என்பது போலெல்லாம் இருந்தது அந்தச் சிரிப்பு.

அன்னமய்யா தனது தோளைப் பிடித்துக் கொண்டு நடந்து வரும்படியாகக் கேட்டபோதும் அந்த ஆள் அதே சிரிப்போடு மறுத்துவிட்டு அவனோடு மெதுவாக நடந்து வந்தான்.

ஒரு வேப்பமரத்தின் அடியில் ஏகப்பட்ட மண் கலயங்கள் இருந்தன. அந்தக் கறுப்புக் கலயங்கள் அந்தக் கரிசல் மண்தரையில் பாதி புதைக்கப்பட்டிருந்தன. தேங்காய்ப் பருமனுள்ள கற்களால் அந்தக் கலயங்களின் வாய் மூடப்பட்டிருந்தது. காகங்கள் வந்து கஞ்சிக் கலயங்களை உருட்டிவிடாமலும் அலகை நுழைத்து அசிங்கப்படுத்திவிடாமலும் இருக்க இந்த ஏற்பாடு என்று அந்த மனிதன் பிறகு கேட்டுத் தெரிந்து கொண்டான்.

அன்னமய்யா ஒரு கலயத்தின்மேல் வைக்கப்பட்ட கல்லை அகற்றினான். ஒரு சிரட்டையில் காணத்துவையலும் ஊறுகாயும் இருந்தது. சிரட்டையே அந்தக் கலயத்தின் வாய்மூடியாகவும் அமைந்திருந்தது. இன்னொரு கலயத்தின் மேலிருந்த கல்லை எடுத்துப் பார்த்தபோது அதேபோல் இருந்த சிரட்டையில் மோர்மிளகாய் மட்டுமே இருந்தது. அதை இந்தச் சிரட்டையில் தட்டினான். சிரட்டையைத் துடைத்துச் சுத்தப்படுத்தினான். அந்தக் கலயத்தைப் பதனமாகத் தனது

## தெரிந்து தெளிவோம்

**கரிசல் இலக்கியம்**

கோவில்பட்டியைச் சுற்றிய வட்டாரப் பகுதிகளில் தோன்றிய இலக்கிய வடிவம் கரிசல் இலக்கியம். காய்ந்தும் கெடுக்கிற, பெய்தும் கெடுக்கிற மழையைச் சார்ந்து வாழ்கிற மானாவாரி மனிதர்களின் வாழ்க்கையைச் சொல்லும் இலக்கியங்கள் இவை. கரிசல் மண்ணின் படைப்பாளி கு. அழகிரிசாமி கி.ராஜநாராயணனுக்கு முன் எழுதத் தொடங்கியவர். கரிசல் களத்தையும் அங்குள்ள மக்களையும் மையப்படுத்திக் கரிசல் இலக்கியத்தை நிலைநிறுத்தியவர் கி.ராஜநாராயணன். அந்தக் கரிசல் இலக்கியப் பரம்பரை இன்றளவும் தொடர்கிறது பா.செயப்பிரகாசம், பூமணி, வீரவேலுசாமி, சோ.தர்மன், வேல ராமமூர்த்தி, இன்னும் பலரின் மூலமாக...

வலதுபாதத்தின்மேல் வைத்து, சிரட்டையில் நீத்துபாகத்தை வடித்து அவனிடம் நீட்டினான். கையில் வாங்கியதும் சப்பிக்குடிப்பதா அண்ணாந்து குடிப்பதா என்கிற தயக்கம் வந்தபோது "சும்மா கடிச்சிக் குடிங்க" என்றான். உறிஞ்சும்போது கண்கள் சொருகின. மிடறு தொண்டை வழியாக இறங்குவதன் சொகத்தை முகம் சொல்லியது.'உக்காருங்க. உக்காந்து குடிங்க' என்று உபசரித்தான்.

உட்கார்ந்த பிறகு, ரண்டாவது சிரட்டைக்குக் கலயத்தைப் பாதத்தின் பேரிலேயே வைத்துச் சுற்றி ஆட்டியதும் தெளிவு மறைந்து சோற்றின் மகுளி மேலே வந்ததும் அதை வார்த்துக் கொடுத்தான். அதை உறிஞ்சிக் குடிக்கும் போது "ஹ!" என்கிற அனுபவிப்பின் குரல் அவனிடமிருந்து வந்தது.

கலயத்திலிருந்து சிரட்டை வழியாக மடக்கு மடக்காய் அவனுள் ஜீவஊற்று பொங்கி நிறைந்து வந்தது.

சிரட்டையைக் கையளித்துவிட்டு அப்படியே அந்த வேப்ப மரத்து நிழலே சொர்க்கமாய்ப் படுத்ததும் அவனைத் தென்னல்க் காற்றே தூக்கமாக வந்து அயரச் செய்தது.

வந்தவனுக்கு எப்படி ஒரு நிறைவு ஏற்பட்டதோ அதைவிட மேலான ஒரு நிறைவு அன்னமய்யாவுக்கு ஏற்பட்டது. மார்பில் பால் குடித்துக் கொண்டிருக்கும் போதே வயிறு நிறைந்ததும் அப்படியே தூங்கிவிடும் குழந்தையைப் பார்ப்பதுபோல அவனை ஒரு பிரியத்தோடு பார்த்துக் கொண்டிருந்தான் அன்னமய்யா.

அந்த வரத்துக்காரனின் சிறு தூக்கம் முடியும்வரை அன்னமய்யா காத்திருந்தான். அந்தப் பக்கத்தில் தொகுதி தொகுதியாக அருகு எடுத்துக் கொண்டிருந்தார்கள். கரிசல் காட்டுச் சம்சாரிகளுக்கு அருகு ஒரு அரக்கன். வெட்ட வெட்டத் தலைமுளைப்பது போல அவர்களோடு அது விளையாட்டுக் காட்டிக் கொண்டிருந்தது. கள்ளிக்கு ஒரு வெள்ளபூச்சியைக் கண்டுபிடித்த வெள்ளைக்காரன், அருகை அழிக்க ஒரு மருந்து கண்டுபிடிக்கல்லையே என்கிற கோபம் சம்சாரிகளுக்கு. "அருகு எடுக்கிறதுலேயே நம்ம வாழ்நாள் முக்காவாசி போயிரும் போல" சடைத்துப் புளித்துப் போவார் அன்னமய்யாவின் பாட்டனார்.

அன்னமய்யாவின் புஞ்சைக்குப் பக்கத்துலதான் சுப்பையாவின் புஞ்சையும். அங்கே போனால் சுப்பையாவும் இருப்பான். இவர் எழுந்திரிச்சதும் அங்கே கூட்டிக் கொண்டு போவோம் என்று நினைத்தபோது அந்த ஆளிடம் ஒரு அலுக்கம் தெரிந்தது. சரி; முழிப்பு வந்தாச்சி என்று நினைத்துப் பார்த்தபோது அந்த ஆளிடமிருந்து நன்றி கலந்த புன்னகை வெளிப்பட்டது.

எழுந்திருக்க மனசில்லாமல் படுத்துக்கொண்டே பேசினான் அந்த ஆள். உங்கள் ஊர் பெயரென்ன? என்று கேட்டான். தெரிந்துகொண்டபோது அந்தப் பெயர் அவனுக்கு விநோதமாகத் தெரிந்திருக்க வேண்டும் போலப் பட்டது.

"எங்கருந்து வர்ரீங்க. எங்க போகனும்?"

"ரொம்பத் தொலவட்லயிருந்து வர்ரென்; எங்கதெ பெரிசு!" என்றான். தம்பீ ஒம் பெயரென்ன?"

"அன்னமய்யா"

வந்தவன் அந்தப் பேரை மனசுக்குள் திருப்பித் திருப்பிச் சொல்லிப் பார்த்துக் கொண்டான். எவ்வளவு பொருத்தம் என்று நினைத்துக் கொண்டான் போலிருக்கிறது! 'எனக்கு இன்று நீ இடும் அன்னம் தான்'...

பதிலுக்குப் பெயர் என்ன என்று கேட்க வேண்டும் போல் தோன்றியதால் அன்னமய்யா கேட்டான். கொஞ்சம் தயங்கியபின் என்னோட சொந்தப் பெயர் பரமேஸ்வரன். அதை இப்போதைக்கு மறந்துரு. இப்பொப் பேர் மணி. மணின்னே கூப்பிடு. நா எங்கிருந்து வர்றேன்ங்கிறதெல்லாம் சாவகாசமாச் சொல்றேன் என்று சொல்லிவிட்டு, " இப்போ நாம எங்க போகணும் சொல்லு" என்று கேட்டான். "அந்தோ... அங்கெ," என்று கை காட்டினான். "அங்கெ என்னொட பிரண்டு – சுப்பையா ன்னு பேரு – காலேஜ்ல படிக்கான். லீவுக்கு வந்திருக்கான். அவங்க பிஞ்சையிலேயும் அருகெடுக்கிறாங்க, அங்க போவமா?"

"ஓ! போவமே"

அன்னமய்யாவையும் புதுஆளையும் அவர்கள் மந்தகாசத்துடன் வரவேற்றார்கள். புதாளை அவர்கள் தங்களோடு உண்ணும்படி உபசரித்தார்கள். மணி அவர்களோடு வட்டத்தில் சேர்ந்து உட்கார்ந்தார். கையைக் கழுவிக் கொள்ளவேண்டும் என்று அவருக்குத் தோன்றியது. ஆனால் அவர்களில் யாருமே சாப்பிடுவதற்கு முன்னால் கையைக் கழுவிக் கொள்வதாகத் தெரியவில்லை! அவர்களுக்கானது நமக்கு என்று அவர் கையை நீட்டினார். ஒரு கால் உருண்டை கம்மஞ்சோற்றை அவருடைய இடதுகையில் வைத்தார்கள். இடது கையிலா என்று தயங்கினார். ஆம் இடது கையில்த் தான் என்று தெரிந்தது. அன்னமய்யாவும் சுப்பையாவும் அப்படித்தான் பெற்றுக்கொண்டார்கள். அவர்களைப் பார்த்து அவரும் இடதுகைச் சோற்றில் ஒரு சிறு பள்ளம் செய்து கொண்டார். அந்தப் பள்ளத்தில் துவையலை வைத்தார்கள். சிறிது சோற்றை எடுத்துத் துவையலில் பட்டதோ படலையோ என்று தொட்டு கழுக் என்று முழுங்கினார்கள். யாரோடும் யாரும் எதுவும் பேசிக்கொள்ளவில்லை. முழுங்குவதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தார்கள்! அவர்கள் உண்ணுகிற வேகம் ஆர்வம் அனுபவிப்பு இதெல்லாம் பார்த்தபோது இந்த உணவு எவ்வளவு ருசியாக இருக்குமோ என்று பட்டது மணிக்கு. முதலில் கொஞ்சம் வெறும் சோற்றை எடுத்து ருசி பார்த்தார். அந்தச் சோற்றின் நெடி அவரை என்னவோ செய்தது! துவையலோடு சேர்த்துச் சாப்பிட்டால் கொஞ்சம் பரவாயில்லை என்பது போல்ப் பட்டது. அந்தக் கடுமையான பசியிலும் அவரால் அரை உருண்டைக்கு மேல் சாப்பிட முடியவில்லை.

அன்னமய்யாவும் சுப்பையாவும் ஆளுக்கு ஒரு உருண்டைதான் சாப்பிட்டார்கள். சாப்பிட்டு முடித்து அவர்கள் மண்ணினால் கைகளைச் சுத்தப்படுத்தியதைப் பார்த்து அவரும் அதேபோல் மண்ணை எடுத்து கைகளில்த் தேய்த்துச் சுத்தப்படுத்திக் கொண்டார்.

அவர்கள் சாப்பிட்டு முடிந்ததும் கொஞ்சம் ஒய்வாக உட்கார்ந்து ஊர்க்கதைகள் பேச ஆரம்பித்தார்கள். சுண்ணாம்பு கேட்கவும் தீப்பெட்டி கேட்கவும் சிலர் பக்கத்துத் தொகுதிகளிடம் போனார்கள். மணி திரும்பவும் படுத்து அமைதியாகக் கண்களை மூடிக்கிடந்தார்.

### வட்டார வழக்குச் சொற்கள்

| | |
|---|---|
| பாச்சல் | – பாத்தி |
| பதனம் | – கவனமாக |
| நீத்துப்பாகம் | – மேல்கஞ்சி |
| கடிச்சு குடித்தல் | – வாய்வைத்துக்குடித்தல் |
| மகுளி | – சோற்றுக் கஞ்சி |
| வரத்துக்காரன் | – புதியவன் |
| சடைத்து புளித்து | – சலிப்பு |
| அலுக்கம் | – அழுத்தம் (அணுக்கம்) |
| தொலவட்டையில் | – தொலைவில் |

## நூல் வெளி

கோபல்ல கிராமம் என்னும் புதினத்தைத் தொடர்ந்து எழுதப்பட்ட கதையே கோபல்லபுரத்து மக்கள். ஆசிரியர் தன் சொந்தஊரான இடைசெவல் மக்களின் வாழ்வியல் காட்சிகளுடன் கற்பனையையும் புகுத்தி இந்நூலினைப் படைத்துள்ளார். இதன் ஒரு பகுதியே இங்குப் பாடமாக உள்ளது. இந்திய விடுதலைப் போராட்டத்தினைப் பின்னணியாகக் கொண்டது இந்நூல். இது 1991ஆம் ஆண்டிற்கான சாகித்திய அகாதெமி விருதினைப் பெற்றது.

கோபல்லபுரத்து மக்கள் கதையின் ஆசிரியர் கரிசல் எழுத்தாளர் கி.ராஜநாராயணன். இருபதுக்கும் மேற்பட்ட நூல்களைப் படைத்துள்ள இவரின் கதைகள் ஒரு கதைசொல்லியின் கதைப்போக்கில் அமைந்திருக்கும். இவரின் கதைகள் அனைத்தும் கி.ராஜநாராயணன் கதைகள் என்னும் தலைப்பில் தொகுப்பாக வெளிவந்துள்ளன; இவர் கரிசல் வட்டாரச் சொல்லகராதி ஒன்றை உருவாக்கியுள்ளார். இவர் தொடங்கிய வட்டாரமரபு வாய்மொழிப் புனைகதைகள் 'கரிசல் இலக்கியம்' என்று அழைக்கப்படுகின்றன. எழுத்துலகில் இவர் கி.ரா. என்று குறிப்பிடப்படுகிறார்.

### முன்தோன்றிய மூத்தகுடி

*"கறங்கு இசை விழவின் உறந்தை....."*

*அகநானூறு, 4 :14*

**திருச்சி மாவட்டத்தின் உறையூர்**

## கற்பவை கற்றபின்...

1. பசித்தவருக்கு உணவிடுதல் என்ற அறச்செயலையும் விருந்தினருக்கு உணவிடுதல் என்ற பண்பாட்டுச் செயலையும் ஒப்பிட்டுப் பேசுக.
2. உங்கள் கற்பனையை இணைத்து நிகழ்வைக் கதையாக்குக.

அப்பாவுக்கும் அம்மாவுக்கும் இடையே சின்னஞ்சிறு சச்சரவுகள் ஏற்பட்டு, இரண்டு பேருமே முகத்தைத் தூக்கி வைத்துக்கொண்டு ஆளுக்கொரு மூலையில் உட்கார்ந்திருக்கும்போது, விருந்தினர் வருகை அவர்களை அன்பான கணவன் மனைவியராக மாற்றிவிடும். அம்மாவின் கெடுபிடியும் அப்பாவின் கீழ்ப்படிதலும் ஆச்சரியமாக இருக்கும். விருந்தாளிகள் அடிக்கடி வர மாட்டார்களா என்று இருக்கும்.

**விருந்தினர் தினம் என்பது எப்படி விடியும் தெரியுமா?**

காலையிலிருந்தே வீட்டுக்குள்ளிருந்து வாசலுக்கு வந்து வந்து எட்டிப் பார்த்துச் செல்வாள் அம்மா. திண்ணையில் பேப்பர் பார்த்துக் கொண்டிருக்கும் அப்பா கேட்பார். "என்ன விஷயம், இன்னிக்கு யாராவது விருந்தாளி வரப்போறாங்களா என்ன? " "ஏங்க.. . காலையிலேருந்து வேப்ப மரத்துல காக்கா விடாம கத்திக்கிட்டே இருக்கே பார்க்கலியா? நிச்சயம் யாரோ விருந்தாளி வரப் போறாங்க பாருங்க. " "அடடே, ஆமாம் காக்கா கத்துது. யாரு வரப் போறா? இது பலாப்பழ சீசன் ஆச்சே . . உன் தம்பிதான் வருவான், பலாப்பழத்தைத் தூக்கிக்கிட்டு" – நாங்கள் ஓடிப்போய் தெருவில் பார்ப்போம். அப்பா சொன்னதும் சரி, காக்கா கத்தியதும் சரி. தூரத்தில் தெரு முனையில் அறந்தாங்கி மாமா தலையில் பலாப்பழத்துடன் வந்து கொண்டிருப்பார். அம்மாவுக்குக் காக்கை மொழி தெரியும்!

*–தஞ்சாவூர்க் கவிராயர்*

கற்கண்டு

பண்பாடு ௩

# தொகாநிலைத் தொடர்கள்

AM3GP2

### தொகாநிலைத்தொடர்

ஒரு தொடர் மொழியில் இருசொற்கள் இருந்து அவற்றின் இடையில் சொல்லோ உருபோ இல்லாமல் அப்படியே, பொருளை உணர்த்துவது தொகாநிலைத் தொடர் எனப்படும்.

**எ.கா** காற்று வீசியது
குயில் கூவியது

முதல் தொடரில் "காற்று" என்னும் எழுவாயும் "வீசியது" என்னும் பயனிலையும் தொடர்ந்து நின்று வேறுசொல் வேண்டாது பொருளை உணர்த்துகின்றது.

அதேபோன்று இரண்டாவது தொடரிலும் எழுவாயும் பயனிலையும் தொடர்ந்து நின்று குயில் கூவியது என்னும் பொருளைத் தருகின்றது.

### தொகாநிலைத் தொடரின் ஒன்பது வகைகள்

#### 1. எழுவாய்த்தொடர்

எழுவாயுடன் பெயர், வினை, வினா ஆகிய பயனிலைகள் தொடர்வது எழுவாய்த்தொடர் ஆகும்.

இனியன் கவிஞர் – பெயர்

காவிரி பாய்ந்தது – வினை

பேருந்து வருமா? – வினா

மேற்கண்ட மூன்று தொடர்களிலும் பெயர், வினை, வினா ஆகியவற்றுக்கான பயனிலைகள் வந்து எழுவாய்த் தொடர்கள் அமைந்துள்ளன.

#### 2. விளித்தொடர்

விளியுடன் வினை தொடர்வது விளித்தொடர் ஆகும்.

நண்பா எழுது! – "நண்பா" என்னும் விளிப்பெயர் "எழுது" என்னும் பயனிலையைக்கொண்டு முடிந்துள்ளது.

#### 3. வினைமுற்றுத்தொடர்

வினைமுற்றுடன் ஒரு பெயர் தொடர்வது வினைமுற்றுத்தொடர் ஆகும்.

பாடினாள் கண்ணகி

"பாடினாள்" என்னும் வினைமுற்று முதலில் நின்று ஒரு பெயரைக்கொண்டு முடிந்துள்ளது.

#### 4. பெயரெச்சத்தொடர்

முற்றுப் பெறாத வினை, பெயர்ச்சொல்லைக் கொண்டு முடிவது பெயரெச்சத்தொடர் எனப்படும்.

கேட்ட பாடல் – "கேட்ட" என்னும் எச்சவினை "பாடல்" என்னும் பெயரைக்கொண்டு முடிந்துள்ளது.

#### 5. வினையெச்சத்தொடர்

முற்றுப் பெறாத வினை, வினைச்சொல்லைக் கொண்டு முடிவது வினையெச்சத்தொடர் ஆகும்.

பாடி மகிழ்ந்தனர் – "பாடி" என்னும் எச்சவினை "மகிழ்ந்தனர்" என்னும் வினையைக் கொண்டு முடிந்துள்ளது.

#### 6. வேற்றுமைத்தொடர்

வேற்றுமை உருபுகள் வெளிப்பட அமையும் தொடர்கள் வேற்றுமைத் தொகாநிலைத்தொடர்கள் ஆகும்.

கட்டுரையைப் படித்தாள்.

இத்தொடரில் ஐ என்னும் வேற்றுமை உருபு வெளிப்படையாக வந்து பொருளை உணர்த்துகிறது.

அன்பால் கட்டினார் – (ஆல்) மூன்றாம் வேற்றுமைத் தொகாநிலைத் தொடர்

அறிஞருக்குப் பொன்னாடை – (கு) நான்காம் வேற்றுமைத் தொகாநிலைத்தொடர்

**7. இடைச்சொல் தொடர்**

இடைச்சொல்லுடன் பெயரோ, வினையோ தொடர்வது இடைச்சொல் தொடர் ஆகும்.

மற்றொன்று - மற்று + ஒன்று. "மற்று" என்னும் இடைச்சொல்லை அடுத்து "ஒன்று" என்னும் சொல் நின்று பொருள் தருகிறது.

**8. உரிச்சொல் தொடர்**

உரிச்சொல்லுடன் பெயரோ, வினையோ தொடர்வது உரிச்சொல் தொடர் ஆகும்.

சாலச் சிறந்தது - "சால" என்பது உரிச்சொல். அதனைத்தொடர்ந்து "சிறந்தது" என்ற சொல்நின்று மிகச் சிறந்தது என்ற பொருளைத் தருகிறது.

**9. அடுக்குத் தொடர்**

ஒரு சொல் இரண்டு மூன்று முறை அடுக்கித் தொடர்வது அடுக்குத் தொடர் ஆகும்.

வருக! வருக! வருக! - ஒரே சொல் உவகையின் காரணமாக மீண்டும் மீண்டும் அடுக்கி வந்துள்ளது.

**தெரியுமா?**



ஒன்றிற்கு மேற்பட்ட எச்சங்கள் சேர்ந்து பெயரைக்கொண்டு முடியும் கூட்டுநிலைப் பெயரெச்சங்களை இக்காலத்தில் பெருமளவில் பயன்படுத்துகிறோம். வேண்டிய, கூடிய, தக்க, வல்ல முதலான பெயரெச்சங்களை, செய என்னும் வாய்பாட்டு வினையெச்சத்துடன் சேர்ப்பதன் மூலம் கூட்டுநிலைப் பெயரெச்சங்கள் உருவாகின்றன.

எ.கா.

கேட்க வேண்டிய பாடல், சொல்லத் தக்க செய்தி

தொகாநிலைத் தொடர்




## கற்பவை கற்றபின்...

1. இன்று நீங்கள் படித்த செய்தித்தாள்களில் உள்ள தொகாநிலைத் தொடர்களைத் தொகுத்து வருக.

2. கீழ்க்காணும் பத்தியில் உள்ள தொடர் வகைகளை எடுத்து எழுதுக.
மாடியிலிருந்து இறங்கினார் முகமது. அவர் பாடகர். பாடல்களைப் பாடுவதும் கேட்பதும் அவருக்குப் பொழுதுபோக்கு. அவரது அறையில் கேட்ட பாடல்களையும் கேட்காத பாடல்களையும் கொண்ட குறுந்தகடுகளை அடுக்கு அடுக்காக வைத்திருப்பார்.

3. வண்ணச் சொற்களின் தொடர்வகைகளை எழுதுக.
   - பழகப் பழகப் பாலும் புளிக்கும்
   - வடித்த கஞ்சியில் சேலையை அலசினேன்
   - மேடையில் நன்றாகப் பேசினான்
   - வந்தார் அண்ணன்
   - அரிய கவிதைகளின் தொகுப்பு இது

# திறன் அறிவோம்

B2LBQD

**பலவுள் தெரிக.**

1. பின்வருவனவற்றுள் முறையான தொடர் –

    அ) தமிழர் பண்பாட்டில் தனித்த வாழை இலைக்கு இடமுண்டு.

    ஆ) தமிழர் வாழை இலைக்குப் பண்பாட்டில் தனித்த இடமுண்டு.

    இ) தமிழர் பண்பாட்டில் வாழை இலைக்குத் தனித்த இடமுண்டு.

    ஈ) தமிழர் வாழை பண்பாட்டில் தனித்த இலைக்கு இடமுண்டு.

2. "சிலம்பு அடைந்திருந்த பாக்கம் எய்தி" என்னும் அடியில் பாக்கம் என்பது–

    அ) புத்தூர் ஆ) மூதூர் இ) பேரூர் ஈ) சிற்றூர்

3. அறிஞருக்கு நூல், அறிஞரது நூல் ஆகிய சொற்றொடர்களில் பொருளை வேறுபடுத்தக் காரணமாக அமைவது –

    அ) வேற்றுமை உருபு ஆ) எழுவாய் இ) உவம உருபு ஈ) உரிச்சொல்

4. காசிக்காண்டம் என்பது –

    அ) காசி நகரத்தின் வரலாற்றைப் பாடும் நூல் ஆ) காசி நகரத்தைக் குறிக்கும் மறுபெயர்

    இ) காசி நகரத்தின் பெருமையைப் பாடும் நூல் ஈ) காசி நகரத்திற்கு வழிப்படுத்தும் நூல்

5. 'விருந்தினரைப் பேணுவதற்குப் பொருள் தேவைப்பட்டதால், தன் கருங்கோட்டுச் சீறியாழைப் பணையம் வைத்து விருந்தளித்தான் என்கிறது புறநானூறு'. இச்செய்தி உணர்த்தும் விருந்து போற்றிய நிலை –

    அ) நிலத்திற்கேற்ற விருந்து ஆ) இன்மையிலும் விருந்து

    இ) அல்லிலும் விருந்து ஈ) உற்றாரின் விருந்து

**குறுவினா**

1. விருந்தினரை மகிழ்வித்துக் கூறும் முகமன் சொற்களை எழுதுக.

2. 'தானியம் ஏதும் இல்லாத நிலையில் விதைக்காக வைத்திருந்த தினையை உரலில் இட்டுக் குற்றியெடுத்து விருந்தினருக்கு விருந்தளித்தாள் தலைவி' என்பது இலக்கியச் செய்தி. விருந்தோம்பலுக்குச் செல்வம் மட்டுமே இன்றியமையாத ஒன்றா? உங்கள் கருத்தைக் குறிப்பிடுக.

3. 'எழுது என்றாள்' என்பது விரைவு காரணமாக 'எழுது எழுது என்றாள்' என அடுக்குத்தொடரானது. 'சிரித்துப் பேசினார்' என்பது எவ்வாறு அடுக்குத்தொடராகும்?

4. 'இறடிப் பொம்மல் பெறுகுவிர்' – இத்தொடர் உணர்த்தும் பொருளை எழுதுக.

5. பாரதியார் கவிஞர், நூலகம் சென்றார், அவர் யார்? ஆகிய தொடர்களில் எழுவாயுடன் தொடரும் பயனிலைகள் யாவை?

## சிறுவினா

1. 'கண்ணே கண்ணுறங்கு!

   காலையில் நீயெழும்பு!

   மாமழை பெய்கையிலே

   மாம்பூவே கண்ணுறங்கு!

   பாடினேன் தாலாட்டு!

   ஆடி ஆடி ஓய்ந்துறங்கு!' - இத்தாலாட்டுப் பாடலில் அமைந்துள்ள தொடர் வகைகளை எழுதுக.

2. முல்லை நிலத்திலிருந்தும் மருத நிலத்திலிருந்தும் கிடைக்கும் உணவுப் பொருள்கள் யாவை?

3. • புதியதாக வருவோர் இரவில் தங்குவதற்கு வீட்டின் முன்புறம் திண்ணையும் அதில் தலை வைக்கத் திண்டும் அமைத்தனர்.

   • திருவிழாக் காலங்களில் ஊருக்கு வரும் புதியவர்களையும் அழைத்து அன்போடு விருந்தளிப்பதைச் சில இடங்களில் காணமுடிகிறது.

   இப்படியாகக் காலமாற்றம், தமிழர் விருந்தோம்பலில் ஏற்படுத்திய மாற்றங்கள் குறித்த கருத்துகளை எழுதுக.

4. கூத்தனைக் கூத்தன் ஆற்றுப்படுத்தலைக் கூத்தராற்றுப்படை எவ்வாறு காட்டுகிறது?

## நெடுவினா

1. ஆற்றுப்படுத்தல் என்பது அன்றைக்குப் புலவர்களையும் கலைஞர்களையும் வள்ளல்களை நோக்கி நெறிப்படுத்துவதாக இருந்தது. அது இன்றைய நிலையில் ஒரு வழிகாட்டுதலாக மாறியிருப்பதை விளக்குக.

2. அன்னமய்யா என்னும் பெயருக்கும் அவரின் செயலுக்கும் உள்ள பொருத்தப்பாட்டினைக் கோபல்லபுரத்து மக்கள் கதைப்பகுதி கொண்டு விவரிக்க.

3. உங்கள் இல்லத்துக்கு வந்த உறவினருக்கு நீங்கள் செய்த விருந்தோம்பலை அழகுற விவரித்து எழுதுக.

## மொழியை ஆள்வோம்!

### படித்துச் சுவைக்க.

#### சர்க்கரைப் பொங்கல்

*இளஞ்சிவப்பாக வறுத்த, பாதி உடைத்த பருப்பும் பச்சை அரிசியும் பானையில் கொப்புளமிட்டுக் கொதிக்க, மென் துணியில் வடிகட்டிய வெல்லக் கரைசல் நார்ப்பாகு பதத்தில் வெந்த பொங்கலுடன் கலக்கின்றது. உலர்ந்த திராட்சைகள் பசு நெய்யில் தங்கமென ஊதி உருண்டு வர, பிறை போன்ற முந்திரிப் பருப்புகள் அதனுள் சேர்ந்து மின்னுகின்றன. காற்றெங்கும் பால் கலந்த இனிப்பின் வாசம். இனி, இடித்த ஏலக்காய் தூவ, எல்லாமும் பொங்கலுடன் இணைந்து குழைய, இந்தச் சர்க்கரைப் பொங்கலின் தித்திப்பு திகட்டாது. நறுக்கிய ஈர வாழையிலையில் ஒரு அகப்பை சுடும் பொங்கலிட, அது விழுந்தெழுப்பும் மணம், அறுவடையின் மகிழ்வு அது! சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால் உழந்தும் உழவே தலை (திருக்குறள் 1031).*

### மொழிபெயர்க்க.

Respected ladies and gentlemen, I am Ilangovan studying tenth standard. I have come here to say a few words about our Tamil culture. Sangam literature shows that Tamils were best in culture and civilization about two thousand years ago. Tamils who have defined grammar for language have also defined grammar for life. Tamil culture is rooted in the life styles of Tamils throughout India, Srilanka, Malaysia, Singapore, England and Worldwide. Though our culture is very old, it has been updated consistently. We should feel proud about our culture. Thank you one and all.

### பழமொழிகளை நிறைவு செய்க.

1. உப்பில்லாப் ___________________.
2. ஒரு பானை ___________________.
3. உப்பிட்டவரை _________________.
4. விருந்தும் _________________.
5. அளவுக்கு _________________.

### பத்தியைப் படித்துக் கருத்தைச் சுருக்கி எழுதுக.

#### பழையசோறு

*பச்சை நெல் வயலைக் கண்கள் முழுதும் சுமந்து, இளநெல்லை நுகர்ந்து, அதன் பாலை ருசித்து, நீராவியில் அந்த நெல் அவியும் கதகதப்பான புழுங்கல் மணம்வரை சுவைத்தவள் நான். அவித்து, காய்ந்து, குத்திய அந்தப் புழுங்கல் அரிசியை, அதன் வழவழப்பை, கடுப்பு மணத்தை, சோறாகு முன் கைநிறைய அள்ளி வாயில் போட்டு நெரித்து மென்றவள் சொல்கிறேன். பகலெல்லாம் உச்சி வெயிலுக்கு அது சுடச்சுடப் புழுங்கலரிசிச் சோறு. இரவு முழுவதும் அந்தச் சோறு நீரில் ஊறும். விடிந்த இந்தக் காலையில் அதன் பெயர் பழையசோறு அல்லது பழையது. காத்திருந்து, சின்ன வெங்காயம், பச்சை மிளகாய் கடித்து நீராகாரம்போல் குடிப்பது ஒருவகை. வாழை இலையில் அந்தப் பழைய சோற்றைப் பிழிந்து போட்டால், வடுமாங்காய் அல்லது உப்பு நாரத்தங்காய் அதனுடன் சேர்ந்துகொள்ளத் துடிப்பது இன்னொரு வகை. சுண்டவைத்த முதல்நாள் குழம்பு இன்னும் உச்சம்! நல்ல பழையது மாம்பழ வாசம் வீசுமாம். பழைய சோறு– அது கிராமத்து உன்னதம்.*

*"மைக்கடல் முத்துக்கு ஈடாய் மிக்க நெல்முத்து" ......முக்கூடற்பள்ளு*

*கண்ணன், பிரசாந்தி சேகரம் –அடிசில் 2017*

**கதையாக்குக.**

மனித வாழ்வில் ஒவ்வொருவரும் நாளும் நாளும் புதுப்புது மனிதர்களைப் பார்க்கிறோம்; புதுப்புதுச் செய்திகள் கிட்டும்! கிட்டுகிற கருப்பொருள்களைத் திரட்டி, கற்பனை நயம் கூட்டிக் கதையாக்குவது ஒரு கலை. அது சிறுகதையாக இருக்கலாம். புதினமாக இருக்கலாம். அன்பை எதிர்பார்த்திருப்பவராக, யாருமற்றவராக.... இருக்கும் ஒருவர் உங்களின் உதவியால் மனம் மகிழ்ந்த நிகழ்வினைக் கதையாக்குக.

**கடிதம் எழுதுக**

உணவு விடுதியொன்றில் வழங்கப்பட்ட உணவு தரமற்றதாகவும் விலைகூடுதலாகவும் இருந்தது குறித்து உரிய சான்றுகளுடன் உணவுப் பாதுகாப்பு ஆணையருக்குக் கடிதம் எழுதுக.

**நயம் பாராட்டுக.**

*"கத்துகடல் சூழ்நாகைக் காத்தான்தன் சத்திரத்தில்*
*அத்தமிக்கும் போது அரிசிவரும் – குத்தி*
*உலையிலிட ஊரடங்கும் ஓர்அகப்பை அன்னம்*
*இலையிலிட வெள்ளி எழும்"*

*காளமேகப் புலவர்*

**மொழியோடு விளையாடு**

**விடுபட்ட எழுத்துகளை நிரப்பி அந்த எழுத்துகளை மட்டும் இணைத்து ஒளிந்துள்ள ஒரு நூலின் பெயரைக் கண்டுபிடிக்க.**

| | | | |
|---|---|---|---|
| இ – கு | (பறவையிடம் இருப்பது) | அ – கா | (தங்கைக்கு மூத்தவள்) |
| கு – தி | (சிவப்பு நிறத்தில் இருக்கும்) | ம – | (அறிவின் மறுபெயர்) |
| வா – | (மன்னரிடம் இருப்பது) | பட– | (நீரில் செல்வது) |

**இரு சொற்களையும் ஒரே தொடரில் அமைத்து எழுதுக.**

சிலை – சீலை, தொடு – தோடு, மடு – மாடு, மலை – மாலை, வளி – வாளி, விடு – வீடு
எ.கா. சிலையைத் திரைச்சீலையால் மறைத்திருக்கிறார்கள்.

**அகராதியில் கண்டு பொருள் எழுதுக.**

அ) ஊண், ஊன் ஆ) திணை, தினை இ) அண்ணம், அன்னம் ஈ) வெல்லம், வெள்ளம்

**காட்சியைக் கண்டு கவினுற எழுதுக.**



## செயல்திட்டம்

உணவு, விருந்து சார்ந்த பழமொழிகளையும் விழிப்புணர்வுத் தொடர்களையும் திரட்டி, அகரவரிசைப்படுத்தி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

எ.கா. **நொறுங்கத் தின்றால் நூறு வயது**

### கலைச்சொல் அறிவோம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| செவ்விலக்கியம் | – | *Classical literature* | வட்டார இலக்கியம் | – | *Regional literature* |
| காப்பிய இலக்கியம் | – | *Epic literature* | நாட்டுப்புற இலக்கியம் | – | *Folk literature* |
| பக்தி இலக்கியம் | – | *Devotional literature* | நவீன இலக்கியம் | – | *Modern literature* |
| பண்டைய இலக்கியம் | – | *Ancient literature* | | | |

### நிற்க அதற்குத் தக...

| | | |
|---|---|---|
| "தம்பி.. உனக்குப் பிடிச்ச காய் சொல்லு?" | – | "கேரட்" |
| "பிடிச்ச பழம்?" | – | "ஆப்பிள்" |
| பிடிச்ச காலை உணவு? | – | "நூடுல்ஸ்" |
| "மத்தியானத்துக்கு" | – | "ஃப்ரைடு ரைஸ்" |
| "ராத்திரி...?" | – | "பீட்ஸா அல்லது பாஸ்தா" |

இது ஏதோ ஆங்கிலப்படத்தின் வசனம் அல்ல." சரியா சாப்பிட மாட்டேங்கிறான் டாக்டர்" என்று என்னிடம் அழைத்து வரப்பட்ட ஒரு சிறுவனுடனான என் உரையாடல். ஒட்டுமொத்த இளைய தலைமுறையும் பாரம்பரிய உணவை விட்டு வேகமாக விலகிச் சென்றது எப்படி? இட்லியும் சாம்பார் சாதமும் கத்தரிக்காய்ப் பொரியலும் இனி காணாமல் போய்விடுமா? அதிர்ச்சியான பதில், 'ஆம், காணாமல் போய்விடும்'! உங்கள் குழந்தைகள், "ஆடு, மாடுகளைத் தவிர மனுஷங்க கூட கீரையைச் சாப்பிடுவாங்களா மம்மி? என எதிர்காலத்தில் கேட்கக்கூடும்!

மருத்துவர் கு. சிவராமனின் இக்கருத்திற்குச் சமூக அக்கறையுடனான உங்களின் பதில் என்னவாக இருக்கும்?

---

---

### அறிவை விரிவு செய்.

திருக்குறள் தெளிவுரை – வ.உ.சிதம்பரனார்
சிறுவர் நாடோடிக் கதைகள் – கி.ராஜநாராயணன்
ஆறாம் திணை – மருத்துவர் கு.சிவராமன்








### இணையத்தில் காண்க.

*http://www.muthukamalam.com/essay/literature/p113.html*
*http://panpattumaiyaminnithazh.blogspot.com/2017/03/blog-post_72.html?m=1*
*http://www.tamilvu.org/courses/degree/c011/c0113/html/c0113603.htm*

வாழ்வியல் இலக்கியம்

பண்பாடு

௩

# திருக்குறள்

BH56RP

ஒழுக்கமுடைமை (14)

1. ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்.

**பொருள்:** ஒழுக்கம் எல்லார்க்கும் சிறப்பைத் தருவதால்
அவ்வொழுக்கத்தை உயிரினும் மேலானதாகப் பேணிக் காக்க வேண்டும்.

2. ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை; இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி.

**பொருள்:** ஒழுக்கமாக வாழும் எல்லாரும் மேன்மை அடைவர்.
ஒழுக்கம் தவறுபவர் அடையக்கூடாத பழிகளை அடைவர்.

3. உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்.

**பொருள்:** உலகத்தோடு ஒத்து வாழக் கல்லாதார், பல நூல்களைக் கற்றாராயினும் அறிவு இல்லாதவரே (எனக் கருதப்படுவார்).

மெய் உணர்தல் (36)

4. எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. *

**பொருள்:** எந்தப் பொருள் எந்த இயல்பினதாகத் தோன்றினாலும் அந்தப் பொருளின் உண்மைப் பொருளைக் காண்பதே அறிவாகும்.

5. காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்.

**பொருள்:** ஆசை, சினம், அறியாமை என்ற மூன்றும் அழிந்தால் அவற்றால் வரும் துன்பமும் அழியும்.

பெரியாரைத் துணைக்கோடல் (45)

6. அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.

**பொருள்:** கிடைத்தற்கரிய பேறுகளுள் எல்லாம் பெரும்பேறு பெரியோரைப் போற்றித் துணையாக்கிக் கொள்ளுதல் ஆகும்.

7. இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும்.

**பொருள்:** குற்றங் கண்டபொழுது இடித்துக் கூறும் பெரியாரைத் துணைக்கொள்ளாத பாதுகாப்பற்ற மன்னன், பகைவர் இன்றியும் தானே கெடுவான்.

8. பல்லார் பகைகொளலின் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல். *

**பொருள்:** தானொருவனாக நின்று பலரோடு பகைமேற்கொள்வதைக் காட்டிலும் பல மடங்கு தீமையைத் தருவது நற்பண்புடையோரின் நட்பைக் கைவிடுதலாகும்.

### கொடுங்கோன்மை (56)

9. வேலொடு நின்றான் இடுவென் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு

**பொருள்:** ஆட்சியதிகாரத்தைக் கொண்டுள்ள அரசன் தன் அதிகாரத்தைக் கொண்டு வரிவிதிப்பது, வேல் போன்ற ஆயுதங்களைக் காட்டி வழிப்பறி செய்வதற்கு நிகரானதாகும்.

அணி: உவமையணி

10. நாள்தொறும் நாடி முறைசெய்யா மன்னவன்
நாள்தொறும் நாடு கெடும்

**பொருள்:** தன் நாட்டில் நிகழும் நன்மை தீமைகளை ஒவ்வொரு நாளும் ஆராய்ந்து ஆட்சி செய்யாத மன்னவன், தன் நாட்டை நாள்தோறும் இழக்க நேரிடுவான்.

### கண்ணோட்டம் (58)

11. பண்என்னாம் பாடற் கியைபின்றேல்; கண்என்னாம்
கண்ணோட்டம் இல்லாத கண். *

**பொருள்:** பாடலோடு பொருந்தவில்லையெனில் இசையால் என்ன பயன்? அது போலவே இரக்கம் இல்லாவிட்டால் கண்களால் என்ன பயன்?

அணி: எடுத்துக்காட்டு உவமையணி

12. கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்
குரிமை உடைத்திவ் வுலகு.

**பொருள்:** நடுநிலையாகக் கடமை தவறாமல் இரக்கம் காட்டுபவருக்கு இவ்வுலகமே உரிமை உடையதாகும்.

13. பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.

**பொருள்:** விரும்பத் தகுந்த இரக்க இயல்பைக் கொண்டவர்கள், பிறர் நன்மை கருதித் தமக்கு நஞ்சைக் கொடுத்தாலும் அதனை உண்ணும் பண்பாளர் ஆவார்.

### ஆள்வினை உடைமை (62)

14. அருமை உடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும். *

**பொருள்:** ஒரு செயல் முடிப்பதற்கு இயலாதது என்று எண்ணிச் சோர்வு அடையாதிருக்க வேண்டும். அச்செயலை முயற்சியுடன் முடிப்பது பெருமை தரும்.

15. தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே
வேளாண்மை என்னும் செருக்கு.

**பொருள்:** விடாமுயற்சி என்ற உயர்பண்பு கொண்டவர்களால்தான் பிறருக்கு உதவுதல் என்ற உயர்ந்த நிலையை அடைய முடியும்.

16. முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும். *

**பொருள்:** முயற்சி செய்தால் ஒருவர்க்குச் செல்வம் பெருகும். முயற்சி இல்லாவிட்டால் அவருக்கு வறுமையே வந்து சேரும்.

17. பொறிஇன்மை யார்க்கும் பழிஅன் றறிவறிந்
தாள்வினை இன்மை பழி.

**பொருள்:** ஐம்புலன்களில் ஏதேனும் குறையிருப்பினும் அது இழிவன்று. அறிய வேண்டியதை அறிந்து முயற்சி செய்யாததே இழிவாகும்.

18. ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

**பொருள்:** சோர்விலாது முயற்சி செய்வோர் செய்கின்ற செயலுக்கு இடையூறாக வரும் முன்வினையையும் தோற்கடித்து வெற்றியடைவர்.

### நன்றிஇல் செல்வம் (101)

19. கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க் கடுக்கிய
கோடிஉண் டாயினும் இல்.

**பொருள்:** பிறருக்குக் கொடுக்காமலும் தானும் அனுபவிக்காமலும் இருப்பவர் அடுக்கடுக்காய்ப் பல கோடிப் பொருள்கள் பெற்றிருந்தாலும் அதனால் பயன் இல்லை.

20. நச்சப் படாதவன் செல்வம் நடுஊருள்
நச்சு மரம்பழுத் தற்று.

**பொருள்:** பிறருக்கு உதவி செய்யாததால் ஒருவராலும் விரும்பப்படாதவர் பெற்ற செல்வம், ஊரின் நடுவில் நச்சுமரம் பழுத்தது போன்றதாகும்.

அணி: உவமையணி

# கற்பவை கற்றபின்...

**1. படங்கள் உணர்த்தும் குறளின் கருத்தினை மையமிட்டு வகுப்பில் கலந்துரையாடுக.**

|  |  |
| --- | --- |
| முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை இன்மை புகுத்தி விடும். | பண்என்னாம் பாடற்கு இயைபின்றேல்; கண்என்னாம் கண்ணோட்டம் இல்லாத கண். |

**2. கதைக்குப் பொருத்தமான குறளைத் தேர்வு செய்து காரணத்தை எழுதுக.**

"சின்னச்சாமி... யாரோ மரத்தோரமா நிற்கிறாங்க.... யாராய் இருக்கும்...." மாட்டு வண்டிய ஓட்டிக்கிட்டே அப்பா கேட்டார்.

"தெரியலப்பா..."

"இறங்கி யாருன்னு பாரு...."

வாட்டசாட்டமாய், கண்ணாடியும் அலைபேசியும் கையுமாய் சாலையோரத்தில் வண்டியுடன் ஒருவர் நின்றிருந்தார். .

"ஐயா..நீங்க..."

"வெளியூருப்பா.. வண்டி நின்னு போச்சு...!"

"அப்படியா... வண்டியத் தூக்கி மாட்டு வண்டியில வச்சுட்டு வாங்க. மழை வர்ற மாதிரியிருக்கு.. ஊரு ரொம்ப தூரம்.. வேற வண்டியும் வராது..."

அவர் உடையையும் உழைத்துக் களைத்த வியர்வை பொங்கிய உடலையும் பார்த்து வரலைன்னுட்டார். மூன்று நான்கு பேர்தான் வண்டியில இருந்தோம்.. சிறிது தூரம் போறதுக்குள்ள மழை கொட்டு கொட்டுன்னு கொட்டிருச்சு... நாங்க வீட்டுக்குப் போயிட்டோம்.

இரவுல தூங்கப் போறப்ப... அப்பா சொன்னார். தம்பி... அந்த சூட்டுக்காரர் மழை தாங்காம நடந்திருக்காரு. தேங்கா விழுந்து மண்ட உடைஞ்சு... வேற யாரோ தூக்கிட்டு வந்திருக்காங்க. நம்ம ஊரு ஆசுபத்திரியில.. கட்டுப் போட்டுக்கிட்டு இருந்தாங்க... பாவம் படிச்சவரா இருக்காரு... சூழ்நிலை புரியாம... வரமாட்டேன்னு சொன்னாரு, இப்ப வேதனைப்பட்டாரே...

அ) உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பல கற்றும்
கல்லார் அறிவிலா தார்.

ஆ) பெயக்கண்டும் நஞ்சுஉண்டு அமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.

இ) ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவுஇன்றித்
தாழாது உஞற்று பவர்.

## குறுவினா

1. 'நச்சப் படாதவன்' செல்வம் – இத்தொடரில் வண்ணமிட்ட சொல்லுக்குப் பொருள் தருக.

2. கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய
   கோடிஉண் டாயினும் இல் – இக்குறளில் வரும் அளபெடைகளை எடுத்து எழுதுக.

3. பொருளுக்கேற்ற அடியைப் பொருத்துக.

| | |
|---|---|
| உயிரைவிடச் சிறப்பாகப் பேணிக் காக்கப்படும். | ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை |
| ஊரின் நடுவில் நச்சுமரம் பழுத்தது போன்றது. | உயிரினும் ஓம்பப் படும் |
| ஒழுக்கத்தின் வழி உயர்வு அடைவர். | நடு ஊருள் நச்சு மரம் பழுத்தற்று |

4. எய்துவர் எய்தாப் பழி – இக்குறளடிக்குப் பொருந்தும் வாய்பாடு எது?

   அ) கூவிளம் தேமா மலர் ஆ) கூவிளம் புளிமா நாள்

   இ) தேமா புளிமா காசு ஈ) புளிமா தேமா பிறப்பு

## சிறுவினா

1. வேலொடு நின்றான் இடுஎன்றது போலும்
   கோலொடு நின்றான் இரவு – குறளில் பயின்றுவரும் அணியை விளக்குக.



2. கவிதையைத் தொடர்க.

   தண்ணீர் நிறைந்த குளம்
   தவித்தபடி வெளிநீட்டும் கை
   கரையில் கைபேசி படமெடுத்தபடி
   ..................................................................
   ..................................................................
   ..................................................................
   . . .

## திருக்குறள் பற்றிய கவிதை:

உரை(றை) ஊற்றி ஊற்றிப்
பார்த்தாலும்
புளிக்காத பால்!
தந்தை தந்த
தாய்ப்பால்
முப்பால்!

– அறிவுமதி

இயல் நான்கு

அறிவியல், தொழில்நுட்பம்

# நான்காம் தமிழ்



## கற்றல் நோக்கங்கள்

- வளர்ந்து வருகின்ற தொழில்நுட்பங்கள் நம் மொழியில் திறம்படச் சொல்லப்படும் பாங்கறிந்து மொழித்திறனையும் தொழில்சார் கருத்துகளையும் புதுப்பித்தல்.
- அறிவியல் கருத்துகள் உட்பொதிந்துள்ள செய்யுள்களின் கருத்து வெளிப்பாட்டுத் திறனைப் படித்துணர்ந்து எதிர்வினையாற்றல்.
- உரையாடல் வடிவில் கருத்துகளை வெளிப்படுத்தும் திறன்பெறுதல்.
- இலக்கணப் பிழையற்ற தொடரமைப்புகளைத் தெரிந்துகொண்டு பயன்படுத்துதல்.

தொழில்நுட்பம்

ச

# செயற்கை நுண்ணறிவு

BWE5RD

நுழையும்முன்

உயிரினங்களில் மனிதரை உயர்த்திக்காட்டுவது அவர்களின் சிந்தனை ஆற்றலே! அந்தச் சிந்தனைக்குத் தொழில்நுட்பமும் துணைசெய்கிறது. மனிதர்கள் செய்யும் வேலைகளான மொழிபெயர்ப்பு, இசையமைப்பு, மகிழுந்து ஓட்டுதல் முதலியவற்றைச் செய்யக் கணினிக் கரங்கள் நீள்கின்றன! கட்டுரை எழுதும் மென்பொருள்கள், கவிதை பாடும் ரோபோக்கள், மனிதனால் இயலாத செயல்களைச் செய்யும் ரோபோக்கள், ஆள்கள் இல்லாமலே நடத்தப்படும் வணிகக் கடைகள் எனப் புதிது புதிதான வழிகளில் மனிதப் பணித்திறனைக் கூட்டுகின்ற இந்தத் தொழில்நுட்பம் பற்றி…



### ஒரு மின்சுற்றறிக்கை!

"பள்ளி ஆண்டுவிழாவுக்கான கவிதை, கட்டுரைப் போட்டிகள்:

...கலந்துகொள்ளும் மாணவர்கள் 'நான் விரும்பும் தமிழகம்' என்னும் தலைப்பில் ஒருபக்க அளவில் கவிதையும் நான்குபக்க அளவில் கட்டுரையும் எழுதிப் பள்ளி மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்பவும். உங்கள் படைப்பு, உங்களின் செயற்கை நுண்ணறிவு உதவியாளரைக் கொண்டு எழுதப்படவில்லை என்று பள்ளியின் செயற்கை நுண்ணறிவு வல்லுநரிடம் சான்று பெற்ற பின்னரே தேர்விற்கு எடுத்துக்கொள்ளப்படும்..."

இப்படியான மின்சுற்றறிக்கை எதிர்காலத்தில் மாணவர்களின் திறன்பேசிகளுக்கு வரலாம்!

### மின்னணுப் புரட்சி

எந்த ஒரு புதிய தொழில்நுட்பமும் ஒரே நாளில் வந்துவிடுவதில்லை. 1980களில் ஒவ்வொருவருக்குமான தனிநபர் கணினிகளின் (Personal Computers) வளர்ச்சியும், இணையப் பயன்பாட்டின் பிறப்பும் இன்றைய மின்னணுப் புரட்சிக்குக் (Digital Revolution) காரணமாயின. அவற்றுள் இவ்வுலகை மிகுதியாக ஆளக்கூடிய ஒரு தொழில்நுட்பம் செயற்கை நுண்ணறிவு.

அறையின் மூலையில் நிறுவப்பட்டிருக்கும் கண்காணிப்புக் கருவி அசைவு நிகழும் பக்கம் தன் பார்வையைத் திருப்புகிறதே, அதனுள் பொதிந்திருப்பது செயற்கை நுண்ணறிவு.

'அந்த வழியில் போக்குவரத்து நெரிசல் அதிகம்; இதுவே சுருக்கமான வழி' என்று நமது திறன்பேசியில் உள்ள வழிகாட்டி வரைபடம் காட்டுகிறதல்லவா? அதற்குக் காரணமாக இருப்பதும் செயற்கை நுண்ணறிவே.

நமது திறன்பேசியோ, கணினியோ நாம் சொல்லச் சொல்லத் தன் அகண்ட தரவுகளில் உள்ள கோடிக்கணக்கான சொற்களுடன் ஒப்பிட்டுச் சரியான சொல்லைக் கால் நொடிக்கும் குறைவான நேரத்தில் தேர்ந்தெடுத்துத் திரையில் காண்பிக்கிறதல்லவா? அங்கு இணைந்திருப்பது செயற்கை நுண்ணறிவுதான்.

செயற்கை நுண்ணறிவைக் கொண்ட இயந்திரம் மனிதர்களுடன் சதுரங்கம் முதலான விளையாட்டுகளை விளையாடுகிறது; கண் அறுவை மருத்துவம் செய்கிறது; சமைக்கிறது; சில புள்ளிகளை வைத்துப் படம் வரைகிறது.

இதழியலில், செயற்கை நுண்ணறிவு குறிப்பிடத்தகுந்த மாறுதல்களைச் செய்துவருகிறது. அவற்றுள் விந்தையான ஒன்று, இயல்பான மொழிநடையை உருவாக்குதல் (Natural Language Generation) என்னும் மென்பொருள். அதற்கு வேர்டுஸ்மித் (எழுத்தாளி) என்று பெயர் வைத்திருக்கிறார்கள். தகவல்களைக் கொடுத்தால் போதும், வேர்டுஸ்மித் அழகான கட்டுரையைச் சில நொடிகளில் உருவாக்கிவிடும்.

இணையத்தில் வணிகம் செய்யும் தனியார் நிறுவனம் ஒன்று செயற்கை நுண்ணறிவைப் பயன்படுத்திப் பெரும்பாலும் ஆளற்ற பல்பொருள் அங்காடிகளை உலகெங்கிலும் திறந்துவருகிறது.

#### தெரியுமா?



- 2016இல் ஐ.பி.எம்.நிறுவனத்தின் செயற்கை நுண்ணறிவுக் கணினியான வாட்சன், சில நிமிடங்களில் இரண்டு கோடித் தரவுகளை அலசி, நோயாளி ஒருவரின் புற்றுநோயைக் கண்டுபிடித்தது.
- சீனாவில் ஐம்பதுக்கும் மேற்பட்ட மருத்துவமனைகள், இயந்திர மனிதர்களைப் பணிக்கு அமர்த்தியுள்ளன. அவை அங்கு வரும் நோயாளிகளின் குரலையும் முகத்தையும் அடையாளம் கண்டு அவர்களின் கேள்விகளுக்குப் பதில் சொல்கின்றன. சீன மொழியின் வெவ்வேறு வட்டார வழக்குகளையும்கூட அவை புரிந்துகொண்டு பதில் அளிக்கின்றன.

### செயற்கை நுண்ணறிவு நமக்கு எப்படி அறிமுகமாகிறது?

இவ்வுலகை இதுவரை மென்பொருள் (Software) ஆண்டுகொண்டிருக்கிறது; இனிமேல் செயற்கை நுண்ணறிவுதான் ஆளப்போகிறது. சமூக ஊடகங்கள் வழியாகவும் மின்னணுச் சந்தை மூலமாகவும் செயற்கை நுண்ணறிவு கொஞ்சம் கொஞ்சமாக நம்மிடம் வந்து சேரத் தொடங்கிவிட்டது. சமூக ஊடகங்களில் நீங்கள் பார்க்கிற ஒவ்வொன்றும், தேடுபொறிகளில் தேடிக் கிடைக்கும் விடைகளும் செயற்கை நுண்ணறிவு தீர்மானிப்பதைத்தான்.

### தொழில்நுட்ப வரையறைகளின்படி

செயற்கை நுண்ணறிவு என்பது ஒரு மென்பொருள் அல்லது கணினிச் செயல்திட்ட வரைவு (Computer Program) எனலாம். அது தானாகக் கற்றுக்கொள்ளக்கூடியது. இந்த அறிவைக்கொண்டு தனக்கு வரும் புதியபுதிய சூழ்நிலைகளில் மனிதரைப்போல, தானே முடிவெடுக்கும் திறனுடையது. ஒளிப்படங்கள், எழுத்துகள், காணொலிகள், ஒலிகள் போன்றவற்றிலிருந்து கற்றுக்கொள்ளும் இயல்புடைய மென்பொருளை ஆராய்ச்சியாளர் வடிவமைக்கிறார். அவ்வாறு கற்றுக்கொண்டதை அந்த இயந்திரம் தேவைப்படும் இடங்களில், தேவைப்படும் நேரங்களில் செயல்படுத்தும்.

செயற்கை நுண்ணறிவு பொதிந்த இயந்திரங்களுக்கு ஓய்வு தேவையில்லை; செயற்கை நுண்ணறிவால் பார்க்கவும் கேட்கவும் புரிந்துகொள்ளவும் முடியும் என்பதே அதன் சிறப்பு. மனிதனால் முடியும் செயல்களையும் அவன் கடினம் என்று கருதும் செயல்களையும் செய்யக்கூடியது செயற்கை நுண்ணறிவு.

### மெய்நிகர் உதவியாளர்

திறன்பேசிகளில் இயங்கும் உதவு மென்பொருள் கண்ணுக்குப் புலப்படாத மனிதனைப்போல நம்முடன் உரையாடி, சில உதவிகள் செய்கின்றது. இவை நாம் சொல்கிறவர்களுக்குத் தொலைபேசி அழைப்பு விடுக்கும். நாம் திறக்கக் கட்டளையிடுகிற செயலியைத் திறக்கும். நாம் கேட்பதை உலாவியில் (browser) தேடும். நாம் விரும்பும் அழகான கவிதையை இணையத்தில் தேடித் தரும்! எந்தக் கடையில் எது விற்கும் என்று சொல்லும். படிப்பதற்கு உரிய நூல்களைப் பட்டியலிடும். நாம் எடுத்த ஒளிப்படங்களைப் பற்றிக் கருத்துரைக்கும்.

எதிர்காலத்தில் உங்கள் நெருங்கிய நண்பர்கள், குடும்பத்தினர் ஆகியோரை விடவும் இதுபோன்ற மெய்நிகர் உதவியாளர் உங்களை நன்கு அறிந்தவர்களாக இருக்கும்; *"டாக்டர்! திரும்பவும் ஐயாவுக்கு மூச்சுத் திணறல்! டெரிஃப்லின் ஊசி போட்டுவிடட்டுமா?"* – என்று கேட்கும். இந்த உதவியாளர்களை 'இங்கிவனை யான் பெறவே என்ன தவம் செய்துவிட்டேன்' என்று பாரதியார் மெச்சுவதுபோல் மெச்சிக்கொள்ளலாம்!

### ஒளிப்படக்கருவியில் செயற்கை நுண்ணறிவு

தற்போது வெளிவருகிற சில உயர்வகைத் திறன்பேசியின் ஒளிப்படக்கருவி, செயற்கை நுண்ணறிவுத் தொழில்நுட்பத்தைக் கொண்டிருக்கிறது. கடவுச் சொல்லும் கைரேகையும் திறன்பேசியைத் திறப்பது பழமையானது. உரிமையாளரின் முகத்தை அடையாளம் கண்டு திறப்பது, இன்றைய தொழில்நுட்பம். இது படம் எடுக்கும் காட்சியை அடையாளம் கண்டு அதற்கு ஏற்பத் தன்னைத் தகவமைத்துக்கொள்கிறது. திறன்பேசிகளில் உள்ள ஒளிப்படக் கருவியில், எடுக்கும் படங்களை மெருகூட்ட இத்தொழில்நுட்பம் உதவுகிறது.

காணொலிகளைத் தொகுக்கும் மென்பொருள்களில் (Video Editing) இன்றைக்குச் செயற்கை நுண்ணறிவுத் தொழில்நுட்பம் பயன்படுகிறது. இதன் மூலம் நேரம் வீணாவது தவிர்க்கப்படுகிறது.

### வாடிக்கையாளர் சேவை

இந்தியாவின் பெரிய வங்கியான பாரத ஸ்டேட் வங்கி, 'இலா' (ELA – Electronic Live Assistant) என்னும் உரையாடு மென்பொருளை (Chatbot) உருவாக்கியிருக்கிறது. ஒரு விநாடிக்குப் பத்தாயிரம் வாடிக்கையாளர்களுடன் அது உரையாடும். வங்கிக்கு வரும்

வாடிக்கையாளருக்குக் கிடைக்கும் சேவைகளை அது இணையம் மூலம் அளிக்கிறது. செயற்கை நுண்ணறிவுத் தொழில்நுட்பத்தைப் பயன்படுத்த இந்திய வங்கிகள் ஆயத்தமாகிவருவதற்கு இந்த 'இலா' ஒரு சோறு பதம்!

### ஏன் செயற்கை நுண்ணறிவு முதன்மையானது?

நாம் இப்போது செயற்கை நுண்ணறிவுக் காலத்தில் இருக்கிறோம். நாம் நினைப்பதை விடவும் வேகமாக இந்தத் தொழில்நுட்பம் நடைமுறைக்கு வந்துகொண்டிருக்கிறது. உலகில் உள்ள பெரும்பாலான தொழில்நுட்ப நிறுவனங்கள் இத்தொழில்நுட்பத்தை உருவாக்குவதிலும் பயன்படுத்துவதிலும் விற்பனை செய்வதிலும் கவனம் செலுத்துகின்றன. இத்தொழில்நுட்பம் உலகளாவிய வணிகத்துக்கு உதவுகிறது.

செயற்கை நுண்ணறிவின் மிகுதியான வளர்ச்சியால் தரவு அறிவியலாளர்களின் (Data Scientists) தேவை கூடியுள்ளது. இயந்திரக் கற்றல் வல்லுநர்கள் முதலான பல தொழில்நுட்ப வல்லுநர்களின் தேவையும் பெருகிவருகிறது. போட்டி நிறைந்த இவ்வுலகில் செயற்கை நுண்ணறிவை யார் முதலாவதாகவும் சரியாகவும் பயன்படுத்துகிறார்களோ அவர்களுக்கு வணிக வானம் வசப்படும்!

### எதிர்காலத்தில்...

வேலை வாய்ப்புகளில் கணிசமான மாற்றங்களைச் செயற்கை நுண்ணறிவு கொண்டுவரப்போகிறது.

எதிர்காலத்தில் 'ரோபோ'விடம் குழந்தையை ஒப்படைத்துவிட்டு நிம்மதியாக அலுவலகம் செல்லும் பெற்றோர்களை நாம் பார்க்கப்போகிறோம். வயதானவர்களுக்கு

**தெரியுமா?**

**பெப்பர்**

ஜப்பானில் சாப்ட்வங்கி உருவாக்கிய இயந்திர மனிதனே பெப்பர். இது உலக அளவில் விற்பனையாகும் ஒரு ரோபோ. வீட்டுக்கு, வணிகத்துக்கு, படிப்புக்கு என்று மூன்று வகை ரோபோக்கள் கிடைக்கின்றன. இவை மனிதரின் முகபாவனைகளிலிருந்து உணர்வுகளைப் புரிந்துகொண்டு அதற்கேற்பச் செயல்படுகின்றன. பெப்பரை வரவேற்பாளராகவும் பணியாளராகவும் வீடுகளிலும் வணிக நிறுவனங்களிலும் உணவு விடுதிகளிலும் பயன்படுத்துகிறார்கள்.



உதவிகள் செய்தும் அவர்களுக்கு உற்ற தோழனாய்ப் பேச்சுக் கொடுத்தும் பேணும் ரோபோக்களை நாம் பார்க்கப்போகிறோம்!

செயற்கை நுண்ணறிவுள்ள ரோபோக்களால் மனிதர் செய்ய இயலாத, அலுப்புத் தட்டக்கூடிய, கடினமான செயல்களைச் செய்யமுடியும்; மனித முயற்சியில் உயிராபத்தை விளைவிக்கக் கூடியசெயல்களைச் செய்யமுடியும்!

புதிய வணிக வாய்ப்புகளைச் செயற்கை நுண்ணறிவு நல்குகிறது. பெருநிறுவனங்கள் தங்கள் பொருள்களை உற்பத்தி செய்யவும் சந்தைப்படுத்தவும் செயற்கை நுண்ணறிவைப் பயன்படுத்துகின்றன.

விடுதிகளில், வங்கிகளில், அலுவலகங்களில் தற்போது மனிதர் அளிக்கும் சேவைகளை ரோபோக்கள் அளிக்கும் – மேலும், நம்முடன் உரையாடுவது, ஆலோசனை வழங்குவது, பயண ஏற்பாடு செய்துதருவது, தண்ணீர் கொண்டு வந்து தருவது, உடன் வந்திருக்கும் குழந்தைகளுக்கு வேடிக்கை காட்டுவது எனப் பலவற்றைச் செய்யும்.

எதிர்காலத்தில் நாம் பயணிக்கும் ஊர்திகளைச் செயற்கை நுண்ணறிவைக் கொண்டு இயக்கவேண்டியிருக்கும். இத்தகைய ஊர்திகள் ஏற்படுத்தும் விபத்துகள் குறையும்; போக்குவரத்து நெரிசல் இருக்காது. அதன்மூலம் பயண நேரம் குறையும்; எரிபொருள் மிச்சப்படும்.

இத்தகைய மென்பொருள்கள் கவிதைகள், கதைகள், விதவிதமான எழுத்து நடைகள் போன்றவற்றைக் கற்றுக்கொண்டு மனிதர்களுடன் போட்டியிட்டாலும் வியப்பதற்கில்லை!

கல்வித் துறையில் இத்தொழில்நுட்பத்தைப் பலவிதங்களில் பயன்படுத்தும் சாத்தியக்கூறுகள் இருக்கின்றன.

### செயற்கை நுண்ணறிவின் பொதுவான கூறுகள்

செயற்கை நுண்ணறிவு நமது வாழ்க்கையையும் வணிகத்தையும் நம்மை அறியாமலேயே வளப்படுத்திக்கொண்டிருக்கின்றது. இந்தத் தொழில்நுட்பத்தைக் கண்டு அச்சப்பட்டவர்களின் அலறல்களை நாம் எதிர்கொள்வதே முதல் அறைகூவல். ஒவ்வொரு புதிய கண்டுபிடிப்பு அறிமுகமாகும்போதும் பழைய வேலைவாய்ப்புகள் புதிய வடிவில் மாற்றம் பெறுகின்றன. ஆகவே, செயற்கை நுண்ணறிவுத் தொழில்நுட்பம் அளிக்கும் வியக்கத்தக்க நன்மைகளைப் புரிந்துகொள்ளவும் வரவேற்கவும் நாம் அணியமாக வேண்டும்.

மனித இனத்தைத் தீங்குகளிலிருந்து காப்பாற்றவும் உடல்நலத்தைப் பேணவும் கொடிய நோய்களைத் தொடக்கநிலையிலேயே கண்டறியவும் மருத்துவம் செய்யும் முறைகளைப் பட்டறிவு மிக்க மருத்துவரைப் போலப் பரிந்துரை செய்யவும் செயற்கை நுண்ணறிவைப் பயன்படுத்தும் ஆராய்ச்சிகள் மும்முரமாக நடந்துவருகின்றன.

### கல்வியறிவு என்பது ...

ஒருகாலத்தில் வாழ்க்கையில் முன்னேறுவதற்கு எழுதப் படிக்கத் தெரிந்த கல்வியறிவே போதுமானதாக இருந்தது. இப்போது கல்வியறிவுடன் மின்னணுக் கல்வியறிவையும் (Digital Literacy) மின்னணுச் சந்தைப்படுத்துதலையும் (Digital Marketing) அறிந்திருப்பது வாழ்க்கையை எளிதாக்கவும் வணிகத்தில் வெற்றியடையவும் உதவுகிறது. ஆனால் எதிர்காலத்தில் செயற்கை நுண்ணறிவு பற்றிய அறிவும் நான்காவது தொழிற்புரட்சியின் தொழில்நுட்பங்களைப் பயன்படுத்தும் அறிவுமே நம்மை வளப்படுத்த உதவும்.

### ஆனாலும் முன்னேற்றமே!

மனிதக் கண்டுபிடிப்புகள் அனைத்திலும் நன்மை, தீமை என்று இரண்டு பக்கங்கள் இருந்தே வந்திருக்கின்றன. அதற்கேற்ப மனிதர்கள் தங்களை மாற்றிக்கொள்வார்கள்.

இப்போது உலகில் இங்கொன்றும் அங்கொன்றுமாகப் பயன்பாட்டில் இருக்கின்ற செயற்கை நுண்ணறிவுத் தொழில்நுட்பம், எதிர்காலத்தில் உலகின் ஒவ்வொரு துறையிலும் அளவிடற்கரிய முன்னேற்றத்தைத் தரும்.

## எத்திசையும் புகழ் மணக்க.....

**சீன நாட்டில் தமிழ்க் கல்வெட்டு!**



சீன நாட்டில் 'காண்டன்' நகருக்கு 500 கல் வடக்கே சூவன்செள என்னும் துறைமுக நகர் உள்ளது. பண்டைய காலத்திலும் இது சிறந்த துறைமுகமாக விளங்கிற்று. அந்தக் காலத்தில் தமிழ் வணிகர்கள் இந்நகருக்கு அடிக்கடி வந்து சென்றுள்ளனர். அதன் காரணமாக சீனாவில் சிவன் கோவில் ஒன்று கட்டப்பட்டது. அது சீனப் பேரரசரான குப்லாய்கானின் ஆணையின் கீழ் கட்டப்பட்டது என்பதைக் குறிக்கும் தமிழ்க் கல்வெட்டு இன்றும் இக்கோயிலில் உள்ளது. இக்கோயிலில் சோழர்காலச் சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

## கற்பவை கற்றபின்...

1. இன்றைய செயற்கை நுண்ணறிவுப் பயன்பாடுகளைச் செய்தித்தாளிலோ இணையத்திலோ கண்டு அட்டவணையாகத் தருக.

2. கொடுக்கப்படுகின்ற எல்லாவற்றையும் உள்ளீடு செய்து, தேவைப்படும் வேளையில் வெளிப்படுத்துவதில், இன்று மூளைக்கு இணையாகத் தொழில்நுட்பமும் முன்னேறியுள்ளது.

   இக்கருத்தையும் படத்தையும் ஒப்புநோக்கிக் கலந்துரையாடுக.



கவிதைப் பேழை

# தொழில்நுட்பம்

ச

# பெருமாள் திருமொழி

*– குலசேகராழ்வார்*

CBWZSP

**நுழையும்முன்**

தமிழர், பண்டைய நாட்களிலிருந்தே அறிவியலை வாழ்வியலோடு இணைத்துக் காணும் இயல்புடையவர்களாக இருக்கிறார்கள். அதன்விளைவாக, சங்க இலக்கியத்தில் அறிவியல் கருத்துகள் நிறைந்துள்ளன. அதற்கு இணையாகப் பக்தி இலக்கியங்களிலும் அறிவியல் கருத்துகள் செறிந்திருக்கின்றன.

*வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன் பால்*
*மாளாத காதல் நோயாளன் போல் மாயத்தால்*
*மீளாத் துயர்தரினும் வித்துவக் கோட்டம்மா! நீ*
*ஆளா உனதருளே பார்ப்பன் அடியேனே.* *

*பாசுர எண்: 691*



### பாடலின் பொருள்

மருத்துவர் உடலில் ஏற்பட்ட புண்ணைக் கத்தியால் அறுத்துச் சுட்டாலும் அது நன்மைக்கே என்று உணர்ந்து நோயாளி அவரை நேசிப்பார். வித்துவக்கோட்டில் எழுந்தருளியிருக்கும் அன்னையே! அதுபோன்று நீ உனது விளையாட்டால் நீங்காத துன்பத்தை எனக்குத் தந்தாலும் உன் அடியவனாகிய நான் உன் அருளையே எப்பொழுதும் எதிர்பார்த்து வாழ்கின்றேன்.

**சொல்லும் பொருளும்** சுடினும் – சுட்டாலும், மாளாத–தீராத, மாயம் – விளையாட்டு

வித்துவக்கோடு என்னும் ஊர், கேரள மாநிலத்தில் பாலக்காடு மாவட்டத்தில் உள்ளது. குலசேகர ஆழ்வார் அங்குள்ள இறைவனான உய்யவந்த பெருமாளை அன்னையாக உருவகித்துப் பாடுகிறார்.

### நூல் வெளி

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தின் முதலாயிரத்தில் 691ஆவது பாசுரம் பாடப்பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளது. பெருமாள் திருமொழி நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் ஐந்தாம் திருமொழியாக உள்ளது. இதில் 105 பாடல்கள் உள்ளன. இதனைப் பாடியவர் குலசேகராழ்வார். இவரின் காலம் எட்டாம் நூற்றாண்டு.

## கற்பவை கற்றபின்...

தமிழர் மருத்துவமுறைக்கும் நவீன மருத்துவமுறைக்கும் உள்ள தொடர்பு குறித்து ஒப்படைவு உருவாக்குக.

Explanatory – விளக்கமுறை
Feeling – உணர்ச்சிக்கூறு
Figures of speech – அணிகள்
Hyperbole – உயர்வு நவிற்சி
Hypothesis – கருதுகோள்
Ideal level – குறிக்கோள் நிலை
Image – படிமம், உருக்காட்சி
Imitative – போலச் செய்தல்
Impulse – உள்தூண்டல்
Initiative – தான் தொடங்காற்றல்
Inspiration – அகத்தெழுச்சி
Intellect – அறிவாற்றல்
Introduction – அறிமுகம்
Introspection – அகக்காட்சி
Irony – வஞ்சப்புகழ்ச்சி
Knowing – அறிவுக்கூறு
Meanings – சொற்பொருள்
Memorization – மனப்பாடம் செய்தல்
Metonymy – ஆகுபெயர்
Metaphor – உருவகம்
Method – முறை
Metre – யாப்பு
Mood – உட்பாட்டுநிலை
Motive – ஊக்கி
Onomatopoetic – ஒலிக்குறிப்புள்ள
Perception – புலன்காட்சி
Personality – ஆளுமை
Phonetic Power – ஓசையாற்றல்

Poem – பாட்டு
Poetic – கவிதை மதிப்பு
Poetic Sympathy – கவிப்பரிவு
Poetic Value – கவிதை மதிப்பு
Poetry – கவிதை
Power – ஆற்றல்
Practice – பயிற்சி
Prose – உரைநடை
Prose poetry – வசனகவிதை
Prosody – யாப்பிலக்கணம்
Rhyme – எதுகை
Rhythm – ஒலிநயம்
Semantic Power – பொருளாற்றல்
Sensation – புலன் உணர்வு
Sentiment – பற்று, சுவை
Simile – உவமை
Stanza – பாசுரம், செய்யுள் பத்தி
Stimulus – தூண்டல்
Subjective – அகப்பொருள் கவிதை
Symbol – குறியீடு
Sympathy – பிறர்மீது இரக்கங்காட்டல்
Tendency – உளப்போக்கு
Theory – கொள்கை
Thought – எண்ணம்
Understanding – புரிந்துகொள்ளுதல்
Value – மதிப்பு
Verse – செய்யுள்
Willing – முயற்சிக்கூறு

## அறிவோம் தெளிவோம்

இந்தியாவின் நாட்டுப்பண்ணை எழுதிய இரவீந்தரநாத்தாகூர் (1861–1941) இலக்கியத்திற்கான நோபல் பரிசு பெற்ற முதல் ஆசிய கவிஞர் என்பது குறிப்பிடத்தக்கது. அவரது "கீதாஞ்சலி " என்ற தொகுப்பிற்காக 1913இல் அவ்விருது வழங்கப்பெற்றது. மக்கள் இவரை அன்புடன் குருதேவ் என்று அழைத்தார்கள். அவருடைய மற்றொரு பாடலான "அமர் சோனார் பங்களா" நமது அண்டை நாடான வங்காளதேசத்தின் நாட்டுப்பண்ணாக உள்ளது.

### நோபல் பரிசு பெற்ற முதல் ஆசியக் கவிஞர்

கொல்கத்தாவைச் சேர்ந்த தாகூர், தமது எட்டாவது வயதிலேயே கவிதைகளை எழுதத் தொடங்கினார். பதினாறாவது வயதில் இவரது முதல் கவிதைத் தொகுப்பினை பானுசிம்கா (சூரிய சிங்கம்) என்னும் புனை பெயரில் வெளியிட்டார். தாகூர் பிரித்தானிய அரசை எதிர்த்து நாட்டின் விடுதலையை ஆதரித்தார். அவரது பெயரும் புகழும், அவரது படைப்புகள் வாயிலாகவும், அவர் நிறுவிய விசுவபாரதி பல்கலைக்கழகம் என்னும் கல்வி நிறுவனத்தின் மூலமும் இன்றும் வாழ்ந்து கொண்டிருக்கின்றன.

# கண்ணாடி

9BBH62

**சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக**

1. ஏட்டிலெழுதாக்கவிதை என அழைக்கப்படுவது

   அ) நாட்டார் பாடல்கள் ஆ) சங்கப்பாடல்கள்

   இ) கீர்த்தனைகள் ஈ) காப்பியப்பாடல்கள்

2. அழகிய சொக்கநாதர் இப்பாடல்களைப் பாடுவதில் வல்லவர்

   அ) சித்திரகவி ஆ) சிலேடைப் பாடல் இ) அந்தாதிப்பாடல் ஈ) நாட்டுப்புறப்பாடல்

3. இரவு என்பதனைக் குறிக்கும் இரு சொல் இணையைத் தேர்ந்தெடுக்க

   அ) கங்குல், பகல் ஆ) நிசி, பகல் இ) கங்குல், அல் ஈ) அல், பகல்

4. சரியான கூற்றைத் தேர்ந்தெடுக்க

   அ) சங்ககாலக் கவிதைகள் அகம், புறம் சார்ந்த வாழ்வியல் பதிவுகளை வெளிப்படுத்துகின்றன.

   ஆ) சங்ககாலக் கவிதைகள் அறத்தை மட்டுமே பேசுகின்றன.

   இ) சங்ககாலக் கவிதைகள் பக்திக்கவிதைகள் என்றழைக்கப்பட்டன.

   ஈ) சங்ககாலக் கவிதைகள் பெரும்பாலும் குடிமக்களையே பாடுபொருளாகக்கொண்டன.

5. கூற்று: மெய்ஞ்ஞானத் தேடலையும் மறைபொருள் சார்ந்த ஆன்மீக உட்பரிமாணத்தையும் குறிப்பதே சூஃபித்துவம்.

   காரணம்: தூய்மையான ஆன்மீகத் தேடலில் மானுட இருப்பினை மீட்பதே சூஃபித்துவம்.

   அ) கூற்று, காரணம் இரண்டும் தவறு ஆ) கூற்று, காரணம் இரண்டும் சரி.

   இ) கூற்று சரி காரணம் தவறு ஈ) கூற்று தவறு, காரணம் சரி.

6. பொருத்துக

   1. பாடுக என்றதும் பாடுவோன் – அ) சித்திரகவி
   2. அலங்காரத்தோடும் ஓசையோடும் பாடுவோன் – ஆ) வித்தாரகவி
   3. ஓவியத்தை அடிப்படையாகக் கொண்டு பாடுவோன் – இ) மதுரகவி
   4. விரிவாகப் பாடுவோன் – ஈ) ஆசுகவி

   அ) 1–ஈ, 2– இ, 3–ஆ, 4–அ ஆ) 1–ஆ, 2–அ, 3–இ, 4–ஈ

   இ) 1–ஈ, 2– இ, 3–அ, 4–ஆ ஈ) 1–இ, 2–அ, 3–ஈ, 4–ஆ

## நிரப்புக

7. கீர்த்தனைகளாக வளர்ச்சி பெற்றுள்ள பாடல் வகை________.

8. வேதநாயகர் எழுதிய தமிழின் முதல் புதினம் ________.

9. நமக்காகத் தம் பசியைத் தொலைத்தவர்கள் ________.

10. முற்றுருவகப்பாங்கில் அமைந்து தெளிவானதோர் அகக்காட்சியை வழங்குவது_______.

11. படிப்பவர்தம் அறிவிற்கும் அனுபவத்திற்கும் ஏற்ப வெவ்வேறு பொருளைத் தரும் உத்தி ________.

12. 'பாரதியின் கவிதா மண்டலத்தைச் சேர்ந்தவர்' எனப் பாரதியாரால் முன்மொழியப்பட்டவர் __________

13. 'எழுத்து ' கால புதுக்கவிஞர்களின் கவிதைத் தொகுப்பு _________.

14. 'மானுடம் பாட வந்தவர்கள்' என்று தங்களை அழைத்துக்கொண்ட கவிஞர்கள் --------.

15. 'ரென்கா' பாடல் மரபிலிருந்து தோன்றியது ________ கவிதைவடிவம்.

## குறுவினா

1. தொடக்க காலத்தில் தமிழில் புதுக்கவிதை முயற்சியை மேற்கொண்ட கவிஞர்கள் யாவர்?

2. எழுத்து இதழில் கவிதை படைத்தவர்களை எழுதுக.

3. கசடதபற இதழில் வெளியான கவிதைகளின் தன்மையை விளக்குக.

4. வானம்பாடி இதழ் எங்கு, எப்போது வெளிவந்தது?

5. வானம்பாடிக் கவிஞர்களைப் பட்டியலிடுக.

6. நாட்டுப்புறப்பாடல் என்பது யாது?

7. 'பூமியிலே விட்டாலே
   பொற்பாதம் நோகுமென்பாய்'– யார் யாரிடம் கூறியது?

8. சுந்தர கவிராயர் கண்ட மூன்று தலைகள் எவை எவை ?

9. கொழுமுகம் என்பது யாது ?

10. தனிப்பாடல்கள் என்று எவற்றைக் குறிப்பிடுகின்றோம் ?

11. குதம்பைச்சித்தர் பெயர்க்காரணம் கூறுக.

12. சிற்றிலக்கிய வகைகளுள் எவையேனும் நான்கனை எழுதுக.

13. இளமைப் பருவத்தில் நம்மால் ஏற்படும் துன்பங்களைப் பொறுத்துக் கொண்டவர்கள் யாவர்?

14. சித்திரகவியின் தோற்றுவாய் பற்றி எழுதுக.

15. இரட்டை நாகபந்தம் என்றால் என்ன?

## சிறுவினா

1. புதுக்கவிதையில் படிம உத்தியை எடுத்துக்காட்டுடன் விளக்குக.
2. புதுக்கவிதை வலிமை பெறுவதற்கு உதவிய இதழ்கள் யாவை?
3. புதுக்கவிதையில் குறியீடு – குறிப்பு வரைக.
4. ஹைக்கூவின் வடிவம் குறித்து எடுத்துக்காட்டுடன் எழுதுக.
5. சென்ரியூ கவிதைக்கு எடுத்துக்காட்டுத் தந்து விளக்குக.
6. நாட்டுப்புறப்பாடல்கள் எந்தெந்தக் கலைவடிவங்களில் முகம் காட்டுகின்றன?
7. நாட்டுப்புறப்பாடல் பகுதியில் அமைந்துள்ள உவமையை விளக்குக.
8. 'புதையல்' என்னும் சொல்லில் மறைந்துள்ள சொற்களைப் பட்டியலிடுக.
9. சுந்தரகவிராயர் கண்ட புதுமையான காட்சியைப் பற்றி எழுதுக.
10. வரையறு : சூஃபித்துவம்.

## நெடுவினா

1. புதுக்கவிதையின் உத்திகளைத் தொகுத்து எழுதுக.
2. லிமரிக், லிமரைக்கூ – வேறுபடுத்துக.
3. பல்வேறு காலகட்டங்களிலான புதுக்கவிதையின் வளர்ச்சியினைத் தொகுத்து வரைக.
4. விறகொடிக்கும் பெண்ணின் வாழ்வியலை நாட்டுப்புறப்பாடல் வழிநின்று விளக்குக.
5. தாயன்பின் பெருமைகளை மகள் எங்ஙனம் எடுத்துரைக்கிறாள்?
6. 'கண்ணுள் மணியை'– பாடல் வழியாக அறியலாகும் செய்திகளைத் தொகுத்து எழுதுக.
7. பேரானந்த நிலைகுறித்து ஆசியா உம்மா கூறும் வழிமுறைகளைத் தொகுத்தெழுதுக.

## படிப்போம் பயன்படுத்துவோம்

1. கீழ்க்காணும் பாடலைப் படித்து வினாக்களுக்கு விடையளிக்க.

*கடலிடை எழுகதிர்த் திங்கட் காட்சி*
*மலையிடை ஒழுகும் அருவி வழங்கும்*
*செங்கண் கருங்குயில் சிறகடி பட்டே*
*பொன்னுதிர் வதுபோல் பூக்கள் உதிரும்*
*பூக்கொய் தோகையர் புதரிடை மயில்கள்*
*கழையாடு கூத்தன் கல்லாக் கடுவன்*
*முட்பலா தூக்கி முன்வரு மந்தி*
*முழவினை ஆர்க்கும் கூத்த முதியவள்*
*மான்பயில் சாரல் மலைவழி தாண்டி*

*ஊணுக் காக ஒவ்வொரு நாளும்*
*பழுமரம் தேடும் பறவையைப் போலக்*
*கண்டதும் கேட்டதும் கற்றதும் எண்ணி*
*மண்டிய இருள்சூழ் மலர்தலை உலகில்*
*எண்ணி யெண்ணி இரவும் பகலும்*
*செஞ்சொல் உவமை சீர்தளை கூட்டிப்*
*பாப்புனைந் தளிக்கும் பைந்தமிழ்ப் புலவ!*

– *வாணிதாசன் கவிதைகள்*

வினாக்கள்

1. பாடலில் பயன்படுத்தப்பட்டுள்ள உவமைகளைக் குறிப்பிடுக.
2. பண்புத்தொகைக்கு எடுத்துக்காட்டுத் தருக.
3. கழையாடு கூத்தன், எழுகதிர்– இலக்கணக் குறிப்பு தருக.
4. உணவு என்னும் பொருள் தரும் சொல்லைப் பாடலிலிருந்து எழுதுக.
5. பைந்தமிழ்ப் புலவனின் செயல் யாது?

2. கீழ்க்காணும் குறிப்புகளைப் படித்துக் கட்டங்களை நிரப்புக. (ஒரு பொருள் பல சொல்)

| 1 | | | | 2 | |
|---|---|---|---|---|---|
| ■ | | ■ | | | 4 |
| | | | | 6 | ■ |
| | | ■ | 7 | | |
| | 3 | 8 | | | 9 |
| 5 | ■ | | | 10 | |

### இடமிருந்து வலம்

1. நிலவையும் சந்திரனையும் குறிக்கும் வேறு சொல். (4)
2. வயலையும் கழனியையும் குறிக்கும் வேறு சொல். (2)
7. மேகத்தையும் காரையும் குறிக்கும் வேறு சொல். (3)
8. உண்மையையும் மெய்யையும் குறிக்கும் வேறு சொல். (3)
10. வேளாண்மையையும் விவசாயத்தையும் குறிக்கும் வேறு சொல். (3)

### கீழிருந்து மேல்

3. தீயையும் அனலையும் குறிக்கும் வேறு சொல். (4)
5. களிப்பையும் மகிழ்ச்சியையும் குறிக்கும் வேறு சொல். (4)

### வலமிருந்து இடம்

4. குழந்தையையும் மகவையும் குறிக்கும் வேறு சொல். (3)
6. அழகையும் கவினையும் குறிக்கும் வேறு சொல். (3)

### மேலிருந்து கீழ்

9. உலகத்தையும் ஞாலத்தையும் குறிக்கும் வேறு சொல். (2)

3. கீழ்க்காணும் தொடர்களில் ஒவ்வொரு சொல்லாக நீக்கினாலும், முழுமையாகப் பொருள் அமையும்படி தொடர் உருவாக்குக.

| எ.கா. உடற்பயிற்சி செய்வது உடலுக்கும் மனத்துக்கும் நல்லது. | | • உடற்பயிற்சி செய்வது மனத்துக்கும் நல்லது.<br>• உடற்பயிற்சி செய்வது நல்லது.<br>• உடற்பயிற்சி நல்லது. |
|---|---|---|
| 1 | மங்கல இசை முழங்க விழா இனிதே தொடங்கியது. | |
| 2 | நல்லது நினைத்தால் நல்லதே நடக்கும் என்பார்கள். | |
| 3 | குழந்தை மழலை மொழியில் கொஞ்சிப் பேசியது. | |
| 4 | அந்தப் பாடலைப் பாடியவர் யார்? | |
| 5 | நாள்தோறும் விடுப்பு எடுக்காமல் பள்ளிக்கு வருக. | |

4. கீழ்க்காணும் ஒவ்வொரு சொல்லிலிருந்தும் பத்துப் புதிய சொற்களை உருவாக்குக.

எ.கா. கோட்பாடுகள்

கோ, கோட்பாடு, பா, பாட்டு, பாடு, கோடு, கோடுகள், கோள், கள், கடு, கட்டு.

1. நடைமுறைக்கல்வி –  2. விடுகதைகள் –  3. பாடநூல்கள் –

4. தமிழ்க்கலைக்களஞ்சியம் –  5. முகவரிச்சீட்டுகள் –

5. கீழ்க்காணும் கவிதைகளின் பாடுபொருள்/கருத்தைக் கண்டறிக.

| எ.கா.<br>வயலைப் பிரிக்கும் வரப்பு<br>கரையைத் தாண்டி<br>விளையாடும் எலிகள்<br>– பொ.குமார்<br>கருத்து – இயற்கைக்குப் பிரிவினை இல்லை | அடர்ந்த இருட்டு<br>தனியாய்ச் செல்கையில்<br>கூடவே மின்மினி<br>– மு. முருகேஷ் | தோப்பை விற்றபின்<br>வாங்கிய வீட்டில்<br>தொட்டிச் செடிகள்<br>– தமிழ் மணவாளன் |
|---|---|---|
| அசை போடாமல் நிற்கிறது<br>வைக்கோலைத் தின்ற<br>வயல் பொம்மை<br>– அரவிந்தன் | குழந்தைகள் விளையாடும் மரத்தடி<br>பழத்தை நழுவ விடுகிறது<br>அணில்<br>– லிங்குசாமி | என்ன செய்து கிழித்தாய்?<br>நாள்தோறும் கேட்கும்<br>நாள்காட்டி<br>– பல்லவன் |

6. சொற்களஞ்சியப் பெருக்கம்

எ.கா. உறை என முடியும் சொற்களைக் கண்டறிக

1. உடற்பாதுகாப்புக்காக அணியும் கவசம் – மெய்யுறை
2. உவமையில் ஓர் வகை – உள்ளுறை

படை என முடியும் பின்னொட்டுச் சொற்களைக் கண்டறிக.

1. பரிசு பெற்ற புலவர், மற்றொருவரை வழிப்படுத்துவது _________படை.
2. ஒளிவுமறைவின்றி நடைபெறும் செயலுக்குக் கூறுவது__________படை.
3. உறக்கத்தைக் குறிக்கும் சொல்_________படை.
4. பண்டைய அரசர்களின் பாதுகாப்புக்குதவியவை_____ ,______ , ____, ____படைகள்
5. உழவர் பயன்படுத்தும் கலப்பையைக் குறிப்பது_______ படை.

7. கீழ்க்காணும் குறிப்புகளைப் பயன்படுத்திக் கவிதை எழுதுக.

1. ஒவ்வோர் அடியிலும் மூன்று சொல் அமையும்படியும் மூன்றாவது சொல், மை என முடியுமாறும் எழுதுக.

   எ.கா. சொல்லில் வேண்டும் இனிமை
   சொல்லும் பொருளும் புதுமை

2. ஒவ்வோர் அடியிலும் மூன்று சொல் அமைத்து, அவற்றுள் ஏதாவது ஒரு சொல்லில் விலங்கு / பறவையின் பெயர் இடம்பெறுமாறு எழுதுக.

   எ.கா. கூவும்போது குயில் அழகு
   ஆடும்போது மயில் அழகு

3. மழை, நட்பு, குழந்தை, தொழிலாளி ஆகிய கருப்பொருள் சார்ந்து ஹைக்கூ கவிதை எழுதுக.

   எ.கா. எழுத நினைத்த கவிதை
   மறந்து போயிற்று
   குழந்தை சிரித்தது

8. கீழ்க்காணும் ஓவியத்திற்குக் கவிதை ஒன்று இயற்றுக.



9. இதழ்களில் வெளிவரும் புதுக்கவிதைகளைத் தொகுத்துத் தொகுப்பேடு உருவாக்குக.

10. அண்மையில் நடைபெற்ற, உன் மனத்தை நெகிழச்செய்த நிகழ்வினை நவீன வடிவில் கவிதையாக்குக.

## இணையச்செயல்பாடு

# நூல்கள் பல அறிவோம்

பிடிக்கும் நூலைப் படித்துப் பார்ப்போமா!


distribute this file, provided this header page is kept intact.

திருக்குறள்

1. அறத்துப்பால்

1.1 கடவுள் வாழ்த்து

1.1.1 கடவுள் வாழ்த்து

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு. 1
கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின். 2
மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்

### படிகள்

1. கொடுக்கப்பட்டிருக்கும் உரலி/ விரைவுக்குறியீட்டைப் பயன்படுத்தி 'projectmadurai' என்னும் இணையப் பக்கத்திற்குச் செல்க.
2. இப்போது திரையில் நூல்களின் பட்டியல் தோன்றும். அதன் அருகில் pdf, Unicode, kindle (6–inch) ஆகிய மூன்று தெரிவுகள் கொடுக்கப்பட்டிருக்கும்.
3. அப்பட்டியலில் தேவைப்படும் நூலைத் தேர்வுசெய்து வாசிக்கலாம்.

### செயல்பாட்டின் படிநிலைக்கான படங்கள் :


படி 1


படி 2


படி 3

நூல்கள் பல அறிவோம் இணையப் பக்கத்தின் உரலி

http://www.projectmadurai.org/pmworks.html

B145_11_ADT_TM

* படங்கள் அடையாளத்திற்கு மட்டுமே.

இயல் இரண்டு

# கதையியல்

9BKS7P




*தமிழில் கதைஇலக்கியம் குறித்த சான்றுகள் தொல்காப்பியத்தில் கிடைப்பதன் மூலம், அதன் தொன்மையை நாம் அறியலாம். தமிழின் மரபுப்பண்புகளோடும் மேலைநாட்டினரிடமிருந்து பெறப்பட்ட வடிவநேர்த்தியோடும் தமிழ்ச்சிறுகதைகள் தோன்றி வளர்ந்தன.*

*இப்பாடப்பகுதியில் தமிழ்ச்சிறுகதைகளின் வளர்ச்சி குறித்தும், பல்வேறு காலகட்டங்களில் எழுதிய படைப்பாளர்கள் குறித்தும் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன. நல்ல கதை இலக்கியங்களை படிப்பதற்கும் திறனாய்வு செய்வதற்குமான வழிகாட்டல், பொருத்தமான எடுத்துக்காட்டுகளோடு அமைந்துள்ளது. சிறுகதை எழுதுவதற்காக வழங்கப்படும் பயிற்சி, சிறந்த படைப்பார்வத்தை உண்டாக்கும். மேலும், இப்பகுதியில் வழங்கப்பட்டுள்ள சிறுகதைகள், அயலக எழுத்தாளர் சிறுகதை, அயலகச் சிறுகதை, மொழிபெயர்ப்புச் சிறுகதை, குறுங்கதை, நுண்கதைகள் ஆகியன படிப்போருக்குப் புதிய திறப்புகளை ஏற்படுத்தும்.*

## கற்றல் நோக்கங்கள்

- ***தமிழ்ச் சிறுகதையின் தோற்றம், வரலாறு, இன்றைய வளர்ச்சிப்போக்கு ஆகியவற்றை அறிந்துகொள்ளுதல்.***
- ***சிறுகதையின் வடிவம், கதைப்பின்னல் மற்றும் எழுதும்முறை ஆகியவற்றைப் புரிந்து கொள்ளுதல்.***
- ***பல்வேறு வடிவங்களில் அமைந்த சிறுகதைகளை வாசித்தல்.***
- ***சிறுகதைகளைத் திறனாய்வு செய்தல், சிறுகதை எழுதுதல் ஆகிய திறன்களைப் பெறுதல்.***

## பாடப் பகுதி

- தமிழ்ச்சிறுகதை – தோற்றமும் வளர்ச்சியும்
- சிறுகதை வாசிப்பும் திறனாய்வும்
- சிறுகதை எழுதும் கலை
- யானையின் சாவு – சார்வாகன்
- பூ உதிரும் – ஜெயகாந்தன்
- இறுக மூடிய கதவுகள் – ஆர். சூடாமணி
- நசுக்கம் – சோ. தர்மன்
- 'பேபி' குட்டி – கே. பாலமுருகன்
- பசி – தாமரைச்செல்வி
- அஷமஞ்சா பாபுவின் நாய் – சத்யஜித் ரே
- ரப்பர் பந்து – எஸ்.ராமகிருஷ்ணன்
- பனித்துளியின் பேச்சு– ஹெச்.ஜி.ரசூல்
- ஒற்றைக்குரல் – இளங்கோ கிருஷ்ணன்

இயல் இரண்டு

# 1. தமிழ்ச்சிறுகதை – தோற்றமும் வளர்ச்சியும்

ஆதிமனிதன் தனது அனுபவத்தை அல்லது நடந்த நிகழ்வை அடுத்தவரிடம் விவரித்த போது கதைசொல்லுதல் என்னும் கலை ஆரம்பித்தது. அதைச் சொல்பவர் தமது சொல்லும் திறனுக்கேற்ப உவமைகளோடும் வருணனைகளோடும் சொன்னபோது, அது கேட்பவரைக் கவர்ந்திழுக்கிற ஒரு வலிமையான தொடர்பு வடிவமாக உருவானது.

தொடக்கத்தில் தமிழ்மரபில் கதைகள் வாய்மொழியாகவே சொல்லப்பட்டன. பின் உரைநடை கலந்த கதைப்பாடல்கள் கதைகளைத் தந்தன. மொழியின் வரிவடிவம் செழுமைப்பட்ட பிறகு, கதை இலக்கியம் எழுத்தில் பதிவானது.

தமிழின் தொன்மையான இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தின்

*"பொருள் மரபில்லாப் பொய்ம்மொழியானும்*
*பொருளொடு புணர்ந்த நகைமொழியானும்"*

*(பொரு. செய். 1420)*

என்ற அடிகளைத் தமிழின் உரைநடை மரபை உணர்த்தும் அடிகளாகக் கொள்ளலாம்.

பொருள் மரபில்லாப் பொய்ம்மொழியானும் என்பதற்கு, கற்பனை கலந்த புனைவு மொழியாக, அதாவது 'யானையும் குருவியும் தமக்குள் நட்புப் பாராட்டிப் பேசிக்கொள்வதைப் போல' எனவும், பொருளொடு புணர்ந்த நகைமொழியானும் என்பதற்கு, 'உண்மை கலந்த வேடிக்கைப் பேச்சு' எனவும் உரையாசிரியர் விளக்கம் தருவர்.

மரபிலிருந்து மேற்கூறிய இரு கூறுகளையும் எடுத்துக்கொண்டு பாரதியார் தமது கதையை உருவாக்கினார். அவரது 'காக்காய் பார்லிமெண்ட்' கதையில் காகங்களின் பேச்சு 'உண்மை கலந்த வேடிக்கைப் பேச்சாக' இருக்கின்றன. இந்த மரபுக்கூறுகளுடன் அமைந்த அவருடைய 'ஆறில் ஒரு பங்கு' (1910) கதை, தமிழின் தொடக்ககாலக் கதைகளுள் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

சிறுகதையை மேலைநாடுகளின் இலக்கிய வடிவமாகத் திறனாய்வாளர்கள் வரையறுக்கின்றனர். உலகச் சிறுகதைகள் அமைந்த வடிவத்தைப் பின்பற்றியே தமிழ்ச் சிறுகதைகளும் எழுதப்பட்டன. சிறுகதை என்பது ஒரு சம்பவம், ஒரு மனநிலை, ஒரு சிக்கல் என ஒரு பொருள் பற்றி மட்டுமே எழுதுவது. எந்த நோக்கத்தோடு கதை எழுதப்படுகிறதோ, அதை நோக்கியே கதையின் அனைத்துக் கூறுகளும் செல்லும் ஓர்மை கொண்டது. வாசகன் ஊகித்தறிய முடியாத ஒரு திருப்பத்தை இறுதியில் கொண்டு முடிவது. இந்த வரையறைக்கு உட்பட்டே திறனாய்வாளர்களால் சிறுகதையின் வடிவம் மதிப்பிடப்படுகிறது.

தமிழில் மேற்கூறிய சிறுகதைக்கான வடிவ அமைதியுடன் வெளிவந்த முதல் சிறுகதையாக, வ.வே.சு. என்றழைக்கப்பட்ட வரகனேரி வேங்கடேச சுப்ரமணியம் எழுதிய 'குளத்தங்கரை அரசமரம்' (1915) அறியப்படுகிறது. ஓர் அரசமரம் பேசுவதுபோல் அமைந்த இக்கதை, அதன் சமகாலச் சிக்கலை நுட்பமாகப் பேசிச்செல்கிறது. அ.மாதவையாவின் சிறுகதைகளும் தொடக்ககாலச் சிறுகதைகளாக அறியப்படுகின்றன.

தமிழ்ச்சிறுகதைப் படைப்பாளர்களைப் பொதுவாக ஐந்து தலைமுறையினராக நாம் பிரித்து மதிப்பிடலாம்.

## முதல் தலைமுறை

தமிழ் நவீன இலக்கியத்தைத் தொடக்கத்திலேயே செழுமைப்படுத்தியவர் புதுமைப்பித்தன். அவரது சமகால



புதுமைப்பித்தன்



ந. பிச்சமூர்த்தி



மௌனி



கு.ப. ரா.

எழுத்தாளர்களான ந. பிச்சமூர்த்தி, மௌனி, கு.ப. ராஜகோபாலன், பி.எஸ்.ராமையா, சிதம்பர சுப்பிரமணியன் ஆகியோரைத் தமிழ்ச்சிறுகதையின் முன்னோடிகளாகக் கொள்ளலாம். இவர்கள் அனைவரும் சிறுகதைகளுக்கு முக்கியத்துவம் கொடுத்த மணிக்கொடி இதழில் எழுதியவர்கள். இக்காலகட்டம் 'மணிக்கொடி காலம்' என்றே அழைக்கப்பட்டது. நா.பார்த்தசாரதி, அகிலன் ஆகியோர் புகழ்பெற்ற இலட்சியவாதக் கதைகளைப் படைத்தனர். இக்காலகட்டத்தில் எழுதிய கல்கி, பொழுதுபோக்குத் தன்மை கொண்ட கதைகளைத் தந்தார்.

### இரண்டாம் தலைமுறை

புதுமைப்பித்தனைத் தொடர்ந்து லா.ச. ராமாமிர்தம், க.நா. சுப்ரமணியம், சி.சு. செல்லப்பா, எம்.வி. வெங்கட்ராம், ஆர். சண்முகசுந்தரம் போன்ற படைப்பாளிகளிடம் இருந்து சமரசமில்லாத சமூக விமர்சனக் கதைகள் எழுந்தன. பெண்களால் எழுதப்படும் பெண்ணுலகச் சித்திரிப்புக் கதைகள் குமுதினி, டி.பி. ராஜலெட்சுமி, கி. சரஸ்வதியம்மாள் போன்றவர்களால் எழுதப்பட்டன.



லா.ச. ரா.

### மூன்றாம் தலைமுறை

இக்காலகட்டத்தில் முன்னோடிகள் போட்ட பாதையில் வேகம் பிடித்த தமிழ்ச் சிறுகதை, அதன் உச்சங்களைத் தொட்டது. எளிய மனிதர்களின் பண்புநலன்களை நுட்பமாகப் பதிவுசெய்த கு.அழகிரிசாமி, கவித்துவமான சொற்சித்திரங்களைப் படைத்த நகுலன், மனித உறவுகளையும் மனச்சலனங்களையும் சித்திரித்த தி. ஜானகிராமன், சிறந்த வடிவ ஓர்மையுடன் எழுதிய சுந்தர ராமசாமி, பெருநகர

### அறிவோம் தெளிவோம்

உலக அளவில் சிறுகதையின் வடிவக் கூறுகளைக் கொண்ட கதைகள் 17ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டிருந்தாலும், 19ஆம் நூற்றாண்டில்தான் முழுவீச்சில் வெளிப்படத் தொடங்கின.

அமெரிக்க எழுத்தாளர்களான எட்கர் ஆலன்போ, ஓ ஹென்றி, நதானியல் ஹாதர்ன், வாசிங்டன் இர்விங் போன்றோர் சிறுகதையின் முழுமையான வடிவச் சிறப்போடு அமைந்த சிறுகதைகளைத் தந்தனர். குறிப்பாக ஓ ஹென்றியின் கதைகளில் வரும் கடைசித் திருப்பம் இன்றுவரை உலகப்புகழ் பெற்று விளங்குகின்றது.

பிரெஞ்சு எழுத்தாளர்களான போம்பெவல், மாப்பஸான், மெரிமீ, பால்சால்க் போன்றோர் சிறுகதையின் தொடக்ககால நிலையில் அதன் அனைத்துச் சாத்தியங்களோடும் படைத்துக் காட்டியவர்கள். குறிப்பாக, இன்றளவும் மாப்பஸான் கதைகள் உலகப்புகழ் பெற்று விளங்குகின்றன. தமிழின் சிறந்த சிறுகதை எழுத்தாளரான புதுமைப்பித்தன் தமிழகத்தின் மாப்பஸான் என்று அழைக்கப்படுவது, மாப்பஸான் கதைகளின் வீச்சினைப் புரிந்துகொள்ள உதவுகிறது.

#### உலகச் சிறுகதை ஆசிரியர்கள்

ரஷ்ய எழுத்தாளர்களான ஆண்டன் செகாவ், துர்கனேவ், கோகல் ஆகியோர் புகழ்பெற்ற சிறுகதைகளை எழுதியவர்கள். செகாவ் சிறுகதை வடிவத்தை மிகச்சிறந்த கலைவடிவமாக்கியவர். இவர் தம் சிறுகதைகள் நகைச்சுவையும் அங்கதமும் கலந்தவை. ரஷ்ய சிறுகதையின் தந்தை எனப் போற்றப்படும் கோகலின் 'மேலங்கி' என்னும் சிறுகதை எண்ணற்ற எழுத்தாளர்களை உருவாக்கிய கதை எனலாம்.

நடுத்தர வாழ்வை எழுதிய அசோகமித்திரன் ஆகியோரின் படைப்புகள் வெளிவந்தன.

வலியும் அவமானமும் நிறைந்த வாழ்வியலைப் பதிவுசெய்த ஜி.நாகராஜன், தம் கிராமியப் பின்புலத்தைக் களமாக்கிக் கொண்டு வட்டார மொழியில் கதைசொல்லும் கி.ராஜநாராயணன், பெருநகர வாழ்வியலைப் பெரிதும் எழுதிய இந்திரா பார்த்தசாரதி, கற்பனை தவிர்த்த இயல்புவாதப் படைப்புகளைத் தந்த நீல.பத்மநாபன், குழந்தை உளவியலைக் கதைகளாக்கிய சார்வாகன், குறியீட்டுத் தன்மையுடன் எழுதிய ந.முத்துசாமி, வறுமையைச் சித்திரித்த ஆ. மாதவன், நாஞ்சில் நாட்டு (குமரி மாவட்டம்) மக்களின் வாழ்வை எழுத்தில் பதிவு செய்த மா.அரங்கநாதன், ஒரு பார்வையாளனாக வாழ்வை நேரடியாகப் பதிவுசெய்த கரிச்சான்குஞ்சு, எளிய மனிதர்களின் மனவோட்டங்களை எழுதிய சா. கந்தசாமி போன்றோரின் படைப்புகள் வெளிவந்தன.

முற்போக்கு எழுத்துகளால் மக்களுடன் நேரடியாக விவாதித்த ஜெயகாந்தன், தம் கூர்மையான படைப்புகளால் பெரும்புகழ்பெற்றார். தொ.மு.சி ரகுநாதன், கே. முத்தையா, டி. செல்வராஜ், சு. சமுத்திரம், பொன்னீலன்,பா.செயப்பிரகாசம்போன்றோரும் சிறந்த முற்போக்கு இலக்கியங்களைத் தந்தனர். ஆர். சூடாமணி, ராஜம்கிருஷ்ணன், கோமகள், லட்சுமி, அநுத்தம்மா போன்றோர் இக்காலகட்டத்தில் எழுதிய பெண் எழுத்தாளர்கள்.



ராஜம்கிருஷ்ணன்

## நான்காம் தலைமுறை

இத்தலைமுறை எழுத்தாளர்களில் பெரும்பாலானோர் மென்மையான மொழியில் வாழ்வின் நுட்பமான தருணங்களை எழுதினர். வண்ணநிலவன், வண்ணதாசன், விட்டல்ராவ், பூமணி, நாஞ்சில்நாடன், ஆதவன், பிரபஞ்சன், திலீப்குமார், ஜெயந்தன், தஞ்சை பிரகாஷ், தோப்பில் முகமது மீரான், ராஜேந்திர சோழன், சூர்யகாந்தன், சி.ஆர். ரவீந்திரன், சி.எம்.முத்து போன்றோர் சிறந்த படைப்புகளைத் தந்தனர்.



மேலாண்மை பொன்னுச்சாமி

ஜெயகாந்தனுக்குப்பின் எழுதிய சிறந்த முற்போக்குப் படைப்பாளிகளாகக் கந்தர்வன், ச. தமிழ்ச்செல்வன், மேலாண்மை பொன்னுச்சாமி, தனுஷ்கோடி ராமசாமி, வேல. ராமமூர்த்தி, சோலை சுந்தரபெருமாள், தேனி சீருடையான் போன்றோரைக் குறிப்பிடலாம். மிகநவீனமான புனைவு நடையைக் கொண்டவர் சுஜாதா.

பெண்ணியவாத எழுத்தாளர்களாக அம்பை, திலகவதி போன்றோர் அறியப்பட்டனர். அவர்களைத் தொடர்ந்த வாஸந்தி, சிவசங்கரி, இந்துமதி ஆகியோரது படைப்புகளும் குறிப்பிடத்தக்கவை.

## ஐந்தாம் தலைமுறை

எஸ். ராமகிருஷ்ணன், ஜெயமோகன் ஆகியோர் இலக்கிய வாசிப்பைப் பொது வாசகர்களுக்கும் கொண்டு சென்றவர்கள். பவா செல்லத்துரை, கோணங்கி, பெருமாள்முருகன், மு. சுயம்புலிங்கம், கோபிகிருஷ்ணன், இரா. முருகன், சுப்ரபாரதிமணியன், யூமாவாசுகி, சு.வேணுகோபாலன், கண்மணி குணசேகரன், போன்றோர் இக்காலக்கட்டத்தில் முக்கியமான படைப்பாளர்கள். தமிழில் ஒடுக்கப்பட்ட மக்களின் வாழ்வியலை எழுதும் எழுத்தாளர்களில் சிவகாமி, பாமா, சோ. தர்மன், இமையம், அழகிய பெரியவன், ஆதவன் தீட்சண்யா போன்றோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

தற்காலத்தில், தமிழ்ச் சிறுகதைத் தளத்தில் வாழ்வின் தருணங்கள், நுட்பமாக இலக்கியத் தரமுடையதாக வெளிவந்துகொண்டிருக்கின்றன. இன்றைய தமிழ்ச் சிறுகதைகள் ஆங்கிலத்திலும் பல்வேறு இந்தியமொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டு உலகமெங்கும் வாசிக்கப்படுகின்றன. அதன்மூலம் உலகளாவிய இலக்கியத் தளத்தில் தமக்கென்று ஓர் உயர்ந்த இடத்தைத் தமிழ்ச்சிறுகதைகள் பெற்றிருப்பது பெருமைக்குரியதாகும்.

# 2. சிறுகதை வாசிப்பும் திறனாய்வும்

## வாசிப்பு

வாசிப்பு என்பது, ஓர் உன்னதமான தனி அனுபவம். சமூக அனுபவங்கள் கூட்டுத்தொகுப்பாகப் படைப்புகளில் வெளிப்படுகின்றன. அவற்றை வாசிக்கும் ஒரு வாசகன் தன் வாசிப்பின் ஊடாக ஒட்டுமொத்த சமூக அனுபவக்களத்திற்குள் பயணிக்க முடியும். இடம், காலம், மொழி கடந்த அந்த மானுட வாழ்வியல் பதிவுகளிலிருந்து தனக்கான உன்னதங்களை அவன் எடுத்துக் கொள்கிறான். ஆக, வாசிப்பு நிறைந்த ஒரு சமுதாயமே மரபின் பண்பாட்டுக் கூறுகளோடு இயைந்த ஒரு நவீனத்தைத் தகவமைத்துக்கொள்ள முடியும்.

## வாசிப்பின் படிநிலைகள்

இலக்கிய வாசிப்பு என்பது, ஒரே மையத்திலேயே எப்போதும் இயங்குவதில்லை. அது பல்வேறு வாசிப்புப் படிநிலைகளின் ஊடாகக் கடந்து கொண்டே இருக்கிறது. ஒரு நல்ல வாசகனின் வாசிப்புத்தரம் என்பது, குழந்தை இலக்கிய வாசிப்பிலிருந்து பொழுதுபோக்கு, சாகசம், குற்றவியல், மெல்லுணர்வு, இலட்சியவாதம் ஆகியவற்றின் வழியாகச் செவ்வியல் வாசிப்பை நோக்கி நாளும் வளர்ந்துகொண்டே செல்லும் தன்மையுடையது.

## குழந்தை இலக்கியம்

குழந்தை இலக்கியமே வாசிப்பு அனுபவத்தின் தொடக்கம். சிறுவயதில் கேட்ட பாட்டி கதைகள், கிராமிய மரபுக்கதைகள் போன்றவையே நம் வாசிப்பைத் தொடங்கிவைக்கின்றன.

## பொழுதுபோக்குக் கதைகள்

அச்சுத் தொழில்நுட்பம் வளர்ச்சியடைந்த பிறகு, பொழுதுபோக்குக் கதைகள் நம்மை ஆக்கிரமித்துக் கொண்டன. பொழுதுபோக்கிற்காகக் கதைகள் எழுதும் வணிக எழுத்தாளனுக்கு நம்மிடம் பகிர்ந்து கொள்ள எந்தவொரு வாழ்வியல் பொருளும் இல்லை. நம்மை மகிழ்விப்பது மட்டுமே அவர்களது நோக்கம். நல்ல வாசகனால் இந்தப் பொழுதுபோக்குப் புள்ளியை எளிதில் கடக்க முடியும்.

## சாகசக் கதைகள்

குழந்தைப்பருவ வாசிப்பிலிருந்து இளமையை நோக்கி நகரும் பருவத்தில் விசித்திரங்களை, சாகசங்களை நோக்கி மனம் விரிகிறது. வாழ்க்கையை நம்பிக்கையுடன் எதிர்கொள்ளும் மனநிலையின் கதைவடிவமே சாகசக்கதைகள். இம்மாதிரியான கதைகளே கனவுகளை உருவாக்கக் கூடியவை.

## குற்றக் கதைகள்

இளம்பருவத்தினருக்கு நெருக்கமான சாகசத்திலிருக்கும் வீரத்தன்மையைக் கொச்சைப்படுத்திக் குற்றங்களைப் பேசும் கதைகள், துப்பறியும் போர்வையில் வலம் வருகின்றன. இவற்றின் மலினத்தன்மையை நாம் புரிந்துகொள்ள வேண்டும்.

## மெல்லுணர்வுக் கதைகள்

குமரப்பருவம் தொடங்கி, வளர்ந்து செல்லும் ஆண் பெண் ஈர்ப்பு சார்ந்த மெல்லுணர்வுகளை இவ்வகைக் கதைகள் கொண்டுள்ளன. இவை வாசிப்பு அனுபவமுள்ள அனைவரையும் கவரக்கூடிய தன்மை வாய்ந்தவை.

## இலட்சியவாதக் கதைகள்

தன் மனவெழுச்சிகளுக்கு அப்பாற்பட்டு, சமூகப் பொறுப்புணர்வுமிக்க இலட்சியவாத

எழுத்துகளை வாசிப்பதென்பது, வாசிப்பு மனநிலையின் முக்கியமான கட்டம். சமூகச்சிக்கல்கள் சார்ந்து வாசிப்பு இயங்குவது இந்நிலையில்தான். இதன் வழியாகத்தான் சீரிய செவ்விலக்கிய வாசிப்புக்கு வந்துசேர முடியும்.

## செவ்விலக்கிய வாசிப்பு

குழந்தைப்பருவம் தொடங்கி தனது வாசிப்பு அனுபவத்திலிருந்து செவ்வியல் இலக்கிய வாசிப்பிற்கு வர, சமூக வாழ்வியல் இலட்சியவாதக் கதைகளே துணை புரிகின்றன.

இலட்சியவாதக் கதைகள் வாழ்வினை எளிமைப்படுத்திச் சொல்லிச் செல்பவை. சீரிய இலக்கியங்கள் வாழ்வின் அனைத்துச் சிக்கல்களையும் ஊடுருவி, தங்கள் கனவுகளை அடைபவை. இவ்வகையான வாசிப்புப் படிநிலைகளின் வழியாக நமது வாசிப்பு வளர்ந்து வந்துள்ளது.

## திறனாய்வு

சிறுகதைகளைப் படைப்பது ஒரு தனிக்கலை. அதைப்போலவே அவற்றை வாசித்து ஆய்வு செய்வதும் அதன் படைப்புக்குச் சமமான ஒரு தனிக்கலை. ஒரு கதையை நாம் உள்வாங்கிக் கொள்ள, கீழ்க்காணும் கூறுகளை நாம் புரிந்துகொள்ள வேண்டும்.

## களமும் சூழலும்

ஒரு கதையின் வரலாற்றுச் சூழல் மற்றும் சமூகச்சூழல், அது நிகழும் களம் ஆகியவற்றைப் புரிந்துகொண்டால் மட்டுமே கதையின் தளத்திற்குள் சென்று நாம் அதை உணரமுடியும்.

## கதையின் மையம்

கதை பல்வேறு நிகழ்வுகளின் தொகுப்பாகச் சென்றாலும், எந்த மையத்தை நோக்கி அது இயங்குகிறது என்பதைக் கண்டறிய வேண்டும். அப்போதுதான் அதன் நோக்கு, சார்பு ஆகியவற்றைப் புரிந்து கொள்ளமுடியும்.

## நிறுவும் நோக்கு

கதைப்பின்னலின் இறுதியில் அக்கதை எந்நோக்கை நிறுவுகிறது என்ற அடிப்படையில்தான் அக்கதையின் இலக்கியத்தன்மையை மதிப்பிட இயலும்.

## விளைவு

ஒரு கதையைப் படித்து முடித்தவுடன் அதனால் மகிழ்வோ கோபமோ ஏற்படவேண்டும். நம் உணர்வுகளைக் கிளறி நமக்குள் அதிர்வையோ ஒரு புதிய தூண்டுதலையோ அது ஏற்படுத்தவேண்டும்.

வாசகர், தம்வாழ்வின் நிகழ்வுகளோடு கதையை ஒப்பிட்டுப்பார்த்து, தம்மைக் கதைக்குள் காண்பவராகவோ, தாம் கதைக்குள் வாழ்பவராகவோ மாற வேண்டும். ஒரு சிறந்த சிறுகதை வாசிக்கப்பட்டபின் மனத்துக்குள் தங்கிவிடவேண்டும். ஒரு நல்ல சிறுகதை நல்ல விளைவுகளை ஏற்படுத்த வல்லது.

## அழகியல்

ஒரு கதையை உவமை, உருவகங்களோடு சொல்வது வாசகரைக் கவர்ந்து ஆர்வமாக வாசிக்கச் செய்யும். ஒவ்வொரு வரியும் வாசகரைக் கைபிடித்துக் கதைக்களத்திற்குள் அழைத்துச் செல்லவேண்டும். கதையின் ஓர்மையோடு வாசகனை ஒன்றச்செய்ய, அழகியல் ஒரு சிறந்த கருவியாகும்.

## திறனாய்வு – ஒரு திறந்த பார்வை

ஓர் இலக்கியத்தைத் திறனாய்வு செய்ய, எவ்வித முன்முடிவும் சார்பும் இல்லாத ஒரு திறந்த பார்வை ஆய்வாளருக்குத் தேவை. அவர் முதலில் ஆய்வு மனப்பான்மையைத் தவிர்த்து, ஒரு முழு வாசகனாக மட்டுமே படைப்பினை அணுக வேண்டும்.

படைப்புக் களத்தின் அனைத்துக் கூறுகளோடும் திளைத்தும் மருகியும் அனுபவித்த ஒரு வாசகனால் மட்டுமே படைப்பின் தன்மையை நேரிய முறையில் வெளிப்படுத்த இயலும்.

மேற்கண்ட கூறுகளின் அடிப்படையில் ஒரு சிறுகதையைத் திறனாய்வு செய்து, நம் இலக்கிய ரசனையை வளர்த்துக் கொள்ளலாம்.

# 3. சிறுகதை எழுதும் கலை

சிறுகதை என்பது ஒரு புத்திலக்கிய வடிவம். மரபான இலக்கியம் ஏற்கெனவே சமூகத்தில் உள்ள கருத்துகளையும் நம்பிக்கைகளையும் வலியுறுத்தும் போக்கு கொண்டது. ஆனால் புத்திலக்கியம் அவற்றை ஒட்டியோ, மறுத்தோ மறுபரிசீலனை செய்து பேசும் போக்கைக் கொண்டது.

சிறுகதைக்கென்று ஒரு தனித்த வடிவச்சிறப்பு உண்டு. சிறிய கதைகளாக இருப்பனவற்றை எல்லாம் நாம் சிறுகதைகள் என்று சொல்லிவிட முடியாது. நீதிக்கதைகள், உதாரணக்கதைகள், உருவகக்கதைகள், பஞ்சதந்திரக்கதைகள் மற்றும் ஈசாப் குட்டிக்கதைகள் போன்றவை எல்லாம் சிறிய கதைகள்தாம் என்றாலும் அவை சிறுகதைகள் அல்ல.

ஒரு சிறிய கதையைச் சிறுகதையாக்குவது கதையின் முடிவில் உள்ள திருப்பம் என்று சொல்லலாம். சிறுகதையின் நோக்கம் ஒரு கதையின் மையக்கருத்தைச் சொல்வது மட்டுமன்று. ஒரு திருப்பத்தைச் சொல்லி, அதன்மூலம் வாசகனைக் கதையனுபவத்தில் பங்கேற்கச் செய்வதும்தான்.

அச்சு ஊடகப் பெருக்கத்தினால் சிறுகதைகள் நிறைந்திருக்கின்ற இக்காலத்தில் வாசகனின் ஆர்வத்தைத் தக்கவைத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. ஆகவே, வாசகன் ஊகிக்க முடியாத அல்லது அவன் ஊகிப்பதற்கு மாறான ஒரு திருப்பத்தோடு சிறுகதை அமைவது அவசியமாகிறது.

## சிறுகதையின் ஓர்மை

வாழ்க்கைச் சம்பவங்களில் நம் உணர்வுகளை வெகுவாகப் பாதித்த ஒரு நிகழ்வு, ஒரு பொருள், ஒரு சிக்கல், ஒரு கருத்து ஆகியவற்றுள் ஏதேனும் ஒன்று குறித்துச் சிறுகதையின் கருப்பொருள் அமையலாம்.

எந்த நோக்கத்துடன் ஒரு கதை எழுதப்படுகிறதோ அதனை நோக்கியே கதையின் அனைத்து அம்சங்களும் அமைந்திருப்பதே ஓர்மை. ஒரு கதையின் எல்லாக் கூறுகளும் அதன் முடிவில் வரும் திருப்பத்தைச் சிறப்பாக நிகழ்த்த உதவினால் அதுவே ஓர்மையுள்ள சிறுகதை.

## சிறுகதையின் வடிவம்

சிறுகதையின் வடிவம் பின்வரும் நான்கு அடிப்படைகளைக் கொண்டதெனக் கூறலாம்.

1. சிறுகதையின் போக்கு ஓர்மை கொண்டதாக இருக்கவேண்டும். தேவையில்லாத எந்தவொரு விவரமும் அதில் இருக்கவேண்டியதில்லை. அது நேராக ஒரு முடிவை நோக்கிச் செல்வது நன்று.
2. முடிவில் உள்ள திருப்பம், வாசிப்பவன் ஊகிக்கமுடியாத ஒன்றாக இருக்கவேண்டும். அத்திருப்பத்தில்தான் சிறுகதையின் வெற்றி உள்ளது.
3. வாசகனை எந்த அளவுக்குக் கற்பனை செய்ய வைக்கிறதோ அந்த அளவிற்குச் சிறுகதை வெற்றி பெறுகிறது.
4. ஒரு சிறந்த சிறுகதை அதன் கடைசிவரிக்குப் பிறகே வாசகனின் மனத்தில் மீண்டும் தொடங்குகிறது.

## சிறுகதை வடிவத்தின் உறுப்புகள்

சிறுகதை வடிவத்தின் உறுப்புகளாகக் கீழ்க்காண்பவற்றை நாம் வரையறுக்கலாம்.

### மையக்கதைப்பாத்திரம்

இது யாருடைய அல்லது யாரைப்பற்றிய கதை என்ற கேள்விக்கான விடையாக இருப்பது. மையக்கதைப்பாத்திரத்தை நோக்கி வாசகனின் கவனம் இருப்பதாகக் கதை அமையவேண்டும்.

## எதிர்க்கதைப்பாத்திரங்கள்

இவை மையக்கதைப்பாத்திரத்திற்கு எதிர்நிலையில் அமையும் பாத்திரங்கள். இவர்கள் அளிக்கும் பாதிப்பு மூலம்தான் கதையின் நெருக்கடி, சிக்கல் ஆகியவை உருவாகின்றன.

## கதைக்களம்

கதை நடக்கும் சூழல், காலம் ஆகியவையே கதைக்களம். அக்கதை எங்கே நடக்கிறது, எப்படி நடக்கிறது என்ற கேள்விக்குக் கதையில் பதில் இருக்கவேண்டும். அதற்கேற்பக் கதையின் புனைவுகள் அமையவேண்டும். அச்சூழல் சமகாலமாகவோ இறந்தகாலமாகவோ எதிர்காலமாகவோ இருக்கலாம். கதையின் மையக்கருவையும் கதை மாந்தர்களையும் ஒரு வாழ்க்கைச் சூழலில் நம்பகமாகப் பொருத்திக் காட்டவேண்டியது அவசியம்.

## கதைமுடிச்சு

கதை எதைப்பற்றியது என்பதுதான் கதைமுடிச்சின் அடிப்படை. கதையின் சிக்கல் உருவாகும் இடமாக இதைக்கொள்ளலாம்.

## திருப்பம்

கதையின் சிக்கல் எவ்வாறு அவிழ்க்கப்படும் என்று வாசகன் ஊகிக்கிறானோ அதிலிருந்து விலகி, ஒரு புதியகோணத்தில் அதை அவிழ்ப்பதே திருப்பமாகும்.

## சிறுகதை எழுதுவதற்கான கருவிகள்

சிறுகதை நேர்த்தியாக அமைவதற்குக் கதை சொல்லுவதில் கீழ்க்காணும் கருவிகளைப் பயன்படுத்துதல் நலம்.

### 1. சித்திரிப்பு

கதைநிகழும் களம், காலம், சூழல், கதைமாந்தரின் தோற்றம், குணம் ஆகியவற்றினை வாசகர் காட்சிப் படிமமாகத் தம்முள் புரிந்துகொள்ளும் வண்ணம் குறைந்த வரிகளில் பதிவுசெய்தல். இந்தச் சித்திரிப்புகளின் வழியாகத்தான் வாசகரின் மனத்தில் கதை நகர்ந்து செல்லும்.

### அ. புறச்சித்திரிப்பு

சாலைவிபத்தில் மாட்டிக்கொண்டு, கையில் அடிபட்ட ஒருவர் அதை இவ்வாறு விவரிக்கலாம்.

"காலையில் நெடுஞ்சாலையில் யாருமே இல்லை. சன்னமான மழை ஒரு பாலிதீன் திரை போலக் கரிய தார்ப்பரப்பை மூடியிருந்தது. கார்களின் முன்வெளிச்சம் நீரின் அடியில் தெரிவதுபோலக் கலங்கித் தெரிந்தது. நான்

**படிப்போம் சுவைப்போம்**

## சிறுகதையின் உயிர்

தமிழின் தலைசிறந்த எழுத்தாளர்களில் ஒருவரான தி. ஜானகிராமன் சிறுகதை எழுதுவது பற்றி இவ்வாறு எழுதுகிறார்.

'சிறுகதையில் வரும் கதையோ நிகழ்ச்சியோ ஒரு க்ஷணத்திலோ, நிமிஷத்திலோ, ஒரு நாளிலோ, பல வருடங்களிலோ நடக்கக்கூடியதாக இருக்கலாம். காலையில் தொடங்கி இரவிலோ, மறுநாள் காலையிலோ அல்லது அந்த மாதிரி ஒரு குறுகிய காலத்திலோ முடிந்துவிட வேண்டும் என்று அவசியமில்லை. சொல்லப்படவேண்டிய பொருளின் ஒர்மைதான் முக்கியமானது.

எட்டு நாளில் நடந்த சங்கதியை முதல் நாளிலிருந்து வரிசையாகச் சொல்லிக்கொண்டு போகலாம். இரண்டாவது, மூன்றாவது, நாலாவது நாளிலிருந்தோ அல்லது கடைசிக் கணத்திலிருந்தோ ஆரம்பித்து, பின்பார்வையாகப் பார்த்துச் சொல்லிக் கொண்டு போகலாம். நடந்தது, நடக்கப் போவது இரண்டுக்கும் இடையே ஒரு வசதியான காலகட்டத்தில் நின்று கொண்டு, நிகழ்ச்சியைச் சித்திரித்துக் கொண்டு போகலாம். எப்படிச் சொன்னாலும் ஒரு பிரச்சினை, ஒரு பொருள், ஓர் உணர்வு, ஒரு கருத்துதான் ஓங்கியிருக்கிறது' என்ற நிலைதான் சிறுகதைக்கு உயிர்.'

இருபக்கமும் பார்த்தேன். வண்டிகள் வரும் ஒலி கேட்கவில்லை."

இங்குப் புறக்காட்சி விவரிக்கப்படுகிறது. இந்த விவரிப்பில் சாலை குறித்த தகவல் மற்றும் சாலையின் தோற்றம் குறித்த உவமை அழகுறச் சொல்லப்பட்டிருக்கிறது.

### ஆ. அகச்சித்திரிப்பு

விபத்தின் போது அவரின் மனவோட்டத்தைக் கீழ்க்காணும் வரிகள் சித்திரிக்கின்றன.

'என் மனத்தில் காலைநேரக் கவலைகள். ஆபீஸில் ஒரு சின்ன நிதிச்சிக்கல். ஒரு தைரியத்தில் சட்டென்று சாலையைக் கடந்தேன். யாரோ கையை ஓங்கித் தட்டுவது போலிருந்தது. சுழன்று விழுந்தேன். ஒரு கார் என்னைத் தாண்டிச் சென்றது. அதன்பின் விளக்குகளின் சிவப்பு சீறிச்சீறி அணைவதை மட்டும்தான் கண்டேன். ஒருகணம் என் மனத்தில் எதுவுமே இல்லை.'

### 2. கதைமாந்தர் உரையாடல்

கதை நிகழ்வுகளின் போக்கிற்குப் பொருந்துவதாகவும் அந்தக் கதைமாந்தர் களின் மொழியிலும் உரையாடல் இயல்பாக அமையவேண்டும். கதைமாந்தர் பேச்சினை இரட்டை மேற்கோள் குறிக்குள் அடைத்துச் சொல்லவேண்டும்.

*எ.கா. 1* "இப்ப நீ சொல்லப் போறியா இல்லையா?"

"முடியாது. என்ன பண்ணுவ?"

*எ.கா. 2* "இப்ப நீ சொல்லப் போறியா இல்லையா?" – அவளை அவன் முறைத்துப் பார்த்தவாறே கேட்டான்.

"முடியாது. என்ன பண்ணுவ?" என்றவாறு சடக்கெனக் கழுத்தை வெட்டிக்கொண்டு அறைக்குள் சென்றாள் அவள்.

எடுத்துக்காட்டு 1-இல் கதைமாந்தர் பேச்சுமட்டும் இருக்க, எடுத்துக்காட்டு 2-இல் அவர்களது உரையாடல் உணர்வுகளோடு கலந்திருப்பதைக் காணலாம்.

### 3. குறியீடு

கதையின் நிகழ்ச்சிப் போக்கு, கதைமாந்தரின் உள்ள உணர்வு போன்றவற்றை நேரடிச் சொற்களில் உரைப்பதைவிட, அந்தக் களத்தில் கிடைக்கிற குறியீடுகளைப் பயன்படுத்திச் சொல்லுதல் வலிமையான வெளிப்பாட்டுக்கு உதவும்.

(எ.கா.) "அவன் கடற்கரையில் அமர்ந்திருந்தான். அவன் விரல்கள் புரிபடாத கோடுகளை மணலில் வரைந்து கொண்டிருந்தன. அலைகளின் பேரோசை காற்று வெளியெங்கும்."

இந்நிகழ்வில் கதைமாந்தரின் மனப்போராட்டத்தை மணலில் வரைந்த விரல்களும் எழுந்து ஆர்ப்பரிக்கும் கடலின் பேரோசையும் நுட்பமாய் வெளிப்படுத்துவதை அறியலாம். இதில் மணலில் வரையும் விரல்களும் கடலின் ஓசையும் குறியீடுகள்.

### கதை சொல்லுதலின் நோக்குநிலை

கதையின் நிகழ்வுகள் யாருடைய பார்வையிலிருந்து சொல்லப்படுகின்றன என்பதே நோக்குநிலை.

### 1. கதைமாந்தர் நோக்கில் சொல்லிச் செல்லும் முறை

கதைமாந்தரின் பார்வையிலிருந்து அவர்களது போக்கிலும் மொழியிலும் கதையை நகர்த்திச் செல்லும் முறை. இம்முறையில் கதையில் வரும் ஓர் உறுப்பினரே 'நான்' 'எனது' என்ற பான்மையில் கதையினைச் சொல்லிச் செல்வார்.

நம் பாடப்பகுதியில் அமைந்துள்ள ஆர். சூடாமணியின் 'இறுக மூடிய கதவுகள்' கதை இம்முறையில் சொல்லப்படுகிறது.

### 2 கதையாசிரியரின் நோக்கில் சொல்லிச்செல்லும் முறை

கதைமாந்தர்களின் அகமன ஓட்டங்கள், புறச்செயல்பாடுகள் ஆகியவற்றின் மூலமும் கதைமாந்தர்களின் உரையாடல்கள் மற்றும் சூழல் வருணனைகள் மூலமும் கதையைக் கதாசிரியரே சொல்லிச் செல்லும் முறை.

நம் பாடப்பகுதியில் உள்ள 'யானையின் சாவு', 'நசுக்கம்', 'பூ உதிரும்', 'அஷமஞ்சா பாபுவின் நாய்' போன்ற கதைகள் இம்முறையில் அமைந்தவை.

## கதை சொல்லுதலின் உத்திகள்

ஒரு கதையைச் சொல்லிச் செல்லும்போது கதை நிகழும் இடம், காலம், நிகழ்வுகளின் தன்மைகளுக்கேற்ப, வரிசைப்படியோ வரிசைகளை மாற்றியோ பின்வரும் உத்திகளைப் பயன்படுத்திக் கூறலாம்.

### அ. இயல்பான வரிசையில் சொல்லும் முறை

கதை நிகழும் வரிசையிலேயே பகுதி பகுதியாகப் பிரித்துக் கொண்டு, இயல்பாகச் சொல்லிச் செல்லும் முறை.

நம் பாடப்பகுதியில் அமைந்துள்ள ஜெயகாந்தனின் 'பூ உதிரும்' கதையை இதற்கு எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம்.

### ஆ. இடையில் பிரித்துச் சொல்லும் முறை

கதையைச் சொல்லிச் செல்லும்போது, அதன் ஒரு புள்ளியில் உட்சென்று மற்றொரு துணைநிகழ்வைச் சொல்லி, மீண்டும் கதைக்கு வருவது.

(எ.கா.) கந்தர்வன் எழுதிய 'சாசனம்' கதையிலிருந்து ....

'சிமிண்டுத் திண்ணையில் பகல் பூராவும் அப்பா உட்கார்ந்திருப்பார். எப்போதாவது பர்மாக் குடையை விரித்து நடப்பார். ஒரு நாளைக்கு இத்தனை தடவை என்று எண்ணிவிடலாம் இறங்கி நடப்பதை.

அப்பா நடந்திருக்க வேண்டிய நடையெல்லாம் தாத்தா நடந்திருந்தார். சமஸ்தானத்தில் தாத்தா இந்தப் பிரதேசத்தின் பேஷ்கார்.

மஹாராஜா இந்தப் பக்கமாய் ஒரு முறை திக்விஜயம் செய்தபோது தாத்தா ஒவ்வொரு வேளை விருந்தையும் ஒரு உற்சவமாய் நடத்தியிருக்கிறார். மஹாராஜாவின் நாக்கு அது வரை அறிந்திராத ருசியும் பண்டமும் விருந்துகளில்.... மரியாதை காட்டி வெகுவாய்ப் பின்னால் வந்து கொண்டிருந்த தாத்தாவை அழைத்து விரலை அவ்வப்போது நீட்டிக் கொண்டே வந்தார் மஹாராஜா. பின்னால் அந்த நிலங்களெல்லாம் தாத்தாவுக்குச் சமானமாய் வந்தன.'

அப்பாவைப் பற்றி சொல்லப்படும் கதையில் ஒரு புள்ளியில் உள்ளே நுழைந்து தாத்தா குறித்த நிகழ்வுகள் சொல்லப்படுவதை இம்முறைக்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

### இ. பின்னோக்கு முறை

தற்போதைய கதைப்போக்கிற்குக் காரணமாக, ஏற்கெனவே நடந்த ஒன்றைக் காட்டிக் கதையின் வளர்ச்சியை வலிமையாகக் கொண்டு செல்வது.

(எ. கா. ) நம் பாடப்பகுதியில் அமைந்துள்ள ஆர். சூடாமணியின் 'இறுக மூடிய கதவுகள்' கதையில் முன்னர் நடந்த காட்சியாகச் சொல்லப்படும் கீழ்க்காணும் வரிகளைப் பின்னோக்கு முறைக்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

இளைய அம்மா. பயம் கலந்த ஒரு சந்தோசத்தில் உருவமே வேறாகி, ஒளியால் நிறைந்தது போன்ற அம்மா. அவள் அணைப்பினுள் எட்டு வயது பையன்.

"செல்லப்பா அங்கிளை உனக்குப் பிடிச்சிருக்குதா கேசவா?"

"ஓ, ரொம்பப் பிடிக்குமே"

"எனக்கு... எனக்குக் கூட அவரைப் பிடிக்குதுடா கண்ணா!"

"நல்ல அங்கிள் அவரு"

"அவரை... அந்த நல்ல அங்கிளை உனக்கு அப்பாவாய்ப் பண்ணட்டுமா?"

பையன் முகத்தில் ஒன்றும் புரியாத வெற்றுப்பார்வை. அது ஒரு தடை என்பதுபோல் அம்மாவின் முகத்தில் கணநேரத் தடுமாற்றம்.

"என்னம்மா?"

"அவரை நான் கல்யாணம் செய்துக்கட்டுமா?"

இப்போது அதிர்ச்சியே வடிவாய் உருமாறும் மகன்.

"ஊஹூம், கூடாது, அது தப்பு!"

"உனக்கு ஒரு அப்பா கிடைப்பாருடா கண்ணா"

"என் அப்பா செத்துப்போயிட்டார். நீ என் அம்மா, அம்மால்லாம் தப்புச் செய்யக் கூடாது..."

மறுப்பில் தலையாட்டும் மகன்.

### ஈ. முன்னோக்கு முறை

எதிர்வரும் காலத்தில் நடைபெறப்போகும் நிகழ்வுகளாகக் கற்பனையில் எண்ணிப் பார்த்தல். இது கதைமாந்தரின் பார்வையிலோ கதையாசிரியரின் பார்வையிலோ சொல்லப்படலாம்.

எ.கா. சுந்தர ராமசாமியின் 'பிரசாதம்' கதையிலிருந்து ...

அடுத்த நாள், குழந்தையைத் தூக்கிக்கொண்டு கோயிலுக்கு நடந்து போகிற காட்சியை ஒரு தாய் தன் கணவனிடம் விவரிக்கிறாள்.

'நாளை விடியக் கருக்கலில் எழுந்திருக்க வேண்டும். சுடு தண்ணீரில் குழந்தையைக் குளிப்பாட்ட வேண்டும். பட்டுச்சட்டை போட்டு, கலர்நூல் வைத்துப் பின்ன வேண்டும். அந்தப் பின்னலில் ஒரு ரோஜா – ஒன்றே ஒன்று – அதற்குத் தனி அழகு. நாம் இருவரும் குழந்தையைக் கோயிலுக்கு எடுத்துச் செல்கிறபொழுது தெருவில் சாணி தெளிக்கும் பெண்கள், கோலம் இழைக்கும் பெண்கள் எல்லோரும் தலைதூக்கித் தலைதூக்கிப் பார்க்க வேண்டும். அவர்கள் தலைதூக்கிப் பார்ப்பதை நான் பார்க்க வேண்டும். நான் பார்த்து, உங்களைப் பார்க்க வேண்டும். நீங்கள் எல்லோரும் பார்ப்பதைப் பார்க்கவேண்டும். பார்த்துவிட்டு என்னைப் பார்க்க வேண்டும்.'

### உ. காட்சித்துணுக்கு முறை

கடந்தகால நிகழ்வுகளை அல்லது நினைவுகளை, புகைப்படப் பிரதிகளை அடுக்கிக் காட்டுவதுபோலக் காட்சித் துணுக்குகளாகச் சொல்லிச் செல்லும் முறை. இதை ஒரு விரைவான பின்னோக்குமுறை என்றும் கூறலாம்.

(எ.கா.) நம் பாடப்பகுதியில் அமைந்துள்ள ஆர். சூடாமணியின் 'இறுக மூடிய கதவுகள்' கதையில் மகனின் நினவுக்காட்சிகளாகச் சொல்லப்படும் கீழ்க்காணும் வரிகளைக் காட்சித்துணுக்கு முறைக்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

'புரண்டு படுத்தேன். மறுபடியும் அரைத்தூக்க நிலை. கண்களுள் மீண்டும் இளம் அம்மாவின் முகம். அதில் ஒருவித ஆவல். உதடுகள் ஏதோ சொல்கின்றன. சிறுவனின் கண்களில் அதிர்ச்சி. மறுப்புக்குறியில் தலை இடவலமாய் அசைகிறது'

## சிறுகதையின் மொழிநடை

ஒரு சிறுகதை, அக்கதையின் மையப்பொருள், சூழல் மற்றும் கதைக்களம் ஆகியவற்றிற்குப் பொருந்தும்படியான மொழிநடையில் அமைதல் நலம்.

### 1. பொதுமொழியில் சொல்லும் முறை

அனைத்துப்பகுதிகளிலும் வாசிக்கப்படுகிற, பொதுமொழியில் கதை சொல்லும் முறை. இது எழுத்து வழக்கிலும் பேச்சு வழக்கிலும் அமையலாம்.

நம் பாடப்பகுதியில் அமைந்துள்ள 'இறுக மூடிய கதவுகள்', 'பூ உதிரும்' போன்ற கதைகளை இதற்கு எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம்.

### 2. வட்டாரமொழியில் சொல்லும் முறை

அந்தந்தப் பகுதிகளில் வழங்கும் வட்டார வழக்கு மொழியில் கதை சொல்லும் முறை. இம்முறையில் பெரும்பாலும் பேச்சு வழக்கே பயன்படுத்தப்படும்.

(எ.கா.) கி. ராஜ நாராயணனின் 'நிலைநிறுத்தல்' – கதையிலிருந்து ...

"மூதேய் மூதேய் வெறுவாக்கலங்கெட்ட மூதேய்." எப்பேர்க் கொத்தி வேலையாளாய் இருந்தாலும் வசவு வாங்காமல் தீராது அவரிடம்.

*இது சாதாரணம்; பெரிய முதலாளிக்கேண்ணு உள்ள கெட்டவார்த்தை வசவுகள் இருக்கு. அதோடு எத்தனையோதயா அவரிட்டெ அடியும் வாங்கி இருக்கான் இந்த மாசாணம் பயல்.*

*இப்பொ அவன் வாங்கின வசவுக்கு ஒரு காரணமும் கிடையாது. "சுண்ணாம்பு எடுத்துட்டுவாலே மாசாணம்"ண்ணாரு எடுத்துட்டு வந்தான்.*

*ஒரு பிஞ்சு சுண்டைக்காய் அளவுதான் வெத்திலையில் வைத்துக் கொண்டாரனும்; மஞ்சாடி கூடீரப்படாது, வசவுதான்.*

### 3. பொது மற்றும் வட்டார மொழியில் சொல்லும் முறை

கதாசிரியரின் விவரிப்பைப் பொதுவான மொழியிலும் கதை மாந்தர்களின் உரையாடலை வட்டாரத்தின் பேச்சுவழக்கிலும் கலந்து அமைக்கலாம். பெரும்பாலான கதைகள் இம்முறையில் எழுதப்பட்டு வருகின்றன.

நம் பாடப்பகுதியில் அமைந்த 'நசுக்கம்' சிறுகதையை இதற்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

### எழுத்தின் இரகசியம்

எழுத்தின் இரகசியம் எழுத்தில்தான் உள்ளது. எனவே, சிறுகதை வடிவத்தின் அனைத்துக் கூறுகளையும் தன்வயப்படுத்தி, சுயமான படைப்பூக்கத்துடன் கதைகள் வெளிப்படவேண்டும். எந்தவொரு படைப்பாக இருந்தாலும் அதன் களத்தில் நின்று, உணர்வுப்பூர்வமான மொழியில் சமூக உயர்வினை நோக்கி எழுதப்படும் போது அது வெற்றிகரமாக அமையும்.

## படிப்போம் சுவைப்போம்

### தமது சிறுகதைகள் பற்றிப் புதுமைப்பித்தன்

கதைகேட்பதும் கதைசொல்லுவதும் தொன்றுதொட்டு வந்தபழக்கம். 'ஒரே ஒரு ஊரிலே ஒரே ஒரு ராஜா இருந்தான்' என்று ஆரம்பிக்கும் இளமை மாறாத கதைகள் முதல் இன்று இருக்கும் எழுத்தாசிரியர்களின் கனவுகளான சிறுகதைகள்வரை, எல்லாம் மனித உள்ளத்தின் அடையமுடியாத ஆசைகளின் எதிரொலி. கதை என்றால் என்ன? எதுதான் சிறுகதை? சிறுகதையின் எல்லை என்ன? சிறுகதைக்கென்று தனிப்பட்ட ரூபம் ஒன்று உண்டா? இதற்கெல்லாம் சூத்திரங்கள் ஒன்றும் கிடையாது. சிறுகதையின் எல்லை வளர்ந்துகொண்டே வருகிறது. ஒவ்வொரு கதை ஆசிரியனும் எடுத்தாண்ட ரூபங்கள் எண்ணிறந்தன.

அச்சுப்பிழை பார்க்கிறவர்களை ஒதுக்கிவிட்டால் என் கதையின் முதல் வாசகன் நான்தான். அவ்வளவு ரசித்துப் படிப்பேன். வேகமாக எழுதிக்கொண்டு போவதனால், எழுதியதில் அங்கொன்றும் இங்கொன்றும்தான் என் ஞாபகத்தில் இருக்கும்.

நான் இப்பொழுது பிரசுரித்துள்ளவற்றின் அளவுக்கு ஏறக்குறைய சமமான எண்ணிக்கையுள்ள கதைகள் அவை எழுதப்பட்ட காலத்திலிருந்த பத்திரிகை காரியாலயங்கள் எல்லாவற்றையும் சேத்திர தரிசனம் செய்துவிட்டு திரும்பியவை ஆகும். எழுத்துக்குப் பயிற்சி மிகவும் அவசியம். முடுக்கிவிட்ட எந்திரம் மாதிரி தானே ஓர் இடத்தில் வந்து நிற்கும். இது என் அனுபவம். இதுவரை நான் கையாண்டுவரும் இந்த முறை பிசகியதே இல்லை. என் கதைகளிலே ஏற்றத்தாழ்வு உண்டு. அவற்றிற்குக் காரணம் வார்ப்புப் பிசகு அல்ல. அதை எழுதத் தூண்டிய மன அவசரத்தின் உத்வேகத்தைப் பொறுத்தது கதையின் கவர்ச்சியில் காணும் ஏற்றத்தாழ்வு.

நான் முன்விசாரித்த உதாரணங்களே போதும் என் கதைகளில் நூற்றுக்குத் தொண்ணூறு எடுத்த எடுப்பில் எழுதியும் வெற்றி காணுவதற்குக் காரணம் என் நெஞ்சில் எழுதாக் கதைகளாகப் பல எப்பொழுதும் கிடந்துகொண்டே இருக்கும். அந்தக் கிடங்கில் இருந்து நான் எப்பொழுதும் எடுத்துக்கொள்ளுவேன். கதை எழுதும் சிலர் அவற்றை விவரப்பட்டியல் எழுதி ஒரு மூலையில் போட்டுவைப்பார்கள்; நான் அப்படியல்ல. ஞாபக மறதிக்கு அரிய வசதியளிப்பேன். எழுத்துரூபத்தில் அமையும்வரை மனதில் உறுத்திக்கொண்டுக் கிடக்கும் நிலையில் இருந்த கதைகள் யாவும் இவற்றைவிடச் சிறந்த ரூபத்தில் இருந்தன என்பது என் நம்பிக்கை.

# கண்ணாடி

**பொருத்தமான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.**

1. சிறுகதைக்கான வடிவ அமைதியுடன் வெளிவந்த முதல் தமிழ்ச் சிறுகதை

   அ) காக்காய் பார்லிமெண்ட் ஆ) குளத்தங்கரை அரசமரம் இ) துன்பக்கேணி ஈ) விடியுமா?

2. ஒரு சம்பவம், ஒரு மனநிலை, ஒரு சிக்கல் என ஒருபொருளைப் பற்றி மட்டுமே அமையும் ஓர்மை கொண்டது அ) கவிதை ஆ) சிறுகதை இ) புதினம் ஈ) கட்டுரை

3. பொருந்தாத இணையைக் கண்டறிக.

   அ) புதுமைப்பித்தன் – ந.பிச்சமூர்த்தி ஆ) கந்தர்வன்–மேலாண்மை பொன்னுசாமி

   இ) ராஜம்கிருஷ்ணன் – கோமகள் ஈ) கி. இராஜநாராயணன்–ஆதவன்தீட்சண்யா

4. பொருத்துக

| **ஆசிரியர் பெயர்** | **எழுத்தின் தன்மை** |
|---|---|
| அ) தி. ஜானகிராமன் | – 1. குறியீடு |
| ஆ) ந. முத்துசாமி | – 2. விளிம்புநிலை |
| இ) பாமா | – 3. கரிசல் |
| ஈ) கி. இராஜநாராயணன் | – 4. மனச்சலனம் |
| | – 5. சொற்சித்திரம் |

   அ) அ– 1 ஆ– 3 இ– 4 ஈ– 2

   ஆ) அ– 4 ஆ– 1 இ– 2 ஈ– 3

   இ) அ– 5 ஆ– 1 இ– 4 ஈ– 3

   ஈ) அ– 4 ஆ– 1 இ– 5 ஈ– 2

5. கூற்று : கதையின் நிகழ்வுகள் யாருடைய பார்வையிலிருந்து சொல்லப்படுகின்றன என்பதே நோக்குநிலை

   காரணம் : கதை சொல்லுதலின் நோக்கு நிலை சிறுகதைகளுக்கான உத்திகளுள் ஒன்று

   அ) கூற்று சரி, காரணம் தவறு

   ஆ) கூற்று, காரணம் இரண்டும் சரி காரணம் கூற்றுக்கான சரியான விளக்கம்

   இ) கூற்று, காரணம் இரண்டும் சரி ஆனால் காரணம் கூற்றுக்கான சரியான விளக்கமன்று

   ஈ) காரணம், கூற்று இரண்டும் தவறு

6. பின்வரும் கூற்றுகளில் தவறானவற்றைச் சுட்டுக.

   1. வாசகனை எந்த அளவிற்குக் கற்பனை செய்யவைக்கிறதோ அந்த அளவிற்குச் சிறுகதை வெற்றிபெறுகிறது.
   2. சிறுகதையின் போக்கு ஓர்மை கொண்டதாக இருக்கவேண்டியதில்லை.

3. *சிறுகதையின் முடிவில் உள்ள திருப்பம் வாசிப்பவன் ஊகித்து அறியும் ஒன்றாக இருக்கவேண்டும்.*

4. *ஒரு சிறந்த சிறுகதை அதன் கடைசி வரிக்குப் பிறகே வாசகனின் மனத்தில் மீண்டும் தொடங்குகிறது.*

*அ) 2, 3 ஆ) 1, 2 இ) 1, 3 ஈ) 2, 4*

7. *தொடக்ககாலத் தமிழ் மரபில் கதைகள் இவ்வாறு சொல்லப்பட்டன.*

*அ) எழுத்து வழியாக ஆ) அச்சுவழியாக இ) வாய்மொழியாக ஈ) சைகை வழியாக*

8. *தொடக்ககாலத்தில் சிறுகதைகளுக்கான முக்கியத்துவம் கொடுத்த இதழ்*

*அ) வானம்பாடி ஆ) கசடதபற இ) மணிக்கொடி ஈ) எழுத்து*

9. *வாசிப்பு அனுபவத்தின் தொடக்கமாக அமைவது*

*அ) சாகசக்கதைகள் ஆ) பொழுதுபோக்குக் கதைகள்*

*இ) குழந்தை இலக்கியம் ஈ) மெல்லுணர்வுக் கதைகள்*

10. *இவர்களில் யார் ஆண் எழுத்தாளர் இல்லை*

*அ) யூமாவாசுகி ஆ) பூமணி இ) அம்பை ஈ) சுஜாதா*

## குறுவினா

1. *தமிழ்ச்சிறுகதைகளின் முன்னோடிகளாக அறியப்படுபவர்கள் யாவர்?*
2. *சிறுகதையில் 'ஓர்மை' என்றால் என்ன?*
3. *காட்சித்துணுக்கு முறை என்பது யாது?*
4. *இரண்டாம் தலைமுறை சிறுகதை ஆசிரியர்களாக அறியப்படுபவர்கள் யாவர்?*
5. *இப்ப அவன் வாங்கின வசவுக்கு ஒரு காரணமும் கெடயாது. "சுண்ணாம்பு எடுத்துட்டுவாலே மாசாணம்" ண்ணாரு. – இதைப் பொதுமொழி நடையில் எழுதுக.*

## சிறுவினா

1. *சாகசக்கதைகளை வரையறு.*
2. *சிறுகதை வடிவத்தின் உறுப்புகளை எழுதுக.*
3. *கதை சொல்லுதலின் நோக்கு நிலையினை விளக்குக.*
4. *அகச்சித்திரிப்பு, புறச்சித்திரிப்பு வேறுபடுத்துக.*
5. *சிறுகதை வடிவத்தைக் கலை வடிவமாக்கிய ரஷ்ய எழுத்தாளர்கள் குறித்து எழுதுக.*

## நெடுவினா

1. *கதைசொல்லுதலின் உத்திகளை விளக்குக.*
2. *சிறுகதையின் மொழிநடை குறித்து ஆய்க.*

சிறுகதை

# யானையின் சாவு

**– சார்வாகன்**



ரங்கநாதனுக்குக் கோபமும் எரிச்சலும் அத்துமீறிக் கொண்டு வந்தது. குழந்தையின் முதுகில் அங்கேயே ஓர் அறை வைக்கக் கையை ஓங்கிவிட்டான். ஒருவரையொருவர் இடிச்சு மோதிக்கொண்டு வேர்வை நெடியும் தூசியும் பல்வேறு அழுகல் கறிகாய் வாசனைகளும் நிறைந்த நட்டநடுக் கடைத்தெருவில் செல்லுலாய்டு பிளாஸ்டிக் பொம்மைகளைப் பரப்பி வைத்திருந்த அந்தக் கிழவனை விட்டு நகரமாட்டேன் என்று சத்தியாக்கிரகம் செய்து கொண்டிருந்த குழந்தையின் கையை ஆத்திரத்துடன் அமுக்கிப் பிடித்தான். அகத்திலே உடைப்பெடுத்துவரும் கோபத்தினால் கண்களைச் சுருக்கி 'புஸ்புஸ்'ஸென்று மூச்சு விட்டுக்கொண்டு "நீ வரயா இல்லை நான் ஒன்னை இங்கியே விட்டுட்டுப் போயிடட்டுமா?" என்று சீறினான். குழந்தை அவனை நிமிர்ந்து பார்த்தது. தும்பியின் சிறகைப் போலிருந்த அதன் கண்கள் பளபளத்தன. ஈனக் குரலில், "எனக்கு யானை வேணும்ப்பா" என்று கெஞ்சியது.

அவன் காஞ்சிபுரம் கோவிலில் குழந்தைக்கு யானை காட்டினதிலேயிருந்து இரவும் பகலும் இதே பல்லவிதான். எனக்கு யானை வேணும்ப்பா! தன் பொருளாதார நிலையில் யானையைக் கட்டித் தீனி போட்டு மாளாது என்று குழந்தையைப் புரிந்து கொள்ள வைக்க அவனுக்கு ரெண்டு வாரங்கள் ஆச்சு. நாலு நாளாய்த்தான் யானையை மறந்திருந்தான். இப்போ மறுபடி பிடிச்சுக் கொண்டது.

நடைபாதையோரத்தில் வியாபாரம் செய்யும் கிழவனை வெறுப்போடு பார்த்துவிட்டு, "இங்கே யானை இல்லை. வா வீட்டுக்குப் போகலாம்" என்று குழந்தையின் கையை இழுத்தான். "அதோ இருக்கே" குழந்தை கையை நீட்டி ஒரு மூலையைக் காண்பித்தது. அது காட்டிய இடத்தில் நிசமாகவே ஒரு யானை இருந்தது. கிளிப்பச்சை நிறத்தில் உடம்பு, முதுகில் தங்கவர்ணத்தில் வேலைப்பாடுகளும், ரோஸ் நிற வாயும், நல்ல எலுமிச்சை மஞ்சளில் தந்தமும் கொண்டு தும்பிக்கை ரோஸ் நிறமான பின்பாகம் தெரியத் தூக்கி சலாம் போடும் நிலையில் நின்று கொண்டிருந்தது அந்த யானை. அத்தனை குப்பை சாமான்களுக்கிடையேயும் அதைக் கண்டுபிடித்து விட்ட குழந்தையின் கண் தீட்சண்யத்தை மனசில் சபித்துக்கொண்டே அதை வாங்கி விடலாம் என்று ஜேபியில் கைவிட்டான். அவன் பார்வை அந்த யானைமேல் பாய்ந்தது. அழகுணர்ச்சி மிக்க அவனுக்கு – அழகுணர்ச்சி தன்னிடம் நிறைய இருக்கிறது என்று பெருமைப்பட்டுக் கொண்டிருந்த அவனுக்கு – அந்தப் பிளாஸ்டிக் யானை துதிக்கையைத் தூக்கி ரோஸ் வாயைக் காட்டி அவனை ஏளனம் செய்வது போலிருந்தது. யானைக் குலத்தையோ ஐராவதம் முதல் வரதர்கோவில் யானைவரை இதுவரை உலகத்தில் இருந்த, இனிமேல் இருக்கப் போகிற அத்தனை யானைகளையும், அதோடு தன்னையும் பரிகாசம் செய்வது போலிருந்த அந்தப் பச்சையானை மேல் அவனுக்குத் திடீரென்று அளவுக்கு மிஞ்சின கோபமும் ஆத்திரமும் பொங்கிக்கொண்டு வந்தது.

" 'சீ' இது வாணாம், அசிங்கம், யானை எங்கியாவது பச்சையாவா இருக்கும்? நான் ஒனக்கு நல்ல கருப்பு யானை வாங்கித்தரேன், இப்போ வீட்டுக்குப் போலாம் வா'', என்று மறுபடியும் குழந்தையை இழுத்தான். குழந்தை நிமிர்ந்து கண்களை அகல விரித்துக்கொண்டு அவனைப் பார்த்தது.

"நெஜம்மா"

"நெஜம்மாத்தான், நீயே பாரு."

அவன் வாக்குக் கொடுத்தபின் இருவரும் வீட்டைப் பார்க்க நடந்தனர்.

அவன் யானையை மறந்தாலும் அவனை மறக்க விடவில்லை அந்தக் குழந்தை. "எங்கே யானை? எங்கே யானை? வாங்கித்தரேன்னியே" என்று அவனை அரிச்சு எடுத்து விட்டது. "இந்த ஊர்லே நல்லதாக் காணும், நான் வெளியூர் போய் வரப்போ வாங்கி வரேன், ப்ராமிஸ்" என்று சத்தியம் செய்தபின் அதன் துளைச்சல் நின்றது.

சொன்ன வாக்கை அவன் நிறைவேற்றியும் விட்டான். அது மரயானை. அப்படியொண்ணும் பிரமாதக்கலாசிருஷ்டியாகப் பிரமிப்பூட்டும் வகையில் இல்லாது போனாலும் கருப்பாக, கிட்டத்தட்ட கருப்பாக இருந்தது. தும்பிக்கை இருந்தது. வெள்ளைத் தந்தமும் இருந்தது. ரோஸ் வாய் இல்லை. யானைக் குலத்தையும் அவனையும் ஏளனம் செய்யவில்லை.

அதை வாங்கி வந்தது முதல் வேறொரு விபரீதம். குழந்தை எப்போ பார்த்தாலும் யானையோடேதான். சாப்பிடும்போது அதுக்கும் சோறு வைக்க வேணும். அது தூங்கினப்புறந்தான் குழந்தை தூங்கமுடியும். அந்த யானையின் விருப்பு வெறுப்புகளும் பிடிவாதமும் கோபமும் விளையாட்டும் அந்த வீட்டின் நடைமுறை வாழ்க்கையையே உலுக்கி விட்டது.

அவனுக்கென்னமோ இது விபரீதமாகத்தான் பட்டது. என்னதான் குழந்தை யென்றாலும் ஆறு வயசாச்சே. அந்தப் பொம்மை யானை ஓர் உயிருள்ள யானை மாதிரி, அதுவும் செல்லம் கொடுத்துக் கெட்டுப்போன ஒரு குழந்தை யானை மாதிரி வீட்டில் லூட்டியடிப்பது அவனுக்குச் சரியானதாகப்படவில்லை. அது பொம்மை மரம். கல்கண்டு சாப்பிடாது; ஹார்லிக்ஸ் குடிக்காது; வேர்க்கடலையும்; கரும்பும் கேட்காது என்று ஒண்ணுக்குப் பத்துத்தரமாகச் சொல்லிப் பார்த்தான். இது யானைதான். பொம்மையில்லை என்று ஒருநாள் பூராவும் குழந்தை அழுது ஆர்ப்பாட்டம் செய்தது. மறுநாள் குழந்தையும் யானையும் அவனோடு பேசவில்லை.

அவனுக்கு மனது ரொம்பவும் கஷ்டமாகப் போய்விட்டது. மூணாவது நாள் அவன் குழந்தையைக் கூப்பிட்டு, "இது நெஜ யானைதான், நான்தான் இதுக்கு முன்னாலே சரியாப் பாக்கலை" என்று மன்னிப்புக் கேட்கும் முறையில் சொன்னவுடன் பார்க்க வேணுமே குழந்தையின் உற்சாகத்தை. "பாத்தியா நான் சொன்னா தெரியலியே, தும்பிக்கை இருக்கு, தந்தம் இருக்கு, காதைப் பாரு மொறமாட்டம், கருப்பு ஒடம்பு. இதைப் போயி ஆனை இல்லையின்னா – ஆனைக்கி ஒம் மேலே ரொம்ப ஆசையாம், எப்பிடித் தடவிக் குடுக்க வருது பாத்தியா...? என்று அடுக்கிக் கொண்டே போனது.

அன்று முதல் அந்த யானைக்கு ரெண்டு விளையாட்டுத் தோழர். குழந்தையும் ரங்கநாதனும். அதைக் குளிப்பாட்டுவார்கள். அதற்குச் சோறு போடுவார்கள். அதோடு காட்டில் வேட்டைக்குப் போவார்கள். காயம் பட்டால் கட்டுக் கட்டி விடுவார்கள். கோபம் வந்து அடிப்பார்கள். சோறு போடாமல் தண்டனை கொடுப்பார்கள். செய்த தப்புக்கு அது வருந்தி கெஞ்சி மன்னிப்புக் கேட்க வரும்போது அதற்குப் புத்தி சொல்வார்கள். அதுக்குக் கோபம் வரும்போது அதன் கையில் அகப்படாது ஒளிந்து கொள்வார்கள். அது சுமுகமாய் இருக்கும்போது சர்க்கஸ் வித்தைகள் கற்றுக் கொடுப்பார்கள். இப்படியாக எல்லாம் இருவரும் சேர்ந்தே செய்து வந்ததன் பலனாக ரங்கநாதனுக்கு அந்த யானை ரொம்ப ரொம்பப் பழக்கமாகிவிட்டது. அதனுடைய மனநிலைகள், விருப்புவெறுப்புகள் எல்லாம் அவனுக்கு அத்துபடியாகிவிட்டன. சிலசமயம் குழந்தை இல்லாதபோதுகூட அந்த யானை அவனோடு விளையாட வரும். அல்லது முரண்டிக்கொண்டு நிற்கும்.

மறுபடியும் அவன் வேலை நிமித்தமாக வெளியூர் போக வேண்டியிருந்தது. திரும்பி வரும்போது வழிநெடுக அவனுக்குக் 'குழந்தை யானை' ஞாபகம்தான். புது விளையாட்டு ஒன்றைக்கூட கற்பனை செய்து வைத்திருந்தான். யானையை மீன் பிடிக்க வைக்கவேணும். சேற்றிலிருந்து அசரை



மீனை அது தும்பிக்கையால் துழாவித் துழாவி எடுத்துக் கொடுக்க வேணும். பிறகு அது பெரிய மடுக்கரையில் உட்கார்ந்தபடி தூண்டிலிக்குப் பதில் தும்பிக்கையில் புழுவை வைத்துப் பிடிக்கவேணும் இன்னும் எத்தனையோ.

ரயில்வே ஸ்டேஷனிலிருந்து வீடுபோய்ச் சேர்ந்தபோது குழந்தையையும் காணோம்! யானையையும் காணோம். வெளியே எங்கோ விளையாடப் போயிருக்கிறார்கள் என்று நினைத்துத் கொண்டான். சாயங்காலம் அவன் வெளியே போய்விட்டு வந்தபோது நேரம் அதிகம் ஆகிவிட்டிருந்தது. குழந்தையும் தூங்கப் போய்விட்டிருந்தது. புது விளையாட்டை நாளைக்குக் கற்றுக் கொடுக்கலாம் என்று ஆறுதல் சொல்லிக் கொண்டான்.

மறுநாள் காலை ரங்கநாதன் குழந்தையைப் பார்த்தவுடன் அவன் கேட்ட முதல் கேள்வி "யானை எங்கே"தான். ஏனென்றால் அதன் கையில் யானையைக் காணோம். "அது எங்கேயோ" என்று அசுவாரசியமாகப் பதில் சொன்னது குழந்தை. அவனுக்கு ஒண்ணும் புரியவில்லை. ஏமாற்றமும் கோபமுமாக வந்தன.

"காணாமே போக்கிட்டியா, இல்லே காட்டுக்கு ஓடிப்போயிடுச்சா?" என்று கேட்டான். அவன் காதுக்கு அது சாதாரணக் கேள்விபோல் தொனிக்கவில்லை. அதட்டலா? அழுகையா?

"ஊகும் இங்கேதான் எங்கேயாவது கெடக்கும்" என்று சொல்லிக்கொண்டே குழந்தை பல் தேய்க்கப் போய்விட்டது.

"ஏய், புது யானை வெளையாட்டு கண்டுபிடிச்சிருக்கிறேன், மீன் பிடிக்கிற வெளையாட்டு" என்று சொன்னபடியே ரங்கநாதன் குழந்தையைப் பின் தொடர்ந்தான்.

மூலையில் அழுக்குத் துணிகளிடையே யானை கேட்பாரற்றுக் கிடந்ததைக் கண்டான்.

"ஐயோ பாவம், ஒடம்பு சரியில்லை போலிருக்கே, காச்சல் வந்துட்டுதோ, ஆஸ்பத்திரிக்குப் போலாமா, மருந்து குடுக்கலாமா? ஏய்! இதோ, இங்கே இருக்கு பாரு!, யானை" எனப் பரிவுடன் சொல்லிக்கொண்டே யானையை எடுக்கக் குனிந்தவன் குழந்தையின் பதிலைக் கேட்டுச் சடாரென்று நிமிர்ந்தான்.

"நீ என்னப்பா, அதுக்கு ஒண்ணும் வராது.

அது என்ன நெஜ யானையா? பொம்மைக்குப் போயி காச்சலும் பேதியும் வருமா?" என்று சொல்லிவிட்டுக் குழந்தை அலமாரியைத் திறந்து, "அப்பா, நீ இதைப் பாத்தியா, நெஜ டயரு போட்டிருக்கே, எப்பிடி ஓடுது பாக்கறியா" என்று சொன்னபடியாகச் சிவப்பு நிறமான, குட்டி டயர் போட்ட தகரக் கார் ஒண்ணை எடுத்து வெற்றிகரமாக அவனுக்குக் காண்பித்து, "நான் தரமாட்டேன், எதிர் வீட்டம்மா எனக்குத்தானே குடுத்தாங்க" என்று பெருமை பேசியது குழந்தை.

அவனுக்கு ஒண்ணும் புரியவில்லை. குழந்தையைப் பார்த்தான். குறும்புச் சிரிப்போடு பின்னம்புறம் ஒளிக்க முயன்றுகொண்டிருந்த அதன் கையிலிருந்து கார் எட்டிப் பார்த்து பளபளவென்று பல்லைக் காட்டி இவனை ஏமாளி செய்து கொண்டிருந்தது.

தலையைத் திருப்பிக் கீழே பார்த்தான். செத்துப்போன யானையின் சடலம், "நான் வெறும் மரம், யானையில்லை" என்று முனகிவிட்டு மறுபடியும் செத்துப்போச்சு. அவனுக்கு ஒண்ணும் புரியவில்லை.

"என்னப்பா சொல்றே?" என்று காரைத் தரையில் தேய்த்துக் கொண்டே கேட்டது குழந்தை.

அவனுக்கு ஒண்ணும் புரியவில்லை.

## படைப்பு முகம்



சார்வாகன் (1929 – 2015): மருத்துவம், இலக்கியம் ஆகிய இரண்டு துறைகளிலும் சாதித்தவர். ஒரு சிறந்த எழுத்தாளராக அறியப்பட்ட பழைமையைக் கேள்விக்குள்ளாக்கும் அங்கத எழுத்துக்குச் சொந்தக்காரரான சார்வாகனின் கதைகள் தனித்தொகுப்பாக வெளிவந்துள்ளன.

## படிப்போம் பகிர்வோம்

1. நீங்கள் சிறுவயதில் விளையாடிய ஒரு பாவனை விளையாட்டினைப் பற்றி எழுதுக.

2. கீழே கொடுக்கப்பட்டுள்ள அப்துல் ரகுமானின் பௌர்ணமிப்பிறை என்னும் கவிதையை யானையின் சாவு கதையோடு ஒப்பிட்டு எழுதுக.

   பௌர்ணமிப்பிறை
   குழந்தைகளே! உங்கள் விரல்களை
   நாங்கள் பிடித்துக் கொள்கிறோம்
   எங்களை உங்கள் தேவ தேசத்திற்கு
   அழைத்துச் செல்லுங்கள் – அப்துல் ரகுமான்

3. 'யானையின் சாவு' கதையில் ரங்கநாதனின் மனநிலையும் குழந்தையின் மனநிலையும் வேறுபடும் பாங்கினை எழுதுக.

4. யானையின் சாவு சிறுகதையினைக் கருப்பொருளும் சுவையும் குன்றாமல் ஒரு பக்க அளவில் சுருக்கி எழுதுக.

5. அவனுக்கு ஒண்ணும் புரியவில்லை ... என்ற யானையின் சாவு கதையின் முடிவு வரியிலிருந்து ரங்கநாதனும் சிறுவனும் தொடர்ந்து பேசிக்கொள்வது போல் கற்பனை உரையாடலை அமைத்திடுக.

# பூ உதிரும்

**– ஜெயகாந்தன்**



பெரியசாமி வாயைத் திறந்து பேச ஆரம்பித்தால், அதுவும் அந்த நரைத்துப்போன, சுருட்டுப் புகையால் பழுப்பேறிய பெரிய மீசையை முறுக்கிக் கொண்டு பேச ஆரம்பித்துவிட்டால்..... நிச்சயம் அவர் பேசுகின்ற விஷயம் இந்த நூற்றாண்டில் நிகழ்ந்த இரண்டு உலக மகா யுத்தங்களிலும் நேச தேச ராணுவத்தினர் புரிந்த வீரதீரச் சாகசங்கள் பற்றியதாகத்தான் இருக்கும்.

அரும்பு மீசைப் பிராயத்தில் முதல் மகா யுத்தத்திலும், கரு கருவென முறுக்கு மீசை வளர்ந்த நடுத்தர வயதில் இரண்டாவது மகா யுத்தத்திலும் சமராடி வந்தவர் அவர். சுதந்திரமும் அமைதியும் நிலவும் ஒரு நாட்டின் பிரஜையாய் நரைத்த மீசையுடன் தளர்ந்த உடலுடன் இப்போது வாழ்ந்த போதிலும் அவரது பட்டாளத்துக்கார மனத்துக்கு அடிக்கடி பழைய நிகழ்ச்சிகளை ஞாபகப்படுத்திக் கொள்வதில் ஒரு போதை இருந்தது. அதில் ஒரு புத்துணர்ச்சியும் பிறந்தது.

தன் மகனை ராணுவ வீரனாக்க வேண்டும் என்ற தீர்மானத்தைக் கண்டு பயந்த அவர் மனைவி மரகதம் உறவினர்கள் மூலம் கிழவரின் முடிவை மாற்ற முயன்றாள்.....

"எதுக்குங்க பட்டாளமும்....கிட்டாளமும்? பையன் பத்து படிச்சி பாஸ் பண்ணி இருக்கு. ஏதாவது கெவுருமெண்டு உத்தியோகம் ஒண்ணு பாத்து வெச்சி, கலியாணம் காட்சி நடத்தி பேரன் பேத்தியைக் கொஞ்சிக்கிட்டிருக்காம--- பையனைப் பட்டாளத்துக்கு அனுப்பறது சரியில்லீங்க அவ்வளவுதான்......" என்று கூறிய அந்த உறவினர்களையும், அவர்கள் அவ்விதம் வந்து யோசனை கூறக் காரணமாயிருந்த மனைவியையும் பார்த்து மீசையை முறுக்கிக் கொண்டு லேசாய்ச் சிரித்தார் பெரியசாமி. பிறகு அவர்கள் சொல்வதைச் சற்று ஆழ்ந்து சிந்தித்தார். அதில் பொருளிருப்பதாகத் தோன்றவில்லை அவருக்கு. குறுகிய பாசம் என்பதைத் தவிர வேறு காரணமில்லை என்றே தோன்றியது.

அவர்களுக்கு அவர் சொன்னார்: "உங்களுக்குத் தெரியாது.... ம்.... நான் வாழ்நாள் பூராவும் வெள்ளைக்காரங்ககிட்டே அடிமைச் சிப்பாயாவே காலங் கழிச்சவன்.... அப்பல்லாம் ஒரு சாதாரண வெள்ளைக்கார சோல்ஜருக்கு இருந்த மதிப்புக்கூட ஒரு கறுப்பு மேஜருக்கு கிடையாது, ஒரு சுதந்திர நாட்டு ராணுவத்திலே ஒரு சாதாரண சிப்பாயாக இருக்க மாட்டோமான்னு ஏங்கினது எனக்கில்லே தெரியும்? இப்ப எம்மகனுக்கு அந்தச் சான்ஸ் கெடைக்கிறதுன்னா அதெ விடலாமா? பட்டாளத்துக்குப் போனா, சாகறது தான் தலை விதின்னு நெனச்சிக்காதீங்க. பட்டாளத்துக்குப் போகாதவங்களுக்கும் சாவு உண்டு... வாழ்கையிலே ஒரு பொறுப்பு' அநுபவம், தேசம்ங்கிற உணர்வு... ம்... ஒரு 'டிஸிப்ளின்' எல்லாம் உண்டாகும் பட்டாளத்திலே.. இதெல்லாமில்லாம சும்மா வெந்ததைத் தின்னுட்டு வேளை வந்தா சாகறதிலே என்னா பிரயோசனம்?... சொல்லுங்க" என்று அவர் கேட்கும் போது தந்தையின் அருகே நின்றிருந்த சோமநாதன், தந்தையின் இதயத்தையும் எண்ணத்தையும் சரியாகவும் முழுமையாகவும் புரிந்துகொண்டான். "அப்படிச் செத்துப் போனாத்தான் என்னப்பா? பட்டாளத்துக்குப் போறவன், ஊருக்கு லீவில் வந்து உடுப்பைக் காமிச்சுப்பிட்டுப் போனாப் போதுமா? சண்டைன்னு வந்தா சாகவும் தான் தயாராப் போகணும்" சோமநாதன் கூறிய வார்த்தைகளைக் கேட்டு, கிழவரின் சுருட்டுக் கறையேறிய கரிய உதடுகள் உணர்ச்சி மிகுந்து துடித்தன.

"சபாஷ்' "என்று பெருமிதத்தோடு அவனைப் பாராட்டுகையில் அவர் கண்களில் அதீதமானதோர் ஒளி சுடர்விட்டது.

தந்தை தன் சொல் வலியால், தாயின் ஆசீர்வாதத்துடனும் பத்து வருஷங்களுக்கு முன் பட்டாளத்தில் சேர்ந்தான் சோமநாதன்.

முதன்முறை, லீவில் வீட்டுக்கு வந்திருக்கும்போதுகூட, காலையில் ஐந்தரை மணிக்குமேல் அவனால் படுக்கையில் படுத்திருக்க முடியாது. எங்கோ நூற்றுக்கணக்கான மைல்களுக்கு அப்பால் இருக்கும் தனது ராணுவ முகாமில் முழங்குகின்ற காலை நேர எக்காளத்தின் ஓசையைக் கேட்டவன் போன்று, அந்தப் பழக்கத்தால் படுக்கையிலிருந்து துள்ளி எழுந்து விடுவான் சோமநாதன். பின்னர், காலை நேர உலாப் போய்விட்டு, தேகப்பயிற்சி செய்து முடித்தபின் என்ன செய்வதென்று புரியாமல் நாள் முழுதும் பேப்பர் படித்துக் கொண்டு உட்கார்ந்திருப்பது அவனுக்கு மிகவும் சிரமமாக இருந்தது.

இரண்டாவது முறை அவன் லீவில் வந்தபோது அதற்கொரு பரிகாரம் காண்பதுபோல் தோட்ட வேலை செய்ய ஆரம்பித்தான். அதன் விளைவாய் அவர்கள் வீட்டை சுற்றிலும் கட்டாந்தரையாகக் கிடந்த 'தோட்டம்' சண்பகமும், ரோஜாவும், மல்லிகையும் சொரியும் நந்தவனமாக மாறி, அவனது நினைவாய் இன்றும் மலர்களை உதிர்த்துக் கொண்டிருக்கிறது.....

"ம்...சும்மாக் கெடந்த தோட்டமெல்லாம் செம்பகமும் ரோஜாவும் வெச்சிப் பூ மண்டிப் போவுது...ஊரிலே இருக்கிற பொண்ணுங்க எல்லாம் வந்து அள்ளிக்கிட்டுப் போவுதுங்க... போறதுங்க சும்மா போவுதா? "பூ இருக்கிற வீட்டிலே பொண்ணு இல்லியான்னு" பரியாசம் பண்றா ஒரு குட்டி..."

"அதாரு அந்த வாயாடி?... பொண்ணு இல்லே, நீதான் வந்து இருவேன்னு சொல்றதுதானே?..." என்று நரைத்த மீசையில் வழக்கம்போல் கை போட்டார் பெரியசாமி.

"அப்பிடித்தான் நானும் நெனச்சிக்கிட்டேன். அதை அவகிட்டே எதுக்குச் சொல்வானேன்... நேத்து கோயில்லே அவ ஆயியைப் பார்த்துச் சொன்னேன்... அவளுக்கு வாயெல்லாம் பல்லாப் போச்சு... நம்ப பயலுக்குப் பொண்ணு கொடுக்கக் கசக்குமோ, பின்னே?..." என்று மலர்களின் நடுவே மலர்ந்த முகத்தோடு, பல இரவுகளாய்த் தூங்காமல் கட்டிய மனக் கனவுகளைக் கணவனிடம் உதிர்க்கும் மனைவியின் உணர்ச்சிகளைப் புரிந்துகொண்டார் பெரியசாமி.

"சரி, சரி' இந்தத் தடவை நம்ப வீட்டிலே கலியாணம் தான்... நீ போயி மசிக்கூடும் காகிதமும் எடுத்து வையி... பையனுக்குக் கடுதாசி எழுதணும்" என்று உற்சாகமாய்க் கூவினார் பெரியசாமி.

வழக்கமாய், தந்தையின் கடிதம் கண்ட ஓரிரு வாரங்களுக்குள்ளாகவே ஊருக்கு வந்துவிடும் சோமநாதன், அந்தத் தடவை இரண்டு மாதங்களுக்குப் பிறகே வர முடிந்தது.

அப்பனும் மகனும் பேசிக் கொண்டிருக்கையில் இடையில் வந்து கலந்துகொள்ளத் தைரியம் இல்லாத மரகதம் தூரத்திலோ, அறைவாயிலிலோ நின்று அவர்களைக் கவனித்துக் கொண்டிருப்பாள்.

சோமநாதன் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டுக்கொண்டிருந்த நேரம்போக, தான் பேச நேர்ந்தபோதெல்லாம் மகனின் கலியாண விஷயமாகவே பேசினார் பெரியசாமி.

அவன் தனக்கொரு கலியாணம் என்பது பற்றி அதுவரை யோசித்ததில்லை. ஆனால், தகப்பனார் பேசுகிற தோரணையைப் பார்த்தால், தனக்கு யோசிக்க அவகாசமே தரமாட்டார் போலிருந்தது. இதில் யோசிக்கத்தான் அப்படி என்ன இருக்கிறது? சமாதானச் சூழ்நிலையில் வாழும் ஒரு தேசத்தின் ராணுவ உத்தியோகஸ்தன் கல்யாணம் செய்து கொள்ளலாம்... அவ்விதம் திருமணம் புரிந்துகொண்டு எத்தனையோ பேர் குடும்பத்தோடு அங்கேயே வந்து வாழ்கிறார்களே...என்பதையெல்லாம் நினைவு கூர்ந்து 'சரி' என்று ஒப்புக்கொண்டான்.



... அந்தத் தடவை லீவிலேயே அவனுக்கும் அவளுக்கும் கலியாணம் நடந்தது.

பூப்பறிக்க வந்த கௌரி பூந்தோட்டத்தின் சொந்தக்காரியானாள். ஒரு பலனும் கருதாமல் சோமநாதன் தன் கையால் நட்டுத் தண்ணீர் பாய்ச்சியதற்குப் பிரதியாக மலர்களை மட்டுமில்லாமல் அவனுக்கொரு மனைவியையும் கொண்டுவரத் தூதாகியிருக்கும் மகிழ்ச்சியில் சண்பகமும் ரோஜாவும் பூத்துக் குலுங்கிச் சிரித்தன. எத்தனை காலைகள் எத்தனை மாலைகள், எத்தனை இரவுகள் இவர்கள் இருவரும் அங்கேயே கழித்து, என்னென்ன பேசி, என்னென்ன கனவுகளை வளர்த்தார்கள் என்று அந்தச் சண்பகத்துக்குத் தெரியும்; அந்த ரோஜாவும் மல்லிகையும் அறியும்.

கடைசியில் ஒரு நாள்......

இரண்டு மாதங்கள் அவள் இதயத்தோடு இணைந்திருந்து, கனவோடும் கற்பனையோடும் கலந்து உடலால் மட்டும் விலகும்போது 'அடுத்த தடவை லீவுக்கு வந்து திரும்பும்போது உன்னை என்னோட அழைச்சுக்கிட்டுப் போவேன்' என்று வாக்குறுதி தந்து அவன் அவளைப் பிரிந்து சென்றான்.

கௌரியைப் பிரிந்து சென்ற பதினைந்தாம் நாள் அவளுக்கு அவனிடமிருந்து ஒரு கடிதம் வந்தது.

அவனிடமிருந்து மறு கடிதம் வரும்வரை, தனது தனியறையின் ஏகாந்தத்தில்.... அவனே வந்து எட்டிப் பார்ப்பது போல், ஜன்னலருகே வளைந்திருக்கும் சண்பக மரக் கிளையில் பூத்துச் சிரிக்கும் மலர்களுக்கு அந்தக் கடிதத்தில் இருந்த ரகசியங்களைப் படித்துக் காட்டிக் கொண்டிருந்தாள் கௌரி.

சண்பகத்துக்குப் பக்கத்தில், மலர்ச்சியின் ரகசியத்தை மறைத்துக்கொண்டு,....முற்றாக மறைக்க முடியாமல்.... தாங்கொணாத் தவிப்புடன், கனத்துக் கிடக்கும் மொட்டுக்களைத் தாங்கி நிற்கும் ரோஜாவைப் பார்த்து அவள் சிரிக்கும் போது 'உன் கதை இன்னும் ஒரு மாதத்தில் தெரியும்? என்று 'பளீரென'ச் சிரித்துச் சிதறிய முல்லைக் கொடியிலிருந்து பூக்கள்



உதிர்ந்த ரகசியம் அவளுக்கு அப்போது புரியவில்லை.

இரண்டு மாதங்களுக்குப் பின், சண்பகத்தையும் ரோஜாவையும் மடி கனக்கக் கட்டிக்கொண்டிருக்கும் உணர்வுடன் மனமும் உடலும் கூசிச் சிலிர்க்க அந்த விஷயத்தை அவனுக்கு அவள் எழுதும்போது..... சுவரில் தொங்கும் சோமுவின் படம் அவளைப் பார்த்துச் சிரிக்கும்போது அவன் படத்தைக்கூட பார்க்கமுடியாமல் அவள் முகத்தை மூடிக்கொண்டாள். முகத்தை மூடிய கரங்களையும் மீறி வழிந்த நாணம் அவள் காதோரத்தில் சிவந்து விளிம்பு கட்டி நின்றது.

அவள் கடிதம் எழுதுவதை நிறுத்திவிட்டு, அந்தப் படத்தைக் கையிலெடுத்தாள். அவனது மாயப் புன்னகை, அவள் இதயத்தை ஊடுருவியது.

திடீரென்று அவளுக்கு உடல் சிலிர்த்தது. நெஞ்சில் நிலைத்த அவன் நினைவு வயிற்றில் புரண்டது போலிருந்தது.....

"நீங்க எப்ப வருவீங்க?" என்று அந்தப் படத்தை முகத்தோடு அணைத்துக்கொண்டு அமைதியாய், சப்தமில்லாமல் தொண்டை அடைத்துக் கரகரக்க அவள் கேட்டபோது, தன் விழிகளில் சுரந்த கண்ணீரை அவளால் அடக்க முடியவில்லை.

"எப்ப வருவீங்க.... எப்ப வருவீங்க?" என்று துடித்துக் கொண்டிருந்த அவள் இதயத்திற்கு அவனிடமிருந்து பதில் வந்தது.

"........ ஏழாம் மாதம் பூச்சூட்டலுக்கு வருவேன். மூன்று மாதம் லீவு கிடைக்கும். உன்னோடயே இருந்து குழந்தை பிறந்த பிறகு, என் மகனின் பூமாதிரி இருக்கிற பாதத்திலே முத்தமிடணும்னு என் உதடுகள் துடிக்கிற துடிப்பு....' என்று தன் கணவன் தனக்கெழுதிய கடிதத்தைப் பெரியசாமிக்கும் மரகதத்துக்கும் படித்துக் காட்டிக்கொண்டிருந்த கௌரி "அவ்வளவுதான் முக்கிய விஷயம்" என்று கடிதத்தை மடித்துக்கொண்டு தன் அறைக்குள் ஓடி விட்டாள்.

அதில் தான் அவன் என்ன வெல்லாம் எழுதியிருந்தான்'

கௌரி..... ரொம்ப ஆச்சரியமா இல்லே? நமக்கு ஒரு குழந்தை பொறக்கப் போவுது.....' இப்பவே உன்கிட்டே ஓடி வரணும்னு மனசு துடிக்குது. சரி ஏழாம் மாதம் தான் நான் வரப் போறேனே; தாய்மைக் குரிய காணிக்கைகளைத் தராமலா விடுவேன்....?'

ஏழாம் மாதம் வந்துவிட்டது. பெரியசாமி எதிர்பார்த்ததுபோல் அந்தக் கடிதம் வந்தது.

'...எல்லையில் ஏற்பட்டிருக்கும் யுத்தமும் தேசத்திற்கு ஏற்பட்டிருக்கும் நெருக்கடியும் பத்திரிகை மூலம் அறிந்திருப்பீர்கள். போர் வீரனுக்குரிய கடமையை ஆற்ற வேண்டிய சந்தர்ப்பத்தில் நான் வரமுடியாது. வர விரும்புவது சரியுமில்லை. அதனாலென்ன? நம் வீட்டில் தான் கொள்ளைப் பூ இருக்கின்றது. பூ முடித்துக் கொள்ளப் பெண்ணும் இருக்கிறாள். மகிழ்ச்சியுடன் சுபகாரியங்களைச் சிறப்பாகச் செய்யவும். நான் வராததற்காக வருந்தாதீர்கள். அங்கு நீங்கள் எவ்வளவுக் கெவ்வளவு மகிழ்ச்சியுடனிருக்கிறீர்களோ, அவ்வளவுக்கவ்வளவு இங்கு நான் உற்சாகமாக இருப்பேன் என்று எண்ணிக் குதூகலமாய் இருக்கவும்...'

தந்தைக்கு எழுதிய கடிதத்தோடு கூட மனைவிக்குத் தனியாய் இன்னொரு கடிதம் எழுதியிருந்தான் அவன். அந்தக் கடிதம் பொய்மைகலந்த குதூகலத்தோடும், தன்னைத் தானே ஏமாற்றிக்கொள்ளும் விதத்தில் உற்சாகம் மிகுந்திருப்பது போலும் அமைந்திருந்தது.

சில மாத பந்தத்திலேயே அவனை நன்கு புரிந்து கொண்டவளாகையால், எந்தச் சூழ்நிலையில், எவ்வித மனோ நிலையில் இக்கடிதம் எழுதப்பட்டிருக்கும் என்பதை கௌரி உணர்ந்தாள். இதன் மூலம் அவள் மனம் ஆறுதலடையும் என்று நம்பி அவனால் எழுதப்பட்ட அந்தக் கடிதத்தை நெஞ்சோடு

அணைத்துக்கொண்டு--அவனதுசிறுபிள்ளைத் தனமான வார்த்தைப் பிரயோகங்களுக்காகச் சிரிக்க முயன்று, அதில் மறைந்திருக்கும் துயரத்தின் கனத்தைத் தாங்க மாட்டாதவளாய்--மனம் பொருமி அழுதாள் கௌரி..

சில நாட்களுக்குப் பின் அவனுடைய வேண்டுகோளின்படி அவர்கள் குதூகலமாகவே இருக்க முயன்று, அப்படி இருந்தும் வந்தார்கள்.

பெரியசாமி 'யுத்தம்' என்று தெரிவித்த அன்றிலிருந்தே மிகவும் துடிப்புடன் காணப்பட்டார். பக்கத்திலிருப்போரிடம் காலையிலும் மாலையிலும் பத்திரிகையைப் பார்த்துக் கொண்டு, ஒரு கையால் மீசையை முறுக்கியவாறே செய்தி விளக்கம் கூற ஆரம்பித்து, இரண்டாவது அல்லது முதல் மகா யுத்த காலத்தில் நடந்த ஒரு நிகழ்ச்சியைக் கதையாகச் சொல்லத்தான் அவரால் முடிந்தது.

அவர் கொஞ்சங்கூடக் கவலை இல்லாமல் இப்படி இருப்பது கண்டு முணுமுணுத்துக் கொண்ட மரகதத்தின் குரல் அவர் காதில் விழுந்தது.

அவர் மனைவியைப்பார்த்துச் சிரித்தார்; "போடி...போ' போர் வீரனின் சங்கீதமே பீரங்கி முழக்கம் தான்' உனக்கெங்கே அது தெரியும்...உன் வம்சமே தொடை நடுங்கிக் கும்பல், உன் பையன் வருவான் சிங்கம் மாதிரி, அவனைக் கேளு, சொல்லுவான்..."என்று அவர் சொன்னதைக் கேட்டு சிரித்தவாறு அங்கு வந்த கௌரி, "அவங்க மகன் சிங்கமா இருந்தா, அந்தப் பெருமை அவங்களுக்கு இல்லையா?" என்றாள்.

"ம்... ம்... பெருமை இல்லேன்னு யாரு சொன்னா? அந்தப் பெருமைக்குக் காரணம் எங்க வம்சம்னேன்... நீ நாளைக்குப் பெத்துக்கப் போறியே அந்தப் பயலுக்காகவும் தான் சொல்றேன்...வீரன் மகன் வீரனாகத்தான் இருப்பான்"என்று அவர் சொன்னபோது, அவளுக்கு வயிற்றில் என்னவோ செய்தது... அந்த இன்பக்கிளுகிளுப்பில்தலை குனிந்தவாறு தன் அறைக்குப் போனாள் கௌரி.

நேற்று கௌரிக்குப் பூச்சூட்டல் . அடர்ந்து நீண்ட கூந்தலில் சண்பகத்தை அடுக்கடுக்காக வைத்துத் தைத்து, இடையிடையே மல்லிகையை விரவி ரோஜாவைப் பதித்து -- 'இந்த அலங்காரத்தில் கௌரியைப் பார்க்க அவன் இல்லையே' என்ற குறை ஒவ்வொருவர் மனத்திலும் ஏதோ ஒரு விநாடியில் நெருடி மறைந்து கொண்டு தானிருந்தது.



...... தனியறையில் அமர்ந்து, தலையில் கசங்கிப் போன மலர்களைக் களைந்து கொண்டிருக்கிறாள் கௌரி.

அப்பொழுது ஜன்னலுக்கு வெளியே அவனே வந்து எட்டிப் பார்ப்பதுபோல் சண்பகமரக் கிளையின் பூவடர்ந்த கொப்பொன்று அவளுக்கு எதிரே தெரிந்து கொண்டு தானிருந்தது...

'நேற்று இந்நேரம் இதே போல் செடியிலும் மரத்திலும் மலர்ந்திருந்த பூக்கள் தானே இவையும்?...' என்ற எண்ணம் தொடர்பின்றி அவள் மனத்தில் முகிழ்த்தபோதிலும், அந்த எண்ணத்தைத் தொடர்ந்து பிறந்த அடுத்த விநாடியே சில மாதங்களுக்கு முன்பு சோமநாதன் தோட்டத்தில் அவளிடம் சொன்ன வார்த்தைகளின் தொடர்ச்சியே இது என்று அவளுக்கு விளங்கியது.

அன்று... சோமநாதன் கோவாவில் நடந்த யுத்த நிகழ்ச்சிகளை அவளிடம் வீரரசம் மிகுந்த கதையாகச் சொல்லிக்கொண்டிருந்தான். அந்தக் கதைக்குப் பின்னால் உள்ள எத்தனையோ தாய்மார்களின் கண்ணீரும், இளம் பெண்களின் சோகங்களும் அவளுக்குப் புலனாயின.

அவள் கெஞ்சுகின்ற குரலில் அவனிடம் கேட்டாள், "இந்தப் பட்டாளத்து உத்தியோகத்தை நீங்க விட்டுட்டா என்ன? கோரமான சண்டையிலே பொன்னான உயிரையும், இன்பமான வாழ்க்கையையும் எதுக்குப் பலியிடணும்?

அவள் சொல்லிக் கொண்டிருந்ததை எல்லாம் மௌனமான யோசனையுடன்



அவன் கேட்டுக் கொண்டிருந்தான். பிறகு பக்கத்திலிருந்த ரோஜாச்செடியிலிருந்து ஒரு பெரிய பூவைப் பறித்தவாறே அவன் சொன்னான், "சண்டை வேண்டாம்கிறதுதான் நம்மோட கொள்கை. ஆனா சண்டைன்னு வந்துட்டா, சண்டை போடாமே உயிருக்குப் பயந்து சமாதானம் பேசறது கோழைத்தனம். ஆனா, நீ கேக்கறது இந்தச் சண்டையிலே எதுக்குப் பொன்னான உயிரை இழக்கணும்கறது தானே?..." என்று கேட்டுவிட்டுக் கையிலிருந்த ரோஜாவை அவள் கூந்தலில் சூட்டிய பின், ஒரு விநாடி அமைதியாக அவள் முகத்தையும், மலர் சூடிய கூந்தலின் அழகையும் பார்த்தான்; தொடர்ந்துசொன்னான் அவன்; "இதோ இந்தப்பூ, செடியிலே இருக்கறப்போ நல்லாத்தான் இருந்தது. இது நல்லா இருக்கே பறிக்காம இருப்போம்னு விட்டுட்டா, அது உதிராம இருக்கப் போகுதா? இப்ப நான் அதைப்பறிச்சு உன் தலையிலே வெச்சிருக்கேன்...நீ அதைப் பறிச்சி உனக்கு இஷ்டமான ஒரு தெய்வத்துக்கு மாலை கட்டிப் போடறே... அதிலேதான் அந்தப் பூவுக்கு... உதிர்ந்து போகிற சாதாரணப் பூவுக்கு ஒரு மகத்தான அர்த்தம் இருக்கு... இல்லியா?... அது மாதிரிதான், மனுஷன்னுபொறந்தா.. பூத்திருக்கிறமலர் உதிர்ந்து போகிறமாதிரி... மனுஷனும் ஒரு நாளைக்கு செத்துத்தான் போவான்... அப்படி விதிமுடிஞ்சி, வியாதி வந்து சாகிற மனுஷன் அந்த உயிரை, தான் நேசிக்கிற தேசத்துக்காக, தான் விரும்பும் ஒரு லட்சியத்துக்காக அர்ப்பணம் பண்ணினா, அவன் வாழ்க்கைக்கு ஒரு அர்த்தம் இருக்கு இல்லியா?'

கௌரியின் கண்கள் கலங்குவதையும் உதடுகள் சிவந்து துடிப்பதையும் கண்ட சோமநாதன் 'பூ-உதிரும்' என்பது மட்டுமல்ல; புதிய புதிய பூக்கள் மலரும் என்பதும் உண்மை என்று கூறிவிட்டுப் பேச்சை வேறு விஷயங்களில் திருப்பினான்.

'ஐயோ இதை ஏன் இப்போது நான் நினைக்கிறேன்... அவர் போர் முனையில் இருக்கும் இந்த நேரத்திலா எனக்கு அந்த நினைவு வரவேண்டும்' என்று ஒரு விநாடி துணுக்குற்று, கட்டிலின் தலை மாட்டில் தொங்கும் கணவனின் படத்தைப் பார்க்கப் பார்க்க விகஸிக்கும் அந்த மாயப் புன்னகையைப் பார்ப்பதற்காகப் படத்தருகே போய் நின்றாள் கௌரி.

அப்போது அறைக்கு வெளியே...

"சொல்லுங்க, கடுதாசியிலே என்ன சேதி?.... பேச மாட்டீங்களா? ஐயோ தெய்வமே'..... கௌரி.... ஈ....." என்று தாய்மையின் சோகம் வெடித்துக் கிளம்பிய பேரோசை கேட்டுக் கௌரி அறைக் கதவை திறந்தாள்..... அப்படியே விழி பிதுங்கிச் சிலையாய் நின்றாள்.....

வராந்தா ஈஸிசேரில் கையில் பிரித்த கடிதத்துடன் நிமிர்ந்து உட்கார்ந்து கண்களை இறுக மூடிக்கொண்டிருக்கும் பெரியசாமியின் காலடியில், தரையில் நெற்றியை 'மடார் மடா'ரென முட்டிக்கொண்டு கதறுகிறாளே மரகதம்.

செம்பில் வார்த்து விட்ட சிலை மாதிரி உணர்ச்சி மிகுதியால் உப்பிக் கனத்து இறுகிச் சிவந்த அவர் முகத்தில் சருமம் துடித்தது. மூடிய இமைகளின் வழியே கோடாய் வழிந்த கண்ணீர் நரைத்துப்போன மீசையின் மேல் வடிந்து நின்றது.....

"மகனே, சோமு..." என்று வானத்தை நோக்கி இரண்டு கைகளையும் நீட்டிக்கொண்டு எழுந்தார். வராந்தாவில் சுவரில் தொங்கும் மகனின் போட்டோவை நோக்கி நடந்தார்.

"ஐயா, நீ வீரனய்யா'...." என்று ஒற்றை மரமாய் மகனின் படத்தின் முன் நிமிர்ந்து நின்று ராணுவ முறையில் 'சல்யூட்' வைத்தார்.

விறைத்து நின்று வீர வணக்கம் செய்த கரத்தைக் கீழிறக்கிய போது முதுமையின் தளர்ச்சி முழுவதையும் திடீரென அனுபவித்த உணர்வுடன் தளர்ந்து உட்கார்ந்தார் பெரியசாமி.

"எனக்கு வேறொருமகன் கூட இல்லையே..." என்று வாய்விட்டுப் புலம்பினார்....அந்த

வார்த்தைகளைக்கேட்டு எரித்து விடுவது போல் பெரியசாமியைப் பார்த்த மரகதம், அவரைச் சபிப்பதுபோல் ஆங்காரத்துடன் இரண்டு கைகளையும் அவரை நோக்கி நீட்டியவாறு விரித்த கூந்தலும் வெறித்த விழிகளுமாய் அலறினாள்: "பாவி'....வேறே மகன் நமக்கு கிடையாது-வேண்டாம் பட்டாளத்துக்குன்னு அடிச்சிக்கிட்டேனே கேட்டீங்களா? பட்டாளம் பட்டாளம்ன்னு நின்னு என் அருமைப் புள்ளையெக் கொன்னுட்டீங்களே.... ஐயோ' உங்க பாவத்துக்கு வேறே ஒரு மகன் வேணுமா? பட்டாளத்துக்கு அனுப்பி வாரிக் குடுக்கறத்துக்குத் தானே இன்னொரு மகன் இல்லேன்னு அழறீங்க?" என்று பல்லைக் கடித்துக் கொண்டு அவர் இதயத்தில் குத்துவது போல் கேட்டாள்.

"ஆமாம்' அதற்குத்தான்...." என்று பெரியசாமி, சுருட்டுப் புகையால் பழுப்பேறிய மீசையை முறுக்கிக் கொண்டே மரகதத்தின் கண்களுக்குள் பார்த்தவாறு சொன்னார். அவர் கண்களில் சுரந்த கண்ணீர் இமை விளிம்பில் பாதரசம்போல் ஜொலித்தது....

அப்போது அறை வாசலில் 'தடா'லெனச் சப்தம் கேட்கவே திரும்பப் பார்த்து மயங்கி விழுந்த கௌரியைத் தூக்குவதற்காக ஓடினார் பெரியசாமி.



மரகதத்தின் அலறல் தெருவையே திரட்டியது'

பூவின் மேல் ஆசைப்பட்டுப் பூப்பறிக்க வந்த கௌரி, பூவிழந்து விட்டாள்....

ஆனால் சோமுவின் கைகளால் நட்டு வளர்க்கப்பட்ட அந்தச் செடிகளும் மரங்களும் அவன் நினைவாய் இப்போதும் மலர்களைச் சொரிந்து கொண்டு நிற்கின்றன.

அவற்றைப் பறித்து ஆரமாய்த் தொடுக்கவும் சோமுவின் படத்திற்கு அழகாய்ச் சூட்டவும் அவனது நினைவையே வழிபட்டு நிற்கவும் அவளிருக்கிறாள்.....

சோமுவின் படத்துக்கு மாலையிட்டு விளக்கேற்றி வணங்கிக் கொண்டிருந்தாள் கௌரி..... மாலை மாலையாய்க் கண்ணீர் வழிந்து, அவள் உடலை நனைக்கிறது.

"நான் வழிபடும் உங்கள் நினைவுக்கு அஞ்சலியாய்ச் சமர்ப்பித்த இந்தப் பூக்களுக்கு ஒரு அர்த்தமிருப்பதுபோல், உங்கள் மரணத்திற்கு ஒரு அர்த்தமிருப்பதுபோல், இரண்டு மாதங்களேயானாலும்

## படிப்போம் சுவைப்போம்

### களம் கண்டு வா மகனே!

**புறநானூறு**

*இன்றும் செருப்பறை கேட்டு, விருப்புற்று மயங்கி,*
*வேல்கைக் கொடுத்து, வெளிதுவிரித்த உடீஇப்,*
*பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி,*
*ஒருமகன் அல்லது இல்லோள்,*
*'செருமுக நோக்கிச் செல்க' என விடுமே!*
'கெடுக சிந்தை ; கடிதுஇவள் துணிவே;
மூதின் மகளிர் ஆதல் தகுமே'

– புறநானூறு: 279

பாடியவர்: ஒக்கூர் மாசாத்தியார்

**பாடற்பொருள்**

ஒரு பெண்ணின் தந்தை முதல் நாள் போரில் இறந்தான். அடுத்த நாள், அவளுடைய கணவனும் போரில் வீரமரணம் அடைந்தான். அவர்கள் இருவரையும் போரில் இழந்த பெண், மூன்றாம் நாளும் போர் முரசின் ஒலி கேட்டு, தன்னுடைய ஒரே மகனையும் போர்க்களத்திற்குச் செல்லும்படி விருப்பத்துடன் அனுப்புகின்றாள். தன்மகனுக்கு ஆடையுடுத்தி, அவனுடைய தலைமுடிக்கு எண்ணெய் தேய்த்து, வீரமொழிகளைக் கூறி வழியனுப்புகிறாள்.

வீரபுருஷனோடு வாழ்ந்த எனது சாதாரண வாழ்க்கைக்கும் ஒரு மகத்தான அர்த்தம் காண்கிறேன் நான்...... நாளைப் பிறக்கப் போகும் நம் மகன் வாழ்க்கையும் அர்த்தம் நிறைந்திருக்கும்---- அவன் ஒரு வீரனின் மகன்' உங்கள் தகப்பனார் இன்னொரு மகன் இல்லையே என்று வருந்துகிறார். அந்தச் சிங்கம் குகைக்குள் இருந்து இன்னும் வெளியே வரவில்லை...... இந்த நாட்டின் பெண் குலம் உள்ளவரை வீரருக்கா பஞ்சம்'..... உங்கள் அம்மாவின் கண்ணீருக்குத்தான் மாற்றே இல்லை..... அவர்கள் எவ்வளவு பாக்கியசாலி...." என்று எவ்வளவு விஷயங்களை அவனோடு அவள் மௌனமாய்ப் பேசுகிறாள்.....

திடீரென்று அடிவயிற்றில், விலாப் புறத்தில் சுருக்கெனக் குத்தி வலிக்க கணவனின் படத்தின் முன் கைகூப்பி நின்றிருந்த கௌரி, கட்டிலின் மீது சாய்ந்து படுத்தாள்.....

அவள் கண் முன்னே நூறு வண்ணங்களில் ஆயிரக் கணக்கான பூக்கள் மலர்ந்து ஜொலிக்கின்றன.

வெளியே திண்ணையிலிருந்து மீசையை முறுக்கியவாறு பெரியசாமி தன் மகன் யுத்த களத்தில், மறைந்திருந்து குழியிலிருந்து மேலேறி வந்து, முன்னேறி வந்து கொண்டிருக்கும் எதிரிகளில் ஆறுபேரை ஒரே கணத்தில் சுட்டுக் கொன்றதையும், அப்போது தூரத்திலிருந்து வந்த குண்டொன்று அவன் உயிரைப் பறித்துச் சென்றதையும் பத்திரிகையில் படித்து யாருக்கோ விளக்கிக் கொண்டிருக்கிறார்.

ஆம்; ஒரு வீரனின் மரணத்தில் உள்ள சோகம் பனிப்படலம் போல் மறைந்து போகும். அவன் வாழ்ந்தபோது புரிந்த வீர சாகசமே, காலம் காலமாய்ச் சுடர்விட்டுப் பிரகாசிக்கும்.



### படைப்பு முகம்



ஜெயகாந்தன் (1934–2015): 20ஆம் நூற்றாண்டின் தலைசிறந்த தமிழ் எழுத்தாளர்களுள் ஒருவராய்ப் போற்றப்படுபவர். இலட்சக்கணக்கான வாசகர்களைத் தம் படைப்புகளின் வழியே சென்றடைந்தவர். இந்திய அரசின் மிக உயர்ந்த இலக்கிய விருதான ஞானபீட விருதினை (2002) தமது ஒட்டுமொத்தப் படைப்பிலக்கியங்களுக்காகப் பெற்றவர். சாகித்ய அகாதெமி, பத்மபூஷன் விருது ஆகிய விருதுகளையும் பெற்றவர். இவரது 'ஒரு மனிதன் ஒரு வீடு ஓர் உலகம்', 'சில நேரங்களில சில மனிதர்கள்', 'கங்கை எங்கே போகிறாள்?', 'சுந்தர காண்டம்', 'ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள்' போன்ற படைப்புகள் குறிப்பிடத்தக்கவை.

## படிப்போம் பகிர்வோம்

1. நீங்கள் அறிந்த, நாட்டுக்காகப் போராடி வீரமரணம் அடைந்த இராணுவ வீரர் ஒருவரைப் பற்றி எழுதுக.
2. பூ உதிரும் கதையில் வரும் பெரியசாமியின் மன உறுதிக்கும் கௌரியின் மன உறுதிக்கும் உள்ள ஒற்றுமையை விளக்குக.
3. பூ உதிரும் என்ற தலைப்பின் வழியாக ஜெயகாந்தன், வாழ்வின் பொருளை விளக்கும் பாங்கினை எழுதுக.
4. இராணுவ வீரரின் வாழ்வியல் ஒழுக்க நெறிகளைப் பட்டியலிடுக.

# இறுக மூடிய கதவுகள்

**– ஆர். சூடாமணி**



பார்வை மங்கியது. எதிரில் கிடந்த அம்மாவின் முகம் பனிப்படலத்தினூடே மொத்தையாய்த் தெளிவின்றித் தெரிந்தது. கண் டாக்டர், மருந்து போட்டுக் கண் பார்க்க விரித்து வைத்தால் இருக்குமே, அந்த மாதிரி.

கண்களைத் துடைத்துக் கொண்டேன்.

இந்தக் கண்ணீர் ஏதோ நிமோனியாவில் காய்ச்சல் தகிக்க ஆக்ஸிஜன் குழாயினால் மூச்சு விட்டுக் கொண்டு நினைவின்றிப் படுத்திருக்கும் அம்மாவுக்காக மட்டும்தானா?

எனக்காகவும்தான்.

மற்றவருக்காக அழும்போது அந்த அழுகை பெரும்பாலும் நமக்காகவேதான் இருக்கிறது. நாம் அவருக்குச் செய்யத் தவறிய கடமைகளுக்காக, அவரிடம் காட்டாத அனுதாபத்துக்காக, அவரைப் புரிந்துகொள்ளாமல் போனதற்காக.

அம்மாவுக்கு மாநிறம். இப்போது காய்ச்சல் வேகத்தில் கறுப்பாகவே தெரிந்தாள். கரிய முகத்தில் ஜுரப் பளபளப்பு. கரிய முடியில் தலை சாமான் வைத்துக் கட்டியது போல், வகிட்டையொட்டி நெற்றியின் மேல் விளிம்பில் இருபுறமும் வெள்ளை முடி. திலகமில்லாத வெறும் நெற்றி. எனக்கு நினைவு தெரிந்த நாளாக வெறுமையாய் இருந்து வரும் நெற்றி.

டாக்டர் இனி அதிக நம்பிக்கை இல்லை என்று சொல்லிவிட்டார். அதாவது, "பார்ப்போம் மிஸ்டர் கேசவன். நம்மாலான முயற்சியெல்லாம் செய்யறோம். காட் இஸ் க்ரேட்" என்று சொன்னார்.

அறைக் கதவிடை சலனம். வேகமாய்த் திரும்பிப் பார்த்தேன். என் மனைவிதான். என் முகம் விழுந்து விட்டதா? என் ஏமாற்றத்தை அவள் உணர்ந்திருக்க வேண்டும்.

"யாரை எதிர்பார்க்கிறீங்க?"

"ம்? யாரையுமில்லே"

"இந்த நேரத்துக்கு நான்தான் வருவேன்னு உங்களுக்குத் தெரியும்"

"ஆமாம்"

"பின்னே?"

"பின்னே? ஒண்ணுமில்லே"

"நாலுநாளா கவனிக்கிறேன். வீட்டிலேயும் சரி, இங்கேயும் சரி, அடிக்கடி வாசல் பக்கமே பாத்துக்கிட்டிருக்கீங்க. யாரை எதிர்பார்க்கறீங்கன்னு நான் தெரிஞ்சுக்கக் கூடாதா?"

அவள் குரலில் சற்று சூடு உறைத்தது. நியாயம் இருக்கும் இடத்தில் சூடு அவசியம் இருக்கும். அன்பான மனைவி. முகம்கோணாமல் என் தாயைக் கவனித்துக் கொள்பவள். நான் யாரை எதிர்பார்க்கிறேன். யாருக்கு அம்மா உடல்நிலைபற்றி எழுதி அனுப்பியிருக்கிறேன் என்று அறிந்துகொள்ள அவளுக்கு உரிமையில்லையா என்ன? ஆனால், அது அம்மாவின் உரிமையில் குறுக்கிடுவதாயிருந்தால்? யாருக்கும் தம் அந்தரங்கத்துக்கான உரிமை உண்டல்லவா?

"முக்கியப்பட்ட யாருமில்லை நீலா" என்று பொய் சொன்னேன்.

"இருந்தாலும் எனக்குச் சொல்றது! யாரது?"

"எங்களோட ஒரு பழங்காலக் குடும்ப நண்பர். அப்பாவுக்கு ரொம்ப வேண்டியவர். சொந்தமின்னு அதிகமா யாருமில்லாத எங்களுக்கு, அவரை ஒரு சொந்தக்காராய் நினைச்சு, அம்மா முடியாமல் படுத்திருக்கிறதைத் தெரிவிச்சிருக்கேன்.

அவ்வளவுதான்." என்றேன். அதில் அதிக சிரத்தை இல்லாதவன்போல்.

மிஸ்டர் செல்லப்பா இந்த ஊரில் இருந்ததே எனக்குத் தற்செயலாய்ச் சென்றமாதம்தான் தெரியவந்திருந்தது. அப்போதிலிருந்தே அம்மாவிடம் சொல்லலாமா என்ற எண்ணம். அவரை வீட்டுக்கு அழைக்கவேண்டும் என்ற துடிப்பு. என் நினைவில் தெரிந்த வாலிப செல்லப்பா வெளியூருக்கு மாற்றலாகிச் சென்று, இப்போது வயோதிகச் செல்லப்பா தம் இலாகாவின் தலைவராய்ச் சென்னைக்கே வந்து சேர்ந்திருக்கிறார். முடி பஞ்சாய் நரைத்திருக்குமோ? வழுக்கை? கைத்தடி? சேசே! அவருக்கு ஐம்பத்தைந்து ஐம்பத்தாறு வயதுக்குமேல் இருக்காது. நிமிர்ந்த உடலும் சுறுசுறுப்பான நடமாட்டமும் கருமை மாறாத தலைமுடியுமாய் நாற்பது என்று மதிக்கத்தக்க எத்தனையோ ஐம்பத்தைந்துகளை நான் பார்த்ததில்லையா என்ன? இது ஓர் அசட்டுத்தனம், நமக்கு முந்தைய தலைமுறை என்றதுமே தொண்டுக்கிழமாய்க் கற்பனை செய்து கொள்வது. குழந்தை கண்களுக்குத்தான் முப்பது என்றாலே முதுமை. என் வயதிலுமா?

அவரை நான் வீட்டுக்கு அழைக்கவில்லை. அம்மாவிடம் சொல்லக்கூட இல்லை. சொல்லவேண்டுமென்று நினைத்துக்கொண்டே இருக்கையில் அம்மா கடுமையான நிமோனியாவில் படுத்துவிட்டாள்.

அம்மா முகத்தைப்பார்த்துக்கொண்டே உட்கார்ந்திருந்தேன். மனம் உணரும் உணர்ச்சிகளை எல்லாம் பேச நாவுக்குத் திறமையில்லை. ஆனால், கண்களுக்கு உண்டு. உணர்ச்சிகள் வெள்ளமிட்டு வரும்போது கண்களால் மட்டும்தான் பேசமுடிகிறது. புலன் ஆற்றல் ஒன்று இடம் மாறிப்போகிறது.

"என்ன அப்படியே உட்கார்ந்திருக்கீங்க? எழுந்து வீட்டுக்குக் கிளம்புங்க. நான்தான் வந்திட்டேனே !"

நான் மெல்ல எழுந்துகொண்டேன். "அப்பப்பா! இன்னிக்கு அந்த ரெண்டு வாலுங்களையும் ஸ்கூலுக்கு அனுப்பறதுக்குள் போதும்போதும்னு ஆயிடுச்சு. அப்பா லீவு போட்ருக்காரே, நாங்க மட்டும் போடக்கூடாதா?ன்னு ஒரேரகளை.சாயங்காலம் அதுங்க வர்றப்பக் கொஞ்சம் அதட்டி கொஞ்சம் நயமாய்ப் புத்திசொல்லி, டிபன் சாப்பிட்டிட்டுப் பாடம் படிக்கச்சொல்லுங்க" என்றாள் நீலா.

"ஆஸ்பத்திரிக்கு வந்து பாட்டியைப் பார்க்கணும்னு அருண் நேத்தே சொன்னான். சாயங்காலம் அழைச்சிட்டு வரட்டுமா? பார்த்திட்டு உன்கூட வீட்டுக்குத் திரும்பிடட்டுமே?"

அவள் கணநேரம் யோசித்தாள். "எதுக்கு... இப்ப எதுக்குங்க? சின்னப்பையன். இந்த ஆக்ஸிஜன் குழாயை எல்லாம் பார்த்துப் பயந்துப்பான். நாலுநாள் போகட்டுமே, அதுக்குள்ள அத்தைக்கும் கொஞ்சம் குணம் தெரிஞ்சு டாக்டர் ஆக்ஸிஜனை எடுத்திடலாமில்லையா?"

ஆக்ஸிஜன் எடுத்துவிடலாம் என்பது உண்மை. குணம் தெரிவதால்தானா? இன்னொரு சாத்தியக்கூறு பற்றி நாங்கள் பேசிக்கொள்ளவில்லை. எங்கள் மௌனத்துள் அது ஆயிரம் நாவுகளோடு பதுங்கியிருந்தது.

நீலா பகலுணவு சாப்பிட்டாகிவிட்டது. கையில் கொண்டுவந்திருந்த புத்தகத்தையும் பிற்பகல் காபி இருந்த பிளாஸ்க்கையும் மூலையிலிருந்த மேஜைமேல் வைத்துவிட்டுக் கட்டிலில் நெருங்கிக் குனிந்து, என் தாயின் பிரக்ஞையற்ற வடிவைச் சிலகணங்கள் உற்றுப் பார்த்தாள். நோயாளியின் உடலில் எவ்வித மாற்றமும் இல்லை. எங்கள் கண்கள் சந்தித்தபோது பேச இவ்வளவுதான் விஷயம்.

"அப்ப, நான் கிளம்புறேன் நீலா."

"ம், ஸிஸ்டர் வந்து இன்ஜெக்சன் போட்டுட்டாங்க, இல்லே?"

"ஆச்சு, டாக்டர் பன்னிரண்டு மணிக்குத் தான் வருவாராம்."

"நான் பாத்துக்கறேன்."

தெருவில் இறங்கினேன். முற்பகல் வெயில் சுள்ளென்று உறைத்தது. நான் வீடுவந்து




சேர்ந்தபோது மணி பத்தரை. ஆஸ்பத்திரியில் இருந்து நடக்கும் தூரத்தில்தான் வீடு. குளித்தேன். ஹாட்ஃபிளாஸ்கில் நீலா எனக்கு வைத்திருந்த உணவை உண்டுவிட்டு ஆயாசத்துடன் படுத்துக்கொண்டேன். ஆயாசம் வெயிலினால்; ஐந்துநாட்களாய் ஆபிசுக்கு லீவுபோட்டுவிட்டு ஆஸ்பத்திரிக்கும் வீட்டுக்குமாய் அலைவதனால்; அம்மாவைப் பற்றிய கவலையினால்; மனபாரத்தால்.

இரவுமுடிய ஆஸ்பத்திரியில் அம்மாவின் பக்கத்தில் உட்கார்ந்து கண்விழித்து இருந்ததால் இப்போது கண்கள் எரிந்தன. மூடிக்கொண்டேன். விட்டு விட்டுத் தூக்கம். அதில் கனவென்று சொல்லமுடியாத தாறுமாறான பிம்பங்கள், அமுங்கிஅமுங்கி வெளிவரும் அம்மாவின் முகம். கூடவோர் எட்டுவயதுச் சிறுவன். ஒருவினாடி கண்களைத் திறந்துவிட்டு மூடினேன். மறுபடியும் தூக்கமா? இப்போது வேறொரு முகம். சிவந்த நீளவாட்டு முகம். இதமான புன்சிரிப்பு. பிரகாசக் கண்களில் ஆழமான பார்வை. சுருட்டை கிராப். நான் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே அந்த முகமும் நழுவியது. திடுக்கிட்டு விழித்துக் கொண்டேன்.

புரண்டு படுத்தேன். மறுபடியும் அரைத்தூக்க நிலை. கண்களுள் மீண்டும் இளம் அம்மாவின் முகம். அதில் ஒருவித ஆவல். உதடுகள் ஏதோ சொல்கின்றன. சிறுவனின் கண்களில் அதிர்ச்சி. மறுப்புக்குறியில் தலை இடவலமாய் அசைகிறது. மறுபடியும் விழித்துக்கொண்டேன். உடல் முழுவதும் வியர்வை. ஆழ்ந்த, தொடர்ச்சியான உறக்கமில்லாததால் ஓய்வெடுத்த உணர்வே இல்லை. எழுந்து உட்கார்ந்து கடிகாரத்தைப் பார்த்தேன். பிற்பகல் மூன்று மணி. போய் முகம் கழுவிக்கொண்டு காஸ் அடுப்பை ஏற்றிப் பாலைக் காய்ச்சி உப்புமா செய்தேன்.

வாசல்மணி ஒலிப்பது கேட்டது. ஓடிப்போய்க் கதவைத்திறந்தேன். தபால்காரர். ஒரு நண்பர் வீட்டுத் திருமணத்துக்கு வந்திருந்த அழைப்பிதழைக் கொடுத்துவிட்டுப் போனார்.

நான் எதிர்பார்த்தவர் வரவே மாட்டாரா? என் அம்மாவின் உயிர் பிரியுமுன் அவள்



முகத்தையாவது அவர் பார்க்கட்டும் என்று எண்ணி அவள் உடல்நிலை பற்றியும் மற்ற விவரங்களையும் அவருக்கு எழுதியிருந்தேனே, அந்த அற்பப்பணி செய்வதுகூட எனக்குக் கொடுத்து வைக்கவில்லையா? நேரில் போய்ச் சொல்லலாமென்றால் காலையும் மாலையும் அவர் வீட்டில் இருக்கும்போது நான் ஆஸ்பத்திரியில் அம்மாவுடன் இருக்கிறேன். பகல் முடிய எனக்கு நேரம் இருக்கும்போது அவர் அலுவலகம் போயிருப்பார். நீலாவைப்போய்ச் சொல்லச்சொல்லலாம் என்றால் அவளுக்கு இவ்விஷயத்தின் முக்கியத்துவம் தெரியாது. அதை அவளுக்கு விளக்க எனக்குத் தயக்கம்தான். இன்று மாலை ஆஸ்பத்திரிக்குப் போனபின் சிறிதுநேரம் பணிப்பெண் எவளையாவது அறைக்குள்ளேயே இருக்கச் சொல்லி விட்டு, நானேபோய் அவரிடம் சொல்லிவிட்டு வந்தால் என்ன? டாக்டரின் முகமோ 'இன்னும் அதிக காலம் இல்லை' என்று சொல்லிவிட்டது. இன்னும் இரண்டு நாள்கள் ஞாயிற்றுக் கிழமைக்காக காத்திருந்தால் காலம் கடந்துவிடலாம்.

மாலை நாலரை மணிக்கு என் குழந்தைகள் பத்மாவும் அருணும் பள்ளியிலிருந்து திரும்பினார்கள். அவர்களுக்குச் சிற்றுண்டியும் காப்பியும் கொடுத்துவிட்டு நீலாவிற்குத் தனியாய் எடுத்து வைத்துவிட்டு நானும் உட்கொண்டேன்.

"பாட்டி இன்னிக்கு எப்படிப்பா இருக்காங்க?" என்றான் அருண்.

"அப்படியே தான், புதுசா ஒன்னுமில்லை"

"நான் உங்கக்கூட ஆஸ்பத்திரிக்கு வந்து பாட்டியைப் பார்க்கறேம்ப்பா"

"அண்ணா வந்தா நானும் வருவேன்" என்றாள்.

"ரெண்டு பேருமே இப்ப வேண்டாம்டா கண்ணு". பத்மாவைத் தூக்கி மடியில் வைத்துக் கொண்டேன்.

"ஒருநாள் ரெண்டுநாள் பாட்டிக்கு எப்படி இருக்குன்னு பார்த்துக்கிட்டு நானே உங்களை அழைச்சுக்கிட்டுப் போறேன்".

"இப்ப கொஞ்ச நேரத்தில் நீங்க ஆஸ்பத்திரிக்குப் போயிடுவீங்க. நாங்க ரெண்டு பேரும் தனியாத்தானே இருக்க வேண்டி இருக்குது?"

"தனியென்ன? ஒரு அரை மணிநேரம் பக்கத்து வீட்டு ஆன்டிகிட்டப் போய் இருக்கப் போறீங்க? அரை மணியில் அம்மா ஆஸ்பத்திரியிலிருந்த திரும்பி உங்களை வந்து அழைச்சுக்கிட்டு இங்கே வந்துடப் போறாங்க."

"நீங்க எப்பப்பா மறுபடியும் ராத்திரியிலே வீட்டிலே இருப்பீங்க? எனக்குக் கதை சொல்லுவீங்க?" என்றபடி என்மேல் நெருங்கி ஒன்றிக்கொண்டாள் பத்மா. அவள் தலைமுடியைக் கோதி முத்தமிட்டேன்.

"பாட்டி ஆஸ்பத்திரியில் இருக்கிற வரைக்கும் நான் அவங்கக்கூடத் துணைக்குத் தங்கி இருக்க வேணாமா கண்ணு? சொந்த மனுசங்க யாரானும் கூடவே இருக்கணும்னு டாக்டருங்க சொல்றாங்களே. அதனாலே தானே அம்மாவும் நானும் மாத்தி மாத்திப் பாட்டியோடு இருக்கோம்".

"ஊஹூம், நீங்க இங்க தான் இருக்கணும். ஆஸ்பத்திரிக்குப் போகக்கூடாது".

அழத்தொடங்கிய குழந்தையைத் தேற்றிச் சமாதானப்படுத்தினேன். "அழக் கூடாதும்மா கண்ணு, சமர்த்தில்ல? ராத்திரியில் பாட்டி கண்விழித்துப் பார்த்து, 'அய்யோ நம் மகன் இங்கே இல்லையே' அப்படினு வருத்தப்படக் கூடாதில்லையா? பாட்டி வீட்டுக்கு வந்ததுமே நானும் வந்துடுவேனே! அப்புறம் ராத்திரியெல்லாம் வீட்டில்தான் இருப்பேன். பத்மாவுக்கு ஒவ்வொரு ராத்திரியும் புதுபுதுக் கதையெல்லாம் சொல்லுவேன்..."

இந்தக் குழந்தை சொல்வதைக் கேட்டு நான் ஆஸ்பத்திரிக்குப் போகாமலே இருந்தால் எவ்வளவு தவறாக, அநியாயமாக இருக்கும்! குழந்தைகளுக்கு என்ன தெரியும்?

அவர்களுடைய பேச்சில் எதைப் பெரிதாய் எடுத்துக் கொண்டு மதிப்பளிக்க வேண்டும் என்னும் அறிவும் தெளிவும் பெரியவர்களுக்கல்லவா இருக்க வேண்டும்?

அம்மா ஏன் அந்த எட்டுவயது சிறுவனின் பேச்சைக் கேட்டாள்?

மறுபடியும் மாலையில் ஆஸ்பத்திரி. அம்மாவின் பிரக்ஞையற்ற உருவம்.

"டாக்டர் வந்தாரா நீலா?"

"ம்..."

"புதுசா ஏதானும் சொன்னாரா?"

"ஊஹூம், மருந்துகள், இன்ஜெக்ஸன், ஆக்ஸிஜன், காட் இஸ் கிரேட் எல்லாமே வழக்கம்போல்"

சற்று தயங்கிவிட்டு"அவர் வந்திருக்காரா? அதான், நான் சொல்லி அனுப்பினேன்னு சொன்னேனே, அந்தாளு" என்றேன்.

"யாரும் வரலே" என்றவள் என்னைக் கூர்ந்து பார்த்தாள். " முக்கியப்பட்டவரில்லை" என்கிற ஒருவருக்காகவா இப்படிப் பறக்கிறாய்? என்னை நம்பச்சொல்கிறாயா? என்று கேட்கும் பார்வை.

நான் தலையைத் திருப்பிக்கொண்டேன். நீலாவுக்குச் சொல்ல வேண்டியதுதான். ஆனால், அவளுக்குச் சம்பிரதாய மனம். அம்மாவைப் பற்றிக் குறைவாக நினைத்து விட்டால்?"

"அப்போ நான் வீட்டுக்குப் போகவா?"

"ம், கிளம்பு. குழந்தைங்க எதிர்பார்த்துக்கிட்டிருக்கும்"

அவள் போனபின் அம்மாவின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டேன். அம்மா சலனமின்றிப் படுத்திருந்தாள். செயற்கைச் சுவாசத்தில் நோயின் முனகல்கள் ஏதுமில்லை. மார்பு சீராய் ஏறி இறங்கியது. ஒருகால் இந்த மயக்கத்தின் திரைக்குப் பின்னே, ஆழ்மனத்தில், வேறேதோ ஒரு காலத்தில் இப்போது வாழ்ந்து கொண்டிருக்கிறாளா?"

நெற்றியின் கோடுகள். வாழ்வின் தடங்கள்.



அதில் ஒரு தடத்தில் நிற்கும்அம்மா. இளைய அம்மா. பயம் கலந்த ஒரு சந்தோசத்தில் உருவமே வேறாகி ஒளியால் நிறைந்தது போன்ற அம்மா. அவள் அணைப்பினுள் எட்டு வயதுப் பையன்.

"செல்லப்பா அங்கிளை உனக்குப் பிடிச்சிருக்குதா கேசவா?"

"ஓ, ரொம்பப் பிடிக்குமே"

"எனக்கு... எனக்குக் கூட அவரைப் பிடிக்குதுடா கண்ணா!"

"நல்ல அங்கிள் அவரு"

"அவரை... அந்த நல்ல அங்கிளை உனக்கு அப்பாவாய்ப் பண்ணட்டுமா?"

பையன் முகத்தில் ஒன்றும் புரியாத வெற்றுப்பார்வை. அது ஒரு தடை என்பதுபோல் அம்மாவின் முகத்தில் கணநேரத் தடுமாற்றம்.

"என்னம்மா?"

"அவரை நான் கல்யாணம் செய்துக்கட்டுமா?"

இப்போது அதிர்ச்சியே வடிவாய் உருமாறும் மகன்.

"ஊஹூம், கூடாது, அது தப்பு!"

"உனக்கு ஒரு அப்பா கிடைப்பாருடா கண்ணா"

"என் அப்பா செத்துப்போயிட்டார். நீ என் அம்மா, அம்மால்லாம் தப்புச் செய்யக் கூடாது..."

மறுப்பில் தலையாட்டும் மகன்.

அந்தத் தலையாட்டலில் ஒரு வாழ்க்கைக் கதையை இறுக மூடிப் பூட்டிவிட்டதை அந்தச் சிறுவன் அறியமாட்டான். நான்தான் அதை அறிந்து, உணர்ந்து, நொந்து, வெட்கி அதற்காகக் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தேன்.

குழந்தைகளின் உலகம் சுயத்தில் தொடங்கிச் சுயத்தில் முடிகிறது. தம்முடன் சம்பந்தப்படுத்தித்தான் எதையும் அவர்களால் பார்க்கமுடியும். என் அம்மா, என் அப்பா, என் தம்பி, என் நண்பன், என் டீச்சர்.

மனிதர்களைத் தனிமனிதர்களாய்ப் பார்க்கும் ஆற்றல் ஒரு குழந்தைக்கு எப்படிச் சாத்தியமாகும்? அவனைப் பொறுத்தவரை அம்மா ஒரு பெரியவள். தன் அம்மா, தன்னைப் பார்த்துக் கொள்கிறவள், தன் பாதுகாப்பான பின்னணி.

அம்மாவை முப்பது வயதான வாலிப மங்கையாக, எதிர்பார்ப்புகள் நிறைந்தவளாக, வருங்காலம் தன்முன் நீண்டு கிடக்கக் காண்பவளாக, இனம் கண்டுகொள்கிற முதிர்ச்சியும் விலகி நின்று வெறும் பார்வையாளராய்ப் பார்க்கும் தெளிந்த கண்ணோட்டமும் ஒரு குழந்தைக்கு எப்படி வரும்?

அந்தக் குழந்தையின் பேச்சை நீ ஏனம்மா கேட்டாய்? தன் அம்மா என்பதற்குமேல் நினைக்கத் தெரியாத குழந்தையின் பேச்சை நீ ஏன் கேட்டாய்? விதவை மறுமணம் தவறு என்று கருதும் ஒரு மரபுச் சமுதாயத்தின் வார்ப்படமான குழந்தையின் பேச்சை ஏன் கேட்டாய்? முதலில் ஒரு குழந்தையிடம் யோசனை கேட்பதே தவறில்லையா? குழந்தையைக் குழந்தையாகவே வைத்துவிட்டு உன் இதயம் காட்டிய வழியில் நீ சென்றிருந்தால், அந்தக் குழந்தை முதலில் முரண்டிருக்கலாம். ஆனால், நான் புரிந்துகொண்டிருப்பேன். மகிழ்ந்திருப்பேன். இரண்டு பேரின் சந்தோஷ வாய்ப்பைக் கெடுத்துவிட்ட குற்றச்சுமையை நெஞ்சில் தாங்கி இப்படி வருஷக்கணக்காய்ப் பரிதவித்துக் கொண்டிருக்கமாட்டேன்.

எல்லாம் வேறுவிதமாய் நடந்திருந்தால்!

அம்மாவின் நெற்றியில் குங்குமம். சிரிப்பில் சந்தோஷம். முகத்தில் பிரகாசம். முதுமையும் மரணமும் யாருக்கும் நேர்வதுதான். ஆனால் தனிமை இருந்திருக்காது. நாளுக்குநாள் வளர்ந்து பெரியவனாகித் தன் வாழ்வை நோக்கிக் கிளை பிரிந்து போகும் மகன் – அடுத்த தலைமுறையினன் – எத்தனை பாசமிருந்தாலும் எந்த அளவுக்குத் தோழனாயிருக்க முடியும் பெற்றவளுக்கு?

அம்மாவின் தலைமுடியைத் தடவிக்கொடுத்தேன். கன்னத்தை மெல்லத் தீண்டினேன். கையைப் பற்றினேன். எதற்குமே அவளிடம் எதிர்விளைவு இல்லை. உடம்பில் அசைவில்லை.

அம்மா, அம்மா உன்னை எப்படி எட்டுவேன்? உன்னுடன்தான் எத்தனையோ பேசவேண்டும். எனினும், என் நாவு புரளவில்லை. நான் பேசினாலும் உனக்குக் கேட்காது. ஆனால், உன் மனம் உணர்கிறதா? என் அன்பை, என் துயரத்தை, என் கழிவிரக்கத்தைப் பேச்சின்றியே புரிந்துகொள்கிறாயா? இப்போது உடல் குலுங்க நான் மௌனமாய்க் கொட்டும் இந்தக் கண்ணீர் உனக்காக மட்டுமல்ல. எனக்காகவும்தான் என்பதை நீ உணர்கிறாயா அம்மா? உணர்ந்து என்னை மன்னிக்கிறாயா?

நெடுநேரம் ஆகியிருக்குமென்று நினைக்கிறேன். தலை நிமிர்ந்து, மூக்கை உறிஞ்சி கண்களைத் துடைத்துக் கொண்டேன். குளியலறைக்குச் சென்று வாளியிலிருந்து சிறிது நீரை முகத்தில் இறைத்துக் கழுவிக் கொண்டேன். மணி எட்டை நெருங்கியிருந்தது. ஒரு நர்ஸை அழைத்து அம்மாவின் பக்கத்தில் அமர்த்திவிட்டு, மிஸ்டர் செல்லப்பாவின் வீட்டுக்கே நான் போய்...

எண்ணம் முடியவில்லை. எதிரே அறைக்கதவுக்கு வெளியே நின்றிருந்தவரை என் கண்கள் கண்டுகொண்டன.

சிவந்த நீளவாட்டு முகத்தில் இப்போது சில சுருக்கங்கள். சுருள் முடியில் அங்கங்கே நரை. எனினும் அந்த முகத்தின் நேர்த்தியை இதமான புன்சிரிப்பை, ஒளிமிக்க விழிகளை, எட்டுவயதுப் பையனுக்குப் பரிச்சயமான அவன் அப்பாவின் நண்பரை, எனக்கும் அடையாளம் தெரிந்தது.

பேசத்தெரியாமல் அவரையே பார்த்துக் கொண்டு நின்றேன். வந்துவிட்டார். வந்துவிட்டார், வந்துவிட்டார்.

"கேசவ்? கேசவன்தானே? நான் செல்லப்பா"

அந்தக் குரலும் மாறவில்லை.

"தெரியும்" என்று எப்படியோ தடுமாறிக் கூறினேன்.

"நான் ரெண்டு வாரமா ஊர்ல இல்லை. இன்னிக்குச் சாயங்காலம்தான் வந்தேன். உன்– உங்க – லெட்டரைப் பார்த்தேன். உடனே கிளம்பி வந்தேன்."

அவர் கண்கள் படுக்கைமீது கிடந்த உருவத்தில் சென்று நிலைத்தன. உதடுகள் லேசாய்த் துடிப்பது தெரிந்தது. அவர் பார்வையில் ஒரு வாழ்நாளின் உணர்ச்சிகள் அனைத்தும் ஒருங்கே கட்டவிழ்ந்து உடைந்தன. கணப்பொழுதில் அம்மாவுடன் அவர் அங்கே தனியாய் இருந்தார். இது அவ்விருவருடைய கணம். அவர்களுடையதாய் இருந்திருக்க வேண்டிய எத்தனையோ ஆண்டுகளின் ஒரு சின்னஞ்சிறு கடைசிப் பிரதி.

"உள்ளே வந்து உட்காருங்க சார். நான் இதோ வந்துடறேன்" என்றுகூறி அந்த அறையை விட்டு நான் வெளியேறினேன்.



## படைப்பு முகம்

ஆர்.சூடாமணி (1931–2010): நடுத்தர மக்களின் வாழ்க்கையையும் குறிப்பாகப் பெண்களின் நிலையையும் தமது எளிமையான மொழியில் எழுதியவர். உளவியல் எழுத்தாளர் என்று போற்றப்படும் இவர், ஆங்கிலத்திலும் பல படைப்புகளைத் தந்துள்ளார்.





## படிப்போம் பகிர்வோம்

1. இறுக மூடிய கதவுகள் என்னும் சிறுகதை கதை மாந்தர் நோக்கில் கதை சொல்லும் முறையில் அமைந்துள்ள பாங்கினை விளக்குக.
2. "பாடாத தேனீ பசியாத நல்வயிறு பார்த்ததுண்டோ" என்ற பாரதிதாசனின் கவிதையோடு இறுக மூடிய கதவுகள் கதையின் கருப்பொருள் பொருந்தும் தன்மையை ஒப்பீடு செய்க.
3. கனவென்று சொல்லமுடியாத தாறுமாறான பிம்பங்கள், அமுங்கி அமுங்கி வெளிவரும் அம்மாவின் முகம். கூடவோர் எட்டுவயதுச் சிறுவன். ஒருவினாடி கண்களைத் திறந்துவிட்டு மூடினேன். மறுபடியும் தூக்கமா? இப்போது வேறொரு முகம். சிவந்த நீளவாட்டு முகம். இதமான புன்சிரிப்பு. பிரகாசக் கண்களில் ஆழமான பார்வை. சுருட்டை கிராப். நான் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே அந்த முகமும் நழுவியது.

   –––இறுக மூடிய கதவுகள் கதையின் இப்பகுதியில் காட்சித் துணுக்கு முறை என்ற கதைசொல்லும் உத்தி பயன்படுத்தப்பட்டுள்ளது, இதுபோன்று இக்கதையில் வரும் வேறு உத்திகளைக் குறிப்பிட்டு எழுதுக.
4. இறுக மூடிய கதவுகள் கதையில் "உள்ளே வந்து உட்காருங்க சார், நான் இதோ வந்துடுறேன். என்று கூறி அந்த அறையை விட்டு நான் வெளியேறினேன்." என்று கதை முடியும் இடத்திலிருந்து கேசவன் அறையைவிட்டு வெளியேறியபின் அவனது அம்மா சுயநினைவு திரும்பி, செல்லப்பாவுடன் உரையாடுவது போல் கற்பனையாகக் கதையை நீட்டி எழுதுக.
5. அவரை... அந்த நல்ல அங்கிளை அப்பாவாய்ப் பண்ணட்டுமா... ஊஹூம் கூடாது என்பதற்குப் பதிலாகச் சரி என்று கூறுவதாகக் கொண்டு கற்பனைக் கதையைத் தொடர்க.

# நசுக்கம்

**– சோ. தர்மன்**



கட்டடங்களை விட்டுத் தூரத்தில் இருந்த சிமெண்ட் களத்தில் எல்லோரும் கூடியிருந்தார்கள். அந்தச் சதுர வடிவ குறைந்த உயரமுள்ள சிமெண்ட் மேடை நிரம்பி வழிந்தது. ஒவ்வொருவர் பக்கத்திலேயும் முதல்நாள் அவர்கள் திரி சொருகி வைத்துவிட்டுப் போன வட்ட வளையங்கள் அடுக்கடுக்காய்க் குமிந்திருந்தன. வட்டவட்டமாய் இருக்கும் அந்தத் தகர வளையங்களுக்குள் மருந்தடைத்து திரி சொருகி வைத்துவிட்டுப் போன பட்டாசுகள், அவற்றை வளையத்திற்குள்ளிருந்து வெளியே எடுத்து களத்தில் காயப்போட வேண்டும். ஃபோர்மென் சங்கரன் சுற்றிச்சுற்றி வந்தார்.

"டேய், கீழ தட்டாத, தூர்மண்ணு உதிந்திடும். பிதுக்கி எடு, யேல, பிரக்கா சொல்றது காதுல ஏறுதா ஏறலியா?"

பிரக்கன் பரக்கப்பரக்கப் பார்த்தான்.

"ஏணேய், வேல்ச்சாமிண்ணே ஃபோர்மேன் அண்ணாச்சி இன்னக்கி காலாங் காத்தாலயே பிதுக்கச் சொல்றாரு"

எல்லோரும் சிரித்துக் குலுங்கினார்கள்.

கருப்பாயி வாயடங்கிப் போனாள்.

"என்னல, களத்தில ஒரே சிரிப்பாணியும் கும்மாளமும். எல்லாத்தையும் உதுத்து காயப் போடலன்னா இன்னக்கி வேலைக்கு வளையம் தரமாட்டான். தூக்குச் சட்டியத் தூக்கிட்டுப் போயிர வேண்டிதான்" சங்கரனின் அதட்டலை அவர்கள் சட்டை செய்யவில்லை.

மருந்து கலந்து வெற்றுக்குழாய்களுக்குள் அடைத்துக் கொடுக்கும் ஃபோர்மேன் கொலம்பான் அங்கு வந்தான். கருத்த அவன் உடம்பில் ஒட்டியிருந்த அலுமினியப் பவுடர் வெயிலில் மினுமினுத்தது.

"ஆரு வெள்ளக்காரத் தொரையா? என்ன… தொரை… வளையம் குத்த ரெடியா இருக்கா?"

"எப்பவும் நான் ரெடிதான்." மேலோரத்தில் டிப்பிங் என்று சொல்லக்கூடிய, திரிகள் செய்யும் வேலை மும்முரமாய் நடந்து கொண்டிருந்தது. நீளமான நூல்களைக் கருமருந்தும் பசையும் கலந்த வாளிக்குள் ஒரு பொடியன் முக்கி முக்கிக் கொடுக்க அதை இழுத்துக் கொண்டேபோய் நீளவசத்தில் கட்டப்பட்டிருக்கும் கம்புகளில் காயப் போட்டான். அவர்களின் முகமெல்லாம்கூட கருமருந்துகளின் கோடுகள். கோமாளி வேசக்காரனைப்போல.

கம்புகளில்தொங்கும்பசையும்கருமருந்தும் கலந்த நூல்கள் காயக்காய விறைப்பேறித் திரிகளாகும். மெல்லிய வெள்ளைத்தாளுக்குள் வைத்துச் சுருட்டி குரோஸ் போடவேண்டும். வெடியின் சைஸ்களுக்குத் தக்கபடி அளந்து அறுத்து மருந்து தொட்டு வெடிக்குள் சொருக வேண்டும். கழிவுத் திரிகள் ரொம்ப வந்தால் சம்பளம் கட். விறைப்புக் குறைவாக இருந்தால் மூணு குரோஸ் கணக்கு கட்.

"என்ன… உதுத்தாச்சா… எல்லாத்தையும் அள்ளி காயப் போடுங்கள ஏ, மிக்கேலு வெத்து வளையங்களைப் பெரக்கி அங்க போடு. குனிஞ்சு போடு, வீசி எறிஞ்ச சாம்பலாகிருவ."

மெதுவாய் முணங்கிக்கொண்டு மிக்கேலு குனிஞ்சு வெத்து வளையங்களை எடுத்தாள். அவளுடைய இரு கைகளிலும் தோள்வரை வளையங்கள் நிறைந்தன. அவள் சல்சல் என்று தட்டி ஆட்டம் போட்டு நடித்துக்காட்டினாள்.

அண்ணாச்சி எல்லாத்தையும் உதுத்து காயப்போட்டாச்சு

வெத்து வளையங்களையும் பெறக்கிக் குமிச்சாச்சு. குத்துறதுக்கு வளையம் குடுங்க.

பச்சையைக் கண்ட வெள்ளாடுகளாய் மேற்காமல் ஓடினார்கள். கருமருந்துக் கலவை அடைத்த திரி சொருகாத வளையங்கள் அம்பாரமாய்க் குமித்து வைக்கப்பட்டிருந்தன. ஃபோர்மேனின் அதட்டல் கட்டிடங்களில் ஒலித்தது.

யே... செயிண்ட் ஆறாயிரம், பிசிலி நாலாயிரம், கோவா நாலாயிரம், துக்கடா எட்டாயிரம், ஸாடா ஆயிரம் கணக்குப் பண்ணி எடுக்கணும்.

ஆளாளுக்கு நூறு எரநூறு என்று எடுத்து அடுக்கினார்கள். இனி ஒவ்வொரு வளையத்தின் மேலும் காவிகலந்த மண் பூசப்பட்டு, அது உலர்ந்த பின்னால் இரும்பு ஊசியால் குத்தி அந்த மண்ணை டியூப்புக்குள் இறக்கவேண்டும். இந்த இரும்பு ஊசி போடுகிற துவாரத்தின் வழியேதான் திரி சொருக வேண்டும். கட்டியான மருந்தில் திரியின் முனையைத் தொட்டு உள் இறக்கவேண்டும்.

அவர்கள் வட்டமாய் உட்கார்ந்து வளையம் குத்திக்கொண்டிருந்தார்கள். வெயில் ஏறிக்கொண்டிருக்க அவர்களைப் பார்ப்பதற்கு தரையில் சிதறிய தானியங்களைப் பொறுக்கும் கோழிகளைப் போலிருந்தது. அவர்களின் விரல்கள் பம்பரமாய்ச் சுழன்றன. குனிந்த தலை நிமிரவில்லை.

யே... அமுக்கிக்குத்து. காவிமண்ணும் அடிவரைக்கி போகணும். ஏலே ஊசிய திருக்கி எடுல. மண்ணு புடுங்கி பிசிறடிக்கக் கூடாது.

அண்ணாச்சி அவன் புதுப்பையன். சரியா குத்தத்தெரியாது.

குத்தறதுக்குச் சொல்லிக் கொடுக்கணுமாக்கும். ஏய், தங்கமாடத்தி அவனுக்குச் சொல்லிக்குடு. சம்முகவடிவு நிய்யும் கொஞ்சம் கவனிச்சுக்கோ.

குத்திமுடித்த வளையங்களைக் களத்தில்போய்க் காயவைத்துவிட்டு வந்து உட்கார்ந்து கொண்டார்கள்.

அந்தக் களத்தில் ஆரத்தித் தட்டுகளாய் வளையங்கள் நிறைந்துகொண்டே வந்தன. இடுப்பாற்றிக் கொள்வதற்காக அவர்கள் மாறிமாறி உட்கார்ந்து கொண்டார்கள். எல்லாம் குத்திமுடித்தபின் அவர்கள் திரிக்கட்டுகள் வாங்குவதற்காக ஓடினார்கள். நல்ல விறைப்பான கட்டுகளை எடுப்பதற்காகச் சண்டை போட்டார்கள். திரிசுற்றும் சண்முகையா நல்ல விறைப்பான கட்டுகளைத் தனியே கொண்டுவந்து சரோஜாவிடம் காணாமல் நீட்டினான். சிரித்துக்கொண்டே வாங்கிய அவள், அவன் கன்னத்தில் பசையை இழுகிவிட்டு ஓடினாள். சண்முகையாவிற்கு உச்சி குளிர்ந்தது.

செயிண்ட் என்று சொல்லக்கூடிய சிவப்புக் கலரில் இருக்கும் பெரியவெடி, ஸாடா சிவப்புக்கலர் ஊசிவெடி, பிசிலி, வரிவரியாய்ப் பலகலரில் துக்கடா, சிவப்பாய் இருக்கும் சீனிவெடி இவற்றிற்கான திரிவகைகளைத் தரம்பிரித்தார்கள். இனித் திரிசொருக உட்கார்ந்துவிட்டால் எந்திரிக்கக்கூட மனசு வராது. மத்தியானக் கஞ்சியை முடித்துக்கொள்ள தூக்குவாளிகள் இருக்கும் இடம்தேடிப் போனார்கள். கடனுக்கு வடை விற்கும் வடைக்காரப் பாட்டி பெரிய்ய பெட்டியுன் தயாராய் உட்கார்ந்திருந்தாள். பூந்தோட்டத்துக் கிணற்றில் கால்கை கழுவப்போன பயல்களைத் தோட்டத்துக்காரர் விரட்டிக் கொண்டிருந்தார்.

யே... சின்ன சிறுக்கிவில்லைகளா... போறிகளா கால ஒடிக்கவா, மேல பூரா ஒண்ர கோட்ட கருமருந்த சொமந்துகிட்டுக் கழுவ வந்தீட்டகளாக்கும். நீங்க கைவச்ச எடத்தில ஆடுமாடுகூட தண்ணி குடிக்கமாட்டேங்குது. ஓடுங்கல. ஒங்க தொட்டிக்கு.

கரம்பைக் கட்டியின் எறி பிசகிக்கீழே விழுந்து சிதறியது.

ஒருநாளைக்காவது கருமருந்தக் கலந்து கிணத்துல ஊத்துனாத்தான் இந்த பய வசத்துக்கு வருவான். பிரக்கனின் வசவோடு அவர்கள் வெளியேறி நடந்தார்கள். கைக்கழுவ தண்ணீர் தொட்டியில் இல்லை.

அடர்ந்த வேப்பமரத்தின் குளிர்ச்சியில் வட்டமாய் உட்கார்ந்திருந்தார்கள். மூக்கிலும் முகங்களிலும் கைகளிலும் மின்னும்



அலுமினியப் பவுடர் கலந்த கருமருந்து ஒட்டியிருந்ததை யாரும் சட்டை செய்யவில்லை.

நேத்து என்னல, சினிமாவுக்கு வாரமினுட்டு வரல.

படம் நல்லாருந்ததா?

இந்தால இந்த ஊறுகாயக் கடி. நல்லாருக்கு

கூட்டமான கூட்டம். பெரிய வெக்கக்கேடு. படத்துக்கு வரிசையில நிக்கன், வேர்வை மேலெல்லாம் வடியுது. சுத்தி நிக்கிறவன் அவ்வளவு பேரும் எம்மூஞ்சியவே பாக்கிறான். கருமருந்து கொச்சவாட, மொச்சுமொச்சுன்னு மூக்கைத் தொளைக்குதுண்ணு ஒருத்தன் சொல்லவும் எனக்கு வெக்கமாப் போச்சு. பேசாம அங்ஙனயே நாக்கப் புடுங்கிட்டு செத்துரலாம் போலருந்தது.

என்ன செய்ய. நம்மள நம்ம ஆத்தா அந்த நேரத்துல பெத்துப் போட்ருக்கா. இத விட்டாலும் வேற பொசகலும் கெடயாது. விடிஞ்சா ஆரு வேலக்கி கூப்டுவானு ஒக்காந்திட்லருக்கணும்.

இந்தச் சனியன் பிடிச்ச வீச்சம் நமக்கு ஒண்ணுமே தெரிய மாட்டேங்குது. யாராவது வேத்தாள்ட்ட மொகங்குடுக்க முடியல. அவன் முகத்தச் சுளிக்கிறதப் பாத்து வெக்கமாத்தான் இருக்கு.

அவர்கள் திரிகளைப் பசைகலந்த கட்டி மருந்துக் கிண்ணத்தில் முக்கி டியூப்களில் சொருகிக் கொண்டிருந்தார்கள்.

யேலேய்... திரிய அமுக்கிச் சொருகு. புடுங்கிப் பாப்பான். பொசுக்குனு வந்துச்சு கணக்குல நாலு வளையத்த கொறச்சு எழுதிப்புடுவான்.

சங்கரனின் அதட்டல் இனி ஓயாமல் கேக்கும்.

அந்தச் சின்னச்சின்னக் கட்டிடத்தில் ஒவ்வொன்றிலும் நாலுபக்கமும் வாசல். வாசலுக்குப் பக்கத்திலயே தண்ணீர் தொட்டிகள். அந்த அறைகள் ஒவ்வொன்றிலும் சிறிசும் பெரிசுமாய் தீப்பெட்டிக்குள் குச்சிகளாய் நிறைந்து கிடந்தார்கள். புதுப்பையன் கேட்டான்.

"இந்தச் சின்ன ரூம்புக்கு எதுக்கு நாலுபக்கமும் வாசல்."

"அதுவா இன்ஸ்பட்ரு வர்றன்னைக்குப் பாரு தெரியும்."

அந்த ரூமே அதிர எல்லாரும் பலமாய்ச் சிரித்தார்கள். அவனுக்குச் சிய்யென்றிருந்தது. எதுக்குடா கேட்டோமென்று பேசாமல் உட்கார்ந்திருந்தான். முகத்தைச் சுளித்துக்கொண்டு பிரக்கனைப் பரிதாபமாய்ப் பார்த்தான்.

"இது தெரிஞ்சிருந்தா அவன் ஏழாம் வகுப்பில் பெயிலாகிருப்பானா?"

"இங்க வந்து நம்மளோட கருமருந்தைத் திங்க வருவானா?"

"சீ. சும்மாகிட நாயே, ஒனக்கு அனையம் தெரியுமோ. நிய் படிச்சுக் கிழிச்சிறக்கூடாது. எதுக்கு இங்க வந்த."

பிரக்கனின் அதட்டலில் பச்சை டவுசர் வாயடங்கிப் போனான்.

இந்தவொரு சின்ன ரூமுக்குள்ள நாலுபேருதான் ஒக்காந்து வேலபாக்கணும்.அந்த நாலுபேரும் ஒரே எடத்துல ஒக்காரக்கூடாது. ஒவ்வொரு வாசல் பக்கத்திலேயும் தனித்தனியா இருந்துதான் வேல பாக்கணும். ஒரு வளையம் சொருகி முடிச்சாச்னா ஒடனே களத்துல கொண்டுபோயி வச்சிரணும். திரி சொருகுன வளையம் ரூமுக்குள்ள கண்டிப்பா இருக்கக் கூடாது. களத்துல போயி வளையத்தை வச்சிட்டு அல்லது வெளியே போயிட்டு ரூமுக்குள்ள யாருவந்தாலும் வாசல் ஓரத்ல இருக்கிற தண்ணித் தொட்டியில கால முக்கிக் கழுவிட்டுத்தான் உள்ள வரணும்.

"இல்லாட்டா? "

"இல்லாட்டா ஒங் கால்ல ஒட்டியிருக்கிற மண்ணு இந்த சிமிண்டுத் தரையில ஒரசி, ஒட்டியிருக்கிற கருமருந்துல தீப்புடிச்சு




வளையமெல்லாம் வெந்து நீயும் கருகிப்போவ, நானும் கருகிப் போவன். சங்கிலிப்பயல் வெந்து மகிந்து கருகிக் கிடந்தாப்ல."

புதுப்பையன் மிரள மிரளப் பார்த்தான். எல்லோரும் ஏளனமாகச் சிரித்தார்கள். ஒரு வாசல் மட்டுமே லேசாய்த் திறந்திருக்க மூன்று வாசல்களும் பூட்டியிருந்தன. தண்ணித் தொட்டி வரண்டு அசிங்கங்கள் நிரம்பிக் கிடந்தன. தண்ணீரைக் காணோம். சுவரில் தொங்கிய நான்குபேர் மட்டும் என்ற போர்டில் கருமருந்தால் நாலுக்குப் பக்கத்தில் சைபரைப்போட்டு நாற்பதுபேர் மட்டும் என்று எவனோ கிறுக்கியிருந்தான்.

திரிசொருகிய வளையங்கள் களத்தில் நிறைந்து கொண்டே வந்தன. பார்ப்பதற்குக் கரிசலில்தரையைக்கீறிக்கொண்டுதலைநீட்டும் முளை விதைகளைப் போல் இருந்தது.

வாசலில் வந்துநின்ற ஒரு சின்னப்பையன் சரோஜாவிடம் ஒரு பொட்டலத்தைக் கொடுத்தான். மடிப்பை நீக்கியதும் அதில் நான்கு சுசியங்களும் வடைகளும் இருந்ததைப் பார்த்தாள்.

ஆரு குடுத்தா?

சம்முயாண்ணங் குடுத்து ஒங்கிட்ட குடுக்கச் சொல்லுச்சு.

ஆரு திரி சுத்துற சம்மியாவா?

பயல் தலையாட்டிவிட்டு வேகமாய் ஓடினான்.

ஏலேய் வேலுச்சாமி... சரோஜாவுக்கு நல்ல திரி எப்டி வந்ததுன்னு தெரிஞ்சு போச்சா.

அவள் வெட்கத்துடன் மடியில் வைத்தாள்.

யேய்... ஒத்த வளையத்துக்குமேல உள்ள இருக்கக்கூடாது. பாத்துட்டன் பெறவு கணக்குல கொறச்சிருவன். எம்மேல சடைக்கப்படாது. சொருகி முடிச்ச வளையமெல்லாம் ஒடனே களத்துக்குப் போயிரணும்.

சங்கரனின் அதட்டலைக் கேட்டதும் வளையங்களைத் தூக்கிக் கொண்டு எல்லா ரூமிலிருந்தும் பையன்கள் களத்திற்கு ஓடினார்கள்.

யக்கா ரெண்டு வளையங் கெடக்கு... திரி காணல. ஃபோர்மேன்ட்ட கேட்டா கூப்பாடு



போடுவாரு. கொஞ்சம் திரி குடுக்கா. அடுத்த ரூம் தங்கராசு வாயெல்லாம் பல்லாக நின்றான்.

எனக்கு ஒரு வளையம் சொருகிக் குடுத்துட்டு திரி வாங்கிட்டுப்போ.

யக்கா குடுக்கா.

அப்ப அந்த ரெண்டு வளையத்தையும் எடுத்துக்கிட்டு இங்க வா. திரி தரேன். ஃபோர்மேன் பார்த்தா கூப்பாடு போடுவாருக்கா.

நிய் சும்மா பயப்படாம வா.

தங்கராசும் சரோஜாவும் எதுத்து எதுத்து உட்கார்ந்து கொண்டார்கள். தங்கராசு ஒன்பதாம் வகுப்பைப் பாதியில் நிறுத்திவிட்டுத் தன் தம்பியுடன் சேர்ந்து வேலை செய்கிறவன். வயதுக்கு மீறின உயரம். களையான குழந்தை முகம்.

ஒங்க அக்காள பொண்ணு கேட்டு வந்தாகள என்னாச்சு?

அந்தக் கூத்த ஏங் கேக்க. போன மாசம் உருளக்குடியிலிருந்து ஒரு மாப்ள வந்தான். பையனும் நல்ல பையன். பெருங்கொண்ட சம்சாரி. வீட்ல ஒரே பையனாம். காட்டுவேல செய்யுமான்னு கேட்டாக. நாலு ஆளக் கூட்டிக்கிட்டு தனது வேலைக்காவது போகணுமின்னு சொன்னாக. அக்கா ஒரேயடியா தலையக் குலுக்கிட்டா.

அவமேலயும்குத்தமில்ல.சம்சாரிவீட்டுக்கு வாக்கப்பட்டுப் போனா காட்டு வேல செஞ்சுதான் ஆகணும். வெயில்ல நின்னுதான் சாகணும். இந்தத் தீப்பெட்டி ஆபிஸ், வேட்டாவிஸ்ல வேல செஞ்சு சொகங்கண்டுட்டா ஒரு சிறுக்கி கூட வெயில்ல நிக்கமாட்டா. இப்ப வேற எங்கயும் போகவேண்டாம். என்னயப்போயி வெயில்ல நில்லுன்னா நிக்க முடியுமா? கறி எளகும்.

முந்தா நாளும் ஒரு மாப்ள வந்துச்சு.

எந்தூர்லருந்து வந்துச்சு

வரதம்பட்டி. அம்மா வழில கொஞ்சம் சொந்தம். மாப்ள கவுருமெண்ட் வேல பாக்காராம். சூட்டு கீட்டு போட்டு ரொம்ப போடுசா இருந்தாரு.

அப்ப எப்பக் கலியாணம் வச்சிருக்கிக?

எப்பக் கலியாணமா? பொண்ணு புடுச்சுப்போச்சு. எத்தன வரைக்கும் படிச்சிருக்குணு கேட்டாரு. படிக்கலண்ணு சொன்னதுதான். பச்சத்தண்ணிகூட குடிக்கல. நடையக் கட்டிட்டாரு.

வர்ற பயலுக்குப் பூராவும் பொண்ணு புடிக்கும். டீச்சரம்மா மாதிரி இருக்கா. படிச்ச மாப்ள வந்தா பொண்ணு படிச்சிருக்கான்னு கேக்கான். பட்டிக்காட்லருந்து சம்சாரி மாப்ள வந்தா காட்டு வேல செய்யுமான்னு கேக்கான். அங்கிட்டும் இல்லாம இங்கிட்டும் இல்லாம ரெண்டுங் கெட்டான் பொழப்பு, சோடனதான் பெரிய சோடனை. ஒவ்வொருத்தியும் சிமிட்டிட்டு அலையறதப் பாத்தா சினிமா நடிகை தோத்துப்போவா.

சொல்லிவிட்டு சரோஜா சலித்துக் கொண்டாள். சொருகிய வளையங்களைக் காலால் நகட்டிவிட்டு இடுப்பாற்றினாள்.

இங்கயே எவனாவது கெட்னா வெயில் படாம வேல பாக்கலாம். சாகும்மட்டும் ரெண்டுபேரும் கருமருந்தத் தின்னிட்டு சாகவேண்டிதான். நம்ம மிச்சம் வச்சிட்டுப் போற மருந்தத்திங்க நம்ம புள்ளைக வரும்.

வேலையை முடித்தவர்கள் வளையங்களை அடுக்கி வைத்துவிட்டு உப்புச் சோப்பு வாங்க ஓடிப்போய் வரிசையில் நின்றார்கள். தினமும் வேலை முடிந்ததும் துணிகளுக்குப் போடுகின்ற உப்புச்சோப்பு ஒரு துண்டு கிடைக்கும். அதைத் தேய்த்துக் குளித்தால்தான் மேல்பூராவும் ஒட்டியிருக்கின்ற அலுமினியப்பவுடர், சல்பர், கருமருந்து வாடை குறையும். அவர்கள் வரிசையில் இடம்பிடிக்கச் சண்டை போட்டார்கள். அதிலேயே சோப்பு வாங்கியவர்கள் தூக்குவாளியைத் தூக்கிக் கொண்டும் சட்டைதுணிமணிகளைக் கையில் பிடித்துக்கொண்டும் குறிஞ்சாக்குளம்

கண்மாய்க்கு ஓடினார்கள். போனவருடம் இதே மாதிரிதான் வரிசையில் நின்றான் செல்லையா பயல். துடுக்கான பயல். எடுத்தெறிந்து பேசுவதில் படுகில்லாடி. அவன்முறை வந்ததும் சொன்னான்.

சோப்பு முழுக்கட்டி கொடுக்கலாமில்ல. அரைக்கட்டி கைகழுவ மட்டும்தான் சரியாப்போகுது. விடிஞ்சு பாத்தா குளிச்ச ஒடம்பு மினுங்குது. அலுமினியப் பவுடர் போக மாட்டேங்கது.

சொல்லி வாய்மூடவில்லை. அவன் கன்னத்தில் பெரிய கணக்குப்பிள்ளையின் ஐந்து விரல்களும் தடம்பதித்திருந்தன.

ஓஞ்சோலியப் பாருடா நாயி, முழுக்கட்டி, அரைக்கட்டி – ஒனக்கு சோப்பும் கெடையாது. நிய் நாளையிலிருந்து வேலைக்கு வரவேண்டாம்.

சம்பளத்தக் கணக்குப் பாத்துக் கையில குடுங்க. இந்த மடம் இல்லாட்டி சந்தமடம்.

நாளைக்கு ங்கொப்பனக் கூட்டிட்டுவந்து வாங்கிட்டுப்போ

வேல செஞ்சது நானு. எங்கப்பனில்ல.

செல்லையாப் பயல் இப்போது கம்பி எண்ணுகிறான். தட்டப்பாறை மைனர் ஜெயிலில். கம்பெனியிலிருந்து குளோரேட் மூடையைக் களவாண்டு விட்டதாகக் குற்றம். அவன் தங்கச்சி இப்போது வேறு கம்பெனிக்கு நடக்கிறாள். அவள் இப்போது மருந்து களவாணி செல்லையாவின் தங்கச்சியாக மாறிப்போய் விட்டாள்.

பிள்ளைகளை ஏற்றிப்போகும் கம்பெனி பஸ் வாசலில் வந்து நின்றது. அதன் கண்ணாடியில் பட்டவெயில் மஞ்சளாய் மின்னியது. குளித்தும் குளியாமலும் வந்த சிறுவர்களும் சிறுமிகளும் இடம்பிடிக்கச் சண்டை போட்டார்கள்.ஆலமரத்தில் அடையும் குருவிகளைப்போல ஒரே சலசலப்பு. பஸ்ஸின் ஹாரன் பலமாய் ஒலித்தது.

புறப்படத் தயாராய் நின்ற பஸ்ஸை நோக்கி



கையைக் காட்டியபடியே ஃபோர்மேன் சங்கரன் வேகமாய் ஓடிவந்தார். ஜன்னல்களின் வழியே எல்லாப் பிள்ளைகளும் எட்டிப்பார்த்தார்கள். உறுமிய பஸ் அமைதியானது. குடோன்லருந்து சின்ன மொதலாளி இப்பத்தான் போன் பண்ணினாரு. பத்தாயிரம் பாக்கெட் அவசரமா வேணுமாம். நாளைக்கிக் காலைல லோடு ஏத்தியாகணுமாம். எக்ஸ்போர்ட் முடிச்சிட்டுப் போங்க ரொக்கக் காசு.

ரொக்கக் காசென்றால் வாரக்கடேசியில் வாங்கும் சம்பளக் கணக்கோடு சேராது. வேலை முடிந்ததும் உடனே கைக்கு வந்துவிடும். ஊர் போவதற்காக பஸ் சார்ஜ் கொடுக்கப்படுவதோடு டீ, காபி, பன், சேவு, பக்கடா, மிக்சர் ஓசியில் கிடைக்கும். கொஞ்சம்பேர் இறங்கிக்கொள்ள பஸ் புறப்பட்டுப்போனது.

அவர்கள் பாக்கெட் ரூமிற்குள் வட்டமாய் உட்கார்ந்தபோது ஒளித்து வைத்திருந்த பெட்ரோமாக்ஸ் லைட்டுகள் பொருத்தப்பட்டன. பல கலர்களில் அம்பாரமாய்க் குமித்து வைக்கப்பட்டிருந்த வெடிகளைச் சுற்றிலும் உட்கார்ந்து எண்ணிஎண்ணிப் பாக்கெட் போடத் தொடங்கினார்கள்.

அண்ணாச்சி மொதலாளிட்டச் சொல்லி ஒரு டியூப்லைட் போடச் சொல்லலாமில்ல. நல்ல வெளிச்சம் தெரியுமில்ல.

சும்மா வாய வச்சுகிட்டு இருடா. மேனேஜர் ரூமுக்கே கரண்ட் கிடையாது. சாயங்காலம் நாலு மணிக்குமேல வாட்ச்மேன் தவிர வேற ஆளே இருக்கக்கூடாதுங்கறாரு இன்ஸ்பெக்டரு.

யேய்… மிக்கேலு, தங்கமாடத்தி உள்ள தள்ளி உக்காருங்க. கதவப்பூராவும் சாத்திருவம். வெளிச்சம் தெரிஞ்சு வேண்டாதபய எவனாவது போன் பண்ணிட்டாப் போச்சு. ஜீப்புக்காரன் வந்தா பூட்டி சீல்வச்சுப்புடுவான். அன்னிக்கி அன்னிக்கே குடோனுக்குப் போயாகணும். இங்க என்னடான்னா லாரிவாடகை குடுக்க

வருத்தப்பட்டுப் பத்துநாள் வெடியும் குமிஞ்சுகிடக்கு. இது ஒரே வாடகையாப் போகுது. இங்கருந்து குடோனுக்குப் போற வாடக மிச்சம். புடுச்சிக்கிட்டா அம்புட்டுதான்.

எண்ணி அடைத்துப் பைகளை மடித்து, பின் அடித்து மடித்த பைகள் வரவர சங்கரன் கேஸ்பெட்டிக்குள் எண்ணிஎண்ணி அடுக்கிக் கொண்டே இருந்தார். அவர் மனசு சந்தோசத்தில் கனத்தது.

அண்ணாச்சி, பின்னு தீர்ந்துபோச்சு. வேற பாக்கெட் ஒடங்க.

எண்ணிமட்டும் வையுங்க. புதுப்பாக்கெட்டு ஒடச்சுக் கொண்டாரன்.

போனவேகத்தில் திரும்பி வந்தவரின் கையில் பின்னுப் பாக்கெட்டைக் காணோம். பதிலுக்கு நாலைந்து மெழுகுவத்திகள் இருந்தன.

பாக்கெட் தீர்ந்து போச்சு. ஸ்டோர்லயும் வேற ஸ்டாக் இல்ல. இதப்பொருத்தி தூர வச்சுகிட்டு பைய்ய நல்லா மடக்கி, ஒரு குலுக்குக் குலுக்கி லேசா வாட்டிட்டா பிளாஸ்டிக் இளவி ஒட்டிக்கிரும். இனி ஆயிரம் பாக்கெட் தான் வேணும். வெடிகள நல்லாக் குலுக்கிக்கோங்க. திரி வெளில நீட்டிட்டிருந்தாப் போச்சு.

கேஸ்பெட்டிகளின்மேல் பெயிண்டால் எழுதுகிறவன் வேகமாய் வந்தான். டப்பென்ற சத்தத்தைத் தொடர்ந்து டப்டப்டப் என்ற பெரிய சத்தம். புகைமூட்டத்தில் பூட்டிய கதவுகளைத் திறக்க முடியவில்லை. வெடிகள் வெடித்த சத்தத்தில் அலறல்களும் கூப்பாடுகளும் குறைந்து முனங்கல்கள் ஆயின.

வெந்து கருகி நீத்துப்போன பல உயிர்கள். விடிந்தபோது வெடிகளோடு வெடிகளாய் எட்டுக் குழந்தை வெடிகள். ஆறு பெரிய வெடிகள். மூன்று கிழட்டு வெடிகள் வெடித்துச் சிதைந்து கருகியிருந்தன. ஐந்து பொம்பிளை வெடிகளைப் பிரித்தறிய அடையாளங்கள் ஏதுமில்லை. கருகிய கட்டைகள் அவைகள்.

### படைப்பு முகம்

சோ.தர்மன் (சோ.தர்மராஜ் – 1952): கரிசல் மண்ணின் வேளாண் வாழ்வியலை எழுதும் இவரது படைப்புகளில் ஒடுக்கப்பட்ட மக்களுக்கான குரல் கூரான அங்கதத்துடன் வெளிப்படுகிறது. நகைச்சுவை உணர்வும் இயல்பான சூழல் சித்திரிப்பும் இவரது தனித்துவம். தூர்வை, கூகை, சூல் ஆகிய நாவல்களும் ஈரம், சோகவனம், வனகுமரன் ஆகிய சிறுகதைத் தொகுப்புகளும் இவரது முக்கியமான படைப்புகள்.

## படிப்போம் பகிர்வோம்

1. நசுக்கம் கதை உணர்த்தும் பட்டாசுத் தொழிலாளர்களின் வாழ்க்கை நிலையைத் தொகுத்து எழுதுக.
2. உங்கள் ஊரில் தொழில் சார்ந்து பாதிப்புக்குள்ளாகும் மக்களின் சிக்கல்களை ஆராய்க.
3. தொழிலகங்களில் கடைபிடிக்கவேண்டிய பாதுகாப்பு நடைமுறைகள் என்னென்ன என்பதை அறிந்து எழுதுக.
4. 'நசுக்கம்' போன்றே சிறுகதை எழுதுவதற்கான, சிக்கல் நிறைந்த களம் இன்று இல்லை? – இக்கூற்றை உடன்பட்டோ மறுத்தோ உங்கள் கருத்தை எழுதுக.
5. 'நசுக்கம்' கதையின் முடிவை நீ விரும்பும் வகையில் மாற்றி எழுதுக.
6. வட்டார வழக்கில் உரையாடல்களைக் கொண்டது 'நசுக்கம்' சிறுகதை என்பதற்கு ஐந்து சான்றுகள் தந்து கருத்துரை தருக.

அயலகத் தமிழ் எழுத்தாளர் சிறுகதை

# 'பேபி' குட்டி

–கே. பாலமுருகன், மலேசியா



பெரிய மாமா வந்ததும் அதுவரை வீடு கனத்த துயரத்தைக் கெட்டியாகப் பிடித்து வைத்திருந்து திடீரென்று தளரவிட்டதைப் போல உடைந்தது. அப்பா கதறி அழும்போது உடன் யாராலும் அழாமல் இருக்க முடியவில்லை. இதுவரை எதற்குமே சட்டென அழாத ஒருவர். அப்படி அழுது கதறும்போது உடல் சிறுத்துக் குழந்தையாகி எல்லோரின் மடியிலும் விழுகிறார்.

மாணிக்கம் பக்கத்து வீட்டுக்காரர். அப்பாவிற்கு நெருக்கமான ஒரே ஆள் அவர்தான். அப்பாவிற்குச் சொல்லும்படியாக நண்பர்கள் அவ்வளவாக இல்லை. அடுத்தவீட்டில் யார் இருக்கிறார்கள் என்பதுகூட அப்பாவிற்குத் தெரியாது.

இரண்டு வயது குழந்தையின் மரணம் யாரையும் சமாதானப்படுத்தக் கூடியதல்ல. வருவோர் போவோர் அனைவரும் புலம்பியபடியே இருந்தனர். ஆகக் கடைசியாக ஒரு புலம்பலையே விட்டுப் போய்க்கொண்டிருந்தனர். வீட்டில் அவன் கடைசிப் பையன். அப்பா எப்படிப் பாட்டிக்குத் தாமதமாகப் பிறந்த கடைசிப் பையனோ, அதேபோலத் தம்பியும் அப்படித் தான். பின்கட்டிலிருந்து முன்வாசலுக்கு ஓடிவரும் சிறிய இடைவெளியில் சட்டென முடிந்து விட்ட வாழ்க்கை.

"சாக வேண்டிய வயசாடா இது...? என்ன விட்டுட்டுப் போய்ட்டியேடா," என அப்பா மீண்டும் தரையை ஓங்கியடித்தபடியே அழுதார்.

பேபி குட்டி தலைவிரித்த கோலமாய் அப்பொழுதுதான் வெளியில் வந்தாள். சிரிப்பே இல்லாத பொக்கை வாய். கண்கள் இரண்டும் உள்ளே சொருகிக் கிடந்தன. பேசுவதை உடனே புரிந்துகொள்ள முடியாது. ஒரு சொல்லை உச்சரிக்கவே நிதானமாக அடுக்குவாள். அவளுடன் உரையாடப் பொறுமை தேவைப்படும். ஆனால், ஓயாமல் வேலை செய்துகொண்டே இருப்பாள். அப்பாவின் அம்மா.

மெலிந்துபோன தேகம். அதன் மேலே எப்பொழுதும் தொங்கும் ஒரு கலர் துண்டு. வெளுத்தக் கைலி. தாடைவரை நீண்டு தொங்கும் காதுகள். ஆனால், தூரத்திலிருந்து வருபவர்களையும் பேசுபவர்களையும் அவளால் உன்னிப்பாகக் கேட்கவும் பார்க்கவும் முடியும். அவள் யாரையும் பொருட்படுத்தியதே இல்லை.

"அடியே பேபி குட்டி... உன் பேரனப் பாத்தியா?" என அவள் வயதை ஒத்த மூக்குத்திக் கிழவி தூரத்திலிருந்து அரற்றிக் கொண்டே ஓடிவந்தாள்.

பேபி குட்டி வீட்டுக்கு வெளியில் வந்து ஓரமாய் வைக்கப்பட்ட துடைப்பைக் கட்டையை எடுத்து வாசலைப் பெருக்கத் தொடங்கினாள். அது பேபி குட்டியின் அன்றாட வேலை. எந்தச் சலனமும் இல்லாமல் ஏற்கனவே சுத்தமாக இருந்த வாசலைப் பெருக்கினாள். அவளுடைய வேலைகளை யாருக்கும் விட்டுக்கொடுக்க முடிந்ததில்லை.

"இந்தக் கெழவிக்கு எத்தன வயசாகுது... போய்ச் சேர வேண்டியதெல்லாம் நல்ல திடக்காத்தரமா இருக்கு...கடவுளுக்கு என்ன கேடு? இந்தச் சின்ன பையனைக் கொண்டு போய்ட்டாரு..." வந்தவர்களில் யாரோ சொன்னது அங்கிருந்தவர்களின் மௌனத்தைக் கலைத்தது.

அவர்களில் சிலர் இப்பொழுது பேபி குட்டியை வைத்த கண் வாங்காமல் கவனித்தனர். ஒரு சிறு கவனம் திரும்புதல் அது. மரணத்திலிருந்து வாழ்வுக்குத் திரும்பும் கணம். அதுவரை சோகமாக இருந்தவர்களும் இப்பொழுது நிமிர்ந்து உட்கார்ந்தனர்.

"பாரேன்...இந்த வயசுலையும் இந்தக் கெழவினாலெ நல்லா ஆரோக்கியமா இருக்க முடியுது..."

"ஆமாம்....கிழவிக்குத் தொண்ணூறுக்கு மேல தாண்டிருச்சி..."

பேபி குட்டி பெருக்குவதை நிறுத்திவிட்டு அங்கே இருந்த நாற்காலிகளை அடுக்கத் தொடங்கினாள். ஒவ்வொரு நாற்காலியையும் அவளால் இயல்பாகத் தூக்கி நகர்த்த முடிந்தது. உடலில் இருந்த முதுமை செயலில் குறைவாகத் தென்பட்டது.

"பாட்டி! அங்க போய் உக்காரு... ஏன் தேவையில்லாத வேல செஞ்சிகிட்டு இருக்க?" பெரியசாமிக்கு உதவியாக வந்தவர் கத்தினார்.

பேபி குட்டி அதனைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. எவ்வளவு சொற்களைக் கோத்துத் திரட்டி பேபி குட்டி காதில் திணித்தாலும் அது அவளுடைய மூளைக்குப் போய்ச் சேராது. அவளுடைய உலகத்தில் இயங்கிக் கொண்டே இருப்பாள். ஏற்கெனவே அடுக்கப்பட்டிருந்த நாற்காலிகளைத் தூக்கிக் கொண்டு போய் வேறு இடத்தில் அத்தனை பொறுப்புடன் அடுக்கத் தொடங்கினாள்.

பேபி குட்டியின் உண்மையான பெயர் குட்டியம்மாள். ஆனால், அப்பொழுதெல்லாம் பெண் குழந்தை பிறந்தால் பேபி என்றும் ஆண் குழந்தை பிறந்தால் 'போய்' என்றும் அடைப்பெயரிட்டு அழைப்பார்கள். அப்படியே அழைத்து அழைத்துத்தான் குட்டியம்மாள் பேபி குட்டியானாள்.

சுந்தரி அத்தை வந்து சேர்ந்த பிறகு வீடு மீண்டும் அலறத் தொடங்கியது. தம்பியை எட்டு மாதங்கள் வளர்த்தவள் அவள்தான். தேம்பித்தேம்பி அழுததில் திடீரென மூர்ச்சையுற்று விழுந்தாள். சிறிதுநேரம் எல்லோரும் பதறிப் போயினர். தண்ணீரை முகத்தில் அடித்து அவளை ஓரமாக உட்கார வைத்தார்கள். முகம் தொங்கிப் போய்க் கிடந்தது.

"யப்பா சொந்தக்காரனுங்க எல்லாம் வந்து எண்ணெய் வைக்கலாம்," எனப் பெரியசாமி சொன்னதும் படுத்திருந்த அத்தை உடனே விழித்தெழுந்து தம்பியின் பெட்டியருகே ஓடினாள்.

அவள் அச்சமயம் ஓடும்போது ஓர் ஆணாக மாறியிருந்தாள். மார்பில் அடித்துக் கொண்டே ஓடினாள். அவள் அப்படிச் செய்பவள் அல்ல. வீட்டில் மகன்கள் இருந்தாலே சத்தமாகப் பேசவோ யாரையும் கத்தி அழைக்கவோ விரும்பாதவள்.

"மகேனு மகேனு ஐயாவு வந்துருடா... அம்மாவெ விட்டுப் போவாதடா," எனப் பெட்டியின் வலப்பக்கத்தில் சரிந்தாள்.

அதுவரை நாற்காலியை அடுக்கிக் கொண்டிருந்த பேபி குட்டிக்கு அத்தையின் அலறல் கேட்டது. அத்தை பேபி குட்டிக்குச் செல்லமகள். பாசமாக வளர்ந்தவள். ஆனால், ஒரு காலக்கட்டத்திற்குப் பிறகு பேபி குட்டியை அவள் அவ்வளவாகக் கண்டு கொள்ளவில்லை. அவ்வப்போது கடமைக்குக் கொஞ்சம் பணம் தருவாள். எப்பொழுதாவது பார்த்துவிட்டுப் போவாள். அதுவும் பேச்சில் கடுப்பு மட்டுமே மிஞ்சும்.

பேபி குட்டி தட்டுத் தடுமாறி அத்தையிடம் போனாள். அவள் பெட்டியைக்கூட கவனிக்கவில்லை. அமர்ந்திருப்பவர்களையும் தரையையும் தட்டித் தடவி அத்தையின் அருகே போய்விட்டாள். மெதுவாக அத்தையின் அருகில் அமர்ந்துகொண்டு அவளுடைய தலையை வருடினாள். விழியோரம் இலேசாகக் கண்ணீர் முட்டிக்கொண்டு கிடந்தது.

"சின்னப்பையன்... இன்னும் உலகத்தையே பாக்காதவன்," எனப் பேபி குட்டியின் பிடியிலிருந்து தன்னை விடுவிக்க முயற்சித்த அத்தை மீண்டும் கதறி அழுதாள். பேபி குட்டி அத்தையின் கையை விடமறுத்தாள்; கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். அதில் ஒரு முரட்டுத்தனம் தெரிந்தது.



"கையெ விடும்மா..." அழுகையினூடாக அத்தை பேபி குட்டியின் கைகளை உதறித் தள்ளினாள். பேபி குட்டி சற்றுத் தடுமாறி கைகளை அத்தையிடமிருந்து எடுத்தாள்.

"குமாரு கெழவியெ கூட்டிட்டுப் போ."

குமார் தம்பிக்கு மூத்தவன். பேபி குட்டியைப் பிடித்து மேலே தூக்கினான். அவள் வர மறுத்தவள்போல முரண்டு பிடித்தாள்.

"பாட்டி ஏஞ்சி வாங்க," எனப் பதிலுக்கு அவனும் பலமாக இழுத்தான்.

பேபி குட்டி இருபத்து ஐந்து கிலோகூட இருக்கமாட்டாள். ஏதோ முனங்கியவாறு அவனுடைய இழுப்புக்குப் போனாள். குழந்தைகளின் மரணம் அத்தனை இயல்பானது அல்ல. ஒரு குழந்தையின் மரணத்திற்குமுன் அனைத்து மனங்களும் குழந்தையாகி விடுகின்றன. தம்பி இப்பொழுதுதான் பெட்டிக்குள் ஒளிந்துகொள்ளச் சென்றதைப்போலப் படுத்திருந்தான். அது விளையாட்டு. இன்னும் சிறிதுநேரத்தில் அது முடிந்துவிடும் என அனைவரின் மனங்களும் படபடத்துக் கொண்டிருந்தன.

"டேய் வீட்டு நிம்மதியையே கொண்டு போய்ட்டான்டா," என மீண்டும் அத்தை புலம்பினாள். அவள் குரல் சோர்வுற்றிருந்தது.

தம்பி ஒரேயொரு சிரிப்பில் அனைத்து இறுக்கங்களையும் உடைப்பவன். நம் வேலைகளையும் விட்டுவிட்டு உடனே கவனிக்கக்கூடிய அலட்டலே இல்லாத மெல்லிய சிரிப்பு. குழிவிழும் கன்னங்கள். பிஞ்சுக் கைகள்.

பேபி குட்டிக்கும் அவனுக்கும் நடக்கும் சண்டைதான் வீட்டிலேயே பிரபலமானவை. வீடுமுழுக்க அவனைத் துரத்திக் கொண்டு பேபி குட்டி ஓயாமல் ஓடுவாள். அவளிடமிருந்து ஒளிந்து கொள்வதே தம்பியின் பெரிய தந்திரமாக இருக்கும். பேபி குட்டி கொஞ்சநேரம் உறங்கிவிட்டாலும் அவளின் பொக்கை வாயில் எதையாவது செருகி விடுவான். அவள் திடுதிப்பென்று எழுந்து பார்ப்பாள்.

"நீ என்னிக்காவது என்னைக் கொன்னுருவடா!" என அதையும் முழுமையாக உச்சரிக்க முடியாமல் பேபி குட்டியின் வாய்க்குள்ளேயே கரைந்துவிடும்.

பேபி குட்டியைக் குமார் வீட்டின் ஓர் ஓரத்தில் உட்கார வைத்துவிட்டு மீண்டும் வாசலுக்கு வந்தான். பெட்டியை வாசலில் கிடத்தி யிருந்தார்கள். பிண ஊர்தி வந்ததும் வீடு மீண்டும் பரபரப்பானது. அவ்வளவாகப் பழக்கமில்லாத தூரத்து நண்பர்களும் சொந்த வீட்டின் சோகத்தைப்போல உணர்ந்தனர்.

பேபி குட்டி அவ்விடத்தை விட்டு மீண்டும் வாசலுக்கு வந்தாள். ஆங்காங்கே சிதறிக் கிடந்த சப்பாத்துகளை எடுத்து அடுக்கத் தொடங்கினாள். ஒவ்வொரு சப்பாத்தையும் குனிந்து எடுத்து அடுக்குவதைச் சிலர் பார்த்துக் கொண்டிருந்தனர்.

"அந்தக் கெழவியெ இழுத்துட்டுப் போய்க் கட்டி வச்சாத்தான் என்ன?" துரைசாமி அப்படிச் சொல்வார் என யாரும் எதிர்பார்த்திருக்கமாட்டார்கள்.

துரைசாமி அப்பாவின் முதலாளி. இந்த வீட்டில் அதிகம் உரிமையுள்ள மனிதர். எல்லா விழாக்காலங்களிலும் இந்த வீட்டில்தான் இருப்பார். ஒரு முக்கியமான விருந்தாளி என்றே சொல்லலாம். ஒரு வருடத்தில் கைவிட்டு எண்ணக்கூடிய அனைத்துப் பண்டிகைகளின்போதும் தவறாமல் வந்து தன் உறவைப் புதுப்பித்துவிட்டுப் போய்விடுவார். அவருக்கு ஐம்பது வயது இருக்கும். எல்லோரும் அவருக்குக் கொஞ்சம் அடங்கிப் போவர்.

"டேய் குமாரு பாட்டியெ இழுத்துட்டுப் போய் வீட்டுக்குள்ள உடு… சாக வேண்டிய வயசுலே… உசுரை வாங்குது…" என அவர் சொன்னதும் உடனே குமார் எழுந்து நின்றான்.

எல்லோரும் பேபி குட்டியை அசூயையாகப் பார்த்தனர். குமார் மீண்டும் பேபி குட்டியின் கையைப்பிடித்து இழுத்துக் கொண்டு போனான். பேபி குட்டிக்கு வீட்டில் ஒரு மூலை உண்டு. சாமி அறைக்குப் பக்கத்தில் இருக்கும் சிறிய இடைவெளி. எல்லா வேலைகளும் முடிந்த பிறகு அவள் அங்குத்தான் இருப்பாள். வெறுமனே கவனித்துக் கொண்டிருப்பாள். எதுவுமே இல்லாத ஒன்றை அவள் கவனித்துக் கொண்டே இருப்பாள். அவளால் வெகுநேரம் ஓர் இடத்தில் அமரவும் முடியாது.

"பாட்டி இங்கையே இருங்க… போற வரைக்கும் வந்திடாதீங்க, ஒரே தொல்லையா இருக்கு," என அதட்டிவிட்டுக் குமார் வாசலுக்குப் போனான்.

எல்லாச் சடங்கும் முடிந்த பிறகு பெட்டியைத் தூக்கினர். கனத்த மனங்களால் அதைப் பார்க்க இயலவில்லை. எல்லோரும் வாய்விட்டு அழுதனர். அப்பா சாலையிலேயே படுத்துப் புரண்டார்.

வீட்டில் இருந்தவர்கள் எல்லோரும் வெளியில் போனதுடன் பேபி குட்டி எழுந்தாள். மெதுவாக நடந்து சென்று நாற்காலிக்குப் பின்னால் ஒளிந்தாள். பிறகு எழுந்துபோய் அறைக்கதவிற்குப் பின்னால் ஒளிந்தாள். அவள் வழக்கம்போல வீட்டுக்குள் தம்பியைத் துரத்துவதைப்போல ஓடத் தொடங்கினாள்.

### படைப்பு முகம்

கே. பாலமுருகன் (1982): மலேசியத் தமிழ் எழுத்தாளர். தற்கால சமூக வாழ்க்கைச் சூழல்களைப் புதிய உத்திகளில் சொல்லி வருபவர். மலேசியத் தமிழிலக்கியச் சூழலில் சிறுகதைகள், நாவல்கள், கவிதைகள் மூலம் நன்கு அறியப்பட்டவர்.

## படிப்போம் பகிர்வோம்

1. 'பேபிகுட்டி' கதை வெளிப்படுத்தும் உறவு நிலை உணர்வுகளைத் தொகுத்தெழுதுக.
2. இன்றைய சூழலில் முதியோரின் நிலை பற்றிய உன் மதிப்பீடு யாது?
3. 'பேபிகுட்டி' கதையில் அமைந்துள்ள மொழிநடை முறைக்குச் சான்று தந்து விளக்குக.

அயலகச் சிறுகதை

# பசி

**– தாமரைச்செல்வி, இலங்கை**



சின்ராசு திண்ணையிலிருந்து இறங்கிவந்து குசினிக்குள் எட்டிப் பார்த்தான். அம்மாவைக் காணவில்லை. காலையில் தேநீருக்காக மூட்டிய அடுப்பு இப்போது அணைந்து போயிருந்தது. அம்மா சாப்பாடு எதுவும் செய்ததாகத் தெரியவில்லை. ஆக, இன்றைக்கும் காலையில் குடித்த தேநீருடன் பாடசாலை போக வேண்டியதுதான்.

வயிற்றுக்குள் கிர்ரென்ற இரைச்சல்......

ஏதாவது சாப்பிட முடியும் என்று காத்துக் கொண்டிருந்தவனுக்கு நிலைமை புரிந்துபோகப் பேசாமல்போய் அரைச்சுவரில் வைத்திருந்த புத்தகப் பையை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டான்.

இந்தப் பத்து வயதில் குடும்பத்தின் நிலைமையை நன்றாகத் தெரிந்து கொண்டவன் அவன். உழைத்துத் தர, ஆண் துணை இல்லாத குடும்பம். மிகவும் சிறிய வயதில் தந்தையின் நேசத்தை அனுபவித்தது, கனவு மாதிரி இருந்தது. மனத்தின் ஆழத்தில் அந்த அனுபவம் இப்போதும் இனிமையாய்ப் பரவியிருந்தது.

அந்த ஆசியான அப்பா, ஆறு வருஷத்துக்கு முன்பு ஆணையிறவிலிருந்து ஏவப்பட்ட ஷெல்லுக்குப் பலியானபோது, அழவும் தெரியாத பருவத்தில் அவன் இருந்தான். அம்மாதான், உழைத்து அவனை வளர்த்துக் கொண்டிருக்கிறாள்.

அநேகமான நேரங்களில், அம்மாவை அழுத முகத்துடன் அவன் பார்க்க நேரிடுகிறது. அம்மா எவ்வளவு பாவம்! அதனாலேயே அவன் அம்மாவிடம் எதையும் கேட்பதில்லை.

சின்ராசு புத்தகப் பையுடன் முற்றத்தில் நின்று சுற்றும்முற்றும் பார்த்தான். மேலே வானத்தில் ஏதோ இரைச்சல் கேட்பது போலிருந்தது. மனம் திடுக்கிட்டுப் போக நிமிர்ந்து பார்த்தான்.

பொம்பர் ஏதும் பறக்கிறதா என்று கலவரமாய் இருந்தது. பொம்பர் என்றாலே மனம் பயத்தில் படபடவென்று அடித்துக் கொள்ளும். நல்ல வேளை ... பொம்பர் ஒன்றும் பறக்கவில்லை. தூர எங்கேயோ மோட்டார் சைக்கிள் இரைகிறது போலும்.

அவன் நிம்மதியுடன் அம்மாவைத் தேடினான்.

"அம்மா.... அம்மோய்...."

கிணற்றடிப் பக்கத்திலிருந்து வந்த அம்மாவின் முகம் வாடிப் போயிருந்தது.

"நான் ஸ்கூலுக்குப் போட்டு வாறன் அம்மா ...."

"ஓமப்பு. கவனம். பொம்பர் ஏதுவும் வந்தால் பள்ளிக்கூடத்துக்க இருக்கிற பங்கருக்குள்ள ஒடிப் போய் இருக்க வேணும். என்னப்பன்..."

"நான் பிள்ளைக்கு மத்தியானம் சோறு காய்ச்சி வைக்கிறன். வந்தவுடன் சாப்பிடலாம். என்ன..." அவன் ஏமாற்றத்தை மறைத்துக் கொண்டு தலையாட்டினான்.

"பிள்ளைக்குப் பசிக்குதே..."

அம்மா ஆற்றாமையோடு கேட்டாள்.

"இல்லையம்மா... நான் போயிட்டு வாறன்."

அவன் செருப்புப் போடாத கால்களுடன் தெருவில் இறங்கி நடந்தான்.

அவனுக்குத் தெரியும். அம்மா தன்னைப் போக விட்டுவிட்டு அழுவாள் என்று.

குசினி-சமையலறை

அதற்காகவே தனக்குப் பசி இல்லாதது போலவும் முகத்தில் வாட்டம் இல்லாதது போலவும் காட்டிக் கொண்டான்.

தெருவில் வேகமாக நடக்க அவனால் முடியவில்லை. வயிற்றுக்குள் எதுவோ புரண்டது.

வெறும் வயிறு இரைந்தது.

இப்போது இரண்டு நாள்களாகக் காலையில் எதுவும் சாப்பிடாமல்தான் பாடசாலைக்குப் போகிறான். புல் பிடுங்கிற வேலை. நாற்று நடவு வேலை முடிந்துவிட்ட நேரம். இனி வயல்களில் அரிவு வெட்டு வரும்வரை அம்மா வேலைக்குப் போக இயலாது. வேலை கிடைக்காது.

இனி, அரிவு வெட்டு வரும்வரை இப்படித்தான். அரை வயிறு, கால் வயிறுமாக இருக்க வேண்டும்.

நேற்றாவது பாடசாலைவிட்டு வீட்டுக்கு வந்தபோது, சோறும் சம்பலும் இருந்தது. இன்றைக்கு அதுவும் இருக்குமோ தெரியவில்லை. பாடசாலையிலிருந்து வீட்டுக்கு வந்து சேர மூன்று மணியாகிவிடும். அதுவரை இந்தப் பசியை எப்படிப் பொறுத்துக் கொள்வது என்று அவனுக்கு யோசனையாக இருந்தது.

வயிற்றில் இரைச்சலுடன் பாடங்களையும் கவனிக்க முடியாது. குறைந்தது இரண்டு ஆசிரியர்களிடமாவது இன்றைக்கு அடி வாங்கப் போவது நிச்சயம்.

முடிந்தவரை வேகமாக நடந்தான். பாம்புக் கமத்துக் கோவிலடி கடந்து நடக்கும்போது அவனுடன் படிக்கும் குகன் தன் தமயனின் சைக்கிளில் அவனைக் கடந்தான்.

"சின்ராசு! கெதியாய் வாடா. நேராமாயிடும்."

குகன் சொல்லிவிட்டுப் போனான்.

எவ்வளவு வேகமாய் நடந்து வந்தும், பாடசாலை வாசலை அடைந்த நேரம் இரண்டாவது மணியும் அடித்து வாசல் கேற்றும் மூடப்பட்டுவிட்டது.

வெளியே நின்ற பத்துப் பதினைந்து மாணவர்களுடன், அவனும் பயத்துடன் நின்று கொண்டான்.

அதிபர் வந்து, தாமதமாய் வந்ததுக்குக் காரணம் கேட்டு, ஒவ்வொரு அடி அடித்து உள்ளே விட்டார்.

அவன் மௌனமாகத் தன் கையை நீட்டினான்.

"ஏன் பிந்தி வந்தனி?"

அதிபரின் அதட்டலில் கண் விளிம்பில் நீர் துளிர்த்தது.

"ஒரு கட்டை தூரம் நடந்து வாறன் சேர்."

"அப்ப வெள்ளன வெளிக்கிட்டு வாறதுதானே....."

அம்மா ஏதும் சமைக்கக்கூடுமோ என்று, சாப்பிடுவதற்காகப் பார்த்துக் கொண்டிருந்த காரணத்தைச் சொல்லமுடியவில்லை. பேசமால் நின்றான்.

"இனிமேல் கெதியாய் வர வேணும், ஓடு"

கையில் அடித்த அடி, ஏனோ உறைக்கவில்லை.

"பிரின்சிபல் அடிச்சது நோகுதேடா" என்று குகன் கேட்டபோது, இல்லை என்று சிரிக்க முயன்றான்.

வகுப்பில் பாடங்களைக் கவனிக்க முயற்சி செய்தும் முடியவில்லை. காதை அடைத்துக்கொண்டு வந்தது.

மத்தியானம் இடைவேளை மணி அடித்தது.

அந்த நேரம், அவனைப் பொறுத்தவரை மிகவும் தண்டனைக்குரிய நேரம். எல்லாப் பிள்ளைகளும் தாங்கள் கொண்டு வந்திருந்த சாப்பாட்டுப் பொதிகளை எடுத்துச் சாப்பிடும் நேரம்.

அவன் கடைசி வாங்கில் வேறுபக்கம் பார்த்துக்கொண்டு அமர்ந்திருப்பான்.




சாப்பாடுகளின் பலவகையான வாசனை வந்து, மூக்கை நிறைத்து, அவனது பசி இன்னும் கிளறப்படுகின்ற சோதனையான நேரம்.

இன்றும் அவன் கடைசி வாங்கில் வந்து அமர்ந்து கொண்டான். குகன் தனது சாப்பாட்டுப் பெட்டியுடன் அருகில் வந்து "வாவன் சின்ராசு.... என்னோட சாப்பிடலாம்" என்றான்.

"வேண்டாமடா. எனக்குப் பசிக்கேலை."

குகன் மற்றவர்களுடன் சாப்பிட முன் வாங்கில் போய் அமர்ந்தான். விறாந்தையில் சென்று கொண்டிருந்த புவனா ரீச்சர், "ஏன் சின்ராசு... சாப்பாடு கொண்டு வரேலையே..." என்று கேட்டார்.

"இல்லை ரீச்சர்" என்றபோது, உள்ளே அழுகை வந்தது.

ரீச்சர் போன திசையைப் பார்த்துக் கொண்டிருந்தவன், விறாந்தை ஓரம் ஓடிவந்த நாயின்மீது தன் பார்வையைத் திருப்பினான்.

எங்கே நின்றாலும், இந்த நேரத்திற்கு வகுப்புகளின் வாசலுக்கு இந்த நாய் வந்து விடும். 'வயிறு ஒட்டிய மெலிந்த நாய்; அதுவும் சாப்பிட்டு எத்தனை நாளாயிற்றோ' என்று அவன் கவலையுடன் நினைத்துக் கொண்டான்.

அவன் காலுக்கு அருகில் வந்து நின்று, சாப்பிடும் மாணவர்களை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தது அது.

அப்போது, திடீரென்று வானத்தில் ஒரு பேரிரைச்சல்... அடுத்தடுத்து இரண்டு விமானங்கள் வேகமாய்ச் சுற்றி வந்தன.

"அய்யோ... பிள்ளையள்... எல்லாரும் பங்கருக்குள்ள ஒடுங்கோ..." புவனா ரீச்சரின் குரல் சத்தமாய்க் கேட்டது.

அவ்வளவுதான். அடுத்த வினாடி சூழ்நிலை மாறிப் போனது. மாணவர்கள் பிரித்த சாப்பாடுகளை அப்படியே போட்டுவிட்டு ஓடத் தொடங்கினார்கள்.

ஒவென்ற அலறலும் அம்மா என்ற கதறலுமாகச் சிதறி ஓடினார்கள்.

குண்டு வீச்சு விமானங்களின் ஓசையும் இவர்களின் ஒவென்ற கூப்பாடும் சின்ராசுவை ஒரு நிமிஷம் திகைக்க வைத்தன.

ஓடியவர்கள் கைதவற விட்ட சாப்பாட்டுப் பொதிகள் சிதறி நிலத்தில் விழுந்ததைப் பார்த்ததும், அவன் மனம் பதறியது. அவன் காலடியில் விழுந்த பொதி விரிந்துக் கொள்ள இடியப்பமும்... பொரியலும்...

அந்த மெலிந்த நாய், வகுப்பறைக்குள் நுழைந்து கீழே விழுந்து கிடந்த உணவை அவசர அவசரமாகச் சாப்பிடத் தொடங்கிய நேரம், சின்ராசு தன் காலில் கீழே இருந்த உணவை ஒரு வினாடி தயக்கத்துடன் பார்த்தான்.

அடுத்த வினாடி, கால் மடித்துக் குனிந்து அமர்ந்தபடி, அந்த இடியப்பத்தை எடுத்து வாய்க்குள் திணித்துக் கொண்டான்.

விமானத்தின் இரைச்சலோ... அது மிகவும் சமீபமாகக் குத்தி எழும்பிய ஓசையோ அவனுக்குக் கேட்கவே இல்லை.

## படைப்பு முகம்

தாமரைச்செல்வி (1953): போரின் அவலம், போர்ச்சூழல் முதலானவற்றை எதார்த்தமாகச் சித்திரிப்பதில் தனி முத்திரை பதித்தவர். இருநூற்றுக்கும் மேற்பட்ட சிறுகதைகள், மூன்று குறுநாவல்கள், ஆறு நாவல்கள் என இவரது படைப்பின் பட்டியல் நீள்கிறது. இலங்கை அரசின் சாகித்ய விருது பெற்றவர்.

## படிப்போம் பகிர்வோம்

1. 'பசி' கதையில் வரும் சின்ராசுவின் பாத்திரப்படைப்பை ஆராய்க.
2. பசி கதை உணர்த்தும் போர்ச் சூழலை விளக்குக.

## தெரியுமா?

**சாகித்திய அகாதெமி பரிசு பெற்ற சிறுகதைகள்**

1970 – அன்பளிப்பு – கு. அழகிரிசாமி

1979 – சக்தி வைத்தியம் – தி. ஜானகிராமன்

1987 – முதலில் இரவு வரும் – ஆதவன் சுந்தரம்

1996 – அப்பாவின் சிநேகிதர் – அசோகமித்திரன்

2008 – மின்சாரப் பூ – மேலாண்மை பொன்னுச்சாமி

2010 – சூடிய பூ சூடற்க – நாஞ்சில் நாடன்

2016 – ஒரு சிறு இசை – வண்ணதாசன்

## அறிவோம் தெளிவோம்

### சிறுகதை குறித்து எட்கர் ஆலன் போ

அமெரிக்க எழுத்தாளரான எட்கர் ஆலன்போவின் கதைகள் சிறுகதையின் வடிவ மாதிரிக்கு எடுத்துக்காட்டுகளாக அமைந்தவை. சிறுகதை குறித்த அவரின் பார்வை...

"சிறுகதையின் முதல் தொடர், படிப்பவர் கவனத்தை இழுத்துப் பிடிக்கவில்லையாயின், அக்கதை பயனற்றது. பயனற்ற ஒரு சொல்கூட கதையில் இடம்பெறுதல் கூடாது."



இந்தியமொழிச் சிறுகதை

# அஷமஞ்சா பாபுவின் நாய்

– சத்யஜித் ரே



ஹஷிமாராவில் உள்ள ஒரு நண்பரின் வீட்டிற்குச் செல்லும்போது, அஷமஞ்சா பாபு தன் நெடுநாளைய அவாவினைத் தீர்த்துக் கொள்வதற்கான சந்தர்ப்பம் அமைந்தது. பவானிபூர், மோஹினிமோஹன் சாலையில் உள்ள ஒரு சிறிய ஃப்ளாட்டில்தான் அஷமஞ்சா பாபு குடியிருந்தார். லஜ்பத் ராய் தபால் அலுவலகத்தில் குமாஸ்தாவாக வேலை, அலுவலகத்திற்குக் கல்கத்தாவின் நெரிசலான பஸ்ஸிலோ, ட்ரெய்னிலோ சண்டை போடாமல் வீட்டிலிருந்து கால்நடையாகவே ஏழு நிமிடத்தில் போய்விடலாம் என்று அமைந்தது அவர் அதிர்ஷ்டம்தான். எனவே பாபுவின் வாழ்க்கை கவலைகள் இல்லாதது, அவரும் 'வாழ்க்கை தனக்கு இவ்வாறு அமையாதிருந்தால்' என்றெல்லாம் யோசித்து அலட்டிக் கொள்கிறவரில்லை. ஆக மொத்தத்தில் இருப்பதில் சந்தோஷப்பட்டுக் கொள்கிறவர்.

அவரைத் தொந்தரவு செய்து கொண்டிருந்த ஒரே விஷயம், ஒரு துணை இல்லாததுதான். சில நண்பர்கள் மற்றும் சொந்தக்காரர்களோடு வாழ்க்கையைத் தள்ளிக் கொண்டிருக்கும் பிரம்மச்சாரியான அவருக்கு, ஒரு நாய், தனக்குத் துணையாய் இருந்தால் நன்றாக இருக்கும் என்று தோன்றியது. இரண்டுவீடு தள்ளி இருந்த தாசில்தார் வளர்ப்பதுபோல, அல்சேஷன் போன்ற பெரியவகை நாய்கள் அவருக்குத் தேவையில்லை. அவர் ஆசையெல்லாம், காலையும் மாலையும் அவர் பின்னால் சுற்றி வந்துகொண்டு, அவர் வேலைமுடிந்து வீட்டுக்கு வருகையில் வாலை ஆட்டியபடி வரவேற்று, அவர் இடும் கட்டளைகளைச் சிரமேற்கொண்டு செய்யும் ஏதேனும் ஒரு சிறியவகை நாய். பாபுவின் ரகசிய ஆசை என்னவென்றால் அவர் தன் நாயிடம் ஆங்கிலத்தில்தான் பேசவேண்டும் என்பது. 'ஸ்டாண்ட் அப்!', 'சிட் டௌன்', 'ஷேக் ஹேண்ட்ஸ்!' – அவருடைய இக்கட்டளைகளை அது கேட்டு நடந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்! அஷமஞ்சாபாபு, நாய்கள் ஆங்கில இனத்தைச் சேர்ந்தவை என்று நம்ப விரும்பினார். ஆம், ஒரு ஆங்கில நாய், அதற்கு அவர் எஜமானன். அந்த எண்ணமே அவருக்கு ஆனந்தத்தைக் கொடுத்தது.

மழை தூறலாக விழுந்துகொண்டிருந்த ஒருநாளில், ஹஷிமாராவில் உள்ள சந்தைக்கு ஆரஞ்சுப் பழங்கள் வாங்கச் சென்றிருந்தபோது, சந்தையின் மூலையிலுள்ள குட்டையான இலந்தை மரத்தடியில் பூட்டானைச் சேர்ந்த ஒருவன் கையில் சிகரெட்டோடு அமர்ந்திருந்தான். பக்கத்தில் காலணிகள் வைக்கும் அட்டைப்பெட்டியில் இருந்து நாய்க்குட்டி ஒன்று எட்டிப்பார்த்துக் கொண்டிருந்தது.

'காலை வணக்கம்'' என்று ஆங்கிலத்தில் சொன்னான், கண்கள் சிரிக்கும்போது கீறலாக மாறின. பாபுவும் மறுபடி வணக்கம் சொல்ல வேண்டியதாயிற்று.

'பை டாக்? டாக் பை? வெரிகுட் டாக்', பெட்டியில் இருந்த நாயை எடுத்து தரையில் விட்டான், 'வெரி சீப், குட் டாக், ஹேப்பி டாக்'.

நாய்க்குட்டி வெளியே வந்ததும் தன் உடலில் இருந்த மழைத்துளிகளை உலுக்கி உதறிவிட்டு பாபுவைப் பார்த்துத் தன் இரண்டு இஞ்ச் வாலை வேகமாக ஆட்டியது. பாபு அதனருகில் சென்று குனிந்து தன் கைகளை நீட்டியதும் தன் இளஞ்சிவப்பு நாவால் அவர் கைகளை நக்கியது, நட்பான நாய்தான்.

"விலை என்ன? ஹவ் மச்?"

"டென் ருபீஸ்"

சிறிதுநேர விவாதத்திற்குப்பிறகு ஏழு ஐம்பதுக்கு இறங்கிவந்தான். காசைக் கொடுத்ததும் பாபு நாய்க்குட்டியை அதே பெட்டிக்குள் வைத்து, மழைத்துளி படாமலிருக்க மூடி, ஆரஞ்சுப் பழங்களை மறந்து வீட்டை நோக்கி நடந்தார்.

கல்கத்தாவுக்கு வந்ததும், அஷமஞ்சா பாபுவுக்கு நாய்க்குட்டிக்கு ஒருபெயர் வைக்க வேண்டுமென்று தோன்றியது. அது ஒரு ஆங்கிலப் பெயராக இருக்கவேண்டுமென்று நினைத்தார். ஒருநாள் அந்தக்குட்டியைப் பார்த்துக்கொண்டிருக்கும்போது, திடீரென, அது பழுப்பு நிறத்தில் இருப்பதால் ப்ரௌனி என்பது பொருத்தமான பெயர் என்று அவருக்குத் தோன்றியது. பெயரை முடிவு செய்த கணமே, அதை நாய்க்குட்டியின்மேல் பரீட்சித்துப் பார்த்தார், உடனே அது பிரம்பு முக்காலியில் இருந்து தவ்வி, அவர் அருகில் வந்து வாலாட்டியது. அஷமஞ்சா பாபு இப்போது, "சிட் டவுன்." என்றார், உடனே அது பின்னங்காலில் உட்கார்ந்து வாயைத் திறந்து சின்னதாகக் கொட்டாவி விட்டது. அஷமஞ்சா பாபுவுக்கு, ப்ரௌனி நாய்களுக்கான போட்டி ஒன்றில் புத்திசாலித்தனத்திற்கான முதல் பரிசைத் தட்டிச்செல்வது கண்ணுக்குத் தெரிந்தது.

அவருடைய வேலைக்காரன் பிபினும் நாய்களை விரும்புபவனாக இருந்தது அவரின் அதிர்ஷ்டம். அஷமஞ்சா பாபு வேலைக்குப் போனதும், ப்ரௌனியைக் கவனித்துக்கொள்ளும் பொறுப்பை அவனாகவே ஏற்றுக்கொண்டான்.

***

அந்தச் சம்பவம் நடந்தது ஹஷிமாராவிலிருந்து வந்த மூன்றாம்மாதம். அதுவொரு சனிக்கிழமை.. அஷமஞ்சா பாபு அப்போதுதான் வேலையிலிருந்து திரும்பிவந்து, பழைய மரநாற்காலி ஒன்றில் உட்கார்ந்திருந்தார். கட்டிலையும் பிரம்பு முக்காலியையும் தவிர அந்த அறையில் இருந்த ஒரே மரச்சாமான் அதுதான்; அது திடீரென அவருக்கடியில் உடைந்து, கைகால்களைப் பரப்பியபடி அவரைத் தரைக்கு அனுப்பியது. உண்மையில் அவருக்குப் பலமான அடி, சொல்லப்போனால் மரக்காலைப்போலத் தன் முழங்கையும் இடம்விட்டு நகர்ந்துவிட்டதோ என்று நினைக்கும்போது அந்த எதிர்பாராத சத்தம் வலியை மறக்கச் செய்துவிட்டது.

அது படுக்கையிலிருந்து வந்தது. ஒரு சிரிப்பொலி அல்லது சரியாகச் சொல்லவேண்டுமென்றால் அதுவொரு இளிப்பு, அது தோன்றிய இடம் சந்தேகமே இல்லாமல் ப்ரௌனி, கட்டிலில் உட்கார்ந்திருந்த அதன் உதடுகள் இன்னமும் வளைந்திருந்தன.

அஷமஞ்சா பாபுவுக்குப் பொதுஅறிவு சற்று விசாலமாக இருந்திருந்தால், நாய்கள் ஒருபோதும் சிரித்ததில்லை என்று தெரிந்திருக்கும். கொஞ்சமேனும் கற்பனைவளம் இருந்திருந்தால் இச்சம்பவம் அவர் தூக்கத்தைப் பறித்திருக்கும். இரண்டுமே அவரிடம் இல்லை என்பதால் அஷமஞ்சா பாபு *All About Dogs* என்ற புத்தகத்தோடு உட்கார்ந்து கொண்டிருந்தார். ஒரு மணிநேரம் தேடியும் அந்தப்புத்தகத்தில் சிரிக்கும் நாய் பற்றிய தகவல் எதுவும் கிடைக்கவில்லை.

ஆனாலும் ப்ரௌனி சிரித்தது என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. புத்தகத்தை மூடிவிட்டு ப்ரௌனியைப் பார்த்தார். அவர்களின் கண்கள் சந்தித்துக்கொண்டதும், ப்ரௌனி தன் முன்னங்காலை எடுத்துத் தலையணையில் வைத்து அவரைப்பார்த்து வாலாட்டியது, மூன்றுமாதத்தில் அதன் வால் ஒன்றரை இஞ்ச் வளர்ந்துவிட்டது.

இது நடந்த ஒரு வாரத்திற்குள் இன்னும் இரண்டு நிகழ்ச்சிகளில் ப்ரௌனிக்குச் சிரிப்பதற்கான சந்தர்ப்பம் வாய்த்தது. முதலாவது இரவினில் நடந்தது. ஒன்பதரை மணி வாக்கில். அஷமஞ்சா பாபு அப்போதுதான் ப்ரௌனி படுப்பதற்காக வெள்ளை விரிப்பொன்றைத் தரையில் விரித்திருந்தார். ஒரு கரப்பான்பூச்சி எங்கிருந்தோ பறந்து வந்து சுவரில் அமர்ந்தது. அஷமஞ்சா பாபு தன் செருப்பை எடுத்து அதன்மீது வீசினார். செருப்பு



குறிதவறி மாட்டப்பட்டிருந்த கண்ணாடியில் இறங்கி, அதைக் கீழேயனுப்பி நொறுக்கியது. இம்முறை ப்ரௌனி சிரித்த சிரிப்பு, அவருடைய கண்ணாடி உடைந்ததற்கான இழப்பீட்டைவிட அதிகமானது.

இரண்டாவதுமுறை வந்தது பெருஞ்சிரிப்பல்ல, சின்னதாய் ஒரு எக்கலிப்பு. எதுவும் நடக்கவில்லையே என்று அஷமஞ்சா பாபுவுக்குக் குழப்பமாக இருந்தது. பிறகு ஏன் இந்தச் சிரிப்பு? அவரின் வேலையாள் பிபின் வந்ததும் அதற்கான விடை தெரிந்துவிட்டது. அவரைப் பார்த்ததும் புன்னகையோடு ''உங்கள் காதுக்குப் பக்கத்தில் ஷேவிங் சோப்பு ஒட்டியிருக்கிறது அய்யா'', என்றான். கண்ணாடி உடைந்து போனதால் சன்னல் கண்ணாடியில்தான் அவர் சவரம் செய்ய வேண்டியிருந்தது, கைகளை வைத்துப்பார்த்து பிபின் சொன்னது உண்மை என்று தெரிந்துகொண்டார்.

அற்பமான விஷயங்களுக்குக் கூட ப்ரௌனி சிரிக்கிறது என்பது அஷமஞ்சா பாபுவுக்கு ஆச்சரியமாகப் பட்டது. தபால் அலுவலகத்தில் அவர் மேசையில் அமர்ந்திருந்தபோது, அவர் சிந்தனை மீண்டும் மீண்டும் ப்ரௌனியின் முகத்திலிருந்த சிரிப்பிலும் அந்த எக்கலிப்பின் ஒலியிலுமே இருந்தது.

***

ஒரு ஞாயிற்றுக்கிழமை காலையில், இந்தச் சாகசத்துக்குத்துணையிருக்கும்படி மௌனமாக, துர்க்கையை வேண்டிக்கொண்டு, பேராசிரியர் சாட்டர்ஜியின் வீட்டுக்குக் கிளம்பினார். பேராசிரியர் தான் வாசித்துக்கொண்டிருந்த செய்தித்தாளை வைத்துவிட்டு வந்திருப்பவரைக் கவனித்தார்.

"உன் முகம் பரிச்சயமானதாகத் தெரிகிறது."

"நான் இங்கே பக்கத்தில்தான் இருக்கிறேன்."



"அப்படியா? என்ன விஷயம், சொல்லு."

"உங்கள் வீட்டில் ஒரு நாயைப் பார்த்திருக்கிறேன்: அதனால்தான்..."

"அதனாலென்ன? எங்களிடம் இரண்டு இருக்கிறது ஒன்றல்ல."

"ஓ... என்னிடமும் ஒன்று இருக்கிறது."

"உனக்கு என்ன ஊரிலுள்ள நாய்களை எண்ணும் வேலையா?"

அஷமஞ்சா பாபு அந்தக்கேள்வியில் இருந்த எள்ளலைக் கவனிக்கவில்லை. "நான் தேடிக்கொண்டிருப்பது உங்களிடம் இருக்குமா என்று பார்க்கவந்தேன்," என்றார்.

"என்ன அது?"

"உங்களிடம் நாய்கள் பற்றிய என்சைக்ளோபீடியா இருக்கிறதா?"

"இல்லை. என்னிடம் இல்லை. அது உனக்கெதற்கு?"

"அதிலே பாருங்கள்... என் நாய் சிரிக்கிறது. ஆகவே, நாய்கள் இப்படிச் சிரிப்பது இயற்கையானதுதானா? என்று தெரிந்துகொள்ளவேண்டும். உங்களுடைய நாய்கள் சிரிக்கின்றனவா?"

அறையில் மாட்டியிருந்த கடிகாரம் எட்டு அடித்து ஓயும்வரை பேராசிரியர் நிலைகுத்திய பார்வையில் அஷமஞ்சா பாபுவைப் பார்த்தார். பிறகு "உன் நாய் இரவில் சிரிப்பதுண்டா?" என்று கேட்டார்.

"நிச்சயமாக, ஆமாம், இரவிலும்தான்."

"போதைவஸ்துக்கள் எடுத்துக் கொள்வாயோ?"

அஷமஞ்சா பாபு தனக்குள்ள ஒரே கெட்டபழக்கம் புகைபிடிப்பதுதான் என்று அடங்கிய குரலில் சொன்னார் – நாய் வந்ததிலிருந்து அதையும்கூட வாரத்திற்கு மூன்று பாக்கெட்டிலிருந்து இரண்டாக்கி விட்டதைத் தெரிவித்தார்.

"ஆனாலும் உன் நாய் சிரிக்கிறது என்கிறாய்?"

"அது சிரிப்பதை என் கண்களால் பார்த்தும் காதால் கேட்டுமிருக்கிறேன்."

"கவனி". பேராசிரியர் சாட்டர்ஜி தன் கண்ணாடியைக் கழற்றினார், அதைத் தன் கைக்குட்டையால் துடைத்து, மீண்டும் மாட்டிக்கொண்டு அஷமஞ்சா பாபுவை உன்னிப்பாகப் பார்த்தார். பிறகு வகுப்பில் விரிவுரையாற்றும் தொனியில் உணர்ச்சி முழக்கமிட்டார்:

"இயற்கையின் அடிப்படை விதிகள் குறித்து உனக்கிருக்கும் அறியாமையைக் கண்டு வியக்கிறேன். அனைத்து ஜீவராசிகளிலும் மனிதனே சிரிக்கத் தெரிந்தவன். ஏன் அப்படி இருக்கிறது என்று கேட்காதே, ஏனென்றால் எனக்குத் தெரியாது. கடலில் வாழக்கூடிய டால்பின்களுக்கு நகைச்சுவை உணர்வு உண்டென்று கேள்விப்பட்டிருக்கிறேன். டால்பின்கள் மட்டும் ஒரேயொரு விதிவிலக்காக இருக்கலாம். மனிதர்கள் ஏன் சிரிக்க வேண்டும் என்பதும்தெளிவாகப்புரியவில்லை.எவ்வளவோ தத்துவவாதிகள் ஏனென்று மண்டையை உடைத்துக்கொண்டு யோசித்திருக்கிறார்கள், ஆனால் விடை தெரியவில்லை. உனக்குப் புரிகிறதா?"

அஷமஞ்சா பாபுவுக்குத் தெளிவாகப் புரிந்தது; கூடவே அவர் இப்போது அந்த இடத்தைக்காலி செய்ய வேண்டும் என்பதும் புரிந்தது, ஏனென்றால் பேராசிரியர் மீண்டும் செய்திதாளுக்குப் பின்னால் காணாமல் போயிருந்தார்.

டாக்டர் சுகோமோய் பௌமிக், நகரத்தில் சிறந்த மிருக வைத்தியர். மற்றவர்கள் காதுகொடுத்துக் கேட்காததை நிச்சயம் ஒரு மிருக வைத்தியர் கேட்பார் என்ற நம்பிக்கையில் அஷமஞ்சா பாபு அவரிடம் ப்ரௌனியை அழைத்துச் சென்றார். ப்ரௌனி கடந்த நான்கு

மாதத்தில் பதினேழுமுறை சிரித்திருக்கிறது. அவர் கவனித்தவரை சிரிக்கும்படியாக ஏதாவது சொன்னால் ப்ரௌனி சிரிப்பதில்லை; கோமாளித்தனமான நிகழ்வுகளுக்கு மட்டுமே சிரிக்கிறது. எனவே, அஷமஞ்சா பாபு, ஒருமுறைக்கு இருபது ரூபாய் வாங்கினாலும் பரவாயில்லை என அந்த மிருகவைத்தியரைப் பார்க்கப் போகிறார். நாயின் தனித்தன்மையான குணத்தைச் சொல்லும்முன்பே தோற்றத்தைப் பார்த்தவுடன் பௌமிக்கின் புருவம் உயர்ந்துவிட்டது.

"நாட்டுநாய்களை நிறையப் பார்த்திருக்கிறேன், ஆனால் இதுபோலப் பார்த்ததில்லை." என்றார்.

நாயைத் தூக்கி மேசையின்மீது வைத்தார். ப்ரௌனி தன் காலடியில் இருந்த பித்தளை பேப்பர் வெயிட்டை முகர்ந்து கொண்டிருந்தது.

"என்ன சாப்பிடக் கொடுப்பீர்கள்?"

"நான் சாப்பிடும் எல்லாமும் சாப்பிடுவான் சார், உயர் ஜாதி நாய் இல்லையே!"

அஷமஞ்சா பாபு தான் அங்குவந்ததற்கான உண்மையான காரணத்தைச் சொல்ல ஆயத்தமானார். "நான் வந்து என் நாயிடம் ஒரு முக்கியத்துவம் இருக்கிறது... அதனால்தான் உங்களிடம் கொண்டுவந்தேன்."

"முக்கியத்துவமா?"

"இந்த நாய் சிரிக்கிறது."

"சிரிக்கிறதா...?"

"ஆமாம், சிரிக்கிறது. உங்களையும் என்னையும் போல."

"நம்பமுடியவில்லை! இப்போது சிரிக்கவைக்க முடியுமா, நான் பார்க்க வேண்டும்?"

அஷமஞ்சா பாபு டாக்டரிடம் ப்ரௌனி சிரிக்கச்சொன்னால்சிரிக்காதுஎன்றும்ஏதாவது சிரிக்கும்படியான சம்பவம் நடக்கவேண்டும் என்று விளக்கினார். அதன்பிறகு டாக்டர் பௌமிக்குக்கு, அஷமஞ்சா பாபுவிடம்



பேசிக்கொண்டிருக்க நேரமில்லை. "உன் நாய் ஏற்கெனவே போதுமான அளவு விநோதமாயிருக்கிறது; அது சிரிக்கிறது என்று சொல்லி இன்னும் விநோதமாக்க வேண்டாம். என்னுடைய இருபத்தியிரண்டு வருட அனுபவத்தில் சொல்கிறேன், நாய்கள் அழும், பயப்படும், கோபம், வெறுப்பு, நம்பிக்கையின்மை மற்றும் பொறாமையை வெளிப்படுத்தும். நாய்கள் கனவுகூடக் காணும் ஆனால் சிரிக்காது."

இந்தச் சந்திப்புக்குப் பிறகு, அஷமஞ்சா பாபு யாரிடமும் ப்ரௌனியின் சிரிப்புபற்றிப் பேசவேண்டாம் என்று முடிவெடுத்துவிட்டார். யாருக்கும் இந்த விஷயம் தெரியாமல் போனால்தான் என்ன? அவருக்குத் தெரியும். ப்ரௌனி அவருடைய நாய், அவரின் சொத்து. அவர்களின் தனிப்பட்ட உலகத்தில் வெளியாட்களை இழுப்பானேன்?

***

ஆனால்விஷயங்கள் நம்விருப்பத்திற்கேற்ப நடப்பதில்லை. ஒருநாள் ப்ரௌனியின் சிரிப்பு வெளியாள் ஒருவருக்குத் தெரிந்துவிட்டது.

சிலநாட்களாகவே அஷமஞ்சா பாபு, ப்ரௌனியை மதியநேரங்களில் விக்டோரியா மெமோரியல் அருகே நடைக்கு அழைத்துச்செல்லும் பழக்கத்திற்கு ஆளாயிருந்தார். ஒரு ஏப்ரல் நாளில், நடையின் நடுவே, திடீரென்று புயல்காற்று ஆரம்பமானது. அஷமஞ்சா பாபு வானத்தைப் பார்த்து, வீட்டுக்குத் திரும்புவது பாதுகாப்பானதல்ல, எந்தநேரமும் மழை வந்துவிடலாம் என்று கணித்தார். எனவே ப்ரௌனியுடன் பளிங்கு வளைவோடு கூடிய கருப்புநிறக் குதிரைவீரன் சிலையின் கீழ் ஒதுங்குவதற்காக விரைந்தார்.

இதற்கிடையே, மழை பெருந்துளிகளாக விழ ஆரம்பித்ததும் மக்கள் ஒதுங்க இடம் தேடத்தொடங்கினர். வளைவுக்கு



இருபதடி தள்ளி, வெள்ளைச்சட்டையும் ட்ரவுசரும் அணிந்த ஒரு குண்டான மனிதர் தன் குடையை விரித்தபோது திடீரெனக் காற்றின் வேகம்கூடி குடையைத் தலைகீழாக்கியது. உண்மையைச் சொல்ல வேண்டுமென்றால் அஷமஞ்சா பாபு வெடித்துச் சிரிக்க இருந்தார், ஆனால், ப்ரௌனி அவரை முந்திக்கொண்டு சத்தமாகப் புயல்காற்றின் சத்தத்தையும் மீறி வெடிவெடித்ததுபோலச் சிரித்தது அந்தப் பரிதாபமான நபருக்கும் கேட்டுவிட்டது. அம்மனிதர் குடையை மடிப்பதை விட்டுவிட்டு வியப்புடன் ப்ரௌனியைப் பார்க்க ஆரம்பித்தார். ப்ரௌனியால் தனது சிரிப்பை அடக்கமுடியவில்லை.

"சிரிக்கும் நாய்."

"ஆமாம், சிரிக்கும் நாய்." என்றார் அஷமஞ்சா பாபு.

"ஆனால், இது எவ்வளவு விநோதமானது."

தூறல் இப்போது கனமான மழையாகிவிட்டிருந்தது. அஷமஞ்சா பாபுவோடு மழைக்கு ஒதுங்கியிருந்த அக்கனவான் போக்கன்வாலா, பத்தே நிமிடத்தில் ப்ரௌனியைப் பற்றி என்னவெல்லாம் உண்டோ எல்லாமும் தெரிந்து கொண்டுவிட்டார். தான் எப்பேர்ப்பட்ட அதிசயச் சுரங்கத்தை வைத்துக்கொண்டிருக்கிறோம் என்று அஷமஞ்சா பாபுவுக்கே தெரியவில்லை, இதற்கு ஏதாவது செய்யவேண்டும் என்று அவருக்குத் தோன்றியது.

***

சிரிக்கும்நாய் பற்றிய சம்பவத்தைக் கேள்விப்பட்டவர்களில் ஸ்டேட்ஸ்மேன் பத்திரிக்கையின் உயரதிகாரியும் ஒருவர். அஷமஞ்சா பாபுவைப் பேட்டியெடுக்கும்படி நிருபரான ரஜத் சௌத்ரியை அனுப்பினார்.

ஒரு நிருபர் தன்னைச் சந்திக்க நினைத்ததே அஷமஞ்சா பாபுவுக்கு மிகுந்த ஆச்சரியமாய் இருந்தது. அஷமஞ்சா பாபு, நிருபரைத் தனது படுக்கையறைக்குள் அழைத்து வந்தார். அந்த மரநாற்காலி இப்போது சரிசெய்யப்பட்டுப் புதிய கால் பொருத்தப்பட்டிருந்தது. அஷமஞ்சா பாபு நிருபரை அதில் அமரும்படி சொல்லிவிட்டுத் தான் படுக்கையில் அமர்ந்துகொண்டார். ப்ரௌனி, சுவரில் ஏறிக்கொண்டிருந்த எறும்புகளின் வரிசையொன்றைக் கவனித்துக் கொண்டிருந்தது; இப்போது உடனே படுக்கையில் தவ்வி அஷமஞ்சா பாபுவுக்கு அருகே அமர்ந்து கொண்டது.

ரஜத் சௌத்ரி தனது ரெக்கார்டரின் பொத்தானை அழுத்தப் போகும்போது ஒரு எச்சரிக்கையை முன்பே கொடுத்துவிடுவது நல்லது என்று அஷமஞ்சா பாபுவுக்குத் தோன்றியது. எனவே, "அதாவது சார், என்னுடைய நாய் முன்பெல்லாம் அடிக்கடி சிரித்துக் கொண்டிருந்தது, ஆனால், கடந்த சில மாதங்களாகச் சிரிக்கவே இல்லை. ஒருவேளை நீங்கள் அது சிரிப்பதைப் பார்க்கவேண்டுமென வந்திருந்தால் அது உங்களுக்கு ஏமாற்றமாக அமையலாம்," என்றார்.

"அதனாலென்ன, பரவாயில்லை. நான் உங்களிடமிருந்து சில விவரங்களைத் தெரிந்துகொள்ள வேண்டும் அவ்வளவே. ஆரம்பிக்கும் முன், நீங்கள் உங்கள் நாயை என்னவென்று கூப்பிடுகிறீர்கள்?"

அஷமஞ்சா பாபு மைக்கின் அருகில் செல்வதற்காகக் கழுத்தை நீட்டி, "ப்ரௌனி" என்றார். "ப்ரௌனி..." நிருபரின் கழுகுக்கண்கள் நாய் தன் பெயரைச் சொன்னதும் வாலாட்டுவதைக் கவனித்தன.

"இவனுக்கு என்ன வயதாகிறது?"

"பதிமூன்று மாதம்."

"இந்த நாயை எ-எ-எங்கே கண்டெடுத்தீர்கள்?"

அவர் அப்படித் திக்கியது எதிர்பாராத விதமாக ப்ரௌனியின் அதிசயமான குணத்தை வெளிக்கொண்டு வர உதவியது. அந்தவகையில் போக்கன்வாலாவுக்கு அடுத்து ப்ரௌனியின்

மனிதர்களைப் போன்ற சிரிப்பைக் கண்ணால் பார்த்த வெளிநபர் ரஜத் சௌத்ரிதான்.

அடுத்துவந்த ஞாயிறு காலை, ஸ்டேட்ஸ்மேன் பத்திரிகை சிரிக்கும் நாய் பற்றியும் அதற்குச் சொந்தமானவரின் முகவரியையும் கொடுத்திருந்தது. அஷமஞ்சா பாபு ஸ்டேட்ஸ்மேனைப் படிக்கவில்லை.. அவரது அண்டை வீட்டுக்காரரான காளிகிருஷ்ண தத், மீன் மார்க்கெட்டில் வைத்து அதைப்பற்றிச் சொன்னார்.

"நீங்கள் ஒரு நல்ல குணமுள்ள மனிதர்," என்றார் திரு. தத். "இப்படி ஒரு பொக்கிஷத்தை ஒரு வருஷத்திற்கும் மேலாக வீட்டிலேயே வைத்திருக்கிறீர்கள், அதைப்பற்றி யாரிடமும் மூச்சுக்கூட விடவில்லையே? இன்றைக்குச் சாயங்காலம் போல உங்கள் வீட்டுக்கு வந்து உங்கள் நாய்க்கு ஒரு ஹலோ சொல்லியே ஆகவேண்டும்." அஷமஞ்சா பாபுவின் இதயம் கலவரமானது. நிச்சயமாக இதுவொரு பிரச்சினையாக ஆகப்போகிறது என்று அவருக்குத் தெரிந்தது. திரு.தத் போலவே அக்கம்பக்கத்தில் நிறையபேர் ஸ்டேட்ஸ்மேன் வாசிப்பவர்கள்தான், எல்லோரும் அவர் வீட்டுக்கு வந்து அவரது நாய்க்கு ஹலோ சொல்ல விரும்புவார்கள்.

அஷமஞ்சா பாபு உடனடியாகச் சுதாரித்துக் கொண்டு, அன்றைய நாளை வீட்டிலிருந்து தள்ளி இருந்தபடி கழிப்பது என்று முடிவு செய்தார். எனவே, ப்ரௌனியைத் தனது கக்கத்தில் இடுக்கியபடி, வாழ்வில் முதன்முறையாக ஒரு டாக்சியில் ஏறி, நேராக பாலிகஞ்ச் ஸ்டேஷனுக்குச் சென்று அங்கிருந்து போர்ட் கேனிங் செல்லும் ரயிலில் ஏறிக்கொண்டார். பாதிதூரம் சென்றதும் ரயில் பால்சிட் என்ற ஸ்டேஷனில் நின்றது. அந்த இடம் பார்க்கப் பிடித்திருந்ததால் அஷமஞ்சா பாபு அங்கேயே இறங்கிக் கொண்டார். அன்றைய நாள் முழுவதையும் அமைதியான மூங்கில் தோட்டத்திலும் மாந்தோப்பிலும் கழித்தபின் புத்துணர்ச்சியை உணர்ந்தார். ப்ரௌனியும் அந்த இடத்தை நன்றாக ரசிப்பது போலிருந்தது. அதன் இதழ்க்கடையில் தவழ்ந்த மெல்லிய புன்னகை இதற்குமுன் அஷமஞ்சா பாபுவே பார்த்திராதது. அது வொரு மாசற்ற புன்னகை, அமைதியின், மனநிறைவின் புன்னகை. சுற்றியும் மரங்களடர்ந்த இதுபோன்ற இடத்தில் இவ்வளவு



அமைதியான நடத்தையை ஏழு வயது மனிதக் குழந்தையிடம் எதிர்பார்க்க முடியாது என்று அவருக்குத் தோன்றியது.

***

அஷமஞ்சா பாபு வீட்டிற்குள் நுழையும்போது மணி ஏழைத் தாண்டியிருந்தது. யாரேனும் அழைத்திருந்தார்களா என்று பிபினிடம் கேட்டார். குறைந்தது நாற்பது முறை அவரைத்தேடி வந்தவர்களுக்காகக் கதவைத் திறக்க வேண்டியிருந்தது என்றான். அஷமஞ்சா பாபுவால் தன்னுடைய முன்னெச்சரிக்கைக்காகத் தன்னைத்தானே பாராட்டிக்கொள்ளாமல் இருக்க முடியவில்லை. ஷூவைக் கழற்றியபடி பிபினிடம் ஒரு டீ கேட்டபோது யாரோ கதவைத் தட்டினார்கள். "அடச் சை!" என்று நொந்து கொண்டார் அஷமஞ்சா பாபு. கதவைத் திறந்ததும் அவர் பார்த்தது ஒரு வெள்ளைக்காரரை. "ராங் நம்பர்." என்று சொல்ல நினைத்து, பின்னால் நின்றிருந்த பெங்காலிக்காரரைப் பார்த்ததும் "யார் வேண்டும்?" என்றார்.

"நீங்கள்தான்," என்றார் இந்தியச் சுற்றுலாத்துறையைச் சேர்ந்த ஷ்யாமோல் நேண்டி, "அதாவது, உங்களுக்குப் பின்னால் நின்று கொண்டிருக்கும் நாய் உங்களுடையது என்றால், இன்றைக்குப் பேப்பரில் எப்படிச் சொல்லியிருந்ததோ அப்படியே இருக்கிறது. நாங்கள் உள்ளே வரலாமா?"

அஷமஞ்சா பாபு அவர்களைத் தனது படுக்கையறைக்குள் வரும்படி பெருந்தன்மையோடு அழைக்க வேண்டியதாயிற்று. அந்த வெளிநாட்டுக்காரர் நாற்காலியில் அமர்ந்து கொண்டார், திரு.



நேண்டி பிரம்பு முக்காலியில் அமர்ந்துகொள்ள, அஷமஞ்சா பாபு தன் கட்டிலில் அமர்ந்து கொண்டார். ப்ரௌனி சற்றே அசௌகரியமாகத் தென்பட்டது, அறையின் வாசற்படிக்கு வெளியிலேயே நின்று கொண்டது; அறைக்குள் இரண்டு அந்நியர்கள் இருப்பதை அது இதற்குமுன் பார்த்ததில்லை என்பதால் இருக்கலாம்.

"ப்ரௌனி! ப்ரௌனி! ப்ரௌனி! ப்ரௌனி!" வெளிநாட்டுக்காரர் அறைக்குள் அதை வரவைப்பதற்காக அதை நோக்கிக் குனிந்து மீண்டும் மீண்டும் கூப்பிட்டுப் பார்த்தார். ப்ரௌனி அந்த அந்நியரை உறுத்துப் பார்த்தபடி நகராமல் நின்றது.

யார் இவர்களெல்லாம்? என்று இயல்பாக அஷமஞ்சா பாபுவுக்குள் எழுந்த கேள்விக்கு திரு. நேண்டி பதிலளித்தார். அந்த வெளிநாட்டுக்காரர் அமெரிக்காவின் குறிப்பிடத்தகுந்த பணக்காரர், இந்தியாவுக்குப் பழைய ரோல்ஸ் ராய்ஸ் கார்களை வாங்குவதற்காக வந்திருக்கிறார்.

அந்த அமெரிக்கர் இப்போது நாற்காலியிலிருந்து எழுந்து குத்துக்காலிட்டு அமர்ந்தபடி நாய்க்கு முன்னால் விதவிதமான முகச்சேட்டைகளைச் செய்து கொண்டிருந்தார்.

மூன்று நிமிட தோல்விகரமான கோமாளித்தனங்களுக்குப்பின் முயற்சியைக் கைவிட்டு அஷமஞ்சா பாபுவைப் பார்த்து, "இதற்கு உடம்பு ஏதும் சரியில்லையா?" என்றார்.

அஷமஞ்சா பாபு இல்லையெனத் தலையசைத்தார்.

"இவன் உண்மையிலேயே சிரிப்பானா?" என்றார் அமெரிக்கர்.

அஷமஞ்சா பாபுவுக்கு அமெரிக்கப் பேச்சு புரியுமோ புரியாதோ என திரு.நேண்டி அவருக்காக மொழிபெயர்த்தார்.

"ப்ரௌனி சிரிக்கும்," என்றார் அஷமஞ்சா பாபு, "ஆனால், அது வேடிக்கையென்று எதையாவது உணர்ந்தால்தான்."

அஷமஞ்சா பாபுவின் பதிலை நேண்டி மொழிபெயர்த்துச் சொன்னபோது அமெரிக்கரின் முகத்தில் செம்மை படர்ந்தது. தெளிவாகத் தெரியாத சூழ்நிலையில், அந்த நாய் சிரிக்கக்கூடியது என்ற நிரூபணம் கிடைக்காத வரையில் அவர் அந்த நாய்க்காகப் பணத்தை வீசியடிக்க விரும்பவில்லை. பின்னால் அவரைத் தர்மசங்கடப்படுத்தக் கூடிய எந்தவொரு நிலையையும் அவர் உருவாக்கிக் கொள்ளத் தயாராக இல்லை. மேலும், தனது வீட்டில் சீனத்திலிருந்து பெரு வரை உள்ள அரிதான பொருட்களும், லத்தீன் மொழி மட்டுமே பேசக்கூடிய கிளியும் வைத்திருக்கிறார். "சிரிக்கும் நாயை வாங்குவதற்காக என்னுடைய செக் புத்தகத்தைக் கையோடு எடுத்து வந்திருக்கிறேன், ஆனால், அது உண்மையிலேயே சிரிக்கும் என்ற ஆதாரம் கிடைக்கவேண்டும்." என்றார்.

பிறகு தான் சொன்னதை நிரூபிக்கும் விதமாக தனது பாக்கெட்டிலிருந்து நீலநிற செக் புத்தகம் ஒன்றை வெளியிலெடுத்துக் காட்டினார். சிட்டி பேங்க் ஆஃப் நியூயார்க் என்று அதன்மேல் எழுதியிருந்தது.

"அதன்பிறகு நீங்கள் காற்றில் மிதப்பீர்கள்," தூண்டும் விதமாகக் கூறினார் திரு.நேண்டி. "அந்த நாயைச் சிரிக்க வைக்கும் விதம் உங்களுக்குத் தெரிந்தால் போதும். இந்தக் கனவான் 20,000 டாலர்கள் தரத் தயாராக இருக்கிறார். அதாவது இரண்டு லட்சம் ரூபாய்கள்."

திரு. நேண்டியின் வார்த்தைகள் அஷமஞ்சா பாபுவின் மனதில் உருவாக்கிய சித்திரங்கள், அவர் ஒரு விசாலமான குளிரூட்டப்பட்ட அறையில் இருக்கிறார், சுழலும் நாற்காலியில் அமர்ந்தபடி, கால்கள் மேசைமீது இருக்க, ஹசுநோ-ஹானாவின்* நறுமணம் அறையை நிறைக்கிறது. ஆனால், அடுத்த நொடி இந்தச் சித்திரம் திடீரென்று எழுந்த ஒரு ஒலியால்

ஊசியால் குத்தப்பட்ட பலூன்போல மறைந்தது. ப்ரௌனி சிரித்துக் கொண்டிருந்தது.

அது இதற்குமுன் சிரித்த எந்தச் சிரிப்பையும் போல் இல்லை. "ஆமாம் இந்த நாய் சிரிக்கிறது."

திரு. மூடி முழங்காலிட்டு அமர்ந்தபடி, பரவசத்தினால் உண்டான பதட்டத்தோடு அந்த அபூர்வமான காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தார். செக் புக் மீண்டும் வெளியே வந்தது, அதோடு, அவருடைய தங்க பார்க்கர் பேனாவும் வந்தது.

ப்ரௌனி இன்னமும் சிரித்துக் கொண்டிருந்தது. அஷமஞ்சா பாபுவுக்கு அதன் சிரிப்பிற்கான காரணம் புரியவில்லை, யாரும் திக்கவில்லை, யாரும் தடுமாறி விழவில்லை, யாருடைய குடையும் காற்றில் திரும்பவில்லை, சுவரில் உள்ள எந்தக் கண்ணாடியிலும் செருப்பு விழவில்லை. ஆனால் ஏன் ப்ரௌனி சிரிக்கிறது?

"திரு. மூடி இப்போது தரையிலிருந்து எழுந்து நாற்காலியில் அமர்ந்து கொண்டார். "அவர் தன்னுடைய பெயரை எப்படி எழுதுகிறார் என்று கேள்." என்றார்.

திரு.நேண்டி அக்கேள்வியை பெங்காலியில் ஒலிபரப்பிய பின்னரும் அஷமஞ்சா பாபு பதில் கூறவில்லை, காரணம் இப்போதுதான் அவர் ஓர் ஒளியைக் கண்டிருந்தார், அவ்வொளி அவரது இதயத்தை வியப்பினால் நிறைத்திருந்தது. தன்னுடைய பெயரை எப்படி எழுதவேண்டும் என்று சொல்வதற்குப் பதிலாக, பெங்காலியில், "அந்தக் கனவானிடம் சொல்லுங்கள். உண்மையில் அந்த நாய் ஏன் சிரித்தது என்று தெரிந்தால் அவர் தனது செக் புத்தகத்தைத் திறந்திருக்க மாட்டார்." என்றார்.

வறண்ட குரலில் கூர்மையாக "ஏனென்று நீங்கள் சொல்லலாமே?" என்றார் திரு. நேண்டி. ப்ரௌனி ஒருவழியாகச் சிரிப்பதை நிறுத்தியிருந்தது. அஷமஞ்சா பாபு அதைத் தூக்கி, தன் மடியில் வைத்துக்கொண்டு, அதன் கண்ணீரைத் துடைத்துவிட்டுச் சொன்னார், "என்னுடைய நாய் ஏன் சிரிக்கிறதென்றால், இந்தக் கனவான் பணத்தால் எல்லாவற்றையும் வாங்கமுடியும் என்று நம்புகிறார்."



"ஓஹோ," என்றார் திரு. நேண்டி. "அப்படியென்றால் உன்னுடைய நாய் ஒரு தத்துவவாதி, அப்படித்தானே?"

"ஆமாம், சார்."

"அதன் அர்த்தம் அந்த நாயை நீ விற்கமாட்டாய் என்பதா?" நேண்டியின் முகம் இறுகியது.

"மாட்டேன் சார்."

திரு.மூடியிடம் ஷ்யாமோல் நேண்டி நாயின் உரிமையாளருக்கு அதை விற்கும் எண்ணம் இல்லை என்று மட்டும் சொன்னார்.

திரு.மூடி செக் புத்தகத்தை மீண்டும் தனது பாக்கெட்டில் வைத்துக்கொண்டு, முழங்காலில் இருந்த தூசியைத் தட்டிவிட்டு, அறையிலிருந்து வெளியேறும் வழியில் தலையை அசைத்தபடி கூறினார். "இந்த ஆள் பைத்தியமாகத்தான் இருக்கவேண்டும்."

அமெரிக்கரின் கார் சத்தம் தேய்ந்து மறைந்தபிறகு அஷமஞ்சா பாபு ப்ரௌனியின் கண்களைப் பார்த்தபடி கேட்டார், "நீ ஏன் சிரித்தாய் என்பதற்கு நான் சரியான முறையில் விளக்கம் கொடுத்தேன் இல்லையா?"

ப்ரௌனி ஆமோதிப்பாக மெல்லச் சிரித்தது.

***

* ஜப்பானிய பெர்ஃப்யூம். தாமரை மற்றும் அல்லி மலர்களிலிருந்து தயாரிக்கப்படும் புராதனமான வகை வாசனைத் திரவியம்.

வங்காள மூலமும் ஆங்கில மொழியாக்கமும் – சத்யஜித் ரே

தமிழில் – ஸ்ரீதர்ரங்கராஜ்

## படைப்பு முகம்



சத்யஜித் ரே (1921–1992): உலகப்புகழ்பெற்ற இந்தியத் திரைப்பட இயக்குநர். இவர் படைத்துள்ள சிறுகதைகளும் புதினங்களும் புகழ்பெற்றவை. குழந்தைகளுக்கான கற்பனை மற்றும் துப்பறியும் கதைகளையும் எழுதியுள்ளார். அறிவியல் புனைகதைகளில் இவருடைய பங்களிப்பு குறிப்பிடத்தக்கது.

## படிப்போம் பகிர்வோம்

1. அசமஞ்சாபாபுவின் நாய் சிறுகதையில் வரும் பின்னோக்கு உத்தியை எழுதுக.
2. பிரௌனி நாய்க்குட்டியின் முதல் மூன்று சிரிப்புகளுக்கும் கடைசி சிரிப்பிற்கும் உள்ள வேற்றுமையை விளக்குக.
3. அசமஞ்சாபாபுவிடம் காசோலையைக் கொடுத்துப் பிரௌனி நாய்க்குட்டியைத் திரு. மூடி பெற்றுச் செல்வதாக நினைத்து, கதையை நிறைவு செய்க.
4. அசமஞ்சாபாபுவின் பாத்திரப்படைப்பைத் திறனாய்வு செய்க..
5. 'அசமஞ்சாபாபுவின் நாய்' கதையின் கருப்பொருளும் சுவையும் குறையாமல் ஒரு பக்க அளவில் சுருக்கி எழுதுக.
6. பணத்திற்காக எதையும் செய்யலாமா? உன் முடிவிற்கான காரணங்களை 'அசமஞ்சாபாபுவின் நாய்' சிறுகதை கொண்டு விளக்குக.

## அறிவோம் தெளிவோம்

## ரே – இந்திய சினிமாவின் முகம்

உலக அளவில் இந்தியத் திரைப்படக்கலை புகழ்பெற காரணமானவர்களில் முக்கியமானவர் சத்யஜித் ரே. திரைப்பட இயக்குநர், எழுத்தாளர், இசையமைப்பாளர், தயாரிப்பாளர் எனப் பன்முகம்கொண்ட ரே, தன் திரைச் சாதனைகளுக்காக ஆஸ்கர், மகசேசே போன்ற உலகப்புகழ்பெற்ற விருதுகளைப் பெற்றவர். இந்தியாவின் மிக உயரிய விருதான பாரத ரத்னா விருதும் இவருக்கு வழங்கப்பட்டது.



'பதேர் பாஞ்சாலி'யில் ஒரு காட்சி

ரேயின் முதல் திரைப்படமான 'பதேர் பாஞ்சாலி' (1955) உலகளாவிய திரைக்கலை வல்லுநர்களால் வியந்து போற்றப்பட்டது .கேன்ஸ் திரைப்பட விழா, சான்ஃப்ரான்சிஸ்கோ திரைப்பட விழா உள்ளிட்ட பல உலகப் பட விழாக்களில் "பதேர் பாஞ்சாலி" திரையிடப்பட்டு விருதுகளைக் குவித்தது. பதேர் பாஞ்சாலிக்குப் பிறகு, தொடர்ந்து சிறந்த படங்களை இயக்கினார். அகந்துக், ஷகா புரொஷகா, ஞானஷத்ரு, சுகுமார் ராய், காரே பைரே, பிக்கூர் டைரி', பாலா, கூப்பி கைன் பாகா பைன், ரவீந்திரநாத் தாகூர், பரஷ் பதர், அபராஜிதோ உள்ளிட்ட 29 திரைப்படங்களையும் 8 ஆவணப்படங்களையும் இயக்கியுள்ளார். இவர் ஐம்பதுக்கும் மேற்பட்ட நூல்களையும் எழுதியுள்ளார். ரே வாழ்ந்த காலத்திலேயே அவரைப் பற்றி 15க்கும் மேற்பட்ட ஆவணப்படங்கள் தயாரிக்கப்பட்டன.

குறுங்கதை

# ரப்பர் பந்து

– எஸ்.ராமகிருஷ்ணன்

*மரபான கதைசொல்லலில் நவீனப் புனைகதையின் வடிவத்தை இணைத்துக் குறுகிய வடிவில் தரும் முயற்சியே குறுங்கதை.*



சி.எல்.பி. பள்ளியின் மைதானத்தில் தனது பன்னிரண்டு வயதில் தொலைத்த பந்தைத் தேடி, அறுபத்து ஏழாவது வயதில் ஊருக்குச் சென்றார் நாராயணன்.

அதைப்பற்றி யாரிடமும் சொல்லவில்லை என்ற போதும் மனது அந்தப் பந்தை எப்படியாவது கண்டுபிடித்துவிட வேண்டும் என்பதில் அக்கறையாக இருந்தது. அந்தப் பந்தை அவர் அடித்தபோது மாலை நான்கு மணியிருக்கும். ரப்பர் பந்து பறந்து வேப்பமரத்தின் பின்னால் போய் விழுந்தது. பின்பு அது எவர் கண்ணிலும் படவேயில்லை. என்னவாகியிருக்கும்.

யாராவது பந்தை எடுத்திருப்பார்கள். அல்லது அருகிலுள்ள கிணற்றினுள் விழுந்து கிடந்திருக்கக்கூடும். மரக்கிளையில் சிக்கி நின்றிருக்கவும் சாத்தியமுண்டு. அல்லது வானில் இருந்து அரூபத்தின் கை ஒன்று அந்தப் பந்தைப் பறித்துத் தனதாக்கிக் கொண்டிருக்கவேண்டும்.

இந்த நான்கில் அரூபத்தின் கையைத்தான் அவர் அதிகம் நம்பினார்.

மைதானத்தில் தன்னுடைய பந்தைத்

தொலைக்காத சிறுவர்கள் யாராவது உலகில் இருக்கிறார்களா என்ன?

அவர் தொலைத்த பந்தின் நிறம், அதில் ஒட்டியிருந்த தூசிவரை யாவும் நினைவில் அப்படியே இருந்தது. சி.எல்.பி. மைதானத்தில் புழுதி பறந்து கொண்டிருந்தது. அன்று தன்னோடு விளையாடிக் கொண்டிருந்தவர்களில் எவரையும் இன்றுவரை திரும்பச் சந்திக்கவேயில்லை.

மைதானம் காலியாகக் கிடந்தது. முன்பு பார்த்த மரங்கள் இல்லை. கிணறுகூட மூடப்பட்டு, அந்த இடத்தில் கழிப்பறைக் கட்டடம் ஒன்றிருந்தது.

மைதானத்தின் வெற்றிடம் விளையாட்டினை நினைவுபடுத்தியது.

அவர் பந்து விளையாட்டிலிருந்து விடுபட்டு நாற்பது வருடங்களுக்கும் மேலாகியிருந்தது.

திடீரெனக் காற்றில் கைவீசி ஒரு பந்தை அடித்தார். அது காற்றிலே ஓடி மறைந்தது.

நீண்ட பெருமூச்சின் நடுவே தூரத்துக் காட்சியொன்றைப் பார்த்தார்.

ஊதா நிற யூனிபார்ம் அணிந்த யாரோ ஒரு சிறுவன் தொலைந்த பந்தைத் தேடிக் கொண்டிருந்தான்.

மிக ஆறுதலாக இருந்தது. அவர் சந்தோஷத்துடன் வீடு திரும்பத் தொடங்கினார்.

### படைப்பு முகம்



எஸ். ராமகிருஷ்ணன் (1966): நவீனத் தமிழ் இலக்கியத்தின் பிரபலமான எழுத்தாளரான இவர், புதினங்கள், சிறுகதைகள், கட்டுரைகள், நாடகங்கள், குழந்தைகளுக்கான ஆக்கங்கள், திரைக்கதை, திரைப்பட உரையாடல்கள் உள்ளிட்ட படைப்புச் செயற்பாடுகளில் ஈடுபட்டு வருவதோடு, தமது உரைகள், பத்திகள் மூலமாகச் சிறந்த இலக்கியங்கள், திரைப்படங்கள் ஆகியவற்றை அறிமுகப்படுத்தியும் வருகிறார். இக்கதை 'நகுலன் வீட்டில் யாருமில்லை' என்ற தொகுப்பிலிருந்து தரப்பட்டுள்ளது.

## படிப்போம் பகிர்வோம்

1. பல ஆண்டுகளுக்குப் பிறகு நீர் படித்த தொடக்கப் பள்ளிக்குச் செல்கிறீர். அப்போது உமக்குத் தோன்றும் எண்ண ஓட்டங்களை எழுதுக.

நுண்கதைகள்

# பனித்துளியின் பேச்சு

**– ஹெச்.ஜி. ரசூல்**

*இங்கு நவீனத் தமிழ்க் கதையின் புதிய வடிவமான நுண்கதைகள் தரப்பட்டுள்ளன.*

*கவிதை, கதை, நாவலுக்குமான வரையறைகளை அழித்துத் தொடக்கம், நடு, முடிவு என்றேதுமில்லா நேரற்ற வரிசை கொண்டவை நுண்கதைகள். இவை வேடிக்கை, விநோதம், பகடி, குறியீடு ஆகிய அம்சங்கள் நிறைந்தவை. மேலும், கவித்துவ மொழியையும் மெய்யியல் உள்ளடக்கத்தையும் கொண்டவை.*

*அதிகாலை வரவேற்று ஒரு கவிதையை வாசித்தது. பூவின் இதழ்களிலும் புல்லின் நுனியிலும் உட்கார்ந்திருந்த பனித்துளி தன்னில் பிரபஞ்சத்தைப் பிரதிபலித்துக் கொண்டிருந்தது.*

*குழந்தைகள் விளையாட்டுப் போக்கில் ஊதிப் பறத்திவிடும் குமிழியாகவும் அது இல்லை.*

*இருள் விலகத் தொடங்கியபோது, கர்வத்தோடு அருகே வந்த இளவெயில் சொன்னது.*

*உன்னை நான் சாப்பிடப் போகிறேன்.*

*எதுவும் பேசாமல் மவுனம் காத்தது பனித்துளி.*



*துளியாய் இருந்தபோது என்னைத் தொந்தரவு செய்தாய். ஆவியாகிக் காற்றில் கரைந்துவிட்டேன். இப்போது என்னை நீ என்ன செய்யமுடியும்?*



### படைப்பு முகம்

ஹெச்.ஜி. ரசூல் (1959 – 2017): பெண்கள் மீதான ஒடுக்குமுறை சார்ந்த கருத்துகளைத் தமது எழுத்துகளால் தகர்த்தெறிந்தவர் இவர். மைலாஞ்சி, பூட்டிய அறை, ஜனகணமன, என் சிறகுகள் போன்றவை இவரது புகழ்பெற்ற படைப்புகள். போர்ஹேயின் வேதாளம் இவரது நுண்கதைத் தொகுப்பு.



### படிப்போம் பகிர்வோம்

உமக்குப் பிடித்த கவிதை ஒன்றினை நுண்கதையாக எழுதுக.

யாப்பருங்கலக் காரிகையின் பெருமையையும் அதன் யாப்பைக் கற்பதின் கடினத்தையும் உணர்த்தும். இந்நூலாசிரியர், யாப்பருங்கலம் என்னும் மற்றோர் இலக்கண நூலையும் படைத்துள்ளார். இந்நூலுக்கு உரை எழுதியவர் குணசாகரர்.

## வீரசோழியம்

தொல்காப்பியத்திற்குப் பின்னர், ஐந்திலக்கண அமைப்பிலமைந்த நூல், வீரசோழியம். இந்நூல், ஐந்து அதிகாரத்தையும் பத்துப் படலத்தையும் கொண்டுள்ளது. அதன் ஆசிரியர் புத்தமித்திரர். இந்நூல் வடமொழி, தமிழ்மொழி ஆகிய இரண்டுக்கும் இலக்கணம் கூற முற்படுகிறது.

## தண்டியலங்காரம்

தமிழில் அணியிலக்கணம் கூறும் நூல்களுள் தண்டியலங்காரம் முதல் நூலாகும். தண்டி என்பவரால் வடமொழியிலுள்ள காவ்யதர்சம் என்னும் நூலைத்தழுவி, இந்நூல் எழுதப்பெற்றது. இந்நூல் பொதுவணியியல், பொருளணியியல், சொல்லணியியல் என்னும் இயல்களையும், 125 நூற்பாக்களையும் கொண்டுள்ளது. பொதுவணியியலில் செய்யுள் வகை, அதன் இலக்கணம் ஆகியவை சொல்லப்பட்டுள்ளன. பொருளணியியலில், தன்மையணி முதல் பாவிகவணி வரை 35 அணிகளின் இலக்கணமும் கூறப்பட்டுள்ளன. சொல்லணியியலில் மடக்கின் வகைகள், அவற்றின் இலக்கணம், சித்திரகவிகளின் இலக்கணம், வழு, வழுவமைதி ஆகியவை சொல்லப்பட்டுள்ளன. பெருங்காப்பியத்தின் இலக்கணமும் இந்நூலுள் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்நூலுக்குப் பின்னர், சந்திராலோகம், குவலாயனந்தம், மாறனலங்காரம் போன்ற அணியிலக்கண நூல்கள் தோன்றியுள்ளன.


தண்டியலங்காரம்

மூலமும் உரையும்

இவ்வுரை

மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் அக்கிராசனாதிபதியும்
பாலவனத்தம் ஜமீந்தாருமாகவிருந்த
ராஜராஜ ஸ்ரீமாந்

இராமநாதபுரம்

பொ. பாண்டித்துரைத் தேவரவர்கள்

விரும்பியவாறு

யாழ்ப்பாணத்துச் சுன்னாகம்

அ. குமாரசுவாமிப்புலவர்

புதுக்கியது

இவை

சுன்னாகம்

கு. அம்பலவாணபிள்ளையால்

பதிப்பிக்கப்பட்டன

1926

## நேமிநாதம்

எழுத்துக்கும் சொல்லுக்கும் இலக்கணம் கூறும் மற்றொரு நூல் நேமிநாதம். இந்நூல், தொல்காப்பிய எழுத்திலக்கணத்தையும் சொல்லிலக்கணத்தையும் சுருக்கமாகக் கூறுவதனால் 'சின்னூல்' என்று அழைக்கப்படுகிறது. வெண்பாவால் அமைந்த நேமிநாதம் நூலைக் கற்றபின்னரே, தொல்காப்பியத்தைக் கற்கும் நடைமுறை இருந்தமை இந்நூலின் சிறப்பைப் புலப்படுத்தும்.

### அறிவோம் தெளிவோம்

**பழையன கழிதலும் புதியன புகுதலும்**

- அவன், இவன், உவன் என்பனவற்றுள் உவன் என்னும் சுட்டுப்பெயர் இன்று வழக்கில் இல்லை.
- நறுமணம் என்னும் பொருளைக் குறித்த 'நாற்றம்' என்னும் சொல், இன்று விரும்பத் தகாத மணத்தைக் குறிக்கிறது.
- தமிழில் மொழிமுதல் வாரா எழுத்துகளுள் ல, ர ஆகியன இன்று பலருடைய பெயர்களின் முதலெழுத்துகளாய் உள்ளன

இதனை எழுதியவர் குணவீரபண்டிதர் ஆவார். இவர், 'வச்சணந்தி மாலை' என்றழைக்கப்படும் வெண்பாப் பாட்டியல் நூலையும் இயற்றியுள்ளார்.

## நன்னூல்

தொல்காப்பியத்திற்கு அடுத்ததாக மிகுதியாகப் பயன்பாட்டிலிருக்கும் இலக்கண நூல், நன்னூல். தொல்காப்பியம், தெளிவும் எளிமையும் கொண்டு விளங்க, நன்னூல் செறிவும் சுருக்கமும்கொண்டு விளங்குகிறது. நன்னூலில் எழுத்ததிகாரமும், சொல்லதிகாரமும் உள்ளன. இந்நூலுள் அமைந்துள்ள பொதுப் பாயிரம் (முகவுரை) நல்ல நூலுக்குரிய இலக்கணம், பத்து அழகு, பத்துக்குற்றம், நல்லாசிரியர், ஆசிரியர் ஆகாதவர் ஆகியோரது இலக்கணம், நல்ல மாணாக்கர், மாணாக்கர் ஆகாதவரின் இயல்புகள், பாடங்கற்பிக்கும் முறை, கற்கும் முறை ஆகியன குறித்து விரிவாகக் கூறியுள்ளது. தொல்காப்பியத்தின் பாயிர உரை மேற்கோள்கள், இந்நூலில் இலக்கணச் சூத்திரங்களாகத் தொகுக்கப்பட்டுள்ளன.

நன்னூலின் எழுத்ததிகாரத்திலுள்ள பதவியல், தொல்காப்பியத்தின் வளர்நிலையாக அமைந்துள்ளது. இவ்வியல், சொற்களின் கட்டமைப்பைத் தெளிவாக விளக்குகிறது; பகுதி, விகுதி, இடைநிலை, சந்தி, சாரியை, விகாரம் எனச் சொற்களைப் பகுத்து விளக்குகிறது.

> ### அறிவோம் தெளிவோம்
>
> தமிழில் சொற்கள் அல்லது தொடர்களை இணைக்க உம் என்னும் இடைச்சொல் வரும். ஆனால், ஆங்கில மொழியில் பயன்படுத்தப்படும் and என்னும் சொல்லாட்சிக்கேற்ப, 'மற்றும்' என்னும் சொல்லைப் பயன்படுத்துகின்றனர்.
>
> (எ.கா.)
>
> 'பேரறிஞர் அண்ணா, தமிழ் மற்றும் ஆங்கிலத்தில் புலமை பெற்றவர்'.
>
> இவ்வாறு கூறுவது, ஆங்கிலமொழியின் தாக்கமே. இத்தொடரைப் 'பேரறிஞர் அண்ணா, தமிழிலும் ஆங்கிலத்திலும் புலமை பெற்றவர்'. என எழுதுவதே ஏற்புடையது.

இந்நூலின் சொல்லதிகாரத்தில் இறுதியாக இடம்பெற்றுள்ள,

*'பழையன கழிதலும் புதியன புகுதலும்*
*வழுவல கால வகையி னானே'*

என்னும் நூற்பா, வழக்கிழந்த இலக்கணக் கருத்துகளை நீக்குவதும் புதிய வழக்குகள் சிலவற்றை ஏற்றுக்கொள்வதும் தவறல்ல; காலந்தோறும் ஏற்படும் மாற்றத்திற்குட்பட்டதே இலக்கணம்எனக்கூறிஅமைகிறது.இந்நூலுக்கு மயிலைநாதர், சங்கர நமச்சிவாயர், சிவஞான முனிவர், ஆறுமுக நாவலர் முதலானோர் உரை கண்டுள்ளனர்.

## நம்பியகப்பொருள்

நம்பி என்பவரால் இயற்றப்பெற்ற இந்நூல் அகப்பொருள் சார்ந்தது. இந்நூல் அகத்திணையியல், களவியல், வரைவியல், கற்பியல், ஒழிபியல் என ஐந்தியலாகப் பகுக்கப்பட்டுள்ளது. தொல்காப்பியம், அகப்பொருள் இலக்கணத்தைத் கதை மாந்தர்களின் கூற்றுவகையாகக் கூற, நம்பியகப்பொருள் அகப்பொருள் இலக்கணத்தைத் துறைவகையாக விளக்கிக் கூறுகிறது. அகஇலக்கிய நூல்களுக்கு இதன் அடிப்படையிலேயே துறை வகுக்கப்பட்டுள்ளது.

## இலக்கண விளக்கம்

இந்நூல் எழுத்து, சொல், பொருள் என மூவதிகாரமாகப் பகுக்கப்பட்டு, ஐந்திலக்கணமும் கூறுகிறது. தொல்காப்பியத்தைப் பின்பற்றி விரிவாக எழுதப்பட்டிருப்பதால் இந்நூலைக் 'குட்டித்தொல்காப்பியம்' என்றும் அழைப்பர். இந்நூலை இயற்றியவர் வைத்தியநாத தேசிகர் ஆவார்.

## தொன்னூல் விளக்கம்

இத்தாலி நாட்டைச் சேர்ந்த வீரமாமுனிவரால் தமிழில் எழுதப்பட்ட இலக்கணநூல் தொன்னூல் விளக்கம். இந்நூல்

எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்திலக்கணத்தை உடையதாகும். இந்நூலாசிரியர், தம்நூலில் நன்னூல் கருத்துகளையே பெரும்பான்மையாக எடுத்தாண்டுள்ளார்.

## பாட்டியல் நூல்கள்

சிற்றிலக்கியங்களின் அமைப்பு முதலானவற்றை விளக்க, பாட்டியல் நூல்கள் தோன்றின. பாட்டியல் நூல்களுள் முதன்மையானதாகக் கருதப்பெறுவது 'பன்னிரு பாட்டியல்'. இஃது எழுத்தியல், சொல்லியல், இனவியல் என மூவியலாக அமைந்துள்ளது. 'வச்சணந்தி மாலை' என்னும் வெண்பாப் பாட்டியல், நவநீதப் பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், இலக்கண விளக்கப் பாட்டியல் என்பன, பாட்டியல் நூல்களுள் சிலவாகும்.

## மொழிவளம் காக்கும் இலக்கணங்கள்

இற்றைக்காலத்தில் செய்யுள் வடிவில் இலக்கண நூல்கள் இயற்றப்பெறவில்லையாயினும் உரைநடை வடிவில் எழுதப்பட்டு வருகின்றன. காலந்தோறும் இலக்கியங்கள் புதுப்புது வடிவங்களில் மாற்றம் பெறும்போது, அவற்றிற்கான இலக்கணங்களும் தோன்றத் தொடங்கியுள்ளன. ஆகவே, இலக்கணத்தின் இன்றியமையாமையை உணர்ந்து, தமிழ்மொழியை வளம்பெறச் செய்வது நம் கடமையாகும்.




**தொல்காப்பியத்திலிருந்து தோன்றிய சில இலக்கண நூல்கள்**

# கண்ணாடி

**பொருத்தமான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.**

1. குட்டித்தொல்காப்பியம் என அழைக்கப்படும் நூல்-----------.

   அ) நன்னூல் ஆ) தொன்னூல் விளக்கம் இ) இலக்கண விளக்கம் ஈ) நேமிநாதம்

2. தண்டியலங்காரம் – தண்டி ; இறையனார் அகப்பொருள் – இறையனார்

   நம்பியகப்பொருள் – நம்பி ; வீரசோழியம் - ?

   அ) வீரசோழர் ஆ) குணவீரபண்டிதர் இ) புத்தமித்திரர் ஈ) வீரமாமுனிவர்

3. 'காரிகை கற்றுக் கவிபாடுவதினும் பேரிகை கொட்டிப் பிழைப்பது மேல்'– இத்தொடர் உணர்த்துவது

   அ) கவிதை எழுதுவது எளிது ஆ) கவிதை எழுதுவது அரிது

   இ) கவிதை எழுதக் காரிகைத் தேவையில்லை ஈ) பேரிகை கொட்டினால் பிழைக்கலாம்

4. அகப்பொருள் சாராத நூலைத் தேர்க.

   அ) களவியல் காரிகை ஆ) பன்னிரு படலம்

   இ) நம்பியகப்பொருள் ஈ) இறையனார் களவியல்

5. தொல்காப்பியம் கற்பதற்கு முன்னர், பயிற்சி பெற வேண்டிய நூல்------.

   அ) நன்னூல் ஆ) நேமிநாதம் இ) இலக்கண விளக்கம் ஈ) வீரசோழியம்

6. சரியாகப் பொருந்தியுள்ள விடைக்குறிப்பைத் தேர்க.

| | | | |
|---|---|---|---|
| அ) |  | 1 | பகைவரிடமிருந்து மதிலைக் காத்தல் |
| ஆ) |  | 2 | பகைவரின் மதிலை வளைத்தல் |
| இ) |  | 3 | பகைவரின் ஆநிரை கவர்தல் |
| ஈ) |  | 4 | பகைவரிடமிருந்து ஆநிரை மீட்டல் |

| | 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|---|
| அ) | 2 | 3 | 1 | 4 |
| ஆ) | 1 | 2 | 3 | 4 |
| இ) | 4 | 1 | 2 | 3 |
| ஈ) | 3 | 4 | 2 | 1 |

**7. படம் உணர்த்தும் இலக்கண நூல் வகையைக் கண்டறிக.**



அ)



ஆ)

## குறுவினா

1. ஒரு மொழிக்கு இலக்கணம் ஏன் தேவை?
2. 'சின்னூல்' என்றழைக்கப்படும் நூல் எது? ஏன்?
3. இறையனாரகப்பொருள் – குறிப்பு வரைக.
4. 'பழையன கழிதலும் புதியன புகுதலும்' – இத்தொடர், இன்றைய நடைமுறை இலக்கணத்திற்குப் பொருந்தியிருப்பதற்குச் சான்று தருக.
5. வழுவற்ற தொடரைக் கண்டறிக.
   அ) தந்தையர் தமது பிள்ளைகளை வழிநடத்துவர்.
   ஆ) தந்தையர் தனது பிள்ளைகளை வழிநடத்துவர்.
   இ) தந்தையர் தம் பிள்ளைகளை வழிநடத்துவர்.
   ஈ) தந்தையர் தன் பிள்ளைகளை வழிநடத்துவர்.

## சிறுவினா

1. தொல்காப்பியப் புறத்திணையியல் சார்ந்து, தனிநூலாகப் பிற்காலத்தில் வளர்ந்த இலக்கண நூல்கள் யாவை? அவை குறித்து எழுதுக.
2. அணியிலக்கணம் தோற்றம் பெற்றதில், தொல்காப்பியத்தின் பங்கு யாது?
3. நன்னூல் – குறிப்பு வரைக.
4. "நான் நாளை வருகிறேன்" என உங்கள் நண்பர் கூறுகிறார். அவர் பேசிய தொடரில் இலக்கணப்பிழை உள்ளதா? ஆம் எனில், அதனை விளக்கிக் கூறுக.
5. தொழிற்றுறை, தொழிந்துறை, தொழில்துறை – இவற்றுள் புணர்ச்சிவிதிப்படி அமைந்த சொற்றொடர் எது? ஏன்? அதற்கான இலக்கணம் தருக.

## நெடுவினா

1. மொழிக்கு அரணாக அமைவது இலக்கணம் – இக்கூற்றை நடைமுறைப் பேச்சு வழக்குகள்கொண்டு விளக்குக.
2. தொல்காப்பிய இயல்களின் வளர்ச்சியாகத் தோன்றிய பிற்கால இலக்கண நூல்கள் குறித்துக் கட்டுரை எழுதுக.

கட்டுரை

# தொடரியல்

## தொடரியல் – ஓர் அறிமுகம்

சொற்கள் தொடர்ந்து நின்று பொருள் தருவது தொடர். தொடரமைப்பு, அதன் பயன்பாடு ஆகியவற்றை ஆராய்வது தொடரியல். தொடரியலின் சிறப்பு, ஒரு மொழியின் வளத்தைக் காண உதவுகிறது. ஒரு மொழியில் சொற்களும் அவற்றின் பொருள்களும் காலந்தோறும் சிறிது வேறுபடக் காணலாம். ஆனால், சொற்றொடர் அமைப்பில் பெரும் மாறுதல் ஏற்படுவதில்லை. அவ்வாறு மாறுதல் ஏற்படினும், அம்மொழியின் அடிப்படை இயல்புக்கு மாறாக அமைவதில்லை. ஆதலால், சொற்றொடர் அமைப்பு ஒன்றே அம்மொழியின் தனிச்சிறப்புகளை உணர்த்த வல்லதாய் உள்ளது.

## தொல்காப்பியம் காட்டும் தொடரமைப்புகள்

நாம் பிறரிடம் பேசும்போது, தொடர்களாகத்தான் பேசுகிறோம். நாம் பயன்படுத்தும் தொடர்களில் இயல்பாகவே இலக்கணக்கூறுகள் அமைந்துள்ளன. அவற்றைத் தொல்காப்பியம் சில நூற்பாக்களில் சுட்டிக்காட்டியுள்ளது. அத்தகைய தொடரமைப்புகள், பின்வரும் தலைப்புகளில் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றை விளக்குவதற்கான எடுத்துக்காட்டுகள், இலக்கியத்திலிருந்தும் நடைமுறை வழக்கிலிருந்தும் எடுத்தாளப்பட்டுள்ளன.

- தொடரில் சொற்கள் அமைந்துவரும் நிலை
- திணை – பால் – எண் - தொடர்ப்பொருத்தம்
- ஒரு சொல் அல்லது தொடர் அடுக்கி வருதல்
- ஒரு தொடரை அடிப்படையாகக்கொண்டு செருகலும் விரித்தலும்
- தொடரில் முன் பின் மாற்றம்
- ஒரு தொடரை இரு வகையாக விளக்குதல்
- இலக்கணக்கூறு நோக்கில் மாற்றம் – தோன்றா எழுவாய்
- தொடரமைப்பில் ஆகுபெயர்

## தொடரில் சொற்கள் அமைந்துவரும் நிலை

கண்ணன் வந்தான்; அவன் கடிதம் கொண்டு வந்தான்.

இங்குக் கண்ணன் என்பது, இயற்பெயர்; அவன் என்பது, சுட்டுப்பெயர். இவ்வாறு இயற்பெயரையுடைய ஒரு தொடரும், அதற்குரிய சுட்டுப்பெயரையுடைய மற்றொரு தொடரும் வரும்போது, அவை, அடுத்தடுத்து வருதல் வேண்டுமெனத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

## திணை – பால் – எண் – தொடர்ப் பொருத்தம்

ஒரு தொடரிலுள்ள எழுவாய், அதன் பயனிலையோடு திணை, பால், எண் ஆகியவற்றில் ஒத்திருத்தல் வேண்டும். அவ்வாறு வருவது, தொடர்ப் பொருத்தம் ஆகும். இதனைக் கீழ்க்காணும் பட்டியல்வழிப் புரிந்துகொள்ளலாம்.

| தொடர்கள் | திணை | பால் | எண் |
|---|---|---|---|
| மாறன் சிரித்தான் | உயர்திணை | ஆண்பால் | ஒருமை |
| மணிமொழி பாடினாள் | உயர்திணை | பெண்பால் | ஒருமை |
| மக்கள் மகிழ்ந்தனர் | உயர்திணை | பலர்பால் | பன்மை |
| மான் துள்ளியோடியது | அஃறிணை | ஒன்றன்பால் | ஒருமை |
| மலர்கள் மலர்ந்தன | அஃறிணை | பலவின்பால் | பன்மை |

மேற்கண்ட தொடர்களில், எழுவாய்ப் பெயரின் திணை-பால், வினைமுற்றின் திணை-பால் ஆகியன ஒத்திருக்கின்றன. இவைபோன்று தொடர்கள் அமைதல் வேண்டும். தம் மரபில் மயங்கி வருதல் கூடாது. இதனை,

*'வினையில் தோன்றும் பாலறி கிளவியும்*
*பெயரில் தோன்றும் பாலறி கிளவியும்*
*மயங்கல் கூடா தம்மர பினவே'*

*(தொல். சொல். கிளவி. 11)*

எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

சில தொடர்களில், இருதிணைக்குரிய எழுவாய்விரவி வரும்போது, அத்தொடருக்குரிய பயனிலை எத்திணைக்குரிய முடிவு பெறும் என்பதில் தடுமாற்றம் ஏற்படலாம். கீழ்க்காணும் தொடரைக் காணுங்கள். சரியான வினைமுற்றைத் தேர்ந்தெடுங்கள்.

மன்னனும் நால்வகைப் படைகளும் விரைவாக முன்னேறிச்__________

(சென்றார்கள் / சென்றன)

விடை காண முடிந்ததா? இத்தொடரில், உயர்திணை எழுவாயும் அஃறிணை எழுவாயும் கலந்து வந்து ஒரு முடிவினைக் கொள்ளும்போது, அவை சிறப்பை நோக்கினால் உயர்திணையிலும், இழிவை நோக்கினால் அஃறிணையிலும் முடியும். ஆகவே, இத்தொடர் சிறப்பு நோக்கி மன்னனும் நால்வகைப் படைகளும் விரைவாக முன்னேறிச் சென்றார்கள் என உயர்திணை முடிவு பெறும். மேலும் சில தொடர்கள்:

மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா. (இழிவு நோக்கி அஃறிணை முடிபு)

இடையனும் ஆடுகளும் மாடுகளும் கோழிகளும் சென்றன. (அஃறிணை எழுவாய் மிகுதி)

ஆசிரியர்கள், மாணாக்கர்கள், கல்வி அலுவலர், தலைமையாசிரியர், நூல்கள் இப்பள்ளியில் இருக்கிறார்கள். (உயர்திணை எழுவாய் மிகுதி)

எனவேதான், திணை – பால் – எண் ஆகியவற்றிற்கேற்பத் தொடர்ப் பொருத்தம் அமைவது மிகவும் இன்றியமையாததாக உள்ளது.

### வழுநிலை

ஒரு தொடரில் திணை, பால், எண், இடம், காலம் ஆகியவற்றுள் ஏதேனும் ஒன்று மாறுபட்டு, முன்நின்ற சொல்லுக்கு ஏற்றவாறு அமையாமல் இலக்கணக் குற்றம் தோன்ற வருவது வழுநிலை. வினா, விடை, மரபு ஆகியன இடம்பெறும் தொடரிலும் வழு தோன்றும். எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகியன இடம்பெறும் தொடரில் வழு வருமிடங்களும் உள்ளன.

**வழு – குற்றம் / பிழை**

| வழுநிலை | |
|---|---|
| அவன் வந்தது | (திணை வழு) |
| கண்மணி வந்தான் | (பால் வழு) |
| பறவைகள் பறந்தது | (எண் வழு) |
| நான் உண்டாய் | (இட வழு) |
| நாளை வருகிறேன் | (கால வழு) |
| இந்தச் சேவல் எத்தனை முட்டை போடும்? | (வினா வழு) |
| "உன் பெயர் என்ன" எனக் கேட்டால், "உடல்நலம் இல்லை" என விடையளிப்பது | (விடை வழு) |
| மயில் கூவும் | (மரபு வழு) |

| வழாநிலை | |
|---|---|
| அவன் வந்தான் | (திணை வழாநிலை) |
| கண்மணி வந்தாள் | (பால் வழாநிலை) |
| பறவைகள் பறந்தன | (எண் வழாநிலை) |
| நான் உண்டேன் | (இட வழாநிலை) |
| நாளை வருவேன் | (கால வழாநிலை) |
| இந்தக் கோழி எத்தனை முட்டை போடும்? | (வினா வழாநிலை) |
| உன் பெயர் என்ன? என் பெயர் மாசிலாமணி | (விடை வழாநிலை) |
| மயில் அகவும் | (மரபு வழாநிலை) |

## வழாநிலை

மணிமாலா பாடினாள் என்னும் தொடரில் இலக்கணக் குற்றமில்லை. இது வழாநிலைத் தொடராகும். 'மணிமாலா' என்னும் உயர்திணைப் பெண்பாற் பெயர், 'ஆடினாள்' என்னும் உயர்திணைப் பெண்பாற் விகுதியைப் பெற்று முடிந்துள்ளது. ஆகவே, நம் முன்னோர் எச்சொல்லை எப்பொருளால் குறித்தனரோ, அச்சொல்லை அப்பொருளிலேயே தொன்றுதொட்டு வழு இல்லாமல் கூறுவதே வழாநிலை. (இலக்கணக் குற்றமில்லாத நிலை)

## வழுவமைதி

பசுவைப் பார்த்து, "என் அம்மை வந்தாள்" எனக் கூறுவது உண்டு. பசு என்பது, அஃறிணையாயினும், அன்பு மிகுதியால் உயர்திணைக்குரிய பெயரைப் பெற்றுள்ளது. இத்தொடர், இலக்கணக் குற்றமுடையதாயினும் சான்றோரால் ஏற்றுக்கொள்ளப் பெற்றமையால் வழுவமைதி ஆயிற்று. இலட்சுமி எனப் பசுவைப் பெயரிட்டு அழைப்பது, ஆண் குழந்தையைப் பெண் குழந்தையைக் குறிக்கும் சொல்லாலும் (வாடி கண்ணே) பெண் குழந்தையை ஆண் குழந்தையைக் குறிக்கும் சொல்லாலும் (வாடா செல்லம்) கூறுவனவெல்லாம் வழுவமைதிகளே. இன்றைய நடைமுறைப் பேச்சில், இளைஞர்களும் இளம்பெண்களும் தங்களுக்குள் எதிர்பாலினரைக் குறிக்கும் சொற்களைப் பயன்படுத்துவதனைக் காணலாம். ஆகவே மொழி என்பது, இலக்கண வரம்புக்கு உட்பட்டதாயினும் சிலபோது விதிமீறல், வரம்பு மீறல் ஆகியன ஏற்படுகின்றன. அவை ஏற்படுவதற்கான காரணங்களைக் கண்டறிந்து, அவற்றை ஏற்றுக்கொள்வதற்கு இலக்கண நூலார் வகுத்ததே வழுவமைதியாம். காவிரி பொங்கி வருகிறாள் - இத்தொடர் வழுவமைதியா? காரணம் கூறுக.

## வழு வருமிடங்கள்

**எழுத்து வழு** – திருகுறள் (ஒற்று மிகுத்து எழுதாமை.)

**சொல் வழு** – நான் சிரித்தான் (நான் சிரித்தேன் என எழுதாமை)

**பொருள் வழு** – கடற்கரையை உடைய வெற்பனே (நெய்தல் நிலத்திற்குரிய தலைவனைக் குறிக்காமல், குறிஞ்சி நிலத் தலைவனைக் குறித்தது).

**யாப்பு வழு** – 'வரிவளைக்கைத் திருநுதலாள். . .' (வெண்பாவில் கலித்தளை மயங்குதல் காய்முன் நிரை)

**அணி வழு** – 'இலங்கு வளை அன்ன நலங்கேழ் ஆம்பல் . . .' (வெள்ளாம்பல்

| வழுவமைதி | வழுவமைதி வகை |
|---|---|
| மரம் போல்வர் மக்கட் பண்பு இல்லாதவர் | திணை வழுவமைதி (உயர்திணையை அஃறிணையாக்குதல்)<br><br>ஏன்? சிந்திக்க. |
| நரியார் வந்தார், கிளியார் பேசினார் | திணை வழுவமைதி (அஃறிணையை உயர்திணையாக்குதல்) |
| சிறுமியாக இருந்தபோது, நான் மணல் வீடு கட்டுவது இந்தக் கடற்கரைதான். | கால வழுவமைதி (இறந்தகாலத்திற்கு எதிர்காலம் வருதல்) |
| வேல்விழி நினைத்தால், ஓட்டப்போட்டியில் முதற்பரிசுதான். | இட வழுவமைதி (வேல்விழி என்னும் பெண், நான் நினைத்தால் எனத் தன்மையில் கூறாமல் படர்க்கையில் கூறுதல்.) |
| இவ்வழி அவ்வூருக்குப் போகும் | மரபு வழுவமைதி (இயங்காத பொருளை இயங்குவதாய்க் கூறுதல்.) வழி - நடந்து செல்லும் பாதை |

பூவைச் சங்குக்கு உவமையாகக் கூறுதல் பொருத்தமில்லாதது.)

## ஒரு சொல் அல்லது தொடர் அடுக்கி வரும் முறை

அடுக்கு என்பது, மீண்டும் மீண்டும் வருவதை அடிப்படையாகக் கொண்டது. அது சொல் நிலையிலும் தொடர் நிலையிலும் அமைந்து வரும்.

### 1. சொல் நிலையில் அடுக்குமுறை

ஒரு சொல் அடுக்கி வருவதற்கு எடுத்துக்காட்டாக,

ஏஎ இஃதொத்தன் – இசைநிறை

என்ன என்ன – அசைநிலை

வருக வருக - பொருளொடு புணர்தல் ஆகியவற்றைக் கூறலாம்.

இசைநிறை, செய்யுளில் வரும் எனக் குறிப்பிட்டாலும், பேச்சு வழக்கிலும் வருமென்பதை மறுத்தல் இயலாது.

எ.கா. போ, போ என் கண்முன் நில்லாதே,

'*இசைநிறை அசைநிலை பொருளொடு*
*புணர்தலென்(று)*
*அவைமூன் றுஎன்ப ஒருசொல் அடுக்கே*'

(தொல். சொல்.எச்சம். 411)

என்னும் நூற்பாவின்வழி, சொல் அடுக்கி வருவதை அறியலாம்.

### 2. தொடர் நிலையில் அடுக்குமுறை

தொடர் நிலையில், வினையெச்சங்கள், வினைமுற்றுகள், வேற்றுமையுருபுகள் ஆகியன அடுக்கி வரும்.

#### அ) வினையெச்சங்கள் அடுக்கி வருதல்

ஒரு தொடரில் பல வினையெச்சங்கள் அடுக்கி வருவதும் உண்டு.

எ.கா. நான் ஊருக்குச் சென்று, பெற்றோரைப் பார்த்து, அவர்களுடன் உரையாடி, அறுசுவை உணவு உண்டு, எனது கல்லூரி விடுதிக்குத் திரும்பி வந்தேன்.

'*பன்முறை யானும் வினையெஞ்சு கிளவி*
*சொன்முறை முடியாது அடுக்குந வரினும்*
*முன்னது முடிய முடியுமன் பொருளே*'

(தொல். சொல். வினை. 233)

#### ஆ) வினைமுற்றுகள் அடுக்கி வருதல்

ஒருதொடரில் பல வினைமுற்றுகள் அடுக்கி வந்தாலும் அவை ஒரு பெயரைக்கொண்டு முடிதல் வேண்டுமெனத் தொல்காப்பியம் கூறுகிறது.

எ.கா. வந்தாள், பார்த்தாள், மகிழ்ந்தாள் மலர்க்கொடி.

'*அவைதாம்*
*தத்தம் கிளவி அடுக்குந வரினும்*
*எத்திறத் தானும் பெயர்முடி பினவே*'

(தொல். சொல். எச்சம். 429)

#### இ) வேற்றுமையுருபுகள் அடுக்கி வருதல்

ஒரு தொடரில் பல உருபுகள் அடுக்கி வந்தாலும், பொருள் உணர்த்தும்வகையில், முடிக்கும் சொல்லால் அமையும்.

எ.கா. பூனைக்குக் கிண்ணத்தில் பாலை ஊற்றி வைத்தான்.

இத்தொடரில் முறையே நான்காம், ஏழாம், இரண்டாம் வேற்றுமையுருபுகள் வந்துள்ளன.

#### ஈ) அடை, சினை, முதல் அடுக்கி வருதல் – வண்ணச் சினைச் சொல்

செங்கால் நாரை இத்தொடர், செம்மை + கால் + நாரை எனப் பிரியும். இத்தொடரில், அடையைக் (பண்பைக்) குறிக்கும் செம்மை என்னும் சொல் முதலிலும், சினையைக் (உறுப்பைக்) குறிக்கும் சொல் இரண்டாவதாகவும், முதலைக் (எழுவாயைக்) குறிக்கும் சொல் மூன்றாவதாகவும் வந்துள்ளன. கரிகால் வளவன், செங்கண் செழியன், மைவிழி மாதவி எனப் பெயர்கள் அமைந்துள்ளமையைக் காணலாம். பேச்சுவழக்கில் அழுமூஞ்சிப் பாப்பா, சுருட்டைத்தலப் பையன் என வருவனவும் வண்ணச் சினைச் சொற்களே. இவ்வாறு அடை, சினை, முதல் ஆகியன மயங்காது முறையாக அடுக்கி வருவதனை,

*'அடைசினை முதலென முறைமூன்றும் மயங்காமை*
*நடைபெற் றியலும் வண்ணச் சினைச்சொல்'*
(தொல். சொல்.கிளவி. 26)

எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

## ஒரு தொடரை அடிப்படையாகக்கொண்டு இடைச்செருகலும் விரித்தலும்

ஒரு தொடரில் பெயரெச்ச, வினையெச்சங்கள், தாம் முடிக்கும் சொல்லுக்குமுன் இடையில் வேறு சொற்களும் வரலாம். இவ்வாறு வரும் சொல்லை இடைநிலை எனத் தொல்காப்பியர் குறித்துள்ளார். மொழியியலார், இடைச்செருகல் எனக் குறிப்பிடுகின்றனர்.

**1. பெயரெச்சத் தொடரில் இடைநிலையாக (செருகலாக) வரும் சொல்**

ஆடிய மயில் - ஆடிய அழகான மயில் (அழகான என்பது இடைச்செருகல்)

கிடைத்த நூல் - கிடைத்த அரிய நூல் (அரிய என்பது இடைச்செருகல்)

**2. வினையெச்சத் தொடரில் இடைநிலையாக (செருகலாக) வரும் சொல்**

படித்துக் கூறினான். - படித்துப் பொருள் கூறினான். (பொருள் என்பது இடைச்செருகல்)

உழுது வந்தான். - உழுது ஏரோடு வந்தான். (ஏரோடு என்பது இடைச்செருகல்)

இக்கருத்தைப் பின்வரும் நூற்பா குறிப்பிடுகிறது.

*'தத்தம் எச்சமொடு சிவணும் குறிப்பின்*
*எச்சொல் ஆயினும் இடைநிலை வரையார்'*
(தொல். சொல்.வினை. 237)

(சிவணும் – பொருந்தும், வரையார் – நீக்கார்.)

'அறத்தை அரசன் விரும்பினான்' எனவும் 'உண்டது பசித்த யானை' எனவும் வரும் தொடர்களில், முறையே வேற்றுமையுருபும் முற்றுவினையும் அமைந்துள்ளன. அரசன், பசித்த என்னும் பிற சொற்கள் அவற்றோடு பொருந்தி வந்துள்ளன. இவ்வாறு பிற சொற்கள் நிற்றலை 'இடைப்பிறவரல்' என்பர். இதனை,

*'உருபு முற்று ஈரெச்சம் கொள்ளும்*
*பெயர்வினை இடைப்பிற வரலுமாம் ஏற்பன'*

என நன்னூல் குறிப்பிடுகிறது.

இடைச்செருகலாக வந்த சொற்கள், பின்னாளில் பெயரடை, வினையடைகளாகத் தொடர்களில் அமைந்தன. சிலபோது, அடைகளாகப்பொருந்திவரும்சிலதொடர்களில், பொருள் மயக்கம் ஏற்படவும் வாய்ப்புள்ளது. எடுத்துக்காட்டாகப் புதிய மாணாக்கர் விடுதி என்னும் தொடரில், மாணாக்கர் என்னும் சொல் இடைச்செருகலாக வரும்போது, மாணாக்கர் புதியவரா, விடுதி புதியதா என்பதில் பொருள் மயக்கம் ஏற்படுகிறது.

புதிய மாணாக்கர் எனப் பொருள் கொள்ளும்போது, மாணாக்கர்தாம் புதியவர். புதிய என்னும் அடைமொழி, மாணாக்கருக்குத் தாம் பொருந்தியுள்ளது. புதிய விடுதி எனப் பொருள் கொள்ளும்போது, விடுதிதான் புதியது.

### அறிவோம் தெளிவோம்

### தொகைநிலையும் தொகா நிலையும்

சொற்கள் தொடர்ந்துநின்று, பொருள் தருவது தொடர். இருசொல்லுக்கு இடையே ஏதேனும் ஓர் உருபு மறைந்து வருவது, தொகைநிலைத் தொடர். வேற்றுமை, வினை, பண்பு, உவமை, உம்மை, அன்மொழி என அறுவகைத் தொகைகள் உள்ளன. (தொகை – தொக்கி வருதல்/ மறைந்து வருதல்)

தொகைநிலைக்கு எதிர்மறை தொகாநிலை. இரு சொல்லுக்கிடையே உருபு/ சொல் மறையாது வருவது. தொகாநிலைத் தொடர்கள் ஒன்பது உள்ளன. அவை: எழுவாய்த்தொடர், வினைமுற்றுத்தொடர், பெயரெச்சத் தொடர், வினையெச்சத் தொடர், விளித்தொடர், வேற்றுமைத் தொகாநிலைத் தொடர், இடைச்சொல் தொடர், உரிச்சொல் தொடர், அடுக்குத் தொடர் என்பன.

புதிய என்னும் அடைமொழி, விடுதிக்குத்தான் பொருந்தியுள்ளது. ஆகவே, இவ்வாறு வரும் தொடர்களைக் கண்டறிந்து, பொருள் மயக்கமின்றி எழுதுதல் வேண்டும்.

### பெயரடையும் வினையடையும் அமைந்த தொடர்கள்

பெயரைச் சிறப்பித்து வருவது, பெயரடை. வினையைச் சிறப்பித்து வருவது, வினையடை.

நாம் பேசும்போது, இவைபோன்ற தொடர்களை மிகுதியாகப் பயன்படுத்துகிறோம். ஒரு நாள் முழுவதும், நீங்கள் பேசிய தொடர்களில் இடம்பெற்ற பெயரடை, வினையடைகளைப் பட்டியலிட்டுப் பாருங்கள். நாம் இத்தனை சொற்களைப் பயன்படுத்தினோமா! என வியப்படைவீர்கள்.

### ஒரு தொடரை இருவகையாக விளக்குதல்

குறிப்பிட்ட ஒரு தொடரை இருவகையாக விளக்குவது குறித்தும் தொல்காப்பியர், சில நூற்பாக்களில் கூறியுள்ளார்.

(எ.கா.) புலி கொல் யானை. இத்தொடர் இருவகையில் பொருள் மாற்றமுடையதாக அமையும். புலியைக் கொன்ற யானை எனவும் புலியால் கொல்லப்பட்ட யானை எனவும் இரு மாறுபட்ட பொருளைத் தருகின்றது. இங்கு வினைமுதல் மாறுவதற்கேற்ப, வினை வடிவம் மாறுகிறது. இதனைத்,

*'தடுமாறு தொழிற்பெயர்க்கு இரண்டும் மூன்றும்*
*கடிநிலை இலவே பொருள்வயி னான'* –

(தொல். சொல். வேற். மயங்கியல் 95)

என்னும் நூற்பா விளக்குகிறது. ஆகவே, தொடரில் பொருள் மயக்கம் தோன்றாத வகையில் ஏற்புடைய வேற்றுமையுருபுகளைப் பயன்படுத்துதல் வேண்டும்.

### தொடரில் முன் பின் மாற்றம்

ஒரு தொடரில் வேற்றுமையுருபு முன் பின்னாக வரும். அதாவது, தொடரின் இடையிலும் வரும், இறுதியிலும் வரும்.

எ.கா. உழுதான் வயலை (தொடரின் இறுதியில் ஐ உருபு வந்தது)

கணினியை இயக்கினான் (தொடரின் இடையில் ஐ உருபு வந்தது)

தமிழில் தொடரியலைவிட உருபனியல் கட்டமைப்புடன் விளங்குகிறது. தொடரியல் அமைப்பு, நெகிழ்வுத் தன்மை கொண்டுள்ளது.

#### பெயரடையும் வினையடையும் அமைந்த தொடர்கள்

குதிரை ஓடியது = பெயர் + வினை

வெள்ளைக் குதிரை = பெயரடை + பெயர்

வெள்ளைக் குதிரை ஓடியது = பெயரடை + பெயர் + வினை

வெள்ளைக் குதிரை விரைவாக ஓடியது = பெயரடை+ பெயர் + வினையடை+வினை

எடுத்துக்காட்டாக,

வைகறைச்செல்வி பாடம் படித்தாள் என்னும் தொடரைக் காண்போம்.

வைகறைச்செல்வி படித்தாள் பாடம்

படித்தாள் வைகறைச்செல்வி பாடம்

படித்தாள் பாடம் வைகறைச்செல்வி

பாடம் வைகறைச்செல்வி படித்தாள்

பாடம் படித்தாள் வைகறைச்செல்வி

மேற்கண்ட தொடர் நெகிழ்வுத் தன்மைகொண்டுள்ளதனை அறியலாம். இதுபோலச் சில தொடர்களில் எழுவாய், செயப்படுபொருள், பயனிலை ஆகியவற்றை இடம் மாற்றியமைத்தாலும் பொருள் மயக்கம் ஏற்படாது.

ஆங்கிலத்தில் தொடரியல் அமைப்பு, நெகிழ்வுத்தன்மை கொண்டதன்று. அம்மொழியில், ஒரு தொடரிலுள்ள எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் ஆகியவற்றை இடம் மாற்றினால், பொருளும் மாறுபடும். (எ.கா.) *The cat killed the rat.*

தமிழில், உருபனியல் அமைப்புடைய தொடரில், சொற்கள் இடம் மாறினால், பொருள் மயக்கம் ஏற்படும். எடுத்துக்காட்டாக,

பொன்மணி பாடலைப் பாடினாள் என்னும் தொடரைக் காண்போம்.

பொன்மணி ஐ பாடல் பாடினாள்

(வேற்றுமையுருபு ஐ இடம் மாறியுள்ளது)

என்று மாற்றியமைத்தால், பொருள் மயக்கம் ஏற்படுகிறது. ஆகவே, தொடரியல் அமைப்பைவிட உருபனியல் அமைப்பு, கட்டமைப்பு உடையது என உணரலாம்.

## இலக்கணக்கூறு நோக்கில் மாற்றம் – தோன்றா எழுவாய்

இலக்கணக்கூற்றின் அடிப்படையிலும் தொடரில் மாற்றம் ஏற்படும். எடுத்துக்காட்டாகத் திண்ணை மெழுகிற்று என்னும் தொடரைக் கூறலாம். இத்தொடரில் எழுவாய் இல்லை. ஆயினும், இத்தொடரிலுள்ள செயப்படுபொருளே (திண்ணை) எழுவாயாக வந்துள்ளது.

உண்மையில், நான் திண்ணையை மெழுகினேன் என்பதே சொல்லப்பட வேண்டிய தொடர். ஆனால், திண்ணை மெழுகிற்று எனக் கூறும்போது, நான் என்னும் எழுவாய் வெளிப்படையாக இல்லை. எழுவாய் மறைந்து வருவதனால், அதனைத் தோன்றா எழுவாய் எனக் குறிப்பர்.

மேலும், திண்ணை மெழுகப்பட்டது எனச் செயப்பாட்டு வினைத்தொடராக அமையும்போது, திண்ணை என்பது, எழுவாயாக அமைகிறது. ஆகவே, செயப்பாட்டு வினை இல்லாமலே செயப்படுபொருள், எழுவாயாக வரும் என்பதைத் திண்ணை மெழுகிற்று என்னும் தொடர் விளக்குகிறது.

மேலும் சில எடுத்துக்காட்டுகள் பின்வருமாறு:

முள் குத்திற்று, வாள் வெட்டிற்று, எழுதுகோல் எழுதிற்று, கல் தடுக்கிற்று ஆகியனவற்றைக் கூறலாம். இக்கருத்தைச்

### ஒலியனியல்

குறிப்பிட்ட ஒரு மொழியில் உள்ள பேச்சு ஒலிகளைக் குறிப்பது ஒலியனியல். ஒரு மொழியில் பொருள் வேறுபாட்டை உணர்த்தக்கூடிய மிகச்சிறிய ஒலிக்கூறே ஒலியன். எ.கா. பட்டம் – சட்டம் இச்சொற்களில் முதலில் அமைந்துள்ள பகரமும் சகரமும் (ப், ச்) பொருளை வேறுபடுத்துகின்றன. இவை ஒலியன்கள்.

### உருபனியல்

ஒரு மொழியில் பொருள் உணர்த்தும் மிகச்சிறிய கூறு உருபன். இதனைப் பகுக்க முடியாது. ஒலியனை அடையாளம் காண்பதற்கு இரு ஒலிகள் ஒன்றிலிருந்து மற்றொன்று வேறுபடும் தன்மை மட்டும் போதுமானது. உருபன்களை அடையாளம் காண வேண்டுமானால், அதன் வடிவமும் அதுஉணர்த்தும் பொருளும் தேவை.

*'செயப்படு பொருளைச் செய்தது போலத்*
*தொழிற்படக் கிளத்தலும் வழக்கியன் மரபே'*
(தொல். சொல். வினை *246*)

என்னும் நூற்பா விளக்குகிறது. இதன் வாயிலாகத் தொல்காப்பியர், தொடரில் ஏற்படும் மாற்றங்களை இலக்கணக் கூற்றின் அடிப்படையில் விளக்க முடியும் என்று கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது.

ஆங்கிலத்தில் இதுபோலத் தொடர் வருவதுண்டு.

*Peter opened the door. (With Subject)*

*The door was opened. (Without Subject)*

## தோன்றாச் செயப்படுபொருள்

ஒரு தொடரில் செயப்படுபொருள் வெளிப்படையாகத் தெரியாமல் இருக்கலாம். அவ்வாறு மறைந்து வருவது தோன்றாச் செயப்படுபொருள். நான் படித்தேன் என்னும் தொடரில், பாடம் என்னும் செயப்படுபொருள் வெளிப்படையாகத் தோன்றவில்லை. நான் ஆடினேன் என்னும் தொடரிலும் நடனம் என்னும் செயப்படுபொருள் வெளிப்படையாகத் தோன்றவில்லை. இத்தொடர்களில் படித்தேன், ஆடினேன் என்னும் வினைமுற்றுகளே செயப்படுபொருளை உணர்த்திவிடுகின்றன.

### உருபனியலை அடையாளங்காணல்

முருகனுக்குத் தந்தான், பசித்தவர்க்கு உணவளித்தான் என்னும் தொடர்களில் கு என்னும்வேற்றுமையுருபுகொடைப்பொருளையே குறிக்கிறது. இவ்வுருபை மேலும் பகுக்க முடியாது. கு என்னும் உருபை முருகன், பசித்தவர் ஆகிய சொற்களிலிருந்து பிரித்தாலும், பெயர்ச்சொற்கள் பொருளைத் தருகின்றன. ஆனால், கொக்கு, சுக்கு ஆகிய சொற்களிலுள்ள கு என்பதைப் பிரிக்க முடியாது. பிரித்தால் கொக், சுக் என்பன பொருள் தரா. ஆகவே,

முருகனுக்கு – கு என்பது ஓர் உருபன்.

கொக்கு – கு என்பது உருபன் அன்று. அது சொல்லின் உறுப்பே.

## தோன்றாப் பயனிலை

ஒருதொடரில்பயனிலைவெளிப்படையாக வரவில்லையெனில், அதனைத் தோன்றாப் பயனிலை என்பர்.

எனக்குப் பசி (இருக்கிறது)

எங்கள் வீட்டிற்கு அருகில் ஒரு கோவில் (இருக்கிறது)

என்னும் தொடர்களில், இருக்கிறது என்னும் பயனிலை வெளிப்படையாகத் தோன்றவில்லை. இவ்வினைமுற்று, தோன்றாப் பயனிலையாகும்.

## முக்காலத்துக்கும் பொருத்தமுடைய வினைமுற்று

முக்காலத்தும் இருக்கும் ஒரு பொருளை விளக்கும்போது, அத்தொடரின் வினைமுற்று, செய்யும் என்னும் வாய்பாட்டில் அமைதல் வேண்டும் என வினையியலில் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். எடுத்துக்காட்டாக,

நீர் குளிரும்

மலை நிற்கும்

ஞாயிறு தோன்றும்

ஐப்பசி மாதத்தில் அடைமழை பெய்யும்

நூலகம் காலை ஒன்பது மணிக்குத் திறக்கும்

ஆகிய தொடர்களைக் கூறலாம். இவையனைத்தும் செய்யும் என்னும் வாய்பாட்டால் அமைந்துள்ளன. இதுபோல் ஆங்கிலத்திலும் உண்டு. (எ.கா.) *The Sun rises in the east.*

*முந்நிலைக் காலமும் தோன்றும் இயற்கை*
*எம்முறைச் சொல்லு நிகழும் காலத்து*
*மெய்ந்நிலைப் பொதுச்சொல் கிளத்தல் வேண்டும்*
(தொல்.வினை. *240*)

## தெரிநிலை வினைமுற்று

வினைமுற்றுச் சொற்கள் தெரிநிலை, குறிப்பு என இருவகைப்படும். ஒரு செயலைத் தெளிவாகத் தெரிவிக்கும் வினை, தெரிநிலை

வினைமுற்று. இவ்வினைமுற்றின் விகுதியானது திணை, பால், எண், இடம் ஆகியவற்றையும் உணர்த்துகிறது. எடுத்துக்காட்டாக, நடந்தான் என்னும் வினைமுற்றில் உயர்திணை(திணை), ஆண்பால்(பால்), ஒருமை(எண்), படர்க்கை(இடம்) ஆகியன உள்ளன. இஃது, இறந்தகாலத்தையும் குறிக்கிறது; செய்பவன், கருவி, காலம், நிலம், செயல், செய்பொருள் ஆகிய ஆறனையும் வெளிப்படையாக உணர்த்துகிறது.

எழுதினாள் – இவ்வினைமுற்று மேற்கூறிய ஆறனையும் வெளிப்படுத்துகிறதா ? கண்டறிக.

## குறிப்பு வினைமுற்று

செயல் செய்பவரை வெளிப்படையாகக் காட்டிச் செயலையும் காலத்தையும் குறிப்பாகத் தெரிவித்து நிற்கும் வினைச்சொல்லே குறிப்பு வினைமுற்று. பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் ஆகிய அறுவகைப் பெயரின் அடியாகக் குறிப்புவினை தோன்றும். இவன் பொன்னன் என்பது, பொன்னை உடையவனாக இருந்தான், இருக்கிறான், இருப்பான் எனப் பொருளுணர்த்திச் செயலையும் காலத்தையும் குறிப்பாகவும் செயல் செய்பவனை வெளிப்படையாகவும் கூறுகிறது.

## தொடரமைப்பில் ஆகுபெயர்

நாம் பேசும்போது, இயல்பாகவே நம்மையறியாமல் இலக்கணக்கூறுகளைப் பயன்படுத்திப் பேசுகிறோம். எடுத்துக்காட்டாக ஆகுபெயரைக் கூறலாம். கீழ்க்காணும் உரையாடல்களைப் படித்துப்பாருங்கள். அவற்றுள் ஆகுபெயர் இடம்பெற்றுள்ளதனை அறிந்துகொள்வீர்கள்.

**(வீட்டில்...)**

அம்மா: கண்ணா, பள்ளிக்கு நேரமாகவில்லையா?

கண்ணன் : அம்மா, இன்று *பள்ளிக்கு விடுமுறை.*

**(பேருந்து நிறுத்தத்தில்...)**

ஒருவர் : ஐயா, *47 சென்றுவிட்டதா?*

மற்றொருவர் : இன்னும் வரவில்லை.

**(பேருந்தில்...)**

நடத்துநர்: *காந்தி மண்டபம் யாரு?* இறங்குங்க.

**(அலுவலகத்தில்...)**

மேலாளர் : *அந்த நீலச்சட்டை* இன்னும் வரவில்லையா?

**(பள்ளியில்...)**

முகிலன்: மதி, *பாரதியாரைப் படித்துவிட்டாயா?*

மதியழகன் : ஓ! படித்துவிட்டேனே!

மேற்கண்ட உரையாடல்களில், பள்ளிக்கு விடுமுறை என்பது, பள்ளியைக் குறிக்காமல், அங்குப் படிக்கும் மாணாக்கருக்கு விடுமுறை என்பதனைக் குறிக்கிறது. இஃது, இடவாகுபெயர். இதுபோலவே மற்ற தொடர்களிலுள்ள ஆகுபெயர்களையும் கண்டறியுங்கள்.

ஆகுபெயர் என்பது, ஒரு பொருளின் இயற்பெயர், அதனைக் குறிக்காமல் அதனொடு தொடர்புடைய மற்றொரு பொருளுக்கு ஆகி வருவதாகும். ஆகுபெயர் குறித்தும் அதன் வகைகள் குறித்தும் ஏற்கெனவே படித்திருக்கிறீர்கள். அவற்றை நினைவு கூருங்கள்.

தமிழில் ஆகுபெயர், தொடரியல் இலக்கணத்துடன் தொடர்புடையதாக உள்ளது. பெயர்கள் தொடரிலிருந்து வருவிக்கப்படுவதனால், அவற்றை வேற்றுமை மயங்கியலில் தொல்காப்பியர் அமைத்துள்ளார்.

## பலவகைத் தொடர்கள்

இன்றைய வழக்கில், நாம் பேச்சிலும் எழுத்திலும் பலவகைத் தொடர்களைப் பயன்படுத்துகிறோம். செய்தித்தொடர், வினாத்தொடர், கட்டளைத்தொடர், உணர்ச்சித் தொடர் ஆகியன நாம் படிக்கும் நாளிதழ், வார, மாத இதழ்கள், விளம்பரம், அறிவிப்பு ஆகியவற்றிலும் இடம்பெறுகின்றன. அவற்றைப் படித்துப் பார்ப்பதுடன் இருந்துவிடாமல்,

அவற்றின் தொடரமைப்பை அறிந்துகொள்ளவும், பிழை கண்டறிந்து திருத்தவும் தெரிந்துகொள்ளுதல் வேண்டும்.

## தொடர் வகையும் தொடரமைப்பும்

தொடர்கள், கருத்தை வெளிப்படுத்தும் வகையில் நால்வகையாக அமைந்து வருவதனை ஏற்கெனவே படித்திருப்பீர்கள். அவற்றை மீண்டும் நினைவுகூர்வோமா?

தொடர்வகைகளுக்குச் சில எடுத்துக்காட்டுகளைக் கீழ்க்காணும் அட்டவணையில் காணலாம்.

**தொடர் வகை**

- செய்தித் தொடர்
- வினாத் தொடர்
- விழைவுத் தொடர்
- உணர்ச்சித் தொடர்

| தொடர்வகை | தொடர் |
|---|---|
| செய்தித்தொடர் | என் தந்தை தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். |
| வினாத்தொடர் | 'ஆனந்தயாழை மீட்டுகிறாய்' என்னும் பாடலைப் பாடிய கவிஞர் யார்? |
| விழைவுத்தொடர் | மழை வருவதற்குமுன் வீட்டுக்குச் செல்க. (கட்டளை)<br>நீடூழி வாழ்வாயாக! (வாழ்த்துதல்)<br>வாய்மையையும் நேர்மையையும் பின்பற்றாதவர்கள் ஒழிக. (வைதல்)<br>வயிறார உணவிடுக. (வேண்டுதல்) |
| உணர்ச்சித்தொடர் | ஐ! எவ்வளவு பெரிய யானை! (வியப்பு)<br>அந்தோ! தாவரங்கள் நீரின்றி வாடுகின்றனவே! (துன்பம்/அவலம்)<br>தலைவா, வருக! வருக! உன் வரவு நல்வரவாகுக! (மகிழ்ச்சி) |

### தொடரமைப்புகள்

தொடரமைப்புகளுள் சிலவற்றைத் தனிநிலை, தொடர்நிலை, கலவைத் தொடர்கள் என ஆங்கில இலக்கண அமைப்பையொற்றிக் கூறுகின்றனர். அத்தகைய அமைப்புடைய தொடர்கள், பெரும்பான்மையாகக் கதை, கட்டுரைகளில் இடம்பெறுகின்றன.

### தனிநிலைத் தொடர்

கண்மணி நாளிதழ் படிக்கிறாள்.

(ஓர் எழுவாய், ஒரு பயனிலை)

கண்மணி நாளிதழையும், வளவன் வார இதழையும், முருகன் மாத இதழையும் படிக்கின்றனர்.

(பல எழுவாய்கள், ஒரே பயனிலை)

### தொடர்நிலைத் தொடர்

நான் நன்றாகப் பொருளுணர்ந்து படித்தேன்; அதனால், தேர்வில் முதலிடம் பெற்றேன். (ஒரே எழுவாய், பல பயனிலைகள்)

நான் என்பது எழுவாய். படித்தேன், பெற்றேன் என்பன பயனிலைகள். அதனால் என்பது, இணைப்புச்சொல்.

இவ்வாறு, ஒன்றுக்கும் மேற்பட்ட தொடர்கள், அதனால், ஆகையால், ஏனெனில், ஏனென்றால் முதலான இணைப்புச் சொற்களால் இணைக்கப்பட்டு வருவதும், ஓர் எழுவாய், பல பயனிலைகளைக்கொண்டு முடிவதும் தொடர்நிலைத் தொடர்களாகும்.

## கலவைத்தொடர்

தமிழில் பிழையின்றி எழுத வேண்டுமெனில், நல்ல தமிழ்நூல்களைப் படிக்க வேண்டும் என்னும் தொடரில், நல்ல தமிழ்நூல்களைப் படிக்க வேண்டும் என்பது, முதன்மைத் தொடர். தமிழில் பிழையின்றி எழுத வேண்டுமெனில் என்பது, சார்புத் தொடர். இவ்வாறு, பல தொடர்கள் கலந்து ஒரே தொடராக வருவது கலவைத் தொடராகும்.

ஒரு தொடரை மற்றொரு தொடராக மாற்றுதல்

ஒரு தொடரை மற்றொரு தொடராக மாற்றும் பயிற்சியைக் கீழ்வகுப்புகளிலேயே மேற்கொண்டுள்ளோம். அவ்வாறு மாற்றம் பெறும் தொடர்களை வினை மாற்றம், கூற்று மாற்றம், ஒரு தொடரைப் பல்வகையாக மாற்றுதல் எனப் பகுத்துக் காணலாம்.

## வினை மாற்றம்

ஒரு தொடரை மற்றொரு தொடராக மாற்றும்போது, பெயர்ச்சொற்கள் மாற்றம் அடைவதில்லை. வினைச்சொற்களே மாற்றம் அடைகின்றன.

- செய்வினை – செயப்பாட்டு வினை

பூங்குழலி யாழ் மீட்டினாள் – செய்வினைத்தொடர்

யாழ் பூங்குழலியால் மீட்டப்பட்டது – செயப்பாட்டு வினைத் தொடர்

தன்வினை – பிறவினை

தமிழழகன் கல்வி கற்றான் – தன்வினை

தமிழழகன் கல்வி கற்பித்தான் – பிறவினை

உடன்பாட்டு வினை– எதிர்மறை வினை

கலைச்செல்வி நேற்று வந்தாள் – உடன்பாட்டு வினை

கலைச்செல்வி நேற்று வந்திலள் – எதிர்மறை வினை

இன்றைய வழக்கில், இறந்த காலத்திலும் நிகழ்காலத்திலும் தொடர்களில் எதிர்மறைப் பொருளை உணர்த்த இல்லை என்னும் சொல் பயன்படுகிறது. எதிர்காலத்தில் எதிர்மறைப்பொருளை உணர்த்த ஆ என்னும் எதிர்மறை இடைநிலையுடன் சேர்ந்த மாட்டா (மாட்டு + ஆ) மாட்டாள் என்னும் சொல் வருகிறது.

இளமுருகன் நேற்று வரவில்லை (இறந்தகாலம்)

விண்ணரசி இன்று வரவில்லை (நிகழ்காலம்)

இனியன் நாளை வரமாட்டான் (எதிர்காலம்)

அல்ல என்னும் சொல்லும் ஐம்பால்மூவிடத்துக்கும் முக்காலத்திலும் எதிர்மறைப் பொருளில் வருகிறது.

நான் அல்ல, நீ அல்ல, நாங்கள் அல்ல, நீங்கள் அல்ல.

அவன் அல்ல, அவள் அல்ல, அவர் அல்ல, அது அல்ல, அவை அல்ல.

(நான் அல்லேன்; நீ அல்லை; நாங்கள் அல்லேம் என்பன இலக்கண வழக்கு.)

## கூற்று மாற்றம்

ஒருவர் கூறியதனையே கூற்று என்கிறோம்.

- நேர்க்கூற்று – அயற்கூற்று

ஒருவர் பேசுவது, நேர்க்கூற்று எனவும், அவர் பேசியதனைப் பிறர் வாங்கி (எடுத்து)க் கூறுவது அயற்கூற்று எனவும் கூறுவர்.

"தேன்மொழி, நூலைக் கொடு" என்று, வளவன் கேட்டான். – நேர்க்கூற்று

நூலைத் தனக்குக் கொடுக்குமாறு தேன்மொழியை வளவன் கேட்டான். – அயற்கூற்று

ஒரு தொடரைப் பலவகைத் தொடர்களாக மாற்றுதல்

ஒரு தொடரைப் பலவகையாகவும் மாற்றலாம். எடுத்துக்காட்டாக, கதிரவன்

ஓவியம் வரைந்தான் என்னும் தொடரை வெவ்வேறு தொடராக மாற்றிப் பார்ப்போம்.

கதிரவன் ஓவியம் வரைந்தான் - செய்தித்தொடர் (உடன்பாடு)

கதிரவன் ஓவியம் வரைந்திலன் - செய்தித்தொடர் (எதிர்மறை)

கதிரவன் ஓவியம் வரைந்தானா - வினாத்தொடர்

கதிரவா, ஓவியம் வரை - கட்டளைத்தொடர்

கதிரவா, என்னே! உன் ஓவியத்தின் அழகு! - உணர்ச்சித்தொடர்

என மாற்றியமைக்கலாம். மேலும், அத்தொடரை ஓவியம் கதிரவனால் வரையப்பட்டது எனச் செயப்பாட்டு வினைத்தொடராகவும், கதிரவன் ஓவியம் வரைவித்தான் எனப் பிறவினைத் தொடராகவும் மாற்றலாம்.

## மொழிநடை

கற்போர் உள்ளம் கவரும்வகையில் எழுதுவதே மொழிநடையாகும். மொழிநடை என்பது, தொடர்களில் உள்ள அமைப்பொழுங்கைக் குறிப்பது எனலாம். கட்டுரைகளையும் நூல்களையும் படைக்கும் படைப்பாளர்கள், தமக்கெனக் குறிப்பிட்ட ஒரு மொழிநடையைப் பின்பற்றுகின்றனர். அவர்களின் படைப்புகளில், தொடர்கள் இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றன. இனிய நடை, எளிய நடை, தனித்தமிழ் நடை, இலக்கிய நடை, மணிப்பிரவாள நடை, அடுக்குமொழி நடை, வினாவிடை நடை என்பன சில மொழிநடைகளாகும்.

## வினாவிடை நடை

கைபுனைந்தியற்றா ஓரழகே அழியா அழகெனப்படும். கைபுனைந்தியற்றும் அழகு அழியுந்தன்மையது. கைபுனைந்தியற்றாக் கவின்பெறு வனப்பு என்றார் நக்கீரனாரும். கையால் செய்யப்படுவது செயற்கை. கையால் செய்யப்படாதது இயற்கை. மலையும் ஆறும் காடும் கடலும் எவர் கையால் ஆக்கப்பட்டன? அவை எக்கருவிகளால் செய்யப்பட்டன? ஞாயிறும் திங்களும் விண்மீன்களும் எவரால் செய்யப்பட்டன? புனலுக்குத் தண்மை ஈந்தவர் எவர்? நெருப்புக்கு வெம்மையூட்டினவர் எவர்? இயல்பாக அரும்பிய இவற்றின் அழகே கைபுனைந்தியற்றாக் கவின்பெறு வனப்பாகும். மற்றையது போலி. –முருகன் அல்லது அழகு, திரு. வி. கலியாண சுந்தரனார்

இவ்வுரைப்பகுதியில் வினா கேட்டு, அதற்கு விடை கூறுவது போன்ற தொடர்கள் அமைந்துள்ளன. பண்டைய இலக்கண உரைநூல்களில், இவ்வினா விடை நடையைப் பெரிதும் காணலாம். இதற்குத் தடைவிடை நடை என்றும் பெயர். (தாமே தடைகளை எழுப்பி, விடை கூறும் நடை). இவ்வுரைப்பகுதியின் மொழிநடைச் சிறப்பைப் பட்டியலிடுவோமா!

- சிறு சிறு தொடர்களாக அமைந்துள்ளன.
- வினாத்தொடர்கள் இடம்பெற்றுள்ளன.



### தெரியுமா?

ஒரு வேர்ச்சொல்லிலிருந்து, எண்ணற்ற சொல் வடிவங்களை/சொல்லாக்கங்களை உருவாக்க இயலும்.

எ.கா. படி என்னும் வேர்ச்சொல்லிலிருந்து . . .

| | | |
|---|---|---|
| படித்த | படித்து | படித்தல் |
| படிக்கிறேன் | படித்தேன் | படிப்பேன் |
| படிக்கிறோம் | படித்தோம் | படிப்போம் |
| படிக்கிறாய் | படித்தாய் | படிப்பாய் . . . |

மேலும், பல சொல் வடிவங்களைக் காண இந்த வலைத்தளத்தைப் பார்வையிடுங்கள்.

www. tamilvu.org (தமிழ் இணையக் கல்விக்கழகம்)

• அழகு, கவின், வனப்பு என ஒரு பொருள் தரும் பல சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

• இயற்கை – செயற்கை, புனல் – நெருப்பு, ஞாயிறு – திங்கள், தண்மை – வெம்மை என எதிர்ச்சொற்கள் இடம்பெற்றுள்ளன.

• காரிருள் நீழல், தேன் பூங்கா வனம், வான் பரந்த பொழில், கான் பரந்த தூறு என அடைமொழிகள் வந்துள்ளன.

• மலையும் ஆறும் காடும் கடலும், ஞாயிறும் திங்களும் விண்மீன்களும் என எண்ணும்மைகள் அமைந்துள்ளன.

• 'கைபுனைந்தியற்றாக் கவின்பெறு வனப்பு' என்னும் அழகிய தொடர் உள்ளது.

இவ்வாறு, இவ்வுரைப்பகுதியின் நடைச்சிறப்பை உய்த்துணரலாம். ஆகவே, நாம் பலவகை மொழிநடைகளையும் அறிந்துகொள்ள வேண்டுமானால், அறிஞர் பலர் எழுதியுள்ள பல நூல்களையும் படித்தல் வேண்டும்.

## தொடரியலுக்கு வளஞ்சேர்க்கும் விகுதிகள்

தொல்காப்பியர் காலத்திற்குப் பின்னர், காலந்தோறும் மொழியில் ஏற்பட்ட மாற்றங்கள் தொடர்களிலும் இடம்பெறத் தொடங்கின. எடுத்துக்காட்டாகச் சங்கம் மருவிய காலத்தில் ஆளர், காரர் ஆகிய ஆக்கப்பெயர் விகுதிகள் சேர்ந்து, புதிய சொற்கள் உருவாகின.

### மணிப்பிரவாள நடை

மணியும் பவளமும் கலந்ததுபோல் வடசொற்களையும் தமிழ்ச்சொற்களையும் கலந்து எழுதும் நடை. இடைக்காலத்தில் இந்நடை செல்வாக்குப் பெற்றிருந்தது. பல்லவர் காலத்தில் எழுதப்பட்ட ஸ்ரீபுராணம், சத்திய சிந்தாமணி முதலிய நூல்கள் இந்நடையில் அமைந்திருந்தன.

(காவலாளர் – மணிமேகலை ), (கஞ்சக்காரர் – சிலம்பு ).

பல்லவர், சோழர், நாயக்கர் காலங்களிலும் மொழியில் மாற்றங்கள் ஏற்பட்டன. நாயக்கர் காலத்தில் பயன்படுத்தப்பட்ட காரன், காரி, சாலி ஆகிய ஆக்கப்பெயர் விகுதிகள், இக்காலத் தொடர்களிலும் மிகுதியாகப் பயன்படுகின்றன. இவை வடமொழியோடு ஒப்புமையாக்கப்பட்ட விகுதிகளாகும். எடுத்துக்காட்டாகப் பால்காரன், வீட்டுக்காரி, வண்டிக்காரர், புத்திசாலி, பலசாலி, பொறுமைசாலி, திறமைசாலி, மேலாளர், விற்பனையாளர், உரிமையாளர், கல்வியாளர், சிந்தனையாளர் ஆகியவற்றைக் கூறலாம்.

தொடர்களையும் அவற்றிற்குரிய இலக்கண விதிகளையும் அறிந்துகொள்வது மட்டுமன்றிப் பலவகைத் தொடர்களைப் பயன்படுத்திப் பிழையின்றிப் பேசவும் எழுதவும் செய்வோம். மொழியின் தொடரியல் அமைப்பைப் போற்றுவோம்.

## படிப்போம் சுவைப்போம்

### திருக்குறளில் தொடரமைப்புக் கூறுகள்

| தோன்றா எழுவாய் | தோன்றாச் செயப்படுபொருள் | தோன்றாப் பயனிலை |
|---|---|---|
| *இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி மாசறு காட்சி யவர்க்கு'* <br> *குறள். 352* | *சென்ற இடத்தால் செலவிடா தீதொரிஇ நன்றின்பால் உய்ப்பது அறிவு'* <br> *குறள். 422* | *கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற்றாங்கே எடுப்பதூஉம் எல்லாம் மழை'* <br> *குறள் .15* |
| எது இன்பம் பயக்கும்? என்னும் வினாவுக்கு, மாசறு காட்சியவர்க்கு அக்காட்சி இன்பம் பயக்கும். இங்குக் காட்சி என்பது, தோன்றா எழுவாய். | எதை உய்ப்பது அறிவு? என்னும் வினாவுக்கு, மனத்தை உய்ப்பது அறிவு என விடை வரும். இங்கு, மனம் என்பது, தோன்றாச் செயப்படுபொருள். | கெடுக்க வல்லதும் மழை, காக்க வல்லதும் மழை. இங்கு வல்லது என்பது, தோன்றாப் பயனிலை. நாம்தான் அச்சொல்லை வருவித்துக் கொள்ளல் வேண்டும். |

## கண்ணாடி

### பொருத்தமான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. சிலம்பரசன் அரசுப் பள்ளியில் படிக்கிறான். அவன் தம்பியும் அதே பள்ளியில் படிக்கிறான்– இத்தொடரமைப்பு-------------

   அ) இயற்பெயர் + இயற்பெயர் ஆ) இயற்பெயர் + சுட்டுப்பெயர்

   இ) சுட்டுப்பெயர் + இயற்பெயர் ஈ) சுட்டுப்பெயர் + சுட்டுப்பெயர்

2. செழியன் காலை எழுந்து, நூல் படித்து, உணவு உண்டு, பள்ளிக்குச் சென்றான் – இத்தொடரில் அடுக்கி வந்திருப்பது

   அ) வினையெச்சங்கள் ஆ) வினைமுற்றுகள் இ) பெயரெச்சங்கள் ஈ) வேற்றுமையுருபுகள்

3. வண்ணச் சினைச்சொல்லைக் குறிக்காத தொடர்------------

   அ) செங்கால் நாரை ஆ) கரிகால் வளவன் இ) அழகிய மரம் ஈ) பைந்தண்டுத் தாமரை

4. பாடும் குயில் – இப்பெயரெச்சத் தொடரில் இடையில் வருவதற்குப் பொருத்தமான சொல்லைத் தேர்ந்தெடுக்க.

   அ) கரிய ஆ) சிவந்த இ) மெல்லிய ஈ) வெள்ளை

### குறுவினா

1. தொடரில், வேற்றுமையுருபுகள் அடுக்கி வருவதற்கு எடுத்துக்காட்டுகள் தருக.
2. மான் மேய்ந்தது – இத்தொடரில், இரு சொல்லுக்கிடையே வேறு பல சொற்களை இணைத்துத் தொடர்களை உருவாக்குக.
3. எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் ஆகிய மூன்றும் அடைமொழியுடன் வருமாறு தொடர்களை அமைத்துக்காட்டுக.
4. குழந்தை சிரித்தது – இத்தொடரைச் செயப்பாட்டு வினைத் தொடராக மாற்ற இயலுமா? காரணம் கூறுக.
5. பறவைகள் தம்கூட்டை நோக்கிப் பறந்து சென்றது – இத்தொடரில் அமைந்துள்ள பிழையைக் கண்டறிந்து, திருத்துக. இதுகுறித்துத் தொல்காப்பியம் விளக்குவதைக் குறிப்பிடுக.
6. வழுநிலை என்றால் என்ன? எடுத்துக்காட்டு தருக.

### சிறுவினா

1. தொடர்ப் பொருத்தம் அமைந்து வருவதனை எடுத்துக்காட்டுடன் விளக்குக.
2. செயப்படுபொருளே எழுவாயாக வரும் என்பதைத் தொல்காப்பியம்வழி விளக்குக.
3. நாம் பேசும்போது, இயல்பாகவே ஆகுபெயரைப் பயன்படுத்துகிறோம் என்பதனை நடைமுறை எடுத்துக்காட்டுடன் விளக்குக.

4. ஏதேனும் ஒரு செய்தித்தொடரை உருவாக்குக. அத்தொடரை வெவ்வேறு தொடர்களாக மாற்றியமைத்துக்காட்டுக.

5. கீழ்க்காணும் உரைப்பகுதியின் மொழிநடைச் சிறப்பை விளக்குக.

"சிறைச்சாலையில் செக்கிழுத்த துயரத்தை மாற்றியது என் செந்தமிழன்றோ! கைத் தோலுரியக் கல்லுடைக்கும்போது என் கண்ணீரை மாற்றியது கன்னித் தமிழன்றோ! சிறைக்கோட்டத்தில் வேலை ஒழிந்த வேளையில் தொல்காப்பியத்தைப் படித்துப் படித்து என் தொல்லையெல்லாம் மறந்தேன். வள்ளுவர் குறள் படித்து உள்ளம் தழைத்தேன்".

## நெடுவினாக்கள்

1. அண்மையில், நீங்கள் கேட்ட உரையாடலில் இடம்பெற்ற தொடர்களின் தொடரமைப்புகளை ஆராய்ந்து எழுதுக.

2. சொல் நிலையிலும், தொடர் நிலையிலும் சொற்கள் அடுக்கி வருவதனை நடைமுறை எடுத்துக்காட்டுகளோடு விளக்குக.

3. வழுநிலை, வழாநிலை, வழுவமைதி ஆகியவற்றுக்கு நடைமுறை எடுத்துக்காட்டுகள் தந்து விளக்குக.

### படிப்போம் சுவைப்போம்

விருந்தொன்றில் கலந்துகொண்ட அனைவருக்கும் பழம்பால் வழங்கப்பட்டது. அங்கிருந்த புலவர், மற்றொருவரிடம், "பண்புத்தொகையா? உம்மைத்தொகையா?" என்று வினவினார். இவர், புலவர் கூறியதன் பொருள் புரியாமல் விழித்தார். "என்ன ஐயா, விளங்கவில்லையா?

பழம்பால் என்று கூறினால், பண்புத்தொகை. (பழைமை + பால்). அதாவது, பழைய பால்

பழம் பால் என்று கூறினால், உம்மைத்தொகை. (பழம் + பால்) அதாவது, பழமும் பாலும். புரிந்ததா" என்று புலவர் விளக்கினார். அவரின் சிலேடை நயத்தைக் கேட்டு, இவர் வியப்பில் ஆழ்ந்தார்.

(பால் பழம் எனக் கூறினால், உம்மைத்தொகை மட்டுமே வரும்.)

### அறிவோம் தெளிவோம்

**ஒரு சொல் இரு பொருள்**

பெரும்புலவர் ஒருவர் விருந்துண்ணச் சென்றார். விருந்து முடிந்ததும், அவர் பருகுவதற்குப் பால் வழங்கப்பட்டது. அந்தப் பாலில் ஒரு சிற்றெறும்பு கிடந்தது. அதனைக் கண்டதும் அவர், "பாற்கடலில் சீனிவாசன் பள்ளி கொள்கிறான்" என்றார். அவர் கூறியதன் பொருள் விளங்காமல், அருகிலிருந்தவர்கள் வியப்புடன் நோக்கினர். அதற்கு அப்பெரும்புலவர், 'சீனி (சருக்கரை) யின் வாசத்தை அறிவது எறும்புதானே! அதனால், எறும்பைச் சீனிவாசன் என்று கூறலாமல்லவா! இந்தப் பாலில் எறும்பு இருப்பதைப் பாருங்கள். அதைச் சுட்டவே, "பாற்கடலில் சீனிவாசன் பள்ளி கொள்கிறான் என்று கூறினேன்" என விளக்கம் தந்தார்.

பாற்கடலில் சீனிவாசன் – இருபொருள்

- திருப்பாற்கடலில் பள்ளி கொண்டுள்ள இறைவன்
- சீனியின் வாசம் அறியும் எறும்பு

உரையாடல்

# அகராதிக் கலை

**கற்பனை உரையாடல்**

**இடம்: சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்**

**உரையாடுவோர்: அமுதா, அந்தோணி, அப்துல்லா இவர்களுடன் அகராதி**

***அகராதி:*** *மாணாக்கர்களே! என்ன தேடுகிறீர்கள்?*

***அமுதா:*** *எங்கிருந்து வருகிறது குரல்? (அமுதா, அந்தோணி, அப்துல்லா ஆகிய மூவரும் சுற்றும்முற்றும் பார்க்கின்றனர்).*

***அகராதி:*** *நான்தான் அகராதி பேசுகிறேன். உங்களுக்கு என்ன வேண்டும்?*

***அந்தோணி:*** *ஓ! பேசும் அகராதியா, மிக்க மகிழ்ச்சி. எங்களுக்குக் 'குவலயம்' என்னும் சொல்லுக்குப் பொருள் வேண்டும்.*

***அகராதி:*** *குவலயம் என்றால் உலகம். வையம், ஞாலம், புவி, புவனம், அகிலம், அண்டம், பார், தரணி, பூமி ஆகிய சொற்களும் உலகம் என்னும் பொருளைத்தான் குறிக்கின்றன.*

***அப்துல்லா:*** *அப்படியா! வியப்பாக உள்ளதே! உலகம் என்பதற்கு இத்தனை சொற்கள் இருக்கின்றனவா! அகராதியே! உன்னைப்பற்றித் தெரிந்துகொள்ள ஆவலாக உள்ளோம். உன் தோற்றம் குறித்துச் சொல்வாயா?*

***அகராதி:*** *ஓ! சொல்வேனே! அகரம், ஆதி என்னும் இரு சொற்களின் சேர்க்கையே நான். ஆதி என்பதற்கு முதல் என்னும் பொருளும் உண்டு. ஒரு மொழியிலுள்ள எல்லாச் சொற்களையும் அகர வரிசையில் அமையும்படி தொகுத்து விளக்கும் நூல்தான் நான். என்னை அகரமுதலி எனவும் கூறுவர்.*

***அமுதா:*** *அகராதியே! அயல்நாட்டவர்தாம் உன்னைத் தமிழுக்கு அறிமுகம் செய்தனரா?*

***அகராதி:*** *இல்லை! இல்லை! தமிழில் சொல்லுக்குச் சொல் பொருள் விளக்கம் செய்யும்முறை தொல்காப்பியர் காலத்திலேயே தொடங்கிவிட்டது. தொல்காப்பியர், உரியியலில் பல சொற்களுக்குப் பொருள் விளக்கம் தந்துள்ளார் என்பது உங்களுக்குத் தெரியுமா?*

***அந்தோணி:*** *அப்படியா! எங்களுக்குத் தெரியாதே. சரி, இதற்கு ஓர் எடுத்துக்காட்டைச் சொல்லேன்.*

***அகராதி:*** *மாணாக்கர்களே! தொல்காப்பியர்,*

*'செழுமை வளனும் கொழுப்பும் ஆகும்'*

*என்ற நூற்பா மூலம் எளிதாகப் பொருள் விளக்கம் தருகிறார். அஃதாவது, செழுமை என்பது, வளமையையும் கொழுப்பு என்னும் பண்பையும் குறித்து வரும். மற்றோர் எடுத்துக்காட்டும் கூறுகிறேன். கேளுங்கள். 'ஐ வியப்பாகும்' என்பது ஒரு நூற்பா.*

*குழந்தைகள் வியப்பிற்குரிய பொருளைக் கண்டால் 'ஐ'யென ஒலி எழுப்புவது இயற்கையல்லவா? இந்த உரிச்சொல்லுக்குத்தான் தொல்காப்பியர் பொருள் விளக்கம் தருகிறார்.*

***அப்துல்லா:*** *ஓ! அப்படியென்றால், தொல்காப்பியர் காலத்திலேயே சொல்லுக்குப்*

பொருள் காணும்செயல்பாடு தொடங்கிவிட்டது. சரி, அகராதி என்ற சொல் தமிழில் எப்பொழுது பயன்பாட்டிற்கு வந்தது?

**அகராதி:** தமிழில் முதன்முதலாக அகராதி என்ற சொல்லைப் பயன்படுத்திய நூல், 1594இல் எழுதப்பட்ட 'அகராதி நிகண்டு' என்னும் நூலாகும். இதன் ஆசிரியர் சிதம்பரத்தில் வாழ்ந்த இரேவணச்சித்தர் ஆவார்.

**அமுதா:** அப்படியா! ஆனால், 'நிகண்டு' என்று கூறினாயே? அந்தச் சொல்லுக்குப் பொருள் என்ன?

**அகராதி:** சொல்கிறேன். 'நிகண்டு' என்பது, வடசொல். இச்சொல்லுக்குத் தமிழில் சொற்றொகை, தொகுப்பு அகராதி, தொகையகராதி, தமிழ்ப்பா அகராதி, தொகுதி, கூட்டம் எனப் பல பொருள்களுள்ளன. நிகண்டுகள், தமிழிலுள்ள சொற்களைப் பல்வேறு பகுப்புகளுக்குட்படுத்தி, அவற்றிற்குரிய பொருளைப் பாடல் வடிவில் தந்தன. முதலில் தோன்றிய நிகண்டு சேந்தன் திவாகரம். நிகண்டு நூல்களுள் சிறந்ததாகச் சூடாமணி நிகண்டைக் கூறுவர்.

**அமுதா:** நிகண்டு என்றால் என்னவென்று புரிந்துகொண்டோம். ஆனால், எனக்கோர் ஐயம். தமிழிலுள்ள சொற்களைப் பல்வேறு பகுப்புகளுக்கு உட்படுத்துதல் என்று கூறினாயே, அப்படி என்றால் என்ன?

**அகராதி:** சொல்கிறேன். தெய்வம், மக்கள், விலங்கு, மரம், இடம் முதலான பன்னிரு பெயர்த்தொகுதியில், தமிழிலுள்ள சொற்கள் வகைப்படுத்தப்பட்டிருக்கும். எடுத்துக்காட்டாகச் சூடாமணி நிகண்டில், விலங்குகளின் இளமைப்பெயரை அறிய விரும்பினால், முதலில் விலங்கின் பெயர்த்தொகுதியைக் காண வேண்டும். பின்னர், விலங்கின் பிள்ளைமரபு என்னும் தலைப்பில் இடம்பெற்றிருக்கும் பல்வேறு விலங்குகளுக்குரிய இளமைப்பெயர்களைக் காணலாம். பறழ், பிள்ளை, குட்டி, குழவி, பார்ப்பு, குருளை, கன்று, மறி, போதகம் என்பனவெல்லாம் விலங்கின் இளமைப்பெயர்களே. அதுமட்டுமன்று, அப்பெயர்களுக்குரிய விலங்குகள் எவையெவை என்பதும் கொடுக்கப்பட்டிருக்கும்.

**அந்தோணி:** அடடே! இதுபோன்று ஒரு சொல்லுக்குரிய பல பெயரையும் அறிந்துகொண்டால், எங்கள் பேச்சிலும்

## அறிவோம் தெளிவோம்

| அகராதி வகைகள் | |
|---|---|
| சிறுவர்க்கான அகராதிகள் | வணிகச் சொல் அகராதிகள் |
| எதுகை மோனை அகராதிகள் | கணினிச் சொல் அகராதிகள் |
| மரபுத்தொடர் அகராதிகள் | மருத்துவச் சொல் அகராதிகள் |
| வட்டாரவழக்கு அகராதிகள் | அலுவலகப் பயன்பாட்டுச் சொல் அகராதிகள் |
| கலைச்சொல் அகராதிகள் | ஆட்சிமொழி அகராதிகள் |
| பழமொழி அகராதிகள் | இணைய அகராதிகள் |
| மேற்கோள் அகராதிகள் | பொறியியற் சொற்சார்ந்த அகராதிகள் |
| ஒரு பொருட் பன்மொழி அகராதிகள் | தத்துவம்சார் அகராதிகள் |
| எதிர்ச்சொல் அகராதிகள் | சமயக் கருத்துசார்ந்த அகராதிகள் |
| ஒலிக்குறிப்பு அகராதிகள் | இலக்கியவியல் சார்ந்த அகராதிகள் |
| ஒலிப்பு அகராதிகள் | அயற்சொல் அகராதிகள் |

எழுத்திலும் பல சொற்களைப் பயன்படுத்துவோம், அல்லவா?

**அகராதி:** உண்மைதான். சரியாகச் சொன்னீர்கள். உங்கள் சொற்களஞ்சியத்தைப் பெருக்கிக்கொள்ள இதுவே சிறந்த வழி.

**அப்துல்லா:** அப்படியே செய்வோம். அண்மையில் பள்ளி சார்பாக எங்களைப் புத்தகக் கண்காட்சிக்கு அழைத்துச் சென்றனர். அங்குச் சதுரகராதி என்னும் பெயருடைய ஒரு நூலைப் பார்த்தோம். அதுவும் அகராதிதானோ?

**அகராதி:** ஆம். இந்தச் சதுரகராதியை உருவாக்கியவர் வீரமாமுனிவர். இவர், இத்தாலி நாட்டைச் சேர்ந்தவர். இவரது இயற்பெயர் கான்ஸ்டன்டின் ஜோசப் பெஸ்கி. இவர் சதுரகராதியினை 1732ஆம் ஆண்டு தொகுத்தார். 'சதுர்' என்பதற்கு நான்கு என்பது பொருள். இந்நூலுள் பெயர், பொருள், தொகை, தொடை என்னும் வரிசைமுறையில் நான்காகப் பகுத்துச் சொற்களுக்குப் பொருள் விளக்கம் தந்துள்ளார்.



வீரமாமுனிவர்

**அமுதா:** வீரமாமுனிவரைப்போல அயல்நாட்டவர் வேறு யாரேனும் இப்பணியில் ஈடுபட்டனரா?

**அகராதி:** ஆம். வீரமாமுனிவரைப் பின்பற்றி ஐரோப்பியர் பலர் தமிழ் அகராதிகளை உருவாக்கியுள்ளனர். அவர்களுள் பெப்ரீசியஸ், இராட்லர், வின்சுலோ, பெர்சிவல், ஜியு. போப் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

**அந்தோணி:** இவர்கள் மட்டும்தான் அகராதியை உருவாக்கினார்களா?

**அகராதி:** இல்லை, இல்லை. நான் அப்படிக் கூறவில்லை. அயல்நாட்டவர் மட்டுமல்ல, தமிழர்களும் அகராதிகளைத் தொகுத்துள்ளனர். சென்னைப்









பல்கலைக்கழகத்தாரால் வெளியிடப்பெற்ற தமிழ்ப்பேரகராதி (தமிழ் லெக்ஸிகன்) குறிப்பிடத்தக்கதாகும். இவ்வகராதியில், சொல்லுக்கான விளக்கங்கள் ஏழு கூறுகளாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

**அப்துல்லா:** அப்படியா? அவை என்னென்ன?

**அகராதி:** சொல்கிறேன். அவை, 1. சொல் 2. சொல்லின் ஆங்கில ஒலிபெயர்ப்பு 3. இலக்கணப் பாகுபாடு 4. சொல்லின் தோற்றம் 5. இனச்சொற்கள் 6. தமிழிலும், ஆங்கிலத்திலும் சொல்லுக்குரிய பொருள் 7. சொற்பொருளுக்கேற்ற இலக்கிய மேற்கோள்கள் என அமைந்திருக்கும். ஏழாவதாகக் கொடுக்கப்பட்டுள்ள மேற்கோள் வாயிலாக, அந்தச்சொல் எந்தெந்த இலக்கியத்தில் என்னென்ன பொருள்களில் வந்துள்ளது என அறிந்துகொள்ளச் செய்வதும் இவ்வகராதியின் சிறப்பு.

**அந்தோணி:** ஒரே சமயத்தில் பல விவரங்களை அறிந்துகொள்ளலாம் போலிருக்கிறதே! அந்த அகராதியைப் பார்க்க விரும்புகிறோம்.

**அகராதி:** இந்த நூலகத்திலும் காணலாம். இது, ஆறு தொகுதிகளாக வெளியிடப்பெற்றுள்ளது.

**அப்துல்லா:** அகராதிகளையும் நிகண்டுகளையும் தெரிந்துகொண்டோம். இவையன்றி நாங்கள் பயன்படுத்துவதற்கு வேறு பார்வை நூல்கள் உள்ளனவா?

## தெரியுமா?

**அகராதிகள்**

*சதுரகராதி – வீரமாமுனிவர்*

*தமிழ் – ஆங்கில அகராதி - பெப்ரீஷியஸ்*

*பட அகராதி – இராமநாதன்*

*தமிழ்ச்சொற்பிறப்பியல் ஒப்பியல் அகராதி – ஞானப்பிரகாச அடிகள்*

*திராவிடச் சொற்பிறப்பியல் அகராதி – பரோ, எமினோ*

*பழமொழி அகராதி – பெர்சிவல்*

**நிகண்டுகள்**

*திவாகரம் – திவாகரர்*

*பிங்கல நிகண்டு - பிங்கலர்*

*சூடாமணி நிகண்டு – மண்டல புருடர்*

*அகராதி நிகண்டு – சிதம்பர ரேவண சித்தர்*

*கயாதர நிகண்டு – கயாதரர்*

*உரிச்சொல் நிகண்டு – காங்கேயர்*

***அகராதி:*** ஏன் இல்லை? கலைக் களஞ்சியங்கள் உள்ளனவே.

***அமுதா:*** கலைக்களஞ்சியங்களா? அப்படி என்றால் என்ன?

***அகராதி:*** 'செய்திகளைத் தொகுத்துத் தரும் பார்வை நூல்களைத்தான் கலைக்களஞ்சியம்' என்கிறோம். அறிஞர்கள், புலவர்கள், தலைவர்கள் ஆகியோர்தம் வரலாறுகள், தாவரங்கள், விலங்குகள் பற்றிய செய்திகள், புகழ்பெற்ற இடங்கள், பொருள்கள், நிகழ்ச்சிகள் தொடர்பான விவரங்கள் ஆகிய அனைத்துச் செய்திகளையும் உங்களுக்குத் தொகுத்துத் தரக்கூடிய நூல்கள் கலைக்களஞ்சியங்களே.

***அமுதா:*** எங்கள் அறிவியல் ஆசிரியர், அறிவியல் கலைக்களஞ்சியம் என்ற நூலைப்பற்றிக் கூறியிருப்பது எனக்கு நினைவுக்கு வருகிறது.

***அகராதி:*** ஆம். நான் ஏற்கெனவே கூறியதுபோல அறிவியல் தொடர்பான செய்திகளையெல்லாம் அந்தக் கலைக்களஞ்சியத்தில் நீங்கள் அறிந்து கொள்ளலாம். தமிழிலும் 'அபிதான சிந்தாமணி' என்ற கலைக்களஞ்சியம் உள்ளதே, உங்களுக்குத் தெரியுமா? இந்நூலில் புலவர்கள், பழம்பெரு இலக்கியங்கள், இலக்கியக் கதைமாந்தர்கள், கோவில்கள் ஆகியன பற்றிய விவரங்களும் செய்திகளும் நிறைந்துள்ளன.

***அமுதா:*** தற்காலத்தில் கணினி பல துறைகளிலும் தடம் பதித்துள்ளது. அந்த வகையில் கணினித் துறையில் அகராதியின் பங்கு குறித்து அறிய விரும்புகிறோம்.

***அகராதி:*** தமிழில் இன்று வெளிவந்துள்ள கணிப்பொறி மென்பொருள்கள் தம்முள் அகராதியினையும் கொண்டுள்ளன. கணினியில் தட்டச்சு செய்யும்போது, சரியான சொற்களுக்கான பரிந்துரைகளை இத்தகு அகராதிகள் தருகின்றன.

***அமுதா:*** அகராதியே! இக்கால மக்களும் பண்டைய இலக்கிய இலக்கணங்களின் சொல்வளம், பொருளாழம் போன்றவற்றைத் தெளிவாக அறிந்து, சுவைத்து, மகிழத் துணை செய்வன அகரமுதலிகளே என்பதனை நன்கு உணர்ந்து கொண்டோம்.

அறிவியல் வளர்ச்சி எத்துணை விரைவாக இருந்தாலும் ஒரு மொழியின் உயிர், அதனைப் பேசும் மக்களிடத்தில்தான் உள்ளது என்பதையும் நன்றாகத் தெரிந்து கொண்டோம்.

மேலும், தாய்மொழியில் நிறைய சொற்களைத் தெரிந்து வைத்திருப்போர்க்குக் கல்விப்பயிற்சி மிகவும் எளிமையானதாக அமையும் என்பதையும் புரிந்து கொண்டோம்.

***அந்தோணி:*** அதுமட்டுமா? ஒரு மொழியின் சொல்வளங்காட்டும் கண்ணாடியே அகராதி என்பதையும் உணர்ந்துகொண்டோம்.

***அப்துல்லா:*** நாங்கள் ஒரு சொல்லுக்கான பொருளைத்தான் தேடி வந்தோம். ஆனால், ஒரு கட்டுரை எழுதுவதற்குரிய முழுமையான செய்திகளைப் பெற்றுள்ளோம். அகராதியே! உன்னுடன் கலந்துரையாடியதை எண்ணி, நாங்கள் மிகவும் மகிழ்கிறோம். நன்றி வணக்கம்.

***அகராதி:*** நானும் மகிழ்கிறேன். நன்றி. மீண்டும் சந்திப்போம்.

## கண்ணாடி

### பொருத்தமான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. சரசுவதி மகால் நூலகம் அமைந்துள்ள இடம்---------.

   அ) சென்னை  ஆ) திருச்சி  இ) தஞ்சாவூர்  ஈ) மதுரை

2. நிகண்டு என்பதன் பொருளைத் தராத சொல்--------.

   அ) தொகுப்பு அகராதி  ஆ) தொகையகராதி

   இ) தமிழ்ப்பா அகராதி  ஈ) இணைய அகராதி

3. 'பிள்ளை' என்னும் இளமைப்பெயர் கொண்ட விலங்கு-------.

   அ) முயல்  ஆ) அணில்  இ) எலி  ஈ) குதிரை

4. 'நிலவு' என்னும் பொருள் தராத சொல்---------.

   அ) சந்திரன்  ஆ) மதி  இ) திங்கள்  ஈ) ஞாயிறு

5. சதுரகராதியின் சொற்பொருள் விளக்க வரிசைமுறை

   அ) பெயர், பொருள், தொகை, தொடை  ஆ) பெயர், தொடை, தொகை, பொருள்

   இ) பெயர், பொருள், தொடை, தொகை  ஈ) பெயர், தொகை, தொடை, பொருள்

### குறுவினா

1. அகராதி – பெயர்க்காரணம் தருக.
2. குவலயம் என்னும் பொருள் தரும் பல சொற்கள் யாவை?
3. கீழ்க்காணும் சொற்களை அகரவரிசையில் எழுதுக.

   இயற்கை, இன்பம், இல்லுறை, இந்திரவிழா, இளவேனில், இருதிணை, இசைத்தமிழ்
4. பல்துறை அகராதிகளுள் நான்கனைக் குறிப்பிடுக.
5. தொல்காப்பியர் காலத்திலேயே சொல்லுக்குச் சொல் பொருள் விளக்கம் கூறும் முறை இருந்தமைக்குச் சான்று தருக.

### சிறுவினா

1. நிகண்டு நூல்களின் அமைப்பை விளக்குக.
2. கலைக்களஞ்சியம் என்றால் என்ன? விளக்குக.
3. சதுரகராதி – குறிப்பு வரைக.
4. தமிழ்ப்பேரகராதியில் சொற்பொருள் விளக்கம் எவ்வாறு அமைந்துள்ளது?
5. அபிதான சிந்தாமணி – குறிப்பு வரைக.

### நெடுவினா

1. ஒரு மொழியின் சொல்வளம் காட்டும் கண்ணாடியே அகராதி' – இக்கூற்றை மெய்ப்பிக்க.
2. கணினித்துறையில் அகராதியின் பங்கு குறித்து எழுதுக.

உரையாடல்

# மொழிபெயர்ப்புக் கலை

**வானொலி ஒலிபரப்பு**

**கல்வி நிகழ்ச்சி – நேர்காணல்**

**பங்கேற்பாளர்கள் : நேர்காணல் நிகழ்த்துபவர், ஆசிரியர் கவின்மலர், மாணாக்கர்**

**நேர்காணல் நிகழ்த்துபவர்:** வணக்கம், அம்மா. வானொலிக் கல்வி நிகழ்ச்சிக்காக வருகைதரும் உங்களைப் பள்ளி மாணாக்கர்கள் சார்பில் வரவேற்கிறோம். பல்துறையிலும் வேலைவாய்ப்பு அளிக்கின்ற மொழிபெயர்ப்புக் கலையைப்பற்றி இன்று உரையாட உள்ளோம். உங்களுடன் மாணாக்கர்களும் தொடர்புகொண்டு பேசுவர்.

**ஆசிரியர்:** அனைவருக்கும் வணக்கம். இந்நிகழ்ச்சி வாயிலாக, உங்களையெல்லாம் சந்திப்பதில் மிக்க மகிழ்ச்சி. 'பிறமொழிச் சாத்திரங்களைத் தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்' என்னும் பாரதியாரின் பாடலுடன் இந்நிகழ்ச்சியைத் தொடங்கலாமா? மொழிபெயர்ப்பு என்பது, ஓர் அரிய கலை. அதன் நுட்பங்களை உணர்ந்து மொழிபெயர்ப்பதில் நாம் கவனம் செலுத்த வேண்டும்.

**நே. கா. நி:** மொழிபெயர்ப்பு என்றால் என்ன? விளக்கமாகக் கூறுங்கள்.

**ஆசிரியர்:** ஒரு மொழியில் இருக்கின்ற செய்தியை வேறு மொழிக்கு மாற்றுவது மொழிபெயர்ப்பு. அவ்வாறு மொழிபெயர்க்கும்போது, முதல்மொழிக்கு நிகரான செய்தி, இரண்டாவது மொழியிலும் இடம்பெற வேண்டும்.

**நே. கா. நி:** முதல் மொழி என்று எதனைக் குறிப்பிடுகிறீர்கள்?

**ஆசிரியர்:** சொல்கிறேன். ஒரு பாடலை மொழிபெயர்க்க வேண்டுமெனில், அப்பாடல் இடம்பெற்றுள்ள மொழிதான் முதல்மொழி. அதனை மூலமொழியெனவும் தருமொழியெனவும் கூறலாம். அந்தப்பாடலை எந்த மொழிக்கு மொழிபெயர்க்கப் போகிறோமோ அஃது இரண்டாவது மொழி. இதனைப் பெறுமொழியெனவும் இலக்கு மொழியெனவும் சொல்லலாம்.

**நே. கா. நி:** நிகரான செய்தி என்று சொன்னீர்களே, கொஞ்சம் விளக்குங்கள்.

**ஆசிரியர்:** நிகர் என்பதற்கு நேரான அல்லது ஒப்பான என்று பொருள். நிகரான செய்தி என்பது, தருமொழியில் இருக்கின்ற சொல் அல்லது தொடருக்கு ஒப்பாகப் பெறுமொழியில் இருக்கின்ற சொல் அல்லது தொடர் என்று பொருள்.

**நே. கா. நி:** அப்படியா, ஓர் எடுத்துக் காட்டுடன் விளக்குங்கள்.

**ஆசிரியர்:** தமிழ் தெரிந்த ஒருவரை நோக்கி, "ஐயா, உட்காருங்கள்" என்று சொன்னால் உட்காருவார். ஆனால், ஆங்கிலம் மட்டும் தெரிந்தவர் பொருள் புரியாமல் விழிப்பார். அவருக்கு அருகிலிருப்பவர், '*please take your seat*' என்று மொழிபெயர்த்துச் சொன்னால் புரிந்துகொள்வார்.

உட்காருங்கள் என்று சொல்வதும் '*please take your seat*' என்று சொல்வதும் ஒரே பயனைத்தான் கொடுக்கும். அதனால், இவ்விரு தொடரும் ஒன்றுக்கொன்று நிகர் (*Equivalent*).

**நே. கா. நி:** மாணாக்கர்களுக்குப் புரியும்படி விளக்கினீர்கள். இதோ, மாணாக்கர் ஒருவர் நம்முடன் தொடர்பு கொள்ள வருகிறார்.

**மாணாக்கர்:** வணக்கம் அம்மா. என் பெயர் நளன். நான், அரசுப் பள்ளிக்கூடத்தில் படிக்கிறேன். 'Translation' என்னும் சொல் எந்த மொழியிலிருந்து வந்தது?

**ஆசிரியர் :** 'Translatio' என்னும் சொல், இலத்தீன் சொல்லிலிருந்து வந்தது. அதற்குக் 'கொண்டு சொல்லுதல்' என்று பொருள். தருமொழியில் இருக்கின்ற பொருளை அதற்கு இணையான பெறுமொழியில் உரைப்பது என்றும் சொல்லலாம். அவ்வாறு செய்யும்போது, செய்தியைக் கூட்டவோ குறைக்கவோ கூடாது. பொருள் மாறாமல் இருக்கவேண்டும். மொழிபெயர்க்கும் செயலில் தழுவல், சுருக்கம், மொழியாக்கம், நேர் மொழிபெயர்ப்பு என நான்கு வகையுண்டு.

**நே. கா. நி:** அவற்றைப்பற்றி விளக்கமாகக் கூறுங்கள்.

**ஆசிரியர் :** தழுவல் என்பது, நேரடியாக மொழிபெயர்க்காமல், மூலமொழிச் செய்தியைப் புரிந்துகொண்டு தழுவி எழுதுவதாகும். எடுத்துக்காட்டாக, வால்மீகி இராமாயணத்தைத் தழுவித் தமிழ்ப் பண்பாட்டுக்கு ஏற்றாற்போல் கம்பர் எழுதிய இராமாயணத்தைச் சொல்லலாம். சுருக்கம் என்பது, படைப்பைச் சுருக்கி அறிமுகப்படுத்தும் நிலை. இதில் பொருத்தப்பாடு, கருத்துச் சிதையாமை, கோவை ஆகியனவற்றை அடிப்படையாகக்கொண்டு, கொஞ்சம் கட்டுப்பாடின்றி எழுதலாம். ஒரு கவிதையைக் கவிதையாகவும் உரைநடையாகவும் மொழிபெயர்ப்பது மொழியாக்கம். மூலமொழிச் செய்தியிலிருந்து சிறிதும் வழுவாமல் மொழிபெயர்ப்பது, நேரடி மொழிபெயர்ப்பு.

**நே. கா. நி:** தமிழில் மொழிபெயர்ப்பைப் பற்றிய குறிப்பு ஏதேனும் உள்ளதா ?

**ஆசிரியர் :** உண்டு. பழந்தமிழ் நூலான தொல்காப்பியம், மொழிபெயர்ப்புபற்றி விளக்கியுள்ளது. இதில் தொல்காப்பியர், மரபுநிலையறிந்து, அந்த மொழிவழக்குக்கு ஏற்றாற்போல் மொழிபெயர்க்க வேண்டுமெனக் குறிப்பிட்டுள்ளார்.

**நே. கா. நி:** தொல்காப்பியர், எந்த மொழியிலிருந்து மொழிபெயர்க்க விதி கூறியுள்ளார்?

**ஆசிரியர் :** வடமொழிச் சொற்களைத் தமிழில் பயன்படுத்த வேண்டிய சூழலில், வடமொழியிலிருக்கின்ற சிறப்பெழுத்துகளை நீக்கிவிட்டுத் தமிழ் எழுத்திலேயே எழுதவேண்டுமென்றும், வடசொல்லின் வடிவம் சிதைந்தாலும் வடமொழிச் சொல்லாகவே கருத வேண்டுமென்றும் கூறியுள்ளார். எடுத்துக்காட்டாக, 'வருஷம்' என்பது, வடமொழிச்சொல். இதற்கு நேரடியான தமிழ்ச்சொல் 'ஆண்டு'. ஆனால், அந்த வடசொல்லையே தமிழில் பயன்படுத்த வேண்டுமென்றால், அந்த மொழியின் சிறப்பெழுத்தான 'ஷ' என்னும் வடமொழி எழுத்தை நீக்கி, 'ட' என்னும் தமிழ் எழுத்தைச் சேர்த்து, வருடம் என எழுதவேண்டுமெனக் கூறுகிறார்.

**நே. கா. நி:** வடமொழியிலிருந்து மொழிபெயர்க்க, மாணாக்கர்க்கு ஒரு சொல் கொடுங்களேன்.

### அறிவோம் தெளிவோம்

**தொல்காப்பியர் கூறும் மொழிபெயர்ப்பு விதி**

தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்து

அதர்ப்படை யாத்தலோடு அனைமர பினவே

– தொல். பொருள். மரபு 652

வடசொற் கிளவி வடவெழுத்து ஒரீஇ

எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே

– தொல். சொல். எச்சம் 401

சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்

– தொல். சொல். எச்சம் 402

**ஆசிரியர்:** பிரசங்கம், பிரச்சாரம் ஆகிய வடமொழிச் சொல்லுக்குச் சரியான தமிழ்ச் சொல் சொல்லுங்கள்.

**நே. கா. நி:** அம்மா, மாணாக்கர் விடை தேடுவார்கள். நாம் தொடர்ந்துபேசலாம். மொழிபெயர்ப்பு எப்படி இருக்க வேண்டுமென நினைக்கிறீர்கள்?

**ஆசிரியர்:** மொழிபெயர்ப்பில் பொருள் பொருத்தப்பாடுதான் முதன்மையானது. அதனால், மூலமொழியின் செய்தியைப் புரிந்துகொண்டுதான் மொழிபெயர்க்க வேண்டும்.

**நே. கா. நி:** ஓர் எடுத்துக்காட்டு சொல்லுங்களேன்.

**ஆசிரியர்:** சில இடங்களில் அழகுக்காகப் புற்றரை (புல் தரை) வளர்த்திருப்பார்கள். அங்கு, ஓர் அறிவிப்புப் பலகையும் வைத்திருப்பார்கள். அதில், 'Keep off the Grass' என ஆங்கிலத்திலும், 'புல்தரைமேல் நடக்காதீர்கள்' எனத் தமிழிலும் எழுதப்பட்டு இருக்கும்.

**நே. கா. நி:** ஆமாம். நான் கூடப் பார்த்திருக்கிறேன்.

**ஆசிரியர்:** புல்தரைமேல் நடக்காதீர்கள் என்றால், புல்தரைக்கு உள்ளே நடக்க வேண்டுமெனப் பொருளாகிவிடும், அல்லவா? புல்தரையில் நடக்காதீர்கள் என்பதுதான் சரியான மொழிபெயர்ப்பு.

**நே. கா. நி:** புரிகிறது, அம்மா. இதோ, மீண்டும் மாணாக்கர் ஒருவர் நம்முடன் தொடர்புகொள்ள வருகிறார்.

**மாணாக்கர்:** வணக்கம், அம்மா. என் பெயர் அமுதன். வடசொற்களுக்குரிய தமிழ்ச்சொற்கள் கேட்டீர்களே, பிரசங்கம் என்பது, சொற்பொழிவு; பிரச்சாரம் என்பது, பரப்புரை. நான் சொன்னது சரியா?

**ஆசிரியர்:** சரியாகச் சொன்னீர்கள் தம்பி. சரியான புரிதலோட மொழி பெயர்த்திருக்கிறீர்கள். மேலும், இவைபோன்ற வடசொற்களுக்கு இணையான தமிழ்ச்சொற்கள் அறிய, பேராசிரியர் நீலாம்பிகை அம்மையாரின்



### தெரியுமா?

**மொழிபெயர்ப்பில் மரபின் இன்றியமையாமை**

செந்தமிழ் மொழியில் பெருமதிப்புக் கொண்டு, அதனை ஐயந்திரிபறக் கற்று, இலக்கண இலக்கிய நூல்களை ஆக்கியவர் இத்தாலி நாட்டைச் சேர்ந்த வீரமாமுனிவர் ஆவார். அவர் தமிழைக் கற்கத்தொடங்கிய காலத்தில், அதன் மரபு தெரியாது "கோழி தன் குட்டிகளைக் காப்பதுபோல்" என்று தம் சொற்பொழிவில் கூற, கோவில் வழிபாட்டிற்காகக் கூடியிருந்த அத்தனை பேரும் சிரித்தனர். வீரமாமுனிவர், சிரிப்பின் காரணத்தைக் கேட்டறிந்தார். தாம் செய்த பிழையை உணர்ந்தார்; தமிழை நன்கு கற்றார்; தமிழில் புலமை பெற்றார்; தமிழ் மரபைப் போற்றினார். (*'கோழி தன் குஞ்சுகளைக் காப்பதுபோல்' என்பதே மரபு.*)

'வடசொல் தமிழ் அகரவரிசைச் சுருக்கம்', என்னும் நூல் உங்களுக்கு மிகவும் பயன்படும்.

**நே. கா. நி:** மாணாக்கர்களே, நூற்பெயரைக் குறித்துக் கொள்ளுங்கள். அம்மா! சொல்லுக்குச் சொல் மொழிபெயர்க்கக் கூடாது என்று சொல்கிறார்களே, ஏன்?

**ஆசிரியர்:** நல்ல வினா கேட்டீர்கள். எடுத்துக்காட்டுடன் சொன்னால் எளிதாகப் புரியும். 'Fish Seed' என்னும் ஆங்கிலச் சொற்றொடரைத் தமிழில் சொல்லுக்குச் சொல் மொழிபெயர்த்தால் என்ன ஆகும் என்று பார்ப்போமா? Fish என்றால் மீன். Seed என்றால் விதை. அதனை மீன் விதை என்று சொல்லலாமா?

**நே. கா. நி:** நீங்களே சொல்லுங்களேன்.

**ஆசிரியர்:** மீன் விதையை வாங்கிக் குழிபறித்து நட்டால் மீன் மரமா முளைக்கும்? சொல்லுக்குச் சொல் மொழிபெயர்த்தால் எவ்வளவு இடர்ப்பாடு ஏற்படுகிறது எனப் பார்த்தீர்களா? அதனால், மொழிக்கான மரபைத் தெரிந்துகொண்டு, மொழிபெயர்க்க வேண்டியது இன்றியமையாதது. அந்த ஆங்கிலச் சொற்றொடரைத் தமிழில் 'மீன்குஞ்சு' என்று

மொழிபெயர்ப்பதுதான் சரியாக இருக்கும். இன்னொரு தொடரைச் சொல்கிறேன்.

**நே. கா. நி:** சொல்லுங்கம்மா. மொழி பெயர்ப்பதில் கவனம் தேவை என்பதை மாணாக்கர் புரிந்துகொள்வார்கள் .

**ஆசிரியர்:** 'High court bench' என்றொரு தொடர் இருக்கிறது. அதனை 'high Court' என்றால் உயர்நீதிமன்றம், 'bench' என்றால் இருக்கை எனச் சொல்லுக்குச் சொல் மொழிபெயர்த்து, உயர்நீதிமன்ற இருக்கை எனச் சொல்லலாமா?

**நே. கா. நி:** இல்லை, 'உயர்நீதிமன்ற அமர்வு' என்றுதான் மொழிபெயர்க்க வேண்டும். அம்மா, நான் சொன்னது சரிதானே?

**ஆசிரியர்:** சரியாச் சொன்னீர்கள். அதனால், மொழிபெயர்ப்பாளருக்குத் துறைவாரியான கலைச்சொல் தெரிந்திருக்க வேண்டும் என்பது புரிகிறதல்லவா?

**நே. கா. நி:** நன்றாகப் புரிகிறதம்மா. மாணாக்கர்களுக்கு, ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழிபெயர்க்க ஒரு தொடர் கொடுங்கள்.

**ஆசிரியர்:** 'Trained staff', 'Training Staff'. இத்தொடர்களை மொழிபெயர்க்கச் சொல்வோம்.

**நே. கா. நி:** மாணாக்கர் விடை தேடட்டும். நாம்தொடர்ந்து பேசலாம். பண்பாடு தொடர்பான சொற்களை மொழிபெயர்ப்பதனைப் பற்றிச் சொல்லுங்களேன்.



## தெரியுமா?

### மொழிபெயர்ப்பு வகைகள்

பத்திரிகை மொழிபெயர்ப்பு

விளம்பர மொழிபெயர்ப்பு

வானொலி மொழிபெயர்ப்பு

கணிப்பொறி மொழிபெயர்ப்பு

இலக்கிய மொழிபெயர்ப்பு

அறிவியல் மொழிபெயர்ப்பு

**ஆசிரியர்:** பண்பாட்டுச் சொற்களை ஒலிபெயர்ப்பு செய்தாலே போதும். தாலி (thali), கோலம் (kolam) முதலான சொற்களைச் சொல்லலாம். இவைபோன்ற சொற்களை மொழிபெயர்ப்புக்குள் விளக்கினால் பொருளோட்டத்துக்குத் தடையாக இருக்கும். அதனால், கதையோட்டத்தில் தனியாக விளக்கவேண்டும்.

**நே. கா. நி:** அதனைப்பற்றி விளக்கமாகச் சொல்லுங்களேன்.

**ஆசிரியர்:** ஆங்கிலத்தில 'Glossary' என்று சொல்வார்கள். தமிழில் 'அருஞ்சொல் அகரமுதலி' என்று சொல்லலாம். 'Kolam' என்னும் சொல்லை ஆங்கிலத்தில்

"kolam – A simple and sometimes elaborate pattern drawn in front of the house with white powder of rice flour – a symbol of auspiciousness". என்று சொல்லவேண்டும்.

**நே. கா. நி:** மாணாக்கர் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். அதனைத் தமிழிலும் சொல்லுங்களேன்.

**ஆசிரியர்:** கோலம் என்பது, தமிழ்ப் பண்பாடு சார்ந்தது. இதனை வீட்டுக்குமுன் வாசலில் அழகுக்காக வரைவர். இது சிக்கல் கோலமா, பூக்கோலமா என்பதை நாம்தான் விளக்கவேண்டும். அரிசிமாவில் வரைவதாகவும் எறும்புமாதிரியான உயிரினங்களுக்கு உணவு தருவதாகவும் விளக்கலாம்.

**நே. கா. நி:** ஓ! அப்படியா! நன்கு புரியும்படி சொன்னீர்கள். இதோ, மாணாக்கர் ஒருவர் தொடர்புகொள்ள வருகிறார்.

**மாணாக்கர்:** வணக்கம், அம்மா. என் பெயர் இளம்பிறை. நீங்கள் மொழிபெயர்க்கச் சொன்ன சொற்களைச் சொல்கிறேன். 'Trained Staff' என்றால் பயிற்சி பெற்ற அலுவலர். 'Training Staff' என்றால் பயிற்சி தரும் அலுவலர். நான் சொன்னது சரியா எனச் சொல்லுங்கள்.

**ஆசிரியர்:** சரியாகத்தான் சொல்லி இருக்கிறீர்கள். வாழ்த்துகள்.



## அறிவோம் தெளிவோம்

**புறநானூற்றில் இடம்பெற்றுள்ள கணியன் பூங்குன்றனாரின் பாடலும் அதற்குரிய மொழிபெயர்ப்பு உரையும்**

'யாதும் ஊரே; யாவரும் கேளிர்,
தீதும் நன்றும் பிறர்தர வாரா,
நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன,
சாதலும் புதுவது அன்றே; வாழ்தல்
இனிதுஎன மகிழ்ந்தன்றும் இலமே முனிவின்
இன்னாது என்றலும் இலமே; மின்னொடு
வானம் தண்துளி தலைஇ ஆனாது
கல்பொருது இரங்கும் மல்லல்பேர் யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறை வழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியின் தெளிந்தனம், ஆதலின் மாட்சியின்
பெரியோரை வியத்தலும் இலமே;
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே'

– கணியன் பூங்குன்றனார், புறம். 192

*To us all towns are one, all men are our kin.*
*Life's good comes not from others gift, nor ill, likewise.*
*Pains and relief from pains are one's own.*
*Death's no new thing, nor our bosoms thrill when joyous life seems like a Luxion's draught nor in hate condemn it ill.*
*We seem this precious life of ours a ferry raft, borne on the waters of a mighty mountain stream and fight the boulders, mourning in vain, as laws ordain floating serves the raft.*
*Thus have we seen in vision of the wise we wonder not at greatness of the Great, still less despise us men of low state.*

– *Rao Saheb K. Kothandapani,*
Controller of Emigration (Rtd., )Madras.

**நே. கா. நி:** அம்மா, நாம் தொடர்ந்து பேசலாம். உறவுமுறைச் சொற்களை மொழிபெயர்க்கும்போது உண்டாகும் சிக்கலைப்பற்றிக் கொஞ்சம் சொல்லுங்களேன்.

**ஆசிரியர்:** நம் தாயுடன் பிறந்த ஆணைத் 'தாய்மாமன்' எனவும், தந்தையுடன் பிறந்த ஆணைச் 'சித்தப்பா', 'பெரியப்பா' எனவும் சொல்கிறோம். உறவுநிலையைச் சொல்ல, தமிழில் இவைபோன்று பல சொற்கள் உள்ளன. ஆனால், இச்சொற்களையெல்லாம் குறிக்க, ஆங்கிலத்தில் 'Uncle' என்று ஒரு சொல் மட்டுந்தான் இருக்கிறது.அதனால், உறவுமுறைச் சொல்லை மொழிபெயர்க்கும்போது கவனம் தேவை.

**நே. கா. நி:** ஒருவருடைய பெயரை மொழிபெயர்க்கலாமா?

**ஆசிரியர்:** சொல்கிறேன். எடுத்துக் காட்டாக, 'Sir.Franncis Day' என்னும் பெயரைச் 'சர். பிரான்சிஸ் நாள்' என மொழிபெயர்க்கக் கூடாது. ஒலிபெயர்ப்பு செய்யவேண்டும். 'Ramdeo sing' என்னும் பெயரை 'ராம்த்யோசிங்' என மொழிபெயர்க்காமல் 'ராம்தேவ்சிங்' என மொழிபெயர்க்க வேண்டும். கம்பர்கூட 'லக்ஷ்மன்' என்ற பெயரை 'இலக்குவன்' என்று ஒலிபெயர்ப்பு செய்துள்ளார்.

**நே. கா. நி:** ஒலிபெயர்ப்பு என்று சொல்கிறீர்களே, அதனைப்பற்றிக் கொஞ்சம் சொல்லுங்களேன்.

**ஆசிரியர்:** ஊர்ப் பெயர், கண்டுபிடிப்பு, உறவுச் சொற்கள் முதலியவற்றையெல்லாம் ஒலிபெயர்ப்புத்தான் செய்யவேண்டும்.புதிதாகக் கண்டுபிடிக்கும் அறிவியல் கருவிகளையும் சொற்களையும் உடனுக்குடன் மொழிபெயர்க்க முடியாதபோது, ஒலிபெயர்ப்பு செய்யலாம்.

**நே. கா. நி:** மாணாக்கர்களே! குறித்து வைத்துக் கொள்ளுங்கள். அம்மா, திருவள்ளுவர் பற்றி மொழிபெயர்க்க ஒரு தொடர் கொடுங்களேன்.

**ஆசிரியர்:** 'திருவள்ளுவர் சிறந்த கவிஞர். அவர் எழுதிய திருக்குறள் மிகவும்

புகழ்பெற்றது'. இந்த வரிகளை ஆங்கிலத்துக்கு மாற்றிச் சொல்வோம்.

**நே. கா. நி:** மொழிபெயர்ப்பில் கலைச்சொல்லாக்கச் சிக்கலைப்பற்றிச் சொல்லுங்கள்.

**ஆசிரியர்:** கிரேக்க மொழியில் அரிஸ்டாட்டில் எழுதிய நூல் 'POETICS'. இதனைத் தமிழில், 'கவிதையியல்' எனப் பேராசிரியர் அ.அ. மணவாளன் மொழிபெயர்த்துள்ளார். அவர், கிரேக்கக் கலைச்சொற்கள் மிகவும் பழையனவாக இருந்தாலும், மிகவும் ஆழமானவை எனவும் அதற்கு ஏற்ற வடிவம் தமிழில் இல்லை எனவும் கூறியுள்ளார். கிரேக்கத்தில் கதை மாந்தர்களையும் அவர்களின் பண்புகளையும் 'Ethos' என்ற ஒரு சொல்லே குறிக்கிறது. ஆங்கிலத்திலும் 'Character' என்னும் ஒரு சொல், இரண்டையும் குறிக்கிறது. ஆனால், தமிழில் கதைமாந்தர் வேறு; கதைமாந்தர்களின் பண்புகள் வேறு. இதில் எந்தத் தடுமாற்றமும் வரக் கூடாது.

**மாணாக்கர்:** வணக்கம், அம்மா. என் பெயர் கவி. திருவள்ளுவரைப்பற்றிக் கேட்டீர்கள் அல்லவா? அதற்கான மொழிபெயர்ப்பு இதோ, 'Thirukural, written by the great poet thiruvalluvar, is very famous.

**ஆசிரியர்:** நன்றாகச் சொன்னீர்கள். திருக்குறள், உலக மொழிகள் பலவற்றிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. ஜி.யூ. போப், ஆங்கிலத்தில் திருக்குறளை மொழிபெயர்த்ததுபோல, பலர் மொழிபெயர்த்துள்ளனர். மத்திய செம்மொழி நிறுவனம் சார்பில், பதினெட்டுப்பேர் ஆங்கிலத்தில் சுருக்கமாக மொழிபெயர்த்திருக்கிறார்கள். செல்பேசியில்கூட ஆங்கிலத்தில் திருக்குறளைப் படிக்கும் வகையில் வெளியிட்டிருக்கிறார்கள். டாக்டர் கார்ல் கிரௌல் என்பார், திருக்குறளைச் செருமானிய மொழியில் மொழிபெயர்த்துள்ளார். திருக்குறளை மாண்டரின் (சீன) மொழியில் மொழிபெயர்ப்பதற்குத் தைவானைச் சேர்ந்த கவிஞர் யூஸி என்பவருக்கு, 77.4 இலட்சத்தைத் தமிழக அரசு வழங்கியுள்ளது.

**நே. கா. நி:** மரபுத்தொடர் மொழிபெயர்ப்புப் பற்றிக் கொஞ்சம் சொல்லுங்களேன்.

**ஆசிரியர்:** 'கம்பி நீட்டினான்' என்பது, தமிழில் வழங்கும் ஒரு மரபுத்தொடர். இதனை மொழிபெயர்க்கும்போது, 'Lengthened the rod' என்று மொழிபெயர்த்தால், ஆங்கிலத்தில் படிப்பவர்களுக்குப் புரியாது. இதனை 'He boted away' என்றுதான் மொழிபெயர்க்க வேண்டும். 'Smell a rat' என்னும் ஆங்கில மரபுத்தொடரை 'எலியை மோந்து பார்' என எழுதக்கூடாது. அதன் பொருள், 'ஐயமுற்றான்' என்பதுதான். அதனால், அந்தந்த மொழியில் மரபுத்தொடர் உணர்த்தும் பொருளைப் புரிந்துகொண்டு மொழிபெயர்த்தல் வேண்டும்.

**நே. கா. நி:** மரபுத்தொடரை எப்படி மொழிபெயர்ப்பது என்று சொன்னீர்கள். பழமொழிகளை மொழிபெயர்ப்பதுபற்றியும் சொல்லுங்களேன்.



**தெரியுமா?**

உமர்கய்யாம் பாடல்கள் பாரசீகப் புலவரால் எழுதப்பட்டவை. அவற்றை எட்வர்டு பிற்செரால்டு என்பவர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். அவற்றைக் கவிமணி, தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

சுந்தர ராமசாமி தமிழில் எழுதிய 'ஒரு புளியமரத்தின் கதை' என்னும் நாவலை Black went worth என்பவர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார்.

சூத்திரகரின் 'மிருச்ச கடிகம்' என்ற வடமொழி நாடக நூலை 'மண்ணியல் சிறுதேர்' எனப் பண்டிதமணி மு.கதிரேசனார் மொழிபெயர்த்துள்ளார்.

**ஆசிரியர்:** பழமொழியை மொழி பெயர்க்கும்போது, மொழிபெயர்க்கும் மொழியிலிருக்கின்ற ஒத்த வடிவத்தைத் தேடி எடுக்கவேண்டும். 'பட்ட காலிலே படும், கெட்ட குடியே கெடும்'என்ற பழமொழியை நேரடியாக மொழிபெயர்த்தால் 'The same leg will be repeatedly injured' என்று தவறான பொருளைத் தந்துவிடும். அதனால், தமிழில் என்ன பொருளைத் தருகிறதோ, அதே பொருளில் ஆங்கிலத்திலும் 'sorrows never come in single' என மொழிபெயர்க்கலாம்.

**நே. கா. நி:** அப்படியென்றால், நேரடியாக மொழிபெயர்ப்பதுபோலப் பழமொழி இல்லையா?

**ஆசிரியர்:** இருக்கிறது. 'எரிகிற கொள்ளியில் எண்ணெய் ஊற்றினாற்போல' என்பதற்கு நேரடிப் பொருளாக 'Adding fuel to the fire' என்று எழுதலாம்.

**நே. கா. நி:** பழமொழியை மொழி பெயர்க்கும்போது, எதிர்கொள்ளக்கூடிய சிக்கலைப்பற்றிச் சொல்லுங்கள்.

**ஆசிரியர்:** பொதுமக்கள், வழக்கத்தில் பயன்படுத்துகின்ற சொல்லாக இருக்க வேண்டும். படித்தவுடன் எளிதாகப் பொருள் புரிதல் வேண்டும். முதலில் மொழிபெயர்த்த சொல், பொருந்தவில்லையெனில், திரும்பத் திரும்பச் சொற்களை மாற்ற வேண்டியதாக இருக்கும்.

**நே. கா. நி:** மொழிபெயர்ப்புச் சிக்கல் என எவற்றையெல்லாம் சொல்லலாம்?



**தெரியுமா?**

தமிழில் மொழிபெயர்ப்புக்கென வெளிவரும் இதழ், திசை எட்டும் அதன் ஆசிரியர் குறிஞ்சி வேலன்.

இணைய இதழ் www.thinnai.com தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், இந்தி, ஆங்கிலம் ஆகிய ஆறு மொழிகளில் வெளிவருகிறது.

**ஆசிரியர்:** மொழியின் தனித் தன்மை, தொடரமைப்பு மாறுபாடு, பண்பாட்டு இடைவெளி, உறவுமுறைச் சிக்கல், மரியாதை வழக்கு, இடக்கரடக்கல், மொழியியல் சிக்கல்கள், ஒருபொருட் பன்மொழி, பொருள் மயக்கம் இவையெல்லாம் மொழிபெயர்ப்புச் சிக்கலுக்குக் காரணமாக அமையும்.

**நே. கா. நி:** தமிழிலக்கியங்களை வேற்றுமொழி இலக்கியத்தோடு ஒப்பிட்டு மொழிபெயர்த்திருக்கிறார்களா?

**ஆசிரியர்:** இலக்கியங்கள் வாயிலாக அவற்றைப் படைத்த கவிஞர்களைக்கூட ஒப்பிட்டிருக்கிறார்கள். கம்பனுடன் மில்டனையும், பாரதிதாசனுடன் வோர்ட்ஸ்வொர்த்தையும் பேராசிரியர் அ. அ. மணவாளன் ஒப்பிட்டுள்ளார். அவை Epic Heroism in Milton and kambar, The Exordium of Ramayanam and Milton's Paradise, Wordsworth and Bharathidasan என்ற பெயரில் வெளிவந்துள்ளன. 'பாரதிதாசன் – கார்ல்சாண்ட்பர்க் ஓர் ஒப்பாய்வு' என்ற நூலை முனைவர் சண்முக. செல்வகணபதி எழுதியுள்ளார்.

பண்டைய தமிழ்ப் பாடல்களைக் கிரேக்கம் உட்பட பல்வேறு நாட்டு வீர உணர்ச்சிக் கவிதைகளுடன் ஒப்பிட்டு அறிஞர் க. கைலாசபதி 'Tamil Heroic Poetry' என்ற ஆய்வுநூலை எழுதியுள்ளார். இதனை கு. வெ. பாலசுப்பிரமணியன் 'தமிழ் வீரநிலைக் கவிதை' என மொழிபெயர்த்துள்ளார்.

**நே. கா. நி:** அறிவியல் செய்திகளை எப்படி மொழிபெயர்க்கலாம்?

**ஆசிரியர்:** உலக அளவில், அறிவியல் குறியீடுகளைப் பயன்படுத்துவதில் பொதுத்தன்மைகள் உள்ளன. அறிவியலில் ஒவ்வொரு தனிமத்தையும் அதனுடைய இலத்தீன் பெயரின் முதலெழுத்து அல்லது முதலெழுத்துடன் அடுத்துவரும் எழுத்தையும்கொண்டு எழுதவேண்டும். Hydrogen என்பதை H என்று குறிப்பிட வேண்டும். கணிதத்தில் π என்ற குறியீட்டை அப்படியே குறிப்பிட வேண்டும். வேதிச்

சமன்பாடுகளைக் குறிப்பிட $SO_2$, $H_2O$ முதலான வாய்பாடுகள், ரோமன் எழுத்தில் எப்படி உள்ளதோ, அப்படியே தமிழிலும் பயன்படுத்த வேண்டும். தமிழில், புதிய சொல்லாக்க முயற்சியில் முன்னொட்டு, பின்னொட்டுகளை இணைத்துக் கலைச்சொல் உருவாக்குவது நடைமுறையில் உள்ளது. Meter என்பதை 'மானி' என மொழிபெயர்த்துப் பின்னொட்டாக வைத்து 'Electrometer – மின்மானி', 'Lactometer – பால்மானி', 'Thermometer – வெப்பமானி' எனப் புதிய கலைச்சொற்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

**நே. கா. நி:** மொழி வளர்ச்சிக்கு இந்த மொழிபெயர்ப்பு எப்படிப் பயன்படுகிறது எனச் சொல்லுங்கள்.

**ஆசிரியர்:** வேற்றுமொழியில் காணப்படும் கருத்துவளர்ச்சி, நம் மொழியிலும் ஏற்படும். ஒரு நாட்டின் பண்பாட்டைப் புரிந்துகொள்ள முடியும். நம் இலக்கியத்தைப் பிறநாட்டு இலக்கியத்துடன் ஒப்பிட்டு ஆராயலாம். வணிக வளர்ச்சிக்கும் பெருந்துணையாக இருக்கும். ஒரு நாட்டில் கண்டுபிடித்த அறிவியல் செய்தி, மற்ற நாட்டுக்கும் பரவும். புகழ்பெற்ற நூல்களைப்பற்றியும், நூலாசிரியர்களைப்பற்றியும் தெரிந்துகொண்டு, பிறமொழி இலக்கியங்களின் மொழிபெயர்ப்பு நூல்களைப் படிக்க விரும்பலாம். தொழில்நுட்ப வளர்ச்சிக்குக்கூட மொழிபெயர்ப்பு உதவுகிறது.

**நே. கா. நி:** மொழிபெயர்ப்பினால் இவ்வளவு நன்மைகளா? வியப்பாக உள்ளது. இன்று பலதுறைகளிலும் கணினியின் பயன்பாட்டைக் காண்கிறோம். மொழிபெயர்ப்பில், கணினியின் பங்கு என்ன?

**ஆசிரியர்:** பக்கஅளவு மிகுந்த நூல்களை மொழிபெயர்க்க, நமக்குப் பல நாள்கள் ஆகின்றன. ஆனால், கணினி மிக விரைவாக மொழிபெயர்த்துவிடுகிறது. ஆயினும், அஃது ஓரளவு சிறிய அல்லது சில பிழைகளுடன் மொழிபெயர்க்கிறது. அங்கு, மொழிபெயர்ப்பாளரின் பங்கு தேவைப்படுகிறது. தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக் கழகத்தில் கணினிவழி மொழிபெயர்ப்பு செய்கிறார்கள். இயந்திர மொழிபெயர்ப்பு (machine translation), மாந்தர் – கணினி உரையாடல் ஆகியவற்றைத் தமிழில் நிகழ்த்தமுடியும். 'இயற்கைமொழிப் பகுப்பாய்வு' (Natural Language Processing) என்னும் தொழில்நுட்பம் செயல்படும்போது, கணினியே மூளையாக இருந்து செயல்படும்.

**நே. கா. நி:** திறன்பேசியில் பயன்படும் தமிழ் மொழிபெயர்ப்புச் செயலியைப்பற்றிக் கொஞ்சம் சொல்லுங்கள்.

**ஆசிரியர்:** நாம் பேசுகின்ற பேச்சைக் கணினிக்குப் புரியும்படி உள்ளீடாக மாற்றிக் கூகுளில் இணையவழி மொழிபெயர்ப்பு செய்யும்முறை உள்ளது. திறன்பேசியில்கூட மொழிபெயர்க்கும்முறை வந்துவிட்டது. மைக்ரோ சாப்ட் நிறுவனத்தினர், தமிழ் மொழிபெயர்ப்புச் செயலி ஒன்றை உருவாக்கி உள்ளனர். இது, வேற்றுமொழியில் பேசுபவர்களின் பேச்சைத் தமிழ் எழுத்துகளில் தரும். தொடரைத் தந்தால், அதற்குரிய தமிழ்ச்சொல்லைக் கொடுக்கும். இந்தச்செயலி, அறுபது மொழிகளுக்கு இத்தகைய வாய்ப்பை வழங்குகிறது. குறிப்பிட்ட தொடரைப் பதிவு செய்து, எந்த மொழியில் மாற்றவேண்டுமெனப் பதிவு செய்கிறோமோ அந்த மொழிக்கு மாற்றித் தரும்.தற்போது, மிகஎளிய சிறு வரியை மட்டுமே மொழிபெயர்க்கிறது. காரணம், தமிழின் இலக்கண அமைப்பும் சொற்களஞ்சியமும்தான். இந்த மென்பொருளைத் திறன்பேசியிலும், கணினியிலும் நிறுவலாம்.

**நே. கா. நி:** மொழிபெயர்ப்புபற்றி அரிய பல செய்திகளை எடுத்துக்காட்டுகளுடன் விரிவாகவும் விளக்கமாகவும் சொன்னீர்கள், அம்மா. இந்நிகழ்ச்சி, மாணாக்கர்க்கு நல்ல பயனைத் தரும் என்று உறுதியாகக் கூறலாம். எங்களுடன் கருத்துகளைப் பகிர்ந்துகொண்ட உங்களுக்கும் நிகழ்ச்சியில் பங்குகொண்ட மாணாக்கர்க்கும் எங்கள் வானவில் பண்பலையின் சார்பாக நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

**ஆசிரியர்:** இந்நிகழ்ச்சியில் நானும் பங்கேற்றதனைக் குறித்து மகிழ்கிறேன்.

மிக்க நன்றி.

# கலைச்சொற்கள்

## தொடரியல்

Active Voice – செய்வினை
Adjective – பெயரடை
Adverb – வினையடை
Affirmative Sentence – உடன்பாட்டுத் தொடர்
Analysis of Sentence – தொடரைப் பகுத்தல்
Complex Sentence – கலவைத் தொடர்
Compound Sentence – கூட்டுத்தொடர்
Concord of Agreement – இசைவு
Conjunctions – இணைப்புச் சொற்கள்
Direct Speech – நேர்க்கூற்று
Exclamatory Sentence – உணர்ச்சித் தொடர்
Idiomatic Phrases – மரபுத்தொடர் சொற்றொடர்கள்
Indirect Speech – அயற்கூற்று
Interchange of Active and Passive – செய்வினை – செயப்பாட்டுவினை மாற்றம்
Interrogative Sentence – வினாத் தொடர்
Intransitive Verb – செயப்படுபொருள் குன்றிய வினை
Main Clause – முதன்மைத் தொடர்
Negative Sentence – எதிர்மறைத் தொடர்
Object – செயப்படுபொருள்
Order of Words – சொல்முறை
Passive Voice – செயப்பாட்டுவினை
Plural – பன்மை
Predicate – பயனிலை
Prefix – முன்னொட்டுச் சொல்
Punctuation – நிறுத்தக்குறி
Sentence – தொடர்
Simple Sentence – தனித்தொடர்
Singular – ஒருமை
Subject – எழுவாய்
Subordinate Clause – சார்புத் தொடர்
Suffix – பின்னொட்டுச் சொல்
Syntax – தொடரியல்
Synthesis of Sentence – தொடரைச் சேர்த்தல்

The sequence of Tenses – காலமுடிபு
Thesaurus – தொகைச்சொல் நிகண்டு
Transformation of Sentence – தொடர் மாற்றம்
Transitive verb – செயப்படுபொருள் குன்றா வினை

## மொழிபெயர்ப்புக் கலை

Analysis – பகுப்பாய்வு
Communication – தொடர்பாடல்
Component – கூறுபாடு
Concept – எண்ணக்கரு
Correlation – இணைபு
Correspondence – ஒத்தியைபு
Decoding – குறியவிழ்ப்பு
Dialect – கிளைமொழி
Efficiency – வினைத்திறம்
Equivalent Expressions – சமவலு மொழிவுகள்
Generative grammar – பிறப்பாக்க இலக்கணம்
Ideology – கருத்தியல்
Idioms – மரபுத்தொடர்கள்
Image – படிமம்
Perception – புலக்காட்சி
Pragmatic model – பயன்வழி மாதிரியுரு
Pragmatic translation – பயன்வழி மொழிபெயர்ப்பு
Process – நிகழ்முறை
Proverb – பழமொழி
Reference Books – பார்வை நூல்கள்
Relativity – தொடர்பியல்
Semantic relationship – சொற்பொருள் உறவு
Significance – பொருண்மை
Signified – குறிபடுபொருள்
Signifier – குறிப்பான்
Socio-relational patterns – சமுக உறவுக்கோலம்
Source books – மூல நூல்/ வளநூல்
Structuralism – அமைப்பியம்
Surface Level – மேற்பரப்பு மட்டம்
Syntactical elements – தொடர் இலக்கணக் கூறுகள்
Target Language – இலக்குமொழி
Technique – நுண்முறை
Traditional model – மரபுவழி மாதிரியுரு

9CH7FX

# கண்ணாடி

## பொருத்தமான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. 'டிரான்ஸ்லேசியோ'(Translatio) என்னும் சொல் இடம்பெற்றுள்ள மொழி

   அ) தமிழ் ஆ) இலத்தீன் இ) ஆங்கிலம் ஈ) பிரெஞ்சு

2. கம்பராமாயணம், கீழ்க்காணும் மொழிபெயர்ப்பு வகைகளுள் ஒன்றைச் சார்ந்தது. அஃது எது?

   அ) நேரடி மொழிபெயர்ப்பு ஆ) சுருக்கம் இ) மொழியாக்கம் ஈ) தழுவல்

3. மொழியாக்கத்திற்கு எடுத்துக்காட்டாக அமையாத பெயரைத் தேர்ந்தெடுக்க.

   அ) சுவாமி வேதாசலம் – மறைமலையடிகள்

   ஆ) சூரிய நாராயண சாஸ்திரி – பரிதிமாற் கலைஞர்

   இ) தைரியநாதன் – வீரமாமுனிவர்

   ஈ) கனக. சுப்புரத்தினம் - பாரதிதாசன்

4. சரியான மொழிபெயர்ப்புத் தொடரைத் தேர்ந்தெடுக்க.

   அ) Where do you stand in your family? – நீ உன் குடும்பத்தில் எங்கே நிற்கிறாய்?

   ஆ) He is a man. - அவன் ஒரு மனிதனாக இருக்கிறான்

   இ) Please lend me your ears. - அருள்கூர்ந்து உங்கள் செவிகளைக் கொடுங்கள்

   ஈ) The Professor teaches Tamil. - பேராசிரியர் தமிழ் கற்பிக்கிறார்

5. சரியாகப் பொருந்தியுள்ள விடைக்குறிப்பைத் தேர்க.

   அ) பகுப்பாய்வு - 1. Image

   ஆ) படிமம் - 2. Efficiency

   இ) வினைத்திறன் - 3. Idioms

   ஈ) மரபுத்தொடர்கள் - 4. Analysis

|  | அ | ஆ | இ | ஈ |
|---|---|---|---|---|
| 1. | 3 | 1 | 2 | 4 |
| 2. | 4 | 1 | 2 | 3 |
| 3. | 1 | 2 | 4 | 3 |
| 4. | 1 | 2 | 3 | 4 |

## குறுவினா

1. மொழிபெயர்ப்பு என்றால் என்ன? சான்று தருக.
2. சொல்லுக்குச் சொல் மொழிபெயர்க்கக் கூடாது என்பதைச் சான்றுடன் விளக்குக.
3. கீழ்க்காணும் வடசொற்களுக்குரிய தமிழ்ச்சொற்களை எழுதுக.

   சங்கீதம், கமலம், சர்வகலாசாலை, சிநேகம், மிருதங்கம்

4. தமிழில் மொழிபெயர்ப்புக்கெனத் தோன்றிய இதழ் ஒன்றைக் கூறுக.

## சிறுவினா

1. பழமொழியை மொழிபெயர்க்கும்போது ஏற்படும் சிக்கல்கள் யாவை?
2. மொழிபெயர்ப்பாளருக்குத் துறைவாரியான கலைச்சொற்கள் தெரிதல் வேண்டும் – இக்கூற்றைச் சான்றுடன் விளக்குக.
3. கீழ்க்காணும் சொற்களின் கலைச்சொல்லாக்க வடிவம் தருக.

   ( Tele– **தொலை;** Mono– ஒற்றை/ தனி)

   | | | | |
   |---|---|---|---|
   | அ) Tele – vision | ஆ) Tele – scope | இ) Tele – film | ஈ) Tele – phone |
   | உ) Tele – pathy | ஊ) Mono – cycle | எ) Mono – acting | ஏ) Mono – logue |
   | ஐ) Mono – syllable | ஒ) Mono – rail | | |

4. ஒலிபெயர்ப்பு – சிறு குறிப்பு வரைக.
5. கீழ்க்காணும் கவிதை வரிகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திடுக.

   *ஏனடா தம்பி, தயக்கம், எழுவாய்*
   *பழங்கதை பேசிப் பயனிலை புதிதாய்ச்*
   *செயப்படு பொருளைச் சிந்தையில் நிறுத்து*
   *நன்மையை நாடு நாடு உன் நாட்டை*
   *உண்மையைத் தழுவுநீ உன்னைத் திருத்திப்*
   *பிறரைத் திருத்து பேணு பொதுநலம்*
   *சயநலம் தனைச்சுடு நினைவைச் சுத்தம்செய்*
   *சிறுமையை நீக்கு சிந்திக்கப் பழகு*
   *மூலையில் கிடந்து முடங்கியது போதும்*
   *வெளியே புறப்படு விழிகளைத் திறந்தே*

   *– மீரா கவிதைகள்*

## நெடுவினா

1. மொழிபெயர்ப்பில் ஏற்படும் சிக்கல்களைச் சான்றுகளுடன் விளக்குக.
2. மொழிவளர்ச்சிக்கு, மொழிபெயர்ப்பு எவ்வாறு பயன்படுகிறது? விளக்குக.

## படித்துப் பயன்படுத்துவோம்

1. கீழே கொடுக்கப்பட்டுள்ள ஒவ்வொரு சொல்லையும் பயன்படுத்திப் பெயரெச்சம், வினையெச்சம், வினைமுற்றுத் தொடர்கள் உருவாக்குக.

   எ.கா. அழகு

   மயில் அழகான பறவை. (பெயரெச்சம்)

   தாமரை அழகாகப் பூத்திருந்தது. (வினையெச்சம்)

   மல்லிகைப் பூ அழகானது. (வினைமுற்று)

   அ. இனிமை  ஆ. மகிழ்ச்சி  இ. உயர்வு  ஈ. மென்மை  உ. சுறுசுறுப்பு

2. கீழ்க்காணும் குறிப்புகளைப் பயன்படுத்திக் கட்டங்களை நிரப்புக.

| 1 | | | | 2 | 6 | | 8 |
|---|---|---|---|---|---|---|---|
| | | 7 | | | | | |
| | | | 3 | | | | |
| 4 | 5 | | | | | | |
| | | | | | 10 | | |
| | | | | 12 | | | |
| 13 | | | | | | | |
| | 15 | | | 11 | | 14 | 9 |

**இடமிருந்து வலம்**

1. மயில் கூவியது என்பது ---------வழு. (3)
5. ஒருவர், முன்னிரண்டடி பாட, அடுத்தவர் பின்னிரண்டடி பாடிப் பாடலை நிறைவு செய்வர். அவர்களை ----------ப் புலவர்கள் என்றழைப்பர். (4)
6. பள்ளி செல்ல விரும்பு; பாடம் வெல்லக் கரும்பு – இப்பாடலில் ஈற்றில் அமைந்துள்ள நயம்------.(3)
13. குளிர்ச்சியைக் குறிக்கும் வேறு சொல்-------------. (3)

**மேலிருந்துகீழ்**

2. அவள் கலகலவென நகைத்தாள். கலகல என்பது--------. (8)
4. உடலில் காயம் ஏற்பட்டவருக்கு உடனடியாகச் செய்வது-------------.(5)
5. காஞ்சி அணிந்து வந்தாள் என்பது ----ஆகுபெயர். (2)
7. மரம், செடி, கொடிகளைக் குறிக்கும் ஒரே சொல்-------------.(4)
8. நாவல் என்பதற்குப்--------- என்று பொருள். (3)
10. சொல்லுக்குப் பொருள் காண உதவும் நூல்--------. (4)

**வலமிருந்து இடம்**

3. செம்மை என்பது ---------வண்ணம். (4)
11. நகைச்சுவையாகப் பேசுபவர்களைக் குறிக்கும்; ஆனால், தமிழ்ச்சொல்லன்று. (5)
12. நகரம் என்னும் சொல்லுக்கு எதிர்ச்சொல் (4)

**கீழிருந்துமேல்**

9. பொறாமைகொள்ளுதலின்தீமையைப்பற்றி வள்ளுவர் கூறும் அதிகாரம்-------.(6)
14. கவிஞரைக் குறிக்கும் வேறு சொல். (5)
15. நிலப்பகுதியைக் குறிக்கும் சொல். இடம் மாறியுள்ளது. (4)

3. கீழ்க்காணும் இரு படத்திற்கும் உரிய சொற்களை இணைத்தால், தொகைநிலைத் தொடர்கள் கிடைக்கும். அவற்றைக் கண்டறிக.

| | | | | |
|---|---|---|---|---|
|  | + |  | ஆடுகொடி | வினைத்தொகை |
|  | + |  | | |

| | | | | |
|---|---|---|---|---|
|  | + |  | | |
|  | + |  | | |
|  | + |  | | |
|  | + |  | | |

4. *கீழ்க்காணும் தொடர்களில் எந்தப் பகுதியில் பிழை உள்ளது எனச் சுட்டிக்காட்டுக. காரணம் அறிந்து சரியான விடையையும் தருக.*

(எ.கா.) ஒவ்வொரு வீடுகளிலும் மரக்கன்று நடுதல் நன்று

| ஒவ்வொரு | வீடுகளிலும் | மரக்கன்று | நடுதல் | நன்று |
|---|---|---|---|---|
| --------- | ---------- | --------- | ------ | ---- |
| 1 | 2 | 3 | 4 | 5 |

பகுதி – 2 இல் பிழை உள்ளது. ஒவ்வொரு என்பது, ஒருமையைக் குறிக்கும். எனவே, அது சுட்டும் பெயர்ச்சொல்லும் (வீடுகள்) ஒருமையிலேயே வருதல் வேண்டும். ஆகவே, **ஒவ்வொரு வீட்டிலும் மரக்கன்று நடுதல் நன்று** என்பதே சரியானது.

அ) தாயைக் கண்டதும் குழந்தைக்குத்தான் எத்தனை மகிழ்ச்சி

| தாயைக் | கண்டதும் | குழந்தைக்குத்தான் | எத்தனை | மகிழ்ச்சி |
|---|---|---|---|---|
| --------- | ------- | ---------- | ------ | ------- |
| 1 | 2 | 3 | 4 | 5 |

ஆ) கண்ணன் ஓட்டப்போட்டியில் வெற்றி பெற முயற்சித்தான்

| கண்ணன் | ஓட்டப்போட்டியில் | வெற்றி | பெற | முயற்சித்தான் |
|---|---|---|---|---|
| --------- | ----------- | ----- | ----- | ----------- |
| 1 | 2 | 3 | 4 | 5 |

இ) மாதவி மணிகளைக் கோர்த்து மாலை யாக்கினாள்

| மாதவி | மணிகளைக் | கோர்த்து | மாலை | யாக்கினாள் |
|---|---|---|---|---|
| ------- | -------- | --------- | --------- | --------- |
| 1 | 2 | 3 | 4 | 5 |

ஈ) எனக்கு இலக்கணம் சொல்லிக் கொடுத்தது மெய்யம்மை

| எனக்கு | இலக்கணம் | சொல்லிக் | கொடுத்தது | மெய்யம்மை |
|---|---|---|---|---|
| -------- | -------- | -------- | --------- | ---------- |
| 1 | 2 | 3 | 4 | 5 |

உ) எனது தாய் எனது வீட்டிற்கு வந்தாள்

| எனது | தாய் | எனது | வீட்டிற்கு | வந்தாள் |
|---|---|---|---|---|
| ------- | -------- | ------- | ------- | ------ |
| 1 | 2 | 3 | 4 | 5 |

5. *கீழ்க்காணும் உரைப்பகுதியைப் படித்துப் பொருளுணர்ந்து தமிழில் மொழிபெயர்த்திடுக.*

(i) *We have been preparing a good drama program since last week. It will be completed by the end of next week. This program will be approved by our Headmaster surely. Then we will play the same in front of the audience during our Annual day celebration.*

(ii) *Last year the Independence day was celebrated in our school in a grand manner. The retired District collector presided over the function. He delivered a good speech on the duty of every Indian. All the audience were enchanted by his speech.*

(iii) *கீழ்க்காணும் தமிழ் மரபுத்தொடருக்கேற்ற ஆங்கில மரபுத்தொடர்களை எழுதுக*

| மதில்மேல் பூனை | கிணற்றுத் தவளை | குரங்கின் கை பூமாலை |
|---|---|---|
| பசுத்தோல் போர்த்திய புலி | முதலைக் கண்ணீர் | கரி பூசுதல் |

## செயல்திட்டம்

1. *உங்கள் இருப்பிடத்திற்கு அருகிலுள்ள ஏதேனும் ஒரு தொழிலகம் தொடர்பான சொற்களைத் திரட்டி, அகராதி உருவாக்குக.*

2. *உங்கள் பாடநூலில், ஏதேனும் ஓர் இயலைத் தேர்ந்தெடுத்து, அதனுள் இடம்பெற்றுள்ள புதிய சொல்லாக்கங்களையும், தொடரமைப்புகளையும் தொகுத்து அட்டவணைப்படுத்துக.*

## அறிவோம் தெளிவோம்

ஒரு சொல்லைப் பார்த்தவுடன் அது, தமிழ்ச்சொல் அல்லது வடசொல் என்று கூற இயலுமா?

வடசொல் என்பதைக் கண்டறிய, இதோ சில குறிப்புகள்

- தமிழ் எழுத்துகளின் வடிவம் இல்லாச் சொற்கள். (எ.கா.) புஷ்பம்
- தமிழில் மொழிமுதல் வாரா எழுத்துகளில் தொடங்குவன. (ரம்யா, லட்டு)
- தமிழில் மொழி இறுதியில் வாராச் சொற்கள் (எ.கா.) வீரேந்திரநாத்
- தமிழில் வேற்றுநிலை மெய்ம்மயக்கத்திற்கு உட்படாத எழுத்துகள் தொடர்ந்து வருவன. ( பக்தி)
- தனிக்குற்றெழுத்தை அடுத்து, ரகர ஒற்று அமைந்திருப்பன. (எ.கா.) தர்மம், நிர்வாகம்
- எதிர்ப்பொருளை உணர்த்தவரும் முன்னொட்டுடன் கூடிய வடசொற்கள். (எ.கா.) நீதி – அநீதி, நியாயம் – அநியாயம்
- அழுத்தமாக ஒலிக்கக் கூடிய சொற்கள். (எ.கா.) பாவனை
- வேர்ச்சொல் அல்லது காரணப்பெயர் இன்றி அமையும் சொற்கள் போன்று வருவனவெல்லாம் வடசொற்களே.

## இணையச்செயல்பாடு

# தொடரியல் மற்றும் பொருண்மையியல்



**இலக்கியங்கள் வழி**
**இலக்கணம் அறிவோம் !**

### படிகள்

1. கொடுக்கப்பட்டிருக்கும் உரலி / விரைவுக்குறியீட்டைப் பயன்படுத்தி tamilvu என்னும் இணையப்பக்கம் செல்க .
2. திரையில் தோன்றும் விரிதரவு என்பதைத் தேர்வு செய்தவுடன், தொடரியல் மற்றும் பொருண்மையியல் என்னும் தெரிவுகள் கொடுக்கப்பட்டிருக்கும்.
3. எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் ஆகியவற்றைத் தெரிந்துகொள்ள, தொடரியலையும் உணர்பொருள், உவமை–உருவகம், ஒருபொருள் பன்மொழி ஆகியவற்றைத் தெரிந்துகொள்ள, பொருண்மையியலையும் தேர்வு செய்க.

எடுத்துக்காட்டாக, உவமை–உருவகம் அறிவதற்கு நூல் ஒன்றைத் தேர்வுசெய்து, பாடல் எண்ணை உள்ளீடு செய்வதன்மூலம், அப்பாடலுக்குரிய உவமை–உருவகம் அறிந்து கொள்ளலாம்.

### செயல்பாட்டின் படிநிலைக்கான படங்கள் :



படி 1



படி 2



படி 3

தொடரியல் மற்றும் பொருண்மையியல் இணையப் பக்கத்தின் உரலி:
http://www.tamilvu.org

B145_11_ADT_TM

* படங்கள் அடையாளத்திற்கு மட்டுமே.

## இணையச்செயல்பாடு

# தமிழ் மின் அகராதி

**தமிழ்ச்சொல் அறிவோம்!!**



## படிகள்

1. கொடுக்கப்பட்டிருக்கும் உரலி/ விரைவுக்குறியீட்டைப் பயன்படுத்தி 'tamillexicon' என்னும் இணையப் பக்கத்திற்குச் செல்க.
2. இப்போது திரையில் தோன்றும் தேடுபெட்டியில் ஆங்கிலச் சொல்லை உள்ளீடு செய்து, அதற்கிணையான தமிழ்ச்சொற்களை அறிக.

   எடுத்துக்காட்டாக, 'lexicon' என்னும் சொல்லை உள்ளீடு செய்து சொற்களஞ்சியம், பேரகராதி, அகராதி போன்ற தமிழ்ச்சொற்களை அறிக.

## செயல்பாட்டின் படிநிலைக்கான படங்கள் :



படி 1



படி 2



படி 3

தமிழ் மின் அகராதி இணையப் பக்கத்தின் உரலி

http://www.tamillexicon.com/?s=website&act=findout

B145_11_ADT_TM

* படங்கள் அடையாளத்திற்கு மட்டுமே.

இயல்
ஐந்து

# ஊடகவியல்

9D63HK

## இதழியல்




உலகின் பல்வேறு இடங்களில் நடைபெறும் அன்றாட நிகழ்வுகளை மக்களுக்குக் கொண்டு செல்லும் தொடர்புச் சாதனமே ஊடகம் . ஊடகத்தை அச்சு, காட்சி, கேள்வி மற்றும் இணையவழி ஊடகங்களாக வகைப்படுத்தலாம்.

இப்பாடப் பகுதியில் அச்சு ஊடகமான இதழ்கள் சமுதாயத்திற்கு ஆற்றிவரும் பணிகள், இதழ்களின் மொழிநடை, அதன் வகைகள், இதழியல் சார்ந்த செய்திகள், மெய்ப்புத் திருத்தக் குறியீடுகள், சிறந்த இதழியல் ஆளுமைகள் குறித்த தகவல்கள், ஊடகத்துறையில் பணியாற்ற விழைவோர்க்கான வழிகாட்டுதல்கள், ஆகியவை அமைந்துள்ளன.

### கற்றல் நோக்கங்கள்

- இதழியலின் தோற்றம், வளர்ச்சி ஆகியவற்றை அறிந்து கொள்ளுதல்.
- சமூக மேம்பாட்டிற்கு இதழ்களின் பங்களிப்பைப் புரிந்து கொள்ளுதல்.
- இதழ்களில் பயன்படுத்தப்படும் மொழிநடையை அறிந்து, தம் படைப்புகளில் பயன்படுத்துதல்.
- நிகழ்வுகளைச் செய்தியாக்கவும் கையெழுத்து இதழ் உருவாக்கவும் திறன் பெறுதல்.
- ஊடகவியல் துறையின் தமிழ் ஆளுமைகளைத் தெரிந்துகொள்ளுதல்.

### பாடப் பகுதி

- இதழ்களின் அமைப்பு முறை
- தமிழ் இதழ்கள் – ஒரு சந்திப்பு
- சமுதாய முன்னேற்றத்தில் இதழ்கள்
- ஊடகவியலில் தமிழ் ஆளுமைகள்

கட்டுரை

இயல் ஐந்து

# இதழ்களின் அமைப்புமுறை

## ஊடகம்

உலகின் பல்வேறு இடங்களில் நாள்தோறும் நடைபெறும் நிகழ்வுகளை மக்களுக்குக் கொண்டுசெல்ல உதவும் கருவிகளே ஊடகங்கள். இவற்றை அச்சு, காட்சி, கேட்பு, இணையவழி ஊடகங்கள் என வகைப்படுத்தலாம். செய்திப் பதிவுகளையும் படங்களையும் உள்ளடக்கிய இதழ்களே அச்சு ஊடகங்கள். நிகழ்வுகளைக் காணொளிகளாக ஒளிபரப்பும் தொலைக்காட்சி, காட்சி ஊடகம். நிகழ்வுகளை உரை வடிவங்களாக ஒலிபரப்பும் வானொலி, கேட்பு ஊடகம். இன்றைய அறிவியல் வளர்ச்சியினால் அச்சு, காட்சி, கேட்பு ஆகிய ஊடகப்பதிவுகளை இணையவழி ஊடகம் ஒருங்கிணைக்கிறது . இவை அனைத்தின் வழியாகவும் செய்திகள் மக்களைச் சென்றடைகின்றன.

## இதழ்கள்

நாட்டின் சமூக, அரசியல், பொருளாதார வளர்ச்சியிலும் முன்னேற்றத்திலும் இதழ்கள் ஆற்றிவரும் பங்கு அளப்பரியது. இதனால் பாரதிதாசனும்,

*காரிருள் அகத்தில் நல்ல*
*கதிரொளி நீதான்! இந்தப்*
*பாரிடைத் துயில்வோர் கண்ணில்*
*பாய்ந்திடும் எழுச்சி நீதான்*
*ஊரினை நாட்டை இந்த*
*உலகினை ஒன்று சேர்க்கப்*
*பேரறி வாளர் நெஞ்சில்*
*பிறந்த பத்திரிகைப் பெண்ணே!*

என்று இதழ்களின் பெருமையைப் பாடுகிறார்.

## இதழ்களின் வகைகள்

நாள்தோறும் வெளியாகும் செய்தித்தாள்களை நாளிதழ்கள் எனவும் காலமுறைப்படி வெளியாகும் இதழ்களைப் பருவ இதழ்கள் எனவும் வகைப்படுத்தலாம். பருவ இதழ்கள் வாரம், வாரமிருமுறை, மாதம், மாதமிருமுறை, காலாண்டு, அரையாண்டு, ஆண்டு எனக் கால இடைவெளியை வரையறுத்துக்கொண்டு வெளிவருகின்றன.

## நாளிதழ்கள்

நாளிதழ்கள், நாள்தோறும் காலை இதழ், மாலை இதழ் என இருவகையாக வெளிவருகின்றன. அவை, உலகெங்கும் நிகழும் நிகழ்ச்சிகளை நாள்தோறும் மக்களிடம் கொண்டு சேர்க்கின்றன. நாளிதழ்களை உருவாக்குவதில் செய்தியாளர்கள், இதழாசிரியர்கள், பதிப்பாளர்கள், முகவர்கள் ஆகியோர் இன்றியமையாப் பணியாற்றுகின்றனர்.

## பருவ இதழ்கள்

பருவ இதழ்கள், நாட்டு நடப்புகளை விவரித்து எழுதுகின்றன. இவை பல்வேறு துறை சார்ந்த பருவ இதழ்களாக உள்ளன. எடுத்துக்காட்டாக இலக்கிய இதழ்கள், அறிவியல் இதழ்கள், வேளாண் இதழ்கள், கலை இதழ்கள், சிறுவர் இதழ்கள், மகளிர் இதழ்கள், சமய இதழ்கள், சோதிட இதழ்கள், அரசியல் இதழ்கள், கல்வி இதழ்கள் ஆகியவற்றைச் சுட்டலாம்.

## செய்தித்திரட்டும் வெளியீடும்

செய்திகளைத் திரட்டுபவர்கள், செய்தியாளர்கள். இவர்களை நிருபர்கள் எனவும் அழைக்கின்றனர். இவர்கள்

தங்கள் பகுதிசார்ந்த அரசு செயல்பாடுகள், மக்களின் தேவைகள், குறைகள், விபத்து, சமூக நிகழ்வுகள், வானிலை அறிக்கைகள், அறிவியல்சார் நிகழ்வுகள், அறிவிப்புகள், குற்றங்கள் எனப் பல செய்திகளைத் திரட்டித் தங்களுடைய அலுவலகத்திற்கு உடனுக்குடன் அனுப்பி வைப்பர். செய்தியாளரால் திரட்டப்பட்ட செய்திகள், செய்திப் பிரிவுக்கு அனுப்பப்பட்டு, முதன்மைப் பதிப்பாசிரியராலும் ஆசிரியர் குழுவாலும் செம்மைப்படுத்தப்பட்டு வெளியிடப்படுகின்றன.

மாவட்ட ஆட்சியர் அலுவலகம், மக்கள் செய்தித்தொடர்பு அலுவலகம், நீதிமன்றங்கள், மருத்துவமனைகள், காவல் நிலையங்கள் ஆகியவை முதன்மைச் செய்திக் களங்களாகக் கருதப்படுகின்றன. செய்தியாளர்கள், செய்தி திரட்டுவதற்காக எல்லா இடங்களிலும் பம்பரமாய்ச் சுழல்வார்கள். எனவேதான், புகை நுழையமுடியாத இடத்திலும் செய்தியாளர்கள் நுழைந்துவிடுவர் என்னும் சொல் வழக்கு ஏற்பட்டது.

## இதழ் உருவாக்கம்

இதழாசிரியர்கள், செய்திகளின் முதன்மை கருதி எந்தச் செய்தியை எந்தப் பக்கத்தில் வெளியிடுவது என்று முடிவு செய்து இதழை வடிவமைப்பர். இதழ் சிறப்பான முறையிலும் குறித்த நேரத்திலும் வெளிவர வேண்டுமெனில் மாதிரித் திட்ட வரைவினை உருவாக்குவர். இந்த மாதிரித் திட்ட வரைவைச் செய்தியின் கட்டமைப்பு முறை என்பர். செய்தியின் மதிப்பை உயர்த்துவதில் இக்கட்டமைப்பு முறைசிறப்பான இடத்தைப் பெறுகிறது. படிப்பவர்களின் உள்ளங்களைக் கவரும்வண்ணம் இதழ் கட்டமைப்பு இருத்தல் வேண்டும். ஒரு செய்தியின் வலிமையான கட்டமைப்பை நான்கு காரணிகள் உறுதிசெய்கின்றன. அவையாவன:

1. செய்தி எழுதுவதற்குக் கிடைக்கும் நேரம்.
2. செய்தியின் உருவ அமைப்பு.
3. செய்தித்தாளில் அவற்றை வெளியிடுவதற்குக் கிடைக்கும் இடம்.
4. செய்தி எழுதுபவரின் திறமை .

## செய்தியின் பகுதிகள்

செய்தித்தாளில் வெளிவருகின்ற ஒரு செய்தி தலைப்பு, முகப்பு, செய்தி விளக்கம் ஆகிய மூன்று பகுதிகளைக்கொண்டு அமைகிறது.

### 1. தலைப்பு

செய்தியின் தலைப்பு, பெரிய எழுத்துகளில் அச்சிடப்பட்டிருக்கும். இது படிப்பவர்களைக் கவர்ந்திழுக்கும் வகையிலும், படித்தவுடன் செய்தியை உணரும் வகையிலும் இருக்கும். தலைப்புகள் ஒரு செய்தித்தாளுக்கு வடிவ அமைப்பையும் அழகையும் கொடுக்கின்றன.

**தமிழ்நாடு மின் வாரிய இணையதளம் புதுப்பிப்பு**

● தகவல்களை விரைவாகப் பெற முடியும்

### தலைப்பின் நோக்கம்

"இதழ்களை, அவற்றில் இடம்பெறும் தலைப்புகளே துல்லியமாகக் கணிக்கின்றன" என்று ஆலன் ஹோம் கோம்ப் கூறுகிறார். செய்தித் தலைப்பைச் செய்தித் தாளின் பலகணி என்பர். செய்தியின் சிறப்புத்தன்மைகளைக் கூறுதல், இன்றியமையாமையை உணர்த்துதல், படிப்பவர்களைக் கவர்தல், விற்பனையை உயர்த்துதல் ஆகியவை தலைப்பின் நோக்கங்களாகும்.

**அறிவோம் தெளிவோம்** — **மக்களாட்சியின் நான்காவது தூண்**

'ஊடகம் மக்களாட்சியின் நான்காவது தூண்' என அழைக்கப்படுகின்றது. முதல் தூணாக அரசு நிருவாகமும் இரண்டாவது தூணாகப் பாராளுமன்றமும் சட்டமன்றமும் மூன்றாவது தூணாக நீதிமன்றமும் நான்காவது தூணாக ஊடகமும் குறிப்பிடப்படுகின்றன. மக்களின் அடிப்படை உரிமையான கருத்துரிமையைக் காத்தல், சமூகக் குற்றங்களை எதிர்த்தல், அரசுக்கு வழிகாட்டுதல், ஆலோசனைகளை வழங்குதல் போன்ற செய்திகளை வழங்குவதால் ஊடகம் நான்காவது தூணாகக் கருதப்படுகிறது.

## தலைப்பின் வகைகள்

### 1. கூம்புத் தலைப்பு

கோபுர அமைப்பில் முதல் வரி சிறியதாகவும் தொடரும் வரிகள் அதனைவிட நீளமானவையாகவும் இருக்கும்.

### 2. தலைகீழ்க் கூம்புத்தலைப்பு

தலைகீழ்க்கோபுரம்போல இருக்கும்.

### 3. இடப்பக்கம் தள்ளிய தலைப்பு

இடப்பக்கம் தள்ளியதாகத் தலைப்பு இருக்கும்.

### 4. வலப்பக்கம் தள்ளிய தலைப்பு

வலப்பக்கம் தள்ளியதாகத் தலைப்பு இருக்கும்.

### 5. உடுக்குத் தலைப்பு

உடுக்கையின் உருவம்போலத் தலைப்பு இருக்கும்.

இவ்வாறு பலவகையான தலைப்பு வடிவங்கள் செய்தித்தாளில் இடம்பெறும்.

### 2. முகப்பு

தலைப்பைத் தொடர்ந்து இடம்பெறுவது முகப்பு. இதில் ஒரு செய்தியின் முதன்மையான உள்ளடக்கம் ஓரிரு சொற்றொடர்களில் அமையும்.

### முகப்பின் தன்மை

செய்தியின் முகப்புப் பகுதி, சுருக்கமாகவும் தெளிவாகவும் எளிமையாகவும் இருத்தல் வேண்டும். இது செய்திக்கு உயிரோட்டம் தருகிறது; படிப்பவர்களின் ஆவலையும் தூண்டுகிறது.

இந்திய அஞ்சல் துறை
இணையத்தள வங்கி சேவை

• நாடு முழுவதும் மார்ச் மாதத்தில் அமல்படுத்த முடிவு

**தமிழ்**
**ஊடகங்களில்**
**பணியாற்ற ஆசையா?**

**தமிழ் ஊடகங்களில்**
**பணியாற்ற**
**ஆசை**

**ஊடகங்களில் பணியாற்ற**
**ஆசையா?**

**ஊடகங்களில் பணியாற்ற**
**ஆசையா?**

**கணித்தமிழ் வழியாகக்**
**கன்னித்தமிழ்**
**பெருமையைக் காப்போம்**

### செய்தி விளக்கப்பகுதி

செய்தியின் தலைப்பையும் முகப்பையும் எழுதிய பிறகு, செய்தியின் விளக்கப்பகுதியை எழுத வேண்டும். செய்திகள் தொடக்கம், இடை, இறுதி என்று மூன்று நிலைகளில் அமைதல் வேண்டும்.

செய்தியின் விளக்கப்பகுதியை எழுதுவதற்குமுன்னால் மூன்று குறிப்புகளைக் கவனத்தில் கொள்ளவேண்டும். முதலாவதாகச் செய்தியை முழுமையாகப் படித்து, படிப்பவர்களுக்கு எவை தேவை என்பதைத் தீர்மானித்துக்கொள்ள வேண்டும். இரண்டாவதாக செய்திக்குத் தேவையான எல்லா விவரங்களும் இருக்கின்றனவா என்பதைக் கவனிக்கவேண்டும். மூன்றாவதாகச் செய்தியை எவ்வளவு விரைவாகக் கூற முடியுமோ அவ்வளவு விரைவாகக் கூற வேண்டும்.

செய்தியின் விளக்கப்பகுதி, செய்தியைப் பொருள் மயக்கமின்றி உணர்த்துவதாகவும் புதுமையாகவும் சுவையூட்டுவதாகவும் விறுவிறுப்பாகவும் அமைவதன் மூலம் செய்தியின் மதிப்பு கூடுகிறது.

### பக்க அமைப்புமுறை

செய்தித்தாளில் இடம்பெற வேண்டிய செய்திகள், எந்தெந்தப் பக்கத்தில் எந்தெந்த இடத்தில் எப்படி அமைய வேண்டுமெனத் தீர்மானிப்பது, பக்க வடிவமைப்பு. செய்தித்தாளின் அனைத்துப் பக்கங்களும் மிகவும் இன்றியமையாதவையாக இருப்பினும், முதற்பக்கம் சிறப்பானதாகவும் பொலிவுடையதாகவும் அமைந்திருக்கும். முதற்பக்கத்தில் முதன்மையான அரசியல் செய்திகள், உள்ளத்தை உருக வைக்கும் நிகழ்வுகள், வண்ணப்படங்கள் போன்றவை இடம்பெற்றுப் படிக்கும் ஆவலைத் தூண்டும் விதமாக அமைந்திருக்கும். செய்தித்தாளை அச்சிடுவதற்கு முன்புவரை கிடைக்கக்கூடிய (கடைசி நேரச் செய்திகள்) இன்றியமையாத செய்திகள், முதற்பக்கத்தில் வடிவமைக்கப்பட்டிருக்கும். மற்ற பக்கங்கள் முன்பே முழுமையாக முடிக்கப்பட்டிருக்கும். செய்திகளை வழங்குவதன் அடிப்படையில் செய்தித்தாள் மூவகைப் பக்க அமைப்பைக் கொண்டுள்ளது.

#### 1. சமநிலைப் பக்க அமைப்பு

முறையான ஓர் அமைப்பில் செய்திகள், படங்கள், கேலிச்சித்திரங்கள், துணுக்குகள், விளம்பரங்கள் ஆகியவற்றை ஒரே சீராக அமைப்பது.

#### 2. மாறுபட்ட பக்க அமைப்பு

ஒரு பக்கத்தைச் சமநிலையில் அமைக்கின்றபொழுதே இடையிடையே மாறுபட்ட முறைகளில் செய்திகளையும் படங்களையும் அமைப்பது.

#### 3. கலப்புநிலைப் பக்க அமைப்பு

சமநிலைப் பக்க அமைப்பிலிருந்து முற்றிலும் மாறுபட்டதாக அமைப்பது கலப்பு நிலைப் பக்க அமைப்பு. இதில், செய்திகள் மற்றும் உள்ளடக்கங்கள் இடம்பெறும் பக்கங்கள் ஒவ்வொரு நாளும் மாறுபடலாம்.

**சமநிலைப்பக்க அமைப்பு**

1. தலையங்கம்
2. கட்டுரை
3. வாசகர் கடிதம்



1. வணிகப்பகுதி



1. விளையாட்டு



### பக்க அமைப்பின் நோக்கங்கள்

படிப்பவர்களைக் கவர்தல், செய்தியின் இன்றியமையாமையைக் காட்டுதல், படிப்பதற்கு ஏற்றவாறு அமைத்தல், சுவை கூட்டுதல், இதழை இனம் காட்டுதல், விரும்புவதைப் படிக்கச் செய்தல், பயனை மதிப்பிட உதவுதல், மிகுதியான செய்திகளைப் படிக்க வாய்ப்பளித்தல் முதலியன பக்க அமைப்பின் நோக்கங்களாகும்.

### பத்தி அமைப்பு

இதழ்களில் பத்திகள் ஐந்து செ.மீ. நீளத்திற்கு மிகாமல் இருத்தல் வேண்டும். ஒரு பத்திக்கும் இன்னொரு பத்திக்கும் தொடர்பு இருக்கவேண்டும். இரண்டு பத்திக்குமிடையே தொடர்பு விட்டுப்போகுமிடத்தில் துணைத் தலைப்பிட்டு இணைப்பை ஏற்படுத்த வேண்டும்.

### படங்கள்

நாளிதழ் வனப்பையும் செய்தி மதிப்பையும் கூட்டுவனவாகப் படங்கள் உள்ளன. ஆயிரம் சொற்களால் சொல்ல முடியாதவற்றை ஒரு படம் உணர்த்திவிடுகிறது. கற்றோர், எழுத்தறிவற்றோர், முதியோர், சிறுவர்கள் ஆகிய அனைத்துத் தரப்பினரும் பார்த்துச் செய்திகளைப் புரிந்துகொள்ளப் படங்கள் உதவுகின்றன.

### இதழ்களின் மொழிநடை

ஓர் இதழுக்குச் சிறப்பு சேர்ப்பனவற்றுள் முதன்மையானது, அதனுடைய மொழி நடையாகும். சிறப்பான மொழிநடை மக்களை வெகுவாக ஈர்க்கிறது. நாம் மற்றவர்களோடு பேசுவதற்குப் பயன்படுத்துவது பேச்சுத் தமிழாகும். விளம்பரத்திற்காகக் கையாளும் தமிழ், அழகாகவும் செறிவாகவும் இருக்கும். மேடை ஏறி முழங்கும் பேச்சாளர்கள் சிலர், பயன்படுத்தும் நடை இலக்கிய நயத்துடன் இருக்கும்.

மொழிநடை பொருளுக்கேற்பவும் வேறுபடுகிறது. பெரும்புலவர்கள் எழுதுகின்ற இலக்கியக் கட்டுரைகள் சொற்செறிவுடன் அமைந்திருக்கும். இதழ்களில் இடம்பெறும் புனைகதைகளில், அணி சேர்க்கும் அடைமொழிகளும் உவமைகளும் கையாளப்படும். சிறுகதைகளில் சொற்கள் சிக்கனமாகப் பயன்படுத்தப்படும். இதுபோலவே படிக்கத்தெரிந்தவர்கள் அனைவரும் எளிதாகப் படித்துப் புரிந்துகொள்ளும் வகையில் இதழ்களில் மொழிநடை அமைந்திருக்கும்.

### தலையங்க மொழிநடை

நாளிதழ், பருவ இதழ்களில் தலையங்கம் முதன்மையான இடத்தைப் பெறுகின்றது. நடைமுறையில், தலையங்கம் இதழின் தரத்தை உயர்த்துகின்றது. தலையங்கம், செய்தித்தாளின் சமூகப் பார்வையையும் நிலைப்பாட்டையும் வெளிப்படுத்துவதாக அமைகின்றது.

### தலையங்கத்தின் இயல்புகள்

தலையங்கம், ஓர் இதழின் கருத்துக் கண்ணாடி ஆகும். இதனை எழுதும்

**அறிவோம் தெளிவோம்** — **திரு.வி.க. வின் தமிழுணர்வு**

1. 'தேசப்பிதா காந்திஜி' யை முதன்முதலில் காந்தியடிகள் என்று குறிப்பிட்டு இதழ்களில் திரு.வி.க எழுதினார். சிலப்பதிகாரத்தில் வரும் கௌந்தியடிகளைப் படிக்கும்போது காந்தியை, காந்தியடிகள் என்று குறிப்பிட வேண்டுமென்று தோன்றியதாகத் தமது நவசக்தி இதழில் எழுதியுள்ளார்.
2. அன்னிபெசண்ட் அவர்களை 'அன்னை வசந்தை' என்றே அவர் எழுதினார்.
3. 'வல்லரசு' என்ற புதிய அரசியல் பதத்தை முதன்முதலில் அவர் உருவாக்கினார்.
4. சட்டசபையில் ஆங்கிலமே பேசப்பட்டு வந்த நிலையில் சேலத்தைச் சேர்ந்த பி.வி. நரசிம்மன் என்பவர் முதன்முதலில் தமிழில் பேசியதை எந்த இதழும் வெளியிடாத நிலையில் தமது தேசபக்தன் இதழில் வெளியிட்டார்.

ஆசிரியர், தம் பொறுப்பினை உணர்ந்து எழுதவேண்டும். எதனைப் பற்றித் தலையங்கம் எழுதினாலும் தரவுகளைத் திரட்டிவைத்துக்கொண்டு நடுநிலையோடு எழுதுதல் வேண்டும். கட்டுரையைப்போல் விரிவாக இல்லாமல் சுவையாகவும் சிந்தனையைத் தூண்டுவதாகவும் அமைவது, தலையங்கத்திற்குச் சிறப்பைத் தரும். சிறந்த தலையங்கங்கள் பொருளுக்கேற்பத் தெளிவான நடையில், வலுவான கருத்துகளைக்கொண்டு அமைந்திருக்கும். ஒரு கொள்கை / கருத்தின் மீதான செய்தித் தாளின் நிலைப்பாட்டை இதன் மூலம் அறியலாம்.

### இடம்பெறும் பிற செய்திகள்

இதழ்கள், நடப்புச்செய்திகளை வெளியிடுவதோடு அல்லாமல் கருத்துப்படம், நூல் மதிப்புரை, வாசகர் கடிதம், விளம்பரம் முதலிய பகுதிகளுக்கெனக் குறிப்பிட்ட பக்கங்களில் இடங்களை ஒதுக்கி அவை தொடர்பான செய்திகளை வெளியிடுகின்றன.

### நூல் மதிப்புரை

நூல் மதிப்புரை என்பது, ஒரு நூலைப்பற்றிய திறனாய்வாகும். இது நாளிதழ்களில், ஒரு வாரத்தின் குறிப்பிட்ட நாளில் வெளியிடப்படுகிறது. இப்பகுதியில் புது நூல்களின் வரவு குறித்த அறிமுகங்கள் இடம்பெறும். சிறப்பான உள்ளடக்கங்கள் கொண்ட நூல்கள் குறித்து மதிப்புரைகள் எழுதப்படும். நூலின் விலை, கிடைக்குமிடம் ஆகிய விவரங்களும் இப்பகுதியில் குறிப்பிடப்பட்டிருக்கும்.

### வாசகர் கடிதம்

வாசகர் கடிதம் என்ற பகுதி, படிப்பவர்களின் பின்னூட்டங்களைப் பதிவு செய்யும் ஒரு களமாக விளங்குகிறது. செய்திகள், பிற படைப்புகள் ஆகியவை வாசகர்களிடையே ஏற்படுத்தியுள்ள தாக்கங்கள் அல்லது மறுப்புகள் இப்பகுதியில் வெளியிடப்படுகின்றன. வாசகர் கடிதம், அடுத்தடுத்து வரும் செய்திகளைச் செம்மைப்படுத்திக்கொள்ள இதழ்களுக்கு உதவுகிறது. மேலும், இப்பகுதி தீவிரமான அரசியல், சமூகச் சிக்கல் ஆகியவற்றைக் குறித்துக் கலந்துரையாடும் திறந்த மேடையாகவும் விளங்குகிறது.

### விளம்பரம்

எந்த இதழைப் புரட்டினாலும் அதன் விற்பனை அளவிற்கும் புகழுக்கும் ஏற்ப விளம்பரங்கள் வெளியிடப்பட்டிருப்பதைக் காணலாம். விளம்பரம் என்பது, படங்கள் மற்றும் கவர்ச்சியான வாசகங்களைப் பயன்படுத்திப் பொருள்களை வாங்க மக்களைத் தூண்டும் முறையாகும். இதழ்களில் பல வகையான விளம்பரங்கள் வெளிவருகின்றன.

வணிக விளம்பரம், நிறுவன விளம்பரம், அறிவிப்பு விளம்பரம், தொழில் விளம்பரம், அரசு விளம்பரம், பங்குச்சந்தை விளம்பரம் போன்ற விளம்பரங்களை நாளிதழ்களில் காணலாம்.

### இணைப்பு இதழ்கள்

தற்காலத்தில் ஒவ்வொரு நாளிதழும் வாரத்தின் ஏழு நாளிலும் ஒவ்வொரு வகையான இணைப்பிதழை வழங்குகின்றன. எடுத்துக்காட்டாக சிறுவர் இதழ், அறிவியல் இதழ், மருத்துவ இதழ், கல்வி இதழ், பெண்கள் இதழ், தொழில் இதழ், வணிக இதழ், விளையாட்டு இதழ், இளைஞர் இதழ், சோதிட இதழ், சமய இதழ், வேலைவாய்ப்பு இதழ் முதலியவற்றைக் கூறலாம்.

### பருவ இதழ்களின் அமைப்பு

பருவ இதழ்களில் அறிஞர்களின் நேர்காணல்கள், நடப்பு நிகழ்வுகள், கட்டுரைகள், தொடர்கள், சிறுகதைகள், கவிதைகள், உடல்நலம், வேளாண்மை, வேலைவாய்ப்பு மற்றும் திரைப்படச் செய்திகள் போன்றவை படிப்பவர்களின் மனத்தைக்

**உங்கள் பார்வைக்குச் சில மின்னிதழ்கள்**

| | |
|---|---|
| நிலாச்சாரல் | http://www.nilacharal.com/ |
| சொல்வனம் | http://solvanam.com/ |
| வல்லினம் | http://vallinam.com.my/version2/ |
| தமிழோவியம் | https://www.tamiloviam.com/ |

**அறிவோம் தெளிவோம்**

## இதழியல் – சில முதன்மைகள்

1. இந்திய இதழியலின் தந்தை –ஜேம்ஸ் அகஸ்ட்டஸ் ஹிக்கி
2. இந்தியாவில் முதன் முதலில் தொடங்கப்பட்ட இதழ் பெங்கால் கெஜட் (1780) (கல்கத்தா ஜெனரல் அட்வைசர்)
3. தமிழ்நாட்டில் வெளிவந்த முதல் நாளிதழ் – மதராஸ் மெயில் (1868)
4. தமிழ்நாட்டில் வெளிவந்த முதல் தமிழ் நாளிதழ் – சுதேசமித்திரன் (1882)

கவரும்வகையில் வண்ணப்படங்களுடன் அமைந்திருக்கும்.

### அட்டைப்படம்

பருவ இதழ்களில் அட்டைப்படங்களே இதழ்களின் வாயில்கள் எனலாம். அட்டைப்பகுதி, படிப்பவர் மனங்களைச் கவரும்வகையில் அமைதல் வேண்டும். இதழின் உள்ளடக்கச் செய்தியைத் தலைப்பாகக்கொண்டு, வண்ணப்படங்களுடன் அட்டைப்பகுதி அமைந்திருக்கும்.




### இணைய இதழ்கள்

இன்று, மக்களிடையே செய்தியை விரைவாகக் கொண்டுசேர்க்கும் ஊடகமாக இணையத்தளம் செயல்பட்டு வருகின்றது. நவீன உலகில் அன்றாடச் செயல்பாடுகளில் தவிர்க்க முடியாத தேவையாக இணையம் உள்ளது. இணையத்தில் வெளியிடப்படும் இதழ்கள், கணினி வழியாகவோ திறன்பேசி வழியாகவோ மிக எளிதாக வாசகர்களைச் சென்றடையும் வலிமை வாய்ந்தவை. அச்சு இதழ்களைவிட இணைய இதழ்களின் பரவல் உலகளாவியது. முழுவதும் மின்பக்கங்களைக் கொண்ட மின்னிதழ்கள், இணையத்தில் வெளியிடப்படுகின்றன.

### இணையத்தில் அச்சிதழ்கள்

அச்சில் வெளிவரும் பெரும்பாலான நாளிதழ்கள் மற்றும் பருவ இதழ்கள் இணையத்திலும் உடனுக்குடன் பதிவேற்றம் செய்யப்படுகின்றன. அவற்றில் எந்த ஓர் இதழையும் காலவாரியாக நாம் பதிவிறக்கம் செய்து படிக்கலாம். பெரும்பாலான வெளியீட்டு நிறுவனங்கள் இவற்றைக் கட்டணமின்றி வழங்குகின்றன. சில நிறுவனங்கள், கட்டணங்களைப் பெற்றுக்கொண்டு மின்னிதழ்களை வழங்குகின்றன.

### இதழ்களின் பெருக்கமும் தேவையும்

தொடக்கக் காலத்தில் குறைவான இதழ்களே வெளிவந்தன. தற்போது நாளுக்குநாள் படிப்பவர்களின் எண்ணிக்கை பெருகிவருகின்றது. எனவே, அவர்களின் தேவைக்கேற்ப இதழ்கள் வெளிவருகின்றன. ஒவ்வோர் இதழும் வாசகர்களை மனநிறைவு அடையச் செய்ய முயல்கின்றன. இதழ்கள் படிப்போரின் ஆர்வத்தைத் தூண்டும் வகையில் வடிவமைக்கப்பட்டு வெளிவருகின்றன. மேலும், நடுநிலையோடு செய்திகளை வெளியிடுகின்றன; மக்களிடையே நாட்டுநடப்புகளை அறியவைத்து, அறிவாற்றலை மேம்படுத்துகின்றன; சமூக மாற்றங்களுக்கு அடித்தளமாகவும் உள்ளன.

## வை.மு. கோதைநாயகி (1901 – 1960)

### மகளிர் இதழ்



வை.மு. கோதைநாயகி. 1925இல் "ஜகன்மோகினி" என்னும் நாவல் இதழினை அதன் பதிப்பாளராகவும் ஆசிரியராகவும் இருந்து நடத்தியவர். முதலில் மாத நாவலாக வெளிவந்துகொண்டிருந்த "ஜகன்மோகினி" 1937-இல் மகளிருக்கான இதழாகத் தன்னை மாற்றிக்கொண்டது. பண்டிதத் தமிழில் ஏனைய பத்திரிகைகள் வெளிவந்து கொண்டிருந்த நிலையில் எளிய நடையில் பாமரரும் படித்தறியும் வகையில் இவர் எழுதியதும் ஜகன்மோகினியின் வெற்றிக்கு ஒரு முக்கிய காரணம்.

தமிழ் இதழியல் வரலாற்றில் முதன்முறையாக ஒரு பெண்ஆசிரியர் பொறுப்பேற்று நடத்திய 'ஜகன்மோகினி' இதழ் வெள்ளிவிழா கொண்டாடியது ஒரு சாதனையாகும். இன்றைய மகளிர் இதழ்களின் தவிர்க்க முடியாத தன்மையாக விளங்கும் சமையல், கோலம், அழகுக் குறிப்பு, சோதிடம் போன்றவை அன்றைய ஜகன்மோகினியில் இடம்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

"ஜகன்மோகினி"யின் துணைவெளியீடாக நந்தவனம் என்ற இதழையும் வெளியிட்டு, அதன்மூலம் நூற்றைம்பதுக்கும் மேற்பட்ட எழுத்தாளர்களை வை.மு.கோ. அறிமுகப்படுத்தினார்.

35 ஆண்டுகள் பத்திரிகை ஆசிரியராகப் பணியாற்றிய கோதைநாயகி பள்ளிப்படிப்பு இல்லாதவர்.இவர்எழுதியுள்ள 115நாவல்களில் 'அனாதைப்பெண்', 'தயாநிதி' போன்றவை திரைப்படங்களாக வெளிவந்துள்ளன. எழுத்தாளர், பத்திரிகையாளர், தேசியவாதி, இசைக்கலைஞர், திரைப்படத் தணிக்கைக்குழு உறுப்பினர் என்று பன்முகத்தன்மை கொண்டிருந்த வை.மு.கோ. மிகச்சிறந்த இதழாளர் என்பதோடு பின்னாட்களில் உருவான பெண் இதழாளர்களுக்குச் சிறந்த வழிகாட்டியாகவும் விளங்கினார் .

**படிப்போம் சுவைப்போம்**

வை. மு. கோதைநாயகி, தம் வீட்டருகே உள்ளே சிறுவர் சிறுமிகளுக்குக் கதை சொல்வது வழக்கம். அவர் கதையில், கற்பனைவளம் நிறைந்திருக்கும். அக்கதைகளைக் கேட்டு, அனைவரும் வியப்படைவர். அவருடைய தோழி, டி. சி. பட்டம்மாள் என்பவரும் கதை சொல்லச் சொல்வார். வை. மு. கோவின் கற்பனைக் கதைகளைக் கேட்ட பட்டம்மாள், 'நீ நன்றாகக் கதை சொல்கிறாய், ஏன் கதை எழுதக்கூடாது?' எனக்கேட்டு, அவரைக் கதை எழுதத் தூண்டினார். எழுதப் படிக்கத் தெரியாத வை. மு. கோ. தன்னால் எப்படி எழுத முடியும்? என வருத்தமுற்றார். அவரின் முகக் குறிப்பை உணர்ந்த பட்டம்மாள், 'நீ சொல்லச் சொல்ல நான் எழுதுகிறேன்' என்று கூறி, அவருக்கு ஊக்கமூட்டினார். வை. மு. கோவின் முதல் படைப்பு, 'இந்திர மோகனா' என்னும் நாடகமாகும். பின்னர், எழுதவும் படிக்கவும் கற்றுக்கொண்டு படைப்புகளை வெளியிடத் தொடங்கினார்.

## பிறமொழிச்சொற்களுக்கு இணையான தமிழ்ச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| நிருபர் | – செய்தியாளர் | தேசம் | – நாடு |
| வாசகர் | – படிப்பவர் | விமர்சனம் | – திறனாய்வு |
| பத்திரிகை | – இதழ் | சுதந்திரம் | – விடுதலை |
| ஆச்சர்யம் | – வியப்பு | பரிவாரங்கள் | – உறவினர்கள் |
| விஞ்ஞானம் | – அறிவியல் | வசூல் | – தண்டல் |
| சித்திரம் | – ஓவியம் | ஜாமின் | – பிணை |
| சந்ததி | – வழித்தோன்றல் | பிரசுரித்தல் | – வெளியிடுதல் |
| உத்தேசம் | – கருதுகை | தீர்மானம் | – முடிவு |
| அபிவிருத்தி | – மிகுவளர்ச்சி | | |

# கலைச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| Art Editor | – கலைப்பகுதி ஆசிரியர் | Journalism | – இதழியல் |
| Anchor | – நெறியாளர் | Journalist | – இதழாளர் |
| Beat Reporter | – செய்திக்கள நிருபர் | Little Magazines | _ சிற்றிதழ்கள் |
| Bit News | – துணுக்குச் செய்திகள் | Local news | – உள்ளூர்ச் செய்திகள் |
| Bureau | – செய்தி நிறுவனம் | Magazine | – இதழ் |
| Caricature | – கேலிச்சித்திரம் | Mass communication | – செய்தித் தொடர்பு |
| Cartoon | – கருத்துப்படம் | Mass Media | – மக்கள் தொடர்புச் சாதனம் |
| Composing | – அச்சுக்கோத்தல் | News agencies | – செய்தி நிறுவனங்கள் |
| Copy | – படி | News Paper | – செய்தித்தாள் |
| Copy Editor | – எழுத்துப்படி திருத்துநர் | News Services | – செய்திப்பிரிவு |
| Crime News | – குற்றச் செய்திகள் | Page Layout | – பக்க வடிவமைப்பு |
| Editor | – ஆசிரியர் | Part–time reporter | – பகுதிநேரச் செய்தியாளர் |
| Editorial | – தலையங்கம் | Periodicals | – பருவ இதழ்கள் |
| Fake News | – பொய்யான செய்தி | Press Conference | – செய்தியாளர் கூட்டம் |
| Filler | – துண்டுச் செய்திகள் | Print | – அச்சு |
| Graphics | – வரைபடங்கள் | Printed form | – அச்சிட்ட படிவம் |
| Green Proof | – திருத்தப்படாத அச்சுப்படி | Proof | – மெய்ப்புத் திருத்தப்படி |
| Headlines | – தலைப்புச் செய்தி | Proof Reader | – மெய்ப்புத் திருத்துநர் |
| Hot News | – அண்மைச்செய்தி | Publisher | – வெளியிடுபவர், பதிப்பாளர். |
| Illustration | – விளக்கப்படம் | Revised edtion | – திருத்தப்பதிப்பு |
| Impression | – அச்சுப்பதிப்பு | Re–edition | – மறுபதிப்பு |
| Interview | – நேர்காணல் | Reporter | – செய்தியாளர் |
| Interviewee | – நேர்காணல் தருபவர் | Review | – மதிப்புரை |
| Interviewer | – நேர்காணல் நிகழ்த்துபவர் | | |

## கண்ணாடி

9DEYJ8

**விளக்கம் கண்டு விடை தருக.**

1. மூன்று மாதங்களுக்கு ஒரு முறை வெளிவரும் இதழ் -------------

2. செய்தித்தாளின் ஒரு பக்கத்தில் எவை, எந்த இடத்தில் எப்படி அமைய வேண்டும் ? எனத் தீர்மானிப்பது -----------------------------

3. உடுக்கின் உருவம்போல அமையும் தலைப்பு இது --------------

4. பொருத்துக.

| உள்ளடக்கம் | இதழின் பெயர் |
|---|---|
| 1. கல்வி வளர்ச்சி | – அ) சம்பாரத் கௌமதி |
| 2. மருத்துவம் | – ஆ) கலைக்கதிர் |
| 3. பெண் உரிமைகள் | – இ) மூலிகை மணி |
| 4. அறிவியல் | – ஈ) ஜனவிநோதினி |

அ) 1–அ 2–இ 3–ஈ 4–ஆ　　ஆ) 1–ஆ 2–ஈ 3–இ 4–அ

இ) 1–ஈ 2–இ 3–அ 4–ஆ　　ஈ) 1–இ 2–அ 3–அ 4–ஆ

5. பொருத்துக.

| இதழின் பெயர் | ஆசிரியர் |
|---|---|
| 1. ரிவோல்ட் | – அ. ஜேம்ஸ் அகஸ்டஸ் ஹிக்கி |
| 2. மெட்ராஸ் கூரியர் | – ஆ. பெரியார் |
| 3. பெங்கால் கெசட் | – இ. காந்தி |
| 4. யங் இந்தியா | – ஈ. ரிச்சர்டு ஜான்சன் |

அ) 1–அ 2–இ 3–ஆ 4–ஈ　　ஆ) 1–இ 2–ஈ 3–ஆ 4–அ

இ) 1–ஆ 2–ஈ 3–அ 4–இ　　ஈ) 1–ஆ 2–அ 3–ஈ 4–இ

**சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.**

6. தமிழ்நாட்டில் முதலில் வெளிவந்த நாளிதழ் எது?

அ) மதராஸ் மெயில்　ஆ) சுதேச மித்திரன்　இ) இந்தியா　ஈ) சக்ரவர்த்தினி

7. மக்களாட்சியின் நான்காவது தூண் என்று அழைக்கப்படுவது எது?

அ) காவல் துறை　ஆ) நிதித்துறை　இ) அரசு நிருவாகம்　ஈ) ஊடகம்

8. பாரதியார், கருத்துப்படங்களை எவ்வாறு அழைத்தார்?

அ) கேலிச்சித்திரம்　ஆ) விளக்கப்படம்　இ) விகடசித்திரம்　ஈ) கூடார்த்த படம்

9. "இதழ்களை அவற்றில் இடம்பெறும் தலைப்புகளே கணிக்கின்றன" என்றவர்

அ) ஆலன் ஹோம் கோம்ப் ஆ) சி.பா. ஆதித்தனார்

இ) அகஸ்டஸ் ஹிக்கி ஈ) ஏ.என்.சிவராமன்

10. கீழ்க்காணும் இதழ்களுள் விடுதலைப் போராட்ட காலத்தில் வெளிவராதது எது?

அ) சுதேசமித்திரன் ஆ) தேசபக்தன் இ) இந்தியா ஈ) அரும்பு

11. இந்தியாவில் முதன் முதலில் கருத்துப்படம் வெளியிட்ட இதழ்

அ) இந்தியா ஆ) மதராஸ் மெயில்

இ) தில்லி ஸ்கெட்ச் புக் ஈ) அமிர்தபஜார் பத்திரிகா

12. பொருந்தாத இணையைத் தேர்ந்தெடுக்க.

அ) இந்தியா – கருத்துப்படம் ஆ) விடுதலை - எழுத்துச் சீர்திருத்தம்

இ) தேசபக்தன் - விடுதலை வேட்கை ஈ) தினத்தந்தி – கடின நடை

13. பொருந்தும் இணையைக் கண்டறிந்து எழுதுக.

அ) பெரியார் - தொழில்நுட்பம் ஆ) ஏ.என்.சிவராமன் - அறிவியல் கட்டுரை

இ) ஜி.கஸ்தூரி- தலையங்கம் ஈ) டி.எஸ்.சொக்கலிங்கம் - பொன்விதி

14. பொருந்தாததனைக் கண்டறிக.

அ) இந்தியா ஆ) பால பாரதி இ) தேசபக்தன் ஈ) விஜயா

15. கூற்று : பெரியார் குடி அரசு என்னும் வார இதழைத் தொடங்கினார்.

காரணம் : தம் கொள்கைகளை மக்களிடம் கொண்டு செல்ல விரும்பினார்.

அ) கூற்று சரி, காரணம் தவறு ஆ) கூற்று, காரணம் இரண்டும் சரி

இ) கூற்று, காரணம் இரண்டும் தவறு ஈ) கூற்று தவறு, காரணம் சரி

16. கூற்று : தலையங்கம் ஓர் இதழின் கருத்துக்கண்ணாடி ஆகும்.

காரணம்: அன்றைய நாளிதழின் செய்திகளைத் தொகுத்து வழங்குகிறது.

அ) கூற்று சரி, காரணம் தவறு ஆ) கூற்று, காரணம் இரண்டும் சரி

இ) கூற்று, காரணம் இரண்டும் தவறு ஈ) கூற்று தவறு, காரணம் சரி

## கோடிட்ட இடத்தை நிரப்புக.

17. ஜெர்மனியில் புரட்சிக் கருத்துகளைப் பரப்புவதற்குக் கருத்துப்படங்கள் அடங்கிய துண்டுப் பிரசுரங்களைப் பயன்படுத்தியவர் ---------------------

18. ஆசியாவிலேயே முதல்முறையாக நாளிதழின் பக்கங்களைத் தொலைநகல் மூலம் பரிமாற்றம் செய்து வெளியூர்ப் பதிப்புகளை ஆரம்பித்தவர் ------------

19. சரியான கூற்றுகளைக் கண்டறிக.

அ) பெருஞ்சித்தரனாரின் தென்மொழி, தமிழ்ச்சிட்டு ஆகிய இதழ்கள் தமிழ்மொழி வளர்ச்சிக்குப் பெருந்தொண்டாற்றின.

ஆ) பாரதியாரின் 'பால பாரதம்' என்னும் இதழ் விடுதலை உணர்வைத் தூண்டியது.

இ) 'துளிர்' என்னும் இதழ் பொழுதுபோக்குத் தன்மை கொண்டது.

ஈ) 'தமிழ்க் கல்வி', 'கல்விக் கதிர்' போன்ற இதழ்கள் கல்வி மறுமலர்ச்சிக்காகப் பாடுபட்ட இதழ்கள்.

அ) அ மற்றும் ஆ சரி ஆ) அ மற்றும் ஈ சரி

இ) ஆ மற்றும் ஈ சரி ஈ) அ மற்றும் இ சரி

20. நாளிதழ்கள், காலை மாலை என இருவேளையும் வெளிவருதற்கான காரணம்.

அ) அவ்வப்போது நடைபெறும் செய்தியை மக்கள் உடனுக்குடன் அறிய

ஆ) மக்களைப் பதற்றத்திலேயே வைத்திருக்க.

இ) வியாபாரத்தைப் பெருக்க.

ஈ) அனைத்து மக்களும் செய்திகளை அறிந்துகொள்ள.

ஆ) அ சரி ஆ) அ, இ சரி இ) நான்கும் சரி ஈ) நான்கும் தவறு

## குறுவினா

1. ஊடகத்தின் வகைகளைக் கூறுக.
2. மக்களாட்சியின் நான்கு தூண்கள் யாவை?
3. இன்றியமையாத செய்திக் களங்கள் யாவை?
4. நாளைமுதல் காலையில் நூற்றாண்டுவிழாக் கொண்டாட்டம் ஆரம்பம். இச்செய்தியைத் தெளிவுபடத் திருத்தி எழுதுக.
5. ⌒, ⊐ ஆகிய இரண்டு குறிகளும் மெய்ப்புத் திருத்துதலில் எவற்றைக் குறிக்கின்றன?
6. கீழ்க்காணும் கருத்துப்படங்களுக்குப் பொருத்தமான வாசகத்தை உருவாக்குக.





7. தலைகீழ்க் கூம்புத் தலைப்பு என்பது யாது?
8. சமநிலைப் பக்க அமைப்பைச் சுட்டுக.
9. கருத்துப்படத்திற்கான வேறு பெயர்களை எழுதுக.
10. ஆதித்தனார் இதழாளர்களுக்குக் கூறும் பொன்விதி யாது?

## சிறுவினா

1. தலையங்கம் – குறிப்பு வரைக.
2. இதழ் உருவாக்கம் குறித்து எழுதுக.
3. பருவ இதழ்களை வரையறுக்க.
4. கொடுக்கப்பட்ட பகுதியை எளிய நடையில் மாற்றி அமைக்க.

   இஞ்ஞாலத்தில் மிகப்பழைமையான நிலப்பகுதியென்று தமிழ்வரலாற்றால் அறியப்பட்டதும், நிலநூல், கடல்நூல், உயிர்நூல் ஆராய்ச்சியாளரால் உய்த்துணரப்பட்டதும் மாந்தன் பிறந்தகமென்று மாந்தனூலாராற் கண்டுபிடிக்கப்பட்டதும் தெற்கே இந்து மாவாரியில் மூழ்கிப் போன குமரிக்கண்டம் ஆகும்.

5. 'பஞ்சம்' என்ற தலைப்பில் அமைந்த கருத்துப்படம் மூலம் பாரதி விளக்கும் செய்தி யாது?
6. இந்தியப் பத்திரிகைகளுக்கு நேரு கூறிய அறிவுரை யாது?
7. தமிழ் எழுத்துருக்களில் மாற்றம் தேவை என்பதற்குப் பெரியார் கூறிய காரணங்கள் யாவை?
8. தலையங்கத்தின் இயல்புகளைக் கூறுக.
9. மொழி வளர்ச்சிக்குப் பணியாற்றிய இதழ்களைக் குறிப்பிடுக.
10. நாளிதழ்கள் மக்களை விரைவாகச் சென்றடைய ஜி.கஸ்தூரி பயன்படுத்திய உத்திகள் மூன்றனை எழுதுக.

## நெடுவினா

1. செய்தித்தாளின் மூன்று வகை பக்க அமைப்புகளை விளக்குக.
2. சுதந்தரப் போராட்டத்திற்குத் தமிழ் இதழ்களின் பங்கினை விவரிக்க.
3. இதழ்களின் உருவாக்கம் குறித்து விவரிக்க.
4. 'இதழ்களுடன் ஒரு சந்திப்பு' பகுதியிலிருந்து இதழ்கள் குறித்த செய்திகளைத் தொகுத்து எழுதுக.
5. பருவ இதழ்களிலிருந்து நாளிதழ்களை வேறுபடுத்திக் காட்டுக.
6. சமுதாய முன்னேற்றத்திற்கு இதழ்களின் பங்கினைத் தொகுத்து எழுதுக.
7. ஆதித்தனாரின் எழுத்துநடை பற்றிச் சுஜாதா கூறும் செய்திகளைத் தொகுத்து எழுதுக.
8. பெரியாரின் எழுத்துச் சீர்திருத்தம் குறித்து விவரிக்க.
9. செய்தித்தாளில் வெளியிடுவதற்குக் கீழ்க்காணும் குறிப்புகளைப் பயன்படுத்தி, ஒரு விளம்பரம் உருவாக்குக.

   1. மென்பொருள் நிறுவனம் – சென்னை உட்பட நான்கு மாவட்டத்தில் பல்வேறு

   பணிகளுக்கு வேலைவாய்ப்பு – தகுதி, பணியனுபவம் ஆகியவற்றிற்கேற்ற ஊதியம்

## படிப்போம் பயன்படுத்துவோம்

### மாதிரி மெய்ப்புத் திருத்தம்


மொழி என்றால் என்ன என்ற வினாவிற்கு அறிந்த கருத்துக்களையும் உணர்ந்த உணர்ச்சிகளையும் பிறருக்கு எடுத்துக்கூற உதவுகின்ற ஒரு கருவி என்பதே விடையாகும் அம்மொழியைப் பேசுகின்றமக்களது

கொள்கைகளையும்கோள்களையும் எடுத்தியம்புவது இலக்கியமாகும். இவற்றினை வைத்து நோக்கும்போது இலக்கியம் இலக்கியம் என்பது

ஒருகாலத்தின் ஒரு சமுமுதாயத்தின் நிலைக் கண்ணாடி என்ற உண்மை புறியவரும்.

இதனாலேயே இலக்கியங்கள் என்பவை வாழ்க்கையின் எதிரொலிகள் சமுதாயத்தின் வளர்ச்சியை காட்டும் மைல்கற்கள் மனித இலட்சியத்தின் உயிர்நாடி என்றெல்லாம் குறிப்பிட ப்படுகிறது

1. *பின்வரும் செய்தியில் உள்ள பிழைகளை அச்சுப்படித் திருத்தக் குறியீடுகளைப் பயன்படுத்தித் திருத்துக.*

*புவனேஸ்வர் ஹாக்கி எங்களுடைய தேசிய விளையாட்டு என்பதை, பெல்ஜியம் அணிக்கு இந்திய ஹாக்கி அணி நிரூபித்துக் காட்டியது. ஹாக்கி விளையாட்டு உலக லீக் பைனல் சின்காலிருதியில் நேற்று இந்தியவீரர்கள் காட்டிய ஆக்ரோஷம், அற்ப்பணிப்பு ராணுவவீரர்களிடம் மட்டுமே பார்க்க முடியும். மைதாணத்தையும், எதிரணியையும் உறையவைத்தது நமதுஅணியின் ஆட்டம் இந்த ஆண்டின் சிரந்த ஆட்டமாக அமைந்துள்ளது. ஹாக்கி உலக லீக்பைனல்ஸ் போட்டிகள் ஒடிசாவின் புவனேஸ்வரில் நடக்கிறது. உலக தரவரிசையில்முதல் 8 இடங்களில் உள்ளஅணிகள் பங்கேற்கும் இந்தப் போட்டியில், போட்டியை நடத்தும்நாடு என்ற அடிப்படையில் இந்தியா பங்கேற்றுள்ளது*

2. *பிறமொழிச் சொற்களை நீக்கி எழுதுக.*

*நிருபர்கள் தங்கள் பகுதிகளில் தினந்தோறும் நடைபெறும் சம்பவங்களைச் சேகரித்துத் தங்களது பத்திரிகை அலுவலகத்திற்கு அனுப்பி வைப்பர். சம்பவங்களோடு சித்திரங்கள், விஞ்ஞான செய்திகள், சர்க்கார் திட்டங்கள் போன்றவைகளும் பத்திரிகையில் இடம்பெறும். எடிட்டர் அச்செய்திகளை அவற்றின் முக்கியத்துவத்தின் அடிப்படையில் எந்த நியூசை எந்தப் பேஜில் பிரசுரிப்பது என்று தீர்மானிப்பார். பிறகு அச்சடிக்கப்பட்ட பத்திரிகைகளை வினியோகஸ்தர்கள் ஒவ்வொரு பகுதிக்கும் கொண்டு சென்று விற்பனையாளர்கள் மூலம் வாசகர்களுக்குக் கொண்டு செல்வர்.*

3. சந்திப்பிழைகளை நீக்கி எழுதுக.

தயிர் தோய்க்கப்பட்டப் பாலில் இரண்டுத் தவளைகள் தவறி விழுந்து விட்டன. அவைகளுக்கு பாத்திரத்தை விட்டு வெளியே வர தெரியவில்லை. முதல் தவளை இதிலிருந்து நான் எப்படித் தப்பிக்கப் போகிறேன் அவ்வளவுதான் என் கதை முடிந்தது என்று புலம்பியது. அதன் கால்கள் சக்தி இழந்தன. சற்று நேரத்திற்கெல்லாம் அது பாலில் மூழ்கி இறந்துப்போனது. இரண்டாவது தவளையோ, தன்னம்பிக்கையோடு சோர்வில்லாமல் கால்களால் உதைத்துக் கொண்டே இருந்தது. இதனால் பால் நன்றாகக் கடையப்பட்ட நிலையை அடைந்தது. வெண்ணெய் திரண்டு மேலே மிதக்க தொடங்கியது. சற்று நேரத்தில் அந்தத் தவளை மிதந்த வெண்ணெயின் மீதேறி நலமாக அமர்ந்து பிறகு ஒரே தாவலில் பாத்திரத்தை விட்டு வெளியேக் குதித்துத் தப்பித்தது.

## செயல்திட்டம்

1. நீங்கள் படித்த ஏதேனும் ஓர் இதழுக்கு வாசகர் கடிதம் எழுதுக.
2. உங்கள் படைப்புகளை நாள், வார, மாத இதழ்களுக்கு எழுதி அனுப்புக.
3. உங்கள் ஊரில் நடைபெற்ற விளையாட்டு விழா நிகழ்வுகளைச் செய்தித்தாளுக்கு அனுப்பும் வகையில் ஒரு செய்தியாக எழுதி வருக.
4. கருத்துச் சித்திரத்திற்கான உங்கள் எண்ணங்களை ஓவியமாகவோ, வரைவதற்கான குறிப்புகளாகவோ தருக.
5. வகுப்புத் தோழர்களுடன் இணைந்து கையெழுத்துப் பிரதி ஒன்றைத் தயாரிக்க.

### மாதிரி கையெழுத்து இதழ்



இயல் ஆறு

# கணித்தமிழியல்

9DNUKV




இன்றைய சூழலில் கணினியில் தமிழின் பயன்பாடு குறிப்பிடத்தக்க முன்னேற்றத்தைப் பெற்றுள்ளது. ஐந்திணைகளோடு விண்ணும் விண்சார்ந்த இணையமும் இன்று ஆறாம் திணையாக உருவெடுத்துள்ளது. இன்று தமிழில் இணைய வெளித் தொழில்நுட்பம் சிறப்பாகக் கையாளப்படுகிறது.

இப்பாடப்பகுதியில் இணையம் குறித்த செய்திகள், ஓலைச்சுவடி முதல் மின்னூல் வரையிலான தமிழ் நூல்களின் வளர்ச்சிப் போக்குகள், தமிழ் உள்ளீட்டுத் தொழில்நுட்பங்கள், வலைப்பூவினை உருவாக்கிப் பயன்படுத்துதல் ஆகியன பொருத்தமான செயல்முறைகளுடன் விளக்கப்பட்டுள்ளன. அவை இணையம் கற்போருக்கான வழிகாட்டுதல்களாக அமைந்துள்ளன.

## கற்றல் நோக்கங்கள்

- இணையத்தின் தோற்றம், வரலாறு இணையத்தில் தமிழின் வளர்ச்சிப் போக்கு ஆகியவற்றை அறிந்து கொள்ளுதல்
- தமிழ் இலக்கியங்கள் ஓலைச்சுவடிகளில் தொடங்கி அச்சு நூல்கள் வழியாக மின்னூல்களாக இணையம் ஏறிய வரலாற்றைப் புரிந்து கொள்ளுதல்.
- கணினி, இணையத்தில் தமிழை உள்ளீடு செய்யும் பல்வேறு தொழில் நுட்பங்கள், தமிழ்ச் சொற்செயலிகளைக் கற்று நடைமுறை வாழ்வில் பயன்படுத்துதல்
- மின்னஞ்சல் கணக்கைத் தொடங்கவும், வலைப்பூ மற்றும் சமூக ஊடகங்களில் தம் படைப்புகளைப் பதிவேற்றவும் திறன் பெறுதல்.

## பாடப் பகுதி

- இணையக்களம் – இணையம் கற்போம் உலகை அறிவோம்
- இலக்கியக்களம் – பனையோலைப் பாட்டனும் மின்னூல் பேரனும்
- உள்ளீட்டுக்களம் – தமிழ் உள்ளீட்டுத் தொழில்நுட்பம்
- செயற்களம் – இணைய ஊடகம் – உருவாக்கமும் பயன்பாடும்

# இயல் ஆறு

## 1. இணையம் கற்போம் உலகை அறிவோம்

இன்றைய சூழலில் அனைத்து நடைமுறைகளிலும் கணினியின் பயன்பாடு தவிர்க்க இயலாத அளவிற்குப் பெருகியுள்ளது. அலுவலகப்பணிகள் மட்டுமன்றி அன்றாடப் பணிகள் பெரும்பாலும் கணினி சார்ந்தே உள்ளன.

கணினியில் தமிழின் பயன்பாடு குறிப்பிடத்தக்க முன்னேற்றத்தைப் பெற்றுள்ளது. தமிழைப் பயன்படுத்துவோரால் இன்று இணையத் தொழில் நுட்பம் சிறப்பாகக் கையாளப்படுகிறது. இணையத்தின் பரப்பும் வீச்சும் அதன் தகவல் புரட்சியும் பயன்பாட்டுச் சிறப்பும் அளவில்லாதவை.

### இணையம்

இணையம் என்பது, உலக அளவில் பல கணினி வலை அமைப்புகளின் கூட்டிணைப்பான பெரும் வலையமைப்பாகும். இது உலகம் முழுவதும் உள்ள கணினிகளை இணைத்து, அவற்றில் உள்ள தகவல்களைப் பரிமாறிக்கொள்ள உதவுகிறது.

### இணைய வரலாறு

அமெரிக்க இராணுவம் தனது கட்டளைகளையும் தகவல்களையும் பிற நாடுகள் அறியாவண்ணம் பாதுகாக்கவும், பரிமாறிக் கொள்ளவும் எண்ணியது. அதற்காகச் சார்லஸ் ஹெர்ஸ் ஃபீல்டு என்பவரை இயக்குநராகக் கொண்டு 1957இல் ஆர்பா நெட் (ARPA – Advanced Research Projects agency Network) என்ற அமைப்பை ஏற்படுத்தியது.

இவ்வமைப்பு எம்ஐடி (MIT – Massachuseits Institute of Technology) என்ற கல்வி நிறுவனத்துடன் இணைந்து, புவிப் பரப்பில் பிரிந்துகிடக்கும் கணினிகளை இணைத்தது. அதன் அடிப்படையில் தகவல்களைப் பரிமாறிக்கொள்ளத் தேவையான தொழில்நுட்பம் குறித்து ஆராய்ந்தது. ஆய்வின் முடிவில் தகவல் பரிமாற்றத்திற்காக 1966இல் தரவு மாற்றத் தொழில்நுட்பம் ஒன்றைக் கண்டறிந்தது. இத்தொழில்நுட்பம் இராணுவத்திற்கு மட்டுமல்லாது பல்கலைக் கழகங்களுக்கும் பயன்படுத்தப்பட்டது.

1969இல் அதிகாரப்பூர்வமாகச் செயல்படத் தொடங்கிய ஆர்பா நெட், 1971இல் ஹார்வர்டு பல்கலைக்கழகம், நாசா உள்ளிட்ட 15 இடங்களுக்கு விரிவுபடுத்தப்பட்டது. அதன்பின் 1974இல் வின்டர்ன் செர்ப், பார்ப் கான் ஆகியோர் விரைவான செய்திப் பரிமாற்றத்திற்கான தொழில்நுட்பத்தைக் கண்டறிந்தனர்.

1982இல் தகவல் பரிமாற்றத் தொழில்நுட்பத்துடன் செய்திப் பரிமாற்றத் தொழில்நுட்பம் (TCP), இணைய நெறிமுறை (IP) என்னும் இரு நெறிமுறைகளை உருவாக்கினர். 1982இல் ஓர் அறைக்குள் இருக்கும் கணினிகளை ஈதர்நெட் என்னும் வலை இடைமுக அட்டைகளைப் பயன்படுத்தி இணைத்தனர். இவ்விணைப்பிற்குக் குறும்பரப்பு வலைப்பின்னல் என்று பெயர்.

அதன்பின் இத்தகைய குறும்பரப்பு வலைப்பின்னல்கள் இணைக்கப்பட்டு அகன்ற பரப்புவலைப்பின்னல்களாக உருவாக்கப்பட்டன. இத்தொழில்நுட்ப வளர்ச்சியைத் தொடர்ந்து 1991இல் டிம் பெர்னர்ஸ் லீ என்பவரால் அகன்ற பரப்பு வலைப் பின்னல்கள் இணைக்கப்பட, அது உலகளாவிய வலையமைப்பாக (www) உருவெடுத்தது. அதனால், இன்று இணையப் பயன்பாடு எளிதாகியுள்ளது.

### இணையச் செயல்பாடு

டிம் பெர்ன்ர்ஸ் லீ உலகளாவிய வலையமைப்பினை மூன்று நுட்பங்களின் உதவியைக் கொண்டு உருவாக்கினார். அவை:

1. மீஉரைக் குறிப்பு மொழி
(HTML – Hypertext Markup Language)

2. மீஉரைப் பரிமாற்ற நெறிமுறை
(HTTP – HyperText Transfer Protocol)

3. சீரான வள இடங்காட்டிகள்
(URLs – Uniform Resource Locators)

### 1. மீஉரைக் குறிப்பு மொழி

இணையத்தில், ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்ல, குறிப்புகள் எழுதப் பயன்படும் நுட்பமே மீஉரைக் குறிப்பு மொழி. இது, தகவலின் தலைப்பாகவும் தகவல் பகுதியாகவும் பிரிக்கப்பட்டிருக்கும்.

### 2. மீஉரைப் பரிமாற்ற நெறிமுறை

இணையத்தளத்தில் தகவலைப் பெறுவதற்கான நெறிமுறைக்கு "புரொட்டக்கால்" என்று பெயர். ஓர் இணையத்தளத்தில் தகவல்கள் எந்தெந்த இடங்களில் எவையெவை இருக்க வேண்டும் என்பதை இந்நெறிமுறைகளைக்கொண்டு முன்பே தீர்மானிக்க இயலும்.

### 3. சீரான வள இடங்காட்டிகள்

இணையத்தில் உள்ள தகவல்களைப் பெறுவதற்கான முகவரியே சீரான வள இடங்காட்டிகள் ஆகும். இவற்றைப் பயன்படுத்தியே இணைய உலவிகள் தகவல்களைக் கண்டறிந்து கேட்பவர்க்கு விரைந்து வழங்குகின்றன.

### இணைய முகவரி

இணையத்தில் ஒவ்வொரு தளத்திற்கும் ஒரு முகவரி உண்டு. இது நான்கு பகுதிகளை உடையதாக இருக்கும். இவை சொற்களின் தொகுப்பாக உள்ளதால் எளிதாக நினைவுகூர முடிகிறது. எ.கா: http//www.tamilvu.org

இதன் முதற்பகுதி மீஉரைப் பரிமாற்ற நெறிமுறையையும் (http) இரண்டாம் பகுதி உலகளாவியவலை(www)என்பதையும்மூன்றாம் பகுதி இணையத்தளத்தின் பெயரையும் (tamilvu) இறுதிப்பகுதி இணையத்தின் தன்மையையும் (.org) குறிக்கின்றன.

### இணைய நிருவாகம்

இணையத்திற்கெனத் தனி நிருவாக அமைப்பு ஏதுமில்லை. இணையக் கூட்டமைப்பு என்பது, பல நிறுவனங்கள் பங்கு வகிக்கும் ஒரு நிறுவனம். இது தகவல்களைத் திறம்படப் பரிமாற்றம் செய்வதை உறுதி செய்வதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்கிறது.

ஐகான் என்னும் நிறுவனம், இணைய முகவரிப் பதிவை நிருவகிக்கிறது. ஒரே முகவரி இருவருக்குக் கொடுக்கப்படாமல் இருப்பதை இது உறுதி செய்கிறது.

### இணைய இணைப்பு

இணைய இணைப்பினைப் பெற தேவையானவை

1. கணினி/ திறன்பேசி
2. தொலைபேசி – திறன்பேசி இணைப்பு
3. இணையக்கணக்கு
4. இணக்கி/அருகலை

கணினி அல்லது திறன்பேசியுடன் இணையத்தை இணைக்க, இணைப்பு வழங்கும் நிறுவனத்தின் மூலம் கணக்கைப் பெற்றுப் பயன்படுத்தலாம். இணையத்தைப் பயன்படுத்த விரிவான தொழில்நுட்ப அறிவோ, ஆங்கிலப் புலமையோ தேவையில்லை. சில அடிப்படைச் செயல்களைத்தெரிந்துகொண்டால்போதும்;நம் மொழியிலேயே எளிதாகப் பயன்படுத்தலாம்.

### இணையத்தளம்

இணையத்தைப் பல்லூடகப் பகுதி எனலாம். இதில் உலகத்தின் பல சேவையகங்கள் இணைந்துள்ளன. இவை உரை, ஒலி. படங்கள், நகரும் படங்கள் முதலான பல்லூடகத் தகவல்களைச் சேமித்து வைத்து, கேட்போருக்குத் தருகின்றன. இதில் பலகோடிப் பக்கங்கள் உள்ளன. இவை இணையப் பக்கங்கள் என்று அழைக்கப்படுகின்றன.

ஒன்றுக்கொன்று தொடர்புடைய பல இணையப் பக்கங்கள் ஒன்றாகத் தொகுக்கப்பட்டு, ஒரு சேவையகத்தில்

வைக்கப்பட்டிருக்கும். அது இணையத்தளம் எனப்படும். தேடுபொறிகள், நிதி தகவல்கள், கல்வி, ஆராய்ச்சி, விளையாட்டு, பொழுதுபோக்கு, இணைய அங்காடி போன்ற பல்வேறு வசதிகளை இவை வழங்குகின்றன.

### உலவி

இணையத்தில் உள்ள பக்கங்களைப் பார்ப்பது உலவுதல் எனப்படும். இதற்கு உலவி என்னும் மென்பொருள் உதவுகிறது. இது செய்தித்தளங்களிலிருந்து பக்கங்களைப் பெற்று, அவற்றைத் திரையில் காட்டுகின்றது.

கூகுள் குரோம், இன்டெர்நெட் எக்ஸ்புளோரர்,சஃபாரி,ஓபரா,எபிக்,மோசில்லா பயர்பாக்ஸ், பிங் என்பவை உலவிகளுள் சில. தேவையான வலைத்தளத்தின் முகவரியை ஓர் உலவியின் முகவரிப் பெட்டியில் இட்டு, அத்தளத்தைப் பெறலாம்.

### தேடுபொறி

இணையத்திலும் கணினியிலும் நமக்குத் தேவையானவற்றைத் தேடித்தரும் செயலைச் செய்கின்ற ஒரு கணினி நிரலே தேடுபொறி. அது உலகமெங்கும் நிறுவப்பட்டுள்ள வழங்கிகளுக்குச் சென்று, அவற்றில் சேமித்து வைக்கப்பட்டுள்ள தரவுகளில் நாம் கொடுத்துள்ள குறிப்பின்படி நமக்குத் தேவையான இணையத்தளங்களின் பட்டியல்களைத் தொகுத்துத் தரும்.

இணைய முகவரி ஏதும் தெரியாதபோது தேடுபொறியில் நமக்கு வேண்டிய தரவைக் குறிக்கக்கூடிய சொற்களை இட்டு அவை குறித்த செய்திகளைப் பெறலாம்.

கூகுள், அல்டாவிஸ்டா, யாகூ, பிங், பாய்டு, அலெக்ஸா, லைகோஸ், ஆஸ்க் ஜீவ்ஸ், எம்எஸ்என் போன்றவையும் குழந்தைகளுக்கெனச் சிறப்பாக வடிவமைக்கப்பட்ட கிடில் தேடுபொறியும் பரவலாகப் பயன்படுத்தப்பட்டு வரும் தேடுபொறிகளாகும்.

## இணையத்தளங்களின் வகைகள்

### 1. நிலையான இணையத்தளம்

இது நிலையான தகவல்களைக் கொண்ட இணையத்தளம். இதில் உள்ள தகவல்கள் அடிக்கடி மாற்றப்படுவதில்லை. தளம் புதுப்பிக்கப்படும்போது மட்டுமே தகவல்கள் மாற்றப்படுகின்றன.

### 2. தனியர் இணையத்தளம்

தனியர் சிலர் தங்களது சொந்தத் தகவல்களையும் தமக்கு விருப்பமான துறைகளைப்பற்றியும் வெளியிடும் தளம். வழக்கமாக ஒருவரின் குடும்பம், நண்பர்கள், குறிப்பிட்ட பயனர்கள், வாசகர்கள் ஆகியோரை மட்டும் நோக்கித் தகவல்களை அளிக்கும் இத்தளம், பெரும்பாலும் தனிப்பட்ட ஆளுமைகளின் உணர்வுகளை வெளிப்படுத்துவதாக அமையும்.

### 3. நிறுவன இணையத்தளம்

ஒரு நிறுவனத்தின் மதிப்பை நன்முறையில் உயர்த்துவதே இதன் நோக்கமாகும். நிறுவனத்தைப்பற்றி மட்டும் கூறாமல் அதன் இலக்குகளையும் தொலைநோக்குப் பார்வையையும் இத்தளம் வெளிப்படுத்தும்.



## 4. தகவல் களஞ்சிய இணையத்தளம்

குறிப்பிட்ட ஒரு துறைகுறித்த மிக விரிவான தகவல்களை வழங்கும் தளம். இம்மாதிரியான தளங்கள் தம் தகவல்களைப் பெரும்பாலும் வாணிக நோக்கத்திற்காகப் பயன்படுத்துகின்றன.

## 5. இயங்கு இணையத்தளம்

இத்தளத்தில் பயனர்களின் பங்கேற்புக்கும் செயல்பாடுகளுக்கும் ஏற்ப அடிக்கடி தகவல்கள் தொடர்ந்து மாற்றம் பெறும். இவ்வகைத் தளங்கள் பயனர் பங்கேற்பு வசதிக்கேற்ப வடிவமைக்கப்பட்டிருக்கும்.




## 6. மின் வணிக இணையத்தளம்

பயனர் ஒருவர் பொருளை அல்லது ஒரு சேவையை இணையவழிப் (Online) பணம் செலுத்திப் பெற்றுக்கொள்ள இத்தளம் உதவுகிறது.

## 7. இணைய அடிப்படையிலான செயல்பாடுகளின் தளம்

இத்தளம் இணைய வங்கிச் சேவை, இயங்கலைத் தேர்வுகள், இணையவழிக்கூட்டங்கள் முதலான பல்வேறு செயல்பாடுகளைச் செய்ய உதவுகிறது. மேலும் எழுத்துச் சரிபார்ப்பான், படத்திருத்தி, கோப்புமாற்றி போன்ற கருவிச்சேவைகளையும் தருகிறது.

## 8. விளையாட்டு இணையத்தளம்

இணைய விளையாட்டுகளுக்கான அளப்பரிய வசதிகளை இத்தளம் வழங்குகிறது.

## 9. மின்கற்றல் இணையத்தளம்

பல இணையத்தளங்கள், கல்வி மற்றும் பயிற்சிகளை வழங்குகின்றன. சில தளங்கள் பட்டப்படிப்புகளையும் வழங்குகின்றன.

### அறிவோம் தெளிவோம்




செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம், இந்திய அரசின் மனிதவள மேம்பாட்டு அமைச்சகத்தின்கீழ் இயங்கும் ஒரு தன்னாட்சி ஆய்வு நிறுவனம். உலக அளவில் செம்மொழித் தமிழுக்கென்று நிறுவப்பெற்றுள்ள உயராய்வுமையம் ஆகும். இந்நிறுவனம் தமிழ்ச் செவ்விலக்கியங்களைப் படித்து இன்புறவும் தனிப்பயிற்சி மூலம் தெளிவு பெறவும் இணையவழிச் செம்மொழித்தமிழ் (Classical Tamil Online) என்னும் மின்கற்றல் (e–Learning) முறையைத் தொடங்கியுள்ளது. இதில் இணைய வகுப்பு உரைகளாகக் (Virtual Class Room Speeches) காணொலிக் காட்சிகளும் உள்ளன. கற்றவற்றைச் சரிபார்த்து விடைகளைக் கண்டறியும் முறையில் தன்மதிப்பீட்டுத் தேர்வுகளும் அமைந்துள்ளன. செம்மொழித் தமிழ்இலக்கியங்களைப் பற்றிக் கல்வி பெறுவதற்கும் இணையவழி மின்னூல்களைப் பெறுவதற்கும் இந்நிறுவனத்தின் இணையத்தளத்தைப் பயன்படுத்திக்கொள்ளலாம்.




மின் கற்றல் முறையில் மதிப்பீடும் அதற்கான பின்னூட்டமும் உடனுக்குடன் வழங்கப்படுவதால் மாணவர்கள் தங்களது கற்றல் அடைவினை உடனே தெரிந்துகொண்டு மேம்படுத்திக்கொள்ள முடியும்.

## 10. இணையத்தளத் தொகுப்பு

பல்வேறு இணையத்தளங்களின் தொகுப்பை இணையத்தளத் தொகுப்பு எனலாம். ஒன்றோடொன்று தொடர்புடைய துறை சார்ந்த பல்வேறு தகவல்களையும் தகவல் மூலங்களையும் இவ்வகையான தொகுப்புகளிலிருந்து பெறலாம்.

## இணையத்தில் தமிழ்

தமிழர்கள் தங்கள் வாழிடங்களை ஐந்திணைகளாக வரையறுத்தனர். இன்று விண்ணும் விண்சார்ந்த இணையமும் ஆறாம் திணையாக உருவெடுத்துள்ளது. தன் வளத்தால் வாழும் செம்மொழியான தமிழ், காலத்திற்கேற்பத் தன்னைத் தகவமைத்துக் கொள்ளும் தன்மையால் இன்று இணையத்திலும் கோலோச்சுகிறது.

## இணையத்தில் ஏறிய முதல் இந்திய மொழி

1995இல் சிங்கப்பூரில் தொடங்கப்பட்ட மலாய், ஆங்கிலம், மாண்டரின், தமிழ் ஆகிய நான்கு தேசிய மொழிக் கவிதைகளுக்கான வலைத்தளத்தில் முதலில் அரங்கேறியது தமிழ்.

சிங்கப்பூர் நாவ்யாங் பல்கலைக்கழகப் பேராசிரியர் நா. கோவிந்தசாமி சீனக்கணினி வல்லுநர்களோடு இணைந்து 'தமிழ்நெட்' என்ற எழுத்துருவினை உருவாக்கி, இணையத்தில் தமிழ் இடம்பெறக் காரணமாய் இருந்தார். அவரால்தான் இணையத்தில் ஏறிய முதல் இந்திய மொழி என்ற பெருமை தமிழுக்குக் கிடைத்தது.

## தமிழ் இணையத்தின் வளர்ச்சி

1996இன் இறுதியில் உலகெங்கும் உள்ள தமிழ் ஆர்வலர்கள் பலரும் தமிழ் எழுத்துருக்களை உருவாக்கிப் பயன்படுத்தத் தொடங்கினர்.

இணையத்தில் தமிழ்த் தகவல் பரிமாற்றத்திற்கான முதல் உலக மாநாடு 1997ஆம் ஆண்டு 'தமிழ்நெட் 97' என்ற பெயரில் சிங்கப்பூரில் நடைபெற்றது. அதில் தமிழ் எழுத்துரு குறித்துக் கணித்தமிழ் ஆர்வலர்களும் அறிஞர்களும் கலந்துரையாடினர். 1999இல் நடைபெற்ற இரண்டாவது கணினி மாநாட்டில் கணித்தமிழ்ச் சங்கம் உருவானது.

அவ்வாண்டில் தமிழ்நாடு அரசு அமைத்த உயர்மட்டக் குழுவின் ஆய்விற்குப்பின், 'தமிழ் 99' விசைப்பலகை உருவாக்கப்பட்டது. பல்வேறு




ஒருங்குறி விசைப் பலகை

சோதனைகளுக்குப்பின், தமிழக அரசு அதனை ஏற்று அரசாணை வெளியிட்டது.

பின்னர் 'ஒருங்குறிக் கூட்டமைப்பு' உலக அளவில் அனைத்து மொழிகளுக்கும் 'ஒருங்குறி' என்னும் எழுத்துருக் குறியேற்ற முறையை உருவாக்கியது. அவ்வமைப்பில் தமிழக அரசு தமிழ்மொழிக்கான உறுப்பினராகத் தன்னை இணைத்துக் கொண்டது.

தமிழ் ஒருங்குறிக் குறியேற்ற முறையில் இருந்த குறைகளைக் களைய, அரசுடன் தமிழ் இணையக் கல்விக் கழகமும் கணித்தமிழ்ச் சங்கமும் இணைந்து, முயற்சிகளை மேற்கொண்டன. அதன் விளைவாகத்தான் இன்று இணையத்தில் தமிழை எளிதாகப் பயன்படுத்த முடிகிறது.

இணையத்தில் தமிழின் பயன்பாட்டைச் செழுமைப்படுத்தவும் தமிழரின் தொன்மை, மரபு, பண்பாட்டுச் செல்வங்களை உலகிற்கு வழங்கவும் அரசும் தன்னார்வ நிறுவனங்களும் பல்வேறு திட்டங்களை உருவாக்கிச் செயல்படுத்துகின்றன. அவற்றுள் தமிழ் இணையக் கல்விக்கழகம், மதுரைத்திட்டம், தமிழ் விக்கிப்பீடியா போன்றவை குறிப்பிடத்தக்கவை.

## தமிழ் இணையக் கல்விக்கழகம்

தமிழ் இணையக் கல்விக்கழகம் 2001ஆம் ஆண்டு பிப்ரவரி 17இல் நிறுவப்பட்டது. இந்தியாவில் இணையம் வழியே கல்வி வளங்களையும் வாய்ப்புகளையும் வழங்க நிறுவப்பட்ட முதல் அமைப்பாக இது விளங்குகிறது. 1999ஆம் ஆண்டு நடைபெற்ற இரண்டாம் தமிழ் இணைய மாநாட்டின் நிறைவு விழாவில் இதற்கான அறிவிப்பு வெளியிடப்பட்டது. முழுநேர இயக்குநர் ஒருவரின் பொறுப்பில் செயற்படும் இது, தமிழ் இணையக் கல்விக்கழக ஆட்சிக்குழுவால் வழி நடத்தப்படுகிறது.

தமிழ் இணையக் கல்விக்கழகத்தளத்திற்குச் செல்ல இதனைத் திறன்பேசியால் வருடவும்.

இணையக் கல்விக்கழகம் பின்வரும் குறிக்கோள்களை அடைவதற்கான திட்டங்களுடன் செயல்படுகிறது.

- உலகளாவியதமிழ்ச்சமுதாயத்தினர்க்கும் தமிழியலில் ஈடுபாடுள்ள மற்றையோர்க்கும் தமிழ்மொழி, இலக்கியம், பண்பாடு பற்றிய கல்விச் சாதனங்களை உருவாக்கி இணையம் வழியாக அளித்தல்.

- உலகெங்கும் வாழும் தமிழர்கட்கு, அவர்களின் தேவைக்கேற்பப் பாடத் திட்டங்களை உருவாக்கி அளித்தல்: அவர்கள் தங்கள் பாரம்பரியத்தோடு தொடர்புகொண்டு வாழத் துணைபுரிதல்.

- உலகின் பல நாடுகளில் வாழும் தமிழர்கள் உருவாக்கும் கல்வியறிவுச் சாதனங்களைத் தொகுத்து, அவற்றைத் தமிழ் மக்களுக்கு வழங்கும் முயற்சிகளைத் தொடர்ந்து மேற்கொள்ளுதல்.

- தமிழ்மொழி, இலக்கியம், பண்பாடு தொடர்பான பாடத் திட்டங்களை வகுத்தல்.

- மொழியறிவுக்காகவோ, சான்றிதழ், பட்டயம், பட்டம் பெறுவதற்காகவோ கற்போருக்கு வாய்ப்பளித்தல்.

- தகுதிக்கு ஏற்பத் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் வழியாகச் சான்றிதழ்/ பட்டயம்/பட்டம் வழங்க ஏற்பாடு செய்தல்.

மேலும் ஐம்பது இலட்சம் பக்கங்களுக்குமேல் பதிவேற்றம் செய்யப்பட்ட

மின்நூலகம், கணித்தமிழ் ஆய்வுகள், மென்பொருள், செயலிகள் உருவாக்கம், கணித்தமிழ்ப் பேரவை முதலியன இதன் செயல்பாடுகளில் குறிப்பிடத்தக்கன.

## மதுரைத்திட்டம்

மதுரைத்திட்டம் எவ்வித அரசு, தனியார் உதவியோ, வாணிக நோக்கமோ இன்றி நடைபெறுகின்ற ஒரு தன்னார்வ முயற்சி. 1998ஆம் ஆண்டு தமிழர் திருநாள் அன்று தொடங்கப்பட்ட இத்திட்டம், இன்றும் தொடர்ந்து செயல்பட்டு வருகின்றது. உலகில் வெவ்வேறு நாடுகளில் வாழும் முந்நூற்றுக்கும் மேற்பட்ட தமிழர்களும் தமிழார்வலர்களும் ஒன்றுகூடி இத்திட்டத்தைச் செயலாக்கம் செய்து வருகின்றனர்.




அதற்கென உலகின் பல நாடுகளில் வாழ்ந்துவரும் தமிழர்கள், கூட்டு முயற்சியாக அவரவர் தங்களுக்குக் கிடைக்கும் நேரங்களில் தமிழ் இலக்கியங்களைக் கணினியில் உள்ளிட்டு, பிழை திருத்தி மின்பதிப்புகளாகத் தயாரிக்கின்றனர். பின்னர் இவற்றை மதுரைத் திட்டத்தில் பதிவேற்றம் செய்கின்றனர். தமிழ் இலக்கியங்களை மின்நூல்களாகப் பாதுகாத்துப் பகிர்ந்து கொள்வதில் விருப்பமுள்ள அனைவரும் இத்திட்டத்தில் பங்கு பெறலாம்.

## தமிழ் விக்கிப்பீடியா

கட்டற்ற பன்மொழிக் களஞ்சியத் திட்டமான விக்கிப்பீடியாவின் ஒரு பகுதியே தமிழ் விக்கிப்பீடியா. அமெரிக்காவைத் தலைமையிடமாகக் கொண்ட விக்கிமீடியா அறக்கட்டளை எனப்படும் வாணிக நோக்கற்ற அமைப்பு இதனை நிருவகித்து வருகிறது. உலகெங்கும் உருவாகும் தமிழின் அறிவுத்தொகுப்பைத் திரட்டி, கட்டணமின்றியும், காப்புரிமைகள் போன்ற கட்டுப்பாடுகள் இன்றியும் அனைவருக்கும் வழங்குவதே இத்திட்டத்தின் தலையாய நோக்கமாகும்.

இன்றைய நவீன வாழ்வில் பல்துறைச் செயல்பாடுகளுடன் நாம் பொருத்தமுற வாழ்வதற்கு, இணையம் சார்ந்து செயல்படவேண்டியுள்ளது. மேலும், இணையத்தில் தமிழ்மொழியின் அனைத்துப் பயன்பாடுகளையும் புரிந்துகொண்டு, நடைமுறைப்படுத்திவாழ்வையும்மொழியையும் மேம்படுத்துதல் நம் கடமையாகும்.



இலக்கியக்களம்

# 2. பனையோலைப் பாட்டனும் மின்னூல் பேரனும்

## ஒரு கற்பனை உரையாடல்




*அந்த அழகிய மலைநாடு, உயர்ந்து அடுக்கடுக்காய்ப் பரந்து கிடந்த மலைகளின் ஊடாக அமைந்திருந்தது. வானோக்கி வளர்ந்து கிடந்தன அடர்ந்த மரங்கள். மரங்களின் உச்சியிலிருந்த இடைவெளித் துளைகள் வழியாக ஞாயிறு வெள்ளிமழையாகத் தன் கதிர்களைச் சொரிந்து கொண்டிருந்தது. மலைக்காடெங்கும் மகிழ்வூட்டும் பச்சை வெளிச்சம்.*

*செடிகளின் சிரிப்பாய் எங்கெங்கும் பூத்துக் கிடந்த பூக்கூட்டம் அந்த மலைநாட்டுக்கு வருவோரை வரவேற்பதுபோல் இருந்தது. ஆங்காங்கே கீழிறங்கும் அருவிகள் மலைகளின் மேனிகளில் நீளமான வெள்ளிக் கம்பளங்களை விரித்ததுபோல் காணப்பட்டன.*

*அந்நாட்டின் அரண்மனைக்குச் செல்லும் ராஜபாதை எங்கும் வாழையும் கமுகும் கட்டப்பட்டு, கரும்புச் சரங்களாலும் காய்கனித் தோரணங்களாலும் அழகுபடுத்தப்பட்டிருந்தன. மலைநாட்டுத் தலைவனான மன்னனின் பிறந்தநாள் கொண்டாட்டத்தின் ஒரு பகுதியாகத்தான் அவை அமைக்கப் பட்டிருந்தன.*

*மலைப்பாதை எங்கும் மக்கள் அணியணியாய்த் திரளத் தொடங்கியிருந்தனர். மக்கள் ஆவலுடன் எதிர்பார்த்தது போலவே அக்குழுவினர் வரத்தொடங்கினர். பாணர், பாடினியர், விறலியர் குழுவினராய்ப் பறை, முழவு, துடி, போன்ற கருவிகளை யாழின் இராகத்திற்கேற்ப இசைத்தவாறு ராஜபாதையைக் கடந்து அரண்மனைக்குள் நுழைந்தனர். மன்னன் பெருமகிழ்வோடு பொன்*



இருக்கையிலிருந்து இறங்கி, அவர்களை நோக்கி இருகைகளை நீட்டி வரவேற்றான்.

அவையின் நடு மண்டபத்தில் கூடிய அக்கலைக்கூட்டம் மலைநாட்டு மன்னனின் பெருமைகளைப் பலவாறாகப் புகழ்ந்து, பாடியும் ஆடியும் போற்றினர். அவையில் பாணர் பாடும் பாடல்களைக் 'கேட்டுச்சொல்லிகள்' சொல்லச் சொல்ல, ஓலைச் சுவடிகளோடும் எழுத்தாணிகளோடும் அமர்ந்திருந்த சுவடி எழுதும் 'கற்று எழுதிகள்' அதைக் கேட்டு எழுதினார்கள்.



அதற்கு முன்திங்களில்தான் அந்த ஓலைச்சுவடிகள் தேர்ந்த பனை ஓலைகளில் இருந்து நறுக்கப்பட்டிருந்தன. பின் பெரிய பானைகளில் கொதித்த மூலிகை நீரில் அவித்துப் பதப்படுத்தப்பட்டிருந்தன. எழுதுவதற்கான மைக்குழம்பு சிலவகைத் தாவரச் சாறுகளில் இருந்து தயாரிக்கப்பட்டிருந்தது.

அன்றும் அடுத்தடுத்த நாள்களிலும் அந்த மலைநாட்டிலும் பிறநாடுகளிலும் வாழ்ந்து வந்த பெரும்புலவர்கள் மன்னனின் அவைக்கு வந்து அவனது வீரம், கொடைத் தன்மையினை மெச்சி, பலவாறாகப் பாடல்கள் புனைந்தனர். அவற்றை ஓலைச்சுவடிகளில் பதிவாக்கி மன்னனுக்கு அளித்தனர்.

இவ்வாறான ஓலைச்சுவடிகளில்தான் நம் பழந்தமிழ் இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், பெருங்காப்பியங்கள், சிறுகாப்பியங்கள், சிற்றிலக்கியங்கள் போன்றவை எழுத்தாணிகொண்டு எழுதப் பட்டன.

## 2

கடலலை வந்து வந்து கரையேறி, விளையாடிக் கொண்டிருந்த தரங்கம்பாடியில் அன்றொரு தொடக்க விழா. அங்குச் சீகன் பால்கு என்பவரால் ஓர் அச்சு இயந்திரம் நிறுவப்பட்டிருந்தது. அந்த அச்சுக்கூடத்தில் தொழிலாளர்கள் அடுக்கி வைக்கப்பட்டிருந்த மரப்பெட்டிகளைத் திறந்தார்கள். அப்பெட்டிகள், கப்பல்மூலம் ஜெர்மனி நாட்டிலிருந்து வந்திருந்தன.

உலோகத்தால் செய்யப்பட்ட தமிழ் எழுத்துருக்கள் பெட்டிகள் முழுவதும் இருந்தன. அவற்றைப் பயன்படுத்தி அச்சுக்கோக்கும் பணியை ஆரம்பித்தார்கள். அச்சு இயந்திரம் இயக்கப்பட்டு, கோக்கப்பட்ட பக்கங்கள் தாள்களில் அச்சிடப்பட்டன.

அதற்கு முன்பே கொல்லத்தில், ஹென்றிக் ஹென்றிக்சு என்பவரால் எழுதப்பட்ட 'தம்பிரான் வணக்கம்' என்னும் நூல் அச்சிடப்பட்டது. தமிழில் அச்சிடப்பட்ட முதல் நூலாக இந்நூல் கருதப்படுகிறது. இந்திய மொழிகளில் முதலில் அச்சேறிய மொழி தமிழ் என்ற பெருமையைத் தந்தது இந்நூலே ஆகும்.

அதன்பின்னர் ஏற்பட்ட ஒரு தேக்கநிலைக்குப் பிறகு தரங்கம்பாடியில் அமைக்கப்பட்ட அச்சுக்கூடம் தமிழ்ச் சான்றோர்களுக்கும் பொதுமக்களுக்கும் மகிழ்ச்சியை ஏற்படுத்தியது. பல தமிழ் நூல்கள் அச்சேறத் தொடங்கின.

அதைத்தொடர்ந்து, பல்வேறு காலகட்டங்களில் ஓலைச்சுவடிகளில் இருந்த தமிழ் இலக்கண இலக்கிய நூல்கள் அறிஞர் பெருமக்களால் பதிப்பிக்கப்பட்டன.

## 3

கணினி அறை என்ற வாசகம் தாங்கிய அந்தக் குளிரூட்டப்பட்ட அறைக்குள் இளைஞர்கள் விசைப்பலகையைப் பயன்படுத்தித் தமிழ் எழுத்துருக்களின் மூலம் கணினித் திரையில் தமிழ்க் கட்டுரைகளைத் தட்டச்சு செய்து கொண்டிருந்தார்கள். அறையின் சுவரில் 1980ஆம் ஆண்டின் நாட்காட்டி தொங்கிக்கொண்டிருந்தது.

அனைத்துப் பக்கங்களையும் தட்டச்சு செய்து சேமித்தபின், அதை ஒன்றாகத்

தொகுத்து அச்சிட்டு நூலாக வடிவமைத்துக் கொண்டு தமது பல்வேறு தேவைகளுக்குப் பயன்படுத்தினார்கள்.

கோடையும் வசந்தமும் மழையும் குளிருமாய்ப் பருவங்கள் வந்துவந்து போய்க் கொண்டிருந்தன. தொண்ணூறுகளின் வனப்பும் வளமும் நிரம்பிய கணினிகளில் இளைஞர்கள் இணையத்தளங்கள் வழியே தமிழில் உலகம் முழுவதும் தமது கருத்தாடல்களை நிகழ்த்தினர்.

அந்த நகரத்தின் தெருக்களில் புதிதாய்த் தோன்றியிருந்தன இணைய மையங்கள். பலகைகளால் பிரிக்கப்பட்டு வரிசையாக அமைக்கப்பட்டிருந்த சிறுசிறு அறைகளுக்குள் கணினிகள் ஒளிர்ந்து கொண்டிருந்தன. அவற்றில் மாணவர்களும் ஆர்வலர்களும் உலாவி மூலம் வாசித்துக் கொண்டிருந்தனர்.

முதல் அறையில் இருந்த இளைஞன் அமெரிக்காவின் லாஸ்ஏஞ்சல்ஸ் நகரத்தின் ஓர் அறையில் கணினிமுன் அமர்ந்திருந்த தனது நண்பனோடு மின்வரிகளில் உரையாடிக்கொண்டிருந்தான். அமெரிக்க நண்பனின் கோரிக்கைக்கு ஏற்பக் குறுந்தொகை மின்னூலினைச் சிப்பம் செய்து, மின்னஞ்சல் வழியாக அனுப்பினான்.

சிப்பத்தைப் பெற்ற அமெரிக்க நண்பன் அடுத்த சில மணித்துளிகளில் கனடா, ஆஸ்திரேலியா, நார்வே ஆகிய நாடுகளில் வசிக்கும் தன் நண்பர்களுடன் பகிர்ந்து கொண்டான்.

## 4

தமிழகத்தின் முதன்மையான நூலகங்களுள் ஒன்றான அண்ணா நூற்றாண்டு நூலகம். ஒரு கணினித் திரையில் மின்னூல் ஒன்று விரித்து வைக்கப்பட்டிருக்கிறது. அதன் பக்கங்களின்மீது சொடுக்க சொடுக்க ஒவ்வொரு பக்கமாகப் புரளத் தொடங்குகிறது.

அதன் எதிரே பார்வை படும்படியான ஒரு கோணத்தில் உள்ள ஓர் அழகிய கண்ணாடிப் பேழைக்குள் பழந்தமிழ் இலக்கியம் ஒன்றின் ஓலைச்சுவடி பாதுகாப்பாய் வைக்கப்பட்டிருக்கிறது.



அங்குவரும் பார்வையாளர்களும் வாசகர்களும் அதை மிகுந்த மரியாதையுடனும் பெருமிதத்துடனும் பார்த்துச் செல்கின்றனர். அக்காட்சியைப் பார்த்துக் கொண்டிருக்கும் மின்னூலுக்கு நாளுக்கு நாள் ஓர் ஆசை வளர்ந்துகொண்டே வருகிறது. ஓலைச்சுவடியுடன் ஒருநாள் மனம்விட்டு உரையாடவேண்டும் என்பதே அதன் அவா.

அதேபோல் கணினித்திரையில் அழகாய்ப் பக்கம்பக்கமாய்ப் புரண்டு கொண்டிருக்கும் மின்னூலோடு பேசிட வேண்டுமென்பதும் ஓலைச் சுவடியின் அடிமன விருப்பம். நூலகப் பராமரிப்பாளர் ஒருநாள் கண்ணாடிப்பேழையைக் கணினி அருகில் மாற்றி வைத்தபோது, இருவரின் விருப்பமும் நிறைவேறியது.

மின்னூலும் ஓலைச்சுவடியும் உரையாடத் தொடங்கின

**மின்னூல்:** ஆ... என் அன்புக்குரிய ஓலைச்சுவடி அண்ணா... உங்களுக்கு என் பணிவான வணக்கம்.

**ஓலைச்சுவடி:** வணக்கம் மின்னூல் தம்பி. ஆனால் ஒன்று... நான் உன்னைத் தம்பி என்றழைக்கலாம். நீ என்னை அண்ணா என்று அழைக்கலாகாது. ஒருவேளை நானுன் பாட்டனுக்கு முப்பாட்டனாகக் கூட இருப்பேன்.

**மின்னூல்:** அடேயப்பா... உங்களுக்கு அவ்வளவு வயதாகிவிட்டதா?

**ஓலைச்சுவடி:** ஆம்... சில ஆயிரம் வருடங்கள்.

**மின்னூல்:** அவ்வளவு காலமாகவா நீங்கள் பாதுகாப்பாக இருக்கிறீர்கள்?

**ஓலைச்சுவடி:** பாதுகாப்பாக ஆக்கியிருக்கிறார்கள். அறிஞர்கள் பலர் என்னைப் பலமுறை படியெடுத்துப் பாதுகாத்திருக்கிறார்கள். ஒரு முதியவர்



தள்ளாத வயதில் என்னைக் காப்பாற்றி வைத்துள்ளார். உனக்கு அவரைத் தெரியுமா?

*மின்னூல்:* தெரியும் முப்பாட்டனாரே! தமிழ்த்தாத்தா உ.வே.சாமிநாதர் தானே அவர்.

*ஓலைச்சுவடி:* மிக நல்லது தம்பி. நன்றாகத் தெரிந்து வைத்திருக்கிறாய். அவர் எங்களைப் பாதுகாக்க எவ்வளவு துன்பப்பட்டுள்ளார் தெரியுமா?



*மின்னூல்:* சொல்லுங்கள் முப்பாட்டனாரே.

*ஓலைச்சுவடி:* ஈரோடு மாவட்டம் கொடுமுடியின் காவிரிக் கரையில் உள்ள ஒரு வீட்டில் பழந்தமிழ் இலக்கியச் சுவடிகள் இருப்பதை அறிந்து அவர்களிடம் கேட்டபோது, ஆற்றில் ஆடிப்பெருக்கன்று ஓலைச்சுவடிகளை விட்டுவிடுதலே அறம் என்று கூறித் தர மறுத்து விட்டனர். பார்த்தார் உ.வே.சா. அவ்வாறு அவர்கள் ஆற்றில் போடும்போது, அடுத்த படித்துறையில் அதிகாலைக்குளிரில் காவிரியில் இறங்கி, தமது முதிய உடல் தாளாது நடுங்க, அச்சுவடிகளைச் சேகரித்துப் பதிப்பித்தார்.



உ.வே.சா. பதிப்பித்த 'மணிமேகலை' நூலின் சுவடி

*மின்னூல்:* கண்கலங்குகிறது பாட்டனாரே!

*ஓலைச்சுவடி:* ஆமாம் தம்பி. அவர்தான் சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி போன்ற பல நூல்களையும் சிற்றிலக்கியங்களையும்பதிப்பித்துப்பாதுகாத்தார். அவர் மட்டுமல்லர். சி.வை.தாமோதரனாரும் பண்டைக்காலத் தமிழ் நூல்களை மீட்டெடுத்துப் பதிப்பித்துப் பாதுகாத்தார்.



*மின்னூல்:* சி.வை.தாமோதரனார் பதிப்பித்த நூல்களைச் சொல்லுங்கள் பாட்டனாரே.

*ஓலைச்சுவடி:* இவர் கலித்தொகை, இறையனார் அகப்பொருள், சூளாமணி, நீதிநெறி விளக்கம், வீரசோழியம், திருத்தணிகைப்புராணம், தொல்காப்பியத்தின் எழுத்து, சொல், பொருளதிகாரங்களுக்கான உரைகளைத் தேடிப் பதிப்பித்துள்ளார். அந்தப் பெரியவர்களுக்கு நாம் எக்காலத்தும் நன்றியோடு இருக்க வேண்டும். சரி தம்பி. உன்னைப் பார்த்தால் எனக்குப் பெருமையாக இருக்கிறது. உன்னைப் பற்றிச் சொல்வாயா?

*மின்னூல்:* நிச்சயமாகச் சொல்வேன் பாட்டனாரே. உங்களைத் தேடித்தேடிப் பாதுகாத்து அச்சுநூல்களாக்கினார்கள்

## அறிவோம் தெளிவோம்

### கணித்தமிழ்ப் பேரவை

தமிழ் இணையக் கல்விக்கழகத்தின் பரப்புரை அமைப்பே கணித்தமிழ்ப் பேரவை. இஃது, இணையத்தில் தமிழின் பங்களிப்பை வளப்படுத்துதல், கணித்தமிழ் பயன்பாட்டு மென்பொருள்களை உருவாக்கம் செய்ய ஊக்குவித்தல், கணிப்பொறியில் தமிழ் உள்ளீட்டுப் பயிற்சியினை ஆசிரியர்கள், மாணவர்கள், கணிப்பொறி ஆர்வலர்களுக்கு வழங்குதல். தமிழ் மென்பொருள், குறுஞ்செயலி உருவாக்கம், கோடை கால முகாம், கலைக்களஞ்சிய உருவாக்கம் ஆகியனவற்றை இலக்குகளாகக் கொண்டு செயல்பட்டு வருகிறது.

அல்லவா! அதுபோல 2001ஆம் ஆண்டு தமிழகத்தில் பழந்தமிழ் நூல்களை மின்னூலாக்கி வெளியிட்டனர்.

உங்களைத் தேடி அலைந்து சேகரித்தார்கள். எங்களை ஓர் இடத்தில் அமர்ந்து கொண்டு தேடுகிறார்கள். ஒருமுறை என்னைத் தரவேற்றம் செய்தால் போதும். உலகமே என்னைப் படிக்கும் வாய்ப்பு ஏற்பட்டுவிடுகிறது.

ஓலைச்சுவடி: அடேயப்பா! எண்ண எண்ண எனக்கு வியப்பாய் இருக்கிறது தம்பி. அது எப்படி கணினியில் இருக்கும் உன்னை உலகமெங்கும் படிக்க முடிகிறது?.

மின்னூல்: கணினிகள் ஆங்காங்கே உள்ள வழங்கிகளின் வழியாக இணையத்தால் இணைக்கப்பட்டுள்ளன. தகவல்களைப் பரிமாற விண்வெளியில் தகவல் தொடர்பு செயற்கைக் கோள்கள் இயங்கி வருகின்றன.

ஓலைச்சுவடி: ஓ! விண்வெளியில் செயற்கைக் கோள்கள் இயங்குகின்றனவா? அது எப்படி?



மின்னூல்: நமது அறிவியல் அறிஞர்கள் பலதுறைச் செயல்பாடுகளுக்காக விண்வெளியில் செயற்கைக் கோள்களை இயங்கச் செய்துள்ளனர். எவ்வாறு நீர்நிலைகளிலுள்ள நீரை மேகம் வாங்கி மழையாகப் பொழிகிறதோ அதுபோலத் தகவல் தொடர்புச் செயற்கைக்கோள் வழங்கிகளிலிடமிருந்து மின் சைகைகளைப் பெற்று, வாங்கிகளுக்கு அனுப்புவதால் என்னைப் படிக்க முடிகிறது.

ஓலைச்சுவடி : ஓ சிறப்பு!

மின்னூல்: அது மட்டுமன்று பாட்டனாரே. என்னை உருவாக்கத் தொடங்கியவுடன் இன்னொரு பயனுள்ள வசதியும் மக்களுக்குக் கிடைத்தது. அதுதான் மின்நூலகங்கள். பல்லாயிரக் கணக்கான நூல்களை ஓர் இடத்தில் அமர்ந்தபடி கணினியிலோ அல்லது திறன்பேசியிலோ மிக எளிதாக எடுத்து வாசிக்கலாம்.





*ஓலைச்சுவடி:* அனைத்து மின்னூல்களையும் வாசிக்கக் கட்டணங்கள் ஏதும் உண்டா? எவ்வளவு பொற்காசுகள் செலுத்த வேண்டும் தம்பி?

*மின்னூல்:* (சிரித்துக் கொண்டே ...) பாட்டனாரே! தமிழ் இணையக் கல்விக்கழகம் ஐம்பது இலட்சம் பக்கங்களுக்கும் மேலாகக் கொண்ட தமிழ் நூல்களை இணையத்தில் பதிவேற்றியுள்ளது. அவற்றைக் கட்டணம் ஏதுமின்றி நாம் வாசிக்கலாம். வேறுசில இணையத்தளங்களில் கிடைக்கும் சில மின்னூல்களுக்காக நாம் கட்டணம் செலுத்த வேண்டியிருக்கும். அச்சுநூல் விலையை ஒப்பிட்டுப் பார்த்தால் மின்னூலுக்கானக் கட்டணம் மிகமிகக் குறைவாகவே இருக்கும்.

*ஓலைச்சுவடி:* அதாவது ஒரு சிறிய கணினியின் முன் அமர்ந்துகொண்டு அனைத்துத்துறை நூல்களையும் வாசிக்க முடியும் என்பது எவ்வளவு பெரிய வாய்ப்பு தம்பி. இந்த அளவுக்கு முன்னேறியிருப்பதை அறியும்போது, மிகவும் பெருமையாய் இருக்கிறது.

*மின்னூல்:* இன்னும் குறிப்பிட்டுச் சொன்னால் காகிதமில்லாப் புத்தகங்கள் என்ற நிலையை நோக்கி, விரைவாகப் போய்க் கொண்டிருக்கிறோம் நாங்கள்.

*(அப்போது மின்னூல் பேசிக் கொண்டிருக்கும் கணினியை நோக்கி இரண்டு இளைஞர்கள் வந்தமர்கிறார்கள். உடனே, சுவடியும் மின்னூலும் தங்கள் பேச்சை நிறுத்திக்கொள்ள, இளைஞர்கள் பேசிக்கொள்கின்றனர்.)*

*அமுதன்:* நமது மின்னூலின் வடிவமைப்பைத் தொடங்கி விட்டாயா?

*எழிலன்:* பக்கங்களையெல்லாம் சரிபார்த்துத் தொகுத்துவிட்டேன். அதைச் சிறப்பாக வடிவமைக்க நல்லதொரு வார்ப்புருவைத் தேடிக் கொண்டிருக்கிறேன்.



**தெரியுமா?**

**இயற்கை மொழியாய்வு – Natural language Processing**

மனித மூளையைப் போன்றே கணினிக்கு இயற்கை மொழி அறிவைப் பெறவைத்து ஒரு மொழியிலுள்ள மொழிக்கூறுகளை எளிமையாகப் புரிந்து கொள்ளவும் அம்மொழிக் கூறுகளைச்செயற்கையாக உருவாக்கவும் செயலாற்றவைக்கும் முயற்சியே இயற்கை மொழியாய்வு (Natural Language Processing) ஆகும். மனிதருக்கு இணையாகப் படிப்பதற்கும் எழுதுவதற்கும் பேசுவதற்கும் கணினியியல் மாதிரிகளை (Computational Models) உருவாக்குவதே இதன் முதன்மை நோக்கம்.

*அமுதன்:* இது தமிழ் இலக்கிய நூல்தானே! அதை ஓலைச்சுவடி வடிவ வார்ப்புருவில் வைத்தால் சிறப்பாக இருக்குமே.

*எழிலன்:* (கணினியில் தேடிக்கொண்டே ...) ஓ... நிச்சயமாக. இதோ ஓலைச்சுவடி மாதிரியில் ஒரு வார்ப்புரு இருக்கிறதே!

*அமுதன்:* நல்லது. அதையே வை.

அவன் ஓலைச்சுவடி வார்ப்புருவில் மின்னூலின் பக்கங்களை வைத்து, அந்த நூலை வடிவமைத்தான். சிறிது நேரத்தில் ஓலைச்சுவடிகளைப் புரட்டுவது போன்ற வடிவமைப்பில் மின்னூலின் பக்கங்கள் விரிந்துகொண்டிருந்தன. அதைப்பார்த்து, சுவடியும் மின்னூலும் புன்னகைத்துக் கொண்டன.



**உள்ளீட்டுக்களம்**

# 3. தமிழ் உள்ளீட்டுத் தொழில்நுட்பம்

தமிழைக் கணினிக்குக் கொண்டுசெல்லும் பொருட்டுப் பல பயன்பாட்டு உள்ளீட்டுக் கருவிகளும் மென்பொருள்களும் உருவாக்கப்பட்டுள்ளன. அவற்றைப் பயன்படுத்தித் தமிழை உள்ளீடு செய்வதற்குக் கீழ்க்காணும் தொழில்நுட்பங்கள் அடிப்படையாய் அமைகின்றன.

1. எழுத்துரு (Font)
2. குறியேற்றம் (Encoding)
3. விசைப்பலகை (Keyboard)
4. தட்டச்சு இடைமுகச் செயலி (Interface Tool)

## எழுத்துரு

ஆதிகாலத்தில் கையால் எழுத்துகளை எழுதிய மனிதன் அச்சுப்பொறி வந்தபிறகு அச்சிலும் தட்டச்சிலும் பதிக்கப்படும் எழுத்துகளுக்குரிய உருக்களை வடித்தான். கணினியில் எழுத்துகளை உள்ளீடு செய்ய எழுத்து வரிவடிவங்கள் உருவாக்கப்பட்டன. இவ்வாறு வடிக்கப்பட்டு உருவாக்கப்படும் ஒரு மொழியின் எழுத்து வரிவடிவம் 'எழுத்துரு' (Font) எனப்படும்.

## குறியேற்றம்

உருவாக்கப்பட்ட எழுத்துருக்களைக் கணினியில் பயன்படுத்த வேண்டுமானால், அம்மொழியின் ஒவ்வோர் எழுத்துக்கும் ஒவ்வோர் எண்ம மதிப்பைக் கொடுக்க வேண்டும். ஏனெனில், கணினி 0,1 ஆகிய இரும (Binary) எண்களைத்தான் புரிந்து கொள்ளும். இவ்வாறு எழுத்துகளுக்கு எண்ம மதிப்பை வழங்குதலே 'குறியேற்றம்' (Encoding) எனப்படுகிறது.

## விசைப்பலகை

விசைப்பலகை அல்லது தட்டச்சுப்பலகை கணினியில் தகவல்களை உள்ளீடு செய்ய உதவும் ஓர் உள்ளீட்டுக் கருவியாகும். விசைப்பலகை எழுத்துகள், எண்கள், குறிகள், கட்டளைகள் ஆகிய விசைகளைக் கொண்டிருக்கும். தேவைக்கேற்ப இந்த விசைகளைத் தட்டுவதன்மூலம் கணினிக்குக் கட்டளைகளையும் உள்ளீடுகளையும் வழங்கலாம்.



## தட்டச்சு இடைமுகச் செயலி

தற்போது கணினியில் எளிமையாகத் தமிழைத் தட்டச்சு செய்ய, பல இடைமுகச் செயலிகள் பயன்பாட்டில் உள்ளன. ரோமன் விசைப்பலகை கொண்டு இடைமுகச் செயலிகள் வழியாகத் தமிழ் எழுத்துகளை நாம் உள்ளீடு செய்யலாம். அவற்றுள் சில இடைமுகச் செயலிகளைக் கீழ்க்காணும் இணையத்தளங்களிலிருந்து தரவிறக்கம் செய்து பயன்படுத்தலாம். ஆங்கிலம் தெரிந்தால்தான் கணினியைப் பயன்படுத்த முடியும் என்ற நிலையை இந்த இடைமுகச் செயலிகள் மாற்றியுள்ளன.

## உள்ளீட்டில் புதிய முறைகள்

நாம் தட்டச்சு செய்யாமலே தமிழ் எழுத்துகளை உள்ளீடு செய்யும் தொழில் நுட்பம் வளர்ந்து வருகிறது. அதன் முறைகள் சிலவற்றைக் காண்போம்.

| தட்டச்சு இடைமுகச் செயலிகள் | இணைய முகவரி | இயங்குதளம் (Operating System) |
|---|---|---|
| என்.ஹெச்.எம். | http://software.nhm.in/products/writer | விண்டோஸ் |
| இ - கலப்பை | http://thamizha.com | விண்டோஸ் |
| குறள் தமிழ்ச்செயலி | http://www.kuralsoft.com/kural-tamil-software.html | விண்டோஸ் |
| அழகி | http://azhagi.com | விண்டோஸ் |
| கீமேன் | www.Keyman.com/tamil/ | விண்டோஸ், ஆண்ட்ராய்டு, ஐபோன் |
| கூகுள் உள்ளீட்டுக் கருவி | https://www.google.co.in/inputtools/ | விண்டோஸ், ஆண்ட்ராய்டு |
| செல்லினம் | www.Sellinam.com | ஆண்ட்ராய்டு, ஐபோன் |
| தமிழ் விசை | http://play.google.com/store/apps/details?id=com.tamil.visai&hl=en | ஆண்ட்ராய்டு |
| எழுத்தாணி | http://play.google.com/store/apps/details?id=and.mms.ezhuthani | ஆண்ட்ராய்டு |

### கையெழுத்து உணரி (Handwritten Recognition)

கையெழுத்து உணரி என்பது நம் கையெழுத்தை மின்வரிகளாக மாற்றும் தொழில்நுட்பமாகும். இந்த மென்பொருளைக் கொண்டு கையால் எழுதினால் அவற்றை உடனடியாக மின்வரிகளாகப் (*Digital text*) பெறமுடியும்.

இவ்வசதியைப் பயன்படுத்த விசைப்பலகைக்குப் பதிலாக உங்கள் விரல்களைக் கொண்டோ எழுதுகுச்சி கொண்டோ சுட்டியை அழுத்திப் பிடித்து எழுதும் முறையிலோ நேரடியாகத் திரையில் எழுதலாம். கணினி, செல்பேசி ஆகியவற்றில் வழங்கும் கையெழுத்து உணரி சிறப்பாகச் செயல்படுகிறது. தட்டச்சுச் செய்யத் தெரியாதவர்களும் கணினியை எளிதாகப் பயன்படுத்த இம்மென்பொருள் உதவுகின்றது.

### ஒளி வழி எழுத்தறிவான் (Optical Character Recognizer)

வருடியால் நகலெடுக்கப்பட்ட தட்டச்சு, கையெழுத்து ஆவணங்களையும் புகைப்படத்திலுள்ள வரி ஆவணங்களையும் ஒளி வழி எழுத்தறிவான் மூலமாக மின்வரிகளாக மாற்றலாம். கூகுள் வழங்கும் ஒளி வழி எழுத்தறிவான் சிறப்பாகச் செயல்படுகிறது. மின்னூல் ஆக்கத்திற்கும் கையெழுத்துப் படிகளை மின்வரிகளாக மாற்றுவதற்கும் இம்மென்பொருள் உதவுகின்றது.

### பேச்சுரை மாற்றி (Speech Recognizer)

இந்த மென்பொருள் தமிழில் நாம் பேசுவதை மின்எழுத்துகளாக மாற்றித் தரும். கூகுள் நிறுவனம் இந்தக் குரல்வழி உள்ளிடும் வசதியை ஜி போர்டு என்னும் செயலி மூலம் வழங்குகிறது. யாருடைய பேச்சையும் எழுத்து வடிவமாக்க இம்மென்பொருள் உதவுகின்றது.

### தமிழ்ச் சொற்செயலி (Tamil Word Processor)

தமிழ்மொழியைக் கணினியில் உள்ளீடு செய்யும்போது ஏற்படும் சொற்பிழை, எழுத்துப்பிழை, சந்திப்பிழை, இலக்கணப்பிழை போன்றவற்றைக் கணினி புரிந்துகொண்டு, அவற்றில் உள்ள பிழைகளைச் சரிசெய்து தருவதற்கான மென்பொருளையே தமிழ் சொற்செயலி என்கிறோம். மென்தமிழ், பொன்மொழி போன்ற சொற்செயலிகள் இதற்குப் பயன்படுகின்றன.

கணினியில் தமிழ்மொழியைத் தவறில்லாமல் பயன்படுத்துவதற்கு உதவும் மென்பொருள்கள் இப்பகுதியில் அறிமுகப்படுத்தப்படுகின்றன.

### சொற்பிழை திருத்தி (spell checker)

தட்டச்சில் ஒரு சொல்லை உள்ளிட்டவுடன் அதில் ஏதேனும் எழுத்துப் பிழை இருந்தால் அதைச் சுட்டிக்காட்டுவதோடு அதற்குச் சரியான பரிந்துரையைக் கொடுப்பதும் தமிழ்ச் சொற்பிழை திருத்தியின் பணியாகும்.



#### தெரியுமா?

**வைரஸ் தாக்குதலும் பாதுகாப்பும்**

1. இணையத்திலிருந்து நம்பிக்கைக்குரிய நிறுவனங்கள் வழங்கும் மென்பொருள்களையே பயன்படுத்தவேண்டும்.
2. களவு நகல் மென்பொருள்களைப் பயன்படுத்தக்கூடாது. (Pirated Softwares)
3. உரிமம் பெற்ற முறையான மென்பொருள்களையே பயன்படுத்தவேண்டும் (Original – Licenced)
4. நண்பர்கள் தரும் விரலிகளை (Pendrive) வைரஸ் பரிசோதனை செய்யாமல் பயன்படுத்தக்கூடாது.
5. இணையவழி வங்கிக்கணக்கு மற்றும் கடன் அட்டை பயன்படுத்துவோர் கடவுச்சொல்லை உள்ளீடு செய்யும்முன்பு, அது சரியான இணையத்தளம்தானா என்பதை உறுதி செய்துகொள்ளவேண்டும்.




## சந்திப்பிழை திருத்தி (Sandhi Checker)

தட்டச்சு செய்யும்போது இரண்டு சொற்களுக்கு இடையில் ஏற்படும் சந்திப் பிழைகளைச் சரிசெய்யும் மென்பொருளுக்குச் சந்திப்பிழை திருத்தி என்று பெயர். இது விடுபட்ட ஒற்றுகளை இடுவதுடன், தவறாக இடப்பட்ட ஒற்றுகளையும் சரிசெய்யும்.



செய்கிறோம்.பேச்சுத் தமிழில் செய்யும் தவறுகளை யாரும் கண்டு கொள்வதில்லை. ஆனால் எழுதும்போது நாம் செய்யும் தவறுகள், பளிச்சென்று தெரிகின்றன.அவற்றைக் களைந்து நல்ல தமிழில் எல்லோரும் எழுதவேண்டும் என்பதே இந்த வலைப்பூவின் நோக்கம்.

http://mutiru-nallatamil.blogspot.in/2011/11/61-80_07.html

| | | |
|---|---|---|
| 61 | பிழை<br>சரி | ~~தமிழ் தாய் வாழ்த்து பாடினான்.~~<br>தமிழ்த் தாய் வாழ்த்துப் பாடினான். |
| 62 | பிழை<br>சரி | ~~பலக் கலைகள் பயின்றான்.~~<br>பல கலைகள் பயின்றான். |
| 63 | பிழை<br>சரி | ~~ஆயிரத்தி தொளாயிரத்தி எண்பத்தி ஒன்பது.~~<br>ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பத்து ஒன்பது. |
| 64 | பிழை<br>சரி | ~~சாமிக்கு வெள்ளி கவசம் அணிவித்தனர்.~~<br>சாமிக்கு வெள்ளிக்கவசம் அணிவித்தனர். |
| 65 | பிழை<br>சரி | ~~பாலை நன்றாய் குடிக்குது கன்று குட்டி.~~<br>பாலை நன்றாய்க் குடிக்குது |



## தமிழ்ச்சொல் சுட்டி (Native Word Suggestion)

கணினியில் தமிழைப் பயன்படுத்தும்போது தமிழ்ச் சொற்களுடன் பிறமொழிச் சொற்கள் கலந்து அப்படியே பயன்படுத்தப்படுகின்றன. இவற்றை நீக்கித் தனித்தமிழில் எழுதுவதற்குத் துணை செய்யும் வகையில் பிறமொழிச் சொற்களைக் கண்டறிந்து, அவற்றிற்கு இணையான தமிழ்ச்சொற்களை மாற்றித்தரும் மென்பொருள் தமிழ்ச்சொல் சுட்டி என்பதாகும்.

## இலக்கணப்பிழை திருத்தி (Grammar Checker)

கணினியில் தமிழைப் பயன்படுத்தும்போது ஏற்படும் ஒருமை-பன்மை மயக்கம், உயர்திணை-அஃறிணை மயக்கம், சொற்றொடர் பிழை போன்றவற்றைக் கண்டறிந்து, திருத்தித் தருவதை இலக்கணப்பிழைதிருத்தி என்கிறோம்.

## மின் அகராதி (e–Dictionary)

மின்னணு அகராதி என்பது எண்ம வடிவத்தில் தரவுகளைக் கொண்ட அகராதியாகும். பல்வேறுபட்ட மின்னணு சாதனங்களின் மூலம் இவ்வகராதிகளை நாம் அணுகலாம். கணினிகள், திறன்பேசிகள், இணையப்பயன்பாடுகள், நிறுவப்பட்ட மென்பொருள்கள், திறன்பேசிச்செயலிகள், இணையச்செயலிகள் உள்ளிட்ட பல்வேறு வடிவங்களில் மின்னணு அகராதிகள் கிடைக்கின்றன.

இதில் சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி, ஆங்கிலம் – தமிழ் அகராதி, தமிழ் – தமிழ் அகரமுதலி, பால்ஸ் அகராதி, தமிழ் இணையக் கல்விக்கழகத்தின் ஒலிப்புடன் கூடிய மின் அகராதி, சங்க இலக்கிய அகராதி, காலக் குறிப்பு அகராதி, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி ஆகியனவும் இடம் பெற்றுள்ளன.

## இயந்திர மொழிபெயர்ப்பு (Machine Translation)

ஒரு செய்தியை ஒரு மொழியிலிருந்து மற்றொரு மொழிக்கு மென்பொருள்மூலம் மொழிபெயர்க்கும் முறை இயந்திர மொழிபெயர்ப்பாகும். கூகுள் மொழிபெயர்ப்பி என்ற இணையவழி மொழிபெயர்ப்பு மென்பொருள் தமிழுக்கும் பிற மொழிகளுக்கும் பயன்பட்டு வருகின்றது.

வேறு மொழியில் வடிவமைக்கப்பட்ட ஓர் இணையத்தளத்தின் உள்ளடக்கத்தை அம்மொழி தெரியாதவர்கூட தமக்குத் தெரிந்த மொழியின் மூலம் மொழிபெயர்த்துப் பார்க்க முடிகிறது.

மேற்கண்ட மென்பொருள்கள் மூலம் கணினி மற்றும் திறன்பேசி ஆகியவற்றில் பல்வேறு தமிழ் உள்ளீட்டுச் செயல்பாடுகளை விரைவாகவும் செம்மையாகவும் நம்மால் செய்யமுடியும்.

செயற்களம்

# 4. இணைய ஊடகம் – உருவாக்கமும் பயன்பாடும்

இன்றைய இணையவெளியில் மின்னஞ்சல், வலைப்பூ, இணைய இதழ்கள், முகநூல், கீச்சகம், புலனம், இசுகை போன்ற எண்ணற்ற தகவல் பரிமாற்ற ஊடகங்கள் மக்கள் பயன்பாட்டிற்கெனக் கிடைக்கின்றன. அவற்றைப் பயன்படுத்திக் கல்வி, சமூகம் சார்ந்த செயல்பாடுகளில் நாம் ஆக்கப்பூர்வமாக ஈடுபடலாம்.

## மின்னஞ்சல்

கணினிகளுக்கிடையே இணையத்தின் வாயிலாகச் செய்யப்படும் தகவல் பரிமாற்றமே மின்னஞ்சல் சேவையாகும். இணையத்தில் மின்னணுத் தொடர்புக் கருவிகளைக்கொண்டு செய்திகள், படங்கள், காணொலிகள், கோப்புகள் முதலானவற்றைச் சிலநொடிகளில் பரிமாறிக் கொள்ளலாம். கூகுள், யாகூ, ரெடிஃப்மெயில், வேர்டுபிரஸ் போன்ற உலகின் பெரும்பான்மையான மின்னஞ்சல் நிறுவனங்கள் இச்சேவையைக் கட்டணமின்றி வழங்குகின்றன.

இத்தகைய நிறுவனங்கள் ஏதாவது ஒன்றில் நாம் மின்னஞ்சல் பயனர் கணக்கைத் தொடங்கவேண்டும். அதற்கான படிவத்தில் நம் விவரங்களைப் பதிவு செய்ய வேண்டும். அதன் மூலம் மின்னஞ்சல் முகவரி ஒன்றையும்




கடவுச்சொல் ஒன்றையும் நாம் பெறலாம். தற்போது பல இணையத்தளங்கள் பயனரின் நம்பகத் தன்மையை மின்னஞ்சல் முகவரியைக் கொண்டே உறுதி செய்கின்றன. இதனால் இணையத்தின் சேவையை முழுமையாகப் பயன்படுத்த மின்னஞ்சல் முகவரி தேவைப்படுகிறது.

## வலைப்பூ (Blogspot)

இணையவெளியில் வழங்கப்படும் நமக்கான கட்டணமில்லா ஊடகக்களமே வலைப்பூ. ஒரு குறிப்பிட்ட தனிநபரோ குழுவோ தாம் விரும்பும் வகையில் செய்திகளைத் திரட்டி, படைப்புகளைத் தாமே எழுதி, பிறவகைகளில் சேகரித்துப் பதிவு செய்யும் ஊடகமே வலைப்பூ. இதில் ஒலிஒளி வசதிகளைப் பயன்படுத்துவது கூடுதல் சிறப்பு.

படைப்பாற்றல்மிக்க ஒருவருக்குத் தணிக்கைக் கட்டுப்பாடுகள் ஏதுமின்றி வழங்கப்படும் முழுச்சுதந்திர வெளியாக இது அமைகிறது. இவ்வசதியினை கூகுள், யாகூ, ரெடிஃப் மெயில், எம் எஸ் என் போன்ற நிறுவனங்கள் தம் பயனருக்கு வழங்குகின்றன.

## வலைப்பூ உருவாக்குவோம்

நமக்கான வலைப்பூவினை கூகுளில் எப்படி எளிமையாக உருவாக்கிப் பயன்படுத்துவது என்பதைக் காண்போம்.

*படி – 1* முதலில் கூகுளில் ஒரு மின்னஞ்சல் கணக்கைத் தொடங்குக. மின்னஞ்சல் கணக்கைத் தொடங்கியவுடன் வலைப்பூ வசதிக்குச் செல்க.



படி-2 சென்றவுடன் "புதிய வலைப்பதிவை உருவாக்குக" என்ற பக்கம் வரும்.




படி-3 அதில் உமது வலைப்பூவிற்கான பெயரையும் வலைப்பூ முகவரியையும் தட்டச்சு செய்து, "வலைப்பதிவை உருவாக்கு" என்பதைச் சொடுக்கவும்.




படி-4 வலைப்பதிவை உருவாக்கு என்பதைச் சொடுக்கியவுடன் நமக்கான வலைப்பதிவின் முகப்புத் தோற்றம் கிடைத்துவிடும்.




படி-5 இப்போது நமது வலைப்பக்கத்தில் வலப்பக்க மூலையில் உள்ள 'வடிவமைப்பு' என்பதைச் சொடுக்கி, புதிய இடுகைக்கான பக்கத்திற்கு வரவேண்டும்.




படி-6 'புதிய இடுகையை உருவாக்குக' என்பதைச் சொடுக்கினால், புதிய இடுகைக்கான பக்கம் பின்வருமாறு வரும்.




படி-7 அதில் நமது படைப்பைத் தட்டச்சு செய்ய வேண்டும்.




படி-8 'வெளியிடு' என்பதைச் சொடுக்கினால் படைப்புடன் கூடிய வலைப்பக்கம் கிடைத்துவிடும்.




படி-9 படைப்பைப் படிப்பவர் அதுபற்றிய பின்னூட்டம் இட்டால் அது பின்வருமாறு வெளிப்படும்.




இப்போது நாம் எளிய முறையில் ஒரு வலைப்பூவினை உருவாக்கி, வெற்றிகரமாக நமது படைப்பை வெளியிட்டிருக்கிறோம்.

## வலைப்பூ உருவாக்கும் நுட்பங்கள்

1. மேற்கண்ட வலைப்பூ உருவாக்கம் ஓர் எளிய வழிமுறையே. அதன் விரிவான செயல்பாடுகளைப் பயன்பாட்டின்வழி அறிவது வலைப்பூவைச் சிறப்பாக அமைக்க உதவும்.

2. வலைப்பூவில் நம்மைப்பற்றிய விவரங்கள், ஒளிப்படம், ஒலிக்கோப்பு, போன்றவற்றைச் சேர்க்க முடியும்.

3. வலைப்பூவிற்கான பெயரையும் வலைப்பூ முகவரியையும் இதுவரை யாரும் பயன்படுத்தாத

### அறிவோம் தெளிவோம்

**வலைப்பூ திரட்டிகள்**

1. திரட்டி.இன் (http://www.thiratti.in)
2. வலைப்பூக்கள் ( http://www.valaipookkal.com)
3. தமிழ்மணம் (: http://www.tamilmanam.net)
4. திரட்டி.காம் ( http://www.thiratti.com)
5. தகவல் இன்போ (http://www.thakaval.info/blogs)
6. தேன்கூடு (:http://www.thenkoodu.com)
7. தமிழ்வெளி (http://www.tamilveli.com)
8. சங்கமம் (http://tamil.blogkut.com)
9. தமிழ்பாரதி (http://www.thamizhbharathi.com

ஒன்றாக, புதுமையானதாகத் தேர்வு செய்வதும் நலம். அது நம் வலைப்பூவினைத் தேடுபொறியில் தேடுவோருக்கு எளிதாகக் கிடைக்கச் செய்யும் உத்தி.

## வலைப்பூவினைப் பயன்படுத்தும் முறை

1. நமது படைப்புகளை வெளியிட்டு, அதை உலகளாவிய வாசகர்களை வாசிக்கச் செய்யலாம்.

2. வலைப்பூக்களைத் தொகுத்து வாசகர் பார்வைக்குத் தரும், திரட்டிகளில் நம் வலைப்பூவை இணைப்பதன்மூலம் வாசகர் எண்ணிக்கையினை அதிகரிக்கலாம்.

3. வலைப்பூவின் தளவமைப்பினைப் பயன்படுத்தி, நமக்குத் தேவையான பொருண்மைகளில் பக்கங்களை உருவாக்க இயலும்.

4. நாம் வெளியிடும் படைப்புகளைக் கால, பொருள் அடிப்படையில் தலைப்பிட்டுச் சேமித்து வைக்கலாம்.

5. வகுப்பறைக்கெனத் தனி வலைப்பூவினை உருவாக்கி, மாணவர்களின் பாடம் சார்ந்த செயல் திட்டங்களைப் பதிவேற்றலாம். மற்ற மாணவர்கள் பின்னூட்டம் இடலாம். ஆசிரியர்கள் செயல் திட்டங்களை மதிப்பிடலாம்.

6. பள்ளிக்கெனத் தனி வலைப்பூவினை உருவாக்கி, வகுப்பறை வலைப்பூக்களை இணைக்கலாம். அதில் சிறந்த பள்ளிச் செயல்பாடுகள் அனைத்தையும் பலர் அறியவும் மதிப்பிடவும் வழங்கலாம். பள்ளி ஆண்டு மலர்களை வெளியிடலாம்.

7. நம் படைப்புகளுக்கு உடனுக்குடன் கிடைக்கும் பின்னூட்டம் இதன் சிறப்பு. அவ்வகையில் நாம் எவற்றை வெளியிடலாம் என்பதில் சுதந்தரமும் கட்டுப்பாடும் நம்கையில் உள்ளது என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும்.

## வலைப்பூவில் எழுதுதல்

நம் அனுபவங்கள், எதிர் கொள்ளும் சவால்கள், ஏற்படும் பிரச்சினைகள் குறித்து

நாம் எதிர்வினையாற்ற வேண்டியுள்ளது. அதன் அடிப்படையில் சமூக அக்கறையோடு கருத்துகளை உலகோடு பகிர்ந்துகொள்ள வலைப்பூ மிகச்சிறந்த படைப்புக் களமாக விளங்குகிறது.

அச்சில் வெளியாகும் நாளிதழ், வார, மாத இதழ்கள் குறிப்பிட்ட ஒரு நிறுவனம் சார்ந்த கருத்தாக்கங்களோடு படைப்புகளை வெளியிடுகின்றன . அவை பெரும்பாலும் வாசகர்களுக்கான பொழுதுபோக்குப் படைப்புகளைத் தாங்கி வருபவை. அவற்றில் நமது சொந்தக்கருத்துகளுக்கு ஏற்பப் படைப்புகளை எழுதுவது சாத்தியமில்லை.

ஆனால், வலைப்பூ நாம் நமக்காகவே உருவாக்கிக் கொள்ளும் களம். அதில் கட்டற்ற சுதந்தரத்தோடு நமது கருத்துகளை வலிமையாக வைக்கலாம்; உலக அளவிலான வாசகர்களின் பின்னூட்டங்களை உடனுக்குடன் பெறலாம்.

வலைப்பூவில், ஒரு குறிப்பிட்ட பொருளில் எதிர்பாராத தெறிப்பான முடிவோடு எழுதப்படும் சிறுகதை, பரந்த தளத்தில் ஒரு மையப்பொருளை விரித்து, வாழ்வியல் உண்மைகளைக் கண்டடைய முயலும் புதினம், கதைமாந்தர்களின் உரையாடல்களாக, காட்சிகளாக அமையும் நாடகம் ஆகியவற்றை நாம் பதிவேற்றலாம்.

நடப்புக்கால அரசியல், சமூகம், அறிவியல், கலை நிகழ்வுகள், இலக்கியத் திறனாய்வுகள் போன்றவற்றை மையப்படுத்தி அமையும் கட்டுரைகள் வாசகர்களை மிகவும் ஈர்க்கும்.

நேர்காணல்கள், மொழிபெயர்ப்பு ஆகியவற்றோடு, முத்திரை வாசகங்கள், நகைச்சுவைத் தெறிப்புகளை எழுதலாம்.

முகநூல், புலனம், கீச்சகம் முதலான சமூக ஊடகங்களில் நாம் அஞ்சல் செய்யும் அல்லது பகிரும் நிலைத் தகவல்கள், ஒளிப்படங்கள் போன்றவை சமூகப்பயணம், கல்விப் பயணம் கொண்டவையாக அமையவேண்டும். வெறும் மேலோட்டமான பொழுதுபோக்குச் செயல்கள் அவ்வூடகத்தின் வலிமையைக் குறைக்கும். நம் நேரத்தையும் வீணாக்கும்.

**அறிவோம் தெளிவோம்**

**மூடுல் (Moodle)**

மூடுல் என்பது Modular Object–Oriented Dynamic Learning Environment என்ற ஆங்கிலத் தொடரின் சுருக்கமாகும். 1999ஆம் ஆண்டிலிருந்து மெல்ல வளர்ந்து வரும் மூடுல் தற்போது உலகின் 100 மொழிகளில் செயலாற்றி வருகிறது. கற்கும் மாணவர்களை மனத்தில் கொண்டு உருவாக்கப்பட்ட இந்த மென்பொருள் இணையவழிக் கல்விக்குப் பெரிதும் பயன்படுகிறது. ஆசிரியர்கள் திறம்படச் செயல்பட மூடுல் உதவுகிறது. மூடுல் ஒரு திறவூற்று மென்பொருள் என்பதால், இதை அனைவரும் கட்டணமின்றிப் பயன்படுத்தலாம். இதனை எடுத்து மாற்றங்களையும் செய்து கொள்ளலாம். மூடுலின் முக்கியக் கூறுகளான மாணவ மன்றம் (Forum) கலந்துரையாடல் (Chat) விக்கி (Wiki) வலைப்பூ (Blog) ஆகியவற்றைத் தேவைக்கேற்பப் பயன்படுத்தவும் தேவையில்லை என்றால் மூடிவைக்கவும் முடியும். எல்லா வகையான விளக்கக் குறிப்புகள், தரவுகள் ஆகியவை மிகவும் பாதுகாப்பாக இருக்கும் வகையில் மூடுல் செயலாற்றுகிறது.

## விக்கிப்பீடியாவில் எழுதுதல்

தமிழ் விக்கிப்பீடியாவில் நம் பயனர் கணக்கின்வழியே சென்று கட்டுரைகளை எழுதலாம். அதில் எழுதும்போது ஒரு கட்டற்ற தகவல் கலைக்களஞ்சியம் அது என்பதை மனத்தில் கொள்ளவேண்டும்.

அதில் புனைவு இலக்கியங்கள், தனிப்பட்ட ஆளுமைகள் குறித்த கட்டுரைகள், திறனாய்வுக் கட்டுரைகள் போன்றவற்றை எழுதமுடியாது. தகவல் கட்டுரைகளை எழுதவோ, ஏற்கெனவே உள்ள கட்டுரைகளைச் சான்றுகளின் அடிப்படையில் திருத்தவோ முடியும்.

## இணைய இதழ்களில் படைப்புகள்

இணைய இதழ் என்பது இணையத்தில் மட்டும் வெளிவரும் இதழாகும். இது முழுக்க

முழுக்க இணைய வாசகர்களை மட்டுமே சென்றடைந்தாலும் இன்று அச்சிதழ்களும் வலைப்பூவில், இணைய இதழ்களில் வெளியானவற்றை மீள்பதிவு செய்கின்றன. அவ்வகையில் இணைய இதழ்கள் இன்று சிறந்த ஊடகமாக வளர்ந்து வருகின்றன.

அச்சிதழ்களுக்கு நம் படைப்புகளை அனுப்பும்போது, அவை ஒதுக்கப்படுவதும் தணிக்கைக்கு உட்படுவதும் நடக்கும். ஆனால் இணைய இதழ் நல்ல படைப்பாளிக்குக் கட்டற்ற சுதந்திரத்தைத் தருகிறது.

இணைய இதழ்களில் நம் பயனர் கணக்கின் வழியே சென்று, நமது படைப்புகளைத் பதிவேற்றம் செய்யலாம். ஆசிரியர் குழுவினர் அவற்றைத் தேர்வு செய்து வெளியிடுவர்.

சில இணைய இதழ்கள் அவற்றின் மின்னஞ்சல் முகவரி வழியாகப் படைப்புகளைப் பெற்று, பின்னர்த் தேர்வுசெய்து, வெளியிடுகின்றன. இந்த இதழ்களின் உள்ளடக்கத்தினை நன்கு புரிந்துகொண்டு, நம் படைப்பை அனுப்புதல் நலம். நம் வலைப்பூவினையே நாம் இணைய இதழாகவும் மாற்ற முடியும். அதில் படைப்புகளை இதழ் வடிவில் பதிவிட்டு வார, மாத காலமுறைப்படி வெளியிடலாம்.

பள்ளிகளில் மாணவர்களால் உருவாக்கப்படும் கையெழுத்து இதழ்களின் படைப்புகளை இணைய இதழாகத் தொடங்கிப் பதிவேற்றலாம். பள்ளி ஆசிரியர்களிடமும் படைப்புத்தளத்தில் இயங்கும் ஆளுமைகளிடமும் படைப்புகளைப் பெற்று வெளியிடலாம்.

இணைய இதழ்கள் இன்று உலகளாவிய வாசகர்களால் வாசிக்கப்படுகின்றன. தமிழில் வெளியாகும் சில மின்னிதழ்களைப் பற்றிக் கீழே காண்போம்.

திண்ணை: இது வணிக இதழ்கள் வெளியிடாத ஆழமான உரத்த சிந்தனையுள்ள கட்டுரைகளை வெளியிட்டு வருகிறது. ஒவ்வொரு துறைசார்ந்த வல்லுநர்களின் பார்வைகளை விரிவாகப் பதிவு செய்கிறது. தமிழ் இலக்கிய இலக்கணங்கள் தொடர்பாக இதுவரை வெளிவந்துள்ள ஆய்வுகள், அவை வெளியாகியுள்ள நூல்கள் குறித்துத் தொகுத்துத் தருகிறது. உலகிலுள்ள தமிழ்ச்சங்கங்கள் பற்றிய தகவல்களையும் தமிழ்மொழியைக் கற்றுக்கொள்வதற்கான வழிமுறைகள் பற்றியும் இவ்விதழ் விரிவாகத் தருகிறது.

பதிவுகள்: இந்தியப் பல்கலைக் கழக மானியக்குழுவால் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஆய்வு இதழ்களின் பட்டியலில் 'பதிவுகள்' மின்னிதழ் உள்ளது. தனி நபர்கள், நிறுவனங்களின் நிகழ்வுகள் தொடர்பான செய்திகளும் இவ்விதழில் வெளியிடப்படுகின்றன.

கீற்று: இணைய இதழ்களுக்கு என்றே கிடைத்த கட்டற்ற வெளிப்பாட்டுச் சுதந்திரத்தை மிகக் கூரான வகையில் வெளிப்படுத்துவதில் இவ்விதழ் சிறந்து விளங்குகிறது. அன்றாட நிகழ்வு, மற்றும் பிரச்சினைகளை விவாதிக்கும் முனைப்பான கட்டுரைகளைத் தருகிறது.

வார்ப்பு: தமிழ்க்கவிதைகள், கவிதைத் திறனாய்வுகள், தமிழ்க் கவிஞர்தம் நேர்காணல்கள் என முழுவதும் கவிதைகளுக்காகவே வெளியிடப்படும் இதழ் இது. கவிதைகள் குறித்த ஆழமான புரிதலுக்கு இவ்விதழ் உதவுகிறது.

சொல்வனம்: நவீன இலக்கியத் தளத்தில் மிகுந்த செவ்வியல் தன்மையோடு படைப்புகளை மாதமிருமுறை இவ்விதழ் வெளியிடுகிறது. அரசியல், சமூகம், இந்தியத் தத்துவத்துடன் உலக இலக்கியங்களையும் செம்மையாய் வழங்குகிறது.

முத்துக்கமலம்: ஒரு பொழுதுபோக்கு இதழுக்குரிய பொதுவான தகவல்களுடன் வெளிவருகிறது இவ்விதழ். மின்புத்தகங்கள், வலைப்பூக்கள் தொடர்பான தகவல்களைத் தருகின்றது. இதுவும் இந்தியப் பல்கலைக் கழக மானியக்குழுவால் ஏற்பளிக்கப்பட்ட இதழ்.

ஊடறு: பெண்களுக்காகப் பெண்களே நடத்தும் இதழ். அதிகார வெளியினை ஊடறுக்கும் பெண்களின் குரல் என்ற முத்திரை வரிகளோடு பெண் வாழ்வியலின் அனைத்துக் கூறுகளின் ஊடாகப் பதிவுகளைத் தரும் இதழ்.

வல்லமை: பொதுவாசகர்களைக் கவரும் வண்ணம் பல்வேறு வகைமைகளிலும் வாசிப்புச் சுவையோடு படைப்புகளைத் தரும் இதழ். இதுவும் இந்தியப் பல்கலைக் கழக மானியக்குழுவால் ஏற்பளிக்கப்பட்ட இதழ்.

இதுபோன்ற பல்வேறு மின்னிதழ்களும் இணைய வாசகர்களை நோக்கித் தமது பங்களிப்பைச் செய்துவருகின்றன. அவற்றில் கல்விப்பயன் சார்ந்த இணைய இதழ்களை வாசித்து நாம் பயனடையலாம்.

## சமூக ஊடகங்கள்

சமூக ஊடகங்கள் நட்புக்கெனத் தொடங்கிய நிலைமாறி, இன்று பொது நோக்கத்திற்காக இணைந்து செயலாற்றும் களங்களாக உயர்ந்துள்ளன. அவை அவசரக் காலங்களில் மக்களை விரைவாக ஒருங்கிணைக்கக்கூடிய வலிமையான கருவிகளாக உள்ளன. அவற்றுள் முகநூல், புலனம், கீச்சகம் போன்றவை குறிப்பிடத் தக்கவை.

## முகநூல் (Facebook)

இணையத்தில் உலகளாவிய நண்பர்கள் குழுவை உருவாக்கித் தம்முடைய தகவல்கள், காணொலிகள், புகைப்படங்கள் போன்றவற்றைப்பகிர்ந்து கொள்ளும் சமூக ஊடகமே முகநூல். இதில் விருப்பங்களையும் பின்னூட்டங்களையும் உடனுக்குடன் பெறமுடியும். இதில் மாணவர் குழுக்களை அமைத்து, கல்விச் செயல்பாடுகளையும் நடைமுறைப்படுத்தலாம். தமிழ் அறிஞர்களை மாணவர்களுடன் கலந்துரையாட வைக்கலாம். தமிழ் மொழி, கலை, இலக்கியம் சார்ந்த நண்பர்கள் குழுக்களுடன் இணைந்து நம்முடைய கருத்துகளைப் பகிரலாம்.

## கீச்சகம் (Twitter)

செல்பேசியில் குறுந்தகவல் அனுப்புவதுபோல் இணையத்தின்வழி குறுந்தகவல் அனுப்பப் பயன்படும் சமூக ஊடகமே கீச்சகம். இதில் சொற்கள், படங்கள், சிறுகாணொளிகளைப் பதிவிடலாம். நம்மை யார் பின்தொடர்கிறார்கள், நாம் யாரைப் பின்தொடர்கிறோம் என்ற அடிப்படையில் கீச்சகம் அமைகிறது.

கீச்சகக் குறும்பதிவுகளைக் கற்றல், கற்பித்தல் செயல்பாடுகளுக்குப் பயன்படுத்தலாம். ஆசிரியர்களிடம் மாணவர்கள் ஐயங்களைத் தெளிவுபடுத்திக் கொள்ளலாம். வகுப்புவாரியாகக் குழுக்களை அமைத்து விவாதிக்கலாம். காலவரையறைக்கு அப்பாற்பட்ட வகுப்பறைச் சூழலைக் கீச்சகம் உருவாக்குவது குறிப்பிடத்தக்கது.

## புலனம்/கட்செவி (Whatsapp)

திறன்பேசியில் தனிப்பட்ட முறையிலும் நண்பர்கள் குழுக்களை உருவாக்கியும் தங்களுக்குள் தகவல்கள், காணொலிகள், புகைப்படங்கள் போன்றவற்றைப் பகிர்ந்து கொள்ளும் சமூக ஊடகச் செயலியே புலனம். இன்று பெருமளவில் எளிதாகத் தகவல் பரிமாறிக் கொள்ளப் பயன்படும் ஊடகமாக இது விளங்குகிறது. கல்வி நிறுவனங்கள் பாடவாரியாகக் குழுக்கள் அமைத்துக் கல்விச் செயல்பாடுகளுக்குப் பயன்படுத்தலாம்.

## இசுகை (Skype)

உலகின் எந்தவோர் இடத்தில் உள்ளவருடனும் இணையத்தின்வழிக் கட்டணமின்றிப் பார்க்கவும் பேசவும் வழிசெய்யும் ஊடகமே இசுகை. இதில் ஒருவர் மற்றொருவருடனோ, பலருடனோ சொற்கள், ஒலி, காணொலி

வழியாகத்தொடர்புகொள்ளலாம்.மின்னஞ்சல், முகநூல், கீச்சகம் போன்று இதற்கும் கணக்குத் தொடங்கவேண்டும்.

இசுகையிலுள்ள காணொலி வசதியைப் பயன்படுத்தி, ஆசிரியர்களின் வகுப்பறைக் கற்பித்தலைப் பல்வேறு இடங்களில் உள்ள மாணவர்குழுக்கள் பார்த்து, உரையாடிப் பயனடையலாம்.

## இணையப்பாதுகாப்பு

அனைத்துத் துறைகளிலும் தவிர்க்க இயலாத வலிமையான சாதனமாக இணையம் இன்று விளங்குகிறது. இக்காலக்கட்டத்தில் இணையத்தை ஆக்கப் பூர்வமாகவும் பாதுகாப்பாகவும் பயன்படுத்த வேண்டியது இன்றியமையாதது. இணையத்தைப் பாதுகாப்பாகப் பயன்படுத்த, பின்வரும் வழிகாட்டல்களைப் பின்பற்றலாம்.

இணையம் சார்ந்த அனைத்துப் பரிமாற்றங்களையும் நமக்கான தனிப்பட்ட கணினி, திறன்பேசி ஆகியவற்றின் மூலம் மேற்கொள்ளுதல் நலம்.

நமது அனைத்துப் பயனர் கணக்குகளின் கடவுச்சொற்களை யாருடனும் பகிர்ந்து கொள்ளக்கூடாது.

பாதுகாப்பற்ற இணையத்தளங்களில் பதிவேற்றவோ, பதிவிறக்கவோ கூடாது.

அங்கீகரிக்கப்பட்ட நிறுவனங்களிடமிருந்து வரும் தகவல்களைத் தவிர, பிறவற்றைக் மிகக்கவனமாகக் கையாளவேண்டும்.

இணையத்தை முடக்குதல், தகவல்களைத் திருடுதல் போன்ற இணையக்குற்றங்கள் தொடர்பான விழிப்புணர்வு பெற வேண்டியது மிகவும் தேவை.

கணினி, திறன்பேசி ஆகியவற்றை நாம் தொடர்ந்து பயன்படுத்தும்போது குறிப்பிட்ட கால இடைவெளியில் கண்களுக்கு ஓய்வு கொடுக்க வேண்டும்.

நம்பகமற்ற தகவல்களைப் பெறும்போது விழிப்புணர்வுடன் இருக்கவேண்டும்.

### அறிவோம் தெளிவோம்

**திறவூற்றும் கட்டற்ற மென்பொருளும் (Open Source and Free Software)**

மென்பொருள் உருவாக்கத்தின் போது எழுதிய நிரல்களையும் (Programs) உருவாக்க முறையினையும் சேர்த்து அனைவருக்கும் தெரியும் வகையிலும் பலரும் ஒரு மென்பொருளை மேம்படுத்துவதற்கு ஏற்ற வகையிலும் கட்டணமின்றி வழங்குவதற்குத் திறவூற்று அல்லது திறமூல மென்பொருள் (Open Source Software) என்று பெயர்.கட்டற்ற மென்பொருள் (Free Software) என்பது, எந்தவிதமான கட்டுப்பாடுகளும் இல்லாமல் பயன்படுத்த, நகலெடுக்க, கற்க, மாற்றம் செய்ய, மறுவிநியோகம் செய்ய உதவும் மென்பொருளாகும். மென்பொருள்களுக்கான கட்டுப்பாடுகளிலிருந்து விடுதலையுறுதலே இதன் அடிப்படைக் கருத்துருவாகும். திறவூற்று மென்பொருளை நாம் மேம்படுத்திப் புதிய மென்பொருளாக வெளியிட முடியாது. ஆனால் கட்டற்ற மென்பொருள்களை நாம் மேம்படுத்திப் புதியதொரு மென்பொருளாக வெளியிடலாம்.

கணினி, திறன்பேசி ஆகியவற்றில் உள்ள விளையாட்டு, பொழுதுபோக்கு சார்ந்த பகுதிகளைப் புத்துணர்ச்சிக்காக மட்டுமே பயன்படுத்த வேண்டும். அவற்றில் தொடர்ச்சியாக ஈடுபடுவது நமது உடல், மனநலத்தையும் செயல்திறனையும் பாதிக்கும்.

மேற்கண்டவற்றை மனத்திற்கொண்டு இணைய வெளியை ஆக்கப்பூர்வமாகப் பயன்படுத்தி, நவீன அறிவியல் வாழ்வோடு நம்மைத் தகவமைத்துக் கொண்டு, வெற்றி பெறுவோம்.



### தெரியுமா?

**கணினித்தமிழ் விருதுகள்**

சிறந்த தமிழ் மென்பொருளை உருவாக்கும் நிறுவனம்/ உருவாக்குபவர்க்குத் தமிழக அரசின் தமிழ் வளர்ச்சித் துறையால் 'முதலமைச்சர் கணினித்தமிழ் விருது' வழங்கப்படுகிறது

# கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| AltaVista | – | அல்டாவிஸ்டா |
| ARPANET | – | ஆர்பாநெட் |
| Ask Jeeves | – | ஆஸ்க்ஜீவ்ஸ் |
| Bing | – | பிங் |
| Browser | – | உலவி |
| Browsing | – | உலவுதல் |
| Client | – | வாங்கி |
| Corporate Website | – | நிறுவன இணையத்தளம் |
| Cyber Crime | – | இணையக்குற்றம் |
| Digital | – | எண்மம் |
| Dynamic Website | – | இயங்கு இணையத்தளம் |
| E Commerce Website | – | மின் வணிக இணையத்தளம் |
| E Learning Website | – | மின்கற்றல் இணையத்தளம் |
| Encoding | – | குறியேற்றம் |
| Epic | – | எபிக் |
| Ethernet Card | – | ஈதர்நெட் |
| Facebook | – | முகநூல் |
| Font | – | எழுத்துரு |
| Gaming Website | – | விளையாட்டு இணையத்தளம் |
| Google | – | கூகுள் |
| Google Chrome | – | கூகுள் குரோம் |
| Hand Written Recognition | – | கையெழுத்து உணரி |
| History of Internet | – | இணைய வரலாறு |
| Host Computer | – | கணினிச் சேவையகம் |
| HTML – Hypertext Markup Language | – | மீஉரைக் குறிப்பு மொழி |
| HTTP – HyperText Transfer Protocol | – | மீஉரைப் பரிமாற்ற நெறிமுறை |
| Interface Tool | – | இடைமுகச்செயலி |
| Internet | – | இணையம் |
| Internet explorer | – | இன்டெர்நெட் எக்ஸ்புளோரர் |
| Internet Protocal – IP | – | இணைய நெறிமுறை |
| ISP – Internet Service Provider | – | இணைப்பு வழங்கும் நிறுவனம் |
| ISP Account | – | இணையக் கணக்கு |
| Keyboard | – | விசைப்பலகை |
| LAN – Local Area Network | – | குறும்பரப்பு வலைப்பின்னல் |

| | | |
|---|---|---|
| Lycos | – | லைகோஸ் |
| Modem | – | இணக்கி |
| Mozilla Firefox | – | மோசில்லா பயர்பாக்ஸ் |
| MSN | – | எம்எஸ்என் |
| Network Interface | – | இடைமுக அட்டை |
| Opera | – | ஒபரா |
| Operating System | – | இயங்குதளம் |
| Optical Character Recognizer | – | ஒளி வழி எழுத்தறிவான் |
| Password | – | கடவுச்சொல் |
| Personal Website | – | தனியாள் இணையத்தளம் |
| Pocket Switching Technology | – | தரவு மாற்றத் தொழில்நுட்பம் |
| Safari | – | சஃபாரி |
| Scanner | – | வருடி |
| Search engines | – | தேடுபொறி |
| Server | – | வழங்கி |
| Skype | – | இசுகை |
| Speech Recognizer | – | பேச்சுரை மாற்றி |
| Static Website | – | நிலை இணையத்தளம் |
| TCP Transmission Control Program | – | செய்திப்பரிமாற்றத் தொழில்நுட்பம் |
| Text to Speech | – | எழுத்து – பேச்சு மாற்றி |
| Twitter | – | கீச்சகம் |
| Typing Interface Tool | – | தட்டச்சு இடைமுகச் செயலி |
| Unicode | – | ஒருங்குறி |
| URLs – Uniform Resource Locators | – | சீரான வள இடங்காட்டிகள் |
| Username | – | பயனர் பெயர் |
| WAN – Wide Area Network | – | அகன்ற பரப்பு வலைப்பின்னல் |
| Web Directories | – | தகவல் களஞ்சிய இணையத்தளம் |
| Web Portal | – | இணையத்தளத் தொகுப்பு |
| Web pages | – | வலைப்பக்கங்கள் |
| Website | – | வலைத்தளம் / இணையத்தளம் |
| WhatsApp | – | புலனம்/கட்செவி |
| WIFI | – | அருகலை |
| Word Processor | – | சொல்லாளர்/சொற்செயலி |
| World Wide Web – WWW | – | உலகளாவிய வலை |
| Yahoo | – | யாகூ |
| Zip File | – | சிப்பம்/குறுக்கக்கோப்பு |

# கண்ணாடி

9DXQHI

## விளக்கம் கண்டு விடை தருக

1. இது இணையத்தில் நமக்குத் தேவையானவற்றைத் தேடித்தரும் செயலைச் செய்கிறது. _____________________.

2. தமிழில் அச்சிடப்பட்ட முதல்நூலாகக் கருதப்படும் நூல் இது. __________.

3. கணினியில் எழுத்துகளை உள்ளீடு செய்யும் வரிவடிவங்கள் இவ்வாறு அழைக்கப்படுகின்றன. ________________.

4. இவை கணினியில் எளிமையாகத் தமிழைத் தட்டச்சு செய்யப் பயன்படுகின்றன. _____

5. இந்தியாவில் முதன் முதலாக அச்சில் ஏறிய மொழி என்று இதனைச்சொல்வர்_______.

## சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக

6. பத்துப்பாட்டினைப் பதிப்பித்தவர்

   அ) உ.வே. சாமிநாதர்     ஆ) சி.வை. தாமோதரனார்

   இ) ஆறுமுகநாவலர்     ஈ) வ.உ. சிதம்பரனார்

7. கையெழுத்தை மின்வரிகளாக மாற்றித்தரும் செயலி

   அ) விசைப்பலகை   ஆ) கையெழுத்து உணரி   இ) சொற்செயலி   ஈ) பேச்சுரை மாற்றி

8. வலைப்பூவினை உருவாக்க நாம் முதலில் தொடங்க வேண்டியது

   அ) மின்னஞ்சல் கணக்கு   ஆ) பயனர் கணக்கு   இ) முகநூல் கணக்கு   ஈ) வலைப்பூ கணக்கு

9. இணையவெளியில் வழங்கப்படும் நமக்கான கட்டணமில்லா ஊடகக்களம்.

   அ) புலனம்   ஆ) மின்னஞ்சல்   இ) முகநூல்   ஈ) வலைப்பூ

10. இந்தியப் பல்கலைக்கழக மானியக்குழுவினால் ஏற்றுக் கொள்ளப்பட்ட இணைய இதழ்

    அ) திண்ணை   ஆ) பதிவுகள்   இ) வார்ப்பு   ஈ) கீற்று

## பொருந்தாத இணையைக் கண்டறிக

11. அ) தேடுபொறி - உலவி     ஆ) தரவிறக்கம் - தரவேற்றம்

    இ) வருடி - தரவு     ஈ) இணக்கி – அருகலை

12. அ) எழுத்துரு – ஒருங்குறி     ஆ) மோசில்லா–பிங்

    இ) தமிழ்நெட் 97 – தமிழ் 99     ஈ) விக்கிப்பீடியா– விக்கிமீடியா

### சரியா? தவறா?

13. பின்வரும் கூற்றுகளில் சரியானவற்றைச் சுட்டுக.

**இணைய நிருவாகம்,**

1. இணையத்திற்கெனத் தனி நிருவாக அமைப்பு ஏதும் இல்லை.
2. இணையக் கூட்டமைப்பு என்பது, பல நிறுவனங்கள் பங்கு வகிக்கும் ஒரு நிறுவனம்.
3. கூகுள் என்னும் நிறுவனம், இணைய முகவரிப் பதிவை நிருவகிக்கிறது.
4. கூகுள், ஒரே முகவரி இருவருக்குக் கொடுக்கப்படாமல் இருப்பதை உறுதி செய்கிறது.

அ) 1, 2 ஆ) 2, 3 இ) 3, 4 ஈ) 1, 4

14. பின்வரும் கூற்றுகளில் தவறானவற்றைச் சுட்டுக.

**கையெழுத்து உணரி,**

1. நம் கையெழுத்தை மின்வரிகளாக மாற்றும் தொழில்நுட்பமாகும்.
2. இதில் கையால் எழுதினால் அவற்றை உடனடியாக மின்வரி (Digital text) களாகப் பெறமுடியும்.
3. கணினி, செல்பேசியில் கூகுள் வழங்கும் கையெழுத்து உள்ளீடு சிறப்பாகச் செயல்படவில்லை.
4. தட்டச்சுச் செய்யத் தெரிந்தவர்கள் கணினியை எளிதாகப் பயன்படுத்த இம்மென்பொருள் உதவுகின்றது.

அ) 1, 2 ஆ) 2, 3 இ) 3, 4 ஈ) 1, 4

### கூற்றும் காரணமும்

15. சரியான விடையைக் கொடுக்கப்பட்டுள்ள குறியீடுகளிலிருந்து தேர்வு செய்க.

கூற்று (கூ) : எழுத்துருக்களைக் கணினியில் பயன்படுத்த வேண்டுமானால், அம்மொழியின் ஒவ்வோர் எழுத்துக்கும் ஒவ்வோர் எண்ம மதிப்பைக் கொடுக்க வேண்டும்.

காரணம் (கா) : கணினி 0,1 ஆகிய இரும (Binary) எண்களைத்தான் புரிந்து கொள்ளும்.

அ) கூற்று சரி, காரணம் தவறு.

ஆ) காரணம், கூற்று இரண்டும் தவறு.

இ) கூற்று, காரணம் இரண்டும் சரி. ஆனால், காரணம் கூற்றுக்கான சரியான விளக்கமல்ல.

ஈ) கூற்று, காரணம் இரண்டும் சரி. காரணம், கூற்றுக்கான சரியான விளக்கம்.

16. சரியான விடையைக் கொடுக்கப்பட்டுள்ள குறியீடுகளிலிருந்து தேர்வு செய்க.

கூற்று (கூ) : உ.வே.சா அவர்கள் அரிதின்முயன்று தமிழ் இலக்கியங்களின் ஓலைச்சுவடிகளைச் சேகரித்தார்.

காரணம் (கா) : அவற்றைக் கொண்டு சுவடிச்சாலை அமைக்க விரும்பினார்.

அ) கூற்று, காரணம் இரண்டும் சரி. ஆனால், காரணம் கூற்றுக்கான சரியான விளக்கமல்ல.

ஆ) கூற்று சரி, காரணம் தவறு.

இ) காரணம், கூற்று இரண்டும் தவறு.

ஈ) கூற்று, காரணம் இரண்டும் சரி. காரணம், கூற்றுக்கான சரியான விளக்கம்.

## பொருத்துக

17. 1. இணையக்குற்றம் – அ. Skype

2. இடைமுகச்செயலி – ஆ. WIFI

3. இசுகை – இ. Interface Tool

4. அருகலை – ஈ. Cyber Crime

| | | | |
|---|---|---|---|
| அ) 1–ஈ | ஆ) 2–இ | இ) 3– அ | ஈ) 4–ஆ |
| ஆ) 1–இ | ஆ) 2–ஈ | இ) 3– அ | ஈ) 4–ஆ |
| இ) 1–அ | ஆ) 2–ஆ | இ) 3– இ | ஈ) 4–ஈ |
| ஈ) 1–ஆ | ஆ) 2–இ | இ) 3– ஈ | ஈ) 4–ஆ |

18. 1. எழுத்துரு – அ. உள்ளீட்டுக்கருவி

2. குறியேற்றம் – ஆ. மென்தமிழ்

3. விசைப்பலகை – இ. எழுத்து வரிவடிவம்

4. தமிழ்ச் சொற்செயலி – ஈ. எண்ம மதிப்பு

| | | | |
|---|---|---|---|
| அ) 1–ஈ | ஆ) 2–இ | இ) 3– அ | ஈ) 4–ஆ |
| ஆ) 1–இ | ஆ) 2–ஈ | இ) 3– அ | ஈ) 4–ஆ |
| இ) 1–அ | ஆ) 2–ஆ | இ) 3– இ | ஈ) 4–ஈ |
| ஈ) 1–ஆ | ஆ) 2–இ | இ) 3– ஈ | ஈ) 4–ஆ |

## கோடிட்ட இடத்தை நிரப்புக

19. இணையத்தில் தமிழ் இடம்பெறக் காரணமாய் இருந்தவர்_____________.

20. இந்தியாவில் இணையவழியே கல்வி வளங்களையும் வாய்ப்புகளையும் வழங்க நிறுவப்பட்ட முதல் அமைப்பாக விளங்குவது_______________.

## குறுவினா

1. இணையம் என்றால் என்ன?

2. ஆர்பா நெட் (ARPANET) உருவாக்கப் பட்டதன் நோக்கம் யாது?

3. சீரான வள இடங்காட்டி என்பது யாது?

4. இணைய முகவரி எவ்வாறு அமையும்?
5. உ.வே.சா பதிப்பித்த நூல்களைப் பட்டியலிடுக.
6. சி.வை.தாமோதரனார் பதிப்பித்த நூல்கள் யாவை?
7. எவையேனும் நான்கு தட்டச்சு இடைமுகச் செயலிகளைக் குறிப்பிடுக.
8. பேச்சுரை மாற்றி நமக்கு எவ்வாறு உதவுகிறது?
9. இணையத்தில் கிடைக்கும் மின் அகராதிகளுள் நான்கினைச் சுட்டுக.
10. மின்னஞ்சல் சேவை என்பது யாது?

## சிறுவினா

1. இணையத்தின் தோற்றம் குறித்து எழுதுக.
2. குறும்பரப்பு வலைப்பின்னல் என்பதை விளக்குக.
3. இணைய இணைப்பைப் பெறச் செய்யவேண்டியவை யாவை?
4. இணையம் எவ்வாறு இயங்குகிறது?
5. வேறுபடுத்துக: உலவி – தேடுபொறி.
6. மதுரைத்திட்டம் பற்றி எழுதுக.
7. உலகளாவிய வலைப்பின்னல்–வரையறு.
8. சொற்பிழைதிருத்தி, இலக்கணப் பிழைதிருத்தி ஆகியவை நமக்கு எவ்வகையில் உதவுகின்றன?
9. எந்திர மொழிபெயர்ப்பு குறித்து விவரி.
10. வலைப்பூ உருவாக்கத்தில் உள்ள நுட்பங்களைத் தருக

## நெடுவினா

1. இணையத்தளங்களின் வகைமைகளை விளக்குக.
2. இணையத்தில் தமிழ் இடம்பெற்ற விதத்தினை விவரி.
3. தமிழ் இணையக் கல்விக்கழகத்தின் தோற்றத்தையும் குறிக்கோளையும் எழுதுக.
4. இடைமுகச்செயலிகளின் பட்டியலைத் தருக.
5. உமக்கான வலைப்பூவை உருவாக்க நீவிர் பின்பற்றவேண்டிய படிநிலைகள் யாவை?
6. இணைய இதழ்களின் தன்மையும் போக்கும் குறித்து எழுதுக.
7. தமிழ் உள்ளீட்டுத் தொழில்நுட்பம் குறித்து விளக்குக.
8. முகநூல், புலனம், கீச்சகம் குறித்து எழுதுக.
9. இணையத்தை நீவிர் எவ்வாறு பாதுகாப்பாகப் பயன்படுத்துவீர்?
10. அன்றாட வாழ்வில் இணையப் பயன்பாடு குறித்து உம் தோழன்/ தோழிக்கு அனுப்புவதற்காக மின்னஞ்சல் ஒன்றை உருவாக்குக.

## படிப்போம் பயன்படுத்துவோம்

1. **ஏதேனும் ஓர் இடைமுகச் செயலியைப் பயன்படுத்திக் கீழ்க்காணும் உரைப்பகுதியை உன் ஆசிரியரின் துணையோடு கணினியில் பிழையில்லாமல் தட்டச்சு செய்து பழகுக.**

"பொல்லாக் கடலே! தென்னவனுக் குரிய எத்தனை ஊர்களைத் தின்றுவிட்டாய்! எத்தனை ஆறுகளைக் குடித்து விட்டாய்! எத்தனை மலைகளை விழுங்கி விட்டாய்! பழங்காலத்தில் பஃறுளி (பல்துளி) என்ற ஆறு பாண்டியனுக்கு உரியதாயிருந்ததென்று தமிழ்க் கவிதை கூறுகின்றதே! அந்த ஆற்றின் அழகைச் சங்கப் புலவராகிய நெட்டிமையார் பாடினாரே! அந்த ஆறெங்கே? அதன் பரந்த மணல் எங்கே? அவ் வாற்றைக் கொள்ளை கொண்ட உன் கொடுமையை அறிந்து, கண்ணீர் வடித்தானே எங்கள் பாண்டியன்! அன்று அவன் அழுத குரல், இன்றும் உன் காற்றின் வழி வந்து என் காதில் விழுகின்றதே! இம்மட்டோ உன் கொடுமை? எங்கள் பழந்தமிழ் நாட்டின் தென்னெல்லையாகத் திகழ்ந்த குமரியாற்றையும் குடித்து விட்டாயே! 'தமிழகத்தின் வடக்கு எல்லை திருவேங்கடம், தெற்கு எல்லை குமரியாறு' என்று பனம்பாரனார் பாடினாரே! அக் குமரியாறு எங்கே? 'தமிழ் கூறும் நல்லுலகத்தின்' எல்லையாக நின்ற அந்த ஆற்றையும் கொள்ளை கொண்டு எங்கள் வரம்பழித்து விட்டாயே! பஃறுளி யாற்றுக்கும் குமரி யாற்றுக்கும் இடையே அமைந்த நாடு நகரங்கள் எல்லாம், இருந்த இடந் தெரியாமல் உன் கொடு மையால் கரைந்து ஒழிந்தனவே! அந் நிலப்பரப்பில், அடுக்கடுக்காக உயர்ந்து ஓங்கி நின்ற குமரி என்னும் பெருமலையும் உன் பாழும் வயிற்றில் பட்டு ஒழிந்ததே! ஐயோ! நீ எங்கள் மண்ணைக்கடித்தாய்; ஆற்றைக் குடித்தாய்; மலையை முடித்தாய் இப்படி எல்லாவற்றையும் வாரி எடுத்து வயிற்றில் அடக்கும் உன்னை 'வாரி' என்று அழைப்பது சாலவும் பொருந்தும்! நீ வாரி உண்டாய்! நீங்காத வசையே கொண்டாய். உன் கொடுமையால் தமிழ் நாடு குறுகிற்று; என் உள்ளம் உருகிற்று.

2. கையெழுத்து உணரியைப் பயன்படுத்திக் கொடுக்கப்பட்ட தொடர்களை உள்ளீடு செய்க.

அ) இணையத்தளங்களைத் தகுந்த முன்னெச்சரிக்கையோடு பயன்படுத்த வேண்டும்.

ஆ) இணையத்தளங்களில் தனிப்பட்ட தகவல்கள், ஒளிப்படங்கள் போன்றவற்றைப் பதிவேற்றம் செய்வதைத் தவிர்க்க வேண்டும்.

இ) பரிசு விழுந்துள்ளது எனப் போலியாக வரும் மின்னஞ்சல்களை நம்பி ஏமாறக்கூடாது.

ஈ) தொடர்ச்சியாக நெடுநேரம் கணினியைப் பார்ப்பதைத் தவிர்க்க வேண்டும்.

3. கீழ்க்காணும் தொடர்களுக்குரிய விடைகள் கட்டங்களில் மறைந்துள்ளன. அவற்றைக் கண்டறிந்து, வட்டமிடுக.

அ) உலக அளவில் பல கணினி வலை அமைப்புகளின் கூட்டிணைப்பான பெரும் வலையமைப்பு.

ஆ) இணைய முகவரிப்பதிவை நிருவகிக்கும் அமைப்பின் பெயர்.

இ) இணையத்தில் இணைப்பைப் பெற இது தேவை.

ஈ) இஃது ஓர் உலவி.

உ) இணையத்தில் முதன்முதலில் ஏறிய இந்திய மொழி.

ஊ) உ.வே.சா. ஓலைச்சுவடியிலிருந்து பதிப்பித்த நூல்களுள் ஒன்று.

எ) தமிழைக் கணினியில் உள்ளீடு செய்ய உதவும் ஓர் உள்ளீட்டுக் கருவி.

ஏ) நாம் பேசுவதை மின்னெழுத்துகளாக மாற்றித் தருவது.

ஐ) இணையவெளியில் நமக்காக வழங்கப்படும் கட்டணமில்லா ஊடகக்களம்.

ஒ) சமூக ஊடகங்களுள் ஒன்று.

| இ | ணை | ய | ம் | வ | ஐ | லி | த | யா | கூ |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| தொ | ழி | ல் | ள | ரு | கா | ய | மி | ர் | டு |
| லை | லை | அ | த | டி | ன் | செ | ழ் | லை | வ |
| க் | க | பே | மோ | ம | ணி | மே | க | லை | இ |
| கா | ரு | ச் | சி | கை | ல | ப | ப் | சை | வி |
| ட் | அ | சு | ல் | மு | கா | பூ | உ | ல | வி |
| சி | லை | ரை | லா | க | ம் | க | ச | ச் | கீ |
| ப் | பே | மா | ப | நூ | ற | ற் | வே | தி | ப |
| ப | சி | ற் | ய | ல் | ற் | லை | மை | மி | த |
| ம் | வ | றி | ர் | றை | கு | உ | ள் | ளீ | டு |

4. உங்களுக்கான வலைப்பூவை உருவாக்கிவிட்டீர்களா? அதில், உடல்நலம் என்னும் தலைப்பில் கீழே கொடுக்கப்பட்டுள்ள குறிப்புகளைப் பதிவேற்றம் செய்யுங்கள். பதிவேற்றம் செய்வதற்குமுன் அவற்றிலுள்ள மயங்கொலிப் பிழைகளை நீக்க மறந்துவிடாதீர்கள்.

அ) மாளை வேலைகளில் கடர்க்கறையில் உளாவி வருதல் நண்று.

ஆ) நால்தோறும் மேற்கொல்லும் உடர்பயிர்ச்சி, நம் உடளை நோய் அனுகாமல் காக்கும்.

இ) நம் உடளும் மணமும் தூய்மையானால், நம் சொள்ளும் செயளும் தூய்மையாகும்.

ஈ) நோயின்றி வாள விறும்பினால், விடிவதர்க்குமுண் எலுந்து குழிர்ந்த நீரில் குழிக்க வேன்டும்.

உ) நண்கு பசித்த பிண்ணறே உனவு உன்னுதல், உடள் நளத்தைக் காக்கும்.

5. மின் அகராதியைப் பயன்படுத்திக் கீழ்க்காணும் சொற்களுக்குப் பொருளறிந்து வருக.

அ) Access ஆ) Adaptor இ) Back up ஈ) Blogger உ) chat

ஊ) Chips எ) Design ஏ) Desktop ஐ) Encoding ஒ) Encyclopedia

6. படைப்பாற்றல்

அ) மின்னஞ்சலும் கடிதமும் கற்பனையாகப் பேசுவதுபோல் ஓர் உரையாடல் எழுதுக.

ஆ) வலைப்பூ ஒன்றைத் தொடங்கி உம் படைப்புகளைப் பதிவேற்றம் செய்து பழகுக.

7. செயல்திட்டம்

அ) தமிழ் விக்கிப்பீடியாவில் கணக்கினைத் தொடங்கி உங்கள் கட்டுரைகளைப் பதிவேற்றம் செய்க.

ஆ) உம் பள்ளிக்கான வலைப்பூவின் முகப்பினை வடிவமைக்க.

## இணையச்செயல்பாடு

# சுவடிக்காட்சியகம்

**சுவடிகளைப் புரட்டிப் பார்ப்போமா !**



### படிகள்

1. கொடுக்கப்பட்டிருக்கும் உரலி / விரைவுக்குறியீட்டைப் பயன்படுத்தி tamilvu என்னும் இணையப்பக்கத்திற்குச் செல்க.
2. நூலகம் என்னும் தெரிவுக்குள் கொடுக்கப்பட்டிருக்கும் சுவடிக்காட்சியகத்துள் செல்க. அதிலுள்ள அறிமுகவுரையைச் சொடுக்கிச் சுவடிகள் குறித்த விவரங்களை அறிக.
3. இலக்கணம், சங்க இலக்கியம், காப்பியங்கள், சமய இலக்கியங்கள் முதலான தெரிவுகளுள் ஒன்றைத் தேர்வுசெய்து, அவற்றின் ஓலைச் சுவடிகளைப் பார்க்க.

   எடுத்துக்காட்டாக, இலக்கணத்தைத் தேர்வுசெய்து, அதில் தொல்காப்பியம் என்பதைச் சொடுக்கி, அதன் ஓலைச்சுவடிகளைப் பார்வையிடலாம்.

### செயல்பாட்டின் படிநிலைக்கான படங்கள் :



படி 1



படி 2




படி 3

சுவடிக்காட்சியகம் இணையப் பக்கத்தின் உரலி

http://www.tamilvu.org/ta/library-suvadi-html-suvd0swf-162081

B145_11_ADT_TM

* படங்கள் அடையாளத்திற்கு மட்டுமே.

# பார்வை நூல்கள்

## 1. கவிதையியல்

| வ. எண் | பார்வை நூல்கள் | நூலாசிரியர்கள் |
|---|---|---|
| 1 | நவீன கவிதை (கருத்தரங்கக் கட்டுரைகள்) | முனைவர் து. சீனிச்சாமி, |
| 2 | கசடதபற இதழ் தொகுப்பு | சா. கந்தசாமி, |
| 3 | மணிக்கொடி இதழ் தொகுப்பு | சிட்டி(பெ.கோ.சுந்தரராஜன்) |
| | | அசோகமித்திரன் |
| | | ப. முத்துக்குமாரசாமி |
| 4 | ஈரோடு தமிழன்பன் கவிதைகள் (தொகுதி – 4) | வ. ஜெயதேவன், |
| 5 | புதுக்கவிதை இலக்கணம் | முனைவர் இரா. இராசேந்திரன் (தேவிரா) |

## 2. கதையியல்

| வ. எண் | பார்வை நூல்கள் | நூலாசிரியர்கள் |
|---|---|---|
| 1 | கதையியல் | பூரணச்சந்திரன் |
| 2 | படைப்புக்கலை | மு. சுதந்திரமுத்து |
| 3 | நவீனத் தமிழிலக்கிய அறிமுகம் | ஜெயமோகன் |
| 4 | எழுதும் கலை | ஜெயமோகன் |
| 5 | தமிழில் முதல் சிறுகதை | மாலன் |
| 6 | நகுலன் வீட்டில் யாருமில்லை | எஸ். ராமகிருஷ்ணன் |
| 7 | போர்ஹேயின் வேதாளம் | எச். ஜி. ரசூல் |
| 8 | சார்வாகன் கதைகள் | சார்வாகன் |

## 3. அரங்கவியல்

| வ. எண் | பார்வை நூல்கள் | நூலாசிரியர்கள் |
|---|---|---|
| 1 | நாடகக் கலை | ஔவை டி. கே. சண்முகம் |
| 2 | அரங்க ஆட்டம் | அஸ்வகோஷ் |
| 3 | தமிழ் நாடகம் – நேற்று இன்று நாளை | முனைவர் மு. பகவதி |
| 4 | பேசும் கலை | கு. ஞானசம்பந்தன் |
| 5 | மேடையில் பேசலாம் வாருங்கள் | அறந்தை நாராயணன் |
| 6 | ஊருக்கு நல்லது சொல்வேன் | தமிழருவி மணியன் |

## 4. இலக்கணவியல்

| வ. எண் | பார்வை நூல்கள் | நூலாசிரியர்கள் |
|---|---|---|
| 1 | இலக்கண வரலாறு | புலவர் இரா. இளங்குமரன் |
| 2 | தொல்காப்பியத் தொடரியல் | செ. வை. சண்முகம் |
| 3 | இலக்கணத்தில் தொடரியல் கற்பிக்கும் முறைகள் | கி. நாச்சிமுத்து |
| 4 | தமிழ்மொழி வரலாறு | டாக்டர். சு. சக்திவேல் |
| 5 | தமிழ் அகராதியியல் வளர்ச்சி வரலாறு | வ. ஜெயதேவன் |
| 6 | மொழிபெயர்ப்பு நுட்பம் – ஓர் அறிமுகம் | இ. முருகையன் |

## 5. ஊடகவியல்

| வ. எண் | பார்வை நூல்கள் | நூலாசிரியர்கள் |
|---|---|---|
| 1 | இதழியல் கலை | முனைவர் மா. பா. குருசாமி |
| 2 | தமிழ் இதழ்களின் கட்டமைப்புக் கூறுகள் | முனைவர் நா. வேலம்மாள் |
| 3 | இதழியல் நுணுக்கங்கள் | முனைவர் ஸ்ரீ. குமார் |
| 4 | பத்திரிகைகளின் வகைகளும் வேறுபாடுகளும் | லேனா தமிழ்வாணன் |
| 5 | எல்லாம் தரும் இதழியல் | மா. லெனின் |
| 6 | பாரதியின் கருத்துப்படங்கள் | ஆ. இரா. வேங்கடாசலபதி |

## 6. கணித்தமிழியல்

| வ. எண் | பார்வை நூல்கள் | நூலாசிரியர்கள் |
|---|---|---|
| 1 | கணினித் தமிழ் | இல. சுந்தரம் |
| 2 | தமிழும் கணினியும் | ராதா செல்லப்பன் |
| 3 | இணையம் கற்போம் | மு. இளங்கோவன் |
| 4 | NCERT 12 ஆம் வகுப்புப் பாடநூல்<br>Graphic Design for interactive media<br>chap–12 page 135 | NCERT |
| 5 | சிங்கப்பூர் தமிழ்மொழிப் பாடத்திட்டம்<br>2012, 2014 பல்கலைக் கழகப் புகுநிலை | துரையரசன் |

## மின் தரவுகள்

- *www.tamilvu.org*
- *eluthu.com*
- *keetru.com*
- *azhiyasudargal.blogspot.in*
- *malaigal.com*
- *sirukathaigal.com*
- *azhiyasudargal.blogspot.in*
- *malaigal.com*
- *www. eegarai.net*
- *sekarsgz.blogspot.in*
- *www.tamilheritage.org*
- *ncert.nic.in/textbook*
- *www.textbookcorp.tn.nic.in*
- *ta.wikipedia.org*
- *www.projectmadurai.org*
- *www. eegarai.net*
- *http://www.kattaikkuttu.org*
- *http://ramasamyezhuthukal.in*
- *http://siragu.com*

# மேல்நிலை முதலாம் ஆண்டு – சிறப்புத் தமிழ்

## ஆக்கம்

### ஆலோசனைக் குழு

முனைவர் **இ. சுந்தரமூர்த்தி,** மேனாள் துணைவேந்தர், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

முனைவர் **சி. சுப்பிரமணியன்,** மேனாள் துணைவேந்தர், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

முனைவர் **கி. நாச்சிமுத்து,** மேனாள் பேராசிரியர், தமிழ்நாடு மத்திய பல்கலைக்கழகம், திருவாரூர்.

முனைவர் **வீ. அரசு,** மேனாள் பேராசிரியர் மற்றும் துறைத்தலைவர், சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை.

### மேலாய்வாளர் குழு

கவிஞர் **ஈரோடு தமிழன்பன்,** மேனாள் பேராசிரியர், புதுக்கல்லூரி, சென்னை.

முனைவர் **து. சீனிச்சாமி,** மேனாள் பேராசிரியர், தமிழ் இலக்கியத்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

முனைவர் **சு. பாலசுப்ரமணியன்** (பாரதி பாலன்), பேராசிரியர் மற்றும் தலைவர், தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புலம், தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகம், சென்னை.

முனைவர் **மு. சுதந்திரமுத்து,** மேனாள் இணைப்பேராசிரியர், மாநிலக் கல்லூரி, சென்னை.

### பாடநூல் வல்லுநர் குழு

முனைவர் **அ. ராமசாமி,** பேராசிரியர் மற்றும் தமிழியல் துறைத்தலைவர், மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம், திருநெல்வேலி.

முனைவர் **ச. உதயசூரியன்,** துறைத்தலைவர், அயல்நாட்டுத் தமிழ்க்கல்வித்துறை, தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

முனைவர் **ச. மகாதேவன்,** பேராசிரியர், தமிழ்த்துறைத்தலைவர், சதக்கத்துல்லா அப்பா கல்லூரி, பாளையங்கோட்டை, திருநெல்வேலி.

முனைவர் **வ. தனலட்சுமி,** துணை இயக்குநர், தமிழ் இணையக் கல்விக்கழகம், சென்னை.

முனைவர் **க.பலராமன்,** உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை, அரசினர் ஆடவர் கலைக்கல்லூரி, நந்தனம், சென்னை.

முனைவர் **ப. தாமரைக்கண்ணன்,** இணைப்பேராசிரியர், மாநிலக்கல்லூரி, சென்னை.

முனைவர் **ப. வேல்முருகன்,** தமிழ்த்துறைத்தலைவர், தமிழ்நாடு மத்திய பல்கலைக்கழகம், திருவாரூர்.

### பாடநூல் உருவாக்கக் குழு

**பா. மலர்விழி,** விரிவுரையாளர், மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம், திருவூர், திருவள்ளூர்.

**சி. பன்னீர்செல்வம்,** கல்வி மாவட்ட ஒருங்கிணைப்பாளர், அனைவருக்கும் இடைநிலைக் கல்வித்திட்டம், புதுக்கோட்டை.

**இல. சீனிவாசன்,** முதுகலை ஆசிரியர் மஜ்ஹருல் உலூம் மேல்நிலைப்பள்ளி, ஆம்பூர், வேலூர்.

**வே. நஞ்சகுமார்,** முதுகலை ஆசிரியர், அரசு மேல்நிலைப்பள்ளி, சூசுவாடி, கிருஷ்ணகிரி.

முனைவர் **ச. விஜயலட்சுமி,** முதுகலை ஆசிரியர், அரசு முஸ்லீம் மேல்நிலைப்பள்ளி, சென்னை.

**கோ. சிவகுமார்,** முதுகலை ஆசிரியர் அரசு மேல்நிலைப்பள்ளி, ஒந்தாம்பட்டி, மணப்பாறை, திருச்சி

**சி. சந்திரன்,** முதுகலை ஆசிரியர் அரசு மேல்நிலைப்பள்ளி, வரகூர், நாமக்கல்.

**லி. அலங்காரராஜ்,** முதுகலை ஆசிரியர் தூய சவேரியர் மேல்நிலைப்பள்ளி, பாளையங்கோட்டை, திருநெல்வேலி.

முனைவர் **தி. அமலோர்,** பட்டதாரி ஆசிரியர், சவராயலு நாயகர் அரசு பெண்கள் உயர்நிலைப்பள்ளி, புதுச்சேரி.

**நா. மெய்யம்மை,** முதுகலை ஆசிரியர் சிதம்பரம் மகளிர் மேல்நிலைப்பள்ளி, கோட்டையூர், சிவகங்கை.

முனைவர் **சு. துரைக்குமரன்,** பட்டதாரி ஆசிரியர், அரசு மேல்நிலைப் பள்ளி, காவிரி நகர், புதுக்கோட்டை.

**க. அம்சகோபால் முருகன்,** முதுகலை ஆசிரியர் ஸ்ரீவாகீசுவரி மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி, பொள்ளாச்சி, கோயம்புத்தூர்.

**சபா. சிலம்பரசன்,** முதுகலை ஆசிரியர், அரசு மேல்நிலைப் பள்ளி, பெரம்பலூர்.

### வல்லுநர் & ஒருங்கிணைப்பாளர்

முனைவர் **நா. அருள்முருகன்,** துணை இயக்குநர், தமிழ்நாடு பாடநூல் மற்றும் கல்வியியல் பணிகள் கழகம், சென்னை.

### ஒருங்கிணைப்பு

**ந. இராமலிங்கம்,** உதவிப் பேராசிரியர், மாநிலக் கல்வியியல் ஆராய்ச்சி மற்றும் பயிற்சி நிறுவனம், சென்னை.

### பணிவாய்ப்பு வழிகாட்டல்

முனைவர் **தே. சங்கர சரவணன்,** துணை இயக்குநர், தமிழ்நாடு பாடநூல் மற்றும் கல்வியியல் பணிகள் கழகம், சென்னை.

### கணினித் தொழில்நுட்பம்

**இரா.இரவிக்குமார்,** விரிவுரையாளர், மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம், சென்னை.

**த. ரேவதி,** பட்டதாரி ஆசிரியர், ந.உ.நி.ப. இராஜகோபாலபுரம், புதுக்கோட்டை.

### ஒருங்கிணைப்பு உதவி

**இரா. கீதாராணி,** பட்டதாரி ஆசிரியர், ஊ. ஒ. ந. நி. பள்ளி, பெரிய வேட்டுவபாளையம், பெருந்துறை , ஈரோடு.

### நூலக வளம்

**இரா. ஜெயந்தி,** நூலகர், மாநிலக் கல்வியியல் ஆராய்ச்சி மற்றும் பயிற்சி நிறுவனம், சென்னை.

### தட்டச்சர்

**அ. கணேஷ்** தட்டச்சர், மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம், குமுளூர், திருச்சி மாவட்டம்.

### விரைவுக் குறியீடு மேலாண்மைக் குழு

**R. ஜெகன்நாதன்**
இடைநிலை ஆசிரியர்
ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளி,
கணேசபுரம், போளூர், திருவண்ணாமலை மாவட்டம்.

**J.F. பால் எட்வின் ராய்**
பட்டதாரி ஆசிரியர்,
ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளி,
ராசிப்பட்டி, சேலம்.

**ம. முருகேசன்**
பட்டதாரி ஆசிரியர்,
ஊ.ஒ.ந.நி. பள்ளி, பெத்த வேளாண் கோட்டகம்,
முத்துப்பேட்டை, திருவாரூர்.

## கலை மற்றும் வடிவமைப்புக் குழு

### வரைபடம்

**க.த. காந்திராஜன்,** ஆய்வு வளமையர் தமிழ் இணையக் கல்விக்கழகம், சென்னை.

**ச. கௌதம்,** சென்னை.

**சு.வெ. கோகுலகிருஷ்ணன்,** சென்னை.

**கா. தனஸ் தீபக் ராஜன்,** அரசு கவின்கலைக் கல்லூரி, சென்னை.

**வேல்முருகன் இராதாகிருஷ்ணன்,** அரசு கவின்கலைக் கல்லூரி, சென்னை.

**பிரமோத் பாலு,** அரசு கவின்கலைக் கல்லூரி, சென்னை.

**கா. நலன் நான்சி ராஜன்,** அரசு கவின்கலைக் கல்லூரி, சென்னை.

### நன்றி

ஓவியர்கள்
டிராட்ஸ்கி மருது
இளையராஜா

### வரைகலை & வடிவமைப்பு

பழையவலம் **பா. இராமநாதன்,** சென்னை.

### In-House - QC

**கோபு ராசுவேல்,** சென்னை.

**மனோகர் இராதாகிருஷ்ணன்**

**ஜெரால்டு வில்சன், மதன்ராஜ்**

### அட்டை வடிவமைப்பு

கதிர் ஆறுமுகம்

### ஒருங்கிணைப்பு

ரமேஷ் முனிசாமி

இந்நூல் 80 ஜி.எஸ்.எம் எலிகண்ட் மேப்லித்தோ தாளில் அச்சிடப்பட்டுள்ளது
ஆப்செட் முறையில் அச்சிட்டோர்:

தமிழ்நாடு அரசு

## மேல்நிலை இரண்டாம் ஆண்டு

# சிறப்புத் தமிழ்

தமிழ்நாடு அரசு விலையில்லாப் பாடநூல் வழங்கும் திட்டத்தின்கீழ் வெளியிடப்பட்டது

**பள்ளிக் கல்வித்துறை**

தீண்டாமை மனித நேயமற்ற செயலும் பெருங்குற்றமும் ஆகும்

தமிழ்நாடு அரசு

முதல் பதிப்பு - *2019*

திருத்திய பதிப்பு - *2020*

(புதிய பாடத்திட்டத்தின்கீழ்
வெளியிடப்பட்ட நூல்)

விற்பனைக்கு அன்று

பாடநூல் உருவாக்கமும்
தொகுப்பும்

மாநிலக் கல்வியியல் ஆராய்ச்சி மற்றும்
பயிற்சி நிறுவனம்


நூல் அச்சாக்கம்

தமிழ்நாடு பாடநூல் மற்றும்
கல்வியியல் பணிகள் கழகம்
www.textbooksonline.tn.nic.in

**உலகின் தலைசிறந்த செவ்வியல் மொழியான தமிழின் படைப்புக்கலைகளையும் நவீன கணித் தமிழையும் இன்றைய இளம்தலைமுறையினருக்கு அறிமுகப்படுத்தி, அவர்தம் படைப்பார்வத்தைத் தூண்டும் கருவியாக இப்பாடநூல்**

அறிவு விளக்கேற்றும்
ஆசிரியர்களுக்கும்
ஆற்றலின் சுடர்களாம்
மாணவர்களுக்கும்

**நுழையும்முன்**
பாடப்பகுதி குறித்த அறிமுகம்

**கற்றல் நோக்கங்கள்**
பாடப்பகுதியின் இன்றியமையாத குறிக்கோள்களின் பட்டியல்

**அறிவோம் தெளிவோம்**
பாடப்பொருள் சார்ந்த புதிய செய்திகளைப் பற்றிய விளக்கம்

**படிப்போம் சுவைப்போம்**
பாடப்பொருள் சார்ந்து சுவையான செய்திகள்

**தெரியுமா?**
அரிய செய்திகள் அடங்கிய கருத்துக்கோவை

**படைப்பு முகம்**
இலக்கியப் படைப்பாளிகள் குறித்த அறிமுகம்

**கண்ணாடி**
பாடப்பொருள்சார்ந்து, தம் உள்ளம் உணர்ந்தவற்றைத் தெள்ளெனக் காட்டும் பயிற்சிக்களம்

**படிப்போம் பயன்படுத்துவோம்**
மேல்நிலைக் கல்விக்கான உயர்நிலைத் திறன்களை, வெளிப்படுத்தும் சிறப்புத்தமிழ்ப் பெட்டகம்

**இணையச் செயல்பாடுகள்**
காலத்தின் பாய்ச்சலுக்கு ஈடுகொடுக்கும் தொழில்நுட்பம்

**பாடநூலில் உள்ள விரைவுக் குறியீட்டைப் (QR Code) பயன்படுத்துவோம்! எப்படி?**

- உங்கள் திறன் பேசியில் கூகுள் playstore கொண்டு DIKSHA செயலியைப் பதிவிறக்கம் செய்து நிறுவிக்கொள்க.
- செயலியைத் திறந்தவுடன், ஸ்கேன் செய்யும் பொத்தானை அழுத்திப் பாடநூலில் உள்ள விரைவுக் குறியீடுகளை ஸ்கேன் செய்யவும்.
- திரையில் தோன்றும் கேமராவைப் பாடநூலின் QR Code அருகில் கொண்டு செல்லவும்.
- ஸ்கேன் செய்வதன் மூலம். அந்த QR Code உடன் இணைக்கப்பட்டுள்ள மின் பாடப் பகுதிகளைப் பயன்படுத்தலாம்.

# சிறப்புத்தமிழ்

## நேஷனல் லா ஸ்கூல் ஆஃப் இந்தியா யுனிவர்சிட்டி
## National Law School of India University – NLSIU



- பெங்களூருவில் உள்ள நேஷனல் லா ஸ்கூல் ஆஃப் இந்தியா யுனிவர்சிட்டி.
- இந்திய பார் கவுன்சில், கர்நாடக பார் கவுன்சில், பெங்களூரு பல்கலைக் கழகம், கர்நாடக அரசு ஆகியவற்றின் முயற்சியால் 1987ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட சட்டக் கல்வி நிறுவனம்.
- இந்தக் கல்வி நிறுவனத்தின் வேந்தர், உச்சநீதிமன்றத் தலைமை நீதிபதி. இந்திய பார் கவுன்சலின் தலைவர்தான், இக்கல்வி நிலையத்தின் பொதுக் கவுன்சில் தலைவர்.
- இங்குப் படிக்கும் மாணவர்களுக்கு, ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ், ஹார்வர்டு, யேல், கொலம்பியா, மிச்சிகன் போன்ற புகழ்பெற்ற வெளிநாட்டுப் பல்கலைக் கழகங்களில் படிக்க வாய்ப்பு உண்டு.
- படித்து முடித்த மாணவர்களுள் பலர் உயர்நீதிமன்றங்களிலும் உச்ச நீதிமன்றத்திலும் வழக்கறிஞர்களாகப் பணிபுரிகிறார்கள்.
- ஐந்து ஆண்டு ஒருங்கிணைந்த இளநிலை சட்டப்படிப்பில் மேல்நிலைக் கல்வி முடித்த மாணவர்கள் சேரலாம். கிளாட் (CLAT) நுழைவுத் தேர்வு மூலம் மாணவர்கள் சேர்க்கப்படுகிறார்கள்.
- விவரங்களுக்கு: www.nls.ac.in

## ஐ.ஐ.டி.டி.எம்.
## Indian Institute of Tourism and Travel Management – IITTM



- சுற்றுலாத் துறையில் ஆர்வம் கொண்ட மாணவர்களுக்காக, மத்திய சுற்றுலாத்துறை அமைச்சகத்தின் கீழ் இயங்கும் இந்தியன் இன்ஸ்டிட்யூட் ஆஃப் டூரிஸம் அண்ட் டிராவல் மேனேஜ்மெண்ட் (Indian Institute of Tourism and Travel Management – IITTM) கல்வி நிலையங்கள் குவாலியர், புதுதில்லி, புவனேஸ்வரம், கோவா, நெல்லூர் ஆகிய மையங்களில் செயல்பட்டு வருகின்றன.
- இங்கு பி.பி.ஏ. (Tourism and Travel) மூன்று ஆண்டு படிப்பில், மேல்நிலைக் கல்வி முடித்த மாணவர்கள் சேரலாம்.
- இப்படிப்பில் சேர விரும்பும் மாணவர்கள், நுழைவுத் தேர்வை (IGNTU – IITTM Admission Test – IIAT) எழுத வேண்டும். இந்திரா காந்தி நேஷனல் டிரைபல் யுனிவர்சிட்டியுடன் (Indira Gandhi National Tribal University) இணைந்து இந்த நுழைவுத் தேர்வு நடத்தப்படுகிறது.
- இத்தேர்வில் தகுதிபெறும் மாணவர்களுக்குக் குழு விவாதமும் நேர்காணலும் இருக்கும்.
- இந்தக் கல்வி நிலையத்தில் டூரிஸம் மற்றும் டிராவல் மேனேஜ்மெண்ட் (Tourism and Travel Management) தொடர்பான எம்பிஏ படிப்பும் உள்ளது.
- விவரங்களுக்கு : www.iittm.ac.in

## அரசு திரைப்படக் கல்லூரி
## M.G.R. Government Film and Television Institute



- சென்னையில் 1945ஆம் ஆண்டில் அடையாறு திரைப்படக் கல்லூரி தொடங்கப்பட்டது. 1959இல், இன்ஸ்டிட்யூட் ஆஃப் ஃபிலிம் டெக்னாலஜி என்று பெயர் மாறியது.
- 2006ஆம் ஆண்டில் எம்.ஜி.ஆர் அரசு திரைப்பட மற்றும் தொலைக்காட்சி பயிற்சி நிறுவனமாகப் பெயர் மாற்றப்பட்டது.
- தமிழ்நாடு திரைப்படக் கல்லூரியில் ஒளிப்பதிவு(Cinematography), டிஜிட்டல் இன்டர்மீடியட் (Digital Intermediate), ஒலிப்பதிவு (Audiography), திரைக்கதை மற்றும் இயக்கம் (Screen Play Writing and Direction), ஃபிலிம் படத்தொகுப்பு (Film Editing), அசைவூட்டல் மற்றும் காட்சி நுட்பங்கள் (Animation and Visual Effects) ஆகிய பாடப்பிரிவுகளில் நான்கு ஆண்டு இளநிலைப் பட்டப்படிப்புகளைப் படிக்கலாம்.
- இங்குப் படிக்கும் மாணவர்களுக்குத் தமிழ்நாடு இசை மற்றும் கவின்கலைப் பல்கலைக் கழகம் பட்டங்களை வழங்கும்.
- விவரங்களுக்கு : www.tn.gov.in.www.tnmfau.ac.in

# பணிவாய்ப்புகள்

## ஆசிய இதழியல் கல்லூரி (Asian College of Journalism)



தொலைக்காட்சி (Television), அச்சு ஊடகம் (Print), புதிய ஊடகம் (New Media) வானொலி (Radio) ஆகிய பிரிவுகளில் 10 மாத முதுகலைப் பட்டயப் படிப்புகள்

### முப்பருவப் பயிற்சி

#### முதல் பருவம்

தமிழ் / ஆங்கில வழி இதழியல் மாணவர்களுக்கான பொது வகுப்புகள் ஒளிபரப்பு, இணையம், அச்சு ஊடகங்கள் குறித்த அடிப்படைக் கல்வி

#### இரண்டாம் பருவம் மற்றும் மூன்றாம் பருவம்

ஆங்கிலம்/தமிழ் உள்ளிட்ட பலமொழி மாணவர்களுக்கு அவர்கள் தெரிவு செய்யும் மொழியில் கற்பிக்கப்படும் பின்வரும் 16 விருப்பப்பாடங்களில் எவையேனும் மூன்று பாடங்களைத் தெரிவு செய்து கற்கலாம்.

1 . ஒளி இதழியல் (Photo Journalism)
2 . திரைப்படம் (Cinema)
3 . விளையாட்டு (Sports)
4 . அரசியல் (Politics)
5 . கலை & பண்பாடு (Art and Culture)
6 . அடையாளங்கள் (Identities)
7 . பன்னாட்டு நிகழ்வுகள் (International issues)
8 . வணிகம் (Business)
9 . பாலினப் படிப்புகள் (Gender Studies)
10. சுற்றுச்சூழலியல் (Ecology)
11. குடியுரிமை (Citizenship)
12. நலவாழ்வு (Health)
13. அறிவியல் (Science)
14. நகர படிப்புகள் (Urban Studies)
15. பொருளாதாரம் (Economics)

### சிறப்புகள்

சார்க் நாடுகளைச் சேர்ந்த மாணவர்கள், இதழியல் கற்பதற்கென இக்கல்லூரி உருவாக்கப்பட்டது. இந்தக் கல்லூரியில் (ACJ) பயிலும் மாணவர்களுள் சிறப்பிடம் பெறும் மாணவர்கள், ஐக்கிய அரசில் (United Kingdom) உள்ள கார்டிஃப் பல்கலைக் கழகத்தில் (Cardiff University, Wales) ஓர் ஆய்வறிக்கை (dissertation) ஒப்படைத்து அந்தப் பல்கலைக் கழகம் வழங்கும் முதுகலை இதழியல் (M.A.–Journalism) பட்டத்தைப் பெறலாம்.

### சேர்க்கை முறை – மூன்று நிலை

| | | |
|---|---|---|
| முதல் நிலை | – | விண்ணப்ப பரிசீலனை |
| இரண்டாம் நிலை | – | ஆங்கில அறிவுக்கான தேர்வு<br>பொது அறிவு<br>கட்டுரைத் தாள் |
| மூன்றாம் நிலை | – | நேர்முகத் தேர்வு (சென்னையில் நடைபெறும்) |

### படிப்புதவித் தொகை

சார்க் நாடுகளைச் சார்ந்த மாணவர்களுக்கு வழங்கப்படும் SAF – மதன் ஜித்சிங் படிப்புதவித் தொகை திட்டத்தின்கீழ் 10 மாதங்கள் வழங்கப்படும் படிப்புதவித் தொகை பின்வரும் நிதிஉதவிகளை உள்ளடக்கியது.

1 . கல்விக்கட்டணம்
2 . தனது சொந்த சார்க் நாட்டுக்கான விமானக் கட்டணம்
3 . தங்கும் செலவுகள்
4 . உணவுச் செலவுகள்
5 . கைச் செலவுகள்

ஐக்கிய அரசின் (UK) வேல்ஸ் நகரிலுள்ள பல்கலைக் கழகம் இந்த முதுகலைப் பட்டத்தை அங்கீகரித்துள்ளது.

- விவரங்களுக்கு : www.asianmedia.org

## சிறப்புத்தமிழால் → சிறக்கும் திறன்கள்

### கவிதையியல்

- சங்க இலக்கியக் கவிதைகளின் செவ்வியல் தன்மையைப் போற்றும் திறன்
- அறவியல் கவிதைகள் உணர்த்தும் நன்னெறி சார்ந்த கருத்துகளைத் தம் வாழ்வில் கடைப்பிடிக்கும் திறன்
- தமிழ்க் காப்பியங்களின் அமைப்பையும் சிறப்பையும் அறிந்து பெருமிதம் கொள்ளும் திறன்
- சிற்றிலக்கியங்கள் வாயிலாகத் தமிழ்ப் பண்பாட்டைத் தெரிந்துகொள்ளும் திறன்

### கதையியல்

- வாழ்வியல் நிகழ்வுகளின் தொகுப்புகளாகப் புதினங்கள் அமைந்துள்ளதை அறிந்துகொள்ளும் திறன்
- பல்வேறு கருப்பொருள் அடிப்படையில் புதினங்கள் உருவாவதைப் புரிந்துகொள்ளும் திறன்
- புதினம் எழுதும் கலையைப் புரிந்துகொண்டு, தம் படைப்பாற்றலை வெளிப்படுத்தும் திறன்
- புதினம் எழுதுதலின் உத்திகளை அறிந்துகொண்டு, தாம் படிக்கும் புதினத்தில் பொருத்திப்பார்க்கும் திறன்
- விருதுபெற்ற தமிழ்ப் புதினங்கள், பிறமொழிப் புதினங்கள் ஆகியவற்றின் நுட்பங்களை உணர்ந்து போற்றும் திறன்

### அரங்கவியல்

- நாடகப் பயிற்சிப் பட்டறைகளில் கலந்துகொண்டு, நடிப்பாற்றலை வெளிப்படுத்தும் திறன்
- சிறந்த, கலைப்படைப்புமிக்க திரைப்படங்களை அடையாளம் காணும் திறன்
- திரைப்படக்கலையின் நுட்பங்களைப் புரிந்துகொள்ளும் திறன்
- நாடகத் தொடர்கள், திரைப்படங்கள் ஆகியவற்றின் கலைநுட்பக் கூறுகளை ஆராய்ந்தறியும் திறன்
- நாட்டார் அரங்கக் கலை வாயிலாகத் தமிழர் பண்பாட்டை அறியும் திறன்

### இலக்கணவியல்

- தமிழ், ஆங்கிலம் – தொடரமைப்புகளின் கட்டமைப்புகளைப் புரிந்துகொள்ளும் திறன்
- தமிழ், ஆங்கிலத் தொடரமைப்புகளை ஒப்பிடும் திறன்
- நடைமுறை வழக்கில், சொற்கள் உணர்த்தும் பொருண்மையை உணரும் திறன்
- சொற்பொருள் மாற்றம் நிகழ்வதற்கான சூழல்களை அறிந்துகொள்ளும் திறன்
- மொழியின் மூலகாரணமாய் அமையும் வேர்ச்சொற்களை அறிந்துகொள்ளும் திறன்
- வேர்ச்சொல் அகராதியின் இன்றியமையாமையைப் புரிந்துகொள்ளும் திறன்
- கதை, கவிதை, கட்டுரை, நாடகம் முதலான இலக்கிய வடிவங்களைத் திறனாய்வு செய்யும் திறன்
- உலக இலக்கியங்களைத் திறனாய்வு நோக்கில் விரும்பிப் படிக்கும் திறன்

### ஊடகவியல்

- மின்னணு ஊடகங்களின் வகைகளை அறிந்துகொள்ளும் திறன்
- மின்னணு ஊடகங்களில் வெளியாகும் நிகழ்ச்சிகளுள் பயன்தரத்தக்க நிகழ்ச்சிகளைப் பார்க்கும் திறன்
- வானொலி, தொலைக்காட்சி முதலிய ஊடகங்களின் உள்கட்டமைப்பைப் புரிந்துகொள்ளும் திறன்
- மின்னணு ஊடகங்களில் ஒளிபரப்புவதற்கு ஏற்றவகையில், நாடகம், கதை படைப்புகளை வெளியிடும் திறன்
- ஊடகங்களுக்குச் சட்டங்களின் பங்களிப்பை அறிந்துகொள்ளும் திறன்
- மின்னணு ஊடக ஆளுமைகளைத் தெரிந்துகொள்ளும் திறன்

### கணித்தமிழியல்

- கணினித் தொழில்நுட்பத்தில் இயற்கைமொழிச் செயலாக்கம் குறித்துப் புரிந்துகொள்ளும் திறன்
- இயற்கைமொழிச் செயலாக்கத்தின்வழியாகப் பயன்படுத்தப்படும் தொழில்நுட்பக்கருவிகளை அறிந்துகொள்ளும் திறன்
- புதிய தொழில்நுட்பங்கள்மூலம் பல வகையான செயலிகளைத் திறன்பேசியில் பயன்படுத்தி, அறிவை மேம்படுத்தும் திறன்
- மென்பொருள்களைக்கொண்டு, மின்னூல் உருவாக்கும் திறன்
- மின்னூல் உருவாக்கத் தெரிந்துகொண்டு, வேலைவாய்ப்பைப் பெறும் திறன்

# பொருளடக்கம்



LDEIQ8
*மின் நூல்*

SBPY36
*மதிப்பீடு*

B282_12_ADV_TAMIL
*இணைய வளங்கள்*

இயல் ஒன்று

# கவிதையியல்




பண்டைய கால மக்களின் தொன்மை, நாகரிகம், பண்பாடு, அம்மக்கள் பேசிய மொழியின் சிறப்பு முதலானவற்றைத் தெளிவுற விளக்கி நிற்கும் காலப்படிமங்களாக அமைபவை அம்மொழியின் இலக்கியங்களே. ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே உலகுபோற்றும் உயர்ந்த வாழ்வியல் நெறிகளோடு வாழ்ந்தவர்கள் தமிழர்கள் என்ற உண்மையைப் பறைசாற்றி நிற்பன சங்க இலக்கியங்கள்.

அச்சங்க இலக்கியங்களின் செவ்வியல் தன்மை, அறக்கவிதைகளின் இயல்பு, காப்பியங்களின் வகைமை, பக்தி இலக்கியத்தின் சால்பு, சிற்றிலக்கிய பெருமை முதலானவற்றை விளக்கி இவ்வியல் அமைகிறது. இவ்வியலைக் கற்பதன் மூலம் தமிழ்க் கவிதைகளின் உலகளாவிய தன்மை, பாடுபொருள், வடிவ ஒழுங்கு, பாவகைகள், இலக்கிய வகைமைகள் முதலானவற்றை அறிந்துகொள்ளலாம்

## கற்றல் நோக்கங்கள்

- சங்க இலக்கியங்களின் செவ்வியல் தன்மையைஅறிந்து கொள்ளுதல்.
- சமய இலக்கியங்களின் பாடுபொருள்களைப் புரிந்து கொள்ளுதல்.
- காப்பிய இலக்கணத்தையும் காப்பிய வகைகளையும் அறிந்துகொள்ளுதல்.
- சிற்றிலக்கிய வகைமைகளைத் தெரிந்து கொள்ளுதல்.
- அறவியல் இலக்கியங்கள் கூறும் கருத்துகளை நடைமுறை வாழ்வில் பயன்படுத்துதல்.
- கவிதையியல் இன்னதென்பதை அறிந்து உலகச்செவ்வியல் இலக்கியங்களோடு ஒப்பிடுதல்.
- இலக்கிய வகைமைகளைக் கண்டறியும் திறன் பெறுதல்.

## பாடப் பகுதி

- கவிதையியல்
- செவ்வியல் இலக்கியங்கள்
- அறவியல் இலக்கியங்கள்
- காப்பியங்கள்
- சமய இலக்கியங்கள்
- சிற்றிலக்கியங்கள்

இயல் ஒன்று

# கவிதையியல்

YA1DF4

கவிதை, கதை, நாடகம், கட்டுரை என்ற நான்கும் இலக்கிய வடிவங்களாக உள்ளன. இவ்வடிவங்களுக்குள் பல வகைகள் இருக்கின்றன. இவ்விலக்கியவடிவங்கள் எவ்வாறு உருவாக்கப்படுகின்றன, அவற்றிற்குள்ளிருக்கும் வகைகள் எவ்வாறு வேறுபடுகின்றன எனப் பேசுவது இலக்கியவியல் படிப்பு.

படைப்பாளன் தன் கருத்துகளை உணர்ச்சிகளோடு வெளிப்படுத்தும் வடிவம் கவிதை. பேசுபவர், எதிர் வினையாற்றுபவர் ஆகிய இருவருக்குமான உரையாடல் வடிவம் நாடகம். படைப்பாளரே அனைத்துப் பாத்திரங்களையும் இயங்கச் செய்யும் வடிவம் கதை. படைப்பாளன் தன் கருத்துகளை முன்னிலைப்படுத்தி எழுதும் வடிவம் கட்டுரை. இவ்வாறு கவிதை, நாடகம், கதை, கட்டுரை என்பனவற்றை இலக்கியவியல் வகைப்படுத்துகிறது.

இலக்கியவியல் பற்றிய பேச்சு என்பது தமிழில் செய்யுளாகவே தொடங்குகிறது. தொல்காப்பியச் செய்யுளியல் கவிதையின் வடிவம், உள்ளடக்கம், வெளிப்பாட்டு முறை என அனைத்துக் கூறுகளையும் விளக்குகிறது.

தமிழின் தொல்லிலக்கணமான தொல்காப்பியம் மூன்று அதிகாரங்களில் ஐவகை இலக்கணங்களைக் கூறுகிறது. எழுத்ததிகாரத்தில் எழுத்துகளின் ஒலி மற்றும் வரிவடிவங்களின் தோற்றம், வகை, அளவு, எழுத்துகள் சொல்லாக மாறுதல், சொற்கள் புணர்தல் போன்றவை விளக்கப்படுகின்றன. சொல்லதிகாரத்தில் சொற்களின் வகை, உருபுகள், சொற்கள் இணைந்து தொடராக மாறுதல் போன்றவை விளக்கப்படுகின்றன. இவை பெரும்பாலும் நேர்ப்பொருளைத் தரக்கூடிய பேச்சு மொழிக்கும் எழுத்து மொழிக்கும் உரியன.

பொருளதிகாரம் நேர்ப்பொருள் தரும் சொற்றொடர் பற்றிப் பேசாமல் புனைவாக உருவாக்கப்படும் சொற்றொடர்களின் மொழியையும் அதன் பொருளையும் பேசுகின்றது. தொல்காப்பியர் காலத்தில் புனைவாக உருவாக்கப்படும் மொழி, பா-ஆகவும், பாடல்-ஆகவும், பாட்டு – ஆகவும் அறியப்பட்டன. பா, பாடல், பாட்டு ஆகியவை எவ்வாறு உருவாக்கப்பட வேண்டும்? அதற்குள்ளே இடம்பெற வேண்டிய கூறுகள் எவை? அக்கூறுகளின் வழியாகக் கிடைக்கும் நுட்பங்கள் என்ன? என்பதையெல்லாம் பொருளதிகாரம் விரிவாக விளக்குகிறது. இவையே பின்னர் பாவியல் எனவும், கவிதையியல் எனவும் வரையறுக்கப்பட்டன.

செய்யுளியலில் ஒரு பாவின் உறுப்புகள் 34 என வரையறை செய்துள்ள தொல்காப்பியம் அடிகளின் அளவு, அடிவரையறை, உண்டாக்கப்படும் ஒலியளவு போன்றவற்றையும் விரிவாகப் பேசுகின்றது. அவற்றைப் பாக்களின் புறவடிவம் எனக் கொள்ளலாம். புறவடிவத்தில் உள்ள வேறுபாடுகளின் அடிப்படையில் பாக்கள் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என வகைப்படுத்தப்படுவதை இவ்வியல் வழி அறிகிறோம். இப்புறவடிவங்களின் வழியாக உருவாக்கப்படும் இலக்கிய வகைகளின் வடிவங்களை,

*பாட்டு உரை நூலே வாய்மொழி பிசியே*
*அங்கதம் முது சொல்லொடு அவ்வேழ் நிலத்தும்*
*வண்புகழ் மூவர்தண் பொழில் வரைப்பின்*

*நாற்போர் எல்லை அகத்தவர் வழங்கும்*
*யாப்பின் வழியது என்மனார் புலவர்*

*– தொல். செய்யுளியல் 1336*

என்ற நூற்பாவின் வழியாக அறியலாம். பாக்களின் புறவடிவத்தைச் செய்யுளியலில் கூறிய தொல்காப்பியர், அதன் உள்ளடக்கத்தைப் பொருளதிகாரத்தின் முதல் ஐந்து இயல்களில் கூறியுள்ளார். கவிதையை எப்படி உருவாக்குவது? எப்படி வாசிப்பது? என்பதற்கான விரிவான பதில் தொல்காப்பியத்தில் கிடைக்கிறது.




தொல்காப்பியர் போன்றே உலக அளவில் இலக்கிய வாசிப்பிற்கு வழிகாட்டும் நூலான கவிதையியலை (Poetics) எழுதியவர் அரிஸ்டாட்டில். நாடகத்தை எவ்வாறு வாசிக்கலாம்? நாடக உருவாக்கம் எவ்வாறு இருக்கவேண்டும் என்பதை இந்நூலில் விளக்கியுள்ளார்.

ஒரு பாவில் அல்லது கவிதையில் மூன்று கூறுகள் இடம்பெறுதல் சிறப்பு. அவை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்பன. இம்மூன்றில் உரிப்பொருள் முக்கியமானது என்பதை வலியுறுத்த,

*முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே*
*நுவலுங்காலை முறை சிறந்தனவே*
*பாடலுள் பயின்றவை நாடும் காலை*

*– அகத்திணையியல் 3*

என்ற நூற்பாவைத் தொல்காப்பியர் எழுதியுள்ளார்.

தன் மனத்திற்குள் தோன்றும் அகநிலைப்பட்ட புணர்தல், இருத்தல், இரங்கல், ஊடல், பிரிதல், ஒருதலைக்காமம், பொருந்தாக்காமம் ஆகிய உணர்வுகளை உரிப்பொருளாகக் கொண்டு அகக்கவிதைகள் எழுதப்படுகின்றன. இவற்றை அகத்திணைகள் எனவும் இதற்கு மாறாக புறவாழ்க்கை குறித்து எழுதப்படுவனவற்றைப் புறக்கவிதைகள் எனவும் தொல்காப்பியர் வரையறுத்துள்ளார்.

முதற்பொருள் என்பது நிலமும் பொழுதும் (Space and Time). இலக்கிய உருவாக்கத்தை நாடகத்தின் வழியாக விளக்கும் அரிஸ்டாட்டில் இவ்விரண்டையும் மையப்படுத்துகிறார். பாத்திரங்களையும் அவற்றின் செயல்களையும் முதற்பொருளை மையப்படுத்தியே அமைத்துள்ளார். காலம், இடம், பாத்திரங்கள் ஆகிய மூவோர்மைகள் (Three unities) இலக்கியத்தின் அடிப்படைக் கூறுகள் என்பது அரிஸ்டாட்டிலின் வரையறை. இம்மூன்றிற்கும் இடையேயுள்ள வினையோர்மைகள் பற்றிய இக்கோட்பாடே உலக இலக்கியத்தின் அடிப்படை. இவர் கூறிய பாத்திர முரண் சார்ந்த தொடக்கம், சிக்கல், வளர்ச்சி, உச்சநிலை, வீழ்ச்சி, முடிவு என அமையும் நாடக வடிவம் சிறந்த நாடக வடிவமாக உலகம் முழுவதும் போற்றப்படுகிறது.



அரிஸ்டாட்டில்

வடிவம் பற்றிய விரிவான கருத்துகளைச் சொல்லும் தொல்காப்பியரும் அரிஸ்டாட்டிலும் உள்ளடக்கத்தைப் பற்றி விரிவாகப் பேசவில்லை. ஒவ்வொரு மனிதனின் வெளிப்பாடும் புரிதலும் வெவ்வேறாக இருக்கும் என்பதால் உள்ளடக்கத்தை வரையறை செய்யும் முயற்சியை இருவருமே செய்யவில்லை. தொல்காப்பியரின் கவிதையியல் தந்துள்ள மரபைப் பின்பற்றித் தமிழில் ஒவ்வொரு காலகட்டத்திலும் கவிதைகள் எழுதப்பட்டன.

தமிழ்ச் செவ்வியல் கவிதைகளில், புறக்கவிதைகளின் தொடர்ச்சியாக அறவியல் கவிதைகளை வாசிக்கலாம்; விளக்கம் கூறலாம். அதேபோல அகக்கவிதைகளின் வளர்ச்சியாகத் தமிழில் தோன்றிய பக்திக்கவிதை வடிவத்தைச் சொல்லலாம். புற இலக்கியத்தில் கவிஞர், கேட்பவர் தம் எதிரே இருப்பதாக நினைத்துக்கொண்டு தம் கருத்துகளைக் கூறுகிறார். கணியன்பூங்குன்றனாரின் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற கவிதையின் மூலம் இதனை அறியலாம். அந்நோக்கத்தின் அடிப்படையிலேயே திருக்குறள், நாலடியார், பழமொழிநானூறு, இன்னாநாற்பது, இனியவை நாற்பது, திரிகடுகம், சிறுபஞ்சமூலம் போன்ற நூல்களும் அமைந்திருப்பதைக் காணலாம்.

அகக்கவிதைகளில் தலைவியோ, தலைவனோ தனது காதலை ஏற்கும்படி சொல்லும் நோக்கம் வெளிப்படும். ஆனால், பக்திக்கவிதைகளில் தனது வேண்டுதலை ஏற்று அருள் புரியும்படி, இரக்கம் கொள்ளும்படி கெஞ்சும், இரங்கும் மொழிப் பயன்பாடுகள் வடிவம் கொள்வதைக் காணலாம்.

பக்திக்கவிதைகளை அடுத்து அரசர்களின் அல்லது கடவுளின் பெருமைகளைப் பாடும் சிற்றிலக்கிய வடிவங்களைத் தமிழ் இலக்கியப்பரப்பில் நாம் காணலாம். அவற்றின் வடிவங்கள்கூட, புறக்கவிதை வடிவங்களான பாடாண்திணை மற்றும் காஞ்சித்திணைப் பாடல் வடிவங்களைக் கொண்டிருக்கின்றன. எனவே தொல்காப்பியக் கவிதை மரபு பிற்காலக்கவிதைகளின் மரபாகவும் இருந்தது என்பதைப் புரிந்துகொள்வது முதன்மையான இலக்கியவியல் அறிவாகும்.

## அறிவோம் தெளிவோம்

**தொல்காப்பியம் கூறும் செய்யுள் உறுப்புகள் –34**

| | | | |
|---|---|---|---|
| மாத்திரை | நோக்கு | பயன் | அழகு |
| எழுத்து | பா | மெய்ப்பாடு | தொன்மை |
| அசை | அளவு | எச்சம் | தோல் |
| சீர் | திணை | முன்னம் | விருந்து |
| அடி | கைகோள் | பொருள் | இயைபு |
| யாப்பு | கூற்று | துறை | புலன் |
| மரபு | கேட்போர் | மாட்டு | இழைபு |
| தூக்கு | களன் | வண்ணம் | ---- |
| தொடை | காலம் | அம்மை | ---- |

# செவ்வியல் இலக்கியங்கள்

## செவ்வியல் அறிமுகம்

உலகளவில் 'செவ்வியல்' என்ற பொருளில் 'கிளாசிசம்' (classism) என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது. இதன் மூலச்சொல்லாக 'கிளாசிகஸ்' (Classicus) என்ற இலத்தீன் சொல் உள்ளது. தமிழில் செவ்வியல் என்பதன் மூலச்சொல் 'செம்மை' என்பதாகும். செம்மை, இயல் என்ற இரு சொற்கள் இணைந்து செவ்வியல் என்ற சொல் உருவானது. செம்மை என்பதற்குச் செப்பம், செவ்வை, செவ்வி, நற்சீரடைதல், ஒழுங்குபடுத்துதல், பண்படுத்துதல் என்றெல்லாம் பொருள்கொள்ளலாம்.

தொன்மை, பிறமொழித்தாக்கமின்மை, தூய்மை, தனித்தன்மை, இலக்கிய வளம், இலக்கணச் சிறப்பு, பொதுமைப்பண்பு, நடுவு நிலைமை, பண்பாடு, பட்டறிவு வெளிப்பாடு, உயர்சிந்தனை வெளிப்பாடு, மொழிக்கோட்பாடு போன்ற தகுதிக் கோட்பாடுகளைச் செவ்வியலுக்கான தன்மைகளாக அறிஞர்கள் வரையறுத்துள்ளனர்.

## செவ்வியல் இலக்கியங்கள்

பழைமையும் இலக்கிய இலக்கணப் பாரம்பரியமும் உள்ள மொழிகளே செவ்வியல் மொழிகள். செவ்வியல் இலக்கியங்களைப் பெற்றிருக்கும் பழைமையான மொழிகளைச் செவ்வியல் மொழிகள் என்று கூறலாம்.

ஒருமொழி நிலைத்து நிற்பதற்கு அதன் பழைமையும் வளமையும் மட்டும் போதாது. அம்மொழி பேச்சு மொழியாக, எழுத்து மொழியாக, ஆட்சி மொழியாக, நீதிமன்ற மொழியாக, பயிற்று மொழியாக நிலை பெற்றிடல் வேண்டும். இலக்கிய வளம், இலக்கண அரண், மிகுந்த சொல்வளம், வரலாற்றுப் பின்னணி, தனித்தியங்கும் மாண்பு, காலத்திற்கேற்ற புதுமை எனப் பல வகைகளிலும் சிறப்புப் பெற்றிருத்தல் வேண்டும். தமிழுக்கு இவை அனைத்தும் பொருந்தும்.

எழுத்து உருவான பின்னரே ஒரு மொழி முழுமை அடைகிறது. அதன் பின்னரே அது வளர்ந்து செழுமையுற்றுச் செவ்வியல் இலக்கியங்களைப் படைக்கும் திறன் பெறுகிறது. செவ்வியல் இலக்கியங்களைப் படைக்க இன்றியமையாதது, எழுத்து வடிவமே. அவற்றோடு அரசியல், பொருளாதாரம், வணிகம், தொழில், கலை, பண்பாடு ஆகிய பல துறைகளிலும் உயர் வளர்ச்சியை எட்டிய சமூகத்திலிருந்துதான் செவ்வியல் இலக்கியங்கள் தோன்றுகின்றன என்பது சான்றோர் கூற்று. தமிழ், சீனம், சமஸ்கிருதம், இலத்தீன், ஹீப்ரு, கிரேக்கம் போன்ற செவ்வியல் மொழிகள் அனைத்தும் எழுத்து வடிவத்தைப் பெற்ற பின்னரே செவ்வியல் இலக்கியங்களை உருவாக்கின.

## செவ்வியல் இலக்கியங்களின் காலகட்டம்

கிரேக்க மொழியின் செவ்வியல் இலக்கியக் காலகட்டம் என்பது கி.மு. (பொ.ஆ.மு.) 5ஆம் நூற்றாண்டு முதல் 4ஆம் நூற்றாண்டு வரையாகும். இலத்தீன் மொழியின் செவ்வியல் இலக்கியக் காலகட்டம் என்பது கி.மு.(பொ.ஆ.மு.) 1ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. (பொ.ஆ.) 2ஆம் நூற்றாண்டு வரையிலான கால கட்டமாகும்.

சீன மொழியின் செவ்வியல் இலக்கிய காலகட்டம் என்பது கி.மு. 8ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 3ஆம் நூற்றாண்டு வரையிலான காலகட்டமாகும். சமஸ்கிருத மொழியின் செவ்வியல் இலக்கியக் காலகட்டம் என்பது கி.மு. 4ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 8ஆம் நூற்றாண்டு வரையிலான காலமாகும்.

## தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள்

உலக மொழியியல் அறிஞர்கள் சங்ககால இலக்கியங்களைச் செவ்வியல் இலக்கியங்களாக ஏற்றுக்கொண்டுள்ளனர். சங்க இலக்கியங்களின் காலம் கி.மு 6ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 2 ஆம் நூற்றாண்டு வரை என்பர். சங்கச் செவ்வியல் காலத் தமிழ்ச்

சமூகம், பல துறைகளிலும் உயர் வளர்ச்சி அடைந்த ஒரு சமூகமாக இருந்துள்ளது. இக்காரணங்களால் தமிழில் உலகளாவிய உயர் மனித விழுமியங்களைக் கொண்ட செவ்வியல் இலக்கியங்களைப் படைத்திருக்க இயலும்.

தனித்தன்மை, தூயநிலை, செப்பமான ஒழுங்கு, சிறப்பான பொருள் புலப்பாடு எனப் போற்றத்தகுந்த பண்புகள் எல்லாம் நிறைந்திருந்ததால் தமிழைச் செந்தமிழ் என்றும் தமிழ் இலக்கியங்களைச் செவ்வியல் இலக்கியங்கள் என்றும் அழைத்தனர்.

### சங்க இலக்கியம்

தமிழின் செவ்வியல் தன்மைக்குச் சான்றாக சங்க இலக்கியங்கள் திகழ்கின்றன. பாட்டும் தொகையுமான பதினெட்டு நூல்களும் சங்க இலக்கியங்கள் என அறியப்படுகின்றன. பாட்டு என்பது பத்துப்பாட்டையும், தொகை என்பது எட்டுத்தொகையையும் குறிக்கும். இவற்றைப் பதினெண்மேற்கணக்கு நூல்கள் என்பர். இவை தமிழ்மக்களின் அக மற்றும் புற வாழ்வியல் கூறுகளை அறிய உதவுகின்றன.

சங்கப்பாடல்களின் எண்ணிக்கை 2381. இவற்றுள் அகத்திணைப்பாடல்கள் 1862. புறத்திணைப்பாடல்கள் 519. சங்கப்புலவர் எண்ணிக்கை 473. பெண்பாற்புலவர்களின் எண்ணிக்கை 49. இவர்களுள் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னும் ஒரே பாடலால் உலப்புகழ் பெற்ற கணியன் பூங்குன்றனாரும் உண்டு; 235 பாடல்களைப் பாடி முதலிடத்தைப் பெறும் கபிலரும் உண்டு. அரசர், வணிகர், மருத்துவர், கணியர் போன்று சமூகத்தின் பல்வேறு அங்கத்தினரும் நல்லிசைப்புலவராய் விளங்கினர். பெண்பாற் புலவர்களும் தனிச்சிறப்புப் பெற்றிருந்தனர். இயற்பெயரன்றி, பாடலில் இடம்பெற்ற தொடர்களால் பெயர் பெற்ற கவிஞர்களும் உண்டு. சங்ககாலப் புலவர்களைச் 'சான்றோர்' எனச்சுட்டுவது தமிழ் மரபு.




### பழந்தமிழர் வாழ்வியல்

உலகின் மிகப்பழைமையான செவ்வியல்மொழி இலக்கியங்களின் தொன்மைக்கும் செறிவிற்கும் சற்றும் குறைவில்லாத வளமுடையவை சங்க இலக்கியங்கள். பாடுபொருளாலும் இலக்கிய வகைமையாலும் திணை, துறை



அமைப்புகளாலும் சங்கத் தமிழ்க் கவிதைகள் மேலோங்கி நிற்கின்றன. பழந்தமிழர், அகவாழ்விலும் புறவாழ்விலும், ஓர் ஒழுங்குமுறைக்குட்பட்டு வாழ்ந்தனர் என்பதைச் சங்கப்பாடல்கள் தெளிவுறுத்துகின்றன. சங்ககாலச் சமுதாயம் இயற்கை சார்ந்த சமுதாயமாக விளங்கியது. காடுகள், மலைகள், கழனிகள், கடற்கரைப் பகுதிகள் மக்கள் வாழிடங்களாக இருந்தன. இதனால், சங்ககாலத்தில் திணைநிலைச்சமூகம் நிலைபெற்றிருந்ததை அறியலாம்.

சங்க இலக்கியங்கள் பொதுமைச்சிறப்பும் புதுமைச்சிறப்பும் மிக்கவை. பொருட்சிறப்பும், கருத்துச் செறிவும், சொல்லினிமையும் வாய்ந்தவை. இவை அகத்திணை, புறத்திணை எனப் பகுக்கப்பெற்று, பெரும்பாலும் காதல், வீரம் குறித்துப் பேசின. இருப்பினும் இயற்கை, பிரிவாற்றாமை, விருந்தோம்பல், கொடை, அரசியல், கையறுநிலை, வணிகம், வேளாண்மை,விளையாட்டு போன்றவற்றையும் புலப்படுத்தத் தவறவில்லை.

### இயற்கை

மானிட வாழ்வே சங்க இலக்கியத்தின் மையம். இயற்கை அதற்குப் பின்னணியாக இடம்பெறுகின்றது. சங்க அகப்புறப் பாடல்கள் இயற்கைக் காட்சிகளை வருணனையாக, உள்ளுறையாக மனித வாழ்வியலோடு இணைத்துப் பாடுகின்றன. ஐம்புலன்களுக்கும் விருந்தாக அமையும் இயற்கையை மக்களின் காதல்,வீரம் இன்னபிற வாழ்வியல் கூறுகளோடு இணைத்துப் பாடுவது சங்க இலக்கிய மரபு. எனவே சங்க இலக்கியக் காலத்தை 'இயற்கை நெறிக்காலம்' எனலாம்.

*பைந்தினை யுணங்கல் செம்பூழ் கவரும்*
*வன்புல நாடற் றரீஇய வலனேர்*
*பங்க ணிருவிசும் பதிர வேறொடு*
*பெயறொ டங்கின்றே வானங்*
*காண்குவம் வம்மோ பூங்க ணோயே*

*– ஐங்குறுநூறு*

ஆசிரியர்: பேயனார்

திணை: முல்லை

கூற்று: தோழி கூற்று

பாடல் பொருள்: காய்ந்துகொண்டிருக்கும் பசிய தினையைச் செம்பூழ்ப் பறவைகள் கவர்ந்து செல்லும் கடினமான நிலப்பகுதியைக் கொண்ட நாட்டினை உடையவன் நம் தலைவன். அவனை நம்மிடம் கொண்டுவந்து சேர்ப்பதற்காக, வலப்பக்கமாய் உயர்ந்து அழகிய பரப்பைக் கொண்ட பெரிய வானம் அதிரும்படியாக, மேகங்கள் இடியுடன் மழையைத் தொடங்கிவிட்டன. ஆதலால், பூப்போன்ற அழகிய கண்ணை உடையவளே, காண்போம்! வா! எனத் தோழி தலைவியை அழைக்கிறாள்.

## காதல்

பண்டைத் தமிழ்மக்களின் அன்புள்ளத்தோடு கலந்த ஓர் அகவுறுப்பாகவே புறவியற்கை விளங்கிற்று. அவ்வியற்கை, பழந்தமிழ் மக்களின் எண்ணங்களிலும் உணர்ச்சிகளிலும் தாக்கத்தை ஏற்படுத்தியதை அகத்திணைப் பாடல்களில் காணலாம். ஒவ்வோர் அகத்துறையும் இயற்கையோடு உறவுடையது.

*நிலம் தொட்டு புகாஅர் வானம் ஏறார்*
*விலங்கு இரு முந்நீர் காலின் செல்லார்*
*நாட்டின் நாட்டின் ஊரின் ஊரின்*
*குடிமுறை குடிமுறை தேரின்*
*கெடுநரும் உளரோ நம் காதலோரே*

*– குறுந்தொகை*

ஆசிரியர் : வெள்ளிவீதியார்

திணை : பாலை

கூற்று : தோழி கூற்று

பாடல் பொருள்: நிலத்தைத் தோண்டி அதனுள் புகமாட்டார்; வானத்தில் ஏறமாட்டார்; குறுக்கிடும் பெரிய கடலில் காலால் நடந்து செல்லார்; நாடுகள்தோறும், ஊர்கள்தோறும் குடிமுறைகள்தோறும் தேடிப்பார்த்தால் காணாமற்போவாரோ நம் காதலர். ஆகையால் வருந்தாதே எனத் தோழி தலைவியிடம் கூறுகிறாள்.

## பிரிவாற்றாமை

பழந்தமிழர், திருமணத்திற்கு முந்தைய காதல் வாழ்வை, 'களவொழுக்கம்' என்றும், திருமணத்திற்குப் பிறகு அவர்களின் இல்லற வாழ்வை, 'கற்பொழுக்கமென்றும்' போற்றியுள்ளனர். களவொழுக்கத்தின் போது, தலைவனைப் பிரிந்த தலைவி பிரிவாற்றாமையால் வருந்தியிருப்பாள். அவளின் பிரிவுத்துயரத்தைப் போக்கும் மருந்தாகப் பாங்கி விளங்குகிறாள். தலைவிக்குப் பாங்கி போல தலைவனுக்குப் பாங்கன் இருப்பான்.

*யானே ஈண்டையேனே என் நலனே*
*ஏனல் காவலர் கவண் ஒலி வெரீஇக்*
*கான யானை கை விடு பசும் கழை*
*மீன் எறி தூண்டிலின் நிவக்கும்*
*கானக நாடனொடு ஆண்டு ஒழிந்தன்றே!*

*– குறுந்தொகை*

ஆசிரியர் : மீனெறிதூண்டிலார்

திணை : பாலை

கூற்று : தலைவி கூற்று

பாடல் பொருள்: வினைமேற்சென்ற தலைவனின் பிரிவாற்றாத தலைவி, "காட்டு யானையானது தான் வளைத்த மூங்கிலைத் தினைப்புனம் காக்கும் காவலர்களின் கவண் ஒலிக்குப் பயந்து விட்டுவிடுகின்றது. அந்த மூங்கிலானது தூண்டில் போட்டு மீன் பிடிப்பவன், மீன் சிக்கியவுடன் தூண்டிலை விரைந்து மேலே தூக்கினாற்போலச் சட்டென்று மேலே போகின்றது. இத்தகைய காட்சியையுடைய மலைநாடனொடு நான் நட்பு கொண்டதால் இன்று நலிவடைகிறேன். அவன் என்னை வரையாது காலம் தாழ்த்துவதால்,



இங்கு நானும் என்னுடைய நலன் அங்குமாக இருக்கும் நிலை நேர்ந்துவிட்டது" எனத் தன்தோழியிடம் கூறுவதாக அமைந்த மீனெறிதூண்டிலாரின் குறுந்தொகைப் பாடல்வழி களவு வாழ்வின் பிரிவாற்றாமையை உணரலாம்.

## விளையாட்டு

தொல்காப்பியர் கூறும் உவகை என்னும் மெய்ப்பாடு தோன்றுவதற்குரிய நால் வகைக் களங்களுள் ஒன்று விளையாட்டு. இதிலிருந்து மன மகிழ்ச்சியை விளைவிக்கும் ஒரு செயலே விளையாட்டு எனக் கருதலாம். விளையாட்டுகளில் ஈடுபடாமல் வீட்டினுள்ளே இருந்தால் உடல்நலமும் மனநலமும் கெடும். வீட்டினுள்ளே அடைந்துகிடப்பது அறமன்று என்பதை நற்றிணைப் பாடல் உணர்த்துகிறது.

*விளையாடு ஆயமொடு ஓரை ஆடாது*
*இளையோர் இல்லிடத்து இற்செறிந் திருத்தல்*
*அறனும் அன்றே ஆக்கமும் தேய்ம் என*
*குறுநுரை சுமந்து நறுமலர் உந்தி*
*பொங்கி வரு புது நீர் நெஞ்சு உண ஆடுகம்*
*வல்லிதின் வணங்கிச் சொல்லுநர்ப் பெறினே*
*செல்க என விடுநள்மன்கொல்லோ எல் உமிழ்ந்து*
*உரவு உரும் உரறும் அரை இருள் நடு நாள்*
*கொடி நுடங்கு இலங்கின மின்னி*
*ஆடு மழை இறுத்தன்று அவர் கோடு உயர் குன்றே.*

*– நற்றிணை*

ஆசிரியர்: பிரான்சாத்தனார்

திணை: குறிஞ்சி

கூற்று: தோழி கூற்று.

பாடல்பொருள்: தலைவனின் உச்சி குன்றில் ஒளியை உமிழ்ந்து வலிய இடி முழங்கும் பாதி இரவாகிய நடுயாமத்தில், கொடிபோல் வளைந்தனவாய் விளங்கும் மின்னலோடு அசைகின்ற மேகங்கள் தங்கியிருத்தலின், அம்மலையிலிருந்து புதுநீர் பொங்கிப் பெருகி வரும். அந்நீரில் விளையாட்டுத் தோழியருடன் ஓரை என்னும் ஆட்டத்தை ஆடாமல் இளமங்கையர் தமது





## அறிவோம் தெளிவோம்

**ஓரையாடுதல்:** ஓரை என்பது சங்ககால இளம் மகளிர் விளையாடிய விளையாட்டுகளில் ஒன்றாகும். ஓரை என்றால் 'ஒலி எழுப்புதல்' என்று பொருள். இது ஆரவாரம் எழுமாறு ஆடப்படும் ஆட்டங்களைக் குறித்ததாகக் கொள்ளலாம். கடலலை பாயும் மணலிலும், ஆற்று மணலிலும், சேற்று நிலத்திலும், முற்றத்தில் பரப்பப்பட்ட மணலிலும் இது விளையாடப்பட்டதைச் சங்கப்பாடல்கள் தெரிவிக்கின்றன.

வீடுகளில் அடைந்துகிடத்தல் அறநெறி ஆகாது. வீட்டின் செல்வமும் குன்றும். அதனால் சிறிய நுரைகளைச் சுமந்துகொண்டு நறிய மலர்களை வீசிக்கொண்டு பொங்கி வருகின்ற புதுநீரில் மனம் மகிழ ஆடுவோம். இதனை விரைந்து சென்று அன்னையிடம் சொன்னால் செல்லுங்கள் என்று அனுப்பிவிடுவாளோ? இவ்வாறு தோழியானவள், தலைவி இற்செறிக்கப்பட்டதைத் தலைவனுக்கு உணர்த்துகிறாள்.

### கொடை

சங்ககாலத்தில், பொருள் உடையவர்கள் அதன் தேவைகருதி வேண்டி வருவோருக்குப் பயன் கருதாது வாரி வழங்கும் கொடைத்தன்மையுடையோராய் விளங்கினர். இரப்போர்க்கு வரையாது கொடுப்பதே பிறவிப்பயனாகக் கருதி வாழ்ந்தனர். சங்கக்கவிதைகள் வழி இக்கொடைப்பாங்கு சிறந்து விளங்கிய பான்மையை நாம் அறியலாம். பொருநராற்றுப்படையில் கரிகால் பெருவளத்தானின் கொடைச்சிறப்பைக் கூறவந்த முடத்தாமக்கண்ணியார் பின்வரும் பாடல்வழிப் புலப்படுத்துகிறார்.

*ஈற்றா விருப்பிற் போற்றுபு நோக்கிநும்*
*கையது கேளா அளவை ஒய்யெனப்*
*பாசி வேரின் மாசொடு குறைந்த*
*துன்னற் சிதாஅர் நீக்கித் தூய*
*கொட்டைக் கரைய பட்டுடை நல்கிப்*
*பெறலருங் கலத்திற் பெட்டாங் குண்கெனப்*
*பூக்கமழ் தேறல் வாக்குபு தரத்தர*
*வைகல் வைகல் கைகவி பருகி*
*எரியகைந் தன்ன வேடில் தாமரை*
*சுரியிரும் பித்தை பொலியச் சூட்டி.*
*நூலின் வலவா நுணங்கரில் மாலை*
*வாலொளி முத்தமொடு பாடினி யணியக்*
*கோட்டிற் செய்த கொடுஞ்சி நெடுந்தேர்*
*ஊட்டுளை துயல்வர வோரி நுடங்க*
*பால்புரை புரவி நால்குடன் பூட்டிக்*
*காலி னேழடிப் பின்சென்று கோலின்*
*தாறுகளைந் தேறென் றேற்றி வீறுபெறு*
*பேரியாழ் முறையுழிக் கழிப்பி நீர்வாய்த்*
*தண்பணை தழீஇய தளரா விருக்கை*
*நன்பல் லூர நாட்டொடு நன்பல்.*
*வெரூஉப்பறை நுவலும் பரூஉப்பெருந் தடக்கை*
*வெருவரு செலவின் வெகுளி வேழம்*
*தரவிடைத் தங்கலோ விலனே வரவிடைப்*
*பெற்றவை பிறர்பிறர்க் கார்த்தித் தெற்றெனச்*
*செலவுகடைக் கூட்டுதி ராயிற் பலபுலந்து*
*நில்லா வுலகத்து நிலைமை தூக்கிச்*
*செல்கென விடுக்குவ னல்லன்*

– பொருநராற்றுப்படை

**பாடல்பொருள்:** பொருநர்களே! கரிகால் பெருவளத்தானை நீங்கள் நாடிச்சென்றால் பசு தன் கன்றை அன்போடு அரவணைத்தல் போல, உங்களை விரும்பிப் போற்றுவான். நீங்கள் கைதொழுவதற்கு முன்பாகவே பட்டாலான புத்தாடை தந்து மாற்றிக் கொள்ளச் செய்வான். நீங்கள் புத்தாடை புனைந்தபின் கிண்ணத்தில் தேறல் ஊற்றி வேண்டிய அளவு பருகத் தருவான். பின்னர் விருதாக உங்கள் தலையில் பொன்னாலான தாமரையைச் சூட்டுவான். அரில்மாலையையும், முத்துமாலையையும் பாடினி அணியத் தருவான்.

வெண்குதிரைகள் நான்கு பூட்டிய தேர்மேல் அனுப்பி வைப்பான். ஏழடி பின் சென்று நின்று ஏறுங்கள் என்பான். ஏறியபின் பேரியாழை மீட்டச் சொல்லிக் கேட்பான். அதற்குப் பரிசிலாக வளம் மிக்க ஊர் கொண்ட நாட்டுப் பகுதியைத் தருவான். கரிகாலன், குதிரையை ஓட்டும் தேரோட்டியின் கையில் நுனியில் முள் பொருத்தப்பட்டிருக்கும் தாற்றுக்கோல் இல்லாமல் செய்வான். இது அவன் விலங்குகள்

மாட்டும் கொண்டிருந்த கருணையைப் புலப்படுத்துகிறது. அவன் பரிசிலாகத் தரும் யானைகள் சிறந்தவை. எனினும் பகை கண்டால் வெகுள்பவை.

இவை கரிகால் வளவன் தந்த பரிசில் என்று பிறர்க்குச் சொன்னமைக்காகக் கடிந்துகொள்வான். இந்த உலகம் நிலையில்லாதது என்னும் உண்மை நிலையைச் சீர்தூக்கிப் பார்த்துச் 'செல்லுங்கள்' என அனுப்பிவைக்கவும் மாட்டான். அவனிடமே இருக்கக்கூடாதா என ஏங்குவான்.

### அரசியல்

இயற்கை அல்லது செயற்கைக் காரணங்களால் மக்களுக்குத் தீங்கு நேரினும் மன்னனே அதற்குப் பொறுப்பேற்றான். தன் குடிகளையும் படைகளையும் காத்து நிற்க வேண்டியது அரசனது கடமை. தன் குடிகளைக் காக்கத் தவறும் மன்னனை உலகம் பழிக்கும் என்று புலவர்கள் நேரடியாக மன்னனுக்கு அறிவுறுத்திய காட்சிகளைச் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது.

*யாண்டுபல வாக நரையில ஆகுதல்*
*யாங்கு ஆகியர் எனவினவுதிர் ஆயின்*
*மாண்டஎன் மனைவியொடு மக்களும் நிரம்பினர்*
*யான்கண் டனையர்என் இளையரும் வேந்தனும்*
*அல்லவை செய்யான் காக்கும் அதன்தலை*
*ஆன்றுஅவிந்து அடங்கிய கொள்கைச்*
*சான்றோர் பலர்யான் வாழும் ஊரே.*

– புறநானூறு

ஆசிரியர்: பிசிராந்தையார்
திணை: பொதுவியல்
துறை: பொருண்மொழிக் காஞ்சி

பாடல்பொருள்: "தங்களுக்கு இவ்வளவு வயதாகியும் தாங்கள் எப்படி நரையில்லாமல் இருக்கிறீர்கள்?" என்று கேட்பீரானால், சொல்கிறேன். "நற்குணத்தளாகிய என் மனைவியோடு, என்னுடைய மக்களும் அறிவு நிரம்பப் பெற்றவர்கள். என்னிடம் பணி புரிபவர்களும் நான் நினைப்பதையே தாங்களும் நினைத்துச் செயல்களைச் செய்து முடிப்பர். என் வேந்தன் முறையல்லாதவற்றைச் செய்யாமல் நாட்டைக் காப்பவனாக விளங்குகின்றான். நான் வாழும் ஊரில், மாட்சிமைக்குரிய நற்குணங்களும் நல்லொழுக்கங்களும் நிறைந்து ஐம்புலன்களையும் வென்று, பணிவோடும் சிறந்த கொள்கைகளோடும் வாழும் சான்றோர்கள் பலர் உள்ளனர். ஆதலால் எனக்கு நரை தோன்றவில்லை யானும் முதுமையடையாதவனாய் உள்ளேன்" என்று பிசிராந்தையார் கூறுகின்றார்.

### கையறுநிலை

தம் மன்னன் இறந்ததற்குக் குடிமக்களும் சான்றோரும் வீரர்களும் வருந்திப் பாடுவது கையறுநிலை என்னும் துறையாகும். எந்த இழப்பையும் எண்ணி வருந்துவது கையறுநிலைத் துறைக்குரியது.

*இளையோர் சூடார் வளையோர் கொய்யார்*
*நல்யாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்*
*பாணன் சூடான் பாடினி அணியாள்*
*ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த*
*வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை*
*முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே*

– புறநானூறு

ஆசிரியர்: குடவாயிற் கீரத்தனார்
திணை: பொதுவியல்
துறை: கையறுநிலை

பாடல் பொருள்: ஒல்லையூர் நாட்டை ஆண்ட அரசன் பெருஞ்சாத்தன். அவன் இறந்த பின்னர் அந்நாட்டில் பூத்துக்கிடந்த முல்லைப் பூவை யாருமே சூடவில்லையாம். இளைய வீரர் சூடவில்லை. வளையல் அணிந்த மகளிர் சூடுவதற்காகப் பறிக்கவில்லை. பாணர் தம் வளைந்த யாழைப் பயன்படுத்திக் கீழே இழுத்துப் பறித்துத் தலையில் சூட்டிக்கொள்ளவில்லை. பாடினியும் அணிந்துகொள்ளவில்லை. அப்படி இருக்கும்போது, முல்லைப்பூவே! ஒல்லையூர் நாட்டில் எதற்காகப் பூக்கிறாய்?

### வணிகம்

சங்கத்தமிழ்க் கவிதைகள் பழந்தமிழர்தம் வணிகச்சிறப்பைப் பறைசாற்றி நிற்கின்றன. தமிழர் கடல்கடந்து, அயல்நாடுகளிலும் வணிகம் செய்தனர் என்ற செய்திகளைச் சங்கப்பாடல்கள்வழி அறிகின்றோம்.

பழந்தமிழர் வணிகத்தை உள்நாட்டு வணிகம், அயல்நாட்டு வணிகம் என வகைப்படுத்தினர். உள்நாட்டு வணிகம் பெரும்பாலும் நிலம் சார்ந்த பொருள்களையும் தொழில்களையும் அடிப்படையாகக் கொண்டிருந்தது. அயல்நாட்டு வணிகம் இயற்கைப் பொருள்கள், கைவினைப் பொருள்கள் மற்றும் பருத்தி, பட்டாலான ஆடைகளை அடிப்படையாகக் கொண்டு நடைபெற்றது. பண்டங்களை மாற்றுதலும் காசுகளைப் பயன்படுத்துதலும் வணிகத்தின் அடிப்படையாக விளங்கின. அக்காலத்தில் இருந்த அங்காடிகள் நாளங்காடி, அல்லாங்காடி என வகைப்படுத்தப்பட்டிருந்தன. எவ்வகை வணிகமாயினும் பழந்தமிழ் வணிகர்கள் நெறிபிறழாது, துலாக்கோல்போல் நடுவுநிலை நின்று வணிகம் செய்து வந்தனர் என்பதைப் பட்டினப்பாலை வழியே கடியலூர் உருத்திரங்கண்ணனார் உணர்த்தும் விதத்தைக் காணலாம்.

*நெடு நுகத்துப் பகல் போல*
*நடுவு நின்ற நல் நெஞ்சினோர்*
*வடு அஞ்சி வாய் மொழிந்து*
*தமவும் பிறவும் ஒப்ப நாடி*
*கொள்வதூஉம் மிகை கொளாது கொடுப்பதூஉம் குறை கொடாது*
*பல் பண்டம் பகர்ந்து வீசும்*
*தொல் கொண்டி துவன்று இருக்கை...*

– *பட்டினப்பாலை*

பாடல் பொருள்: நீண்ட நுகத்தடியில் தைத்த பகலாணி போல, நடுவுநிலையென்னும் குணம் நிலைபெற்ற நல்ல நெஞ்சினராய்



வணிகர்கள் இருந்தனர். தம் குடிக்குப் பழிச்சொல் வருமென அஞ்சி, பொய்மை தவிர்த்து வாய்மையுடையோராய் இருந்தனர். தம்முடையவற்றையும் பிறருடையவற்றையும் ஒன்றாக எண்ணினர். தாம் கொள்வனவற்றை மிகையாகக் கொள்ளாமல், கொடுப்பனவற்றைக் குறைவாகக் கொடுக்காமல், பல பண்டங்களையும் விலைசொல்லிக் கொடுக்கும், பழந்தொழிலால் வரும் உணவினைக் கொள்ளும், நெருங்கின குடியிருப்புகள் கொண்ட பட்டினமாக விளங்கியது காவிரிப்பூம்பட்டினம்.

## வேளாண்மை

பழந்தமிழர் இயற்கைச்சூழல், பருவகாலம் ஆகியவற்றிற்கு ஏற்ப நிலத்தை நன்கு உழவு செய்யும் பாங்கு, விதைகளைத் தேர்வு செய்வதில் உள்ள அனுபவம், பயிர்நுட்ப அறிவு, நீர்ப்பாசன நுட்பம், வேளாண்மைக் காவல் பணி எனத் திணைகளின் அடிப்படையில் வேளாண்மையை முறைப்படுத்தி அதன் முழுப் பயனையும் தெரிந்து வைத்திருந்தனர். சங்கப்பாடல்கள்வழி தமிழர்தம் வேளாண்மை நுட்பத்தை அறிந்து இன்புறலாம்.

*குடிநிறை வல்சிச் செஞ்சால் உழவர்*
*நடைநவில் பெரும்பகடு புதவில் பூட்டி*
*பிடிவாய் அன்ன மடிவாய் நாஞ்சில்*
*உடுப்பு முகமுழுக் கொழு மூழ்க ஊன்றித்*
*தொடுப்பு எறிந்துஉழுத துளர்படு துடவை*
*அரிபுகு பொழுதின் இரியல் போகி*
*வண்ணக் கடம்பின் நறுமலர் அன்ன*
*வளர்இளம் பிள்ளை தழீஇ குறுங்கால்*
*கறை அணற் குறும்பூழ் கட்சி சேக்கும்*
*வன்புலம் இறந்த பின்றை*

– *பெரும்பாணாற்றுப்படை*

பாடல் பொருள்: செம்மையான உழவு செய்கின்ற மருதநில உழவர்களின் வீட்டில் உணவுப்பொருள்கள் நிறைந்திருக்கும். உழவில் பழக்கிய எருதுகளை ஏரில் பூட்டி யானையின் வாயை ஒத்த கலப்பையின் கொழு நிலத்தில் அழுந்துமாறு பலமுறை உழுது பயிரிடுவர். மீண்டும் உழுது களையெடுத்த புன்செய் நிலத்தில் அறுவடை காலத்தின் போது



அவர்கள் ஒலி எழுப்புவர். அவ்வொலிக்கு அஞ்சி நடுங்கும் வெண்மையான கடம்ப மலர்களை ஒத்த வளரும் இளைய குஞ்சுகளைக் கூட்டிக் கொண்டு, சிறிய கால்களையும், கரிய கழுத்துகளையும் கொண்ட காடைப்பறவைகள் பாதுகாப்பான இடம்நோக்கிச் செல்லும். இப்பாடல் சங்கத்தமிழர் வேளாண்நுட்பத்தை அறிந்திருந்ததைப் பறைசாற்றுகிறது.

### வீரம்

சங்க காலத்தில் வீரம் முதன்மையாகப் போற்றப்பெற்றது. ஆடவரும், மகளிரும் இயற்கையிலேயே மறப்பண்பு மிக்கவராய் விளங்கியதால் எண்ணற்ற போர்கள் நடைபெற்றன. சமுதாயத்தைப் பாதுகாக்கும் பொறுப்பு அரசனுக்கு இருந்தது. தன் நாட்டுமக்களின் வாழ்க்கை வளமாக அமைவதற்குப் பிறநாட்டுடன் போர் மேற்கொண்டான். போரில் புறமுதுகிடுதல் பெரும்பழியாகக் கருதப்பட்டது. போரில் விழுப்புண்பட்டுஉயிர்விடுவதைப்பெருமையாகக் கருதினர். புறப்புண் பெற்றவர்கள் வடக்கிருந்து உயிர்நீத்தலைப் புகழெனக் கருதினர். இவ்வாறு வடக்கிருந்து உயிர் நீத்தலைச் சிறந்த வீரமாக வெண்ணிக்குயத்தியார் பாடுவது இங்கு நோக்கத்தக்கது.

*நளியிரு முந்நீர் நாவாய் ஓட்டி*
*வளிதொழில் ஆண்ட உரவோன் மருக*
*களிஇயல் யானைக் கரிகால் வளவ*
*சென்று அமர்க்கடந்த நின்ஆற்றல் தோன்ற*
*வென்றோய் நின்னினும் நல்லன் அன்றே*
*கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை*
*மிகப் புகழ் உலகம் எய்திப்*
*புறப்புண் நாணி வடக்கிருந் தோனே.*

– *புறநானூறு*

**ஆசிரியர்:** வெண்ணிக்குயத்தியார்

**திணை:** வாகை.

**துறை:** அரசவாகை.

**பாடல் பொருள்:** களிநடை போடும் யானைமேல் தோன்றும் கரிகால் வளவ! கடலில் நாவாய் ஓட்டிக் காற்றையே ஆண்ட வலிமையாளர் வழி வந்தவன் நீ. போரில் வென்றாய், அதனால் நீ நல்லவன். எனினும் வெண்ணிப்பறந்தலைப் போரில் உன் வலிமைமிக்கத் தாக்குதலால் புறப்புண்பட்டு அதற்காக நாணி அப்போர்க் களத்திலேயே வடக்கிருந்து உயிர் துறந்த பெருஞ்சேரலாதன் உன்னைக்காட்டிலும் நல்லவன் அல்லனோ?

சங்க இலக்கியப் பாடல்கள் தம் பாடுபொருள்களாலும், திணை, துறை, மரபு முதலியவற்றாலும் சிறப்புற்று விளங்குகின்றன. ஐந்திணையொழுக்கம்,இயற்கையைப்போற்றும் பாங்கு, மனிதநெறி கூறும் பான்மை போன்றன தமிழிலக்கியங்களில் விரவியுள்ளன. உவமை, உருவகம், உள்ளுறை, இறைச்சி உள்ளிட்ட உத்திகளைச் சங்கப்புலவர்கள் கையாண்டுள்ள விதமும் போற்றத்தக்கது. நம்மொழியின்கண் அமைந்த செவ்வியல் கவிதைகளை ஆழ, அகலக்கற்று இன்புறுவோம்.

# அறவியல் இலக்கியங்கள்

*மனிதன்தனக்கெனவரையறுத்துக்கொண்ட ஒழுக்கமுறைகளின் தொகுதியே அறம். உலகிற்கு அறம் கூறும் நோக்கோடு எழுந்த இலக்கியங்களை அறவிலக்கியங்கள் என்றும் அறங்கூர் கவிதைகளை அறக்கவிதைகள் என்றும் குறிப்பிடுவர்.*

*'அறம்' என்ற சொல்லை அறு+அம் எனப்பிரித்துத் தீமையை அறுப்பது, நீக்குவது என்றும் அறுதி செய்வது, கடமைகளை வரையறுப்பது என்றும் பொருள் கொள்வர். பொதுவாகச் சான்றோர் விலக்கியன ஒழித்தலும்; விதித்தன செய்தலும் அறம் எனப்பெறும்.*

*அறநூல்களைச் சிறந்த இலக்கியங்களின் வரிசையில் வைத்துப் பாராட்டுவது தமிழின் மரபு. கி.பி.3–ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 6–ஆம் நூற்றாண்டு வரை அறம் வலியுறுத்தும் நீதிநூல்கள் தமிழில் பலவிதமான வடிவங்களிலும் வெளிப்பாட்டு முறைகளிலும் எழுதப்பெற்றுள்ளன. காதலும் வீரமும் சங்க காலத்தில் போற்றப்பட்டதைப்போலவே அறமும் நீதியும் சங்கம் மருவிய காலத்தில் பெரிதும் போற்றப்பட்டன.*

*சங்கம் மருவிய காலத்தில் இயற்றப்பட்ட பதினெட்டு நூல்கள் பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் என வழங்கப்படுகின்றன.*

*நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்*

*பால்கடுகம் கோவை பழமொழி – மாமூலம்*

*இன்னிலைய காஞ்சியோ டேலாதி என்பவே*

*கைந்நிலைய வாம் கீழ்க்கணக்கு*

*என்னும் பழம்பாடல் இப்பதினெட்டு நூல்களின் பெயர்களைப் பட்டியலிடுகிறது. இந்நூல்களை அறம், அகம், புறம் என வகைப்படுத்துவர். அறம் பதினொன்று, அகம் ஆறு, புறம் ஒன்று எனத் தொகுக்கப்பட்டுள்ளன. இவற்றுள் அறம் பற்றிய நூல்கள் மிகுந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.*

*தமிழ் இலக்கியங்கள் முழுவதுமே அற இலக்கியங்கள் எனலாம். சங்க இலக்கியம், காப்பியங்கள், அறநூல்கள், சிற்றிலக்கியங்கள், புராணங்கள் என்றெல்லாம் பல பிரிவுகள் இருப்பினும், அவற்றின் பாடுபொருளின் மையம் ஏதோ ஓர் அறமாகவே இருக்கிறது. தமிழ் அறநூல்கள் அதன் இலக்கியச்சுவைக்காகவும் போற்றப்படுகின்றன. பிற இலக்கியங்களின்கண் அமைந்த இலக்கியச்சுவை, சொல்லழகு, இசைக்கட்டு, பாவமைப்பு போன்றன தமிழ் அறவிலக்கியங்களிலும் மிளிரக்காணலாம். அறவியல் கவிதைகள், எக்காலத்திற்கும் ஏற்ற அறக்கருத்துகளைக் கொண்டிலங்குவதை, அக்கவிதைகளைக் கற்பதன் மூலம் அறியலாம்.*

*பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் அமைந்த அறநூல்கள், பிற்காலத்தில் தோன்றிய அறநூல்கள் எனத் தமிழின்கண் அமைந்த அறநூல்களை இருபிரிவாகப் பிரிக்கலாம்.*

### அறிவோம் தெளிவோம்

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் புறப்பொருள் சார்ந்த ஒரே நூல் களவழி நாற்பது. களத்தை ஏர்க்களம், போர்க்களம் என்று இருவகைப்படுத்துவர். நெல் முதலானவற்றை அடித்துத் தூற்றும் களத்தைப் பாடுவது ஏர்க்களம். பகைவரை அழிக்கும் போர்க்களத்தைப் பாடுவது போர்க்களம். போர்க்களத்தைப் பாடும் நூலே களவழி நாற்பது.

கழுமலத்தில் நடைபெற்ற போரில் சோழன் கோச்செங்கணான், சேரன் கணைக்கால் இரும்பொறையை வென்று சிறையிலிட்டதால், அவனை மீட்க பொய்கையார் பாடியதே இந்நூல்.

யானைப் போர் பற்றிக் குறிப்பிடப்படுவதால் பரணி என்ற சிற்றிலக்கிய வகை தோற்றம் பெறுவதற்கு இந்நூலே காரணம் என்பர். இதிலுள்ள ஒவ்வொரு பாடலின் இறுதி சொல்லும் 'அட்டக்களத்து' என்று முடிவது இதன் சிறப்பு.

### பதினெண்கீழ்க்கணக்கில் உள்ள அறநூல்கள்

| நூல்கள் | ஆசிரியர் | நூல்கள் | ஆசிரியர் |
|---|---|---|---|
| திருக்குறள் | திருவள்ளுவர் | ஆசாரக்கோவை | பெருவாயின்முள்ளியார் |
| நாலடியார் | சமணமுனிவர்கள் | பழமொழி நானூறு | முன்றுறையரையனார் |
| நான்மணிக்கடிகை | விளம்பிநாகனார் | சிறுபஞ்சமூலம் | காரியாசான் |
| இன்னா நாற்பது | கபிலர் | ஏலாதி | கணிமேதாவியார் |
| இனியவை நாற்பது | பூதஞ்சேந்தனார் | முதுமொழிக்காஞ்சி | கூடலூர்கிழார் |
| திரிகடுகம் | நல்லாதனார் | ----- | ----- |

### ஒருமறை

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் இடம்பெற்றுள்ள அறநூல்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தன்மையென. மணிமுடியாக விளங்கும் திருக்குறள் உலகம் போற்றும் பொதுமறை. இஃது அறம், பொருள், இன்பம் என்னும் முப்பொருண்மைகளை உடையது. விவிலியத்திற்கு அடுத்தபடியாக உலகின் பெரும்பான்மையான மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்ட பெருமையுடையது. இந்நூலை இயற்றிய திருவள்ளுவரின் முழு வரலாறு கிடைக்கவில்லை. எனினும் இவர் பிறந்த ஆண்டு கி.மு.31 எனக் கொண்டு திருவள்ளுவர் ஆண்டு (தி.பி.) கணக்கிடப்படுகின்றது.

### கூடாவொழுக்கம்

வஞ்சமனம் கொண்டு உலகத்தாரை ஏமாற்றி வாழ்வு நடத்துவது பொய்ஒழுக்கமாம். இதைக் கூடாவொழுக்கம் என வள்ளுவர் குறிக்கிறார். ஒழுக்கமுடைமை என்ற அதிகாரம் வகுத்து மாந்தர் ஒழுகுமுறைகளை முன்பு அறிவுறுத்திய வள்ளுவர் இங்குக் கூடாவொழுக்கம் எனத் தனியே பேசுகிறார்.

1. *வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்*
   *ஐந்தும் அகத்தே நகும்.*
2. *வானுயர் தோற்றம் எவன்செய்யும் தன்னெஞ்சம்*
   *தான்அறி குற்றப் படின்.*
3. *வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்*
   *புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று.*
4. *தவமறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து*
   *வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று.*
5. *பற்றற்றேம் என்பார் படிற்றொழுக்கம் எற்றெற்றென்று*
   *ஏதம் பலவுந் தரும்.*
6. *நெஞ்சின் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து*
   *வாழ்வாரின் வன்கணார் இல்.*
7. *புறங்குன்றிக் கண்டனைய ரேனும் அகங்குன்றி*
   *மூக்கிற் கரியார் உடைத்து.*
8. *மனத்தது மாசாக மாண்டார் நீராடி*
   *மறைந்தொழுகு மாந்தர் பலர்.*
9. *கணைகொடிது யாழ்கோடு செவ்விதுஆங் கன்ன*
   *வினைபடு பாலால் கொளல்.*
10. *மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்*
    *பழித்தது ஒழித்து விடின்.*

*– அதிகாரம் 28*



இவ்வதிகாரம் பொதுவாகப் பிறரை ஏமாற்றி வாழும் அனைவரையும் பற்றியது என்றாலும் போலித்துறவியரை மனத்தில் கொண்டே வரையப்பட்டவை என்பதை எளிதில் உணரமுடிகிறது.

## இருநானூறு

திருக்குறளுக்கு அடுத்த நிலையில் வைத்து எண்ணத்தக்கது நாலடியார் ஆகும். நாலடி, நாலடி நானூறு, வேளாண்வேதம் என்று வெவ்வேறு பெயர்களாலும் இந்நூல் சுட்டப்படுகின்றது. சமணமுனிவர்களால் பாடப்பட்ட 400 வெண்பாக்களின் தொகுப்பே இந்நூல். இதனைத் தொகுத்தவர் பதுமனார். இந்நூலைப் போன்றே 400 வெண்பாக்களால் ஆனது பழமொழி நானூறு. ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் ஒரு பழமொழி அமையப் பாடப்பட்டிருப்பதால் இந்நூல் இப்பெயர் பெற்றது. இந்நூலை இயற்றியவர் முன்றுறையரையனார்.

வாழ்க்கையின் எல்லா இன்னல்களுக்கும் காரணமான அறியாமையாகிய மயக்கத்தைத் தீர்ப்பது கல்வி. இக்கருத்தை விளக்கும் நாலடியார் பாடல் நோக்கத்தக்கது.

இம்மை பயக்குமால் ஈயக் குறைவின்றால்
தம்மை விளக்குமால் தாமுளராக் கேடின்றால்
எம்மை உலகத்தும் யாம்காணேம் கல்விபோல்
மம்மர் அறுக்கும் மருந்து.

– நாலடியார்

கல்வியின் சிறப்பை விளக்குவதாக அமைந்த இச்செய்யுளில் உவமையோ பிற இலக்கியச் சிறப்புகளோ அமையாவிட்டாலும், கூறுவதைச் செறிவாக, சிறப்பாகச் சொல்லும் தன்மை அமைந்திருப்பதைக் காணலாம்.

தனக்கு உதவி செய்தவர்களுக்குத் தீங்கு செய்வது தனக்கே தீங்கு செய்துகொள்வதற்கு ஒப்பாகும் என்ற கருத்தை பழமொழி நானூற்றுப் பாடலொன்று கூறுகிறது.

நாடி நமரென்று நன்கு புரந்தாரைக்
கேடு பிறரோடு சூழ்தல் கிளர்மணி
நீடுகல் வெற்ப நினைப்பின்றித் தாமிருந்த
கோடு குறைத்து விடல்.

– பழமொழி நானூறு



தமக்கு உதவியவர்களுக்கு அவரின் பகைவரோடு சேர்ந்து தீங்கிழைப்பது, ஒருவன் உணர்வின்றித் தான் தங்கியிருந்த கிளையின் அடியை வெட்டி வீழ்த்தி உயிர்விடுதலைப் போன்றதாகும்.

## மும்மருந்து

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் மருந்துப் பெயர்கள் கொண்ட அறநூல்கள் மூன்று. அதில் முதலாவதாக அமைந்த நூல் திரிகடுகம். சுக்கு, மிளகு, திப்பிலி ஆகிய மூன்றும் கலந்த மருந்து உடல்நோயைத் தீர்ப்பது போல, இந்நூலின் ஒவ்வொரு செய்யுளிலும் உள்ள மூன்று கருத்துகள் உள்ளத்து நோயைத் தீர்ப்பதால் இந்நூல் திரிகடுகம் எனப் பெயர் பெற்றது. 100 வெண்பாக்களைக் கொண்ட இந்நூலின் ஆசிரியர் நல்லாதனார்.

இரண்டாவதாக அமைந்த நூல் சிறுபஞ்சமூலம். கண்டங்கத்திரி, சிறுவழுதுணை, சிறுமல்லி, பெருமல்லி, நெருஞ்சி ஆகிய ஐந்தின் வேர்கள் கலந்த மருந்து உடலை வலுப்படுத்துவதுபோல, இந்நூலின் ஒவ்வொரு செய்யுளிலும் அமைந்த ஐந்து கருத்துகள் வாழ்வுக்கு வலிமை சேர்ப்பதால் இந்நூல் சிறுபஞ்சமூலம் எனப் பெயர் பெற்றது. 102 வெண்பாக்களைக் கொண்ட இந்நூலின் ஆசிரியர் காரியாசான்.

மூன்றாவதாக அமைந்தது ஏலாதி. ஏலம், இலவங்கப்பட்டை, நாககேசரம், மிளகு, திப்பிலி,




சுக்கு ஆகிய ஆறும் கலந்த மருந்து உடலுக்குறுதி சேர்ப்பதுபோல,செய்யுள்தோறும் உள்ளத்திற்கு உறுதி சேர்க்கும் ஆறு கருத்துகளைக் கொண்டதால் இந்நூல் ஏலாதி எனப்பெயர் பெற்றது. 80 வெண்பாக்களைக் கொண்ட இந்நூலை இயற்றியவர் கணிமேதாவியார்.

மக்களைக் காப்பது அரசனின் கடமை. மன்னன் எவ்வழியோ மக்கள் அவ்வழி என்பது ஆன்றோர் வாக்கு. சிறுபஞ்சமூலம் அரசனின் இயல்புகளை விவரிக்கும் விதம் இங்கு நோக்கத்தக்கது.

*பொருள்போக மஞ்சாமை பொன்றுங்காற் போர்த்த*
*அருள்போகா வாரறமென் றைந்தும் இருள்தீரக்*
*கூறப்படும் குணத்தான் கூர்வேல்வல் வேந்தனால்*
*தேறப்படும் குணத்தி னான்*

*– சிறுபஞ்சமூலம்*

பொருள், இன்பம், இடுக்கண் வந்த காலத்து அஞ்சாமை, பிறிதோர் உயிரின் துன்பங்கண்டு இரங்குதல், நிலையான அறம் ஆகிய ஐந்தும் உடையவன் நல்ல அரசனாகச் செயலாற்றுவதற்குரிய தகுதியுடையவனாகிறான்.

## நானாற்பது

நானாற்பது என்று அழைக்கப்படும் நான்கு நூல்களாவன இன்னா நாற்பது, இனியவை நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது. இவற்றுள் முறையே முதலிரண்டும் அறநூல்கள். கார் நாற்பது அகநூல். களவழி நாற்பது புறநூல்.

இன்னது துன்பம் தரும் என்று கூறும் 40 வெண்பாக்களால் ஆன நூல் இன்னா நாற்பது. இந்நூலின் ஆசிரியர் கபிலர். இன்னதுஇன்னது இன்பம் பயக்கும் என 40 வெண்பாக்களைக் கொண்டு பூதஞ்சேந்தனாரால் பாடப்பட்ட நூல் இனியவை நாற்பது.

வாழ்விற்கு இன்பம் பயப்பன இவைஇவை என இனியவை நாற்பது பட்டியலிடுகிறது. இன்னது செய்யாதே என்பதை விட இதைச்செய் என நெறிப்படுத்தும் பாங்கு இந்நூலின் சிறப்பு.

*கற்றார்முன் கல்வி உரைத்தல் மிகஇனிதே*
*மிக்காரைச் சேர்தல் மிகமாண முன்இனிதே*
*எள்துணை யானும் இரவாது தான்ஈதல்*
*எத்துணையும் ஆற்ற இனிது.*

*– இனியவை நாற்பது*

கற்றறிந்தவர் முன் தான் கற்ற கல்வியைச் சொல்வது மிக இனியது. அறிவால் மேம்பட்ட கல்வியாளரைச் சேர்ந்து பொருந்தியிருப்பது மிகப் பெருமையுடன் முற்றிலும் இனியது. எள்ளளவாவது, தான் பிறரிடம் இரவாமல் தன் பொருளைப் பிறர்க்குத் கொடுத்து உதவுவது எல்லா விதத்திலும் மிக இனியது.

## மணிமொழிக்கோவை

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களான நான்மணிக்கடிகை, முதுமொழிக்காஞ்சி, ஆசாரக்கோவை ஆகிய மூன்றையும் மணிமொழிக்கோவை என்பர். நான்கு மணிகள் பதிக்கப்பெற்ற கடிகை என்னும் அணிகலன் போல ஒவ்வொரு செய்யுளிலும் நான்கு அரிய கருத்துகளைக் கொண்டுள்ளதால் இந்நூல் நான்மணிக்கடிகை எனப் பெயர் பெற்றது. இந்நூல் 104 வெண்பாக்களைக் கொண்டு விளம்பிநாகனாரால் இயற்றப்பெற்றது.

பல மணிகளைக் கோவையாகக் கொண்டு அமைவது மகளிர் அணியும் காஞ்சி என்னும் அணிகலன். அதுபோல பல முதுமொழிகளைக் கோவையாகக் கொண்ட 100 வெண்பாக்களை உடைய நூல் முதுமொழிக்காஞ்சி. இதன் ஆசிரியர் புலத்துறை முற்றிய கூடலூர்கிழார்.

ஆசாரமாகிய ஒழுக்க விதிகளைக் கோவையாகக் கொண்டு 100 வெண்பாக்களால் ஆன நூல் ஆசாரக்கோவை. இதன் ஆசிரியர் பெருவாயின் முள்ளியார்.

நிலையாமை என்னும் கருத்தை அறவிலக்கியங்களும் குறிப்பிடுகின்றன. நிலையில்லாப் பொருளைத் தேடியலையும் மனித வாழ்வைப் பொருளற்றது என்கிறது நான்மணிக்கடிகை.

*கள்வம் என்பார்க்கும் துயில்இல்லை காதலி மாட்டு*
*உள்ளம் வைப்பார்க்கும் துயில்இல்லை ஒண்பொருள்*
*செய்வம் என்பார்க்கும் துயில்இல்லை அப்பொருள்*
*காப்பார்க்கும் இல்லை துயில்*

*– நான்மணிக்கடிகை*

கள்வர்களுக்கும் தூக்கம் இல்லை. தலைவியை விரும்பும் தலைமகனுக்கும் தூக்கம் இல்லை. செல்வத்தை ஈட்டுபவனுக்கும் தூக்கம் இல்லை. அச்செல்வத்தைத் திருடு போகாது காப்பவனுக்கும் தூக்கம் இல்லை. எனவே நிலையில்லாப் பொருள்களின்கண் நாட்டம் கொள்ளாமல் மெய்ப்பொருளைத் தேடியடைவதே மனிதவாழ்வின் நோக்கமாகும்.

அறவிலக்கியங்கள் பொதுவாகத் தனிமனித ஒழுக்கங்களை வலியுறுத்தி அமைகின்றன. அவ்வாறமைந்த ஆசாரக்கோவைப் பாடலொன்று இங்கு நோக்கத்தக்கது.

*வைகறை யாமம் துயிலெழுந்து தான்செய்யும்*
*நல்லறமு மொண்பொருளுஞ் சிந்தித்து வாய்வதின்*
*தந்தையுந் தாயுந் தொழுதெழுக என்பதே*
*முந்தையோர் கண்ட முறை.*

*– ஆசாரக் கோவை*

அதிகாலையில் துயிலெழுந்து, தான் அன்று செய்யும் நல்லறத்தையும் செயலையும் ஆராய்ந்து சிந்தித்து, பின்னர்த் தந்தையையும் தாயையும் தொழுது அச்செயலைச் செய்யத் தொடங்குக என்று சொல்லப்படும் ஒழுக்கம், அறிவுடைய சான்றோர் சொல்லிய முறையாம்.

## பிற்கால நீதிநூல்கள்

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுக்குப் பின் தோன்றிய அறநூல்கள் தனிமனித அறத்தையும், சமூக அறத்தையும் பேசின. முற்கால நீதி நூல்கள் கூறும் அறக்கருத்துகளின் தொகுப்பாகப் பிற்கால நீதிநூல்கள் அமைந்துள்ளன. மக்கள் நல்வாழ்வுக்கேற்ற நூற்றுக்கும் மேற்பட்ட அறங்களை வகுத்தும் தொகுத்தும் எளிய மொழிநடையில் வழங்குகின்றன.

இருப்பு, அறிவு, விழுமியம், காரணம், மனம், மொழி தொடர்பான சிக்கல்களைப்

| நூல் பெயர் | ஆசிரியர் | நூல் பெயர் | ஆசிரியர் |
|---|---|---|---|
| அருங்கலச் செப்பு | --- | கபிலரகவல் | கபிலர் |
| அறநெறிச்சாரம் | முனைப்பாடியார் | கொன்றை வேந்தன் | ஔவையார் |
| நறுந்தொகை | அதிவீரராமபாண்டியர் | மூதுரை | ஔவையார் |
| நீதிநெறிவிளக்கம் | குமரகுருபரர் | நல்வழி | ஔவையார் |
| நன்னெறி | சிவப்பிரகாசர் | நீதி சிந்தாமணி | வேதகிரியார் |
| உலகநீதி | உலகநாதர் | பெண்மதிமாலை | வேதநாயகர் |
| முதுமொழி வெண்பா | --- | நீதிநூல் | வேதநாயகர் |
| ஆத்திசூடி | ஔவையார் | நீதிபேதம் | வேதநாயகர் |
| விவேக சிந்தாமணி | --- | புதிய ஆத்திசூடி | பாரதியார் |

பற்றி ஆராய்வதே மெய்யியல். மெய்யியல் குறித்த ஆழமானதொரு பார்வையினை அறநிலைக்கவிதைகள் வெளிப்படுத்தி நிற்கின்றன.

*ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்*
*மாண்டார் வருவரோ மாநிலத்தீர் – வேண்டா!*
*நமக்கும் அதுவழியே! நாம்போம் அளவும்*
*எமக்கென்? என்(று) இட்டு உண்டு இரும்*

*– நல்வழி*

பல ஆண்டுகள் அழுதாலும் இறந்தவர் திரும்ப இந்தப் பூமிக்கு வருவதில்லை, பல முயற்சி செய்தாலும் இறப்பைத் தள்ளிப் போடலாமே தவிர தவிர்க்க முடியாது. இறப்பு உறுதியாக இறுதியில் வரும். ஆதலால், தமக்கெனச் சேர்த்து வைக்காமல் முடிந்தவரை பிறருக்குக் கொடுத்து வாழ வேண்டும் .

பதினைந்தாம் நூற்றாண்டைச் சார்ந்த கபிலர் என்னும் புலவரால் இயற்றப்பட்ட நூல் கபிலர் அகவல். இந்நூல் கூறும் நீதி எக்காலத்திற்கும் பொருத்தமுடையதாக உள்ளது.

*ஒன்றே செய்யவும் வேண்டும் ஒன்றும்*
*நன்றே செய்யவும் வேண்டும் நன்றும்*
*இன்றே செய்யவும் வேண்டும் இன்றும்*
*இன்னே செய்யவும் வேண்டும்*

*– கபிலர் அகவல்*

நாம் செய்யும் செயல் நல்லதாக இருக்க வேண்டும். அச்செயலை அன்றே அப்பொழுதே செய்து முடிக்க வேண்டும்.

பிற்கால அறநூல்கள் பெரும்பாலும் சுருங்கச்சொல்லி விளங்கவைப்பவை. அவ்வகையில் ஓரடிப் பாக்கள் என்னும் வகையிலமைந்த அறவிலக்கியங்கள் பல தோன்றின. சிறுவர்களுக்கு நீதிகளைப் பயிற்றுவிக்க இவை பெரிதும் பயன்படுத்தப்படுகின்றன.

அதிவீரராமபாண்டியர் இயற்றிய நறுந்தொகை, அறக்கருத்துகளை எடுத்துரைக்கும் ஓரடிப் பாக்களால் ஆன நூல்.

*எழுத்தறி வித்தவ னிறைவ னாகும்*
*கல்விக் கழகு கசடற மொழிதல்*
*நாளுங் கிழமையும் நலிந்தோர்க் கில்லை*
*கேளுங் கிளையுங் கெட்டோர்க் கில்லை*

*– நறுந்தொகை*

போன்ற ஓரடிப் பாக்கள் வடிவ எளிமையும் பொருளினிமையும் கொண்டு விளங்குவதை அறியலாம்.

ஒழுக்கமுடையவர்களின் உயர்வும் ஒழுக்கத்துடன் வாழாதோர் எய்தும் இழிவும் விவேகசிந்தாமணியில் நயம்படக் கூறப்பட்டுள்ளது.

*ஆசாரஞ் செய்வா ராகி லறிவோடு புகழு முண்டாம்*
*ஆசாரம் நன்மை யானா லவனியிற் றேவ ராவார்*
*ஆசாரஞ் செய்யா ராகி லறிவொடு புகழு மற்றுப்*
*பேசார்போற் பேச்சு மாகிப் பிணியொடு நரகில் வீழ்வார்*

*– விவேகசிந்தாமணி*

ஒழுக்கத்துடன் வாழ்பவர் அறிவும் புகழும் பெறுவர். தாம் செய்யும் நன்மைகளால் தேவருக்கு ஒப்பாகக் கருதப்படுவர். ஒழுக்கமில்லாதவர் நரகத்தை அடைவர் என்பதை இப்பாடல்வழி அறியலாம்.

இளம்வயதே கற்பதற்கு ஏற்ற வயது என்பதைக் கூற விழைந்த வேதநாயகர்,

*வளையிள மரந்தனை நிமிர்த்தல் வாய்க்கும்பொன்*
*இளகிய பொழுதணி யியற்றிய லாகுதல்*
*வளமுறு கேள்விநூன் மாண்பு நற்குணம்*
*இளமையி லன்றிமூப் பெய்தின் எய்துமோ*

*– நீதிநூல்*

என்ற நீதிநூலின் பாடல்வழி மரத்தின் வளைவை இளமையில் நிமிர்த்தலும் பொன் இளகியிருக்கும்போதே நகை செய்தலும் போல, இளவயதில்தான் நூற்கல்வியையும் மாண்பையும் நற்குணங்களையும் பயிற்றுவிக்க முடியும் என்கிறார்.

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் அமைந்த அறநூல்கள் கூறும் அறக்கருத்துகளின் தொகுப்பாகவே பிற்கால அறநூல்கள் அமைந்திருந்ததை அந்நூல்களில் அமைந்த பாடல்கள் உணர்த்தி நிற்கின்றன.

# காப்பியங்கள்

கி.பி.12ஆம் நூற்றாண்டில் தோன்றிய 'தண்டியலங்காரம்' காப்பியத்திற்கு இலக்கணம் வகுத்துள்ளது. 'பெருங்காப்பிய நிலை பேசுங்காலை' எனத் தொடங்கும் நூற்பா காப்பிய இலக்கணத்தைக் கூறுகிறது.

*பெருங்காப்பிய நிலை பேசுங்காலை*
*வாழ்த்து வணக்கம் வருபொருள் இவற்றில் ஒன்று*
*ஏற்புடைத்தாகி முன்வர இயன்று*
*நாற்பொருள் பயக்கும் நடைநெறித் தாகித்*
*தன்னிகர் இல்லாத் தலைவனை உடைத்தாய்*
*மலை கடல் நாடு வளநகர் பருவம்*
*இருசுடர்த் தோற்றமென் றினையன புனைந்து*
*நன்மணம் புணர்தல் பொன்முடி கவித்தல் ....*

இதன்படி பெருங்காப்பியத்தில் இயற்கையை வாழ்த்துதல், தெய்வத்தினை வணங்குதல், உரைக்கும் பொருள் உணர்த்தல் என்னும் மூன்றினுள் ஒன்று முதலில் வரவேண்டும். அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பொருள்களைப் பெருங்காப்பியம் வலியுறுத்திப் பாட வேண்டும். இந்நான்கினுள் ஒன்றோ, பலவோ குறைந்து வருவதைத் தண்டியாசிரியர் சிறுகாப்பியமென்று கூறுகிறார்.

பெருங்காப்பியங்கள், எதையும் குறைவின்றிச் செய்துமுடிக்கும் வலிமை வாய்ந்த தன்னிகர் இல்லாத் தலைவனைப் பெற்று அமைதல் வேண்டும். காப்பியம் எழுந்த சூழல் சார்ந்து மலை, கடல், நாடு, நகர் முதலானவற்றின் வருணனைகள் இடம்பெற வேண்டும். பின்னர் அந்தந்த நிலத்து மக்களின் வாழ்வியல், சடங்குகள், விளையாட்டுகள், தூது, பயணம், போர், வெற்றி போன்ற செய்திகளைக் கொண்டிருக்க வேண்டும். எண்வகை மெய்ப்பாடுகளைக் கூறும் வகையில் இதன் உள்ளடக்கம் அமைதல் வேண்டும். காப்பியத்தின் பெரும்பிரிவிற்குக் காண்டம், இலம்பகம், பருவம் எனவும் உட்பிரிவிற்குச் சருக்கம், காதை, படலம் எனவும் பெயரிடுவர்.

தண்டியலங்காரத்திற்கு முன்பே தமிழில் இத்தன்மையுடைய இலக்கியங்கள் தோன்றி வளர்ந்துள்ளன. இவை காப்பிய இலக்கணத்தோடு பெரும்பாலும் பொருந்தியும் சிறுபான்மை மாறுபட்டும் அமைந்துள்ளன. அவை தொடர்நிலைச்செய்யுள் என அழைக்கப்பட்டன. அவற்றில் காப்பியச்சுவை சற்றும் குறையாமல் அமைந்திருப்பது சிறப்பு.

## ஐம்பெருங்காப்பியங்கள்

சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, குண்டலகேசி, வளையாபதி ஆகிய ஐந்தும் ஐம்பெருங்காப்பியங்கள். இவற்றில் சிலப்பதிகாரம், மணிமேகலை இரண்டும் சங்கம் மருவிய கால இலக்கியங்கள். பின்னர் வரும் மூன்றும் சோழர் காலத்தைச் சார்ந்தவை. அவற்றுள் குண்டலகேசியும் வளையாபதியும் காலவெள்ளத்தில் அழிந்து போன காப்பியங்கள் ஆகும்.

## சிலப்பதிகாரம்

தமிழில் தோன்றிய முதல் பெருங்காப்பியம் சிலப்பதிகாரம். இக்காப்பியம் நெஞ்சை அள்ளும் சுவையுடையது. சிலம்பால் உருவான நிகழ்வுகளையும் வரலாற்றையும் கூறுவதால் சிலப்பதிகாரம் எனப்பெயர் பெற்றது. உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் என்று இந்நூல் அறியப்படுகிறது. இக்காப்பியத்தைப் படைத்த இளங்கோவடிகள் சமண சமயம் சார்ந்தவர். கி.பி. 2–ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இளங்கோவடிகளைச் சேரன் செங்குட்டுவனின் தம்பி என்பர்.

இந்நூல் புகார்க்காண்டம், மதுரைக்காண்டம், வஞ்சிக்காண்டம் என்ற மூன்று காண்டங்களையும், "மங்கல வாழ்த்துப்

பாடல்" தொடங்கி "வரந்தரு காதை" ஈறாக முப்பது காதைகளையும் உடையது.

*அரைசியல் பிழைத்தோர்க்கு அறம்கூற்று ஆவதூஉம்*
*உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்தலும்*
*ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும் என்பதூஉம்*

என்னும் முப்பெரும் உண்மைகளை இந்நூல் கூறுகிறது.

## காப்பியச் சுருக்கம்

பூம்புகாரில் மாசாத்துவான் மகனாகிய கோவலனுக்கும் மாநாய்கன் மகளாகிய கண்ணகிக்கும் திருமணம் நடைபெறுகிறது. சில ஆண்டுகள் இனிமையாக இல்லறத்தை நடத்துகின்றனர். இந்நிலையில் ஆடல், பாடல், அழகு என்ற மூன்றிலும் குறைவுபடாத மாதவி என்ற பெண் கோவலன் வாழ்வில் குறுக்கிடுகிறாள். அவளுடன் சில காலம் வாழ்ந்த கோவலன் ஊழ்வினையால் அவளைப் பிரிந்து விடுகிறான்.

கற்புக்கடம்பூண்ட தெய்வமாகிய மனைவி கண்ணகியை அடைந்த கோவலன், அவள் காற்சிலம்புகளை மூலதனமாகக் கொண்டு இழந்த செல்வத்தை மீண்டும் திரட்ட மதுரைமாநகர் செல்கிறான். கண்ணகியும் உடன்செல்கிறாள். ஊழ்வினை தொடர்கிறது! மதுரையில் கள்வன் எனக் களங்கம் கற்பிக்கப்பட்டுக்கோவலன்கொல்லப்படுகிறான். கதிரவனையும் தன் கற்புத்திறத்தால் பேசவைத்த கண்ணகியால், மதுரை மாநகர் தீப்பிடித்து எரிகிறது. அதன்பின் சேரநாடு நோக்கிச் சென்ற கண்ணகி, தெய்வமாக்கப்படுகிறாள்.

காப்பிய நாயகியான கண்ணகியே இக்காப்பியத்தில் முதன்மைப் படுத்தப்படுகிறாள். அவளை அறிமுகம் செய்யவந்த இளங்கோவடிகள்,

*போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றும்*
*தீதிலா வடமீனின் திறமிவள் திறமென்றும்*
*மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்*
*காதலாள் பெயர்மன்னுங் கண்ணகியென்*
*பாள்மன்னோ*

–என்று பாடுகிறார்.



## காப்பியச் சிறப்புகள்

குடிமக்கள் காப்பியம், முத்தமிழ்க் காப்பியம், நாடகக் காப்பியம், தேசியகாப்பியம் முதலான சிறப்புப்பெயர்களால் இந்நூல் அழைக்கப்படுகிறது. அரங்க அமைப்பு முறைகள் பற்றிய செய்திகள் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. பூம்புகார், மதுரை, வஞ்சிமாநகர் பற்றிய வரலாற்றுச் செய்திகளையும், அக்காலச் சமுதாய அமைப்பு, ஆடல் வகைகள், இசைக் கருவிகள், கல்வி, வணிகம் பற்றிய குறிப்புகளையும், மூவேந்தர் ஆட்சிமுறை பற்றிய செய்திகளையும் கூறுகிறது. ஆகவே தமிழர்க்குக் கிடைத்த அரிய காப்பியக் கருவூலமாகச் சிலம்பைக் கருதலாம்.

## மணிமேகலை

பௌத்தசமயக் காப்பியமாகத் திகழும் மணிமேகலை கோவலனுக்கும், மாதவிக்கும் பிறந்த மகளாகிய மணிமேகலையின் வரலாற்றைக் கூறுகிறது. இதன் ஆசிரியர் மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார். இவரும் இளங்கோவடிகள் காலத்தைச் சேர்ந்தவரே. மணிமேகலையில் விழாவறை காதை முதல் பவத்திறம் அறுகெனப் பாவை நோற்ற காதை ஈறாக முப்பது காதைகள்

உள்ளன. ஆனால், சிலப்பதிகாரத்திலுள்ளது போல் காண்டம் என்னும் பெரும்பிரிவுகள் இல்லை. மணிமேகலை இளங்கோவடிகள் முன்பாகவும், சிலப்பதிகாரம் சீத்தலைச் சாத்தனார் முன்பாகவும் அரங்கேற்றப்பட்டதாகக் கூறுவர். கதைக்களம், பாத்திரங்கள், கருத்துகள் இரண்டிலும் தொடர்வதால் சிலப்பதிகாரத்தையும் மணிமேகலையையும் இரட்டைக்காப்பியம் என்பர். இந்நூல் மணிமேகலை துறவு என்றும் அழைக்கப்படுகிறது.

## காப்பியச் சுருக்கம்

கோவலனுக்கும் மாதவிக்கும் பிறந்த பெண் மணிமேகலை. தனக்கு நேர்ந்த கதி தன் மகளுக்கும் ஏற்பட்டுவிடக் கூடாது என்பதற்காக அவளையும் தன்னைப்போலவே பௌத்தத் துறவியாக்கி இருந்தாள் மாதவி. இந்திரவிழா காணவந்த மணிமேகலா தெய்வம் மணிமேகலையைத் தூக்கிக் கொண்டு சென்று, மணிபல்லவத்தீவில் சேர்க்கிறது. அங்கு தோன்றிய புத்த பீடிகையைத் தொழுது, தன் பழம்பிறப்பு பற்றி அறிகிறாள் மணிமேகலை. வான்வழியே பறத்தல், பசியாதிருத்தல், தன் உருவை மாற்றிக்கொள்ளுதல்



ஆகியவற்றிற்கான மந்திரங்களையும், அள்ள அள்ளக் குறையாது அமுதுசுரக்கும் அமுத சுரபியையும் பெறுகிறாள். பூம்புகாருக்குத் திரும்பிய மணிமேகலை அறத்தொண்டு ஆற்றுகிறாள். மணிமேகலையால் சிறைக்கோட்டம் அறக்கோட்டமாகிறது. மணிமேகலை மீது விருப்பம் கொண்ட உதயகுமரன், காயசண்டிகையின் உருவத்திலிருந்த மணிமேகலையைப் பின்தொடர்கிறான். தன் மனைவியைப் பின்தொடர்வதாகக் கருதிய காயசண்டிகையின் கணவன் உதயகுமரனைக் கொன்றுவிடுகிறான். இதனால் சிறைக்கோட்டத்தில் வைக்கப்பட்ட மணிமேகலை தன் அறச்செயல்களால் விடுதலை அடைகிறாள். பின்னர் வஞ்சிமாநகர் வந்து கண்ணகி கோட்டத்தில் கண்ணகியை வணங்குகிறாள். அறம்பல பகர்ந்து பிற சமயத்தவரோடு வாதிட்டு வென்று இறுதியில் தவம் செய்து வீடுபேறு அடைகிறாள்.

பசியாகிய கொடிய நோய்,

*குடிபிறப்பு அழிக்கும் விழுப்பம் கொல்லும்*
*பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்*
*நாணணி களையும் மாணெழில் சிதைக்கும்*

என்றும், வறுமையில் உழலும் மக்களுக்கு உணவு வழங்குவோரின் சிறப்பை,

*மண்திணி ஞாலத்து வாழ்வோர்க்கு எல்லாம்*
*உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே*

என்றும் மணிமேகலைக் காப்பியம் கூறுகிறது.

## காப்பியச் சிறப்புகள்

மணிமேகலையில் இயற்கைக் காட்சிகளும், வருணனைகளும் அமைந்துள்ளன. கதைத்தலைவியால் பெயர் பெற்றது இந்நூல். பரத்தையொழிப்பு, மதுவொழிப்பு, சிறையொழிப்பு என்னும் கருத்துகளைக் கூறும் சமுதாய சீர்திருத்தக்காப்பியமாக இந்நூல் விளங்குகிறது.

## சீவக சிந்தாமணி

தமிழில் விருத்தப்பாவால் இயன்ற முதல் காப்பியம் சீவகசிந்தாமணி. வடமொழியில் எழுதப்பட்ட கத்திய சிந்தாமணியின் தழுவலே

இந்நூல் என்பர். சமணசமயக் காப்பியமாகத் திகழும் இந்நூல் கி.பி.7-ஆம் நூற்றாண்டில் திருத்தக்கத்தேவரால் இயற்றப்பட்டது. திருத்தக்கத்தேவரை 'தமிழ்க் கவிஞர்களுள் அரசன்' என்று வீரமாமுனிவர் போற்றுகிறார். சீவகசிந்தாமணி செந்தமிழ்க் காப்பியங்களுள் சிறந்தது மட்டுமன்று, உலக மகாகாவியங்களில் ஒன்றாகும் என்று ஜி.யு.போப் பாராட்டுகின்றார்.

சீவகசிந்தாமணி நாமகள் இலம்பகம் முதல் முக்தி இலம்பகம் வரை பதின்மூன்று இலம்பகங்களையும், 3145 பாடல்களையும் கொண்டது. காப்பிய இலக்கணம் முழுமையும் பொருந்தும் இந்நூல் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு உறுதிப் பொருள்களையும் பேசுகிறது.

## காப்பியச் சுருக்கம்

ஏமாங்கத நாட்டின் தலைநகர் இராசமாபுரம். இந்நாட்டை ஆண்ட மன்னன் சச்சந்தன். தன் மனைவி விசயையோடு அரண்மனை அந்தப்புரத்திலே தங்கியிருக்க, நாட்டைக் கவனித்து வந்த அமைச்சன் கட்டியங்காரன் ஏற்ற நேரத்தில் அரசனைக் கொன்று ஆட்சியைப் பிடித்துக் கொண்டான். மயில்பொறி ஒன்றின் மூலம் தப்பிய விசயை, இராசமாபுரத்தின் இடுகாட்டில் சீவகனைப் பெற்றெடுக்கிறாள். சீவகன் பிறந்தபோது அவன் தாய் விசயை சிந்தாமணியே என அழைத்தாள். அக்குழந்தை தும்மியபொழுது 'சீவ' என்ற வாழ்த்தொலி கேட்டது. அதனால் அவன் சீவகன் என்று அழைக்கப்பட்டான். சீவகனின் வரலாற்றைக் கூறும் நூலாதலின் 'சீவகசிந்தாமணி' எனப்பெயர் பெற்றது. கந்துகடன் என்ற வணிகன் சீவகனை எடுத்து வளர்க்கிறான். அச்சணந்தி என்ற ஆசிரியர் சீவகனுக்குப் பல்வேறு கலைகளையும் கற்பிக்கிறார். தன்னிகரில்லாத் தலைவனாக விளங்கும் சீவகன் தன் ஆற்றலால் பல்வேறு வீரச் செயல்களைப் புரிந்து, கட்டியங்காரனைப் போரில் வீழ்த்தி மீண்டும் தன் நாட்டைப் பெறுகிறான். காந்தருவதத்தை, குணமாலை, பதுமை, கேமசரி, கனகமாலை, விமலை, சுரமஞ்சரி, இலக்கணை ஆகிய எட்டுப் பெண்களை மணப்பதனால், இந்நூல் மணநூல் என்றும் அழைக்கப்படுகிறது. இறுதியில் அவன் துறவறம் பூண்டு முக்தி அடைகிறான்.

நாமகள் இலம்பகத்தில் வரும் நாட்டுச் சிறப்பில், திருத்தக்கதேவர் ஏமாங்கத நாட்டின் சிறப்பைப் பின்வருமாறு பாடுகிறார்.

> சிந்துரப் பொடிகளுஞ் செம்பொற் சுண்ணமுஞ்
> சந்தன நீரொடு கலந்து தையலார்
> பந்தொடு சிவிறியிற் சிதறப் பார்மிசை
> யிந்திர வில்லெனக் கிடந்த வீதியே

என்று சோழநாட்டின் வளமையைக் கற்பனையில் கண்டு கவி இயற்றுகிறார்.

## காப்பியச் சிறப்புகள்

காப்பியங்களில் நாட்டுவளம், நகர்வளம் பாடுவதில் புதியமரபை ஏற்படுத்திக் கொடுத்த காப்பியம் சீவகசிந்தாமணி. இயற்கைக் காட்சிகள், அவை பற்றிய வருணனை, போர்முறைகள், தமிழர்தம் பழக்க வழக்கங்கள், உவமை நயங்கள், அரசியல் சூழ்ச்சிகள், சமணக்கொள்கை விளக்கங்கள் பற்றி பேசுகிறது சிந்தாமணிக் காப்பியம்.

# குண்டலகேசி

அழிந்துபோன தமிழ்க் காப்பியங்களுள் ஒன்று குண்டலகேசி. இது பௌத்த சமய நூல். நாதகுத்தனார் என்ற புலவரால் இயற்றப்பட்டது. புறத்திரட்டில் குண்டலகேசியின் பாடல்களாகப் பத்தொன்பது செய்யுள்களும், நீலகேசி உரையில் 180 பாக்களும் இன்று கிடைக்கின்றன. இவற்றைக் கொண்டும், வேறு சில குறிப்புகள் மூலமும் குண்டலகேசியின் கதையமைப்பை அறியமுடிகிறது.

## காப்பியச்சுருக்கம்

இராசகிருகம் என்ற நகரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட அரசனுக்கு அமைச்சன் ஒருவன் இருந்தான். அமைச்சனின் மகள் பத்திரை திருட்டுக் குற்றத்திற்காகத் தண்டனை பெற்ற ஒருவனை விரும்பி மணக்கிறாள். கள்வன் நல்லவனாக மாறி இல்லறம் நடத்துகிறான். ஒருநாள் பத்திரை தன் கணவனை "நீ கள்வன் தானே" என்று கூறிவிடுகிறாள். மனைவியின் சொல்கேட்டு மனம் வருந்திய அவன் மலையிலே

உள்ள தெய்வத்தை வழிபட்டு வருவோம் என்று வஞ்சகத்துடன் அழைக்கின்றான். மலையின் உச்சியை அடைந்ததும் பத்திரையைக் கொல்லப்போவதாகக் கூறுகின்றான். உங்களை ஒருமுறை சுற்றி வணங்கியபின் என்னைக் கொன்றுவிடுங்கள் என்று கணவனிடம் வேண்டுகிறாள். "தற்கொல்லியை முற்கொல்க" என்பதை உணர்ந்து அவனைச் சுற்றி வருகையில் பின்புறமாக மலையுச்சியிலிருந்து அவனைக் கீழே தள்ளிக் கொல்கிறாள். வாழ்க்கையில் வெறுப்புற்ற பத்திரை ஒரு சமணப் பள்ளியை அடைந்து துறவறம் ஏற்கிறாள். பின்னர் சாரிபுத்தரிடம் வாதத்தில் தோற்றுப் புத்தசமயத்தைத் தழுவுகிறாள்.

மெய்யுணர்வுடையோர் எது நிகழ்ந்தாலும் எல்லாம் ஊழின் செயல் என்று கருதி அமைதியாய் இருப்பர்.

*மறிப மறியும் மலிர்ப மலிரும்*
*பெறுப பெறும் பெற்றுஇழப்ப இழக்கும்*
*அறிவது அறிவார் அழுங்கார் உவவார்*
*உறுவதும் உறும் என்று உரைப்பது நன்று*

செல்வம் வரும்போது மகிழ்வதுமில்லை. வறுமையுற்றபோது வருந்துவதுமில்லை என்னும் நெறியை இப்பாடல் உணர்த்துகிறது.

## வளையாபதி

ஐம்பெரும் காப்பியங்களுள் இறுதியாக வைத்து எண்ணப்படுவது வளையாபதி. இந்நூல் முழுமையும் இன்று கிடைக்கவில்லை. சமணசமயத்தைச் சார்ந்த இந்நூலின் ஆசிரியர் பெயரும் தெரியவில்லை. புறத்திரட்டுத்தொகை நூலில் வளையாபதியின் பாடல்களாக அறுபத்தாறு செய்யுள்கள் காணப்படுகின்றன. விருத்தப் பாக்களாக அமைந்த வளையாபதிப் பாடல்கள் கள்ளாமை, கொல்லாமை, பொய்யாமை, இளமை நிலையாமை ஆகியன குறித்துப் பேசுகின்றன.

### காப்பியச் சுருக்கம்

நவகோடி நாராயணன் ஒரு வைர வணிகன். அவன் தன் குலத்தில் ஒரு பெண்ணையும், வேறு குலத்தில் ஒரு பெண்ணையும் திருமணம் செய்கிறான். இதனால் அவனைக் குலத்தை விட்டுத் தள்ளி வைத்துவிடுகின்றனர். துன்பமுற்ற நாராயணன், வேறு வழியின்றித் தான் மணம்புரிந்த வேறு குலத்துப் பெண்ணைத் தள்ளி வைத்து விடுகிறான். அவளோ, தனக்கு மறுவாழ்வு அளிக்கும்படி காளியை வேண்டுகிறாள். காளியின் அருளால் அவளுக்கு ஓர் ஆண் குழந்தை பிறக்கிறது. அக்குழந்தை வளர்ந்து பெரியவனாகிப் புகார் நகர் வணிகர் அவையில் 'தன் தந்தை நாராயணனே' என்று நிறுவுகிறான். காளிதேவியும் சாட்சி கூறி அதனை மெய்ப்பிக்கிறது. இதனால் குடும்பம் ஒன்றுசேர, அனைவரும் மகிழ்ச்சியாக வாழ்கின்றனர்

*இன்மை யிளிவா முடைமை யுயிர்க்கச்சம்*
*மன்னல் சிறிதாய் மயக்கம் பெரிதாகிப்*
*புன்மை யுறுக்கும் புரையில் பொருளைத்*
*துன்னா தொழிந்தார் துறவோ விழுமிதே.*

எந்நிலையிலும் மாந்தர்கள் கீழ்மையைத் தருகின்ற பொய்ப்பொருளைப் பற்றாது, சான்றோர் மொழிந்த துறவொழுக்கத்தைப் பின்பற்றுவதே சிறப்புடையது என்பதை இப்பாடல் உணர்த்துகின்றது.

## ஐஞ்சிறு காப்பியங்கள்

அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய நான்கு உறுதிப்பொருள்களுள் ஒன்றோ சிலவோ குறைந்து, பெருங்காப்பிய இலக்கணத்திற்கு மாறுபட்டு வருவது சிறுகாப்பியமாகும். உதயணகுமார காவியம், நாககுமார காவியம், யசோதர காவியம், சூளாமணி, நீலகேசி என்பவை **ஐஞ்சிறு காப்பியங்களாகும்.** இவ்வைந்தும் சமண சமயக் காப்பியங்களாகும்.

### உதயணகுமார காவியம்

உதயணகுமார காவியம் ஐஞ்சிறு காப்பியங்களுள் ஒன்றாகும். இந்நூலில் ஆறு காண்டங்கள் உள்ளன. இக்காப்பியத்தின் முதற்பகுதி உதயணன் வரலாற்றையும், பிற்பகுதி அவனது மகனாகிய நரவாகனனது வரலாற்றையும் கூறுகிறது. இக்காப்பியத்தில் மொத்தம் 367 பாடல்கள் உள்ளன. இந்நூல் பெருங்கதை என்னும் காப்பியத்திலிருந்து வேறுபட்டது. இதன் ஆசிரியர் பெயர்

தெரியவில்லை.

இந்நூலின்கண் அமைந்த 'விருத்தப்பா' அமைப்பு பல இடங்களில் நயமுடன் அமைந்திருப்பதைக் காண முடிகிறது.

*சிந்து கங்கை நீர் சேர்ந்து வளம்படும்*
*அந்த மாகும் அவந்தி நன்னாட்டினுள்*
*இந்து சூடிய விஞ்சி வளநகர்*
*உந்து மாளிகை யுஞ்சயினிப் பதி.*

இப்பாடல் உஞ்சையினி நாட்டின் வளத்தையும் பெருமையையும் எடுத்தியம்புகிறது.

### நாககுமாரகாவியம்

நாககுமார காவியம் அல்லது நாகபஞ்சமி கதை எனப்படும் இந்நூல், தமிழில் தோன்றிய சிறு காப்பியங்களில் ஒன்றாகும். இதை எழுதியவர் யாரெனத் தெரியவில்லை. 170 விருத்தப்பாக்களால் ஆன இந்நூல் ஐந்து சருக்கங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இது சமணசமயக் கொள்கைகளை விளக்க முற்படுகிறது. இளமைக் காலத்தில் இன்பம் துய்ப்பதிலேயே தனது காலத்தைக் கழித்த நாககுமாரன் தனது இறுதிக் காலத்தில் வாழ்வின் நிலையாமையை உணர்ந்து துறவு மேற்கொள்வதே இக்கதை.

பிறவிச் சூழலில் இருந்து விடுபட்டு முக்தி பெறுவதற்குத் துறவின் இன்றியமையாமை பற்றி இக்கதை பேசுகிறது.

*திங்கள் முந்நான்கு யோகந் தீவினை யரிய நிற்பர்*
*அங்கபூ வாதி நூலு ளரிப்பறத் தெளிந்த நெஞ்சிற்*
*தங்கிய கருணை யார்ந்த தவமுனி யவர்கள் சொன்ன*
*பொங்குநற் கவிக்க டறான் புகுந்துநீர்த் தெழுந்த தன்றே.*

தீவினைகள் நீங்கித் தம் நெஞ்சத்தில் கருணை உள்ளவர்களாகத் தவமுனிவர்கள் விளங்குவர் என்பதை இப்பாடல் உணர்த்துகிறது.

### யசோதர காவியம்

இந்நூல் யசோதரன் என்ற மன்னனின் வாழ்க்கை வரலாற்றை விவரிக்கிறது. இந்நூலின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இது ஐந்து சருக்கங்களையும் 320 பாடல்களையும் கொண்டது. அபயருசி என்பான் ஔதய நாட்டு மன்னன் மாரிதத்தனுக்குத் தம் பழம்பிறப்பு வரலாறு உணர்த்திச் சமண நெறிப்படுத்தியதே இக்காப்பியக் கதை.

அபயருசி கூறும் அறவுரையின் பயனைக் கீழ்வரும் பாடல் உணர்த்துகிறது.

*பிறந்தவர் முயற்சி யாலே பெறுபய னடைவ ரல்லா*
*லிறந்தவர் பிறந்த தில்லை யிருவினை தானு மில்லென*
*றறைந்தவ ரறிவி லாமை யதுவிடுத் தறநெ றிக்கட்*
*சிறந்தன முயலப் பண்ணுஞ் செப்புமிப் பொருண்மை*

*– யசோதர காவியம்*

அபயருசி கூறும் அறவுரையின்படி வாழ்பவர் அதன் பயனாக வீடுபேற்றை அடைவர் என்பது இதன் பொருள்.

### சூளாமணி

பெருங்காப்பியத்திற்கு இணையாகப் போற்றப்படுகின்ற சூளாமணியை இயற்றியவர் தோலாமொழித்தேவர். இந்நூல் பன்னிரண்டு காண்டங்களையும், 2131 விருத்தப்பாக்களையும்



உடையது. திவிட்டன், விசயன் ஆகிய இருமன்னர்களைப் பற்றிய வரலாற்றைக் கூறும் சூளாமணி ஒரு சமணநூல். திவிட்டனின் தந்தை பயாபதி மன்னன் "உயர்ந்து உலகின் முடிக்கோர் சூளாமணியானான்" என்பதனால் இந்நூலுக்குச் சூளாமணி எனப் பெயர் வழங்கிற்று என்பர்.

இந்நூல் ஊழ்வினைக் கோட்பாட்டை வலியுறுத்துகிறது. மனித வாழ்வில் உயர்நிலை பெற்றால்தான் சூளாமணியாகத் திகழமுடியும் எனக் கூறுகின்றது.

*ஆனைதுரப்ப அரவு உறை ஆழ்குழி*
*நானவிர் பற்றுபு நாலு மொருவனோர்*
*தேனின் அழிதுளி நக்குந் திறத்தது*
*மானுயர் இன்பம் மதித்தனை கொள்நீ*

உலக வாழ்வின் இயல்பு எத்தகையது என்பதை இப்பாடல்வழி அறியலாம்.

## நீலகேசி

சமணநூலான நீலகேசி குண்டலகேசிக்கு மறுப்புநூலாக இயற்றப்பட்டது. தமிழில் தோன்றிய முதல் தருக்க நூல் இதுவெனக் கூறலாம். இதனை நீலகேசித் திரட்டு என்றும் அழைப்பர். பத்துச் சருக்கங்களையும், 895 விருத்தப்பாக்களையும் கொண்டுள்ளது. பாஞ்சால நாட்டில் நடக்கும் உயிர்க்கொலையை, முனிச்சந்திரர் என்ற சமண முனிவர் தம் தவ வலிமையால் தடுத்தார். அவர் தவத்தைப் பழையனூர் நீலி அரசிபோல் வேடமிட்டு வந்து கலைக்க முயற்சிக்கிறது. ஆனால் அம்முயற்சியில் தோற்ற அவள், அவருக்கே மனைவியாகிறாள். பின்னர் சமண சமயத்தின் உயிர்க் கொள்கையாகிய கொல்லாமையை உலகெங்கும் பரப்புவதோடு, சமயத் தலைவர்கள் பலரையும் வாதில் வென்று சமணத் தலைவியாகிறாள்.

தெய்வங்களுக்கு உயிர்ப்பலி இடுதல் தீமையே என்பதை நீலகேசி எடுத்துரைக்கிறது. இறைவன் அருளிய அறநெறியில் ஐயுறல் கூடாது; பேராசை தவிர்க்க வேண்டும்; மெய்த்துறவோரை மதித்தல் வேண்டும்; நட்பு, புகழ் இவற்றால் மயங்குதல் கூடாது; பிறர் குற்றங்களை அகற்ற வேண்டும்; முறை தவறி நடப்பாரைத் திருத்த வேண்டும்; யாவரிடமும் மெய்யான அன்பு செலுத்த வேண்டும்; மாந்தர்தம் அறியாமை போக்க வேண்டும் என்று பல உலக நீதிகளை இந்த நூல் எடுத்துரைக்கிறது.

*ஆடுவார் காண்பா ரவரருகே தான்சென்று*
*தோடுவார்ந் தாலொப்பச் சொல்விரிப்பான் போற்பாவம்*
*கூடுவார் கூடாதார் கொன்றார்தின் றாரென்னும்*
*சேடனார்க் காண்டுநா மென்றுதான் சென்றாளே*

# பிறகாப்பியங்கள்

## பெருங்கதை

வடஇந்தியப் பகுதிகளைக் களமாகக் கொண்டு தமிழ்ச் சாயலோடு படைக்கப்பெற்ற முதல் தமிழ்க் காப்பியம் பெருங்கதை. இக்காப்பியத்தை இயற்றியவர் கொங்குவேளிர். உதயணன் என்னும் காவியத் தலைவனின் வாழ்க்கையை விவரித்துச் செல்கிறது இந்நூல். இதற்குக் கொங்குவேள் மாக்கதை, உதயணன் கதை என்ற வேறு பெயர்களும் உள்ளன.

குணாட்டியர் என்பவர் பிருகத்கதா எனும் நூலைப் பைசாச மொழியில் இயற்றினார். இக்காப்பியமே பெருங்கதையின் மூல நூலாகக் கருதப்படுகிறது. பெருங்கதை சமண சமயக்காப்பியமாகும். இந்நூல் ஆறு காண்டங்களை உடையது.

உதயணன் செல்லும் வழியிலுள்ள நருமதை என்னும் பேராற்றின் எழில் இங்கு அழகாகக் காட்டப்படுகின்றது.

*கல்லுட் பிறந்த கழுவாக் கதிர்மணி*
*மண்ணுட் பிறந்த மாசறு பசும்பொன்*
*வேயுட் பிறந்த வாய்கதிர் முத்தம்*
*வெதிரிற் பிறந்த பொதியவி ழருநெல்*
*மருப்பினுட் பிறந்த மண்ணா முத்தம்*
*வரையிற் பிறந்த வயிரமொடு வரன்றி*

நருமதை என்னும் ஆறானது ஒளிபொருந்திய மணி, பொன், முத்து, நெல், வைரம் என அனைத்தையும் தன்னுள் கொண்ட வளமுடையது என்பதை இப்பாடல் நிறுவுகிறது.

### காப்பியச்சுருக்கம்

உதயணனின் தாய் கருவுற்று இருந்தபோது, சரபம் என்னும் ஒரு பறவை அரண்மனையில் இருந்து அவளைத் தூக்கிச் சென்று விபுலாசலம் என்னும் இடத்தில் போட்டுவிட்டுச் செல்கிறது. அங்கே உதயணன் பிறக்கிறான். இதிலிருந்து, உதயணனின் வீரதீரச் செயல்கள், அரசனாதல், பல பெண்களை மணத்தல், துறவு பூணுதல் வரையான கதையைக்கூறுகிறது இக்காப்பியம். ஆசிரியப்பாவின் நேர்த்தியான வடிவமைப்பில் பல கருத்துகளைச் செம்மையாக ஆசிரியர் பேசியுள்ளார். நுணுக்கமான கலைத் திறன்கள் விளக்கப்பட்டிருப்பது போல ஆட்சித் திறனுக்கு அவசியமான கருத்துகளும் கூறப்பட்டிருப்பது இந்நூலின் சிறப்பு.

## கம்பராமாயணம்

தமிழில் தொடர்ச்சியாகச் செல்வாக்கு பெற்று விளங்கும் காப்பியங்களுள் ஒன்றாகத் திகழ்வது கம்பராமாயணம். இது கம்பரால் இயற்றப்பட்டது. வடமொழியில் வான்மீகி இயற்றிய இராமாயணத்தைத் தழுவி எழுதப்பட்டது இந்நூல். வழி நூலாயினும் கம்பர் தமக்கே உரிய நடையில் கருப்பொருள் சிதையாமல் இயற்றியுள்ளார். கம்பர் தாம் இயற்றிய நூலுக்கு இட்ட பெயர் இராமாவதாரம். இராமனின் வரலாற்றைக் கூறும் நூலாதலின் இராமாயணம் எனப்பட்டது. இதன் காலம் கி.பி.12-ஆம் நூற்றாண்டு.

கம்பராமாயணம் பெருங்காப்பியத்திற்குரிய இலக்கணங்களை முழுமையாகப் பெற்றது. சொற்சுவையும் பொருட்சுவையும் கொண்டு தமிழ்ப்பண்பாட்டோடு இயைந்து விளங்குவது. கம்பராமாயணம் பாலகாண்டம், அயோத்தியா காண்டம், ஆரண்ய காண்டம், கிட்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், யுத்த காண்டம் என்னும் ஆறு காண்டங்களையும், 118 படலங்களையும் உள்ளடக்கியது. இக்காப்பியத்தின் ஏழாவது காண்டமாக விளங்கும் உத்தர காண்டத்தை எழுதியவர் கம்பரின் சமகாலத்தவராகிய ஒட்டக்கூத்தர்.

இந்நூலின் சிறப்பு கருதியும் திருக்குறளின் பெருமை கருதியும் இவ்விரு நூல்களையும் "தமிழுக்குக் கதி" (கம்பராமாயணம், திருக்குறள்) என்று திருமணம் செல்வ கேசவராயர் கூறியுள்ளார்.

### காப்பியச்சுருக்கம்

அயோத்தி நகரத்து அரசனான தசரதனுக்கு இராமன், பரதன், இலக்குவன், சத்ருக்கன் ஆகிய நான்கு பிள்ளைகள் பிறப்பதும், இராமன் வில்லை வளைத்துச் சீதையை மணம் முடிப்பதும் பால காண்டத்தில் கூறப்படுகிறது.

கைகேயி கேட்ட இரண்டு வரங்களால் இராமன் காடடைவது அயோத்தியா காண்டத்திலும், இராவணன் சீதையைக் கவர்ந்து செல்வது ஆரணிய காண்டத்திலும், சீதையைத் தேடிச் செல்லும் இராமன் வாலியைக் கொன்று சுக்ரீவன், அனுமன் நட்பைப் பெறுவது கிட்கிந்தா காண்டத்திலும், இராமனைப் பிரிந்த சீதையின் நிலை, அனுமனின் ஆற்றல் ஆகியன சுந்தர காண்டத்திலும் இராவணனை அழித்து சீதையை மீட்பது யுத்த காண்டத்திலும் விளக்கப்படுகின்றன.

இறைவனின் தன்மையினைக் கம்பர் கூற வந்த விடத்து,

*சாணினும் உளன் ஓர்தன்மை அணுவினைச் சதகூறு இட்ட*
*கோணினும் உளன் மாமேருக் குன்றினும் உளன் இந்நின்ற*
*தூணினும் உளன் நீசொன்ன சொல்லினும் உளன் இத்தன்மை*
*காணுதி விரைவின் என்றான் நன்றெனக் கனகன் சொன்னான்*

என்னும் பாடல் வழியாக, இறைவன் உலகிலுள்ள எல்லாப் பொருள்களிலும் நீக்கமற நிறைந்திருப்பதாகக் கூறுகின்றார்.

## பெரியபுராணம்

பெரியபுராணம் எனப்படும் திருத்தொண்டர் புராணம் பெருங்காப்பிய இலக்கணங்கள் பொருந்தியும் சில நெகிழ்ச்சிகளை உள்வாங்கியும் இயற்றப்பெற்ற சைவக் காப்பியமாகும்.

சுந்தரர் எழுதிய 'திருத்தொண்டத்தொகை', நம்பியாண்டார் நம்பி எழுதிய 'திருத்தொண்டர் திருவந்தாதி' ஆகிய நூல்களை முதல் நூலாகக் கொண்டு இந்நூல் இயற்றப்பட்டது.

இது 63 அடியார் பெருமக்களை மையமாகக் கொண்டு திகழ்கின்றது. இந்நூல் பெரும் பிரிவாக இரண்டு காண்டங்களையும், உட்பிரிவாக 13 சருக்கங்களையும் உடையது. இது சைவத்திருமுறைகளுள் பன்னிரண்டாம் திருமுறையாக வைக்கப்பட்டுள்ளது. இந்நூலின் ஆசிரியர் சேக்கிழார். இவரின் இயற்பெயர் அருண்மொழித் தேவர்.

ஆண் பெண் வேறுபாடின்றிப் பல இனங்களையும், தொழில் பிரிவுகளையும் சார்ந்த சிவனடியார்களைப் பற்றிய நூலாக அமைந்துள்ளதால் இந்நூலைத் தேசிய இலக்கியம் என்று சான்றோர்கள் பாராட்டுவர்.

அடியவர்களின் பெருமையைக் கூற கருதிய சேக்கிழார்,

*பெருமையால் தம்மை ஒப்பார் பேணலால் எம்மைப் பெற்றார்*
*ஒருமையால் உலகை வெல்வார் ஊனமேல் ஒன்றும் இல்லார்*
*அருமையாம் நிலையில் நின்றார் அன்பினால் இன்பம் ஆர்வார்*
*இருமையும் கடந்து நின்றார் இவரைநீ அடைவாய் என்று*

என்ற பாடல்வழியே இறைவனின் மெய்யன்பினைப் பெற்றவர்கள் இம்மை மறுமைகளைக் கடந்து இனிய நிலையைப் பெறுவார்கள் எனக் கூறுகிறார்.

### காப்பியச்சுருக்கம்

சுந்தரரைக் காப்பியத் தலைவராகக் கொண்டு இந்நூல் அமைகின்றது. சுந்தரரின் சிறப்பு, சைவ அடியார்களின் சிறப்பு, சிவபெருமானின் அருள்திறம், அடியார்களின் வரலாறு, அவர்கள் கடைப்பிடித்த தொண்டு நெறி, இறைவன் அவர்களை ஆட்கொண்ட விதம், அடியார்கள் இறைவனை வழிபட்டு முக்தி பெற்ற தன்மை ஆகியன இந்நூல் முழுதும் எடுத்துக் கூறப்படுவதால் சேக்கிழார் இந்நூலிற்குத் திருத்தொண்டர் மாக்கதை எனப் பெயரிட்டார். செயற்கரிய செயல் புரிந்த அடியார்களின் சிறப்பினை உரைப்பதால் இதனைச் சான்றோர்கள் பெரியர் புராணம் என்று கூற, காலப் போக்கில் இந்நூல் பெரியபுராணம் என்று வழங்கப்பட்டது.

**அறிவோம் தெளிவோம்**

### இருபதாம் நூற்றாண்டுக் காப்பியங்கள்

பழங்காப்பிய மரபைப் பின்பற்றிய காப்பியங்களும், புதுக்கவிதை போன்ற புதிய மரபைப் பின்பற்றிய காப்பியங்களும் இருபதாம் நூற்றாண்டில் படைக்கப்பட்டன.

பாரதியின் பாஞ்சாலி சபதம், குயில்பாட்டு, பாரதிதாசனின் பாண்டியன் பரிசு, புரட்சிக்கவி, வீரத்தாய் போன்றன இவ்வகையில் அடங்குவன. கவிமணி தேசிக விநாயகம் எழுதிய மருமக்கள்வழி மான்மியம், கண்ணதாசனின் ஆட்டனத்தி ஆதிமந்தி, இயேசு காவியம், மாங்கனி, முடியரசனின் பூங்கொடி, வீரகாவியம், கவியோகி சுத்தானந்த பாரதியின் பாரதசக்தி மகாகாவியம், சாலை இளந்திரையனின் சிலம்பின் சிறுநகை, புலவர் குழந்தையின் இராவண காவியம் போன்ற காப்பியங்கள் பழங்காப்பிய மரபைப் பின்பற்றிப் படைக்கப்பட்டவை.

யாப்பு வடிவத்தை உடைத்து வளர்த்தெடுக்கப்பட்ட புதுக்கவிதைகளிலும் காப்பியங்கள் தற்காலத்தில் படைக்கப்படுகின்றன. பாரதியின் வாழ்க்கை வரலாற்றைப் புதுக்கவிதை வடிவில் கவிராஜன் கதை என்னும் பெயரில் காப்பியமாகப் படைத்துள்ளார் வைரமுத்து. கவிஞர் வாலி இராமயணத்தை அவதார புருஷன் என்ற பெயரிலும், மகாபாரதத்தைப் பாண்டவர் பூமி என்ற பெயரிலும் புதுக்கவிதை வடிவில் காப்பியமாக்கியுள்ளார்.

# சமய இலக்கியங்கள்

## பக்திமை – விளக்கம்

கடவுளை வணங்குதல், கடவுளிடம் தன்னை அர்ப்பணித்தல் என்னும் பொருளில் இன்று 'பக்தி' என்னும் சொல் பயன்படுத்தப்படுகிறது. கடவுளின் மீது மனிதன் கொண்ட நம்பிக்கையைப் பக்தி என்பர். பக்தியால் அன்பு பெருகி உயிர் தூய நிலையை அடைகிறது. கடவுளின் மீது மனிதன் கொண்டுள்ள எல்லைகடந்த அன்பே 'பக்தி' என்ற பொருளில் தமிழிலக்கியங்களில் மிகுதியும் கையாளப்படுகின்றது.

## பக்தி இலக்கியங்களின் தோற்றம்

பக்தி இலக்கிய காலத்தில் இயற்றமிழ்ப் பாடல்கள் பண்ணோடு இயைந்து இசைத் தமிழ்ப்பாடல்களாக மாறின. கற்றோர் நாவில் மட்டும் நடனமாடிய தமிழ், கல்லாதார் நெஞ்சிலும் களிநடனம் புரிந்தது. வடமொழிச் சொற்களும் தமிழுடன் இணைந்து புதிய மரபு தோன்றியது. சொல் வளமும் உணர்ச்சிப் பெருக்கும், இசை இனிமையும் சேர்ந்து தமிழ் இலக்கியம் புது மெருகு பெற்றது. இந்த எழுச்சிக்கு ஆதரவளித்த பல்லவர் ஆட்சிக்காலம் பக்தி இலக்கியத்தின் மறுமலர்ச்சிக்காலம் எனப்படுகிறது. பக்தி இயக்கத்தால் தமிழகத்தில் தமிழுக்கு மீண்டும் புதுப்பொலிவு ஏற்பட்டது.

இக்காலத்தில் எழுந்த பக்தி இலக்கியங்கள் தனித்தனிப் பாடல்களாகவும் பிரபந்தங்களாகவும் வெளிப்பட்டன.

சங்க இலக்கியத்தில் மாந்தரின் காதல் வாழ்வு கற்பனை கலந்த பாடல்களாகப் பாடப்பட்டது. பின்னர் இந்நிலை மாறி, தெய்வத்தின்மீது கொண்ட காதலைப் பாடும் பாடல்களாக வளர்ச்சிபெற்றன. அரசர்களின் வீரம் மற்றும் கொடைகளைப் பாடிய பாடல்கள், கடவுளின் திருவிளையாடல்களையும் அருட்செயல்களையும் பாடும் பாடல்களாக மாறின. கற்பனைக் காதலுக்குப் பின்னணியாக இயற்கைச் சூழல் வருணிக்கப்பட்டது போலவே கடவுளிடம் செலுத்தும் பக்திக்குப் பின்னணியாகக் கோவில் தலங்களைச் சூழ்ந்த ஊர்களின் இயற்கையழகைப் பாடும் நிலை உருவானது.

## தமிழகத்தில் பக்திநெறி

சங்க காலத்திலும் அதற்குப் பின்னரும் இயற்கையை முன்நிறுத்திய வழிபாட்டு முறைகளும் (பராய்க்கடன், வெறியாட்டு போன்ற சடங்குகள்) நம்பிக்கைகளும் இருந்தன. அக்காலகட்டத்தில் வைதிக நெறியும், இதனை மறுத்த சமண பௌத்த நெறிகளும் தமிழகத்தில் பரவின.

சமண பௌத்த சமயங்கள், "உயிர், உடம்பு, பொருள், இளமை ஆகியன நிலையாக நில்லாமல் மறைந்துவிடக் கூடியன; இவற்றை உணர்ந்து அறத்தைச் செய்பவனாக மனிதன் மாறவேண்டும்" என்று வலியுறுத்தின. சமயப் பெரியோர் அருளுணர்வுடையோராகவும் பண்பாடு மிக்கவராகவும் இருந்தனர்.

மேலும், "பிறவா நிலையை அடைவதற்குத் துறவறமே சிறந்த வழி" என்ற அறவியல் கருத்து நிலவியது. உலகில் உள்ள நிலையில்லாத இன்பங்களை ஒதுக்கி, நிலையான வீடுபேற்றை நாடுவதே கடமை என்று கருதும் நிலை உருவானது.

இச்சூழலில், நாயன்மார்களும் ஆழ்வார்களும் தோன்றி "உலக இன்பங்களைத் துய்த்தவாறே இறைவனிடத்தில் பக்தி செலுத்தலாம்; இறைவன் அன்பின் வடிவானவன்; அன்பு ஒன்றே அவனை அடையும் வழி" என இல்லறத்திற்கும் முதன்மை கொடுத்தனர். ஊர்கள் தோறும் கோவில்களுக்குச் சென்று இசைப்பாடல்களால் மனமுருக இறைவனைப் பாடிப் பரவினர். அப்பாடல்கள், கற்றவர்களோடு மற்றவர்களும் கூடிப் பாடுமாறு எளிய இனிய தமிழில் இருந்தன. இறைவனை, ஆண்டான், தந்தை, தோழன், நாயகன் என பல பரிமாணங்களில் கண்டு போற்றினர்.இவற்றையே தாச, சற்புத்திர, சக, ஞான மார்க்கங்கள் என்று குறிப்பிடுகின்றனர்.



12th ADVNCEI Tamil - Chap 1&2.indd 29 04-04-2020 15:03:52

திருநாவுக்கரசர், குலசேகராழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார் போன்றோர் அடிமை நெறியையும், திருஞானசம்பந்தர் பிள்ளைமை நெறியையும்,

சுந்தரர், திருமழிசையாழ்வார் போன்றோர் தோழமை நெறியையும், மாணிக்கவாசகர், திருமங்கையாழ்வார் போன்றோர் நாயகன் நாயகி நெறியையும் பின்பற்றினர். பெரியாழ்வார் இறைவனைக் குழந்தையாகக் கருதித் தாலாட்டுப் பாடல்கள் பல பாடியுள்ளார். அவர்தம் வளர்ப்பு மகளான ஆண்டாள் இறைவனையே தன் தலைவனாகப் பாவித்து வாழ்ந்தாள்.

சிவனைத் தலைவனாகக் கொண்ட 27 அடியார்கள் பாடிய பதிகங்கள் பன்னிரு திருமுறைகள் என்றும், திருமாலைத் தலைவனாகக் கொண்ட 12 ஆழ்வார்கள் பாடிய பாசுரங்கள் நாலாயிரத் திவ்யபிரபந்தம் என்றும் அழைக்கப்பட்டன.

முகலாயப் படையெடுப்பின் காரணமாகத் தமிழகத்தில் இசுலாம் பரவியது. இசுலாமியக் கவிஞர்கள் தமிழ்மரபினைப் பின்பற்றி இறைவனையும், இறைவனின் திருத்தூதரான நபிகள் நாயகத்தையும் போற்றிப் பரவினர். இசுலாமியப் பாடல்கள் மொழிபெயர்ப்புப் பாடல்களாகவும், நேரடிப் பாடல்களாகவும் இருவகைகளில் பாடப்பெற்றன.

பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதியில் மேலைநாட்டவர் பெருமளவில் தமிழகத்திற்கு வருகைபுரிந்தனர். அவர்களுள் கிறித்துவ மதபோதகர்களும் அடங்குவர். அவர்கள், பன்மொழிப் புலமையும் பல்துறை அறிவும் மிக்க தமிழ்மக்களிடம் இரண்டறக்கலந்து தமிழைக் கற்றனர். தமிழின்வழி தங்கள் சமயக் கருத்துகளைப் பரப்பினர். இதன் விளைவாக கிறித்துவ இலக்கியங்களும் தமிழில் பல்கிப்பெருகின.

### அறிவோம் தெளிவோம்

**பன்னிரு திருமுறைகள்**

| திருமுறைகள் | நூல்கள் | ஆசிரியர்கள் |
|---|---|---|
| முதல் திருமுறை<br>இரண்டாம் திருமுறை<br>மூன்றாம் திருமுறை | தேவாரம் | திருஞான சம்பந்தர் |
| நான்காம் திருமுறை<br>ஐந்தாம் திருமுறை<br>ஆறாம் திருமுறை | தேவாரம் | திருநாவுக்கரசர் |
| ஏழாம் திருமுறை | தேவாரம் | சுந்தரர் |
| எட்டாம் திருமுறை | திருவாசகம்,<br>திருக்கோவையார் | மாணிக்கவாசகர் |
| ஒன்பதாம் திருமுறை | திருவிசைப்பா,<br>திருப்பல்லாண்டு | திருமாளிகைத்தேவர்<br>உள்ளிட்ட ஒன்பது பேர் |
| பத்தாம் திருமுறை | திருமந்திரம் | திருமூலர் |
| பதினோராம் திருமுறை | 40 நூல்களின் தொகுப்பு | காரைக்காலம்மையார்<br>உள்ளிட்ட பன்னிரண்டு பேர் |
| பன்னிரண்டாம் திருமுறை | திருத்தொண்டர் புராணம்<br>(பெரிய புராணம்) | சேக்கிழார் |

## சைவம்

திருநாவுக்கரசர் சிவபெருமானிடம், இப்பிறப்பு மட்டுமல்லாமல் எப்பிறப்பிலும் உனக்கு நான் அடிமை; நின் திருநாமமே எனது படைக்கலம் எனக் குறிப்பிடுவதைப் பின்வரும் பாடலால் அறியலாம்.

*படைக்கல மாகவுன் நாமத் தெழுத்தஞ்சுஎன் நாவிற்கொண்டேன்;*
*இடைக்கல மல்லேன்; எழுபிறப்பும் உனக்காட் செய்கின்றேன்;*
*துடைக்கினும் போகேன்; தொழுது வணங்கித் தூநீறணிந்துன்*
*அடைக்கலங் கண்டாய் அணிதில்லைச் சிற்றம் பலத்தரனே!*

பாடல் பொருள்: அழகிய தில்லை நகரிலுள்ள சிற்றம்பலத்தில் உள்ள பெருமானே! என்னை அறிவிலார் செய்கின்ற தீங்குகளிலிருந்து பாதுகாக்கும் படைக்கருவியாக உன் திருநாமமாகிய திருவைந் தெழுத்தினை அடியேன் நாவினில் நீங்காது கொண்டுள்ளேன். ஒருபோதும் உனக்கு அடிமைத் தொண்டு செய்தலைத் தவிர்ந்தேன் அல்லேன். எடுக்கும் பிறவிகள் எதுவாக இருந்தாலும் அதற்கேற்ப உனக்கு அடிமைத் தொண்டு செய்கிறேன். அடியேனை நீ விலக்கினாலும் அடியேன் உன்னை விட்டுப் பிரியேன். எப்பொழுதும் உன்னை மனத்தால் தொழுது உடலால் வணங்கித் திருநீறு அணிந்து உன்னால் காக்கப்படவேண்டிய பொருளாக அடியேன் இருக்கிறேன்.

தன்னைச்சரணடைந்த அடியவர்களைக் காத்தருளும் தயாளனாக இறைவன் விளங்குவதை அற்புதத்திருவந்தாதியில் காரைக்காலம்மையார் எடுத்துக்கூறுகிறார்.

*இறைவனே எவ்வுயிரும் தோற்றுவிப்பான் தோற்றி*
*இறைவனே ஈண்டு இறக்கம் செய்வான் – இறைவனே*
*எந்தாய் என இரங்கும் எங்கள்மேல் வெந்துயரம்*
*வந்தால் அதுமாற்று வான்.*

பாடல் பொருள்: இறைவனே எவ்வுயிரையும் தோற்றுவிப்பவன். உயிர்களைக் காத்து அருள்பவனும் அவனே. இறைவனையே தன் தந்தை எனப்போற்றிப்பரவும் அடியவர்களுக்கு எவ்வளவு கொடிய துயரம் வரினும் அதை உடனே மாற்றிவிடுவானும் அவ்விறைவனே,

## வைணவம்

நாராயணனாகிய திருமாலின் பெயரை அன்போடு உச்சரிப்பதால் அடியவர்கள் எய்தும் நன்மையை பூதத்தாழ்வார் பின்வரும் பாடலால் உணர்த்துகிறார்.

*ஞானத்தால் நன்குணர்ந்து நாரணன்றன் நாமங்கள்*
*தானத்தால் மற்றவன் பேர் சாற்றினால் – வானத்*
*தணியமர ராக்குவிக்கு மஃதன்றே நாங்கள்*
*பணியமரர் கோமான் பரிசு.*

பாடல் பொருள்: ஞானத்தால் நன்றாக உணர்ந்து திருமாலின் திருப்பெயர்களை அன்பின் உச்சியில் நின்று சொன்னால், தேவருலகிற்கு அணியாகவுள்ள இறைவனோடு என்றும் உடன் உறைபவர்கள் போலே நம்மை இறைவன் ஆக்குவான்.

ஆண்டாள் அருளிச்செய்த நாச்சியார் திருமொழிப் பாசுரங்களைப் பாடும் அடியவர்கள் துன்பம் நீங்கப்பெறுவர் என்பதைக் கீழ்வரும் பாடல் கூறுகிறது.

*அல்லல் விளைத்த பெருமானை ஆயர் பாடிக் கணிவிளக்கை*
*வில்லி புதுவை நகர்நம்பி விட்டு சித்தன் வியன்கோதை*
*வில்லைத் தொலைத்த புருவத்தாள் வேட்கை யுற்று மிகவிரும்பும்*
*சொல்லைத் துதிக்க வல்லார்கள் துன்பக் கடலுள் துவளாரே*

பாடல் பொருள்: வில்லிபுத்தூர் நகர் நம்பி விஷ்ணு சித்தன் என்ற பெரியாழ்வாரின் மகள் கோதை. வில் போன்ற அழகிய புருவத்தை உடையவள். கொடியவர்களுக்குத் துன்பம் விளைவித்த பெருமானை, ஆயர்பாடிக்கு அழகான விளக்காகத் திகழும் கண்ணனைப் புகழ்ந்து இவள் பாடிய பாசுரங்களைப் பாடிப்பரவுவோர் துன்பமாகியக் கடலுள் மூழ்கித் துவள மாட்டார்கள்.

## அறிவோம் தெளிவோம்

### பன்னிரு ஆழ்வார்கள்

| வரிசை எண் | ஆழ்வார்கள் | நூல்கள் |
|---|---|---|
| 1. | பொய்கையாழ்வார் | முதல் திருவந்தாதி |
| 2. | பூதத்தாழ்வார் | இரண்டாம் திருவந்தாதி |
| 3. | பேயாழ்வார் | மூன்றாம் திருவந்தாதி |
| 4. | திருமழிசையாழ்வார் | நான்காம் திருவந்தாதி, திருச்சந்த விருத்தம் |
| 5. | நம்மாழ்வார் | திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி |
| 6. | குலசேகராழ்வார் | பெருமாள் திருமொழி |
| 7. | தொண்டரடிப் பொடியாழ்வார் | திருமலை, திருப்பள்ளியெழுச்சி |
| 8. | பெரியாழ்வார் | திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி |
| 9. | ஆண்டாள் | நாச்சியார் திருமொழி, திருப்பாவை |
| 10. | திருப்பாணாழ்வார் | திருப்பதிகம் |
| 11. | திருமங்கையாழ்வார் | பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் |
| 12. | மதுரகவியாழ்வார் | திருப்பதிகம் |

### சமணம்

அனைத்துவிதமான சிறந்த குணங்களைச் செல்வமெனக் கொண்டு, மூவுலகும் போற்ற அழிவற்ற இன்பம் நல்கும் தேவாதி தேவனின் திருவடியைப் போற்றுவோம் என்று சமண சமயக் காப்பியமான சீவகசிந்தாமணியில் திருத்தக்கத்தேவர் குறிப்பிடுகிறார்.

*மூவா முதலா உலகம்ஒரு மூன்றும் ஏத்தத்*
*தாவாத இன்பம் தலை யாயது தன்னின் எய்தி*
*ஓவாது நின்ற குணத்தொண்ணிதிச் செல்வனென்ப*
*தேவாதி தேவன் அவன் சேவடி சேர்தும் அன்றே!*

**பாடல் பொருள்:** மூன்று உலகமும் ஏத்தும் தன்மையன்; பேரின்ப வடிவினன்; உயர் குணங்கள் அனைத்தும் தாங்கியவன்; தேவர்களுக்கு எல்லாம் முதன்மையானவன்; அவன் திருவடிகளை வணங்கிப் போற்றுவோமாக.

### பௌத்தம்

மணிமேகலை, பௌத்த சமயக் கருத்துகளைப் பரப்பும் சிறந்ததோர் நூலாக விளங்குகிறது. இது காமம், வெகுளி, மயக்கம், என்னும் மூன்று குற்றங்களையும் நீக்கும் தூய அறிவுமிக்க நூலை அருளிய புத்தரைப் போற்றுகிறது.

*முரணாத் திருவற மூர்த்தியை மொழிவோன்*
*அறிவு வறிதா உயிர்நிறை காலத்து*
*முடிதயங்கு அமரர் முறைமுறை இரப்பத்*
*துடித லோகம் ஒழியத் தோன்றிப்*
*போதி மூலம் பொருந்தி இருந்து*
*மாரனை வென்று வீரன் ஆகிக்*
*குற்றம் மூன்றும் முற்ற அறுக்கும்*
*வாமன் வாய்மை ஏமக் கட்டுரை*
*இறந்த காலத்து எண்ணில்புத் தர்களும்*
*சிறந்துஅருள் கூர்ந்து திருவாய் மொழிந்தது*

பாடல் பொருள்: நல்லறிவின்றி மக்கள் பூமியில் நிரம்பியிருந்த காலத்தில்; தேவர்கள் புத்தரை வணங்கி நிலவுலகில் தோன்றி அறங்கூற வேண்டுமென வேண்டினர். புத்தர் துடித லோகத்தை விட்டு நீங்கி மண்ணுலகில் தோன்றி; புத்த கயை யென்னுமிடத்தே அரசமரத்தினடியில் எழுந்தருளினார். மாரனென்னும் தேவனை வென்றதனால் வீரனாக விளங்கியவர், மூவகைக் குற்றங்களையும் முழுமையாக ஒழிப்பவர் புத்த தேவன். அவர் மெய்ம்மை நிறைந்ததும் உயிர்கட்குப் பாதுகாப்பாக எடுத்தோதியதும்; உயிர்கள் பால் மிக்க அருள் பூண்டு; மறவாது நிலைபெற வற்புறுத்தப்பட்டதுமாகிய அறம் ஈண்டு யான் கூறலுறுவது என முன்பின் மாறுபாடில்லாத அறங்களின் வடிவாகிய புத்ததேவன் வரலாற்றினைச் சுருங்கக் கூறலுற்றார் அறவணன்.

## இசுலாம்

சீறாப்புராணத்தில் உமறுப்புலவர் முகம்மது நபிகளின் அருளில் ஆட்பட்டுப் பக்திமை தோன்ற வியந்து போற்றுகின்றார்.

*திருவினுந் திருவாய்ப் பொருளினும் பொருளாய்த்*
*தெளிவினுந் தெளிவதாய்ச் சிறந்த*
*மருவினு மருவா யணுவினுக் கணுவாய்*
*மதித்திடாப் பேரொளி யனைத்தும்*
*பொருவினும் பொருவா வடிவினும் வடிவாய்ப்*
*பூதலத் துறைந்த பல் லுயிரின்*
*கருவினுங் கருவாய்ப் பெருந்தலம் புரந்த*
*கருத்தனைப் பொருத்துதல் கருத்தே.*

பாடல் பொருள்: மேன்மையிலும், மேன்மையாய், உண்மையிலும் உண்மையாய், அறிவிலும் அறிவாய்ச், சிறப்பினையுடைய நறுமணத்தினும் நறுமணமாய், அணுவுக்கும் அணுவாய்க், கணிக்கக் கூடாத பெரிய பிரகாச முழுவதும் ஒப்பிலும் ஒப்பாய் உருவிலும் உருவாய்ப் பூமியினிடத்துத் தங்கியபல ஜீவ ராசிகளின் கருவிலுங் கருவாய்ப் பெரிய உலகத்தை ஆட்சி செய்கின்ற அல்லாவை இருதயத்தின்கண் பொருந்தச் செய்வது கருத்தாகும்.

## கிறித்துவம்

இயேசு பெருமான் மனிதகுலத்தின் உயர்வுக்காக உயிர் நீத்த திருச்சிலுவை, கிறித்தவ நம்பிக்கைக்கு அடிப்படையாக விளங்குகிறது. சிலுவையில் அறையப்பட்டபோதும் பகைவர்க்கு அருளிய இயேசுவே உலக இரட்சகர்; இதற்கு வேறு சான்றுகள் வேண்டுமோ? என அன்பு மேலிடும் இரட்சணிய யாத்திரிகப் பாடல் வழியே எச்.ஏ.கிருட்டிணப்பிள்ளை வினவுகிறார்.

*கீண்டிருப்பு முளையுடலைக் கிழித்துருவி வதைப்புண்டு*
*மாண்டுபடும் போதிவர்க்கு மன்னியுமென் றுரைத்தமொழி*
*ஈண்டிவரே உலகினுக்கோர் இரட்சகரென் றெடுத்துரைக்கும்.*
*வேண்டுமோ இனிச்சான்றும் இதைவிடுத்து வேறொன்றே?*

பாடல் பொருள்: இரும்பு ஆணிகளால் உடலைத் துன்புறுத்தி சிதைத்தபோதும், "இச்செயலைச் செய்தோரை மன்னித்தருளும் ஆண்டவரே" என வேண்டிய இயேசுவே உலகைக் காக்க வந்த பெருமானாவார். பகைவர்க்கும் அருளிய இவ்வுயிரிரக்கப் பண்பு ஒன்றே இவர் இவ்வுலகைக் காக்க வந்தவர் என்பதற்கு இதைவிட வேறு சான்று வேண்டுமோ?

தமிழில் தோன்றிய சமய இலக்கியங்கள் பலவாயினும் அவற்றின் நோக்கம், மனித மனங்களைப் பகுவப்படுத்தி அன்பின் வழி செலுத்துதலே ஆகும்.

### அறிவோம் தெளிவோம்

**சமயங்களின் பொதுநீதி**

நிலத்தின் கடினத்தன்மையை இளக்கி நெகிழச்செய்து பயன்படு பொருள்களின் விளைவுக்குத் தகுதியாக்குவது உழவு. சுவையுடையனவாக, ஆனால் ஒன்றோடொன்று மாறுபட்ட சுவையுடையனவாகிய பொருள்களைச் சுவைத்தற்குரிய சுவையுடையனவாக ஆக்குவது சமைத்தல். மனித உள்ளங்களை இன்ப அன்பின் விளைநிலமாகத் தகுதிப்படுத்திப் பக்குவப்படுத்தும் தத்துவத்திற்கு, வாழ்க்கை முறைக்குச் சமயம் என்பது பெயர். மனித வாழ்க்கையைச் சமைத்துப் பக்குவப்படுத்துவதே சமயத்தின் நோக்கம்.

– குன்றக்குடி அடிகளார்

# சிற்றிலக்கியங்கள்

## சிற்றிலக்கியங்கள் – ஓர் அறிமுகம்

தமிழ் இலக்கியங்கள் பேரிலக்கியம், சிற்றிலக்கியம் என இரு வகைப்படும். பாட்டுடைத் தலைவனின் வாழ்வில், சிறுகூறினை மட்டும் எடுத்துக்கொண்டு அறம், பொருள், இன்பம், வீடுபேறு என்னும் நான்கு உறுதிப்பொருள்களுள் ஒன்று அமையப்பாடுவது சிற்றிலக்கியம். இது தொண்ணூற்றாறு வகைப்படும். அவற்றுள், அந்தாதி, கலம்பகம், பரணி, கோவை, சதகம், பிள்ளைத்தமிழ், பள்ளு, குறவஞ்சி, உலா, தூது ஆகியன பெரும்பாலும் வழக்கில் உள்ளன.

## வகையும் தொகையும்

சிற்றிலக்கியங்களின் இலக்கணத்தையும் எண்ணிக்கையையும் பாட்டியல் நூல்கள் கூறுகின்றன. ஒவ்வொரு பாட்டியல் நூலும் சிற்றிலக்கியங்களின் எண்ணிக்கையைக் கூறுமிடத்து வேறுபடுகின்றன. இருப்பினும் பிரபந்த மரபியல், பிரபந்தத் தீபிகை, சதுரகராதி, தொன்னூல் விளக்கம் ஆகியன 96 எனக் குறிப்பிடுகின்றன.

### அந்தாதி

ஒரு பாடலின் இறுதி எழுத்தோ, அசையோ, சீரோ, அடியோ அடுத்த பாடலின் அல்லது அடுத்த அடியின் தொடக்கமாகக் கொண்டு பாடப்படுவது அந்தாதி. (அந்தம்+ஆதி; அந்தம்–இறுதி; ஆதி– தொடக்கம்) இது "சொற்றொடர்நிலை" எனப் பெயர்பெறும்.

### அருணகிரி அந்தாதி

*செப்பரிய ஞானச் செழுஞ்சுடரே சோணகிரி*
*அப்பனே நன்னூல் அறிந்தாலும் – இப்புவியில்*
*கொண்டகுரு வைப்பொருளாக் கொள்ளார் பயனேது?*
*கண்டவெல்லாம் வீணிலே கற்று.*

*கற்றதனால் தொல்லைவினைக் கட்டறுமோ? நல்லகுலம்*
*பெற்றதனால் போமோ பிறவிநோய் – உற்றகடல்*
*நஞ்சுகந்து கொண்டருணை நாதரடித் தாமரையை*
*நெஞ்சுகந்து கொள்ளா நெறி.*

(மேற்கண்ட இரு பாடல்களில், முதல் பாடலின் இறுதிச் (அந்தம்) சீராகிய கற்று என்பது, அடுத்த பாடலின் முதல் (ஆதி) சீராக அமைந்து அந்தாதித் தொடையாக வந்துள்ளது)

பாடல் விளக்கம்: உலகில் நல்ல பல நூல்களைத் தெளிவாகக் கற்றுத் தேர்ந்தாலும், தனக்குக் கிடைத்த குருநாதரை மதியாதவருக்கு யாதொருபயனுமில்லை.ஈட்டியசெல்வங்களும், துய்த்த இன்பங்களும் எவ்விதப் பயனுமின்றி வீணே கெட்டழியும். எனவே, சொல்லுதற்கு அரிய அறிவுப்பொருளாகவும் சுடராகவும் தந்தையாகவும் விளங்கும் அருணகிரியில் (திருவண்ணாமலை) கோவில் கொண்டுள்ள அண்ணாமலை அண்ணலைக் குருவாகப் போற்றி வாழ்வாயாக!

இறைவன் பாற்கடலில் எழுந்த நஞ்சினைத் தனது கண்டத்தில் அடக்கிய கருணையாளன். அவனது திருவடியாகிய அருளை நெறியாகக்கொண்டு வாழ வேண்டும். அவ்வாறில்லாமல், எவ்வளவுதான் கற்றாலும், நல்ல குலத்திலே பிறந்தாலும் வினைகள் நீங்கிவிடுமா? இல்லையே!

### கலம்பகம்

அம்மானை, கார், ஊசல், கைக்கிளை, புயவகுப்பு முதலான பதினெட்டு உறுப்புகள் அமையப் பாடப்படுவது கலம்பகம் (கலம் – பன்னிரண்டு; பகம் – ஆறு). அவற்றுள் 'அம்மானை' என்பது மகளிர் விளையாடும் விளையாட்டுகளில் ஒன்று. பாட்டுடைத் தலைவனின் புகழை ஒரு பெண் புகழ்ந்து பாட, மற்றொரு பெண் அது தொடர்பான ஒரு வினா



கேட்டு, மூன்றாம் பெண் ஒரு கருத்தைக் கூறி அதை முடிப்பது அம்மானை.

### திருக்காவலூர்க் கலம்பகம்

*சீர்த்ததிருக் காவல்நல்லூர்த் தேவஅணங்கு தாள்கமலம்*
*நீர்த்ததிருத் திங்கள்மேல் நின்றனகாண் அம்மானை*
*நீர்த்ததிருத் திங்கள்மேல் நின்றனஎன்று ஆம்ஆகில்*
*ஆர்த்ததிரு வண்டுஉவப்ப ஆங்குஅலரா அம்மானை*
*போர்த்ததிருச் சோதிஇன்புஅப் போதுஅலரும் அம்மானை*

பாடல் விளக்கம் :

முதல் பெண் கூறுவது:

பெருமைமிக்க செல்வமுடைய திருக்காவலூரின் தெய்வப்பெண் அடைக்கல அன்னை. அவள் திருவடிகளாகிய தாமரை மலர்கள் குளிர்ந்த நிலவின்மீது பொருந்தி உள்ள அதிசயத்தைப்பார்.

இரண்டாம் பெண் வினாவுதல்:

"நிலவில் அன்னையின் தாமரை போன்ற திருவடி பொருந்தி உள்ளது" என நீ கூறுகின்றாய். அது உண்மை. ஆனால் நிலவு உள்ள இடத்தில் தாமரை மலர்கள் மலருமா?

மூன்றாம் பெண் முடித்தல்:

அன்னையின் அருளாகிய,"கதிரவன் நிகர்த்த சோதியின் இன்பத்தில் தாமரைகள் மலர்வது இயல்புதானே" என்று முடிக்கின்றாள்.

### பரணி

போரில் ஆயிரம் யானைகளைக் கொன்று வெற்றிபெறும் வீரனின்மேல் பாடப்படுவது பரணி. போரில்தோற்ற அரசனது நாட்டின் பெயரால் இந்நூல் வழங்கப்பெறும்.

### தக்கயாகப்பரணி

*சிரமும் சிரமும் செறிந்தன*
*சரமும் சரமும் தறிப்பவே*

*கனமும் கனமும் கனைத்தன*
*சினமும் சினமும் சிறக்கவே*

*கடையும் கடையும் கலித்தன*
*தொடையும் தொடையும் துரப்பவே*

*தாரும் தாரும் தழைத்தன*
*தேரும் தேரும் திளைப்பவே*

*தோலும் தோலும் துவைத்தன*
*கோலும் கோலும் குளிப்பவே!*

பாடல் விளக்கம்: வீரபத்திரர் – தக்கன் படைகளுக்கிடையே போர் நிகழ்கிறது. வீரபத்திரருக்கு உதவியாகப் பூதகணங்களும் தக்கனுக்கு உதவியாகத் தேவர்களும் துணைநின்று போர் புரிகின்றனர். போரில் அம்புகளும் எதிர் அம்புகளும் மேலே விழுவதால்வீரர்களின்தலைகள் எல்லாம்மழை கொட்டுவது போல வீழ்ந்தன. வீரபத்திரரின் பூதகணங்கள் மேகங்களைப்போல் கோபம் மிகுந்து ஒலி எழுப்பின. காலாட்படையும் காலாட்படையும் மோதிக்கொண்டன. தேர்ப் படையும் தேர்ப்படையும் மோதிக் கொண்டன.

ஈட்டியும், ஈட்டியும் மிகுதியாகப் பாய்ந்ததால் தலைகள் செறிந்தன. மேகக் கூட்டங்கள் ஒன்றுசேர்வது போல் வீரர்களின் சினம் ஒன்றுசேர்ந்தது. நீர்த்திவலைகள் ஒன்றுசேரும்போது எழும் ஓசைபோல் அம்புகள் ஒன்றோடொன்று மோதி ஒலி எழுப்பின. காலாட்படையும் தேர்ப்படையும் யானைப்படையும் மோதிக்கொள்கின்றன.

## கோவை

அகப்பொருளுக்குரிய துறைகள் பலவற்றை 400 கட்டளைக் கலித்துறையால் சங்கிலித்தொடர் போலப் பாடப்பட்டது கோவையாகும். கடவுளரையோ அரசரையோ படைத்தலைவரையோ வள்ளல்களையோ பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பாடப்படுவது. தஞ்சாவூரில் பிறந்த சந்திரவாணன், பாண்டிவள நாட்டைச்சார்ந்த குலசேகர பாண்டியனின் அமைச்சராக விளங்கினான். இவன் புலவர்களைப் புரக்கும் வள்ளலாக விளங்கினமையால் பொய்யாமொழிப்புலவர் இவன் பெயரில் தஞ்சைவாணன் கோவையை எழுதினார்.

## தஞ்சைவாணன் கோவை

*புயலே சுமந்து பிறையே அணிந்து பொருவிலுடன்*
*கயலே மணந்த கமலம் மலர்ந்துஒரு கற்பகத்தின்*
*அயலே பசும்பொற் கொடிநின்றதால் வெள்ளை அன்னம்செந்நெல்*
*வயலே தடம்பொய்கை சூழ்தஞ்சை வாணன் மலையத்திலே*

பாடல் விளக்கம் : பொதியமலையில் வெள்ளைநிற அன்னப்பறவைகளும் செந்நெல் வயல்களும் பெரிய குளங்களும் சூழ்ந்துள்ளன. அம் மலையின் பக்கத்தில் மிக அழகான பொற்கொடி ஒன்று நிற்பதைக் கண்ட தலைவன் தனக்குள் பேசிக்கொள்கிறான். "இப்பொற்கொடி கரிய மேகத்தைச் சுமந்துகொண்டும், பிறைநிலவைக் கொண்டும், போரிடும் வளைந்த இரு விற்களைக் கொண்டும், தாமரை மலரில் மீன்களைக் கொண்டும், கற்பக மரத்தின் பக்கத்திலே நிற்கிறதே!" இங்குத் தலைவியின் கூந்தல் மேகமாகவும், நெற்றி பிறையாகவும், புருவம் வில்லாகவும், கண் கயலாகவும், முகம் தாமரையாகவும், முழுத்தோற்றம் பொற்கொடியாகவும் முற்றும் உருவகப்படுத்தி இருப்பது உணரத்தக்கது. இப்பாடல் காட்சி என்னும் துறையில் அமைந்ததாகும்.

## சதகம்

தமிழ் இலக்கியத்தில் சொல்லப்படும் அகப்பொருள் அல்லது புறப்பொருள் ஆகியவற்றில் ஏதாவது ஒன்றை அடிப்படையாகக் கொண்டு நூறு பாடல்களால் பாடப்படுவதே சதகம் என்பது பாட்டியல் நூல்களில் சொல்லப்படும் இலக்கணம். சதம் என்பது நூறு எனப் பொருள்படும். நூறு பாடல்களைக் கொண்ட சிற்றிலக்கியம் சதகம் எனப்பட்டது.

### அறப்பளீசுர சதகம்

*வைதாலும் ஓர் கொடுமை செய்தாலுமோ சீறி*
*மாறா திகழ்ந்தாலுமோ*
*மனது சற்றாகிலும் கோணாது நாணாது*
*மாதா பிதா எனக்குப்*
*பொய்யாமல் நீயென்று கனிவொடும் பணிவிடை*
*புரிந்து பொருள் உடல் ஆவியும்*
*புனித உன் தனதெனத் தத்தம் செய்து இரவு பகல்*
*போற்றி மலரடியில் வீழ்ந்து*
*மெய்யாகவே பரவி உபதேசம் அது பெற*
*விரும்புவோர் நற்சீடராம்*

பாடல் விளக்கம்: மாணவனின் நன்மைகருதித் திட்டினும், ஏதேனும்

கொடுமை யிழைக்கினும், மாறாமற் சினந்து இழிவுபடுத்தினும், சிறிதும் மனங்கோணாமலும் வெட்கப்படாமலும், உண்மையாக எனக்கு அன்னையும் தந்தையும் நீயேயென்று கூறி, ஆசிரியனுக்கு மனங்கனிந்து வழிபாடு செய்து, பொருளும் உடலும் உயிரும் உன்னுடையவை என்று கூறி, இரவும் பகலும் விடாமல் வணங்கி, ஆசிரியனின் மலர்போன்ற திருவடிகளில் உண்மையாகவே புகழ்ந்துகூறி, அறிவுபெற விழைவோர் நல்ல மாணாக்கராவர், அவர்களுக்கு வினையின் வேர் கெடும்படி அருள்செய்வது சிறந்த ஆசிரியரது கடமையாகும்.

## பிள்ளைத்தமிழ்

கடவுளரையோ அரசரையோ பிறரையோ குழந்தையாகக் கருதி அவர்தம் குழந்தைப் பருவத்தைப் பத்துப்பருவங்களாகப் பகுத்துப் பருவத்திற்குப் பத்து ஆசிரிய விருத்தங்களாகப் பாடுவது பிள்ளைத்தமிழ் இலக்கியமாகும். இது ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என இருவகைப்படும். காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறுதேர், சிறுபறை ஆகிய பத்துப் பருவங்களை அமைத்துப் பாடுவது ஆண்பாற் பிள்ளைத்தமிழ் என்றும், முதல் ஏழு பருவங்களோடு இறுதியில் உள்ள மூன்று பருவங்களுக்குப் பதிலாக அம்மானை, நீராடல், ஊசல் ஆகிய பருவங்கள் அமைத்துப் பாடுவது பெண்பாற் பிள்ளைத்தமிழ் என்றும் குறிப்பிடுவர்.

நமக்குப் பாடமாக அமைந்துள்ள பகுதி செங்கீரைப் பருவத்தில் அமைந்ததொரு பாடலாகும். செங்கீரை, பிள்ளைத்தமிழில் இரண்டாவது பருவமாகும். பொருள் புரிந்து கொள்ளமுடியாத வகையில் குழந்தை ங்க ங்க என்று ஓசை எழுப்பக் கேட்டுத் தாய் மகிழும் பருவமாகும். தொட்டில் பிள்ளை தலையை உயர்த்திக் கையை ஊன்றி உடம்பை அசைத்து ஆடுதலைச் செங்கீரைப்பருவம் என்பர்.

## பாவேந்தர் பிள்ளைத்தமிழ்

*வடிவமை காதினில் குண்டலகேசி*
*வயங்கொளி கொண்டாட*
*வார்ந்த எழிற்கரம் ஏந்திய ஆடக*
*வளையாபதி ஆடத்*
*துடியிடை கையினில் ஒரு பிடி என்று*
*துவண்டு துவண்டாடும்*
*துறவற மேகலை ஒரு புறமாகவும்*
*தூய சிலம்பாடும்*
*அடிமலர் கண்டொரு மாமயி லானவன்*
*ஆடுக செங்கீரை*
*அஞ்சுகமாம் தமிழ் கொஞ்ச மகிழ்ந்தவன்*
*ஆடுக செங்கீரை*

பாடலின் விளக்கம்: தமிழ்மொழியைப் பெண்ணாகவும், அம்மொழியில் அமைந்த நூல்களின் பெயர்களைப் பெயர்ஒப்புமைகொண்டு அப்பெண்ணின் அணிகலன்களாகவும் உருவகப்படுத்தி, தமிழ்ப்பெண் ஆடிய அழகைக் கண்டு மனத்தைப் பறிகொடுத்து மயில்போலக் களித்து, பாக்களைப் பாடிய புரட்சிக்கவிஞராம் குழந்தையே! நீ, செங்கீரையாடி அருள்வாயாக.

## பள்ளு

சிற்றிலக்கிய வகைகளில் எளிமையும் இனிமையும் வாய்ந்த ஓர் இலக்கியம் பள்ளு இலக்கியம் ஆகும். உழவுத் தொழில் செய்யும் மக்களின் வாழ்க்கையைப் பாடும் இலக்கியம் பள்ளு இலக்கியம் எனப்படும்.

## முக்கூடற்பள்ளு

*சோதி மாமணி வீதி நெருக்கும்*
*சுரும்பு பாடி*
*இரும்பும் உருக்கும்*
*சாதி நால்வளம் நீதி பெருக்கும்*
*தடத்து வாளை குடத்தை நெருக்கும்*
*போதில் மேய்ந்து இளமேதி செருக்கும்*
*புனம் எல்லாம் அந்தண்*
*மலர் விண்டு இருக்கும்*

பாடல் விளக்கம்

ஒளி வீசும் சிறந்த மணிவகைகள் பதித்த மாளிகைகளை உடையன வீதிகள். வீதிகளின் நெருக்கம் அதிகமாக இருக்கும். மலர்ச் சோலைகளில் திரியும் வண்டு

*இனங்கள் தம் ரீங்காரப் பண்ணினைப் பாடும். அப்பாடல் இரும்பு உள்ளங்களையும் உருகச் செய்துவிடும். நால்வகை வருணத்து மக்களும் தம் வேற்றுமையை மறந்து ஒன்றுபட்டு நீதியைப் பெருக்குவர்.*

*நீர் நிலைகளில் உள்ள வாளை மீன்கள் நீர் முகப்பார் குடங்களில் புகும். புகுந்து குடத்தை நெருக்கும். இளம் எருமை மாடானது கழனிகளிலே உள்ள நீர்ப்பூக்களை மேயும்; அதில் உள்ள மதுவை உட்கொண்டு செருக்கித் திரியும். மேட்டு நிலங்களில் எல்லாம் குளிர்ந்த மலர்கள் இதழ் விரித்து மலர்ந்திருக்கும்.*

## சிற்றிலக்கிய வகைகள்

1. அகப்பொருள்கோவை
2. அங்கமாலை
3. அட்டமங்கலம்
4. அநுராகமாலை
5. அரசன் விருத்தம்
6. அலங்கார பஞ்சகம்
7. ஆற்றுப்படை
8. இணைமணி மாலை
9. இயன்மொழி வாழ்த்து
10. இரட்டை மணிமாலை
11. இருபா இருபஃது
12. உலா
13. உலாமடல்
14. உழத்திப்பாட்டு
15. உழிஞைமா
16. உற்பவ மாலை
17. ஊசல்
18. ஊர் நேரிசை
19. ஊர் வெண்பா
20. ஊரின்னிசை
21. எண் செய்யுள்
22. எழு கூற்றிருக்கை
23. ஐந்திணைச் செய்யுள்
24. ஒருபா ஒருபஃது
25. ஒலியல் அந்தாதி
26. கடிகை வெண்பா
27. கடைநிலை
28. கண்படை நிலை
29. கலம்பகம்.
30. காஞ்சி மாலை
31. காப்பியம்
32. காப்பு மாலை
33. குழமகன்
34. குறத்திப்பாட்டு
35. கேசாதி பாதம்
36. கைக்கிளை
37. கையறுநிலை
38. சதகம்
39. சாதகம்
40. சின்னப் பூ
41. செருக்கள வஞ்சி
42. செவியறிவுறுஉ

43. தசாங்கத்தயல்
44. தசாங்கப்பத்து
45. தண்டக மாலை
46. தாண்டகம்
47. தாரகை மாலை
48. தானை மாலை
49. தும்பை மாலை
50. துயிலெடைநிலை
51. தூது
52. தொகைநிலைச் செய்யுள்
53. நயனப்பத்து
54. நவமணி மாலை
55. நாம மாலை
56. நாற்பது
57. நான்மணி மாலை
58. நூற்றந்தாதி
59. நொச்சிமாலை
60. பதிகம்
61. பதிற்றந்தாதி
62. பயோதரப்பத்து
63. பரணி
64. பல்சந்த மாலை
65. பவனிக்காதல்
66. பன்மணி மாலை
67. பாதாதி கேசம்
68. பிள்ளைக்கவி (பிள்ளைத்தமிழ்)
69. புகழ்ச்சி மாலை
70. புறநிலை
71. புறநிலை வாழ்த்து
72. பெயர் நேரிசை
73. பெயர் இன்னிசை
74. பெருங்காப்பியம்
75. பெருமகிழ்ச்சிமாலை
76. பெருமங்கலம்
77. போர்க்கெழு வஞ்சி
78. மங்கல வள்ளை
79. மணிமாலை
80. முதுகாஞ்சி
81. மும்மணிக்கோவை
82. மும்மணிமாலை
83. மெய்க்கீர்த்தி மாலை
84. வசந்த மாலை
85. வரலாற்று வஞ்சி
86. வருக்கக் கோவை
87. வருக்க மாலை
88. வளமடல் – மடலேறுதல்
89. வாகை மாலை
90. வாதோரண மஞ்சரி
91. வாயுறை வாழ்த்து
92. விருத்த இலக்கணம்
93. விளக்கு நிலை
94. வீர வெட்சி மாலை
95. வெற்றிக் கரந்தை மஞ்சரி
96. வேனில் மாலை

# கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Abstract | – | அருவம் |
| Aesthetics | – | அழகியல் |
| Alienation | – | அந்நியமாதல் |
| Ambiguity | – | பொருள்மயக்கம் |
| Antithesis | – | முரண்கருத்து |
| Archaism | – | வழக்கொழி சொல் |
| Avant–garde | – | புத்திலக்கியம் |
| Axiology | – | விழுமியவியல் |
| Axiom | – | விழுமியம் |
| Ballad | – | கதைப்பாடல் |
| Base | – | அடித்தளம் |
| Colloquialism | – | வட்டார வழக்கு |
| Dialectics | – | முரணியக்கம் |
| Empiricism | – | அனுபவ வாதம் |
| Etymology | – | சொற்பிறப்பியல் |
| Existence | – | இருப்பு |
| Existentialism | – | இருத்தலியம் |
| Fable | – | நீதிக்கதை |
| Fantasy | – | மிகுபுனைவு |
| Folklore | – | நாட்டாரியல் |
| Generalization | – | பொதுமைப்பாடு |
| Hierarchy | – | அடுக்கதிகாரம் |
| Hyperbole | – | மிகை நவிற்சி |
| Icon | – | படிமை |
| Image | – | படிமம் |
| Imagism | – | படிமவியல் |
| Irony | – | முரண்நகை |
| Langue | – | அகமொழி |
| Literariness | – | இலக்கியத்தன்மை |
| Logo centrism | – | சொல்மையவாதம் |
| Lyric | – | பா |
| Lyricism | – | பாவியல்பு |
| Meta language | – | மேநிலைமொழி |
| Modernity | – | நவீனத்தன்மை |
| Motif | – | மூலக்கருத்து |
| Mysticism | – | நுண் இறைவாதம் |
| Myth | – | தொன்மம் |
| Narratalogy | – | மொழிபியல் |
| Narration | – | மொழிபு |
| Oral tradition | – | வாய்மொழிமரபு |
| Paradox | – | முரண்பாடு |
| Parody | – | பகடி |
| Parole | – | புறமொழி |
| Phenomenon | – | இயற்காட்சி |
| Poetics | – | கவிதையியல் |
| Realism | – | நடப்பியல் |
| Renaissance | – | புதுமலர்ச்சிக்காலம் |
| Rhetorics | – | அணியியல் |
| Romanticism | – | கற்பனாவாதம் |
| Satire | – | அங்கதம் |
| Sentiment | – | மிகையுணர்ச்சி |
| Sociology | – | சமூகவியல் |
| Structure | – | அமைப்பு |
| Stylistics | – | நடையியல் |
| Subjective | – | அகவயம் |
| Symbol | – | குறியீடு |
| Text | – | பனுவல் |
| Theology | – | இறையியல் |
| Transcendentalism | – | மீ இறையியல் |
| Versification | – | செய்யுளாக்கம் |

# கண்ணாடி

58BSS2

**சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.**

1. சரியான தொடரைக் கண்டறிக.

   அ) கவிதையில் முதற்பொருள் இன்றியமையாதது.

   ஆ) கவிதையில் மையப்பொருள் இன்றியமையாதது.

   இ) கவிதையில் உரிப்பொருள் இன்றியமையாதது.

   ஈ) கவிதையில் கருப்பொருள் இன்றியமையாதது.

2. இலக்கிய உருவாக்கத்தை இதன் வழியாக அரிஸ்டாட்டில் விளக்குகிறார்

   அ) காப்பியம் ஆ) நாடகம் இ) இலக்கணம் ஈ) இசைவடிவம்

3. சரியான கூற்றைக் காண்க.

   1. படைப்பாளன் கருத்துகளை உணர்ச்சிகளோடு வெளிப்படுத்தும் வடிவம் கவிதை.
   2. பேசுபவர், எதிர் வினையாற்றுபருக்கான உரையாடல் வடிவம் நாடகம்.
   3. படைப்பாளரே அனைத்துப் பாத்திரங்களையும் இயங்கச் செய்யும் வடிவம் கதை.
   4. படைப்பாளன் தன்கருத்துகளை முன்னிலைப்படுத்தி எழுதும் வடிவம் கட்டுரை.

   அ) 1, 4 சரி ஆ) 1,3 சரி இ) 2,3,4 சரி ஈ) அனைத்தும் சரி.

4. தமிழின் செவ்வியல் தன்மைக்குச் சான்றாக விளங்குபவை

   அ) இடைக்கால இலக்கியங்கள் ஆ) பக்தி இலக்கியங்கள்

   இ) சங்க இலக்கியங்கள் ஈ) இக்கால இலக்கியங்கள்

5. பழந்தமிழர்

   1. திருமணத்திற்கு முந்தைய காதல் வாழ்வைக் கற்பொழுக்கம் என்றனர்
   2. திருமணத்திற்கு முந்தைய காதல் வாழ்வைக் களவொழுக்கம் என்றனர்
   3. திருமணத்திற்குப் பிறகான இல்லற வாழ்வைக் கற்பொழுக்கம் என்றனர்
   4. திருமணத்திற்குப் பிறகான இல்லற வாழ்வைக் களவொழுக்கம் என்றனர்.

   அ) 1, 2 சரி ஆ) 2, 3 சரி இ)1, 3 சரி ஈ) 1, 4 சரி

6. கீழே கொடுக்கப்பட்டுள்ள கூற்றுகளில் சரியான கூற்றுகளைக் கண்டறிக.

   1) மனிதன் தனக்கென வரையறுத்துக் கொண்ட ஒழுக்க முறைகளின் தொகுதியே அறம்.

   2) சான்றோர் விலக்கியன ஒழித்தல் அறம்.

   3) தீமையை நீக்குவது அல்லது அறுப்பது அறம்.

   4) சான்றோர் விதித்தன செய்தல் அறம்.

   அ) 1,2,3 சரி ஆ) 2,3,4 சரி இ) 1,2,4 சரி ஈ) அனைத்தும் சரி

7. உவகை என்ற மெய்ப்பாடு தோன்றுவதற்குரிய களமாகத் தொல்காப்பியர் கூறுவது

அ) பெருமை ஆ) புதுமை இ) கொடை ஈ) விளையாட்டு

8. தம் மன்னன் மறைவிற்காகக் குடிமக்கள் வருந்திப்பாடுவதாக அமைந்த துறை

அ) கையறுநிலை ஆ) செவியறிவுறூஉ

இ) பொருண்மொழிக்காஞ்சி ஈ) இயன்மொழி

9. 'தாமிருந்த கோடு குறைத்து விடல்'– இப்பழமொழியின் பொருள்

அ) தன் வீட்டிலுள்ள சுற்றத்தாரை வெளியேற்றிவிடுதல்.

ஆ) தான் தங்கியிருக்கும் வீட்டின் உயரத்தைக் குறைத்தல்.

இ) தான் தங்கியிருக்கும் கிளையை வெட்டி தானும் வீழ்ந்து உயிர் விடல்.

ஈ) தன் எதிரிகளைக் குறைத்து மதிப்பிடல்.

10. பொருந்தாத இணையக்கண்டறிக

அ) இன்னா நாற்பது – கபிலர்

ஆ) இனியவை நாற்பது – பூதஞ்சேந்தனார்

இ) ஆசாரக்கோவை – பெருவாயின் முள்ளியார்

ஈ) சிறுபஞ்சமூலம் – கூடலூர் கிழார்

11. கூற்று : குடிமக்கள் காப்பியம் என்று சிலப்பதிகாரம் அழைக்கப்படுகிறது.

காரணம் : குடிமக்கள் ஆட்சியை இக்காப்பியம் வலியுறுத்துகிறது.

அ) கூற்று காரணம் இரண்டும் சரி. காரணம் கூற்றுக்கான சரியான விளக்கமல்ல.

ஆ) கூற்று தவறு காரணம் சரி. காரணம் கூற்றுக்கான சரியான விளக்கம்.

இ) கூற்று சரி காரணம் தவறு. காரணம் கூற்றுக்கான சரியான விளக்கமல்ல.

ஈ) கூற்று, காரணம் இரண்டும் தவறு. காரணம் கூற்றுக்கான சரியான விளக்கம்.

12. பன்னிரு திருமுறைகளை _______ நாயன்மார் பாடியுள்ளனர்.

அ) 63 ஆ) 87 இ) 72 ஈ) 27

13. பொருத்துக.

1. சம்பந்தர் – அ) தோழமை நெறி

2. குலசேகராழ்வார் – ஆ) பிள்ளைமை நெறி

3. சுந்தரர் – இ) அடிமை நெறி

4. திருமங்கையாழ்வார் – ஈ) நாயகன் நாயகி நெறி

i) 1 – ஆ, 2 – அ, 3 – ஈ, 4 – இ ii) 1 – ஆ, 2 – இ, 3 – அ, 4 – ஈ

iii) 1– இ, 2 – அ, 3 – ஆ, 4 – ஈ iv ) 1– அ, 2 – ஆ, 3 – இ, 4 – ஈ

14. சொற்றொடர்நிலை என்பது ______

அ) பரணி ஆ) கலம்பகம் இ) அந்தாதி ஈ) தூது

15. திருக்காவலூர்க் கலம்பகத்தை இயற்றியவர் ________

அ) குமரகுருபரர் ஆ) புகழேந்திப்புலவர் இ) வீரமாமுனிவர் ஈ) ஒட்டக்கூத்தர்

## குறுவினா

1. முதற்பொருள் என்பவை யாவை?
2. அரிஸ்டாட்டில் வரையறை செய்யும் மூவோர்மைகள் எவை?
3. கையறுநிலை என்பது யாது?
4. பழந்தமிழர் வாணிகத்தை எவ்வாறு வகைப்படுத்தினர்?
5. கூடாவொழுக்கம் என்றால் என்ன?
6. சிறுபஞ்சமூலம் குறிப்பிடும் மூலிகைகள் யாவை?
7. மணிமொழிக்கோவை என்பதில் அமைந்த நூல்கள் யாவை?
8. காப்பியத்தின் பெரும்பிரிவும் உட்பிரிவும் எவ்வாறு பெயரிடப்பட்டன?
9. முக்குற்றங்கள் எனப் பௌத்தம் குறிப்பிடுவன யாவை?
10. சிற்றிலக்கியங்களின் வகைகளுள் எவையேனும் நான்கினை எழுதுக.

## சிறுவினா

1. தொல்காப்பியர் குறிப்பிடும் உரிப்பொருள்கள் ஏழனைக் குறிப்பிடுக.
2. ஒரையாடுதல் – குறிப்பு வரைக.
3. அன்றாட செயல்களை எவ்வாறு தொடங்கவேண்டும் என ஆசாரக்கோவைப் பாடல் கூறுகிறது?
4. ஒழுக்கமுடையோரும் இல்லாதாரும் எய்தும் நிலையாக விவேகசிந்தாமணி கூறுவன யாவை?
5. கலம்பகம் – சிறு குறிப்பு தருக.

## நெடுவினா

1. தமிழ்க்கவிதையின் போக்குகள் குறித்து விவரி.
2. சங்ககால வணிகம் சிறந்திருந்தது என்பதை பட்டினப்பாலை வழி நின்று விளக்குக.
3. புறப்புண் நாணி வடக்கிருந்தோனே – இடஞ்சுட்டி விளக்குக.
4. நபிகள் நாயகத்தின் பெருமையை உமறுப்புலவர் எவ்வாறு விளக்குகிறார்?
5. இரட்சகர் எனப்போற்றப்படுபவர் யார்? இரட்சணிய யாத்திரிக வழிநின்று எழுதுக.

## படிப்போம் பயன்படுத்துவோம்

1. கீழ்க்காணும் கதையைக் கவிதையாக்குக.

### கவரி வீசிய காவலன்

இரும்பொறையின் அரண்மனை. மணங்கமழும் மென்மலர் பரப்பிய முரசுகட்டில் இருக்குமிடம். புலவர் மோசிகீரனார், இரும்பொறையைக் காண நெடுந்தொலைவிலிருந்து வந்தார். நடந்த களைப்பு. முரசு கட்டிலைக் கண்டார். அது, மனிதர் உறங்கும் கட்டிலாகவே அவருக்குத் தோன்றியது. புலவர் கட்டிலில் அமர்ந்தார், அயர்வு நீங்கப் படுத்தார். உறங்கிவிட்டார்.

முரசை நீராட்ட எடுத்துச்சென்ற வீரர் திரும்பி வந்தனர். முரசுகட்டிலில் யாரோ உறங்குவதனைக் கண்டனர். என்ன ஆணவம்? பதறியவாறு அரசனிடம் ஓடினர். செய்தியைக் கூறினர். அவன் உடல் கூறுபடும் என்பதை அறியானோ? என்று ஓடி வந்தான் அரசன். ஆனால், கட்டிலருகே வந்ததும் , அவன் கை வாளை நழுவவிட்டது. விரைந்து அருகிலிருந்த மயிற்பீலியை எடுத்துக் கட்டிலில் உறங்கிய புலவர்க்கு விசிறினான்.

வீரர்கள் செய்வதறியாது திரு, திரு வென்று விழித்தனர். புலவர்க்கு உறக்கங் கலைந்தது. அரசன் இரும்பொறை தனக்கு மயிற்பீலி கொண்டு விசிறுவதைக் கண்டார். நீராட்டப் பெற்ற முரசம் தரையில் கிடந்தது. புலவர் துள்ளி எழுந்து, அரசன் கைகளைப் பற்றிக் கொண்டு பதறினார். அவர் கண்களில் நீர் நிறைந்தது.

அரசே, முரசு கட்டிலில் படுத்ததற்காகவே என் உடலைக் கூறுபடுத்தலாம். அது செய்யாது மயிற்பீலி கொண்டு விசிறுகின்றாயே! நான் தமிழ்ப் புலவன் என்ற காரணத்தில்தானோ?

2. கீழ்க்காணும் கட்டங்களில் இருபத்திரண்டு உவமைத்தொடர்கள் உள்ளன. உங்களுக்காக இரண்டு உவமைகள் வண்ணத்தில் காட்டப்பட்டுள்ளன. மற்ற உவமைகளைக் கண்டறிந்து வட்டமிடுக.

| ம | தி | மு | க | ம் | வ | ரு | பு | ற் | வி |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ல | பி | த் | ய | அ | தே | ன் | த | மி | ழ் |
| ர் | டி | து | ல் | மு | த் | து | ந | கை | லி |
| மு | ந | ப் | வி | த | பூ | ம | ணி | க் | பொ |
| க | டை | ப | ழி | மொ | ன் | தே | ங் | ர் | ன் |
| ம் | ந | ல் | மொ | ழி | மொ | ளி | கி | ல | மே |
| ன | ன | ர | னி | வே | ல் | வி | ழி | ம | னி |
| த | ன் | வி | க | ன் | ன | ல் | மொ | ழி | மே |
| ந் | அ | பூ | த | ர | ப் | பு | ய | ம் | ர் |
| ம | யி | ற் | சா | ய | ல் | ழ | கு | ர் | கா |

3. அந்தாதி போன்று அமைந்துவரும் நூற்பெயர்களைக் கண்டறிந்து கட்டத்தில் எழுதுக.

| பிள்ளைத் தமிழ் | தமிழ்விடு தூது |
|---|---|
| வளையாபதி | |
| சீவக சிந்தாமணி | |
| யாப்பருங்கலக் காரிகை | |
| நற்றிணை | |
| திருப்பாவை | |
| திருவாய்மொழி | |
| உலகநீதி | |
| திருக்குறள் | |
| பிரயோக விவேகம் | |

4. இலக்கியங்களில் பல பொருள் தரும் ஒரு சொல் இடம்பெற்றிருப்பதைப் பார்த்திருப்பீர்கள். அதுபோன்ற சொற்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. இங்கு, அவை என்ன பொருள் தருகின்றன என்பதை எடுத்து எழுதுங்கள்.

எ.கா. பாயா வேங்கை – வேங்கை என்னும் சொல், புலியையும் குறிக்கும்; மரத்தையும் குறிக்கும். பாய்வது வேங்கைப்புலி. ஆகவே, இங்குப் பாயாதது வேங்கை மரம்.

1. பூவா மரை – ________________________________
2. அமராப் பலகை – ________________________________
3. இமையா நாட்டம் – ________________________________
4. பறவாக் கொக்கு – ________________________________
5. நூலாக் கலிங்கம் – ________________________________
6. தின்னா வேழம் – ________________________________
7. அசையா மா – ________________________________
8. உண்ணாக் கலம் – ________________________________
9. ஒளிராத் திங்கள் – ________________________________
10. அணியா நகை – ________________________________

5. ஒரு சொல்லில் விடை வருமாறு இரு வேறு தொடர்கள் எழுதுக.

<table>
<tr><td rowspan="2">1</td><td>பூக்கள் சேர்ந்த ஆரம்</td><td rowspan="2">மாலை</td></tr>
<tr><td>பொழுது சாயும் நேரம்</td></tr>
<tr><td rowspan="2">2</td><td></td><td rowspan="2">திங்கள்</td></tr>
<tr><td></td></tr>
<tr><td rowspan="2">3</td><td></td><td rowspan="2">மெய்</td></tr>
<tr><td></td></tr>
<tr><td rowspan="2">4</td><td></td><td rowspan="2">ஆறு</td></tr>
<tr><td></td></tr>
<tr><td rowspan="2">5</td><td></td><td rowspan="2">முயலாமை</td></tr>
<tr><td></td></tr>
<tr><td rowspan="2">6</td><td></td><td rowspan="2">பெருங்காயம்</td></tr>
<tr><td></td></tr>
</table>

## செயல்திட்டம்

1. உங்கள் பகுதி நூலகத்தில் உள்ள கவிதை நூல்களைப் பட்டியலிட்டு வருக.
2. உன் மனம் கவர்ந்த நிகழ்வென்றை கவிதையாக எழுதி வருக.
3. உங்கள் ஊரில் வழக்கில் உள்ள பழமொழிகளைத் திரட்டி வருக.

## இணையச்செயல்பாடு

# கவிதையியல்



இந்தச் செயல்பாடுகள்மூலம்
சங்க இலக்கிய நூல்கள்
அனைத்தும் அறியலாம்.

### படிகள்

1. கீழ்க்காணும் உரலி விரைவுக் குறியீட்டைப் பயன்படுத்தி, இச்செயல்பாட்டிற்கான இணையப் பக்கத்திற்குச் செல்க.
2. அந்தப் பக்கத்தில், மேலே கொடுக்கப்பட்டுள்ளவற்றில் ஆய்வு மற்றும் உருவாக்கம் என்ற இடத்தைத் தேர்வு செய்க.
3. அதன்பின் சொல் இலக்கணம் பொருளுடன் தமிழ் இலக்கியங்கள் என்பதனைத் தேர்வு செய்க.
4. தமிழ் இலக்கிய நூல்கள் பலவற்றைத் தேர்ந்தெடுக்கும் வகையில், ஒரு பக்கம் திறக்கும். அதில் தேவையான இலக்கிய நூல்களைத் தேர்தெடுத்துப் பார்க்கலாம்.

### செயல்பாட்டின் படிநிலைக்கான படங்கள் :



படி 1



படி 2



படி 3



படி 4

சங்க இலக்கியங்கள் இணையப் பக்கத்தின் உரலி :

http://www.tamilvu.org

B282_12_ADV_TAMIL

* படங்கள் அடையாளத்திற்கு மட்டுமே.

இயல்
இரண்டு

# கதையியல்

B6M84Z




தமிழ் இலக்கியங்கள் தொடக்ககாலத்தில் கவிதை வடிவங்களாகவே வெளிப்பட்டன. அக்காலகட்டத்தில் குறிப்பிட்ட செயல் அல்லது நிகழ்வைக் கதையாக்கிப் பேசும் வழக்கம் இருந்தது. பேச்சு வழக்கில் இருந்த கதைகள் எழுத்தாகப் பதிவு செய்யப்படவில்லை. பதிவு செய்யப்பட்டபோதும் அவை செய்யுள் வடிவிலேயே இருந்தன. பேச்சு மொழியிலும் உரைநடையிலும் இலக்கியங்களைப் படைக்கலாம் என்னும் நிலை ஐரோப்பியர்களின் வருகைக்குப்பின் தோன்றியது. அவர்களின் நடையை உள்வாங்கித் தமிழில் புனைகதைகள் படைக்கப்பட்டன.

இப்பாடப்பகுதியில் தமிழ்ப்புதினங்களின் தோற்றம், வளர்ச்சி குறித்து விளக்கப்பட்டுள்ளது. மாணவர்களிடையே புதினம் எழுதும் ஆர்வத்தைத் தூண்டும் வகையில் அதன் அமைப்புமுறை, வடிவம், உத்திகள் போன்ற கூறுகள் இடம்பெற்றுள்ளன. மேலும், இப்பகுதியில் மாணவருக்கு மிகச்சிறந்த வாசிப்பனுபவத்தை ஏற்படுத்தும் புதினம், குறும்புதினம், சிறந்த புதினங்கள் சிலவற்றின் பகுதிகள், இந்தியமொழிப் புதினம், உலகமொழிப் புதினம் ஆகியன தரப்பட்டுள்ளன.

## கற்றல் நோக்கங்கள்

- **தமிழ்ப் புதினத்தின் தோற்றம், வரலாறு, இன்றைய வளர்ச்சிப்போக்கு ஆகியவற்றை அறிந்து கொள்ளுதல்.**
- **புதினத்தின் வடிவம், கதைப்பின்னல் மற்றும் எழுதும்முறை ஆகியவற்றைப் புரிந்து கொள்ளுதல்.**
- **பல்வேறு பொருண்மைகளில் அமைந்த புதினங்களை வாசித்தல்.**
- **புதினங்களை எழுதுதல், திறனாய்வு செய்தல் ஆகிய திறன்களைப் பெறுதல்.**

## பாடப் பகுதி

- புனைகதை இலக்கியம் ஓர் அறிமுகம்
- புதினம் எழுதும் கலை
- கல்மரம் – ஜி. திலகவதி
- மாறுதல் – அசோகமித்திரன்
- புத்தம் வீடு – ஹெப்சிபா ஜேசுதாசன்
- சாயாவனம் – சா. கந்தசாமி
- செம்மீன் – தகழி சிவசங்கரன்
- தாய் – மார்க்ஸிம் கார்க்கி

இயல் இரண்டு

# புனைகதை இலக்கியம் – ஓர் அறிமுகம்

தமிழ் உரைநடை இலக்கியம் சார்ந்த கோட்பாடுகள் தொல்காப்பியர் காலம் முதலாகவே இருந்து வந்துள்ளன. பாட்டிடை வைத்த குறிப்பு, உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள், உரை வகை என உரைநடை சார்ந்த எண்ணங்களைத் தமிழிலக்கிய வரலாற்றின் காலந்தோறும் கண்டுகொள்ள முடிகிறது. எனினும், மேலை இலக்கியங்களின் தொடர்புக்குப் பின்தான் தமிழில் முழுமையான உரைநடை இலக்கியங்கள் தோன்றியுள்ளன.

மேலை நாட்டினர் உருவாக்கிய உரைநடை வகையிலான புதினங்களின் தாக்குறவு தமிழிலும் காணப்பட்டது. ஐரோப்பியர்கள் தங்களின் தொடக்கக் காலப் புதினங்களுக்கு சரித்திரம் என்னும் சொல்லாட்சிகளைப் பயன்படுத்தியது போலவே தமிழ்ப் படைப்பாளிகளும், வரலாறு என்ற சொல்லாட்சியைக் கையாண்டுள்ளனர். புனைகதை வகையில் புதினமும் ஒன்று. இம்மேனாட்டுத் தாக்கம் நமது தொடக்ககாலப் புதினங்களையும் ஆட்கொண்டது. இவ்வாறு தமிழில் தோன்றிய தொடக்கக் கால முயற்சிகள் தனிநபர் சார்ந்த வரலாற்று இலக்கியமாக அல்லது அத்தனிநபர் சமூகத்தோடு கொண்ட உறவுகளைப் பேசும் இலக்கியமாகப் புதினங்கள் அமைந்தன.

### அறிவோம் தெளிவோம்

தமிழ்ப் புதின வகைக்கான பாரதியாரின் பங்களிப்பாக அவரின் சந்திரிகையின் கதை (1920) அமைகிறது. முற்றுப்பெறாமலேயே முதல்பாகத்துடன் முடிந்துவிடுகிற இப்புதினம் பாரதியின் இறுதிக்கால நூலாக அறியப்படுகிறது.

## தமிழ்ப் புதினங்களின் தோற்றம்

தமிழின் முதல் புதினமான பிரதாப முதலியார் சரித்திரத்தை (1879) மாயூரம் வேதநாயகர் எழுதினார். இப்புதினம் ஒரு பொதுவான கதைசொல்லும் பாங்கில் சுவையான நிகழ்வுகளைக் கோத்து எழுதப்பட்டது. அதன்பின் ராஜமய்யரால் எழுதப்பட்ட கமலாம்பாள் சரித்திரமும் (1896) அ.மாதவையாவால் எழுதப்பட்ட பத்மாவதி சரித்திரமும் (1898) தமிழின் தொடக்ககாலப் புதினங்களாக அறியப்படுகின்றன.

அ. மாதவையா எழுதிய முத்து மீனாட்சி என்னும் புதினம் சமூக சீர்திருத்தப் புதினங்களுக்குத் தொடக்கப் புள்ளியாக அமைந்தது எனலாம். வடுவூர் துரைசாமி, ஆரணி குப்புசாமி, ஜே.ஆர்.ரங்கராஜு முதலியோரின் புதினங்கள் அக்கால வாசகர்களால் விரும்பிப் படிக்கப்பட்டன. வை.மு.கோதைநாயகி அம்மாள் பெண்களுக்கான புதினங்களை எழுதினார்.

தமிழ்ப் புதின இலக்கிய வளர்ச்சியில் பெரியதொரு திருப்புமுனையை ஏற்படுத்தியவர் கல்கி. அன்று நிகழ்ந்து வந்த இந்திய தேசிய எழுச்சி, தமிழ்க் கலாச்சார மறுமலர்ச்சி, சமூக சீர்திருத்த நோக்கு ஆகியவற்றைத் தம் படைப்புகளில் இணைத்துக் கொண்டார். நாட்டு விடுதலை உணர்வை மையமாகக் கொண்ட தியாகபூமி, அலை ஓசை, கள்வனின் காதலி, மகுடபதி, பொய்மான் கரடு ஆகியன கல்கியின் சமூகப் புதினங்களில் குறிப்பிடத்தக்கவை.

## வரலாற்றுப் புதினங்கள்

வரலாற்று நிகழ்வுகளை அடிப்படையாகக் கொண்டு புனையப்படும் புதினங்கள் வரலாற்றுப் புதினங்கள் ஆகும். வரலாற்றின் முக்கிய நிகழ்வுகளையும் முக்கிய வரலாற்று நாயகர்களையும் மையப்படுத்திக் கற்பனைப்

பாத்திரங்களோடு புனையப்படுபவை இப்புதினங்கள். கல்கியின் பார்த்திபன் கனவு, சிவகாமியின் சபதம், பொன்னியின் செல்வன் ஆகிய புனைவுகள் இவ்வகையில் அமைந்தவை.

சாண்டில்யனின் ராஜதிலகம், கலைஞர் கருணாநிதியின் ரோமாபுரிப் பாண்டியன், கண்ணதாசனின் சேரமான் காதலி போன்றவை சிறந்த வரலாற்றுப் புனைவுகளாக அறியப்படுகின்றன.

## இலட்சியவாதப் புதினங்கள்

சமூக சீர்திருத்தக் கருத்துகளையும் இலட்சியவாதத்தையும் முதன்மையாகக் கொண்டு இலட்சியவாதப் புதினங்கள் எழுதப்பட்டன. காந்திய இலட்சியங்களை முன்னிலைப்படுத்தி தமிழில் புதினங்கள் எழுதிய முன்னோடி காசி. வேங்கடரமணி. அவருடைய தேச பக்தன் கந்தன், முருகன் ஓர் உழவன் ஆகியவை குறிப்பிடத்தக்கவை. இவ்வகைப் புதினங்களை எழுதியவர்களில் குறிப்பிடத்தக்கவராக மு.வரதராசனாரும் அறியப்படுகிறார். இவரது அகல் விளக்கு, கள்ளோ? காவியமோ?, கரித்துண்டு, நெஞ்சில் ஒரு முள் போன்றவை இலட்சியவாதத்தை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பெற்றவை. சித்திரப்பாவை புதினத்திற்காக ஞானபீட விருது (1975) பெற்ற அகிலன் புதினங்கள் இலட்சியவாதத்தைப் பேசின. இலட்சியவாதிகளான நாயக, நாயகிகளின் சித்திரிப்புகளை நா.பார்த்தசாரதியின் படைப்புகளில் காணலாம்.

## நவீனப் புதினங்கள்

புதினத்திற்கான மரபார்ந்த கட்டமைப்புகளைத் தகர்த்து, இயல்புவாதம் பேசுவன நவீனப் புதினங்கள். நடைமுறை வாழ்வில் மக்கள் அன்றாடம் எதிர்கொள்ளும் அக மற்றும் புற வாழ்வுச் சிக்கல்களை இயல்பான மொழியில் இப்புதினங்கள் பேசுகின்றன. இவ்வகைப் புதினங்கள் மக்களின் வாழிடங்களைப் பின்னணியாகக் கொண்டு எதார்த்தத் தன்மையோடு படைக்கப்பட்டவை. இயல்பான சித்திரிப்புகளின் மூலம் கிராமத்து வாழ்க்கையைக் கூறும் புதினங்களைத் தந்தவர் ஆர்.ஷண்முகசுந்தரம். இவரது நாகம்மாள், பூவும் பிஞ்சும், அழியாக்கோலங்கள் போன்றவை குறிப்பிடத்தக்கன. உளவியல் அடிப்படையிலான மனவோட்டங்களை எம். வி.வெங்கட்ராமின் புனைவுகள் பேசுகின்றன.

## முற்போக்குப் புதினங்கள்

பொதுவுடைமைச் சமூக விடுதலை நோக்கத்தைத் தங்கள் இலக்காகக் கொண்ட படைப்பு முற்போக்கு இலக்கியம் என்றழைக்கப்படுகிறது. பொதுவுடைமைப் பேசும் ரஷ்ய இலக்கியங்கள் போன்ற மேலைநாட்டு இலக்கியங்களின் வருகையால் தமிழிலும் இவ்வகை இலக்கியங்கள் தோன்றின. இப்பொருண்மையை உள்ளடக்கமாகக் கொண்டு படைக்கப்பட்ட புதினங்களை முற்போக்குப் புதினங்கள் எனலாம்.

தமிழில் முற்போக்குப் புதினங்களை முதலில் தந்தவர் தொ.மு.சி.ரகுநாதன். அவர் எழுதிய பஞ்சும் பசியும் என்ற புதினம் பஞ்சாலைத் தொழிலாளர்களின் போராட்ட வாழ்வைப் பற்றிப் பேசுகிறது. முற்போக்குச் சிந்தனையாளரான ஜெயகாந்தனின் ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம், சில நேரங்களில் சில மனிதர்கள், கங்கை எங்கே போகிறாள், சுந்தரகாண்டம், ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள் போன்ற புதினங்கள் குறிப்பிடத்தகுந்தவை.

## வட்டார வழக்குப் புதினங்கள்

வட்டாரப் புதினம் என்பது, குறிப்பிட்ட ஒரு பகுதியைக் களமாகக்கொண்டு, அப்பகுதியில் வாழும் மக்களின் வாழ்க்கையை எடுத்துக்காட்டும் குறிக்கோளுடன் எழுதப்படுவதாகும். இப்புதினங்கள், தாம் எழுதப்படும் வட்டாரத்தின் மொழியிலேயே அமைந்திருப்பது சிறப்பு. வட்டாரப் புதினங்கள் தமிழகத்தின் பல்வேறு வட்டாரங்களை மையமாகக் கொண்டு எழுதப்பட்டவை.

கொங்கு வட்டாரம், கரிசல் வட்டாரம், நாஞ்சில் வட்டாரம், நெல்லை வட்டாரம், முகவை வட்டாரம், மதுரை வட்டாரம், தஞ்சை வட்டாரம் எனத் தமிழக வட்டாரங்களை வகைப்படுத்தலாம்.

மேடையேற்றியுள்ளது. 'பெண் சிசுக் கொலை' நிகழும் தர்மபுரி, சேலம் மாவட்டங்களில் இக்குழு 'பச்ச மண்ணு' என்னும் விவாதக்கள வீதி அரங்க நிகழ்வை (Forum Theatre) நிகழ்த்தியது.

## சங்கீத நாடக அகாதெமி

'சங்கீத நாடக அகாதெமி' (Sangeet Natak Akademi) இந்திய அரசால் நிகழ்த்து கலைகளுக்காக நிறுவப்பட்ட தேசியளவிலான அமைப்பாகும். 1952ஆம் ஆண்டு புதுடெல்லியில் உருவான இவ்வமைப்பு இந்தியக் கல்வி அமைச்சகத்தின்கீழ் செயல்பட்டு வந்தது. தற்போது இந்தியப் பண்பாட்டு அமைச்சகத்தின் கீழ் செயல்பட்டு வருகிறது. இது இசை, நாட்டியம், நாடகம் ஆகிய கலைகளை ஊக்குவிப்பதே இதன் குறிக்கோள். சங்கீத நாடக அகாதெமியின் திட்டத்தில் தயாரிக்கப்பட்ட நாடகங்கள் அந்தந்த மாநிலத்தின் பாரம்பரியத்தையும் புராண இதிகாசக்கூறுகளையும் மேடையேற்றின.

யுனெஸ்கோவின் உதவியோடு டில்லியில் இயங்கி வந்த 'பாரதிய நாட்டிய சங்கம்' (Bharathiya Natya Sangh) என்ற அமைப்பு 1958-இல் 'ஆசிய அரங்க நிறுவனம்' (Asian Theatre Institute) என்ற அமைப்பை ஏற்படுத்தியது.

பின்னர் 1959-இல் இந்த நிறுவனம் மைய அரசின் சங்கீத நாடக அமைப்போடு இணைக்கப்பட்டு 'தேசிய நாடகப்பள்ளி' (National School of Drama) என்று பெயர் மாற்றம் பெற்றது. இப்பள்ளி இந்தியாவின் பல்வேறு மாநிலங்களைச் சேர்ந்த இனம், மொழி பேசும் மக்கள் நாடகக்கல்வியை முறையாகப் பயில வழிவகுத்தது.

## தமிழ்நாடு இயலிசை நாடக மன்றம்

'தமிழ்நாடு இயலிசை நாடக மன்றம்' மத்திய சங்கீத நாடக அகாதெமியின் நோக்கங்களை மாநில அளவில் நிறைவேற்றுவதற்காக மாநில அரசால் உருவாக்கப்பட்ட அமைப்பு. இது தன்னாட்சி பெற்ற ஒரு கலை நிறுவனம். இம்மன்றம் தொன்மை வாய்ந்த தமிழகக் கலைகளைப் போற்றிப் பாதுகாத்து மேம்படுத்தி வருகிறது. இந்திய மாநிலங்களுக்கு இடையே பண்பாட்டுப் பரிவர்த்தனைத் திட்டத்தின்படி பிற மாநிலங்களுக்குக் கலைக்குழுக்களை அனுப்பியும் பிற மாநிலக் கலைக்குழுக்களை வரவேற்றும் நிகழ்ச்சிகள் நடத்தி வருகிறது.






நலிந்த கலைஞர்களுக்கு மாதந்தோறும் நிதியுதவி வழங்குதல், மறைந்த கலைஞர்களின் குடும்பங்களுக்கு நிதியுதவி வழங்குதல், இளங்கலைஞர்களை ஊக்குவித்தல், சாதனையாளர்களுக்குக் கலைமாமணி விருது வழங்குதல், நாடகக்குழுக்களுக்கு மானியம் வழங்குதல் முதலான பலதிட்டங்களைச் செயல்படுத்தி வருகிறது.

**அறிவோம் தெளிவோம்**

**நாடக விழாக்கள்**

தேசிய சங்கீத நாடக அகாதெமி நடத்திய போட்டியில் மு. இராமசுவாமி, துர்க்கிர அவலம் என்னும் நாடகத்தை அரங்கேற்றினார். பின்னர் பெங்களூரில் நடந்த தென் மண்டல நாடக விழாவிலும், டெல்லியில் நடந்த தேசிய விழாவிலும் இதனை நிகழ்த்திக் காட்டினார். இதனால் இந்திய அரங்கில் தமிழ் நாடகத்திற்கு ஓர் அடையாளம் கிடைத்தது. தென் மண்டல நாடக விழாவில் நிஜநாடக இயக்க நாடகமான 'சாபம்! விமோசனம்!' அரங்கேற்றப்பட்டது. அதனைத் தொடர்ந்து மதுரையில் முதல் நாடக விழாவை நிஜநாடக இயக்கம் 1988ஆம் ஆண்டு நடத்தியது. திருச்சி தூய வளனார் கல்லூரியில் 1991ஆம் ஆண்டு நடந்த பாதல் சர்க்கார் நாடக விழா குறிப்பிடத்தக்க நிகழ்வாகும்.

# தமிழ்த் திரைப்பட வரலாறு

திரைப்படம் ஓர் ஆற்றல் வாய்ந்த தகவல் தொடர்பு ஊடகம். மக்களுக்கு ஒரு கருத்தை எளிமையாகக் கொண்டுசெல்ல திரைப்படம் உதவுகிறது. இது மக்களின் இன்றியமையாத பொழுதுபோக்குச் சாதனமாக உள்ளது. உலகளாவிய திரைப்படங்களின் தாக்கத்தினால் நாகரிகம், பண்பாடு முதலியவற்றில் மாற்றங்கள் விளைகின்றன. திரைப்படம் இல்லாத உலகை நினைத்துப் பார்க்கவே முடியாது என்ற அளவில் திரைப்படம் மக்களோடு ஒன்றிவிட்டது.

## தொடக்கம்

19ஆம் நூற்றாண்டில் தோன்றிய வலிமையான காட்சி ஊடகம் திரைப்படம். 1895இல் லூமியர் சகோதரர்களால் சலனப்படம் கண்டுபிடிக்கப்பட்டது. இந்தியாவில் 1896ஆம் ஆண்டு மும்பையில் முதல் சலனப்படம் திரையிடப்பட்டது. இதனைத் தொடர்ந்து சென்னையில் எட்வர்டு என்ற ஆங்கிலேயர் 1897ஆம் ஆண்டு சில நிமிடங்களே ஓடக்கூடிய முதல் சலனப்படக் காட்சியைத் திரையிட்டுக் காட்டினார். சென்னையில் 'விக்டோரியா பப்ளிக் ஹால்' என்ற அரங்கில் இக்காட்சி காட்டப்பட்டதைத் தொடர்ந்து பல நகரும்படக் காட்சிகள் சென்னை நகரின் பல்வேறு இடங்களில் திரையிடப்பட்டன. இவையே திரைப்படங்களுக்குத் தொடக்கமாக அமைந்தன.



விக்டோரியா பப்ளிக் ஹால்

## திரையரங்கு

1900இல் தென்னிந்தியாவின் முதல் திரையரங்கு, சென்னை அண்ணாசாலையில் (மவுண்ட் ரோடு) வார்விக் மேஜர் என்னும் ஆங்கிலேயரால் கட்டப்பட்டது. இதன் பெயர் எலக்ட்ரிக் தியேட்டர்.

1905இல் திருச்சியில் சுவாமிக்கண்ணு வின்சென்ட் என்பவர் 'எடிசன் சினிமாட்டோ கிராப்' என்ற திரைப்படம் காட்டும் நிறுவனத்தைத் தொடங்கினார். தென்னிந்தியாவின் முதல் 'டூரிங் டாக்கீஸ்' இதுவே. அதன் பிறகு கோயம்புத்தூரில் ரெயின்போ டாக்கீஸைக் கட்டிப் பல படங்களைத் தயாரிக்கவும் செய்தார். 1914இல் சென்னையில் வெங்கையா என்பவரால் 'கெயிட்டி' திரையரங்கு கட்டப்பட்டது. இந்தியர் ஒருவரால் தென்னிந்தியாவில் கட்டப்பட்ட முதல் திரையரங்கு இதுவே.

## மௌனப்படம்

டுபாண்ட் என்பவர் ஏசுநாதரின் வாழ்க்கை வரலாற்றை விளக்கும் கதைப்படத்தைக் கொண்டு வந்து பம்பாயில் காட்டினார். அந்தப் படத்தின் பெயர் 'ஏசுவின் வாழ்க்கை' என்பதாகும். அந்த மௌனப்படம்தான் இந்தியாவில் காட்டப்பட்ட முதல் கதைப்படம் ஆகும். அதன்பின்,

### அறிவோம் தெளிவோம்

**சலனப்படம்**

அசையாத படங்களை (Still pictures) வைத்து அசைவது போன்ற பிரமையை ஏற்படுத்துவது சலனப்படம் ஆகும். ஆங்கிலத்தில் இதனை 'மூவி' (Movie) என்பர்.

பெரும்பாலும் மேலைநாட்டில் தயாரிக்கப்பட்ட கதைப்படங்களே இங்கு திரையிடப்பட்டன. இக்கதைப்படங்கள் வெளிவர ஆரம்பித்த பின், திரைப்படங்களுக்கு மக்களிடையே வரவேற்பு கூடியது. அதனால் இந்தியாவில் திரைப்படம் தயாரிக்கும் ஆர்வம் எழுந்தது.

தாதா சாகேப் பால்கே தயாரித்து வெளியிட்ட 'ராஜா ஹரிச்சந்திரா' என்னும் மௌனப்படமே இந்தியர் ஒருவர் தயாரித்து வெளியிட்ட முதல் இந்தியத் திரைப்படம் ஆகும்.

மும்பையில் தயாரான 'ராஜா ஹரிச்சந்திரா' போன்ற புராணப் படங்கள் சென்னையில் திரையிடப்பட்டன. புராணப் படங்களின் வரவேற்பைக் கண்ட நடராஜர் என்பவர் கீழ்ப்பாக்கத்தில், 'இந்தியா பிலிம் கம்பெனி' என்ற நிறுவனத்தை நிறுவி, 1916இல் 'கீசகவதம்' என்ற மௌனப் படத்தைத் தயாரித்தார். தென்னிந்தியாவின் முதல் திரைப்படம் இதுதான்.

அதனைத் தொடர்ந்து மேலும் சில தயாரிப்பாளர்கள் திரைப்படங்களை எடுக்க ஆரம்பித்தனர். இதில் முக்கியமானவர் ஏ.நாராயணன். இவர் ஜெனரல் பிக்சர்ஸ் கார்ப்பரேஷன் என்ற பட நிறுவனத்தை நிறுவி, பல வெற்றிப் படங்களைத் தயாரித்தார். அதே காலகட்டத்தில் சென்னையில் நூற்றுக்கும் மேற்பட்ட மௌனப்படங்கள் தயாரிக்கப்பட்டன.

திரையரங்குகளில் மௌனப்படம் ஓடிக்கொண்டிருக்கும்போது, இடையே படத்தை நிறுத்தி, வெள்ளைத் திரைக்கு முன் அமைந்த மேடையில் மல்யுத்தம், நடனங்கள் முதலியவற்றை நடத்துவதும் ஒரு வழக்கமாக இருந்தது. இக்காலத்தில் 'கதைசொல்லிகள்' என்னும் ஒருவகைக் கலைஞர்கள் உருவாயினர். படம் ஓடிக்கொண்டிருக்கும்போது, இருட்டில் திரையோரமாக நின்றவாறே ஒலிபெருக்கிக் குழாய் மூலமாக உரத்த குரலில் காட்சிச்சூழலை வருணித்தும், தேவையான இடங்களில் சுவையான வசனத்தையும் பேசிக் கதைகூறுபவர்களே இந்தக் கதைசொல்லிகள்.

திரைப்படக் காட்சிகள் மக்களிடம் செல்வாக்குப் பெற்றதைக் கண்ட ஆங்கில அரசு இந்த வெகுசனத் தொடர்புச் சாதனத்தைத் தன் கட்டுப்பாட்டுக்குள் வைக்க முடிவு செய்தது. தொடர்ந்து இந்திய திரைப்படத் தணிக்கைச் சட்டத்தின் (Indian Cinematograph Act) மூலம் தணிக்கைத் துறையை 1918 ஆம் ஆண்டில் செயல்படுத்தியது.

## பேசும் படங்கள்

1926இல் 'வார்னர்' சகோதரர்களால் தயாரிக்கப்பட்டு முதன்முதலாகப் பேச்சு, பாடல் இல்லாமல் வெறும் சப்தத்தை மட்டும் கொண்டு வெளிவந்த படம் 'டோன்ஜுன்'. அதன்பின் உரையாடலையும் பாடல்களையும் கொண்டு உலகில் முதல் பேசும்படமான 'தி ஜாஸ் சிங்கர்' (The Jazz Singer) வெளிவந்தது.

இந்தியாவின் முதல் பேசும்படம் இந்தி மொழியில் தயாரிக்கப்பட்ட 'ஆலம் ஆரா'. இப்படம் 1931இல் அர்தேஷிர் இரானி என்பவரால் இயக்கித் தயாரிக்கப்பட்டது. இதனைத் தொடர்ந்து தமிழில் 'குறத்திப் பாட்டும் டான்ஸும்' என்ற நான்கு படச்சுருள் கொண்ட குறும்படம் வெளி வந்தது. அதே ஆண்டு எச்.எம்.ரெட்டி இயக்கிய முதல் முழுநீளத் தமிழ்ப் படமான 'காளிதாஸ்' வெளிவந்தது. இதுவே தமிழில் வெளிவந்த முதல் பேசும் படம். 'காளிதாஸ்' படம் வெளிவந்ததும் தமிழ்த் திரைப்படங்களைத் தமிழகத்திலேயே தயாரித்து வெளியிடும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது.




முதல் நான்கு ஆண்டுகள் வரை சென்னையில் ஒலிப்பதிவுத் தொழில் நுட்ப வசதிகள் ஏதும் இல்லாததால் தமிழ்த் திரைப்படங்கள் மும்பையிலும், கல்கத்தாவிலுமே தயாரிக்கப்பட்டன. 1934ஆம் ஆண்டில் தென்னிந்தியாவிலேயே சென்னையில்

முதல் ஒலிப்பதிவுக் கூடம் நிறுவப்பட்டது. இதில் தயாரிக்கப்பட்ட முதல் தமிழ் பேசும்படம் 'சீனிவாசக் கல்யாணம்'. இப்படம் ஏ.நாராயணனால் இயக்கப்பட்டது. அதன் பின் பல ஒலிப்பதிவுக் கூடங்கள் சென்னையில் நிறுவப்பட்டன.

### புராணக் கதைகள்

தொடக்கக்காலத் தமிழ்ப்படங்கள் புராணக்கதைகளை அடிப்படையாகக் கொண்டே எடுக்கப்பட்டன. அதிலும், கம்பெனி நாடகங்கள் மூலம் வரவேற்பு பெற்ற இராமாயண, மகாபாரத கதைகளே படமாக்கப்பட்டன. 1935 முதல் சமூக சீர்திருத்தக்கருத்துகளைக்கதைகளாகக்கொண்ட படங்கள் வெளிவந்தன. கௌசல்யா என்ற திரைப்படம் இக்கதையமைப்பில் வெளிவந்த முதல் திரைப்படமாக அறியப்படுகிறது. இதையடுத்து, வடுவூர் துரைசாமியின் மேனகா, காசி விஸ்வநாதரின் டம்பாச்சாரி ஆகிய படங்கள் இவ்வகையில் தயாரிக்கப்பட்டன.

ஆங்கிலேயரின் காலத்தில் காவல் ஆணையரின்கீழ் செயல்பட்ட தணிக்கைத் துறை ஒத்துழையாமை இயக்கத்தால் தன் சட்டங்களைக் கடுமையாக்கியது. அதனால், சில படங்கள் தயாரிப்பு நிலையிலேயே கைவிடப்பட்டன. தேசியக் கருத்துகளையோ, காந்திய சமூக சீர்திருத்தங்களையோ ஆதரிக்கும் காட்சிகள் வெட்டப்பட்டன. எனவே, புராணக்கதைகளும், மாயாஜாலக் கதைகளுமே பெரிதும் தயாரிக்கப்பட்டன.

### பாடலுக்கு முதன்மை

தமிழ்நாட்டில் பேசும்படம் தோன்றியதும் தமிழ் நாடகங்களில் இருந்த பாடத் தெரிந்த நடிகர்கள், வசனகர்த்தாக்கள், இசையமைப்பாளர்கள் முதலிய கலைஞர்கள் திரைப்படங்களை நாடினர். அக்காலகட்டத்தில் வெளிவந்த திரைப்படங்களில் பெரும்பாலும் மேடை நாடகத் தன்மையே மேலோங்கியிருந்தது. பாட்டும் இசையும் தொடக்க காலத் திரைப்படங்களின் முதன்மை கூறுகளாக விளங்கின. ஒரே படத்தில் 50, 60 பாடல்கள் இருப்பது சிறப்பான நிலையாகக் கருதப்பட்டு விளம்பரப்படுத்தப்பட்டது. அக்காலத் திரைப்படங்கள் பாடலுக்கே முதன்மை தந்தன. அதனால் பாடும் திறமை பெற்றவர்களே நடிகர்களாக வரமுடிந்தது.



**தெரியுமா?**

**ஹாலிவுட்**

அமெரிக்காவில் இருந்த பழைமைவாதிகளாலும் மதப் பற்றுள்ளவர்களாலும் பல இன்னல்களுக்கு ஆளான திரைப்படக் கலைஞர்கள் அனைவரும், லாஸ் ஏஞ்சல்ஸ் பகுதியில் இருந்த அடர்ந்த காட்டிற்குள் ஓடி ஒளிந்தனர். அந்தக் காடே அவர்களுக்குப் புகலிடம் தந்தது. அங்கிருந்தபடியே திரைப்படத் தொழிலில் ஈடுபட்டனர். தங்களுக்கு வாழ்க்கை அளித்த அந்தக் காட்டினை 'ஹோலி வுட்' (Holy wood – புனிதமான காடு) என்று பெயரிட்டுப் புகழ்ந்து, அதனையே தங்கள் வாழ்விடமாகக் கருதினர். அதுவே இன்று திரைப்படத் துறையில் உலகப் புகழ்பெற்று விளங்கும் 'ஹாலிவுட்' நகரமானது.

### விடுதலை உணர்வு

நாடக மேடைகளில் சுதந்திர வேட்கை கொழுந்துவிட்டு எரிந்த சூழலில், திரைப்படக் கதாபாத்திரங்கள் பேசும் வசனங்களின்மீதும் கவனம் செலுத்தப்பட்டது. இராஜாஜி முதல்வராக இருந்த இக்காலத்தில் தணிக்கை முறை விலக்கி வைக்கப்பட்டது. இக்காலகட்டத்தில்தான் தியாக பூமி, மாத்ருபூமி, விமோசனம், தேச முன்னேற்றம் போன்ற நாட்டுப்பற்றைப் போற்றும் தமிழ்த் திரைப்படங்கள் வெளிவந்தன.

### வசனத்திற்கு முக்கியத்துவம்

எல்லிஸ் ஆர்.டங்கன் தமிழ்த் திரைப்படங்களில் 50, 60 பாடல்கள் என்றிருந்த நிலையை மாற்றி ஆறு அல்லது எட்டுப் பாடல்களாகக் குறைத்தார். வெளிப்புறப் படப்பிடிப்பை அதிகம் பயன்படுத்தினார். ஹாலிவுட் பாணியில் கதைகூறும் முறையைத் தமிழ்ப் படங்களில் அறிமுகப்படுத்தியவரும் இவரே. இம்முறையைப் பயன்படுத்தி எடுக்கப்பட்ட தமிழ்த்திரைப்படங்கள் இசைக்கும்,

பாட்டுக்குமே முதன்மை அளித்து வந்த நிலையை மாற்றிப் பாத்திரப் பேச்சுக்கு முக்கியத்துவம் தந்தன. மணிமேகலைக்குச் சோமையாஜுலுவும், சிவகவிக்கு இளங்கோவனும் வசனம் எழுதி, தமிழ்த் திரைப்படங்களில் ஒரு மாற்றத்தைக் கொண்டு வந்தனர். இதனைத் தொடர்ந்து வந்த படங்களில் இலக்கியத்தமிழ் கொண்ட வசனங்கள் முதன்மை பெற்று, வசனம் எழுதுபவர்கள் கவனம் பெற்றனர்.

திரைப்படத்தின் நோக்கத்தை மக்களிடம் கொண்டு சேர்ப்பதில் வசனங்களுக்கு இன்றியமையாத பங்குண்டு. இயக்குநர் தம் மனத்தில் தோன்றும் காட்சிகளை உணர்வுபூர்வமாக வெளிப்படுத்துவதற்கு வசனங்கள் உதவுகின்றன. வசனம் என்பது பாத்திரங்களுக்கிடையேயான உரையாடல் மட்டுமன்று. அது கதையின் போக்கை நகர்த்திச் செல்ல உதவும் முக்கிய கூறு. வசனம் கதாபாத்திரத்தின் குணநலன்களையும் அக்கதாபாத்திரத்தின் சமூக, பண்பாட்டுப் பின்புலங்களையும் வெளிப்படுத்துகிறது. கதை களத்திற்கு ஏற்றவாறு கதை வசனம் அமைதல் வேண்டும்.

தமிழ்த் திரைப்பட வரலாற்றில் வசனங்களுக்கென்று மிகப்பெரிய இடம் உண்டு. அண்ணா, ஆரூர்தாஸ், கலைஞர், ஏ.பி. நாகராஜன், கே.எஸ்.கோபாலகிருஷ்ணன், பஞ்சு அருணாசலம், கே.பாக்யராஜ், சேரன் போன்றோர் வசனத்திற்காகவே புகழ்பெற்றவர்கள். தற்போது புனைகதைகளை எழுதிவரும் எஸ். ராமகிருஷ்ணன், ஜெயமோகன், நாஞ்சில் நாடன் போன்றவர்களும் வசனம் எழுத வந்துள்ளனர்.

### பகுத்தறிவுக் கருத்துகள்

பகுத்தறிவுக் கருத்துகளை உள்ளடக்கிய சில படங்கள் 1940களில் வெளிவந்தன. நாடக ஆசிரியர்களாகப் புகழ் பெற்ற திராவிட இயக்கத் தலைவர்கள் சிலர் திரைப்படத்துறையில் ஈடுபாடு கொண்டனர். 'நல்லதம்பி' படத்திற்குக் கதை வசனம் எழுதியதன் மூலம் அறிஞர் அண்ணா திரையுலகில் அறியப்பட்டார். 'வேலைக்காரி' படம் அவருக்கு மேலும் புகழைப் பெற்றுத்தந்தது.



அவரைத் தொடர்ந்து மு. கருணாநிதி 'மந்திரி குமாரி' என்ற படத்திற்கு வசனம் எழுதினார். இவர் வசனம் எழுதிய 'பராசக்தி' திரைப்படத்தின் வெற்றிக்குப் பாத்திரங்களின் அலங்கார வசனமே முதன்மை காரணமானது. இந்தக் காலகட்டத்தில் சீர்திருத்தக் கருத்துகளை உள்ளடக்கிய திராவிட இயக்கத் திரைப்படங்கள் பல வெளிவந்தன.

### நடிகர்கள்

ஒரு திரைப்படத்தின் வெற்றி கதாபாத்திரங்களின் நடிப்புத் திறனைக் கொண்டே அமைகின்றது. ஒரு நடிகர் கதாபாத்திரம் வாழும் சூழல், குணநலன்கள் ஆகியவற்றை உள்வாங்கிக் கொண்டு அந்த கதாபாத்திரமாகவே மாறி நடிக்கவேண்டும். நடிகர்கள் எண்வகை மெய்ப்பாடுகளையும் வெளிப்படுத்துபவராக இருக்கவேண்டும். தேர்ந்த குரல் வளம், உடல்மொழி, முகத்தோற்றம் போன்றவை நடிகனுக்கு இன்றியமையாதவை. தமிழ்த் திரைப்படத்தில் தன் நடிப்புத் திறமையால் கதாநாயகர்களாகவும் கதாநாயகிகளாகவும் எதிர்நிலை நாயகர்களாகவும் நகைச்சுவை நடிகர்களாகவும் உயர்ந்தவர்கள் பலர்.

தமிழ்த் திரைப்படம் பெரும்பாலும் நடிகர்களை முன்னிலைப்படுத்தியே கவனம் கொள்ளப்பட்டு வருகின்றது. அதிலும் கதாநாயகர்கள் குறிப்பிடத்தகுந்த இடத்தைப் பெற்று வருகின்றனர். பாடல் முதன்மை பெற்றபோது பாடும் திறம் கொண்ட நடிகர்களான பி.யு.சின்னப்பா, எம்.கே. தியாகராஜ பாகவதர் போன்றோர் நாயகர்களாகத் திகழ்ந்தனர். பின்பு வசனமும் மக்களைக் கவரும் கதையமைப்பும் முக்கியத்துவம் பெற்றபோது



அதில் நடித்த நாயகர்கள் பெரும்புகழைப் பெற்றனர். உணர்ச்சிகரமான வசனத்திற்காக சிவாஜிகணேசனும், அதன் மறுதலையாக மக்களின் துயரங்களைப் போக்கும் விதமான பாத்திரங்களுக்காக எம்.ஜி.ஆரும் அறியப்பட்டார்கள். இவ்விரு ஆளுமைகளும் ஒரே காலகட்டத்தில் நாயகர்களாக வலம்வந்தது தமிழ்த் திரைப்பட வரலாற்றில் குறிப்பிடத்தக்கது. ஜெமினிகணேசன், ஜெய்சங்கர் போன்றோரும் அக்கால கட்டத்தில் நாயகர்களாக நன்கு அறியப்பட்டனர்.

பானுமதி – இயக்குநர், நடிகை, எழுத்தாளர், இசையமைப்பாளர் போன்ற பன்முக தன்மை வாய்ந்த ஆளுமையாகத் திரையுலகில் புகழ்பெற்றவர்.




சாவித்திரி, சரோஜாதேவி, பத்மினி, ஜெயலலிதா, லட்சுமி போன்றோர் நாயகிகளாக நடித்துத் தனி முத்திரை பதித்தனர்.

பி.எஸ். வீரப்பா, எம்.ஆர். ராதா, எம்.என்.நம்பியார், ஆர்.எஸ். மனோகர், அசோகன் போன்றோர் சிறந்த எதிர்நிலை கதாபாத்திரங்களாகத் தோன்றி தமிழ்த் திரையுலகில் வலம்வந்தனர்.

என்.எஸ். கிருஷ்ணன், சந்திரபாபு, தங்கவேலு, நாகேஷ், டி.ஏ. மதுரம், மனோரமா போன்றோர் தங்கள் நகைச்சுவையால் சிரிக்கவும் சிந்திக்கவும் வைத்தனர்.

இவர்களைத் தொடர்ந்து எண்ணற்ற நடிகர்கள் நாயகர்களாகவும் நாயகிகளாகவும் எதிர்நிலை நாயகர்களாகவும் நகைச்சுவை நடிகர்களாகவும் தங்கள் பங்களிப்பை நல்கிவருகின்றனர்.

### இயக்குநர்கள்

அறுபதுகளில் புதிய இயக்குநர்கள் பலர் தமிழ்த் திரையுலகில் நுழைந்தனர். பீம்சிங் என்ற இயக்குநர் 'பாவ மன்னிப்பு', 'பார்த்தால் பசி தீரும்' ஆகிய படங்களை இயக்கிப் புகழுடன் விளங்கியவர். ஏ.பி.நாகராஜன் 'சரஸ்வதி சபதம்' படத்தின் மூலம் சிறந்த புராணப்பட இயக்குநர் என்ற பெயரைப் பெற்றுப் பல படங்களை இயக்கினார். ஸ்ரீதர் 'கல்யாணப் பரிசு' படத்தின் மூலம் புகழ்பெற்றார். 'நெஞ்சில் ஓர் ஆலயம்', 'காதலிக்க நேரமில்லை' போன்ற படங்களையும் இயக்கியுள்ளார். கம்பெனி நாடகப் பாரம்பரியத்தில் வளர்ந்த கே.எஸ்.கோபாலகிருஷ்ணன் 'கற்பகம்' படத்தின் மூலம் புகழ்மிக்க இயக்குநரானார். ஜெயகாந்தன் 'உன்னைப் போல் ஒருவன்' என்ற தமது குறுநாவலைத் திரைப்படமாக அவரே இயக்கினார். அது தேசிய அளவில் விருதினையும் பெற்று எதார்த்தத் திரைப்படமாக அறிமுகமானது. மேடை நாடக ஆசிரியராகத் திகழ்ந்த கே. பாலசந்தர் 'நீர்க்குமிழி' படத்தின் மூலம் தமிழ்த் திரைப்பட இயக்குநராகப் புகழ் பெற்றார்.

### எதார்த்தப் பாணி

சென்னை அடையாறில் திரைப்படக் கல்லூரி தொடங்கப்பட்டது. இது திரைப்படக் கல்லூரி மாணவர்களின் புதிய பாணி தமிழ்த் திரைப்படத்தில் வெளிப்படத் தொடங்கியது. மகேந்திரன், பாலுமகேந்திரா ஆகியோர் எதார்த்த பாணியில் அமைந்த திரைப்படங்களை

இயக்கினர். பாரதிராஜா வெளிப்புறப் படப்பிடிப்பை முதன்மையாக்கிக் கிராமியப் படங்களை உருவாக்கினார்.

அதன்பின்பு வெளிவந்த படங்களில் புதிய நடிகர்கள், கிராமியப் பின்னணி, எதார்த்தத்தில் அழுத்தம் ஆகியன கதைச் சூழலை மாற்றின. இயல்பு நடிப்பைப் பின்பற்றிப் பல படங்கள் வெளிவந்தன. இக்காலகட்டத்தில் நிகழ்ந்த மற்றொரு முக்கிய நிகழ்வு இளையராஜாவின் இசை. இவர் கிராமிய இசையினை எதார்த்தப் பாணியில் கொண்டுவந்து தமிழ்த் திரையில் ஒலிக்கச்செய்தார். 'அன்னக்கிளி' படத்திற்கு அமைத்த இசை மக்களால் பெரிதும் பேசப்பட்டது.

### காதல் சிக்கல்கள்

எண்பதுகளின் தொடக்கத்தில் தமிழ்ப் படத் தயாரிப்பு, முன்பில்லாத அளவு அதிகரித்தது. இந்தியாவில் வர்த்தகரீதியில் இந்தித் திரைப்படங்களுக்கு அடுத்தபடியாக இரண்டாமிடத்தில் இருப்பது தமிழ்த் திரைப்படங்கள்தான். நட்சத்திர ஆளுமையில் ரஜினிகாந்த், கமலஹாசன் போன்றோரின் புகழ் ஓங்கியதும் இந்த ஆண்டுகளில்தான். பெண்களின் மன இயல்பு, காதலால் ஏற்படும் சிக்கல்கள் போன்றவை இக்காலகட்டத் திரைப்படங்களில் மிகுதியும் கருப்பொருளாயின. அடையாறு திரைப்படக் கல்லூரியில் பயின்ற ருத்ரய்யாவின் 'அவள் அப்படித்தான்' படம் பெரிதும் பேசப்பட்டது. எண்பதுகளில் குறிப்பிடத்தக்க மற்றுமோர் இயக்குநராகக் கருதப்படுபவர் மணிரத்னம். அவரது 'மௌனராகம்' சிறந்த தமிழ்ப் படத்திற்கான விருதைப் பெற்றது.

பாக்யராஜ், ஷங்கர், பாலா, வசந்தபாலன், பாலாஜி சக்திவேல், வெற்றிமாறன் போன்றோர் இந்திய அளவில் கவனம் ஈர்த்த இயக்குநர்களாக அறியப்படுகின்றனர்.

## அறிவோம் தெளிவோம்

## உலகளாவிய திரைப்பட விருதுகள்

### ஆஸ்கர் விருது

ஆஸ்கர் விருது எனப் பரவலாக அறியப்படும் அகாதெமி விருதுகள் அமெரிக்காவில் திரைத்துறைக்கு வழங்கப்படும் மிக உயரிய விருதுகள் ஆகும். ஆஸ்கர் விழாவை 1927இல் நிறுவப்பட்ட 'அகாதெமி ஆப் மோஷன் பிக்சர் ஆர்ட்ஸ் & சயின்ஸ்' என்ற அமைப்பு ஒருங்கிணைக்கிறது. இவ்வமைப்பு 1929ஆம் ஆண்டு முதல் ஆஸ்கர் விருதினை வழங்கி வருகிறது. ஆஸ்கர் விருது பெற்ற முதல் இந்தியர்




பானு அத்தையா. காந்தி படத்திற்காக இவ்விருதினைப் பெற்றார். வாழ்நாள் சாதனைக்காக ஆஸ்கர் விருது பெற்ற இந்தியர் சத்தியஜித் ரே. இசைக்கலைஞர் ஏ.ஆர். ரகுமான் 'ஸ்லம்டாக் மில்லியனர்' என்ற திரைப்படத்திற்காக 2009ஆம் ஆண்டு இரண்டு விருதுகள் வென்றார்.

### கான்ஸ் உலகத் திரைப்பட விழா

1939–இல் கான்ஸ் உலகத் திரைப்பட விழா பிரான்சில் தொடங்கப்பட்டது. இரண்டாம் உலகப்போரால் தடுமாற்றம் கொண்டதால், அதன் தொடர்ச்சியான ஆண்டுகளில் திரைப்பட விழா நடைபெறவில்லை. மீண்டும் 1949ஆம் ஆண்டிலிருந்து இத்திரைப்பட விழாவிற்கு மிகுந்த முக்கியத்துவம் உருவானது. 1955ஆம் ஆண்டிலிருந்து தங்கப் பனை (The Golden Palm) விருது வழங்கப்படுகிறது.

இவற்றைப் போன்றே பெர்லின் உலகத் திரைப்பட விழா, வெனிஸ் திரைப்பட விழா, மாஸ்கோ திரைப்பட விழா, நியூயார்க் திரைப்பட விமர்சகர் விழா, டோக்கியோ திரைப்பட விழா போன்றவை குறிப்பிடத்தக்கவை.

## இன்றைய தமிழ்த் திரைப்படங்கள்

இன்றைய தமிழ்த் திரைப்படங்களில் படப்பிடிப்பிலும் படத்தொகுப்பிலும் தொழில் நுட்ப வளர்ச்சியைக் காணமுடிகிறது. முழுவதும் எண்ணிமத் (digital) தொழில்நுட்பமாக்கப்பட்ட தமிழ்த் திரைப்படத்தில் புதிய முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. புதிய இயக்குநர்களின் வருகை புது நம்பிக்கையைக் கொடுத்துள்ளது. தேசிய அளவில் தமிழ்த் திரைப்படங்கள் கவனிக்கப்படுவதுடன் விருதுகளைப் பெற்றும் வருகின்றன.

சில படங்களே உலக அளவில் பேசப்படுகின்றன. பெரியார், வெயில், காக்கா முட்டை, மனுசங்கடா, விசாரணை போன்ற படங்கள் குறிப்பிடத்தக்கன. தமிழ்த் திரைப்படத்துறை பல்வேறு வளர்ச்சிப் படிநிலைகளைக் கொண்டது. கலைத்தன்மை வாய்ந்த திரைப்படங்கள் அவ்வப்போது வந்தாலும் வணிக ரீதியிலான படங்களே பெரும்பான்மையாகத் தயாரிக்கப்படுகின்றன.

### இந்தியத் திரைப்பட விருதுகள்

#### சர்வதேச திரைப்பட விழா (IFFI)

திரைப்பட ஆர்வலர்களுக்குத் திருவிழா என்பது ஒவ்வோர் ஆண்டும் நடைபெறும் சர்வதேச திரைப்பட விழாக்கள்தாம். இந்தியாவின் முதல் பிரதம மந்திரி ஆதரவுடன், 1952 ஆம் ஆண்டு மும்பையில் முதலில் நடைபெற்றது. அதன்பின் சென்னை, கல்கத்தா, திருவனந்தபுரம், கோவா போன்ற இந்திய நகரங்களில் தொடர்ச்சியாக நடந்துவருகின்றது. இது மத்திய அரசின் அங்கீகாரத்துடன் நடைபெறுகிறது. இதில் உலகின் பல்வேறு நாட்டிலிருந்து வருகை தரும் திரைக்கலைஞர்களின் நேரடி பங்களிப்போடு நடைபெறுவதால் இது முக்கியமான திரை விழாவாகும். இதில் 'இந்தியன் பனோரமா' பிரிவில் ஒவ்வோர் ஆண்டும் வெளியான முக்கியமான இந்தியத் திரைப்படங்கள் திரையிடப்படும்.

#### தாதாசாகேப் பால்கே விருது



இந்தியத் திரைப்படத் துறையில் வாழ்நாள் சாதனை புரிந்தோருக்காக இந்திய அரசால் ஆண்டுதோறும் இவ்விருது வழங்கப்படும். இந்தியத் திரைப்படத் துறையின் தந்தை எனக் கருதப்படும் தாதாசாகேப் பால்கே அவர்களின் பிறந்தநாள் நூற்றாண்டான 1969ஆம் ஆண்டு இவ்விருது வழங்கும் அமைப்பு நிறுவப்பட்டது. தேவிகா ராணி 1969ஆம் ஆண்டு முதன்முதலில் இவ்விருதைப் பெற்றார். தமிழகத்தில் 1996ஆம் ஆண்டு சிவாஜி கணேசனும் 2010ஆம் ஆண்டு கே. பாலச்சந்தரும் இவ்விருதினைப் பெற்றுள்ளனர்.

#### தேசிய திரைப்பட விருது

இந்தியாவின் தொன்மையானதும் முதன்மையானதுமான விருது தேசிய திரைப்பட விருது. இவ்விருது வழங்கும் அமைப்பு 1954ஆம் ஆண்டு இந்திய அரசால் நிறுவப்பட்டது.




இந்திய திரைப்பட விழாக்களின் இயக்குநரகம் 1973 முதல் இவ்விருதுகளை வழங்கி வருகிறது. ஒவ்வோர் ஆண்டும் குடியரசுத் தலைவரால் புது தில்லியில் இவ்விருது வழங்கப்படுகிறது. முதல் தேசிய விருதினைப் பெற்ற தமிழ்ப்படம் 'மலைக்கள்ளன்'.

# திரைக்கலை நுட்பங்கள்

திரைப்படம் தயாரித்தல் ஒரு கலை. காட்சிகளின் ஒளிப்பதிவும் அக்காட்சிகளைப் படமாக்கும் நுட்பமும் முதன்மையான ஒன்று. காட்சிகளின் வெளிப்பாட்டு நுட்பமும் பின்னணி இசையும் கதைக்குள் பார்வையாளரை ஈர்த்துக்கொள்பவை.

நாம் திரையில் பார்க்கும் செவ்வகச் சட்டகத்திற்குள்(Frame) பல்வேறு திரைக்கலை நுட்பங்கள் பயன்படுத்தப்படுகின்றன. இரண்டரை மணி நேரத்தில் நாம் பார்த்துவிடக் கூடிய ஒரு திரைப்படத்தை எடுப்பதற்குத் திரைப்படக் குழுவினர் மேற்கொள்ளும் முயற்சிகள் அளப்பரியவை. திரைவெளியில் பயன்படுத்தப்படும் திரைக்கலை நுட்பங்களைத் தெரிந்துகொள்வதென்பது ஒரு திரைப்படம் எப்படி உருவாக்கப்படுகிறது என்பதைப் புரிந்துகொள்ள உதவும்.

## கதை (Story)

ஒரு நல்ல திரைப்படம் ஒரு கதையைச் சொல்ல வேண்டும். அதனால்தான் 'கதை' திரைப்படத்தின் உயிர் என்று கருதப்படுகிறது. ஒரு கதையை எப்படித் தேர்ந்தெடுப்பது? கதை, உணர்வுபூர்வமாக நம் மனநிலையில் ஒரு பாதிப்பை ஏற்படுத்த வேண்டும். அப்படிப்பட்ட கதையைத் திரைப்படத்திற்கேற்ற திரைக்கதையாக மாற்ற வேண்டும்.

## முடிச்சு (knot)

திரைக்கதையின் உயிர்மூச்சு முடிச்சு ஆகும். கதையின் விறுவிறுப்பு கதைமுடிச்சில் உள்ளது. இதனை ஆங்கிலத்தில் 'நாட்' (Knot) என்பர். காப்பியம், புதினம் முதலிய எல்லாவகைக் கதை இலக்கியங்களுக்கும் இந்த முடிச்சு அடிப்படையானது. அதனால் ஒரு கதையில் முடிச்சு எது என்பதை அறிதல் வேண்டும். ஒரு சிக்கலை முடிச்சு எனக் கருதலாம். 'திரைக்கதையில் அவிழ்ப்பதற்கு மிகச் சவாலான சிக்கலே முடிச்சு' என்று கூறுவர். இதனை இடைஞ்சல், லாக், ஸடன் டிவிஸ்ட், பொறி, ஐடியா என்று பல பெயர்களால் சுட்டுவர். ஒரு திரைக்கதையில் எத்தனை கற்பனை வளமான காட்சிகளைச் சேர்த்துச் சுவையாக்கினாலும், விவாதப்பொருண்மை என்னும் அடிப்படையான கருத்து இல்லாமல் திரைக்கதையை எழுதத் தொடங்கக் கூடாது என்பர்.

## ஒருவரிக் கதை (One Line)

திரைக்கதையைத் தேர்ந்தெடுத்துவிட்டால், அதன் பிறகு செய்ய வேண்டிய வேலை, அதைக் காட்சிகளாகப் பிரித்து, காட்சிகளில் அந்தந்த இடங்களுக்குத் தேவையான, முக்கியமான வசனங்களை உட்படுத்துவது. சுருக்கமாகச் சொன்ன ஒரு கதையை, விரிவான காட்சிகளாக மாற்றி அமைக்க முதலில் இதை ஒருவரியாக மாற்ற வேண்டும். எடுக்கப்போகும் ஒரு திரைப்படத்தின் கதையை மிகமிகச் சுருக்கமாக ஒரு பத்தி அளவில் சொல்லப்படுகிற கதைச்சுருக்கம் 'ஒன் லைன்' அல்லது 'ஒருவரிக் கதை' என்று கூறப்படும். இரண்டரை மணிநேரம் திரையில் ஓடக்கூடிய ஒரு திரைப்படத்தின் கதையை ஒரு நிமிட நேரத்திற்குள் மிகவும் சுருக்கமாகச் சொல்வதால், இதனை ஒருவரிக் கதை என்று சொல்வர்.

ஒவ்வொரு காட்சியையும் இரண்டு அல்லது மூன்று வரிக்குள் எழுதும் சுருக்க வடிவமாகவும் ஒருவரி அமையும். இந்த ஒருவரி அடிப்படையில்தான் திரைக்கதையின் ஒவ்வொரு காட்சியும் எழுதப்படுகிறது. இந்தக் காட்சிகளை வைத்துக்கொண்டுதான் காட்சித் துணிப்புகளை உருவாக்குகின்றனர். பல காட்சித் துணிப்புகள் சேர்ந்துதான் ஒரு காட்சியானது உருவாகின்றது. திரைக்கதையில் மிகவும் முக்கியமான கட்டமைப்பு முறையே காட்சி எனப்படுகிறது. காட்சிகள்தாம் கதையை நகர்த்திச் செல்ல உதவும்.

காட்சிகள் மூலம் கதையை நகர்த்திச் செல்ல முடியாதபோதுதான், உரையாடல்கள் இடம்பெறும். இது கதையின் நோக்கத்தை முழுமைப்படுத்த வேண்டும். கதாபாத்திரத்தின் உள்ளுணர்வை வெளிப்படுத்துவதோடு காட்சிகளுக்கு மேலும் வலுவேற்ற வேண்டும். எழுதி முடித்த ஒரு காட்சியை, விஷுவலாக எவ்வாறு பார்வையாளரிடம் கொண்டுபோய்ச் சேர்ப்பது என்பது முக்கியம். அதற்குக் கதை, கதையின் முடிச்சு, ஒருவரிக் கதை, திரைக்கதை, காட்சி, உரையாடல் போன்றவற்றோடு திரைப்படத்தின் பிற நுட்பங்களையும் அறிந்துகொள்ளுதல் இன்றியமையாதது.

ஒரு கதையை எப்படித் திரைப்படமாக எடுக்க முடியும் என்பதை அறிவதற்குத் திரைப்பட நுட்பங்கள்தாம் முதலில் தேவை. அதன் நுட்பங்களை ஒரு கதையோடு பொருத்திப் பார்த்தால் எவ்வாறு திரைப்படமாகிறது என்பதை அறியலாம். அந்த வகையில் நம் பாடத்தில் கதையியல் பகுதியில் இடம்பெற்றுள்ள 'கல்மரம்' புதினத்தின் ஒரு காட்சியை மட்டும் எடுத்துக்கொள்வோம். அந்தக் காட்சியை எப்படிப் படமாக்கலாம், படமாக்கப்படுவதற்கான உத்திகள் என்னென்ன? அதில் எவ்வாறு திரைநுட்பங்களைப் பயன்படுத்தலாம் என்பனவற்றை இக்காட்சியின் வழியே காண்போம்.

*"கையில் இருந்த உணவுக் கவளத்தைத் தட்டில் உதறிவிட்டு கன்னியம்மாளின் அருகேபோய் உட்கார்ந்தாள் ஆதிலட்சுமி. உட்காருவதற்குக்கூட தெம்பு இல்லாதவளாக உட்கார்ந்த நிலையிலேயே சுருண்டாற் போல தரையில் சரிந்தாள் கன்னியம்மாள்.*

*'ஒரே மயக்கமாக்கீது' என்று அவள் வாய் முணுமுணுத்தது.*

*சொர சொரத்துக் காய்ந்து கருத்துப்போன தன் இடது கைவிரல்களால் தாய்மையின் கனிவெல்லாம் மேன்மையெல்லாம் தேக்கித் தரையில் கிடந்த மகளின் மெலிந்த உடலையும் நெற்றியையும் ஆதரவாகத் தடவிக் கொடுத்தது ஆதிலட்சுமியின் கை."*

### காட்சித்துணிப்பு (Shot)

கல்மரம் கதையில் உள்ள இந்தக் காட்சியைப் படமாக்கும் போது பல காட்சித் துணிப்புகளாக எடுத்துப் பின் ஒரே காட்சியாக இணைக்க வேண்டும். காட்சித் துணிப்பு என்பது



திரைப்படத்தின் மிகச் சிறிய கூறு. இடையே எந்த வெட்டும் இல்லாமல் தொடர்ந்து பதிவு செய்யப்பட்ட ஒரு படமாகும். இயக்குநர், தொடங்கு எனச் சொல்வதிலிருந்து நிறுத்து சொல்வது வரை 'காட்சி' என்று சொல்லலாம். கன்னியம்மாள் வீட்டிற்குள் வருவதை மட்டும் காட்டுவது ஒரு காட்சித் துணிப்பு (Shot). கன்னியம்மாளைப் பார்த்துவிட்டு ஆதிலட்சுமி உணவுக் கவளத்தைத் தட்டில் உதறுவது மற்றொரு காட்சித் துணிப்பு. கன்னியம்மாள் சோர்வாக உட்காருவது இன்னொரு காட்சித் துணிப்பு. இந்தக் காட்சித் துணிப்புகள் அனைத்தையும் ஒரே காட்சித் துணிப்பாகவும் எடுக்கலாம். அது சட்டகத்தைப் பொருத்தே அமையும்.

### சட்டகம் (Frame)

திரையில் காட்டப்படும் தனியான பிம்பம் ஒரு சட்டகம். அது படச்சுருளிலும் பின்னர்த் திரையிலும் தெரியும் பிம்பத்தின் அளவும் வடிவமும் ஆகும்.




மேலும் சட்டகம் என்பது, திரைப்படத்தின் அமைப்புரீதியான ஓர் அலகு ஆகும். கன்னியம்மாள், ஆதிலட்சுமி, காவேரி ஆகிய மூவரையும் ஒரே சட்டகத்திற்குள் அமையுமாறும் வைக்கலாம். தனித்தனி சட்டகத்திற்குள் அமையுமாறும் வைக்கலாம். இந்தச் சட்டகத்திற்குள் நிகழும் நிகழ்வே காட்சித்துண்டு.

### காட்சி (Scene)

இப்படி ஒவ்வொரு நிகழ்வையும் தனித்தனிக் காட்சித்துணிப்புகளாக எடுத்து அவற்றை ஒன்றாக இணைத்தே ஒரு காட்சி (Scene) உருவாக்கப்படுகிறது. குறிப்பிட்ட ஓர் இடத்தில் நிகழும் ஒரு நிகழ்ச்சியைக் காட்டும் பல்வேறு காட்சித்துணிப்புகளின் தொகுப்பே காட்சி. இக்காட்சியானது எவ்வளவு நீளமாக வேண்டுமானாலும் இருக்கலாம். ஒரே காட்சித்துணிப்பாகவும் இருக்கலாம்.

காட்சித்துணிப்பு அண்மைக் காட்சி (Closeup Shot), இடைநிலைக் காட்சி (Mid Shot), சேய்மைக் காட்சி (Long Shot) , முழுக்காட்சி (Full Shot) எனப் பல வகையாக அமையும். அண்மைக் காட்சியாக எடுக்கும்போது இவை தனித்தனி காட்சித்துணிப்புகளாகவும் முழுக்காட்சியாக, சேய்மைக்காட்சியாக எடுக்கும்போது ஒரே காட்சித்துணிப்பாகவும் இருக்கின்றன.

### அண்மைக் காட்சி

மனிதனையோ பொருளையோ அண்மையில் எடுக்கப்படும் துணிப்புக்கு அண்மைக் காட்சி என்று பெயர். அண்மைக்காட்சியில் மற்றவை மறைந்து எந்தப் பகுதியை மையப்படுத்துகிறோமோ அதுமட்டும் தெளிவாகத் தெரிகிறது. இதனால் மனிதனின் உணர்வுகளைத் தெளிவாக உணரமுடியும். கன்னியம்மாள் சோர்வாக இருப்பதை உணர்த்த முகத்தை மட்டும் காட்டுவது அண்மைக் காட்சி.

### இடைநிலைக் காட்சி

சாதாரணமாக ஒருவரைப் பார்க்கும்போது கால் வரை நாம் பார்ப்பதில்லை. இடுப்பு வரைதான் பார்ப்போம். இடுப்புவரை எடுக்கப்படும் காட்சியை இடைநிலைக் காட்சி எனலாம். பொதுவாக திரைப்படங்களில் இக்காட்சியை அதிகம் பயன்படுத்துகிறார்கள். உரையாடலுக்கு ஏற்ற துணிப்பு இது. ஆதிலட்சுமியிடம் 'ஒரே மயக்கமாக்கீது' என்று கன்னியம்மாள் உரையாடுகிறாள். இதனை இடைநிலைக்காட்சியின் மூலம் காட்டப்படும்போது உச்சரிப்பை நன்கு உணரலாம்.

### சேய்மைக்காட்சி

துணிப்புகளின் தலைமையாக சேய்மைக்காட்சி விளங்குகிறது. நகரத்தையோ, நிலப்பகுதியையோ காண்பிப்பதற்கு ஏற்ற துணிப்பு



சேய்மைக் காட்சி



இடைநிலைக் காட்சி



அண்மைக் காட்சி

இது. கதையில் வரும் கட்டடத் தொழிலாளர் தாங்கள் கட்டிய கட்டடங்களை நினைத்துப் பார்க்கும்போது, சேய்மைக்காட்சி அனைத்துக் கட்டடங்களையும் ஒருசேரக் காட்டலாம்.

## முழுக்காட்சி

முகத்திலிருந்து பாதம் வரை எடுக்கப்படும் காட்சிக்கு முழுக்காட்சி என்று பெயர். ஓர் இடத்தையோ, பொருளையோ ஒரு செயல் நடந்து கொண்டிருக்கும் காட்சியையோ, முழுமையாகக் காண்பிக்கும் காட்சியை முழுக்காட்சி (மாஸ்டர் ஷாட்) என்கிறோம். ஆதிலட்சுமி எழுந்து தன் மகள் கன்னியம்மாளிடம் வருவதைக் காட்டுவது 'முழுக்காட்சி' .

இவ்வாறு ஒவ்வொரு துணிப்பும் அது வெளிப்படுத்தும் உணர்ச்சிக்கேற்ப மாறுபடும். உணர்ச்சியைச் சரியாகக் காட்சிப்படுத்த பல்வேறு கோணங்களில் படம் பிடிக்கப்பட வேண்டியிருக்கிறது. தூக்கிச் சுழலும் காட்சி (Crane shot) பலவித கோணங்களையும் தீர்மானிக்கிறது. மனிதன் பார்க்க முடியாத கோணங்களையும் இதன்மூலம் எடுக்கலாம்.

## படப்பிடிப்புக் கருவி கோணம்

ஒரு காட்சியை மூன்றுவித கோணங்கள் மூலம்கொண்டுவர முடியும்.இதனைப்புறநிலைக் கோணம், அகநிலைக் கோணம், பார்வையாளர் கோணம் என்று அழைப்பர். எந்தக் கோணத்தில் படமாக்க கருவியை வைக்கிறோமோ, அதையே படப்பிடிப்புக் கருவி கோணம் என்கிறோம். இந்தக் கோணம் காட்சியின் பொருளையே மாற்றும். காட்சித்துணிப்பின் தன்மைக்கேற்பக் கோணங்கள் அமையலாம்.

## நகர்வு (Movement)

உண்மையில் படப்பிடிப்புக் கருவியை நகர்த்தாமல் படம் பிடிப்பதுதான் சரியான படப்பிடிப்பு ஆகும். உலகில் திரைப்படம் தோன்றி வளர்ந்த ஆரம்பக் காலங்களில், அதாவது மௌனப்படக் காலங்களில், படப்பிடிப்புக் கருவியை முக்காலி நிறுத்தத்தில் ஆடாமல் அசையாமல் வைத்து ஒவ்வொரு காட்சியாகவே படம்பிடித்தனர்.

சும்மா இருக்கும் படப்பிடிப்புக் கருவியை இங்குமங்குமாக நகர்த்துவது நகர்வு அல்ல. படப்பிடிப்பில் படம் பிடித்துக்கொண்டிருக்கும் நிலையில் குனிந்தோ, நிமிர்ந்தோ, பக்கவாட்டில் இடமும் வலமுமாகத் திரும்பியோ, மேலும் கீழுமாக ஏறி இறங்கியோ, முன்னும் பின்னுமாக அசைந்தோ, வட்டமாகச் சுழன்றோ வேறு வகையிலோ நகர்வதையே நாம் இங்கு படப்பிடிப்புக் கருவி நகர்வுகள் என்று குறிப்பிடுகிறோம்.

இன்றும் ஹாலிவுட் படங்களில் படப்பிடிப்புக் கருவி நகர்வுகளை அதிகம் பார்க்க முடியாது. தொடர்ச்சியான வெட்டுத் துண்டுகளாக காட்சிகள் அடுக்கப்படுவது பெரும்பான்மையான படங்களின் அமைப்பாக உள்ளது.

படம்பிடித்துக் கொண்டிருக்கும் நிலையில் படப்பிடிப்புக் கருவியை நகர்த்த வேண்டிய சில தருணங்கள் உண்டு. அத்தகைய தருணங்களில் படப்பிடிப்புக்கருவியைநகர்த்திப்படம்பிடிப்பதால் எதார்த்தம் கெடாமல், பார்ப்பவர்களுக்கு இன்னும் தெளிவாகக் காட்சியை உணர்த்த முடியும்.

## நகர்வுக்கு உதவும் கருவிகள்

நாம் படப்பிடிப்புக் கருவியைத் தோளில் சுமந்தே நகர்த்தலாம். ஆனால் கனமான, விலையுயர்ந்த படப்பிடிப்புக் கருவி, அப்படித் தோளில் வைத்து நகர்த்தும்போது கீழே விழுந்துவிடலாம் அல்லது படம் அசைந்து ஆடியவாறு பதிவாகலாம். அதற்காகவே படப்பிடிப்புக் கருவி நகர்வுகளுக்கென்று சில கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அவை

1. உருளைகள் பொருத்தப்பட்ட முக்காலி (Rolling Tripod)
2. நகர்த்தி (Trolly)
3. தூக்கிச் சுழற்றி (Crane)
4. வாகனங்கள் (கார், ஹெலிகாப்டர் போன்றவை)

இயக்குநர் எந்தக் கோணத்தில் ஒரு காட்சியைப் படமாக்க விரும்புகிறாரோ, அதற்கேற்ற கருவியைப் பயன்படுத்திப் படமாக்கலாம்.




## எடுப்பு (Take)

காட்சித்துண்டு நாம் எதிர்பார்த்தது போலவே சரியாக அமையும்வரை எடுப்பு (Take) நிகழும். சரியான ஒரு காட்சித்துணிப்பு பல எடுப்புகள்வரை செல்லும். சரியான கோணத்தில் எடுக்கப்பட்ட காட்சித்துணிப்புதான் தேர்ந்த ஒரு காட்சியாக மாறுகிறது. ஒரு காட்சியைப் படம்பிடிக்கும்போது ஒரே முறையில் அது சரியாக அமைந்து விடாது. நடிகர் சரியாக நடித்திருக்க மாட்டார். இருவர் தோன்றும் காட்சியில் ஒருவர் சரியாகச் செய்ய மற்றவர் நடிப்பு சரியாக இருந்திருக்காது. நடிகரின் பார்வைக் கோணம் தவறாகப் போய்விடலாம். நடிப்பிடத்தில் சம்பந்தமில்லாதவர் வந்துவிடலாம். படப்பிடிப்பாளர் தவறு செய்துவிட்டாலும் அந்தக் குறிப்பிட்ட துணிப்பைத் திரும்பவும் எடுக்க வேண்டி நேரும். அதுதான் எடுப்பு.

## ஒருங்கமைத்தல்

ஒருகாட்சியைஎடுக்கும்போதுஅக்காட்சிக்கு ஏற்பத் திரைக்கதையும் உருவாக்கப்படும். அக்காட்சியில் வரும் கதாபாத்திரம், அவர்கள் பேசும் உரையாடல், ஒலி, ஒளி (வண்ணம்) போன்றவை திரைக்கதையிலேயே குறிக்கப்பட வேண்டும். அப்பொழுதுதான் ஓர் ஒருங்கமைவு இருக்கும். சட்டகத்தில் உள்ள நடிகர்கள் மற்றும் பொருட்கள் அனைத்தையும் ஓர் அழகியல் முறையில் ஒருங்கிணைத்து அமைக்கும் கலையே ஒருங்கமைத்தல் (Composition) என்று கூறுவர்.

ஆதிலட்சுமியின் வீட்டில் நிகழும் நிகழ்வைக் காட்சிப்படுத்தும்போது கதாபாத்திரங்கள் அவற்றின் தன்மையோடு இருத்தல் வேண்டும். ஏழை கூலித்தொழிலாளராக இருக்கும் அவர்கள் வீட்டின் பின்புலம், அவர்களின் நடை, உடை, பாவனை, வட்டாரப்பேச்சு முறை இவை யெல்லாம் ஒருங்கமைத்து ஒரே சட்டகத்திற்குள் கொண்டு அமைக்கப்பட வேண்டும். அப்பொழுதுதான் அந்தக் காட்சி மூலம் பார்வையாளருக்கு நாம் என்ன சொல்ல வருகிறோமோ அதுபோய்ச் சேரும். இதற்குக் கூடுதல் சிறப்பாக அமைவது ஒலியும் ஒளியும்.

## ஒளி

ஒளி இல்லாமல் காட்சி இல்லை. தெளிவான பார்வை இருந்தாலும் ஒருவரால் இருட்டில் எந்தப் பொருளையும் காண முடியாது. ஒளி காட்சியைக் காண்பதற்கு எப்படி முக்கியமோ, அப்படித்தான் ஒரு காட்சியைப் படம் பிடிப்பதற்கும் ஒளி இன்றியமையாத ஒன்று.

ஒளியை இரண்டு வகையாகக் கொள்ளலாம். அவை, இயற்கை ஒளி (Natural Light), செயற்கை ஒளி (Artificial Light). சூரிய

ஒளி மட்டுமே இயற்கை ஒளி. ஏனைய எல்லாம் செயற்கை ஒளி. ஒளி ஒரு மொழியாகவே செயல்படுகிறது.

- வெளிச்சம் – மகிழ்ச்சி, வீரம், நேர்மையின் குறியீடு.
- இருட்டு – சோகம், பயம், இரகசியத்தின் குறியீடு.

ஆதிலட்சுமியின் குடிசை வீட்டிற்குள் இருள்சூழ்ந்தவாறு மங்கலாகச் செயற்கை ஒளி பாய்ச்சப்படும்போது அது சோகத்தின் குறியீடாகத் தெரியும்.

வெளிச்சம், இருட்டு என்பதாக இல்லாமல், காட்சியின் பின்புலத்தில் வண்ணங்கள் காட்டப்படும்போது அவ்வண்ணங்களின் இயல்பை அறிந்து தரவேண்டும். காட்சிக்கு வண்ண ஒளி தருவதில் இரண்டு முறைகள் உள்ளன. ஒன்று, படக்கருவிக்கு முன்னால் வண்ணத் தடுப்பு எனப்படும் வண்ண முகமூடி முறை. மற்றொன்று வண்ணத் தாளைக் கட்டி படம்பிடிக்கும் முறை.

| | |
|---|---|
| சிவப்பு | சினம், அபாயம், நெருப்பு |
| பச்சை | செல்வம், தாராளம், அமைதி, மகிழ்ச்சி, ஓய்வு |
| கருநீலம் | குளிர்ச்சி, களங்கமின்மை, பயபக்தி, அடிமை, வானம், கடல் |
| இளஞ்சிவப்பு | காதல், பாலுணர்வு |
| கருப்பு | துக்கம், பயம், பரிதாபம், கள்ளம், கவலை |
| வெண்மை | குளிர்ச்சி, இளமை, தூய்மை, சுறுசுறுப்பு |
| ஊதா | பெருமை, பிரகாசம், பயபக்தி, கடவுள் நம்பிக்கை. |
| நீலம் | தெய்வீகம், தியானம், சாந்தம் |
| மஞ்சள் | உற்சாகம், நல்லெண்ணம், பெருமகிழ்ச்சி, சூரியன், இன்றியமையாமை |
| ஆரஞ்சு | வேடிக்கை, விளையாட்டு, செழிப்பு, நகைச்சுவை |

இப்படி ஒவ்வொரு வண்ணமும் ஒருவகை உணர்ச்சியைத் தருகிறது. காட்சிக்குப் பொருத்தமான வண்ணத்தையே பின்புலத்தில் தர வேண்டும்.

## ஒளிப்பதிவு

படப்பிடிப்புக் கருவி எல்லாவற்றையும் துணிப்புகளாகத்தான் படமாக்குகிறது. படத்தொகுப்பு மூலமாகத்தான் துணிப்புகள் இணைக்கப்படுகின்றன. இவ்வாறு எடுக்கப்படும் ஒவ்வொரு துணிப்பும் ஒரு கோணத்திலிருந்து எடுக்கப்படுகிறது. இக்கோணம் படம் பார்ப்பவரின் கோணமா, அப்படம் எடுப்பவரின் கோணமா, கதாபாத்திரங்களின் கோணமா? என்று கேட்டால் இதற்குப் பதில் படப்பிடிப்புக் கருவி எல்லாக் கோணங்களிலிருந்தும் செயல்படுகிறது என்பதுதான். திரைப்படத்தின் முக்கிய கூறாக ஒளிப்பதிவு உள்ளது.

## ஒலி

திரைமொழிக்கு உதவும் கூறுகளில் ஒன்று ஒலி. திரைப்படம் கண்ணால் பார்க்கப்பட்டும் காதால் கேட்கப்பட்டும் நுகரப்படுகிறது. பிம்பமும் ஒலியும் இணைந்து நிற்பதுதான் திரைப்பட மொழி. திரைப்படங்களில் ஒலி, இசை, பாடல்களின் மெட்டு முதலான அனைத்திற்கும் இசையமைப்பாளர்தான் காரணகர்த்தா.

திரைப்படங்களில் அமைக்கப்படும் ஒலியை இயல்பான ஒலி, மிகை ஒலி என்று இருபெரும்பிரிவாக வகைப்படுத்தலாம்.

## ஒலிப்பதிவு

திரைப்படத்தில் ஒலிப்பதிவு, நான்கு வித ஒலிகளை முதன்மைப்படுத்துகிறது.

1. உரையாடல்
2. பாடல்கள்
3. பின்னணி இசை
4. சிறப்பு ஒலிகள்

படப்பிடிப்புக்குப் பிறகு ஒலிப்பதிவுக் கூடங்களில் இந்த நான்கு வகையான ஒலிகளையும் இணைத்தல் மூலம் ஒரே ஒலித்தடத்தில் இணைக்கிறார்கள்.

திரைப்படத்தில் ஒலியின் தன்மை என்பது, காட்சியை அழகுபடுத்துதல், மேம்படுத்துதல் ஆகியவற்றுடன் காட்சிகளில் முழுமை அடையாத சில கூறுகளை முழுமைப்படுத்துவதும் கூட. இசை மனிதர் புரிந்துகொள்ளும் பொதுமொழியாகும்.

### மௌனம் (Silence)

திரைப்படத்திற்கு மௌனம் நல்லதொரு மொழியாகும். சரியாகச் சொல்வதானால், திரைப்படத்தின் மொழியே அதுதான். அதனுடைய மொழியில் பேசுவதே அதற்கு அழகு.

கதையில் வரும் கதாபாத்திரங்கள் பேசாமல் திரைப்படமே பேசவேண்டும். பேசாமல் பேசும் மொழியே திரைமொழி. காட்சிகளின் வழியாக மக்கள் பெரும்பாலும் தங்கள் காதுகளை மறந்துவிட்டுக் கண்களின் வழியாகக் கண்ட காட்சிகளால் கதையையும் கருத்தையும் உணருமாறு பேசாமலேயே புலப்படுத்தும் மொழியே மௌனமொழி. கதையை, கருத்தைப் பார்வையாளர்களுக்கு மௌனத்தின் வழியாகவே உணர்த்திவிட முடியும்.

### உணர்வு (Emotion)

நடிகர்கள் பேசாமல் அவர்களின் முகபாவம், அபிநயம், உடல் அசைவுகள், இசை, காட்சி அமைப்பு முதலான திரைப்படத்தின் வசனமற்ற கூறுகள் அனைத்தும் கருத்தைப் புலப்படுத்துபோது பார்வையாளர் அந்த உணர்வைப் பெறுகின்றனர். பேச்சு ஒரு மொழி என்பதுபோல, காட்சி வழியாகக் கருத்தைப் புலப்படுத்துவதும் ஒரு மொழிதான். இதனைக் காட்சிமொழி என்று கூறுவதே பொருத்தமாகும். இந்தக் காட்சிமொழி திரைப்படத்தின் உயிரோட்டமான கூறு என்பதால் படம் சொல்ல வரும் கருத்தைப் பார்வையாளர்கள் உணர்வு ரீதியாகப் பெறுகின்றனர்.

### திரைமொழி

திரைமொழி என்பது உலகத் திரைப்படங்கள் முழுமைக்குமான ஒரு பொதுமொழி. அது பாத்திரங்கள் வாய் திறந்து பேசும் மொழியன்று. அவர்களது முகபாவனை, அபிநயம், அவர்கள் தோன்றும் இடச்சூழலான காட்சியமைப்பு, அவர்களின் ஒப்பனைக் கோலம், பின்னணியில் எழும் ஓசைகள், இசை, பாடல்கள், திரைப்படம்



#### தெரியுமா?

புகழ் மிக்க நகைச்சுவை நடிகரும் இயக்குநருமான சார்லி சாப்ளின் ஊமைப்படங்களையே தயாரித்து வருவதைக் கண்டு பொறுமையிழந்த அமெரிக்கப் பத்திரிகையாளர்கள் சாப்ளினிடம் கேட்டார்கள். "பேசும் படம் எடுப்பதானால் செலவு கூடுதலாக வரும்தான்; உங்களை விடவும் வசதி குறைந்த தயாரிப்பாளர்கள் எல்லாரும் பேசும் படங்களை எடுக்கும்போது, நீங்கள் மட்டும் இன்னமும் ஊமைப்படங்களையே தயாரிக்கிறீர்களே, ஏன்?" என்று கேட்டார்கள். இந்தக் கேள்விக்குச் சார்லி சாப்ளின் இவ்வாறு பதிலுரைத்தார்.

"என் படங்கள் ஊமைப்படங்கள் என்று கூறுவதைக் கடுமையாக ஆட்சேபிக்கிறேன். அவற்றைப் பார்க்கும் உங்களுக்கு அந்தப் படங்கள் கூறும் செய்தி புரிகிறதல்லவா? அவ்வாறெனில், அந்தப் படங்கள் உங்களோடு பேசிவிட்டன என்று தானே அர்த்தமாகிறது! என் திரைப்படங்கள் திரைக்கே உரிய அதன் சொந்த மொழியில் பேசுகின்றன (It speaks in its own language) என்றார். மேலும் "என் திரைப்படங்களில் வரும் கதாபாத்திரங்கள் நீங்கள் எதிர்பார்ப்பது போல், ஆங்கில மொழியில் பேசியிருந்தால், அது ஆங்கிலம் தெரிந்த குறிப்பிட்ட வட்டாரத்திலுள்ள மக்களுக்கு மட்டுமே புரிந்திருக்கும். ஆனால் என் படங்கள் திரைமொழியில் பேசுவதால், உலகின் அனைத்துப் பகுதியிலும் வாழ்கின்ற எல்லா மக்களுக்கும் புரிகின்றது. என் படங்கள் வட்டார மொழிப் படங்கள் அல்ல. அவை உலகப் பொதுமொழியில் (Universal Language) பேசும் உலக மொழிப் படங்கள் ஆகும்" என்று பெருமையுடன் குறிப்பிட்டார்.



## அறிவோம் தெளிவோம்

### ஆவணப்படம் (Documentary Film)

உலகில் நடக்கும் நிகழ்வுகளை நடந்தது நடந்தவாறே எழுதி அல்லது பதிந்து வைக்கும் உண்மைக் குறிப்பே ஆவணம் ஆகும். திரைப்பட வகைகளில் ஆவணப்படம் என்பதும் ஒன்றாகும். ஒரு நிகழ்ச்சி நடந்துகொண்டிருக்கும் போதே படப்பிடிப்புக் கருவி படம்பிடித்த உண்மைச் சம்பவங்களையே உண்மை ஆவணப்படம் என்று கூறுவர். இதனை "டாக்குமெண்டரி ஃபிலிம்" (Documentary Film) என்று ஆங்கிலத்தில் சுட்டுவர். விவரணப்படம், தகவல் படம், செய்திப்படம், சாசனப்படம் என்ற பல பெயர்களால் இதனை அழைப்பர். தமிழின் ஆவணப்பட முன்னோடியான ஏ.கே.செட்டியார் "வாழ்க்கைச் சித்திரப் படம்" என்று இதனைக் குறிப்பிட்டார். இவர் 1940இல் 'மகாத்மா காந்தி' என்னும் ஆவணப்படத்தைத் தயாரித்துப் புதுமையை ஏற்படுத்தியவர்.

நடைமுறையிலுள்ள உண்மைகளை மக்களுக்கு எடுத்துரைப்பதற்குச் சில நேரங்களில் உண்மை நிகழ்வுகள் சிக்குவதில்லை. அதாவது உண்மையான நிகழ்ச்சி நடந்து முடிந்திருக்கும். அச்சம்பவத்தைச் சிலரை நடிக்க வைத்து நாடகமாக அதை வெளிப்படுத்த வேண்டியிருக்கும். அதனால், அதனை நாடக ஆவணப்படம் என்பர். இது "டாக்கு டிராமா" அல்லது "ஃபிக்ஷன் டாக்குமெண்டரி" என்று ஆங்கிலத்தில் அழைக்கப்படும்.

1911ஆம் ஆண்டு டில்லியில் ஐந்தாம் ஜார்ஜின் முடிசூட்டு விழாவை எடுத்த படமே இந்தியாவில் உருவாக்கிய முதல் ஆவணப்படம். இதனை மருதப்பன் என்ற தமிழர் உருவாக்கினார். ஒவ்வோர் ஆண்டும் நடக்கும் "கேன்ஸ்" திரைப்பட விழாவில் வழங்கும் "பாம்டி ஆர்" என்ற விருது குறிப்பிடத்தக்கது. அவ்விருதினைப் பெற்ற முதல் ஆவணப்படம் 1956இல் வெளியான "தி சைலன்ட் வேல்டு" என்பதாகும்.

### குறும்படம் (Short Film)

குறும்படம் என்பது குறைந்த நேரத்திற்குள், அதாவது முப்பது நிமிடத்திற்குள் திரையில் காட்டப்படும் படங்கள் ஆகும். இன்று குறும்படங்கள் ஐந்து நிமிடத்திற்குள் முடிவதும் உண்டு. முழுநீளக் கதைப்படத்தை ஒரு புதினம் என்று சொன்னால், குறும்படத்தை ஒரு சிறுகதை என்று கூறலாம். குறிப்பிட்ட ஒரு நீதியை அல்லது ஒரு கருத்தைச் சட்டென மக்களுக்கு உணர்த்த இவ்வகையான குறும்படங்கள் பயன்படுகின்றன.

நடிகர்களை நடிக்க வைத்துத்தான் குறும்படம் உருவாக்க வேண்டும் என்பதில்லை. கருத்துப்படமாகவோ, அசைவூட்டப் படமாகவோ, வரைகலை சித்திரமாகவோ இருக்கலாம். "விம்பம்" (VIMBAM) என்ற அமைப்பு லண்டனில் குறும்பட விழாக்களை 2004ஆம் ஆண்டு முதல் நடத்தி வருவது குறிப்பிடத்தக்கது.

என்ற கலைச் சாதனத்திற்குரிய உத்திகள் முதலானவற்றின் அடிப்படையில் கருத்தைப் புலப்படுத்தும் கலையே திரைமொழி.

### உடல்மொழி

நடிகரின் இயல்பான உடலின் தோற்றம் உடல் தோற்றம் எனப்படும். ஆனால் உடல்மொழி என்பது அதிலிருந்து வேறுபட்டது. நடிகர் குனிந்தோ நிமிர்ந்தோ வளைந்தோ நிற்கும் நிலைகளால் பணிந்து போகிறார், எதிர்க்கிறார், மகிழ்கிறார் என்பதாக ஒரு கருத்தைப் புலப்படுத்த தம் உடலை வைத்து மேற்கொள்ளும் உடல்நிலையை உடல்மொழி என்பர். நடிகர்களின் சிறு அசைவுகளும் செயல்களும் உடல்மொழியில் அடங்கும். இதனை, பேசாமல் பேசும் திரைமொழிக் கூறு எனலாம்.

காட்சியமைப்பு வழியாக ஒரு கருத்தை உணர்த்துவது "காட்சியமைப்புத் திரைமொழி" ஆகும். நடிகரின் உருவத்தோற்றம், செயல்கள் மட்டுமன்றி, அவர்கள் நிற்கும் இடம், காலச்சூழல், உடை, ஒப்பனை, கைப்பொருள்,

சுற்றுப் புறங்களில் இருக்கும் பொருள்கள் என அனைத்தும் ஒரு கருத்தைப் புலப்படுத்துவதைக் காட்சியமைப்புத் திரைமொழி எனலாம்.

## திரைக்கதை

திரைக்கலை நுட்பங்களைக் கவனத்தில் கொண்டே திரைக்கதையை உருவாக்க வேண்டும். ஏனெனில், கேட்பதற்கான வடிவம் கதை. கேட்பதற்கும் பார்ப்பதற்குமான வடிவம் திரைக்கதை. தேர்ந்தெடுத்த கதையைப் பார்ப்போரின் மனநிலையைக் கருத்தில் கொண்டு காட்சிகளை வரிசைப்படுத்திக் கட்டமைப்பது திரைக்கதை. கதை நகர்விற்கு ஒவ்வொரு காட்சியும் முக்கியத்துவம் வாய்ந்தது என்பதால் திரைக்கதையை உருவாக்குபவரின் மனவோட்டத்தில் காட்சிக்கான சூழல், காட்சிக் களம், கதை நகர்வு ஆகியன நினைவில் கொள்ளப்படுகின்றன.

கதைக்கும் திரைக்கதைக்கும் வேறுபாடு உண்டு. கேட்கச் சொல்வது கதை. சொல்வதும் காட்டுவதுமானது திரைக்கதை. ஒலியை எழுதினால் அது கதை. ஒலி, ஒளி இரண்டையும் எழுதினால் அது திரைக்கதை ஆகும்.

ஒரு படத்தின் தொடக்கம் முதலாக முடிவு வரையிலும் ஒவ்வொரு காட்சியாகத் திரைமொழியில் காட்சி வருணனை, உரையாடல், நடிப்பு முதலிய செய்திகளை இயக்குநரின் படப்பிடிப்பிற்குத் துணைபுரிகின்ற வகையில் எழுத்துவடிவில் குறித்து வைக்கும் விளக்கக் குறிப்பே திரைக்கதை (Sreen Play).

## வசனம்

திரைப்படத்தில் வசனம் வகிக்கும் இடம் முக்கியமானது. கதையைப் புரிந்துகொள்ள பாத்திரங்கள் பேசும் வசனம் உதவிபுரிகிறது. திரைக்கதைக்குக் கொடுக்கும் முக்கியத்துவத்தைப் போலவே வசனத்திற்கும் முக்கியத்துவம் தரப்படுகிறது. இயக்குநரே வசனம் எழுதும்போது காட்சி களுக்கும் கதாபாத்திரப்பேச்சுக்கும் நல்ல சமநிலையை உருவாக்க முடியும். தேவையற்ற வார்த்தைகளுக்கு இங்கு இடம் இருக்காது. அந்த உரையாடல்கள் காட்சிகளைச் சார்ந்தே இருக்கும். சான்றாக பாலு மகேந்திரா தன் படங்களில் பாத்திரப் பேச்சுக்கான இடத்தைக் குறைத்து, காட்சிகளின்வழி கதைசொல்வதைப் பார்க்கலாம்.

கதாபாத்திரங்களாக வேடமிடும் நடிகர் நடிகையர் பேச வேண்டிய சொற்களும் அவற்றின் ஏற்ற இறக்கங்களுடனான தன்மையுமே உரையாடல் (Dialogue) எனப்படுகிறது. திரைப்படம் அடிப்படையில் காட்சி ஊடகம் என்பதால் காட்சிகளின் அழகும், பொருட்செறிவுமே காட்சியை முன்னோக்கி வழி நடத்துகின்றன. அதற்கு உதவும் வகையில் உரையாடல்கள் அமையவேண்டும்.

## படத்தொகுப்பு

நல்ல படம் எனக் குறிப்பிடப்படுவது இரண்டு மேசைகளில் உருவாகிறது. ஒன்று கதை எழுதுபவரின் மேசை. மற்றொன்று படத்தொகுப்பாளரின் மேசை. படத்தொகுப்பு என்பது ஒரு படைப்புக் கலைத்திறன். அத்திறனைப் பாடம் நடத்தி ஒருவருக்குள் உருவாக்கிவிட முடியாது. அது உளவியல் சார்ந்த கலை. கவிதை எழுதுவதைப்போல இயல்பாகவே அத்திறன் இருக்கவேண்டும். அது மிக நுட்பமான கல்வி ஆகும்.

முறையாக எழுதி முடித்த கதையின் அடிப்படையில் படம் பிடித்த அனைத்து துணிப்புகளையும் கதை கூறும் வரிசையில் ஒன்றன்பின் ஒன்றாக அடுக்குவதே படத்தொகுப்பாகும். பல துணிப்புகளைக் கொண்ட ஒரு காட்சியில் எதை முதலில் காட்டுவது, எதை அடுத்ததாகக் காட்டுவது என்ற உளவியல் நுட்பம் நல்ல படத்தொகுப்பாளருக்கு இருக்க வேண்டிய ஒரு தகுதியாகும்.

ஒரு கதை எவ்வாறு சிறந்த திரைப்படமாகத் தயாரிக்கப்படுகிறது என்பது அதன் திரைக்கலை நுட்பங்கள் எவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதைப் பொருத்தே அமைகின்றது. திரைப்படத்தின் இந்த முக்கியமான நுட்பங்களை அறிந்துகொள்ளும்போது திரைப்படம் சிறந்த கலைப்படைப்பாக உருவாகின்றது.

# இலக்கியமும் திரைப்படமும்

(இலக்கியமும் திரைப்படமும் என்ற முகநூல் குழுவைத் திரைப்பட விமர்சனம் எழுதும் பேராசிரியர் ஒருவர் நிருவகித்து வருகிறார். இக்குழுவில் பலர் உறுப்பினர்களாக உள்ளனர். இதில் பன்னிரண்டாம் வகுப்பு சிறப்புத்தமிழ் பயிலும் மாணவர்கள் அகிலனும் முகிலனும் உறுப்பினராக உள்ளனர். பேராசிரியர்களுக்கும் மாணவர்களுக்குமிடையே நிகழ்ந்த முகநூல் உரையாடல்)

முகிலன்: இலக்கியம் என்ற கலையைப் பயன்படுத்தித்தான் திரைப்படம் உருவானதா? அடிப்படையில் இரண்டும் கலைகள்தானே.

பேராசிரியர்: இலக்கியமும் திரைப்படமும் கலைகள்தாம். கதை என்ற கூறில் வேண்டுமானால் இரண்டும் ஒன்றுபடலாம். ஆனால், வெளிப்படுத்தும் முறையால் வேறுபடுகின்றன. சமூக மாற்றத்திற்கான உந்துசக்தியாக எழுத்தாளர்களின் படைப்புகள் இருந்தாலும், அவை அனைத்து மக்களிடமும் சென்று சேருவதில்லை. அவ்விலக்கியம் சொல்லவரும் கருத்தை மக்களிடம் கொண்டு செல்ல திரைப்பட ஊடகமே பெருந்துணையாக இருந்துவருகின்றது. இதன் தொடர்ச்சியாக இலக்கியம் திரைப்படமாக உருவானது. மேற்கத்திய நாடுகளிலும்கூட, திரைப்படத்திற்கான கதையை இலக்கியத்தில் இருந்து தேர்ந்தெடுக்கின்றனர்.

அகிலன்: தொடக்க காலத்தில் இலக்கியங்களில் இருந்துதான் திரைப்படங்கள் எடுக்கப்பட்டனவா? அப்படியென்றால் அவ்விலக்கியங்கள் எவை எவை?

பேராசிரியர்: ஆரம்பகாலத்தில் எடுக்கப்பட்ட தமிழ்த் திரைப்படங்கள் மேடை நாடகங்களையும் நாடக நடிகர்களையுமே அடிப்படையாகக் கொண்டவை. எழுதப்பட்ட கதைகள் நாடகமாக நடிக்கப்பட்டபோது அந்நாடகங்களைக் கண்ட திரைப்படத் தயாரிப்பாளர்கள் அதனையே திரைப்படமாக்கினர். வடுவூர் துரைசாமியின் 'மேனகா', காசி விஸ்வநாதரின் 'டம்பாச்சாரி', ஜே.ஆர். ரங்கராஜுவின் 'ராஜாம்பாள்', பம்மல் சம்பந்தனாரின் 'இழந்த காதல்' போன்றவை திரைப்படமாக்கப்பட்டவை.

கே.பாலசந்தரின் நாடகமான சர்வர் சுந்தரம், நீர்க்குமிழி, எதிர்நீச்சல் போன்றனவும் படங்களாக்கப்பட்டன. கோமல் சுவாமிநாதனின் தண்ணீர் தண்ணீர், செக்கு மாடுகள் போன்ற நாடகங்களும் படமாயின.

முகிலன்: நாடகங்கள் போலவே சிறுகதைகள், புதினங்கள் படமாக்கப்பட்டனவா?

பேராசிரியர்: இந்தியத் திரைப்பட வரலாற்றில் சிறுகதை அல்லது புதினத்தின் கதையைத் திரைமொழிக்கேற்ப வடிவ மாற்றம் செய்து திரைப்படங்களாக்கினர். இந்தியத் திரைப்பட மேதை சத்யஜித் ரேயின் உலகப் புகழ்பெற்ற திரைப்படங்கள் பெரும்பாலும் புதினங்களையும், சிறுகதைகளையும் அடிப்படையாகக் கொண்டவை.



சத்யஜித் ரே

அவருடைய முதல் மூன்று காவியப் படங்களான பதேர் பாஞ்சாலி, அபராஜிதோ, அபுர்சன்சார் ஆகியவை 'பிபூதி பூஷன்' என்ற எழுத்தாளரது புதினம். தாகூரின் கதைகளும்

திரைப்படங்களாக வெளிவந்துள்ளன. தாஸ்தயாவ்ஸ்க்கி, டால்ஸ்டாய் போன்ற ரஷ்ய இலக்கியவாதிகளின் புதினங்களும் திரைப்படமாக்கப்பட்டன. அதில் 'குற்றமும் தண்டனையும்' என்ற புதினத்தின் கதையை உள்வாங்கிப் பல திரைப்படங்கள் வெளிவந்துள்ளன.

அகிலன்: தமிழில்இப்படிப்பட்ட முயற்சிகள் எவையேனும் நிகழ்ந்திருக்கின்றனவா?

பேராசிரியர்: நிகழ்ந்திருக்கின்றன. மௌனப்படக் காலத்திலேயே வை.மு. கோதைநாயகி அம்மாளின் 'அனாதைப் பெண்' புதினம் அதே பெயரில் படமாக்கப்பட்டது. இதே புதினம் பேசும் படமாகவும் எடுக்கப்பட்டது. இவரின் 'தயாநிதி' புதினம் 'சித்தி' என்னும் பெயரில் திரைப்படமானது.

ஜே.ஆர். ரங்கராஜுவின் 'சவுக்கடி சந்திரகாந்தா', வடுவூர் துரைசாமியின் 'மைனர் ராஜாமணி', கல்கியின் 'தியாகபூமி', 'பார்த்திபன் கனவு', ராஜாஜியின் 'திக்கற்ற பார்வதி', அண்ணாவின் 'வேலைக்காரி' கொத்தமங்கலம் சுப்புவின் 'தில்லானா மோகனாம்பாள்' இராமலிங்கனாரின் 'மலைக்கள்ளன்', அகிலனின் 'பாவை விளக்கு' போன்றவை திரைப்படங்களாக வெளிவந்தன.

பெண் எழுத்தாளர்களான லட்சுமி, சிவசங்கரி, அனுராதா ரமணன் போன்றோரின் புதினங்களும் படமாக்கப்பட்டன. ஜெயகாந்தன், இந்திரா பார்த்தசாரதி, சுஜாதா இவர்களின் படைப்புகள் திரைப்படமாகிப் பெரும் வரவேற்பைப் பெற்றுள்ளன. ஜெயகாந்தனின் படைப்புகளை நீங்கள் வாசித்தது உண்டா?

முகிலன்: வாசித்திருக்கிறேன் ஐயா! உன்னைப்போல் ஒருவன், யாருக்காக அழுதான், சில நேரங்களில் சில மனிதர்கள், ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள். இதில் 'சில நேரங்களில் சில மனிதர்கள்' எனக்குப் பிடித்த நூல்களில் ஒன்று. இது சாகித்திய அகாதெமி விருது பெற்ற படைப்புதானே?

பேராசிரியர்: ஆம். விருது பெற்ற நூல்தான். நீங்கள் சொன்ன படைப்புகள் அனைத்துமே திரைப்படங்களாக வெளிவந்திருக்கின்றன. தமிழ்த் திரைப்படத்தில் இலக்கியத்துக்கும் தமிழ்த் திரைப்படத்திற்குமான உறவு குறித்துப் பேசும்போது முக்கிய ஆளுமையாக அறியப்படுபவர் ஜெயகாந்தன். 'உன்னைப்போல் ஒருவன்' படத்திற்கான திரைக்கதை, வசனம், இயக்கம், தயாரிப்பு என அனைத்தும் ஜெயகாந்தனே. 'யாருக்காக அழுதான்' என்ற படத்திற்குத் திரைக்கதை, வசனம் எழுதி இயக்கியும் இருக்கிறார். ஊருக்கு நூறு பேர், நடிகை நாடகம் பார்க்கிறாள் போன்ற புதினங்கள் திரைப்படங்களாகி இருக்கின்றன. வழக்கமான திரைப்படங்களில் இடம்பெறும் நடனத்தையும் பாட்டையும் தவிர்த்து தாம் எழுத்தில் படைத்த உலகை, திரைப்படத்தில் காட்ட முயன்ற இலக்கிய எழுத்தாளர் இவர்.

அகிலன்: அப்படியென்றால், தமிழ்த் திரைப்படத்தில் இலக்கியவாதியாகவும் திரைப்படக் கலைஞராகவும் சாதித்தவராக ஜெயகாந்தனைச் சொல்லலாமா?

பேராசிரியர்: சொல்லலாம். ஏனென்றால், ஜெயகாந்தனின் கதைகளைப் படிக்கும்பொழுதெல்லாம் அவர் திரைப் படத்திற்கு மிகவும் நெருக்கமானவர் என்கிற எண்ணம் மேலோங்கும். அவரது கதைகளைப் படிப்பது திரைப்படம் பார்ப்பது போன்றது. இவரின் 'உன்னைப்போல் ஒருவன்' கலைத்தன்மை வாய்ந்த படமாக இன்றும் பார்க்கப்படுகிறது.



ஜெயகாந்தன்

முகிலன்: தமிழில் கலைத்தன்மை கொண்ட திரைப்படங்கள் வேறு எவையேனும் வந்துள்ளனவா?

பேராசிரியர்: தமிழில் இப்படிக் கலைத்தன்மை கொண்ட படங்கள் என பாலு மகேந்திராவின் 'சந்தியா ராகம்', 'வீடு', ருத்ரய்யாவின் 'அவள் அப்படித்தான்', மகேந்திரனின் முள்ளும் மலரும், உதிரிப் பூக்கள், பூட்டாத பூட்டுகள், சாசனம், ஞான. ராஜசேகரனின் 'மோகமுள்' போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

முகிலன்: ஏன் இவர்களின் படங்கள் கலைத்தன்மை வாய்ந்தவையாக ஏற்றுக் கொள்ளப்படுகின்றன?

பேராசிரியர்: கற்பனைக் கதையைத் திரைக்கதையாக மாற்றுவதாக இருந்தாலும், புதினம் ஒன்றைத் திரைக்கதையாக மாற்றுவதாக இருந்தாலும் எழுத்துகளால் வெளிப்படுத்த முடியாத எதார்த்த உலகத்தைக் காட்சிகளால் எளிதில் காட்ட முடியும். எழுத்துகளுக்கு இல்லாத ஒரு வசதி காட்சிகளுக்கு உண்டு. அந்த வகையில் காட்சிகள் எழுத்துகளைவிடப் பலம் வாய்ந்தவை. ஆக, எழுத்துகளால் உருவாக்கப்படும் கற்பனைக் காட்சிகளைவிட, ஒளிப்பதிவுக் கருவியின் மூலம் உருவாக்கப்படும் காட்சிகள் அடிப்படையிலேயே எதார்த்தமானவை. திரைப்படங்கள் காட்சிகளால் ஆனவை என்றாலும் அக்காட்சிகள் சொல்லப்படும் விதத்தில்தான் கலைத்தன்மை வாய்ந்த படமாக மாறுகின்றன. அவற்றோடு பாத்திரங்களின் உணர்ச்சி வெளிப்பாடு, உரையாடல் முரண், வாழ்க்கையை விவாதிக்கும் பாங்கு போன்றவை ஏற்கும்படியாக அமைந்திருக்கும்.

முகிலன்: தமிழ் சினிமாவில் எதார்த்த உலகத்தைக் காட்சிகளால் எளிதில் காட்டியவர்களாக மகேந்திரனையும், பாலு மகேந்திராவையும் குறிப்பிடலாமா?

பேராசிரியர்: ஆம். 1970களில் தமிழ்த் திரைப்படத்தில் பல்வேறு மாற்றங்கள் நிகழ ஆரம்பித்தன. எப்போதும் வசனங்களால் நிரப்பப்பட்டுக் கொண்டிருந்த தமிழ்த் திரைப்படத்தைக் காட்சிப் பூர்வமாக அணுகியவர்கள் மகேந்திரனும் பாலு மகேந்திராவும். அதற்கான களத்தை இலக்கியத்திலிருந்து தேர்ந்தெடுத்தனர்.

மகேந்திரன் இலக்கியத்தைத் திரைப்படமாகப் பெரும் ஆளுமையோடு உருவாக்கியவர். குறிப்பாக அவரது 'உதிரிப்பூக்கள்' தமிழ்த் திரைப்படத்தின் தரத்தை உயர்த்தியது எனலாம். திரைப்படம் ஒரு காட்சி மொழி என்பதை உணர்ந்தவர் பாலு மகேந்திரா. அவர் இயக்கிய 'சந்தியா ராகம்', 'வீடு' போன்ற படங்கள் சிறந்த எடுத்துக்காட்டுகள்.

பல்வேறு கலைகளும் சங்கமிக்கும் இடம் திரைப்படம். இதன் நுட்பத்தை மக்களிடையே எடுத்துச் சென்றவர்கள் இந்த இரண்டு இயக்குநர்கள்.

பேசும் படங்கள் வந்த பிறகுதான், திரையில் சப்தங்களும், வசனங்களும் அதிகமாக இடம்பெறத் தொடங்கின. வார்த்தைகள், இசை, பாடல்கள் இல்லாமல் திரைப்படங்கள் இல்லை என்ற நிலையை மாற்றியவர்கள். குறிப்பாக இவர்களின் படங்களில் பயன்படுத்தப்படும் இசை முக்கியமானது. மௌனமே ஒலியை விடச் சிறந்தது என்பதைத் தமிழ்த் திரைக்கு உணர்த்தியவர்கள்.

பாலு மகேந்திராவின் படங்களில் ஒரு காட்சியை அழகுபடுத்த, அதன் கருத்தைப் பார்வையாளனுக்குச் சரியாகக் கொண்டு சேர்க்க இசை பயன்படுத்தப்பட்டிருக்கும். இவர் தமிழ் இலக்கியத்தில் ஈடுபாடு மிக்கவர். தன்னை ஓர் எழுத்தாளராக அடையாளம் காட்டுவதோடு பல படங்களுக்குத் திரைக்கதையையும் வசனத்தையும் இவரே எழுதியிருக்கிறார்.

அகிலன்: பாலு மகேந்திரா, ஒளிப்பதிவாளராக இருந்து இயக்குநரானவர் என்பதால் திரைப்பட மொழி அவருக்குத் தெரிந்திருக்கும். ஆனால், மகேந்திரன் ஒளிப்பதிவாளராக இருந்ததில்லை. அப்படியிருந்தும் மகேந்திரன், திரைப்பட மொழியைச் சரியாகக் கையாண்டு இருக்கிறார். இதற்கு இலக்கிய வாசிப்பு அடிப்படைக் காரணமாக இருந்தது எனலாமா?

பேராசிரியர்: தேர்ந்த எதார்த்தத் திரைப்படம் ஒன்றை உருவாக்க நினைக்கின்ற படைப்பாளிக்குக் கட்டாயமாக இலக்கிய

நுண்ணறிவும் வாசிப்பும் தேவை. அதனால்தான் மகேந்திரன் இலக்கிய வாசகராகவும் திரை நுட்பங்களை அறிந்தவராகவும் இருக்கின்றார். அவர் இயக்கிய படங்கள் பெரும்பாலும் இலக்கியத்திலிருந்து எடுக்கப்பட்டவையே. அவரது முதல் படம் உமாசந்திரனின் 'முள்ளும் மலரும்' புதினத்தை அடிப்படையாகக் கொண்டதுதான்.

திரைப்படத்தின் தன்மையையும் இலக்கியத்தின் தன்மையையும் நன்கு அறிந்தால் மட்டுமே அதனைச் சிறப்பாகக் கொடுக்கமுடியும். புதினம், எழுத்து மொழியின் ஆளுமையைக் காட்டுமிடம், திரைப்படம், காட்சிமொழியின் ஆளுமையைக் காட்டுமிடம் என்று தெரிந்து வைத்திருந்ததால், அவரால் தொடர்ச்சியாக புதினத்தைப் படமாகக் கொடுக்க முடிந்தது. நேரமிருந்தால் மகேந்திரன் இயக்கிய முள்ளும் மலரும் திரைப்படத்தை திரையிட்டுப் பாருங்கள். அதனுடன் வேறு படங்களையும், அப்படங்களின் மூலக்கதைகளுக்கான புதினங்களையும் தேடிப் படிக்கலாம்.

அகிலன்: கட்டாயம் படிக்கவேண்டும். இயக்குநரும் ஒளிஓவியருமான தங்கர்பச்சானின் படங்கள்கூட இலக்கியத்தை அடிப்படையாகக் கொண்டவை எனக் கேள்விப்பட்டிருக்கிறேன்.

பேராசிரியர்: சிறுகதை, நாவல்களைப் படமாக்குவதில் தங்கர்பச்சான் காட்டிய அக்கறை அதிகம்.ஒளிப்பதிவாளர்,எழுத்தாளர்,இயக்குநர், நடிகர் எனப் பன்முக தன்மைகொண்டவர் இவர். தமது 'கல்வெட்டு' என்ற சிறுகதையை அடிப்படையாகக் கொண்டு 'அழகி' படத்தை இயக்கினார். நாஞ்சில் நாடனின் நாவலான 'தலைகீழ் விகிதங்கள்' கதையைச் 'சொல்ல மறந்த கதை' என்ற படமாக்கினார். தாம் எழுதிய 'ஒன்பது ரூபாய் நோட்டு', 'அம்மாவின் கைப்பேசி' நாவல்களை அதேபெயரில் படமாக்கினார். இவற்றில் 'அழகி' படம்தான் தங்கர்பச்சான் என்ற ஆளுமையைத் திரையுலகில் பரவலாக அறியசெய்தது. எதார்த்தமான வாழ்வியலைச் சொன்ன இப்படமும் இலக்கியத் தரம் வாய்ந்ததாகவே பார்க்கப்படுகிறது.

முகிலன்: சசி இயக்கிய 'பூ' திரைப்படமும் எதார்த்த வாழ்க்கையோடு பின்னிப்பிணைந்ததுதானே. இதுவும் இலக்கியத்திலிருந்து எடுக்கப்பட்டதா?

## அறிவோம் தெளிவோம்

### திரைப்பட ரசனை

சிறந்த இலக்கியம் என்பது மனிதர்களை மேம்படுத்தும். சிறந்த திரைப்படம் என்பது மனிதர்களைப் பண்படுத்தும். நம்மை அடுத்த நிலைக்கு நகர்த்தும். சிறந்த ஒரு திரைப்படமானது, மனிதர்களை முற்றிலும் மாற்றும் திறன் உடையது. அப்படிப்பட்ட மாற்றத்தை உருவாக்குவதே சினிமா ரசனை.

திரைப்படம் வெறும் பொழுதுபோக்கிற்கான கலை வடிவம் அன்று. ஒரு திரைப்படத்தை ரசனையோடு அணுகும் முறையே திரைரசிகராக நம்மை உருவாக்குகின்றது. ஒரு திரைப்படம் சொல்லும் கருத்து, இயக்குநரின் பார்வை, காட்சி அமைப்பு, படத்தின் இசை, படத்தொகுப்பு எனப் பல்வேறு கோணங்களில் காணும் அனுபவமே திரைப்பட ரசனையாக மாறுகிறது. இவற்றையெல்லாம் ஒரு திரைப்படம் பார்க்கும்போது நாம் கவனித்தால், அது நம் ரசனையை மேம்படுத்தும்.

### கலையின் வெளிப்பாடு

சினிமா என்பது வணிகம் என்ற அம்சத்தைத் தாண்டி கலை என்பதன் முழுமையான வெளிப்பாடு. எல்லாக் கலைகளையும் அது தன்னகத்தே உள்ளடக்கியிருக்கின்றது. மற்ற எந்தக் கலைகளைக் காட்டிலும் சினிமா தனித்துவமானது. திரைப்படம் பார்ப்பது என்பது ஓர் அனுபவம். அந்த அனுபவம் ஒவ்வொருவருக்கும் வேறுபடும். காண்போரின் மனநிலை, சூழல், வெளிப்படுத்தும் தன்மை ஆகியவற்றைப் பொருத்து ரசனையும் மாறுபடும்.

பேராசிரியர்: ஆமாம். ச.தமிழ்ச்செல்வன் எழுதிய 'வெயிலோடு போய்' என்ற சிறுகதையைச் சசி 'பூ' என்ற பெயரில் திரைப்படமாக்கினார். இக்கதை எளிமையான பெண்ணின் பேரன்பைப் பேசுகிறது.

அகிலன் : மகேந்திரன் 'முள்ளும் மலரும்' கதையில் சில மாற்றங்களைச் செய்ததாகச் சொன்னீர்கள். அப்படியென்றால் ஒரு நாவல் அல்லது சிறுகதை எந்த முறையில் திரைப்படமாக எடுக்கப்படுகிறது?

பேராசிரியர்: ஒரு நாவலைத் திரைப்படமாக்கும் முறையை இருவகையாக பிரிக்கலாம். முதலாவது, வாக்கியத்திற்கு வாக்கியம் மூலப்படைப்பைச் சார்ந்தே திரைப்படக்காட்சிகளை அமைப்பது.

இரண்டாவது முறை திரைப்படத்தின் சாத்தியக்கூறுகளை, பலத்தை உணர்ந்து சினிமா மொழியில் ஒரு புதிய படைப்பை உருவாக்குவது. நாவலாசிரியரின் மையக்கருத்தை உள்வாங்கி அதற்கேற்றபடி திரைக்கதையை அமைத்து அக்கருத்தைத் திரைப்படக் காட்சிகள் மூலம் வெளிக்கொணர்வது.

முகிலன்: புரிகிறது ஐயா! சமீபத்தில் இலக்கியங்களிலிருந்து எடுக்கப்பட்ட திரைப்படங்களாக எவற்றைச் சொல்லலாம்?

பேராசிரியர்: கி.ராஜநாராயணனின் கிடை (ஒருத்தி), ஜெயமோகனின் 'ஏழாம் உலகம்' (நான் கடவுள்), பாஸ்கர் சக்தியின் 'அழகர்சாமியின் குதிரை' (அழகர்சாமியின் குதிரை), பி.எச். டேனியலின் எரியும் பனிக்காடு (பரதேசி), மு.சந்திரகுமாரின் 'லாக்கப்' (விசாரணை), தமயந்தியின் தடயம் (தடயம்) ஆகியன திரைப்படங்களாக்கப்பட்டுள்ளன.



பரதேசி திரைப்படக் காட்சி

வசந்தபாலன் இயக்கிய 'அரவான்' திரைப்படம் சு.வெங்கடேசனின் 'காவல் கோட்டம்' புதினத்தின் ஒரு பகுதியே. 'நோட்டா' படம் ஷான் கருப்பசாமி எழுதிய 'வெட்டாட்டம்' நூலை அடிப்படையாகக் கொண்டதுதான். இதுபோன்றே அவ்வப்போது இலக்கியங்களிலிருந்து திரைப்படங்கள் வந்துகொண்டுதான் இருக்கின்றன. ஆனால் அவை சிறந்த கலைப்படைப்பாக மாறுவது இயக்குநரின் ரசனையையும் மக்களின் ரசனையையும் பொருத்ததே.



**அறிவோம் தெளிவோம்**

**வங்கமொழியின் இரு சிங்கங்கள்**

இந்தியத் திரைப்பட இயக்குநர்களுள் குறிப்பிடத்தக்கவர், சத்தியஜித் ரே. இந்தியமொழிக் கவிஞர்களுள் குறிப்பிடத்தக்கவர், இரவீந்திர நாத் தாகூர். இருவரும் வங்கமொழிக்குப் பெருமை சேர்த்தவர்களாவர். தாகூரிடம் மிகுந்த மதிப்பும் மரியாதையும் கொண்டிருந்த சத்தியஜித் ரே, அவரது பண்பட்ட சிந்தனைத் தளங்களில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டிருந்தார். தாகூரின் எழுத்துப் படைப்புகளை நேரில் கண்டு, கேட்டறியும் உயிர் செறிந்த கலையனுபவங்களாக, உலகமெல்லாம் இரசித்து மகிழும் வகையில் உருவாக்கிய பெருமை, சத்தியஜித் ரேவையே சாரும். தாகூரின் 'சாருலதா', 'வீடும் உலகமும்' (கரே பைரே) என்னும் இருநாவல்கள், சத்யஜித் ரேவால் உருவாக்கப்பட்ட அரிய திரைப்படக் கலை வடிவங்கள். 1961ஆம் ஆண்டில், தாகூரின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடும் வகையில், இரவீந்திர நாத் தாகூர் தொடர்பான ஆவணப்படம் ஒன்றை உருவாக்கினார். கலை இலக்கிய சிந்தனாவாதி ஒருவர் பற்றிய படம் என்றால், அஃது இப்படித்தானே இருக்கவேண்டும் என்று கூறத்தக்க அளவில், அருமையான படைப்பாக, அந்த ஆவணப்படம் இன்றளவும் விளங்குகிறது.

## திரைப்படமான சில தமிழ் இலக்கியங்கள்

| ஆசிரியர் | நூல் | திரைப்படம் |
| --- | --- | --- |
| ஜே.ஆர். ரங்கராஜு | மோகனசுந்தரம் | மோகனசுந்தரம் |
| வடுவூர் துரைசாமி | கும்பகோணம் வக்கீல் | திகம்பர சாமியார் |
| வை.மு. கோதைநாயகி | ராஜ்மோகன் | ராஜ்மோகன் |
| வை.மு. கோதைநாயகி | தியாகக்கொடி | தியாகக்கொடி |
| கல்கி | பொய்மான் கரடு | பொன்வயல் |
| அகிலன் | கயல்விழி | மதுரையை மீட்ட சுந்தரபாண்டியன் |
| அண்ணாதுரை | ரங்கோன் ராதா | ரங்கோன் ராதா |
| அண்ணாதுரை | பார்வதி பி.ஏ. | பார்வதி பி.ஏ. |
| மு. கருணாநிதி | பொன்னர் சங்கர் | பொன்னர் சங்கர் |
| வெ. ராமலிங்கம் பிள்ளை | மலைக்கள்ளன் | மலைக்கள்ளன் |
| பி.எஸ். ராமையா | போலீஸ்காரன் மகள் | போலீஸ்காரன் மகள் |
| மு. வரதராஜன் | பெற்ற மனம் | பெற்ற மனம் |
| இந்திரா பார்த்தசாரதி | உச்சி வெயில் | மறுபக்கம் |
| மஹரிஷி | புவனா ஒரு கேள்விக்குறி | புவனா ஒரு கேள்விக்குறி |
| மணியன் | இதய வீணை | இதய வீணை |
| நீல. பத்மநாபன் | தலைமுறைகள் | மகிழ்ச்சி |
| தி. ஜானகிராமன் | மோகமுள் | மோகமுள் |
| ரா.கி. ரங்கராஜன் | இது சத்தியம் | இது சத்தியம் |
| எஸ்.எஸ். வாசன் | சதி லீலாவதி | சதி லீலாவதி |
| சுஜாதா | பிரியா | பிரியா |
| சுஜாதா | இருள் வரும் நேரம் | வானம் வசப்படும் |
| டி. செல்வராஜ் | தேனீர் | தேனீர் |
| பூமணி | கருவேலம்பூக்கள் | கருவேலம்பூக்கள் |
| சி.ஆர். ரவீந்திரன் | நண்பா நண்பா | நண்பா நண்பா |
| லக்ஷ்மி | பெண் மனம் | இருவர் உள்ளம் |
| லக்ஷ்மி | காஞ்சனையின் கனவு | காஞ்சனா |
| அனுராதா ரமணன் | சிறை | சிறை |
| அனுராதா ரமணன் | கூட்டுப்புழுக்கள் | கூட்டுப்புழுக்கள் |
| சிவசங்கரி | நண்டு | நண்டு |
| சிவசங்கரி | ஒரு சிங்கம் முயலாகிறது | அவன் அவள் அது |

# நாட்டார் அரங்கக் கலைகள்

நாட்டார் அரங்கக் கலைகள் தமிழ்ப் பண்பாட்டின் முக்கியமான அடையாளங்களாகத் திகழ்கின்றன. இக்கலைகளை நிகழ்த்துபவர்கள் கற்பனைத் திறன் மிகுந்த உழைக்கும் கலைஞர்கள். இக்கலைகள் மனிதர்களின் வாழ்க்கைச் சூழல், தெய்வ வழிபாடு, அன்றாட வாழ்க்கைச் சிக்கல் இவற்றின் கூட்டுப்படைப்பாக வெளிப்படுகின்றன. அதே நேரத்தில் சமூகத்தை உள்வாங்கித் தங்களது உள்ளடக்கத்தையும் வடிவத்தையும் புத்தாக்கம் செய்து மக்களிடையே வரவேற்பைப் பெற்று வருகின்றன. இக்கலைகள் வட்டாரத் தன்மைக் கொண்டவை. தமக்கென மரபுவழிபட்ட பார்வையாளர்களைக் கொண்டவை. மக்கள் குழுக்களின் வழிபாட்டு மரபுகள், சடங்குகள், வட்டாரக் குழுக்கள், பழக்க வழக்கங்கள், கைவினைக் கலைகள் போன்றவற்றின் அடிப்படையில் நிகழ்த்துகலைகளுக்கான பண்பாட்டு எல்லைகள் உருவாகின்றன.

தமிழகம் முழுவதும் பரவலாக நிகழ்த்தப்படும் இக்கலைகளை அதன் தன்மைக்கேற்ப,

1. சடங்குசார் கலைகள்
2. பாடல்சார் கலைகள்
3. கருவிசார் கலைகள்

என வகைப்படுத்துவர். இக்கலைகள் தமிழரின் மரபான பண்பாட்டுக்கூறுகளைவிளக்குவனவாக அமைகின்றன. பார்வையாளர்கள் புரிந்துகொள்ளும் தன்மைக்கேற்ப இக்கலைகள் நிகழ்த்தப்படும். ஏதேனும் ஓர் ஊரில் அவ்வூர் சார்ந்த மக்களுக்காக நிகழ்த்தப்படும் இக்கலை வடிவங்களைப் பிற பகுதிகளிலிருந்து வரும் மக்களும் கண்டு இன்புறுவர்.

## 1. சடங்குசார் கலைகள்

மக்களின் வாழ்க்கைக்குள் பல்வேறு சடங்குகள் நிறைந்திருக்கின்றன. சடங்குகள் குடும்பவெளியிலும் சமூகவெளியிலும் இடம்பெறும். சமூக வெளியில் நடப்பன கலைகளாக மாறுகின்றன. நாட்டார் வழிபாடுகளில் குறிப்பிட்ட தெய்வத்தைப் பற்றிய வரலாற்றுக் கதைகளின் ஒரு பகுதியோ சில பகுதிகளோ சடங்குகளாக நிகழ்த்திக் காட்டப்படுகின்றன. சமயச் சடங்குகளோடு ஆடல்கலை நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கிறது. தமிழ்நாட்டில் பரவலாக உள்ள சாமியாட்டம், தேவராட்டம், கணியன் ஆட்டம், பொன்னர் சங்கர் கதைப்பாடல் முதலானவற்றில் சடங்குக் கூறுகள் அதிகம் உண்டு.

கொடை, தீமிதி விழா, முளைப்பாரி, சூரசம்ஹாரம், கள்ளர் வெட்டு, மயானக்கொள்ளை, ஏழு கன்னிமார் வழிபாட்டில் இடம்பெறும் கன்னிவிலக்கு (மாசி மகம்) எனத் தமிழக மாவட்டங்கள் பலவற்றிலும் கோவில்திருவிழாக்களில்சடங்கியல்நாடகங்கள் நடைபெறுகின்றன. இச்சடங்கியல் நாடகங்கள் பெரும்பாலும் அந்தந்த கோவில் விழாக்களின் முக்கிய நிகழ்வுகளாக உள்ளன.

### பொன்னர் சங்கர் கதைப்பாடல்

பொன்னர் சங்கர் கதைப்பாடல் என்பது இடைக்காலத்தில் வாழ்ந்த பொன்னர் சங்கர் என்ற சகோதரர்களின் வரலாற்றினைக் கதைப்பாடலாக நிகழ்த்திக் காட்டுவதாகும். திருச்சி, சேலம், கோயம்புத்தூர் போன்ற மாவட்டங்களில் இக்கதைப்பாடல் நிகழ்த்தப்படுகிறது. பொன்னர் சங்கர் எனப்படும் அண்ணன்மார் சாமி கோவில்,



பெரிய காண்டியம்மன் கோவில், மாரியம்மன் கோவில்களின் முன்பு நிகழ்த்தப்படுகின்றது.

தற்போது இக்கதைப்பாடல் சின்னண்ணன் பெரியண்ணன் நாடகம், வளநாடு நாடகம், பொன்னர் சங்கர் படுகளம் என்ற பெயர்களில் நிகழ்த்தப்படுகின்றது. ஆண்டுதோறும் தை மாதம் முதல் ஆடி மாதம் வரையில் ஊர்தோறும் நடைபெறும் திருவிழாக்களின்போது நிகழ்த்தப்படுகின்றது. இதில் உடுக்கு, பறை, கொம்பு, சங்கு, சேகண்டி போன்ற இசைக் கருவிகளும் பயன்படுத்தப்படுகின்றன. இக்கதைப்பாடல் நிகழ்வில் முதன்மைக் கதாபாத்திரங்களாகவும் துணைக்கதாபாத்திரங்களாகவும் ஏழுபேர் முதல் ஒன்பது பேர் வரை நடிக்கின்றனர். ஒயிலாட்டம், கும்மி, தாலாட்டு, ஒப்பாரி, தெம்மாங்கு, காவடியாட்டம் போன்ற கலைகள் தேவைக்கேற்ப இவற்றில் இணைக்கப்படுவதும் உண்டு.

### அறிவோம் தெளிவோம்

தொல்காப்பியம் கருப்பொருள்களின் பட்டியலில் ஐந்திணைக்கும் உரிய இசைக்கருவிகளைக் குறிப்பிடுகிறது. பறை, யாழ் போன்ற இசைக்கருவிகளை அத்திணை சார்ந்த மக்கள் வழிபாட்டின்போது இசைத்தும் ஆடியும் வந்துள்ளனர். நாடகத்திற்குரிய இசைக்கருவிகளான யாழ், முழவு, ஆகுளி, பாண்டில், கோடு, நெடுவங்கியம், குறுந்தூம்பு, தட்டைப் பறை, சல்லி, பதலை ஆகியவை பயன்படுத்தப்பட்டு வந்ததாக மலைபடுகடாம் தெரிவிக்கிறது.

## 2. பாடல்சார் கலைகள்

நிகழ்த்துகலைகளுள் பாடலுக்கு முக்கியத்துவம் அளித்து அரங்கேற்றப்படும் கலைகளைப் பாடல்சார் கலைகள் என்பர். பாடலுக்கேற்ற நடன அசைவுகளுடன் கூடியவை இக்கலைகள். இலாவணி, உடுக்கைப்பாட்டு, பகல்வேடம், ராஜாராணி ஆட்டம் போன்றவை பாடலோடு இணைந்து நிகழ்த்தப்படுகின்ற பாடல்சார் கலைகளாகும்.

### உடுக்கைப்பாட்டு

உடுக்கு என்னும் இசைக்கருவியை அடித்துப் பாடும் கலை உடுக்கைப்பாட்டு ஆகும். இசைக்கருவியால் பெயர் பெற்ற கலை எனினும் இதில் பாடலே முதன்மை பெறும். ஒரு கதையைப் பாடி பின்னணியாக உடுக்கடிக்கும் முறையில் இக்கதை நிகழ்கிறது. இக்கலை நிகழ்ச்சியில் ஒருவர் உடுக்கை அடிக்க, ஒரு பெண்ணோ, பெண் வேடமிட்ட ஆணோ கதைப் பாடலைப் பாடி ஆடுவர். பின்பாட்டுக்காக இருவர் அல்லது மூவர் இருப்பதும் உண்டு.



கோவில் சார்ந்த கலையாக முதலில் அறியப்பட்ட இக்கலை, பின்னர் சமுதாயம் சார்ந்தும் பொழுதுபோக்கிற்காகவும் உரியதாக மாறியுள்ளது. கோயம்புத்தூர், ஈரோடு, உடுமலைப்பேட்டை, பழனி, திருச்சி முதலிய பகுதிகளில் பரவலாக நிகழ்த்தப்படுகிறது. அண்ணன்மார் சாமி கதை, காத்தவராயன் கதை, நல்லதங்காள் கதை, மதுரை வீரன் கதை போன்றவை உடுக்கைப்பாட்டிற்குரிய கதைப்பாடல்களாக உள்ளன.

### 3. கருவிசார் கலைகள்

பல்வேறு கருவிகளைப் பயன்படுத்தி நிகழ்த்தப்படும் கலைகள் கருவிசார் கலைகள் எனப்படும். நாட்டுப்புற நிகழ்த்துக் கலைகளில் இசைக்கருவிகளை இசைத்துக்கொண்டே ஆடுவதும் பாடுவதும் இயல்பு. கரகாட்டம், களரி, சிலம்பாட்டம், பறையாட்டம், தோல்பாவைக்கூத்து, மயிலாட்டம் , மரக்காலாட்டம், பொய்க்கால் குதிரை, வில்லுப்பாட்டு, காவடியாட்டம் போன்றவற்றைக் கருவிசார் கலைகள் என்பர். இக்கலைகள் ஒவ்வொன்றும் தனக்கான தனித்த துணைக்கருவிகள் மற்றும் இசைக்கருவிகளோடும் நிகழ்த்தப்படுகின்றன.

#### கரகாட்டம்

தமிழர்களின் பாரம்பரிய ஆட்டங்களில் ஒன்று கரகம். தலையில் கரகம் வைத்து ஆடுவதால் இப்பெயர் பெற்றது. சங்க இலக்கியங்களில் கரகாட்டம் 'குடக்கூத்து' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. பல விதங்களில் அலங்கரிக்கப்பட்ட கரகத்தை தலையில் வைத்தபடி ஆடுவர். தெய்வ வழிபாட்டிற்கு ஆடும் கரகம் "சக்திக்கரகம்' என்றும், தொழில்முறைக் கரகத்தை "ஆட்டக்கரகம்' என்றும் சொல்வர்.

கரகாட்டம் மதுரை, திருச்சி, தஞ்சாவூர், கோயம்புத்தூர், திருநெல்வேலி



போன்ற மாவட்டங்களில் கோவில் திருவிழாக்களின்போது நிகழ்த்தப்படுகின்றது. இவ்வாட்டத்திற்கு நையாண்டி மேளம், சிறிய உடுக்கை, பெரிய உடுக்கை, சத்தக்குழல், பறை போன்ற இசைக்கருவிகள் இசைக்கப்படுகின்றன.

**அறிவோம் தெளிவோம்**

**மார்ச் 27 – உலக நாடக நாள்**

சர்வதேச அரங்காற்று நிறுவனம் ((International Theatre Institute) பின்லாந்தில் செயல்பட்டு வருகின்றது. அந்நிறுவனத்தின் தலைவராக இருந்த ஆர்வி கிவிமா அரங்காற்று நிகழ்வுகளுக்காக ஒரு நாளைக் கொண்டாட வேண்டும் என முன் மொழிந்தார். 1961இல் கூடிய அரங்காற்றுக் கலைஞர்களின் மாநாட்டில் ஒவ்வொரு ஆண்டும் மார்ச் 27ஆம் தேதியை உலக நாடக நாளாகக் (World Theatre day) கொண்டாட முடிவு செய்தனர். உலகெங்கிலுமுள்ள நாடகக்கலைஞர்கள் அந்த நாளைக் கொண்டாடத் தவறுவதில்லை.

#### தெருக்கூத்து

தெருக்கூத்து, சாமியாட்டம், தேவராட்டம், கணியன் ஆட்டம், கதைப்பாடல், இலாவணி, உடுக்கை, ஒயிலாட்டம், பகல்வேடம், ராஜா ராணி ஆட்டம், கரகாட்டம், களரி, சிலம்பாட்டம், பறையாட்டம், தோல்பாவைக்கூத்து, மயிலாட்டம், மரக்காலாட்டம், பொய்க்கால் குதிரை, வில்லுப்பாட்டு போன்ற கலைகள் தமிழர்கள் வாழ்க்கையில் கலந்திருக்கின்றன. இவற்றைப் பொதுவாக நாட்டார் அரங்கக் கலைகள் என அழைக்கின்றோம். இவை முறையான அரங்குகளில் நிகழ்த்தப்படாமல் தெருக்கள், வயல்வெளிகள், கோவில் முற்றங்கள் போன்ற இடங்களில் நிகழ்த்தப்படுகின்றன. இவற்றுள் தெருக்கூத்து சடங்குசார் கலையாகவும் பாடல்சார் கலையாகவும் கருவிசார் கலையாகவும் அறியப்படுகிறது.



தமிழக மக்களின் வாழ்வியலோடு ஒன்றிய கலை தெருக்கூத்து. இதனைக் 'கட்டைக்கூத்து' என்றும் அழைப்பர். கதை சொல்லல், ஆடல், பாடல் என பலதரப்பட்ட கூறுகள் தெருக்கூத்தில் கலந்திருக்கின்றன. பொதுவாக தொன்மம், நாட்டார் கதை, சீர்திருத்தக் கதை, விழிப்புணர்வுக் கதை முதலியனவற்றை மையமாகக் கொண்டு தெருக்கூத்து நிகழ்த்தப்படுகின்றது.

## களமும் முறையும்

கிராமப்புறங்களில் உள்ள கோவில்களில் மூன்று பக்கமும் மக்கள் சூழ்ந்த திறந்தவெளி ஆடுபரப்பில் இக்கூத்து நிகழ்த்தப்படுகின்றது. தெருக்கூத்து நடைபெறும் இடம் களரி எனப்படும். ஊரின் புறத்தே அல்லது கோவில் திடல்களில், அல்லது அறுவடை ஆன வயல்களின் நடுவே களரி அமைக்கப்படும். அத் திடலில் இரு கழிகளை நட்டு அவற்றில் விளக்குகளைக் கட்டுவர். கழிகளுக்கு இடையில் உள்ள இடமே கூத்து நடைபெறும் களரியாகும். இதனை விட்டமாகக் கொண்டே மக்கள் வட்டமாகச் சுற்றி அமர்வார்கள். கூத்தாடும் களத்தின் நடுவில் இருவர் வந்து வேட்டியைத் திரையாகப் பிடித்தபடி நிற்பர். கூத்தின் கதாபாத்திரங்கள் அனைவரும் முதல் முறையாக மேடையில் தோன்றுவதற்கு முன்னர், இத்திரையின் பின் நின்று பாடிய பின்பே மக்கள் முன் காட்சி தருவர். பொதுவாக தெருக்கூத்தில் பெண்கள் நடிக்கும் வழக்கம் இல்லை. ஆண்களே பெண்வேடமிட்டு நடிப்பர். இப்போது பெண்களும் கூத்துப் பாத்திரங்களை ஏற்று நடிக்க முன்வந்துள்ளனர். கூத்தில் வேடம் கட்டுபவர்கள், கூத்து தொடங்கி முடியும் வரை நோன்பிருப்பது வழக்கம். இரவு பத்து மணிக்குத் தொடங்கி மறுநாள் காலை வரையிலும் நிகழ்த்தப்படுகின்றது.

## கருவிகள்

தெருக்கூத்து நிகழ்ச்சியில் முகவீணை, ஆர்மோனியம், மத்தளம், தாளம் ஆகிய இசை கருவிகளுடன் குழுவாகவே தெருக்கூத்து நடத்தப்படுகின்றது. மேலும் தெருக்கூத்து கலைஞர்கள் புஜக்கீர்த்திகள், கிரீடங்கள், மார்புப்பதக்கம், கால்சலங்கை ஆகிய பொருட்களைத் தங்கள் உடலில் கட்டிக்கொண்டு கூத்தில் பங்கேற்கின்றனர்.

## தமிழ் நாட்டில் தெருக்கூத்து

தெருக்கூத்து தமிழகத்தின் வடபகுதிகளான திண்டிவனம், காஞ்சிபுரம், செய்யாறு, வேலூர், கடலூர், தருமபுரி, சேலம் முதலான பகுதிகளில் நடத்தப்படுகின்றது. தெருத்கூத்தில் பலவகைகள் உள்ளன. தொண்டை மண்டலத் தெருக்கூத்தில் பெரும்பாலும் மகாபாரதக் கதை நிகழ்த்தப்படுகிறது. திரௌபதி அம்மன் வழிபாடும் பரவலாகக் காணப்படுகிறது. காரைக்குடியைச் சுற்றியுள்ள பகுதிகளில் பிரகலாதன் கதையினைக் கூத்தாக நிகழ்த்துகின்றனர்.

## நிகழ்த்தப்படும் கதைகள்

திருவிழாக்காலங்களில் மட்டுமில்லாமல் பொழுதுபோக்கிற்காகவும் கூத்து நடைபெறும்போது இராமாயண, மகாபாரதக் கதைகளும் அதன் கிளைக்கதைகளும் நடத்தப்படுகின்றன. மாரியம்மன் கதை, நல்லதங்காள் கதை, கண்ணகி கதை முதலான கதைகளும் நிகழ்த்துகலைகளின் பல்வேறு வடிவங்களில் நிகழ்த்தப்படுகின்றன. கூத்தில் மகாபாரதக் கதைகள் இடம்பெறுவது போல ராமாயணக் கதைகளும் இடம்பெறுகின்றன. தஞ்சை மாவட்ட நார்த்தேவன் குடிக்காடு கூத்தில் இராமாயணம் இடம் பெறுகின்றது. இதில் ஒவ்வொரு பாத்திரமும் இரண்டிரண்டு பேரால் ஒரே நேரத்தில் நடிக்கப்படுவது அதன் சிறப்பு.

இத்தகு நாட்டார் நிகழ்த்துகலைகளைப் பற்றி அறிந்துகொள்வது நமது பண்பாட்டு மரபை அறியும் தேவையாகும். இன்றைய காலம் உலகம் முழுவதும் ஒரே வகையான உணவு, உடை என மாறத்தொடங்கிய பண்பாட்டினைப் பின்பற்றும் காலமாக மாறிவருகிறது.

மண்சார்ந்தவற்றை, பண்பாடு சார்ந்தவற்றைப் பற்றிய அறிதலும் பயன்படுத்துதலும் குறைந்து வருகிறது. அழிந்துவரும் கலைகளாக இவை மாறும் சூழலிலிருந்து அவற்றை மீட்டெடுக்க வேண்டிய பொறுப்பை ஒவ்வொருவரும் மேற்கொள்ள வேண்டியது மிகவும் இன்றியமையாதது ஆகும்.



## தெரியுமா?




குறும்படம் மற்றும் ஆவணப் படங்களைத் தயாரிக்க ஆகும் காலமும் செலவும் மிகக் குறைவு. இன்று வளர்ந்துள்ள தொழில்நுட்ப உதவியால் இவ்வகைப்படங்களை மக்களிடம் கொண்டு சேர்ப்பது மிக எளிது. மேலும் செல்பேசி அல்லது திறன்பேசியின் மூலமாகவே இப்படங்களை ஒளிப்பதிவு செய்ய இயலும். மாணவர்கள் தாங்கள் உருவாக்கிய குறும்படம் மற்றும் ஆவணப்படங்களை வலையொளி மூலம் எளிதாகப் பார்வையாளர்களிடம் கொண்டு செல்லலாம். வலையொளியில் கட்டணமின்றித் தங்களுக்கான பக்கத்தைத் தொடங்கி தங்கள் படைப்புகளைப் பதிவேற்றலாம். தங்கள் படைப்புகளை மக்களிடம் எடுத்துச் செல்ல திரைப்படச் சங்கங்களையும் நாடலாம். இந்திய அரசு ஆண்டுதோறும் உலகப் படவிழாக்களை நடத்துகிறது. தேர்வுக்கெனப் படங்களை அனுப்பலாம்.

குறும்படம், ஆவணப்படம் அனுப்புவதற்கான இணையத்தள முகவரிகள்

www.iff.com, www.filmsdivision.org, www.ivfest.com

# கலைச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| Art | – கலை | Long shot | – சேய்மைக் காட்சி |
| Animated Captions | – இயங்கு படங்கள் | Monitor | – திரை |
| Animation | – அசைவூட்டப் படம் | Mid shot | – இடைநிலைக் காட்சி |
| Binocular | – தொலைநோக்கி | Mute film | – மௌனப்படம் |
| BackGround | – பின்னணி | Mixing | – கலவை |
| Back Light | – பின் விளக்கு | Narrow angle | – குறுங்கோணப் பார்வை |
| Close up | – அண்மைக் காட்சி | Prism | – முப்பட்டை |
| Coverage | – படப்பிடிப்பு | Pan | – திருப்பு |
| Censorship | – படத்தணிக்கை | Pedestal | – தாங்கி |
| Digital | – எண்மம் | Projector | – படவீழ்த்தி |
| Documentary | – ஆவணப்படம் | Studio | – அரங்கு |
| Dubbing | – மொழிமாற்றம் | Stand | – கோல் தாங்கி |
| Editing | – படத்தொகுப்பு | Script | – எழுத்துப் பிரதி |
| Extreme Long shot | – மீ சேய்மைக் காட்சி | Storyboard | – படக்கதை |
| Focus | – குவியம் | Three Dimension | – முப்பரிமாணம் |
| Frame | – சட்டகம் | Technique | – உத்தி |
| Graphics | – வரைகலை | Take | – காட்சி எடுப்பு |
| Image Manipulation | – உருவ இயக்கம் | Vision mixer | – காட்சிக் கலவை |
| Image | – உருவம் | Visualization | – படமாக்கும் கலை |
| Lens | – ஆடி | Wide Angle | – அகல் கோணப் பார்வை |

## கண்ணாடி

U1JH6T

**சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.**

1. 'நாடகவியல்' என்னும் நூலின் ஆசிரியர் ____________.

   அ) சங்கரதாச சுவாமிகள் ஆ) பரிதிமாற்கலைஞர்

   இ) பம்மல் சம்பந்தனார் ஈ) மதுரகவி பாஸ்கரதாஸ்

**2. பொருத்துக.**

அ) ந.முத்துசாமி - 1. புறஞ்சேரி

ஆ) சே.இராமானுஜம் - 2. பலி ஆடுகள்

இ) மு.இராமசுவாமி - 3. சுவரொட்டிகள்

ஈ) கே.ஏ.குணசேகரன் - 4. துர்க்கிர அவலம்

| | அ | ஆ | இ | ஈ |
|---|---|---|---|---|
| அ) | 4 | 2 | 3 | 1 |
| ஆ) | 3 | 4 | 1 | 2 |
| இ) | 3 | 1 | 4 | 2 |
| ஈ) | 2 | 3 | 4 | 1 |

3. இந்தியாவில் மூன்றாம் அரங்கை அறிமுகப்படுத்தியவர் ____________.

   அ) விஜய் டெண்டுல்கர் ஆ) கிரிஷ் கர்னாட்

   இ) பெர்டோல்ட் பிரெக்ட் ஈ) பாதல் சர்க்கார்

4. பொருந்தாத இணையைத் தேர்ந்தெடுக்க.

   அ) கூத்துப்பட்டறை - ந.முத்துசாமி

   ஆ) நிஜ நாடக இயக்கம் - இந்திரா பார்த்தசாரதி

   இ) பரிக்ஷா - ஞாநி

   ஈ) சென்னைக் கலைக்குழு - பிரளயன்

5. மௌனப்படக் காலத்திலேயே எந்தப் புதினம் திரைப்படமாக எடுக்கப்பட்டது?

   அ) அடிமைப் பெண் ஆ) அனாதைப் பெண் இ) தயாநிதி ஈ) திக்கற்ற பார்வதி

6. தியாக பூமி புதினத்தின் ஆசிரியர் யார்?

   அ) கல்கி ஆ) ராஜாஜி இ) இராமலிங்கனார் ஈ) வடுவூர் துரைசாமி

7. ஜெயகாந்தனால் எழுதப்படாத நூல்.

அ) உன்னைப்போல் ஒருவன் ஆ) யாருக்காக அழுதான்

இ) தண்ணீர் தண்ணீர் ஈ) சில நேரங்களில் சில மனிதர்கள்

8. சரியான கூற்றைத் தேர்ந்தெடுக்க

1. இலக்கியவாதியாகவும் திரைப்படக் கலைஞராகவும் சாதித்தவர் ஜெயகாந்தன்.

2. திரைப்படம் ஒரு காட்சி மொழி என்பதை உணர்ந்தவர் பாலு மகேந்திரா.

3. ஒளிப்பதிவாளராக இருந்து இயக்குநரானவர் மகேந்திரன்.

4. ஒளிப்பதிவாளர், எழுத்தாளர், இயக்குநர், நடிகர் எனப் பன்முக தன்மைகொண்டவர் தங்கர்பச்சான்.

அ) 1, 2, 3 சரி ஆ) 1, 2, 4 சரி இ) 2, 3, 4 சரி ஈ) 1, 3, 4 சரி

9. சரியான இணையைத் தேர்ந்தெடுக்க.

அ) ஏழாம் உலகம் - அரவான் ஆ) எரியும் பனிக்காடு – நான் கடவுள்

இ) காவல் கோட்டம் - பரதேசி ஈ) லாக்கப் - விசாரணை

10. சலனப்படம் கண்டுபிடிக்கப்பட்ட ஆண்டு ____________.

அ) 1985 ஆ) 1896 இ) 1895 ஈ) 1897

11. தென்னிந்தியாவின் முதல் திரையரங்கு எங்கு அமைக்கப்பட்டது?

அ) ஹைதராபாத் ஆ) சென்னை இ) திருவனந்தபுரம் ஈ) பெங்களூர்

12. 'தி ஜாஸ் சிங்கர்' என்பது

அ) உலகின் முதல் மௌனப்படம் ஆ) உலகின் முதல் பேசும்படம்

இ) இந்தியாவின் முதல் மௌனப்படம் ஈ) இந்தியாவின் முதல் பேசும்படம்

13. சரியான கூற்றைத் தேர்ந்தெடுக்க.

அ) தமிழில் வெளிவந்த முதல் பேசும் படம் 'ஆலம் ஆரா'

ஆ) சென்னையில் முதல் திரைப்படக் கல்லூரி கோடம்பாக்கத்தில்

தொடங்கப்பட்டது.

இ) நல்லதம்பி திரைப்படத்திற்கு வசனம் எழுதியவர் மு.கருணாநிதி.

ஈ) முதல் முழு நீள வண்ணப்படம் 'அலிபாபாவும் நாற்பது திருடர்களும்'

14. 'மகாத்மா காந்தி' என்னும் விவரணப்படத்தைத் தயாரித்தவர்

அ) சாமிக்கண்ணு வின்சென்ட் ஆ) ஏ.பி.நாகராஜன்

இ) ஏ.கே.செட்டியார் இ) ஏ.நாராயணன்

15. திரைப்படத்தின் உயிர் எனக் கருதப்படுவது

அ) கதை ஆ) வசனம் இ) இயக்கம் ஈ) இசை

16. ஒளியின் வகை

அ) நான்கு ஆ) இரண்டு இ) மூன்று ஈ) ஐந்து

17. உற்சாகம், நல்லெண்ணம், பெருமகிழ்ச்சி ஆகிய உணர்வுகளைக் காட்டப் பயன்படுத்தப்படும் வண்ணம்

அ) மஞ்சள் ஆ) பச்சை இ) சிவப்பு ஈ) கருநீலம்

18. நல்ல படம் எனக் குறிப்பிடப்படுவது இரண்டு மேசைகளில் உருவாகின்றது. ஒன்று கதை எழுதுபவரின் மேசை. மற்றொன்று_____________ மேசை.

அ) இசையமைப்பாளர் ஆ) இயக்குநர்

இ) ஒளிப்பதிவாளர் ஈ) படத்தொகுப்பாளர்

19. எந்த நாளை உலக நாடக நாளாகக் கொண்டாடுகின்றோம்.

அ) மார்ச் 8 ஆ) மார்ச் 27 இ மார்ச் 18 ஈ) மார்ச் 23

20. கட்டைக்கூத்து என்று அழைக்கப்படும் கலை.

அ) ஒயிலாட்டம் ஆ) மரக்கால் ஆட்டம்

இ) தெருக்கூத்து ஈ) தோல்பாவைக் கூத்து

21. கீழுள்ள கூற்றுகளுள் எவை சரியானவை?

கூற்று 1 : சங்க இலக்கியங்களில் குடக்கூத்து எனக் குறிக்கப்படுவது கரகாட்டம்.

கூற்று 2 : அலங்கரிக்கப்பட்ட கரகத்தைத் தரையில் வைத்து சுற்றி ஆடுவர்.

அ) கூற்று 1 சரி, 2 தவறு ஆ) கூற்று 1ம், 2ம் தவறு

இ) கூற்று 1 தவறு, 2 சரி ஈ) கூற்று 1ம், 2ம் சரி

## குறுவினா

1. நாடகத்துறையின் புதிய பரிமாணத்திற்குக் காரணமாக அமைந்தவர்கள் யாவர்?
2. சே. இராமானுஜத்தின் நாடகங்களுள் நான்கை எழுதுக.
3. கே. பாலசந்தரின் நாடகங்களுள் நான்கை எழுதுக.
4. சத்ய ஜித்ரேயின் முதல் மூன்று படங்கள் யாவை?
5. திரைப்படமாக எடுக்கப்பட்ட கல்கியின் புதினங்கள் யாவை?
6. பெண் எழுத்தாளர்களில் யாருடைய படைப்புகள் படமாக்கப்பட்டன?
7. தமிழில் வெளிவந்த கலைத்தன்மை மிக்க திரைப்படங்களில் சிலவற்றைக் குறிப்பிடுக.
8. திரைப்படங்களில் சீர்திருத்தக் கருத்துகளைப் புகுத்தியவர்கள் யாவர்?

9. உலகளாவிய திரைப்பட விருதுகளில் நான்கின் பெயர்களைக் குறிப்பிடுக.

10. 'குறும்படம்' – வரையறை தருக.

11. ஒருவரிக் கதை என்றால் என்ன?

12. காட்சித்துணிப்பு என்றால் என்ன?

13. படப்பிடிப்பு நகர்விற்கு உதவும் கருவிகள் யாவை?

14. பாடல்சார் கலைகள் என்றால் என்ன?

15. கருவிசார் கலைகள் எவை எவை?

## சிறுவினா

1. நவீன நாடகத்தின் நோக்கம் குறித்து எழுதுக.

2. நவீன நாடகத்தின் வளர்ச்சிக்குக் காரணமாக அமைந்த பயிற்சிப்பட்டறைகள் எவை?

3. பெண்ணிய அரங்கச் செயல்பாடுகள் குறித்து எழுதுக.

4. பரீக்ஷா நாடகக் குழு – விவரிக்க.

5. இலக்கியத்தில் இருந்து திரைப்படமாக எடுக்கப்பட்ட புதினங்கள் குறித்து எழுதுக.

6. பாலு மகேந்திரா சிறந்த ஓர் ஆளுமை என்பதைத் தெளிவுப்படுத்துக.

7. தங்கர் பச்சானின் படங்கள் குறித்து எழுதுக.

8. சினிமா ரசனை குறித்து நும் கருத்துகளைத் தொகுத்தெழுதுக.

10. தமிழ்த் திரைப்படத்துறையின் வளர்ச்சிக்கு நாடகத் துறையின் பங்களிப்பு குறித்து எழுதுக.

11. ஒருவரிக் கதை – குறிப்பு வரைக.

12. காட்சி என்றால் என்ன? அதன் வகைகளைக் குறிப்பிடுக.

13. திரைக்கதை – விளக்குக.

14. திரைப்படத்தில் வசனம் பெறும் இடம் எத்தகையது?

15. ஆவணப்படம் குறித்து எழுதுக.

## நெடுவினா

1. நவீன நாடகத்தின் தோற்றமும் வளர்ச்சியும் குறித்து விவரிக்க.

2. ஒரு திரைப்படம் கலைத்தன்மை வாய்ந்தது என எவ்வாறு கருதப்படுகிறது?

3. தமிழ்த் திரைப்பட வரலாறு பற்றி நீவிர் அறிவன யாவை?

4. இன்றைய காட்சி ஊடகங்களில் திரைப்படம் பெறும்இடம் குறித்து நும் கருத்தைக் கூறுக.

5. திரைப்படத் தயாரிப்பில் கலைநுட்பங்கள் எவ்வாறு முக்கியபங்கு வகிக்கின்றன என்பதை நிறுவுக.

## படிப்போம் பயன்படுத்துவோம்

### 1. மாதிரி – திரைக்கதை

(பாலுமகேந்திராவின் 'கதை நேரம் கதைகள்' என்ற நூலிலிருந்து ஒரு காட்சி மாதிரி திரைக்கதையாகக் கொடுக்கப்பட்டுள்ளது. சு.சமுத்திரம் எழுதிய உடன்பிறவா உறவுகள் என்ற கதையை பாலுமகேந்திரா, காத்திருப்பு என்னும் தலைப்பில் திரைக்கதையாக எழுதினார்)

காட்சி – 1

அஞ்சலையின் வீடு

பகல் / EXT

(ஓலை வேய்ந்த குடிசை வீட்டு முன்னால், கதவை ஒட்டிய சுவரோடு அஞ்சலை சாய்ந்து உட்கார்ந்திருக்கிறாள். ஒரு கிழிந்த கம்பளியைப் போர்த்திருக்கிறாள். மிகவும் தளர்வுற்றுக் காணப்படுகிறாள்.

அவளுக்கு முன்னால் முத்துப்பேச்சி (சுமார் பத்து வயது) கையில் ஒரு புத்தகத்தை விரித்து வைத்துக்கொண்டு, அம்மா சொல்வதை கடிதமாக எழுதுவதற்காக அவள் முகத்தை பார்த்தபடி அமர்ந்திருக்கிறாள். அஞ்சலைக்குப் பின்னால் ஒரு நாய் சலனமுமற்று தூங்கிக் கொண்டிருக்கிறது)

அஞ்சலை : (பலஹீனமான குரலில்) எழுதிட்டியா?

மகள் : ம்...

அஞ்சலை: படி...

மகள் : அன்புள்ள அப்பாவுக்கு ... மகள், முத்துப்பேச்சி எழுதிக்கொள்வது ...

அஞ்சலை: ம்...

(சுவரோடு சாய்ந்து கொஞ்சம் சௌகரியமாக அமர முயல்கிறாள்)

நாஞ் சொல்றத கவனமாக் கேட்டுக்க... அத நீ எழுதிற மாதிரி அப்டியே எழுது.

(மகள், அம்மா சொல்வதை கேட்டு ஆமோதித்துத் தலையாட்டுகிறாள்)

அஞ்சலை : (தளர்ந்த குரலில்)

வர, வர எனக்கு ஒடம்பு ரொம்ப மோசமாயிட்டே போகுது.. தெனம் ஆஸ்பத்திரிக்கு போய் வந்துக்கிட்டிருக்கேன்... ஒவ்வொரு நாளும் ரெண்டு, ரெண்டு ஊசி போடுறாங்க... பத்தாததுக்கு இவ்வளவு மருந்து மாத்திரை வேற... எல்லாம் சாப்பிட்டு என்ன பிரயோஜனம்? வியாதி குணமான மாதிரி இல்ல... ஜாஸ்தியாயிட்டே போகுது ...

(அஞ்சலை சொல்லச் சொல்ல மகள், அதைக் கேட்டு எழுதுகிறாள்)

இப்ப ரெண்டு நாளா என்ன சாப்பிட்டாலும் வாந்தி... என்னால எந்திருச்சு நிக்கக்கூட முடியல... நீங்க மாசா மாசம் அனுப்புற பணம் சாப்பாட்டு செலவுக்குத்தான் சரியா இருக்கு... இந்த ஆஸ்பித்திரி செலவுக்கு... மருந்து மாத்திரை வாங்கிறதுக்கு இதுக்கெல்லாம் அக்கம் பக்கத்தில கடன வாங்கித்தான் சமாளிச்சிட்டிருக்கேன்...

(பேசவும் முடியாதவளாய், உட்காரவும் முடியாதவளாய் அவஸ்தைப்படுகிறாள்)

பாவம், இந்தக் கெழவிதான் என்னை ஆஸ்பத்திரிக்கு கூட்டிட்டு போறது... எங் கூடவே இருந்து பாத்துக்கிறது எல்லாம். அதுவும் இல்லெண்ணா இந்நேரம் பொதைச்ச எடம் புல்லு மொளச்சு போயிருக்கும்! ம்... என்னமோ, இன்னும் போகாமேல இழுத்துக் கிட்டிருக்கு...

(விரக்தியாய் கண் சொருக வானத்தைப் பார்க்கிறாள்)

எழுதிட்டியா?

மகள் : (சோகம் முட்ட) ம்...

(அஞ்சலை இருமியபடி மறுபடியும் தலையில் கை வைத்து தலை சொறிந்து கொள்கிறாள். உடல் வேதனை தாங்க இயலாதவளாய், கம்பளியை இழுத்துவிட்டுக் கொள்கிறாள். மகள் பரிதாபமாக அம்மாவைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள்)

அஞ்சலை: (தழு தழுத்து) எனக்கு ஒண்ணுமில்லீங்க... நீங்க என் பக்கத்தில் இல்லங்கிற குறைதான் நீங்க இங்க வந்திட்டால்... தன்னால என் நோய் குணமாயிரும்.

(விசும்பலுடன்) எனக்கு எப்பவுமே உங்க நெனப்புத்தான்... நான் இன்னும் அதிக நாளைக்கு இருப்பேண்ணு எனக்குத் தோணல...

(குரலுடைந்து... முந்தானையால் தனது கண்ணீரைத் துடைத்துக் கொள்கிறாள்)

என்ன பண்ணப் போறீங்களோ... உங்க மக வளர்ந்துதான் உங்களப் பாத்துக்கணும். எனக்கு ஒரேயொரு ஆசதான்... என் உசிர் போறப்ப நீங்க எம் பக்கத்திலேயே இருக்கணும்...

(பேச இயலாதவளாய் அழுகையுடன் மூக்கைச் சிந்திக் கொள்கிறாள்)

வேலை மாத்தம் கெடைக்கலண்ணாலும்... எடையில ஒரு வாட்டி வந்து போக முடியுமாண்ணு பாருங்க...

(முந்தானையால் முகத்தை மூடி சுவரோடு தலை சாய்ந்துக் கொள்கிறாள். தவிப்போடு அம்மாவையே பார்த்துக்கொண்டிருந்த மகள், தாங்க முடியாதவளாய் தவித்து தொண்டை அடைக்க தலை குனிய, அவளது வழிகளிலிருந்து கண்ணீர் பெருக்கெடுக்கிறது)

2. நீங்கள் கண்ட குறும்படம் உணர்த்தும் நன்னெறி குறித்து வகுப்பில் கலந்துரையாடுக.

3. திரைக்கலை நுட்பங்களைப் பயன்படுத்திக் கீழ்க்காணும் சூழலைத் திரைப்படக் காட்சியாக மாற்றுக.

"அடுத்த சிற்றூரில் நுழைகிறான். பகலவன் மேற்றிசையில் விழுகிறான். பறவைகள் தழை கிளைகளில் அடங்குகின்றன. குடிசைகளில் விளக்கேற்றப்படுகின்றது. பனி புதைகின்றது. ஊரின் பொது சாவடியில் ஒரு கிழவி மேலாடையின்றி தன் கையால் மெய்போர்த்து குளிரால் நடுங்கியபடி மூலையில் ஒண்டியிருக்கிறாள். மண்ணாங்கட்டி காணுகிறான். அவன் முகம் துன்பத்தை அளாவுகின்றது.

கிழவியின் எதிரில் ஒரு பழம் புடவை வந்து விழுகின்றது. அவள் சுற்றுமுற்றும் பார்க்கிறாள். புடவையை மகிழ்ச்சியுடன் எடுத்து விரித்து போர்த்துக்கொள்ளுகிறாள். அவளின் இருண்ட விழிகளை ஒளி தழுவுகின்றது. புடவை போர்த்த தன் அழகைத் தானே பலமுறை குனிந்து குனிந்து பார்த்து மகிழ்கின்றாள். பற்கள் இல்லாவிடினும் உதடுகளால் சிரிக்கிறாள்.

மண்ணாங்கட்டிக்கு இது ஓர் இன்பக் காட்சி! சிரித்த முகத்தோடு அவன் மேலும் நடக்கிறான்".

4. கீழ்க்காணும் குறிப்புகளைப் பயன்படுத்திக் குறுக்கும் நெடுக்கும், மேலும் கீழும், இடமும் வலமுமாகக் கட்டங்களில் மறைந்திருக்கும் பெயர்களைக் கண்டறிக.

| ம் | லி | ல் | டெ | ண் | ஆ | ஸ் | க | ர் | கா |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| டு | பெ | ப் | ம | லை | க் | க | ள் | ள | ன் |
| ப் | யா | லா | கா | கீ | மா | ய | ண | ம் | ர |
| ப | ங் | கு | ளி | வ | ச | ர | சு | வ | தி |
| ப | லூ | ன் | தா | ல் | வு | க | ண் | ஸ் | ந் |
| ளி | ச | இ | ஸ் | வ | ர | ம் | வ | க | கெ |
| வெ | ட் | டு | ம் | கா | வ | ல | ர் | த | ம |
| க | ட | டு | ட் | வெ | ல் | க | நீ | ல | ம் |
| ட | க | ட | டு | ளி | கி | க் | ன | ன் | அ |
| நா | ம் | ர் | கா | க் | ர் | ச | ல் | த | பா |

1. தென்னிந்தியாவில் வெளியான முதல் திரைப்படம் – கீசகவதம்
2. புதுமைப்பித்தனின் 'சிற்றன்னை' என்னும் நாவலைத் திரைப்படமாக்கியவர்
3. முதல் தேசிய விருதினைப் பெற்ற தமிழ்ப்படம்
4. தமிழில் வெளியான முதல் பேசும் படம்
5. சங்க இலக்கியங்களில் 'குடக்கூத்து' என்ற பெயரால் அறியப்படும் ஆட்டம்
6. மூவகை அரங்கை முன்வைத்த வங்க நாடக ஆசிரியர்
7. பரீக்ஷா ஞாநி எழுதிய நாடகங்களுள் ஒன்று
8. அழகி என்னும் திரைப்படம் இந்தச் சிறுகதையை அடிப்படையாகக் கொண்டது
9. திரையில் காட்டப்படும் தனியான ஒரு பிம்பத்தை இவ்வாறு கூறுவர்
10. தெய்வீகம், தியானம், சாந்தம் முதலிய உணர்வுகளை வெளிப்படுத்தும் வண்ணம்
11. திரைப்படத்திற்காக வழங்கப்படும் உலகின் மிக உயரிய விருது எது.
12. ஔவை நாடகத்தை எழுதியவர்.
13. சங்கீத நாடக அகாதெமி அமைந்துள்ள இடம்.
14. இளையராஜா இசையமைத்த முதல் படம்.
15. ரெங்கராஜனால் தொடங்கப்பட்ட இதழ்.

5. புறநானூற்றிலிருந்து ஏதேனும் ஒரு பாடலின் கருத்தைக் கதை வடிவில் எழுதுக.

6. திரைப்படத்திற்கு நகைச்சுவை அல்லது முத்திரை வசனம் எழுதுக.

## செயல் திட்டம்

உங்கள் பகுதியில் நிகழ்த்தப்படும் நாட்டார் அரங்கக் கலைகள் குறித்த செய்திகளைத் திரட்டி தொகுப்பேடு உருவாக்குக.

இயல் நான்கு

# இலக்கணவியல்

PCJQW7




மொழி வளர்ச்சிக்கு உறுதுணையாக விளங்கும் ஒரு கருவியே இலக்கணம். அக்கருவியானது, நம் அறிவையும் திறனையும் வளர்த்தெடுப்பதோடு, ஆர்வத்தையும் ஊட்டுதல் வேண்டும். அவற்றிற்கேற்ப, இவ்வியல் அமைந்துள்ளது; புதிய நோக்கில், பல்வேறு புதிய சிந்தனைகளைத் தூண்டி, இலக்கண ஆய்வுக்கு நம்மை அழைத்துச்செல்கிறது. இவ்வியலில் மொழியியல், ஒப்பியல், திறனாய்வியல் ஆகிய களங்களில் கட்டுரைகள் அமைந்துள்ளன.

தமிழ், ஆங்கில மொழிகளின் தொடரமைப்புக் கூறுகள், சொற்பொருள் மாற்றம் குறித்த சுவையான செய்திகள், சொற்களுக்குரிய வேர்மூலங்கள், இலக்கிய வளர்ச்சிக்கும் சிந்தனை வளர்ச்சிக்கும் துணைசெய்யும் திறனாய்வுக்கலை ஆகிய கட்டுரைகள், எளிமையாகவும் சுருக்கமாகவும் இவ்வியலில் விளக்கப்படுகின்றன.

## கற்றல் நோக்கங்கள்

- தமிழ், ஆங்கில மொழிகளின் தொடரமைப்புக்கூறுகளை ஒப்பிடும் திறன் பெறுதல்.
- ஒரு சொல், சூழலுக்கேற்பப் பொருள்கொள்ளும்முறை குறித்து அறிந்துகொள்ளுதல்.
- மொழியியல் ஆய்வில், வேர்ச்சொல் ஆய்வின் இன்றியமையாமையைத் தெரிந்துகொள்ளுதல்
- திறனாய்வு வகைகள், அணுகுமுறைகள் ஆகியவற்றைத் தெரிந்துகொள்ளுதல்
- பாடல்கள், புனைகதைகள் போன்றவற்றைத் திறனாய்வு செய்யும் திறன் பெறுதல்.

## பாடப் பகுதி

- தமிழ், ஆங்கிலம் – தொடரமைப்பு ஒப்பீடு
- பொருண்மையும் சொற்பொருள் மாற்றமும்
- வேர்ச்சொல் ஆய்வு – ஓர் அறிமுகம்
- திறனாய்வு

## இயல் நான்கு

# தமிழ், ஆங்கிலம் – தொடரமைப்பு ஒப்பீடு

### அறிமுகம்

ஒரு மொழியின் பல்வேறு நிலைகளை அறியவும் அதனோடு தொடர்புடைய பல மொழிகளின் இயல்புகளை அறியவும் ஒப்பீடு தேவைப்படுகிறது. மொழிகளை ஒப்பிடுதல், அவற்றிற்கிடையேயுள்ள தொடர்புகளைக் காணல், அத்தொடர்புகளை அடிப்படையாகக் கொண்டு, மொழிகளைத் தனிக் குடும்பமாகப் பிரித்தல், அவற்றை ஒப்பிடுதல், ஒரு மொழிக்குடும்பத்தில் அமையும் கிளைமொழிகளுக்கு இடையேயுள்ள தொடர்பை விளக்குதல் ஆகிய செயல்கள் யாவும் ஒப்பீட்டுமுறை ஆய்வாலேயே நிகழ்கின்றன.

இப் பாடப்பகுதி தமிழ், ஆங்கிலம் ஆகிய இருமொழிகளின் சில தொடரமைப்புக் கூறுகளை ஒப்பிட்டுக்காட்டுகிறது. ஆங்கிலத்தை இரண்டாம் மொழியாகப் படிக்கும் மாணாக்கர்களுக்கு இவ் ஒப்பீடு, அதன் தொடரமைப்புக் கூறுகளை எளிமையாகப் புரிந்துகொள்ள உதவும்.

### திராவிடமொழிக் குடும்பத்தில் தமிழ்

திராவிடமொழிக் குடும்பத்தில், இருபத்து மூன்றிற்கும் மேற்பட்ட மொழிகள் உள்ளன. அவற்றுள் ஒன்றாகிய தமிழ்மொழி, மற்ற திராவிட மொழிகளுக்கெல்லாம் தாயாக விளங்குகிறது.

"வடவேங்கடம் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து..."

என்னும் தொல்காப்பியச் சிறப்புப் பாயிரத்தில், பனம்பாரனார் தமிழ்மொழி வழங்கும் நிலப்பரப்பு குறித்துக் கூறியுள்ளார். வடக்கில் வேங்கடமலை, தெற்கில் குமரியாறு ஆகியவற்றை எல்லையாகக் கொண்டு, தமிழ்மொழி பேசப்பட்டு வந்துள்ளதாக அறியமுடிகிறது.

இன்றைய காலக்கட்டத்தில், இந்தியாவில் மட்டுமன்றி இலங்கை, மியான்மர், மலேசியா, சிங்கப்பூர், இந்தோனேசியா முதலிய உலக நாடுகளிலும் தமிழ்மொழி பேசப்படுகின்றது.

"திராவிட மொழிகள் மிகப்பழைமையான மொழிகள் என்பதும் மூவாயிரம் ஆண்டுகட்கு முன்னரே இந்திய நாட்டில் வழக்கிலிருந்து வந்துள்ளன என்பதும் மொழியியலார்களின் கொள்கை. இந்தோ – ஆரிய மொழியாகிய இன்றைய சமற்கிருதம், இந்நாட்டில் நுழைவதற்கு

#### அறிவோம் தெளிவோம்

**தமிழின் சிறப்பைப் பற்றி மேலைநாட்டினர் கருத்துகள்**

தமிழே மிகவும் பண்பட்ட மொழி; தனக்கே உரிய வளம் வாய்ந்த இலக்கியச் செல்வங்களைப் பெற்றிருக்கும் மொழி – மாக்ஸ்முல்லர்

ஆற்றல் மிக்கதாகவும் சில சொற்களால் கருத்தைத் தெரிவிப்பதாகவும் விளங்குவதில் தமிழ்மொழியை எம்மொழியாலும் விஞ்சமுடியாது; உள்ளத்தின் பெற்றியை உள்ளவாறு எடுத்துக்காட்டுவதில் தமிழ்மொழிக்கு ஈடாக எம்மொழியும் இயைந்ததாக இல்லை – பெர்சிவல்

வடமொழி, எபிரேயம், கிரேக்கம் ஆகிய மூன்று இலக்கிய மொழிகளில் தமிழ்ச்சொற்கள் கலந்திருக்கின்றன – ரைஸ்டேவிஸ்

இப்போது வழங்கும் எல்லா மொழிகளிலும் தமிழே மிகப் பழைமையானது – ஈராஸ் பாதிரியார்

முன்னாலேயே திராவிடமொழிகள் வழக்கில் இருந்துள்ளன" என்று, மொழியியல் அறிஞர் ச. அகத்தியலிங்கம் கூறியிருப்பது இங்கு எண்ணத்தக்கது.

வடமொழியின் முதற்காவியம், வால்மீகியின் இராமாயணம் என்று கூறுவர். இதில், தமிழ் வளர்த்த பாண்டியர் பற்றிய குறிப்பு வருகின்றது. வியாச முனிவரும் மகாபாரதத்தில், தமிழ்நாட்டின் சிறப்பையும் பாண்டிய அரசின் சிறப்பையும் குறிப்பிட்டுள்ளார். இவையாவும் தமிழின் தொன்மைச் சிறப்பைப் புலப்படுத்துகின்றன.

## இந்தோ – ஐரோப்பியமொழிக் குடும்பத்தில் ஆங்கிலம்

இந்தோ – ஐரோப்பிய மொழிக்குடும்பத்தில், ஏறக்குறைய நானூறு கோடி மக்களால் பேசப்படும் நூற்றுக்கும் மேற்பட்ட மொழிகள் உள்ளன. இந்தப் பெருமொழிக்குடும்பத்தில் ஆங்கிலம், ஸ்பானிஷ், பிரெஞ்சு, போர்த்துகீசியம், ஜெர்மனி, இத்தாலி, இரஷ்யா, பார்சி, இந்தி, உருது முதலான மொழிகள் இடம்பெற்றுள்ளன. அவற்றுள் உலகெங்கும் பேசப்படும் பன்னாட்டு மொழியாகவும் இணைப்புமொழியாகவும் ஆங்கிலமொழி விளங்குகிறது. ஐக்கிய நாடுகள், ஐக்கிய அமெரிக்கா, கனடா, ஆசுதிரேலியா, அயர்லாந்து, நியூசிலாந்து போன்ற நாடுகளின் முதன்மைமொழியாக ஆங்கிலம் உள்ளது.

உலகில் மிகுதியாகப் பயன்படுத்தப்படும் மொழிகளின் வரிசையில், முதலில் மாண்டரின் சீனமொழியும் இரண்டாவதாக ஸ்பானிய மொழியும் மூன்றாவதாக ஆங்கிலமும் உள்ளன. உலக மக்கள்தொகையில் மூன்றில் ஒரு பங்கினர் ஆங்கிலம் பேசுபவர்களாக உள்ளனர். அறுபத்தேழு நாடுகளில், அரசு அலுவல் மொழியாக ஆங்கிலம் பயன்படுகிறது.

ஆங்கிலம் (English) என்பதன் மூலச்சொல், ஏங்கில்ஸ் (Angles) என்னும் பெயரிலிருந்து பெறப்பட்டதாகும். இங்கிலாந்தில் வாழ்ந்த ஆங்கிலோ–சாக்ஸன் என்ற சிறு குழுவினரால் பேசப்பட்ட ஆங்கிலம், இன்று உலகம் முழுவதும் பேசப்படுகிறது.

ஆங்கில மொழியிலுள்ள பெரும்பான்மையான சொற்கள், இலத்தின் மொழியிலிருந்தும் கிரேக்க மொழியிலிருந்தும்



### தெரியுமா?

### மொழிநிலைகள்

சொல்லமைப்பின் அடிப்படையில், மொழிநிலைகள் மூன்றாகப் பகுக்கப்பட்டுள்ளன. அவை தனிநிலை, உட்பிணைப்பு நிலை, ஒட்டுநிலை என்பன.

### தனிநிலை (Isolative language)

சொற்கள் ஒன்றோடு ஒன்று ஒட்டாமல், தனித்தனியாக நின்று பொருள் உணர்த்துவது, தனிநிலை அமைப்பு. சீனம், சயாம், பர்மியம், திபெத்து ஆகிய மொழிகள் தனிநிலை அமைப்புடையவை.

எ.கா. சீன மொழியில், மின் என்னும் சொல் மக்களைக் குறிக்கும். லிக் என்னும் சொல், வலிமையைக் குறிக்கும். இரண்டும் சேரும்போது, மின்லிக் (மக்கள் வலிமை), மின் சிலிக் (மக்களுடைய வலிமை) என்பதைக் குறிக்கும். சி என்பது அம்மொழியில் வெறுஞ்சொல்.

### உட்பிணைப்புநிலை (Inflectional language)

அடிச்சொற்கள் இரண்டு சேரும்போது, இரண்டும் சிதைந்து ஒன்றுபட்டு நிற்பது, உட்பிணைப்புநிலை அமைப்பு. ஐரோப்பிய மொழிகள் உட்பிணைப்பு நிலையைச் சார்ந்தவை.

எ. கா. 'Such', 'Which' என்னும் ஆங்கிலச் சொற்கள், So–like, Who– like என்பனவற்றின் உட்பிணைப்பு.

### ஒட்டுநிலை (Agglutinative language)

அடிச்சொற்கள் இரண்டு சேரும்போது, ஒன்று சிதைந்தும் மற்றொன்று சிதையாமலும் நிற்பது, ஒட்டுநிலை அமைப்பு. உலகிலுள்ள பெரும்பான்மையான மொழிகள் இவ்வகையின. திராவிட மொழி, சித்திய மொழி, ஜப்பானிய மொழி, கொரிய மொழி, பின்னிஷ் மொழி, பாஸ்க் மொழி, ஆப்பிரிக்கப் பழங்குடி மக்களின் பண்டு மொழி, மலேசிய பாலினேஷியன் மொழி முதலான பல மொழிகளும் ஒட்டுநிலையைச் சார்ந்தவை.

எ.கா. பார் என்னும் அடிச்சொல்லோடு இடைநிலை, விகுதி போன்ற இடைச்சொற்கள் ஒட்டி வருகின்றன.
பார் + த் + த் + ஆன்

உருவானவை. இன்றைய பயன்பாட்டில் இருக்கும் நவீன ஆங்கிலம், பல்வேறு மொழிகளிலுள்ள வழக்குச்சொற்களைக் கொண்டுள்ளது. தொலைதொடர்பு, அறிவியல், செய்தித் தொழில்நுட்பம், வணிகம், மருத்துவம், அரசியல், கணினியியல் முதலிய பல்வேறு துறைகளில் ஆளுமைமிக்க மொழியாகவும் ஆங்கிலம் விளங்குகிறது.

வானொலி, தொலைக்காட்சி, திரைப்படம், வரைகலை, இணையம் போன்ற பல்வேறு ஊடகத் தொழில்நுட்பங்களில் ஆங்கிலம் இன்றியமையாததாக உள்ளது. எடுத்துக்காட்டாக,இணையம்இயங்கும்பல்வேறு நெறிமுறைகள் (Protocols), வலைத்தளங்கள் கட்டமைக்கப்படும் குறியீட்டு மொழிகள் (Markup Languages), நிரல் மொழிகள் (Programming Languages) ஆகியவை ஆங்கிலத்திலேயே உள்ளன.

### பயிற்றுமொழிகள் – தமிழ், ஆங்கிலம்

தமிழகப் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் தாய்மொழி, முதல்மொழியாகவும் ஆங்கிலம் இரண்டாம் மொழியாகவும் (Second Language) பயிற்றுவிக்கப்படுகின்றன. பல பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் தாய்மொழியும் ஆங்கிலமும் பயிற்றுமொழிகளாக (Medium) உள்ளன. பெரும்பான்மையாகப் பொறியியல், மருத்துவம்சார்ந்த படிப்புகளில் ஆங்கிலமே பயிற்றுமொழியாக உள்ளது.

ஒரு மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள், புதிதாக மற்றொரு மொழியைக் கற்கும்போது, தம் தாய்மொழியோடு ஒப்பிட்டுப் பார்ப்பது இயல்பு. ஆங்கிலம் ஒரு மொழியாக மட்டுமன்றிப் பாடமாகவும் கற்பிக்கப்படுவதால் தமிழோடு ஆங்கில ஒப்பீடு இன்றியமையாததாக உள்ளது.

மாணாக்கர், ஆங்கிலப்பாடத்தைக் கற்கும்போது, அதன் மொழிக் கட்டமைப்புகளையும் இலக்கணக்கூறுகளையும் தமிழோடு ஒப்பிட்டுப் பார்க்கின்றனர்.

எடுத்துக்காட்டாக, ஆங்கிலத்தில் Active Voice, Passive Voice தொடர்களைப் படிக்கும் மாணாக்கர், தமிழின் செய்வினை, செயப்பாட்டுவினைத் தொடர்களை நினைவுகூர்வர்.

ஆங்கிலத்தில் Adjective, Adverb பற்றிப் படிக்கும்போது, தமிழின் பெயரடையும் வினையடையும் நினைவுக்கு வரும். (பதினோராம் வகுப்பில் படித்ததும் நினைவுக்கு வரும்.)



### தெரியுமா?

ஆங்கிலம், 146 மொழிகளிலிருந்து சொற்களைக் கடன் வாங்கியுள்ளதென ஒரு கணக்கெடுப்பின்படி அறியமுடிகிறது. தமிழிலிருந்து ஆங்கிலம் பெற்றுக்கொண்ட சில சொற்கள் பின்வருமாறு:

| தமிழ் | English | தமிழ் | ஆங்கிலம் |
|---|---|---|---|
| அணைக்கட்டு | Anicut | தேக்கு | Teak |
| காசு | Cash | ஓலை | Olla |
| கட்டுமரம் | Catamaram | மிளகுத் தண்ணீர் | Mulligatanney |
| கறி | Curry | கூலி | Coolie |
| மாங்காய் | Mango | பச்சிலை | Patchouli |
| தோப்பு | Tope | பலகணி | Balcony |
| பப்படம் | Poppadam | சந்தனம் | Sandal |

தமிழ், ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளைப்பற்றிய ஒப்பீடு என்பது, மிகப்பெரிய களமாக விளங்குகிறது. அதனைச் சில பக்கங்களுக்குள் அடக்க முடியாது. ஆகவே, இவ்விரு மொழிகளிலுமுள்ள சில தொடரமைப்புக்கூறுகள் மட்டும் ஒப்பீட்டுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன. அவையாவும் எளிமையாகவும் சுருக்கமாகவும் இப்பகுதியில் விளக்கப்படுகின்றன.

## தமிழ், ஆங்கிலம் – தொடரமைப்பு ஒப்பீடு

சொற்கள் முறைப்படி அமைந்து,பொருளைத் தரும்போது, அது சொற்றொடராகிறது. அச்சொற்றொடர், மரபுநிலை பிறழாதவாறும் அதனைப் பேசுவோர், கேட்போர் ஆகியோரின் மனநிலைக்கு ஏற்றவாறும் அமையும்போது, கருத்துப் பரிமாற்றம் எளிதாகிறது.

இம்மரபு, எல்லா மொழிகளிலும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை. ஏனெனில், மொழிக்குமொழி மரபுநிலை மாறுபடுவது இயல்பே. எடுத்துக்காட்டாக வினைமுற்றுகள், ஆங்கிலத்தில் தொடரின் இடையிலும், தமிழில் தொடரின் இறுதியிலும் நிற்கின்றன.

எ.கா.

செல்வி படம் வரைந்தாள் (த) – (வினைமுற்று, தொடரின் இறுதியில் நின்றது.)

*Selvi drew a picture* (ஆங்.) – (வினைமுற்று, தொடரின் இடையில் நின்றது.)

அதேபோல், திராவிட மொழிகளில் வினையடிகள், இடைநிலைகள் போன்றவை ஒட்டுநிலையில் நிற்க, சீனம் முதலான மொழிகளில் தனிநிலையாக நிற்கின்றன. தொடரமைப்பு நிலையில் காணும்போது திராவிட மொழிகள், இந்தோ – ஐரோப்பிய மொழிகளிலிருந்து பலவகையிலும் வேறுபடுகின்றன. இவற்றைப் பின்வரும் தலைப்புகளில் இனிக் காணலாம்.

1. தொடரமைப்பில் சொற்களின் நிலை
2. தொடரமைப்பில் இயைபு

## 1. தொடரமைப்பில் சொற்களின் நிலை

சொற்கள் தொடர்ந்து நின்று பொருள் தருவதனைத் தொடர் என அறிந்துள்ளோம். ஒரு தொடரில், சொற்களின் வரிசை முன்பின்னாக மாறி வந்தாலும் அத்தொடரின் பொருண்மை மாறாது இருக்குமானால், அதனை அமைப்பு மாற்றம் என மொழியியலார் குறிப்பிடுகின்றனர். இது, பொதுவான விளக்கமாகும்.

தமிழில், முற்றுத்தொடர்களில் எழுவாய் முதலிலும், செயப்படுபொருள் இடையிலும், பயனிலை இறுதியிலும் இடம்பெறுகின்றன. ஆனால், ஆங்கிலத்தில் செயப்படுபொருள் தொடரின் இறுதியில் அமைகின்றது.

எ.கா.

நான் கடிதம் எழுதினேன் (த)

*I wrote a letter (E)*

தமிழ் இலக்கியங்களில் குறிப்பாகச் செய்யுள், கவிதை ஆகியவற்றில் எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் இடம் மாறியும் அமைவதுண்டு. இவை, கவிஞர்களின் உணர்ச்சி வெளிப்பாட்டால் அமைவன.

எ.கா. 'கண்டனன் கற்பினுக் கணியை கண்களால் . . .' என்னும் கம்பராமாயணப் பாடலடியில், 'கண்டனன்' என்னும் வினைமுற்று, தொடரின் முதலில் வந்துள்ளது. இக் காலத்தில் உரைநடைகளிலும் செய்தித்தாள்கள் முதலான ஊடகங்களிலும் இதுபோன்ற தொடர்கள் பெரும்பான்மையாகப் பயின்று வருகின்றன. இவ்வகைத் தொடர்கள், பேச்சுத்தமிழில் இயல்பாகவே இடம்பெறுகின்றன. ஆனால், ஆங்கிலத்தில் மாறிவருதல் இயல்பில்லை.

இனி, தொடர்நிலையில் பெயரடை, வினையடை; பெயரெச்சம், வினையெச்சம்; முன்னொட்டு, பின்னொட்டு; உருபன்உறவு, இலக்கணஉறவு ஆகியவை அமையும் நிலை குறித்துக் காண்போம்.

## பெயரடையும் வினையடையும்

தொடரில் இடம்பெறும் பெயரைச் சிறப்பிக்க பெயரடையும், வினையைச் சிறப்பிக்க

வினையடையும் வருகின்றன. தமிழில் இவை, பெயருக்கு முன்பும் வினைக்கு முன்பும் பயின்று வரும்.

எடுத்துக்காட்டாக, 'அழகான மலர்' என்னும் தொடரில், 'அழகான' என்பது, பெயரடை. 'விரைவாக ஓடியது' என்னும் தொடரில், 'விரைவாக' என்பது வினையடை.

ஆங்கிலத்திலும் பெயரடை பெயருக்குமுன் வருகிறது. எ.கா. *beautiful flower*. இங்கு *beautiful* என்பது, பெயரடை. தமிழில் வினைக்குமுன் இடம்பெறும் வினையடை, ஆங்கிலத்தில் மட்டும் வினைக்குப்பின் பயின்று வருகிறது. எ.கா. *ran fastly*. இங்கு *fastly* என்பது, வினையடை.

## பெயரெச்சமும் வினையெச்சமும்

தமிழில், ஒரு தொடரில் எத்தனை எச்சங்கள் இருக்கின்றன எனக் கணக்கிட்டால், அத்தனை தனித்தனித் தொடர்கள் இணைந்துள்ளன என்பதை அறியலாம். எடுத்துக்காட்டாக,

அவன் வந்தான்

அவன் பார்த்தான்

அவன் சென்றான்

என்னும் மூன்று முற்றுத்தொடர்களையும் அவன் வந்து பார்த்துச் சென்றான் என (வினை) எச்சங்களால் ஆன முற்றுத்தொடராக்கலாம்.

ஆங்கிலத்திலும் இவை பல முற்றுத்தொடர்களைப் பெற்ற தொடராகக் கொள்ளும் பண்பு உண்டு.

*He came. He saw. He went.*

*He came, saw and went.*

தமிழில் ஒன்றுக்கு மேற்பட்ட அடிப்படைத் தொடர்களை இணைத்து, ஒரே தொடராக மாற்றுவதற்கு எச்சங்கள் பயன்படுகின்றன. ஆனால், இந்தோ – ஐரோப்பிய மொழிகளில் இவ்விடத்தில் இணைப்பு இடப்பெயர்கள் பயன்படுத்தப்படுகின்றன.

ஆங்கில மொழியில் இரு தொடர்களை இணைக்க, இணைப்பு இடப்பெயர்கள் பயன்படுத்தப்படும் இடங்களிலெல்லாம் தமிழில் பெயரெச்சங்களையோ வினையாலணையும் பெயர்களையோ பயன்படுத்துவதைக் காணலாம்.

எடுத்துக்காட்டாக, *I read a book, which was given by you* என்னும் தொடரில், *Which (Relative Pronoun)* என்பது, இணைப்பு இடப்பெயராகும். இதே தொடரைத் தமிழில், 'நீ கொடுத்த புத்தகத்தை நான் படித்துவிட்டேன்' எனக்கூறும்போது, 'கொடுத்த புத்தகம்' என்பது பெயரெச்சம் ஆகும்.

இவ்வாறே தொடரில் வினையெச்சமும் பயின்று வருவதைக் காணலாம். எடுத்துக்காட்டாக, *Kannan came. Kannan went.* என்னும் இரு தொடர்கள் *Kannan came and went* என்று ஒரே தொடராக அமையலாம். ஆனால் தமிழில், கண்ணன் வந்தான்; கண்ணன் சென்றான் என்னும் இரு தொடர்கள், கண்ணன் வந்தானும் சென்றானும் என்று 'உம்'சேர்த்து எழுதப்படுவதில்லை. மாறாக, கண்ணன் வந்து சென்றான் என்று வினையெச்சத்தைப் பயன்படுத்தி எழுதப்படுகிறது.

## உருபன்கள் – முன்னொட்டும் பின்னொட்டும்

தமிழ்மொழி ஒட்டுநிலை மொழியாக, குறிப்பாகப் பின்னொட்டினை ஏற்கும் மொழியாக உள்ளது. ஆங்கில மொழியில் முன்னொட்டுகள் (*Prepositions*) அமையும் இடங்களிலெல்லாம் தமிழில் பின்னொட்டுகளே (*Postpositions*) அமைகின்றன. எடுத்துக்காட்டாக,

| தமிழ் | ஆங்கிலம் |
|---|---|
| மேசையின் மேல் | On the table |
| மேசையின்கீழ் | Under the table |

இதே போன்றுதான் வேற்றுமை உருபுகள் பின்னொட்டுகளாக உள்ளன. எ.கா. மரம் + கு = (மரம் + அத்து + கு) = மரத்துக்கு எனக் 'கு' உருபு பின்னொட்டாக அமைகிறது. ஆங்கிலத்தில் அது முன்னொட்டாகப் பயின்றுவருகின்றது. எ.கா. *to the tree*. இங்கு '*to*' என்பது, முன்னொட்டு.

## உருபன்உறவும் இலக்கணஉறவும்

ஆங்கிலத் தொடர்களில் சொற்களுக்கு இடையேயுள்ள உறவுகள், இலக்கணஉறவுகளாக

(Grammatical Relation) அமைகின்றன. ஆனால், தமிழில் அவ்வுறவு, உருபன்களைச் சார்ந்து (Morphological Relation) அமைகின்றது. சொல்லமைப்பு திட்பமாக அமைந்த தமிழ்மொழி, ஒட்டுநிலை அமைப்பு உடையது. எனவேதான், தமிழில் சொற்களின் அமைப்புமுறை, நெகிழ்ச்சி உடையதாக உள்ளது. தொடரமைப்பு திட்பமாக உள்ள ஆங்கிலமொழியில், சொற்களின் அமைப்புமுறை நெகிழ்ச்சியற்றதாக உள்ளது. அதனால்தான், ஆங்கிலத்தில் ஒரு தொடரிலுள்ள சொற்களை இடம் மாற்றினால் பொருளும் மாறிவிடுகின்றது.

எ.கா.

வளவன் எழிலரசியை அழைத்தான் > எழிலரசியை வளவன் அழைத்தான்

(பொருள் மாறவில்லை.)

*Valavan called Ezhilarasi >*
*Ezhilarasi called Valavan*

(பொருள் மாறுகிறது.)

## 2. தொடரமைப்பில் இயைபு

தொடரமைப்பில் இயைபு என்பது, ஒரு தொடரில் அமைந்துள்ள சொற்களுக்கு இடையே காணப்படும் தொடர்பாகும். 'கண்ணன் வந்தான்' என்னும் தொடரில், 'கண்ணன்' என்னும் எழுவாய்க்கேற்ப 'வந்தான்' என்னும் வினைமுற்று (பயனிலை) வந்துள்ளது. இஃது, எழுவாய்க்கேற்ற இயைபாகும். இதுபோல் தமிழிலும் ஆங்கிலத்திலும் திணை, பால், எண், இடம், காலம் ஆகியவற்றிற்கிடையே ஓர் இயைபு காணப்படுகிறது.

### திணை, எண், பால், இடம் – இயைபு

சொற்களுக்கிடையே ஏற்படும் பொருத்தப்பாடே இயைபு. ஆங்கில மொழியில் *She is a girl* என்பதும், *They are girls* என்பதும் சரியான பொருத்தப்பாடுடைய தொடர்களாகும். இவற்றை வினை இயைபு (*Agreement of the verb*) என்பர். *She are girl* என்றோ *They is girls* என்றோ பேசுவதும் எழுதுவதும் இல்லை. ஏனெனில், அவை தவறான தொடர்கள் மட்டுமன்றி, இயைபின்றியும் அமைவன. (*She – Singluar Noun, is – singular verb; They – Plural Noun, are – plural verb*)

❖ தமிழில் பெயரடைக்கும் அதனை அடுத்து வரும் பெயருக்கும் இடையே எண், பால் ஆகியவற்றில் இயைபு இல்லை. நல்ல பையன், நல்ல பெண் என்ற தொடர்களில் 'நல்ல' என்னும்

### அறிவோம் தெளிவோம்

இரண்டாம் வேற்றுமைமுதல் ஏழாம் வேற்றுமைவரை உள்ள உருபுகள் முறையே ஐ, ஆல், கு, இன், அது, கண் என்பன. இவை, பின்னொட்டுகளாக வருவதனை அறிந்துள்ளீர்கள். இவை மட்டுமின்றி, வேறு சில உருபுகளும் உள்ளன. இவற்றை வேற்றுமைச்சொல் பின்னொட்டு அல்லது பின்னுருபு (Postpositions) என்கிறோம். இலக்கணநூலார், சொல்லுருபுகள் என்று கூறுகின்றனர். பின்னுருபுகள் அல்லது சொல்லுருபுகளுக்குச் சில எடுத்துக்காட்டுகள் பின்வருமாறு:

#### பின்னொட்டாக வரும் வேற்றுமை உருபுகள்

| | | |
|---|---|---|
| ஐ – மரத்தை | கு – மரத்துக்கு | அது – மரத்தினது |
| ஆல் – மரத்தால் | இன் – மரத்தின் | கண் – மரத்தின்கண் |

#### பின்னொட்டாக வரும் சொல்லுருபுகள்

| | | | |
|---|---|---|---|
| பற்றி | – மரத்தைப்பற்றி | தவிர | – மரத்தைத் தவிர |
| விட | – மரத்தைவிட | கொண்டு | – மரத்தைக்கொண்டு |
| போல | – மரத்தைப்போல | வைத்து | – மரத்தை வைத்து |

பெயரடை, பெயர்களோடு இயைபு இன்றியே வருகின்றது. ஆங்கிலத்திலும் இவ்வாறே அமைகின்றது.

எ.கா.

*He is a good boy*

*She is a good girl*

❖ தமிழில் முற்றுத்தொடர்களின் இறுதியில் அமையும் வினைமுற்று வடிவங்கள், எழுவாயோடு எண் இயைபு கொண்டுள்ளன. எ.கா.

| சொற்றொடர் | எண் | இடம் |
|---|---|---|
| நான் வந்தேன் | ஒருமை | தன்மை |
| நாம் வந்தோம் | பன்மை | |
| நீ வந்தாய் | ஒருமை | முன்னிலை |
| நீர் வந்தீர் | பன்மை | |
| நீங்கள் வந்தீர்கள் | மரியாதைப் பன்மை | |

❖ படர்க்கை மூவிடப்பெயரின் வினைமுற்றுகள் எழுவாயோடு திணை, பால், எண், இடம் ஆகிய நிலைகளில் இயைபு கொண்டுள்ளன. இவற்றைப் பின்வரும் எடுத்துக்காட்டுகளால் அறியலாம்.

| சொற்றொடர் | திணை | பால் | எண் | இடம் |
|---|---|---|---|---|
| அவன் வந்தான் | உயர்திணை | ஆண்பால் | ஒருமை | படர்க்கை |
| அவள் வந்தாள் | | பெண்பால் | ஒருமை | |
| அவர் வந்தார் | | பலர்பால் | பன்மை | |
| அது வந்தது | அஃறிணை | ஒன்றன்பால் | ஒருமை | படர்க்கை |
| அவை வந்தன | | பலவின்பால் | பன்மை | |

ஆங்கிலமொழியில், வினைமுற்றுகளில் பாலறி கிளவிகள் இணையும் மரபு இல்லாததால் வினைமுற்றுகள் திணை, பால் வேறுபாட்டைக் காட்டுவதில்லை. ஆனால், தமிழின் வினைமுற்று விகுதிகள் திணை, பால் வேறுபாட்டை உணர்த்துகின்றன. எ.கா.

நான் வந்தேன் – *I came*

நீ வந்தாய் – *you came*

அவன் வந்தான் – *He came*

அவள் வந்தாள் – *She came*

அவர்கள் வந்தார்கள் – *They came*

அது வந்தது – *It came*

ஆங்கிலத்தில் *came* என்ற வினைமுற்றே இரு திணை, ஐம்பால், மூவிடத்திற்கும் பொதுவாக வருவதைக் காணலாம்.

## எழுவாய், பயனிலை – இயைபு

❖ தமிழில் தோன்றா எழுவாய் கொண்ட தொடர்கள் உள்ளன. எடுத்துக்காட்டாக,

வீட்டுக்குப் போனேன்

பாடம் படித்தாய்

நாளை வருவார்

போன்ற தொடர்களில் எழுவாய் இல்லை. ஆங்கிலத்தில் எழுவாய், கட்டாயம் தோன்ற வேண்டும். இந்த விதிமுறையின் காரணமாக, எழுவாய் ஏற்காத வினைகளைக் கொண்ட ஆங்கிலத் தொடர்களில், *She, He, it, they* போன்ற பதிலிகள் எழுவாய் நிலையில் தோன்றுகின்றன.

எ.கா. *He came, She came, It came, They came.*

## அறிவோம் தெளிவோம்

| வினைமுற்று | எழுவாய் | திணை | பால் | எண் | இடம் | காலம் |
|---|---|---|---|---|---|---|
| விளையாடுவான் | அவன் | உயர்திணை | ஆண்பால் | ஒருமை | படர்க்கை | எதிர்காலம் |
| பாடுகின்றேன் | நான் | உயர்திணை | – | ஒருமை | தன்மை | நிகழ்காலம் |
| பேசினார்கள் | அவர்கள் | உயர்திணை | பலர்பால் | பன்மை | படர்க்கை | இறந்தகாலம் |
| வந்தது | அது | அஃறிணை | ஒன்றன்பால் | ஒருமை | படர்க்கை | இறந்தகாலம் |
| கொடுப்பாய் | நீ | உயர்திணை | – | ஒருமை | முன்னிலை | எதிர்காலம் |
| மேய்கின்றன | அவை | அஃறிணை | பலவின்பால் | பன்மை | படர்க்கை | நிகழ்காலம் |
| செய்வீர்கள் | நீங்கள் | உயர்திணை | பலர்பால் | பன்மை | முன்னிலை | எதிர்காலம் |
| *gave* | – | – | – | – | – | *past tense* |
| *speaks* | – | – | – | – | – | *Present tense* |

ஆகவேதான், தமிழ் முதலான திராவிட மொழிகளில் 'தோன்றா எழுவாயும்', ஆங்கிலம் முதலான இந்தோ – ஐரோப்பிய மொழிகளின் தொடரமைப்பில் 'பதிலி எழுவாய் இடுதல்' என்ற பண்பும் காணப்படுகின்றன.

❖ தமிழில் வினைச்சொற்கள் இல்லாமலும் தொடர்கள் அமைகின்றன. இத்தகைய தொடர்களில் பெயர்கள் பயனிலையாக வருவதுண்டு. இவை போன்ற தொடர்களுக்கு இணையாக ஆங்கில மொழியில் *is, are* போன்ற இணைப்பு வினைகள் சேர்க்கப்படுகின்றன.

எ.கா. அவன் இராமன் – *He is Raman*

### ஆங்கிலம், தமிழ் – தொடர்களை மொழிபெயர்க்கும்போது நேரும் தவறுகள்

தமிழையும் ஆங்கிலத்தையும் கற்கும் மாணாக்கர், தொடரமைப்புகளில் தம்மையறியாமல் சில தவறுகளைச் செய்கின்றனர். இஃது ஒரு மொழியின் தாக்கம், மற்றொரு மொழியின் மீது ஏற்படுவதனால் நேர்கிறது. எடுத்துக்காட்டாக ஆங்கிலத்தில், *Niraimathi, Kavitha and Kumaran went to school* என்னும் தொடரைத் தமிழில் நிறைமதி, கவிதா மற்றும் குமரன் பள்ளிக்குச் சென்றனர் என்று பேச்சிலும் எழுத்திலும் மாற்றுகின்றனர். 'and' என்னும் இணைப்புச்சொல்லுக்கு மாற்றாக, 'மற்றும்' என்னும் இணைப்புச்சொல்லைத் தமிழில் பயன்படுத்துகின்றனர். ஆனால், தமிழ்த் தொடரமைப்பில் ஒன்றிற்கு மேற்பட்ட பெயர்கள் இடம்பெறும்போது, அவையாவும் 'உம்' என்ற இடைச்சொல்லாலேயே இணைக்கப்படுகின்றன. ஆகவே, மேற்கூறிய தொடரை நிறைமதியும் கவிதாவும் குமரனும் பள்ளிக்குச் சென்றனர் எனப் பேச்சிலும் எழுத்திலும் பயன்படுத்தவேண்டும்.

இதுபோன்று, ஆங்கிலத்தின் தாக்கத்தால் தமிழ்த்தொடரமைப்புகளில் ஏற்படும் தவறுகளைக் கண்டறிந்து. அவற்றைச் சரியான அமைப்பில் மாற்றுவதற்கு அறிதல் வேண்டும்.

### நிறைவுரை

திராவிடமொழிக் குடும்பத்தில் தமிழின் சிறப்புகளைப்பற்றியும் இந்தோஐரோப்பியமொழிக் குடும்பத்தில் ஆங்கிலத்தின் சிறப்புகளைப்பற்றியும் இப் பாடப்பகுதி சுருக்கமாக எடுத்துக்கூறுகிறது. தமிழிலும், ஆங்கிலத்திலும் தொடரமைப்பில் காணப்படும் ஒற்றுமை, வேற்றுமைகளைச் சில எடுத்துக்காட்டுகளுடன் விளக்குகிறது.

இப்பாடப்பகுதியின் வாயிலாக, ஒருமொழியுடன் மற்றொரு மொழியை ஒப்பிடுவதால் அவற்றின் அமைப்பு, செயல்முறை, மொழிக்கூறுகள், கட்டமைப்புகள், இலக்கணக் கூறுகள், மொழியின் பொதுமைப் பண்புகள் ஆகியவற்றை அறிந்துகொள்ள முடிகிறது. அதுமட்டுமன்றி, மொழியைப் படைத்த மனிதனின் கூரிய அறிவுத்திறத்தைக் கண்டு, நமக்கு வியப்பும் பெருமிதமும் ஏற்படுகிறது. மொழிக்கட்டமைப்பின் மீது மனிதன் கொண்டிருந்த ஈடுபாட்டையும் நன்கு புரிந்துகொள்ள முடிகிறது.

## கண்ணாடி

**கீழ்க்காண்பனவற்றுள் பொருத்தமான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.**

1. 'வடமொழி, எபிரேயம், கிரேக்கம் ஆகிய மூன்று இலக்கிய மொழிகளில் தமிழ்ச்சொற்கள் கலந்திருக்கின்றன' என்று கூறியவர்

   அ) பெர்சிவல்     ஆ) ரைஸ்டேவிஸ்

   இ) மாக்ஸ்முல்லர்     ஈ) ஈராஸ் பாதிரியார்

2. பின்வருவனவற்றுள் திராவிட மொழிக்குடும்பத்தைச் சாராத மொழியைத் தேர்ந்தெடுக்க.

   அ) தமிழ்     ஆ) தெலுங்கு     இ) கன்னடம்     ஈ) சீனம்

3. பின்வரும் கூற்றையும் காரணத்தையும் படித்துப் பொருத்தமான விடையைத் தேர்ந்தெடுக்க.

   கூற்று: ஆங்கிலமொழி, உட்பிணைப்பு நிலையைச் சார்ந்தது.

   காரணம்: ஆங்கில மொழியில், அடிச்சொற்கள் இரண்டு சேரும்போது ஒன்று சிதைந்தும் மற்றொன்று சிதையாமலும் நிற்கும்.

   அ) கூற்று சரி, காரணம் தவறு.     ஆ) கூற்று, காரணம் இரண்டும் தவறு.

   இ) கூற்று தவறு, காரணம் சரி.     ஈ) கூற்று, காரணம் இரண்டும் சரி.

4. 'பள்ளிக்கூடத்தைப் பார்வையிட்டார் கல்வி அலுவலர்' இத்தொடரில், வினைமுற்று எங்கு இடம்பெற்றுள்ளது?

   அ) தொடரின் முதலில்     ஆ) தொடரின் இடையில்

   இ) தொடரின் இறுதியில்     ஈ) தொடரில் இடம்பெறவில்லை

5. 'அவன் **வந்து பார்த்துச்** சென்றான்' – இத்தொடரில், தடித்த எழுத்துகளில் இடம்பெற்றுள்ளவை

   அ) பெயரெச்சங்கள்     ஆ) வினைமுற்றுகள்

   இ) முற்றெச்சங்கள்     ஈ) வினையெச்சங்கள்

### குறுவினா

1. மொழி ஒப்பாய்வின் இன்றியமையாமையைப் புலப்படுத்துக.
2. தமிழ்மொழி வழங்கும் நிலப்பரப்பு குறித்துத் தொல்காப்பியம் கூறுவது யாது?
3. தமிழின் தொன்மைச் சிறப்புக்குச் சான்றுகள் இரண்டு தருக.
4. ஆங்கிலம் என்பதன் மூலச்சொல் எது? இஃது எங்கு, யாரால் பேசப்பட்டது?
5. தமிழிலிருந்து ஆங்கிலம் பெற்றுக்கொண்ட சொற்களுள் எவையேனும் நான்கைக் குறிப்பிடுக.
6. தமிழ், ஆங்கிலம் ஆகியவற்றின் தொடரமைப்பில் வினைமுற்றுகள் எங்கு இடம்பெறுகின்றன? எடுத்துக்காட்டுகள் தருக.

### சிறுவினா

1. சொல்லமைப்பின் அடிப்படையில், மொழிநிலைகள் எத்தனை வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன? அவற்றுள் ஏதேனும் ஒன்றை விளக்குக.
2. பெயரடை, வினையடை ஆகியன தமிழ், ஆங்கிலத் தொடரமைப்பில் எவ்வாறு வருகின்றன? சான்றுடன் விளக்குக.
3. 'உருபன்கள்' முன்னொட்டாகவும் பின்னொட்டாகவும் வருவதைத் தமிழ், ஆங்கில மொழிகளுடன் ஒப்பிடுக.
4. தொடரமைப்பில் இயைபு என்பது யாது? எடுத்துக்காட்டுகள் தருக.
5. எழுவாய், பயனிலை இயைபு - தமிழிலும் ஆங்கிலத்திலும் எவ்வாறு அமைந்துள்ளன? ஒப்பிடுக.

## நெடுவினா

1. திராவிடமொழிகளும் ஆங்கிலமும் தொடரமைப்பில் மாறுபடுவதை எவையேனும் ஐந்து எடுத்துக்காட்டுகளுடன் விளக்குக.
2. தமிழ்த் தொடரமைப்பில், ஆங்கில மொழியால் ஏற்படும் தாக்கத்தை எடுத்துக்காட்டி விளக்குக.

## படிப்போம் பயன்படுத்துவோம்

| தமிழ், ஆங்கிலம் இலக்கண ஒப்பீட்டு அட்டவணை | |
|---|---|
| **தமிழ்** | **ஆங்கிலம்** |
| திராவிடமொழிக் குடும்பம் | இந்தோ – ஐரோப்பியமொழிக் குடும்பம் |
| தமிழ், ஓர் ஒலிப்பியல் மொழி. ஒவ்வோர் ஒலியனுக்கும் ஓர் எழுத்து உண்டு எனினும், வல்லின எழுத்துகளுக்கு மட்டும் இடம் வரையறுக்கப்பட்டு ஓர் ஒழுங்குமுறையுடன் அமைந்துள்ளது. | ஆங்கிலமும் ஓர் ஒலிப்பியல் மொழிதான். ஆனால், தமிழ்போன்று குறிப்பிட்ட வரையறையுடைய ஒலிப்பியல் தன்மைகொண்ட மொழியன்று. |
| தமிழில் ஓர் எழுத்தைத் தனியாக ஒலிக்கும்போது, என்ன ஒலி எழுகிறதோ, அதே ஒலிதான் அந்த எழுத்து, சொல்லில் வரும்போதும் ஒலிக்கும். எ.கா. க – கடல். (விதிவிலக்காக மெல்லின எழுத்துடன் வல்லினம் வருமிடங்களில் மட்டும் ஒலிப்பில் மாறுபடும். எ.கா. சங்கம்) | ஆங்கில எழுத்துகளுக்கும் அவற்றின் ஒலிப்புமுறைகளுக்கும் வேறுபாடுகள் உள்ளன. ஓர் எழுத்தைத் தனித்துச் சொல்லும்போது, குறிப்பிட்ட ஓர் ஒலி பெறும். ஆனால், அதே எழுத்து, வெவ்வேறு சொற்களில் இடம்பெறும்போது, வெவ்வேறு ஒலிப்பைப் பெறும். எ.கா. (C) – (சி) CAT , (கேட் ), COW (கௌ), CALM (காம்). |
| ஒட்டுநிலை மொழியமைப்புடையது. | உட்பிணைப்பு மொழியமைப்புடையது. |
| சொல்லின் வினைமுற்று வடிவம் திணை, பால், எண், இடம், காலம் உணர்த்தும். | சொல்லின் வினைமுற்று வடிவம் காலம்தவிர, எதனையும் உணர்த்தாது. |
| எழுவாய், செயப்படுபொருள், பயனிலை என்ற அமைப்பில் தொடர் அமைவது வழக்கம். எனினும், எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் என்றும் அமைவதுண்டு. | எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் என்றே தொடர் அமையும். |
| தமிழில் எழுவாயையும் பயனிலையையும் இணைக்கும் இணைப்பு வினை இல்லை.<br>எ.கா. அவர் ஆசிரியர்<br>(அவர் – எழுவாய், ஆசிரியர் – பெயர்ப்பயனிலை). | ஆங்கிலத்தில் இணைப்பு வினை, கட்டாயம் தேவை. (is, are, was, were, am, be, been என்பன இணைப்புவினைகள் Coupla or Linking Verbs)<br>Example: He is a Teacher. |
| தமிழில், Article இல்லை. எனினும் ஒரு, ஓர், அந்த முதலிய சொற்கள் அதற்கு மாற்றாகப் பயன்படுத்தப்படுகின்றன. | Article (a, an, the) பரவலாகப் பயன்படுத்தப் படுகின்றன. |
| பின்னொட்டு அமைப்புடையது. எ.கா.<br>புத்தகம் மேசைமேல் இருக்கிறது. (மேசைக்குப் பின்னால் (மேல்) வருவதால் பின்னொட்டு.) | முன்னொட்டு அமைப்புடையது.<br>Example: The book is on the table.<br>(மேசைக்கு முன்னால் (On) வருவதால், முன்னொட்டு. |
| தமிழில் மற்றும் (and) என்னும் இணைப்புச்சொல் பெரும்பாலும் பயன்படுத்துவதில்லை. | ஆங்கிலத்தில் and என்னும் இணைப்புச்சொல் பரவலாகப் பயன்படுத்தப்படுகிறது. |
| தொடரில் சொற்களின் வரிசைமுறை நெகிழ்வுடையது. ஆயினும், உரிய பொருளைத் தரும். | தொடரில் சொற்களின் ஒழுங்குமுறை, கட்டாயம் வேண்டும். இல்லையெனில் பொருள் மாற்றம் தரும். |

# பொருண்மையும் சொற்பொருள் மாற்றமும்

## அறிமுகம்

மொழியியல் துறையில் ஒலியனியல், உருபனியல், தொடரியல் போன்று பொருண்மையியலும் ஒன்று. பொருண்மையியல் என்பது, சொற்களின் பொருளை விளக்குகின்ற ஓர் இயல். மொழியில் சொற்கள் தனித்து நின்றும், தொடரில் அமைந்தும் பொருளை விளக்குகின்றன. அவ்வாறு வரும் சொற்கள், அனைத்து இடங்களிலும் ஒரே பொருளைத் தருவதில்லை; தனித்துச் சொல்லும்போது ஒரு பொருளும் தொடரில் வரும்போது வேறு பொருளையும் தருகின்றன. சூழலுக்கேற்பவும் சொற்பொருளில் மாற்றம் ஏற்படுகின்றது. ஆகவே, பொருண்மையியலானது, சொற்கள் வெளிப்படுத்தும் வெவ்வேறான பொருள்களைப் பற்றி விளக்குவதாக அமைகின்றது.

## பொருண்மையியல் – விளக்கம்

நாம் பேசும்போது, பல சொற்களைப் பயன்படுத்துகிறோம். ஆனால், அச்சொற்கள் உணர்த்தும் பொருளின் தன்மையை உணர்ந்து பயன்படுத்துகிறோமா என்று உணர்வதில்லை. குறிப்பிட்ட ஒரு சொல், ஒவ்வொரு தொடரிலும் வெவ்வேறு பொருள் தருவதனை எப்போதாவது அறிந்திருக்கிறோமா? கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகளைக் கவனியுங்கள்.

| தொடர்கள் | உணர்த்தும் பொருள் |
|---|---|
| • 'கை வலிக்கிறது'. | – உடலின் ஓர் உறுப்பு |
| • 'கையூட்டு கொடுப்பதும் வாங்குவதும் குற்றம்'. | – உழைப்பின்றி வரும் பணம் |
| • 'தன் கையே தனக்கு உதவி' | – உழைப்பின் மேன்மை |
| • 'கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை' | – அருகில் என்னும் பொருள் |
| • கள்வனைக் கையும்களவுமாகப் பிடித்தனர் | – ஒரு செயலை நேரடியாகப் பார்த்தல் |
| • முருகன், வள்ளியைக் கைபிடித்தான் | – திருமணம் புரிதல் |
| • கண்ணனை ஒரு கை பார்த்துவிடவேண்டும் | – சரியான பாடம் கற்பித்தல் |
| • ஆட்டத்தில் ஒரு கை குறைகிறது | – ஓர் ஆள் (எண்ணிக்கை) தேவை |

படித்தீர்களா? எத்தனை கைகள்? என்னென்ன பொருள் தருகின்றன? மேற்குறிப்பிட்ட ஒவ்வொரு தொடரிலும் 'கை' என்னும் சொல், ஒவ்வொரு பொருள் தருவதை உணர்ந்திருப்பீர்கள். இதே சொல்லைப் பயன்படுத்தி உங்களாலும் வேறு சில தொடர்களை உருவாக்கமுடியும் அல்லவா!

'கை' என்பதன் அகராதிப் பொருள், மனித உடலின் ஓர் உறுப்பு. 'கை' என்பது, அடிப்படையில் ஒரு பெயர்ச்சொல். இதே சொல், உணர்வுப் பொருளாகவும் பயன்பாட்டுப் பொருளாகவும் சூழலுக்கேற்பப் பொருள்மாறுகின்றது.

ஆகவே, மொழிக்கூறுகள் பெற்றுள்ள பொருண்மைத் தன்மையை அகராதிப்பொருள், இலக்கணப் பொருள், உணர்வுப் பொருள், பயன்பாட்டுப் பொருள், சூழற்பொருள் என வகைப்படுத்திக் கூறலாம்.

## பொருண்மைக் கோட்பாடுகள்

பழந்தமிழ் இலக்கணநூலான தொல்காப்பியம், 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' என்று சொல்லின் தன்மையைக் குறிப்பிடுகிறது.

மேலும், "பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும் சொல்லி னாகும்" என்றும் கூறுகிறது. ஆகவே, ஒரு சொல், சொல்லாகிய தன்னையும் குறிக்கும்; தான் குறிப்பிடும் வேறு பொருள்களையும் குறிக்கும். அச்சொல், சூழல் அடிப்படையில் பலவகையான பொருளை வெளிப்படையாகவும் குறிப்பாகவும் விளக்கி நிற்கும் என்பது, தொல்காப்பியர் உணர்த்தும் பொருண்மைக் கோட்பாடு.

மொழியியல் அறிஞர்கள், பொருண்மையியலைப் பல கோட்பாடுகளால் விளக்குகின்றனர். எடுத்துக்காட்டாகச் சசூர் என்பவர், சொல்லுக்கும் பொருளுக்கும் இடையிலான உறவு இயற்கையானதன்று என்று வலியுறுத்தியுள்ளார். அவர், சொல்லைக் குறிப்பான் எனவும், சொல் குறிப்பிடும் பொருளைக் குறிப்பீடு எனவும் வேறுபடுத்தியுள்ளார்.

ஃபுளும் பீல்டு என்பவர், தூண்டல் செய்கைக்கு எதிர்வினையாக அல்லது துலங்கலாக மொழி வெளிப்படுகிறது எனக் கூறியுள்ளார். மாலினோவ்ஸ்கியும் பிர்த்தும், ஒரு சொல்லின் சூழலை அறிந்துகொள்ளாமல், அச்சொல்லின் பொருளை அறிதல் இயலாது என்று கூறினர்.

இதனடிப்படையில் உணர்வுக் கோட்பாடு, மரபுக்கோட்பாடு, சூழல்கோட்பாடு, பயன்பாட்டுக் கோட்பாடு எனப் பல்வேறு கோட்பாடுகளை மொழியியல் அறிஞர்கள் உருவாக்கினர். இவ்வாறு, பல்வேறு கோட்பாடுகள் இருப்பினும் அவை யாவும் ஒரு சொல்லானது, தனித்துநின்று ஒரு பொருளையும் தொடரில் வரும்போது பல பொருளையும் சூழலுக்கேற்ப உணர்த்தும் என்பதையே எடுத்துக்கூறுகின்றன. இனிச் சூழல்கோட்பாட்டின்வழிப் பொருள்கொள்ளும் முறைகுறித்துக் காண்போம்.

## சூழல் கோட்பாடு – ( Contextual Theory)

ஒரு மொழியிலுள்ள சொற்கள், தொடர்கள் ஆகியன சமுதாயச் சூழல்களைத் தழுவியே பொருண்மைகளை உணர்த்துகின்றன. சூழல்கோட்பாடு என்பது, ஒலிச் சூழல், உருபன் இணைப்புச் சூழல், இலக்கணச் சூழல், சொல் இணைப்புச் சூழல், பேச்சுச் சூழல் என ஐவகைப்படும். அவற்றை எடுத்துக்காட்டுகள்வழிக் காண்போம்.

### அ) ஒலிச் சூழல்

பலகை – பல கை

பலகை என்னும் சொல், ஒரு சொல்லாகத் தனித்து ஒலிக்கும்போது, மரப்பலகை என்னும் பொருளையும், பல சொல்லாகத் தொடர்ந்து ஒலிக்கும்போது, பல கைகள் என்னும் பொருளையும் தருகின்றது. இவ்வாறு வரும் சொற்களைப் பொதுமொழி எனப் படித்திருப்பீர்கள்.

### ஆ) உருபன் இணைப்புச் சூழல்

ஆறு – ஆற்றை (ஆறு + ற்+ ஐ)

ஆறை (ஆறு+ஐ)

ஆறு என்னும் சொல்லுடன் ஐ என்னும் உருபன் சேரும்போது, சூழலுக்கேற்பப் பொருள் மாற்றம் பெறுகிறது. ஆறு + கடந்தான் எனக் கூறும்போது, ஐ உருபனுடன் ஒற்று இரட்டித்து, ஆற்றைக் கடந்தான் எனவும், ஐந்துடன் ஆறு என்ற எண்ணைக் கூட்டு என வரும்போது, ஐ உருபன் மட்டுமே இணைந்து ஆறைக் கூட்டு எனவும் பொருள் தருகிறது.

### இ) இலக்கணச் சூழல்

ஆடு – ஆடு

ஆடு என்னும் சொல், பெயர்ச்சொல்லாகவும் வரும். வினைச்சொல்லாகவும் வரும். வயலில் ஆடு மேய்கிறது எனச் சொல்லும்போது, ஆடு என்பது, ஒரு விலங்கின் பெயரைக் குறிக்கும் பெயர்ச்சொல். இசைக்கேற்ப நடனம் ஆடு எனச் சொல்லும்போது, ஆடு என்பது ஆடுதல் என்னும் தொழிலைக் குறிக்கும் வினைச்சொல்.

### ஈ) சொல் இணைப்புச் சூழல்

சவுக்கு – சவுக்கு மரம் – சவுக்கடி

சவுக்கு என்னும் சொல்லுடன் வெவ்வேறு சொற்கள் இணையும்போது, வெவ்வேறு பொருளைத் தருகின்றன. சவுக்குமரம் என்று கூறும்போது, ஒரு வகை மரத்தைக் குறிப்பிடுகிறது. சவுக்கடி கிடைத்தது என்று கூறும்போது, சவுக்கால் அடித்ததைக் குறிப்பிடுகிறது.

### உ) பேச்சுச் சூழல்

இது, பொருள் மயக்கம் கொண்ட மொழிக்கூறுகளைச் சார்ந்தது. அதனால், அதனதன் பொருள்களைத் தனித்தனியாகப் பிரித்துப் பொருள் உணரவேண்டும். இதனைப் பேச்சுநடை, வட்டாரவழக்கு, கதைநடை, கவிதைநடை போன்ற பல்வேறு மொழிக்கூறுகளில் உணரலாம்.

எடுத்துக்காட்டாக,

நான் மதுரை

என்னும் தொடர் பொருள் தெளிவில்லாமல்,

1. நான் மதுரையைச் சார்ந்தவன்
2. நான் மதுரைக்குப் போகிறவன்
3. நான் மதுரையிலிருந்து வருபவன்

எனப் பல பொருள்களைத் தரக்கூடிய வகையில் உள்ளது. இப் பொருள் மயக்கங்கள் பேச்சுச் சூழலினால் தெளிவுபடும். அதாவது நடத்துநரிடம், பயணி தான் போகவேண்டிய இடத்தைக் குறிப்பிடும்போதும், தான் எங்கிருந்து வருகிறேன் என்பதைக் குறிப்பிடும்போதும், தன் பக்கத்தில் உட்கார்ந்திருப்பவரிடம் தன் சொந்த ஊர் இன்னதென்பதைச் சுட்டிக்காட்டவும் எனப் பல நிலைகளில் "நான் மதுரை" என்னும் தொடர் பயன்படுகிறது.

இவ்வாறு பொருண்மை சுட்டல், வெளிப்படையாகவும்அமையலாம்.குறிப்பாகவும் அமையலாம். குறிப்பாக அமையும்போது, அது சொற்பொருள் மாற்றத்திற்கு வழிவகை செய்கிறது.

### சொற்பொருள் மாற்றம்

பொருளை உணர்த்துவதற்குச் சொற்கள் கருவிகளாக உள்ளன. அவை, பொருளை வெளிப்படையாகவும் குறிப்பாகவும் உணர்த்துகின்றன. அனைவருக்கும் தெரிந்த சொற்களால் அறியப்படும் பொருள்கள் வெளிப்படையாக உணரப்படுவன. சூழ்நிலை அறிந்து நுட்பமாக அறியப்படும் பொருள்கள் குறிப்பாக உணரப்படுவன. ஆகுபெயர், அன்மொழித்தொகை, சிலேடை, உருவகம், குழூஉக்குறி, மங்கலம், இடக்கரடக்கல் முதலியவை குறிப்பால் பொருள் உணர்த்துகின்றன என்று மொழியியல் அறிஞர்கள் கூறுகின்றனர்.

சொற்பொருள் மாற்றத்திற்குப் புறஉலகு, அதன் நிகழ்வுகள், சமுதாயம், பண்பாடு, பேசுபவரின் உணர்வு, மனநிலை, பேச்சுச்சூழல் முதலிய பல காரணங்கள் உள்ளன. இவற்றோடு பிறமொழிகளின் தாக்கங்களும் காரணங்களாக அமைகின்றன. இவற்றின் அடிப்படையிலேயே மொழியில் பயன்படுத்தப்படும் சொற்கள், தொடர்கள் ஆகியவற்றின் பொருளில் மாற்றங்கள் ஏற்படுகின்றன.

இனி, சொற்பொருள் எவ்வாறெல்லாம் மாற்றம் பெற்றுள்ளது என்பதைப் பின்வரும் தலைப்புகளில் காண்போம்.

### ஒரு சொல்லுக்கு ஒரு பொருள்

பேச்சுமொழியில் ஒரு சொல், ஒரு பொருளை உணர்த்தும். சிலபோது, வேறொரு பொருளையும் உணர்த்தும். அவ்வாறு உணர்த்தும்போது, ஒரு பொருள் நிலைபெற்றும் மற்றொரு பொருள் வழக்கிழந்தும் போகலாம்.

எடுத்துக்காட்டாகக் 'கவலை' என்னும் சொல்லுக்கு இரண்டாகப் பிரியும் இடம் என ஒரு பொருளும் மனவருத்தம் என மற்றொரு பொருளும் உள்ளன. இப்போது, 'கவலை' என்பது, மனவருத்தம் என்ற ஒரு பொருளை மட்டுமே குறிக்கிறது.

நீங்களும் இத்தகைய சொற்களைத் தொகுத்துப் பட்டியல் உருவாக்கலாம்.

## ஒரு பொருளுக்கு ஒரு சொல்

ஒரு பொருளை உணர்த்த, ஒரு சொல்லே போதுமானது. அவ்வாறின்றி ஒரு பொருளைக் குறிக்க, இரண்டு அல்லது இரண்டுக்கும் மேற்பட்ட சொற்கள் இருக்குமானால், ஒன்று நிலைபெற மற்றவை வழக்கிழக்கும். எடுத்துக்காட்டாக, 'வீடு', 'இல்', 'மனை' போன்ற சொற்கள் 'இல்லம்' (வீடு) என்னும் ஒரே பொருளைக் குறித்தன. இப்போதைய வழக்கில் 'இல்' என்னும் சொல்லை, இலக்கியத்தில் மட்டுமே காணமுடிகிறது. 'மனை' என்னும் சொல்லோ, 'வீடு கட்டுவதற்குரிய இடம்' என்னும் பொருளைத் தருகிறது. பேச்சுவழக்கில், ஒருவர் 'நான் மனை வாங்கியுள்ளேன்' என்று கூறினால், அவர் வீடு வாங்கியுள்ளதாகப் பொருளன்று, வீடு கட்ட இடம் வாங்கியுள்ளார் என்பதையே உணர்த்துகிறது.

## உயர்பொருட்பேறு

இழிந்த பொருளில் வழங்கி வந்த சொற்கள், காலப்போக்கில் உயர்ந்த பொருள்களைத் தருவதாகவும் மாற்றமடைந்துள்ளன. இவ்வாறு வருவனவற்றை 'உயர்பொருட்பேறு' எனக் குறிப்பிடுகின்றனர். முன்பு, கள்ளுண்டு களித்தல் என்பதைக் 'களிப்பு' என்றனர். இன்று, 'களிப்பு' என்பது, 'மனமகிழ்ச்சி' என்னும் உயர்பொருளில் வழங்குகிறது. மேலும் ஓர் எடுத்துக்காட்டு, 'பிள்ளை' என்னும் சொல், முன்பு அணிற்பிள்ளையைக் குறித்துப் பின்னர், மக்களின் குழந்தைகளைக் குறித்து, அதன்பின் மகனையும் மகளையும் உணர்த்தத் தொடங்கிவிட்டது.

## இழிபொருட்பேறு

முன்பு, உயர்ந்த பொருளில் வழங்கிவந்த சொல், காலப்போக்கில் இழிந்த பொருளைத் தருவதும் உண்டு. அவ்வாறு வருவனவற்றை 'இழிபொருட்பேறு' எனக் குறிப்பிடுகின்றனர். எடுத்துக்காட்டாக, 'நாற்றம்' என்னும் சொல், முன்பு 'நறுமணம்' என்னும் பொருளைத் தந்தது. இப்போது, 'துர்நாற்றம்' (விரும்பத்தகாத வாசனை) என்னும் இழிந்த பொருளைத் தருகிறது. முன்னர், பொருள்கள் குவியலாகக் குவித்து வைத்திருப்பதனைக் 'குப்பை' என்றனர். இப்போதோ உதவாத, தேவையற்ற பொருள்கள் குவிந்திருப்பதனைக் 'குப்பை' என்கின்றனர்.

## சிறப்புப் பொருட்பேறு

பழந்தமிழில், 'பொன்' என்னும் சொல் செம்பு, தங்கம், வெள்ளி, இரும்பு போன்றவற்றைக் குறிப்பதற்குப் பொதுவான பெயராக வழங்கியது. செம்பொன், வெண்பொன், கரும்பொன் என்றே வழக்கில் இருந்தன. இப்போது, தங்கத்தை மட்டுமே குறிக்கிறது. ஆகவே, முன்னர்ப் பலவற்றிற்கும் பொதுவாக வழங்கிய சொற்கள், அவற்றுள் ஒன்றை மட்டுமே குறிப்பதாக வருவனவற்றைச் சிறப்புப் பொருட்பேறு என்கிறோம். மேலும், சில எடுத்துக்காட்டுகள். எள்ளின் நெய், பாலின் நெய் என்பனவற்றைக் குறித்த 'நெய்' என்னும் சொல், இப்போது, பாலின் நெய்யை மட்டும் குறிக்கிறது. விலங்குகளைப் பொதுவாகக் குறித்த 'மான்' என்னும் சொல் இப்போது, மான் என்னும் ஒரு விலங்கினத்தை மட்டுமே குறிக்கிறது. பழைமையானவற்றை எல்லாம் குறித்த 'பழைமை' என்னும் சொல், இப்போது, பழைய சோற்றை மட்டும் குறிக்கிறது.

## பொதுப்பொருட்பேறு

முன்பு, ஒருவகைப் பெயருக்கு வழங்கிவந்த பெயர், பின்னர் அதனைப்போன்ற பலவற்றிற்கும் பொதுப்பெயராக வழங்குவதைப் பொதுப்பொருட்பேறு என்கிறோம்.

எடுத்துக்காட்டாக, மரத்தினால் செய்யப்பட்ட முகத்தல் அளவையை 'மரக்கால்' எனக் கூறினர். இன்று இரும்பு போன்ற பொருள்களால் செய்யப்பட்டவற்றையும் மரக்கால் என்றே கூறுகின்றனர்.

மேலும், எள்ளினின்று எடுக்கப்பட்டதனை, 'எண்ணெய்' என்றனர். இன்றோ தேங்காய் எண்ணெய், மண்ணெண்ணெய், விளக்கெண்ணெய் எனப் பொதுப்பெயராக வழங்குகின்றனர். தண்மை (குளிர்ச்சி) பொருந்திய நீரே 'தண்ணீர்' எனப்பட்டது. இப்போது கஞ்சித்தண்ணீர், சீரகத்தண்ணீர், மிளகுத்தண்ணீர், காப்பித்தண்ணீர் (Coffee) எனப் பொதுவாகக் கூறுகின்றனர். இவை போன்ற சொற்களையும் உங்களால் தொகுக்கமுடியும் அல்லவா!

## தகுதி வழக்கில் இடம்பெறும் சொற்பொருள் மாற்றம்

இலக்கணப்பகுதியில் தகுதி, இயல்பு என இரு வழக்குகளைப் படித்திருப்பீர்கள். அவற்றுள் தகுதி வழக்கில் இடம்பெற்றுள்ள இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக்குறி என்பன சொற்பொருள் மாற்றம் பெறுகின்றன.

### இடக்கரடக்கல்

பலர் நிறைந்த அவையினிலே சொல்லக்கூடாத சொற்களை மறைத்து, வேறு சொற்களால் கூறுவதே இடக்கரடக்கல். சொல்லக்கூடாத சொற்கள் என்பதனை நாகரிகமற்ற சொற்கள் என்றும் கூறுவர். தொல்காப்பியம், இவ்வகைச் சொல்லை 'அவையல் கிளவி' என்று கூறுகிறது. எடுத்துக்காட்டாகக் கண்கழீஇ வருதும், கால்கழீஇ வருதும் போன்ற தொடர்களைக் கூறலாம். பண்பாட்டின் தாக்கத்தால் இவ்வாறு மாற்றம் ஏற்படுகிறது.

### மங்கலம்

மங்கலம் அல்லாதவற்றைக் கூறும்போது, மங்கலமான வேறு சொற்களால் கூறுவதனை 'மங்கலம்' என்பர். அவ்வாறு கூறுவதனால், பொருள் வேறுபடவும் வாய்ப்புண்டு. இறந்தவரைத் 'துஞ்சினார்', 'விண்ணுலகம் எய்தினார்', இறைவனடி சேர்ந்தார் எனவும் கூறுவர். (துஞ்சுதல் என்பது, தூங்குதல் என்னும் பொருளையும் குறிக்கும்) மேலும், சில எடுத்துக்காட்டுகள்: 'விளக்கை அணை' எனக் கூறாமல், 'விளக்கைக் குளிரவை' எனக் கூறுதல். சுடுகாடு, இடுகாடு எனக் கூறாமல், 'நன்காடு' எனக் கூறுதல். கடுமையான விடம் உடைய பாம்பை 'நல்ல பாம்பு' எனக் கூறுதல்.

**அறிவோம் தெளிவோம்**

**கோட்டை விடுதல்:** மன்னர் ஆட்சிக்காலத்தில் அரசர்களிடையே நடக்கும் போர்களில் பெருந்தோல்வி என்பது, தாங்கள் குடியிருக்கும் கோட்டையினை இழப்பதே ஆகும். இதனைத்தான் கோட்டை விடுதல் என்றனர். இன்று, அச்சொல்லினைப் பெருந்தோல்விக்குரியதாகப் பயன்படுத்துகிறோம்.

### குழூஉக்குறி

ஒரு குழுவுக்குள் ஏதேனும் ஒரு காரணம் பற்றி, அக்குழுவினருக்கு மட்டும் புரியும் வகையில், பொருள் தரும் சொற்களைப் பயன்படுத்துவதனைக் குழூஉக்குறி என்பர். குழூஉக்குறி என்பது, குறுமொழியாகும். பொற்கொல்லர், பொன்னைப் 'பறி' எனக் கூறுவதும், வேடர் கள்ளைச் 'சொல் விளம்பி' எனக் கூறுவதும் குழூஉக்குறிக்கு எடுத்துக்காட்டுகளாகும். இளம்தலைமுறையினரிடம் இச்சொல் வழக்கு, இப்போது பெருவழக்காக உள்ளது. அவர்கள், தத்தமது குழுவினருக்குப் புரியும்வகையில், பழைய சொற்களை விட்டுவிட்டுப் புதிய சொற்களால்கூறுவதை,மொழிவிளையாட்டாகக் கருதுகின்றனர்.

## ஆகுபெயரில் சொற்பொருள் மாற்றம்

ஒரு பொருளின் பெயர், அதனொடு தொடர்புடைய மற்றொரு பொருளுக்கு ஆகிவருவது, 'ஆகுபெயர்' எனப் படித்திருக்கிறீர்கள். பதினாறு வகை ஆகுபெயர்களும் சொற்பொருள் மாற்றத்திற்கு உட்படுகின்றன. எடுத்துக்காட்டாக, ஊர் சிரித்தது என்னும் இடவாகுபெயர், ஊரைக் குறிக்காமல், ஊரில் வாழும் மக்களைக் குறிக்கிறது.

## சொற்பொருள் மாற்றத்தால் ஏற்படும் பயன்கள்

சொற்பொருள் மாற்றம் பற்றிய ஆய்வு, தமிழில் சொற்களின் நிலை, பொருண்மை அடிப்படையில் அவை எவ்வாறு பின்னிப் பிணைந்துள்ளன என அறிந்துகொள்ள வழிவகுக்கும். பலவகைப்பட்ட அகராதிகளை உருவாக்குவதற்குத் துணைபுரியும். ஒருபொருள் பன்மொழி அகராதிகளில் சொற்களைப் பகுக்க உதவும். ஆக்கமுறை மாற்றிலக்கணத்திற்கு அகராதி உருவாக்கவும் பயன்படும். மொழிபெயர்ப்புக்கான அடிப்படைக் கூறுகளை அறிந்துகொள்ள வகைசெய்யும். தொடரியல் பண்புக் கூறுகளைப் பெறுவதற்கு வாய்ப்புள்ளதால், இவ்ஆய்வு தொடரியல் செயல்பாட்டை அறிந்துகொள்ளவும் வழிசெய்யும்.

## கண்ணாடி

**கீழ்க்காண்பனவற்றுள் பொருத்தமான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.**

1. சொற்கள் பொருளுணர்த்தும் தன்மை குறித்து ஆராய்வது -----------.

   அ) தொடரியல் ஆ) உருபனியல்

   இ) பொருண்மையியல் ஈ) ஒலியனியல்

2. சரியாகப் பொருத்தப்பட்டுள்ள இணைக்குரிய விடைக்குறிப்பைத் தேர்ந்தெடுக்க.

   | | |
   |---|---|
   | அ) வைகை - வை கை | 1) உருபன் இணைப்புச் சூழல் |
   | ஆ) நூலைப்படி - ஏணிப்படி | 2) இலக்கணச் சூழல் |
   | இ) (ஆடு + ஐ) ஆட்டை - ஆடை | 3) சொல் இணைப்புச் சூழல் |
   | ஈ) மலைக்குகை – மலைவாழை | 4) ஒலிச்சூழல் |

   அ) (அ – 1) ஆ) (ஆ – 2) இ) (இ – 3) ஈ) (ஈ – 4)

3. கீழ்க்காணும் கூற்றுகளைப் படித்துச் சரியான விடைக்குறிப்பைத் தேர்ந்தெடுக்க.

   கூற்று – 1. மொழியில் சொற்கள் தனித்தும் தொடரில் அமைந்தும் பொருளை விளக்குகின்றன.

   கூற்று – 2. தனியாகவும் தொடரிலும் வரும் சொற்கள், எல்லா இடங்களிலும் ஒரே பொருளைத் தருகின்றன.

   அ) கூற்று 1, 2 சரியானவை ஆ) கூற்று 1 சரி, கூற்று 2 தவறு

   இ) கூற்று 1 தவறு, கூற்று 2 சரி ஈ ) கூற்று 1, 2, தவறானவை

4. தூண்டல் செய்கைக்குத் துலங்கலாக மொழி வெளிப்படுகிறது என்று கூறிய மொழியியல் அறிஞர்------------.

   அ) சசூர் ஆ) ஃப்ளூம்பீல்டு இ) மாலினோவ்ஸ்கி ஈ) பிர்த்

**குறுவினா**

1. 'கட்டு' என்னும் சொல்லைப் பயன்படுத்தித் தொடர்கள் இரண்டு உருவாக்குக. அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பொருள் தருமாறு எழுதுக.
2. சொற்கள், அகராதிப் பொருளிலும் இலக்கணப்பொருளிலும் வருவதற்கு எடுத்துக்காட்டுகள் தருக.
3. சூழல் கோட்பாடு எத்தனை வகைப்படும்? அவை யாவை?
4. மொழியியல் அறிஞர்கள் குறிப்பிடும் பொருண்மைக் கோட்பாடுகள் யாவை?
5. ஒலிச் சூழல் அடிப்படையில் சொற்கள் எவ்வாறு பொருள் உணர்த்துகின்றன?
6. சொற்பொருள் மாற்றத்திற்கு அடிப்படையாக அமையும் காரணிகள் யாவை?

7. 'குழலினிது ...' எனத் தொடங்கும் குறளில், 'மக்கள்' என்னும் சொல், என்ன பொருளில் குறிப்பிடப்பட்டுள்ளது? இப்போது என்ன பொருளில் கூறப்படுகிறது?

8. தொல்காப்பியம் 'அவையல் கிளவி' என்று எதனைக் குறிப்பிடுகிறது? எடுத்துக்காட்டுடன் விளக்குக.

9. 'விளக்கைக் குளிரவை' எனக் கூறுவது எதன்பாற் படும்? ஏன்?

10. ஆகுபெயரில் ஏற்படும் சொற்பொருள் மாற்றத்திற்கு இரண்டு எடுத்துக்காட்டுகள் தருக.

## சிறுவினா

1. பொருண்மையியல் – வரையறுக்க.
2. தொல்காப்பியர் குறிப்பிடும் பொருண்மைக் கோட்பாடு யாது?
3. சூழல்கோட்பாட்டை எவையேனும் இரண்டு சூழல்வழி எடுத்துக்காட்டுகளுடன் பொருத்திக்காட்டுக.
4. சொற்பொருள் மாற்றத்தில் 'உயர்பொருட்பேறு' என்றால் என்ன? எடுத்துக்காட்டுடன் விளக்குக.
5. அன்றும் இன்றும் வழக்கத்திலுள்ள சொற்கள், பொருள் மாற்றம் அடைந்திருப்பதை எடுத்துக்காட்டுகளுடன் ஒப்பிடுக.
6. 'நெடுநல்வாடை' , 'வாடை அடிக்கிறது' இவ்விரு தொடரிலும் 'வாடை' என்னும் சொல்லின் பொருள் எவ்வாறு மாற்றமடைந்துள்ளது? விளக்குக.

## நெடுவினா

1. சூழல் கோட்பாட்டின் அடிப்படையில் சொற்கள் எவ்வாறு பொருண்மையை உணர்த்துகின்றன? எடுத்துக்காட்டுகளுடன் விவரிக்க.
2. தகுதிவழக்கில் ஏற்படும் சொற்பொருள் மாற்றம் குறித்து எடுத்துக்காட்டுகளுடன் விளக்குக.
3. சொற்பொருள் மாற்றத்தால் ஏற்படும் பயன்கள் யாவை?

### அறிவோம் தெளிவோம்

இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக்குறி என்ற மூன்றையும் இலக்கண எல்லையில் அவை பொருந்தாவிட்டாலும் அவற்றின் பயன்கருதி, வழக்கிலுள்ள சொற்களாகவே ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று நன்னூல் குறிப்பிடுகிறது. இம்மூன்றனுள் 'மங்கலம்' என்னும் வழக்குச்சொல்லை நோக்குவோம். நல்லதை வாயால் சொல்வார்களேயன்றிக் கெட்டதைத் தமிழர்கள் வாயால் சொல்லமாட்டார்கள். கெட்டவர்களைக்கூடக் 'கெட்டவர்' என்னாது, 'அவர் யாரோ' எனக் கூறுவது, தமிழர் பண்பாடு. 'கொல்லா விரதமெனக் கொண்டவரே நல்லோர் மற்றல்லாதார் யாரோ அறியேன் பராபரமே' என்று தாயுமானவர் தம் பராபரக்கண்ணியில் குறிப்பிடுவது 'மங்கலம்' என்னும் வழக்குக்கருதிதான் எனலாம்.

இவைபோன்ற இலக்கண அமைதிகள் தமிழில் காலமும் இடமும் கருதி, தமிழர்தம் பண்பும் நாகரிகமும் கெடாதவகையில் பயன்படுகின்றன.

– நல்ல தமிழ், அ. மு. பரமசிவானந்தம்

# வேர்ச்சொல் ஆய்வு – ஓர் அறிமுகம்

## அறிமுகம்

உலகில், ஆறாயிரத்துக்கு மேற்பட்ட மொழிகள் உள்ளன. இம்மொழிகளின் வரலாற்றினை, மொழியாய்வு அறிஞர்கள் ஆராய்ந்து வருகின்றனர். மொழியாராய்ச்சியில் வேர்ச்சொல் ஆய்வு, முதன்மையாக விளங்குகிறது. உலக மொழிகளில் முதன்மையான மொழிகளை, மொழியறிஞர்கள் செம்மொழிகள் என்பர். தமிழ், அச்செம்மொழி வரிசையில் இடம்பெற்றுள்ளது.

மக்கள் வழக்கிலுள்ள பெரும்பாலான மொழிகளுக்கு, அகராதிகள் உருவாக்கப் பட்டுள்ளன. இலக்கிய வழக்கும் செல்வாக்கும் மிக்க மொழிகளுக்கு, அகராதிகள் மட்டுமன்றி வேர்ச்சொல் அகராதிகள் உருவாக்கப்பட்டுள்ளன.

## வேர்ச்சொல் ஆய்வு – முன்னுரை

வேர்ச்சொல் ஆய்வு என்னும் இத்தலைப்பு, வேர்ச்சொல் ஆய்வு என்றால் என்ன என்பது பற்றியும் தமிழில் வேர்ச்சொல் ஆய்வு எவ்வாறு தோற்றம் பெற்றது என்பது பற்றியும் முதலில் விளக்குகிறது; அதனைத் தொடர்ந்து, தமிழ் – திராவிடமொழிகள் வேர்ச்சொல் உறவினையும் தமிழ் – இந்தோ ஐரோப்பிய மொழிகள் வேர்ச்சொல் உறவினையும், வேர்ச்சொற் கோட்பாட்டையும் விளக்குகிறது.

**அறிவோம் தெளிவோம்**

விள்ளல், விண்டல், விழைதல் ஆகிய சொற்களின் அடிப்பகுதி 'விள்' என்பது. 'விள்' என்ற அடிச்சொல்லிற்கு 'விருப்பம்' என்பது பொருள். 'விள்' என்னும் அடிப்பகுதிதான் வங்கம் – பங்கம்; வண்டி – பண்டி; வெற்றிலை – Betel போல் 'வகர பகர' மாற்றத்தில் மேலை இந்தோ – ஐரோப்பிய மொழிகளில் விள் – Phil எனத் திரிந்தது. 'விருப்ப ஆய்வு' என்பதன் வழியாகவே, 'வேர்ச்சொல் ஆய்வு' 'Philology' ஆனது என்பார் பாவாணர்.

## அகராதி – வேர்ச்சொல் அகராதி

அகராதிகளில், சொற்களுக்குரிய சரியான வடிவங்களும் பொருள்களும் தரப்பட்டிருக்கும். வேர்ச்சொல் அகராதிகளில் இவற்றிற்கு அப்பால், மொழியின் சொற்கள் தோன்றி வளர்ந்த வரலாறு விளக்கமாகச் சொல்லப்பட்டிருக்கும். இதனால், ஒரு மொழியை நுட்பமாக அறிவதற்கு இயல்பான அகராதியைவிட, வேர்ச்சொல் அகராதி துணை புரியும்.

ஆங்கிலத்தில், வேர்ச்சொல் ஆய்வினை *Etymological Studies* என்பர். '*Etyma*' என்ற சொல்லிற்கு உண்மைப்பொருள் (*Real meaning*) என்பது பொருள். மேற்குலகத்தில் வேர்ச்சொல் ஆய்வினை, '*Philology*' என்று கூறினர். *Philology* என்பதற்கு 'விருப்பமான ஆய்வு' என்பது பொருள். சொல்லாய்வு ஒரு விருப்பமான கலையாக இருந்ததை இதன்வழி நாம் அறிகிறோம்.

## அகராதியும் வேர்ச்சொல் அகராதியும்

'உவரி' என்னும் ஒரு தமிழ்ச்சொல்லினை, அகராதியும் வேர்ச்சொல் அகராதியும் இருவேறு வகையில் விளக்கப்படுத்தும்.

உவரி = உப்பு, கடல். இவ்விளக்கத்தினை அகராதியில் காணலாம். ஆயின், வேர்ச்சொல் அகராதி 'உவர்' என்னும் உப்பினைக்கொண்டிருப்பதால் கடல், 'உவரி' எனப்பட்டது.

'உ' என்னும் உயர்வுப்பொருள் சுட்டடியாக உ – உக – உகர்ப்பு – உவர் – உவரி என இச்சொல் பிறந்தது. மகன் – மவன் போல் ககரம் வகரமாகி, 'உகர்', 'உவர்' ஆனது.

'உகப்பே உயர்வு' என்பது, தொல்காப்பியம். இவ்வாறெல்லாம் வேர்ச்சொல் அகராதியில் விளக்கம் விரியும்.

கடல்நீரைப் பாத்திகளில் தேக்கி, அந்நீரைக் கதிரவன் வெப்பத்தால் வறளச் செய்து, உருவாக்குவதே உப்பாகும். கடல்நீர் காய்ந்ததும் கடல்நீரிலிருந்த ஒரு வெண்பொருள் உப்பிக்கொண்டு, நிலத்தின் மேல் எழும். இதனால், இவ்வெண்பொருள் 'உப்பு' என்னும் பெயர் பெற்றது ஒப்புநோக்கத்தக்கது. மேல் எழுதல் என்னும் பொருளில் உருவான 'உவர்' என்னும் இச்சொல், உவரி என உப்பினையும் கடலையும் குறித்ததற்கு அப்பால் மிகுதியானது என்ற பொருளிலும் பிறகு பொருள் நீண்டது. மிகுதியானது என்ற உவரியே பிறகு, உபரி எனப் பேச்சுவழக்கில் திரிந்தது. இவ்வாறான கூடுதல் விளக்கங்களையும் வேர்ச்சொல் அகராதி கொண்டிருக்கும்.

இயல்பான அகராதியைவிட வேர்ச்சொல் அகராதி, ஒரு மொழியைப்பற்றி அறிவதற்குக் கூடுதல் விளக்கம் தந்து உதவுகிறது. இதனை 'உவரி' சொல்லிற்குக் காட்டிய விளக்கத்தின்வழி அறிந்தோம்.

### வேர் என்பதன் விளக்கம்

தொல்காப்பியர், 'வியலென் கிளவி அகலப் பொருட்டே' என ஒரு நூற்பா செய்தார். இந்நூற்பாவின்வழி 'வியல்' சொல், அகலப் பொருள் உடையது என்பதை அறிகிறோம். அகன்ற, பெரிய உலகம் – வியனுலகம்

> **அறிவோம் தெளிவோம்**
>
> **உவர் – Over**
>
> உப்பி மேலெழுந்தது உப்பு. உகப்பி மேலெழுந்தது உக – உகர் – உவர். இவ் 'உவர்' மேலெழுதல் பொருளிலும் கூடுதல் பொருளிலும் இந்தோ ஐரோப்பியத்தில் உபர் – உபரியானது. கீழை இந்தோ ஐரோப்பியமாகிய சமற்கிருதத்தின் உபரியே மேலை இந்தோ ஐரோப்பிய மொழிகளில், Over என்பதற்கு வேர் என்பார் ஆங்கில வேர்ச்சொல் அகராதி அறிஞர் கீற்று. (The Concise Dictionary of ENGLISH ETYMOLOGY – Walter W. Skeat)

என்றெல்லாம் அழைக்கப்படும் பழந்தமிழ் மரபில் இவ் உண்மையைக் காணலாம்.

நிலத்திற்கு அடியில் மரம், செடி, கொடிகளைத் தாங்கி நிற்கும் ஓர் உறுப்பு, வேர். நிலத்தில் ஊன்றும்போது, சிறிதாக இருந்த இவ் உறுப்பு மெல்ல மெல்ல வியலித்து வளர்கிறது. அதன் அடிப்படையிலேயே வியல் – வியர் – வேர் என இச்சொல் உருவானது. பெயர் – பேர் என்பதுபோல், வியர் – வேர் ஆனது.

மரம், செடி, கொடிகளைத் தாங்கி, வியலித்து வளர்ந்து நிற்கின்ற நிலைத்திணை (தாவரங்கள்) களின் வேர்கள்போலவே, மொழியின் சொற்கள் பலவற்றையும் தாங்கி நிற்கின்ற மூலச்சொற்களை நாம் வேர்ச்சொற்கள் என்கிறோம். ஆங்கிலத்திலும் இவ்விரண்டின் வேரினையும் *Root* என்ற ஒரு சொல்லால் வழங்குவது குறிப்பிடத்தக்கது.

### தமிழில் வேர்ச்சொல் ஆய்வின் தோற்றம்

தமிழின் முழுமுதல் இலக்கணநூல், தொல்காப்பியம். இந்நூலில், வேர்ச்சொல் ஆய்வுக்கான பல தரவுகள் உள்ளன. தொல்காப்பிய உரியியல் பகுதிகள் பலவும் இச்செய்திகள் கொண்டவை.

'அமர்தல் மேவல்' என்பது, ஓர் உரியியல் நூற்பா. அமர்தல் என்னும் சொல்லிற்குப் பொருந்துதல் என்பது பொருள். அமர்தல் சொல்லின் அடிப்பகுதி, 'அம்' என்பதாகும். இதன் அடிப்படையிலேயே ஒன்றோடொன்று பொருந்தி வளரும் மூங்கில் அம் – அமை எனப்பட்டது. 'ஆடமை புரையும் வனப்பில் பணைத்தோள்' என்ற குறுந்தொகைப் (131) பாடலில் ஆடுகின்ற மூங்கில், (ஆடு + அமை ) ஆடமை எனப்பட்டது.

சோற்றுஉருண்டையைக் குறிக்கும் ஒரு தமிழ்ச்சொல், 'அமலை'. இச்சொல்லும் அம் – அமல் – அமலை எனப் பல சோற்றுப் பருக்கைகள் பொருந்தியதால் தோன்றிய பெயரேயாகும். இரு நாட்டுப் படைவீரர்கள் திரண்டு நின்று போர் செய்தலை 'அமர்' எனவும், போர் நிகழும் இடம் – அமர்க்களம் எனவும் அழைக்கப்படும். இங்கு வந்த 'அமர்' சொல்லும்

'அம்' என்னும் கூட்டப்பொருள் வேரிலிருந்து உருவானவையே. புளி, மிளகாய் போன்ற பொருள்களை வைத்து, நெருக்கி அரைக்கும் கல், அம்மிக்கல். இவ்வாறெல்லாம் 'அம்' ஆகிய பொருந்துதற் பொருள் வேர், பொருந்தற் பொருளில் இணைந்திருப்பதைத் தேவநேயப் பாவாணர் நிரல்பட விளக்குவார்.

## தமிழும் திராவிட மொழிகளும்

தமிழையும் தமிழுடன் மிக நெருக்கமான உறவுடைய தென்னக மொழிகளையும் முதற்கண் இணைத்து ஆய்வு செய்தவர், கால்டுவெல். தென்னக மொழிகளில் தமிழே மூத்தது, முதன்மையானது என்பதைக் கால்டுவெல் நிறுவினார். பாவாணர், தமிழைத் 'திரவிடத் தாய்' என்றே குறித்துத் தனிநூலும் எழுதினார். தமிழுக்கு மிக நெருக்கமான திராவிட மொழிகளின் வரலாற்றையும் அவற்றின் சொற்களையும் மூலமொழியாகிய தமிழுடன் உறவுபடுத்தி ஆய்வதனால் மட்டுமே நல்விளக்கம் பெறமுடியும்.

## சேரல் – கேரல் – கேரலன் – கேரளன்

சங்க இலக்கியத்தில் மலைநாடு, 'சாரல்நாடு' எனச் சொல்லப்படுகிறது. சாரல் என்னும் இச்சொல், 'சேரல்' எனத் திரிந்து, மலைநாட்டு அரசர்களைக் குறித்துள்ளது. களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல், குடக்கோ இளஞ்சேரல் போலச் சங்க காலத்திலேயே அரசர்கள் பெயரில் இச்சொல் வழக்கு பெற்றுள்ளது. சேரல் என்னும் இச்சொல், பிறகு 'சேரலன்' எனத் திரிந்தது. சீர்த்தி – கீர்த்தி; செம்பு – கெம்பு போல் சகர, ககர மாற்றத்தில் 'சேரலன்' பிறகு, 'கேரலன்' ஆனது. மங்கலம் – மங்களம்; மெல்ல – மெள்ள போல ல – ள போலிமரபில் கேரலம் – கேரளம் ஆனது. இக் கேரளம் சொல்லே இன்று 'கேரளா' (KERALA) எனப்படுகிறது.

புழை என்பது, 'துளையை'க் குறிக்கும் தமிழ்ச்சொல். நீர் ஓடும் துளையுள்ள இடமே புழைக்கடை. பேச்சுவழக்கில், இப் புழைக்கடை, புழக்கடை எனப்படும். உள்துளையுடைய காய், 'புழல்காய்'. அதுவே, பிறகு 'புடல்காய்' ஆனது. நாழி + உரி = நாடுரி எனத் திரியுமென்பார் தொல்காப்பியர். ழகரம் – டகரமாகத் திரிந்த அதே போக்கில்தான் புழல்காய், தமிழில் புடல்காய் ஆனது. இப் புடல்காய், புடலங்காய் – பொடலங்காய் - பொள்ளங்காய் எனவும் மக்கள் வழக்கில் பல திரிபுகளில் வழங்குகிறது.

'புல்' என்னும் ஒரு வேர்ச்சொல்லுக்குத் துளை என்பது பொருள். தொல்காப்பியர், நிலைத்திணைகளைப் புல், மரம் என இரண்டாகப் பிரித்தார். உள்துளை நிலைத்திணைகளே புல்வகை என்றானது. இப் 'புல்' சொல், புல் + து = புற்று எனவும், புல் – பொல் – பொல் + து – பொற்று – பொற்றல் – பொத்தல் எனவும் புல் – புள் – புளு – புளுகு எனவும் புல் – புள் – புளு – புழு – புழை எனவும் எல்லாம் பலப்பல துளை என்னும் பொருள்தரும் சொற்களை அதன்போக்கில் ஈன்றுள்ளது. மலையாளமொழி, புடல் – புடலை – புடலங்காய் என்னும் தமிழ் வழக்கினைப் 'படோல்'எனக் கூறுகிறது.

மலையாளத்தில் மட்டுமல்லாமல், பிற திராவிடமொழிகளிலுள்ள சொற்களுக்கும் உரிய முழுப்பொருளையும் வேர்ப்பொருளையும் அறிய, தமிழே பெருந்துணையாக உள்ளது. இதன் உண்மைத்தன்மையைப் பர்ரோ, எமினோ ஆகிய மேல்நாட்டு மொழியியல் அறிஞர்கள் ஆய்ந்து தொகுத்துரைத்த 'திராவிட மொழிகளில் ஒப்பிலக்கண வேர்ச்சொல் அகராதி' (Dravidian Etymologjcal Dictionaries – Burrow & Emeneau) நூல்வழி காணலாம்.

தமிழின் செவ்வாம்பல், 'கெம்பாவல்' எனவும், செவ்வாழை – 'கெம்புபாளெ' எனவும், பாம்பு – 'ஹாவு' எனவும், பல்லி – 'ஹல்லி' எனவும் கன்னடத்தில் திரிந்துள்ளன. இக் கன்னட வழக்குகளின் உண்மைப்பொருளைத் தமிழுடன் உறவுபடுத்தித்தான் அறியமுடியும்.

தம்முன், தம்பி என்பன தமிழ்ச்சொற்கள். தன்முன் பிறந்தவன் – தம்முன்; தன்பின் பிறந்தவன் – தம்பி. தெலுங்கு, தம்பியைத் 'தம்முடு'என்கின்றது. குதித்தோடும் குதிரையை அதே தெலுங்கு, 'குர்ரமு' என்கிறது. ஊசல் – ஊஞ்சல் என்பன நல்ல தமிழ்ச்சொற்கள். தமிழின் ஊஞ்சலைத் துளு, 'உஜ்ஜாலு' என்றுரைக்கும்.

## இந்தோ ஐரோப்பிய வேர் நானூற்று அறுபத்தொன்று

உலகின் மிகப்பெரிய மொழிக்குடும்பம், இந்தோ – ஐரோப்பியம். எழுநூற்று எழுபது கோடிக்கும் மேற்பட்ட உலக மக்கள் தொகையில், நானூறு கோடிக்கும் மேற்பட்டோர் இந்தோ ஐரோப்பியம் பேசுவோர். இக்குடும்பமொழிகள், நூற்றுக்கும் மேற்பட்டனவாக உலகில் உள்ளன. இம்மொழிகள் யாவற்றிலும் வழங்கும் சொற்கள் கோடிக்கணக்கில் இருக்கும். ஆயின், இக்கோடிக்கணக்கான இந்தோ ஐரோப்பிய மொழிகளின் சொற்களுக்கும் நானூற்று அறுபத்தொன்றே வேர்ச்சொற்களாக உள்ளன என்பார், ஆங்கில வேர்ச்சொல் அகராதி அறிஞர் மாமேதை கீற்று (Walter Skeat). இதன்வழி, வேர்ச்சொற்கள் நிலையான எண்ணிக்கை உடையன என்பதையும் அவற்றிலிருந்தே சொற்கள் காலந்தோறும் பெருகிப் பெருகி உருவாகின்றன என்பதையும் நம்மால் அறியமுடிகிறது.

உலக மொழிகள் பலவற்றையும் வேர்ச்சொல் ஆய்வின்மூலம் மொழியறிஞர்கள் இன்று ஒன்றாக்கிக் காண்கின்றனர். அவ்வகை ஆய்வின் முடிவாக, உலகமொழிக்குடும்பங்களை ஒரு பெருங்குடும்பத்தில் அவர்கள் அடக்கிவிடுகின்றனர்.

இந்தோ ஐரோப்பிய மொழிகள் அனைத்திற்கும் உரியனவாகக் காட்டப்பட்டுள்ள வேர்ச்சொற்கள், பல்வேறு குடும்ப மொழிகளுக்கும் உரியனவாகப் பொருந்தியுள்ளன. திராவிடமொழிக் குடும்பங்களுக்குரிய வேர்ச்சொற்கள் எனப்படுவன பலவும், இந்தோ ஐரோப்பிய மொழிகளின் வேர்களுடனும் பொருந்தியிருப்பதைக் கால்டுவெல் முதலான அறிஞர்கள் உறவுபடுத்தி ஆய்ந்துள்ளனர்.

**அறிவோம் தெளிவோம்**

**கூழாங்கல்:** மலைமேலிருந்து ஆற்றிலும் அருவியிலும் அடித்து வரப்படும் கூரான கற்கள், பல இடங்களிலும் மோதி மோதிக் குழைவாகிவிடுகிறது. இக்குழைவான கல்லே கூழ் + ஆம் + கல் = கூழாங்கல் என்றானது.

## வேர்ச்சொல் ஆய்வுக் கோட்பாடு

இன்றைய உலக மாந்தர் அனைவரும், 'மதிமாந்தர்' (Homo sapiens) எனப்படுவர். இவர்களின் மூலஇடம் இன்றைய ஆப்பிரிக்கா. ஒன்றரை இலக்கம் ஆண்டுகளுக்குமுன், இவர்கள் ஆப்பிரிக்காவிலிருந்து புறப்பட்டு, உலகம் முழுவதும் பரவினர். எழுபதாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இவர்கள் தென்னிந்தியாவிற்கு வந்துவிட்டனர். இதன்காரணமாகவே தென்னிந்தியா, மாந்தர்தம் மூலமொழி தோன்றிய இடமாக இருக்கலாம் என வேர்ச்சொல் ஆய்வறிஞர்கள் இன்று கருதுகின்றனர். மொழி தோன்றிய காலம் 60 – 70 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் என்னும் கருத்தினையும் இவ்விடத்தில் பொருத்திப் பார்க்கலாம்.

வேர்ச்சொல் ஆய்வறிஞர்கள், மூலமொழி எது என்பதை இருகோட்பாட்டின் மூலம் ஆய்வுசெய்து வருகின்றனர். ஒன்று, ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் பேசப்படுகின்ற மொழிகள் யாவற்றிற்கும் உரிய மூலமொழியைக் கண்டறிவது. இரண்டு, உலகம் முழுவதும் பேசப்படுகின்ற மொழிகளுக்கு உரிய மூலமொழியைக் கண்டறிவது. முதலாவதை 'நாசுதிராதிக்' (Nostratic Studies) ஆய்வு என்றும் இரண்டாவதைத் 'தாய்மொழி' (Mother Tongue studies) ஆய்வு என்றும் கூறுகின்றனர்.

*Mother Tongue accepted Article.*

*Nostratic As seen from South India (Article)*

*– Stephan Hillyer Levitt, G. Arasendiran and P. Ramanathan*

## நிறைவுரை

தமிழின் வேர்ச்சொற்கள் தமிழை வளர்த்ததுடன் மட்டுமல்லாமல், உலக மொழிகளின் வேர்ச்சொற்களுடனும் ஒன்றுள் ஒன்றாகிக் கலந்திருக்கின்றன. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்பதற்கேற்பத் தமிழ் வேர்ச்சொல் ஆய்வு, உலக மக்களை உறவினராக ஆக்கிக்காட்டுகிறது; உலக ஒற்றுமைக்கும் பெருந்துணை புரிகிறது.

## கண்ணாடி

### கீழ்க்காண்பனவற்றுள் பொருத்தமான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. 'வியலென் கிளவி' சுட்டும் பொருள்

   அ) அகலம் ஆ) நீளம் இ) ஆழம் ஈ) உயரம்

2. தென்னக மொழிகளில் தமிழே மூத்தது, முதன்மையானது என நிறுவியவர்

   அ) பாவாணர் ஆ) கால்டுவெல் இ) கீற்று ஈ) எமினோ

3. வேர்ச்சொல் ஆய்வுக்கான தரவுகளுள்ள தொல்காப்பிய இயலைத் தேர்ந்தெடுக்க.

   அ) பெயரியல் ஆ) வினையியல் இ) இடையியல் ஈ) உரியியல்

4. பின்வரும் கூற்றையும் அதற்குரிய காரணத்தையும் படித்துச் சரியான விடைக்குறிப்பைத் தேர்ந்தெடுக்க.

   கூற்று : ஒன்றோடொன்று பொருந்தி வளர்வதால், மூங்கில் 'அமை' எனப்பட்டது.

   காரணம்: 'அம்' என்னும் வேர்ச்சொல்லிற்குப் பொருந்துதல் என்பது பொருள்.

   அ) கூற்று சரி, காரணம் தவறு ஆ) கூற்று, காரணம் இரண்டும் தவறு

   இ) கூற்று சரி, காரணம் போதுமானதன்று ஈ) கூற்று, காரணம் இரண்டும் சரி

5. புடல்காய் என்ற சொல்லுக்குரிய வேரைத் தேர்ந்தெடுக்க.

   அ) புடல் ஆ) புழல் இ) புழை ஈ) புடலை

### குறுவினா

1. இயல்பான அகராதி – வேர்ச்சொல் அகராதி வேறுபடுத்துக.
2. வேர்ச்சொற்கள் என்று எவற்றைக் கூறுகிறோம்? ஏன்?
3. 'அமலை' என்னும் சொல்லின் வேர்மூலம் யாது?
4. 'நாசுதிராதிக் ஆய்வு' குறிப்பு வரைக.
5. வேர்ச்சொல் ஆய்வினால் விளையும் நன்மைகள் இரண்டை எழுதுக.

### சிறுவினா

1. வேர்ச்சொல் ஆய்வின் தோற்றம் பற்றி எழுதுக.
2. இயல்பான அகராதியும், வேர்ச்சொல் அகராதியும் 'உவரி' என்னும் சொல்லுக்கு எவ்வாறு விளக்கமளிக்கின்றன?
3. வியல் – வியர் – வேர் விளக்குக.
4. வேர்ச்சொல் ஆய்வு – ஒரு விருப்பமான ஆய்வு எனப் பாவாணர் எவ்வாறு நிறுவுகிறார்?
5. இந்தோ – ஐரோப்பிய வேர்ச்சொற்கள் குறித்து அறிஞர் கீற்று கூறுவது யாது?

### நெடுவினா

1. தமிழ், பிற திராவிட மொழிகளுடன் வேர்ச்சொல் ஆய்வில் எவ்வாறு பொருந்தியுள்ளது? எடுத்துக்காட்டுகளுடன் விளக்குக.
2. 'சாரல்' என்னும் சொல் எவ்வாறெல்லாம் திரிந்து வழங்கியது என்பதை விளக்குக.

# திறனாய்வு

## அறிமுகம்

திறனாய்வும் இலக்கியம்போல ஒரு கலை எனவும் வாசிக்கப்பட்ட பனுவல்களில் மறைந்திருக்கும் உண்மைகளைக் கண்டு பிடித்துச் சொல்லும் அறிவுத்துறை எனவும் இரண்டு கருத்துகள் உள்ளன. இலக்கியவளம் நிறைந்த எல்லா மொழிகளிலும் திறனாய்வும் குறிப்பிடத்தக்க பணியைச் செய்கிறது. இலக்கியத்தின் வளர்ச்சிக்கும் சிந்தனை வளர்ச்சிக்கும் திறனாய்வு பெரிதும் துணை செய்கின்றது. தமிழில் தொல்காப்பியர் காலம் தொடங்கி, இடைக்கால உரையாசிரியர்கள் வழியாகத் திறனாய்வுமுறை செயல்பட்டு வருகிறது.

இன்றைய காலகட்டத்தில், தனித் துறையாக உருவெடுத்துள்ள திறனாய்வு, மொழிக் கல்வியில் இன்றியமையாத இடத்தைப் பெறுகிறது. ஆகவே, மொழியின் இலக்கணத்தையும் இலக்கியத்தையும் கற்க விரும்பும் மாணவர்கள், திறனாய்வு பற்றியும் அறிந்துகொள்ள வேண்டும்.

## திறனாய்வு – விளக்கம்

'திறனாய்வு' என்னும் சொல், நன்கு அறிமுகமான சொல்தான். ஏதேனும் ஒரு பாடல் அல்லது கவிதை குறித்து நயம் பாராட்டியிருப்பீர்கள். துணைப்பாடக்கதைகளைப் பற்றி, உங்கள் கருத்துகளைக் கூறியிருப்பீர்கள். நீங்கள் செய்த இந்தச் செயல்பாடுகள் எல்லாம் திறனாய்வில்தான் அடங்கும். ஒரு திரைப்படம் பார்க்கிறீர்கள் என்று வைத்துக்கொள்வோம். அந்தப் படம் எப்படி இருந்தது என்று யாரேனும் உங்களிடம் கேட்டால் என்ன சொல்வீர்கள்? திரைப்படத்தின் கதையமைப்பு, நடிகர்களின் நடிப்பு, இசையின் தன்மை, பாடல்கள் போன்ற பல செய்திகளை உங்களை அறியாமலேயே ஆராய்ந்து கூறுவீர்கள் அல்லவா? நீங்கள் செய்த ஆய்வுதான், திறனாய்வு. இன்னும் எளிதாகக் கூறவேண்டுமானால், உங்கள் நண்பரைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள் என்று யாரிடமாவது கேட்டுப் பாருங்களேன். உடனே அவர்களைப்பற்றி எல்லாவற்றையும் அலசி ஆராய்ந்து கூறிவிடுவார்கள்.

ஒரு பாடலைப் பற்றி இலக்கியநயம் பாராட்டுவதும் ஒரு நூலைப் பற்றி மதிப்புரை எழுதுவதும் திறனாய்வுகளே. இலக்கியப் பரப்பில் 'திறனாய்வு' என்ற சொல்லும் நாளிதழ் போன்ற ஊடகங்களில் 'விமர்சனம்' என்ற (வடமொழி) சொல்லும் வழக்கிலுள்ளன. திறனாய்வு என்பதைப்பற்றி அறிஞர்கள் என்ன கூறியிருக்கிறார்கள் என்று பார்க்கலாம்.

## திறனாய்வு –சில வரையறைகள்

விக்டர் யூகோ : "இலக்கியம் சிறந்ததா அல்லது குறையுடையதா என்பதைக் காண்பதே திறனாய்வாகும்".

ஸ்பிங்கான் : "கலைஞன் எதைக் கூற முயல்கிறான்? அதில் எங்ஙனம் அவன் வெற்றி பெறுகிறான்? அவன் கூறுவது தகுதியுடையதுதானா? இவ்வினாக்களுக்கு விடை காண்பது திறனாய்வாகும்".

மேத்யூ ஆர்னால்டு : "உலகில் சிறந்ததென்று உணர்ந்து சிந்திக்கப் பெறுவதைத் தன்னலமற்ற முறையில் அறிந்து பரப்புவதற்கு முயற்சி செய்வது திறனாய்வாகும்".

எலியட் : திறனாய்வென்பது, ஒருபொதுமை முயற்சியாகத் திறனாய்வாளனைக் காட்டுவதாக இல்லாமல் கலைப்படைப்பைக் காட்டுவதாக, சமூகத்தின் கலைச்சுவையைச் சரியான நெறியில் உருவாக்கி வளர்ப்பதாக இருக்க வேண்டும்".

அ. ச. ஞானசம்பந்தம் : "திறனாய்வு என்று கூறினால், 'முடிவு கூறல்' அதனுள் அடங்கியிருத்தல் கண்கூடு".

இனி,திறனாய்வின் வகைகள்,கோட்பாடுகள், திறனாய்வாளர்கள், அவர்களுக்குரிய தகுதிகள், திறனாய்வினால் விளையும் பயன்கள் ஆகியன குறித்துச் சுருக்கமாகக் காணலாம்.

## திறனாய்வுக்குரிய களம் – இலக்கியம்

தற்காலத்தில் திறனாய்வு என்ற சொல்லிற்குப் பரந்து விரிந்த பொருளுண்டு. மொழியியல், உளவியல், மானிடவியல், சமூகவியல், வரலாறு, அறிவியல் முதலிய பல துறைகளின் தாக்கத்தை இன்றைய இலக்கியத் திறனாய்வியலில் காணலாம் எனினும், திறனாய்வு என்னும் சொல் தனித்தியங்கும் ஓர் இலக்கியப்பிரிவையே குறிக்கிறது என அறிஞர் க. கைலாசபதி கூறுகிறார்.

## இலக்கியம் – அச்சிடப்பெற்றவையும் அச்சில் இடம்பெறாதவையும்

ஓர் இலக்கியத்தைத் திறனாய்வு செய்வதற்குமுன், அஃது இலக்கியம்தானா என அறிந்துகொள்ள வேண்டுமல்லவா! அப்படியானால் எது இலக்கியம்? எழுதப்பட்டதெல்லாம் இலக்கியமா? அல்லது அச்சிடப்பெற்றவையெல்லாம் இலக்கியமா?

எடுத்துக்காட்டாக விண்ணப்பம், தேர்வு, பஞ்சாங்கம், நாட்குறிப்பு, அறிவிப்பு, விளம்பரம், கடிதம் போன்றவையெல்லாம் எழுதப்படுகின்றன. அவ்வாறெனில் இவற்றை இலக்கியம் எனக்கூறுவதில்லை.அச்சிடப்பெற்று நாள்தோறும் வெளியாகும் செய்தித்தாள்களை இலக்கியம் என வகைப்படுத்துவதில்லை. ஏன் தெரியுமா? இவை செய்திகளைத் தெரிவிக்க மட்டுமே பயன்படுகின்றன. இவற்றைப் படிப்பதால் உங்களுக்குஎந்தவொருகற்பனையோ உணர்ச்சியோ எழுவதில்லை. அறிவியல் உண்மைகளும் கணக்கு முதலான புள்ளியியல் விவரங்களும்கூட அறிவூட்டவும் ஆர்வத்தைத் தூண்டவும் செய்கின்றன. ஆனால், அவையும் இலக்கியம் ஆகா.

அப்படியென்றால் எது இலக்கியம்? ஒரு நூலைப் படிக்கும்போது நம் மகிழ்ச்சியை மிகுவிப்பதாக அமைவதே இலக்கியம். அது கவிதையாக, செய்யுளாக, கதையாக, நாடகமாக, உரைநடையாக, கட்டுரையாக எனப் பல வடிவங்களில் அமையலாம். அவையாவும் அறிவையொட்டி மட்டும் அமைவதல்ல; கற்பனை மிகுந்த உணர்ச்சியையொட்டியும் அமைவனவாகும். மனிதனின் மொழியோடு தொடர்புகொண்டு அவனது சிந்தனைக்கோ, கற்பனைக்கோ, உணர்ச்சிக்கோ விருந்தாக அமைவன எல்லாம் இலக்கியங்களே. இவை அச்சிடப்பெற்று இலக்கிய எழுத்துகளாய் மிளிர்கின்றன என்றாலும், அச்சிடப்பெறாத சிலவற்றைக்கூட நாம் இலக்கியங்கள் எனக் கூறுகிறோம்.

ஒரு மொழியில் பேச்சும் உண்டு, எழுத்தும் உண்டு. எழுத்து வடிவம் பெறாது, பேச்சில் வழங்கப்படும் நாட்டுப்பாடல்கள், விடுகதைகள், பழமொழிகள், ஆகியவற்றைத்தாம் நாம் இங்கே அச்சிடப்பெறாத இலக்கியங்கள் என்று குறிப்பிடுகிறோம். இவையும் இலக்கிய வரம்புக்குள்தாம் அமைகின்றன. நாம் ஏன் இவற்றைத் தெரிந்துகொள்ள வேண்டும்? இலக்கியத் திறனாய்வு செய்ய வேண்டுமென்றால் இலக்கியங்களைப் பற்றியும் அவற்றின் வடிவம், கருத்து, தன்மை ஆகியவற்றைப் பற்றியும் நன்கு அறிந்திருக்க வேண்டும்

திறனாய்வுக்குரிய களத்தையும் எவை இலக்கியம் என்பதையும் அறிந்துகொண்ட நிலையில், உலக அளவில் இலக்கியங்களின் பொதுஇயல்புகளைக் குறித்துப் பேசும் அடிப்படைக் கலைச்சொற்கள் சிலவற்றை அறிந்துகொண்டு,திறனாய்வுக்குள் நுழையலாம். இலக்கிய வடிவங்கள் எல்லாவற்றிலும் இருக்கும் தன்மைகளைக் கொண்டு இலக்கியங்கள் பின்வருமாறு வகைப்படுத்தப்படுகின்றன. அவை:

1. செவ்வியம்
2. புனைவியம்
3. இயற்பண்பியம்
4. நடப்பியம்
5. நடப்பியம் அல்லாதன

இவ்வைந்து வகைப்பாடுகளைச் சுருக்கமாக அறிந்துகொள்ளலாம்.

## செவ்வியம் (Classicism)

தொன்மையும் குறிப்பிட்ட இலக்கிய வரையறைகளைப் பின்பற்றுவதும் செவ்விய இலக்கியங்களின் அடையாளமாக இருக்கின்றன. தமிழின் செவ்விய இலக்கியங்களான அக, புறப்பாடல்கள் தொல்காப்பியம் கூறும் இலக்கிய வரையறைகளைப் பின்பற்றியுள்ளன என்பதைக் கவனத்தில் கொண்டால் செவ்வியல் தன்மை என்பது புரியலாம்.

## புனைவியம் (Romanticism)

கற்பனையின் அளவும் கதைமாந்தர்களின் பண்புகளும் மிகைப்படுத்தப்பட்ட தன்மையில் இருக்கும் இலக்கியங்கள், புனைவிய இலக்கியங்களின் அடையாளங்கள். தமிழில் எழுதப்பெற்ற காப்பியங்கள், சிற்றிலக்கியங்கள் போன்றன புனைவியக்கூறுகள் கொண்டவை.

## இயற்பண்பியம் (Naturalism)

கற்பனையின் அளவைக் கைவிட்டுவிட்டு, நடப்பதை அப்படியே எழுதிக்காட்டும் போக்கும், அதில் வெளிப்படும் திறனாய்வுப்பார்வையும் இயற்பண்பிய இலக்கியங்களின் அடையாளமாகக் கொள்ளத்தக்கன.

தமிழில் எழுதப்பெற்ற பள்ளு இலக்கியங்கள், தனிப்பாடல்கள் தொடங்கிப் புனைகதைகள் பலவற்றில் இயற்பண்பியக் கூறுகள் வெளிப்பட்டுள்ளன.

## நடப்பியம் (Realism)

இயற்பண்பியத்தின் மறுதலையாக உருவானதே நடப்பியம். நடந்த எல்லாவற்றையும் காலம், இடம் என்ற அளவில் முழுமையாக எழுத முடியாது.

ஆகவே, நடந்தனவற்றில் உண்மையின் பக்கமாக, எது சரியானது எனச் சுட்டிக்காட்டும் போக்கே இலக்கிய உருவாக்கத்தின் அடிப்படையாக அமையவேண்டும் என்று, வலியுறுத்தியவர்கள் உருவாக்கிய இலக்கியப் போக்கே நடப்பியம். அதிலும் மனித நேய நடப்பியம், விவரண நடப்பியம், ஆவண நடப்பியம், சமத்துவ நடப்பியம், மிகை நடப்பியம் எனப் பல வகைகள் உண்டு.

## நடப்பியம் அல்லாதன (Non–realism)

நடப்பிய இலக்கியத்தை மேலும் சிறப்பானதாக ஆக்கும் முயற்சியில் அதன்மீது பலவகையான விமரிசனங்கள் எழுப்பப்பட்டன. அவை ஒவ்வொன்றும் தனித்தனியான இலக்கியப் போக்குகளாக ஐரோப்பியத் திறனாய்வாளர்களால் வகைப்படுத்தப்படுகின்றன. குறியீட்டியம், அபத்தவியம், வெளிப்பாட்டியம், மனப்பதிவியம் எனப் பலவகை உண்டு. அவற்றை மேல் வகுப்புகளில் விரிவாக அறிந்துகொள்ளலாம்.

## திறனாய்வாளர்கள்

இலக்கியம் எவ்வளவு பழைமையானதோ, அவ்வளவு பழைமையானது அதனைப் பற்றிய திறனாய்வும் என அறிஞர்கள் கூறுகின்றனர். யாராவது ஒருவர் ஒரு பாடலையோ, ஓர் உரைநடையையோ எழுதியிருப்பார். அதனைப் படிப்பவர், ஆஹா, நன்றாக உள்ளது அல்லது மட்டமாக உள்ளது என்று கூறும்போதே திறனாய்வாளராகவும் அவர் மாறிவிடுகிறார். அதே வேளையில் படிப்பவர் எல்லாரும் திறனாய்வாளராக மாறுவதில்லை.

திறனாய்வாளர், படைப்பவருக்கும் படிப்பவருக்கும் இடையே ஒரு பாலமாக விளங்குகிறார். ஏன் தெரியுமா? ஓரிலக்கியம் படைக்கப்பட்டவுடன் படிக்கப்படலாம் அல்லது பல ஆண்டுக்குப் பின்னரும் படிக்கப்படலாம். அவ்விலக்கியம் உருவான காலச்சூழல், பின்னணி ஆகியவற்றைத் தெள்ளத் தெளிவாகத் திறனாய்வாளர்தாம் வெளிப்படுத்தியிருப்பார். இல்லையெனில், அவ்விலக்கியத்தைப் படிப்பவருக்குக் குழப்பம் ஏற்படும்.

எடுத்துக்காட்டாகப் பாரதியார் பாடல்கள் தோன்றியதன் பின்னணி, விடுதலை உணர்வை வேண்டி நின்ற காலமாக இருந்தது. இக்காலத்தில் அத்தகைய சூழல் இல்லை. எனவே, படைப்புகளை அக்காலத்திய சூழலோடு பொருத்தி, ஆய்வுசெய்பவர்தாம் திறனாய்வாளர். அவர், படைப்பாளிக்கும் படிப்பவருக்கும் இடையேயுள்ள தலைமுறை இடைவெளிகளையும் காலவேறுபாடுகளையும் குறைக்கிறார்.

மற்றோர் எடுத்துக்காட்டு. எழுத்தாளர் புதுமைப்பித்தன், திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்தவர். அவருடைய கதைகளில், அந்த மாவட்டத்து வட்டாரச் சொற்கள், பழக்கவழக்கங்கள், மொழிநடைகள் இடம்பெற்றிருக்கும். வேறு மாவட்டத்தைச் சேர்ந்தவர்கள், அக்கதைகளைப் படிக்கும்போது, அவர்களுக்குச் சில சொற்களுக்குப் பொருள் தெரியாமல் இருக்கலாம் அல்லது கடினமாகத் தோன்றலாம். இத்தகைய இடர்ப்பாடுகளையெல்லாம் திறனாய்வாளரே நீக்குகிறார்.

அதனால்தான் அவர், படைப்பாளரையும் படிப்பவரையும் இணைப்பதற்குப் பாலமாகச் செயல்படுகிறார். ஆகவே, ஓர் இலக்கியத்தைப் படைப்பவர், அதனைப் படிப்பவர், அதனைத் திறனாய்வு செய்பவர் ஆகிய மூவரும் ஒருவருக்கொருவர் தொடர்பு கொண்டுள்ளனர். ஒரு முக்கோணத்தின் மூன்று பக்கங்களாக இவர்களைக் குறிப்பிடலாம்.

அடுத்ததாகத் திறனாய்வு செய்வதற்கு என்னென்ன தகுதிகள் வேண்டும் எனப் பார்ப்போமா?

## திறனாய்வாளர்க்குரிய தகுதிகள்

ஓர் இலக்கியத்தைப் படைப்பது எவ்வளவு கடினமானதோ, அவ்வளவு கடினமானது திறனாய்வு. ஏன்? திறனாய்வு செய்வதற்குரிய தகுதி இல்லாதவர்கள், இலக்கியத்தை மதிப்பீடு செய்தால், அந்தத் திறனாய்வு தரமிழந்து போகும். அதனால்தான் திறனாய்வாளர்கள், சில அடிப்படைத்தகுதிகளைப் பெற்றிருக்க வேண்டும்; சில விதிமுறைகளுக்குட்பட்டு நடக்கவேண்டும்.

*1. நூல் புலமை:* திறனாய்வாளர், தாம் திறனாய்வு செய்யும் இலக்கியத்தோடு பிற இலக்கியங்களையும் ஒப்பிட்டுக் கூறவேண்டியிருப்பதால், அவருக்குப் பல நூல்களைப் பற்றிய ஆழ்ந்த புலமை வேண்டும்.

*2. விரிந்த சிந்தனை:* இலக்கியத்தைப் பன்முறையிலும் ஊடுருவிப் பார்ப்பதற்குத் திறனாய்வாளரின் சிந்தனைப் பரப்பு விரிதல் வேண்டும். இலக்கியத்தில் சொல்லப்பட்ட கருத்துகளை, அது சொல்லப்பட்ட முறையிலேயே புரிந்துகொள்ள இச்சிந்தனை உதவும்.

*3. பரந்த அறிவு:* இலக்கியக் கூறுகளைத் தொடர்புபடுத்தி அறிய, பரந்த அறிவு தேவை. திறனாய்வாளர், தாம் எடுத்துக்கொண்ட பொருள் கவிதை, புதினம், சிறுகதை, நாடகம் என எதுவாக இருந்தாலும், அப் பொருள் தொடர்பான பல நூல்களையும் கற்று, புலமை பெற்றவராய் இருத்தல் வேண்டும்.

*4. இலக்கியப் பயிற்சி:* எந்த ஒரு நூலிலும் உயிர்ப்புடைய பகுதிகளும் பொதுவான பகுதிகளும் இருக்கும். அந்நூலைப் பன்முறை படித்தால்தான், அவ்விரு பகுதியையும் பிரித்தறிய இயலும். ஆகையால், திறனாய்வு செய்பவர், குறிப்பிட்ட இலக்கியத்தில் பயிற்சி பெற்றிருத்தல் இன்றியமையாதது.

*5. நடுவுநிலைமை:* திறனாய்வாளர், தம் விருப்புவெறுப்புக்கு இடமளிக்காதவாறு திறனாய்வு செய்தல் வேண்டும். தம்முடைய நோக்கத்தை இலக்கியத்தில் புகுத்தாமல், படைப்பாளியின் நோக்கத்தைத் தெளிவாகப் புரிந்துகொண்டு திறனாய்வு செய்யவேண்டும். உள்ளது உள்ளபடி, நிறைகுறைகளையும் சேர்த்தே மதிப்பிட வேண்டும். வள்ளுவர் வாய்மொழிக்கேற்பச் சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் இருத்தல் வேண்டும். அதே வேளையில் நூலின் குணம், குற்றம் ஆகிய இரண்டையும் ஆராய்ந்து, அவற்றுள் எது மிகுதியாக உள்ளதோ, அதனை எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

மேற்கண்ட தகுதிகளோடு, படைப்பாளியின் தனித்திறனை வெளிப்படுத்துதல், பொதுமக்களை இலக்கியத்தின் மீது ஆர்வம்கொள்ளச் செய்தல், இலக்கியம் ஆக்க விரும்புவோர்க்குத் தரமுள்ள படைப்புகளை உருவாக்க உதவுதல் போன்றவற்றையும் திறனாய்வாளர்க்குரிய தகுதிகளாகக் கூறலாம்.

## தமிழில் திறனாய்வு தொடக்கம்

தமிழில், பழங்காலத்திலேயே திறனாய்வின் தொடக்கநிலைக் கூறுகள் இருந்தன. தொல்காப்பியம் இலக்கியம்

எவ்வாறு உருவாக்கப்படுகிறது என்பதைப் பேசுகிறது. திறனாய்வு என்பது, இலக்கியம் பற்றிய கருத்துகளைப் புலப்படுத்தச் செய்கிறது என்றால், 'உரை' என்பது அத்தகைய பணியைச் செய்துள்ளது எனலாம் எனத் திறனாய்வாளர்கள் கூறுகின்றனர்.

### இருவகை உரைகள்

எவ்வகையான நூல்கள் என்பதன் அடிப்படையில், உரைகளை இரண்டாகக் கொள்ளலாம். ஒன்று, இலக்கண உரைகள். மற்றொன்று, இலக்கிய உரைகள். இலக்கணம், இலக்கியம் ஆகிய இரண்டிற்கும் உரை எழுதியவர்களின் எண்ணிக்கை மிகக்குறைவு.

நச்சினார்க்கினியர், தொல்காப்பியத்திற்கு உரை எழுதியுள்ளார். அதே வேளையில், பத்துப்பாட்டு என்னும் சங்க இலக்கிய நூலுக்கும் சீவக சிந்தாமணி என்னும் காப்பியத்திற்கும் உரை தந்துள்ளார்.

இலக்கண, இலக்கிய நூல்களின் உரையாசிரியர்கள், அந்நூல்களைப் பற்றி விளக்கமாக எடுத்துரைத்ததுடன், ஆய்வுநோக்கிலும் திறனாய்ந்து, தமது கருத்துகளைப் புலப்படுத்தியுள்ளனர்.

## திறனாய்வு வகைகள்

மனத்தாலும் அறிவாலும் அறியப்படும் ஒரு பொருளை, அழகுற உணர்த்தும் படைப்பாக்கம் அல்லது கலைத்திறன் என்பது இலக்கியம் எனப்படுகிறது. இது நோக்கம், தேவை முதலியவற்றின் கருவியாக உள்ளது. இத்தகைய இலக்கியம் தன்னகத்தே பல பண்புகளையும், பல வழிமுறைகளையும், பல கருத்துநிலைகளையும் கொண்டிருக்கிறது. அவற்றை ஆராயவும் விளக்கவும் திறனாய்வு உருவாகிறது.

இத்திறனாய்வு பல அணுகுமுறைகளையும் வகைகளையும் கொண்டுள்ளது. இவற்றைக் கண்டறிவது, திறனாய்வின் ஆழமான பண்புகளையும் பரந்துபட்ட நெறிகளையும் அறிவதற்குத் துணை செய்யும். ஏனெனில், திறனாய்வு என்பது, ஒற்றைப் போக்குக் கொண்டதன்று; பன்முகமான பண்புகளும் வழிமுறைகளும் கொண்டது. எனவே, திறனாய்வின் வகைகளை இங்கு அறிவது மிகவும் தேவையாகிறது.

திறனாய்வு செய்வதற்குரிய வழிமுறைகளின் அடிப்படையில், திறனாய்வு வகைகள் அமைகின்றன. பல இலக்கியங்களிலிருந்து அவற்றின் இன்றியமையாத பண்புகள் சிலவற்றை மட்டும் அடையாளங்காட்டுவது, ஒருவகை. குறிப்பிட்ட ஒரு கொள்கை அல்லது பண்புநிலையை அளவுகோலாகக் கொண்டு, அதனைப் பல இலக்கியங்களோடு பொருத்திப் பார்ப்பது, இன்னொருவகை. அதாவது, திறனாய்வு செய்வதற்குரிய வழிமுறை அல்லது செய்முறையைப் பேசுவது, திறனாய்வின் வகை என்று அறியப்படுகிறது.

திறனாய்வு வகைகள் பலவாக இருந்தாலும், அவற்றுள் மிக அடிப்படையானவை எனப் பேராசிரியர் தி. சு. நடராசன் தமது, 'திறனாய்வுக் கலை' என்னும் நூலில் குறிப்பிடுகிறார். அவை, பின்வருமாறு:

1. பாராட்டுமுறைத் திறனாய்வு
2. முடிபுமுறைத் திறனாய்வு
3. விதிமுறைத் திறனாய்வு
4. செலுத்துநிலை அல்லது படைப்புவழித் திறனாய்வு
5. விளக்கமுறைத் திறனாய்வு
6. மதிப்பீட்டுமுறைத் திறனாய்வு
7. ஒப்பீட்டுமுறைத் திறனாய்வு
8. பகுப்புமுறைத் திறனாய்வு

### பாராட்டுமுறைத் திறனாய்வு (Appreciative Criticism)

ஓர் இலக்கியத்தில் குறை காணாமல் அதன் நிறைகளை மட்டும் எடுத்துக்கூறுதல். எடுத்துக்காட்டாகக் கம்பராமாயணத்தைக் கூறலாம். இதனைப் பாராட்டிப் பல திறனாய்வு நூல்கள் வெளிவந்துள்ளன.

## முடிபுமுறைத் திறனாய்வு (Judicial Criticism)

சில வரையறைகளையும் விதிகளையும் அளவுகோலாகக்கொண்டு, குறிப்பிட்ட இலக்கியம் பற்றிய முடிபுகளைக் கூறுதல். எடுத்துக்காட்டாகத் தண்டியலங்காரம் குறிப்பிடும் காப்பியப் பண்புகளை விதிகளாகக்கொண்டு, மணிமேகலைக் காப்பியத்தின் அமைப்பையும் பண்பையும் மதிப்பிட்டு, முடிவு கூறுதல்.

## விதிமுறைத் திறனாய்வு (Prescriptive Criticism)

சில விதிகளைத் தாம் திறனாய்வு மேற்கொள்ளும் இலக்கியத்தில் அப்படியே பொருத்திக் காணல்.

அன்பின் ஐந்திணையில், 'தலைவனோ தலைவியோ சுட்டி ஒருவர்ப் பெயர் கொளப் பெறாஅர்' என்பது, தொல்காப்பிய விதி. இவ்விதியை நெடுநல்வாடையில் பொருத்திக் காண்கிறார் நச்சினார்க்கினியர். அந்நூலில், தலைவன் பெயர் சுட்டப்பெறவில்லைதான். ஆனால், 'வேம்பு தலையாத்த நோன்காழ் எஃகமொடு..' என்ற பாடலடியில், 'வேம்பு' என்பது, பாண்டிய மன்னர்களுக்குரிய அடையாள மாலை என வெளிப்படையாகக் கூறப்பட்டுள்ளது. ஆகையால், இஃது அகநூல் அன்று, புறநூல். இந்நூலின் பாட்டுடைத் தலைவன், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனே என்று நச்சினார்க்கினியர் உறுதியாகக் கூறுகிறார்.

## செலுத்துநிலை அல்லது படைப்புவழித் திறனாய்வு (Inductive Criticism)

எந்தப் படைப்பைத் திறனாய்வு செய்கிறோமோ, அந்தப் படைப்பின் வழியாகவே அதற்குரிய விதிகளை அமைத்துக்கொள்ளல்.

எடுத்துக்காட்டாகச் சிலப்பதிகாரத்தின் அடிப்படை அமைப்பையும் தனிச்சிறப்பையும் உற்றுநோக்கி, அப்படைப்புக்குரிய விதிகளை வருவித்தல். இது, செலுத்துநிலை அல்லது படைப்புவழித் திறனாய்வாகும்.

## விளக்கமுறைத் திறனாய்வு (Descriptive Criticism)

ஓர் இலக்கியப் படைப்பாளியையும், அவர் படைத்த இலக்கியத்தின் பல்வேறு கூறுகளையும் விளக்கமாக ஆய்வுசெய்தல்.

எடுத்துக்காட்டாகத் தொல்காப்பியப் பொருளதிகாரத்தைப் பற்றிய திறனாய்வு அதன் அமைப்பு, இயல்தோறும் பொருள் வைப்புமுறை, களவு, கற்பு ஆகியவற்றின் தனித்தன்மை, தமிழ் மரபுக்கேற்ற அமைப்பு ஆகியவற்றை விளக்கமாக எடுத்துரைத்தல்.

## மதிப்பீட்டுமுறைத் திறனாய்வு (Evaluative Criticism)

குறிப்பிட்ட இலக்கியத்தின் தரம், தகுதி, சிறப்பு, சீர்மை என்பனவற்றைப் பேசுவதோடு, அவ்விலக்கியத்தில் அமைந்திருக்கும் கூறுகளும், பண்புகளும், உண்மைகளும் இலக்கிய மதிப்பு உடையவை என ஆராய்ந்து கூறுதல்.

எடுத்துக்காட்டாகப் பாரதியாரின் 'குயில்பாட்டு' அவரைச் சிறந்த கவிஞர்களுள் ஒருவராகக் கருதச்செய்கிறது எனில், அதற்கான காரணங்களைச் சான்றுடன் காட்டுதல்.

## ஒப்பீட்டுமுறைத் திறனாய்வு (Comparative Criticism)

இருவேறுபட்ட இலக்கியங்களை எடுத்துக்கொண்டு, ஒப்பியல் முறையில் ஆய்வு செய்தல். அவ்வாறு ஒப்பிடும்போது, அவ்விரு இலக்கியங்களுக்குமிடையே ஓரளவாவது பொதுத்தன்மை இருத்தல் வேண்டும். ஒப்பீட்டுத் தளங்கள் பின்வருமாறு அமையலாம்.

- ஒரு நாட்டு இலக்கியத்துடன் பிற நாட்டு இலக்கியம்
- ஒரே படைப்பாளியின் வெவ்வேறு இலக்கியங்கள்
- ஒரே நாட்டிலுள்ள வெவ்வேறு மொழி இலக்கியங்கள்
- இலக்கிய நூலுடன் இலக்கிய நூல், இலக்கண நூலுடன் இலக்கண நூல். (இலக்கியத்துடன் இலக்கண நூலை

ஒப்பிடுதல் கூடாது.)

- வழிநூல் அல்லது மொழிபெயர்ப்பு நூலுடன் மூலநூல்.

### பகுப்புமுறைத் திறனாய்வு (Analyatical Criticism)

குறிப்பிட்ட இலக்கியத்தின் பண்புகளையும் கூறுகளையும் ஏதேனும் ஓர் அளவுகோல் அல்லது நோக்கம்கொண்டு பகுத்துக் காணல்.

எடுத்துக்காட்டாகச் சி. சு. செல்லப்பாவின் 'மௌனியின் மனக்கோலம்' என்னும் ஆய்வுக்கட்டுரை, எழுத்தாளர் மௌனியின் சிறுகதை உத்திகளையும் உண்மை நிலைகளையும் வேறுபடுத்தி விவரிக்கின்றது. இதன்மூலமாகத் தமிழ்ச் சிறுகதைகளின் பண்புகளும் சிறப்புகளும் ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

இதுவரை, திறனாய்வின் வகைகளைப் பார்த்தீர்கள். இனி, அதன் அணுகுமுறைகளைக் காண்போம்.

### திறனாய்வு அணுகுமுறைகள்

ஓர் இலக்கியத்தைப் படித்துச்சுவைப்பது என்பது வேறு, அவ் இலக்கியத்தைத் திறனாய்வு செய்வது என்பது வேறு. சுவைப்பதற்கு அணுகுமுறை தேவையில்லை. ஆனால், திறனாய்வு செய்வதற்கு அணுகுமுறை இன்றியமையாததாக உள்ளது.

### அறிவோம் தெளிவோம்

திறனாய்வு குறித்து, டாக்டர் ஜான்சன் என்பாரின் கூற்று

'திறனாய்வு' என்பவள் முயற்சி, உண்மை என்ற இருவருக்கும் தோன்றிய முதல்மகள். பிறந்தவுடன் இப்பெண், 'நடுவுநிலைமை' என்னும் செவிலித்தாயால், 'மெய்யறிவு' என்னும் அரண்மனையில் வளர்க்கப்பட்டாள். இளமையிலேயே இவளிடம் காணப்பெற்ற சிறப்பியல்புகள் காரணமாக, இவள் 'கற்பனை' என்பவனுக்குத் துணைவியாக அமைந்தாள்.

– இலக்கியக்கலை,
பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன்.

### திறனாய்வு அணுகுமுறை – விளக்கம்

ஒருவர் மற்றவரைப்பற்றி அறிந்து கொள்வதற்கும், அவருடன் நன்கு பேசுவதற்கும், அவர் மூலமாகச் செயல்களை நிறைவேற்றிக் கொள்வதற்கும் சில வழிமுறைகளைப் பின்பற்றுவர். அவற்றையே அணுகுமுறை என்கிறோம்.

அதுபோல, குறிப்பிட்ட ஓர் இலக்கியம் அல்லது இலக்கியங்களைக் கண்டு, நெருங்கி, அவற்றை எடுத்துச் சொல்வதற்கு, ஒரு வழிமுறை தேவைப்படுகிறது. அவ்வழிமுறைக்கு அணுகுமுறை என்று பெயர். (அணுகும் + முறை = முறையாக நெருங்கும் முறை)

### திறனாய்வு அணுகுமுறையின் நோக்கம்

திறனாய்வு என்னும் கடலைக் கடக்க உதவும் மரக்கலம் போன்றது அணுகுமுறை. ஓரிலக்கியத்தின் செய்ந்நேர்த்தி, சிறப்பு, கலையழகு என எல்லாவற்றையும் அவ்விலக்கியத்தின் வழியே சென்று காண்பது, திறனாய்வு அணுகுமுறையின் நோக்கமாகும்.

சரியான வழி, சரியான இலக்கைநோக்கிச் செல்ல உதவும். அதுபோல, ஒரு கொள்கையோடு கூடிய சரியான அணுகுமுறை, சரியான திறனாய்வுக்கு உதவும். சில வேளைகளில், அணுகுமுறை தவறாக இருந்தால், திறனாய்வும் தவறாக அமையும்.

### திறனாய்வு அணுகுமுறை வகைகள்

ஓர் இலக்கியத்தைத் திறனாயும்போது, ஆய்வுப்பொருளுக்கு ஏற்றவாறு அணுகுமுறை மாறும். எடுத்துக்காட்டாகத் திருக்குறளில் நூற்றுக்கணக்கான ஆய்வுப்பொருள்கள் உள்ளன. அவை ஒவ்வொன்றின் ஆய்வுக்கு ஏற்ப அணுகுமுறை மாறுவதைப் பின்வருமாறு காணலாம்.

'திருக்குறளில் உவமை நலன்' என்னும் ஆய்வுக்கு, மொழியியல் அணுகுமுறையும் 'திருக்குறளில் அறிவியல் கருத்துகள்' என்னும் ஆய்வுக்கு, அறிவியல் அணுகுமுறையும்

'திருக்குறளும் நாலடியாரும்' என்னும் ஆய்வுக்கு, ஒப்பியல் அணுகுமுறையும் தேவைப்படுகின்றன. ஆகவே, ஆய்வுப்பொருளுக்கு ஏற்றவாறு அணுகுமுறைகளும் மாறுகின்றன. அவ்வகையில், பல திறனாய்வு அணுகுமுறைகள் உள்ளன. அணுகுமுறைகளுள் சிலவற்றை மட்டும் மிகச் சுருக்கமாக அறிந்துகொள்வோம்.

### 1. அறநெறி அணுகுமுறை (Moralisticism)

மனித சமூகத்தில் தொன்றுதொட்டு மரபுவழியாக வந்தவை அறங்கள். இவற்றை மையமாகக்கொண்டு, இலக்கியங்களை அணுகுவது, அறநெறி அணுகுமுறை.

தமிழ் இலக்கிய வரலாற்றில், பெரும்பாலான நூல்கள் அறம் உரைப்பனவாக உள்ளன. "அறம், பொருள், இன்பம், வீடடைதல் நூற்பயனே" என்று இலக்கணம் கூறுகிறது. "தன்னெஞ்சறிவது பொய்யற்க", "மனத்துக்கண் மாசிலன் ஆதல்" எனத் திருக்குறள் சமயஞ்சாரா அறத்தைக் கூறுகிறது.

சிலப்பதிகாரத்தில் மூன்று உண்மைகள் உணர்த்தப்படுகின்றன. அவை, அரைசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாகும், உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்துவர், ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும் என்பன. இவை மூன்றும் சிலம்பின் மையக்கருத்துகள். இந்நூலின் நிகழ்ச்சிப் புனைவுகள் யாவும் இம் மையக்கருத்துகளைச் சுற்றியே அமைகின்றன. மனித சமுதாயத்தில் இவை மதிப்பு வாய்ந்த அறங்களாக உள்ளன. இத்தகைய அறக்கோட்பாடுகள், இலக்கியங்களை அளவிட உதவுகின்றன.

ஆகவே அறவியல் அணுகுமுறை, இலக்கியத்தில் வெளிப்படும் ஒழுக்கமுறையை ஆராய்வதோடு, இலக்கியத்தைத் தரம் பிரித்தும் கூறுகிறது.

### 2. சமுதாயவியல் அணுகுமுறை (Sociologism)

சமுதாயத்தில் வாழும் மக்களின் வாழ்க்கை நிகழ்வுகளே, இலக்கியங்களின் கருப்பொருளாக அமைகின்றன. அதனால்தான் இலக்கியம் என்பது, 'வாழ்க்கை நிகழ்வுகளை எதிரொளிக்கும் காலக்கண்ணாடி' எனவும் 'சமுதாயத்தின் புலப்பாடு' எனவும் அறிஞர்கள் கூறுகின்றனர். ஆகவே, இலக்கியத்தில் பதிவாகும் மக்களின் சமுதாயக்கூறுகளை ஆராய்ந்து தொகுப்பதே, சமுதாயவியல் அணுகுமுறை.

சமுதாயப் பின்னணி அல்லது களம், சமுதாய நிறுவனங்கள், குடும்பம் அதன் வகைகள், சமூக உறவுகள், கிராம நகர வாழ்க்கை, இனம். ஊர், நம்பிக்கைகள், சமூக மதிப்புகள், ஒழுக்கம் முதலான நற்பழக்கங்கள், நீக்கவேண்டிய தீய பழக்கங்கள், சமுதாயச்சிக்கல்கள், சமூகத்தில் ஏற்படும் மாற்றங்கள் முதலியன சமுதாயவியல் அணுகுமுறை சார்ந்து ஆராயப்படுகின்றன.

தமிழ்ச் சமூக வரலாற்றுக்குக் குறிப்பாகப் பழந்தமிழ்ச் சமூகத்தை அறிந்துகொள்ள, சமுதாயவியல் அணுகுமுறைகள் உதவுகின்றன. இவ் அணுகுமுறைகள்

#### அறிவோம் தெளிவோம்

திறனாய்வுக்கு இணையான ஆங்கிலச் சொல், 'criticism'. இச்சொல், 'கிரிட்டிகோஸ்' என்ற கிரேக்கச் சொல்லின் ஆக்கமாகும். இதன் பொருள், பிரித்துப் பார்ப்பதும் தீர்ப்புச் சொல்வதும் ஆகும். 'கிரிட்டிசிஸம் என்பதை, ஒரு கலைச்சொல்லாக முதலில் பயன்படுத்தியவர் ஜான் டிரைடன் (John Dryden) (18 ஆம் நூற்) என்னும் ஆங்கிலக் கவிஞர் ஆவார். அதற்கு முன்னால் Critic என்ற சொல்லைப் பயன்படுத்தியவர், சிந்தனையாளர் பிரான்சிஸ் பேக்கன் (Francis Bacon) (1605).

தமிழில் criticism என்ற சொல்லுக்கு இணையாக விமர்சனம் என்ற சொல்லை முதலில் பயன்படுத்தியவர், பேரா. ஆ. முத்துசிவன் (1944). 'விமரிசை' என்ற வடமொழி வழக்கிலிருந்துவந்த இச்சொல்லுக்குப் பாராட்டுதல், விளக்கமாகவும் விரிவாகவும் சொல்லுதல் என்று பொருள். தமிழில், இச்சொல்லுக்கு இணையாகத் 'திறனாய்வு' என்ற சொல்லை வழக்கத்தில் விட்டவர், பேரா. அ. ச. ஞானசம்பந்தன். (1953).

– திறனாய்வுக்கலை,
பேராசிரியர் தி. சு. நடராசன்

பழைமையானவையாகவும் அதே வேளையில் பரவலாகச் செய்யப்படுவனவாகவும் உள்ளன; இலக்கியத்திற்கும் சமுதாயத்திற்கும் இடையேயுள்ள நெருக்கத்தை, அதன் இயங்குதிறனாய்க்கொண்டு, இவை அமைகின்றன.எனவே,இவைபலகோணங்களில் வெளிப்படுகின்றன.

சமுதாய அணுகுமுறைகள் குறிப்பாகச் சமுதாயப் பின்புலம் காணுதல், குறிப்பிட்ட இலக்கியம் தோன்றுவதற்குக் குறிப்பிட்ட பின்புலமே காரணமாதல் என்ற முறையில் ஆராய்கின்றன. எடுத்துக்காட்டாகத் தமிழ்ச் சிறுகதைகளின் தொடக்க காலத்தில் விதவையர் துன்பம், குழந்தைத் திருமணத்தின் கொடுமை முதலியன மிகுதியாகவே இடம்பெற்றிருக்கின்றன. அதே வேளையில், அண்மைக்காலச் சூழலில் அத்தகைய கருப்பொருளைக் காண்பது அரிது. ஏனெனில், திருமணம் ஆகாத முதிர்கன்னியர் எதிர்கொள்ளும் பிரச்சனைகளே, இப்போதைய புதினங்களில் இடம்பெறுகின்றன. அதுமட்டுமன்றிப் பெண்கள் எழுச்சி, பெண்ணியச் சிந்தனைகள் முதலியனவும் பெருகி வருகின்றன.

### 3. உளவியல் அணுகுமுறை (Psychoanalyticism)

மனித மனம்சார்ந்த பல்வேறு கருத்தாக்கங்களை முன்வைத்து, இலக்கியத்தை அணுகித்திறனாய்வது, உளவியல் அணுகுமுறை. சிக்மண்ட் ஃபிராய்டு என்பவர் உருவாக்கிய உளப்பகுப்பாய்வுக்கோட்பாட்டின் அடிப்படையில், இவ் அணுகுமுறை மேற்கொள்ளப்படுகிறது.

உளவியல் அணுகுமுறையானது, இலக்கியத்தில் சித்திரிக்கப்படும் கதைமாந்தர்களின் மனங்களையும் நடத்தைகளையும் அறியவும் படைப்பாளியின் மனவெளிப்பாடுகளை அறியவும் அவ் இலக்கியத்தைப் படிப்பவர்தம் மனவுணர்களுக்கு ஏற்றவாறு அமைகிற கூறுகளை அறியவும் என மூன்று அடிப்படைகளில் செயல்படுகிறது.

எடுத்துக்காட்டாக, மு. வரதராசனாரின் சில புதினங்களில் காணாமல் போவதாக ஒரு கதைப்பாத்திரம் இடம்பெற்றிருக்கும். காரணம், மு. வ. குழந்தைப்பருவத்தில் காணாமல் போய், பிறகு கண்டுபிடிக்கப்பட்டார் என்பதுதான்.

சிலப்பதிகாரத்தில், கண்ணகி காணும் 'தீக்கனவு', அவளுடைய குழப்பமான மனநிலையின் வெளிப்பாடேயாகும். இவ் உளவியல் அணுகுமுறை, இலக்கியக் கதைமாந்தர்களின் மனநிலை தொடர்பான பல கூறுகளிலும் கவனம் செலுத்துகிறது.

ஆகவே, உளவியல் அணுகுமுறையானது, இலக்கியத்தின் புரியாத இடங்களைப் புரிந்துகொள்ளவும், உட்பொருள்களைக் குறிப்பிட்ட ஒரு கோணத்தில் விளங்கிக்கொள்ளவும் பெரிதும் உதவுகிறது.

### 4. மார்க்சிய அணுகுமுறை (Marxism)

பொருளையும் அதன் இயக்கத்தையும் முதன்மையாகவும் மூலமாகவும் கொண்டு, உலகத்தையும் அதன் வாழ்வியல் உத்திகளையும் விளக்குவது மார்க்சியம். இக்கோட்பாடு, அடிப்படையில் இலக்கியத்தை ஆய்வு செய்யும் அரசியல், பொருளாதார, சமுதாய, தத்துவமே ஆகும். இக்கோட்பாட்டைக் கார்ல் மார்க்ஸ் என்பவர் உருவாக்கினார். அவர், சமூகம் வர்க்கமாகப் பிளவுபட்டிருப்பதை இனங்கண்டார். சமுதாய ஏற்றஇறக்கங்களுக்குப் பொருளே அடிப்படைக் காரணம் என்பதைச் சுட்டிக்காட்டினார்.

பிற தத்துவங்கள் உணர்வுகளை அடிப்படையாகக் கொண்டிருக்க, மார்க்சியம் பொருள் முதல் என்பதை மையமாகக் கொண்டுள்ளது. மக்களிடமிருந்து தோன்றும் இலக்கியம், மக்களை நோக்கியே செயல்படுகின்றது. இதுதான் அதன் பொருண்மை. அதாவது, இலக்கியத்தை மக்களோடு நெருங்கச் செய்வதே மார்க்சிய திறனாய்வு அணுகுமுறையின் அடிப்படைப் பண்பாகும்.

### 5. அமைப்பியல் அணுகுமுறை (Structuralism)

ஓர் அமைப்பு என்பது, பல பகுதிகளை உடையது. அவை ஒவ்வொன்றும் ஆற்றலும்

திறனும் உடையன. அமைப்பின் உறுப்புகள் சிதையுமானால், கட்டமைப்பும் சிதைந்துவிடும். இக்கருத்தின் அடிப்படையில், இலக்கியத்தை அணுகுவது, அமைப்பியல் அணுகுமுறை.

இலக்கியத்தை ஆய்வுக்கென எடுத்துக்கொள்ளும்போது, அதனைத் தனக்குள் பல உறுப்புகள் கொண்ட குறிப்பிட்ட ஓர் ஒழுங்கமைவுடன்கூடிய ஓர் அமைப்பாக அமைப்பியல் காண்கிறது. குறிப்பிட்ட அமைப்பின் பண்புகளை அல்லது கூறுகளை அமைப்பிற்கு வெளியிலிருந்து ஆராயக்கூடாது. அவ் அமைப்பிற்குள்ளே இருந்துதான் ஆராய்தல் வேண்டும் என்பதை, அமைப்பியல் அணுகுமுறை வலியுறுத்துகிறது.

அமைப்பியல் அணுகுமுறை, இலக்கியங்களில் எவ்வாறு ஆராயப்படுகிறது என இனிக் காண்போம். இலக்கியங்களுள் கதைவடிவமும் ஒன்று. இக் கதைவடிவங்களில் வினைநிகழ்வுகளின் கட்டுக்கோப்பும், கதைப்பின்னலும் ஆராயப்படுகின்றன. கதையமைப்பைத் தீர்மானிப்பதில், கதைப்பின்னல் ஆற்றலுடையதாக விளங்குகிறது. எடுத்துக்காட்டாக, நாஞ்சில் நாடனின் 'மிதவை' நாவலைக் குறிப்பிடலாம். படித்த இளைஞன் ஒருவன், சரியான வேலை கிடைக்காமல், தமிழ்நாட்டிலிருந்து நெருக்கடி மிகுந்த மும்பைக்குச் செல்கிறான். அங்கே காலூன்ற முடியாமல், வெறும் மிதவையாய் அலைந்து அவதியுறுகிறான். இஃது அந்த புதினத்தின் கதைப்பின்னலாக விளங்குகிறது.

இக்கதையின் பாத்திரப்படைப்பே குறிப்பிடத்தக்க வினைநிகழ்த்துவதாக அமைக்கப்பட்டுள்ளது. எனவே, வினை நிகழ்த்துகிற பாத்திரங்களின் வைப்புமுறையும் அவற்றை இடம் நகர்த்தும் முறையும் அமைப்பியல் விளக்கத்திற்கு உட்பட்டதாகும்.

ஆகவே, இலக்கியத்தின் பண்புநிலைகளை அவற்றிற்கு வெளியே போகாமல், உள்ளேயே நின்று, அவற்றின் கட்டுமானங்களை மையமாகக்கொண்டு பேசுவதே அமைப்பியல் அணுகுமுறையாகும்.

திறனாய்வு குறித்துப் பல செய்திகளைப் புரிந்துகொண்ட நாம், இக்கட்டுரையின் நிறைவாகத் திறனாய்வின் பயன்களையும் அறிந்துகொள்வோம்.

### அறிவோம் தெளிவோம்

ஆங்கிலத்தில் விமர்சனத்திற்கென்றே தனிப் பத்திரிகைகள் வெளிவருகின்றன. Saturday Review of Literature என்ற விமர்சனப் பத்திரிகையில் வெளிவரும் புத்தக விமர்சனங்களைப் படித்தால், ஒரு நூலைப்பற்றி வாசகன் என்ன தெரிந்துகொள்ள வேண்டுமோ, அத்தனையையும் தெரிந்துகொள்ள முடிகிறது.

இலக்கிய விமர்சனம், ரகுநாதன்.

## திறனாய்வினால் விளையும் பயன்கள்

- இலக்கியங்களைச் சுவைத்துப் பாராட்டவும் சிறந்த கருத்துகளைத் தேர்ந்து அறியவும் திறனாய்வு பயன்படுகிறது.

- மூலநூல்களைக் கற்கவேண்டும் என்ற ஆர்வத்தைத் தூண்டுகிறது.

- புதிய நூல் வெளியீடுகளை உணர்த்துவதுடன், சிறந்த நூலாசிரியர்களையும் அறிமுகப்படுத்துகிறது.

- இலக்கியம் பல கோணங்களில் ஆய்வு செய்யப்படுவதால், நூலாசிரியனின் ஆளுமை புலப்படுகிறது. எனவே திறனாய்வாளன், நூலாசிரியனைப்போல வாழ்க்கை பற்றிய விளக்கத்தைத் தர முடிகிறது.

- குறுகிய காலத்தில் சிறந்த நூல்கள் அனைத்தையும் படிப்பதற்குத் திறனாய்வு உதவுகிறது. தாய்மொழி இலக்கியங்களை மட்டுமன்றிப் பிறமொழி இலக்கியங்களையும் அறிந்துகொள்ள ஓரளவு துணை செய்கிறது.

- இலக்கியத்தின் சுவையான பகுதிகளை அறிந்துகொள்ள உதவுகிறது. விளக்கம் பெறவேண்டிய கருத்துகளையும் தெளிவாக்குகிறது.

- சிறந்த இலக்கியங்களைத் தேர்ந்தெடுக்கச் செய்வதுடன், சிறப்பில்லாதனவற்றை இனங்காணவும் வழிகாட்டுகிறது.

## சில திறனாய்வு அணுகுமுறைகள்

| | | |
|---|---|---|
| அமைப்பியல் (Structuralism) | ஒப்பியல் (Comparativism) | புதுத்திறனாய்வு (New Criticism) |
| அழகியல் (Aestheticism ) | சமுதாயவியல் (Sociologism) | புது வரலாற்றியல் (New Historicalism) |
| அறவியல் (Moralisticism) | சூழலியல் (Ecoism) | புனைவியல் (Romanticism) |
| அறிவியல் (Scientific) | தத்துவவியல் (Philosophism) | பெண்ணியம் (Feminism) |
| அறிவுறுத்தல் (Didacticism) | தொல்படிமவியல் (Archetypalism) | மார்க்சியம் (Marxism) |
| ஆன்மிகஇயல் (Spiritualism) | நடப்பியல் (Realism) | மானுடவியல் (Anthropologism) |
| இயற்பண்பியல் (Naturalism) | நவீனத்துவம் (Modernism) | மிகை நடப்பியல் (Surrealism) |
| உருவவியல் (Formalism) | பின்அமைப்பியல்(Post – Structralism) | மொழியியல் (Linguisticism) |
| உளவியல் (Psychoanalyticism) | பின்காலனித்துவம் (Post Colonialism) | வடிவவியல் (Formalism) |
| எடுத்துரைப்பியல் (Narrativism) | பின்நவீனத்துவம் (Post – Modernism) | வரலாற்றியல் (Historicalism) |

## கலைச்சொற்கள்

Ist Person – Nominative Form – தன்மை – எழுவாய்
IInd Person – Nominative Form – முன்னிலை – எழுவாய்
IIIrd Person – படர்க்கை

| | |
|---|---|
| Abstract Noun | பண்புப்பெயர் |
| Adjective | பெயரடை |
| Adjectival Clause | பெயரடைத் தொடர் |
| Adjective – Noun Concord | பெயரடை – பெயர் இயைபு |
| Adverb | வினையடை |
| Adverbial Clause | வினையடைத் தொடர் |
| Auxiliary Verb | துணைவினை |
| Case | வேற்றுமை |
| Collocation | சொல்லிணைவு |
| Conjunctives | இணைப்பிடைச் சொற்கள் |
| Contextual Meaning | சூழற்பொருள் |
| Criticism | திறனாய்வு |
| Dictionary | அகராதி |
| Etymological dictionary | வேர்ச்சொல் அகராதி |
| Gender – Human | பால் – உயர்திணை |
| Gender – Non Human | பால் – அஃறிணை |
| Grammatical | இலக்கணப்பொருள் |
| Grammatical relations | இலக்கண உறவுகள் |
| Imperative | ஏவல் வினைமுற்று |
| Lexical | அகராதிப்பொருள் |
| Link language | இணைப்பு மொழி |
| Link verb | இணைப்பு வினை |
| Morphological Level | உருபனியல் நிலை |
| Morphological relations | உருபனியல் உறவுகள் |
| Mother tongue | தாய்மொழி |
| Object – verb Concord | செயப்படுபொருள் – வினை இயைபு |
| Official language | அலுவலக மொழி |
| Philology | வேர்ச்சொல் ஆய்வு |
| Polysemy | பல பொருள் ஒரு சொல் |
| Postpositions | பின்னொட்டுகள் |
| Prepositions | முன்னொட்டுகள் |
| Pronouns | பதிலிப்பெயர்கள் |
| Relative participle | பெயரெச்சம் |
| Semantic Level | பொருண்மை நிலை |
| Semantic Relationship | பொருண்மை உறவு |
| Sentence Pattern | தொடரமைப்பு ஒழுங்கு |
| Subject – Verb Concord | எழுவாய் – வினை இயைபு |
| Syllable | அசை |
| Synonymy | ஒருபொருட் பன்மொழி |
| Syntactic Concord | தொடர் இயைபு |
| Syntactic Structure | தொடர்நிலை அமைப்பு |
| Verbal Participle | வினையெச்சம் |
| Word Order in Sentences | தொடர்களில் சொல் வரிசை |

## கண்ணாடி

VAV695

**கீழ்க்காண்பனவற்றுள் பொருத்தமான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.**

1. "இலக்கியம் சிறந்ததா அல்லது குறையுடையதா என்பதைக் காண்பதே திறனாய்வு" என்று கூறியவர்

   அ) மேத்யூ ஆர்னால்டு ஆ) சி. டி. வின்செஸ்டர்

   இ) விக்டர் யூகோ ஈ ) ஸ்பிங்கான்

2. பின்வருவனவற்றுள் இலக்கியம் எனக் குறிப்பிட முடியாததைச் சுட்டுக.

   அ) கதை ஆ) கவிதை

   இ) நாட்குறிப்பு ஈ ) நாட்டுப்புறப்பாடல்

3. பின்வரும் கூற்றையும் அதன் காரணத்தையும் படித்துச் சரியான விடைக்குறிப்பைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

   கூற்று: சிலப்பதிகாரம், ஒரு புனைவிய இலக்கியமாகும்.

   காரணம் : கற்பனையும், கதைமாந்தர்களின் மிகைப்படுத்தப்பட்ட பண்புகளும் புனைவிய இலக்கியங்களின் அடையாளங்களாகும்.

   அ) கூற்று சரி, காரணம் தவறு. ஆ) கூற்று, காரணம் இரண்டும் சரி.

   இ) கூற்று தவறு, காரணம் சரி. ஈ ) கூற்று, காரணம் இரண்டும் தவறு.

4. பின்வருவனவற்றுள் திறனாய்வாளர்க்குரிய தகுதியாகக் கருதப்படாததைத் தேர்ந்தெடுக்க.

   அ) இலக்கியப் பயிற்சி பெற்றிருத்தல் ஆ) விருப்புவெறுப்புக்கு இடமளித்தல்

   இ) நடுவுநிலைமையுடன் திகழ்தல் ஈ ) பன்னூற்புலமையுடன் விளங்குதல்

5. பின்வருவனவற்றுள் விதிமுறைத் திறனாய்வுக்குரிய சரியான விளக்கத்தைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

   அ) சில விதிகளைத் தாம் மேற்கொள்ளும் இலக்கியத்தில் அப்படியே பொருத்திக் காணல்.

   ஆ) குறிப்பிட்ட இலக்கியத்தின் பண்புகளையும் கூறுகளையும் ஓர் அளவுகோல் அல்லது நோக்கம் கொண்டு பகுத்துக் காணல்.

   இ) இலக்கியப் படைப்பாளியையும் அவர் படைத்த இலக்கியத்தின் பல்வேறு கூறுகளையும் விளக்கமாக ஆய்வு செய்தல்.

   ஈ) எந்தப் படைப்பை ஆய்வு செய்கிறோமோ, அந்தப் படைப்பின் வழியாகவே அதற்குரிய விதிகளை அமைத்துக்கொள்ளல்.

6. 'பாரதி – பாரதிதாசன் கவிதை ஒப்பீடு' என்னும் தலைப்பில் திறனாய்வு செய்வதற்குப் பொருத்தமான அணுகுமுறையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

   அ) மொழியியல் ஆ) அமைப்பியல் இ) ஒப்பியல் ஈ) உளவியல்

7. பின்வரும் கூற்றுகளைப் படித்துச் சரியான விடைக் குறிப்பைத் தேர்ந்தெடுக்க.

கூற்று 1 : மனிதமனம் சார்ந்த பல்வேறு கருத்தாக்கங்களை முன்வைத்து, இலக்கியங்களை ஆராய்வது, உளவியல் அணுகுமுறை

கூற்று 2 : உளவியல் அணுகுமுறை தோற்றம் பெறுவதற்குச் சிக்மண்ட் ஃபிராய்டின் உளப்பகுப்பாய்வுக் கோட்பாடே அடிப்படையாக அமைந்தது.

அ) கூற்று 1, கூற்று 2 சரியானவை ஆ) கூற்று 1 சரி, கூற்று 2 தவறு.

இ) கூற்று 1, கூற்று 2 தவறானவை ஈ ) கூற்று 1 தவறு, கூற்று 2 சரி.

8. மார்க்சியக் கோட்பாட்டை உருவாக்கியவர் --------------.

அ) ஜான்சன் ஆ) ஜான் டிரைடன்

இ) காரல் மார்க்ஸ் ஈ) பிரான்சிஸ் பேக்கன்

9. பின்வருவனவற்றுள் பொருத்தமில்லாத கூற்றைச் சுட்டிக்காட்டுக.

அ) 'கிரிட்டிஸிசம்' என்னும் சொல், 'கிரிட்டிகோஸ்' என்ற கிரேக்கச் சொல்லின் ஆக்கமாகும்.

ஆ) திறனாய்வு என்பதும் விமரிசனம் என்பதும் ஒன்றே.

இ) ஓர் இலக்கியத்தின் திறனாய்வுக்கேற்ப, அதன் அணுகுமுறை மாறும்.

ஈ) அச்சிடப்பெற்றவை எல்லாம் இலக்கியங்களாகும்.

10. நெடுநல்வாடையில், பாண்டிய மன்னர்களுக்குரிய அடையாள மாலையாகக் குறிப்பிடுவதைத் தேர்ந்தெடுக்க.

அ) பனம்பூ ஆ) வேப்பம்பூ இ) தாழம்பூ ஈ) மாம்பூ

## குறுவினா

1. திறனாய்வு என்பதற்கு மேத்யூ ஆர்னால்டு தரும் விளக்கம் யாது?
2. அச்சிடப்பெறாத இலக்கியங்கள் என்பன யாவை? எடுத்துக்காட்டுகள் தருக.
3. திறனாய்வு தோன்றுவதற்குத் தொடக்கநிலையாக இருந்தது எது?
4. திறனாய்வு வகைகளுள் மிக அடிப்படையானவை எனத் தி. சு. நடராசன் குறிப்பிடுவனவற்றை எழுதுக.
5. திறனாய்வு அணுகுமுறையின் நோக்கத்தைக் குறிப்பிடுக.

## சிறுவினா

1. திறனாய்வாளர் பெற்றிருக்க வேண்டிய தகுதிகள் யாவை?
2. புனைவிய இலக்கியத்திற்கும் இயற்பண்பிய இலக்கியத்திற்குமுள்ள வேறுபாடு யாது?
3. நச்சினார்க்கினியரின் திறனாய்வுத் திறனை நெடுநல்வாடைவழி விளக்குக.
4. ஒப்பீட்டுமுறைத் திறனாய்வின் ஒப்பீட்டுத் தளங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?
5. அமைப்பியல் அணுகுமுறையை எடுத்துக்காட்டுடன் விளக்குக.

## நெடுவினா

1. 'படைப்பாளிக்கும் படிப்பவருக்கும் இடையே பாலமாக விளங்குபவர் திறனாய்வாளர்' – இக்கூற்றை நிறுவுக.
2. திறனாய்வு வகைகளை எடுத்துக்காட்டுடன் விளக்குக.
3. திறனாய்வு அணுகுமுறைகளுள் எவையேனும் இரண்டைப் பற்றி விரிவாக எழுதுக.
4. திறனாய்வினால் விளையும் பயன்கள் யாவை?

## படிப்போம் பயன்படுத்துவோம்

1. தமிழிலும் ஆங்கிலத்திலும் கொடுக்கப்பட்டுள்ள உரைப்பகுதிகளைப் படித்து, அவற்றைப் பின்வரும் கூறுகளின் அடிப்படையில் அட்டவணைப்படுத்துக.

| நரி, மரக்கிளையின் மீது அமர்ந்திருந்த காகத்தைப் பார்த்து, " ஆ! நீ எவ்வளவு அழகாக இருக்கிறாய். இவ்வளவு அழகான பறவைக்குக் கட்டாயம் இனிமையான குரல் இருக்கவேண்டும். ஆகவே, எனக்காக ஒரு பாடல் பாடிக் காட்டுவாயா?" என்று கூறியது. | *The fox said to the crow, which is sitting on the branch, "oh! What a pretty bird you are! Such a pretty bird must certainly have a sweet voice. Will you please sing a song for me?"* |
|---|---|

| இலக்கணக் கூறுகள் | தமிழ் | ஆங்கிலம் |
|---|---|---|
| பெயரடை | | |
| வினையடை | | |
| இணைப்புச்சொல் | | |
| முன்னொட்டுகள் | | |
| பின்னொட்டுகள் | | |

2. கீழ்க்காணும் ஆங்கில உரைப்பகுதியைத் தமிழில் மொழிபெயர்க்க. தமிழ், ஆங்கிலம் இரண்டிலும் பயின்றுவரும் முன்னொட்டு/ பின்னொட்டுச் சொற்களை எடுத்தெழுதுக.

| *I live in a small village. It is close to Tiruvallur. My village is four miles from Tiruvallur. I go there to buy books. I set out from the town early in the morning. I usually go by bus. Sometimes my friend also comes with me. The bus goes in between paddy fields and a bridge.* | |
|---|---|

3. கீழ்க்காணும் பழமொழிகள் உணர்த்தும் சரியான பொருளைக் குறிப்பிடுக.

(பழமொழியிலுள்ள சொற்கள் நேரடிப்பொருளை உணர்த்தா. குறிப்பாக வேறொரு பொருளை உணர்த்தும்.)

எ.கா. மண்குதிரையை நம்பி, ஆற்றில் இறங்கலாமா? – தகுதியில்லாதவரை நம்பி, நாம் செயலில் இறங்கலாமா?

1. மின்னுவதெல்லாம் பொன்னல்ல –
2. ஆயிரங் காக்கைக்கு ஒரு கல் –
3. எலி வளையானாலும் தனி வளை வேண்டும் –
4. வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் –
5. பாய்மரம் இல்லா மரக்கலம்போல –

4. கீழ்க்காணும் குறிப்புகளைப் பயன்படுத்தி, 'மை' என முடியும் சொற்களைக் கண்டறிக.

எ.கா. செயலில் இருக்கவேண்டிய 'மை' – மடியின்மை (சோம்பலின்மை)

1. சொல்லில் இருக்கவேண்டிய 'மை' – ------------------
2. அறிவில் இருக்கவேண்டிய 'மை' – ------------------
3. வாழ்வில் கடைப்பிடிக்கவேண்டிய 'மை' – ------------------
4. நம் மதிப்பை உயர்த்தும் 'மை' – ------------------
5. அனைத்து உயிர்களிடத்தும் காட்டவேண்டிய 'மை' – ------------------

(குறிப்பு – சரியான விடையைக் கண்டறிய திருக்குறள் அதிகாரங்களை நினைவுகூர்க.)

5. கீழ்க்காணும் நுண்கதையை உளவியல் அணுகுமுறையில் திறனாய்வு செய்க.

செல் (லாப்) பேசி

வயதான தாயொருத்தி, சில நாளாக மனவருத்தத்துடன் இருந்தாள். அவள் வீட்டுக்கருகில் குடியிருந்த வளர்மதி என்ற பெண், இதனை அறிந்துகொண்டாள். அவள், அந்தத் தாயிடம் சென்று, மனவருத்தத்துக்கான காரணத்தைக் கேட்டாள். அப்போது, அந்தத் தாய், "என் மகன் வெளியூரில் வேலை செய்கிறான். அவனுடன் பேசி நெடுநாளாகிறது. அதனால்தான் வருத்தமாக உள்ளது" என்று கூறினாள். இதனைக் கேட்ட வளர்மதி, "அடடே, இதுதான் உங்கள் வருத்தத்துக்குக் காரணமா? கவலைப்படாதீர்கள். என் செல்பேசியைக் கொடுக்கிறேன். உங்கள் மகனுடைய செல்பேசி எண்ணுக்குத் தொடர்பு கொண்டு இப்போதே பேசலாம்" என்று மகிழ்ச்சியுடன் கூறினாள். அவள் கூறியதனைக் கேட்ட பின்னரும், அந்தத் தாயின் முகம் மேலும் வாட்டமடைந்தது. "ஏனம்மா, என்மீது நம்பிக்கை இல்லையா? இப்போதே வீட்டுக்குச் சென்று, என் செல்பேசியை எடுத்துக்கொண்டு வரட்டுமா?" என்று மீண்டும் வளர்மதி கேட்டாள். அதற்கு அந்தத்தாய், தம் கண்களில் வழிந்த கண்ணீரைத் துடைத்துக்கொண்டே, "நான் விரும்பிய போதெல்லாம் பேசுவதற்கு என் மகன்தான் ஏற்கெனவே ஒரு செல்பேசி வாங்கிக் கொடுத்திருக்கிறானே, இதோ, பார். இங்கே இருக்கிறது. ஆனால், நெடுநாளாக அதிலிருந்து எந்த அழைப்பும் வராததனால், செயல்படவில்லை என நினைத்து, அதனைச் சரிசெய்ய, கடைக்கு எடுத்துச் சென்றேன். ஆனால், கடைக்காரர் அந்தச் செல்பேசியில் எந்தக் குறைபாடும் இல்லை என்று கூறிவிட்டார். அப்படியிருந்தும், என் மகனிடமிருந்து இதுவரை அழைப்பு வராதது ஏன் என்றுதான் தெரியவில்லை" என்றாள். அந்தத்தாயின் கள்ளங்கபடமில்லா வெள்ளை உள்ளத்தையும் அன்பில்லா மகனின் கல்மனத்தையும் நினைத்த வளர்மதியின் கண்களுக்கு, அந்தத் தாயின் செல்பேசி, செல்லாப் பேசியாய்த் தெரிந்தது.

6. குறிப்புகளைப் பயன்படுத்திக் கீழ்க்காணும் குறுக்கெழுத்துப் புதிர்க்கட்டங்களை நிரப்புக.

| 1 |  | 2 |  |  |  |  |  |  | 3 |
|---|---|---|---|---|---|---|---|---|---|
|  |  |  |  |  |  |  |  |  | 4 |
|  | 5 |  |  |  |  |  |  |  |  |
|  |  |  |  |  |  |  |  |  |  |
| 6 |  |  |  |  |  |  |  |  |  |
|  |  |  |  |  |  |  |  |  | 7 |
|  |  |  |  |  |  | 8 |  |  |  |
| 9 |  |  |  |  |  |  |  |  | 10 |
|  |  | 11 |  |  |  |  |  |  | 12 |
|  |  |  | 14 |  |  |  |  | 13 |  |

(அடைப்புக்குறிக்குள் உள்ள எண்கள், எழுத்துகளின் எண்ணிக்கையைக் குறிக்கும்)

## இடமிருந்து வலம்

1) ஆகுபெயரில் ஒரு வகை ------ (8)

5) செய்வினைத் தொடரைச் செயப்பாட்டுவினையாக மாற்ற இது தேவை (8)

6) ஆங்கிலம் இந்த மொழிக் குடும்பத்தைச் சார்ந்தது ------- (9)

9) ஆங்கிலமொழி ஆளுமை செலுத்தும் துறைகளுள் ஒன்று ------ (6)

11) சொல்லின் மூலத்தை அறிய உதவுவது ------ (5)

## வலமிருந்து இடம்

4) மலையாளமொழி இந்தக் குடும்பத்தைச் சார்ந்தது ------ (6)

7) படைப்பவருக்கும் படிப்பவருக்கும் இடையே பாலமாக விளங்குபவர் ----- (7)

8) நூல்கள் இரண்டை ஒப்பிடுவதற்கு இந்த அணுகுமுறை தேவை ----- (5)

10) ஒருமையிலுள்ள சொற்களைப் பன்மையாக்க உதவும் விகுதி -------- (2)

13) குழூஉக்குறி வழக்குக்கு ஓர் எடுத்துக்காட்டு -------- (6)

## கீழிருந்து மேல்

11) பருவகாலங்களுள் ஒன்று ---- (3)

12) சொல்லின் பொருளைக் காண, இது உதவும் ------- (4)

14) பொருண்மையியல் கோட்பாட்டைக் கூறும் மொழியியல் அறிஞர்களுள் ஒருவர் -- (3)

## மேலிருந்து கீழ்

2) தமிழில் வினைக்குமுன் வந்து, வினையைச் சிறப்பிக்கும் ------- (4)

3) இலக்கியத்தில் விதிகளைப் பொருத்திப் பார்க்கும் திறனாய்வு வகை --------- (4)

6) மொழி வளர்ச்சிக்கு உறுதுணையாக விளங்கும் ஒரு கருவி ------ (6)

### செயல்திட்டம்

1. நும் பாடப்பகுதியிலுள்ள கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள தமிழ்ச்சொற்களிலிருந்து 50 சொற்களின் வேர்ப்பொருளைக் கண்டறிந்து எழுதுக.
2. நும் ஆங்கில மொழிப்பாடநூலிலிருந்து எவையேனும் 25 தொடர்களை எழுதி, அவற்றைத் தமிழ்த் தொடரமைப்புக் கூறுகளுடன் ஒப்பிட்டு அட்டவணை உருவாக்குக.

## இணையச்செயல்பாடு

# இலக்கணவியல்

இந்தச் செயல்பாடுகள்மூலம் தொடரியல், எழுவாய், பயனிலை, எச்சத்தொடர் போன்றவற்றை அறியலாம்.



### படிகள்

1. கீழ்காணும் உரலி விரைவுக்குறியீட்டைப் பயன்படுத்தி, இச்செயல்பாட்டிற்கான இணையப் பக்கத்திற்குச் செல்க. அங்கு இலக்கணக்குறிப்பு விரிதரவு என்ற பக்கம் காண்பிக்கும். தொடரியல் மற்றும் பொருண்மையியல் விளக்கத்துடன் கூடிய தமிழ் விரிதரவு என்பதனைத் தேர்வு செய்க.
2. ஒரு பக்கத்தில் அறிமுகம் விரிதரவு என்ற குறியுடன் காட்டும். அதில் விரிதரவு என்பதைத் தேர்வு செய்க.
3. காண்பிக்கும் பக்கத்தில் தேவையான இலக்கணக் குறிப்பைத் தேர்ந்தெடுக்க.
4. அந்தப் பக்கத்தின் நூல் மற்றும் பாடல் எண் தேர்வுசெய்து தேடு என்று சொடுக்கவேண்டும்.

### செயல்பாட்டின் படிநிலைக்கான படங்கள் :



படி 1



படி 2



படி 3



படி 4

தொடரியல் இணைய பக்கத்தின் உரலி :

http://www.tamilvu.org/ta/coresite-html-cwannotate-342429

B282_12_ADV_TAMIL

* படங்கள் அடையாளத்திற்கு மட்டுமே.

இயல் ஐந்து

# ஊடகவியல்

296KL3




*மனித நாகரிக வளர்ச்சியில் தகவல் தொடர்பின் பங்கு முக்கியமானது. ஒவ்வொரு தனிமனிதனின் வளர்ச்சிக்கும் சமூக மேம்பாட்டிற்கும் ஊடகங்களின் பணி இன்றியமையாதது.*

*ஊடகங்கள் அச்சு ஊடகங்கள், மின்னணு ஊடகங்கள் என இரண்டு வகைப்படும். பதினோராம் வகுப்பில் அச்சு ஊடகங்கள் பற்றிய செய்திகள் இடம்பெற்றிருந்தன. இவ்வாண்டு மின்னணு ஊடகங்களான வானொலி, தொலைக்காட்சி ஆகியவற்றின் தோற்றம், வளர்ச்சி, உள்கட்டமைப்பு, நிகழ்ச்சி உருவாக்கம் ஆகிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. மேலும் ஊடகச் சட்டங்கள் குறித்தும் மின்னணு ஊடக ஆளுமைகள் குறித்தும் இப்பாடப்பகுதி பேசுகிறது.*

## கற்றல் நோக்கங்கள்

- *மின்னணு ஊடகங்கள் பற்றி அறிந்துகொள்ளுதல்.*
- *பேரிடர்க் காலத்தில் வானொலி ஆற்றுகின்ற இன்றியமையாப் பணி குறித்து அறிதல்.*
- *தொலைக்காட்சியில் ஒளிபரப்பாகும் நிகழ்ச்சிகளின் பயன்பாடுகளைப் புரிந்துகொள்ளுதல்.*
- *ஊடகச் சட்டங்கள் பற்றி விழிப்புணர்வு பெறுதல்.*
- *மின்னணு ஊடக ஆளுமைகளின் பங்களிப்பைத் தெரிந்து கொள்ளுதல்.*
- *வானொலி, தொலைக்காட்சி ஆகியவற்றுக்கான நிகழ்ச்சிகளை உருவாக்கும் திறன் பெறுதல்.*
- *இணைய ஊடகங்களை அறிந்து ஆக்க வழியில் பயன்படுத்துதல்.*

## பாடப் பகுதி

- மின்னணு ஊடகங்கள்
- வானொலி மற்றும் தொலைக்காட்சி – உள்கட்டமைப்பு
- ஊடகவியல் சட்டங்கள்
- மின்னணு ஊடக ஆளுமைகள்

# இயல் ஐந்து

# மின்னணு ஊடகங்கள்

வானொலி, தொலைக்காட்சி, இணையம் முதலானவை மின்னணு ஊடகங்களாக அறியப்படுகின்றன. ஆற்றல் வாய்ந்த ஊடகமாக வானொலி இருந்தது. அதன்பின் தோன்றிய தொலைக்காட்சி மக்களிடம் பெரும் செல்வாக்குப் பெற்ற ஊடகமாக இருந்துவருகிறது. தற்போது இணையத்தில் கிடைக்கும் வலைப்பூ, முகநூல், கீச்சகம், புலனம் முதலான சமூக ஊடகங்கள் மக்களால் பெரிதும் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

## வானொலி

மக்களுக்கான தொடர்பியல் சாதனமாக முதலில் தோன்றியது வானொலியே. ஊடகமானது தொலைக்காட்சி, இணையம் எனப் பல முன்னேற்றங்களைக் கண்டாலும் வானொலி தனக்கென ஓர் இடத்தை உருவாக்கிக்கொண்டு இன்றளவிலும் பயணித்து வருகிறது.



## வானொலியின் தோற்றம்

இத்தாலி நாட்டு அறிஞர் குலீல்மோ மார்கோனி வானொலியைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் ஈடுபட்டார். அதற்காகத் தம் வீட்டையே ஆராய்ச்சிக்கூடமாக மாற்றினார். நெடுநாள்களாக நடைபெற்ற ஆராய்ச்சியின் முடிவாகக் கம்பியில்லாத் தந்தி முறையில் செய்திகளைத் தொலைதூரத்திற்கு அனுப்பும் முயற்சியில் வெற்றி பெற்றார். இக்கண்டுபிடிப்பை இங்கிலாந்து அறிவியல் கழகத்தில் பதிவு செய்தார்.

1896ஆம் ஆண்டு மார்கோனி கம்பியில்லாத் தந்தியை கண்டுபிடித்தார். 1897ஆம் ஆண்டு கம்பியில்லாத் தந்தி சேவை நிறுவனத்தைத் தொடங்கினார். ஒலிபரப்பிற்குத் தேவையான கருவிகளையும் அவரே உருவாக்கினார். அட்லாண்டிக் கடலின் குறுக்கே கார்ன்வாலிஷில் இருந்து நியூபவுண்டுலாந்து (New Founland) வரை செய்திகளை அனுப்பினார். இதற்காக இவருக்கு 1909 ஆம் ஆண்டு இயற்பியல் துறைக்கான நோபல் பரிசு வழங்கப்பட்டது. ஏற்கெனவே இந்த ஆய்வில் ஈடுபட்டிருந்த பெர்டினாண்ட் பிரவுன் என்ற ஜெர்மானிய அறிஞரும் இவருடன் இணைந்து இப்பரிசினைப் பகிர்ந்துகொண்டார். மார்கோனி தமது அடுத்தடுத்த முயற்சியின் விளைவாக 1800 மைல் தொலைவிற்குச் செய்திகளை அனுப்பி வெற்றிகண்டார். இதனால் இவர் வானொலியின் தந்தை என அழைக்கப்படுகிறார்.



குலீல்மோ மார்கோனி

உலகத்தின் முதல் வானொலி நிலையம் 1920 ஆம் ஆண்டு அமெரிக்காவின் பீட்ஸ்பர்க் நகரில் தொடங்கப்பட்டது. "அமெரிக்க ஜனாதிபதியாக ஹார்டிங்ஸ் தேர்ந்தெடுக்கப்பட்டார்" என்பதே இதில் ஒலிபரப்பப்பட்ட முதல் செய்தியாகும்.

## இந்திய வானொலி

இந்தியாவின் முதல் வானொலி ஒலிபரப்பு நிலையம் சென்னையில் மாநில வானொலிக் குழுவால் 1924ஆம் ஆண்டு ஜூலை 31இல் தொடங்கப்பட்டது. தனியார் நிறுவனத்திடமிருந்த ஒலிபரப்புச் சேவையை இந்திய அரசு ஒலிபரப்புத்துறை (Indian State Broad casting Service-ISBS) தனது கட்டுப்பாட்டின்கீழ் கொண்டு வந்தது. இது 1936இல் அகில இந்திய வானொலி (All India Radio) எனப் பெயர்மாற்றம் பெற்றது. பின்னர் 1957-முதல் ஆகாசவாணி என்றும் அழைக்கப்பட்டு வருகிறது.

இந்தியா விடுதலை பெற்ற பிறகு இந்திய வளத்தையும் பொருளாதாரத்தையும் மேம்படுத்தும் வகையில் ஐந்தாண்டுத்திட்டங்கள் வகுக்கப்பட்டு வளர்ச்சிப் பணிகளுக்கென நிதிகள் ஒதுக்கப்பட்டன. இதில் வானொலிச் சேவையினை விரிவுபடுத்தும் பணிக்காக ஒவ்வோர் ஐந்தாண்டுத் திட்டத்திலும் நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டுப் புதிய வானொலி நிலையங்களும் ஒலிபரப்புக் கோபுரங்களும் அமைக்கப்பட்டன.

மேலும் குழந்தைகள், சிறுவர்கள், இளைஞர்கள், பெண்களுக்கான சிறப்பு நிகழ்ச்சிகள், கல்வி நிகழ்ச்சிகள், வேளாண்மை, விளையாட்டு என வானொலி தனது நிகழ்ச்சிகளின் எல்லையை விரிவுபடுத்திக்கொண்டது.

## வானொலி சேவை

இந்திய நாட்டில் வானொலி அறிமுகமான நாள்முதல் இன்றுவரை பல்வேறு விதமான நிகழ்ச்சிகள் ஒலிபரப்பப்படுகின்றன. தேசிய ஒலிபரப்பு, மாநில மொழி ஒலிபரப்பு, வர்த்தக ஒலிபரப்பு போன்ற சேவைகள் வழங்கப்பட்டு வருகின்றன. பாராளுமன்ற நிகழ்வுகள் நேரலையாக ஒலிபரப்பப்படுகின்றன.

### அறிவோம் தெளிவோம்

**பேரிடர்க்காலமும் ஹாம் வானொலியும்**

இயற்கைப் பேரிடர்க் காலங்களில் மக்கள் தகவல்களைப் பெறுவதற்கும் தெரிவிப்பதற்கும் ஹாம் வானொலி அல்லது அமெச்சூர் வானொலி பயன்படுத்தப்படுகிறது. இந்த ஹாம் வானொலியில் தகவல்களைப் பெறவும் ஒலிபரப்பவும் முடியும். இயற்கைப் பேரிடர்க் காலங்களில் தொலைத்தொடர்புச் சாதனங்கள் அறவே செயலற்றுவிடுகின்றன. அச்சூழலில் நமக்குக் கை கொடுத்து உதவுவது, ஹாம் வானொலிகள் மட்டுமே. இன்று அமெரிக்கா, ஜப்பான் போன்ற வளர்ந்த நாடுகளில் அனைத்து வீடுகளிலும், ஹாம் வானொலி உரிமம் பெற்றுப் பயன்படுத்தி வருகின்றனர். இதனால் இயற்கைச் சீற்றங்களை இவர்களால் எளிதாக எதிர்கொள்ள முடிகிறது.



ஹாம் வானொலியினைப் பெறுவதற்கான வழிமுறைகளை www.wpc.dot.gov.in/exam_amatr.asp என்னும் இணையத் தளத்தில் காணலாம்.

## பண்பலை

வானொலி தொழில்நுட்பத்தின் அடுத்தகட்ட வளர்ச்சி நிலை பண்பலை (FM). பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளை மையப்படுத்தித் தொடங்கப்பட்டவையே பண்பலைகள். இவை வானொலி வருணனையாளர்களை (ரேடியோ ஜாக்கி) முதன்மையாகக் கொண்டு இயங்கி வருகின்றன. அரசு பண்பலை நிலையங்களும் முறையான உரிமம் பெற்ற தனியார் பண்பலை நிலையங்களும் உலகெங்கிலும் தமது ஒலிபரப்புச் சேவையினைச் சிறப்பாகச் செய்துவருகின்றன.



12th ADVNCEl Tamil - Chap 5&6.indd 207 14-04-2020 18:51:52

## இணையத்தள வானொலி

இணையத்தள வானொலியினை யார்வேண்டுமானாலும் தொடங்கி நடத்திட இயலும். சமூகத்திற்குச் சொல்லவேண்டிய செய்திகளும் கருத்துவளமும் ஆர்வமும் வானொலி அறிவும் நம்மிடம் இருந்தால் நாமும் ஓர் இணைய வானொலியினைத் தொடங்கி நடத்தலாம். இணையத்தளத்தின் நவீனத் தொழில்நுட்பம் இணையத்தள வானொலி ஒலிபரப்பிற்கு வழிவகை செய்கிறது.

வானொலி இசைப்பிரியர்களுக்கென பாட்காஸ்ட் (Podcast) போன்ற இணையத்தள சேவைகள் உள்ளன. இவற்றுடன் ஸ்பிரிக்கர் (http://www.spreaker.com/) போன்ற இணையத்தளங்கள் இணைய வானொலியைத் தொடங்குவதற்கான வசதிகளை வழங்குகின்றன. இவ்விணையத்தளத்தில் வானொலி சேவையினைத் தொடங்க தங்களை உறுப்பினராக இணைத்துக்கொள்ளவேண்டும். இங்கு வானொலி நடத்துபவர்களுக்கெனத் தனிப்பக்கமும் ஒதுக்கப்படுகிறது.

## தொலைக்காட்சி

கம்பி வழியாகவோ மின்னலைகள் வழியாகவோ அசையும் அல்லது அசையாப் பொருள்களின் காட்சிகளை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குக் கொண்டு சென்று காட்சிப்படுத்தும் சாதனமே தொலைக்காட்சியாகும்.

தொலைக்காட்சிசேவைகளைக் காண்பதற்கு உதவும் மூன்று கருவிகள்:

1. படப்பிடிப்புக் கருவி (Camera)

2. பிடிக்கப்பட்டப் படத்தினை மின்னலைகளாக மாற்றித் தொலைதூரத்திற்கு அனுப்பும் கோபுரம் (Transmitting tower)

### அறிவோம் தெளிவோம்

### திறன்பேசியில் வானொலி தொடங்குதல்

வானொலி தொடங்குவதற்கான வழிமுறைகள்.

1. கொடுக்கப்பட்டுள்ள http://Anchor.fm என்னும் இணையப் பக்கத்திற்குச் செல்க.

2. இப்போது திரையில் தோன்றும் Get Started Now என்னும் சுட்டியைச் சொடுக்கவும். உங்களுக்கான தனியான கணக்கினை உங்கள் மின் அஞ்சல் முகவரி கொண்டு தொடங்கவும்.

வானொலிக்கான பெயரினைத் தேர்வு செய்யவும். இப்பொழுது Add Audio என்னும் சுட்டியைத் தட்டி உங்களின் குரலில் பதிவு (record) செய்யவும்.












3. அனுப்பப்பட்ட மின்னலைகளை வாங்கி, அவற்றைப் படமாகவும் ஒலியாகவும் மாற்றித்தரும் தொலைக்காட்சிப் பெட்டி (Reciever – T.V)

## தொலைக்காட்சியின் தோற்றம்

இங்கிலாந்து நாட்டைச் சார்ந்த ஜான் லெகி பெயர்டு (John legie baird) காட்சி ஒளிபரப்பு பற்றி அறிந்துகொள்வதில் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தார். இவர் கம்பியில்லாத் தந்திக் கருவி மற்றும் சில மின்கலன்களுடன் ஆராய்ச்சியில் ஈடுபட்டார். இவ்வாய்வின் விளைவாக ஒரு பொம்மையின் உருவத்தை ஓர் அறையிலிருந்து மற்றோர் அறைக்கு அனுப்பி வெற்றி கண்டார். ஒரு சிறுவனைத் தமது படம் பிடிக்கும் கருவி முன் நிறுத்தி, அவனது கை, கால்களை அசைக்க வைத்து அக்காட்சியினை ஒளிபரப்பி மகிழ்ந்தார். தனது இந்த அரிய கண்டுபிடிப்பை இலண்டனில் உள்ள ராயல் குழுமத்தில் பதிவு செய்துகொண்டார்.

முதன்முதலாகப் பொதுமக்கள் கண்டுகளிக்கும் தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் இங்கிலாந்து நாட்டின் தலைநகரான இலண்டனில் ஒளிபரப்பப்பட்டன. அது கறுப்பு, வெள்ளை நிறக் (Black and White) காட்சி ஒளிபரப்பாகும். பின்னர், அமெரிக்காவில் வண்ணநிற (Colour) ஒளிபரப்பு தொடங்கப் பட்டது.


ஜான் லெகி பெயர்டு

தொடக்ககாலத்தில் படம்பிடிக்கும்கருவியின் முன் நிகழ்ச்சிகள் நடத்தப்பட்டு நேரடியாக ஒளிபரப்பப்பட்டன. 1956 இல் அமெரிக்காவின் 'ஆம்பெக்ஸ்' நிறுவனம் நிகழ்ச்சிகளைப் பதிவுசெய்து, தேவைப்படும்போது காட்சிப்படுத்தும் ஒளிப்பதிவு நாடா (VTR-Video Tape Recorder) என்ற கருவியை உருவாக்கியது. அதன்பிறகு நவீனத் தொழில்நுட்பம் கொண்ட படப்பிடிப்புக் கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டன. தற்காலத்தில் தொலைக்காட்சி ஒளிபரப்புகள் முழுமையாக எண்ணிம (Digital) வடிவத்திற்கு மாற்றப்பட்டுவிட்டன. இதனால் காட்சிகளைத் தெளிவாகவும் துல்லியமாகவும் காணமுடிகிறது.

## இந்தியாவில் தொலைக்காட்சி

இந்தியாவில் முதன்முதலில் தொலைக்காட்சி 1959-இல் புதுதில்லியில் தொடங்கப்பட்டது. முதலில் நிகழ்ச்சிகள் கறுப்பு வெள்ளை நிறத்தில் ஒளிபரப்பாயின. பின்பு, 1982ஆம் ஆண்டு ஆகஸ்ட் 15 ஆம் நாள் வண்ணத் தொலைக்காட்சியாக வளர்ச்சி பெற்றது. இவ்வண்ணத் தொலைக்காட்சியில் இந்திரா காந்தி அம்மையாரின் சுதந்திரதினவிழாப் பேருரையே முதல் நிகழ்ச்சியாக அமைந்தது.

## வானொலி, தொலைக்காட்சி சேவைகள்

வானொலியும் தொலைக்காட்சியும் தகவல்களைத் தரும் தகவல் தொடர்பு ஊடகங்களாக மட்டுமல்லாமல் கல்வி, வேளாண்மை, அறிவியல், மருத்துவம், விளையாட்டு முதலான பல்வேறு துறைசார்ந்த அறிவையும் கொண்டு செல்லும் அறிவுசார் ஊடகங்களாகவும் திகழ்கின்றன.

## உழவர் நிகழ்ச்சிகள்

வானொலியில் பண்ணைச் செய்திகளும், உழவர்கள் மற்றும் விரிவாக்கப் பணியாளர்களுக்கான அறிவிப்புகளும் இடம்பெற்று வருகின்றன.

வானொலியில் உழவர் நிகழ்ச்சி மூலமாக விதைகள் அறிமுகம், பயிர்கள் பராமரிப்பு, பயிர்களைத் தாக்கும் நோய்கள், தடுக்கும் முறைகள் முதலியவற்றிற்கு வேளாண் விரிவாக்க அலுவலர்கள் விளக்கம் அளிக்கின்றனர். மேலும் வேளாண் திட்டங்கள், அரசின் கடன் உதவிகள், நீர் மேலாண்மை, கால்நடை வளர்ப்பு, சிற்றூர்

வளர்ச்சிப் பணிகள், குடிசைத் தொழில்கள் எனப் பல்வேறு செய்திகளை வானொலி, உழவர்களுக்காக ஒலிபரப்பி வருகிறது.



பல்வேறு நிகழ்ச்சிகள் தொலைக்காட்சிகளிலும் ஒளிபரப்பப்படுகின்றன. பொதிகைத் தொலைக்காட்சியில் பண்ணை இல்லம், வயலும் வாழ்வும், பொன்விளையும் பூமி முதலான பல்வேறு தலைப்புகளில் இயற்கை வேளாண்மை, அதிக விளைச்சல் பெறுவதற்கான வழிமுறைகள், வேளாண் தொழில்சார்ந்த நவீனத் தொழில்நுட்பங்கள் போன்ற நிகழ்ச்சிகள் ஒலிபரப்பப்படுகின்றன.

## உரைச்சித்திரம்

வானொலி உரை நிகழ்த்துபவர் தாம் எடுத்துக்கொண்ட பொருளினைச் சித்திரித்து உரைக்கும்போது அது உரைச்சித்திரமாகிறது. இவ்வாறு வழங்கும் உரைச்சித்திரம் கேட்பவர்களின் ஆர்வத்தைத் தூண்டும். மேலும் கேள்விப்பொருளானது காட்சிப்பொருளாக மனக்கண்ணில் தோன்றி நேயர்களை மகிழ்விக்கும்.

இரண்டாம் உலகப்போரின் போது மக்களுக்கு உண்மை நிலையினை உணர்த்தி நம்பிக்கை ஊட்டுவதற்காக, வானொலி உரைச்சித்திரங்கள் முதன்முதலாக ஒலிபரப்பாயின. தேசிய நெருக்கடிக் காலங்களில் மக்களிடையே ஒற்றுமையையும் நம்பிக்கையையும் வளர்க்கும் விதமாக உரைச்சித்திரங்கள் நிகழ்த்தப்பட்டன. விழாக்கள், வழிபாட்டுத் தலங்கள் பற்றிய உரைச்சித்திரங்களும் வானொலியில் ஒலிபரப்பப்படுகின்றன.

கவிதை, இசை, பலகுரல், வருணனை, உணர்ச்சிக்கேற்ப குரல் ஏற்ற இறக்கம் எனப் பல உத்திகளைக் கொண்டு நேயர்களைத் தன்வயப்படுத்தும் வகையில் வானொலி உரைச்சித்திரங்கள் அமைந்திருக்கும்.

தொலைக்காட்சிகளிலும் இது போன்றே நேரலை ஒளிபரப்பாக உரைச்சித்திரங்கள் ஒளிபரப்பப்படுகின்றன. தேசிய மற்றும் மாநில அரசு விழாக்கள், கோவில் திருவிழாக்கள், குடமுழுக்கு, விளையாட்டுப் போட்டிகள் போன்றவற்றைக் காட்சிகளோடு வருணனையாளர்கள் தொகுத்து வழங்குவர். இந்நேரலை ஒளிபரப்புகள் நிகழ்வுகளை நேரடியாகக் காணும் அனுபவத்தை மக்களுக்கு வழங்குகின்றன.

## தொழிலாளர் நிகழ்ச்சிகள்

தொழிற்சாலைகளில் பணிபுரியும் நகர்ப்புற மக்களுக்காகத் தொழிலாளர் நிகழ்ச்சிகள் தொடங்கப்பட்டன. நாளடைவில் அவை கிராமப்புற மக்களுக்கும் பயன்படும் வகையில் விரிவுபடுத்தப்பட்டன. ஒவ்வொரு மாநிலத்திலும் அங்கு நடைபெறும் தொழில்களை மையப்படுத்தி தொழிலாளர் நிகழ்ச்சிகள் வானொலி மற்றும் தொலைக்காட்சிகளில் நிகழ்த்தப்படுகின்றன. இந்நிகழ்ச்சிகளில் புதிய தொழில் பற்றிய அறிமுகம், தொழில் முன்னேற்றம் தொடர்பான வழிகாட்டுதல்கள், தொழிலாளர் நலத்திட்டங்கள் முதலானவை இடம்பெறுகின்றன.

### அறிவோம் தெளிவோம்

**வானொலி**

டி.கே. சிதம்பரனார் "ரேடியோ" என்ற சொல்லுக்குத் தமிழில் வானொலி என்ற சொல்லை முன்மொழிந்தார். ஆல் இந்தியா ரேடியோ, ஆகாஷவாணி என்று முழங்கி வந்த நிலையில் முதன்முதலில் திருச்சி வானொலி நிலையம் 1959இல் திருச்சி வானொலி நிலையம் என்று அறிவித்தது. அதன்பிறகு வானொலி என்ற சொல்லை அனைவரும் பயன்படுத்தத் தொடங்கினர்.

## கல்வி நிகழ்ச்சிகள்

பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழக மாணவர்களுக்கும், அஞ்சல்வழிக் கல்வி மற்றும் தொலைதூரக் கல்வி பயிலும் மாணவர்களுக்கும் ஏற்ற வகையில் கல்வி ஒலிபரப்பில் வானொலி ஊடகம் மிகச்சிறந்த தொண்டாற்றி வருகிறது.




கல்வியைத் தரமானதாக்கவும் பரவலாக்கவும் கிராம மற்றும் நகர்ப் புறங்களுக்கிடையே உள்ள இடைவெளியைக் குறைக்கவும் தொலைக்காட்சி ஒரு சிறந்த ஊடகமாக அறியப்படுகிறது. 1976 ஆம் ஆண்டு நிறைவுற்ற சைட் (SITE) திட்டம் இதற்கான ஆய்வு உறுதிகளை வழங்கியது. இதனால் ஊக்கம் பெற்ற இந்தியக் கல்வியாளர்கள் தொலைக்காட்சியைக் கல்வி வளர்ச்சிக்கான ஓர் ஊடகமாக மாற்றும் முயற்சிகளில் ஈடுபட்டனர். 1983 இல் இன்சாட் 1பி என்ற தொலைத்தொடர்பு செயற்கைக்கோள் ஏவப்பட்டதன் காரணமாக நாட்டில் மண்டல ஒளிபரப்புகள் தொடங்கப்பட்டன. அனைத்துத் தொலைக்காட்சி ஒளிபரப்பு நிலையங்களும் ஒன்றோடொன்று இணைக்கப்பட்டன. இதன் காரணமாக இவ்வசதியைப் பயன்படுத்தி நாடெங்குமுள்ள கல்லூரி மாணவர்களுக்குப் பொதுவான கல்வி நிகழ்ச்சிகள் வழங்கத் திட்டமிடப்பட்டது.

பல்கலைக்கழக நிதி நல்கைக் குழு நாள்தோறும் ஒரு மணி நேரம் உயர் கல்வி நிகழ்ச்சிகள் வழங்கும் 'நாடெங்கும் கல்லூரி வகுப்பு' என்னும் கல்வித் தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் தூர்தர்சனுடன் இணைந்து வழங்கத்தொடங்கியது. இத்திட்டம் 1984 ஆகஸ்ட் 15 ஆம் நாள் தொடங்கி வைக்கப்பட்டது. விடுமுறை தினங்களைத் தவிர ஏனைய நாள்களில் மதியம் 1 மணிமுதல் 2 மணிவரை இக்கல்வி நிகழ்ச்சிகள் ஒளிபரப்பப்பட்டன. மாலையில் 4 மணிமுதல் 5 மணிவரை மறு ஒளிபரப்பும் செய்யப்பட்டது.

தமிழக அரசு கல்வி ஒளிபரப்பிற்கென 2019ஆம் ஆண்டு சனவரி 21ஆம் நாள் தொலைக்காட்சி நிலையம் ஒன்றைத் தொடங்கி, நிகழ்ச்சிகளை ஒளிபரப்பி வருகிறது. இதன் மூலம் அனைத்துத் தரப்பு மக்களும் கல்வி தொடர்பான தங்களது ஐயங்களைக் கேட்டுத் தெளிவுபெறலாம். பள்ளிக் கல்வித்துறையின் செயல்பாடுகள், போட்டித்தேர்வுகளுக்கான பயிற்சிகள், வழிகாட்டுதல்கள் மற்றும் அரசின் நலத்திட்டங்கள் உள்ளிட்ட பல்வேறு நிகழ்ச்சிகள் இதில் ஒளிபரப்பாகின்றன.

## பெண்களுக்கான நிகழ்ச்சிகள்.

ஐ.நா. அவை 1975ஆம் ஆண்டை உலகப் பெண்கள் ஆண்டாக அறிவித்தது. அவ்வாண்டில் இந்திய வானொலி நிலையங்கள் அனைத்திலும் பெண்களுக்கான சிறப்பு நிகழ்ச்சிகள் தொடங்கப்பட்டன. பெண்களின் மன நலம், உடல் நலம் பேணும் நிகழ்ச்சிகளும் அவர்களின் உரிமைகள் சார்ந்த நிகழ்ச்சிகளும் தொலைக்காட்சிகளில் ஒளிபரப்பப்படுகின்றன.

### அறிவோம் தெளிவோம்

**இந்தியத் தொலைத்தொடர்பு ஒழுங்குமுறை ஆணையம்**
**(TRAI – Telecom Regulatory Authority of India)**

இந்தியாவில் தொலைத் தொடர்புச் சேவைகளையும் கட்டணத்தையும் ஒழுங்குபடுத்த பாராளுமன்ற சட்டம் 1997 இன் 3 ஆவது பிரிவு வழிவகை செய்கிறது. அதன்படி 1997 பிப்ரவரி 20 அன்று இந்தியாவின் தொலைத் தொடர்பு ஒழுங்குமுறை ஆணையம் (TRAI) நிறுவப்பட்டது. தொலைத்தொடர்புச் சேவைகளையும் சுங்க வரி விதிப்புகளையும் இவ்வாணையம் மேற்பார்வை செய்துவருகிறது.



12th ADVNCEl Tamil - Chap 5&6.indd 211
14-04-2020 18:51:53

## விளையாட்டு நிகழ்ச்சிகள்

இளைஞர்களால் பெரிதும் விரும்பப்படும் நிகழ்ச்சிகளாக விளையாட்டு நிகழ்ச்சிகள் அமைந்துள்ளன. உலக அளவில் நடைபெறும் மட்டைப்பந்து (கிரிக்கெட்), கால்பந்து, இறகுப் பந்து, சடுகுடு முதலான விளையாட்டுப் போட்டிகளைத்தொலைக்காட்சிகள் நேரலையாக ஒளிபரப்புகின்றன. இதற்கெனத் தனியே 24 மணிநேர விளையாட்டு அலைவரிசைகள் இயங்கி வருகின்றன. எடுத்துக்காட்டாக டிடி.ஸ்போர்ட்ஸ், ஸ்டார் ஸ்போர்ட்ஸ், டென் ஸ்போர்ட்ஸ் போன்ற சில தொலைக்காட்சிகளைக் குறிப்பிடலாம். முக்கியமான விளையாட்டுப் போட்டிகளை வானொலி நிலையங்களும் நேரலையாக ஒலிபரப்புகின்றன.

## கலை மற்றும் பண்பாட்டு நிகழ்ச்சிகள்

குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை பங்குபெறும் கலைநிகழ்ச்சிகள் தொலைக்காட்சிகளில் ஒளிபரப்பப்படுகின்றன. நடனம், நாட்டியம், இசை, பாடல், பலகுரல் முதலான தனித்திறமைகளை வெளிப்படுத்துவதற்கான களமாக இவ்வகைத் தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் அமைந்துள்ளன. இதற்காகத் தனியே போட்டிகள் நடத்தப்பட்டுப் பரிசுகளும் விருதுகளும் வழங்கப்படுகின்றன.

தொலைக்காட்சிகளில், தமிழர் பண்பாட்டைப் போற்றும் வகையில் கிராமியக் கலைகளில் சிறந்து விளங்கும் கலைஞர்களைக் கொண்டு கலைநிகழ்ச்சிகள் நடத்தப்படுகின்றன. விழாக்காலங்களில் விழாவின் பெருமையினைப் போற்றும் வகையிலும் நேயர்களை மகிழ்விக்கும் வகையில் தொலைக்காட்சிக் கலைஞர்களால் சிறப்பு நிகழ்ச்சிகள் நடத்தப்பட்டு ஒளிபரப்பப்படுகின்றன.

வானொலியில் நிகழ்த்தப்படும் நாட்டுப்புற இசை, கர்நாடக இசை, கிராமியக் கலைகள் போன்றவற்றிற்கெனத் திரளான நேயர்கள் இருப்பது குறிப்பிடத்தக்கது.

## இலக்கிய நிகழ்ச்சிகள்

இலக்கியம் மனித வாழ்வோடு இணைந்த ஒன்றாக உள்ளது. அறிவை மேம்படுத்திப் புதுமைகளை விளைவிப்பனவும், மனித மாண்புகளை வளப்படுத்தி மகிழ்ச்சியைத் தருவனவும் இலக்கியங்களே. இத்தகைய இலக்கியங்களை மக்களுக்குச் சுவைபட வழங்குவதில் தொலைக்காட்சியும் வானொலியும் பெரும்பங்காற்றுகின்றன.

தொலைக்காட்சியில் ஒளிபரப்பாகும் சில இலக்கிய நிகழ்ச்சிகள்

### 1. கவியரங்கம்

இளம் கவிஞர்களுக்கான வெளிப்பாட்டுக் களங்களாகக் கவியரங்கங்கள் திகழ்கின்றன. அவர்களது படைப்புத்திறனை உலகறியச் செய்வதில் தொலைக்காட்சியின் பங்கு போற்றுதலுக்குரியதாகும்.



### உங்களுக்குத் தெரியுமா?

1. உலகத் தொலைக்காட்சி தினம் – நவம்பர் –21
2. வானொலி அதிர்வெண்ணைக் கண்டுபிடித்தவர் – ஹெய்ன்ரீச் ருடோல்ஃப் ஹெட்ஸ்
3. அகில இந்திய வானொலியின் தலைமையிடம் – ஆகாஷ்வாணி பவன், புதுதில்லி
4. அகில இந்திய வானொலியின் பொன்மொழி – 'பகுஜன் ஹிதயா, பகுஜன் சுகயா'
5. பண்பலை வானொலி ஒலிபரப்புமுறையைக் கண்டுபிடித்தவர் – எட்வின் எச். ஆம்ஸ்ட்ராங்
6. தூர்தர்சனின் பொன்மொழி – சத்தியம் சிவம் சுந்தரம்
7. அகில இந்திய வானொலியின் தலைப்பு இசையை அமைத்தவர் – பண்டிட் ரவி சங்கர்
8. பொது ஒலிபரப்புநாள் கொண்டாடப்படும் தினம் – நவம்பர் – 12
9. மக்களவைத் தொலைக்காட்சி தொடங்கப்பட்ட ஆண்டு – 2004
10. உலக பொம்மலாட்ட தினம் – மார்ச் 21
11. உலக வானொலி தினம் – பிப்ரவரி 13

### 2. பட்டிமன்றம்

இலக்கியங்களில் பொதிந்துள்ள கருத்துகளைப் பன்முக நோக்கில் ஆராயும் களமாகத் தொலைக்காட்சிப் பட்டிமன்றங்கள் விளங்குகின்றன. இதன்மூலம், இலக்கியம் தனது அடுத்த நிலையினை நோக்கி நகரத் தொடங்குகிறது எனலாம்.

### 3. வழக்காடு மன்றம்

ஓர் இலக்கியம் படைக்கப்பட்டதற்கான நோக்கத்தினை முன்வைத்துப் பல்வேறு கோணங்களில் இருவர் விவாதிக்கும் வழக்காடு மன்ற நிகழ்ச்சிகள் தொலைக்காட்சியில் ஒளிபரப்பாகின்றன.

### 4. சொற்பொழிவு

சிறந்த மேடைப் பேச்சாளர்களின் சொற்பொழிவுகள் நேரலையாகவும் பதிவு செய்யப்பட்டும் தொலைக்காட்சிகளில் ஒளிபரப்பப்படுகின்றன. இதன்மூலம் நற்பண்புகளை வளர்க்கும் சான்றோர் பெருமக்களின் சிந்தனைகள் மக்களைச் சென்றடைகின்றன.

### 5. தனிஉரை

சான்றோர் பெருமக்களால் நிகழ்த்தப்படும் தனி உரைகள் தொடர் நிகழ்ச்சியாகவோ விழாக்காலச் சிறப்பு நிகழ்ச்சியாகவோ ஒளிபரப்பாகின்றன.

### 6. மன்ற நிகழ்ச்சிகள்

கம்பன் கழகம் போன்ற தமிழ் இலக்கிய அமைப்புகள் நடத்தும் சிறப்பு நிகழ்ச்சிகள் நேரலையாகவும் பதிவு செய்தும் ஒளிபரப்பப்படுகின்றன.

### 7. கருத்தரங்கம்

இலக்கியங்களில் காணப்படும் சிறப்பான கருத்துகளை முன்வைத்து அதற்கு விரிவு காணும் நோக்கில் கருத்தரங்கங்கள் நடத்தப்படுகின்றன. இக்கருத்தரங்க நிகழ்வுகளை மக்களிடையே கொண்டு சேர்க்கும் பணியினைத் தொலைக்காட்சிகள் செய்து வருகின்றன.

இவை போன்ற பல்வேறு நிகழ்ச்சிகளின் வாயிலாகத் தொலைக்காட்சிகள் இலக்கியங்களின் பன்முகதன்மையை உலகிற்குப் பறைசாற்றி வருகின்றன.

#### அறிவோம் தெளிவோம்

**உஷா மேத்தாவின் சுதந்திரக் குரல் வானொலி நிலையம்**



1920 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 24 ஆம் நாள் குஜராத் மாநிலத்தில் பிறந்தவர் உஷா மேத்தா. இவர், தமது 22 ஆம் வயதில் பாபுபாய் படேல் என்பவரின் உதவியுடன் 1942, ஆகஸ்ட் 14 அன்று ஒரு வானொலி நிலையத்தை உருவாக்கினார். தலைவர்களின் உரைகள், விடுதலைப் போராட்ட உத்திகள் போன்ற பல நிகழ்ச்சிகள் இதில் ஒலிபரப்பப்பட்டன. இந்நிலையத்தை ஒரே இடத்திலேயே தொடர்ச்சியாகச் செயல்படுத்த முடியவில்லை. பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை இடம்மாற்றப்பட்டது. மூன்று மாதங்கள் மட்டுமே இந்த வானொலி நிலையம் இயங்கியது.

வானொலியும் தன் பங்கிற்கென இலக்கிய நிகழ்ச்சிகளை ஒலிபரப்பி வருகின்றது. கவிதை, கதை, இலக்கிய விமர்சனம், சொற்பொழிவுகள் போன்ற நிகழ்ச்சிகள் வாரத்தின் குறிப்பிட்ட நாள்களிலும் விழாக்காலங்களின்போதும் ஒலிபரப்பப்படுகின்றன.

### திரைப்படம் தொடர்பான நிகழ்ச்சிகள்

தமிழ்நாட்டில் 1993ஆம் ஆண்டிற்கு முன்னர் தூர்தர்சன் என்ற ஒரே அரசுத் தொலைக்காட்சி நிறுவனம் மட்டுமே இருந்தது. இதில் வெள்ளிக்கிழமையில் இரவு நேரத்தில் ஒளியும் ஒலியும் என்ற தலைப்பில் திரைப்படப் பாடல்கள் ஒளிபரப்பப்படும். ஞாயிறு மாலையில் ஒரு தமிழ்த் திரைப்படம் ஒளிபரப்பாகும்.

தனியார் தொலைக்காட்சிகள் தொடங்கப்பட்டபிறகு திரைப்படம் பற்றியும் திரைப்பட நடிகர்கள் பற்றியும் பேசாத

தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் இல்லை என்றே சொல்லலாம். திரைப்பட விமர்சனம், திரைப்படத் துறையினருக்கு விருது வழங்கும் விழாக்கள், திரைப்படத் துறையினருடன் நேர்காணல் என எண்ணற்ற திரைப்படம் சார்ந்த நிகழ்ச்சிகள் தொலைக்காட்சியில் ஒளிபரப்பப்படுகின்றன. திரைப்படங்களைமட்டுமேஒளிபரப்புவதற்கெனத் தனியே தொலைக்காட்சி நிலையங்கள் தொடங்கப்பட்டுள்ளன.

வானொலியிலும் திரைப்படம் சார்ந்த நிகழ்ச்சிகள் ஒலிபரப்பப்படுகின்றன. திரையிசைப்பாடல்கள், திரைக்கதம்பம், திரைப்படத்தின் வசனத்தை ஒலிபரப்பும் ஒலிச்சித்திரம், திரைப்பட ஆளுமைகளின் பேட்டி முதலான நிகழ்ச்சிகள் வானொலியில் இடம்பெறுகின்றன.

### தொடர்கள்/ நாடகங்கள்

நெடுந்தொடர்கள் தொலைக்காட்சியின் முக்கிய பகுதியாக விளங்குகின்றன. கதாசிரியர்களின் சொந்த படைப்புகள், மகாபாரதம், இராமாயணம் முதலான இதிகாசங்களும் கந்தபுராணம், பெரியபுராணம், திருவிளையாடற்புராணம் போன்ற புராணக் கதைகளும் தொலைக்காட்சியில் நெடுந்தொடர்களாக ஒளிபரப்பப்படுகின்றன. நகைச்சுவை நாடகங்களும் விழிப்புணர்வு நாடகங்களும் குறிப்பிட்ட சில நாள்களில் தொடர்ந்து ஒளிபரப்பாகின்றன.

### அறிவோம் தெளிவோம்

#### இலக்கு அளவீட்டுப் புள்ளி (TRP)

(Target Rating Point) என்பது மொத்த பார்வையாளர்களுள் எத்தனை பார்வையாளர்கள் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைப் பார்க்கிறார்கள் என்பதன் மதிப்பீட்டளவாகும். ஒரு தொலைக்காட்சியில் ஒளிபரப்பாகும் ஒரு விளம்பரம் அல்லது தொடரினைப் பார்த்து ரசித்த இலக்கு பார்வையாளர்களின் மதிப்பீட்டுப் புள்ளிகளின் கூட்டுத்தொகை ஆகும். இதனை அளவிடும் கருவி "மக்கள் கருவி" என அழைக்கப்படும்.



வானொலியிலும் நாடகங்களுக்கு முக்கியத்துவம் வழங்கப்படுகிறது. தொடர் நாடகங்களும் குறுநாடகங்களும் ஒலிபரப்பப்பட்டு வருகின்றன. நாடகப் படைப்பாளர்களை ஊக்குவிக்க நாடகவிழாக்கள் நடத்தப்படுகின்றன.

### சிறுவர் நிகழ்ச்சிகள்

வானொலி, தொலைக்காட்சிகளில் சிறுவர்களை மகிழ்விக்கும் பல நிகழ்ச்சிகள் ஒலி-ஒளிபரப்பாகி வருகின்றன. இந்நிகழ்ச்சிகள் குழந்தைகளின் அறிவாற்றலை மேம்படுத்தும் வகையிலும் ஒழுக்க நெறியினைக் கற்பிக்கும் வகையிலும் தயாரிக்கப்பட்டு ஒளிபரப்பப்படுகின்றன.



இவற்றில் சிறுவர்களுக்கான நன்னெறிக் கதைகள், பொதுஅறிவு நிகழ்ச்சிகள், பொழுதுபோக்கு நிகழ்ச்சிகள் போன்றவை இடம்பெறுகின்றன. சிறுவர்களுக்கெனத் தனியான அலைவரிசைகள் தொடங்கப்பட்டு 24 மணி நேரமும் சிறுவர் நிகழ்ச்சிகளை ஒளிபரப்பி வருகின்றன.

## நேயர் கடிதங்கள்

நிகழ்ச்சிகள் பற்றிய நேயர்களின் கருத்துகளைத் தெரிந்துகொள்வதற்காக வானொலியில் 'நேயர் கடிதம்' என்ற நிகழ்ச்சியும் தொலைக்காட்சியில் 'எதிரொலி' என்ற நிகழ்ச்சியும் குறிப்பிட்ட கால இடைவெளியில் வழங்கப்படுகின்றன. இந்நிகழ்ச்சியில் நேயர்களின் மடல்கள் வாசிக்கப்பட்டு அவற்றிற்கான பதில்கள் முன்வைக்கப்படுகின்றன.

| மின்னணு ஊடகம் | நிகழ்ச்சி |
|---|---|
| GYAN DARSHAN | கல்வித் தொலைக்காட்சி |
| GYAN VANI | கல்வி வானொலி |
| DD News | செய்திகள் |
| NATIONAL GEOGRAPHIC CHANNEL | புவியியல் |
| ANIMAL PLANET | உயிரியல் |
| DD NATIONAL / STAR SPORTS | விளையாட்டு |
| TACTV | அரசு சேவை |
| NASA TELEVISION | அறிவியல் |
| Discovery life CHANNEL | உடல்நலம் |
| BBC Worldwide | உலகச்செய்திகள் |

### அறிவோம் தெளிவோம்

அலைக்கற்றை எஸ்.பாண்ட்(S–Band) அலைக்கற்றை என்பது 2 முதல் 5 கிகா கெட்சு வரை உள்ள ரேடியோ அலையளவைக் குறிப்பதாகும். இது அலைபேசித் தொலைத்தொடர்புக்கும், ராடார் இயக்கத்துக்கும், தரைவழித் தொலைத்தொடர்புக்கும் பயன்படுகிறது. இதில் 2.6 கிகா கெட்சு (2500–2690 கிகா கெர்ட்சு) என்றழைக்கப்படும் அலைநீளம் உலக வானொலி மன்றத்தால் 2000 ஆம் ஆண்டு தரைவழி அலைபேசி பயன்பாட்டிற்கு வழங்கப்பட்டுள்ளது.

## துறைசார் தொலைக்காட்சிகள்

ஒரே அலைவரிசையில் அனைத்து நிகழ்ச்சிகளையும் (Channel) ஒளிபரப்பிய நிலைமாறி ஒவ்வொரு துறைக்கும் தனித்தனியே அலைவரிசைகள் தொடங்கப்பட்டுள்ளன. செய்தி, விளையாட்டு, கல்வி, மருத்துவம், இசை, திரைப்படம், விளம்பரம், குழந்தைகளுக்கானவை, ஆன்மிகம், சூழலியல், பொழுதுபோக்கு, நகைச்சுவை போன்ற நிகழ்ச்சிகள் துறைசார் அலைவரிசைகளில் ஒளிபரப்பப்படுகின்றன. சில துறைசார் தொலைக்காட்சிகளும் அதில் ஒளிபரப்பாகும் நிகழ்ச்சிகளும் பின்வருமாறு:

## இணையமும் தகவல் தொடர்பும்

திறன்பேசியின் மூலம் ஒவ்வொரு தனிமனிதனும் தனது எண்ணங்களையும் தன்னைச் சுற்றி நடக்கும் நிகழ்வுகளையும் உடனுக்குடன் இணையத்தில் பதிவேற்றம் செய்யமுடியும். அதனை அடுத்த வினாடியே உலக மக்கள் அனைவரும் காணலாம். இதற்கென இணையத்தில் மின்னஞ்சல், வலைப்பூக்கள், முகநூல், கீச்சகம், புலனம் போன்றவை நமக்குப் பயன்படுகின்றன. இச்சமூக ஊடகங்கள் பிறர் மனத்தைப் புண்படுத்தும் எதிர்மறையான கருத்துகளையும் உண்மைக்குப் புறம்பான தகவல்களையும் பதிவிடவோ பகிர்ந்துகொள்ளவோ கூடாது. மத்திய அரசு, தகவல் தொழில்நுட்பத்துறை இவற்றைக் கண்காணிப்பதற்காகச் சில விதிமுறைகளை வகுத்துள்ளது.

# வானொலி மற்றும் தொலைக்காட்சி – உள்கட்டமைப்பு

பன்னிரண்டாம் வகுப்பு மாணவி பாரதி, தொலைக்காட்சி நிலையத்தைப் பார்வையிட்டு வந்த அனுபவத்தை மின்னஞ்சல் மூலமாக அயல்நாட்டில் பணிபுரியும் தன் தந்தையிடம் பகிர்ந்து கொள்கிறாள்.

நாள்: 28.03.2019
இடம்: பூம்புகார்

அப்பா! அன்பும் வணக்கமும். எங்கள் பள்ளியின் சார்பாகச் சென்ற வாரம் தொலைக்காட்சி நிலையத்தைப் பார்வையிடச் சென்றிருந்தோம். அந்த அனுபவத்தைத் தங்களுடன் பகிர்ந்துகொள்ள விரும்புகிறேன்.

பனிவிலகும் அதிகாலை நேரம். வானுயர்ந்த ஒளிபரப்பு கோபுரம் பொருத்தப்பட்டிருந்த வளாகத்தை அடைந்தோம். 'இதுதான் நாம் காணவந்த தொலைக்காட்சி நிலையம்' என்றார் எங்கள் வகுப்பாசிரியர். இதுவரை வீட்டில் இருந்தபடியே செய்திகளையும் கலைநிகழ்ச்சிகளையும் தொலைக்காட்சியில் கண்டுகளித்த எங்களுக்குத் தொலைக்காட்சி நிலையத்தை நேரில் பார்ப்பது வியப்பாக இருந்தது. எங்கள் வருகைக்கு அனுமதியளித்திருந்த நிலைய இயக்குநரும் பணியாளர்களுள் சிலரும் நுழைவாயிலிலேயே காத்திருந்தனர். மாணவர்களாகிய எங்களை வரவேற்க நிலைய இயக்குநரே காத்திருந்த செயல் எங்களுக்கு மகிழ்ச்சியளித்தது.



மலர்விழி: துவண்டுபோன உள்ளங்களிளெல்லாம் தமது உரையின்மூலம் தன்னம்பிக்கை விதையினை தூவிய ஆட்சியர் ஐயா அவர்களுக்கு நம் அனைவரின் சார்பாக நன்றியினைத் தெரிவித்துக்கொள்வோம்.

நாளைய பாரதத்தின் நம்பிக்கை நாயகர்களான இளம் சாதனையாளர்களை ஆட்சியர் அவர்களின் பொற்கரங்களால் விருதுகளைப் பெற அழைக்கிறேன்.

மலர்விழி: மாசுபடாத மனத்தில் துன்பங்கள் இருப்பதில்லை மாசுபடாத மண்ணில் நோய்கள் இருப்பதில்லை; இந்த உண்மையை உணர்ந்தே மகாத்மா காந்தியடிகளும் குப்பைகளை எங்குக் கண்டாலும் தாமே தூய்மை செய்வார். அவரின் வழித்தோன்றலாக, தாம் வாழும் சூழலில் தொடர்ந்து தூய்மையைக் கடைபிடித்துவரும் மாணவி கனியமுது அவர்களை இந்த ஆண்டின் சிறந்த தூய்மையாளர் விருதினைப் பெற அழைக்கிறேன்.

(துய்மையாளர் விருது வழங்கப்படுகிறது)

மலர்விழி: விளையாட்டு மைதானங்கள் வீரர்களை உருவாக்குகின்றன. நூலகங்கள் சிந்தனையாளர்களையும் சான்றோர்களையும் அறிவியலாளர்களையும் உருவாக்குகின்றன. இலண்டன் நூலகத்தில் அதிக அளவிலான புத்தகங்களைப் படித்தவர்கள் என்ற பெருமைக்குரியவர்கள் இருவர். அதில் ஒருவர் நமது நாட்டின் சட்டமேதையான டாக்டர் அம்பேத்கர். மற்றொருவர் இலண்டனைச் சார்ந்த காரல்மார்க்ஸ். நமது மாவட்டத்தில் அதிக புத்தகங்களை வாசித்த மாணவன் வான்நிலவன் அவர்கள் இந்த ஆண்டிற்கான சிறந்த படிப்பாளர் விருதினைப் பெறுகிறார்.

(படிப்பாளர் விருது வழங்கப்படுகிறது)

மலர்விழி: பாலையூர் கிராமத்தில் நடைபெற்ற நாட்டுநலப் பணித் திட்ட மருத்துவ முகாமில் மக்களுக்கு அன்னை தெரசாவைப் போல் சிறந்த தொண்டாற்றிய நம் கார்குழலி அவர்களை இந்த ஆண்டிற்கான சிறந்த தொண்டாளர் விருதினைப் பெற அழைக்கிறேன்.

(சிறந்த தொண்டாளர் விருது வழங்கப்படுகிறது)

மலர்விழி: இயற்கையைப் போற்றிய நம்மாழ்வார் போல பள்ளி வளாகத்தைத் தம் உழைப்பால் பசுமை நிறைந்த சோலையாக மாற்றிய தாமரைக்கண்ணன் அவர்களைச் சிறந்த பசுமையாளர் விருதினைப் பெற அழைக்கிறேன்.

(சிறந்த பசுமையாளர் விருது வழங்கப்படுகிறது)

மலர்விழி: அடுத்ததாக காவூர் அரசு மேல்நிலைப் பள்ளி மாணவன் கவியரசன் அவர்கள் இயற்கையைப் போற்றும் இனிய பாடல் ஒன்றைப் பாடி நம்மை மகிழ்விக்க வருகிறார்.

(கவியரசன் பாடலைப் பாடுகிறார்)

மலர்விழி: தமது இசைப் பாடலால் நம்மையெல்லாம் தாலாட்டிய கவியரசன் அவர்களுக்கு நன்றி. அடுத்ததாக பண்பாளர் விருது. பண்புடையவர்கள் வாழ்வதால்தான் இவ்வுலக உயிர்கள் மகிழ்ச்சியைக் காண்கின்றன. தமது மனிதப் பண்பால் மக்களின் மனத்தில் இடம் பிடித்த அப்துல் காலம் போல பிறர் மனம் புண்படாமல் பல நற்செயல்கள் புரிந்த பண்பாளர் பாவேந்தன் அவர்களுக்கு இந்த ஆண்டிற்கான சிறந்த பண்பாளர் விருது வழங்கப்படுகிறது.

(பாவேந்தன் பண்பாளர் விருது பெறுகிறார்)

மலர்விழி: அடுத்ததாக, சாலை விபத்துகளைத் தடுக்கும் வாகன வேகத்தடைக் கருவியைக் கண்டுபிடித்தமைக்காக தமிழரசன் அவரகளுக்கு இளம் அறிவியலாளர் விருது வழங்கப்படுகிறது.

(தமிழரசன் இளம் அறிவியலாளர் விருது பெறுகிறார்)

*மலர்விழி:* நிகழ்ச்சியின் நிறைவாக, நாட்டின் ஒற்றுமையை உணர்த்தும் தேசப்பற்றுமிக்க பாடலுக்கு உறையூர் அரசு மேல்நிலைப் பள்ளி மாணவர்கள் நடனமாட வருகின்றனர் .

(மாணவர்களின் நடன நிகழ்ச்சி)

*மலர்விழி:* உறையூர் பள்ளி மாணவர்கள் ஐந்து மணித்துளிகள் நம்மையெல்லாம் தங்களது நடனத்தால் உறையவைத்துவிட்டார்கள். அந்த மாணவச் செல்வங்களை நம் கரவொலியால் வாழ்த்துவோம். நிறைவாக மாவட்டக் கல்வி அலுவலர் ஐயா அவர்கள் நன்றியுரையாற்ற வருகிறார்.

(மாவட்டக் கல்வி அலுவலர் அவர்களின் நன்றியுரை)

*மலர்விழி:* நிழ்ச்சியின் நிறைவாக நாட்டுப்பண்

(அனைவரும் எழுந்து நின்று நாட்டுப்பண் பாடுகின்றனர்)

குறிப்பு : சூழ்நிலைக்கேற்ப, சுவையான வருணனைகளைச் சேர்த்து வழங்கும் தொகுப்பாளரின் உத்திகள் நிகழ்ச்சியினைச் சிறப்பாக்க உதவும்

### மாதிரி தொலைக்காட்சி விளம்பரம்

மகன்: அம்மா, என்னால முன்னமாதிரி படிக்கமுடியல விளையாட்டுப்போட்டியில்கூட கடைசியாதான் வர்றேன். ரொம்பவும் சோர்ந்து போயிடுறேன்ம்மா.

அம்மா: பாக்கெட்டில் அடைச்சு வைக்கிற செயற்கை சுவையூட்டிகள் கலந்த பொருளையும் உணப்பொருள்களை வாங்கி சாப்பிடாதீங்க, இயற்கையாக விளைந்த பொருட்களைக் கொண்டு நம்ம ஊர்ல தயாரிக்கப்படுகிற xxxxxxxxxxx ஐ சாப்பிடுங்கன்னு சொன்னா கேட்டாதான.

மகன்: இனிமே நான் xxxxxxxxxxx ஐ சாப்பிடுறேன்மா

அம்மா: இப்பத்தான் நீ நல்ல பையன்

(ஒர் ஆண்டிற்குப் பிறகு)

மகன்: அம்மா நான் எல்லாப் பாடங்களிலும் 100க்கு 100 மதிப்பெண் வாங்கிட்டேன்மா. அதமட்டுமல்ல எங்க பள்ளியில் நடந்த எல்லா விளையாட்டுப் போட்டிகளிலும் நான்தான்மா முதல் பரிசு.

அம்மா: இப்போ தெரியுதா xxxxxxxxxxx இன் மகிமை (பொருளைத் திரையில் காட்டுதல்)

உங்கள் குழந்தைகள் நல்லா படிக்கணும்னு நினைக்கிறீங்களா ! எல்லா விளையாட்டிலும் முதல்ல வரணும்னு ஆசைப்படறீங்களா. இன்றே வாங்குவீர் xxxxxxxxxxx (பொருள் திரையில் தோன்றி மறைகிறது)

## பயிற்சி வினாக்கள்

1. உங்கள் பள்ளி ஆண்டுவிழாவிற்குத் தொகுப்புரை தயாரித்து வழங்குக.
2. கோ-ஆப்டெக்ஸ் துணிக்கடைக்கு தொலைக்காட்சி விளம்பரம் தயாரிக்க.
3. மாவட்ட ஆட்சியரக மக்கள் தொடர்பு அலுவலரிடம் நேர்காணல் நிகழ்த்துவதற்காக வினாத்தொகுப்பு தயார் செய்க.

## செயல்திட்டம்

1. கல்வித் தொலைக்காட்சிக்கு உங்கள் பள்ளியின் சார்பில் ஒரு மணி நேரத்திற்கான கல்வி நிகழ்ச்சியினைத் தயாரித்து வழங்குக.
2. செய்தித்தாள்களில் வந்துள்ள செய்திகளைத் தொகுத்துத் தொலைக்காட்சி/வானொலி செய்தியாக வகுப்பறையில் வாசித்துக்காட்டுக.

## இணையச்செயல்பாடு

# ஊடகவியல்

இந்தச் செயல்பாடுகள்மூலம்
வானொலி செய்திகளைக் கேட்க மற்றும்
தரவிறக்கம் செய்ய அறியலாம்.



### படிகள்

1. கீழ்க்காணும் உரலி விரைவுக்குறியீட்டைப் பயன்படுத்தி, இச்செயல்பாட்டிற்கான இணையப் பக்கத்திற்குச் செல்க.
2. ஒரு பக்கத்தைத் திறந்தால் அதில், பல மொழிகள் செய்தி கேட்கும் விதமாக இருக்கும். அதில் கீழே நகர்த்தி விரும்பும் மொழியைத் தேர்வு செய்து, செய்தியினைக் கேட்கலாம்.
3. அதே பக்கத்தில் செய்தியினைத் தரவிறக்கம் செய்தும் கேட்கலாம்.

### செயல்பாட்டின் படிநிலைக்கான படங்கள் :



படி 1



படி 2



படி 3

வானொலி செய்தி கேட்பதற்கான இணையப் பக்கத்தின் உரலி :

http://www.newsonair.com/nsd-audio.aspx

B282_12_ADV_TAMIL

* படங்கள் அடையாளத்திற்கு மட்டுமே.

இயல்
ஆறு

# கணித்தமிழியல்

E5SFAY




மொழிகளின் காட்சிசாலை என்று புகழப்படும் இந்தியாவில் இயற்கை மொழிச் செயலாக்கம், கணினித் தொழில்நுட்பத்தில் மொழிப்பயன்பாட்டினை அடுத்த கட்டத்திற்குக் கொண்டு செல்வதாகும்.

கணினியின் செயற்கை நுண்ணறிவை மேம்படுத்தி, மொழித் தொழில்நுட்பக் கருவிகளைக் கண்டுபிடிக்கவும் புதிய மொழிப்பயன்பாட்டுக் கருவிகளை உருவாக்கவும் இது இன்றியமையாதது. அவ்வாறே, இன்று நினைத்த இடத்திற்குக் கணினியை எடுத்துச் சென்று பயன்படுத்துவதும் வளர்ந்து வரும் திறன்பேசிகளின் வரலாற்றை அறிந்துகொள்வதும் வாசிப்பு அனுபவத்தின் அடுத்த கட்ட வளர்ச்சியாக அமையும் மின்னூல் உருவாக்கம் பற்றி அறிந்துகொள்வதும் காலத்தின் தேவை.

## கற்றல் நோக்கங்கள்

- செல்பேசி உருவான வரலாற்றையும் செயலிகள் பயன்பாட்டுக்கு வந்த வரலாற்றையும் காலமுறைப்படி பட்டியலிடுதல்.
- மொழித் தொழில்நுட்ப, பயன்பாட்டுக் கருவிகளின் செயல்பாட்டைப் புரிந்து கொள்ளுதல்.
- அறிவியல் புனைகதை மூலம் இந்தியாவின் மொழிப் பயன்பாட்டையும் இயற்கை மொழிச் செயலாக்கம் பற்றியும் அறிந்து கொள்ளுதல்.
- மென்பொருள்களைப் பயன்படுத்தி மின்னூல் உருவாக்கும் திறனைப் பெறுதல்.

## பாடப் பகுதி

- தொழில்நுட்பக்களம் – செல்பேசியும் செயலிகளும்
- மொழிநுட்பக்களம் – மொழித்தொழில் நுட்பக்கருவிகள்
- இலக்கியக்களம் – தீரா
- செயற்களம் – மின்னூல் உருவாக்கம்

தொழில்நுட்பக் களம்

# இயல் ஆறு

# செல்பேசியும் செயலிகளும்

உலக மக்கள் தொகையில் இன்று பெரும்பாலானோர்களால் பயன்படுத்தப்படும் தொழில்நுட்பக் கருவி என்னும் பெருமையைச் செல்பேசி பெற்றுள்ளது. கல்வி, வணிகம், வேளாண்மை, ஊடகம் போன்ற வாழ்வின் அனைத்துத் துறைகளிலும் இன்று செல்பேசி இன்றியமையாத இடத்தைப் பெற்றுள்ளது. இத்தகு செல்பேசியின் வரலாறு குறித்தும் அதில் பயன்படுத்தப்படும் செயலிகள் குறித்தும் இப்பாடம் விரிவாகப் பேசுகிறது.

## செல்பேசி வரலாறு

அலெக்சாண்டர் கிரஹாம்பெல் 1876 ஆம் ஆண்டு "தொலைபேசி" என்ற கருவியை உருவாக்கினார். அதனைத் தொடர்ந்து கம்பிவழி ஒலியைக் கடத்தும் தொலைபேசி பற்பல வளர்ச்சிகளைக் கண்டது. ஆனாலும் அக்கருவியை விரும்பும் இடத்திற்கு ஒருவர் தம்முடன் எடுத்துச் செல்ல இயலாதிருந்தது. இந்நிலையை மாற்றி, தாம் செல்லும் இடத்திற்கு எல்லாம் எடுத்துச் செல்லக்கூடிய கம்பியில்லா அலைவரிசை வழியாகப் பேசும் "மொபைல்ஃபோன்" [Mobile Phone] என்றழைக்கப்பட்ட "செல்பேசி"யை மோட்டோரோலா நிறுவனம் 1973 ஆம் ஆண்டு உருவாக்கியது.

## முதல் செல்பேசி

மோட்டோரோலாவின் ஆய்வாளர் மார்ட்டின் கார்ல் கூப்பர் என்பவர் 1973 ஆம் ஆண்டு, ஏப்ரல் 3ஆம் நாள் நியூயார்க் நகரில் மோட்டோரோலா நிறுவனத்திலிருந்து நியூஜெர்சியில் உள்ள பெல் ஆய்வு நிறுவனத்தின் தலைமையகத்தில் பணிபுரிந்த தமது போட்டியாளரான ஜோயல் எஸ். ஏங்கெல் என்பவரை முதன்முதலில் செல்பேசி மூலம் அழைத்துப் பேசினார். இதுவே முதல் செல்பேசி உரையாடலாக அறியப்படுகிறது.

1973 ஆம் ஆண்டே மார்ட்டின் கார்ல் கூப்பர் செல்பேசி அழைப்பில் பேசினார் என்றாலும், தொடர்ந்த பத்தாண்டு கால ஆய்வுக்குப் பிறகே, 1983 ஆம் ஆண்டு மோட்டோரோலா



நிறுவனத்தின் டைனா டாக் 8000 எக்ஸ் (DynaTAC 8000X) என்னும் செல்பேசி வணிக நோக்கில் முதன்முதலாக விற்பனைக்கு வந்தது. இந்தச் செல்பேசி 13" x 1.75" x 3.5" அளவும், ஏறக்குறைய 1 கிலோ எடையும் கொண்டது. இதன் அப்போதைய விலை 4000 டாலர்.

## செல்பேசி தலைமுறைகள்

1990-களில் இரண்டாம் தலைமுறை 'செல்பேசிகள்' 2 ஜி வலையமைப்புடன் வெளிவந்தன. 2 ஜி வலையமைப்பு, தொடர்முறைப் பரப்புகைக்குப் [Analog Transmission] பதிலாக எண்மமுறைப் பரப்புகைத் [Digital Transmission] தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தியது. இது மிகு பாதுகாப்பு, விரைவான வலைப்பின்னல் போன்ற சிறப்புத் திறன்களைக்கொண்டது. 2 ஜி தொழில்நுட்பம் குறுஞ்செய்தித் தொடர்புக்கு [SMS] வழிவகுத்தது. 1993 ஆம் ஆண்டு




பின்லாந்தில், உலகின் முதல் குறுஞ்செய்தி அனுப்பப்பட்டது.

இந்தக் காலகட்டத்தில் மக்கள், தகவல் தொழில்நுட்பப் புரட்சியை வரவேற்றனர். அவர்கள் செல்பேசி கொண்டு பேசுவது மட்டுமல்லாமல் அதில் பல செயல்பாடுகளையும் செய்ய விரும்பினர். அதற்கு 3ஜி தொழில்நுட்பம் கைகொடுத்தது. செல்பேசிகளும் திறன் பேசிகளாய் மாற்றம் பெறத் தொடங்கின.

## திறன்பேசி

திறன்பேசி என்பது தொடுதிரையுடன் (Touch Screen) கூடிய கையடக்க அலைபேசி. திறன்பேசி, இணையத் தேடல் வசதியுடன் கணினியின் திறன்களைக் கொண்டதாகத் திகழ்கிறது. திறன்பேசியின் அளவும் அதன் நகர்வியக்கமும் கணினியிலிருந்து அதை வேறுபடுத்துகிறது. இது தகவல் தொடர்புக் கருவி என்னும் நிலைகடந்து கற்றல், தேடல் இயந்திரமாகவும் பொழுதுபோக்குக் கருவியாகவும் விளங்குகிறது.

1992 ஆம் ஆண்டே தொடுதிரையுடன் பயனருக்கு உதவும் பல பயன்பாடுகளைக் கொண்ட திறன்பேசி உருவாக்கப்பட்டுவிட்டது. ஆனால், அப்பொழுது "திறன்பேசி" என்ற சொல்தான் உருவாகவில்லை. அதாவது, ஸ்மார்ட்ஃபோன் என்று குறிப்பிடும் வழக்கம் பின்னரே தோன்றியது.

## முதல் திறன்பேசி

ஐபிஎம் நிறுவனம், 'சைமன் பர்சனல் கம்யூனிக்கேட்டர்' (IBM - Simon Personal Communicator) என்ற பெயரில், 1992 ஆம் ஆண்டு, நவம்பர் 23 அன்று முதல் திறன்பேசியை அறிமுகப்படுத்தியது. இதுவே 'முதல் திறன்பேசி'யாக அடையாளம் காணப்படுகிறது.

செல்பேசியுடன் எண்மமுறை தன்னுதவிக் [Personal Digital Assistance] கருவிகளை இணைத்து, ஐபிஎம் உருவாக்கிய சைமன் [Simon] என்ற இக்கருவிக்கு பயனாளர்களிடையில் நல்ல வரவேற்புகிடைத்தது.அதில்நாட்காட்டி,கடிகாரம், முகவரித் தொகுப்பு, கணிப்பான் (Calculator) போன்றவையும் அமைக்கப்பட்டிருந்தன.

பின்னர், எரிக்சன் நிறுவனம் 1997 ஆம் ஆண்டில் எரிக்சன் ஜிஎஸ் 88 (Ericsson-GS 88) என்ற அலைபேசியையும், தொடுதிரை கொண்ட எரிக்சன் ஆர் 380 (Ericsson R380) என்ற செல்பேசியையும், "திறன்பேசி" என்ற பெயருடன் 2000-த்திலும் அறிமுகம் செய்தது.

அதே ஆண்டு அக்டோபர் 1இல் ஜப்பானில் முதல் 3-ஜி தொழில்நுட்பத்தை என்டிடி டோகோமோ [NTT DoCoMo] நிறுவனம் அறிமுகப்படுத்தியது. இதன் மூலம் காணொலி வழிக் கலந்துரையாடலும் [வீடியோ கான்பரன்சிங்] பெரிய அளவிலான மின்னஞ்சல் இணைப்புகளும் பயனர் பயன்பாட்டிற்கு வந்தன.

இதற்குப் பின், பிளாக்பெர்ரி நிறுவனம், 2002 ஆம் ஆண்டு மார்ச் 4 அன்று, பிளாக்பெர்ரி 5810 என்ற திறன்பேசியினை உருவாக்கி வெளியிட்டது. ஐபோன் சந்தைக்கு வரும்வரை இந்த நிறுவனமே திறன்பேசி விற்பனையில் முதன்மையானதாக விளங்கியது.

## திறன்பேசிப் புரட்சி

ஐஃபோன் நிறுவனம், 2007 ஆம் ஆண்டு, மேக்வோல்டு 2007 என்னும் ஐஃபோனை

வெளியிடும் வரை உண்மையான திறன்பேசிப் புரட்சி தொடங்கவில்லை. 2007 ஆம் ஆண்டு ஜனவரியில் ஆப்பிள் நிறுவனம் ஐஃபோன் – முதல் தலைமுறைத் திறன்பேசியாகப் பலமுனைத் தொடுதிரை கொண்ட கைபேசியை உருவாக்கி மக்களைக் கவர்ந்தது. ஐஃபோனின் அழகிய வடிவமைப்பையும் திறனையும் செயல்பாட்டையும் அளவிட்டால், அது ஆப்பிள் நிறுவனம் செய்த புரட்சிகரமான மாற்றம் எனலாம்.

அதுவரை பொத்தான்களைக் கொண்டு அழைப்பு எண்களை அழுத்தும் வழக்கமிருந்தது. திறன்பேசிகளின் வருகைக்குப்பின் கருவிக்கு வெளியே இருந்த பொத்தான்கள் திரைக்குள்ளே தெரியத் தொடங்கின. இதுவும் மிகப்பெரிய திருப்புமுனையாக அமைந்தது.

கூகுளின் முதல் ஆண்டிராய்ட் இயங்குதளம் கொண்ட செல்பேசி, எச்டிசி நிறுவனத்தின் "டிரீம் ஃபோன்"களில் 2008 ஆம் ஆண்டு அறிமுகப்படுத்தப்பட்டது. இக்காலத்தில்தான் செல்பேசிகள் இணைய வசதியுடன் கூடிய கையடக்கக் கணினியாகச் செயல்படும் திறன்பேசிகளாக உருமாறின. திறன்பேசியின் மிகப்பெரிய வளர்ச்சியால் 2011 ஆம் ஆண்டிற்குப் பிறகு தகவல் தொடர்புத்துறையில் பல தொழில்நுட்ப மாற்றங்கள் ஏற்பட்டன.

இன்று, ஓரிடத்தில் அமர்ந்து கணினியில் செய்துவந்த பணிகள் அனைத்தையும், கையில் எடுத்துச்செல்லும் திறன்பேசியிலேயே செய்து முடித்துவிடுகிறோம். மின்னஞ்சல் சேவை தொடங்கி, தகவல் தேடல், செய்தி அறிதல், பயணச்சீட்டு முன்பதிவு, வங்கிப் பணப்பரிமாற்றம், சமூக வலைத்தளத் தகவல் பரிமாற்றம், மின்வணிகம் உட்பட, இணையம்வழியே சாத்தியமாகும் அனைத்துச் சேவைகளையும் திறன்பேசி வழியாகப் பெற முடிகிறது.

## செல்பேசித் தொழில்நுட்பம்

### வன்பொருள் (Hardware)

அனைத்துச் செல்பேசிகளிலும் பின்வரும் பொதுவான வன்பொருள் கூறுகள் காணப்படுகின்றன.

- செல்பேசியின் செயலகமான மையச் செயலகம் [Central processing unit (CPU)].
- செல்பேசியின் செயல்பாட்டிற்கு மின்சாரம் வழங்கும் மின்கலம் [Battery].
- செல்பேசியுடன் பயனர் தொடர்பு கொள்ள அனுமதிக்கும் உள்ளீட்டுநுட்பம். அவை செல்பேசிகளில் விசைப்பலகையும் (Key pad) திறன்பேசிகளில் தொடு திரைகளும் (Touch screen) ஆகும்.
- பயனர் தொடர்புகள், உள்ளீடு செய்தல் மற்றும் பலவற்றைக் காட்டும் திரை.
- ஒலியை வழங்கும் ஒலிப்பான்.
- செறிவு அட்டை [Sim Card].

**அறிவோம் தெளிவோம்**

### திறன்பேசிகளின் எதிர்காலத் தொழில்நுட்பம்

0 ஜி தலைமுறையில் தொடங்கிய செல்பேசிகளின் வரலாறு 1,2,3,4-ஜி தொழில்நுட்பத்தைக் கடந்து அடுத்ததாக 5-ஜி (5G) தொழில்நுட்பத்தைப் பின்பற்றுகிறது. தற்போதுள்ள அகண்ட அலைவரிசை தொலைத் தொடர்பு தொழில் நுட்பத்தின் வழி தகவல்கள் கடந்து போக 100 மில்லிசெகண்ட் தேவைப்படுகிறது. ஆனால் 5ஜி தொழில் நுட்பத்தின் வழி தகவல்கள் கடந்து போக 1 மில்லிசெகண்ட் மட்டுமே போதுமானது.

இவ்வாறு வழங்கப்படும் 5 ஜி தொழில்நுட்பம் திறன்பேசிகளின் வழியான அகண்ட அலைவரிசை சேவைகளையும் தாண்டி பற்பல துறைகளில் தாக்கத்தை ஏற்படுத்துகிறது. குறிப்பாக, இயந்திர மனிதர்கள், தாமாகவே இயங்கும் மகிழுந்துகள், உடல் நல மருத்துவம், வேளாண்மை, கல்வி போன்ற பல துறைகளிலும் தன் ஆதிக்கத்தைச் செலுத்தும்.

## மென்பொருள்

இயக்க முறைமை [operating system] OS எனச் சுருக்கமாக அழைக்கப்படுகிறது. இந்த மென்பொருளானது வன்பொருள், பயன்பாட்டு மென்பொருள் (Application programing interface software) மற்றும் பயனர்களுக்கு (USERS) இடையே பாலமாக இருக்கும் ஓர் இடைமுகமாகும்.

திறன்பேசிகளுக்கு ஆண்ட்ராய்டு, பிளாக்பெர்ரி இயக்க முறைமை, வெப் ஓஎஸ், ஐஓஎஸ், சிம்பியன், விண்டோஸ் இயக்க முறைமை மற்றும் படா உட்பட பல வகையான இயக்க முறைமைகள் (OS) உள்ளன. இவற்றுள் ஆப்பிள் ஐஓஎஸ், ஆண்ட்ராய்டு ஆகியவை மிகவும் பரவலாக அறியப்பட்ட இயக்கமுறைமைகள் ஆகும்.

இயக்க முறைமைகள் பயனர்களுக்குத் தன்னுதவிக் கருவிகள், விளையாட்டுகள், ஜிபிஎஸ் உள்ளிட்ட பிற பயன்பாட்டுக் கருவிகளைப் பதிவிறக்க அனுமதிக்கின்றன. பயனர்கள் தாங்களே செயலிகளை உருவாக்கி அவற்றை இயக்க முறைமைகள் மூலம் வெளியிடவும் முடியும்.

திறன்பேசி தொலைத் தொடர்பு, பொழுதுபோக்கு வசதிகள் ஆகியவற்றை மட்டுமல்லாது பல்வேறு பணிகளையும் சேவைகளையும் பெறவும் பயன்படுகிறது. அதற்குத் திறன்பேசிகளில் இயங்கும் 'செல்பேசிச் செயலிகள்' (Mobile Apps) தேவை.

## செயலி

செல்பேசி, திறன்பேசி போன்ற கருவிகளில் இயங்குவதற்காக உருவாக்கப்பட்ட ஒரு பயன்பாட்டு மென்பொருளே செயலி. இப்போது குறைந்த விலையிலேயே அதிக திறன் கொண்ட திறன்பேசிகள் கிடைக்கின்றன. அவற்றில் பலவகையான செயலிகளை நிறுவிக்கொண்டால் மட்டுமே, அவற்றை நாம் பயனுள்ள வகையில் பயன்படுத்த முடியும்.

நோக்கியா நிறுவனம் பேசவும், செய்தி அனுப்பவும் மட்டுமே பயன்பட்டுவந்த செல்பேசிகளில் முதன்முதலாகப் பொழுதுபோக்கு விளையாட்டுகளின் வடிவில் செயலியை அறிமுகப்படுத்தியது.

அப்ளிகேஷன் [Application] என்பதன் சுருக்கமே "ஆப்" [App] என்னும் சொல்லாகும். அப்ளிகேஷன் என்பது கணினியில் செயல்படும் குறிப்பிட்ட ஒரு பயன்பாட்டுக்கான நிரலாகும். ஆவணங்கள் தயாரிப்புக்கான சொல்செயலி (Word Processor), வரவுசெலவு கணக்குகளுக்கான விரிதாள் (Spread Sheet), தரவுத்தளம் (Database), நாட்குறிப்பு (Diary), கால அட்டவணை (Calendar) போன்றவை அலுவலகப் பயன்பாட்டு நிரல்களாகும். பொதுவாக இத்தகைய பயன்பாட்டு நிரல்கள் 'செயலி' [App] என்று அழைக்கப்படும். இவ்வாறு குறிப்பிட்ட பயன்பாட்டுக்கெனச் செல்பேசிகளில் பயன்படுத்தப்படும் செயலிகளை முதலில் குறுஞ்செயலிகள் என்றழைத்தனர்.

## செயலிகள் வரலாறு

திறன்பேசிகளின் வருகைக்குப் பிறகே செல்பேசிச் செயலிகளின் வரலாறு தொடங்குகிறது என்பர் சிலர். ஆனால், தொடக்க காலச் செல்பேசிகளின் வருகையின் போதே செல்பேசிச் செயலிகளின் வரலாறும் தொடங்கிவிட்டது.

1970 களில் மிகவும் செல்வாக்குப் பெற்று விளங்கிய காணொலி விளையாட்டு பாம்பு (Snake) விளையாட்டு ஆகும். இவ்விளையாட்டின் செல்பேசி வடிவமே முதல் செல்பேசிச் செயலி எனலாம். பாங் (Pong), டெட்ரிஸ் (Tetris), டிக்டாக்டோ (TicTacToe) போன்ற விளையாட்டுகள் தவிர, கணிப்பான், மணிகாட்டி போன்ற செயலிகளும் தொடக்ககாலச் செல்பேசிகளில் இடம்பெற்றன. இத்தகைய செயலிகள் செல்பேசி வாங்கும்போதே அதில் நிறுவப்பட்டிருக்கும். பயனர்கள் தாம் விரும்பிய செயலிகளைப் பதிவிறக்கும் வசதி அப்போது இல்லை.

இதற்கு அடுத்த காலகட்டத்தில், வேப் (WAP – Wireless Access Protocol) அடிப்படையில் செயல்படும் இணையத்தளங்கள் உருவாக்கப்பட்டன. டபிள்யூஎம்எல் (WML – Wireless Markup Language) மொழியில் இணையப்

பக்கங்கள் வடிவமைக்கப்பட்டன. அவற்றில் பலவகைப்பட்ட செல்பேசிச் செயலிகள் சேமிக்கப்பட்டன. செல்பேசிகளில் ஓர் இணைய உலாவி மென்பொருள் உள்ளிணைக்கப்பட்டது. அதன்மூலம் இணையத்திலிருந்து செல்பேசிக்கு நேரடியாகச் செயலிகளைப் பதிவிறக்கிக் கொள்ள முடிந்தது. ஆனாலும்கூட தத்தம் செல்பேசித் திரைக்கு ஏற்ற செயலிகளைப் பதிவிறக்குவது, அதற்கான கட்டணத்தைச் செலுத்துவது மிகவும் கடினமாக இருந்தது.

திறன்பேசிகளின் வருகைக்குப் பிறகே செயலிகளின் பயன்பாடு பெருகத் தொடங்கியது. செல்பேசி நிறுவனங்கள் தங்களுக்கான இயக்கமுறைமைகளை (Operating Systems) உருவாக்கின. அவற்றில் செயல்படும் செயலிகளை உருவாக்குவதற்கு ஏற்ற பணித்தளங்களையும் (Paltforms) கணினி மொழிகளையும் வழங்கின. அந்த வகையில் முதலாவதாக வந்தது பால்ம் ஓஎஸ் (Palm OS) ஆகும். அதன்பின் ரிம் பிளாக்பெர்ரி ஓஎஸ் (RIM Blackberry OS), சிம்பியன் ஓஎஸ் (Symbian OS) ஆகியன வந்தன. அடுத்து சன் மைக்ரோ சிஸ்டம்ஸ் நிறுவனத்தின் ஜாவா எம்இ பணித்தளமும், மைக்ரோசாப்டின் விண்டோஸ் பணித்தளமும் அறிமுகமாயின.

2007-ஆம் ஆண்டு ஆப்பிள் நிறுவனத்தின் ஐஓஎஸ்ஸூம், 2008- ஆம் ஆண்டு கூகுளின் ஆண்ட்ராய்டும் வந்தபின் செல்பேசிச் செயலிகளின் வரலாற்றில் ஒரு திருப்புமுனை ஏற்பட்டது. 2003-இல் அறிமுகமான மைக்ரோசாப்ட்டின் "விண்டோஸ் மொபைல்", 2010- ஆம் ஆண்டு "விண்டோஸ் போன்" எனப் பெயர் மாற்றம் பெற்று விற்பனைக்கு வந்தது. இன்றைக்குச் செல்பேசிச் செயலிகளின் வரலாற்றில் ஒரு புரட்சியே நிகழ்ந்துள்ளது என்றுதான் கூற வேண்டும்.

2017 ஆம் ஆண்டு கணக்கெடுப்பின் படி 197 கோடி [பில்லியன்] முறைகள் செயலிகள் பதிவிறக்கம் செய்யப்பட்டுள்ளன. இதில் பெரும்பான்மையாகப் பதிவிறக்கம் செய்யப்பட்டவை விளையாட்டுச் செயலிகளே.

2018ஆம்ஆண்டுகாலகட்டத்தில்,21இலட்சம் ஆண்டிராய்டு செயலிகளும், 20 இலட்சம்



**தெரியுமா?**

ஆப் என்னும் சொல், 2010 ஆம் ஆண்டு, அமெரிக்கன் டைலக்டிக் சொசைட்டியால் "ஆண்டின் சொல்" [word of the year] என்று தேர்வு செய்யப்பட்டது.

ஆப்பிள் நிறுவனத்தின் ஐஓஎஸ் செயலிகளும் முறையே கூகுள் ப்ளே ஸ்டோரிலும் ஆப்பிள் ஆப் ஸ்டோரிலும் பயனர்களின் பயன்பாட்டிற்கு வழங்கப்பட்டிருந்தன.

இன்று எண்ணற்ற செயலிகள் நாள்தோறும் வெளிவருகின்றன. விளையாட்டு தொடங்கி பொருள் விற்பனை வரையிலும், பொழுதுபோக்கு தொடங்கி அறிவுத் தேடல் வரையிலும் பல்வேறு செயலிகள் வந்துள்ளன. பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் பயிலும் மாணவர்கள் தங்கள் படிப்பிற்கும், போட்டித்தேர்விற்கும், பயன்படுத்திக்கொள்ள ஏராளமான செயலிகள் உள்ளன.

பொதுவாகச் செயலிகளை நிறுவும்போது அனுமதிகள் குறித்துக் கவனமாக இருக்க வேண்டும். அறிமுகமில்லாத ஒரு செயலி அதிகமான அனுமதிகள் கேட்டால், அது ஆபத்துக்குரிய அறிகுறியாக இருக்கலாம். ஆதலால் நாம் நமக்குத் தேவையான நம்பகமான செயலிகளையே பதிவிறக்கம் செய்து நிறுவிப் பயன்படுத்த வேண்டும்.

தொலைபேசியை நாம் விரும்பும் இடத்திற்கு எடுத்துச் செல்லவேண்டும் என்ற ஆவலும் கம்பியில்லா அலைவரிசையின் வரவும் செல்பேசியின் தோற்றத்திற்குக் காரணமாயின. கிலோ கணக்கான எடையுடன் இருந்த செல்பேசிகள் இன்று திறன்பேசிகளாய், கையடக்கக் கணினியைப் போலப் பல்வேறு பயன்பாடுகளை உள்ளடக்கியதாக வளர்ந்துள்ளன. தொடர்ந்த ஆய்வுகளும் செல்பேசிகள் மீதான மக்களின் ஆர்வமும் படிப்படியான வளர்ச்சியைச் சாத்தியமாக்கியுள்ளன. தொழில்நுட்பத்தை மனிதன் தன் வளர்ச்சிக்காகப் பயன்படுத்தும்போதுதான் கண்டுபிடிப்பின் நோக்கம் நிறைவேறும் என்பது உறுதி.

# மொழித்தொழில்நுட்பக் கருவிகள்

மனிதர் தம் எண்ணத்தை வெளிப்படுத்த உதவும் முதன்மைக் கருவியாக இருப்பது மொழி. அம்மொழியை ஒரு மனித மூளை தன் சூழலிலிருந்து மிக இயல்பாகக் கற்றுக் கொண்டு பயன்படுத்துகிறது.

மனித மூளை மொழியைப் பயன்படுத்தும் நுட்பத்தைக் கணினிக்கு வழங்கி, அதன்மூலம் மொழிநுட்பக் கருவிகளை உருவாக்க முடியும். அத்தொழில் நுட்பத்தை விவரிப்பதாக இப்பாடம் அமைகிறது.

## மொழிச் செயலாக்கக் கருவிகள்

மொழியை அறிவியல் நோக்கில் ஆய்வதே மொழியியல் (Linguistics). மொழியியலும் கணினித் தொழில்நுட்பமும் இணைந்த செயல்பாடு கணினி மொழியியல் (Computational linguistics).

விதிகளின் அடிப்படையில் இயற்கை மொழிக்கூறுகளைச் செயற்கையாகக் கணினிக்குத் தகுந்தவாறு மாற்றித் தருவதற்கான கோட்பாடுகளையும் செயல்பாடுகளையும் கொடுப்பதே கணினி மொழியியலின் முக்கிய பங்காகும்.

இத்துறையில் ஒலியனியல் நிலை, உருபனியல் நிலை, தொடரியல் நிலை, பொருண்மையியல் நிலை என்ற நான்கு நிலைகளில் மொழி ஆய்வுகள் மேற்கொள்ளப்படுகின்றன. அதைக்கொண்டு மொழிச் செயலாக்கக் கருவிகள் உருவாக்கப் படுகின்றன.

## இயற்கை மொழிச் செயலாக்கத்தின் நோக்கம்

தனக்கு இடப்பட்ட நிரல்களைக்கொண்டு ஒரு பணியைத் தானாகவே செய்துமுடிக்கும் கருவியை உருவாக்குவதே இயற்கைமொழிச் செயலாக்கத்தின் நோக்கம். மனிதருக்கு இணையாகப் படிப்பதற்கும், எழுதுவதற்கும், பேசுவதற்கும் செயலாற்றக்கூடிய கணினி நிரல் மாதிரிகளை (Computational Models) உருவாக்குதலே இதன் முதன்மை நோக்கம். இது போன்ற கணினி நிரல் மாதிரிகள் மனிதர்களுக்கும் கணினிக்கும் இடையே இருக்கின்ற இடைவெளியை அகற்ற வழிவகுக்கின்றன.

## ஒலியனியல் கருவிகள்

ஒலிகளின் பிறப்பாக்கம், அவை வருமிடங்கள், கேட்டுணர்தல் போன்றவற்றைப் பற்றியது ஒலியனியல். ஒரு மொழியின் பேச்சொலிகள் குறித்த செயலாக்கம் என்றும் கூறலாம். இயற்கைமொழிச் செயலாக்கத்தின் அடிப்படையில் பேச்சு உணரிகளையும் எழுத்து உணரிகளையும் உருவாக்குவதற்கு ஒலியனியல் கருவிகள் பயன்படுகின்றன.

பேசும் சொற்களின் ஒலிகளைப் பகுத்தாய்ந்து பேச்சு எழுத்து மாற்றியையும்

**அறிவோம் தெளிவோம்** — **இயற்கைமொழி? செயற்கைமொழி?**

மனிதர்கள் இயற்கையாகப் பயன்படுத்தும் எந்த மொழியும் இயற்கை மொழியாகும். செயற்கையாக மனிதனால் உருவாக்கப்பட்ட மொழிகள் இயற்கை மொழியில் இருந்து வேறுபட்டவை. எடுத்துக்காட்டாக, கணிப்பொறியில் பயன்படுத்தும் நிரலாக்க [programming language] மொழிகளான சி (C), சி++ (C++), ஜாவா (JAVA), பெர்ல் (Perl) , பைத்தான் [Python] போன்றவை செயற்கை மொழிகளாகும்.

பேச்சு உணரியையும், எழுத்து உணரியையும் உருவாக்கலாம். தானியங்கு கேட்டெழுதுதல் (automatic dictation), ஒலிபெயர்ப்பு [Translitertion], கணினிக்குப் பேச்சு அடிப்படையிலான இடைமுகங்கள் உருவாக்குதல், மாற்றுத்திறனாளிகளுக்குக் குரல்சார்ந்த உள்ளீட்டு மென்பொருள்கருவி, வெளியீட்டு மென்பொருள் கருவி ஆகியவற்றை உருவாக்குவதற்கு ஒலியனியல் கருவிகள் பயன்படுகின்றன.

நீங்கள் சென்ற ஆண்டு படித்த பேச்சு எழுத்து மாற்றியையும் பேச்சு உணரியையும் எழுத்து உணரியையும் பற்றி நினைவுகூர்க.




## உருபனியல் கருவிகள்

ஒலிகள் சேர்ந்து சொல்லாகின்றன. அச்சொல்லின் அமைப்பு, அதோடு சேர்கின்ற விகுதிகள், அவ்விகுதிகள் வருமுறை ஆகியவற்றைப் பற்றியது உருபனியல். இந்த ஆய்வின் அடிப்படைக்கூறு உருபன் ஆகும். சொற்களை உருபன்பகளாகப் பகுக்கும் உருபனியல் பகுப்பாய்வி, உருபன்களிலிருந்து சொற்களைப் பெறும் உருபனியல் உருவாக்கி ஆகிய கருவிகளை உருவாக்குவதற்கு இவ்வாய்வு துணைபுரிகின்றது.

ஒரு சொல்லைப் பகுக்கும்போது வரும்பொருள் கொண்ட மிகச்சிறிய அடிப்படை அலகை உருபன் (morpheme) என்கிறோம். இவை அடிச்சொற்களாகவோ ஒட்டுகளாகவோ அமையும்.

பூக்கள் என்ற சொல்லில் பூ என்ற அடிச்சொல்லும் உருபனே; கள் என்ற பன்மை ஒட்டும் உருபனே.

## உருபனியல் பகுப்பாய்வி

உருபனியல் பகுப்பாய்வில் தனிநிலைச் சொற்கள் உருபன்களாகப் பகுக்கப்படுகின்றன. சொற்களைப் பகுதி, விகுதி, இடைநிலை, சந்தி, சாரியை, விகாரம் எனப் பகுத்துக் காண்பதுபோல் உருபன்களாகப் பகுத்து அவற்றின் இலக்கணக் கூறுகளை இக்கருவி அடையாளப்படுத்தும்.

சான்றாக, படித்தான் என்ற சொல்லை இக்கருவி படி+த்+த்+ஆன் என்று பகுபதமாகப் பிரித்து அடையாளம் காட்டும்.




## உருபனியல் உருவாக்கி

உருபனியல் உருவாக்கி (Morphological Generator) உருபன்களை இணைத்துச் சொற்களை உருவாக்கும் கருவியாகும். இதன் உள்ளீடு ஒரு வேர்ச்சொல்லும் அதனோடு குழும உருபன்களோ அதன் இலக்கண அமைப்புகளோ ஆகும். இது வேர்ச்சொல்லையும் அதன் குழும உருபன்களையும் ஒன்றிணைத்துச் சொற்களை உருவாக்குகிறது.

சான்றாக, 'படி' என்ற வினைச்சொல் அதன் குழும உருபன்களோடு இணைந்து படிக்கிறான், படிப்பான், படித்தான், படித்து எனத் திணை, பால், காலம் போன்றவற்றின் அடிப்படையில் ஆயிரக்கணக்கான வினைவடிவங்களை உருவாக்கும்.




[http://www.tamilvu.org/ta/content

## தொடரியல் கருவிகள்

தொடர் இலக்கணப்படி சொற்கள் ஒன்றையொன்று சார்ந்து தொடர்களாகின்றன. எழுவாய்க்கும் பயனிலைக்கும் இடையே திணை, பால், எண், இடம் ஆகியவற்றில் இயைபு இருக்க வேண்டும். அதுபோலவே தொடர்களில் சொற்கள் முன்பின் அமைவதும் இலக்கண முறைப்படியே அமைய வேண்டும். அவ்வாறு அமைந்த தொடர்களின் சொற்களைப் பிரித்து, அவை எவ்வகைத் தொடர் என்பதை இனம் காணுவது தொடரியல் கருவிகளின் செயலாகும்.

## தொடரியல் பகுப்பாய்வி

தொடரியல் செயலாக்கத்தைக் கணினிவழி செய்யும் கருவியே தொடரியல் பகுப்பாய்வி. அனைத்துச் சொற்களுக்கும் மொழியியல் அடிப்படையில் வழங்கப்பட்டிருக்கும் இலக்கணக் குறிப்பைக் கொண்டு இக்கருவி செயல்படும். அதாவது அனைத்துவகை பெயர், வினை, இடைச்சொற்கள், எச்சங்கள், அடைமொழிகள், சொல்லுருபுகள், வினாச்சொற்கள் பற்றிய குறிப்புகளைக் கொண்டு பகுக்கப்பட்டிருக்கும்.

இவ்வகைப் பகுப்பு அத்தொடரிலுள்ள ஒவ்வோர் அலகையும் இனம் காட்டும். அதன்வழி ஒரு பனுவலில் (Text) சொற்றொடர்களைத் தொடர்பகுப்பி பிரிக்கும். பிறகு, அதிலுள்ள தொடரைக் கண்டறியும். பின் அத்தொடரின் தலைச்சொல்லை இனங்காணும். அதனைப் பகுத்து அதன் இலக்கணக்கூறுகளைக் கண்டறியும். இது எந்திர மொழிபெயர்ப்புக்குப் பெரிதும் பயன்படும்.

'இராமன் சீதையை மணந்தான்' என்ற சொற்றொடர் வரிசையிலிருந்து பின்வரும் பகுத்தாயப்பட்ட கிளை அமைப்பைப் பெறலாம்.




(தொ- தொடர் ; பெ.தொ- பெயர்த்தொடர் ; பெ-பெயர் ; வி.தொ-வினைத்தொடர் ; வே.தொ- வேற்றுமைத்தொடர் ; வி- வினை; வே.உ - வேற்றுமை உருபு)

இக்கருவி, தொடரில் இலக்கணப்பிழை இருக்கிறதா? இல்லையா? என்பதைக் கண்டறிந்து திருத்தும். இலக்கணப் பிழைதிருத்தியை உருவாக்குவதற்கும் இத்தொடரியல் பகுப்பாய்விதான் உதவும்.

## பொருண்மையியல் கருவிகள்

மொழியில் சொற்கள் தனித்து நின்றோ, தொடரில் இயைந்தோ வெவ்வேறு விதமான பொருளை விளக்குவது பொருண்மையியல் ஆகும். மனித மூளை ஒரு சொல்லின், தொடரின் பொருண்மையை நேரடியாகவோ சூழல் அடிப்படையிலோ மூளையின் தருக்கரீதியான அறிவடிப் படையிலோ புரிந்துகொள்ளும்.

நான் கடலை வாங்கினேன் என்பதில் கடலை என்ற சொல் வேர்க்கடலையைக் குறிக்கிறது. வேற்றுமை உருபேற்ற சொல்லாகிய (கடல்+ஐ) கடலைக் குறிக்காது. ஏனெனில், அந்தக் கடலை வாங்க முடியாது. இந்தப் பொருண்மை

வேறுபாட்டைக் கணினிக்கு உள்ளீடு செய்ய வேண்டும்.

ஒரு சொல் பல பொருள், ஒரு பொருள் பல சொல் முதலான சொற்பொருண்மை உறவுகளைக் கணினி வேறுபடுத்திச் செயலாற்றும் வகையில் சொல்லாய்வு செய்யப்பட வேண்டும். அதன் அடிப்படையில் பொருண்மையியல் பகுப்பாய்வு மென்பொருள் கருவி உருவாக்கப்படுகிறது.

## பயன்பாட்டுக் கருவிகள்

இயற்கைமொழிச் செயலாக்கத்தின் வழியாக உருவாக்கப்பட்ட மொழிச் செயலாக்கக் கருவிகளைக் கொண்டு பல பயன்பாட்டுக் கருவிகளை உருவாக்கலாம்.

தகவல்தேடு பொறி (search engine) தகவல்களைப் பெற உதவும் முக்கியக் கருவியாகும். தமிழில் இத்தகைய தகவல்தேடு பொறிகள் பெருமளவில் வெற்றி அடைந்துள்ளன. கணினியுடன் உரையாடும் கருவிகள் உருவாக்கப்பட்டால், அதனைப் பயன்படுத்தி அனைவரும் எளிதாகத் தகவல்களைப் பெற இயலும். எடுத்துக்காட்டாக, தமிழ் இலக்கண இலக்கிய நூல்களில் ஒன்றை உள்ளீடாகத் தந்து மொழித் தொழில்நுட்பக் கருவி மூலம் தேவையான தகவல்களைப் பெறமுடியும். அவ்வாறான பயன்பாட்டுக் கருவிகள் குறித்துக் காண்போம்.

### தகவல் பெறுவி (Information Retrieval)

குறிப்பிட்ட ஓர் இலக்கணம், இலக்கியம், தலைப்பு அல்லது கருத்து தொடர்பான தகவல்களைத் திரட்டித் தரும் மென்பொருள் கருவிக்குத் தகவல் பெறுவி என்று பெயர்.

இணையத்தில் குறிப்பிட்ட ஒரு செய்தி எங்கெங்கு உள்ளது என்பதைத் தேடுபொறி எவ்வாறு கண்டறிந்து அவற்றின் தொடுப்புகளைத் தருகிறதோ, அதே போன்று குறிப்பிட்ட வினவல் சொல் இடம்பெறும் உரைகள் பற்றிய தகவலை இது தரும்.

இது ஒரேமொழியில் உள்ள தரவுகளிலிருந்தும் தகவல்களை மீட்டெடுக்கும் அல்லது பல மொழிகள் கலந்திருந்தாலும் அதிலிருந்து நாம் தேடும் தகவல்களை மீட்டெடுக்கும்.



## தகவல் பிரித்தெடுத்தல் (Information Extraction)

குறிப்பிட்ட ஒரு துறைசார்ந்த சொற்களையோ செய்திகளையோ குறிப்பிட்ட ஓர் ஆவணத்திலிருந்து கணினி மூலம் தானாகவே பிரித்து எடுக்க உதவும் மொழிக்கருவிக்குத் தகவல் பிரித்தெடுக்கும் கருவி என்று பெயர். இதுவும் ஒரு வகையான தகவல் மீட்பு முறையாகும். இது முறைப்படுத்தப்படாத ஆவணங்களில் இருந்தும் தகவல்களைப் பிரித்தெடுத்துத் தரும். குறிப்பாக இக்கருவி குற்றவியல், சுற்றுலாவியல், மருத்துவத்துறை போன்ற துறைசார்ந்த செய்திகளைப் பிரித்தெடுப்பதற்குப் பயன்படுத்தப்படுகின்றது.

## பனுவல் (ஆவணச்) சுருக்கம் (Text summarization )

ஒரு நூலையோ, ஆவணத்தையோ முழுமையாகப் படிக்க முடியாதவர்கள் அந்தப் படைப்பு எத்தன்மைமிக்கது என்பதை அதன் சுருக்கத்தையோ முன்னுரையையோ பார்த்தபிறகு முடிவு செய்வர். அதை மனித உழைப்பால் உருவாக்குவர். இந்தப் பணியைக் கணினியின் துணைகொண்டு செய்வது பனுவல் (ஆவணச்) சுருக்கம் எனப்படும்.

இந்தக் கருவி ஓர் ஆவணத்திலுள்ள முக்கியமான சொற்றொடர்களைத் தானாகவே பிரித்தெடுக்கும். பிறகு அத்தொடர்களின் சுருக்கத் தொகுப்பை உருவாக்கும். பயனர் அளிக்கும் குறிப்புகளுக்கு ஏற்ற அளவில் சுருக்கித் தரும்.

மேற்குறித்த தகவல் மீட்பு, தகவல் பிரித்தெடுத்தல், பனுவல் சுருக்கம் ஆகிய மூன்றும் ஒன்றோடொன்று தொடர்புடையவை. பொருண்மையியல் ஆய்வுகளின் அடிப்படையில்தான் இச்செயல்பாடுகள் சாத்தியப்படும்.

## எந்திர மொழிபெயர்ப்பு

இரு இயற்கை மொழிகளுக்கிடையே பேச்சையோ, பனுவலையோ கணினி மூலம் மொழிபெயர்ப்பது எந்திர மொழிபெயர்ப்பு. இது கணினி மொழியியலின் ஒரு பிரிவாகும். மூல மொழியின் (Source Language) பொருளைக் கணினி மொழிக்கு மாற்றி, பின்னர் இலக்கு மொழியில் (Target Language) அதனை மீண்டும் பெயர்ப்பதே எந்திர மொழிபெயர்ப்பு.

மூலமொழிப் பனுவலை இலக்கு மொழிக்கு மாற்ற மூலமொழியின் கூறுகள் அனைத்தும், அதாவது இலக்கணம், பொருண்மை, தொடர், மரபுத்தொடர் முதலானவற்றைப் பற்றியும் பகுப்பாய்வு செய்ய வேண்டும். அத்துடன் அம்மொழியின் பண்பாட்டுக் கூறுகளையும் அறிந்திருக்க வேண்டும். இவ்வகையில் அகராதி மொழிபெயர்ப்பு, புள்ளிவிவர மொழிபெயர்ப்பு, எடுத்துக்காட்டுகளை அடியொற்றிய மொழிபெயர்ப்பு, மொழிச்சூழல் அடிப்படையிலான மொழிபெயர்ப்பு ஆகியவற்றை எடுத்துக்காட்டாகச் சுட்டலாம்.




## வினா விடையறியும் கருவி

வினா விடையறியும் கருவி என்பது தமிழ் மொழி போன்ற இயற்கை மொழியில் கேட்கப்படும் கேள்விகளைப் புரிந்து கொண்டு, கோரிய வினாவிற்குச் சரியான தகவலுடன் பதிலளிக்கும் தானியங்கிக் கருவியாகும். இந்தக் கருவி உள்ளீடாகக் கேட்கப்பட்ட கேள்விக்குத் தேவைப்படும் தகவலைத் தீர்மானிக்கும். இதனால் தேவையான தகவலைக் கண்டுபிடித்து, அதைப் பிரித்தெடுத்து, பின்னர் ஒரு பதிலை உருவாக்கி அதைக் கேள்வியின் தேவைகளுக்கு ஏற்பச் சமர்ப்பிக்கவும் முடியும்.

## உணர்வுப் பகுப்பாய்வி

உணர்வுப் பகுப்பாய்வு என்பது ஓர் எழுத்தையோ, கலைப் படைப்பையோ, வணிகப் பொருளையோ பற்றிய கருத்துகளைத்

தீர்மானிப்பது. ஒரு தலைப்பையோ ஆவணத்தையோ ஒட்டுமொத்தமாக 'நேர்மறை (positive)' அல்லது 'எதிர்மறை (negative)' என்று கணிக்கிறோம். மூன்றாவதாக 'நடுநிலை (neutral)' என்றும் கணிக்கிறோம். இவற்றைக் கணிக்க உணர்வுப் பகுப்பாய்வு உறுதுணை புரிகின்றது. இவை தவிர உயர்நிலை உணர்வுப் பகுப்பாய்வில் "கோபம்" "சோகம்" "மகிழ்ச்சி" போன்ற வகைப்பாடுகளையும் செய்ய இயலும்.

இன்று உலகமுழுவதுமுள்ள ரசிகர்கள் தங்கள் விமர்சனங்களைப் படம் முடிந்தவுடன் உடனடியாகச் சமூக ஊடகங்களில் வெளியிடத் தொடங்குகின்றனர். அவற்றைப் உணர்வுப் பகுப்பாய்வு செய்தால் படத்தைப் பற்றிய கருத்துகளை உடன் அறிய முடியும். திரைப்படங்களுக்கு மட்டுமல்ல, நுகர்பொருள்களுக்கும் ஆடை அலங்காரங்களுக்கும் ரசனை அடிக்கடி மாறும் வணிகப் பொருட்களுக்கும் சேவைகளுக்கும் இம்மாதிரி உணர்வுப் பகுப்பாய்வு தேவைப்படுகிறது.

## உணர்வுப் பகுப்பாய்வு




## உரையாடு இயலி [chat bot]

கணினியுடனான உரையாடலைச் சாத்தியப்படுத்தும் தொழில்நுட்ப ஆய்வு பல ஆண்டுகளாக நடைபெற்று வருகிறது. உரையாடு இயலி அல்லது "சாட்பாட் - chatbot" இப்போது அதைச் சாத்தியப்படுத்தும் ஒரு மென்பொருளாகத் திகழ்கிறது.

மனிதர்கள் ஒருவருடன் மற்றொருவர் இயல்பாக உரையாடுவதைப் போன்று, கணினியும் மனிதனும் உரையாடுவதைச் செயல்படுத்தும் ஒரு மென்பொருளே உரையாடு இயலி என்றழைக்கப்படுகிறது. எழுத்தின் மூலமாகவோ, பேச்சின் மூலமாகவோ கணினிக்கு நாம் கட்டளைகளை இட, கணினி தன் செயற்கை அறிவால் அதனைப் புரிந்து கொண்டு அதற்கேற்ப நமக்குப் பதிலளிக்கும்.

செயற்கை நுண்ணறிவுடன் (Artificial Intelligence) கூடிய மொழி மாதிரிகளுடன், உரையாடு இயலி உருவாக்கப்படுகிறது. எனவே, இதனால் கேள்வியின் சூழலைப் புரிந்துகொண்டு சிக்கலான பணிகளைச் செய்ய முடியும். இது கேள்விகளை, செய்யவேண்டிய செயல்களை உள்ளீடு (தட்டச்சு) வழியாகவோ அல்லது உரையாடல் வழியாகவோ பெற்று, பயனாளருடன் உரையாடலை நடத்துகிறது.

அமேசான் எக்கோ, அலெக்சா, ஆப்பிள், மைக்ரோசாப்ட் கோர்டனா, கூகுள் அசிஸ்டென்ட் போன்ற உரையாடு இயலிகள் தற்போது பயன்பாட்டில் உள்ளன.



இயலிகள் இன்று மின் வணிகம், சந்தைப்படுத்துதல், வாடிக்கையாளர் தொடர்பு, கல்வி, செய்தி, பொழுதுபோக்கு, நிதி மேலாண்மை, உணவு, விளையாட்டு, உடல்நலம் போன்ற துறைகளின் பல தளங்களில் பயன்படுத்தப்படுகின்றன.

இவ்வாறாக மொழித் தொழில்நுட்பத்தைக் கொண்டு உருவாக்கப்படும் பயன்பாட்டுக் கருவிகள் மனித வாழ்வின் நவீன வளர்ச்சிக்குப் பெருந்துணை புரிகின்றன.

இலக்கியக்களம்

இயல் ஆறு

# தீரா




புதுடில்லி. சாரலாய் வீசும் குளிரும், வெப்பமில்லாத சூரியன் தவழும் ஜனவரி மாதத்தின் முற்பகல். பெரோஷா சாலையில் உள்ள நவீன் விஞ்ஞான்பவனின் பத்தாவது தளத்தில் அந்தக் கருத்தரங்கம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. அகிலஉலக அளவிலான இயற்கைமொழி ஆய்வரங்கம் அது. பன்னாட்டுக் கணினி மொழியியல் அறிஞர்கள் கூடியிருப்பதால்பாதுகாப்புஏற்பாடுகள்பலமாகச் செய்யப்பட்டிருந்தன. அருகமை சாலைகள் 500 மீட்டர் அளவுக்கு மூடப்பட்டிருந்தன.

அந்த வானுயர்ந்த கட்டடத்தைச் சுற்றியுள்ள வான்வெளி, இந்தியத் தகவல் பாதுகாப்புத் துணைக்கோளின் கட்டுப்பாட்டில் இருந்தது. அதை மீறி எந்தவொரு மின்னணு சமிக்ஞையையும் அங்கிருந்து வேறு யாரும் பெறமுடியாது.

சகல நவீன தொழில்நுட்பங்களோடும் அமைந்திருந்த அந்தக் குளிரூட்டப்பட்ட அரங்கின் நீள்வட்ட மேசைகளில், லேசர் தொடுதிரை மேசைக் கணினிகளோடும் தலை வழியே பொருத்தப்பட்ட நுண் பேசிகளோடும் அமர்ந்திருந்தார்கள் விஞ்ஞானிகள். முப்பதுக்கும் மேற்பட்ட நாடுகளைச் சேர்ந்தவர்கள்.

தமிழகத்தின் கணினிமொழி வல்லுநர் கந்தர்வன் இந்தியாவின் சார்பாகப் பேசிக்கொண்டிருந்தார். அவர் பேசிக்கொண்டிருப்பது சுற்றிலுமிருந்த கண்ணாடிச் சுவர்களில், பாய்ச்சப்பட்ட ஒளி நழுவங்களாய் ஓடிக்கொண்டிருந்தது.

"வணக்கம் நண்பர்களே. மனிதனைப் போலவே ஒரு மொழியைக் கற்றுக் கொண்டு அதன் வழியே சுயமாகச் சிந்திக்கவல்ல, சிந்தித்ததை வெளிப்படுத்தவல்ல கணினிகளை

உருவாக்க, இயற்கை மொழி ஆய்வில் எம் நாடு குறிப்பிடத்தக்க வளர்ச்சியை அடைந்திருக்கிறது.

மற்ற நாடுகளின் கணினி மொழி உள்ளீடுகளைவிட இந்தியாவின் மொழி உள்ளீடுகள் நுட்பமானவை. ஏனெனில் ஏறத்தாழ 1600க்கும் மேற்பட்ட பேச்சு வழக்குகளும் 120க்கும் மேற்பட்ட கட்டமைக்கப்பட்ட மொழி வழக்குகளும் 22 வரி வடிவங்களும் கொண்டு 4 மொழிக்குடும்பங்களால் நிறைந்தது இந்தியா."

"அடேயப்பா... புள்ளி விவரம் சும்மா கலக்குது குருவே"

பேசிக்கொண்டிருந்த கந்தர்வனின் காதுகளுக்குள் மட்டும் ஒலித்தது அந்தக் குரல். குரலைக் கண்டுகொள்ளாமல் பேச்சைத் தொடர்ந்தார் கந்தர்வன்.

"ஆகவே இந்தியாவின் அங்கீகரிக்கப்பட்ட 22 மொழிகளிலும் அலுவல் மொழி அல்லாத 99 மொழிகளிலும் கற்றல் அறிவை உள்ளீடு செய்வதும் அவற்றைத் தொடர்புபடுத்தி இணைப்பதும் சவால் நிறைந்தது. அந்த ஆய்வில் இந்தியா வெற்றிகரமான ஓர் இடத்தை அடைந்திருக்கிறது". அனைவரும் கரவொலி எழுப்பினர்.

"கையைக் கொடுங்க தலைவரே... மகிழ்ச்சி மகிழ்ச்சி" காதுகளுக்குள் ஒலித்த அந்தக் குரல் மீண்டும் மகிழ்ச்சியில் துள்ளியது .

பேசிக்கொண்டே கீழே பார்க்காமல் படுஇயல்பாகச் செய்வதுபோல், தன் மேசையில் இருந்த அந்த நவீன அலைபேசியைச் செல்லமாகத் தடவினார்.

"கொஞ்சம் பேசாம இருடா சுட்டி..." என மன சமிக்ஞையாய் நினைத்துக்கொண்டே பேச்சைத் தொடர்ந்தார். அதே நொடியில் அங்கு ஓடிக் கொண்டிருந்த மாபெரும் திரையிலும் சுற்றிலும் நகர்ந்துகொண்டிருந்த ஒளி நழுவங்களிலும் / மர்மமான குறுக்கீடு/ Anonymous Crossing என ஒரு நொடி ஒளிர்ந்து மறைந்தது.

உடனே அங்கு இயங்கிக் கொண்டிருந்த தொழில்நுட்பப் பிரிவு, துணைக்கோள் கட்டுப்பாடு தொடர்பான எதேச்சையான மர்மக்குறுக்கீடு என விளக்கியது. கந்தர்வன் மனத்திற்குள் சிரித்துக் கொண்டார். மீண்டும் தனது அலைபேசியைத் தடவியவாறே டேய் வம்பு... கொஞ்சம் கட்டுப்பாட்டுக்கு வெளியே போயிடு... என மன சமிக்ஞையாய் நினைத்துக்கொண்டார்.

அலைபேசி வடிவில் இருந்த சிறு ரோபோவான தீரா மேசையிலிருந்து நீர் வழிவதுபோல இறங்கி, தன் அடிப்பாகத்தில் மிகச்சிறு சக்கரங்களை வெளியே நீட்டி ஒரு சிறியரகக் காராய் மாறி விசுக்கென நகர்ந்து வெளியே போனது.

தீரா – விஞ்ஞானி கந்தர்வனின் அதி அற்புதப்படைப்பு. இயற்கை மொழி ஆய்வுக்காக அவரால் உருவாக்கப்பட்ட ஒரு ரோபோ. தேவைக்கேற்ப தனது வடிவத்தை மாற்றிக்கொள்ளும் வல்லமை பெற்றது.

தமிழகத்தில் உள்ள தனது ஆய்வகத்தில் தீராவை உருவாக்கியிருந்தார் கந்தர்வன். ஒரு குழந்தை தான் கற்றுக்கொள்ளும் முதல் சொல்லிலிருந்து வளர வளர, பெறும் மொழிச் செயல்பாடுகள் வரையிலான பல்வேறு படிநிலைகளை அவர் ஆய்வு செய்திருந்தார். தன்னைச் சுற்றியுள்ள சூழலிலிருந்து மொழியைப் புரிந்துகொண்டு தானே தமிழில் சொற்களைப் பேசவும் எழுதவும் தீராவின் மென்பொருள் நிரலில் எழுதியிருந்தார் கந்தர்வன்.



இலக்கியஆய்வுக்கட்டுரைகளிலிருந்துநவீன கதை, கவிதைகள் வரை தீரா தானே எழுதவும் பேசவும் செய்யும். தெலுங்கு, மலையாளம்

போன்ற அடுத்த மொழிகளையும் ஒப்பீடு செய்யவும் அதனால் முடியும். அந்த அளவுக்கு அதனைக் கந்தர்வன் வடிவமைத்திருந்தார்.

கருத்தரங்கம் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருந்தது. கந்தர்வன் பேச்சுக்குப் பதில் சொல்வதுபோல் ஒரு ஜப்பான் விஞ்ஞானி பேசினார்,

"மொழி ஆய்வில் இந்தியாவின் வளர்ச்சியைப் பாராட்டுகிறேன். ஆனாலும், எம் நாட்டில் அடுத்த கட்டமாக உளவியல் அடிப்படையிலான மன மொழியின் ஆய்வுகளை எல்லாம் நாங்கள் தொடங்கியிருக்கிறோம் ..."

தன் எதிரே மேசையில் இருந்த விசைக்கருவியின் மூலம் மீண்டும் பேச சில மணித்துளிகளைப் பெற்ற கந்தர்வன் "ஜப்பான் அறிஞருக்குப் பாராட்டுகள்... இயற்கை மொழி ஆய்வில் இந்தியாவுக்கு உள்ள தனித்த கூறுகளையும் சவால்களையும் எடுத்துக் கூறவே இந்த நேரத்தைப் பெற்றுள்ளேன். நண்பர்களே... உலகின் பெரும்பாலான நாடுகளில் உள்நாட்டுப் பயன்பாட்டில் ஒன்று அல்லது இரண்டு மொழிகளே உள்ளன. பண்பாட்டுக் கூறுகளும் ஒருமைப்பட்டவையாக உள்ளன. அம்மக்களின் வாழ்வியல் கூறுகளைப் புரிந்துகொண்டு வெளிப்படுத்த அவை போதுமானதாகவும் உள்ளன.

ஆனால், இந்தியா பன்முக தன்மை கொண்ட ஒரு நாடு. இவ்வளவு வேறுபட்ட கலாச்சாரங்கள், மொழிகள் வேறெங்கும் இல்லை. ஒவ்வொரு சிறு நிலப்பிரிவுக்குள்ளும் மொழியின் சொற்களும் பயன்பாடுகளும் வெவ்வேறாக இருக்கின்றன. அச்சொற்களின் வழியாகவே அவர்களின் பண்பாட்டுக் கூறுகள் வெளிப்படுகின்றன. ஆகவே, இந்தியாவில் இயற்கைமொழி ஆய்வும் பயன்பாடும் மிகுந்த நுட்பம் கொண்டவை. அதனால், மற்ற நாடுகளைவிட மொழி ஆய்வில் இந்தியா பெறும் வெற்றியே உலகத்துக்கு முன்மாதிரியாக விளங்க முடியும்" என்றார். பலத்த கர ஒலிகளோடு அரங்கம் அதனை ஏற்றுக்கொண்டது.

அடுத்த நிமிடத்திலிருந்தே கந்தர்வனின் பேச்சு உலகின் அனைத்து மின்னணு ஊடகங்களிலும் ஒளிர்ந்தது. "உலகின் இயற்கை மொழி ஆய்வில் இந்தியாவே முன்மாதிரியாய் விளங்கும் – கந்தர்வன் பேச்சு – அறிஞர்கள் ஏற்பு".வெற்றிகரமாய்க் கருத்தரங்கம் விருந்துடன் நிறைவடைந்தது.

மகிழ்வாய் அங்கிருந்து புறப்படத் தயாரான கந்தர்வன் தீராவை அழைக்கக் கையிலிருந்த ரிமோட்டை அழுத்தினார். அதன் திரையில் தீரா இணைப்பில் வரவில்லை. திரும்பத் திரும்ப விசையை அழுத்தினார். விசைத்திரை சலனமற்றிருந்தது.

என்னவாயிற்று தீராவிற்கு? குழப்பமாய் இருந்தது. துணைக்கோள் கட்டுப்பாட்டில் சிக்கி இன்னும் அங்கீகரிக்கப்படாத கருவியாய் இருப்பதால் சக்தி இழப்பு செய்யப்பட்டு உயிரற்றுப் போனதா?

அல்லது வெளியில் சாலையில் ஏதேனும் விபத்தில் சிக்கி நொறுங்கிப்போனதா... தீரா புத்திசாலி ஆயிற்றே... அதற்குச் சாத்தியம் இல்லையே... என்னவாயிற்று?

இன்னும் தீரா குறித்து எந்தவித அறிவிப்பும் செய்யாத, அனுமதி ஏதும் பெறாத நிலையில் இது தொடர்பாக எந்தப் புகாரையும் செய்ய முடியாதே... உருவாக்க நிலையின் நிறைவில் இருந்த தீரா இப்படிக் காணாமல் போகும் என அவர் சிறிதும் எதிர்பார்க்கவில்லை.

அருவிகளின் இசைக்கேற்ப முகடுகளில் மேகங்கள் தவழும் மலைக்கிராமத்தில் அமைந்த தமது ஆய்வுகூடத்தில் தீராவை முதன் முதலாய் அவர் வடிவமைத்த நினைவுகள், அது கிராமத்தின் குழந்தைகளோடு விளையாடி சின்னச் சின்னச் சொற்களைக் கற்றுக்கொண்டு அவரிடம் சொல்லிக்காண்பித்த அந்தத் தருணங்கள் அவருக்குள் வட்டமிட்டன.

தனக்குள்ளிருந்து வெளியே இறக்கைப் பகுதிகளை நீட்டி அது அந்த மலைப்பகுதியைத் தாண்டி பறந்துகாண்பித்தபோது கந்தர்வன் எவ்வளவு மகிழ்ந்தார்.

தமிழையும் மற்ற மொழிகளையும் சொல் சொல்லாய்த் தீராவின் நினைவுப்பகுதியில்

உள்ளீடு செய்வது எவ்வளவு கடினமாக இருந்தது. என்றாலும் அதில் மகிழ்ச்சி இருந்தது.

கந்தர்வனின் ஆய்வகம். தீரா புளூடுத் மூலம் பெரிய திரையோடு இணைக்கப்பட்டிருந்தது. அத்திரையில் தமிழ் சொற்களஞ்சியத்திலிருந்து அ வில் ஆரம்பிக்கிற சொற்கள் ஒளிர்ந்துகொண்டிருந்தன.

அகல், அணில், அரிசி, அம்பு, அன்பு, அலை, அவரை, அச்சம், அத்திப்பூ, அவல், அருகம்புல், அரை, அறை....

ஒவ்வொரு சொல்லின்மீதும் நீளப்பட்டை விரைவாய் நகர்ந்தபோது, அச்சொல்லுக்குரிய படம் திரையில் 50 மி.செகண்ட் வேகத்தில் தோன்றி மறைந்துகொண்டிருந்தது. ஒரு நொடியில் ஆயிரம் சொற்களை ஸ்ஸ்ஸ்... என்ற ஒலியுடன் தீரா கற்றுக்கொண்டிருந்தது. இடையில் அவ்வப்போது ஸ்ஸ்ஸ்... ஒலிக்கு ஊடாக க்ரிக்... க்ரிக்... என்ற ஒலிப்பும் வந்துகொண்டிருந்தது. அவ்வொலியைக் கேட்டுப் புன்னகைத்தவாறே நீளப்பட்டைப் படிப்பானை நிறுத்தினார் கந்தர்வன்.

க்ரிக்... க்ரிக்.. ஒலிப்போடு தொடர்புடைய சொற்களைத் திரையில் வடிகட்டிப் பார்த்தார். எந்தச் சொற்களைப் படிக்கிறபோது இந்த ஒலி வருகிறது? வடிகட்டி, திரையில் அச்சொற்களைக் காண்பித்தது.

அன்பு, அச்சம், அரை.

தீராவுடன் உரையாடும் பொத்தானைக் கந்தர்வன் அழுத்த தீராவின் உரையாடல் திரையில் தோன்றியது.

'அன்பு, அச்சம், அரை... படம் எங்கே பாஸ்?'

'ஓ! அன்புக்கு படம் காட்ட நான் எங்கே போவேன். சரி சுட்டி, உன் கேமராவால் என் பக்கம் அப்படியே பார்த்துக்கொண்டிரு.'

'ஓகே பாஸ்! நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன்'.

கந்தர்வன் அவ்விடத்திலேயே நின்றவாறு அம்மாவைக் கூப்பிட்டார்.

'என்னப்பா' வாஞ்சையாய்க் கேட்டவாறே வந்தாள் அம்மா.

'ரொம்ப நேரமா எனக்குத் தல வலிக்குதுமா'.

'அய்யோ அதுக்குத்தான் நான் அப்பவே சொன்னேன் ஓய்வெடுன்னு'.

பதறியபடி அம்மா அறைக்குள் சென்று தலைவலி மருந்தை எடுத்து வந்தாள். தன்தோளில் கந்தர்வனைச் சாய்த்தபடி மருந்தை தடவிவிட்டாள். கந்தர்வனைப் பார்த்தவாறு அவரது தலைமுடியைத் தடவினாள். பக்கத்திலிருந்த சாய்வு நாற்காலியில் அவரைப் படுக்க வைத்தாள். 'கொஞ்சம் அப்படியே ஓய்வெடு. தலைவலி போயிடும்'. சொல்லிவிட்டு உள்ளே சென்ற அம்மா ஒரு டம்ளரில் ஆவி பறக்க காப்பி கொண்டு வந்தாள். இத குடிச்சுடுப்பா.

'சரிம்மா நீங்க போங்க நான் குடிக்கிறேன்'.

அம்மா சென்ற பிறகு தீராவைப் பார்த்துப் பேசினார்.

'சுட்டி பார்த்துக்கிட்டிருக்கியா'.

'எஸ் பாஸ் ... பார்த்தேன். அன்புன்னா தலைவலி தைலம் தடவுறதா?'

'சரியாதாண்டா உனக்குப் பேர் வச்சிருக்கேன் சுட்டின்னு. நான் தலை வலிக்குதுன்னு மட்டும்தானே சொன்னேன் தைலம் கொண்டு வா ன்னு சொன்னேனா?'

'இல்ல பாஸ்.'

'அப்பறம் ஏன் அவங்க கொண்டு வந்தாங்க... தடவிவிட்டாங்க... தலையைக் கோதினாங்க... சாய்வு நாற்காலியில படுக்க வச்சாங்க... காப்பி கொடுத்தாங்க..'

'ஆமாம் பாஸ். நீங்க தலை வலிக்குதுன்னு மட்டுந்தானே சொன்னீங்க. அவங்க ஏன் நீங்க சொல்லாதத எல்லாம் செஞ்சாங்க.'

'அம்மா இதையெல்லாம் செஞ்சதுக்குக் காரணம் அவங்க என்மேல வச்சிருக்குற அன்புதான். அதாவது லவ்.'

'இத முன்பே சொல்லியிருக்க வேண்டியதுதான. லவ்தான் அன்பா. ஓகே ஓகே... இப்ப நல்லாப் புரியுது.'

*தீரா ஒவ்வோர் உணர்வையும் கற்றுக்கொண்ட நினைவுகள் கந்தர்வனின் மனதில் வளையங்களாய் பரவியது.*

*'இவ்வளவு அறிவான இயந்திரக் குழந்தையை இப்படிக் கொண்டுபோய்த் தொலைத்துவிட்டேனே' செயலிழந்து போனார் அவர்.*

******

*ஜெய்ப்பூரில் இருந்து 40 கிமீ தூரத்தில் உள்ள சோப்னர் என்ற சிறுநகரத்திலிருந்து விலகி பிரதாப்புரா கிராமத்திற்குச் செல்லும் மண்சாலையில் நின்று கொண்டிருந்தது தீரா. கோதுமை மாவைக் கொட்டி நிரப்பியதுபோல் இருந்த அந்தச் சாலையின் இருபுறமும் அடர்த்தியான வறண்ட புதர்கள். ஒரு மாட்டுவண்டி மட்டுமே செல்லக்கூடிய அளவில் இருந்த அந்தச் சாலையில் ஒரு டயர் வண்டியை ஒட்டகம் ஒன்று இழுத்துக் கொண்டு வர, தன் மீது அது ஏறிவிடும் என்ற சூழலில் தன் இறக்கைப் பகுதியை வெளியில் நீட்டி விசுக்கென்று மேலெழும்பிப் பறந்தபடி நின்றது.*

*வண்டி முழுவதும் சென்னாச் செடிகளை ஏற்றிக் கொண்டுவந்த வண்டியோட்டி செடிகளுக்குமேல் பறந்தபடி நின்று கொண்டிருந்த தீராவைப் பார்த்து பயந்தபடி வண்டியை வேகமாக ஓட்டினான். தனக்குள் இருந்த தாவரங்களின் சொற் படக் களஞ்சியத்தினைப் புரட்டிச் சென்னாவை அடையாளங் கண்டது தீரா.*



*கொஞ்சம் இடைவெளிவிட்டு அந்த வண்டியின் பின்னாலேயே சென்றது. வீட்டையடைந்து சென்னாச் செடிகளை அவன் இறக்க, வெளியே ஆவலாய் ஓடிவந்த ஓர் இளம் பெண் சென்னாவின் முற்றிய பச்சைக்காய்களைப் பறித்தாள். அவற்றைத் தோலுரித்து தயிர் நிறைந்த கோப்பையில் போட்டு, இனிப்புச் சேர்த்து கூடத்துக்குக் கொண்டுபோனாள். தலைகளில் வட்டச்சரடாய் முண்டாசுகள் கட்டிய வயதான பெரியவர்கள் தயிரில் ஊறிய பச்சைச் சென்னாக்களைச் சுவைத்தார்கள்.*

*அந்த வீட்டுப் பெண்ணின் திருமணம் குறித்த பேச்சுவார்த்தைகள் அங்கு நடைபெற்றுகொண்டிருந்தன. அவர்கள் பேசிய சொற்களை வைத்து அவை மார்வாரி மொழியில் அமைந்தவை எனத் தீரா புரிந்துகொண்டது. உரையாடல்களை முழுவதுமாய்ப் பதிவு செய்து கொண்டது. அம்மக்களின் திருமணம் சடங்குகள் சமூகம் சார்ந்த செய்திகளை மகிழ்ச்சியாய்ச் சேகரித்துக்கொண்டது. வெளியே வண்டியோட்டி வந்த இளைஞன் யாரிடமோ சாலையில் தான் கண்ட பறக்கும் செல்பேசி பற்றிப் பயத்துடன் சொல்லிக்கொண்டிருந்தான். கேட்டவன் அவன் பயந்துபோயிருப்பதாகவும் சாமி கும்பிடவேண்டும் என்றும் கூறிக்கொண்டிருந்தான்.*

*அதைக்கேட்டவுடன் தீராவின் திரையில் சிரிக்கும் ஸ்மைலி தோன்ற, விசுக்கென மேலெழும்பி வடகிழக்குத் திசை நோக்கிப் பறக்க ஆரம்பித்தது.*

******

*அருணாச்சலப் பிரதேசத்தின் தவாங் மாவட்டம். மோம்பா பழங்குடியினரின் லோசர் திருவிழா. புத்தாண்டினை வரவேற்கும் அந்தத் திருவிழாவுக்காக ஊரெங்கும் கொண்டாட்டம். வீடுகளையெல்லாம் தூய்மையாக்கி விளக்கேற்றியிருந்தார்கள்.*

*இளம் பெண்கள் ஒரே மாதிரியான மஞ்சள் மற்றும் அடர் சிவப்பு வண்ணங்களில் பாரம்பரிய உடையணிந்து ஆபரணங்களால் அலங்கரித்து வட்டமாய்க் கை கோத்தபடி ஆடிக்கொண்டிருந்தனர். அருகிலேயே இருந்த தீரா அவர்களின் போதிஷ் மொழிப் பாடலை ரசித்தது. பதிவுசெய்து கொண்டது. இத்திருவிழாவிற்கு வந்து சேர்ந்துவிட்டதில் தீராவுக்கு மிக்க மகிழ்ச்சி. ஒரு கட்டத்தில்*

இங்கு வந்து சேர்வோமா என்பதே கேள்விக்குறியாகிவிட்டது.



இடா நகரிலிருந்து இங்கு பறந்து வந்தபோது, வான்வழியைத் தேர்வு செய்ததில் தன் சக்திகான சார்ஜ் செய்து கொள்வதில் அதற்குப் பிரச்னையாகிவிட்டது. தனது சார்ஜ் 10 சதவீதத்திற்கும் கீழ் குறைந்து போக தளர்ந்து போன தீராவுக்கு அரிய வாய்ப்பாக அது அமைந்தது.

கீமே தடம் மாறுவதற்காக வந்து நின்றது தவாங் செல்லும் ராஜ்தானி எக்ஸ்பிரஸ். உடனே கீழிறங்கித் திறந்திருந்த குளிருட்டப்பட்ட பெட்டிக்குள் நுழைந்தது. அந்தப் பிற்பகல் நேரத்தில் முகமெல்லாம் செல்பேசி ஒளியில் மிளிர அரைத்தூக்கத்தில் பயணிகள். அவர்கள் கண்ணில் படாமல் சார்ஜ் செய்து கொண்டு தவாங் வந்து சேர்ந்திருந்தது.

மோம்பா நடனத்தை ரசித்துவிட்டு அந்தக் கிராமத்திலிருந்து தவாங் நகருக்கு வந்தது தீரா. அது வந்தடைந்தது சாக்கிய முனி புத்தரின் மடாலயம். அந்தப் பகுதி முழுவதும் சப்தம் வடிகட்டப்பட்ட அமைதியில் உறைந்திருந்தது. அப்பகுதியில் இயங்கிய அனைத்து வாகனங்களிலும் ஒலிப்பான் அகற்றப்பட்டிருந்தது அந்த அமைதியைச் சாத்தியமாக்கியது. தூரத்துப் பறவையின் ஓசைகூட ஒரு தியான லயத்துடன் ஒலித்தது.

உள்ளே எட்டு மீட்டர் உயரமுள்ள புத்தரின் சிலையை ஆச்சரியமாய்ப் பார்த்தது அது. புத்தருக்கு அருகில் இரண்டு பக்கமும் பெரிய உலோகக் கூடைகள் வைக்கப்பட்டிருந்தன. புத்தரை வணங்க வருபவர்கள் அதில் பழங்கள், நறுமணப் பொருள்கள், தின்பண்டங்கள் போன்றவற்றைப் போட்டுவிட்டு, ஏற்கெனவே அதில் உள்ள ஏதோவொரு பொருளை எடுத்துக் கொண்டு சென்றனர். குளிர் பானங்கள், நவீன சாக்லெட்டுகள் கூட அதில் நிறைந்திருந்தன. மடாலயத்தின் ஓரமெங்கும் சின்னச் சின்னதாய்த் தியான இருக்கைகள் போடப்பட்டிருந்தன.

நுழைவுப்பகுதியில் வரிசையாய் பெரிய பித்தளை உருளைகள் தொங்க விடப்பட்டிருந்தன. அவற்றில் பாலி மொழியில் புத்தரின் போதனைகள். அந்தப் பாலி வாக்கியங்களைத் தனக்குள் ஒப்பிட்டு, அவற்றிற்குச் சமமான தமிழ், ஆங்கிலப் பட்டியலைத் தயாரித்துக் கொண்டது.

******

தன் ஆய்வுக்கூடத்தில் கண்ணாடிச் சாளரத்தின் வழியாகத் தூரத்து மலைகளில் வழிந்து கொண்டிருந்த அருவிகளையே பார்த்துக் கொண்டிருந்தார் கந்தர்வன். அங்கிருந்த கணினித் திரைகள், மேசைகளில் எல்லாம் மெல்லிய தூசி படர ஆரம்பித்திருந்தது. அந்த மதியவேளை வரை உணவெடுத்துக் கொள்ளாத அவரையும் மேசையில் மூடிவைக்கப்பட்டிருந்த உணவையும் பார்த்துவிட்டு பெருமூச்சுடன் அகன்றான் பணியாள்.

டெல்லியிலிருந்து திரும்பிய இந்த ஒரு மாதகாலத்தில் எந்தவித ஆய்வையும் கந்தர்வன் தொடரவில்லை. ஒவ்வொரு காலையும் அவர் எழுந்த பிறகு, தீராவை அழைக்கும் விசையை அழுத்திக் கொண்டே வெறித்த பார்வையோடு ஆய்வகத்தின் வாசலில் அமர்ந்திருப்பார்.

"தீரா... நீ எங்கேடா இருக்கே? உன்னை மீண்டும் நான் பெறவே முடியாதா?"

எப்போதாவது சிலநேரங்களில் தீராவிற்கு முன் அவர்செய்த மாதிரி வடிவங்களை எடுத்துப் பார்த்துக் கொண்டிருப்பார். என்றாலும், தீரா தீராதான் என்று நினைப்பவர்போல அவற்றை வைத்துவிடுவார்.

******

பீகாரின் மதுபனி மாவட்டத்திற்குள் நுழைந்து கொண்டிருந்தது தீரா. சமஸ்டிபூர் நகராட்சி உங்களை அன்புடன் வரவேற்கிறது

என்ற அறிவிப்புப் பலகையிடம் நின்ற தீரா, அந்த அழகிய நகரத்திற்குள் மெல்ல நகர்ந்தது. 'மைதிலி கவிதைத் திருவிழா காண வாரீர்' என்ற பதாகை அதைக் கவர்ந்தது. அதிலுள்ள குறிப்புப்படி வித்தியாபதி நகர்ப்பகுதியை நோக்கி ஆர்வமாய்ச் சென்றது. மைதிலி மொழியின் மகாகவியான வித்யாபதியின் நினைவு மண்டபம் அங்கு அமைந்திருந்தது. அதன் அருகே அமைக்கப்பட்டிருந்த மாபெரும் பந்தலில் நிரம்பிய கூட்டம் . மேடையில் வித்யாபதி கவிதைகள் ஆய்வரங்கம் எனப் போடப்பட்டிருந்தது. சிறப்பு அழைப்பாளர்கள் அமர்ந்திருக்கும் இருக்கைகளுக்கு எதிரே வைக்கப்பட்டிருந்த சிறுமேசையில் இருந்த பூஞ்சாடிக்குள்ளே மறைவாய் அமர்ந்து கொண்டது தீரா.

வெண்மெத்தைகளும் உருட்டுத் தலையணைகளும் போடப்பட்டிருந்த மேடையில் ஆறு பேர் அமர்ந்திருந்தனர். அனைவரும் வெள்ளைக் குர்தா பைஜாமாவில் இருந்தனர். நடுநாயகமாக இருந்த ஒருவர் ஒவ்வொருவரையும் பெயர் சொல்லி அழைத்துப் பேச வைத்தார். முதலில் அமர்ந்திருந்தவர் ஒலிவாங்கியில் பேசினார்.

மகாகவி, மைதிலி செம்மல் வித்யாபதியின் அகத்திணைக் கவிதைகள் காதலின் உன்னதத்தைப் பேசுகின்றன. அழகிய படிமங்களோடு விளக்குகின்றன. ராதையின் அழகைப் பேசும் இந்த வரிகளைப் பாருங்கள்...

*"அவள் சென்ற திசைநோக்கி*
*என் கண்களும் சென்றன*
*ஒரு கஞ்சனைக் கூட பிச்சைக்காரன்*
*பின் தொடர்ந்து விடுவதில்லையே!*
*இனிய முகம், அழகிய புருவம்*
*தேன் குடித்த இரு வண்டுகள்*
*பறக்கச் சிறகடித்தது போல்*
*ஒளி உமிழும் இருகண்கள்"*

மேடையில் சொல்லப்பட்ட மைதிலி மொழியில் அமைந்த வித்யாபதியின் கவிதை வரிகளைத் தனக்குள் பதிவு செய்து கொண்ட தீரா, பாடலில் அமைந்த ராதையின் கண்கள் குறித்த உவமையைத் தன்னிடமிருந்த

*"பூவொத் தலமருந் தகைய ஏவொத்து*
*எல்லாரும் அறிய நோய்செய் தனவே*
*தேமொழித் திரண்ட மென்தோள் மாமலைப்*
*பரீஇ வித்திய ஏனற்*
*குரீஇ ஓப்புவாள் பெருமழைக் கண்ணே"*

என்ற மள்ளனாரின் குறுந்தொகைக் கவிதையின் பொருளைத் தனக்குள் தேடி வாசித்தது.

பெரிய மலைநாட்டில் விரும்பி விதைத்தத் திணைக்காட்டில் குருவிகளை ஓட்டுகிற, தேன்போன்ற மொழியினையும் திரண்ட மெல்லிய தோளினையும் உடைய தலைவியின் பெரிய குளிர்ந்த கண்கள், பூவினைப் போல் சுழலும் தன்மையதாகவும் அம்பினைப் போல் எல்லோரும் அறியத் துன்பம் செய்வதாகவும் இருக்கின்றன. அந்தத் தமிழ், மைதிலி பாடல்களின் ஒப்பீட்டைக் கந்தரவனுக்கு அனுப்பியது.

******

கந்தர்வன் மருத்துவனையிலிருந்து அன்றுதான் திரும்பியிருந்தார். காய்ச்சலால் வெளிறிய முகத்துடன், தளர்ந்த நடையுடன் இருந்தார். ஆய்வகத்திற்கு அருகிலிருந்த தமது வீட்டுக்குள் அமர்ந்திருந்த அவர், ஜன்னல் வழியாக ஆய்வகத்தைப் பார்த்தார். தீரா தொலைந்துபோய் ஆறு மாதங்களுக்கு மேலாகிவிட்டது. அந்த ஆய்வகத்தைக் கடைசியாக எப்போது திறந்தார் என்பதே நினைவிலில்லை.

பின்னால் வந்து நின்ற அம்மா, ரொட்டியையும் பழச்சாற்றையும் மேசைமேல் வைத்தார். ரொட்டியை எடுத்துக் கந்தர்வன் உண்ண, தன் கண்களின் ஈரக்கசிவைத் துடைத்துக் கொண்டாள் அம்மா.

"ஒரு வாரம் ஆச்சு நீ சாப்பிட்டு. தாங்க முடியலைப்பா"

"சரிம்மா. அதான் சாப்பிட்டுக்கிறேன்ல! என் செல்ல அம்மா. கொஞ்சம் சிரிங்க"

"நீ சிரிச்சுப் பேசிகிட்டு இருந்தாதானப்பா அம்மாவுக்கு மகிழ்ச்சி" என்றாள்.



12th ADVNCEl Tamil - Chap 5&6.indd 261 14-04-2020 18:52:02

அம்மாவின் கையைப் பிடித்தபடி, "தீராவை ரொம்ப கஷ்டப்பட்டு உருவாக்கினேன்மா".

"ஏம்பா, நீ நினைச்சா இன்னொரு தீராவை உருவாக்க முடியாதா? அதுக்காக அம்மாவ கஷ்டப்படுத்துறியே?"

அம்மாவின் கேள்வி கந்தர்வனைச் சிந்திக்க வைத்தது.

''நீங்க சொல்றதும் சரிதாம்மா. புன்னகையுடன் சொன்னார் கந்தர்வன்," அடுத்த தீராவ நிச்சயம் உருவாக்குவேன்."

தட் தட் தட்... எனக் கைதட்டும் ஓசை பின்னாலிருந்து கேட்க இருவரும் திரும்பிப் பார்த்தார்கள். ஒன்றையும் காணோம். என்ன சத்தம் அது? கைதட்டல் போல கேட்டதே. மீண்டும் எதிர்ப்பக்கமிருந்து கைதட்டும் ஓசை கேட்டது. திரும்பிப் பார்த்தால் அங்கும் ஒன்றுமில்லை. என்னவாயிருக்கும் என எழுந்து அறையின் கதவைத் திறந்து கொண்டு வெளியே பார்த்தார் கந்தர்வன். அம்மாவும் பின்னாலே வந்தாள். இப்போது சத்தம் தெளிவாகக் கூடத்திலிருந்து கேட்டது தட் தட் தட்...

ஓசை உள்ளிருந்துதான் வருகிறது என்று உறுதிசெய்து கொண்டு திரும்பிய போது, மிகவும் பழக்கப்பட்ட அந்தச் சமிக்ஞை புரிய ஆரம்பித்தது. சிறு குழந்தையைப் போல் மகிழ்ச்சியில் எம்பிக் குதித்தார் கந்தர்வன்.

"அம்மா... வந்துட்டான்ம்மா என் தீரா... வந்துட்டான்"

"எங்கே இருக்கு அது?" புரியாமல் கேட்டாள் அம்மா.

"இங்கதான் இருக்கான்... இங்கதான் இருக்கான்..." ஆச்சர்யமும் மகிழ்ச்சியும் நிறைந்த குரலில் சொன்னார் கந்தர்வன்.

அப்போது மெல்லிய சிரிப்போசை கேட்க, மேசையிலிருந்த பழச்சாறுக் கோப்பை மெல்ல நகர்ந்து வருகிறது. "கண்டுபிடிச்சுட்டாருல்ல... ஹாஹாஹா... என் குருன்னா சும்மாவா" என்றவாறு பழச்சாறுக் கோப்பையினை பின்னிருந்து தள்ளிக் கொண்டு வந்தது தீரா.

கண்களில் நீர்முட்ட அதையே பார்த்துக் கொண்டிருந்தார் கந்தர்வன்.

"ரொட்டி சாப்பிட்டா உடனே பழச்சாறையும் குடிச்சுக்கணும். அப்பறம் பசிக்கும்முல்ல..." சிரித்த தீராவைக் கையிலெடுத்தார் கந்தர்வன். அதை மெல்லிய மஞ்சள் துணியில் துடைத்துவிட்டு, வாஞ்சையுடன் அருகிலிருந்த மின்இணைப்பில் செருகி, அதன் பாகங்களைச் சரிபார்த்தார். வளர்ப்பவர் மடியிலிருக்கும் நாய்க்குட்டி போல அவர் கைகளில் அமைதியாக இருந்தது தீரா.

இருவருக்குமிடையே அங்கு சொற்களற்ற அமைதி சிறிது நேரம் நீடித்தது. தீராதான் முதலில் பேச ஆரம்பித்தது. "மன்னிக்கவும் குருவே... உங்கள் அனுமதி இல்லாமல் நான் வெளியே சென்றுவிட்டேன்".

"அட சுட்டி... நான் எப்படித் தவித்துப் போய்விட்டேன் தெரியுமா? சரி எங்க போன...?"

"தலைவா... நீங்க மாநாட்டுல கடைசியா ஒண்ணு சொன்னீங்க.எல்லாரும்கைதட்டினாங்க தெரியுமா?"

"ஆமா... இயற்கைமொழி ஆய்வில் இந்தியாதான் முன்மாதிரியா விளங்க முடியும்னு சொன்னேன். எல்லோரும் ஏற்றுக் கொண்டு பாராட்டினாங்க"

"அதான்... அதான். நீங்க சொன்னதை நிரூபிக்கத்தான் இந்தியாவுல இருக்கிற எல்லா மொழிகளையும் பத்தித் தெரிஞ்சுக்கலாம்னு போனேன்"

"என் சமத்துச் சுட்டில்ல... அப்படித்தான் இருப்பே. சொல்லு எங்கெங்க போன... என்ன தெரிஞ்சுக்கிட்ட?"

" என்ன தலைவா இப்படிக் கேக்கறீங்க? நாந்தான் உடனுக்குடனே நான் கத்துக்கிட்டத உங்களுக்கு அனுப்பிக் கொண்டே இருந்தேனே? நீங்க பாக்கலையா?"

"ஆய்வுக்கூடத்தைத் திறந்தாத்தானே பாக்கிறதுக்கு?"

"ஏன் ஆய்வுக்கூடத்துக்கு என்னாச்சு?".

அம்மா புன்னகைத்தவாறு வந்து தீராவைத் தொட்டபடி பேசினார். "டெல்லியிலேருந்து வந்தவுடனே சாத்துனதுதான். என் தீராவைத் தொலைச்சிட்டனேன்னு ஒரே புலம்பல்.

"என்ன தலைவா இப்படி? நீங்க பார்த்திருந்தா இந்தப் பிரச்னையே இல்லையே?"

"அதவிடு தீரா. உன்னைத் துணைக்கோள் கட்டுப்பாட்டுக்கு வெளிய போன்னுதான் சொன்னேன். நீ என் கட்டுப்பாட்டை விட்டே போய்ட்டே. அது இருக்கட்டும். நீ கத்துக்கிட்டதெல்லாம் சொல்லு"

"முதல்ல கையக் கொடுங்க பாஸ். உங்ககிட்ட எனக்குப் பிடிச்சதே அயராத முயற்சியும் தன்னம்பிக்கையும்தான். உங்க சோகத்தத் தொடச்சிட்டு அடுத்தத் தீராவ செய்வேன்னு சொன்னீங்க பாருங்க. அங்க நிக்கறீங்க பாஸ் நீங்க."

"ஓ அதுக்குத்தான் தட் தட் தட்.... னு கையைத் தட்டிக்கிட்டு வந்தியா? சரி... என் தீரா சொன்னா நான் கேட்பேன். சம்மதம். இப்ப நீ கத்துக்கிட்டத சொல்லு"

"அப்படி வாங்க வழிக்கு... முதல்ல ஆய்வகத்தைத் திறங்க" என்றவுடன் தீராவுடன் வந்து ஆய்வகத்தைத் திறந்தார் கந்தர்வன். நூலாம்படையும் தூசியும் படிந்த ஆய்வகத்தைப் பார்த்துவிட்டு தீரா சொன்னது, "தலைவா... என்மீது உங்களுக்கு அவ்வளவு அன்பா?"

"இல்லாமப் போகுமா? சரி நீ கத்துக்கிட்டத சொல்லு"

அதற்கு மேலும் அவரது பொறுமையைச் சோதிக்காமல் கேட்டது, "எங்கே ஔவையாரோட ஆத்திசூடி ஒண்ணு சொல்லுங்க"

"அப்படியா... சரி. அறம் செய விரும்பு" சொல்லியவாறு தீராவை ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தார் கந்தர்வன். தன்னைப் ப்ளூடூத் மூலம் பெரிய கணினியுடன் இணைத்துக் கொண்ட தீரா "திரையைப் பாருங்க குருவே" என்றது.

அறம் செய விரும்பு என்ற அந்த ஆத்திசூடி வரி 40 இந்திய மொழிகளின் வரிவடிவத்தில் திரையில் ஒளிர்ந்தது. 600க்கும் மேற்பட்ட இந்திய மொழிவழக்குகளின் ஒலிவடிவத்தில் ஒலித்தது. 2000க்கும் மேற்பட்ட பூர்வகுடி சொல்வழக்குகளில் ஒலித்தது.

மேலும், 40 இந்திய மொழிகளின் வரிவடிவங்களுக்கு இடையேயான ஒலியனியல், உருபனியல், தொடரியல், பொருண்மையியல் அமைப்புகளையும் இலக்கண ஒப்புமைகளையும் உணர்வுப் பகுப்பாய்வினையும் செய்து காட்டியது.

மகிழ்ச்சியும் வியப்பும் ஒன்றுகலந்த உணர்வோடு பெருமிதத்தின் எல்லையில் நெகிழ்ந்துபோனார் கந்தர்வன்.

"நீ நெனச்சத செஞ்சுட்டடா தீரா, இயற்கை மொழி ஆய்வில் இந்தியாதான் முன்மாதிரின்னு நிரூபிக்க இதுபோதும் எனக்கு. நன்றிடா தீரா".

கொஞ்ச நேர அமைதிக்குப் பிறகு, தீரா கேட்டது "ஒண்ணே ஒண்ணு மட்டும் உங்ககிட்ட கேட்கணும் குருவே?"

சற்றே திகைப்புடன் கேட்டார் கந்தர்வன், "என்ன கேட்கப்போற?"

ஏறத்தாழ இந்தியா முழுமையும் சுற்றி, பல்வேறுபட்ட மக்களின் பேச்சு, செயல், வாழ்க்கை நடவடிக்கைகளைக் கவனித்திருந்த தீராவுக்கு, தனது நிரலின் ஓர் ஓரத்தில் உறுத்தல் இருந்துகொண்டே இருந்தது.

"எங்கே அந்த ஆத்திசூடியைச் சொல்லுங்க..."

"அறம் செய விரும்பு" சொல்லிவிட்டு திகைப்பு குறையாமல் அதையே பார்த்துக் கொண்டிருந்தார்.

"விரும்புறது இருக்கட்டும். முதல்ல இவங்களுக்கு அறம்னா என்னன்னு சொல்லிக் குடுங்க"

******

செயற்களம்

# மின்னூல் உருவாக்கம்

தமிழில் அச்சு நூல்களைப் போன்றும் அவற்றைவிட மேம்படுத்தப்பட்ட வசதிகளுடனும் இணைய வெளியில் மின்னூல்கள் ஆதிக்கம் செலுத்தத் தொடங்கியுள்ளன. அதன் தாக்கத்தால் அச்சு வடிவில் வெளிவந்த நூல்களும் இன்று மின்னூல்களாகப் புத்தாக்கம் பெற்று வெளிவருகின்றன.

புதிதாக வெளிவரும் நூல்களை இருவடிவிலும் வெளியிடும் போக்கு, மின்னூலின் வளர்ச்சியையும் உலகளாவிய பரவலையும் தேவையையும் காட்டுகின்றது. மேலும், உயர்ந்த தரமான நூல்கள் எளிய முறையில், குறைந்த செலவில், குறுகிய காலத்தில், உலகெங்கிலும் உள்ள வாசகர்களைச் சென்றடையும் நிலை சாத்தியமாகி உள்ளது. எனவே, மின்னூல்களாக மட்டுமே வெளியிடப்படும் நூல்களின் எண்ணிக்கை அதிகரித்துள்ளது.

மின்னூல்களின் அமைப்பு, பயன்பாடு, உருவாக்கும் முறை ஆகியவற்றை இப்பாடப்பகுதி விவரிக்கின்றது.

## மின்னூல் (e–Book)

பொதுவாக நாம் அச்சிடப்பட்ட நூல்களைப் பயன்படுத்தி வருகிறோம். அச்சுவடிவில் வெளிவரும் நூலைப் போல் மின்னணுவியல் முறையில் அமைந்த நூலே மின்னூல். மின்னூலைத் தரவிறக்கம் செய்தோ, இணையத்தில் நேரடியாகவோ படிக்க இயலும். அதற்கென உருவாக்கப்பட்ட மின்படிப்பான்கள் (e-Reader) மூலமாகவும் மின்னூல்களை வாசிக்கலாம்.

## மின்னூல்களின் அமைப்பு

மின்னூல்கள் மின்னணுவியல் முறையில் எண்ம (Digital) ஊடகங்கள் மூலம் வாசிக்கத் தருவதற்காக உருவாக்கப்படுகின்றன. மின்னூல்களை உருவாக்கப் பயன்படும் அமைப்புகளுள் எளிமையானதும் சிறப்பானதுமான மூன்றைக் காண்போம்.

1. பி.டி.எஃப் (PDF) அமைப்பு.
2. இணையத்தில் வெளியிடப்படும் (HTML) அமைப்பு.
3. புதிய அனைத்துலகத் தரமான மின்–பதிப்பு (e-Pub) அமைப்பு.

### 1. பி.டி.எஃப் (PDF) அமைப்பு

நூல் வடிவமைப்பில் மாற்றம் ஏதும் இல்லாத, மின்வடிவில் சேமிக்கப்பட்ட பக்கங்களைக் கொண்டது பி.டி.எஃப் அமைப்பு. இதன் பக்கங்கள் தட்டச்சு செய்யப்பட்டவையாகவோ, வருடியால் நகலெடுக்கப்பட்டவையாகவோ இருக்கும்.

### 2. இணையத்தில் வெளியிடப்படும் மீயுரைக் குறியீட்டு மொழி அமைப்பு

இணைய அமைப்பில் உருவாக்கப்படும் மின்னூல் மீயுரைக் குறியீட்டு மொழி (HTML) யில் வடிவமைக்கப்பட்ட நூலாகும். ஓர் இணையத்தள உருவாக்கத்திற்குப் பயன்படும் அதே தொழில்நுட்பங்களைக் கொண்டே இந்த வகை மின்னூல்கள் உருவாக்கப்படுகின்றன.

### 3. மின் – பதிப்பு (e – Pub) அமைப்பு

மின் – பதிப்பு என்பது நவீன மின்னூல்களை வெளியிடுவதற்காக, அனைத்துலக மின்பதிப்புக் குழுமத்தால் (International Digital Publishing Forum) உருவாக்கப்பட்ட கட்டற்ற திறந்தவெளி மின்தரம். இது இணையத்தில் வெளியிடப்படும் மின் நூல் அமைப்பில் உள்ள வசதிகளுடன் மின்னூலுக்கென்றே புதிய வசதிகளையும் சேர்த்து வழங்குகிறது.

இம்மூன்று அமைப்புகளும் கணினி, இணையம், கையடக்கக் கருவிகள் ஆகிய மூன்று தளங்களிலும் இயங்கக் கூடியவை. இவை மூன்றும் மின்னூலாகக் கருதப்பட்டாலும் அவற்றிற்கிடையே நூல் வடிவமைக்கப்பட்ட முறை, வாசிக்கப் பயன்படுத்தப்படும் கருவி, வாசிக்கும்போது ஏற்படும் அனுபவம் போன்றவை குறிப்பிடத்தகுந்த வேறுபாடுகளாக உள்ளன.

### பி.டி.எஃப் அமைப்பில் மின்னூல் வடிவமைப்பு

மின்னூல்களை பி.டி.எஃப் வடிவில் உருவாக்குவது மிகவும் எளிது. தாளில் அச்சிட்டு வெளியிடுவதற்காக வடிவமைக்கப்படும் ஒரு நூலை, அச்சிடுவதற்குப் பதிலாக மின்னூல் வடிவில் சேமிப்பதே பி.டி.எஃப் அமைப்பு. அச்சிடப்படும் நூலுக்கும் இதற்கும் வடிவமைப்பில் மாற்றம் ஏதுமில்லை. அட்டைப்படம், உள்ளடக்கம், பக்க எண்கள், பின்னூட்டம் முதலிய அச்சு நூலுக்கான அனைத்துக் கூறுகளும் பி.டி.எஃப் மின்னூலிலும் பதிக்கப்படுகின்றன.

மைக்ரோசாப்ட் வேர்டு, அடோப் இன்-டிசைன் போன்ற செயலிகளைக் கொண்டு இவ்வகை மின்னூல்கள் வடிவமைக்கப்படுகின்றன. இவ்வகைக் கோப்புகளைச் சேமிக்க பி.டி.எஃப் ரைட்டர் என்னும் செயலி தேவை. திறமூலத் தரத்தில் (Open source) இது கிடைக்கும்.

இவ்வமைப்பில் வடிவமைக்கப்படும் மின்னூலின் உள்ளடக்கப் பக்கத்தில் உள்ள தலைப்புகளை நூலின் பக்கங்களோடு இணைக்கலாம். வேறு எந்தப் புதுமையையும் இதில் செய்ய இயலாது. ஒருங்குறி எழுத்துருவிற்கு ஒத்துழைக்காத செயலிகளில் இவ்வடிவமைப்பைச் செய்வதைத் தவிர்த்தல் நலம்.

தாளில் விரல்களைக் கொண்டு பக்கங்களைப் புரட்டுவதைப்போல் மின்னூலில் சுட்டியைக் கொண்டு திரையில் பக்கங்களைப் புரட்டவேண்டும். பி.டி.எஃப் அமைப்பில் உள்ள மின்னூலை வாசிக்க 'பி.டி.எஃப் ரீடர்'(PDF Reader) என்ற வாசிப்புச் செயலி தேவை. நாம் வாசிக்கும் கருவியில் தோன்றும் பக்கத்தை, எழுத்தைப் பெரிதாகவோ சிறிதாகவோ காணமுடியும். அதற்கேற்றாற்போல் படங்களின் அளவும் பக்கத்தின் அளவும் மாற்றப்படும். ஆனால், பக்கத்தின் தோற்றம் மாறாது.

சான்றாக ஒரு பக்கத்தில் பத்து வரிகளும் இருபடங்களும் இருந்தால்,எவ்வளவுதான் அளவு மாற்றம் செய்தாலும் அதே எண்ணிக்கையிலான வரிகளும் படங்களும் மட்டுமே அந்தப் பக்கத்தில் தோன்றும். இந்தப் பக்கத்தில் உள்ள வரிகள் அடுத்த பக்கத்திற்கோ, அடுத்த பக்கத்தில் உள்ள வரிகள் இந்தப் பக்கத்திற்கோ நகராது.

### இணைய அமைப்பில் மின்னூல் வடிவமைப்பு

இணையத் தொழில்நுட்பத்தைக் கொண்டு மீயுரைக் குறியீட்டு மொழியில் இணைய அமைப்பு மின்னூல்கள் உருவாக்கப்படுகின்றன. இணையப் பக்கங்களைப் போல இதிலும் நகர்படங்கள், ஒலிப்பதிவுகள் போன்றவற்றைச் சேர்க்க முடியும் என்பது இதன் சிறப்பு.

தாளில் அச்சிடப்பட்ட புத்தகத்தைப் புரட்டுவது போன்ற உணர்வு, படங்களையும் எழுத்து வரிகளையும் ஓரிடத்தில் இருந்து மற்றோர் இடத்திற்கு நகர்த்துதல், அருஞ்சொற்களைத் தேர்வு செய்து அவற்றிற்கான பொருளை இன்னொரு கட்டத்தில் காணுதல், குறிப்பிட்ட சொற்கள் வரும் பக்கங்களைத் தேடுதல் முதலிய பல வசதிகளை இவ்வமைப்பிலான மின்னூல்களில் சேர்க்கலாம். கணினிமொழிகளின் துணைகொண்டு, நூலோடு வாசகர்கள் ஊடாடுவதற்கான வசதிகளையும் சேர்க்கமுடியும்.

இணையத் தொழில்நுட்பம் என்பதால் எல்லாவகைக் கணினிகளிலும் இவ்வமைப்பில் உருவாக்கப்படும் மின்னூல்களை வாசிக்க இயலும். தமிழ் ஒருங்குறித் தரத்திலான எழுத்துருவும் உலாவியும் இருந்தாலே போதும்.

இணைய அமைப்பிலான மின்னூல்களில் பல புதுமைகளைச் செய்யும் வாய்ப்புகள் இருந்தாலும் சில குறைபாடுகளும் உள்ளன.

பி.டி.எஃப் மின்னூலில் எல்லாப் பக்கங்களும் ஒரே கோப்பில் அடங்குவதுபோல் இவ்வமைப்பிலான நூலில் பக்கங்கள் அடங்குவதில்லை. இந்நூலில் பயன்படுத்தப்படும் படங்கள் தனித்தனியே வெவ்வேறு கோப்புகளில் சேமிக்கப்படுகின்றன. மேலும் நகர்படங்கள், ஒலிப் பதிவுகள் போன்று சேர்க்கப்படும் வசதிகள் அனைத்தும் தனித்தனிக் கோப்புகளில் சேமிக்கப்படவேண்டும்.

இணையத் தொடர்பு இல்லாத நிலையில் இந்நூலை வாசிக்க வேண்டுமென்றால் இந்நூலுக்குத் தேவையான அனைத்துக் கோப்புகளும் கணினியில் பதிவிறக்கம் செய்து சேமிக்கப்பட்டிருக்க வேண்டும்.

## மின்–பதிப்பு அமைப்பில் மின்னூல் வடிவமைப்பு

பி.டி.எஃப், இணைய அமைப்பிலான மின்னூல்களில் உள்ள குறைகளைக் களைவதற்கும் மின்னூலுக்கென்றே சில சிறப்பு வசதிகளைச் சேர்ப்பதற்கும் உருவாக்கப்பட்டதுதான் மின்-பதிப்பு எனும் புதிய மின்னூல் தரம். இவ்வமைப்பின்படி, மின்னூலில் சேர்க்கப்படும் அனைத்து வசதிகளையும் ஒரே கோப்பில் பதித்துச் சேமிக்கலாம்.

இணைய அமைப்பில் சேர்க்கப்படும் வசதிகளுக்கான கோப்புகளைத் தனித்தனியே சேமிக்க வேண்டிய அவசியம் இதில் இல்லை. அதனால், தேவையற்ற செயலிகளைத் தரவிறக்கம் செய்வதும் இடப்பிரச்னையும் தவிர்க்கப்படுகிறது.

மின்–பதிப்பு அமைப்பில் சேர்க்கப்பட்ட வசதிகளுள் மூன்றைச் சிறப்பாகக் கூறலாம்.

**1. எழுத்துரு மாற்றத்தோடு வரிகளின் மறுவோட்டம்:** தாளில் அச்சிடப்பட்ட நூலில் பயன்படுத்தப்பட்ட எழுத்துருவையோ அதன் அளவையோ மாற்றுவது இயலாது. ஆனால், இவ்வமைப்பில் அமைந்த மின்னூலில் இரண்டையும் மாற்றலாம். உருவோ அளவோ மாறும்போது வரிகளின் அளவும் பக்கங்களின் ஓட்டமும் மாறும்படி மேம்படுத்தப்பட்டிருப்பது இதன் சிறப்பு.

**2. நூலைப் பற்றிய விவரக்குறிப்பு:** மின்னூல்கள் பரவலாகத் தற்போது விற்பனைக்கு வந்துள்ளன. இந்நிலையில் அவற்றை விற்கும் மின் அங்காடிகளில் நூலை விளம்பரப்படுத்த நூல்பற்றிய விவரக்குறிப்பு தேவை. அதாவது, நூலின் பெயர், நூலாசிரியரின் பெயர், பதிப்பகத்தின் பெயர், பதிப்பு எண், பதிப்பிக்கப் பட்ட நாள் போன்ற விவரங்கள் முக்கியமானவை. இந்த விவரங்களையும் நூலிலேயே சேர்த்து, தேவைப்படும்போது முழுநூலையும் திறக்காமல் விவரங்களை மட்டும் வாசிக்கத் தரும் வசதியை மின்–பதிப்பு தருகிறது.

**3. ஒன்றுக்கும் மேற்பட்ட நோக்குநிலைகள்:** மின்னூலை வாசிக்கும் கையடக்கக் கருவியைச் செங்குத்தாகவோ கிடைமட்டமாக வைத்து வாசிக்கலாம். வாசிப்பவரின் நோக்குநிலைக்கு ஏற்ப நூலும் மாற்றியமைக்கப்படுவது மின்–பதிப்பு வழங்கும் அடுத்த வசதி.

மேற்கண்ட அனைத்து அமைப்புகளிலும் தமிழ் மின்னூல்களை உருவாக்கலாம். நூலாசிரியருக்குக் கணினித் தொழில்நுட்பம் தெரியாதபோது, வல்லுநர் உதவியுடன் மின்னூலை உருவாக்கலாம். கணினியின் அடிப்படை இயக்க முறைகள் தெரிந்திருந்தால் போதும். நாமே தரமான மின்னூல்களை உருவாக்க முடியும்.

## மின்னூலின் சிறப்பம்சங்கள்

1. குறைந்த செலவில் உயர்ந்த தரமான நூல்களை உருவாக்க முடியும்.

2. தனியான இடவசதியோ,நூலகஅறையோ தேவையில்லை. கணினியோ, கையடக்கக் கருவியோ போதுமானது.

3. எண்ணற்ற நூல்களைக் கொண்ட நடமாடும் நூலகம் போன்று இது பயன்படும்.

4. தேவையான புத்தகத்தையோ, கருத்தையோ, பக்கங்களையோ சில நொடிகளில் பெறமுடியும்.

5. அச்சுநூலைப் போலல்லாமல், தேவைப்படும் பகுதியினைத் தனியாகத் தட்டச்சு செய்வதற்குப் பதிலாக அவற்றை அப்படியே நகலெடுத்துப் பயன்படுத்தலாம்.

6. மின்னூல்களில் உரை, படங்களோடு நகர்படங்கள், அசைவூட்டப்படம், ஒலி முதலிய பல்லூடக வசதிகளை அமைக்கலாம்.

7. அரிதிலும் அரிதான புத்தகங்களை அச்சில் பதிப்பிக்கும் பணிச்சுமையைக் குறைத்து மின்னூலாக்கிப் பாதுகாக்கலாம்.

8. மின்-நூலகங்கள் வாயிலாக உலக அளவில் மின்னூல்களைப் பரிமாறிக் கொள்ளும் வாய்ப்பு உருவாகியுள்ளது.

9. அச்சுப்பதிப்பில் கிடைத்தற்கரிய நூல்களை மின்னூல்களாக எளிதில் பெறவும் அனுப்பவும் முடிகிறது.

10. வாசிப்புப் பழக்கம் குறைந்துவரும் இக்காலத்தில், மின்னூல்களின் பெருக்கமும் எளிமையாகக் கையாளும் வாய்ப்பும் வாசிப்புப் பழக்கத்தை மேம்படுத்தியுள்ளன.

## மின்னூல் உருவாக்கம்

கணினி, இணையம், கையடக்கக் கருவிகளில் சிறந்த வசதிகளுடன் பயன்படுத்தத் தகுந்த மின்-பதிப்பு அமைப்பின்வழி, பின்வரும் படிநிலைகளைக் கொண்டு எளிதாக மின்னூல்களை உருவாக்கலாம்.

## மின்னூல் உருவாக்குதலின் படிநிலைகள்

படி – 1: கட்டற்ற மென்பொருளாக இணையத்தில் கிடைக்கும் காலிபர் (calibre) என்னும் மென்பொருளைத் தரவிறக்கம் செய்து, அதைக் கணினியில் நிறுவிக் கொள்க.

படி – 2: மின்னூலாக மாற்றப்பட வேண்டிய புத்தகத்தினை மைக்ரோசாப்ட் வேர்டு உதவியுடன் தட்டச்சு செய்து, கோப்பாகச் சேமித்துக் கொள்க.

படி – 3: மின்னூலுக்கான அட்டைப்படத்தைத் தனியாக வடிவமைத்து JPEG கோப்பாகச் சேமித்துக்கொள்க.(அட்டை வடிவமைப்பிற்கென GIMP போன்ற கட்டற்ற மென்பொருள்கள் இணையத்தில் கிடைக்கின்றன.)

படி – 4: கணினியில் நிறுவப்பட்ட காலிபர் மென்பொருளைத் திறந்து கொள்க.




படி–5 திரையின் இடது மூலையில் தோன்றும் Add books என்னும் குறியீட்டைத் தெரிவுசெய்க.



திரையில் ஏற்கெனவே மைக்ரோ சாஃப்ட் வேர்டில் தட்டச்சு செய்த கோப்புகளுள் நீங்கள் புத்தகமாக்க வேண்டிய கோப்பினைத் தேர்ந்தடுத்து Open என்னும் பொத்தனைச் சொடுக்குக.

படி-6 இப்போது புத்தகமாக்கப்பட வேண்டிய கோப்பானது திரையில் தோன்றும். அதனைத் தெரிவு செய்துவிட்டு Convert books என்னும் பொத்தனைச் சொடுக்க வேண்டும்.



படி-7 Convert books கொடுத்தவுடன் திரையில் தோன்றுவது போன்று அட்டைப்படத்தைச் சேர்க்கச் சொல்லும் புதிய திரை தோன்றும்.



படி-8 ஏற்கெனவே வடிவமைக்கப்பட்டு JPEG கோப்பாகச் சேமித்து வைக்கப்பட்டுள்ள அட்டைப்படத்தைப் பதிவேற்றம் செய்துகொள்ளலாம். பின்பு திரையின் வலது ஓரத்தில் Output format என்னும் பகுதியைச் சொடுக்கி அதில் EPUB என்பதைத் தெரிவு செய்ய வேண்டும். பின்பு வலது ஓரத்தில் கீழ்ப்புறமாக இருக்கும் OK பொத்தனைச் சொடுக்க வேண்டும்.



படி-9 இப்போது மீண்டும் முகப்புப்பக்கம் தோன்றும். அதில் View என்னும் இடத்தில் சொடுக்க மின்னூலாக மாற்றப்பட்ட வடிவம் கிடைக்கும்.




படி– 10 இவ்வமைப்பில் உருவாக்கப்பட்ட மின்னூல்களைத் தரவிறக்கம் செய்தோ, வேறு கையடக்கக் கருவிகளுக்கு அனுப்புதல் மூலமோ படிக்கவியலும்.




## மின்னூல் வாசிப்புக் கருவிகள்

புத்தக வாசிப்பை டிஜிட்டல் தொழில்நுட்பத்துடன் இணைத்து, வாசிப்பை அடுத்த கட்டத்துக்கு மேம்படுத்திய இந்தக் கருவி, அமேசான் நிறுவனத்தின் 'கிண்டில்' (Kindle). ஆங்கிலத்தில் 'கிண்டில்' என்றால் 'தூண்டுதல்' என்று அர்த்தம். சரியான பெயரைத்தான் வைத்திருக்கிறார்கள்.

கணினியில் சொற் செயலிகள் வரத் தொடங்கிய உடனே, மின் புத்தகங்களும் வரத் தொடங்கிவிட்டன. ஆனால் இன்றோ, மின் புத்தகத்துக்கெனத் தனிச் சந்தையே உருவாகிவிட்டது. அதன்மூலம், அச்சுப் புத்தகங்களைப் போல் மின் புத்தகங்களும் அடுத்த தலைமுறைக்குச் சிறந்த வாசிப்பனுபவத்தை வழங்கும் என எதிர்பார்க்கலாம்.

# கலைச்சொற்கள்

Access – அணுக்கம்
Active cell – இயங்கு கலன்
Alignment – இசைவு
Binary Code – இரும குறிமுறை
Bitmap – நுண் படம்
Cookie – நினைவி
Crop – செதுக்கு
Cursor – சுட்டி
Desktop – முகத்திரை
Device – கருவி
Disk drive – வட்டு இயக்கி
Download – பதிவிறக்கம்
Drum scanner – உருளை வருடி
E–book – மின்நூல்
E–mail – மின்னஞ்சல்
Folder – கோப்புறை
File – கோப்பு
Graphic – வரையியல்/வரைகலை
Hard disc – வன்வட்டு
Homepage – முகப்புப்பக்கம்
Icon – உருச்சின்னம்/படவுரு
Install – நிறுவு
Italic text – சாய்வெழுத்து
Keyword – குறிப்புச்சொல்
Laptop computer – மடிக்கணினி
Layout – தளவமைப்பு
Log in – உட்புகு
Log out – வெளியேறு
Menu – பட்டியல்
Inbox – செய்திப் பெட்டி
Outbox – செல்மடல்
Restore – மீள வை/ மீள்வி
Save – சேமி
Save as – என சேமி
Search – தேடு/தேடல்
Sensor – உணரி
Show – காண்பி
Shutdown – அணை/மூடு
Sign in – புகுபதிகை/புகுபதிவு
Sign out – வெளியேறு
Software – மென்பொருள்
Vibrating alert – அதிர்வு உணர்த்து
Video blog – ஒளிதப்பதிவு
Video clips – நிகழ்படங்கள்
Video – ஒளிதம்/காணொலி
Voice mail – குரலஞ்சல்
Voice Messages – குரல் செய்திகள்
Voice recognition – குரலறிதல்
Wallpaper – முகப்புப் படம்
Window – சாளரம்
Wireless – கம்பியில்லா

## கண்ணாடி

**விளக்கம் கண்டு விடை தருக.**

1. செல்பேசி, டேப்லெட், திறன்பேசி போன்ற கருவிகளில் இயங்குவதற்காக உருவாக்கப்பட்ட ஒரு பயன்பாட்டு மென்பொருள் _______________.

2. ஓர் எழுத்தையோ, கலைப் படைப்பையோ வணிகப் பொருளைப் பற்றிய கருத்துகளையோ தீர்மானிப்பது _______________.

3. குறிப்பிட்ட ஒரு துறைசார்ந்த சொற்களையோ செய்திகளையோ குறிப்பிட்ட ஓர் ஆவணத்திலிருந்து கணினி மூலம் தானாகவே பிரித்து எடுக்க உதவும் மொழிக்கருவி _______________.

4. இது மொழியியலும் கணினி அறிவியலும் இணைந்தது _________________.

5. _____________ திருவிழா தவாங் மாவட்டத்தில் நடைபெற்றது.

6. இவை மின்னூல்களை வாசிக்க உதவுகின்றன ________________.

**சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.**

7. மொபைல் ஃபோன் என்றழைக்கப்பட்ட முதல் செல்பேசியின் பெயர்

அ) பிளாக்பெர்ரி 5810 ஆ) எரிக்சன் ஆர் 380

இ) டைனா டாக் 8000 எக்ஸ் ஈ) சைமன் பர்சனல் கம்யூனிக்கேட்டார்

8. ஐபோன் சந்தைக்கு வரும்வரை இந்த நிறுவனமே திறன்பேசி விற்பனையில் முதன்மையானதாக விளங்கியது.

அ) மைக்ரோசாப்ட் ஆ) பிளாக்பெர்ரி

இ) சோனி எரிக்சன் ஈ) நோக்கியா

K43UMW

9. பொருந்தாத இணையைக் கண்டறிக.

1) மார்ட்டின் கார்ல் கூப்பர் - ஜோயல் எஸ் ஏங்கெல்

2) முதல் குறுஞ்செய்தி - பின்லாந்து

3) IBM சைமன் - முதல் திறன்பேசி

4) டோகோமோ - அமெரிக்கா

10. பொருத்துக.

அ) 5 ஜி - 1) இயக்கமுறைமை

ஆ) விண்டோஸ் - 2) 1 மில்லி செகண்ட்

இ) செயலி - 3) காணொலி விளையாட்டு

ஈ) பாம்பு - 4) பயன்பாட்டு மென்பொருள்

அ) அ – 3 ஆ – 4 இ – 1 ஈ – 2 ஆ) அ – 4 ஆ – 3 இ – 2 ஈ – 1

இ) அ – 1 ஆ – 4 இ – 3 ஈ – 2 ஈ) அ – 2 ஆ – 1 இ – 4 ஈ – 3

11. பின்வருவனவற்றுள் செயற்கைமொழி அல்லாதது எது?

அ) பைத்தான் ஆ) பெர்ல்

இ) மாண்டரின் ஈ) ஜாவா

12. தமிழை உருபனியல் பகுப்பாய்வுக்கு உட்படுத்துவது சற்று கடினமான செயல். ஏனெனில், அது

அ) கூட்டுநிலை மொழி ஆ) ஒட்டுநிலை மொழி

இ) பிரிநிலை மொழி ஈ) தனிநிலை மொழி

13. மற்றவற்றுடன் தொடர்பில்லாத ஒன்றைத் தேர்ந்தெடு

அ) தகவல் மீட்பு ஆ) தகவல் பிரித்தெடுத்தல்

இ) பனுவல் சுருக்கம் ஈ) எந்திர மொழிபெயர்ப்பு

14. பொருத்துக

அ) விரிதாள் – 1) அலுவலகப் பயன்பாடு

ஆ) தரவுத்தளம் – 2) வரவுசெலவு கணக்கு

இ) சொல்செயலி – 3) ஐஓஎஸ்

ஈ) ஆப்பிள் – 4) ஆவணத்தயாரிப்பு

அ) அ – 3 ஆ – 4 இ – 1 ஈ – 2 ஆ) அ – 2 ஆ – 1 இ – 4 ஈ – 3

இ) அ – 1 ஆ – 4 இ – 3 ஈ – 2 ஈ) அ – 4 ஆ – 3 இ – 2 ஈ – 1

15. கூற்று: கந்தர்வன் தீராவை இந்தியா முழுவதும் அனுப்பினார்.

காரணம்: தீரா இந்தியாவின் அனைத்துப் பகுதிகளுக்கும் இயற்கை மொழிகளை ஆய்வு செய்யச் சென்றது.

அ) கூற்றும் காரணமும் சரி ஆ) கூற்று சரி, காரணம் தவறு

இ) கூற்று தவறு, காரணம் சரி ஈ) கூற்றும் காரணமும் தவறு

## குறுவினா

1. கணினியிலிருந்து திறன்பேசி எவ்வகையில் வேறுபடுகிறது?
2. ஜப்பானில் 3ஜி தொழில்நுட்பம் எப்போது யாரால் அறிமுகப்படுத்தப்பட்டது?
3. திறன்பேசிகளில் செய்துமுடிக்கும் பணிகளில் நான்கனைச் சுட்டுக.
4. இன்று இயலிகள் பயன்படுத்தப்படும் துறைகளைப் பட்டியலிடுக.
5. கணினி மொழியியலின் முக்கிய பங்கு என்ன?

6. இயற்கை மொழியாய்வு என்பது யாது?

7. எந்திர மொழிபெயர்ப்பு – குறிப்பு தருக.

8. தீராவைப் பற்றி எழுதுக.

9. தீரா கதையில் இடம்பெறும் இந்தியமொழிகள் நான்கனை எழுதுக.

10. மின்னூல் – வரையறு.

## சிறுவினா

1. திறன்பேசி – விளக்குக.

2. செல்பேசிகளில் காணப்படும் வன்பொருள் கூறுகளைப் பட்டியலிடுக.

3. 5ஜி தொழில்நுட்பம் குறித்து விளக்குக.

4. மொழித் தொழில்நுட்பப் பயன்பாட்டுக் கருவிகளைப் பட்டியலிடுக.

5. ஒலியியல் கருவிகளின் பயன்களைக் கூறுக.

6. வினா விடையறியும் கருவி செயல்படுவது எவ்வாறு?

7. உணர்வு பகுப்பாய்வுக்கான தேவை குறித்து எழுதுக.

8. தவாங் நகரில் அமைந்த சாக்கியமுனி புத்த மடாலயம் குறித்து எழுதுக.

9. இயற்கை மொழிச் செயலாக்கத்தின் நோக்கத்தினை எழுதுக.

10. இ-பப் அமைப்பில் சேர்க்கப்பட்ட சிறப்பான வசதிகள் மூன்றைச் சுட்டுக.

## நெடுவினா

1. செல்பேசியில் மென்பொருளின் பங்கு குறித்து விவரி.

2. செயலிகளின் வரலாற்றைச் சுருக்கி வரைக.

3. தொடரியல் பகுப்பாய்வி செயல்படும் விதத்தைச் சான்றுடன் விளக்குக.

4. ஏதேனும் மூன்று மொழிப்பயன்பாட்டுக் கருவிகள் குறித்து விளக்குக.

5. உரையாடு இயலிகள் பற்றி விளக்குக.

6. மைதிலி கவிதைத் திருவிழா நிகழ்வையும் தீரா செய்த மைதிலி, தமிழ்க் கவிதை ஒப்பீட்டையும் விளக்கி எழுதுக.

7. இ-பப் அமைப்பில் மின்னூல் வடிவமைப்பதை விவரி.

8. மின்னூலின் சிறப்பம்சங்களைப் பட்டியலிடுக.

## படிப்போம் பயன்படுத்துவோம்

1. கீழ்க்காணும் குறிப்புகளைப் பயன்படுத்தி, மேலும்கீழும், இடமும்வலமும், குறுக்கும்நெடுக்கும் மறைந்துள்ள விடைகளைக் கண்டறிந்து வட்டமிடுக.

| எ | ந் | தி | ர | மொ | ழி | பெ | ய | ர் | ப் | பு | ம | க |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ரி | தீ | ரா | ற | ம் | ட | ட் | ப | ப | ழ | ர | ட | ல் |
| பை | பா | எ | மி | ன் | னூ | ல் | ன் | லி | எ | க | பெ | டு |
| த் | ம் | ந் | ன் | ரை | பே | ண் | க | கா | அ | ம் | ச | ம |
| தா | பு | தி | ப | ம | ம் | சி | க் | த | ஹா | ட் | ல | வி |
| ன் | வி | ர | தி | தா | ற | ற் | று | ர | பு | கை | ய் | று |
| ப | ளை | ன் | ப் | ப் | மு | றி | கி | று | ச | பா | க | பெ |
| ரு | யா | கு | பு | ரோ | ம் | ர் | ப | பே | ப் | ரா | லு | ல் |
| உ | ட் | பி | சோ | கி | ட | க | டி | கு | டை | ட் | மு | வ |
| ள் | டு | டி | வெ | ண் | பெ | ண் | ப | க | ட் | டை | ஆ | க |
| ள | லை | எஃப் | சா | டி | ட் | வு | ட் | ட் | ச | ட் | ரி | த |
| ம் | க | க் | ப் | ல் | ர் | சி | டு | ட | க | வ | று | வெ |
| க | லெ | க் | ட | ண | ம் | ம | க | த | ல் | றி | ம | டி |
| அ | ம் | மா | உ | ரை | யா | டு | இ | ய | லி | செ | ய | லி |

குறிப்புகள்

1. விஞ்ஞானி கந்தர்வனின் அதிஅற்புத படைப்பு இது - தீரா
2. கணிப்பொறியில் பயன்படும் செயற்கைமொழிகளுள் ஒன்று
3. ஒரு சொல்லைப் பகுக்கும்போது வரும் மிகச்சிறிய அடிப்படை அலகு இது
4. குறிப்பிட்ட தலைப்பு அல்லது கருத்து சார்ந்து தகவல் திரட்டித் தரும் மென்பொருள்
5. இரு இயற்கை மொழிகளுக்கிடையே பேச்சையோ பனுவலையோ இதன் உதவிகொண்டு மொழிபெயர்க்கலாம்
6. உங்களின் அச்சம், மகிழ்ச்சி போன்ற உணர்வுகளை இந்த மென்பொருளும் வெளிப்படுத்துமாம்
7. திறன்பேசியில் இயங்கும் ஒரு பயன்பாட்டு மென்பொருள். இதை நிறுவும் போது, அதிகமாக அனுமதி கேட்டால், ஆபத்து நேரும். கவனம்!
8. தொலைபேசியைக் கண்டுபிடித்தவர் இவர்
9. இந்த மென்பொருள் இருந்தால், கணினியுடன்கூட உரையாடலாம்.

10. தொடுதிரையுடன்கூடிய கையடக்க அலைபேசியை நாம் இப்படித்தான் கூறுகிறோம்

11. சிம்கார்டின் தமிழாக்கம் இது

12. 1970களில், செல்பேசிகளில் மிகவும் செல்வாக்குப் பெற்று விளங்கிய காணொலி விளையாட்டு

13. மின்னணுவியல் முறையில் அமைந்த நூலை இப்படிக் கூறுகின்றனர்

14. நவீன மின்னூல்களை வெளியிடுவதற்காக உருவாக்கப்பட்ட, கட்டற்ற திறந்தவெளி மின்தளம்

15. மின்னூல் உருவாக்குவதற்கு தரவிறக்கம் செய்யவேண்டிய மென்பொருள்

16. மின்னூல் வாசிப்புக் கருவி. இதனைத் தமிழில், 'தூண்டுதல்' என மொழிபெயர்த்திருக்கிறார்கள்

2. கீழ்க்காணும் ஆங்கிலச்சொற்களுக்குரிய தமிழாக்கச் சொற்கள் கட்டங்களில் உள்ளன. அவற்றைக் கண்டறிந்து வட்டமிடுக.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| எ | ன் | பா | ப் | டி | ப | ன் | மி |
| மு | ப | தி | வே | ற் | ற | ம் | ன் |
| த் | தி | ற | ன் | பே | சி | செ | னூ |
| து | வி | உ | ரு | ப | னி | ய | ல் |
| ரு | ற | சொ | ற் | செ | ய | லி | இ |
| க | க் | ஒ | ரு | ங் | கு | றி | ணை |
| ணி | க | ள் | க | பு | ப் | கோ | ய |
| னி | ம் | ந | க | ர் | ப | ட | ம் |

1. Computer – கணினி
2. Morpheme
3. Application (app)
4. Smart phone
5. Simcard
6. Word Processor
7. Font
8. Internet
9. Animation
10. Files
11. Unicode
12. E – Book
13. Download
14. Upload
15. E – Reader

## செயல்திட்டம்

1. செல்பேசியின் தலைமுறை அடிப்படையில் படத்தொகுப்பு தயார் செய்க.
2. திறன்பேசியில் பயன்படுத்தப்படும் கல்வி சார்ந்த செயலிகளை அறிந்து வருக.
3. திருக்குறளின் ஏதேனும் பத்து அதிகாரங்களை மின்னூலாக உருவாக்குக.

## இணையச்செயல்பாடு

# கணித்தமிழியல்

இந்தச் செயல்பாடுகள்மூலம் கணித்தமிழ் மென்பொருள்கள், வலைப்பூக்கள் குறித்து அறியலாம்.



### படிகள்

1. கீழ்காணும் உரலி விரைவுக் குறியீட்டைப் பயன்படுத்தி, இச்செயல்பாட்டிற்கான இணையப் பக்கத்திற்குச் செல்க. பக்கத்தில் மேலே கொடுக்கப்பட்டுள்ளவற்றில் கணித்தமிழ் என்ற இடத்தைத் தேர்வு செய்க.
2. அந்தப் பக்கத்தில் மென்பொருள்கள், வலைப்பூக்கள், கருவிகள் போன்றவற்றில் தேவையானவற்றைத் தேர்வு செய்க.
3. அதன்பின் தோன்றும் திரையில், தேவையானவற்றைத் தேர்ந்தெடுத்துப் பயன்பெறலாம்.

### செயல்பாட்டின் படிநிலைக்கான படங்கள் :



படி 1



படி 2



படி 3



படி 4

வலைப்பூக்கள் இணைய பக்கத்தின் உரலி :

http://www.tamilvu.org

* படங்கள் அடையாளத்திற்கு மட்டுமே.

B282_12_ADV_TAMIL

## பார்வை நூல்கள்

### 1. கவிதையியல்

| | பார்வை நூல்கள் | நூலாசிரியர்கள் |
|---|---|---|
| 1. | தமிழர் சிந்தனை மரபு | – ஸ்ரீ. தேவ பேரின்பன் |
| 2. | சங்கத் தமிழர் வாழ்வியல் | – மு. சண்முகப்பிள்ளை |
| 3. | சங்க இலக்கியம் | – முனைவர் சரளா இராசகோபாலன் |
| 4. | எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும் | – சாமி சிதம்பரனார் |
| 5. | சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே | – ச. அகத்தியலிங்கம் |

### 2. கதையியல்

| | | |
|---|---|---|
| 1. | கதையியல் | – பூரணசந்திரன் |
| 2. | நவீனத் தமிழ் இலக்கிய அறிமுகம் | – ஜெயமோகன் |
| 3. | எழுதும் கலை | – ஜெயமோகன் |
| 4. | நாவல் கோட்பாடு | – ஜெயமோகன் |
| 5. | கல்மரம் | – திலகவதி |
| 6. | அசோகமித்திரன் குறுநாவல் | – அசோகமித்திரன் |
| 7. | புத்தம் வீடு | – ஹெப்சிபா ஜேசுதாசன் |
| 8. | சாயாவனம் | – சா. கந்தசாமி |
| 9. | செம்மீன் | – தகழி சிவசங்கரன் |
| 10. | தாய் | – மார்க்ஸிம் கார்க்கி |

### 3. அரங்கவியல்

| | | |
|---|---|---|
| 1. | தமிழ் நாடகம் நேற்று இன்று நாளை | – மு. இராமசுவாமி |
| 2. | இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் நாடகங்கள் | – உலகத் தமிழராய்ச்சி நிறுவனம் |
| 3. | தமிழ் சினிமாவின் கதை | – அறந்தை நாராயணன் |
| 4. | சினிமா எடுக்கலாம் வாங்க | – வெ.மு. ஷாஜகான் கனி |
| 5. | மீதி வெள்ளித்திரையில் | – தியோடர் பாஸ்கரன் |
| 6. | சினிமாவும் நானும் | – மகேந்திரன் |
| 7. | தமிழக நாட்டார் நிகழ்த்துக் கலைகள் களஞ்சியம் | – தமிழக இயல் இசை நாடக மன்றம் |

### 4. இலக்கணவியல்

| | | |
|---|---|---|
| 1. | ஞா. தேவநேயன் நூல்கள் | – தேவநேயன் |
| 2. | தமிழுக்கும் வடஇந்திய மொழிகளுக்கும் இடையிலான வேர்ச்சொல் இலக்கண ஒற்றுமை | – கு. அரசேந்திரன் |
| 3. | பொருண்மையியல் | – செ.சண்முகம். |
| 4. | மொழியின் பொதுமைக் கூறுகள் கருத்தியல் விளக்கம் | – இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனம் |

5. தமிழ்மொழி வரலாறு – டாக்டர் சு. சக்திவேல்
6. இலக்கியக்கலை – தி. சு. நடராசன்
7. இலக்கிய இஸங்கள் – தொகுப்பாசிரியர் இ. எஸ். தேவசிகாமணி
8. A Comparative Grammar Of The Dravidian or South Indian Family Of Languages – Rev. Robert Caldwell

## 5. ஊடகவியல்

1. மக்கள் தகவல் தொடர்பியல் – டாக்டர். எஸ். ஸ்ரீகுமார், டாக்டர். என். கிருஷ்ணன்
2. உங்கள் வானொலி – கோ. செல்வம்
3. உலக வானொலிகள் – தங்க . ஜெய்சக்திவேல்
4. உலகமெலாம் தமிழோசை – வெ. நல்லதம்பி
5. தென்கச்சி கதை ராசாவின் கதை – கோமல் அன்பரசன்
6. பொம்மலாட்டம் – கலைவாணன்

## 6. கணித்தமிழியல்

1. கணினித் தமிழ் – இல. சுந்தரம்
2. தமிழும் கணினியும் – ராதா செல்லப்பன்

## மின்தரவுகள்


- https://tech.co/news/mobile-app-history-evolution-2015-11
- https://acodez.in/evolution-mobile-apps/
- http://www.uky.edu/~jclark/mas490apps/History%20of%20Mobile%20Apps.pdf
- https://sciencenode.org/feature/How%20did%20smartphones%20evolve.php
- https://bebusinessed.com/history/history-cell-phones/
- https://www.uswitch.com/mobiles/guides/history-of-mobile-phones/
- https://www.textrequest.com/blog/history-evolution-smartphone/
- https://www.timetoast.com/timelines/evolution-of-the-smartphone
- https://www.statista.com/statistics/276623/number-of-apps-available-in-leading-app-stores/
- https://ta.m.wikipedia.org
- https://www.itstamil.com
- https://ta.wikisource.org
- www.tamilsurangam.com
- www.tamilvu.org

# மேல்நிலை இரண்டாம் ஆண்டு – சிறப்புத் தமிழ்

## ஆக்கம்

### பாடநூல் வல்லுநர் குழு

முனைவர் அ. ராமசாமி
பேராசிரியர் மற்றும் தமிழியல் துறைத்தலைவர்,
மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம், திருநெல்வேலி.

முனைவர் பொன். குமார்
இணை இயக்குநர், (பாடத்திட்டம்)
மாநிலக் கல்வியியல் ஆராய்ச்சி மற்றும் பயிற்சி நிறுவனம், சென்னை.

முனைவர் கு. அரசேந்திரன்
மேனாள் தமிழ்த்துறைத் தலைவர்,
சென்னை கிறித்துவக் கல்லூரி, சென்னை.

முனைவர் சு. பாலசுப்ரமணியன் (பாரதி பாலன்)
பேராசிரியர் மற்றும் தலைவர்,
தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புலம்,
தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகம், சென்னை.

முனைவர் வ. தனலட்சுமி
உதவிப் பேராசிரியர், அரசினர் மகளிர் கலைக் கல்லூரி,
கிருஷ்ணகிரி.

### மேலாய்வாளர் குழு

கவிஞர் ஈரோடு தமிழன்பன்
மேனாள் பேராசிரியர்,
புதுக்கல்லூரி, சென்னை.

முனைவர் து. சீனிச்சாமி
மேனாள் பேராசிரியர்,
தமிழ் இலக்கியத்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

முனைவர் மு. சுதந்திரமுத்து
மேனாள் இணைப்பேராசிரியர்,
மாநிலக் கல்லூரி, சென்னை.

முனைவர் இரா. பிரேமா
மேனாள் தமிழ்த்துறைத் தலைவர்,
எத்திராஜ் மகளிர் கலைக் கல்லூரி, சென்னை

முனைவர் வெ. நல்லதம்பி
மேனாள் துணை இயக்குநர்,
சென்னைத் தொலைக்காட்சி நிலையம், சென்னை

முனைவர் தங்க. ஜெய்சக்திவேல்
உதவிப் பேராசிரியர், இதழியல் மற்றும் தொடர்பியல் துறை,
சென்னைப் பல்கலை கழகம், சென்னை

### ஒருங்கிணைப்பாளர்

ந. இராமலிங்கம்
உதவிப் பேராசிரியர்,
மாநிலக் கல்வியியல் ஆராய்ச்சி மற்றும் பயிற்சி நிறுவனம்,
சென்னை.

## கலை மற்றும் வடிவமைப்புக் குழு

### வரைபடம்

க. புகழேந்தி
பட்டதாரி ஆசிரியர், அரசு மேல்நிலைப்பள்ளி, கரம்பக்குடி, புதுக்கோட்டை.
கா. தனஸ் தீபக் ராஜன்
வேல்முருகன் இராதாகிருஷ்ணன்
பிரமோத் பாலு
கா. நளன் நான்சி ராஜன்
சென்னை.
பா. இரவிக்குமார், ஈரோடு.

### நன்றி

ஓவியர்கள்
ட்ராட்ஸ்கி மருது
இளையராஜா

### வரைகலை & வடிவமைப்பு

பழையவலம் பா. இராமநாதன், சென்னை.

### In-House - QC

மனோகர் இராதாகிருஷ்ணன், ஜெரால்டு வில்சன்,
அடிசன் ராஜ், அருண் காமராஜ் பழனிசாமி

### அட்டை வடிவமைப்பு

கதிர் ஆறுமுகம்

### ஒருங்கிணைப்பு

ரமேஷ் முனிசாமி

### பாடநூல் உருவாக்கக் குழு

பா. மலர்விழி
விரிவுரையாளர், மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம்,
திருவூர், திருவள்ளூர்.

சி. பன்னீர்செல்வம்
கல்வி மாவட்ட ஒருங்கிணைப்பாளர்,
ஒருங்கிணைந்த கல்வி, புதுக்கோட்டை.

இல. சீனிவாசன்
முதுகலை ஆசிரியர், மஜ்ஹருல் உலூம் மேல்நிலைப்பள்ளி,
ஆம்பூர், வேலூர்.

வே. நஞ்சகுமார்
முதுகலை ஆசிரியர், அரசு மேல்நிலைப்பள்ளி,
சூசுவாடி, கிருஷ்ணகிரி.

முனைவர் ச. விஜயலட்சுமி
முதுகலை ஆசிரியர், அரசு முஸ்லீம் மேல்நிலைப்பள்ளி,
சென்னை.

கோ. சிவகுமார்
முதுகலை ஆசிரியர், அரசு மேல்நிலைப்பள்ளி,
ஒந்தாம்பட்டி, மணப்பாறை, திருச்சி.

முனைவர் சு. துரைக்குமரன்
பட்டதாரி ஆசிரியர், அரசு மேல்நிலைப் பள்ளி,
காவிரி நகர், புதுக்கோட்டை.

ஏ. சக்திகுமார்
முதுகலை ஆசிரியர், அரசு மேல்நிலைப் பள்ளி,
விக்கிரவாண்டி, விழுப்புரம்.

இரா. மாரியப்பன்
முதுகலை ஆசிரியர், ந.அ.அன்னப்பராஜா மேல்நிலைப் பள்ளி,
இராஜபாளையம், விருதுநகர்.

செ.கோ. தனலட்சுமி
முதுகலை ஆசிரியர், பதிப்பகசெம்மல் கணபதி மேல்நிலைப்பள்ளி,
கோடம்பாக்கம், சென்னை.

சி. குமார்
முதுகலை ஆசிரியர், வலிவலம் தேசிகர் மேல்நிலைப்பள்ளி,
வலிவலம், நாகப்பட்டினம்.

இரா. பிரபாகரன்
முதுகலை ஆசிரியர், அரசு மேல்நிலைப்பள்ளி,
பொட்டிரெட்டிபட்டி, நாமக்கல்

பெ. குணசேகரன்
முதுகலை ஆசிரியர், அரசு மாதிரி மேல்நிலைப்பள்ளி,
கொல்லிமலை, நாமக்கல்.

த. ஆனந்தலட்சுமி
முதுகலை ஆசிரியர், நகராட்சி மகளிர் மேல்நிலைப் பள்ளி,
திருவண்ணாமலை.

அ. அனிதா
முதுகலை ஆசிரியர், அரசினர் மகளிர் மேல்நிலைப் பள்ளி,
குளித்தலை, கரூர்.

### விரைவுக் குறியீடு மேலாண்மைக் குழு

ஜே.எப். பால் எட்வின் ராய்
பட்டதாரி ஆசிரியர், ஊ.ஒ.ந.நி. பள்ளி, ராக்கிப்பட்டி, வீரபாண்டி, சேலம்.
வ. பத்மாவதி
பட்டதாரி ஆசிரியர், அ.உ.நி. பள்ளி, வெற்றியூர், திருமானூர், அரியலூர்.
மு. சரவணன்
பட்டதாரி ஆசிரியர், அ.ம.மே.நி. பள்ளி, புதுப்பாளையம், வாழப்பாடி, சேலம்.

### கணினித் தொழில்நுட்பம்

இரா. வெங்கடேசன்
இடைநிலை ஆசிரியர், ஊ.ஒ.தொ. பள்ளி,
வெள்ளியணை தாந்தோணி ஒன்றியம், கரூர்.
இரா. பாரதிராஜா
தொடக்கப்பள்ளி ஆசிரியர், அரசு தொடக்கப்பள்ளி,
முருங்கப்பாக்கம், வட்டம் – II, பள்ளிக் கல்வி இயக்ககம், புதுச்சேரி.

### நூலக வளம்

இரா. ஜெயந்தி
நூலகர், மாநிலக் கல்வியியல் ஆராய்ச்சி மற்றும் பயிற்சி நிறுவனம், சென்னை.

### தட்டச்சர்

ஆ. அஸ்வினி
தட்டச்சர், போளூர்.

இந்நூல் 80 ஜி.எஸ்.எம் எலிகண்ட் மேப்லித்தோ தாளில் அச்சிடப்பட்டுள்ளது
ஆப்செட் முறையில் அச்சிட்டோர்: